*Contents*

## கடவுள் வாழ்த்து

***2516.* பேதியாது நிமிர் பேத**
**உருவம் பிறழ்கிலா,**
**ஓதி ஓதி உணரும் தொறும்**
**உணர்ச்சி உதவும்**
**வேதம், வேதியர், விரிஞ்சன்,**
**முதலோர் தெரிகிலா,**
**ஆதி தேவர்; அவர் எம்**
**அறிவினுக்கு அறிவுஅரோ**

**பேதியாது -** *தன் உயர்நிலையில்தான் வேறுபடாமல்;* **நிமிர் பேத உருவம் -** *தன்னிடம் தோன்றி வளரும் பலவகை வடிவங்களிலிருந்தும்;* **பிறழ்கிலா -** *தான்வேறுபடாதும்;* **ஓதி ஓதி உணரும் தொறும் -***பலமுறை கற்று ஆராயும் பொழுதும்,* **உணர்ச்சிஉதவும் -** *மெய்யுணர்வை அருளும்,* **வேதம் -** *நான்கு வேதங்களும்,* **வேதியர் -** *அவற்றை ஓதும் அந்தணர்களும்,* **விரிஞ்சன் முதலோர் -** *பிரமன் முதலிய தேவர்களும்,* **தெரிகிலா -** *ஆராய்ந்தறிய முடியாத,* **ஆதி தேவர் -** *முதல் கடவுள்;***அவர் எம்அறிவினுக்கு அறிவுஅரோ -** *அவரே எம் சிற்றறிவுக்கு அறியும் பொருள்.*

*ஆதிதேவனை வணங்குவோம் என்பது குறிப்பு.பேத உருவம் என்பது தேவர், விலங்கு, ஊர்வன முதலிய சராசர வடிவங்கள். உருவம் பிறழ்கிலாமை என்பது உடல் மாறினும் அவ்வுடலுள் உயிர் போல் உயிருள் உயிராய் இருப்பது. உயிர்தனைப்படைப்பவனும் வேதியருட் சிறந்தவனுமான பிரமனை முதலாகக் கூறினார். மூலப் பரம்பொருள்நுட்பமாகவும் அதிநுட்பமாகவும் ஆதிதேவர் எனச்சுட்டப்பட்டது. அறிவு - ஆகுபெயர், அரோ - அசை. அறிவரோ எனக் கொண்டு அறியும் பொருள் ஆவரோ; ஆகார் எனவும் பொருள் கொள்வர். நெடிலடிநான்கு கொண்ட கலித்துறை. சிலர் அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தம் எனவும் கொள்வர்.*

## விராதன் வதைப் படலம்

விராதன் எனும் அரக்கனை இராமபிரான் வதைத்தருளியதைக் கூறும் படலம். இவன் தும்புரு எனும்கந்தருவன். குபேரனின் சாபத்தால் அரக்கனாகிக் காட்டில் திரிந்தவன். விராதன் மிகுதியும்அபராதம் செய்பவன். சீதையைத் தூக்கிச் சென்ற இவன் தன்னை எதிர்த்த இராமலக்குவரைக் கண்டு சீதையை விட்டு விட்டு அவர்களைத் தூக்கிச் சென்றான். அவர்கள் அவன் தோள்களை வெட்டிப்பள்ளத்தில் புதைத்தருளினர்.

இராமன் முதலியோர் அத்திரி முனிவர் உறையுள் அடைதல்

***2517. முத்து இருத்தி அவ் இருந்தனைய***
***மொய்ந் நகையொடும்,***
***சித்திரக் குனி சிலைக் குமரர்,***
***சென்று அணுகினார்-***
***அத்திரிப் பெயர் அருந்தவன்***
***இருந்த அமைதி,***
***பத்திரப் பழுமரப் பொழில்***
***துவன்று, பழுவம்.***

***சித்திரக் குனிசிலைக் குமரர் -*** *அழகிய, வளைந்த வில்லேந்திய இராமலக்குவர்;* ***முத்து இருத்தி அவ் இருந்து அனைய -****முத்துக்களைப் பதித்து அவைஒருசேர இருந்தாற் போன்ற;* ***மொய்ந்நகை யொடும் -****நெருங்கிய பற்கள் கொண்டசீதையுடன்;* ***அத்திரிப் பெயர் அருந்தவன் -*** *அத்திரி என்னும் பெயருடைய செயற்கரியதவம் செய்த பெருமுனிவன்;* ***இருந்த -*** *தங்கியிருந்த;* ***அமைதி -*** *இடமாகிய;* ***பத்திரப்பழுமரப் பொழில்-*** *இலையும் பழமும் நிறைந்த மரங்கள்உள்ள சோலைகள்;* ***துவன்று-****நெருங்கி விளங்கும்;* ***பழுவம் -*** *வனத்தை;* ***சென்றுஅணுகினார் -*** *போய் அடைந்தனர்.*

*அத்திரி என்னும் முனிவர் பிரமகுமரர்களுள்ஒருவர் ஏழு முனிவர்களுள் முன்வைக்கப்படுபவரும் ஆவர். இவரை இராமன் சந்தித்தது வான்மீகத்தில்அயோத்தியா காண்ட முடிவில் உளது. வில்லுக்குச் சித்திரமாவது இராமலக்குவர் கையில்ஏந்தியிருத்தல். பழுமரம் ஆலமரமுமாம். பழுவம் உறையுளுமாம்.*

***2518. திக்கு உறும் செறி பரம்***
***தெரிய நின்ற, திரள்***

***பொன்கைக் குறுங் கண்***
***மலைபோல், குமரர் காமம் முதல் ஆம்***
***முக் குறும்பு அற எறிந்த வினை***
***வால், முனிவனைப்***
***புக்கு இறைஞ்சினர் அருந் தவன்***
***உவந்து புகலும்***

***திக்கு உறும் -*** *எட்டுத் திசைகளிலும் பொருந்திய;* ***செறிபரம் -****மிகுந்த சுமையை;* ***தெரிய நின்ற -*** *இவ்வளவு என அறியுமாறு தாங்கி நின்ற,* ***திரள் பொன்கை -*** *திரண்ட அழகிய துதிக்கையையும்,* ***குறுங்கண் -*** *சிறியகண்களையும் உடைய;* ***மலைபோல் குமரர் -*** *யானைகள் போன்ற இராமலக்குவர்;* ***புக்கு -*** *அம்முனிவர் உறையுள்புகுந்து;* ***காமம் முதல் ஆம் முக்குறும்பு அற எறிந்த -*** *காமம், வெகுளி, மயக்கம்எனும் மூன்று குற்றங்களையும் அடியோடு கடிந்த;* ***வால் வினை முனிவனை -****தவவினை உடையதூய்மையான செயல்களை உடைய அத்திரி முனிவனை;* ***இறைஞ்சினர் -*** *வணங்கினார்கள்;* ***அருந்தவன் -*** *அம்முனிவன்;****உவந்து புகலும் -*** *மனமகிழ்ந்து சொல்வான்.*

*திக்குறு மலை என்பது எட்டுத் திசைகளிலுள்ளயானைகள். முக்குறும்பு - காமம் வெகுளி மயக்கம். (குறள் 360). அம்மூன்று குற்றங்கள் இல்லாதவன். அ+திரி=அத்திரி, மலை-ஆகுபெயர். புகலும்-செய்யும் என்னும் முற்று ஆண்பாலுக்குவந்தது.*

*வஞ்ச முக்குறும்பாம் குழியைக் கடக்கும் (இராமானுச நூற்றந்தாதி).*

***2519. 'குமரர்'! நீர் இவண் அடைந்து***
***உதவு கொள்கை எளிதோ?***
***அமரர் யாவரொடும், எவ்***
***உலகும் வந்த அளவே!***
***எமரின் யார் தவம் முயன்றவர்கள்?'***
***என்று உருகினன்-***
***தமர் எலாம் வர, உவந்தனைய***
***தன்மை முனிவன்.***

***தமர் எலாம் வர உவந்தனைய -*** *தம் சுற்றத்தார் யாவரும் வர அது கண்டு மகிழ்ந்தாற் போல;* ***தன்மை முனிவன் -*** *மகிழ்ச்சி நிலை அடைந்த அத்திரி முனிவர்; (இராமலக்குவரைக் கண்டு);* ***'குமரர்! நீர் இவண் அடைந்து உதவு கொள்கை -*** *தயரதன் மக்காள்! நீங்கள் இவ் விடத்தில் வந்து பெரும்பேறடையஅருளிய (நீங்கள் இங்கு வந்தது) தன்மை; எளிதோ- (எங்களுக்கு) கிடைத்தற்கு எளியதோ?;* ***அமரர் யாவரொடும் எவ்வுலகும்வந்த அளவே -*** *எல்லாத் தேவர்களோடும் எல்லா உலகங்களும் வந்த தன்மையதே!;* ***எமரின் -*** *எங்களைவிட;* ***யார் தவம் முயன்றவர்கள்-*** *யாரே தவ முயற்சியில் ஈடுபட்டவர்கள்?;* ***என்று உருகினன்*** *- என்று கூறி மனம் உருகினான்.*

*சுற்றம் சூழ இருப்பது உலகினர்க்குப் பெருமகிழ்வூட்டும். எனவேதமரெலாம் வர உவந்தனையஎன்றார். எமரின்யார் தவம் முயன்றவர்கள் என்பதற்கு இவ்வரும்பேறு பெற்ற எம்போல் நல்வினைசெய்தார் யார் என்றுமாம். அமரர் - சாவில்லாதவர். தாம்தேடி அடைய வேண்டியவன் தன்னை நாடிவந்ததால் உவப்பு மிகுந்தது.*

*தண்டக வனம் புகுதல்*

***2520. அன்ன மா முனியொடு அன்று,***
***அவண் உறைந்து, அவன் அரும்***
***பன்னி, கற்பின் அனசூயை***
***பணியால், அணிகலன்,***
***துன்னு தூசினொடு சந்து, இவை***
***சுமந்த சனகன்***
***பொன்னொடு ஏகி, உயர் தண்டக***
***வனம் புகுதலும்,***

***அன்ன மா முனியொடு** - அந்தமாட்சிமை பெற்ற முனிவருடன்; **அன்று** - அன்றைய பொழுது; **அவண் உறைந்து** - (இராமலக்குவ சீதை ஆகியோர்) அவ்வுறையுளில் தங்கியிருந்து; **அவன் அரும் பன்னி** - அம்முனிவனின் அரிய சிறப்புடைய மனைவியாம்; **கற்பின் அனசூயை** - கற்பிற் சிறந்தஅனசூயை என்பவளின்; **பணியால்** - கட்டளைப்படி; **அணிகலன்** - அழகிய நகைகளும்; **துன்னுதூசினொடு** -பொருந்திய ஆடைகளும்; **சந்து** - சந்தனமும்; **இவை** - ஆகியஇவற்றை; **சுமந்த** - தாங்கி ஏற்ற; **சனகன் பொன்னொடு** - சனகன் மகளாம்சீதையுடன்;**ஏகி** - அவ்விடம் விட்டுச் சென்று; **உயர் தண்டக வனம் புகுதலும்** -சிறந்த தண்டகாரணியத்தில் புகுந்தவுடன்.*

*பன்னி - பத்தினி அனசூயை - அழுக்காறில்லாதவள், அணிகலன்கள் சீதை அழகை மிகுவிக்காதுஅதனை மறைத்தலின் சுமந்த என்றார். பொன் - திருமகள்; ஆகுபெயர். தண்டகவனம் தண்டகன்என்னும் மன்னனால் பெயர் பெற்றது அவன் சூரிய குலத்தில் இட்சுவாகு மன்னனின் நூறு மக்களில் கடைப்பட்ட மூடன் எனக் கொண்டு தண்டன் எனப் பெயரிடப் பெற்றவன். விந்தமலைக்கும் சைவலமலைக்கும் இடைப்பட்ட நிலத்தை மது மந்தம் எனும் தலைநகரைக் கொண்டு ஆண்டான். ஒருநாள்சுக்ராச்சாரி ஆசிரமத்துள் அவர்மகளாம் அரசையைக் கற்பழித்தான். எனவே ஆச்சாரியரின்சாபத்தால் அவன் குடும்பம், சேனை, நாடு ஆகியவை மண் மாரியால் அழிந்தன. பின்பு அந்த இடம்காடாகித் தண்டகாரணியம் எனப் பெயர் பெற்றது. அணி பறித்து அழகு செய்தார்(6991).*

*விராதன் எதிர்ப்படுதல்*

***2521. எட்டொடு எட்டு மத மா கரி,***
***இரட்டி அரிமா,***
***வட்ட வெங் கண் வரை ஆளி***
***பதினாறு, வகையின்***

***கிட்ட இட்டு இடை கிடந்தன***
    ***செறிந்தது ஒருகைத்***
***தொட்ட முத் தலை அயில் தொகை,***
    ***மிடல் கழுவொடே.***

***எட்டொடு எட்டு -*** *பதினாறு;* ***மதமாகரி -*** *மதங்கொண்ட பெரிய யானைகள்;* ***இரட்டி அரிமா -*** *அவற்றிற்கு இருமடங்காம் முப்பத்திரண்டு சிங்கங்கள்;* ***வட்டவெங்கண் -*** *வட்டமான கொடிய கண்களையுடைய;* ***வரை ஆளி பதினாறு -*** *மலையில் வாழும் பதினாறு யாளிகள்;****வகையின் -*** *தன் வகைமையால்;* ***கிட்ட இட்டு -*** *நெருங்கக் கோத்திட்டு;****இடைகிடந்தன -*** *இடையே நெருங்கிக் கிடந்தனவாக;* ***செறிந்தது ஒருகைத் தொட்ட -*** *திரண்டதான தன் ஒரு கையால் பிடித்த;* ***முத்தலை அயில் தொகை -*** *மூன்று தலைகளையுடையமிக்க கூர்மையுடன் கூடிய;* ***மிடல் கழுவொடு -*** *வலிமைமிக்க சூலாயுதத்துடன்,* ***ஏ*** *-அசை.*

*விராதன் உண்ண யானை முதலியவற்றைத் தன் சூலத்திற் கோத்து எளிதிற் பிடித்திருந்தான். எட்டொடு எட்டு என்பதை அறுபத்து நான்கு என்பர் சிலர். தொட்ட - பெரிய எனும் பொருள் தரும்திசைச் சொல்லுமாம், ஆளி என்பது உறுப்புகளால் யானையும் சிங்கமும் சேர்ந்து சிறகும் கொண்டு காணப் பெறும் விலங்கு.*

***2522. செஞ் சுடர்ச் செறி மயிர்ச் சுருள்***
    ***செறிந்த செனியன்,***
***நஞ்சு வெற்பு உருவு பெற்று இடை***
    ***நடந்த தென, மா***
***மஞ்சு சுற்றிய வயங்கு கிரி***
    ***வாத விசையில்***
***பஞ்சு பட்டது பட, படியின்***
    ***மேல் முடுகியே.***

***செஞ்சுடர் -*** *சிவந்த ஒளியுடைய;* ***செறிமயிர்ச் சுருள் செறிந்த -*** *அடர்ந்தசுருட்டை மயிர்கள் கொண்ட;* ***செ(ன்)னியன் -****தலையுடையனாகி;* ***நஞ்சு வெற்பு உருவுபெற்று -*** *நஞ்சு, மலையின் வடிவைக் கொண்டு;****இடை நடந்தது என -*** *அவ்வனத்திடைநடந்தது போல;* ***மாமஞ்சு சுற்றிய வயங்குகிரி -*** *பெரிய மேகம் சூழ்ந்து விளங்கும்மலைகள், (கால்களின்நடை வேகத்தால்);* ***வாத விசையில் -*** *காற்றின் விசையால்;* ***பஞ்சு பட்டது பட -*** *பஞ்சடையும் நிலையை அடையும் படி;* ***படியின்மேல் முடுகி -****நிலத்தின் மீது விரைந்துநடந்து;* ***ஏ -*** *அசை.*

*விராதன் நஞ்சுபோல் கொடுமையும் மலைபோல் வலிய தோற்றமும் கொண்டவன். அவன் நடைவேகத்தால் எதிர்ப்படு மலைகள். பஞ்சுபோல் சிதறிப் பறந்தன. தாடகை வருகையையும் இவ்வாறே 'கிரிகள் பின் தொடர வந்தாள் (368) _ என்பார்._நஞ்சு வெற்புருவு பெற்றிடை நடந்தது என்பது இல்பொருளுவமை. செனியன் - சென்னியன், இடைக்குறை.*

***2523. புண் துளங்கியன கண்கள் கனல்***
***பொங்க, மழை சூழ்***
***விண் துளங்கிட, விலங்கல்கள்***
***குலுங்க, வெயிலும்***
***கண்டு, உளம் கதிர் குறைந்திட,***
***நெடுங் கடல் சுலாம்***
***மண் துளங்க, வய அந்தகன்***
***மனம் தளரவே.***

***புண் துளங்கி அன கண்கள் -*** *புண்கள் துடிப்பது போன்ற கண்களில்;* ***கனல் பொங்க -*** *நெருப்புப் பொறி பறக்க;* ***மழைசூழ் விண் துளங்கிட -*** *மேகம் சூழ்ந்த வானம் நடுங்க;* ***விலங்கல்கள் குலுங்க -*** *மலைகள் நடுங்கிட;* ***வெயிலும் -*** *கதிரவனும்;* ***கண்டு -*** *பார்த்து;* ***உளம் கதிர்குறைந்திட -****மனம் ஒளி கெட;* ***நெடுங்கடல் சுலாம்-*** *பெரியகடல் சூழ்ந்த;****மண்துளங்க-*** *நிலம் நடுங்க;* ***வய அந்தகன் -*** *வலிமையுடைய யமனும்;* ***மனம் தளர -*** *உள்ளம் தளர்ச்சி அடைய;* ***ஏ -*** *அசை.*

*கண்ணில் கனல் பொங்குவது புண்ணில் செந்நிறம் விளங்குவதுபோன்றது, வெயில், மழை -ஆகுபெயர். அந்தகன் - உயிர்களுக்கு முடிவை உண்டாக்கும் கண்ணற்றவன்.*

***2524. புக்க வாள் அரி முழங்கு***
***செவியின் பொறிஉற,***
***பக்கம் மின்னும் மணி மேரு***
***சிகரம் குழைபட,***
***செக்கர் வான் மழை நிகர்க்க, எதிர்***
***உற்ற செருவத்து***
***உக்க வீரர் உதிரத்தின் ஒளிர்***
***செச்சையி னொடே***

*(விராதன் வருகையினால்);* ***புக்க வாள் அரி -*** *புகுந்த ஒளியுடைய சிங்கங்கள்;* ***முழங்கு -*** *முழக்கு;* ***செவியின் பொறிஉற -*** *காதுகளில் பொருந்த;* ***பக்கம் மின்னும்-*** *எல்லாப் பக்கங்களிலும் ஒளி வீசும்;* ***மணிமேருசிகரம் -*** *இரத்தினம் பொருந்தியமேருமலையின் முகடு;* ***குழைபட -*** *குளிர்ந்து கெட,* ***எதிர் உற்ற செருவத்து -*** *எதிர்ப்பட்ட போரில்;* ***உக்க வீரர் உதிரத்தின் -*** *வீழ்ந்த வீரரின் இரத்தத்தால்;****செக்கர் வான்மழை நிகர்க்க -*** *செவ்வான மேகம் போல;* ***ஒளிர் செச்சையினொடு-*** *விளங்கும் செஞ்சந்தனப் பூச்சுடனே;* ***ஏ -*** *அசை.*

*சிங்கங்களின் செவியின் பொறி புக்கு உக என்றும் கூறுவர், விராதன் செவி மலைக்குகைபோல் இருந்தன என்பதாம். அவனுடைய கரிய தோளில் பூசிய சிவந்த இரத்தப் பூச்சு செவ்வானமேகம் போன்றது.*

*2525.* ***படையொடு ஆடவர்கள், பாய் புரவி,***
***மால் களிறு, தேர்,***
***நடைய வாள் அரிகள், கோள்***
***உழுவை, நண்ணியஎலாம்***
***அடைய வாரி, அரவால் முடி,***
***அனேக வித, வன்***
***தொடையல் மாலை துயல்வந்து உலவு***
***தோள் பொலியவே.***

***படையொடு ஆடவர்கள் -*** *போர்க் கருவி ஏந்திய வீரர்கள்;* ***பாய் புரவி -*** *தாவிப்பாயும் குதிரைகள்;* ***மால்களிறு -*** *பெரிய மத யானைகள்,* ***தேர் -*** *தேர்கள்;* ***நடைய -*** *உலாவும்;* ***வாள் அரிகள் -*** *ஒளியுடைய சிங்கங்கள்;* ***கோள் உழுவை -*** *உயிரைக் கொள்வதைத் தொழிலாகக் கொண்ட புலிகள்;* ***நண்ணிய எலாம் -*** *இவ்வாறுதன்னை அடைந்தயாவற்றையும்;* ***அடைய வாரி -*** *முழுவதும் வாரிக் கொண்டு வந்து,****அரவால் முடி -*** *பெரிய பாம்பால் தொகுத்துக்கட்டிய;* ***அனேக வித வன் தொடையல் மாலை -*** *பலவிதமான, வலிதாகத் தொடுக்கப்பட்ட மாலைகள்;****துயல்வந்து -*** *தொங்கி அசையும்,* ***உலவு தோள் -*** *விசாலமான தோள்கள்;****பொலிய -*** *விளங்க,* ***ஏ -*** *அசை.*

*'படையொடு... தேர்' என நாற்படையும் வந்தன. வாரி என்றதால்எளிமையாக அள்ளி எடுத்தமைபுலனாம்*

*2526.* ***குன்று துன்றின எனக் குமுறு***
***கோப மதமா***
***ஒன்றின் ஒன்று இடை அடுக்கின***
***தடக் கை உதவ,***
***பின்றுகின்ற பிலனின் பெரிய***
***வாயின்ஒரு பால்***
***மென்று தின்று விளியாது***
***விரியும் பசியொடே.***

***குன்று துன்றின என -*** *மலைகள் நெருங்கின போல;* ***ஒன்றின் ஒன்று இடை அடுக்கின -*** *ஒன்றின் மேல் ஒன்றாகத்தன்னிடம் அடுக்கப் பெற்ற;* ***குமுறு கோப மதமா -*** *பிளிறும், சினத்தையுடைய மதயானைகளை;****தடக்கை உதவ -*** *தன் பெரிய கைகள் உதவ;* ***பின்றுகின்ற பிலனின் பெரிய வாயின் -*** *(போகப்போக) பின்னும் செல்கின்ற குகை போன்றபெரிய வாயிடத்தில்;* ***ஒருபால் மென்றுதின்று -*** *ஒரு பக்கத்தில் (அந்த யானைகளை)மென்று தின்று கொண்டிருக்கும்;* ***விளியாதுவிரியும் -****அடங்காது மேலும் மிகுகின்ற;* ***பசியோடு -*** *பெரும்பசியுடன்;* ***ஏ -****ஈற்றசை.*

*'இடை இடுக்கிய' எனக் கொண்டு தன் விரலின் இடையே இடுக்கி வைக்கப் பெற்ற (கை) எனவும்பொருள் கொள்வர். அந்த யானைகள் அவன் வாயில் ஒருபுறத்துக்கே*

போதா. விளிதல் - கழிதல், நீங்கல்

***2527.* பன்னகாதிபர் பணா மணி**
**பறித்து, அவைபகுத்-**
**தென்ன, வானவர் விமானம்**
**இடையிட்டு அரவிடைத்**
**துன்னு கோளினொடு தாரகை**
**தொடுத்த துழனிச்**
**சன்னவீரம் இடை மின்னு**
**தட மார்பினொடுமே**

**பன்னகாதிபர் -** பாம்பின் தலைவர்களாம் வாசுகி முதலிய பாம்புகளின்; **பணாமணி பறித்து -** படங்களிலுள்ளநாகரத்தினங்களைப் பிடுங்கிவந்து; **அவை பகுத்து என்ன -** அவற்றைப் பிரித்துப்பதித்தாற் போல; **அரவிடை -** மலைப்பாம்புகளின் உடலிலே; **வானவர் விமானம் இடையிட்டு -** தேவர்களின் விமானங்களை இடையிடையே தொங்கவிட்டு; **துன்னு கோளினொடு -** விளங்கும் ஒன்பது கிரகங்களுடனே; **தாரகை -** விண்மீன்களை; **தொடுத்த -** கட்டிய; **துழனி -** ஒலியுடன் கூடிய; **சன்னவீரம் -** ஒருவகை வெற்றிமாலை; **இடைமின்னு -** இடையே விளங்கும்; **தட மார்பினொடும் -** பரந்த மார்புடன்; **ஏ -** ஈற்றசை.

பன்னகம் - பாம்பு, பன்னகாதிபர் - வாசுகி, ஆனந்தன், தட்சன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் எனும் எட்டுக்குலநாகங்கள் பணம் - படம், துழனி, ஒன்றோடொன்று மோதி எழும் ஒலி. விராதன் அணிந்த வெற்றிமாலையில் தேவர்களின் விமானம், கிரகங்கள், விண்மீன்கள் ஆகியவை கோக்கப் பெற்றிருந்தன.

***2528.* பம்பு செக்கர், எரி, ஒக்கும்**
**மயிர் பக்கம் எரிய,**
**கும்பம் உற்ற உயர் நெற்றியின்**
**விசித்து, ஒளிகுலாம்**
**உம்பருக்கு அரசன் மால் கரியின்**
**ஓடை, எயிறு ஒண்**
**கிம்புரிப் பெரிய தோள்**
**வளையொடும், கிளரவே**

**பம்பு செக்கர் எரி ஒக்கும் மயிர் -** பரவிய செவ்வானத்தையும் தீயையும் போன்ற செம்மயிர்; **பக்கம் எரிய -** பக்கங்களில்விளங்க, **கும்பம் உற்ற உயர் நெற்றியின் விசித்து -** குடம் போன்ற மத்தகங்கள்உயர்ந்த நெற்றியில் கட்டப் பெற்ற; **ஒளி குலாம் உம்பருக்கு அரசன் மால் கரியின் ஓடை -** ஒளி வீசும் தேவர்கட்கு அரசனான இந்திரனின் பெரிய ஐராவதம் எனும் யானையின் நெற்றிப்பட்டம்; **எயிறு ஒண் -** அந்த யானையின்

*தந்தங்களில் பூட்டிய ஒளி மிக்க;* ***கிம் புரி-*** *பூண்கள்;* ***பெரிய தோள் வளையொடும் -*** *பெரிய வாகுவலயத்துடன்;* ***கிளர -*** *விளங்க;* ***ஏ -*** *ஈற்றசை.*

*செம்பட்டை மயிர் உடற்புறத்தே தொங்கிய விராதனுக்கு ஐராவதத்தின் ஓடை நெற்றிப்பட்டமாகவும், கிம்புரி வாகுவலயமும் ஆயின, பம்புதல் - பரத்தல், உற்ற - உவமஉருபு.*

***2529. தங்கு திண் கரிய காளிமை***
***தழைந்து தவழ,***
***பொங்கு வெங் கொடுமை என்பது***
***புழுங்கி எழ, மா***
***மங்கு பாதகம், விடம், கனல்,***
***வயங்கு திமிரக்***
***கங்குல், பூசி வருகின்ற கலி***
***காலம் எனவே***

***தங்கு திண் கரிய காளிமை -*** *பொருந்திய வலிய மிகுந்த கறுப்பு;* ***தழைந்து தவழ -*** *செழித்து விளங்க,* ***பொங்குவெங்கொடுமை என்பது -*** *மேற்கிளம்பும் பெரும் கொடுமை எனும் தீயபண்பு;* ***புழுங்கி எழ -****கோபித்து மேற்கிளம்ப;* ***மங்கு மா பாதகம் -*** *மிகக்கேட்டை உண்டாக்கும் பெரும்பாவமும்;* ***விடம் கனல் -*** *நஞ்சும் நெருப்பும்;* ***வயங்கு திமிர -****விளங்கிச்செருக்கிய;* ***கங்குல் பூசி வருகின்ற -*** *இருளைப் பூசிக்கொண்டு வரும்;* ***கலிகாலம் என -*** *கலிகாலம் (எதிரே உருவெடுத்து வந்தாற்) போல;* ***ஏ -*** *ஈற்றசை. காளிமை - கருமை. விராதனின் நிறம் கறுப்பு; வடிவோ கொடுமை; செயலோ தீவினை; அவனுக்குநஞ்சும் தீயும் கலிகாலமும் உவமை. தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

***2530. செற்ற வாள் உழுவை வன் செறி***
***அதள் திருகுறச்***
***சுற்றி, வாரண உரித் தொகுதி***
***நீவி தொடர,***
***கொற்றம் மேவு திசை யானையின்***
***மணிக் குலமுடைக்***
***கற்றை மாசுணம் விரித்து வரி,***
***கச்சு ஒளிரவே***

***செற்ற -*** *(தான்) கொன்ற;* ***வாள் உழுவை வன் செறி அதள் -*** *கொடிய புலியின் வலிய நெருங்கியதோல்;* ***திருகுற -*** *(தன் மார்பில்) சுருண்டு விளங்க;* ***சுற்றி -*** *சுற்றி உடுத்துக்கொண்டு;* ***வாரண உரித் தொகுதி*** *- பல யானைகளின் தோற்கூட்டம்;* ***நீவி தொடர -****அரையில் கட்டிய ஆடையாகத் தொடர்ந்திருக்க;* ***கொற்றம் மேவு திசை யானையின்-*** *வெற்றி பொருந்திய எட்டுத்திக்கு யானைகளின்;* ***மணிக்குலம் உடை -*** *மணிக்கூட்டங்களைஉடைய;* ***கற்றை மாசுணம் விரித்து வரி கச்சு -*** *பெரிய மலைப்பாம்பை விரித்து இழுத்துக்கட்டிய இடைக்கச்சு;****ஒளிர -*** *விளங்க;* ***ஏ -*** *ஈற்றசை.*

விராதன் கொன்ற புலியின் தோல் அவனுக்கு மேலாடையாகவும், யானைத் தோல் அரையில்கட்டும் ஆடையாகவும், திசையானைகளின் மணிகளைக் கோத்த மலைப்பாம்பு கச்சாகவும் விளங்கின.நீவி - ஆடை, கொய்சகமும் ஆம்.

***2531. செங் கண் அங்க அரவின் பொரு***
***இல் செம் மணி விராய்***
***வெங் கண் அங்க வலயங்களும்,***
***இலங்க விரவிச்***
***சங்கு அணங்கிய சலஞ்சலம்***
***அலம்பு தவளக்***
***கங்கணங்களும், இலங்கிய***
***கரம் பிறழவே***

***செங்கண் அங்க அரவின்-*** *சிவந்த கண்களையும் (நீண்ட) உடலையும் உடைய பாம்புகளுடைய;* ***பொரு இல் -*** *ஒப்பில்லாத;* ***செம்மணி விராய் -*** *சிவந்த மாணிக்கங்கள் கலந்து அமைக்கப்பட்டு;* ***வெங்கண் அங்க வலயங்களும் -*** *கொடிய தன்மை உடைய உறுப்புகளில் அணியும் தோள் வளைகளும்;* ***இலங்க -*** *விளங்கி அசைய;* ***விரவி -*** *பொருந்தி;* ***சங்குஅணங்கிய சலஞ்சலம் -*** *சங்குகள் வருந்திப் பெற்ற சலஞ்சலம் என்னும் உயர்ந்த சங்குகளால்;* ***அலம்பு -*** *ஒலிக்கின்ற,* ***தவளக் கங்கணங்களும் -*** *வெண்ணிறக் கைவளைகளும்;* ***இலங்கிய கரம்பிறழவே -****விளங்கும் கைகளில் விளங்கவும்;* ***ஏ -*** *ஈற்றசை.*

*பாம்பின் மணிகளால் இயன்ற வலயங்களோடு முத்துக்கங்கணமும் விராதன் அணிந்துள்ளான்.சஞ்சலம் - வலம்புரி ஆயிரம் சூழ்ந்த ஓர்உயர்ந்த சங்கு. (49).*

***2532. முந்து வெள்ளிமலை பொன்னின்***
***மலையோடு முரண,***
***பந்து முந்து கழல் பாடுபட***
***ஊடு படர்வோன்,***
***வந்து மண்ணினிடை யோன்***
***எனினும், வானினிடையோர்***
***சிந்தையுள்ளும் விழியுள்ளும் உளன்***
***என்ற திறலோன்***

***முந்து வெள்ளிமலை பொன்னின் மலையோடு முரண -****சிறந்த கைலை மலையும், மேருமலையோடு மாறுபடும்படி;* ***பந்து முந்து கழல் பாடுபட -*** *பந்தாகமுன்னே தள்ளும் கால்களால் அவதியுற;* ***ஊடு படர்வோன் -*** *அம்மலைகளின் இடையே நடந்துசெல்வான்;* ***வந்து மண்ணினிடை யோன் எனினும் -*** *வந்து உலகின் இடையே உள்ளான் என்றாலும்;* ***வானினிடையோர் சிந்தையுள்ளும் விழியுள்ளும் உளன் என்ற திறலோன் -*** *தேவர்களின் மனத்திலும் கண்ணிலும் உள்ளவன் என்று கூறப்படும் வலிமையுடையவனும்,*

*கைலை மலையையும் மேருமலையையும் பந்துபோல் ஆடவல்ல வலிய பெரிய தாள்களால் அக் காட்டில் செல்பவன் விராதன் ஆவான். அவனிடத்துக்கொண்ட அச்சத்தால் தேவர் சிந்தையுளும் விழியிலும் உளன் என்றார். சிவனுறையும் மலை கைலைஎன்பதால் முந்து வெள்ளிமலை என்றார். வான் - சுவர்க்கத்திற்கு இலக்கணை.*

***2533. பூதம் அத்தனையும் ஓர் வடிவு***
***கொண்டு, புதிது என்று***
***ஓத ஒத்த உருவத்தன்; உரும்***
***ஒத்த குரலன்;***
***காதலித்து அயன் அளித்த, கடை***
***இட்ட கணிதப்***
***பாத லக்கம் மதவெற்புஅவை***
***படைத்த வலியான்.***

***பூதம் அத்தனையும் ஓர் வடிவு கொண்டு -*** *ஐந்து பூதங்களும் ஓர் உருவம் எடுத்துக்கொண்டு;* ***புதிது என்று ஓத ஒத்த உருவத்தன் -*** *புதுமையான ஒரு வடிவு எடுத்து இவ்வாறு வந்தனஎன்று சொல்லத் தக்க வடிவுடையவனும்;* ***உரும் ஒத்த குரலன் -*** *இடி ஓசையைப் போன்ற குரலோசை உடையவனும்;* ***அயன் காதலித்து அளித்த கடையிட்ட பாத கணித லக்கம் -*** *பிரமன்மகிழ்ந்து கொடுத்த கடையிலே கணக்கிட்டு வைத்த கால் இலட்சம்;* ***மதவெற்பு அவை படைத்தவலியான் -*** *மதயானைகளாம் அவ்விலங்குகள் அடைந்த வலிமையை உடையவன்.*

*விராதனின் வலிய உருவமும் கொடிய குரலும் கூறப்பட்டுள்ளன. கடையிட்ட பாதலக்கம் ஒன்றேகால் இலட்சம். வெற்பு - ஆகுபெயர்.*

***2534. சார வந்து, அயல் விலங்கினன்-***
***மரங்கள் தரையில்***
***பேர, வன் கிரி பிளந்து உக,***
***வளர்ந்து இகல் பெறா***
***வீர வெஞ் சிலையினோர் எதிர்,***
***விராதன் எனும் அக்***
***கோர வெங் கண் உரும்ஏறு அன***
***கொடுந் தொழிலினான்.***

***விராதன் எனும் அக்கோர வெங்கண் உரும் ஏறு அன கொடுந் தொழி லினான் -*** *விராதன் என்று சொல்லப்படும் அந்த அச்சமூட்டும் கொடிய கண்களையும் பேரிடி போன்ற கொடியதொழிலையுமுடையவன்; (வரும் வேகத்தால்);* ***மரங்கள் தரையில் பேர -*** *மரங்கள்நிலத்தில் நின்ற இடம் விட்டுப் பெயர்ந்து விழவும்;* ***வன்கிரி பிளந்துக -*** *வலியமலைகள் பிளவுண்டு சிதறவும்;* ***வளர்ந்து இகல் பெறாவீர வெஞ்சிலையினோர் எதிர் சார வந்துஅயல் விலங்கினன் -*** *பேருருக்கொண்டு வளர்ந்து போரைப் பெறாத*

*வீரமும் கொடிய வில்லும்உடைய இராமலக்குவர் முன்னே அருகில் வந்து எதிராகக் குறுக்கிட்டு நின்றான்.*

*விலங்கினன் - குறுக்கிட்டான். விராதன் - எதிலும் நிறைவு பெறாதவன்.*

*விராதன், சீதையைக் கவர்ந்து செல்லுதல்*

***2535. நில்லும், நில்லும் என வந்து, நிணம்***
***உண்ட நெடு வெண்***
***பல்லும், வல் எயிறும், மின்னு பகு***
***வாய் முழை திறந்து,***
***அல்லி புல்லும்அலர் அன்னம்***
***அனையாளை, ஒரு கை,***
***சொல்லும் எல்லையில், முகந்து உயர்***
***விசும்பு தொடர***

***நிணம் உண்ட நெடுவெண் பல்லும் வல்எயிறும் -*** *தசையைப் புசித்த நீண்ட வெண்ணிறப் பற்களும் வலிய கோரப்பற்களும்;* ***மின்னு பகுவாய் முழைதிறந்து -*** *விளங்கும் பிளந்த வாயாகிய குகையைத் திறந்து;* ***'நில்லும் நில்லும்' எனச்சொல்லும் எல்லையில் -*** *'நில்லுங்கள், நில்லுங்கள்' என்று சொன்ன அளவில்;* ***அல்லிபுல்லும் அலர் அன்னம் அனையாளை -*** *அகவிதழ்கள் நெருங்கிய தாமரை மலரில் வீற்றிருக்கும் அன்னப் பறவை போன்ற சீதையை;* ***வந்து ஒருகை முகந்து உயர்விசும்பு தொடர -*** *எதிர் வந்துஒருகையால் எடுத்து உயர்ந்த வானத்தில் தொடர்ந்து செல்ல;*

*எயிறு - பல்லின் விளிம்பும் ஆம். நில்லும் நில்லும் - அடுக்கு. அன்னம் -ஆகுபெயர்.*

***2536. காளை மைந்தர் அது கண்டு,***
***கதம் வந்து கதுவ,***
***தோளில் வெஞ் சிலை இடங் கொடு***
***தொடர்ந்து, சுடர் வாய்***
***வாளி தங்கிய வலங் கையவர்,***
***'வஞ்சனை; அடா!***
***மீள்தி; எங்கு அகல்தி' என்பது***
***விளம்ப, அவனும்***

***காளை மைந்தர் அது கண்டு கதம் வந்து கதுவ -*** *இளம் எருது போன்ற இராமலக்குவர் அதனைப் பார்த்து, சினம் பிறந்து பற்றி;* ***தோளில் வெஞ்சிலை இடங்கொடு -*** *தோளிலே மாட்டிய கொடிய வில்லைத் தம் இடக்கையில் பிடித்துக்கொண்டு;* ***சுடர் வாய் வாளி தங்கிய வலங் கையவர் -*** *ஒளி பொருந்திய அம்புகள் கொண்டவலக்கையினராய்;* ***தொடர்ந்து -*** *அவ்விராதனைப் பின்தொடர்ந்து,* ***அடா! வஞ்சனைமீள்தி எங்கு அகல்தி -*** *ஏ அற்பனே! இச்செயல் வஞ்சகமானது;*

*திரும்புவாயாக! நீ எங்கேசெல்கிறாய்?,* ***என்பது விளம்ப -*** *என்னும் சொற்களைக் கூற;* ***அவனும் -*** *அவ்வரக்கனும்.*

*காளை - பெருமிதம், வலிமை, நடை முதலியவற்றில் சிறந்ததால் ஆடவர்க்கு உவமை. அகல்தி -முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று.*

***2537. 'ஆதி நான்முகன் வரத்தின் எனது***
***ஆவி அகலேன்;***
***. ஏதி யாவதும் இன்றி, உலகு***
***யாவும் இகலின்,***
***சாதியாதனவும் இல்லை; உயிர்***
***தந்தனென்; அடா!***
***போதிர், மாது இவளை உந்தி, இனிது'***
***என்று புகல***

***ஆதிநான் முகன் வரத்தின் -*** *படைப்பில் முதலில் தோன்றிய பிரமன் எனக்குக் கொடுத்த வரத்தினால்;* ***எனது ஆவி அகலேன் -*** *என் உயிர் நீங்க மாட்டேன்;* ***ஏதியாவதும் இன்றி -*** *ஆயுதங்கள் ஒன்றும் இல்லாமலேயே;* ***உலகு யாவும் இகலின் சாதியாதனவும் இல்லை -*** *எல்லா உலகத்தவரும்எதிர்த்துப் போரிட்டாலும் நான் வெல்லக் கூடாதன இல்லை;* ***அடா! உயிர் தந்தனென் -*** *அற்பர்களே! உங்களுக்கு இரங்கி உயிர்ப்பிச்சை கொடுத்தேன்;* ***மாது இவளை உந்தி இனிதுபோதிர் -*** *இப்பெண்ணை என்னிடம் விட்டு இனிதே செல்லுங்கள்;* ***என்று புகல -****என்றுவிராதன் சொல்ல,*

*தேவர்களில் முதலில் வைத்துஎண்ணப்படுபவன் நான்முகன் எனலும் ஆம். ஏதி - காரணம் எனலுமாம். இனி விராதன் இறப்பதைமுன்னமே தெரிவிக்கும் அமங்கலப் பொருள் படக் கூறும் நெறி: அடா - இவ்வாறு நான் செய்வனதகாதனவே. உயிர்தந்தனென் - என் உயிரைக் கொடுத்து விடுகிறேன், மாதிவளை உந்தி இனிதுபோதிர் - இப்பெண்ணை அழைத்துக் கொண்டு இனிதே செல்வீர், என்பதாம். போதிர் - முன்னிலைஏவல் பன்மை வினைமுற்று.*
*இராமன் போர் தொடுத்தல்*

***2538. வீரனும் சிறிது மென் முறுவல்***
***வெண் நிலவு உக,***
***'போர் அறிந்திலன் இவன்; தனது***
***பொற்பும் முரணும்***
***தீரும், எஞ்சி' என நெஞ்சின் உறு***
***சிந்தை தெரிய,***
***பார வெஞ் சிலையின் நாண் ஒலி***
***படைத்த பொழுதே,***

***வீரனும் சிறிது மென்முறுவல் வெண்நிலவு உக -*** இராமனும் புன்சிரிப்பாகிய வெள்ளிய நிலவொளி தோன்ற; ***போர் அறிந்திலன் இவன்-*** போர் செய்யும் முறையை அறிந்தவன் அல்லன் இவன்; ***தனது பொற்பும் முரணும் எஞ்சி தீரும் என-*** இவனது பொலிவும் வலிவும் குறைந்துஅழியும் என்று; ***நெஞ்சின் உறு சிந்தை தெரிய -*** தன்மனத்தின் எண்ணம் வெளிப்பட; ***பார வெஞ்சிலையின் நாண் ஒலி படைத்த பொழுது-***வலிய கொடிய வில்லின் நாண் ஓசையை உண்டாக்கிய காலத்தில்; ***ஏ -*** ஈற்றசை.

*போரிடாமல் வஞ்சகமாய்ச் சீதையைக் கவர்ந்து சென்றதால் விராதன் போரறிந்திலன்எனப்பட்டது. பொலிவு - வீரத்தால் விளங்கும் தன்மை. முறுவல், நிலவு - ஆகுபெயர்.*

***2539. இலை கொள் வேல் அடல் இராமன்,***
***எழுமேக உருவன்,***
***சிலை கொள் நாண் நெடிய கோதை***
***ஒலி ஏறு, திரை நீர்,***
***மலைகள், நீடு தலம், நாகர் பிலம்,***
***வானம் முதல் ஆம்***
***உலகம் ஏழும், உரும்ஏறு என***
***ஒலித்து உரறவே***

***எழுமேக உருவன் இலை கொள் வேல் அடல் இராமன் -***மேல் எழுகின்ற நீருண்டது போன்ற மேகத்தின் நீல நிறமுடையவனாகிய அரசிலை போன்ற நுனியுடையவேலேந்திய வலிய இராமன்; ***சிலை கொள் நாண் நெடிய கோதை ஒலிஏறு -*** வில்லிற் கொண்டநீண்ட கயிற்றின் மிக்க ஒலியானது; ***திரைநீர் மலைகள் நீடுதலம் நாகர் பிலம் வானம்முதலாம் உலகம் ஏழும் -*** அலைகள் கூடிய கடலின் நீரும் மலைகளும் சூழ்ந்த நீண்ட நிலவுலகமும்நாகர் வாழும் பாதலமும் சுவர்க்க லோகமும் முதலாகிய ஏழு உலகங்களும்; ***உரும் ஏறு என ஒலித்துஉரற -*** பேரிடி ஏறு போலப் பெருமுழக்கம் உண்டாக்க; ***ஏ -*** ஈற்றசை.

*இராமன் எறிந்த வில்லின் நாணொலி ஏழு உலகங்களிலும் இடி ஏறு போல ஒலித்தது. வேல்படைகொண்டு போவதும் தமிழ் மரபு பற்றிக் கூறி ஏனைப் படைகளையும் பெறவைத்தார். மேல் உலகம்ஏழாவன: பூலோகம், புவலோகம், சுவலோகம், மகாலோகம், சனலோகம், தபோலோகம், சத்தியலோகம். கீழேழு உலகம்: அதலம், விதலம், சுதலம், தராதலம்,இரசாதலம், மகாதலம்,பாதாளம். உரற - எதிரொலிக்க.*
*விராதன், சீதையை விடுத்து இராமலக்குவரை எதிர்த்தல்*

***2540. வஞ்சகக் கொடிய பூசை நெடு***
***வாயில் மறுகும்***
***பஞ்சரக் கிளி எனக் கதறு***
***பாவையை விடா,***

***நெஞ்சு உளுக்கினன் என, சிறிது***
***நின்று நினையா,***
***அஞ்சனக் கிரி அனான் எதிர்***
***அரக்கன் அழலா***

***அரக்கன் -*** *அவ்விராதன்;* ***வஞ்சகக் கொடிய பூசை நெடுவாயில் -*** *வஞ்சத்தன்மையுடைய கொடிய பூனையின்பெரிய வாயிலே;* ***மறுகும் பஞ்சரக் கிளி எனக் கதறு பாவையை விடா -*** *அகப்பட்டுத்தவிக்கும் கூட்டிலுள்ள கிளி போலக் கூச்சலிடும் சீதையைக் கீழே விட்டு;* ***நெஞ்சு உளுக்கினன் என -*** *மனஞ்சிதைந்தவன் போல;* ***சிறிது நின்று நினையா -*** *சற்றே நின்று சிந்தித்து;* ***அஞ்சனக் கிரி அனான் எதிர் அழலா -*** *கரியமலை போன்ற இராமனுக்கு எதிரில்வந்துகோபித்து;*

*பூசை - பூனை (4). பாவை - ஆகுபெயர் அஞ்சனம் - கருமை.*

***2541. பேய்முகப் பிணி அறப், பகைஞர்***
***பெட்பின் உதிரம்***
***தோய் முகத்தது, கனத்தது,***
***சுடர்க் குதிரையின்***
***வாய்முகத்திடை நிமிர்ந்து***
***வட வேலை பருகும்***
***தீ முகத் திரி சிகைப் படை***
***திரித்து எறியவே***

***பேய்முகப்பிணி அற -*** *பேய்களிடத்திலுள்ள பசியாகிய நோய் நீங்க;* ***பகைஞர் உதிரம் -*** *எதிரிகளின்இரத்தத்திலே;* ***பெட்பின் தோய் முகத்தது -*** *விருப்பத்தோடு தோய்ந்த நுனியை உடையதும்;* ***கனத்தது -*** *வலிமையுடையதும்,* ***சுடர்க் குதிரையின் -*** *தீச்சுடர் விட்டெரியும்குதிரை உருவில்;* ***வாய்முகத்திடை நிமிர்ந்து -*** *வாயும் முகமும் தன்னிடம் கொண்டு மேலோங்கி;* ***வடவேலை பருகும் -*** *வடதிசையிலுள்ள கடல்நீரைப் பருகும்;* ***தீமுகத் திரிசிகைப் படை திரித்தெரிய -*** *தீயைத் தன்னிடம் கொண்டதும் ஆன முப்பிரிவான சூலத்தைச்சுற்றி இராமன் மீது எறிய;* ***ஏ -*** *ஈற்றசை.*

*விராதனின் சூலப்படை இரத்தம் தோய்ந்திருந்ததால் பேய்கள் அதைக் குடித்துப் பசிதீர்ந்தன. என்றும் பசிநீங்காப் பேயும் பசி தீர அவன் பகைவரை அழித்துக் கொண்டே இருந்தான்என்பதாம். வடவைத் தீ என்பது வடகடலில் பெண்குதிரை வடிவில் உள்ள தீ எனப் புராணங்கள் கூறும். அத்தீயே மூன்று நாவுடன் உள்ளது போல விராதனின் படை விளங்கியது. வடகுதிரை எனப்'படபை' என்றபெண் குதிரையைச் சுட்டும் என்பர்.திரிசிகைப் படை -முத்தலைச்சூலம்.*

***2542. திசையும், வானவரும், நின்ற திசை***
***மாவும், உலகும்***

***அசையும் ஆலம் என, அன்ன அயில்***
***மின்னி வரலும்,***
***வசை இல் மேரு முதல் மால் வரைகள்***
***ஏழின் வலி சால்***
***விசைய வார் சிலை இராமன் ஒரு***
***வாளி விடவே***

***அன்ன அயில் -*** *அந்தச் சூலப்படை;* ***திசையும் -*** *எண் திசைகளும்;* ***வானவரும் -*** *அவ்வெட்டுத்திசைக்காவல் செய் தேவரும்;****திசைநின்ற மாவும் -*** *அத்திக்குகளில் நின்ற எட்டுயானைகளும்;* ***உலகும் -*** *உலகங்களும்;* ***அசையும் -*** *கலங்கக் காரணமான;* ***ஆலம் என-*** *ஒருநஞ்செனெ;* ***மின்னிவரலும் -*** *ஒளிவீசி வரவும்;* ***இராமன், வசையில் மேரு முதல்மால் வரைகள் ஏழின் வலி சால் -*** *குற்றமில்லாத மேரு முதலாக உள்ள மலைகள் ஏழை விட வலிமைமிக்க;* ***விசைய வார்சிலை -****வெற்றித் தரும் நீண்ட வில்லிலிருந்து;* ***ஒருவாளி விட -*** *ஓரம்பைத் தொடுத்து எய்ய:* ***ஏ -*** *ஈற்றசை.*

*திசையும் வானவரும் என்பதற்குத் திகைக்கும் தேவரும் எனவும் பொருள்படும். எ.டு. ‘நீதிசைத்தது உண்டோ’ (1512) திசைவானவர் - இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு,குபேரன், ஈசானன் என எண்மர். எட்டுத்திக்கு யானைகள் ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபெளமம், சுப்பிரதீபம் என்பன. மா - விலங்கின் பொதுப் பெயர்.ஏழுமலைகளாவன: கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், எமகூடம், நீலகிரி என்பன.விசயம் என்பது விசையம் என எதுகை நோக்கித் திரிந்தது எனலாம். விசைய என்பதற்கு வேகமாகஎனவும் பொருள் கூறுவர். ஒரு - ஒப்பற்ற எனவுமாம்.*

***2543. ‘இற்றது இன்றொடு இவ் அரக்கர்***
***குலம்’ என்று, பகலே,***
***வெற்ற விண்ணினிடைநின்று நெடு***
***மீன் விழுவபோல்,***
***சுற்று அமைந்த சுடர் எஃகம்அது***
***இரண்டு துணியா***
***அற்ற கண்டம்அவை ஆசையினது***
***அந்தம் உறவே***

***இவ்வரக்கர் குலம் இன்றொடு இற்றது -*** *இந்த இராக்கதக் கூட்டம் இந்த நாளோடு முடிந்தது;* ***என்று -*** *எனக் குறிபார்த்து;****பகலேவெற்ற விண்ணினிடை நின்று நெடு மீன் விழுவ போல் -****பகற்காலத்திலே வேகமற்ற வெறும்வானத்திலிருந்து பெரிய விண்மீன்கள் வீழ்வன போல;* ***சுற்று அமைந்த சுடர் எஃகம் அது -*** *சுற்றிலும் பொருந்திய ஒளியுடைய சூலம்;* ***இரண்டு துணியா -*** *இரண்டு துண்டாக்கப்பட்டு;* ***அற்ற கண்டம் அவை -*** *அழிந்த அத்துண்டங்கள்;* ***ஆசையினது அந்தம் உற -*** *திக்குகளின்எல்லையை அடைய;* ***ஏ -*** *ஈற்றசை.* *வெற்ற விண் - வேறு ஒன்றும் இல்லாத சூனியமான ஆகாயம். பகலில் விண்மீன்கள் விழுவதுகேட்டின் அறிகுறி. சூலத்தின் துண்டுகள் வானில் விண்மீன்களாக விழுந்த நிலை அரக்கர் அழிவுக்குஅறிகுறியாம். ஆசை - திக்கு. எ - டு*

*ஆசை பத்திற்கும் (3422) அது, அவை என்பன பகுதிப் பொருள்விகுதி.*

***2544. சூர் ஒடுங்கு அயில் துணிந்து இறுதல்***
***கண்டு, சிறிதும்***
***போர் ஒடுங்கலன், மறம்கொடு***
***புழுங்கி, நிருதன்***
***பார் ஒடுங்குறு கரம்கொடு***
***பருப்பதம் எலாம்***
***வேரொடும் கடிது எடுத்து எதிர்***
***விசைத்து, விடலும்***

***நிருதன் -*** *அவ்வரக்கன்;* ***சூர் ஒடுங்கு அயில் துணிந்து இறுதல் கண்டு -*** *கொடுமை தங்கியுள்ள தன்சூலம்துண்டுபட்டு அழிந்ததைப்பார்த்தும்;* ***சிறிதும் போர் ஒடுங்கலன் -*** *போர் செய்தலிற்சற்றும் தளர்ச்சி இல்லாதவன் ஆகி;* ***மறம்கொடு -*** *வீரப்பண்பை மேற் கொண்டு;****புழுங்கி -*** *கோபத்தால் மனம் வெதும்பி;* ***பார் ஒடுங்குறுகரம் கொடு -*** *நிலவுலகு ஒடுக்கமுறும்படியான தன் பெரிய கைகளால்;* ***பருப்பதம் எலாம் -*** *மலைகளை எல்லாம்;* ***வேரொடும் கடிது எடுத்து எதிர் விசைத்து விடலும்*** *வேரோடு விரைவாகப் பிடுங்கி எடுத்துஇராமனுக்கு எதிராக வேகமாக எறிந்ததும்.*

*தன் சூலப்படை இராமன் அம்பால் துண்டுபடினும் பின் வாங்காமல் போர் புரிந்தான். சூர்என்பதற்குத் தேவர், வஞ்சம், கொடுந் தெய்வம் எனப்பல பொருள் கூறுவர். பருப்பதம் -பர்வதம்.*

***2545. வட்டம் இட்ட கிரி அற்று உக,***
***வயங்கு வயிரக்***
***கட்டு அமைந்த கதிர் வாளி,***
***எதிரே கடவலால்,***
***விட்ட விட்ட மலை மீள, அவன்***
***மெய்யில், விசையால்***
***பட்ட பட்ட இடம் எங்கும்,***
***உடல் ஊறுபடலும்***

***வட்டம் இட்ட கிரி அற்று உக -*** *விராதன் எறிந்த சூழ்ந்து வரும்மலைகள் பிளவுபட்டு விழுமாறு; (இராமன்)* ***வயங்கு வயிரக் கட்டு அமைந்த கதிர்வாளி எதிரே கடவலால் -*** *விளங்குகின்ற உறுதியான கட்டுப் பொருந்தியஒளிமிக்க அம்புகளை (விராதனுக்கு) எதிராக எய்தலால்;* ***விட்ட விட்ட மலை மீள -*** *(அவன்) மேன்மேல் எறிந்த மலை எல்லாம் திரும்பவும்;****அவன் மெய்யில் -*** *விராதன்உடலில்,* ***விசையால் பட்ட பட்ட இடம் எங்கும் உடல் ஊறு படலும் -*** *வேகத்தோடுஎறிப்பட்ட இடங்களில் எல்லாம் உடம்பு காயம் பட்ட அளவில்.*

*'வட்டமிட்ட' என்ற தொடரை வாளியுடன் சேர்ப்பதும் உண்டு. பட்ட பட்ட - மிகுதிபற்றிஅடுக்கு வந்தது. விராதன் எறிந்த மலைகள் இராமன் அம்பினால் திரும்பி*

*அவனையே காயப்படுத்தின.ஊறு - புண்.*

***2546. ஓம் அ ராமரை, ஒருங்கும்***
***உணர்வோர் உணர்வுறும்***
***நாமர் ஆம் அவரை, நல் அறம்***
***நிறுத்த நணுகித்***
***தாம் அரா-அணை துறந்து தரை***
***நின்றவரை, ஓர்***
***மா மராமரம் இறுத்து, அதுகொடு***
***எற்ற வரலும்***

***ஓம் அ ராமரை -*** *ஓம் எனும் பிரணவ மந்திரப் பொருளாகிய இராம பிரானை;* ***ஒருங்கும் உணர்வோர் உணர்வுறும்நாமர் ஆம் அவரை -*** *முற்றும் உணர்த்த பெரியோரே அறியத்தக்க இராமன் எனும் திருப்பெயர் கொண்ட அவரை;* ***நல்லறம் நிறுத்த -*** *சிறந்த தருமத்தை நிலை நிறுத்தற்காக;* ***தாம்அரா அணை துறந்து தரை நணுகி நின்றவரை -*** *தமக்குரிய ஆதிசேடனாம் பள்ளியை விட்டு நீங்கிஉலகில் வந்து அவதரித்தவரை;* ***ஓர் மா மராமரம் இறுத்து -*** *ஒரு பெரிய ஆச்சா மரத்தைப்பிடுங்கி ஒடித்து;* ***அது கொடு எற்ற வரலும் -*** *அதனைக் கொண்டு அடிக்கவரவும்.*

*இராமனின் நிலையை அறியாது விராதன் இவ்வாறு செய்கிறான் என்பது தோன்ற 'ஓம் அ ராமரை' எனக் கவி சிறப்பித்துக் கூறுகிறார். ஓம் ராமரை என ஓமங்களால் விளங்கும் வேள்வியும்வேள்விப்பயனுமாய் விளங்கும் இராமனை எனவும் குறிப்பர். இராம நாமம் என்பது நல்லறிவுடையோர் அறியும் பொருளாக விளங்குவது (இராமர் என்ற சொல்லைக் கொண்ட இச்செய்யுள் இடைச் செருகல்என்பர் சிலர்) திருவனந்தாழ்வான் இலக்குவனாய் அவதரித்ததையும் ஒருவாறு குறிப்பிடும். இதுதிரிபு எனும் சொல்லணி கொண்டது.*

***2547. ஏறு சேவகன் இரண்டினொடு***
***இரண்டு கணையால்***
***வேறு வேறு துணிசெய்து, அது***
***விழுத்தி, விசையால்***
***மாறு மாறு, நிமிர்***
***தோளிடையும் மார்பினிடையும்***
***ஆறும் ஆறும் அயில் வெங் கணை***
***அழுத்த, அவனும்***

***ஏறு சேவகன் -*** *நாளும் வளரும் வீரப்பண்புடைய இராமன்;* ***இரண்டினொடு இரண்டு கணையால் -*** *நான்குஅம்புகளால்,* ***வேறு வேறு துணி செய்து அது விழுத்தி -*** *பல துண்டுகளாக வெட்டி அந்த மராமரத்தைத் தள்ளி விட்டு;* ***நிமிர் தோளிடையும் மார்பினிடையும் மாறு மாறு -*** *உயர்ந்த தோள்களிலும் மார்பிலும் மாற்றி*

*மாற்றி,* ***விசையால் ஆறும் ஆறும் அயில் வெங்கணைஅழுத்த -*** *வேகத்தால் பன்னிரண்டு கொடிய அம்புகளைப் பதியும்படி எய்ய;* ***அவனும் -*** *அவ்வரக்கனும்*

*விராதன் எறிந்த மராமரத்தை இராமன் நான்கு அம்புகளால் துண்டித்து வீழ்த்தினான்.அவ்வரக்கன் மார்பிலும் தோளிலும் அவ்வாறே அம்புகளைச் செலுத்தினான். ஏறு சேவகன் என்பதற்குநடை, வீரம், தோற்றப் பொலிவு முதலியவற்றால் சிங்கம் போன்ற வீரன் எனலுமாம். இடை -இடம்.*

***2548. மொய்த்த முள் தனது உடல் தலை***
***தொளைப்ப, முடுகி,***
***கைத்தவற்றின் நிமிரக் கடிது***
***கன்றி, விசிறும்***
***எய்த்த மெய்ப் பெரிய கேழல் என,***
***எங்கும், விசையின்***
***தைத்த அக் கணை தெறிப்ப, மெய்***
***சிலிர்த்து, உதறவே***

***தனது உடல் தலை மொய்த்த முள் தொளைப்ப -*** *தன் உடம்பினிடத்து மிகுதியாக அம்பு துளைத்துச் செல்ல;* ***முடுகிகைத்து அவற்றின் நிமிரக் கடிதுகன்றி விசிறும் -*** *விரைந்து மனம் வெறுப்புற்று அவ்வம்புகளிலிருந்து விடுபடச் சிதறச்செய்யும்;* ***எய்த்த பெரிய மெய் கேழல் என -*** *வருந்திய பெரிய உடலை உடைய காட்டுப்பன்றியைப் போல;* ***எங்கும் விசையின் தைத்த அக்கணை தெறிப்ப -****(விராதன்) தன் உடல்எங்கும் வேகமாக ஊடுருவிய (இராமனின்) அவ்வம்புகள் சிதறிவிழுமாறு;* ***மெய் சிலிர்த்து உதற -*** *உடலைச் சிலிர்த்துக் கொண்டு உதறவும்;* ***ஏ -*** *ஈற்றசை.*

*முள் - முள்போல் கூரிய அம்பு, இராமனின் அம்பு தைக்கப்பெற்ற அரக்கனின் உடல் பெரியகாட்டுப்பன்றிக்கு உவமையாயிற்று. முன்பாடலில் இராமனைச் சிங்க ஏற்றிற்கு உவமித்த உயர்வும்இங்கு விராதனை இழிந்த பன்றிக்கு உவமித்த இழிவும் ஒப்பு நோக்கத் தக்கது. எய்த்த கேழல் என்பதற்கு முள்ளம்பன்றி எனவும் கூறுவர்.*

***2549. எரியின் வார் கணை இராமன் விட,***
***எங்கும் நிலையாது***
***உருவி ஓட மறம் ஓடுதல்***
***செயா உணர்வினான்,***
***அருவி பாயும் வரைபோல் குருதி***
***ஆறு பெருகிச்***
***சொரிய, வேக வலி கெட்டு,***
***உணர்வு சோர்வுறுதலும்***

***இராமன் எரியின் வார்கணை விட -*** *இராமபிரான் நெருப்புப் போன்ற நீண்ட அம்புகளை எய்ய;* ***எங்கும் நிலையாது உருவி ஓட -*** *எவ்விடத்தும் தடைப்படாமல் அரக்கன் உடலில் அவ்வம்புகள் ஊடுருவிச் செல்ல;* ***மறம் ஓடுதல்செயா உணர்வினான் -*** *கொடுமை நீங்கா அறிவுடைய அவ்வரக்கன்;* ***அருவி பாயும் வரை போல்-****அருவிகள்*

*பாய்ந்து ஓடும் மலை போல;* **குருதி ஆறு பெருகிச் சொரிய -***இரத்த ஆறுபோலத் தன் உடம்பிலிருந்து பெருக்கெடுத்து வழிய;* **வேக வலி கெட்டு உணர்வு சோர்வுறுதலும் -** *மிகுந்த வலிமை அழிந்து அறிவிழந்த அளவில்.*

*எரியின் வார்கணை அக்கினி யாத்திரமும் ஆகும். எரிக்க வேண்டிய அவ்வம்பு விராதனின் வரவலிமையால் அவனை எரிக்காமல் ஊடுருவியது என்பர். விராதனுக்கு மலையும் அவன் உடலிலிருந்துபெருகும் இரத்தத்திற்கு அருவியும் முறையே உவமையாம். குருதி ஆறு - உருவகம்.*
*இராமலக்குவர் விராதன் தோள்மேல் ஏறி வெட்டி வீழ்த்தல்*

***2550. மெய் வரத்தினன், 'மிடல்-***
***படை விடப் படுகிலன்;***
***செய்யும் மற்றும் இகல்' என்று***
***சின வாள் உருவி, 'வன்***
***கை துணித்தும்' என, முந்து கடுகி,***
***படர் புயத்து,***
***எய்வு இல் மல் பொருவு தோள் இருவர்***
***ஏற, நிருதன்***

***எய்வு இல் மல் பொருவு தோள் இருவர் -*** *சோர்வில்லாத, மற்போர் செய்வதில் வல்ல தோள்களை உடைய இராமலக்குவர்;* ***மெய்வரத்தினன் -*** *அழியாவரம் பெற்ற விராதன்;* ***மிடல் படை விடப் படுகிலன் -****வலிய அம்புகளை எய்தும் இறவான்;* ***மற்றும் இகல் செய்யும் -*** *மேலும் இவன் போர்புரிவான்;* ***என்று சினவாள் உருவி -*** *எனக்கருதிக் கோபத்தோடு வாள்களை உருவி;* ***வன்கை துணித்தும் என -*** *(அரக்கனின்) வலியகைகளை வெட்டி வீழ்த்துவோம் என்று;* ***முந்து கடுகி படர் புயத்து ஏற -*** *அவன் முன் விரைந்துசென்று அவனுடைய பரந்த தோள்களின் மீது ஏற;* ***நிருதன் -*** *அரக்கனாம் அவ் விராதன்.*

*வரம் பெற்ற விராதன் இறவாததால் இராமலக்குவர் வாளால் அவன் தோளை வெட்ட அவன் மீதுஏறினர். இருவர் கோபத்தை வாளின் மீது ஏற்றிக் கூறப்பட்டது என்பர். சினம் - போர் எனவும்கூறுவர். எய்வில்என்பதற்கு அம்புகளை எய்யும் வில்லுடைய என்றுமாம்.*

***2551. உண்டு எழுந்த உணர்வு அவ்வயின்***
***உணர்ந்து முடுகி,***
***தண்டு எழுந்தனைய தோள்கொடு***
***சுமந்து, தழுவி,***
***பண்டு எழும் தனது வன் கதி***
***பதிற்றின் முடுகிக்***
***கொண்டு எழுந்தனன் - விழுந்து***
***இழி கொழுங் குருதியான்.***

***விழுந்து இழி கொழுங் குருதியான்*** *- கீழே விழுந்து பெருகி வழியும் மிகுந்த இரத்தத்தை உடையவனாகி;* ***அவ்வயின் உண்டு எழுந்தஉணர்வு உணர்ந்து*** *- அவ்விடத்தில் மீண்டும் எழும் உணர்ச்சி அடைந்தவனாகி;* ***முடுகித்தண்டு எழுந்தனைய தோள்கொடு தழுவிச் சுமந்து*** *-விரைந்து தண்டாயுதம் போன்ற தன்தோள்களைக் கொண்டு இராமலக்குவரை அணைத்துத் தூக்கி;* ***பண்டு எழும் தனதுவன்கதி(ப்)பதிற்றின் முடுகி*** *- பழமையில் தன்னிடம் உண்டாகும் வலிய வேகத்தில்பதின்மடங்கு விரைவு கொண்டு;* ***கொண்டு எழுந்தனன்*** *- மேற்கொண்டு எழும்பியவனாய்*

*இரத்த ஆறு பெருகிட உணர்வு சோர்வுற்ற விராதன் மீண்டும் உணர்வுற்று இராமலக்குவரைத் தன்தோளில் சுமந்து விரைந்து சென்றனன். தண்டு - தண்டம் என்பதன்திரிபு.*

***2552. முந்து வான் முகடு உறக் கடிது***
***முட்டி முடுகிச்***
***சிந்து சோரியொடு சாரிகை***
***திரிந்தனன் அரோ-***
***வந்து மேருவினை நாள்தொறும்***
***வலம்செய்து உழல்வோர்,***
***இந்து சூரியரை ஒத்து,***
***இருவரும் பொலியவே.***

***மேருவினை நாள் தொறும் வலம் செய்து வந்து உழல்வோர் இந்து சூரியரை ஒத்து*** *- மேருமலையைத் தினமும் வலமாகச் சுற்றித் திரிபவர்களாம் சந்திர சூரியர்களைப் போன்று;* ***இருவரும் பொலிய*** *- இராமலக்குவர் அவன் தோள்கள் மீது விளங்க;* ***முந்து வான் முகடு உற*** *- மேல் உள்ள வானத்தின் உச்சியைப் பொருந்த;* ***கடிது முட்டி*** *- வேகமாக முட்டிக்கொண்டு;* ***சிந்து சோரியொடு*** *- வழியும் இரத்தத்தோடு;* ***முடுகிச் சாரிகை திரிந்தனன்*** *- (விராதன்) வேகமாக வட்ட மிட்டுச் சுற்றினான்.* ***அரோ*** *- அசை;* ***ஏ*** *- ஈற்றசை.*

*மேருமலை அரக்கனுக்கும், சந்திர சூரியர் இராமலக்குவர்க்கும் உவமை. சந்திர சூரியர்மேருவை வலமாகச் சுற்றுதல் என்பது புராண மரபு. முந்து வான் என்பதை மற்றப் பூதங்களுக்கு முன்வைத்துஎண்ணப் பெறும் வானம் என்றுமாம்.*

***2553. சுவண வண்ணனொடு கண்ணன் உறை***
***தோளன் விசை தோய்***
***அவண விண்ணிடை நிமிர்ந்து***
***படர்கின்றவன், அறம்***
***சிவண, தன்ன சிறைமுன் அவரொடு,***
***ஏகு செலவத்து***

**உவணன் என்னும் நெடு மன்னவனும்
ஒத்தனன் அரோ.**

***சுவண வண்ணனொடு கண்ணன் உறை தோளன் -*** *பொன் நிறமுள்ள இலக்குவனோடு இராமன் விளங்கிய தோளை உடைய விராதன்;* ***விசைதோய் -*** *வேகமிக்கு;* ***அவண விண்ணிடை நிமிர்ந்து படர்கின்றவன் -*** *அப் புறத்ததான ஆகாயத்தில்எழுந்து செல்கின்றவனாம் அவ் வரக்கன்;* ***அறம் சிவணது அன்ன -*** *தருமம் வடிவெடுத்ததைப் போன்ற;* ***சிறை -*** *இறக்கைகளோடு;* ***முன் அவரொடு ஏகு செலவத்து -*** *முன்னம் பலராமன்கண்ணனொடு செல்கின்றதை உடைய;* ***உவ ணன் என்னும் நெடுமன்னவனும் ஒத்தனன் -*** *கருடன்என்னும் சிறப் புடை மன்னவனைப் போன்று விளங்கினான்.*

*இங்கு விராதனைக் கருடனாகவும் இராமலக்குவரைப் பலராமன் கண்ணனாகவும் உவமிக்கப்பெற்றுளது. கருடன் தருமத்தின் வடிவு என்பர். இராமனைக் கண்ணன் என்றது கருணை உடையவன் என்பதுகுறித்துமாம்.* ***இராமலக்குவர் முன்னவதாரம். கண்ணன், பலராமன், பின்னவதாரம்; இவ்வாறுகூறுதல் கவி மரபு.*** *சுவண வண்ணன் - பொன் வண்ணனாம் சிவனைக் குறிப்பர் சிலர். அப்போதுசங்கர நாராயணன் உவமை ஆவர்.*

***2554. மா தயா உடைய தன் கணவன்,
வஞ்சன் வலியின்
போதலோடும் அலமந் தனள்;
புலர்ந்து, பொடியில்,
கோதையோடும் ஓசி கொம்பு என,
விழுந்தனள் குலச்
சீதை, சேவல் பிடியுண்ட சிறை
அன்னம் அனையாள்.***

***குலச்சீதை -*** *உயர்குலத்துதித்த சீதை;* ***மா தயா உடைய தன் கணவன் வஞ்சன் வலியின் போதலோடும் -*** *பெருங்கருணை பூண்ட தன் துணைவனாம் இராமன் வஞ்சம் செய்த விராதனின் வலிமைக்குட்பட்டுத் தூக்கிச் செல்லும்போது;* ***அலமந்தனள் -*** *வாடிக் கலங்கினாள்;* ***புலர்ந்து சேவல்பிடியுண்ட சிறை அன்னம் அனையாள் -*** *வாட்டமடைந்துஆணன்னம் பிறரால் பிடிபட மென் சிறகுள்ளபெண் அன்னம் போன்றவளாய்;* ***பொடியில் கோதையோடும் ஓசி கொம்பு என விழுந்தனள் -*** *புழுதியில் கூந்தலொடு துவளும் பூங்கொம்பு போல விழுந்தாள்.*

*தன் கூந்தல் புழுதியில் புரளப் பூங்கொம்பு போல் சீதை விழுந்தாள். குலம் - நிமிகுலம்.சனகன் யாகசாலை அமைக்க நிலத்தை உழுதபோது உழுபடைச் சாலில் கிடைத்ததால் சீதைஎனப்பட்டாள். சேவல் - ஆண் அன்னம், கோதை - கூந்தல். கோதையோடும் ஓசிகொம்பு -காற்றினால் அசையும் பூங் கொம்பு எனவும் கொள்வர்.*

***2555. பின்னை ஏதும் உதவும் துணை பெறாள்;***
***உரை பெறாள்;***
***மின்னை ஏய் இடை நுடங்கிட***
***விரைந்து தொடர்வாள்;***
***‘அன்னையே அனைய அன்பின்***
***அறவோர்கள்தமை விட்டு***
***என்னையே நுகர்தி’ என்றனள்-***
***எழுந்து விழுவாள்.***

***எழுந்து -*** *மீண்டும் (சீதை) எழுந்து;* ***உதவும் துணை பின்னை ஏதும் பெறாள் -*** *தனக்கு உதவிடும் துணைவேறு ஒன்றும் பெறாதவளும்;* ***உரைபெறாள் -*** *ஆறுதல் கூறும் மொழி ஒன்றும் பெறாதவளும் ஆகி;* ***மின்னைஏய் இடை நுடங்கிட விரைந்து தொடர்வாள் -*** *மின்னலைப் போன்ற இடை துவண்டிடவேகமாய் விராதனைத் தொடர்ந்தவள்;* ***அன்னையே அனைய அன்பின் அறவோர்கள் தமைவிட்டு -****தாய் போன்று பிறரிடம் அன்பு காட்டும் அறவோராம் இராமலக்குவரை விட்டு விட்டு;* ***என்னையே நுகர்தி என்றனள் -*** *என்னை நீ கொண்டு போய் உண்ணுக என்று கூறினளாய்;* ***விழுவாள் -*** *(அவன்முன்) மீண்டும் விழுவாள்.*

*இராமலக்குவர் அறவோர் ஆதலால் அவர்களால் உலகம் நலம் பெறும் என்பதால் அவர்களைவிட்டு விட்டுத் தன்னை உண்ணுமாறு கேட்கிறாள் சீதை. மின்னலின் ஒளியும். தனக்கெனத் தனிஉருவின்மையும் சீதை இடைக்கு உவமையாகக் காரணமாயின. உரை பெறாள் என்பதால் காட்டில் சீதைதனித்த அபலையாய் உள்ள அவல நிலை புலப்படும்.*

***2556. அழுது வாய் குழறி ஆர் உயிர்***
***அழுங்கி அலையா***
***எழுது பாவை அனையாள் நிலை***
***உணர்ந்து இளையவன்***
***தொழுது ‘தேவி துயர் கூர***
***விளையாடல் தொழிலோ?***
***பழுது வாழி’ என ஊழி***
***முதல்வன் பகர்வுறும்:***

***வாய் குழறி அழுது -*** *வாய்ச் சொற்கள் குழறி அழுது,* ***ஆர்உயிர்அழுங்கி -*** *அரிய உயிர் வருந்தி;* ***அலையா -*** *அலைந்து,* ***எழுது பாவை அனையாள் நிலை உணர்ந்து -*** *ஓவியத்தில் எழுதும் பதுமை போன்ற சீதையின் துன்பநிலையை அறிந்து;* ***இளையவன் -*** *இலக்குவன்;****தொழுது -*** *இராமனைவணங்கி;* ***வாழி -*** *நீர் வாழ்க;* ***தேவி துயர்கூர -*** *சீதை இவ்வாறு பெருந்துயரில்வருந்த;* ***விளையாடல் தொழிலோ -****விளையாட்டாக எண்ணி இருப்பது நன்றோ?* ***பழுது -*** *இது குற்றம்;* ***என -*** *என்று கூற;* ***ஊழி முதல்வன் பகர்வுறும் -*** *பல உலகத்தைத்தோற்றுவித்தவனாகிய இராமன் கூறத் தொடங்குவான்.*

*சீதையின் அவல நிலை கண்டு இலக்குவன் இராமனிடம் ‘இவ்வாறு விளையாடலாமா?’ எனக்கூறினான். எழுது பாவை - அசையாது இருத்தலுக்கு உவமை.*

*எனவே சீதை மூர்ச்சித்து விழுந்தாள்என்பர். பெரியோரிடம்பேசுமுன் கூறும் மரியாதை மொழி 'வாழி' என்பதாம். இனிப்பழுது எனக் கூறியமையைப் பொறுத்துக் கொள்ளுமாறு 'வாழி' என்று கூறினான்எனலுமாம். ஊழி முதல்வன் என்பதால்இராமனின் முதன்மை நிலை புலப்படும்.*

***2557. 'ஏக நின்ற நெறி எல்லை கடிது***
***ஏறி, இனிதின்***
***போகல் நன்று என நினைந்தனென்;***
***இவன், பொரு இலோய்!***
***சாகல் இன்று பொருள் அன்று, என***
***நகும் தகைமையோன்,***
***வேக வெங் கழலின் உந்தலும்,***
***விராதன் விழவே,***

**பொரு இலோய் -** *ஒப்பில்லாதவனே!* **ஏகநின்ற நெறி எல்லை கடிது ஏறி -** *இக்காட்டில் செல்ல வேண்டிய வழியின் முடிவை விரைவில் இவன்மீது ஏறி,* **இனிதின் போகல்நன்று என நினைந்தனென் -** *இனிதாகச் செல்லுதல் நல்லது என்று எண்ணினேன்;* **இவன் சாகல்இன்று பொருள் அன்று -** *(விராதனாம்) இவன் இறப்பது இன்று நமக்கு அரிய செயல் அன்று,* **எனநகும் தகைமையோன் -** *என எள்ளல் குறிப்போடு கூறிய இராமன்;* **விராதன் விழ -** *அவ்வரக்கன் கீழே விழ;* **வேக வெங்கழலின் உந்தலும்-** *வேகமாகத் தன் வலிய வீரக்கழல் அணிந்த திருவடியால் உதைக்கவும்* **ஏ -** *ஈற்றசை.*

*'நாம் செல்லக் கருதிய வழியாகஇவ்வரக்கன் செல்வதால் வருத்தமின்றி இனிது நடக்கக் கருதினேன். இவனைக் கொல்வது அரிதன்று'என எள்ளற் சிரிப்புடன் இராமன் கூறியது முன் செய்யுளில் இலக்குவன் 'தேவிதுயர்கூர விளையாடல்தொழிலோ' என்ற கேள்விக்குரிய விடையாய் உளது. வெங்கழல் - அடியார் விரும்பும் திருவடிஎனலாம். சாகல் - சாதல் பொருவிலோய் எனக் கொண்டு போர் செய்யும் வில்லை உடையோய் எனவும் கொள்வர்.*
*விராதனைப் புதைக்க அவன் சாபம் நீங்கி விண்ணில் தோன்றல்*

***2558. தோள் இரண்டும் வடி வாள்கொடு***
***துணித்து, விசையால்***
***மீளி மொய்ம்பினர் குதித்தலும்,***
***வெகுண்டு, புருவத்***
***தேள் இரண்டும் நெரிய, சினவு***
***செங் கண் அரவக்***
***கோள் இரண்டு சுடரும்***
***தொடர்வதின் குறுகலும்***

***மீளி மொய்ம்பினர்*** - வலிய தோளுடைய இராமலக்குவர்; ***விசையால் வெகுண்டு வடிவாள் கொடு தோள் இரண்டும் துணித்து*** -வேகத்தோடு சினந்து தம் வடித்த கூரிய வாளைக் கொண்டு அரக்கனின் இரு தோள்களையும்வெட்டி; ***குதித்தலும்*** - கீழே தாவிக் குதித்தலும்; ***புருவத் தேள் இரண்டும் நெரிய*** - (விராதனின்) புருவமாகிய தேள் இரண்டும் நெரியும்படி சினந்து; ***சினவு செங்கண்அரவக்கோள்*** - கோபத்தால் சிவந்த கண்களை உடைய இராகு எனும் கிரகம்; ***இரண்டு சுடரும்தொடர்வதின் குறுகலும்*** - சந்திரன் சூரியன் எனும் இரண்டு சுடர்களையும் பற்றத் தொடர்வதுபோல நெருங்கி வரலும்,

*மீளி மொய்ம்பினர் - கூற்றுவன் போலவலிமையுடையவர் எனலுமாம். கொடுக்கும், அடர்ந்த பலகாலும் கொண்ட தேளைப் புருவமாக உருவகம் செய்யப் பெற்றுள்ளது, விராதன் இராகு போல இராமலக்குவர் எனும் இரு சுடர்களைப் பற்ற வரும்உவமை புராண மரபில் புனையப்பட்டுள்ளது. இது இல்பொருளுவமை.*

***2559. புண்ணிடைப் பொழி உயிர்ப் புனல்***
***பொலிந்து வரவும்,***
***விண்ணிடைப் படர்தல் விட்டு, எழு***
***விகற்பம் நினையா,***
***எண்ணுடைக் குரிசில் எண்ணி,***
***'இளையோய்! இவனை, இம்***
***மண்ணிடைக் கடிது பொத்துதல்***
***வழக்கு' எனலுமே***

***புண்ணிடைப் பொழி உயிர்ப் புனல் பொலிந்து வரவும்*** -உடலிற் பட்ட புண்களிலிருந்து பெருகிய இரத்த வெள்ளம் விளங்கி ஓடவும்; ***விண்ணிடைப்படர்தல் விட்டு*** - வானில் செல்வதைத் தவிர்த்து; ***எழு விகற்பம் நினையா*** - அவன்எழுந்து செல்லும் மாறுபாட்டை நினைத்து; ***எண்ணுடைக் குரிசில் எண்ணி*** - எண்ணத்தில்சிறந்த இராமன் உணர்ந்து; ***இளையோய்!*** - தம்பி!; ***இவனை இம் மண்ணிடைக் கடிதுபொத்துதல் வழக்கு*** - இவ்வரக்கனை இந்த நிலத்தில் விரைவாக மூடுதல் வழக்கு; ***எனலுமே*** - என்ற அளவில்; ***ஏ*** - ஈற்றசை.

*உயிர்ப்புனல் உயிர் இருப்பதற்காக உடலில் ஓடும் இரத்தம். விராதன் படைகளால்இறவாததால் மண்ணில் புதைத்தலை இராமன் கூறினான். குரிசில் - பெருமையிற் சிறந்தவன்,ஆண்பால் சிறப்புப் பெயர்.*

***2560. மத நல் யானை அனையான் நிலம்***
***வகிர்ந்த குழிவாய்***
***நதம் உலாவு நளி நீர்வயின்***
***அழுந்த, நவை தீர்***
***அதவம் ஆய் நறு நெய் உண்டு உலகில்***
***அன்பர் கருதிற்று***

***உதவு சேவடியினால், அமலன்***
***உந்துதலுமே***

***நவை தீர் அதவம் ஆய் நறுநெய் உண்டு*** - *குற்றமற்ற அத்திக்கட்டையால் செய்த அகப்பை கொண்டு பெய்த நறு மண நெய்யை உண்டு;* ***உலகில்அன்பர் கருதிற்று உதவு சேவடியினால்*** *-உலகத்தில் அடியவர் நினைத்தவற்றை அருளும் சிவந்ததன் திருப்பாதத்தால்;* ***அமலன்*** *- தூயவனான இராமன்;* ***உந்துதலும்*** *-உதைத்துத்தள்ளவும்;* ***நல்மத யானை அனையான்*** *- சிறந்த மதம் கொண்ட யானை போன்ற இலக்குவன்;* ***நளிநீர் உலாவு நதம்வயின்*** *- மிகுந்த நீர் பாயும் மேற்கு நோக்கி ஓடும் ஆற்றின்அருகில்;* ***நிலம் வகிர்ந்த குழிவாய்*** *-மண்ணில் தோண்டிய குழியில்;* ***அழுந்த*** *- பதிய;* ***ஏ*** *- ஈற்றசை. மதநல்யானை அனையான் என்ற தொடர் விராதனைக் குறிக்கிறது என்பர் சிலர். யாகத்தீ தூயதுஎன்பதை இங்கு உணரத்தக்கது. ஆழமாகக் குழி தோண்டியதால் ஊறிய நீர்க்கு யாகத்தில் பெய்யும்நெய்யாகக் கொள்ளலாம். அதவு - அதவம், அத்தி (செய்த அகப்பை)****அ+மலன்*** *- குற்றமற்றவன். 'அதவத்தனன் என்பது சங்கம்.*

***2561. பட்ட தன்மையும் உணர்ந்து***
***படர் சாபம் இட முன்***
***கட்ட வன் பிறவி தந்த கடை***
***ஆன உடல்தான்***
***விட்டு விண்ணிடை விளங்கினன்-***
***விரிஞ்சன் என ஓர்***
***முட்டை தந்ததனில் வந்த முதல்***
***முன்னவனினே***

***பட்ட தன்மையும் உணர்ந்து*** *- அங்ஙனம் தான் மண்ணில் புதைக்கப் பட்ட தன்மையை அறிந்து;* ***முன்படர் சாபம் இட*** *-முன்(குபேரனால்) பற்றிய சாபம் இட்டதால்;* ***கட்ட வன் பிறவி தந்த*** *- கொடிய அரக்கப் பிறவி கொடுத்த;* ***கடைஆன உடல்தான் விட்டு*** *- கீழான இழிந்த உடம்பை நீக்கி;* ***ஓர்முட்டை தந்து*** *- இரண்யகருப்பம் எனும் முட்டையை உண்டாக்கி;* ***அதனில் வந்த விரிஞ்சன்என முன்னவனின்*** *- அதிலிருந்து தோன்றிய பிரமன் எனும் முதல்வன்போல்;* ***விண்ணிடைவிளங்கினன்*** *-(விராதன் தன் முன்னைய கந்தருவ உருவில்) வானில் தோன்றினான்.* ***ஏ*** *-ஈற்றசை.*

*அண்டத்தில் பிரமன் தோன்றியது போல வானில் விராதன் தோன்றினான். சாபம்பெற்றதைக் 'கரக்க வந்த' (2580) என்ற இப்படலப் பாடல் பின்னர்க் கூறும். விரிஞ்சன் -அன்னப்பறவையால் தாங்கப் பெறுபவனாம் பிரமன். பட்ட தன்மை உணர்தல் என்பது முன் பிறவிஞானம் பெறல். பிறவித் துன்பம் தன்னைப் பற்றியும், பிற உயிர் பற்றியும் தெய்வத்தைப்பற்றியும் வருவன.*

***2562. பொறியின் ஒன்றி, அயல்சென்று***
***திரி புந்தி உணரா,***
***நெறியின் ஒன்றி நிலை நின்ற***
***நினைவு உண்டதனினும்,***

***பிறிவு இல் அன்பு நனி பண்டு***
***உடைய பெற்றிதனினும்,***
***அறிவு வந்து உதவ, நம்பனை***
***அறிந்து, பகர்வான்.***

***பொறியின் ஒன்றி*** *- ஐம் பொறிகளின் வயத்தில் சிக்கி;* ***அயல் சென்று திரி*** *- புறத்தே உள்ளபொருளுணர்வில் ஈடுபட்டு அலைய;****புந்தி உணரா*** *-*

*புத்தியால் அறிய முடியாத;* ***நெறியின் ஒன்றி*** *- நல்வழியில் ஈடுபட்டு;* ***நிலைநின்றநினைவு உண்டதனினும்*** *- நிலைபெற்று நின்ற எண்ணம் உண்டானதாலும்,* ***பிறிவுஇல் அன்பு*** *- பிரிதல் இல்லாத பக்தி;****பண்டு நனி உடைய பெற்றி தனினும்*** *- முன் மிகக்கொண்டிருந்த தன்மையாலும்;* ***அறிவு வந்துதவ*** *- உண்மை ஞானம் வந்து துணை செய்வதாய்த்தூண்ட;* ***நம்பனை அறிந்து பகர்வான்*** *- தலைவனாம் இராமனை (ப்பரம் பொருள் என) உணர்ந்துதுதி செய்வான்.*

*ஐந்து பொறிகளில் சிக்குண்ணாமல் புத்திநிலை பெற்று நல் வழிப்பட்டு முன்வினை துணைசெய்ய இறையருள் கூடியது. இராமன் திருவடி தீண்டப் பெற்றதால் விராதனைப் பற்றிய தீவினைகள்நீங்கின. பழவினை நீங்க ஞானம் கைகூட இராமனைப் பரம்பொருள் என உணர்ந்து துதிப்பானாயினான். பொறிகள் மெய் வாய் கண் மூக்கு செவி என ஐந்தாம். பிறிவு - பிரிவு, செய்யுள்விகாரம்.*

*விராதன் இராமனைத் துதித்தல்*

***2563. வேதங்கள் அறைகின்ற உலகு***
***எங்கும் விரிந்தன உன்***
***பாதங்கள் இவை என்னின்,***
***படிவங்கள் எப்படியோ?***
***ஓதம் கொள் கடல் அன்றி, ஒன்றினோடு***
***ஒன்று ஒவ்வாப்***
***பூதங்கள்தொறும் உறைந்தால், அவை***
***உன்னைப் பொறுக்குமோ?***

***வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன் பாதங்கள்*** *- வேதங்கள் சொல்கின்ற எல்லா உலகங்களிலும் பரந்துள்ளன உன்னுடைய திருவடிகள்;* ***இவை என்னின்படிவங்கள் எப்படியோ*** *- இவைதாம் என்றால் உன் திருவடியின் மற்ற உறுப்புக்கள் எவ்வாறு அமைந்துள்ளனவோ?;* ***ஓதம் கொள் கடல் அன்றி*** *- நீர் கொண்ட கடல் அல்லாமல்;* ***ஒன்றினொடு ஒன்று ஒவ்வாப் பூதங்கள் தொறும் உறைந்தால்*** *- ஒன்றுக் கொன்று முரணாக உள்ளமற்ற பூதங்களில் நீ தங்கியிருந்தால்;* ***அவை உன்னைப் பொறுக்குமோ*** *- அப்பூதங்கள் உன்னைத் தாங்கும் வலிமையுடையன ஆகுமோ? (ஆகா).*

*'வேதங்கள் ஒலிக்கின்ற' 'வேதங்கள் துதிக்கின்ற' எனவும் கூறுவர். திருவடி உலகெங்கும்பரந்தது திரிவிக்கிரமனாக வாமனாவதாரத்தில்கண்டதாம். ஓதம் - குளிர், ஒலி எனவுமாம்ஐம்பூதங்களாவன, நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம், பூதங்கள், வன்மை*

*மென்மை, தட்பம்வெட்பம், உரு அரு எனப் பல்வேறு முரண்பாடு கொண்டவை. 'படிவங்க'ளில் கள் என்பதை அசையாக்கிவடிவம் எனவும் கூறுவர். எப்படியோ - ஐயப்பொருளில் வந்த ஓகாரம். பொறுக்குமோ - எதிர் மறைப்பொருளில் வந்த ஓகாரம். விராதன் துதிபோல் இந்நூலில் இந்திரன், கவந்தன் பிரமன் துதிகளும்ஒப்பு நோக்கற்குரியன.* *47*

***2564. 'கடுத்த கராம் கதுவ நிமிர் கை***
***எடுத்து மெய்கலங்கி***
***உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலி***
***கொள்ள உறு துயரால்***
***"அடுத்த பெருந் தனி மூலத்து அரும் பரமே!***
***பரமே!" என்று***
***எடுத்து ஒரு வாரணம் அழைப்ப நீயோ அன்று***
***"ஏன்?" என்றாய்?***

***கடுத்த கராம் கதுவ** - கோபித்த முதலை (தன் காலைப்) பற்றிக் கொள்ள; **ஒருவாரணம் உறுதுயரால் நிமிர்கை எடுத்து** -கசேந்திரன் என்னும் ஒரு யானை தனக்கு ஏற்பட்ட மிக்க துன்பத்தால் துதிக்கையை மேலேதூக்கி எடுத்துக் கொண்டு; **மெய்கலங்கி உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலி கொள்ள** - உடல் தளர்ந்து சூழ்ந்த திக்குகளில் எல்லாம் தான் பிளிரும் ஒலி சென்றடைய; **அடுத்த பெரும்தனி மூலத்து அரும்பரமே! பரமே!** - எல்லாப் பொருள்களிலும் சென்று தங்கும் பெருமைமிக்க மூலப் பொருளான அரிய பரம் பொருளே! பரம் பொருளே!; **என்று எடுத்து அழைப்ப** - என்றுகுரலெடுத்துக் கூப்பிட; **நீயோ அன்று "ஏன்" என்றாய்** - நீ தானே அன்று "ஏன்" எனக்கேட்டு அதன் பக்கம் சென்று துயர் நீக்கிக் காப்பாற்றினாய்?*

*இராமன் பரம் பொருள் என்பது இதில் குறிப்பிடப் பெறுகிறது. உடுத்த திசை - உலகம்தன்னைச் சுற்றி ஆடையாக அணிந்த திக்குகள்,**யானை அழைத்த கதை** : பாண்டிய மன்னன்இழைத்த பிழையால் அகத்தியர் அவனை யானையாகச் சபித்தார். அது நாளும் ஆயிரம் தாமரை மலரைக்கொண்டு திருமாலுக்குப் பூசை செய்து வந்தது. தேவலன் என்ற முனியிட்ட சாபத்தால்கந்தருவன் ஒருவன் முதலையாய்க் கிடந்தான். அக்குளத்தில் மலர் பறிக்க வந்த யானையை முதலைபற்றிடப் பல்லாண்டு காலம் அது வருந்தி இறுதியில் 'ஆதிமூலமே' என அழைக்க உடனே திருமால்கருடன் மேல் வந்து ஆழிப்படையால் முதலையைத் துணித்து யானையை முதலை வாயிலிருந்து விடுவித்தார்- யானை மோட்சமும் முதலை பொன்னுலகமும் சேர்ந்தன.*

***2565. புறம் காண அகம் காணப் பொது முகத்தின்***
***அருள் நோக்கம்***
***இறங்காத தாமரைக் கண் எம்பெருமாஅன்!***
***இயம்புதியால்;***
***அறம் காத்தற்கு, உனக்கு ஒருவர் ஆரும் ஒரு***
***துணை இன்றி,***

*கறங்கு ஆகும் எனத் திரிய,*
*நீயேயோ கடவாய்தான்?*

***பொது முகத்தின் அருள்நோக்கம் இறங்காத தாமரைக்கண் எம்பெருமாஅன் -*** *நடுநிலையில் நின்று அருட்பார்வை நீங்காத செந்தாமரை போன்ற கண்ணுடைய எங்கள் பெருமானே!;* ***புறம் காண அகம் காண -*** *ஒவ்வொரு பொருளின் உள்ளும் புறமும் கண்டு (வியாபித்து);* ***அறம்காத்தற்கு -*** *தருமத்தைப் பாதுகாத்தற்கு;* ***உனக்கு ஒருவர் ஆரும் ஒருதுணை இன்றி -*** *உனக்கு வேறு ஒருவர் எவரும் ஒரு சிறு துணையும் செய்யாமல்,* ***கறங்கு ஆகும் எனத் திரிய -*** *காற்றாடி போலச் சுற்றித்திரிவதற்கு;* ***நீயேயோ கடவாய்தான் -*** *நீ தானோகடமைப்பட்டாய்,* ***இயம்புதி -*** *எனக்குக் கூறுவாய்.* ***ஆல் -*** *அசை.*

*பரம்பொருள் எல்லாப் பொருள்களிலும் பரவிநின்று அறங்காத்து அருள்புரிவதை இப்பாடல்விளக்கும். இறங்காத - முன் பின் தாழாத.அறங்காக்கக் காற்றாடி போல் திரிந்த நிலையை முன்யானை காத்தநிகழ்ச்சியில் காணலாம். துணையின்றி அறங்காப்பதால் 'தருமத்தின் தனி மூர்த்தி' ஆவான் (2568). புறமாகிய ஊனக் கண்ணாலும் அகமாகிய ஞானக் கண்ணாலும் காண - எனவும்உரைப்பர். எம்பெருமாஅன் - அண்மைவிளி அளபெடுத்துவந்தது.*

*2566.* **துறப்பதே தொழிலாகத் தோன்றினோர்**
**தோன்றியக்கால்**
***மறப்பரோ தம்மை அது அன்றாகில்,***
***மற்று அவர் போல்***
***பிறப்பரோ? எவர்க்கும் தாம் பெற்ற பதம்***
***பெறல் அரிதோ!***
***இறப்பதே, பிறப்பதே எனும் விளையாட்டு***
***இனிது உகந்தோய்!***

***இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிது உகந்தோய் -*** *இறத்தல் பிறத்தல் என்று கூறும் திருவிளையாட்டில் நன்கு மகிழ்ந்துஈடுபட்டவனே!;* ***துறப்பதேதொழிலாகத் தோன்றினோர் தோன்றியக்கால்-*** *உலகப்பற்றை நீக்குதலையே தம் செயலாகக்கொண்ட ஞானியர் ஒரு கால் பிறந்தால்;* ***தம்மை மறப்பரோ -*** *தம் இயல்பைமறப்பார்களோ (மாட்டார்கள்);* ***அது அன்றாகில் -*** *அது அவ்வாறு அல்லாவிடில்;* ***மற்று அவர் போல் பிறப்பரோ -*** *அவர் பிறர் போல் பிறப்பு எடுப்பாரோ (மாட்டார்);* ***எவர்க்கும் தாம் பெற்ற பதம் பெறல் அரிதோ -****அவ்வாறு துறந்தவர்க்கும் அவர்கள் அடைந்தநற்பேறு பெறுதல் அரிதே ஆகும்.*

*விளையாட்டு, மிகுந்த முயற்சி இல்லாமல் எளிதில் செய்வது - மாய விளையாட்டு என்பார்பின்னரும் (2569). இறப்பதும் பிறப்பதும் செய்யும் 'மானிட வடிவில் வந்து அவதாரம் செய்தனன்'என்பர் சிலர். பரமபதத்தை அடைதல் துறவியர்க்கு மட்டுமின்றி இறைவன் பதம் அடைந்தவர்க்கும்எளிது என்பதாம். இறப்பதே, பிறப்பதே-எண்ணுப் பொருளில் வந்தஏகாரங்கள். 50*

***2567. பனி நின்ற பெரும் பிறவிக் கடல்***
***கடக்கும் புணை பற்றி***
***நனி நின்ற சமயத்தோர் எல்லாரும்***
***"நன்று" என்னத்***
***தனி நின்ற தத்துவத்தின் தகை***
***மூர்த்தி நீ ஆகின்***
***இனி நின்ற முதல் தேவர் என் கொண்டு,***
***என் செய்வாரோ?***

**பனிநின்ற பெரும் பிறவிக் கடல் கடக்கும்புணை பற்றி** *-அச்சம் தரும் பிறவியாகிய பெரிய கடலை நீந்திச் செல்லுதற்குத் தெப்பமாகக் கைக் கொண்டு;* ***நனிநின்ற சமயத்தோர் எல்லாரும் நன்று என்ன*** *-மிகுதியாய் நின்ற எல்லாச் சமயமக்களும் (தத்தம் கடவுளைப் பற்றுவது) நல்லதென்று சொல்ல;* ***தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி நீ ஆகின்*** *-ஒப்பற்று விளங்கும் மெய்ப்பொருளின் பெருங் கடவுளாகிய பரம்பொருள்நீயாக இருக்கும் நிலையில்;* **இனி நின்ற முதல் தேவர் என் கொண்டு என் செய்வாரோ** *- இனிமேல் உறுதி கொள்ள நின்ற தலைமைத் தெய்வங்கள் என்ன பெருமையைக் கொண்டு எதைச்செய்வார்கள்?*

*இதில் இராமனே ஒப்பற்ற கடவுள். அவனே பிறவிப் பெருங்கடலை நீந்தப் புணையாவான்.பிறவிப் பெருங்கடல் நீந்துவர் (குறள். 10) இங்கு எண்ணுதற்குரியது. பிற சமயம் கூறும்தெய்வங்கட்கு இத்தகைய சிறப்பு இல்லை என்பதாம். பனி நின்ற குளிர்ச்சி பொருந்திய (கடல்)எனவும் ஆம். காரண காரியத் தொடர்ச்சியாய் வருதலால் பிறவிக் கடல் என்றார். பிறவிக் கடல் கடத்தல் - பிறவி அறுதல்.*

***2568. ஓயாத மலர் அயனே முதல் ஆக***
***உளர் ஆகி***
***மாயாத வானவர்க்கும் மற்று***
***ஒழிந்த மன்னுயிர்க்கும்***
***நீ ஆதி முதல் தாதை, நெறி முறையால்***
***ஈன்று எடுத்த***
***தாய் ஆவார் யாவரே?-தருமத்தின்***
***தனி மூர்த்தி!***

***தருமத்தின் தனி மூர்த்தி -*** *அறத்தின் ஒப்பற்ற வடிவான இராமனே!;* ***ஓயாத மலர் அயனே முதல் ஆக உளர் ஆகி மாயாதவானவர்க்கும்-*** *படைத்தல் தொழில் ஓய்வில்லாத தாமரை மலர் மேல் அமர்ந்த பிரமனே முதலாக உள்ள அழிவில்லாத தேவர்களுக்கும்;* ***மற்று ஒழிந்த மன்னுயிர்க்கும் -*** *அத்தேவரல்லாத உலகில் நிலைபெற்ற உயிர்களுக்கும்;* ***நீ ஆதி முதல்தாதை -*** *நீயே முதன்முதலில் தோன்றிய தந்தை ஆவாய்;* ***நெறிமுறையால் ஈன்று எடுத்த தாய் ஆவார்யாவரோ? -*** *நெறிப்படி பெற்றெடுத்த அன்னையாய் உள்ளவர் யார்? (நீயே எல்லாவற்றையும்பெற்றெடுத்த தாய் ஆவாய்)*

*பிரமன் முதலிய தேவர்க்கும் உயிர்களுக்கும் தந்தை தாய் என்பவர் திருமாலே. தேவர்இறவாததற்கு அமுத முண்டமை காரணமாம். இனி, 'நின்தேவி யாம் திருமகளே தாய்' எனவும்கொள்ளலாம். கற்பங்கன் தோறும் பல பிரமர்கள் தோன்றுவதால் 'ஓயாத மலர் அயன்' எனவும்கூறுவர். திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றியவன் அயன். உடம்பு அழியினும் உயிர்அழியாததால் 'மன்னுயிர்' எனப்பட்டது.*

***2569. நீ ஆதி பரம்பரமும்;***
***நின்னவே உலகங்கள்;***
***ஆயாத சமயமும் நின் அடியவே;***
***அயல் இல்லை;***
***தீயாரின் ஒளித்தியால்; வெளி***
***நின்றால் தீங்குஉண்டோ?***
***வீயாத பெரு மாய***
***விளையாட்டும் வேண்டுமோ?***

***ஆதி பரம்பரமும் நீ -*** *முதன்மையான மேலாம் கடவுளும் நீயே;* ***உலகங்கள் நின்னவே -*** *எல்லா உலகங்களும்உனக்குரியனவே;* ***ஆயாத சமயமும் நின் அடியவே-*** *ஆராய்ந்து அறிய முடியாத மதங்கள் உன்னைக் காரணமாய்ப் பற்றியவையே,* ***அயல் இல்லை -*** *வேறு இல்லை (அவ்வாறு இருக்கவும்)* ***தீயாரின் ஒளித்தி -*** *வஞ்சகர் போல் மறைந்துள்ளாய்;* ***வெளி நின்றால் தீங்குண்டோ-*** *யாவரும் அறிய வெளிப்படையாய்த் தோன்றினால் தீமை உண்டாகுமோ?;* ***வீயாத பெருமாயவிளையாட்டும் வேண்டுமோ? -*** *அழியாத பெரிய மாயையாக இத்திருவிளையாட்டும் செய்யவேண்டுமா?* ***ஆல் -*** *அசை.*

*பரம்பரம் - மேலானவற்றுள் மேலானது, உன்னை ஆராயாத சமயங்களும் இறுதியாக அடைவது உன்திருவடியையே என்பதுமாம். தீயோர் போல் நீ மறைந்திருக்க ஒரு காரணமும் இல்லை. எனவேஇம்மாயையாம் விளையாட்டு எதற்கு என்பார். தீயாரின் என்பது பழிப்பது போலப் புகழ்வதாம்.தீயவரின் கண்ணுக்குப் புலப்படாமல் நீ மறைந்துள்ளாய் என்பர் சிலர். வீயாத பெருமாயஎன்பதற்கு அழியாத மாயனேஎன்பதுமாம்.*

***2570. தாய்தன்னை அறியாத கன்று***
***இல்லை; தன் கன்றை***
***ஆயும் அறியும்; உலகின் தாய்***
***ஆகின், ஐய!***
***நீ அறிதி எப் பொருளும்; அவை உன்னை***
***நிலை அறியா;***
***மாயை இது என்கொலோ?-***
***வாராதே வரவல்லாய்!***

***வாராதே வரவல்லாய் -*** *(அடியார்க்கு) வருதற்கு 'அரியார் போலிருந்து மிக எளியார்போல் வரும் வல்லமை உடையானே!;* ***தாய் தன்னை அறியாத கன்று இல்லை -***

*தன் தாயைத் தெரிந்து கொள்ளாத கன்று இல்லை;* ***தன் கன்றை ஆயும் அறியும் -*** *(அதுபோல்) தாயும் தன் கன்றை அறிந்துகொள்ளும்;* ***ஐய! -*** *தலைவனே!;* ***உலகின் தாய் ஆகின் எப்பொருளும் நீ அறிதி -*** *எல்லா உலகங்களுக்கும்அன்னை ஆனதால் எல்லாப் பொருள்களையும் நீ அறிகிறாய்;* ***அவை உன்னை நிலை அறியா -*** *அப்பொருள்கள் உன் தன்மையை அறியாதுள்ளன;* ***மாயை இது என் கொலோ? -*** *இம்மாயச் சுழல்எதுவோ? (என்னால் அறிய முடியவில்லை).*

*வாராதே வரவல்லாய் என்பதை வந்தாய் போல வாராதாய் வாராதாய் போல் வருவானே' என்றபெரியார் திருவாய்மொழிப் பாசுரத்துடன் (60 : 9) ஒப்பிடின் மேலும் தெளிவுகிட்டும். தாய்தன்னைக் கன்றறிவதை நாலடியாரும் கூறும் (101). ஆயின் உயிர்களை நீ படைத்தாலும் அவை உன்னை அறியவில்லை. நீயோ எல்லாம் அறிந்தவன்.*

***2571. "பன்னல் ஆம்" என்று உலகம்***
***பலபலவும் நினையுமால்;***
***உன் அலால் பெருந் தெய்வம் உயர்ந்துளோர்***
***ஒழுக்கு அன்றே;***
***அன்ன ஊர்தியை முதல் ஆம்***
***அந்தணர்மாட்டு அருந் தெய்வம்***
***நின் அலால் இல்லாமை***
***நெறிநின்றார் நினையாரோ?***

***உலகம் -*** *உலகமக்கள்;* ***"பன்னல் ஆம்" என்று -*** *துதிக்கலாம் என்று;* ***பலபலவும் நினையும் -*** *பல்வேறு தெய்வங்களை நினைப்பர்; (ஆனால்);* ***உன் அலால் பெருந்தெய்வம் உயர்ந்துளோர்ஒழுக்கு அன்றே -*** *உன்னைத் தவிர வேறு பெரிய கடவுள் உண்டெனக் கருதல் உயர்ந்த ஞானியரின்செயல் அன்று;* ***அன்ன ஊர்தியை முதல் ஆம் அந்தணர் மாட்டு -*** *அன்ன வாகனமுடைய பிரமனைமுதலாகக் கொண்ட அந்தணர்களால்;* ***அருந்தெய்வம் நின் அலால் இல்லாமை -****வழிபடும் அரிய கடவுள் உன்னை அல்லாமல் வேறு இல்லா உண்மையை;* ***நெறிநின்றார் நினையாரோ? -*** *பலசமய நெறிநின்றவர்கள் எண்ணிப் பாராரோ? (பிறநெறியில் சென்று உண்மை அறியாது உள்ளனர்என்ற குறிப்பைப் புலப்படுத்தும்)*

*பன்னுதல் - பல முறை கூறல். ஒழுக்கு - ஒழுக்கம். நடை, ஆசாரம், அந்தணர் - அழகியதட்பத்தை உடையவர், ஆல், ஏ - அசைகள்*

***2572. பொரு அரிய சமயங்கள்***
***புகல்கின்ற புத்தேளிர்***
***இரு வினையும் உடையார்போல்,அருந்தவம்***
***நின்று இயற்றுவார்***
***திரு உறையும் மணி மார்ப! நினக்கு***
***என்னை செயற்பால?***

***ஒரு வினையும் இல்லார்போல்***
***உறங்குதியால்-உறங்காதாய்!***

***திரு உறையும் மணிமார்ப!*** *- திருமகள் தங்கிய அழகிய மார்பைஉடையவனே!;* ***பொரு அரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்-*** *ஒப்பில்லாத பிறமதங்கள் சிறப்பித்துக் கூறும் தெய்வங்கள்;****இருவினையும் உடையார்போல் -*** *நல்வினை தீவினை என்பவற்றைக் கொண்ட எளிய மக்கள் போல;* ***அருந்தவம்நின்று இயற்றுவார் -*** *செயற்கரிய தவம் செய்கின்றவர் ஆவார்;* ***நினக்கு என்னைசெயற்பால? -*** *உனக்குச் செய்ய வேண்டிய தவம் என்ன உள்ளது? (ஒன்றுமில்லை) (ஆயினும்);****உறங்காதாய்-*** *தூக்கமின்றி விழிப்பு நிலையில் உள்ளவனே!;* ***ஒரு வினையும் இல்லார் போல் உறங்குதியால் -*** *எந்த ஒரு செயலும் இல்லாதவர் போலத் தூங்குகிறாய். ஆல்ஈரிடத்தும் அசை.*

*'இருள்சேர் இருவினை' (குறள். 5) என்ற குறளடியை ஒப்பு நோக்க இடமுளது. மற்ற சமயத்தெய்வங்கள் தவம் செய்வதால் அவர்கள் இருவினைப்பட்டவர் ஆவர். எனவே அவர்கள் பரம்பொருள்ஆகார். மணிமார்பு என்பதைக் கவுத்துவமணி அணிந்த மார்பு எனவும் கூறுவர் உறக்கம் - அறிதுயில்யோக நித்திரை, உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை (5: 4: 11) என்பது ஆழ்வார்.பாசுரம். திருமாலுக்கு ஒருவினையும் இல்லை என்பது பெறப்படும். பிற தெய்வம் புரியும் தவம் போன்றது அன்று யோக நித்திரை. போல் - இரண்டிடத் தும்ஒப்பில் போலி*

***2573. அரவு ஆகிச் சுமத்தியால், அயில்***
***எயிற்றின் ஏந்துதியால்,***
***ஒரு வாயில் விழுங்குதியால், ஓர்***
***அடியால் ஒளித்தியால்-***
***திரு ஆன நிலமகளை; இஃது***
***அறிந்தால் சீறாளோ***
***மரு ஆரும் துழாய் அலங்கல் மணி***
***மார்பில் வைகுவாள்?***

***திரு ஆன நிலமகளை -*** *அழகிய பூ தேவியை;* ***அரவு ஆகிச் சுமத்தியால் -*** *ஆதிசேடன் எனும் பாம்பாகித் தாங்கிநிற்கிறாய்;****அயில் எயிற்றின் ஏந்துதியால் -*** *(வராக அவதாரத்தில்) கூரிய உன்பல்லில்தாங்கியுள்ளாய்;* ***ஒரு வாயில் விழுங்குதியால் -*** *(ஊழிக்காலத்தில் அப்பூமியை)ஒரே வாயில் முழுதும் விழுங்குகின்றாய்;* ***ஓர் அடியால்ஒளித்தியால் -*** *திரிவிக்கிரமனாகி ஒரு திருவடிக்குள் மறைத்துள்ளாய்;* ***மரு ஆரும் துழாய் அலங்கல் மணிமார்பில் வைகுவாள் -*** *மணம் நிறைந்த திருத்துழாய் மாலை உடைய நின் அழகிய மார்பில்தங்கியுள்ள திருமகள்;* ***இஃது அறிந்தால் சீறாளோ? -*** *இச் செய்திகளை அறிந்தால்உன்மேல் ஊடல் (பெருங் கோபம்) கொள்ளமாட்டாளா? (கொள்வள்)*

*திருமால் அரவானது புராணமரபு. 'நாகர்களிடை நான் அனந்தன்' என்பது பகவத் கீதை (10 .29). மணிமார்பு - நீலமணி போல் ஒளிவீசும்மார்பு எனலுமாம். தலைவன் பிற பெண்பால் சேரின்தலைவி சீறுவது அகப்பொருளில் விரித்துரைக்கப் பெறும். சுமத்தியால், ஏந்துதியால், விழுங்குதியால், ஒளித்தியால் என நான்கு 'ஆல்'களும்*

*அசைகள்.*

***2574. 'மெய்யைத் தான் சிறிது உணர்ந்து, நீ***
***விதித்த மன்னுயிர்கள்***
***உய்யத்தான் ஆகாதோ? உனக்கு என்ன***
***குறை உண்டோ?***
***வையத்தார் வானத்தார் மழுவாளிக்கு***
***அன்று அளித்த***
***ஐயத்தால் சிறிது ஐயம் தவிர்ந்தாரும்***
***உளர்; ஐயா!***

***ஐயா! - தலைவனே*** *!;* ***நீ விதித்த மன்னுயிர்கள் -*** *நீ படைத்த நிலை பெற்ற உயிர்கள்;* ***மெய்யைத்தான்சிறிது உணர்ந்து -*** *நீயே பரம்பொருள் என்ற உண்மையை ஒரளவு தெரிந்து;* ***உய்யத் தான்ஆகாதோ -****நற்கதி அடைவது என்பது தான் முடியாதோ?;* ***உனக்கு என்ன குறை உண்டோ -*** *(அவ்வாறு அவை உய்தி பெற்றால்) அதனால் உனக்கு எக்குறை ஏற்படும்?;* ***மழுவாளிக்கு அன்றளித்தஐயத்தால் -*** *கோடரிப் படையைக் கொண்ட சிவனுக்கு முன்னர் இட்ட பிச்சையால்;* ***வையத்தார் வானத்தார் சிறிது ஐயம் தவிர்ந்தாரும் உளர் -*** *மானிடரும் தேவரும்பரம்பொருள் யார்என்று எண்ணிய சிறிது சந்தேகத்தையும் நீக்கினவர்களும் உண்டு. சிவன் பிரமனின் ஐந்தாம் தலையைக் கொய்ய அது அவன் கையில் ஒட்டிக் கொள்ள அப்பிரமகபாலத்தில் திருமால் பிச்சையிடச் சிவன் அது நீங்கி உய்ந்தான் என்பது புராணம். ஐயத்தால்ஐயம் நீங்கியது. தான் -அசை.*

***2575. அன்னம் ஆய் அரு மறைகள் அறைந்தாய் நீ;***
***அவை உன்னை***
***முன்னம் ஆர் ஓதுவித்தார்?***
***எல்லாரும் முடிந்தாரோ?***
***பின்னம் ஆய் ஒன்று ஆதல்***
***பிரிந்தேயோ? பிரியாதோ?***
***என்ன மாமாயம் இவை?-ஏனம்***
***ஆய் மண் இடந்தாய்!***

***ஏனம் ஆய் மண் இடந்தாய் -*** *வராக மாய் நிலத்தைத் தன் கொம்பால் குத்தி எடுத்த திருமாலாம் இராமனே!;* ***நீ அன்னமாய் அருமறைகள் அறைந்தாய் -*** *நீ அன்னப் பறவையாகிப் பிரமனுக்கு அரிய வேதங்களை அருளினாய்;* ***அவை முன்னம் உன்னை ஆர் ஓதுவித்தார் -*** *அவ் வேதங்களை முன்னர் யார் உனக்குக்கற்பித்தார்?;* ***எல்லாரும் முடிந்தாரோ? -*** *அவர்கள் இறந்து விட்டார்களோ?;* ***பின்னம் ஆய் ஒன்று ஆதல் பிரிந்தேயோ -*** *பின்னப் பட்டு வேறாய் அமைந்தவை பின் ஒன்றாய் அமையும் என்பது ஒன்றிலிருந்து பிரிந்து வந்தவையோ?;* ***பிரியாதோ -*** *அல்லதுபிரியாது தனித்துள்ளவையோ?;* ***என்ன மாமாயம் இவை? -*** *இவ்வாறு உன் பெரிய மாயங்கள்இவையோ? (விளங்கவில்லையே).*

*நீ சுய அறிவுடையவன் என்பது தோன்ற 'முன்னம் ஆர் ஓது வித்தார்?' என்ற கேள்வி உளது.உயிரும் கடவுளும் வேறுபட்ட நிலை என்ற கொள்கையை மறுத்துப் பின்னம் ஆய் ஒன்று ஆதல்பிரிந்தேயோ' என்ற தொடர் காட்டும். ஏனமாய் மண்ணிடந்த கதை: முன்னொரு காலத்தில் பூமியைப் பாய் போலச் சுருட்டிக் கடலில் ஒளித்த இரணியாக்கன் என்பவனைத் திருமால் வராகமாகஅவதரித்துக் கொன்று பூமியைத் தன் கொம்பால் எடுத்துக் கொண்டு வந்துவிரித்தருளினார்.*

***2576. ஒப்பு இறையும் பெறல் அரிய ஒருவா!***
***முன் உவந்து உறையும்***
***அப்பு உறையுள் துறந்து, அடியேன்***
***அருந்தவத்தால் அணுகுதலால்,***
***இப் பிறவிக் கடல் கடந்தேன்; இனிப்***
***பிறவேன்; இரு வினையும்,***
***துப்பு உறழும் நீர்த்த சுடர்த் திருவடியால்,***
***துடைத்தாய் நீ***

***ஒப்பு இறையும் பெறல் அரிய ஒருவா! -*** *சிறிதும் ஒப்பு வேறு பெற முடியாத பொருளே!;* ***முன்உவந்து உறையும் -*** *முன்னே மனம் விரும்பிப் பள்ளி கொண்ட;* ***அப்பு உறையுள் துறந்து-*** *திருப்பாற்கடலாம் இருப்பிடத்தை விட்டு நீங்கி;* ***அடியேன் அருந்தவத்தால் -****அடியவன் முன் செய்த அரிய தவப்பேற்றால்;* ***அணுகுதலால் இப்பிறவிக் கடல் கடந்தேன் -*** *நீ எனக்குக் காட்சியளிக்க வந்ததால் என் இழிபிறப்பாம் கடலை விட்டுப் பிழைத்தேன்;* ***இனிப்; பிறவேன் -*** *இனி மறுபடியும் பிறக்க மாட்டேன்;* ***இருவினையும் -*** *என் நல்வினை தீவினைகள் எல்லாம்;****துப்புறழும் நீர்த்த -*** *பவளம் போன்ற செந்நிறம் கொண்ட;* ***சுடர்த் திருவடியால் -*** *நெருப்பு போன்ற உன் திருவடியால்;* ***நீ துடைத்தாய் -*** *நீ போக்கி அருளினாய்.*

*இராமன் தன் திருவடிகளால் உதைத்துப் பள்ளத்தில் தள்ளிய பொழுது 'திருவடியால்துடைத்தாய்' எனப் போற்றுகிறான் விராதன். அப்பு - நீர், நீராலாகிய கடல், ஆகுபெயர்.*

*விராதன் தன் வரலாறு கூறல்.*

***2577. இற்று எலாம் இயம்பினான்***
***நிற்றலோடும், 'நீ இவ்வாறு***
***உற்றவாறு உணர்த்து' எனா,***
***வெற்றியான் விளம்பினான்***

***இற்று எலாம் இயம்பினான் நிற்றலோடும் -*** *இவ்விதமாய் எல்லாவற்றையும் சொன்ன விராதன் அவ்வாறு சொல்லி நின்ற அளவில்;* ***'நீ இவ்வாறு உற்றவாறு உணர்த்து' எனா வெற்றியான் விளம்பினான் -*** *நீ இவ்விதம் அரக்கனாகப்பிறந்த வரலாற்றை*

*அறிவிப்பாய்' என்று இராமன் கூறப் பிறவியை வென்றவனாம் விராதன் கூறத்தொடங்கினான்.*

*வெற்றியான் - விராதனை வென்ற இராமனும் ஆவான். இற்று எலாம்- ஒருமை, பன்மைமயக்கம்.*

***2578. கள்ள மாய வாழ்வு எலாம்***
***விள்ள, ஞானம் வீசு தாள்***
***வள்ளல், வாழி! கேள்! எனா,***
***உள்ளவாறு உணர்த்தினான்***

***கள்ளமாய வாழ்வு எலாம் விள்ள -*** *திருட்டும் வஞ்சகமும் உடைய என் இப்பிறவி வாழ்க்கையை எல்லாம் விண்டு போக;* ***ஞானம் வீசுதாள் வள்ளல் வாழி! கேள் எனா -*** *ஞானத்தை அருளும் திருவடி உடைய வள்ளல் இராமனே!வாழ்வாயாக! நீ கேட்டருள்க என்று;**உள்ளவாறு உணர்த்தினான் -*** *தன் வரலாற்றை உள்ளபடிகூறுவானாயினான். பொதுவாக வாழ்க்கையையே 'கள்ள மாயவாழ்வு' எனக் குறித்தான் எனலுமாம், வீசுதல்-போய்ப் பரவி வீழச் செய்தல். தன் சாபத்தைப் போக்கி அறியாமையை நீக்கி ஞானத்தைஅருளியதால் வள்ளல் என்றான்.*

***2579. இம்பர் உற்று இது எய்தினேன்***
***வெம்பு விற்கை வீர! பேர்***
***தும்புரு; தனதன் சூழ்***
***அம்பரத்து உளேன் அரோ!***

***வெம்பு வில் கை வீர -*** *கொடுமையுடைய வில்லைக் கையில் ஏந்திய வீரனே!;* ***இம்பர் உற்று இது எய்தினேன் -*** *இவ்வுலகை அடைந்து இவ் வரக்கப் பிறவியை அடைந்தேன்;* ***பேர் தும்புரு -*** *என் பெயர்தும்புரு என்பதாம்;* ***தனதன் சூழ் அம்பரத்து உளேன் -*** *குபேரன் ஆட்சிக்குஉட்பட்டவானுலகில் உள்ளவன் நான்.*

*தனதன் - செல்வத்திற்குரியவன், குபேரன். இராமனின் வில்லாற்றலை நேரே அனுபவித்தவிராதன் 'வெம்பு வில்' என்றான். அம்பரம் - ஆகுபெயர்.*

***2580. கரக்க வந்த காம நோய்***
***துரக்க வந்த தோமினால்***
***இரக்கம் இன்றி ஏவினான்***
***அரக்கன் மைந்தன் ஆயினேன்***

***கரக்க வந்த காம நோய் துரக்க வந்த தோமினால் -*** *அறிவை மறைக்க வந்த காமமாம் பிணி தொடர்தலால் உண்டான குற்றத்தால்;* ***இரக்க மின்றி ஏவினான் -*** *கருணையின்றி அரக்கனாகும்படி சபித்தார். (ஆதலால்);* ***அரக்கன் மைந்தன்ஆயினேன் -*** *இராக்கத குலத்தில் பிறந்த மகன் ஆனேன்.*

*தான் அடைந்த இடத்தை மேலும் வருத்துதலால் காமத்தை நோய் என்றார் சாபம் கொடுத்தது குபேரனாம். தோம் - குற்றம்.*

***2581. அன்ன சாபம் மேவி நான்***
***"இன்னல் தீர்வது ஏது" எனா***
***"நின்ன தாளின் நீங்கும்" என்று***
***உன்னும் எற்கு உணர்த்தினான்***

***நான் அன்ன சாபம் மேவி-** நான் அச்சாபத்தை அடைந்து; **இன்னல் தீர்வது ஏது எனா -** இத்துன்பமாம் சாபம் எனக்குத்தீர்வது எவ்வாறு என நான் கேட்க; **நின்ன தாளின் நீங்கும் என்று -** உன்னுடைய திருவடிபடும் அளவில் இச்சாபம் என்னை விட்டு நீங்கும் என்று; **உன்னும் எற்குஉணர்த்தினான் -** ஆராய்ந்து நோக்கும் எனக்குத் (குபேரன்) தெரிவித்தான். எற்கு - எனக்கு, அசுரச்சாரியை இன்றிவந்தது.*

***2582. அன்று மூலம் ஆதியாய்!***
***இன்றுகாறும் ஏழையேன்***
***நன்று தீது நாடலேன்;***
***தின்று தீய தேடினேன்.***

***ஆதியாய்! -** முதற் பொருளே!; **அன்று மூலம் இன்று காறும் -** அன்று முதல் இன்று வரை; **ஏழையேன் நன்றுதீது நாடலேன் -** அறிவில்லாத நான் நல்லது கெட்டதை ஆராயவில்லை; **தின்று தீய தேடினேன்-** உயிர்களைக் கொன்று உண்டு தீவினையைத் தேடிக் கொண்டேன்.*

*காம நோயால் அறிவிழந்து, உயிர்க் கொலை புரிந்து தீயவற்றைத் தேடிக்கொண்டான்.*

***2583. தூண்ட நின்ற தொன்மைதான்***
***வேண்ட நின்ற வேத நூல்***
***பூண்ட நின் பொலம் கொள் தாள்***
***தீண்ட இன்று தேறினேன்***

***தூண்ட நின்ற தொன்மை தான் -** தூண்டுவதற்காக (என்னுள்) அமைந்து நின்ற என் பழைய நல்வினைதான்; **வேண்ட நின்ற வேத நூல்-** விரும்ப நின் எதிரே வந்து நின்ற வேத நூல்கள்; **பூண்ட நின் பொலம் கொள் தாள்தீண்ட -** அணிந்துள்ள உன் அழகிய திருவடி என்னைத் தீண்ட; **இன்று தேறினேன் -** இப்போது என் சாபம் தீர்ந்து நல்லறிவுற்று உய்ந்தேன்.*

*நின்ற வேதம் - நிலை பெற்ற வேதமுமாம். பொலன் கொள் தாள் - பொற் கழலணிந்த திருவடிஎனவும் உரைப்பர். தன்னை ஓதி உணர்ந்தவர்க்கு நல்லறிவைத் தூண்டி நின்றும் பழமையாகத்தான்(மக்களால்) விரும்பி நின்றும் விளங்கும் வேதம்*

*என முன்னடிகட்குப் பொருள் கூறுவர்.*

***2584. திறத்தின் வந்த தீது எலாம்***
***அறுத்த உன்னை ஆதனேன்***
***ஒறுத்த தன்மை ஊழியாய்!***
***பொறுத்தி! என்று போயினான்***

***ஊழியாய்! -*** *ஊழிக்காலத்தும் அழியாது நிற்பவனே!;* ***திறத்தின் வந்த தீது எலாம் அறுத்த உன்னை -*** *என் வினை ஆற்றலுக்கு ஏற்ப வந்த தீவினைகளை அழித்த உன்னை;* ***ஆதனேன் -*** *மூடனாகியநான்;****ஒறுத்த தன்மை பொறுத்தி-*** *பகைத்துச் செய்த தீமைகளைப் பொறுத்தருள்க;* ***என்று போயினான் -*** *என்று சொல்லி (விராதன் தன் பழைய கந்தருவ வடிவில் தும்புரு என்றபெயருடன்) வானுலகு சென்றான்.*
*தீதெலாம் - ஒருமை, பன்மை மயக்கம்.*

*இராமன் முதலியோர் முனிவர் வாழும் சோலையை அடைதல்*

***2585. 'தேவு காதல் சீரியோன்***
***ஆவி போயினான்' எனா,***
***பூ உலாவு பூவையோடு***
***ஏ வலாரும் ஏகினார்***

***தேவு காதல் சீரியோன் ஆவி போயினான் எனா -*** *தேவரும் விரும்பத்தக்க சிறப்புள்ள விராதன் உயிர் நீங்கினான் என்று;* ***பூ உலாவு பூவையோடுஏவலாரும் ஏகினார் -*** *தாமரைப் பூவில் வாழும் திருமகளாம் சீதையுடன், அம்புப் போர் செய்யவல்ல இராமலக்குவர் அவ்விடம் விட்டுச் சென்றார்.*

*பூ உலாவு பூவை - தாமரை மலரில் வாழும் திருமகள். பூ - அழகு, பொலிவுமாம். பூவை -நாகணவாய்ப் பறவை போன்ற சீதை; விராதன் செயலால் அஞ்சிப் பொலிவிழந்த சீதை அவன்அழிந்ததும் மீண்டும்பொலிவுற்றாள். ஏவலார் - எல்லா உலகங்களையும் அடிமையாகக் கொண்டு ஆணைசெலுத்த வல்லவர் என்றுமாம்.*

***2586. கை கொள் கால வேலினார்***
***மெய் கொள் வேத மெய்யர் வாழ்***
***மொய் கொள் சோலை, முன்னினார்;***
***வைகலானும் வைகினான்***

***கைகொள் காலவேலினார் -*** *கையில் ஏந்திய யமன் போல் கொடிய வேலையுடைய இராமலக்குவர்;* ***மெய்கொள் வேத மெய்யர்வாழ் மொய் கொள் சோலை முன்னினார் -*** *மெய்யாகிய வேதமே வடிவெடுத்த தவமுனிவர்வாழ்கின்ற மரங்கள் அடர்ந்த*

*சோலையை அடைந்தனர்;* ***வைகலானும் வைகினான் -*** *நாளின்தலைவனாம் பகலவனும் மறைந்தான்.*

*வைகல் - பகல், வைகலான் பகலவன் என்ற பொருளில் சூரியனைக் குறித்தது. வேல் -படைகளின் பொதுப் பெயராய் வந்தது. பகைவர் உயிரைக் கவர்வதால் வேல் யமனுக்கு ஒப்பாம்.வாழ்வோர் காலத்தை வரையறுப்பவன் ஆதலால் காலன் எனப்பட்டான் யமன். வேத விதிப்படிகருமங்களைத் தவறாது செய்பவர் ஆதலின் வேத மெய்யர் என்பர்.*

## *சரபங்கன் பிறப்பு நீங்கு படலம்*

*சரபங்க முனிவர் இராமன் திருவருளால் மானிடப் பிறவி நீங்கி வீடு பேறெய்திய நிகழ்ச்சியைக்கூறும் சிறிய பிரிவு இது. சரபங்கன் என்ற பெயர் மன்மதன் எய்தும் காம பாணங்களைத் தோல்வியுறச் செய்தவன் என்ற பொருள் கொண்டது.*

*காமத்தை வென்றவன் என்ற பொருளில் 'மீன்வரு கொடியவன் விறல் அடும் மறவோன்' (2625) என இப்படலத்தில் குறிப்பிடப் பெறுவான். மேலும் வெகுளி மயக்கம் ஆகியவற்றையும் ஒழித்தவன் என்பதும் இதனால் உணரப் பெறும்.*

*விராதனின் சாபம் தீர்ந்தபின் இராமன் முதலியோர் சரபங்கனின் ஆசிரமம் நோக்கிச்சென்றனர். வழியில் பிரமனின் ஆணையால் சரபங்கனைச் சத்தியலோகம் அழைத்துச் செல்லவந்திருந்த இந்திரன் இராமனைத் துதித்துச் சென்றான். பின்னர் இராமன் சரபங்க முனிவனிடம் சேர்ந்தான். இராமனின் சேவைக்காக எதிர்நோக்கி இருந்த அம்முனிவன் அவனைப் பணிந்து அவன் எதிரில் தீப்புகுந்து வானுலகடைந்தான்.*

*சரபங்கனுடைய குடில் அடைதல்*

*கலி விருத்தம்*

***2587. குரவம், குவி கோங்கு,***
***அலர் கொம்பினொடும்***
***இரவு, அங்கண், உகும்***
***பொழுது எய்தினரால்-***
***சரவங்கன் இருந்து***
***தவம் கருதும்***
***மரவம் கிளர், கோங்கு***
***ஒளிர், வாச வனம்***

**குரவம் குவிகோங்கு அலர் -** *குரா மலரும் குவிந்த கோங்கு அரும்புகளும் மலர்ந்த -* **கொம்பினொடும் -** *பூங் கொம்புபோன்ற சீதையுடன்;* **சரவங்கன் இருந்து தவம் கருதும் -** *சரபங்க முனிவன் தங்கியிருந்துதவத்தைச் செய்கின்ற;* **மரவம் கிளர் கோங்கு ஒளிர் வாச வனம்-** *மராமரத்திலிருந்துவளர்ந்தோங்கும் தேன் விளங்கு மணங்கொண்டவனத்தை;* **இரவு அங்கண் உகும் பொழுது எய்தினர் -** *இரவு நேரம் அவ்விடத்தே சேரும்பொழுதில் அடைந்தனர்,* **ஆல் -** *அசை.*

*குரவமலரணிந்த, குவிந்த கோங்கு போன்ற முலைகளை உடைய சீதை எனலுமாம். மரவம் என்பதுவெண்கடம்பு எனவும் குங்குமமரம் எனவும் கொள்வர். சரவங்கன் - சரபங்கன் எதுகை நோக்கித்திரிந்தது. இரவு அங்கு அணுகும் பொழுது எனவும் பிரிப்பர். குரவம் கோங்கு என்பன முதலாகு பெயர்கள். கொம்பு - உவமவாகுபெயர். இது முதல் கலிவிருத்தம். மூச்சீரடி வஞ்சி விருத்தமாகவும்கொள்வர்.*

*2588.* ***செவ் வேலவர் சென்றனர்;***
***சேறல் உறும்***
***அவ் வேலையின் எய்தினன்-***
***ஆயிரமாம்,***
***தவ்வாது இரவும் பொலி***
***தாமரையின்***
***வெவ்வேறு அலர், கண்ணினன்,***
***விண்ணவர் கோன்.***

***செவ்வேலவர் சென்றனர் -*** *சிவந்த வேலினைக் கொண்ட இராமலக்குவர் அவ்வழியே போயினர்;* ***சேறல் உறும் அவ்வேலையின்-*** *சென்று அடையும் அப்பொழுதில்;* ***தவ்வாது இரவும் பொலி தாமரையின்-*** *கூம்பாமல்இரவிலும் மலர்ந்துள்ள தாமரை மலர்கள் போல;****வெவ்வேறு அலர் ஆயிரமாம் கண்ணினன் -*** *தனித்தனியே மலர்ந்து விளங்கும் ஆயிரம் கண்களை உடையவனாம்;* ***விண்ணவர் கோன் எய்தினன்-*** *தேவர் தலைவனாம் இந்திரன் அங்கு வந்து சேர்ந்தான்.*

*செவ்வேல் - சிறந்த வேலுமாம். வேல் என்பது போர்க் கருவிகளுக்குப் பொது. வேலை -வேளை. இந்திரன் கண்கள் இமையாமல் இருப்பதால் இரவும் பொலி தாமரை உவமையாயிற்று. இதுஇல்பொருளுவமை - வெவ்வேறு அலர் கண் என்பது இந்திரனுக்குக் கௌதமமுனி சாபத்தால் உடலெங்கும்கண் பெற்றதைக் குறிக்கும். (472). தவ்வாது - தவறாமல் என்றும்உரைப்பர்.*

*2589.* ***அன்னச் செலவின், படிமேல்,***
***அயல் சூழ்***
***பொன்னின் பொலி வார் அணி***
***பூண் ஒளிமேல்***
***மின்னின் செறி கற்றை***
***விரிந்தன போல்,***
***பின்னிச் சுடரும், பிறழ்,***
***பேர் ஒளியான்***

***படிமேல் -*** *தரை மீது;* ***அயல் சூழ் -*** *அருகிலுள்ள இடங்களில் சுற்றிலுமுள்ள;* ***அன்னச் செலவின் -*** *அன்னம் போன்ற நடையுடைய;* ***பொன்னின் பொலிவார் அணிபூண்ஒளிமேல் -*** *திருமகள் போல் விளங்கும் தெய்வப் பெண்கள் அணிந்த நகைகளின் ஒளியின்மேல்;****மின்னல் செறி கற்றை விரிந்தன போல் -*** *மின்னல்களின் மிகுந்த கூட்டம்பரவியது போல்;* ***பின்னிச் சுடரும் -*** *கலந்து விளங்கும்;****பிறழ் பேர் ஒளியான் -*** *மிகுந்த சிறந்த ஒளி உடையவன் (இந்திரன்).*

*செலவு - நடை, பொன் - தேமலுமாம். மின்னலின் செறி கற்றை என்பது தெய்வப் பெண்களின்கூட்டத்திற்கு உவமை. இந்திரன் கருநிற முடையவன். ஆதலால் அவனை*

*மேகத்திற்கு உள்ளுறையாகக் கொள்ளலுமாம். (2597)*

***2590. வானில் பொலி தோகையர்***
***கண்மலர் வண்***
***கானில் படர் கண்-களி***
***வண்டொடு, தார்***
***மேனித் திரு நாரதன்***
***வீணை இசைத்***
***தேனில் படியும் செவி***
***வண்டு உடையான்***

***வானில் பொலி தோகையர் -*** *தேவர் உலகில் விளங்கும் மயில் போன்ற தேவ மகளிரின்;* ***கண்மலர் வண்கானில் -*** *கண்களாம் வளப்பமுடைய பூக்கள் பூத்த காட்டில்;* ***படர் கண்களி வண்டொடு -*** *படர்ந்துசெல்லும் தன் கண்களாம் மயக்கமுற்ற வண்டுகளோடு;* ***தார் மேனித் திரு நாரதன் -*** *மாலைஅணிந்த திருமேனியும் திருவினையுமுடையநாரதமுனிவன்;* ***வீணை இசைத் தேனில் -*** *மகதி எனும்வீணையில் எழும் இசையாகிய தேனிடத்து;* ***படியும் செவி வண்டு உடையான் -****தோயும் செவிகளாம் வண்டுகளை உடையவனாம் இந்திரன்.*

*வண்டுகள் மலர் வனத்தில் மொய்ப்பது போல் தெய்வ மகளிரைத் தன் ஆயிரம் கண்களால்கண்டுகளித்தும், வண்டு தேன் பருகி இன்புறல் போல் நாரத வீணை இசையினைக் கேட்டு மகிழ்ந்தும்இருந்தனன் இந்திரன் - இது உருவக அணி. கண்வண்டோடு செவி வண்டும் உடையவனாம். நாரதர் எனின் ஆன்ம ஞானம் அளிப்பவன், நரர்களுக்குள்ள ஒற்றுமையைப் பிளப்பவன், அன்பை அருள்பவன் என்றும்பொருள்.*

***2591. அனையின் துறை ஐம்பதொடு***
***ஐம்பதும், நூல்***
***வினையின் தொகை வேள்வி***
***நிரப்பிய மா***
***முனைவன்; முது தேவரில்***
***மூவர் அலார்***
***புனையும் முடி துன்று***
***பொலங் கழலான்;***

***அனையின் துறை நூல் வினையின் -*** *வேள்வித் தீயிடத்து சாத்திரங்களிற் கூறிய செயலின்படி;* ***ஐம்பதொடு ஐம்பதும் தொகைவேள்வி நிரப்பிய மா முனைவன் -*** *நூறு எனும் தொகை கொண்ட அசுவமேத யாகங்களைச் செய்துமுடித்த பெருமை வாய்ந்த தலைவன்;* ***முது தேவரில் மூவர் அலார் -*** *பழமையான தேவர்களில்பிரமன், திருமால், சிவன் எனும் மூவர் அல்லாத மற்றைய தேவர்கள் யாவரும்;****புனையும் முடி துன்று***

***பொலங்கழலான் -*** *தரித்துள்ள கிரீடங்கள் படிவதான பொன்னால் அமைந்த வீரக் கழலைஅணிந்தவன் (இந்திரன்).*

*நூறு யாகங்களை முடித்தவன் என்பதால் இந்திரனைச் சதமகன் என்பர். இந்திரன் மூவர்க்குஅடுத்தவன். அனை - அனல். எதுகை நோக்கித்திரிந்தது துறை - ஏழாம் வேற்றுமைஉருபு.*

***2592. செம் மா மலராள்***
***நிகர் தேவியொடும்,***
***மும் மா மத வெண் நிற***
***முன் உயர்தாள்***
***வெம் மா மிசையான்; விரி***
***வெள்ளி விளங்கு***
***அம் மா மலை அண்ணலையே***
***அனையான்;***

***செம்மா மலராள் நிகர் தேவியொடும் -*** *சிவந்த பெரிய தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற தன் மனைவியாம் சசியுடன்;* ***மும்மா மத வெண்நிற முன் உயர் தாள் வெம்மா மிசையான் -****மூன்று பெரியமதப்பெருக்குடையதும் வெள்ளை நிறமுடையதும் உயரமான முன்னங்கால்களை உடையதுமான அச்சமூட்டும்ஐராவதம் எனும் யானை மேல் வரும் இந்திரன்;* ***விரி வெள்ளி விளங்கு அம்மா மலை அண்ணலையேஅனையான்-*** *ஒளி பரந்த வெள்ளி போல் திகழும் அந்தப் பெரிய கைலை மலைமேல் (உமையுடன்விளங்கும்) சிவனை ஒத்திருப்பவன்.*

*மும்மதம் - கன்னமதம், கபோல மதம், பீசமதம் என்பன. இந்திரன் தன் மனைவியுடன் ஐராவதயானை மேலிருப்பதற்குச் சிவன் உமையுடன் கயிலை மேல் வீற்றிருப்பது உவமை. யானைக்கு மலையைஉவமிப்பது கவிமரபு. யானையின் முன்னங்கால்கள் பின்னங்கால்களை விட உயரமானவை. வெம்மா -மதம் பிடிப்பின் யானையின் உடல் வெப்பமாயிருத்தலைக் குறிக்கும். கொடுமையும் அழகும்ஆம்.*
*6*

***2693. தான், இன்று அயல் நின்று***
***ஒளிர் தண் கதிரோன்,***
***'யான் நின்றது என்?' என்று,***
***ஒளி எஞ்சிட, மா***
***வான் நின்ற பெரும் பதம்***
***வந்து, உரு ஆய்***
***மேல் நின்றென, நின்று***
***ஒளிர் வெண் குடையான்;***

***அயல் நின்று ஒளிர் தண் கதிரோன் -*** *வெளியிடங்கள் எல்லாம் சென்று பரவி விளங்கும் குளிர்ந்த கதிர் வீசும் சந்திரன்;* ***இன்றுயான் நின்றது என் என்று -*** *இந்நாளில் நான் இவ்வுலகில் விளங்கி நிற்பதால் பயன் என்ன என்று எண்ணி;* ***ஒளி எஞ்சிட -*** *ஒளி குறையும்படி;* ***மா வான் நின்ற பெரும் பதம் -*** *உயர்ந்த விண்ணில் பொருந்திய பெரிய சுவர்க்கம்;* ***உரு ஆய் வந்து -*** *குடை வடிவாய்வந்து;* ***மேல் நின்று என நின்று ஒளிர் வெண்குடையான் -*** *தன் மேலே நின்றது எனச்சொல்லும்படி ஒளி வீசும் வெண்கொற்றக் குடையை உடையவன் (இந்திரன்);* ***தான் -****அசை.*

*சந்திரன் வெட்கப்பட்டுத் தன் ஒளி குறையுமாறு, பேரொளியுடன் சுவர்க்கமே குடையாக வந்ததுஎன்பது தற்குறிப்பேற்ற அணி. சந்திரனினும் வெண்மை ஒளி உடையது குடை என்பது தொடர்புயர்வுநவிற்சியணி. இனிப் பெரும் பதம் என்பதற்குப் பெரும் சிறப்புடைய உணவாகிய தேவாமிர்தம் என்பர் சிலர். அமிர்தத்துடன் பிறந்த சந்திரன் அந்த அமிர்தமே இந்திரனின் குடையாகஅமைந்ததால் இனித் தான் வானில் நின்று ஒளி பரப்புவது ஏன் என நாணித் தன் ஒளி குறைந்திடஒளிமிக்க தேவ அமுதை வெண்குடையாக இந்திரன் பெற்றிருந்தான் என்பர். ஒளி - புகழும் ஆம்.தான் என்பது சந்திரனைக் குறித்ததாகவும் கொள்வர்.*

***2594. திசை கட்டிய மால் கரி***
***தெட்ட மதப்***
***பசை கட்டின, கிட்டின***
***பற்பல போர்***
***விசை கட்டழி தானவர் விட்டு***
***அகல் பேர்***
***இசை கட்டிய ஒத்து***
***இவர், சாமரையான்;***

***திசை கட்டிய மால் கரி -*** *எட்டுத்திக்குகளில் கட்டிய பெரிய எட்டு யானைகளின்;* ***தெட்ட மதப் பசை -*** *தெளிவான மதநீர்ப்பசையோடு,* ***கட்டின -*** *தொடர்புடையனவாக;* ***கிட்டின பற்பல போர் -****நெருங்கிய பலபல போர்களில்;* ***விசை கட்டழி தானவர்-*** *வேகமும் உறுதியும் அழிந்துதோற்றோடிய அசுரர்களினின்று;* ***விட்டு அகல் பேர் இசை கட்டியஒத்து -*** *நீங்கிஓடும்படியாகப் புகழை நிலை நாட்டியவை போல்;* ***இவர் சாமரையான் -*** *மேல் எழுந்துவிளங்கும் வெண் சாமரையை உடையவன் (இந்திரன்).*

*தெட்ட - முற்றிய என்றுமாம். எட்டுத்திசை யானைகளின் மதமாகிய பசை உடலில் பட்டுக்கட்டிப் போகும்படி அசுரர்களுடன் கிட்டின போர் எனலாம். இந்திரனுக்குத் தோற்றோடிய அசுரர்உடல் மீது திக்குயானைகளின் மதநீர் பட்டு வெண்மையாய் உறைந்து போயிற்று. சாமரைகள்வெற்றித் தூண்களுக்கு உவமிக்கப் பெற்றன. தானவர் - தனு என்பவளிடம் தோன்றிய மரபினர்.*

***2595. தேரில் திரி செங் கதிர்***
***தங்குவது ஓர்***
***ஊர் உற்றது எனப் பொலி***

*ஒண் முடியான்;*
*போர் வித்தகன்; நேமி*
*பொறுத்தவன் மா*
*மார்வில் திருவின் பொலி*
*மாலையினான்;*

**தேரில் திரி செங்கதிர் தங்குவது -** *(ஒற்றைச் சக்கரமுள்ள தன்) தேரில் ஏறிச் செல்லும் சிவந்த கதிர்களுடைய சூரியன் தங்குவதான;* **ஓர் ஊர் உற்றது என -** *ஒரு பரிவேடம் இதுவாம் எனும்படி அமைந்த;* **பொலி ஒண் முடியான்-** *விளங்கும் ஒளிமிக்க கிரீடத்தை உடையவன்;* **போர் வித்தகன் -** *போர்செய்வதில் சிறந்தவன்;* **நேமி பொறுத்தவன் மா மார்வில் திருவின் -** *சக்கரப்படைஏந்திய திருமாலின் பெருமை மிக்க மார்பில் வாழும் திருமகளைப் போல;* **பொலி மாலையினான்-***விளங்கும் மாலை அணிந்தவன் (இந்திரன்).*

*தேரொளிக்குப் பரி வேடமும், கிரீடத்திற்குச் சூரியனும் உவமை ஆம். நேமி பொறுத்தவன்என இந்திரனையும் குறிக்கும் என்பர். ஏன் எனில் அவனுக்குச் சக்கிரி, நேமி என்ற பெயர்கள்உள்ளன. இந்திரன் மார்பின் மாலைக்குத் திருமால் மார்பில் திருமகள் உவமை. மார்வு -மார்பு.*

*2596.* ***செற்றி, கதிரின் பொலி***
***செம் மணியின்***
***கற்றைச் சுடர் விட்டு***
***எரி கஞ்சுகியான்;***
***வெற்றித் திருவின் குளிர்***
***வெண் நகைபோல்***
***சுற்றிக் கிளரும் சுடர்***
***தோள் வளையான்;***

**செற்றி கதிரின் பொலி -** *பதிக்கப் பெற்றுக் கிரணங்களால் ஒளி வீசி நிற்கும்;* **செம்மணியின் சுடர்க்கற்றை -** *சிவந்த மாணிக்கங்களின் ஒளியின் தொகுதி;* **விட்டு எரி கஞ்சுகியான் -** *வெளி விட்டு ஒளி வீசும் மேல் அங்கி உடையான்;* **வெற்றித் திருவின் குளிர் வெண் நகை போல் -** *விசயலக்குமியின் குளிர்ந்த வெண்பற்களின்சிரிப்புப் போல்;* **சுற்றிக் கிளரும் சுடர்தோள் வளையான் -** *சுற்றி விளங்குகின்ற ஒளிவீசும் தோள் வளையங்களை உடையவன் (இந்திரன்).*

*செற்றி - ஒளி பெறச் செதுக்கி என்பர். சிலர் தோள் வளைகளைவெண்ணகைக்குஉவமையாக்கியதால் அவ்வணி முத்துக்கள் பதித்தவை எனலாம். தோள்வளையம் - வாகுவலயம் எனும்அணி. கஞ்சுகி - கவசம் என்பாருமுளர்.*

*2597.* ***பல் ஆயிரம் மா மணி***
***பாடம் உறும்***
***தொல் ஆர் அணி கால்***
***சுடரின் தொகைதாம்***
***எல்லாம் உடன் ஆய்***
***எழலால், ஒரு தன்***
***வில்லால், ஒளிர் மேகம்***
***எனப் பொலிவான்;***

***பல் ஆயிரம் மாமணி பாடம் உறும்-*** *பல ஆயிரக்கணக்கான சிறந்த மாணிக்கங்கள் ஒளிவீசும்;* ***தொல் ஆர் அணி கால் சுடரின்தொகை -*** *பழமைச் சிறப்புற்ற நகைகள் வெளியிடும் ஒளியின் கூட்டம்;**எல்லாம் உடன் ஆய் எழலால் -*** *எல்லாம் ஒன்று சேர்ந்து மேலே கிளம்புதலால்;**ஒரு தன் வில்லால் -*** *இணையற்ற தன் இந்திரவில் எனும் வானவில்லால்;**ஒளிர் மேகம் எனப் பொலிவான் -*** *விளங்கும் கரு மேகம் போல விளங்குபன் (இந்திரன்).* ***தாம் -*** *அசை.*

*பாடம் - ஒளி, நகைகளின் சிறப்பைப் பழமை உணர்த்தும். இந்திரனுக்கு மேகமும், அவன்பூண்ட நகைகளுக்கு இந்திர வில்லும் உவமை. இந்திரன் நிறம் கருமை. பல நிற ஒளி மணிகள் பதித்தநகைகள் வானவில்லின் பலநிறங்கள் கொண்டதற்கு ஏற்புடைத்து.*

*2598.* ***மானா உலகம் தனில்,***
***மன்றல் பொரும்,***
***தேன் நாறு, நலம்***
***செறி, தொங்கலினான்;***
***மீனோடு கடுத்து உயர்***
***வென்றி அவாம்***
***வான் நாடியர் கண் எனும்***
***வாள் உடையான்;***

***உலகம் தனில் மானா -*** *உலகத்தில் வேறு உவமை இல்லாத;**மன்றல் பொரும்தேன்நாறு நலம் செறி தொங்கலினான் -*** *தெய்வ மணம் வீசும், தேனின் சிறப்புமிக்க மாலைஉடையவன்;* ***வான் நாடியர் மீனொடு கடுத்து உயர்வென்றி அவாம் கண் எனும் -*** *தேவமகளிரின்மீன்களைப் பகைத்து மேலான வெற்றியை விரும்பும் கண்கள் எனும்;* ***வாள் உடையான் -****வாள்களைத் தன் படையாகக் கொண்டவன் (இந்திரன்)*

*தேவமகளிர் கண்களுக்கு வாட்படை உவமை. அவர்கள் கண்களைக் கொண்ட, யாகம் செய்துஇந்திர பதவியை அடைபவரை வெல்பவன் இந்திரன். கடுத்து - ஒத்து எனலுமாம். தெய்வ மகளின் கண்எனும் வாள்களைத் தன் மேல் பதியப் பெற்றவன் எனலுமாம். மானா உலகம் என்பது பொன்னுலகத்தைக்குறிக்கும் என்பர் சிலர்.*

*2599.* ***வெல்வான் நசையால், விசையால்,***
***விடு நாள்,***
***எல் வான் சுடர் மாலை***
***இராவணன்மேல்,***
***நெல் வாலும் அறாத,***
***நிறம் பிறழா,***
***வல் வாய் மடியா,***
***வயிரப் படையான்-***

***எல்வான் சுடர் மாலை இராவணன் மேல் -*** *ஒளி மிக்க சூரியனைப் போல் விளங்கும் மணி மாலைகள் அணிந்த இராவணன் மீது;* ***வெல்வான் நசையால் விசையால் விடுநாள் -*** *அவனை வெல்லும் ஆசையால் வலிவோடு எறிந்த பொழுது;* ***நெல் வாலும் அறாத -*** *நெல்லின் வால் நுனி போன்ற சிறு பகுதியும் அழிந்து போகாத;* ***நிறம் பிறழா வல்வாய் மடியா -*** *ஒளி மாறாத வலிய அதன் வாய்நுனி அழியாத;* ***வயிரப்படையான் -*** *வச்சிராயுதம் எனும் படைக்கலம் உடையவன் (இந்திரன்)*

*நெல்வால் - நெல்லின் நுனியில் அமைந்த நுட்பமான கூரிய பகுதி. 'கதிர் வாலின்செந்நெல் உள (2688). இராவணனால் ஒரு சிறிதும் ஊறு படுத்த முடியாத வயிரப்படை. இது இருதலைச்சூலமாய் நடுவே பிடிஅமைந்த படைக்கலன். இந்திரன் ததீசி முனியை வேண்டிய போது அவர் அளித்தஅவரது முதுகெலும்பால் ஆனது. ஆயின் காப்பிய எதிர்த் தலைவனாம் இராவணன் மேல் வெற்றி கொளஇந்திரன் எதிர்ந்த போது அவன் மீது சிறிதும் ஊறு விளைவிக்காமலும் தன்னொளி கெடாமலும்இருந்த படை என்ற குறிப்புப் பொருளும் கொள்ள இடமுண்டு.*
*சரபங்கன் இந்திரனை வரவேற்று வினவல்*

*2600.* ***நின்றான், எதிர்நின்ற***
***நெடுந் தவனும்***
***சென்றான், எதிர்கொண்டு;***
***சிறப்பு அமையா,***
***'என்தான் இவண்***
***எய்தியவாறு?' எனலும்,***
***பொன்றாத பொலங் கழ***
***லோன் புகலும்;***

***நின்றான் -*** *(இந்திரன் அச் சரபங்கர் ஆசிரமத்தில்) சென்று நின்றான்;* ***எதிர் நின்ற நெடுந்தவனும்எதிர் கொண்டு சென்றான் -*** *அங்கு அவன் எதிரில் நின்ற பெருந்தவம் செய்தவனாகியசரபங்கனும் எதிர் வந்து அழைத்துச் சென்றான்;* ***சிறப்பு அமையா -*** *வந்த அதிதிக்குரியஉபசாரங்கள் செய்து;* ***'இவண் எய்தியவாறு என்' எனலும் -*** *இங்கு நீ வந்த காரணம் யாது' எனக் கேட்டலும்;* ***பொன்றாத பொலங் கழலோன் புகலும்****-கெடாத பொற்கழல் அணிந்தஇந்திரன் பின்வருமாறு கூறினான்;* ***தான் -****அசை.*

நின்ற நெடுந்தவன் என்பதற்கு நிலைபெற்று நெடிய தவம் செய்த சரபங்க முனிவன் எனலுமாம். இந்திரன் பெற்ற பல வெற்றிகளைக் குறிக்கும் பொலங்கழல் அணிந்த நிலை.

இந்திரன் பிரம லோகத்திற்கு அழைத்தலும் முனி மறுத்தலும்

**2601. "நின்னால் இயல் நீதி நெடுந்**
**தவம், இன்று,**
**என்னானும் விளம்ப அரிது"**
**என்று உணர்வான்**
**அந் நான்முகன்,**
**நின்னை அழைத்தனனால்;**
**பொன் ஆர் சடை**
**மாதவ! போதுதியால்;**

**பொன் ஆர் சடை மாதவ** - பொன்னிறம் பொருந்திய சடையுடைய பெரும் தவத்தோனே; **நின்னால் இயல் நீதி நெடுந்தவம்** - உம்மால்செய்யப்பெற்ற முறை தவறாத பெருந்தவம்; **என்னானும் விளம்ப அரிது என்றுஉணர்வான்** - எவ்வகையாலும் எடுத்துக் கூறுவதற்கு அரியது என்று உணர்ந்தவனாகி; **அந்நான்முகன் நின்னை அழைத்தனனால்** -அந்த நான்கு முகமுடைய பிரமதேவன் உம்மைத் தம்உலகிற்கு வர அழைத்தனன் ஆதலின்; **இன்று போதுதி** - இப்பொழுது அங்குப்போகஎழுந்தருள்வீராக; **ஆல்** - அசை.

என்னால் கூடக் கூற இயலாது என்ற கூற்றை இந்திரன் கூற்றாகவும் கொள்ளலாம். இந்திரன்ஐந்திரம் எனும் இலக்கணம் இயற்றிய அறிஞன். அத்தகையவனாலும் சரபங்கரின் தவப் பெருமை கூறுதற்கரியது என அவர் பெருமை உணரப்பெறும்.

**2602. 'எந்தாய்! உலகு யாவையும்**
**எவ் உயிரும்**
**தந்தான் உறையும்**
**நெறி தந்தனனால்;**
**நந்தாத பெருந்தவ!**
**நாடு அது நீ**
**வந்தாய் எனின், நின்**
**எதிரே வருவான்;**

**எந்தாய்!** - எம் தந்தை போன்ற பெரியீர்!; **உலகு யாவையும் எவ்உயிரும் தந்தான் உறையும் நெறிதந்தனன்** - உலகங்கள் எல்லாவற்றையும் அவற்றில் வாழும் எல்லா உயிரினங்களையும் படைத்தவனாம் பிரமதேவன் வாழும் சத்தியலோகத்தில் வீற்றிருக்கும் பேற்றை உமக்கு அருளினான், **அது நந்தாத பெருந்தவ நாடு** - அந்த உலகம் அழியாத பெருந் தவத்தால் அடையத்தக்கதாகும்; **நீ வந்தாய் எனின்** - நீர் அங்கு

*வருவீர் என்றால்;* **நின் எதிரே வருவான் -** *அப்பிரம தேவன் உம் எதிர் வந்து அழைத்துச் செல்வான்;* **ஆல் -** *அசை.*

*நெறி - இடம், நந்தாத பெருந்தவ என்ற தொடரை சரபங்க முனிக்கே விளியாக்கிக் கெடாதபெருந் தவத்தை உடையோய் எனக் கூறலுமாம். எந்தாய் என்பது இடவழுவமைதி, வந்தாய் என்பது காலவழுவமைதி.*

***2603. 'எல்லா உலகிற்கும் உயர்ந்***
***தமை, யான்***
***சொல்லாவகை, நீ உணர்***
***தொன்மையையால்:***
***நல்லாளுடனே நட, நீ'***
***எனலும்,***
***'அல்லேன்' என, வால்***
***அறிவான் அறைவான்:***

**எல்லா உலகிற்கும் உயர்ந்தமை -** *அச்சத்திய லோகம் மற்றெல்லா உலகங்களுக்கும் சிறந்தது என்பதை;* **யான் சொல்லாவகை -** *நான்கூறாதபடி;* **நீ உணர் தொன்மையை -** *நீர் முன்னமே அறியும் பழமையுடையவராவீர்;(ஆதலின் உமக்கு நான் சொல்ல வேண்டுவதில்லை) ;* **நல்லாள் உடனே நட நீ எனலும் -** *உம்மனைவியுடன் வந்தருள்வீர் நீர் என்று இந்திரன் கூறவும்;* **வால்அறிவான் அல்லேன் எனஅறைவான் -** *சிறந்த அறிஞனாகிய சரபங்கர் அதற்கு இசையேன் என்று சொல்வார்;* **ஆல் -** *அசை. 'நீ உணர் தொன்மையை' என இந்திரன் சரபங்கரிடம் கூறியதால் இந்திரனும் அறியாத மிகப்பழங்காலத் தவசி அவர் என்பது தெரிகிறது. வாலறிவான் என்ற தொடர் குறளில் (2) காணும்'வாலறிவன்' என்பதுடன் ஒப்பிடற்குரியது. நல்லாள் என்பது முனிவரின் மனைவி என்பதைப் பின் வருபாடலாலும் (2628) அறியலாம்.*

***2604. 'சொல் பொங்கு பெரும் புகழோய்!***
***தொழில் மாய்***
***சிற்பங்களின் வீவன***
***சேர்கு வெனோ?***
***அற்பம் கருதேன்; என்***
***அருந் தவமோ***
***கற்பம் பல சென்றது;***
***காணுதியால்;***

**சொல் பொங்கு பெரும் புகழோய் -** *சொற்களால் மேம்படும் உயர்ந்த கீர்த்தியுடையயோனே!;* **மாய்தொழில் சிற்பங்களின் வீவனசேர்கு வெனோ -** *அழியும் வினையையுடைய அற்பப் பொருள்கள் போல அழியக்கூடிய பதவிகளை யான்அடைவேனோ?; (மாட்டேன்);***அற்பம் கருதேன் -** *கீழான இப்பதவியை அடைய*

*விரும்பேன்,* ***என் அருந்தவமோ கற்பம் பல சென்றது காணுதி -*** *யான் செய்த அரிய தவமோ பல கற்பகாலங்கள்சென்றவை ஆயின; இதனை நீ அறிவாயாக;* ***ஆல் -****அசை.*

*சொல் பொங்கு பெரும் புகழோய் என இந்திரனை விளித்தலால் வியா கரண சாத்திரங்களைஅவன் நன்குணர்ந்தமை பெறப்படும். தொழில்மாய் சிற்பம் என்றதால் பிரமலோகமும் அழியும்அற்பப் பொருள் என அறியலாம். கற்பம் - பலயுகங்கள் கொண்ட காலம்; சென்ற பாடலில் (2603) தொன்மையை என்றமை இதன் பொருளை விளக்கி நிற்கும்.*

***2605. 'சொற்றும் தரம் அன்று இது;***
***சூழ் கழலாய்!***
***பெற்றும், பெறு கில்லது***
***ஓர் பெற்றியதே;***
***மற்று என் பல? நீ***
***இவண் வந்ததனால்,***
***முற்றும் பகல் தானும்***
***முடிந்து ளதால்;***

***சூழ்கழலாய்-*** *கட்டிய வீரக்கழல் அணிந்தவனே!;* ***இது சொற்றும் தரம் அன்று -*** *நீ சொல்லும் இதுபேசத்தக்கது அன்று; (ஏனெனில் அப்பேறு)* ***பெற்றும் பெறுகில்லது ஓர் பெற்றியதே -*** *அடைந்தாலும் அடைந்ததாகக்கருதப்படாத ஒரு தன்மையதாகும்;* ***மற்று என்பல -*** *வேறு பல சொல் கூறுவது எதற்கு?;* ***நீஇவண் வந்ததனால் -*** *நீ இங்கு வந்ததால்;****பகல் தானும் முற்றும் முடிந்துளது -*** *என்வாழ்வுக் காலம் முழுதும் முடிந்ததாகும்;* ***ஆல் -*** *அசை.*

*பிரமலோகப் பதவியைச் சரபங்கர் அற்பமாகக் கருதியதையும் இந்திரன் வந்ததால் தம்வாழ்வுக் காலம் முடிவுறுவதையும் அவர் உணர்ந்த நிலை புலப்படுகிறது. சிறந்த தவம் புரிந்தோர்தவமுடிவைத் தேவர் முதலோர் வந்து தெரிவிப்பதை இக்காண்டப் பாடலில் (3705) வீட்டினுக்குஅமைவதான மெய்ந் நெறி வெளியிற்றாகக் காட்டுறும் அறிஞர்' என்ற தொடர் கூறும். பகல் என்பது நேரத்தின் பொதுப் பெயராய் இங்கு வாழ்நாளைக் குறிக்கிறது.*

***2606. 'சிறு காலை இலா,***
***நிலையோ திரியா,***
***குறுகா, நெடுகா, குணம்***
***வேறுபடா,***
***உறு கால் கிளர் பூதம்***
***எலாம் உகினும்***
***மறுகா, நெறி எய்துவென்;-***
***வான் உடையாய்!'***

***வான் உடையாய் -*** *சுவர்க்க நாட்டை உடைய இந்திரனே!;* ***சிறு காலை இலா -*** *சிறிய பொழுது இல்லாததும்;* ***நிலையோ திரியா -****இடம் விட்டுப் பெயராததும்;* ***குறுகா -*** *காலத்தால் குறுகிப்போகாததும்;****நெடுகா -*** *அக்காலத்தில் பெருகி நீளாததும்;* ***குணம் வேறுபடா -*** *தன்மையில் மாறுபடாததும்;* ***உறு கால் கிளர் பூதம் எலாம் உகினும் -*** *பொருந்திய காற்றுமுதலாக விளங்கும் ஐம்பூதங்கள் எல்லாம் விழுந்து அழிந்தாலும்;* ***மறுகா நெறி எய்து வென் -*** *அழியாத முத்தி நெறியை அடைவேன் (என்றான்).*

*மறுகா நெறி - மாறாத முத்தி நெறி என்பது மற்ற பதவிகளை விட மேலானது. மற்றவை உருவாலும்காலத்தாலும் தன்மையாலும் பல மாறுபாடுகள் அடையும். இதுவோ அத்தகைய மாறுபாடு அடையாது. இதனைச் சடாயு 'பூதங்கள் விளியும் நாளும் போக்கிலா உலகம் புக்க' (3530) நிலையுடன் ஒப்பிடத்தக்கது. இதில் சரபங்கரின் உறதிப்பாடு புலனாகிறது.*

*இந்திரன் வந்திருத்தலை இராமன் உய்த்து உணர்தல்*

***2607. என்று, இன்ன விளம்பிடும்***
***எல்லையின் வாய்,***
***வன் திண் சிலை வீரரும்***
***வந்து அணுகா,***
***ஒன்றும் கிளர் ஓதை***
***யினால் உணர்வார்,***
***நின்று, 'என்னைகொல் இன்னது?'***
***எனா நினைவார்:***

***என்று இன்ன விளம்பிடும் எல்லையின் வாய் -*** *என்று இப்படிச் சரபங்கர் கூறிய போது;* ***வன் திண் சிலை வீரரும் வந்து அணுகா -*** *வலிமையும் திண்மையும் உடைய வில்லேந்திய வீரர்களாம் இராமலக்குவர் அங்கு வந்தடைந்து;* ***ஒன்றும் கிளர் ஓதையினால் உணர்வார் -*** *அவ்விடத்துப் பொருந்திய, மேலெழும்ஆரவாரத்தினால் காரணத்தை அறிந்தவராய்;* ***நின்று -*** *அவ்விடத்தே நின்று;* ***என்னைகொல் இன்னது எனா நினைவார் -*** *என்னவோ இங்கு நிகழும் செயல் என்று கருதினார்.*

*கிளர் ஓசை - இந்திரனுடன் வந்த யானை முதலியவற்றால் எழுந்த ஓசை. வன் திண் - ஒருபொருட் பன்மொழி கொல் - ஐயப் பொருள் தரும் இடைச் சொல் அணுகா. செய்யா எனும் வாய்பாட்டுஉடன்பாட்டு வினையெச்சம்.*

***2608. கொம்பு ஒத்தன நால் ஒளிர்***
***கோள் வயிரக்***
***கம்பக் கரி நின்றது***
***கண்டனமால்;***
***இம்பர், தலை மா தவர்பால்,***
***இவண் ஆம்***

*உம்பர்க்கு அரசு எய்தினன்'*
*என்று உணரா,*

***நால் ஒத்தன ஒளிர் கோள் வயிரக் கொம்பு -*** *நான்கு ஒன்றுக்கொன்று ஒத்து விளங்கும் ஒளி பொருந்திய வலிய வயிரம் போன்ற கொம்புகளை உடைய;* ***கம்பக்கரி நின்றது கண்டன மால் -****அசைந்தாடும் ஐராவத யானை நின்றுள்ளதைப்பார்த்தோம் ஆதலின்;* ***இம்பர்தலை -*** *இவ்வுலகில்;* ***மாதவர்பால் -*** *பெருந்தவம்செய்த சரபங்கரிடத்து;* ***இவண் உம்பர்க்கு அரசு எய்தினன் ஆம் -*** *இங்கேதேவர்க்கரசனாம் இந்திரன் அடைந்தான்;* ***என்று உணரா -*** *என அறிந்து,*

*கம்பக் கரி என்பதற்குக் கம்பத்தில் கட்டப்படும் யானை என்றும்.கண்டோர்க்குஅச்சத்தை உண்டாக்கும் யானை என்றும் உரைப்பர். இம்பர்த் தலை மாதவர் என்பதை சரபங்கர்கூற்றிலேயே 'என் அரும்தவமோ கற்பம் பல சென்றது' (2604) என வருதல் காணலாம் ஐராவத யானைநான்குகொம்புகளை உடையது. எனவே கொம்பு ஒத்தன நால் என்றார். வயிரம் என்பதைக் கிம்புரிஎன்பர் சிலர். வயிரக் கம்பம் எனத் திண்ணிய கட்டுத்தறி எனவும் ஆம். உணரா - செய்யா எனும்வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.* *22*

***2609. மானே அனையாளொடு***
***மைந்தனை அப்***
***பூ நேர் பொழிலின்***
***புறமே நிறுவா,***
***ஆன்ஏறு என, ஆள் அரி***
***ஏறு இது என,***
***தானே அவ் அகன்***
***பொழில் சாருதலும்,***

***மானே அனையாளொடு மைந்தனை -*** *மான் போன்ற சீதையோடு இளையவனாம் இலக்குவனையும்;* ***அப் பூநேர் பொழிலின் புறமே நிறுவா-*** *அந்தப் பூக்கள் நிறைந்த சோலையில் வெளியே இருக்கச் செய்து;****ஆன் ஏறு என -*** *காளை போலவும்;* ***ஆள் அரிஏறு என -*** *வலிய ஆண் சிங்கம் ஒப்பவன் எனவும்;* ***தானே அவ்அகன் பொழில் சாருதலும் -*** *தான்மட்டும் அந்த அகன்ற (சரபங்கரின்) தவச் சாலையைஅடைதலும்;****இது -*** *அசை.*

*மைந்து- இளமை, மைந்தன் - இளையவனாம் இலக்குவனைக் குறித்தது. இராமனை இலக்குவன் தந்தைஎனக் கொள்வதால் இவ்வாறு கூறலுமாம். மைந்தன் - வலிமை உடையவன் எனவும் கூறுவர். இராமன்நடைக்குக் காளையும் ஆண் சிங்கமும் உவமையாக 'மாகமடங்கலும் மால்விடையும்... நாண நடந்தான்'என வருவதைக் காணலாம் (697). ஆள் - மற்ற விலங்குகளை அடக்கி ஆள்கின்ற எனவும் ஆம். நிறுவா- நிறுவி உடன்பாட்டு வினையெச்சம்.*

*இந்திரன் இராமனைக் கண்டு துதித்தல்*

***2610. கண்தாம் அவை***
***ஆயிரமும் கதுவ,***
***கண் தாமரைபோல் கரு***
***ஞாயிறு எனக்***
***கண்டான், இமையோர்***
***இறை-காசினியின்-***
***கண்தான், அரு நான்***
***மறையின் கனியை.***

***இமையோர் இறை -*** *தேவர்க்கரசனாம் இந்திரன்;* ***காசினியின்கண் -*** *பூமியின் மேல்;* ***அருநான் மறையின்கனியை-*** *அரிய நான்கு வேதங்களின் இனிய பழமாம் இராமனை;* ***கண் தாமரை போல் கருஞாயிறு என -*** *கண்கள் தாமரை இதழ் போலும் நிறம் கரிய சூரியனே போலும் என்று;* ***கண்தாம் அவை ஆயிரமும் கதுவ(க்)கண்டான் -*** *தன் ஆயிரம் கண்களுமே (இராமன் உருவில்)பொருந்தி ஊன்றப் பார்த்தான்;* ***தான் -*** *அசை.* *இராமன் ஞாயிறு போல் ஒளியும் கரிய நிறமும் கொண்டவனாதலின் கரு ஞாயிறு எனஉருவகிக்கப்பட்டான். 'கரு ஞாயிறு போல்வர்' எனமுன்னரும் கண்டோம் (1163) நான்மறையின்கனி என்ற பொருள் விளங்க 'வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை' எனப் பெரிய திருமொழியும் கூறும் (2-3: 2). இப்பாடலில் கருஞாயிறு என இல்பொருள் சுட்டப் பெறுகிறது.*

***2611. காணா, மனம் நொந்து***
***கவன்றனனால்,***
***ஆண் நாதனை, அந்தணர்***
***நாயகனை,***
***நாள் நாளும் வணங்கிய***
***நன் முடியால்,***
***தூண் ஆகிய தோள்கொடு,***
***அவன்-தொழுவான்,***

***காணா -*** *(அங்கு இந்திரன் இராமனைப்) பார்த்து;* ***மனம் நொந்து கவன்றனன் -*** *மனம் நோயுற்றுக்கவலை கொண்டான் ஆக;* ***ஆண்நாதனை -*** *ஆண்களின் தலைவனை (புருஷோத்தமனை);* ***அந்தணர் நாயகனை -*** *அந்தணராம் முனிவர்க்குத் தலைவனாம் இராமனை;* ***நாள் நாளும் வணங்கிய நன்முடியால் -*** *நாள் தோறும் தொழுகின்ற தன்மேலான சிரத்தால்;* ***தூண் ஆகிய தோள் கொடுஅவன் தொழுவான் -*** *தூண் போன்ற தன் புயங்கள் பட இராமனின் திருவடிகளை இந்திரன் வணங்குவான்;* ***ஆல் -*** *அசை.*

*கண்டு மனம் நொந்து கவன்றனன் என்பதால் பரமபத வாழ்வை விட்டுத் தனக்காக மனிதவடிவெடுத்ததுடனன்றிக் காடுகளில் கால் நோவ வருந்தி இராமன் திரிதலைக் கண்ட நிலையைஅறியலாம். இராமன் திருவடிகளில் இந்திரன் தலையும் தோளும் படத் தொழுதான் என்பதால் மார்புகால் முதலிய பிற உறுப்புகளாலும் வணங்கினான் என அறியலாம். இது உபலட்சணம்.*

*எண்சீர் ஆசிரிய விருத்தம்*

***2612. துவசம் ஆர் தொல் அமருள்,***
***துன்னாரைச் செற்றும்,***
***சுருதிப் பெருங் கடலின் சொல்***
***பொருள் கற்பித்தும்,***
***திவசம் ஆர் நல் அறத்தின்***
***செந்நெறியில் உய்த்தும்,***
***திரு அளித்தும்,வீடு அளித்தும்,***
***சிங்காமைத் தங்கள்***
***கவசம் ஆய், ஆர் உயிர் ஆய், கண் ஆய்,***
***மெய்த் தவம் ஆய்,***
***கடை இலா ஞானம் ஆய்,***
***காப்பானைக் காணா,***
***அவசம் ஆய், சிந்தை அழிந்து,***
***அயலே நின்றான்,***
***அறியாதான் போல, அறிந்த***
***எலாம் சொல்வான்:***

***துவசம் ஆர் தொல்லமருள் துன்னாரைச் செற்றும் -****கொடிகள் நிறைந்த பழைய போர்களில் பகைவர்களை அழித்தும்;* ***சுருதிப் பெருங் கடலின்சொல்பொருள் கற்பித்தும் -*** *வேதமாகிய பெரிய கடல்களின் எல்லையற்ற சொற்களையும்அவற்றின் பொருள்களையும் உபதேசித்தும்;* ***திவசம் ஆர் நல் அறத்தின் செந் நெறியில்உய்த்தும் -*** *நாள்தோறும் பொருந்திய நல்ல தருமங்களின் சிறந்த வழியில் கொண்டுசெலுத்தியும்;* ***திரு அளித்தும் -*** *செல்வத்தைக் கொடுத்தும்;* ***வீடு அளித்தும் -*** *பரம பதத்தைக் கொடுத்தும்;* ***சிங்காமைத் தங்கள் கவசம் ஆய் -*** *அழியாதவாறு (தேவாரம்) தங்களுக்குக் கவசம் ஆகியும்;* ***ஆர் உயிர் ஆய் -*** *அருமை உயிர் ஆகியும்;* ***கண் ஆய் -*** *கண் ஆகியும்;* ***மெய்த்தவம் ஆய் -*** *உண்மைத் தவம் ஆகியும்;* ***கடையிலா ஞானம்ஆய் -*** *முடிவற்ற மெய்ஞ்ஞானம் ஆகியும்,* ***காப்பானைக் காணா -*** *காத்து வரும்பரம்பொருளாம் இராமனைக் கண்டு;* ***அவசம் ஆய் சிந்தை அழிந்து அயலே நின்றான் -*** *தன்னிலை மறந்து (அவன்) பக்கத்தில் நின்றவனாகி;* ***அறியாதான் போல அறிந்த எலாம் சொல்வான் -*** *(இராமனின் பெருமைகளைத்) தெரியாதவன் போல தான் அறிந்த பெருமைகளைஎல்லாம் தெரிந்தவாறு கூறித் துதிப்பான் (இந்திரன்).*

*தொல்லமர் - பழங்காலத்தில் தேவர்க்கும் அசுரர்க்கும் நடந்த போர். சுருதிப் பொருள் கற்பித்த செயல் முன்னர் அன்னமாய்ப் பிரமனுக்குஉபதேசித்ததாகும். கடல் போல் வேதம் எல்லைஅற்றது எனவே கடலாக உருவகிக்கப்பட்டது. சிங்குதல் - குறைதல், சுருங்குதல், அழிதல். கவசம் - பகைவரால் ஊறு நேராதவாறு அணியும் மெய்யுறை. பிரளய காலத்தில் அனைத்துப் பொருள்களையும்தன்னுள் அழியாமல் காப்பதால் கவசமாயிற்று, வெளியே கவசமாயும் உள்ளே உயிராயும் உள்ளும்புறமும்*

*காப்பவன் ஆயினான். அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்தில் 'ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறத்தும் உளன் என்ப' (1313) எனக் கூறப்பட்டது. பக்தி மிகுதியால் சிந்தைஅழிந்த நிலையை இந்திரன் அடைந்தான்; எனவே அறியாதவன் போல அறிந்த எலாம்கூறினான்.*

***2613. தோய்ந்தும், பொருள் அனைத்தும்***
***தோயாது நின்ற***
***சுடரே! தொடக்கு அறுத்தோர்***
***சுற்றமே! பற்றி***
***நீந்த அரிய நெடுங்***
***கருணைக்கு எல்லாம்***
***நிலயமே! வேதம் நெறி***
***முறையின் நேடி***
***ஆய்ந்த உணர்வின் உணர்வே!***
***பகையால்***
***அலைப்புண்டு அடியேம் அடி***
***போற்ற, அந் நாள்***
***ஈந்த வரம் உதவ***
***எய்தினையே? எந்தாய்!***
***இரு நிலத்தவோ, நின்***
***இணை அடித் தாமரைதாம்?***

***பொருள் அனைத்தும் தோய்ந்தும் தோயாது நின்ற சுடரே** - எல்லாப் பொருள்களிலும் கலந்தும் கலவாமலும் தனித்து நின்ற ஒளியே!; **தொடக்கு அறுத்தோர்சுற்றமே** - பற்றுகளை முற்றும் அறுத்து விலக்கிய முனிவர்க்கு உறவானவனே!; **பற்றி நீந்தஅரிய நெடுங் கருணைக்கு எல்லாம் நிலயமே** - புணையாகக் கொண்டு கடப்பதற்கு அரிதான நீண்ட எல்லா அருளுக்கும் இருப்பிடமானவனே!; **வேதம் நெறி முறையின் நேடி ஆய்ந்த உணர்வின் உணர்வே**- வேதங்கள் கூறிய நன்னெறி முறைப்படி ஆய்ந்த உணர்ச்சியால் உணரப்பெறும் பொருளே!; **எந்தாய்** -எங்கள் தந்தையே!; **அடியேம்** - அடியவர்களாகிய நாங்கள்; **பகையால் அலைப்புண்டு** - பகைவர்களால் துன்பப்படுத்தப்பட்டு; **அடிபோற்ற அந்நாள் ஈந்த வரம் உதவஎய்தினையே** - உம் திருவடிகளைத் துதிக்க அப்பொழுது கொடுத்த வரத்தின்படி எங்களுக்கு உதவிபுரிய எழுந்தருளினையே?; **நின் இணை அடித்தாமரை இரு நிலத்தவோ** - உனது இரண்டு திருவடித்தாமரைகள் இப்பெரிய பூமியில் படத்தக்கனவோ?; **தாம்** - அசை.*

*தோய்ந்தும் தோயாது நிற்றல் - எல்லாப் பொருள்களின் கண்ணே கலந்திருந்தும் அவற்றில்பற்றின்றித் தனித்தும் நிற்றல். அந்நாள்- தேவர்கள் தாங்கள் அரக்கரால் பட்டதுன்பங்களைக் கூறித் திருமாலைச் சரணடைந்த அந்த நாள். பரம்பொருள் கால் நிலம் தோயாதுநிற்றற்குரியது. தேவர் விருப்பப்படி மண்ணில் அவதரித்து கால் நிலம் பட வந்த நிலையை எண்ணி வருந்திக் கூறியது இது. பிரமன் முதலிய மற்றைத் தேவர்களையும் உளப்படுத்தி அடியேம் என்றான்இந்திரன். சுடர், சுற்றம், நிலயம், உணர்வு, தாமரை என்பன உருவகம். பகை - பண்பாகுபெயர்.*

*2614.* ***மேவாதவர் இல்லை, மேவினரும்***
***இல்லை;***
***வெளியோடு இருள் இல்லை, மேல்***
***கீழும் இல்லை;***
***மூவாதமை இல்லை, மூத்தமையும்***
***இல்லை;***
***முதல் இடையோடு ஈறு இல்லை, முன்னொடு***
***பின் இல்லை!***
***தேவா! இங்கு இவ்வோ நின் தொன்று***
***நிலை என்றால்,***
***சிலை ஏந்தி வந்து, எம்மைச்***
***சேவடிகள் நோவ,***
***காவாது ஒழியின், பழி***
***பெரிதோ? அன்றே;***
***கருங் கடலில் கண்வளராய்!***
***கைம்மாறும் உண்டோ?***

**தேவா** - *எல்லாத் தேவர்க்கும் தேவனே!;* ***கருங்கடலில் கண் வளராய்*** - *பெரிய பாற்கடலில் யோகநித்திரை கொள்பவனே!;* **மேவாதவர் இல்லை** - *பகைவர் இல்லை;* **மேவினரும் இல்லை** - *நண்பர்களும் இல்லை;* **வெளியோடு இருள் இல்லை** - *ஒளி இருள் என்ற மாறுபாடில்லை;* **மேல் கீழும் இல்லை** - *உனக்கு மேற்பட்டதும் கீழ்ப் பட்டதும் இல்லை;* **மூவாதமை இல்லை மூத்தமையும் இல்லை** - *உனக்கு இளமையும் இல்லை மூப்பும் இல்லை;* **முதல் இடையோடு ஈறு இல்லை**- *உனக்குத் தொடக்கம், நடு, முடிவு இல்லை;* **முன்னொடு பின் இல்லை** -*காலத்தால்உனக்கு முற்பட்டதும் பிற்பட்டதும் இல்லை;* **நின் தொன்று நிலை இங்கு இவ்வோ என்றால்** - *உன் பழைய நிலை இங்குக் கூறிய இவையோ என்றால்;* **சிலை ஏந்தி, சேவடிகள் நோவ வந்து** - *வில்லைக் கையிலேந்தி சிவந்த அடிகள் நோகும்படி நடந்து வந்து;* **எம்மைக் காவாது ஒழியின்** - *எங்களைக் காவாமற் போனால்;* **பழி பெரிதோ** - *பெரும் பழிஉண்டாகுமோ?;* **கைம்மாறும் உண்டோ** - *இதனால் நீ அடையும் மாற்றுப் பயன் ஏதேனும் உண்டோ;* **அன்றோ** - *அல்லவோ? (ஒன்றுமில்லை என்பதாம்)*

*கருங்கடல் என்பதற்குக் கரிய நிறமுள்ள கடல் என்று கூறிப் பரமன் பள்ளி கொண்டதுபாற்கடல் வெளிது ஆயினும் அவன் திருமேனியின் கரிய நிழலிட்டதால் கரிய கடலாயிற்று என்பார்.கண்வளராய் என்பதற்கு உடன்பாட்டுப் பொருளன்றி அவதாரத்திற்குப் பள்ளி கொண்டமையை நீத்து வந்தமையையும் குறிக்கும். கருங்கடல் என்பதற்குப் பிரளய காலத்தில் ஒரே பெரு வெள்ளமாய்இருப்பதையும் கொள்வர். பரம்பொருளுக்கு மாரிமாட்டுக் கைம்மாறு செய்ய இயலாதது போல யாவர்செய்ய ஆற்றலுடையார் எனக் கேட்டு அதன் பெருமையை உணர்த்தியவாறாம். பகை நட்பு, இருள் ஒளி போன்ற, உடன்பாடு எதிர் மறை ஆகிய இரு நிலைகளையும் காட்டிக் கடவுளின் எல்லாம் கடந்தநிலையை எண்ணி வணங்கிய நிலை இது. இத்தகைய திருவிளையாடல் அவன் அருளால் விளைவதுஎன்பர்.*

***2615. நாழி, நவை தீர் உலகு***
***எலாம் ஆக,***
***நளினத்து நீ தந்த***
***நான்முகனார்தாமே***
***ஊழி பலபலவும் நின்று***
***அளந்தால், என்றும்***
***உலவாப் பெருங் குணத்து எம்***
***உத்தமனே! மேல்நாள்,***
***தாழி தரை ஆக, தண் தயிர்***
***நீர் ஆக,***
***தட வரையே மத்து ஆக, தாமரைக்***
***கை நோவ***
***ஆழி கடைந்து, அமுதம்***
***எங்களுக்கே ஈந்தாய்;***
***அவுணர்கள்தாம் நின் அடிமை***
***அல்லாமை உண்டோ?***

***நீ நளினத்துத் தந்த நான்முகனார் தாமே -*** *நீ உன் திரு உந்தித்தாமரையில் தோற்றுவித்த நான்கு முகங்களையுடைய பிரமதேவரே;* ***நவைதீர் உலகு எலாம் நாழி ஆக -*** *குற்றமற்ற உலகங்கள் யாவும் அளக்கும்படியாகக் கொண்டு;* ***ஊழிபலபலவும் நின்று அளந்தால் -*** *அனேக ஊழிக்காலங்களும் விடாமல் அளந்தாலும்;* ***என்றும்உலவாப் பெருங் குணத்து எம் உத்தமனே -*** *என்றைக்கும் குறையாத அரும் பெரும் பண்புகளுடையமேலானவனே!;* ***மேல்நாள் -*** *முற்காலத்தில்;* ***தரை தாழி ஆக -*** *பூமியேதாழியாகவும்;* ***நீர் தண் தயிர் ஆக -*** *கடல் நீரே குளிர்ந்த தயிராகவும்;* ***தடவரையேமத்து ஆக -*** *பெரிய மந்தர மலையே கடையும் மத்தாகவும்;* ***தாமரைக்கை நோவ -*** *தாமரைமலர் போன்ற உன் கைகள் வருந்த;* ***ஆழி கடைந்து அமுதம் எங்களுக்கே ஈந்தாய் -*** *கடலைக்கடந்து அதனின்று வந்த அமுதத்தைத் தேவர்களாம் எங்களுக்கே கொடுத்தருளினாய்;* ***அவுணர்கள்தாம் நின் அடிமை அல்லாமை உண்டோ -*** *(எங்களோடு ஒரு பக்கம் கடைந்த) அசுரர்கள் தாம்உனக்கு அடிமை அல்லாமை உளதோ?*

*உன் மகனாம் பிரமனாலும் அளந்தறிய முடியாத எல்லையற்ற கலியாண குணங்கள் எங்களால்சிறிதும் அறியத்தக்கவையோ எனக் கருதியதாம். அறங்காத்து மறங்கடியும் பண்பினால் தேவர்க்குஅமுதமீந்து அரக்கர்க்கு அதனை மறுத்தான். இறைவன் பண்புகளை அளக்கும் பொருளாகக் கொண்டு பலஅண்டங்களை அளக்கும் கருவியாகக் கொண்டு அளந்தாலும் அளவிட முடியாது என்பது ஏகதேச உருவகம். தரைதாழியாகவும், நீர் தயிராகவும், வரை மத்தாகவும் உருவகம் செய்யப்பட்டன. இது உருவக அணி.*

*பாற்கடலைக் கடையும்போது அசுரர்களை வாசுகியின் தலையையும் தேவர்களை அதன் வாலையும்பிடித்துப் பாற்கடலில் நட்ட மந்தர மலையை மத்தாகக் கொண்டு*

*நிற்குமாறு ஏவித் தானும் ஒருதிருமேனி பூண்டுவாசுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலம் இடமாகக் கடைந்ததாகப் புராண வரலாறுகூறும்.*

***2616. 'ஒன்று ஆகி, மூலத்து***
***உருவம் பல ஆகி,***
***உணர்வும் உயிரும் பிறிது***
***ஆகி, ஊழி***
***சென்று ஆசறும் காலத்து அந்***
***நிலையது ஆகி,***
***திறத்து உலகம்தான் ஆகி,***
***செஞ்செவே நின்ற***
***நன்று ஆய ஞானத் தனிக்***
***கொழுந்தே! எங்கள்***
***நவை தீர்க்கும் நாயகமே! நல்***
***வினையே நோக்கி***
***நின்றாரைக் காத்தி;***
***அயலாரைக் காய்தி;***
***நிலை இல்லாத் தீவினையும் நீ***
***தந்தது அன்றே!***

***மூலத்து ஒன்று ஆகி -*** *ஆதியில் ஒரே பொருளாகி இருந்தும்;* ***உருவம் பல ஆகி -*** *பின் அந்த ஒன்றிலிருந்து பல வடிவங்களாகப் பிரிந்தும்;* ***உணர்வும் உயிரும் பிறிதாகி -*** *அறிவும் உயிரும் உடலும் ஆகி;* ***ஊழி சென்று ஆசறும் காலத்து -*** *ஊழிக்காலம் கடந்து உலகம்முடியும் காலத்து;* ***அந்நிலையது ஆகி -*** *அப்பொழுதுள்ள தன்மையது ஆகி;* ***திறத்து உலகம்தான் ஆகி -*** *பல திறப்பட்ட உலகங்களுமாய்;* ***செஞ்செவே நின்ற நன்று ஆய ஞானத் தனிக்கொழுந்தே -*** *மிகச் செம்மையாய் நின்ற மேலான ஞானத்தின் ஒப்பில்லாத கொழுந்து போன்றவனே!;* ***எங்கள் நவை தீர்க்கும் நாயகமே -*** *எம் போன்றவர்களின் குறைகளைப்போக்கும் தலைமைப் பொருளே!;* ***நல்வினையே நோக்கி நின்றாரைக் காத்தி -*** *நல்லசெயல்களையே கருதுவோரைக் காப்பாற்றுகின்றாய்;* ***அயலாரைக் காய்தி -*** *பாவச் செயலைக்கருதுவோரை அழிக்கின்றாய்;* ***நிலை இல்லாத் தீவினையும் -*** *எப்போதும் நிலையற்ற பாவச்செயல்களும்;* ***நீ தந்தது அன்றே -*** *நீ படைத்தவை அன்றோ?*

*முதலில் எல்லாம் கலந்த ஒரு பொருளாய் இருந்த பரம் பொருள் உலகப் படைப்பிற்காகப் பலபொருளாய் விரியும், ஊழிக்காலத்தில் யாவும் அழிய முன்னிருந்த ஒன்றாக விளங்கும். இதனால்படைத்தல் காத்தல் அழித்தல் என்பன மாறி வருவன என்றும், நல்வினை தீவினை என்பன இறைவனால்படைக்கப்பட்டவை என்றும் புலப்படும். ஆசறுதல் - முடிதல் நிலை இல்லாத் தீவினை - தோன்றும்பொருள்கள் யாவும் நிலையின்றி அழிவன என அறியாமையால் உளவாகும் தீவினைகள். செஞ்செவே - குறிப்புச் சொல். கொழுந்து, நாயகம் என்பன உருவகம்.*

***2617.  'வல்லை வரம்பு இல்லாத***
***மாய வினைதன்னால்***
***மயங்கினரோடு எய்தி, மதி***
***மயங்கி, மேல்நாள்,***
***"அல்லை இறையவன் நீ ஆதி"***
***என, பேதுற்று***
***அலமருவேம்; முன்னை அறப்***
***பயன் உண்டாக,***
***"எல்லை வலயங்கள் நின்னுழை"***
***என்று, அந் நாள்***
***எரியோனைத் தீண்டி, எழுவர்***
***என நின்ற***
***தொல்லை முதல் முனிவர்,***
***சூளுற்ற போதே,***
***தொகை நின்ற ஐயம்***
***துடைத்திலையோ?-எந்தாய்!'***

***எந்தாய் -*** *எங்கள் தந்தையே!* ***மேல்நாள் வல்லை வரம்பு இல்லாத மாய வினை தன்னால் -*** *முன்காலத்தில் வலிமை வாய்ந்த எல்லை இல்லாத மாயையின் சூழ்ச்சியால்;* ***மயங்கினரோடு எய்திமதிமயங்கி -*** *அறிவு மயக்க முற்றவரோடு சேர்ந்து அறிவு திரிந்து;* ***இறைவன் நீ அல்லை -*** *பரம்பொருளாகிய கடவுள் நீ அன்று என்றும்;* ***ஆதி என -*** *நீயே கடவுள் என்றும்;* ***பேதுற்று அலமருவேம் -*** *தடுமாறி வருந்தும் எங்களுடைய;* ***முன்னை அறப்பயன் உண்டாக -*** *முற்பிறவியில் செய்த நல்வினையின் பயன் ஏற்பட;* ***அந்நாள் எல்லை வலயங்கள் நின்னுழை என்று -*** *அக்காலத்து எல்லையாக உள்ள உலகங்கள் உன்னிடத்துத் தங்கியுள்ளன என்று;* ***எழுவர் என நின்ற தொல்லை முதல் முனிவர் -*** *எழுவராய் நிலைபெற்ற பண்டை முனிவர்கள்;* ***எரியோனைத் தீண்டிச் சூளுற்றபோது -*** *அக்கினியைத் தீண்டிச் சபதம் செய்த போது;* ***தொகை நின்ற ஐயம் துடைத்திலையோ-*** *யார்பரம் பொருள் என அறியாது திரண்டு நின்றஎங்கள் சந்தேகத்தையும் நீ அழித்தாய் அல்லவோ?;* ***ஏ -****அசை.*

*மாய வினை - இராசச, தாமசக் குணங்களால் ஏற்படும் தீவினைகள். எரியோன் என்பதற்குத்தழல் நிறங்கொண்ட சிவன் என்பர் சிலர். ஏழு முனிவர்: அத்திரி, பிருகு, குப்சர், வசிட்டர்,கௌதமர், காசிபர், ஆங்கிரசர் ஆவர். சூளுற்றது; திருமாலே பரம் பொருள் என்றது, இவ்வரலாறுபற்றிய செய்திகள் புலப்படவில்லை இது பற்றிப் பலவாறு உரைப்பாரும் உளர். வலயம் - குவலயம்என்ற சொல்லின் முதல்குறையும் ஆம் என்பர்.     31*

*கலிவிருத்தம்*

***2618.  இன்னன பல நினைந்து,***
***ஏத்தினன் இயம்பா,***

***துன்னுதல் இடை உளது என***
***நனி துணிவான்,***
***தன் நிகர் முனிவனை,***
***'தர விடை' என்னா,***
***பொன் ஒளிர் நெடு முடிப்***
***புரந்தரன் போனான்.***

***பொன் ஒளிர் நெடுமுடிப் புரந்தரன் -*** *பொன்னால் விளங்கும் நீண்ட கிரீடத்தை உடைய இந்திரன்;* ***இன்னன பல நினைந்து -****இவ்விதம் பலவாறு எண்ணி;* ***இயம்பா ஏத்தினன் -*** *இராமனை வாயால் கூறி வணங்கினான்;* ***இடை துன்னுதல் உளது என நனி துணிவான் -*** *நடுவில் நிகழ்வது உள்ளது என மிகவும் துணிந்தவனாய்;* ***தன்நிகர் முனிவனை -*** *தனக்குத்தானே ஒப்பான சரபங்கரை நோக்கி;* ***விடை தர என்னா -****யான் செல ஒப்புதல் அளிப்பீராக என்று சொல்லி;* ***போனான் -****சென்றான்.*

*துன்னுதல் இடையுளது என்றது இராமன் வரவால் அங்கு நடக்க இருப்பதை ஒரளவு ஊகித்தான்என்பதாம். சரபங்க முனிவரின் தன்னிகரற்ற தன்மை, இந்திரன் வேண்டிய போது பிரமலோகப்பதவியை வேண்டாதொதுக்கியமையாலும் இராமன் அவரை நாடி வந்து அருள் தரும் பேறு பெற இருப்பதாலும்உணரப்பெறும். இந்திரன் இராமனிடம் விடை பெற்றான் என்பது அருத்தாபத்தி, புரந்தரன் -பகைவர் நரர்களை அல்லது உடல்களை அழிப்பவன், தர அகர ஈற்று வியங்கோள். என்னா - செய்யா எனும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.*

*இராமன் முதலியோர் சரபங்கன் குடிலில் தங்குதல்*

***2619. போனவன் அக நிலை***
***புலமையின் உணர்வான்***
***வானவர் தலைவனை வரவு***
***எதிர் கொண்டான்;***
***ஆனவன் அடி தொழ, அருள்***
***வர, அழுதான்***
***தானுடை இட வகை***
***தழுவினன், நுழைவான்.***

***போனவன் அகநிலை புலமையின் உணர்வான் -*** *போன இந்திரனின் மனநிலையை ஞானக் கண்ணால் சரபங்கர் அறிபவராகி;* ***வானவர் தலைவனை வரவுஎதிர் கொண்டான்-*** *தேவர்களின் தேவனாம் இராமனைவரவேற்றான்;* ***ஆனவன் -*** *அப்படி வந்த இராமனும்;* ***அடி தொழ -*** *முனிவனின்அடிவணங்க;* ***அருள் வர அழுதான் -*** *அன்பு பெருகக் கண்ணீர் சிந்தினான்;* ***தானுடை இடவகைதழுவினன் நுழை வான் -*** *தானிருக்கும் குடிலிடத்து இராமனைத் தழுவிக் கொண்டு உட்புகுவார்.*

*புலமை - அறிவு, ஞானம். அருள் - இலக்கணையாய் அன்பிற்காயிற்று இட வகை - இருப்பிடம்,வீடு தானுடை இடவகை தழுவினன் நுழைவான் என்பதற்குத்*

*தன்னடியார் இருப்பிடமே தன் வைகுந்தம் எனக்கருதும் இராமன் நுழைந்தான் என்பர். அழுகை உவகைக் கலுழ்ச்சி.*

***2620. 'ஏழையும் இளவலும் வருக'***
***என, இனிதா***
***வாழிய அவரொடும் வள்ளலும்***
***மகிழ்வதால்,***
***ஊழியின் முதல்முனி***
***உறையுளை அணுக,***
***ஆழியில் அறிதுயிலவன் என***
***மகிழ்வான்.***

*(சரபங்கர் இராமனை நோக்கி)* ***ஏழையும் இளவலும் வருக என -*** *சீதையும் இலக்குவனும் வருகஎன்று வரவேற்க;* ***இனிதா வாழிய அவரொடும் வள்ளலும் மகிழ்வால் -*** *நன்றாக,வாழ்விற்குரிய அவர்களொடு இராமனும் மகிழ்ச்சியால்;* ***ஊழியின் முதல் முனி உறையுளை அணுக -*** *பிரளய காலத்திற்கு முன்னம் இருந்த சரபங்கரின் வாழுமிடத்தைச் சேர;* ***ஆழியில்அறிதுயிலவன் என மகிழ்வான் -*** *திருப்பாற் கடலில் யோக நித்திரை கொள்ளும் திருமால்இவனே என்று தெளிந்து சரபங்க முனிவர் களிப்பெய்தினார்.*

*ஏழை - பெண்ணாம் சீதையைக் குறித்தது. இக்காண்டத்தில் 'மழைக் கண் ஏழை' என வருவதும்காண்க (3316), சரபங்கர் இராமனைப் பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் திருமால் என எண்ணிக்களித்தார். வாழிய என்பது அசை நிலையுமாம்.*

***2621. அவ் வயின், அழகனும் வைகினன்-***
***அறிஞன்***
***செவ்விய அற உரை***
***செவிவயின் உதவ,***
***நவ்வியின் விழியவளொடு,***
***நனி இருளைக்***
***கவ்விய நிசி ஒரு***
***கடையுறும் அளவின்.***

***அவ்வயின் -*** *அவ்விடத்தில்,* ***அறிஞன் செவ்விய அறஉரை செவி வயின் உதவ -*** *சரபங்கர் நல்ல அறமொழிகளைக் காதிலே கூற(க் கேட்டு);* ***அழகனும் நவ்வியின்விழியவளொடு -*** *இராமனும் பெண்மானின் விழி போன்ற கண்களையுடைய சீதையோடு;* ***நனிஇருளைக் கவ்விய நிசி ஒரு கடையுறும் அளவின் வைகினன் -*** *இருட்டை மிகுதியும் பற்றிய இரவுப் பொழுது ஒரு முடிவை அடையும் அளவு தங்கினான்.*

*இரவு முழுவதும் அறவுரை கேட்டுக் கொண்டிருந்தனர் என்றும் கூறுவர். இராமனை அழகன் எனக்குறிப்பதை அழகனும் அவளும் துஞ்ச '(2344) அதிகம் நின்று ஒளிரும் இவ் அழகன் முகம் (2748) என்ற தொடர்களில் காணலாம். சீதையைக் கூறியது இலக்குவனுக்குஉபலட்சணம்.*

***2622. விலகிடு நிழலினன், வெயில்***
***விரி அயில் வாள்***
***இலகிடு சுடரவன், இசையன***
***திசை தோய்,***
***அலகிடல் அரிய, தன் அவிர்***
***கர நிரையால்,***
***உலகு இடு நிறை இருள் உறையினை***
***உரிவான்.***

***விலகிடு நிழலினன் -*** *வீசுகின்ற ஒளியுடையவனும்;* ***இலகிடு சுடரவன் -*** *விளங்குகின்ற சுடர் உடையவனும் ஆன சூரியன்;* ***இசையன திசை தோய் -*** *தன்புகழ் போல் நான்கு திசைகளிலும் சென்று படிந்த;* ***அலகிடல்அரிய -*** *கணக்கிட்டுக் கூற முடியாத;* ***வெயில் விரி அயில் வாள் -*** *வெயில் விரிந்தகூரிய வாள்கள் போன்ற;* ***தன் அவிர்கர நிரையால் -*** *தன்னுடைய விளங்கும் கதிர்களாம்கைகளின் கூட்டத்தால்;* ***உலகு இடு நிறை இருள் உறையினை உரிவான் -*** *உலகங்களை மூடிய நிறைந்த இருட்டாகிய போர்வையைக் கழற்றுவான்.*

*நிழல் இனன் எனப் பிரித்து ஒளியுடைய சூரியன் எனலுமாம். சூரியன் தன் கதிர்களால் இருள்நீங்கத் தோன்றியதை உருவகமாக்கியுள்ளார். உலகை மூடிய இருளைப் போக்குவது வெயில், அதனைப்பரப்புதற்குக் கதிர் ஆகியவற்றை முறையே உறையும் வாளும் கையுமாகப் படைத்துள்ளார். இசையனஎன்பதற்கு ஒன்றோடொன்று இணங்கி நிற்பன எனவும் உரைப்பர். கரம் - சிலேடைஉருவகம்.*

*சரபங்கர் தீப் புக்கு வீடு பெறல்*

***2623. ஆயிடை, அறிஞனும், அவன்***
***எதிர் அழுவத்***
***தீயிடை நுழைவது ஓர்***
***தெளிவினை உடையான்,***
***'நீ விடை தருக' என***
***நிறுவினன், நெறியால்,***
***காய் எரி வரன் முறை***
***கடிதினில் இடுவான்.***

***ஆயிடை -*** *அப்பொழுது;* ***அறிஞனும் அவன் எதிர் -*** *சரபங்க முனிவரும் இராமன் எதிரில்;* ***அழுவத்தீயிடை நுழைவது ஓர் தெளிவினை உடையான் -*** *மிகுந்த நெருப்பில்*

*புகுந்து உயிர் விடுவதான ஒருதெளிந்த அறிவினை மேற்கொண்டவராய்;* ***காய் எரி வரன் முறை நெறியால் கடிதினில் இடுவான் -*** *எரியும் தீயை சாத்திர முறைப்படி விரைவில் வளர்ப்பார் ஆகி;* ***நீ விடை தருக எனநிறுவினன் -*** *நீ எனக்கு விடை தருவாயாக எனக் கேட்டார்.*

*அழுவத்தீ அங்கிருந்த காட்டுத் தீ எனலுமாம் பரந்த ஓமகுண்டத்திலே என்பாருமுளர். இடுவான்என்பதை எச்சமாக்கி இடுவதற்கு விடை தருக எனவும் கூறலாம்.*

***2624. வரி சிலை உழவனும், மறை***
***உழவனை, 'நீ***
***புரி தொழில் எனை? அது***
***புகலுதி' எனலும்,***
***'திருமகள் தலைவ! செய் திருவினை***
***உற, யான்***
***எரி புக நினைகுவென்; அருள்'***
***என, இறைவன்:***

***வரிசிலை உழவனும் -*** *கட்டமைந்த வில்லில் வல்ல இராமனும்;* ***மறை உழவனை -*** *வேதம் வல்ல சரபங்கரை நோக்கி;* ***நீபுரி தொழில் எனை அது புகலுதி எனலும் -*** *நீ செய்ய விரும்பிய செய்கை என்ன? அதனைக் கூறுவாயாக எனக் கேட்டதும்;* ***திருமகள் தலைவ செய் திருவினை உற -*** *இலக்குமி கணவனே,செம்மையான மோட்சத்தை அடையும்படி;* ***யான் எரிபுக நினைகுவென் அருள் என -*** *நான் தீயில்புக எண்ணினேன், நீ விடை அருள்க என்று வேண்டவும்;* ***இறைவன் -*** *இராமன்.*

*சிலை உழவன், மறை உழவன் என்பன முன்னர் வாளுழவன் என்ற தொடர் (1371) வந்ததுபோன்றது. குறளில் வில்லேர் உழவர், சொல்லேர் உழவர் என்பவையும் காண்க. (குறள் 872).செய் இருவினை எனப் பிரித்து முன் செய்த நல்வினை தீவினை எனவும் கூறுவர். அவை அறின்மோட்சம் கிடைக்கும் என்பதாம்.*

***2625. 'யான் வரும் அமைதியின் இது***
***செயல் எவனோ?-***
***மான் வரு தனி உரி***
***மார்பினை!' எனலும்,***
***மீன் வரு கொடியவன் விறல்***
***அடும் மறவோன்***
***ஊன் விடும் உவகையின்***
***உரை நனி புரிவான்:***

***மான் வரு தனிஉரி மார்பினை -*** *மானிடத்து அடையப் பெற்றதான ஒப்பற்ற தோலைத் தரித்த மார்பை உடைய முனிவ!;* ***யான் வரும் அமைதியின் இது செயல் எவனோ***

***எனலும் -*** *நான் இங்கு வந்த இப்பொழுது இப்படி உயிர்விடும்செயலை நீர் செய்வது ஏனோ என்று இராமன் கேட்டதும்;* ***மீன் வரு கொடியவன் விறல் அடும்மறவோன் -*** *மீன் உரு எழுதிய கொடியை உடைய மன்மதனின் வலிமையை அழித்த தவவலியுடையசரபங்கர்,* ***ஊன் விடும் உவகையின் உரை நனி புரிவான் -*** *தன் உடலைவிட்டு நீங்கும்மகிழ்ச்சி மிகுந்து பின்வரும் சொற்களை நன்கு விரும்பிச் சொன்னார்.*

*அமைதி - சமயம், தவம்புரி முனிவர் மான்தோல் போர்த்தல் மரபு. திருமுருகாற்றுப்படையில்'மானின் உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்' (முருகு. 128-9) என வருதல் காண்க. மீன்வரு கொடியவன்விறல் அடும் மறவோன் என்ற தொடர் சரபங்கர் எனப் பெயர் பெற்றதற்குக் காரணமாக அமைகிறது.விறல் அடும் அறவோன் எனவும் பிரிக்க இடமுண்டு. ஊன் ஆகுபெயர் எவனோ - ஓகாரம்,அசை.*

***2626. 'ஆயிர முகம் உள தவம்***
***அயர்குவென், யான்;***
***"நீ இவண் வருகுதி" எனும்***
***நினைவு உடையேன்;***
***போயின இரு வினை;***
***புகலுறு விதியால்***
***மேயினை; இனி ஒரு வினை***
***இலை;-விறலோய்!***

***விறலோய் -*** *வெற்றி வீரனே!;* ***யான் ஆயிரமுகம் உளதவம் அயர்கு வென் -*** *நான் பலவகைப்பட்டதவங்களைச் செய்பவன்;* ***நீ இவண் வருகுதி எனும் நினைவு உடையேன் -*** *நீ இவ்விடத்தில்எழுந்தருள்வாய் என்னும் நினைவு மேற் கொண்டுள்ளேன்;* ***புகலுறு விதியால் போயின இருவினை -*** *நேரிடும் முறைப்படி இரண்டு வினைகளும் அழிந்தன;* ***மேயினை -****அதன் பயனாய் நீ இங்குஎனக்கு அருள்புரிய வந்தாய்;* ***இனி ஒரு வினை இலை -*** *இனிமேல் நான் செய்யத்தக்க செயல்வேறு இல்லை. ஆயிரம் உகம் என ஆயிரக்கணக்கான யுகங்கள் என்பாருமுளர். புகலுறு விதி - சிறப்பித்துக்கூறும் விதியுமாம். தவம் செய்து இறைவன் அருள் பெறுவர் வேறு செய்யதக்க வினை இல்லை என்றஉண்மையை இது விளக்கும்.*

***2627. 'இந்திரன் அருளினன் இறுதி***
***செய் பகலா***
***வந்தனன், "மருவுதி மலர்***
***அயன் உலகம்;***
***தந்தனென்" என, 'அது***
***சாரலென்,-உரவோய்!-***
***அந்தம் இல் உயர் பதம்***
***அடைதலை முயல்வேன்.***

***உரவோய் -*** *வலிமை கொண்டவனே!;* ***இந்திரன் வந்தனன் -*** *இந்திரன் இங்கு வந்தான்;* ***இறுதி செய்பகலா -*** *அழிகின்ற காலம் வரை;* ***மலர் அயன் உலகம் தந்தனென் -*** *பிரமனின்சத்தியலோகத்தை (உனக்குத்) கொடுத்தேன்;* ***மருவுதி என அருளினன் -*** *தங்குவாயாக என்று சொன்னான்;* ***அது சாரலென் -*** *அதை நான் சேர விரும்பவில்லை;****அந்தம் இல் உயர்பதம்அடைதலை முயல்வேன் -*** *அழிவு இல்லாத உயர்ந்த பரமபதத்தைச் சேர்வதற்கு முயற்சி செய்வேன்.*

*'பிரமதேவன் அழைத்தான். உலகம் அழியும் அளவு சத்திய உலகில் தங்குக' என இந்திரன்பிரமனின் வேண்டுகோளைத் தெரிவித்தும் சரபங்கர் பரமபதம் அடைய முயல்வதாக அவனளித்த பேற்றைமறுத்து விட்ட கருத்து புலப்படும். இதனால் அவர் பரமபதத்தையே மேலாகக் கொண்டமைஉணரப்பெறும்.இறுதி செய் பகலா - நேற்று மாலைப் பொழுது என்பாருமுளர். உரம் -அறிவுமாம்.*

***2628. 'ஆதலின், இது பெற அருள்'***
***என உரையா,***
***காதலி அவளொடு கதழ்***
***எரி முழுகி,***
***போதலை மருவினன், ஒரு***
***நெறி-புகலா***
***வேதமும் அறிவு அரு மிகு***
***பொருள் உணர்வோன்.***

***ஒரு நெறி புகலா வேதமும் -*** *ஓர் உறுதி வழி எனக் கூறாத வேதமும்;* ***அறிவு அரு மிகு பொருள் உணர்வோன் -****வேதங்களும்பரம்பொருளை அறிய முடியாத மேம்பட்ட அப்பொருளின் நிலையை அறிந்த சரபங்கர்;* ***ஆதலின் இதுபெற அருள் என உரையா -*** *ஆகையால் இந்தப் பரமபதம் அடைவதை எனக்கு அருள்க என்று இராமனிடம்சொல்லி;* ***காதலிஅவளொடு -*** *தம் மனைவியோடும்;* ***கதழ் எரி முழுகி போதலை மருவினன் -*** *பற்றி எரியும் பெரியநெருப்பில் புகுந்து பரமபதம் சேர்ந்தான்.*

*மிகு பொருள் - பரம்பொருளாகிய இராமன் எனலுமாம். கதழ் - மிகுதி, வலிமை. உரையா -செய்யா எனும் வாய்பாட்டு எச்சம்.*

***2629. தேவரும், முனிவரும், உறுவது***
***தெரிவோர்,***
***மா வரும் நறு விரை மலர்***
***அயன் முதலோர்,***
***ஏவரும், அறிவினில் இரு***
***வினை ஒருவி,***
***போவது கருதும் அவ் அரு***
***நெறி புக்கான்.***

***உறுவது தெரிவோர்*** - *இனி நடப்பதைத் தம் அறிவால் தெரிந்து கொள்ளக் கூறியவர் ஆன;* ***மாவரும் நறுவிரை மலர்அயன்*** *-பெருமை மிக்க நல்ல தெய்வ மணமுள்ள தாமரை மலர் மீது அமர்ந்த பிரம தேவனும்;* **தேவரும் -** *தேவர்களும்,* **முனிவரும் முதலோர் -** *முனிவரும் முதலானோர்;* **ஏவரும் -** *மற்றை எல்லோரும்;* **இருவினை அறிவினில் ஒருவி -** *நல்வினை தீவினை ஆகியஇரண்டையும் ஞானத்தால் அறிந்து நீக்கி;* **போவது கருதும் -** *கடைசியாக அடைய எண்ணும்;* **அவ் அருநெறி புக்கான் -** *பெறற்கரிய அந்தப் பரமபதத்தைச் சேர்ந்தார்.*

*உறுவது தெரிவோர் என்பது எதிர் காலத்தைக் குறித்தது. இறப்பு, நிகழ்வு ஆகிய இருகாலத்தைஅறிவதை விட எதிர்காலத்தை அறிதலே கடினம். உபலட்சணத்தால் மற்ற இரு காலத்தையும் குறிப்பால்உணர்த்தல் கொண்டு முக்கால ஞானியர் எனலாம். மலரயன் தேவர் முதலோர் இருவினைப் பயனால்அடையும் நிலை பெற்றவர் என்பதாம். தம் வினைப்பயனை இராமன் திருவடியில் இட்டுச் சரபங்கர்பரமபதம் அடைந்தார் என்பர்.*

***2630. அண்டமும் அகிலமும்அறிவு***
***அரு நெறியால்***
***உண்டவன் ஒரு பெயர்***
***உணர்குநர் உறு பேறு***
***எண் தவ நெடிது எனின்***
***இறுதியில் அவனைக்***
***கண்டவர் உறு பொருள் கருதுவது***
***எளிதோ?***

***அண்டமும் அகிலமும் அறிவு அரு நெறியால்*** - *எல்லா அண்டங்களையும் உலகங்களையும்யாரும் அறியாதபடி;***உண்டவன் ஒருபெயர் உணர்குநர் உறுபேறு** - *எடுத்துண்ட திருமாலாம்இராமனின் ஒப்பற்ற நாமத்தைச் சிந்திப்பவர் அடையும் சிறப்பு;* **எண்தவ நெடிதுஎனின் -** *கணக்குக்கு எட்டாத பெரிது ஆகும் என்றால்;* **இறுதியில்அவனைக் கண்டவர் -** *முடிவில்அப்பரம் பொருள் ஆனவனைக் கண்டவர்;* **உறு பொருள் கருதுவது எளிதோ -** *அடையும் சிறந்த பொருளை நினைப்பது எளியதோ? (ஆகாது).*

*அண்டமும் அகிலமும் உண்டவன் - யுகமுடிவில் எல்லாவற்றையும் திருமால் தன்னுள் அடக்குவதைக்குறிக்கும். ஒரு - ஒப்பற்ற. எண் - நினைப்பும் ஆம். பேறு - பெறும் பதவி. உறு - மிகுதிகுறிக்கும் உரிச்சொல். தவநெடிது என்பதையும் உரிச்சொற்றொடராகக் கொள்வர் சிலர். இது தொடர்நிலைச் செய்யுள் பொருட்பேறணி.*

## அகத்தியப் படலம்

*அகத்திய முனிவரின் தவச் சாலைக்கு இராமன் சீதை இலக்குவரோடு எழுந்தருளியதைக் கூறும்படலம். அகத்தியன் என்பதற்கு மலையைஅடக்கியவன் என்ற பொருளுரைப்பர். சரபங்க முனிவர்அருநெறி அடைந்தபின் தம்பியொடும் மனைவியொடும் வாலகில்லியர் தன்னைக் கண்டு மகிழ,அகத்தியரின் தவச்சாலையை அடைந்து வில், அம்பு, வாள், தண்டு முதலியவற்றை அம்முனிவரிடமிருந்துபெறும் வரலாறு.*

*இராமன் முதலியோர் சரபங்கர் குடிலிலிருந்து போதல்*

*கலிவிருத்தம்*

***2631. அனையவன் இறுதியின்***
***அமைவுநோக்கலின்,***
***இனியவர், இன்னலின்***
***இரங்கும் நெஞ்சினர்,***
***குனி வரு திண் சிலைக்***
***குமரர், கொம்பொடும்,***
***புனிதனது உறையுள்நின்று***
***அரிதின் போயினார்.***

***இனியவர் குனிவரு திண் சிலைக்குமரர் -*** *எல்லோர்க்கும் இனிமையை அளிப்பவர்களும் வளைந்த வலிய வில்லையுடையவர்களுமான இராமலக்குவர்;* ***அனையவன் இறுதியின் அமைவு நோக்கலின் -****அந்தச் சரபங்க முனிவரின் முடிவின் நிலையைப்பார்த்தமையால்;****இன்னலின் இரங்கும் நெஞ்சினர் -*** *துன்பத்தால் வருந்தியமனமுடையவர்களாய்;* ***கொம்பொடும் -*** *பூங்கொம்பு போன்ற சீதையுடன்;* ***புனிதனது உறையுள் நின்று அரிதின் போயினார் -*** *தூயவராம் அம்முனிவரின் தவச்சாலையிலிருந்து துன்பத்தோடுநடந்து சென்றனர்.*

*சரபங்கர் தீயில் புக்கு நல்லுலகம் அடைந்ததைப் பார்த்து இராமன் முதலியோர்வியப்பெய்தினர் என்பர் வால்மீகி. இங்குக் கம்பர் அந்நிலையைத் துன்பச் சூழலாகக்காட்டுகிறார். தீப்புகு காட்சி, யாவர் மனத்தையும் கலங்கச் செய்வதாம். உறையுள் -இருப்பிடம், அரிதிற் போயினார் - அம்முனிவரின் பிரிவால் வருந்திச் சென்றனர் எனலுமாம்.கொம்பு - உவமையாகுபெயர். 1*

***2632. மலைகளும், மரங்களும்,***
***மணிக் கற்பாறையும்,***
***அலை புனல் நதிகளும்,***
***அருவிச் சாரலும்,***
***இலை செறி பழுவமும்,***

***இனிய சூழலும்,***
***நிலை மிகு தடங்களும்,***
***இனிது நீங்கினார்.***

***மலைகளும்*** - *பல மலைகளையும்;* ***மரங்களும்*** - *பல மரங்களையும்;* ***மணிக்கற்பாறையும்*** - *அழகியகற்பாறைகள் நிறைந்த இடங்களையும்;* ***அலை புனல் நதிகளும்*** - *அலைகளோடு கூடிய நீர் மிக்கஆறுகளையும்;* ***அருவிச் சாரலும்*** - *நீர் அருவி பாயும் மலைப் பக்கங்களையும்;* ***இலை செறிபழுவமும்*** - *இலைகள் அடர்ந்த சோலைகளையும்;* ***இனிய சூழலும்*** - *இனிமையாய் விளங்கியஇடங்களையும்;* ***நிலை மிகு தடங்களும்*** *-ஆழம் மிகுந்த நீர்நிலைகளையும்;* ***இனிதுநீங்கினார்*** - *இனிமையாகக் கடந்து சென்றனர்.*

*மலைகள் முதலிய இனிய சூழல் பலவும் இராமன் முதலியவர்களுக்குத் தோற்றத்தால் கண்ணுக்குஇனிமையும் வாழ்தற்கு மகிழ்ச்சியும் அளித்தமையால் நடந்து சென்ற வருத்தம் தெரியாமல்காட்சிகளில் இனிமை கண்டு மகிழ்ந்தனர். பழுவம் - காடு, கல்லதரத்தமுமாம் (சீவக. 1185) சூழல் - தவச்சாலைகளுமாம், நிலை - பரப்பு.*

*இராமன் தண்டக வனத்திற்கு வர, முனிவர்கள் மகிழ்தல்*

***2633. பண்டைய அயன்***
***தரு பாலகில்லரும்,***
***முண்டரும், மோனரும்,***
***முதலினோர்கள் அத்***
***தண்டக வனத்து உறை***
***தவத்துளோர் எலாம்***
***கண்டனர் இராமனை,***
***களிக்கும் சிந்தையார்.***

***பண்டைய அயன் தரு பால கில்லரும்*** - *முதன் முதலில் தோன்றிய பழமையான பிரமதேவன் பெற்றவர்களாகிய பாலகில்லரும்;* ***முண்டரும்*** - *மழித்த தலையை உடையவர்களும்;* ***மோனரும்*** - *மௌன விரதம் பூண்டவர்களும்;* ***முதலினோர்கள்*** - *முதலியவர்களாகிய;* ***அத்தண்டக வனத்துறை தவத்துளோர் எலாம்*** - *அந்தத் தண்டகாரணியம் எனும் காட்டில் வாழ்கின்ற முனிவர்கள் எல்லாம்;* ***இராமனைக்கண்டனர் களிக்கும்சிந்தையார்*** - *இராமனைப் பார்த்தவர்களாய் மகிழும் மனமுடையவர் ஆனார்கள்.*

*பாலகில்லர் - வாலகில்யர் பிரமனது மயிரிலிருந்து தோன்றியவர்கள்; அவனுடைய மாசனபுத்திரர்கள்; இவர்கள் அறுபதினாயிரவர் என்பர்; பெருந்தவம் புரிந்தவர்கள்; இவர்கள் கட்டைவிரல் அளவுள்ள குறுவடிவினர்; நாளும் கதிரவனின் இரதத்தை வலம் வந்து கொண்டிருப்பவர். மோனர்- மௌனர் என்பதன் போலி. களிக்கும் சிந்தையார் கண்டனர் எனவும் பொருள் முடிவுகொள்வர்.*

***2634. கனல் வரு கடுஞ் சினத்து***
***அரக்கர் காய, ஓர்***
***வினை பிறிது இன்மையின்,***
***வெதும்பு கின்றனர்;***
***அனல் வரு கானகத்து,***
***அமுது அளாவிய***
***புனல் வர, உயிர் வரும்***
***உலவை போல்கின்றார்.***

***கனல் வரு கடுஞ்சினத்து அரக்கர் காய*** *- தீப்போல் ஒளிவிடும்மிக்க கோபத்தையுடைய இராக்கதர்கள் வருத்துவதால்;* ***ஓர் வினை பிறிது இன்மையின்*** *- (அவர்களை அழிக்கும்) தக்க செயல் வேறு ஒன்றும்இல்லாமையால்;* ***வெதும்புகின்றனர்*** *- வாடும் அம்முனிவர்கள்; (இராமனின் வரவால்)* ***அனல் வரு கானகத்து*** *- தீப்பற்றி எரியும் காட்டில்;****அமுது அளாவிய புனல்வர*** *- தேவரமுதத்தோடு கலந்தநீர்ப் பெருக்கு வருவதால்;* ***உயிர் வரும் உலவை போல்கின்றார்*** *- அழியாது பிழைத்துத்தளிர்க்கும் உலர்ந்த மரங்களை ஒத்தவராகின்றார்கள்.*

*தண்டகாரணியத்து முனிவர்களுக்குக் காட்டிலுள்ள உலர்ந்த மரங்களும், அரக்கர்களுக்குநெருப்பும், அவர்களுடைய சினத்திற்குக் கோபத்தின் வெப்பமும், இராமனின் வருகைக்குக்குளிர்ந்த நீர்ப்பெருக்கின் வரவும் முனிவர் மகிழ்ந்தமைக்கு உலர்ந்த மரங்கள் தளிர்த்துச்செழித்தலும் உவமையாம். காப்பியத்தில் இத்தகைய அடுக்குவமைகள் அதன் அழகைப் பெருக்க உதவும். திருமால் மோகினி வடிவில் தேவர்க்கு அமுதம் அளித்தது போல இராமனின் வரவே அமுதளாவிய புனல்வரவாகக் கூறப்பெற்றுள்ளது.*

***2635. ஆய் வரும் பெரு வலி***
***அரக்கர் நாமமே***
***வாய் வெரீஇ அலமரும்***
***மறுக்கம் நீங்கினார்;***
***தீ வரு வனத்திடை இட்டுத்***
***தீர்ந்தது ஓர்***
***தாய் வர, நோக்கிய***
***கன்றின் தன்மையார்.***

***ஆய்வரும் பெருவலி அரக்கர் நாமமே*** *- மேன் மேலாய் மிக்கு வளரும் பெரிய வலிமையுடைய இராக்கதர்களின் பெயரையே;****வாய்வெரீஇ அலமரும் மறுக்கம் நீங்கினார்*** *- வாயால் சொல்லவும் அஞ்சி வருந்தும் மனக்குழப்பத்தைநீங்கினவர்களாகிய அம் முனிவர்கள்;* ***தீ வருவனத்திடை****- நெருப்புப் பற்றி எரியும்காட்டில்;* ***இட்டுத் தீர்ந்தது ஓர் தாய் வர****-விட்டு நீங்கிய ஒப்பற்ற*

*தாய்ப்பசுமீண்டு வர;* ***நோக்கிய கன்றின் தன்மையார் -*** *அதனைக் கண்ட இளங்கன்றின்நிலைமையையுடையவரானார்கள்.*

*தீ வரு வனம் அரக்கர்களுக்கும், கன்று முனிவர்களுக்கும், தாய்ப்பசு இராமனுக்கும் உவமைகள்.'ஆடவர் எல்லாம் தாயை முன்னிய கன்று என நின்று உயிர் தளிர்ப்ப' (1370) எனத் தயரதன்இருந்த இடத்திற்குச் சென்ற இராமனைக் கண்ட மக்கள் கொண்ட உணர்வுடன் ஒப்பு நோக்கத்தக்கது. அலமருதல் - திகைத்து வருந்துதல். மறுக்கம் - தத்தளிப்பு.*

***2636. கரக்க அருங் கடுந் தொழில்***
***அரக்கர் காய்தலின்,***
***பொரற்கு இடம் இன்மையின்***
***புழுங்கிச் சோருநர்,***
***அரக்கர் என் கடலிடை***
***ஆழ்கின்றார், ஒரு***
***மரக்கலம் பெற்றென,***
***மறுக்கம் நீங்கினார்.***

***கரக்க அரும் கடுந் தொழில் அரக்கர் காய்தலின்-*** *மறைப்பதின்றிச் செய்யும் கொடிய செய்கைகளை உடைய இராக்கதர்கள் பகையால்வருத்துவதால்;* ***பொரற்கு இடம் இன்மையின் -*** *போராடுவதற்குத் தமக்கு இடம் இல்லாமையால்;* ***புழுங்கிச்சோருநர் -*** *மனம் நொந்து சோர்வடைந்தவர்களும்;* ***அரக்கர் என் கடலிடை ஆழ்கின்றார்-*** *இராக்கதர் என்னும் கடலிடை விழுந்து மூழ்குகின்றவர்களும் ஆனஅம்முனிவர்கள்;* ***ஒருமரக்கலம் பெற்றென -*** *ஒரு கப்பலைப் பெற்றாற்போல;* ***மறுக்கம் நீங்கினார் -*** *(இராமனைக் கண்டதும்) மனக் கலக்கம் நீங்கப் பெற்றனர்.*

*அரக்கர் யாரிடமும் அஞ்சார் ஆதலால் கரக்கருந் கடுந் தொழில் அரக்கர் எனப்பட்டனர்.கடலிடை மூழ்க இருந்தவர்க்குத் தப்பிப் பிழைக்கக் கப்பல் ஒன்று கிடைத்தது போல் அரக்கரால்துன்புற்ற முனிவர்களுக்கு இராமன் உதவி புரிய வந்தனன். அரக்கர் - கடல், முனிவர் - கடலில் ஆழ்வோர், இராமன் - மரக்கலம் என உருவகம் செய்துள்ளார். போர்புரிய முனிவர்க்குத் தவநிலைஇடம் தராது.*
*6*

***2637. தெரிஞ்சுற நோக்கினர்-***
***செய்த செய் தவம்***
***அருஞ் சிறப்பு உதவ, நல்***
***அறிவு கைதர,***
***விரிஞ்சுறப் பற்றிய***
***பிறவி வெந் துயர்ப்***
***பெருஞ் சிறை வீடு***
***பெற்றனைய பெற்றியார்.***

***தெரிஞ்சுற நோக்கினர் -*** *நன்றாகத் தெரியும்படி இராமனைக் கண்ட அம் முனிவர்கள்;* ***செய்த செய்தவம் அருஞ்சிறப்பு உதவ-*** *தாம் வருந்திச் செய்த சிறந்த தவமானது பெறற்கரிய சிறப்பைக் கொடுக்குமாறு;* ***நல்அறிவு கைதர -*** *தாம் பெற்ற நல்ல ஞானம் உதவி செய்ய,* ***விரிஞ்சுறப் பற்றிய பிறவிவெந்துயர்ப் பெருஞ்சிறை வீடு -*** *விரிந்து தம்மை வலிதாய்ப்பற்றியிருந்த கொடியபிறவியாம் துன்பத்தைத் தரும் பெரிய சிறையிலிருந்து விடுதலை,* ***பெற்றனைய பெற்றியார் -*** *அடைந்ததைப் போன்ற தன்மையுள்ளவர்களானார்கள்.*

*முனிவர் செய்த தவம் நல்ல ஞானமாம் மெய்யறிவைத் தரும். அதனால் தம் பிறவியாகியசிறையிலிருந்து விடுதலை பெற்றவர்கள் போலாயினர். தெரிஞ்சுற நோக்குதல் இராமனைத்திருமாலின் திருவவதாரம் எனக் காணுதல்.*

*தெரிஞ்சு, விரிஞ்சு என்பன முறையே தெரிந்து, விரிந்து எனும் சொற்களின் போலிகள். கைதரல் - உற்றுழி உதவல். தயரதன் மந்திர சபையில் தன் கருத்தை வெளியிடும்போது 'தருமம்கைதர, மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்' (1327) எனக் கூறும்போது 'கைதர' என்ற சொல்லாட்சியை உணரலாம்.*

*வீடு - விடுதலை, முதனிலை திரிந்த தொழிற் பெயர்.*

***2638. வேண்டின வேண்டினர்க்கு***
***அளிக்கும் மெய்த்தவம்***
***பூண்டுளர் ஆயினும்,***
***பொறையின் ஆற்றலால்,***
***மூண்டு எழு வெகுளியை***
***முதலின் நீக்கினார்;***
***ஆண்டு உறை அரக்கரால்***
***அலைப்புண்டார் அரோ***

***வேண்டின வேண்டினர்க்கு அளிக்கும் மெய்த் தவம் பூண்டுளர் ஆயினும் -*** *விரும்பிச் செய்தவர்க்கு அவர்கள் விரும்பியவற்றை விரும்பிய வண்ணமே தரும் நற்றவம்மேற்கொண்டுள்ளவர் ஆனாலும்;* ***பொறையின்ஆற்றலால் -*** *பொறுமை என்னும் வலிமையால்;* ***மூண்டு எழு வெகுளியை முதலின் நீக்கினார் -*** *மேன்மேல்மிக்கு வரும் சினத்தை வேரொடு களைந்தார்கள். (ஆதலால்);* ***ஆண்டுஉறை அரக்கரால்அலைப்புண்டார்-*** *அக்காட்டில் தங்கியிருந்து இராக்கதர்களால் வருத்தமுற்றார்.* ***அரோ-*** *அசை.*

*இதனால் நிறை மொழி மாந்தராம் அம்முனிவர்கள் தம் தவ வலிமையால் அவ்வரக்கரைச்சினந்து சபித்து அழிக்காதிருத்தற்குக் காரணம் கூறப்பெற்றது. கூடா ஒழுக்கமாகியபொய்த்தவத்திலிருந்து நீக்குதற்கு 'மெய்த்தவம்' என்றார். தவத்தின் பயன் எய்த முதலில்சினத்தை நீக்கிப் பின் பொறுமையைப் பெற வேண்டும் என்பதாம். பொறை - காரணம் பற்றியோ, மடமை பற்றியோ ஒருவன் தமக்கு மிகை செய்த போது தாம் அதனை அவன் இடத்துச் செய்யாதுபொறுத்தல் ஆகும். தவத்தின் ஆற்றல் வேண்டிய வேண்டியாங்குஎய்தலாம்.*

*இராமனை முனிவர்கள் வாழ்த்தித், தம் அல்லலைக் கூறல்*

***2639. எழுந்தனர், எய்தினர்,***
***இருண்ட மேகத்தின்***
***கொழுந்து என நின்ற அக்***
***குரிசில் வீரனை;***
***பொழிந்து எழு காதலின்***
***பொருந்தினார், அவன்***
***தொழும்தொறும் தொழும்தொறும்,***
***ஆசி சொல்லுவார்.***

***எழுந்தனர் எய்தினர் -*** *(அம்முனிவர்கள்) புறப்பட்டு அணுகி;* ***இருண்ட மேகத்தின் கொழுந்து என நின்ற அக்குரிசில்வீரனை-****கரிய மேகத்தின் கொழுந்து போல அங்கு நின்ற வீரனாகிய அந்த இராமனை;* ***பொழிந்து எழு காதலின் பொருந்தினார் -*** *பொங்கி எழும் அன்போடு அடைந்தார்கள்;(அப்போது);* ***அவன் தொழும் தொறும் தொழும் தொறும் ஆசி சொல்லுவார் -*** *அந்த இராமன்தம்மைத் தனித்தனியே தொழுது வணங்கும் போதெல்லாம் வாழ்த்தினார்கள்.*

*இராமன் எழுந்தருளியதைக் கேட்டதும் காலம் தாழ்த்தாது முனிவர்கள் வந்தமை தோன்ற'எழுந்தனர் எய்தினர்' என்றார். செயல் விரைவு தோன்றப் பாடும் நிலையை இராமன் வில்லை'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்' (699) என்பது போல இதுவும் குறிப்பால் உணர்த்தும்.திருஅவதாரப் படலத்தில் கோசலை இராமனைப் பெற்றெடுத்த போது 'கருமுகிற் கொழுந்து எழில்காட்டும் சோதியைத் திருவுறப் பயந்தனள்' (282) என்பார். கருமேகம் கைம்மாறு கருதாது அருள்செய்தற்கும் சான்றாம். இராமன் திருமாலின் அவதாரமாயினும் தானெடுத்த மானிடக்கோலத்திற்கேற்ப முனிவரைவணங்கினான் என்க. முனிவர்களும் பொங்கும் அன்பால் ஆசி அருளினர். 'தொழும் தொறும் தொழும்தொறும்' என்ற அடுக்கு, மிகுதிப் பொருளைக் காட்டும். குரிசில் - அரசகுமரன்.பெருமைக்குரியோனுமாம்.*

***2640. இனியது ஓர் சாலை கொண்டு***
***ஏகி, 'இவ் வயின்***
***நனி உறை' என்று, அவற்கு***
***அமைய நல்கி, தாம்***
***தனி இடம் சார்ந்தனர்;***
***தங்கி, மாதவர்***
***அனைவரும் எய்தினர்,***
***அல்லல் சொல்லுவான்***

***அனைவரும் இனியது ஓர் சாலை கொண்டு ஏகி -****அம்முனிவர்கள் எல்லாரும் வசித்தற்கு இனிதாகிய ஒரு பன்னசாலைக்கு இராமன் முதலியோரை அழைத்துச்*

*சென்று; **'இவ்வயின் நனி உறை' என்று** -இவ்விடத்தில் நன்றாகத்தங்கியிருப்பீராக என்று சொல்லி; **அவற்கு அமைய நல்கி** - இராமனுக்கு ஏற்றவற்றைப்பொருந்தும்படி அளித்து; **தாம் தனி இடம் சார்ந்தனர் தங்கி மாதவர்** - தாம் தத்தம்தனி இடங்களை அடைந்து தங்கியிருந்து அதன் பின் அந்த முனிவர்கள்; **அல்லல் சொல்லுவான் எய்தினர்** - அரக்கரால் தாம்படும் துன்பங்களைக் கூற (இராமனிடம்) வந்தார்கள்.*

*இராமனின் உள்ளத்தில் தங்கள் துன்பத்தை உய்த்துணரும் வகையில் அனைவரும் துன்புற்றவரேஎன அறிவிக்க எய்தினர். நனி உறை என்பதற்குப் பல நாள் தங்குக எனவுமாம். அமையம் நல்கிஎனக் கொண்டு இருப்பிடம் தந்து இளைப்பாறப் பொழுதும் அளித்து எனவும் கொள்ளலாம். அமையம் - ஆறுதல் எனவுமாம். (குறள். 1178)*

***2641. எய்திய முனிவரை இறைஞ்சி,***
***ஏத்து உவந்து,***
***ஐயனும் இருந்தனன்; 'அருள்***
***என்? என்றலும்,***
***'வையகம் காவலன் மதலை!***
***வந்தது ஓர்***
***வெய்ய வெங் கொடுந் தொழில் விளைவு***
***கேள்' எனா,***

***ஐயனும் எய்திய முனிவரை இறைஞ்சி** - இராமனும் தன்னிடம் வந்த அம்முனிவர்களை வணங்கி; **ஏத்துஉவந்து இருந்தனன்** -அவர்களை அன்புடன் துதித்து இருந்தவன் ஆகி; **அருள் என் என்றலும்** -இப்போது நீங்கள் எனக்குஎன்ன கட்டளை இடுகிறீர்கள் என்று கேட்டதும்;**வையகம்காவலன் மதலை!** - உலகங்களைக் காத்தலில் வல்லவனாம் தயரதனின் மகனே!; **வந்தது ஓர் வெய்ய வெங்கொடுந்தொழில் விளைவு கேள் எனா** - எங்களுக்கு நேரிட்டதாகிய ஒரு மிகவும் அதிககொடுமையான செய்கைகளின் பெருக்கத்தை நீ கேட்டருள் என்று.*

*ஏத்து உவந்து என்பதற்கு அம் முனிவர்கள் செய்த துதிகளுக்கு மனம் மகிழ்ந்து என்றும்கொள்வர். வையகம் காவலன் மதலை என்றதால் தந்தையின் கடமை மகனுக்கும் உண்டு என்பது குறிப்பு.வெய்ய வெங் கொடு - ஒரு பொருட் பன்மொழிகள். மனத்தாலும் மொழியாலும் உடலாலும் கொடுமைக்குட்பட்டனர் என்பதைக் குறிக்க மும்முறை கூறினார் எனலுமாம்.*

***2642. 'இரக்கம் என்று ஒரு பொருள்***
***இலாத நெஞ்சினர்***
***அரக்கர் என்று உளர் சிலர்,***
***அறத்தின் நீங்கினார்***
***நெருக்கவும், யாம் படர் நெறி***
***அலா நெறி***

***துரக்கவும், அருந் தவத்***
***துறையுள் நீங்கினேம்.***

***இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர் -*** *இரங்குதல்என்று கூறும் ஒரு செய்கை ஒரு சிறிதும் இல்லாத மனம் உடையவர்களும்;* ***அறத்தின்நீங்கினார் -*** *தருமத்திலிருந்து நீங்கியவர்களுமான;****அரக்கர் என்ற சிலர் உளர் -*** *இராக்கதர் என்று சொல்லப்பட்டுச் சிலர் இருக்கின்றனர்;* ***நெருக்கவும் யாம்படர் நெறி அலாநெறி துரக்கவும் -*** *(அவர்கள் எங்களை) வருத்துவதால் நாங்கள் ஒழுகுதற்குரிய நல்லொழுக்கம் அல்லாத தீயொழுக்கத்தில் செலுத்துவதனாலும்;* ***அருந்தவத் துறையுள் நீங்கினேம் -*** *அரியதவத்தின் வழியிலிருந்து விலகினோம்.*

*ஒரு பொருள் - ஒப்பற்ற செல்வமுமாம். இரக்கம் என்ற பண்பைப் பொருளாகக் கூறுவது வைசேடிகமதம் பற்றி என்பர். சினத்தைப் பொருள் என்று கூறும் குறள். அரக்கர் அறத்தின் நீங்கினர். முனிவர்களாகிய நாங்கள் தவத்துறையுள் நீங்கினோம் என்ற இரு கூற்றுக்களும் ஒப்பிட்டு மகிழற்குரியவை. உறையுள் எனக் கொண்டு தவஞ் செய்யுமிடம் எனவும் உரைப்பர். துறையுள் - உருபுமயக்கம்.*

***2643. 'வல்லியம் பல திரி வனத்து***
***மான் என,***
***எல்லியும் பகலும், நொந்து***
***இரங்கி ஆற்றலெம்;***
***சொல்லிய அற நெறித்***
***துறையும் நீங்கினெம்;***
***வில் இயல் மொய்ம்பினாய்!***
***வீடு காண்டுமோ?***

***வில்லியல் மொய்ம்பினாய் -*** *வில்வித்தையில் வலிமையுடையவனே!:* ***வல்லியம் பலதிரி வனத்து மான் என -*** *பல புலிகள்சஞ்சரிக்கும் காட்டிலுள்ள மான்களைப் போல;* ***எல்லியும் பகலும் நொந்து இரங்கி ஆற்றலெம் -*** *இரவும் பகலும் மனம் நொந்து வருந்தி (அவ்வரக்கர் செய்யும் கொடுமைகளைப்) பொறுக்கமாட்டாதவர் ஆகி;* ***சொல்லிய அறநெறித் துறையும் நீங்கினெம் -*** *நூல் கூறிய தருமவழிகளிலிருந்து விலகினவர் ஆனோம்;* ***வீடு காண்டுமோ? -*** *இத்துன்பங்களிலிருந்து விடுதலை அடைவோமா?*

*விற்கருவி கூறினமையால் 'அரக்கர்களை அழித்து எங்களைக் காப்பாய்' என்ற குறிப்புபுலப்படும். துன்ப மிகுதியைச் சுட்ட 'வீடு காண்டுமோ' என்றார். அறநெறியிலிருந்து வழுவியமையால்உயர்நிலை எவ்வாறு அடைவோம் என்று கூறினார் என்பர். புலி அரக்கர்களுக்கும் மான்முனிவர்களுக்கும் உவமை.*

***2644. 'மா தவத்து ஒழுகலெம்;***
***மறைகள் யாவையும்***
***ஓதலெம்; ஓதுவார்க்கு***
***உதவல் ஆற்றலெம்;***

*மூதெரி வளர்க்கிலெம்;*
*முறையின் நீங்கினேம்;*
*ஆதலின், அந்தண*
*ரேயும் ஆகிலேம்!'*

***மாதவத்து ஒழுக லெம்*** - பெருமை பொருந்திய தவநெறியில் நடக்கின்றோம் அல்லோம்; ***மறைகள் யாவையும் ஓதலெம்*** -வேதங்கள் எல்லாவற்றையும் ஓதுகின்றோமில்லை; ***ஓதுவார்க்கு உதவல் ஆற்ற லெம்*** - வேதம் ஓதும் மாணவர்களுக்கு உதவும் கடமையைச் செய்கின்றோம்அல்லோம்; ***மூதெரிவளர்க்கிலெம்*** - பழமையான வேள்வித் தீயை வளர்க்கின்றோம் இல்லை; ***முறையின்நீங்கினேம்*** - எங்களுக்குரிய ஒழுக்கங்களிலிருந்து விலகினோம்; ***ஆதலின் அந்தணரேயும்ஆகிலேம்*** - ஆகையால் அந்தணர் என்பது கூட ஆகின்றோமில்லை.

***அந்தணர்க்குரியவையாம் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்என்பவற்றுள் ஓதல் ஓதுவித்தலையும் வேட்டலையும் கூறியுள்ளார். பிறவற்றை அருத்தாபத்தியால்பெறவைத்தார். மூதெரி என்பது பிரமசரியம் தொடங்கி வளர்த்து வருவதான வேள்வித்தீ யாகும்.மறைகள் யாவையும் என்பதால் வேதம், வேத அங்கங்கள், சாத்திரங்கள் முதலியவற்றையும்கொள்வர். இத்தகைய தீய வினைகளிலிருந்து நீக்க நீயே கதி என்றார்என்க.*** *1*

*2645'**இந்திரன் எனின், அவன்***
***அரக்கர் ஏயின***
***சிந்தையில், சென்னியில்,***
***கொள்ளும் செய்கையான்;***
***எந்தை! மற்று யார் உளர்***
***இடுக்கண் நீக்குவார்?***
***வந்தனை, யாம் செய்த***
***தவத்தின் மாட்சியால்,***

***இந்திரன் எனின்*** - தேவேந்திரனோ என்றால்; ***அவன் அரக்கர்ஏயின*** - அவன் இராக்கதர்கள் கட்டளையிட்டவினைகளை;***சிந்தையில் சென்னியில் கொள்ளும் செய்கையான்*** - மனத்திலும் சிரசிலும்ஏற்று நடக்கும் ஏவலனாக உள்ளான்; (ஆகையால்) ***எந்தை*** - எம் தலைவனே!; ***இடுக்கண்நீக்குவார் மற்ற யார் உளர்*** - (எங்கள்) துன்பங்களைப் போக்குவோர் (உன்னையன்றி) வேறுஎவர் இருக்கின்றனர்? (ஒருவரும் இல்லை) ; ***யாம் செய்த தவத்தின் மாட்சியால் வந்தனை*** -நாங்கள் முன்னர்ச் செய்த தவத்தின் பெருமையால் (எங்களைப் பாதுகாக்க இங்கு) வந்தருள்செய்தாய்.

*இந்திரனைக் குறித்தது அவன் தேவர் தலைவன்; வேள்வியைக் காக்கும் கடமை உடையவன்;ஆயினும் அவன் அரக்கர்களுக்குப் பணி புரியும் நிலையில் இருப்பதால் 'இனி உன்னையன்றி எங்கட்குவேறு கதி இல்லை' என இராமனிடம் முனிவர்கள்*

*கூறினர். சென்னியிற் கொள்ளுதல் ஒருவன் காலால் இட்ட பணியைத் தலையால் செய்யும் அடிமைநிலை. கங்கை காண் படலத்தில் குகன் பரதனைவினவியபோது 'தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்' (2334) என வரும் தொடருடன் ஒப்பிடற்பாலது.*

***2646. 'உருளுடை நேமியால்***
***உலகை ஓம்பிய***
***பொருளுடை மன்னவன்***
***புதல்வ! போக்கிலா***
***இருளுடை வைகலெம்;***
***இரவி தோன்றினாய்;***
***அருளுடை வீர! நின் அபயம்***
***யாம்' என்றார்.***

***உருளுடை நேமியால் உலகை ஓம்பிய பொருளுடை மன்னவன் புதல்வ -*** *எங்கும் சுற்றிச் செல்லும் ஆணைச் சக்கரத்தால் உலக முழுவதையும் காத்த எல்லாச் செல்வங்களும்உடைய தயரதனுடைய மகனாம் இராமனே!;* ***அருளுடை வீர -*** *கருணை உடைய வீரனே!;****போக்கிலா இருளுடை வைகலெம் -*** *நீங்குதலில்லாத துன்பமாம் இருள் கொண்டநாட்களை உடையவர்களாயிருக்கிறோம்;* ***இரவி தோன்றினாய் -*** *கதிரவன் போல நீ வந்துஎழுந்தருளினாய்;* ***நின் அபயம் யாம் என்றார் -****உனக்கு அடைக்கலம் யாம் என்றுஅம்முனிவர் கூறினர்;*

*அரசன் ஆணையைச் சக்கரம் என்பது கவிமரபு. உலகை ஓம்பிய மன்னவன் புதல்வ என்றதால்தந்தைக்கு உரிய பொறுப்பு மகனுக்கும் உண்டு என்பதை உணர்த்தும். பொருள் என்பதற்கு உறுதிப்பொருள், செயல், புகழ், மெய்மை எனப் பலபொருள் காண்பர். துன்பத்தை இருளாகக் கூறல்பண்டையமரபு. போக்கிலா இருள் விடியாத இருளாம். அரக்கரை இருளாகவும் இராமனை இருள் நீக்கும்கதிரவனாகவும் கூறுவர். அருளுடை வீர என்பதால் தீயோரை அழிப்பதற்கு வீரமும் தன்னைவிரும்பியவரைப் பாதுகாப்பதற்கு அருளும் உடன் கூறப்பெற்றன. அபயம் - பயமற்ற நிலை. தண்டகாரணிய முனிவர்கள் இராமனிடம் அடைக்கலம் புகுந்த நிலை இதனால் நன்குவிளங்கும்.*

*இராமன் அபயம் அளித்தல்*

***2647. 'புகல் புகுந்திலரேல்,***
***புறத்து அண்டத்தின்***
***அகல்வரேனும், என்***
***அம்பொடு வீழ்வரால்;***
***தகவு இல் துன்பம் தவிருதிர்***
***நீர்' எனா,***

***பகலவன் குல***
***மைந்தன் பணிக்கின்றான்.***

***பகலவன் குலமைந்தன் -*** *சூரியன் குலத்துத் தோன்றிய இராமன் (முனிவர்களை நோக்கி);* ***புகல் புகுந்திலரேல் -*** *அவ்வரக்கர்கள் (இனித் துன்பம் செய்வதில்லை என்று கூறி) அடைக்கலம் அடையாமல் போவாரானால்;* ***புறத்து அண்டத்தின் அகல் வரேனும் -****(இவ்வுலகை விட்டு) அப்புறத்துள்ளவேறு அண்டங்களுக்கு ஓடிப் போவாரானாலும்;* ***என் அம்பொடு வீழ்வரால் -*** *நான் எய்த என்பாணத்தொடு கீழே வீழ்ந்துமாய்வர் ஆதலால்;* ***தகவு இல் துன்பம் தவிருதிர் நீர் -****தகுதியில்லாத இத்துன்பத்தை நீக்குங்கள் நீங்கள்;* ***எனா -*** *என்று சொல்லி;* ***பணிக்கின்றான் -*** *(மேலும்) சொல்கின்றான்.*

***பகலவன் - பகலைச் செய்கிறவனாகிய சூரியன், என் அம்பொடு வீழ்வர் எனும் போது இராமன்தன் அம்பு அண்டங்களுக்கு அப்புறத்த அண்டங்களுக்குச் சென்றாலும் அங்கும் சென்று அரக்கரைக்கொல்லும் எனத் தன் ஆற்றலை எடுத்துரைத்தலும் ஆம். அம்பின் வீழ்ச்சி அரக்கர் வீழ்ச்சிக்கும் காரணமாகும். இது செயலின் விரைவைக் காட்டும் அம்பொடு என்பதிலமைந்த உருபுகருவிப் பொருளில் வந்தது. முனிவர்கள் வருத்தம் உறுதல் என்பது தக்கது அன்று என்ற கருத்துபுலப்படத் தகவில் துன்பம் என்றான். பணித்தல் - உறுதிகூறல்.*** *1*

*2648'****வேந்தன் வீயவும்,***
***யாய் துயர் மேவவும்,***
***ஏந்தல் எம்பி வருந்தவும்,***
***என் நகர்***
***மாந்தர் வன் துயர்***
***கூரவும், யான் வனம்***
***போந்தது, என்னுடைப்***
***புண்ணியத்தால்' என்றான்***

***வேந்தன் வீயவும் -*** *சக்ரவர்த்தியாம் தயரதன் இறப்பவும்;* ***யாய் துயர் மேவவும் -*** *தாயாம் கௌசலை துன்பம்அடையவும்;* ***ஏந்தல் எம்பி வருந்தவும் -*** *பெருமை உடைய என் தம்பி பரதன் வருத்தமடையவும்;* ***என் நகர் மாந்தர் வன்துயர் கூரவும் -*** *எனது (அயோத்தி) நகரத்தில் உள்ள மக்கள்வலிய துன்பத்தைப் பெரிதும் அடையவும்;* ***யான் வனம் போந்தது என்னுடைப் புண்ணியத்தால்என்றான் -*** *நான் காட்டிற்குப் புறப்பட்டு வந்தது என்னுடைய நல்வினையாலாகும் என்றுகூறினான்.*

*மகனைப் பிரிந்த துன்பத்தால் தயரதன் இறந்தான். அண்ணனைப் பிரிந்த துன்பத்தால்பரதன் வருந்தினான். அயோத்தி மக்கள் பட்ட துயரத்தை அயோத்தியா காண்டத்தில் நகர் நீங்குபடலம் கூறும் (1766-1817). முனிவர்களின் பகைதீர்த்து உதவி செய்யப் பெறுவதால் 'போந்தது என்னுடைப் புண்ணியத்தால்' என இராமன் கூறினான்.*

*யாய் - ஆய் என்பதன் போலி, ஏந்தல் - உயர் குணங்களை ஏந்தியவன், உயர்ச்சி, பெருமையும் ஆம்.*

***2649. 'அறம் தவா நெறி***
***அந்தணர் தன்மையை***
***மறந்த புல்லர் வலி***
***தொலையேன் எனின்,***
***இறந்துபோகினும் நன்று;***
***இது அல்லது,***
***பிறந்து யான் பெறும்***
***பேறு என்பது யாவதோ?***

***அறம் தவா நெறி அந்தணர் தன்மையை -*** *தருமத்திலிருந்து நீங்காத முனிவர்களின் பெருமையை;* ***மறந்த புல்லர் வலி தொலையேன் எனின் -*** *மறந்து (உங்களுக்குக்) கேடு செய்கின்ற அற்பர்களாகிய அரக்கர்களின் பலத்தை அழிக்காமற்போவேன் ஆனால்;* ***இறந்து போகினும் நன்று -*** *அவ்வரக்கர்களால் போரில்மரணமடைந்தாலும் நல்லதே;* ***இது அல்லது -*** *இந்த நல்ல செயலுக்குப் பயன்படுதல் அல்லாமல்;* ***யான் பிறந்து பெறும்பேறு என்பது யாவதோ -*** *நான் பிறந்ததனால் அடையும் நற்பயன் என்பதுதான் எதுவோ? (ஒன்றுமில்லை).*

*தவா - கெடாத என்றுமாம் நன்றிது - நன்று+இது. இது என்பது அசைநிலை. இராமன் நல்லோரைக்காத்து அல்லோரை அழிக்க அவதாரமெடுத்த உண்மையைக் குறிப்பாக உணர்த்தியது எனலாம்.*

***2650. 'நிவந்த வேதியர்***
***நீவிரும், தீயவர்***
***கவந்த பந்தக்***
***களிநடம் கண்டிட,***
***அமைந்த வில்லும்***
***அருங் கணைத் தூணியும்***
***சுமந்த தோளும் பொறைத்***
***துயர் தீருமால்.***

***நிவந்த வேதியர் நீவிரும் -*** *பண்புகளால் உயர்ந்த தேவமோதும் அந்தணராம் நீங்களும்;* ***தீயவர் கவந்த பந்தக் களிநடம்கண்டிட -*** *கொடியோராம் அவ்வரக்கரின் தலையற்ற உடற்குறையின் கூட்டங்கள் மகிழ்ந்தாடும்கூத்தைக் கண்டு மகிழ;* ***அமைந்த வில்லும் -****கட்டமைந்த வில்லையும்;* ***அருங்கணைத்தூணியும் -*** *அரிய அம்புப் புட்டிலையும்;* ***சுமந்த தோளும் பொறைத் துயர் தீரும் -*** *இதுகாறும் தாங்கியிருந்த என் தோள்களும் சுமப்பதாகிய துன்பத்தைப் போக்குவதாகும்.* ***ஆல் -****அசை.*

*ஆயிரம் போர் வீரர் மடிந்த களத்தில் ஒரு கவந்தம் ஆடும் என்பர். இங்குக் கவந்தபந்தம் என்றமையால் பல கவந்தக் கூட்டம் ஆடும் வகையில் பல்லாயிரக்கணக்கான அரக்கர்களைக்கொல்வேன் என இராமன் உறுதி கூறினான். இதன் விளைவு கரதூடணப் போரிலும் இராம ராவணப்போரிலும் வெளிப்பட்டது. பொறைத்துயர் என்பது போர் செய்யாமல் வில்லையும் அம்பையும்வீணாகச் சுமக்கும் துன்பத்தைக் குறிக்கும். நீவிரும் என்ற உம்மையால் மற்றை யாவரையும் தழுவிநின்றது. இச்செய்யுளில் வகரமகரங்கள் எதுகை இனம் பற்றி வந்துள்ளன.*

***2651. 'ஆவுக்கு ஆயினும்***
***அந்தணர்க்கு ஆயினும்,***
***யாவர்க்கு ஆயினும்,***
***எளியவர்க்கு ஆயினும்,***
***சாவப்பெற்றவரே, தகை***
***வான் உறை***
***தேவர்க்கும் தொழும்***
***தேவர்கள் ஆகுவார்.***

***ஆவுக்கு ஆயினும் -*** *பசுக்களைக் காப்பதற்கானாலும்;* ***அந்தணர்க்கு ஆயினும் -*** *அந்தணர்களைக்காப்பதற்கானாலும்;* ***எளியவர்க்கு ஆயினும்-*** *ஏழைகளைக் காப்பதற்கானாலும்;* ***யாவர்க்கு ஆயினும் -****எவர்களைக் காப்பதற்கானாலும்;* ***சாவப் பெற்றவரே -*** *உதவிசெய்து அதனால் இறக்கப் பெற்றவர்களே;* ***தகை வான் உறை தேவர்க்கும் தொழும் தேவர்கள் ஆகுவார் -*** *பெருமை பொருந்திய விண்ணுலகில் வாழும் தேவர்களுக்கும் தொழுது வணங்கக்கூடியதேவர்களாக ஆவர்.*

*ஆ - பசு இது எல்லா உயிரினங்களிலும் புனிதமும் பயன் தருவதும் ஆதலால் எல்லாவற்றிலும் முன்வைக்கப் பெற்றது. "விடுநில மருங்கின் மக்கட்கெல்லாம், பிறந்த நாட் டொட்டுஞ் சிறந்ததன்தீம்பால், அறந்தரு நெஞ்சோடருள் சுரந் தூட்டும்" (மணிமே. ஆபுத்திரன் 51 - 54) என்பர்.ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும் என்று புறநானூறும் (9) குறிக்கும் அடியோடு இதனை ஒப்பிட்டுக்காணத்தக்கது. எளியர் - மெல்லியர் என்ற பொருளில் பெண்டிரையும் குறிக்கும். இத்தகையோர்க்குஉதவி செய்வதால் இறந்தோர் தேவர்க்குள்ளும் சிறந்த தேவராவர். இப்படலத்தை அடுத்துச் சடாயுகாண்படலம் வருவதும் இப் பாடலின் பொருட் சிறப்பை எண்ணிப் பார்க்க இடம் தருகிறது. ஆயினும்என்பது எண்ணிடைச் சொல்.*

***2652. 'சூர் அறுத்தவனும்,***
***சுடர் நேமியும்,***
***ஊர் அறுத்த***
***ஒருவனும், ஓம்பினும்,***
***ஆர் அறத்தினொடு அன்றி***
***நின்றார் அவர்***
***வேர் அறுப்பென்; வெருவன்மின்***
***நீர்' என்றான்.***

***சூர் அறுத்தவனும் -*** சூரபன்மனை வேல் கொண்டழித்த முருகக் கடவுளும்; ***சுடர் நேமியும் -*** பகைவரை ஒளியோடு கூடியசக்கரத்தால் அழிக்கும் திருமாலும்; ***ஊர் அறுத்த ஒருவனும் -*** திரிபுரர் ஊர்களை எரித்தழித்த சிவபெருமானும்; ***ஓம்பினும் -*** துணையாக நின்று காத்தாலும்; ***ஆர்அறத்தினொடு அன்றி நின்றார் -*** யார் தருமத்தொடு பொருந்தாமல் பாவ வழிகளில்நின்றார்களோ; ***அவர் வேர் அறுப்பென் -*** அக்கொடியவர்களை வேரோடு அழியச் செய்வேன்; ***நீர் வெருவன்மின் என்றான் -*** நீங்கள் அஞ்சாதீர்கள் என்று இராமன் உறுதிமொழிந்தான்.

*திரி மூர்த்திகளில் பிரமனை நீக்கிய காரணம் அவன் வேத நெறியில் எப்போதும்இருப்பதால் போரிட வாரான் என்பது கருத்து. முருகனைமுதலில் கூறியது தேவ சேனாபதியாக அவன்விளங்குவதாம். அகநானூற்றில் (59. 10. 11) சூர்மருங்கறுத்த சுடரிலை நெடுவேற் சினமிகு முருகன்எனக் குறிக்கப் பெறுவான். இராமன் திருமாலின் அவதாரம் எனினும் மனிதனாகஅவதரித்தற்கேற்பத் திருமாலைச் 'சுடர்நேமி' எனப் பிறன் போலக் கூறினான். ஊர், பொதுப்பெயராயினும் இது முப்புரங்களைக் குறிக்கிறது. அறத்தினோடன்றி நின்றார் என்பதால் அரக்கர்எனவும் பொருள் கொள்வர் தண்டகாரண்ய முனிவர்க்கு அபயமளித்து ஆதரித்தது காப்பிய நோக்காம் சரணாகதிக்குத்துணை செய்கிறது. சுடர்நேமி - வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.*

***2653. உரைத்த வாசகம் கேட்டு***
***உவந்து ஓங்கிட,***
***இரைத்த காதலர்,***
***ஏகிய இன்னலர்,***
***திரித்த கோலினர்,***
***தே மறை பாடினர்;***
***நிருத்தம் ஆடினர்;***
***நின்று விளம்புவார்.***

***உரைத்த வாசகம் கேட்டு -*** இவ்வாறு இராமன் கூறிய அபய மொழிகளைக் (அம்முனிவர்கள்) கேட்டு; ***உவந்து ஓங்கிட -***மகிழ்ச்சிப் பெருக்கு மீதூர; ***இரைத்த காதலர் -*** பொங்கி எழுந்த அன்பினை உடையவர்களும்; ***ஏகிய இன்னலர் -*** துன்பத்தை நீங்கியவர்களும்;***திரித்த கோலினர்-*** (கையால்) சுழற்றிய தண்டங்களை உடையவர்களும்;***தேமறை பாடினர் -*** தெய்வத்தன்மைவாய்ந்த வேதங்களைப் பாடினவர்களும்; ***நிருத்தம் ஆடினர் -*** கூத்தாடினவர்களுமாகி; ***நின்று விளம்புவார் -*** இராமன் முன்நின்று கூறுவார்கள்.

*இரைத்த - மேலோங்கி ஒலித்த என்றுமாம். ஏகிய இன்னலர் என்ற தொடரை 'அருங்கேடன்'என்பது கோலக் கொள்க. இன்னல் ஏகியவர் எனப் பிரித்துக் கூட்டுவாரும் உளர். கோல்திரித்தல், மறை பாடல், நிருத்தமாடல் என்பவை பெருமகிழ்வு கொண்ட நிலையைக் காட்டும்'ஆடினர், பாடினர், அங்கும் இங்குமாய் ஓடினர்; உவகைமா நறவு உண்டு ஓர்கிலார்' (193) எனப் பாலகாண்டத் திரு அவதாரப் படலவரி இந்நிலையைக் காட்டும். கோல் முனிவர்க்குரிய திரிதண்டம்அல்லது ஏக*

*தண்டம். தேமறை என்பது இனிய வேதம்என்பர்.*

***2654. 'தோன்றல்! நீ***
***முனியின், புவனத் தொகை***
***மூன்று போல்வன***
***முப்பது கோடி வந்து***
***ஏன்ற போதும், எதிர்***
***அல; என்றலின்***
***சான்றலோ, எம்***
***தவப் பெரு ஞானமே'.***

**தோன்றல் -** *தலைவனே!;* **நீ முனியின் -** *நீ கோபம் கொண்டால்;* **மூன்றுபோல்வன -** *இந்த மூன்று லோகங்களைப் போல்வனவாகிய;* **முப்பது கோடி புவனத் தொகை வந்து-** *முப்பது கோடி உலகங்களுடைய கூட்டங்கள் (ஒரே காலத்தில் ஒருங்கே சேர்ந்து) வந்து;* **ஏன்ற போதும் -** *எதிர்த்தாலும்;* **எதிர் அல என்றலின் -** *(உனக்கு) ஈடல்ல என்ற தன்மையில்;* **எம் தவப் பெரு ஞானமே சான்றலோ -***எங்களுடைய மிகப் பெரிய தத்துவ ஞானமேசாட்சி அல்லவோ? (ஆம்).*

*முப்பது கோடி என்றது ஒன்றுக்குக் கோடியாகப் பெருகி வருதல். எல்லையற்ற பெருக்கத்தைக்கோடி என்பது இலக்கிய வழக்கு. நீ போர் செய்யுமுன் பகைவர் மீது கொள்ளும் சீற்றமே அவர்கள்வேரோடு அழிய வகை செய்யும். கடவுளின் பேராற்றலைத் தவம் செய்து பெற்ற ஞானத்தாலே அறியஇயலும் என்பார். தவப்பெரு ஞானம் - ஐயம் திரிபில்லாத மிகப்பெருமைவாய்ந்த தத்துவ ஞானம்.புவனம் மூன்று - சுவர்க்கம். மண்ணுலகம், பாதாளம். தோன்றல் - அண்மை விளி.*

***2655. 'அன்னது ஆகலின், ஏயின***
***ஆண்டு எலாம்,***
***இன்னல் காத்து இங்கு இனிது***
***உறைவாய்' எனச்***
***சொன்ன மா தவர் பாதம்***
***தொழுது, உயர்***
***மன்னர் மன்னவன்***
***மைந்தனும் வைகினான்.***

**அன்னது ஆகலின் -** *(நின் பெருமை) அத்தகைய தாயிருத்தலால்;* **ஏயின ஆண்டு எலாம் -** *(நீ காட்டில்இருக்குமாறு) அமைந்த ஆண்டுகள் எல்லாம்;* **இன்னல் காத்து இங்கு இனிது உறைவாய் -***எங்களுக்குத் துன்பம் வராமல் காத்து இந்தத் தவ வனத்தில் இனிது மகிழ்ந்து வாழ்வாயாக;* **எனச் சொன்ன மாதவர் பாதம் தொழுது -** *என்று கூறிய பெருந்தவ முனிவர்களின் அடிகளை வணங்கி;* **உயர் மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினான் -** *சிறந்த அரசர்க்கரசனாகிய தயரதசக்கரவர்த்தியின் மகனாம் இராமனும் தங்கியிருந்தான்.*

*ஏயின - சிற்றன்னை கைகேயி ஏவினை என்றுமாம். இன்னல் காத்து என்பது துன்பம் வராமல்தடுத்தல். உயர் என்ற அடையை மன்னர்க்கும், மன்னவனுக்கும் மைந்தனுக்கும் கூட்டிப் பொருள்காணலாம். மைந்தனும் என்று கூறியதால் சீதையும் இலக்குவனும் வைகினர் என்பது தானே பெறப்பட்டது.*

*இராமன் பத்தாண்டுகள் தண்டக வனத்தில் தங்கியிருத்தல்*

***2656. ஐந்தும் ஐந்தும் அமைதியின்***
***ஆண்டு, அவண்,***
***மைந்தர் தீது இலர்***
***வைகினர்; மா தவர்***
***சிந்தை எண்ணி, 'அகத்தியற்***
***சேர்க' என,***
***இந்து-நன்னுதல்***
***தன்னொடும் ஏகினார்.***

***மைந்தர் -*** *இராமலக்குவர்கள்;* ***அவண் -*** *அவ்விடத்தில்;* ***ஐந்தும்ஐந்தும் ஆண்டு -*** *பத்துஆண்டுகள்;* ***தீது இலர் அமைதியின் வைகினர் -*** *ஒரு துன்பமுமில்லாமல் மனநிறையுடன்தங்கியிருந்தனர்;* ***மாதவர் சிந்தை எண்ணி -*** *பெருந்தவத்தினராகிய அம்முனிவர்கள்மனத்தில் ஆலோசித்து;* ***'அகத்தியற் சேர்க' என -*** *அகத்திய முனிவரைச் சேர் வீராகஎன்று சொல்ல;* ***இந்து நன்னுதல் தன்னொடும் ஏகினார் -*** *பிறை மதி போன்ற நல்லநெற்றியையுடைய சீதையுடன் புறப்பட்டனர்.*

*ஒவ்வொரு முனிவர்கள் ஆச்சிரமத்திலும் சிலசில திங்கள்கள் தங்கியிருக்கப்பத்தாண்டுகள் கழிந்தன. வான்மீகத்தில் ஆச்சிரமங்களில் முறையே 13, 12, 4, 5, 7, 1, 1/4,3/4, 3, 8 ஆகிய மாதங்கள் என்று பத்து ஆச்சிரமங்களில் ஐந்து ஆண்டுகளை ஒரு வட்டத்தில்கழித்துப் பின் அதேபடி இரண்டாம் வட்டத்தையும் கழித்தனன் எனக் காணப்பெறும். மைந்தர் -வலியோர் எனவும் ஆம். அகத்தியரிடமிருந்து இராவண வதத்திற்கு வில், அம்பு, அம்புப் புட்டில்முதலிய பெற வேண்டும் எனஇருத்தலின் சிந்தை எண்ணி அகத்தியற் சேர்க என்றனர். பத்து ஆண்டுக் காலச் செய்தியை ஒரே பாடலில் காட்டிக் காப்பியத்தில் கால விரைவுணர்த்தும் பாங்கைக் காணமுடிகிறது. இதுவரை உள்ள பாடல்கள் தண்ட காரண்யப் படலம் என்றும் இனி வருவன அகத்தியப் படலம்எனவும் சில சுவடிகளில் காணப் பெறும்.*

*அகத்தியன் பால் செல்லும் இராமனைச் சுதீக்கணன் உபசரித்தல்*

***2657. விடரகங்களும், வேய்***
***செறி கானமும்,***
***படரும் சில் நெறி***
***பைப்பய நீங்கினார்;***
***சுடரும் மேனிச் சுதீக்கணன்***

***என்னும் அவ்***
***இடர் இலான் உறை சோலை***
***சென்று, எய்தினார்.***

***விடரகங்களும் -*** *மலை வெடிப்புள்ள பள்ளங்களிலும்;* ***வேய் செறி கானமும் -*** *மூங்கில்கள் அடர்ந்தகாடுகளிலும்;* ***படரும் சில் நெறிபைப்பய நீங்கினார் -*** *தொடர்ந்து செல்லும் சிறிய வழிகளை மெல்ல மெல்லக் கடந்து சென்று;* ***சுடரும் மேனிசுதீக்கணன் என்னும் -****ஒளி வீசும் மேனியை உடைய சுதீக்கணன் என்னும்;* ***அவ் இடர்இலான்உறை சோலை சென்று எய்தினார் -*** *துன்பங்களற்ற அந்த முனிவர் வாழும் தவச் சோலையைப்போய் அடைந்தனர்.*

*காட்டின் வழியை விடரகங்களும், வேய் செறி கானமும் படரும் சில் நெறி எனவும்விளக்கினார். சுதீக்கணன் - உக்கிரமான தவமுடைமையால் பெற்ற காரணப் பெயர். தவச் செறிவால்உடல் ஒளிமயமாயிருந்தது. தவத்தால் மெய்யுணர்வுற்று, இருவகைப் பற்றறவே பிறவித் துன்பம்நீங்கியதால் 'இடர் இலான்' என்றார். சுதீக்கணன், பைப்பய என்பனவிகாரங்கள்.*

***2658. அருக்கன் அன்ன***
***முனிவனை அவ் வழி,***
***செருக்கு இல் சிந்தையர்,***
***சேவடி தாழ்தலும்,***
***'இருக்க ஈண்டு' என்று,***
***இனியன கூறினான்;***
***மருக் கொள் சோலையில்***
***மைந்தரும் வைகினார்.***

***செருக்கு இல் சிந்தையர் -*** *கருவமில்லாத மனத்தை உடைய இராமலக் குவர்கள்;* ***அவ்வழி அருக்கன் அன்ன முனிவனை -*** *அவ்விடத்தில் கதிரவன் போல் ஒளியுடைய சுதீக்கண முனிவரின்;****சேவடி தாழ்தலும் -*** *செம்மையான திருவடிகளைப் பணிந்து வணங்கவும்;****ஈண்டு இருக்க என்று இனியன கூறினான் -*** *'இங்கு இருப்பீர்களாக' என்று இனிய சொற்களைக் கூறினான்;* ***மைந்தரும் மருக்கொள்சோலையில் வைகினார் -*** *இராமலக்குவர்களும் மணம் நிறைந்த அந்தத் தவச் சோலையில்தங்கினார்கள்.*

*அருக்கன் - பேரொளி பெற்றமைக்கும் அஞ்ஞான இருள் அகற்றுதற்கும் உவமை. முன்னர்ச்'சுடரும் மேனி' (2657) என்றதற் கேற்ப இங்கே அருக்கனை உவமை கூறினார். செருக்கு - யான் எனதுஎன்னும் மதம். 'யானென தென்னும் செருக்கு' (குறள். 346). இராமலக்குவர் தாம் சக்கரவர்த்திமைந்தர் என்ற செருக்கின்றிப் பணிவாக இன்மொழி பேசுபவர் எனப்பட்டனர். சரபங்கர் உரைப்படிஇராமன் முதலானோர் சுதீக்கணர் சாலையில் முதலில் ஒரு முறை தங்கிப் பின் பத்து ஆண்டுகள்வேறுவேறு ஆச்சிரமங்களில் தங்கி மீண்டும் ஒருமுறை இவரைக் கண்டார் எனவான்மீகம்கூறும்.*

***2659. வைகும் வைகலின்,***
***மாதவன், மைந்தன்பால்***
***செய்கை யாவையும் செய்து,***
***'இவண், செல்வ! நீ***
***எய்த யான் செய்தது***
***எத் தவம்?' என்றனன்;***
***ஐயனும், அவற்கு***
***அன்பினன் கூறுவான்.***

***வைகும் வைகலின் -*** *(அவ்வாறு) தங்கியிருக்கும் பொழுது;* ***மாதவன் -*** *பெருந்தவம் செய்த சுதீக்கணன்;* ***மைந்தன் பால் -*** *இராமனிடத்தில்;* ***செய்கை யாவையும் செய்து -*** *செய்ய வேண்டிய உபசாரங்கள் எல்லாவற்றையும் செய்து;* ***'செல்வ! இவண் நீ எய்த யான் செய்தது எத்தவம்?'என்றனன் -*** *செல்வமுடையவனே! இங்கு நீ எழுந்தருளும் படி நான் செய்தது எத்தகையதவமோ என்று சொன்னான்;* ***ஐயனும் அவற்கு அன்பினன் கூறுவான் -*** *இராமனும் அம்முனிவனுக்கு அன்புடையவனாய்ச் சொல்லுவான்.*

*வைகல் - வேளை என்றுமாம் செல்வன் - அரசச் செல்வமுடையவன்; இம்மை மறுமை மோட்சச்செல்வங்களை அருள்பவன் என்றுமாம். தம்மிடம் வந்தவரிடம் இன்மொழி பேசி மகிழ்வுறச்செய்தல் தலையாய செய்கையாம்.*

***2660. 'சொன்ன நான்முகன்தன்***
***வழித் தோன்றினர்***
***முன்னையோருள், உயர்***
***தவம் முற்றினார்***
***உன்னின் யார் உளர்?***
***உன் அருள் எய்திய***
***என்னின் யார் உளர்,***
***இற் பிறந்தார்?' என்றான்.***

***சொன்ன நான்முகன் தன்வழித் தோன்றினர் முன்னையோருள் -*** *சிறப்பாகக் கூறப் பெற்ற பிரமனின் வமிசத்தில் பிறந்தவர்களாகிய முதன்மை பெற்ற பண்டையமுனிவர்களுள்;* ***உயர்தவம் முற்றினார் உன்னின் யார் உளர் -*** *சிறந்த தவத்தை முற்றச்செய்தவர் உன்னைப் போல வேறு எவர் இருக்கின்றனர்?;* ***உன் அருள் எய்திய இற்பிறந்தார்என்னின் யார் உளர் என்றான் -*** *உன் அருளை அடைந்த இல்வாழ்க்கையில் தோன்றினோர் என்னைப் போலப் பேறு பெற்றவர் வேறு எவர் உள்ளார் எனக் (இராமன்) கூறினான். சொன்ன - ஆன்றோர் யாவரும் புகழ்ந்து கூறிய என்றுமாம். நான்முகன் வழியில்தோன்றியவர் அந்தணர் ஆவர். உயர்தவம் முற்றினார் என்ற தொடர் 'சுதீக்கணன்' என்றபெயரினை (2657) விளக்கி நிற்கிறது. இற்பிறந்தார் - நற்குடியில் பிறந்து இல்லறத்திலேவாழ்பவர்; உன்னின் - ஆலோசித்தால் என்றுமாம், முனிவரின் அருளைப் பெற்றதால் என்னினும் பேறு பெற்றவர் யாருமில்லை என்றான், தற்புகழ்ச்சியன்று.* *3*

***2661. உவமை நீங்கிய தோன்றல்***
***உரைக்கு, எதிர்,***
***நவமை நீங்கிய நல்***
***தவன் சொல்லுவான்;***
***'அவம் இலா விருந்து ஆகி,***
***என்னால் அமை***
***தவம் எலாம் கொளத்***
***தக்கனையால்' என்றான்.***

**உவமை நீங்கிய தோன்றல் உரைக்கு -** *உவமை கூறுவதற்கு எதுவுமில்லாத தலைவனாம் இராமன் கூறிய மொழிக்கு;* **எதிர் நவமை நீங்கிய நல்தவன் சொல்லுவான் -** *மறு மொழியாகப் புதுமை நீங்கிய (பழைய) தவத்தை உடைய சுதீக்கணமுனிவர் பின்வருமாறு கூறினார்;* **அவம் இலா விருந்து ஆகி -** *வீண் போகாத நல்லவிருந்தினன் ஆகி;* **என்னால் அமை தவம் எலாம் கொளத் தக்கனை என்றான் -** *என்னால்இதுவரை செய்தமைந்துள்ள என் தவப் பயன்கள் எல்லாவற்றையும் நீ ஏற்றுக் கொள்ளத்தக்கவன்ஆவாய் என்று கூறினான்.* **ஆல் -** *அசை.*

*தமது நற்செயல்களைப் பெரியோர் ஆண்டவனுக்குக் காணிக்கை ஆக்கும் சாத்துவிகத் தியாகம்இது எனப்படும். நவமை என்பது வட சொல்லடியாக வந்த புதுச் சொல்லாக்கம். விருந்தினர்க்குரியதகுதியாவது அறிவு ஒழுக்கங்களில் உயர்ந்து நிற்றல் - கொளத் தக்கணை' எனப் பாடம் கொண்டு -காணிக்கை (தட்சணை)யாக ஏற்றுக் கொள்க என்பர்.*

*முதனூலாம் வான்மீகத்தில் சுதீக்கணர் தாம் தவம் செய்து சம்பாதித்த இந்த உலகில்இராமன் சீதையோடும் இலக்குவனோடும் இன்பமாக இருக்குமாறு கூறுவார். இராமனோ தான் சுயமாகவேஉலகங்களைச்சம்பாதித்துக் கொள்வதாகக் கூறித் தாங்கள் வசித்தற்குரிய இடத்தை மட்டும் ஏற்பாடு செய்யுமாறு வேண்டுகிறான். கம்பரோ அகத்தியர் ஆச்சிரமத்திற்குச் செல்லும் வழியில்சுதீக்கணனைச் சந்தித்ததாகக் கொண்டு வரலாற்றைக் கூறுகிறார்.*

***2662. மறைவலான் எதிர்,***
***வள்ளலும் கூறுவான்:***
***'இறைவ! நின் அருள் எத்***
***தவத்திற்கு எளிது?***
***அறைவது ஈண்டு ஒன்று;***
***அகத்தியற் காண்பது ஓர்***
***குறை கிடந்தது, இனி'***
***எனக் கூறினான்.***

**வள்ளலும் மறைவலான் எதிர் கூறுவான் -** *இராமனும் வேதங்களில் வல்லவராம்சுதீக்கணர் முன் பின்வருமாறு சொல்வான்;* **இறைவ நின் அருள் எத்தவத்திற்கு எளிது -** *தலைவரே! உன் கருணை எத்தகைய தவத்தினால் பெறக்கூடிய எளிமை உடையது?;* **அறைவது ஈண்டு ஒன்று -** *நான்தெரிவிப்பது இங்கு ஒன்றுள்ளது*

*(யாதெனில்);* ***இனி அகத்தியற் காண்பது ஓர் குறைகிடந்தது எனக் கூறினான்-*** *இப்பொழுது அகத்திய முனிவரைச் சென்று தரிசிப்பது என்ற ஒருமனக்குறை உள்ளது என்று சொன்னான்.*

*'உம் அருளே எத் தவத்தாலும் அடைதற்கு எளிதன்று. அதனை உம்மால் நான் எளிதில்அடைந்தேன்' என்று கூறினான் இராமன். வான்மீகத்தில் இராமன் 'என் முயற்சியாலேயேதவப்பயனைப் பெற விரும்புகிறேன் என்ற கருத்தைக் கொண்டே 'நின் தவம் எத்தவத்திற்கு எளிது'எனக் கூறியதாகவும் கொள்வர். குறை - இன்றியமையாதது. நிறைவுறாதது.*

***2663. 'நல்லதே நினைந்தாய்; அது,***
***நானும் முன்***
***சொல்லுவான் துணிகின்றது;***
***தோன்றல்! நீ***
***செல்தி ஆண்டு; அவற்***
***சேருதி; சேர்ந்தபின்,***
***இல்லை, நின்வயின்***
***எய்தகில்லாதவே.***

***தோன்றல் நீ நல்லதே நினைந்தாய் -*** *சிறந்தவனே! நீ நல்ல செயலையே எண்ணினாய்;* ***அது நானும் முன் சொல்லுவான் துணிகின்றது -*** *அதனையே நான் கூட முன்பே உனக்குச் சொல்லும்படி நிச்சயித்தது;* ***ஆண்டு செல்தி -*** *அவ்வகத்தியர் ஆச்சிரமத்திற்குப் போவாயாக;* ***அவற் சேருதி -*** *அம்முனிவனைச்சேர்வாயாக;* ***சேர்ந்தபின் இல்லை நின்வயின் எய்தகில்லாதவே -*** *அம்முனிவனை அடைந்த பின்னர் உன்னிடத்தில் அடையாத பேறுகள் ஒன்றுமில்லை.*

*நல்லதே நினைத்தாய் என்றது அகத்தியர் அருளும் படைக்கலன்களைப் பெறுவதையும் அவற்றால்இராவணனை அழிக்கப் போவதையும் சுதீக்கணர் ஞானக் கண்ணால் அறிந்து கூறியது. இதன் விளக்கமாகஅடுத்த பாடலில் (2664) 'சேருதல் செவ்வியோர் நன்று தேவர்க்கும், யாவர்க்கும் நன்று' என்ற அடிகள் உள்ளன.*

*துணிகின்றது என்பது கால வழுவமைதி. செல்தி என்ற வினைமுற்றை வினையெச்சப் பொருளில்கொண்டு, சென்று சேருதி எனப் பொருள்கொள்வர்.*

***2664. 'அன்றியும் நின்***
***வரவினை ஆதரித்து,***
***இன்றுகாறும் நின்று***
***ஏமுறுமால்; அவற்***
***சென்று சேருதி;***
***சேருதல், செவ்வியோய்!***
***நன்று தேவர்க்கும்; யாவர்க்கும்***
***நன்று' எனா,***

***அன்றியும் நின் வரவினை ஆதரித்து -*** *அல்லாமலும் உன்னுடைய வருகையை விரும்பி;* ***இன்று காறும் நின்று ஏமுறுமால் -*** *இன்று வரையிலும் எதிர்பார்த்து இருந்து மகிழ்ச்சி அடைவார் ஆதலால்;****அவற் சென்று சேருதி -*** *நீ போய் அகத்தியரை அடைவாயாக;****செவ்வியோய் சேருதல் தேவர்க்கும் நன்று -*** *சிறந்தவனே! அகத்தியரை அடைதல் விண்ணவர்க்கும் நல்லதே;* ***யாவர்க்கும் நன்று எனா -****மற்றெல்லார்க்கும் நல்லதே ஆகும் என்று கூறி,*

*இராமனின் வரவு இராவணாதிகளை அழித்து யாவர்க்கும் நன்மை புரியும் என மகிழ்வுற்றார்.அரக்கரின் அழிவுக்கு உதவும் கருவிகளை இராமன் பெற வருவான் என எண்ணிய மகிழ்ச்சியுமாம்.செவ்வியோய் - அழகுடையோய் என்றுமாம். ஏமுறல் - ஏக்கமடைதல் என்று பொருள் கூறி இராமன்எப்போது வருவான் என எதிர் பார்த்து ஏங்கினார் என்றும் உரைப்பர். முன்னுள்ள பாடலில்(2663) கூறிய 'நல்லதே நினைந்தாய்' என்றதனை மேலும் விரித்துக்கூறியதாம்.*

*இராமன் அகத்தியனைச் சேர்தல்*

***2665. வழியும் கூறி, வரம்பு***
***அகல் ஆசிகள்***
***மொழியும் மா தவன் மொய்ம்***
***மலர்த் தாள் தொழா,***
***பிழியும் தேனின்***
***பிறங்கு அருவித் திரள்***
***பொழியும் சோலை***
***விரைவினில் போயினார்.***

***வழியும் கூறி வரம்பு அகல் ஆசிகள் மொழியும் மாதவன் மொய்ம் மலர்த்தாள் தொழா -*** *அகத்தியர் ஆச்சிரமத்திற்குச் செல்லும் வழியை விளக்கமாகச் சொல்லி எல்லையற்ற ஆசிமொழிகளைக் கூறும் பெருந் தவத்தோனாம் சுதீக்கணரின் வண்டுகள் மொய்க்கும் தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கி;* ***பிழியும் தேனின் பிறங்கு அருவித்திரள் -*** *அடையிலிருந்துபிழியப்படும் தேன் ஒழுக்குப் போன்று விளங்கிய அருவித் தொகுதிகள்;* ***பொழியும் சோலைவிரைவினில் போயினார் -****நீரைச் சொரியும் தவச் சாலையிலிருந்து (இராமன் முதலோர்)விரைவாகச் சென்றனர். தேனின் பிறங்கு அருவித்திரள் என்பதைத் தேனே அருவியாக விளங்கும் மலர்வனம் எனக்கூறுவர். அங்குள்ள அருவிகளில் தேன் பெருக்கு இடையறாது ஓடிக்கொண்டிருக்கும் என்பர்.சுதீக்கணரின் சோலை பல்வேறு இனிய பழங்களையும் மலர்களையும் செடி, கொடிகளையும் கொண்டது எனவான்மீகம் கூறும். இச்சோலையை அகத்தியர் சோலை எனவும் கூறுவர். செல்லும் வழியில்அகத்தியரின் உடன்பிறப்பாம் சுதர்சன முனிவர் தவவனம் உள்ளது. அதற்குத் தெற்கே அகத்தியர்ஆச்சிரமம் உள்ளது எனச் சுதீக்கணர் இராமனிடம் கூறியதாகவும் வழியில் சுதர்சனரை இராமன்முதலியோர் பணிந்து சென்றதாகவும் முதனூல் கூறும்.*

***2666. ஆண்தகையர் அவ் வயின்***
***அடைந்தமை அறிந்தான்;***

***ஈண்டு, உவகை வேலை துணை***
***ஏழ் உலகம் எய்த,***
***மாண்ட வரதன் சரண் வணங்க,***
***எதிர் வந்தான்-***
***நீண்ட தமிழால் உலகை***
***நேமியின் அளந்தான்.***

***நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான் -*** *நீண்ட காலம் உள்ள தமிழ்மொழியால் திருமால் மூவுலகை அளந்தது போல உலகை அளந்தவனாகியஅகத்திய முனிவர்;* ***ஆண்தகையர் அவ்வயின் அடைந்தமை அறிந்தான் -*** *இராமலக்குவர்கள்அந்த இடத்தைச் சேர்ந்ததை அறிந்தவனாகி;* ***ஈண்டு உவகை வேலை -*** *மேன் மேல் பொங்கும் மகிழ்ச்சியாம் கடல்;* ***துணை ஏழ் உலகம் எய்த -*** *ஈரேழ் (பதினான்கு) உலகங்களையும்அடையும் வண்ணம்;* ***மாண்ட வரதன் சரண் வணங்க எதிர் வந்தான் -*** *மாட்சிமைப்பட்டவரங்களை அருளும் இராமன் தம் திருவடிகளில் வீழ்ந்து வணங்க எதிரே வந்தார்.*

*சிவபெருமான் அகத்தியற்கு அருளியதாலும் தொன்று தொட்டு அடியார் பலர் இறைவனைத் துதித்ததுஇம்மொழியினால் ஆதலாலும் 'நீண்ட தமிழ்' என்றார். சிவபெருமான் இலக்கணம் உபதேசித்துத்தெற்கே அதை வளர்க்கச் செய்ததால் அகத்தியன் தமிழால் உலகை அளந்தான் என்றார்.*

*நேமி - திருமால். அவன் தன் திருவடியால் நீண்ட உலகை அளந்தது போல் தமிழால்அகத்தியர் இவ்வுலகை அளந்தார். அளந்தமை என்பது அறிவுச் செல்வங்களை எல்லாம் அம்மொழியில்உண்டாக்கியது. மக்கள் அறிவன யாவற்றையும் தமிழ் கொண்டே அறியுமாறு அதனை வளமுறச் செய்தார்.பதினான்கு உலகங்களும் உவகை எய்தியது என்பது இனிஇராவணனால் பட்ட துன்பம் இராமனால் தீரப்போகிறது என்று எண்ணியதால் ஆகும். அல்லது முனிவர் கொண்ட மகிழ்ச்சி எல்லாஉலகங்களிலும்பரவியது என்பர். மாண்ட வரதன என்பதை அகத்தியர்க்காக்கி அவர் திருவடியில் இராமன் வணங்கஎன்றும் பொருள் காண்பர். நேமி - ஆகுபெயர். இன் - உவம உருபு காப்பியத் தலைமைக்கேற்ப அகத்தியனைத் திருமாலுடன்ஒப்பிட்டார். இப்பாடல் முதல் இப்படல இறுதி வரை உள்ளவை சந்த இன்பம்கொண்டவையாம்.*

*அகத்தியன் பெருமை*

***2667. பண்டு, 'அவுணர் மூழ்கினர்;***
***படார்கள்' என வானோர்,***
***'எண் தவ! எமக்கு அருள்க'***
***எனக் குறையிரப்பக்***
***கண்டு, ஒரு கை வாரினன்***
***முகந்து, கடல் எல்லாம்***

***உண்டு, அவர்கள் பின், 'உமிழ்க'***
***என்றலும், உமிழ்ந்தான்.***

*(அவ்வகத்தியர்)* ***வானோர் பண்டு அவுணர் மூழ்கினர் படார்கள் என -*** *தேவர்கள் முன்னொருகாலத்தில் 'அசுரர்கள் கடலில் மூழ்கி ஒளிந்து கொண்டனர். ஆதலால் அவர்கள் இனி அழியமாட்டார்கள் எனக் கருதி;* ***எண்தவ எமக்கு அருள்க எனக் குறையிரப்ப -*** *மதிக்கத் தக்கதவம் செய்த முனிவனே! எங்களுக்கு அருள்புரிவீராக' எனத்தம் குறையைச் சொல்லிக் கெஞ்சிக்கேட்க;* ***கண்டு கடலெல்லாம் ஒரு கைவாரினன் முகந்து உண்டு -*** *அவர்கள் படும் துன்பத்தைஅறிந்து ஏழுகடல்களிலுள்ள நீரை எல்லாம் ஒரு கையால் அள்ளி எடுத்துப் பருகி;* ***பின் அவர்கள் உமிழ்க என்றலும் உமிழ்ந்தான் -*** *பிறகு அவ்வானோர் 'அக் கடல் நீரை உமிழ்ந்தருள்க'என்று வேண்டியதும் மீண்டும் உமிழ்ந்து அக்கடல்களை நீரால் நிரப்பினான்.*

*தேவர்களின் பகைவரான விருத்திராசுரன் முதலிய அரக்கர்கள் கடலில் ஒளிந்து கொள்ளஇந்திரன் முதலியோர் அகத்தியரை அடைந்து தம்மைக் காக்க வேண்டினர். அவர் கடல் நீரைக்குடித்ததும் அவ்வரக்கர்கள் வெளிப்பட இந்திரன் அவர்களை அழித்தான். பின் தேவர்கள்விருப்பப்படி தாம் பருகிய நீரை உமிழ்ந்து கடல்களை மீண்டும் நிரப்பினார். முன்னர் அரக்கர்களை அழிக்கத் தம் செயலால் உதவிய அகத்தியர் இப்போது இராமனுக்குப் படைக்கல முதவிஅரக்கர்களை அழிக்க உதவப் போகிறார் என்ற குறிப்புப் புலனாகிறது.*

***2668. தூய கடல் நீர் அடிசில் உண்டு,***
***அது துரந்தான்;***
***ஆய அதனால் அமரும் மெய்***
***உடையன் அன்னான்;***
***மாய-வினை வாள் அவுணன்***
***வாதவிதன் வன்மைக்***
***காயம் இனிது உண்டு, உலகின்***
***ஆர் இடர்களைந்தான்.***

***தூய கடல் நீர் அடிசில் உண்டு அது துரந்தான் -****தூய்மையான கடல்களின் நீர் முழுவதையும் உணவாக உண்டு அதனை மீண்டும் உமிழ்ந்த முனிவரும்;* ***ஆயஅதனால் அமரும் மெய் உடையன் அன்னான் -*** *அப்படிப்பட்ட செயலால் குறுகியது எனினும்விரும்பத்தக்க உடலை உடைய குறுமுனி என அத்தகையோரும்;* ***மாய வினை வாள் அவுணன் வாதவி தன்வன்மைக் காயம் இனிது உண்டு -*** *வஞ்சகச் செயல்களையுடைய வாட்படையுடைய அரக்கனாம் வாதாபிஎன்பவனின் வலிய உடலை மகிழ்ந்து உண்டு;* ***உலகின் ஆர் இடர் களைந்தான் -*** *உலகமக்களின் கொடிய துன்பத்தைப் போக்கியவரும் ஆவார்.*

*அகத்தியர் கடல்நீரை உண்ட செய்தி மீண்டும் உரைக்கப் பெறுகிறது. இதனால் முனிவரின்செயற்கரும் செயல் நினைவூட்டப் பெறுகிறது. வாள் அவுணன் - வாள் போல் கொடுந்தொழில் புரியும்அசுரன். வாதவி - வாதாபி என்ற வட சொல்லின் தமிழாக்கம்.*

***வாதாபி வரலாறு***

*இல்வலன் வாதாபி என்ற இரு அசுரர்களாம் உடன்பிறந்தோர், முனிவர்களையும் அந்தணர்களையும்சிரார்த்தம் என வரவழைத்து ஆட்டின் உருவு கொண்ட தன் தம்பி வாதாபியை இல்வலன் சமைத்துவிருந்திடுவார். அவர்கள் அதனை உண்டபின் 'வாதாபி வெளியேவா' என இல்வலன் அழைத்ததும் தன்னைஉண் டவர் வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிரோடு வாதாபி வெளியே வருவான். பின் இருவரும்இறந்த விருந்தினரின் ஊனை உண்டு மகிழ்வர். இவ்வாறு பல அந்தணர்களையும் முனிவர்களையும் அவர்கள் உண்டு வரும் காலத்தில் அங்கு வந்த அகத்தியர்க்கும் அவ்வாறே விருந்திட்டழைத்தபோதுமுனிவர் தம் தவ வலிமையால் அவனைத் தம் வயிற்றிலேயே செரிக்குமாறு செய்தார். அது கண்டுதம்மை அழிக்க வந்த இல்வலனையும் அழித்தார்.*

***2669. யோகமுறு பேர் உயிர்கள்தாம்,***
***உலைவுறாமல்***
***ஏகு நெறி யாது?' என, மிதித்து***
***அடியின் ஏறி;***
***மேக நெடு மாலை தவழ் விந்தம்***
***எனும் விண் தோய்***
***நாகம்அது நாகம் உற, நாகம்***
***என நின்றான்.***

***யோகமுறு பேர்உயிர்கள் தாம் -*** *யோக மார்க்கத்தில் நிலை நிற்கும் பெரும் - முனிவர்கள் தாம்;* ***உலைவுறாமல் ஏகு நெறியாதுஎன -****துன்பம்அடையாமல் (இவ்விந்த மலையைக்) கடந்து போகும் வழி எது என்று (தேவர்கள்) அந்த அகத்தியரைக்கேட்க;* ***அடியின் மிதித்து ஏறி -****தம் காலடியால் மிதித்து அம்மலை மேல் ஏறி;* ***மேகநெடுமாலை தவழ் விந்தம் எனும் -*** *பெரிய மேகங்கள் நீண்ட வரிசையில் படிந்துள்ள விந்தியமலை எனப்படும்;* ***விண் தோய் நாகம் அது -*** *வானம் அளாவி உயர்ந்த மலையானது;* ***நாகம்உற -*** *பாதாள உலகைச் சென்றடையும்படி ஆழ்ந்து போக;* ***நாகம் என நின்றான் -*** *ஒருயானை போலப் பெருமிதத்துடன் நின்றான்.*

*யோகமுறு பேர் உயிர் என்பதற்கு முயற்சியை மேற்கொண்டு வாழும் பெரும் கணக்கில் உள்ளஉயிர்கள் என்பர். நாகம் - பல பொருள் குறித்த ஒரு சொல். விசுவாமித்திரர் விருப்பப்படிஇராமன் சீதையை மணக்க வேண்டி வில்லை ஒடிக்க எழுந்து சென்ற போது 'நாகமும் நாகமும் நாணநடந்தான்' (697) என்ற அடியையும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இது சொல் பின் வருநிலை அணி.*

***அகத்தியர் விந்தம் அடக்கிய வரலாறு:***

*விந்திய மலை மற்றெல்லா மலைகளிலும் தான் உயரக் கருதி வானளாவி உயர்ந்தது. அதனால்கதிரவன், மதி, விண்மீன்கள் ஆகியவை வானில் செல்லும் வழி தடுக்கப் பெற்றது. அது கண்டுதேவரும் முனிவரும் அகத்தியரை விந்தியமலையை அடக்குமாறு வேண்டினர். அவர் அம் மலையிடம் தான்வடக்கேயிருந்து தென்*

*திசைக்குச் சென்று மீளும் அளவு அவ்வாறே குறுகிக் கிடக்கக் கூறிச்சென்றார். அதுமுதல் அதன் வளர்ச்சி குன்றியது என்பது புராண வரலாறு.*

***2670. மூசு அரவு சூடு முதலோன்,***
***உரையின், 'மூவா***
***மாசு இல் தவ! ஏகு' எனவடாது***
***திசை மேல்நாள்***
***நீசம் உற, வானின் நெடு மா***
***மலயம் நேரா,***
***ஈசன் நிகர் ஆய், உலகு சீர்***
***பெற இருந்தான்.***

**மேல்நாள் வடாது திசை நீசம் உற -** *முன்னொரு காலத்தில் வடக்குத் திசை கீழே தாழ்ந்து போக;* **மூசு அரவு சூடு முதலோன் -** *நெருக்கமாகப் பல பாம்புகளை அணிகலன்களாகத் தரித்த சிவபெருமான்;* **மூவா மாசு இல் தவ -** *முதிர்ந்தும் தளராத குற்றமில்லாத தவத்தை உடைய அகத்தியனே!;* **ஏகு என -** *நீ தென்திசைக்குச் செல்வாயாக என்று கூற;* **உரையின் -** *அக்கட்டளைப்படி;* **வானின் நெடுமாமலயம் நேரா -** *விண்ணளவு உயர்ந்த நீண்ட பெரிய மலயமலையை அடைந்து;* **ஈசன் நிகர் ஆய்உலகு சீர் பெற இருந்தான் -** *சிவபெருமானுக்கு ஒப்பாக உலகம் தாழாது சமனிலை அடைய அங்குத்தங்கியிருந்தான். மூசு - வலிய, கொடிய எனலுமாம். வடாது - மரூஉ மொழி, நீசம் - தாழ்வு நீசம் எனும்நிலைகள் கிரககதிகள் குறித்துச் சோதிட நூல்கள் கூறும். மாமலயம் இமயமலைக்கு நிகராகவும்,அகத்தியர் சிவபெருமானுக்குச் சமமாகவும் கூறியது புராண வரலாற்றைச் சுட்டும்.*

***அகத்தியர் மலையம் சென்ற வரலாறு***

*உமையவள் திருமண காலத்தில் இமயத்தில் சிவன் முதலியோர்யாவரும் கூடியிருந்ததால் வடதிசைதாழத் தென் திசை உயர்ந்தது. அது கண்டு சிவபெருமான் அகத்தியரை நோக்கித் தெற்கே சென்று இருதிசைகளையும் சமனுறச் செய்யுமாறு கூறினார். அகத்தியரும் தெற்கே மலைய மலையில் வீற்றிருக்கஇறு திசையும் சமன் ஆயின.*

***2671. உழக்கும் மறை நாலினும், உயர்ந்து***
***உலகம் ஓதும்***
***வழக்கினும், மதிக் கவியினும்,***
***மரபின் நாடி,-***
***நிழல் பொலி கணிச்சி மணி நெற்றி***
***உமிழ் செங் கண்***
***தழல் புரை சுடர்க் கடவுள்***
***தந்த தமிழ்-தந்தான்.***

***நிழல்பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங்கண் -*** *ஒளி விளங்கும் மழுவாயுதத்தையும் அழகிய நெற்றியில் நெருப்பைக் கக்கும் சிவந்த கண்ணையும்உடைய;* ***தழல்புரை சுடர்க் கடவுள் -*** *நெருப்பை ஒத்தஒளிவடிவான சிவபெருமான்;* ***தந்ததமிழ் -*** *அருளிய தமிழ் மொழியை;* ***உழக்கும் மறை நாலினும் -*** *வருந்தி ஓதிஅறியக்கூடிய வழக்கினாலும்;* ***உயர்ந்து உலகம் ஓதும் வழக்கினும் -*** *உயர்ந்தோராகியஉலகம் கூறுகின்ற உலகவழக்காலும்;* ***மதிக் கவியினும் மரபின்நாடி -*** *அறிவாலும் செய்யுள் வழக்காலும் மரபு நெறியாலும் முறைப்பட ஆராய்ந்து;* ***தந்தான் -*** *உலகினர்க்கு அருளினான்.*

*உழக்கும் மறை என்பது கனம் முதலிய முறையே பயின்று ஓசை தவறாமல் ஓதி உணரத்தக்க வேதம்என்பதாம். இதனால் வேதம் ஓதுதலிலுள்ள கடின நிலை புலப்படும். ஆதியில் தமிழ் நூல் அகத்தியற்குணர்த்திய மாதொரு பாகனை வழுத்துதும் எனச் சேனாவரையர் கூற்றையும் இதனோடுஒப்பிடலாம். அகத்தியர் அருளிய இலக்கணம், சிற்றகத்தியம், பேரகத்தியம் எனப்படும்.மதிக்கலையினும் எனப் பாடமோதிப் புத்தி கப்பு விட்டதனாலும் எனப் பழைய உரை கூறும். வடமொழி தென்மொழிகளுக்கு இறைவன் சிவபெருமானே முதல் என்ற கருத்தை இது புலப்படுத்தும். (ஒவ்வொருசமயத்தாரும் தத்தம் கடவுளரே மொழிகளைப் படைத்தனர் என்று தம் கொள்கையைக் கூறுவர்)இப்பாடல்களால் கடலை உண்டது, வாதாபி வலம் அழித்தது, விந்தத்தை அடக்கியது. தென்திசை வட திசையைச் சமனாக்கியது. முதலிய அகத்தியரின் அருஞ்செயல்களை அறிய முடிகிறது. நீண்ட தமிழால்அளந்ததில் (2666) தொடங்கி இங்குத் தமிழ்தந்தான் எனக் கூறுவதால் அகத்தியரின் பெருமையில் தமிழே முதலும் முடிவுமாய் விளங்குவதுபுலனாம். அகத்தியன், இராமனை வரவேற்று, அளவளாவல்*

***2672. "விண்ணினில், நிலத்தினில்,***
***விகற்ப உலகில், பேர்***
***எண்ணினில், இருக்கினில்,***
***இருக்கும்" என யாரும்***
***உள் நினை கருத்தினை, உறப்***
***பெறுவெனால், என்***
***கண்ணினில்' எனக் கொடு***
***களிப்புறு மனத்தான்.***

*(அத்தகைய அகத்தியர்)* ***விண்ணினில் நிலத்தினில் விகற்ப உலகில் பேர் எண்ணினில்இருக்கினில் இருக்கும் என -*** *தேவருலகிலும், பூவுலகிலும் மற்றும் பல உலகங்களிலும்வேதங்களிலும் உள்ளதாகும் என்று;* ***யாரும் உள்நினை கருத்தினை என் கண்ணினில் உறப்பெறு வென்-*** *யாவரும் மனத்தினுள்ளே நினைக்கப் பெறும் பொருளை (இராமன்) எனது கண்களால் இன்று காணப்பெறுவேன்;* ***எனக் கொடு களிப்புறுமனத்தான் -*** *என்று எண்ணி மகிழ்ச்சி அடையும் மனத்தைஉடையவன் ஆனான்;* ***ஆல் -*** *வியப்பிடைச் சொல்.*

*விகற்ப உலகு என்றது. அதலம் முதலிய பல்வேறு உலகங்களை. எல்லாப் பொருள்களிலும் கரந்துஉறைவதாலும் நினைவார் உளத்தில் அவர் நினையும் வடிவில்*

*விரைந்து சேர்வதாலும் எல்லா மறைகளும்தெரிவிக்கும் பொருள் ஆதலாலும் இவ்வாறு கூறினார். எல்லா உலகங்களிலும் கலந்து விளங்கும் பரம்பொருளாம் இராமனைக் கண்ணால் காணும் பேறு பெற்றதால் அகத்தியர் களிப்புறு மனத்தராய்இருந்தார். கருத்து - பேரறிவாகிய இராமன் என்பர்.*

***2673. 'இரைத்த மறை நாலினொடு***
***இயைந்த பிற யாவும்***
***நிரைத்த நெடு ஞானம் நிமிர் கல்லில்***
***நெடு நாள் இட்டு***
***அரைத்தும், அயனாலும் அறியாத பொருள்***
***நேர் நின்று***
***உரைக்கு உதவுமால்' எனும்***
***உணர்ச்சியின் உவப்பான்.***

*(மேலும் அகத்தியர்)* ***இரைத்த மறை நாலினொடு இயைந்த பிறயாவும் -*** *பேரொலி கொண்டுஒலிக்கும் நான்கு வேதங்களோடு பொருந்திய பிறசாத்திர நூல்களையும்;* ***நிரைத்த நெடு ஞானம் நிமிர் கல்லில் நெடு நாள் இட்டு அரைத்தும் -*** *முறையே பயின்ற சிறந்த அறிவாகிய உயர்ந்த அம்மியில் பலநாள் இட்டு அரைத்துஆராய்ந்தும்;* ***அயனாலும் அறியாத பொருள் நேர்நின்று உரைக்கு உதவும் -*** *பிரமனாலும் அதன்சிறப்பைக் கண்டறிய முடியாத அப்பரம் பொருள் எதிரில் நின்று உரையாடற்கு அருள் செய்யும்;* ***எனும் உணர்ச்சியின் உவப்பான் -*** *என்கின்ற அறிவால் களிப்பவரானார்;* ***ஆல் -*** *அசை.*

*பிரமன் முதலியவர்களும் வேதம் முதலிய நூல்களும் அறிதற்குமுடியாத பரம்பொருள் கண்முன்நின்று பேசுதற்குரிய நற்பேறு வாய்த்ததே என்ற உணர்ச்சியால் அகத்தியர் மனத்தில் மகிழ்ச்சிபொங்கியது. இயைந்த பிற என்பவை அவ் வேதங்களின் பொருளை நன்கறிய உதவும் கருவி நூல்களானமீமாம்சை, புராணம், நியாயம், தருமசாஸ்திரம் முதலியவை. மறை முதலிய நூல்களாம் அம்மியைக்கொண்டு தன் ஞானமாம் கல்லில் இட்டு அரைத்து என்றும் உருவகம் செய்வர். உரைக்குதவும் எனக்கொண்டு தொடுத்தலைக் குறிப்பர்.*

***2674. 'உய்ந்தனர் இமைப்பிலர்;***
***உயிர்த்தனர் தவத்தோர்;***
***அந்தணர் அறத்தின் நெறி***
***நின்றனர்கள்; ஆனா***
***வெந் திறல் அரக்கர் விட வேர்***
***முதல் அறுப்பான்***
***வந்தனன் மருத்துவன்' என,***
***தனி வலிப்பான்.***

*(அவ்வகத்திய முனிவர்)* ***ஆனா வெந்திறல் அரக்கர் விடவேர் முதல் அறுப்பான் மருத்துவன்வந்தனன் -*** *நீங்காத கொடிய வலிமையுடைய இராக்கதர் எனும் நஞ்சின்*

*வேரை அடியோடுஅறுப்பதற்கு வைத்தியன் போன்ற இராமன் இங்கு வந்துவிட்டான்; (ஆகையால்)* ***இமைப்பிலர் உய்ந்தனர் -*** *தேவர்கள் பிழைத்தார்கள்;* ***தவத்தோர் உயிர்த்தனர் -*** *முனிவர்கள்உயிர் பெற்றார்கள்;* ***அந்தணர் அறத்தின் நெறி நின்றனர்கள் -*** *அந்தணர்கள் தருமமார்க்கத்தில் ஒழுகலாயினர்;* ***என(த்)தனி வலிப்பான் -*** *என்று தானே நன்றாகத்துணிபவனானான். அரக்கராகிய நச்சு மரத்தை வேரோடறுக்க இராமன் வந்து விட்டானாதலால் தேவர்கள்நல்வாழ்வும், முனிவர்கள் உயிரும், அந்தணர்கள் அறநெறி வாழ்வும் பெற்றவராவர் எனத் துணிவுகொண்டார் அகத்தியர். திருமாலே தன்வந்தரியாகத் தோன்றிய ஆதி வைத்தியன் ஆதலாலும்பிறப்பு முதலிய நோய்களைப் போக்குபவன் ஆதலாலும் மருத்துவன் என இராமன் கருதப் பெற்றான்.உய்ந்தனர் முதலிய இறந்தகால வினை முற்றுக்கள் தெளிவு பற்றி வந்த காலவழுவமைதி. உருவக அணி. 4*

***2675 'ஏனை உயிர் ஆம் உலவை***
***யாவும் இடை வேவித்து***
***ஊன் நுகர் அரக்கர் உருமைச்***
***சுடு சினத்தின்***
***கான அனலைக் கடிது அவித்து,***
***உலகு அளிப்பான்,***
***வான மழை வந்தது' என,***
***முந்துறு மனத்தான்.***

*(பின்னும் அகத்திய முனிவர்)* ***ஏனை உயிர் ஆம் உலவை யாவும் இடை வேவித்து -*** *மற்றைஉயிர்களாகிய மரங்கள் எல்லாவற்றையும் தமக்கு உணவு வேண்டும் பொழுதெல்லாம் வேகவைத்து;* ***ஊன் நுகர் அரக்கர் -*** *(அவற்றின்) உடலை உண்ணும் இராக்கதர்;* ***உருமைச் சுடு சினத்தின்-*** *இடியையும் சுடுகின்ற கோபமாகிய;* ***கான அனலைக் கடிது அவித்து -*** *காட்டுத் தீயைவிரைவாக அழித்து;* ***உலகு அளிப்பான் வானமழைவந்தது -*** *உயிர்களைக் காப்பதற்குவிண்ணில் தோன்றும் மேகத்திலிருந்து மழை வந்தது;* ***என முந்துறு மனத்தான் -*** *என்று(இராமனைக்காண)முற்படுகின்ற மனத்தை உடையவன்.*

*ஏனைய உயிர் - அரக்கர் ஒழிந்த பிற உயிர்கள். ஊன் - ஆகுபெயராய் உடலுக்காகி வந்தது.அரக்கர்க்குத் தாக்கி எரிக்கும் இடியோடு கூடிய தீ உவமை. இராமனுக்குத் தீயை அவிக்கும் வானமழை உவமை. இலக்குவன் நாண் ஒலி கேட்டு இராமன் 'வீறாக்கிய பொற்கலன் வில்லிட ஆரம்மின்னமாறாத் தலைச் சொல் மாரி வழங்கி வந்தான் கால் தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்றுபொங்கும் ஆறாக் கனல் ஆற்றும் ஓர் அஞ்சன மேகம் என்ன' (1726) வந்ததைக் கூறும் பாடலுடன்ஒப்பிடத்தக்கது. இது உருவக அணி.*

***2676. கண்டனன் இராமனை வர;***
***கருணை கூர,***
***புண்டரிக வாள் நயனம் நீர்***
***பொழிய, நின்றான்-***

***எண் திசையும் ஏழ் உலகும்***
***எவ் உயிரும் உய்ய,***
***குண்டிகையினில், பொரு இல்,***
***காவிரி கொணர்ந்தான்.***

***எண்திசையும் ஏழ்உலகும் எவ் உயிரும் உய்ய -*** *எட்டுத் திக்குகளும் ஏழு உலகங்களும் எல்லா உயிரினங்களும் நற்கதி அடைவதற்காக;* ***குண்டிகையினில் பொரு இல் காவிரி கொணர்ந்தான் -*** *தமது கமண்டலத்தில் ஒப்பற்ற காவிரி ஆற்றினைக் கொண்டு வந்த அகத்தியர்;* ***இராமனை வரக்கண்டனன் -*** *இராமனைத் தம்மிடம் நாடி வரக் கண்டு;* ***புண்டரிக வாள் நயனம் கருணை கூர நீர் பொழிய நின்றான் -*** *தாமரை போன்ற ஒளி பொருந்திய கண்களிலிருந்து இன்பக் கண்ணீர் சொரிய நின்றார்.*

*கூர-அதிகரிக்க. கருணை கூர என்பதனைக் கண்டனன் என்பதோடும் கூட்டலாம். குண்டிகை - தவசியர்க்குரிய வாய் குறுகிய சிறிய நீர்க்குடம். பொருவில் காவிரி - கங்கை முதலிய பிற புண்ணிய நதிகளும் இதில் படிந்து தம் பாவத்தைப் போக்கிக் கொள்ளும் தூய்மை வாய்ந்ததால் ஒப்பில்லாதது ஆயிற்று. 'கங்கையிற் புனிதமாகிய காவிரி' என்றார் பிறகும் (தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை. 23) பின்னரும் 'தெய்வப் பொன்னி' என இப்படலமும் கூறும் (2688).*

***2677. நின்றவனை, வந்த நெடியோன்***
***அடி பணிந்தான்;***
***அன்று, அவனும் அன்பொடு தழீஇ,***
***அழுத கண்ணால்,***
***'நன்று வரவு' என்று, பல நல்***
***உரை பகர்ந்தான்-***
***என்றும் உள தென் தமிழ் இயம்பி***
***இசை கொண்டான்.***

***நின்றவனை வந்த நெடியோன் அடி பணிந்தான் -*** *(அங்ஙனம்நின்ற) அகத்தியரை அங்கே வந்த இராமன் அவர் திருவடிகளில் விழுந்து வணங்கினான்;* ***அன்று -*** *அப்பொழுது;* ***என்றும் உள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான் -*** *எக்காலத்தும் உள்ளதாகிய இனிய தமிழின் இலக்கணங்களைக் கூறிப்புகழ் பெற்ற அகத்தியராகிய;* ***அவனும் -*** *அம்முனிவரும்;* ***அழுத கண்ணால் அன்பொடு தழீஇ -****அப்பொழுது அம்முனிவரும் இன்பக் கண்ணீர் விட்டவராய் அன்பினால் தழுவிக் கொண்டு;* ***வரவு நன்று என்று பல நல்உரை பகர்ந்தான் -*** *உங்கள் வருகை நன்றாயிருந்தது என்ற பல நல்ல சொற்களை இனிதாகச் சொன்னார். குறுமுனியாம் அகத்தியர் முன் நெடியோனாம் இராமன் வந்து வணங்கினான். மாவலியிடத்து உலகனைத்தும் அளக்க எடுத்த திரிவிக்கிரமனை இது நினைவூட்டும். பண்பு நலன்களால் யாவரினும் உயர்ந்தோன் என்றுமாம். தமிழ் மொழி என்றுமுள்ளது என்பதைச் சுட்டியதால் முன்னரே இருந்த மொழிக்கு அகத்தியர் இலக்கணம் அமைத்தார் என்ற வரலாறு இத்தொடரால் புலப்படும். தென்தமிழ் தென்னாட்டில் வழங்கிய தமிழ் என்றுமாம்.*

***2678 வேதியர்கள் வேத மொழி***
***வேறு பல கூற,***
***காதல் மிக நின்று, எழில்***
***கமண்டலுவின் நல் நீர்***
***மா தவர்கள் வீசி, நெடு மா***
***மலர்கள் தூவ,***
***போது மணம் நாறு குளிர் சோலை***
***கொடு புக்கான்.***

**வேதியர்கள் வேதமொழி வேறுபல கூற -** *அந்தணர்கள் பல்வேறு வகைப்பட்ட வேத வாக்கியங்களைச் சொல்ல;* **காதல் மிக நின்று எழில் கமண்டலுவின் நல்நீர் மாதவர்கள் வீசி -** *அன்பு மிகுதலால் சூழ்ந்து நின்று அழகிய கமண்டலங்களிலுள்ள நல்ல நீரை மிக்க தவமுடையவர்கள் தெளித்து;* **நெடுமாமலர்கள் தூவ -** *அழகிய பெரிய மலர்களை மேலே சொரிய, (அகத்தியர் இராமனை);* **போது மணம் நாறு குளிர் சோலை கொடு புக்கான் -** *மலர்கள் மணம் வீசும் குளிர்ந்த சோலைக்குள் அழைத்துக் கொண்டு போனார்.*

*வேதமந்திரங்களைக் கூறி நன்னீர் தெளித்து மலர் தூவல் அம்முனிவர் செய்யும் உபசார வகை. கமண்டலு - கமண்டலம். குண்டிகை கரசும் எனவும் வழங்கப்பெறும். போது என்பது அப்பொழுது மலரும் நிலையில் உள்ளமலர்.*

***2679. பொருந்த, அமலன் பொழிலகத்து***
***இனிது புக்கான்;***
***விருந்து அவன் அமைத்தபின்,***
***விரும்பினன்; 'விரும்பி,***
***இருந் தவம் இழைத்த எனது இல்லிடையில்***
***வந்து, என்***
***அருந் தவம் முடித்தனை; அருட்கு***
***அரச!' என்றான்.***

**அமலன் பொழிலகத்து(ப்) பொருந்த இனிது புக்கான் -***இராமன் சோலைக்குள் மனம் ஏற்றிட இனிமையாய்ப் புகுந்தவனாய்;* **அவன் விருந்து அமைத்தபின் விரும்பினன் -** *அம்முனிவர் விருந்திட்டு உபசரித்த பின் மகிழ்ந்திருந்தான்;* **விரும்பி** *(அப்போது அகத்தியர்) மகிழ்ந்து (இராமனைப்பார்த்து);* **அருட்கு அரச -** *கருணைக்குத் தலைவனே!; இருநீதவம் இழைத்த எனது இல்லிடையில் வந்து மிக்க தவத்தைச் செய்த என்னுடைய வீட்டில் எழுந்தருளி;* **என் அருந்தவம் முடித்தனை என்றான் -** *என்னுடைய அரிய தவத்தை நிறைவேற்றினாய் என்று கூறினார். இராமனை நோக்கி 'நீ இவ்வாறு எழுந்தருளியது' 'நான் முற்பிறவிகளிலும் இப்பிறவியிலும் செய்த நற்றவத்தால்' என்றும் 'நான் செய்யும் தவம் உன் வருகையால் இப்போது முற்றுப் பெற்றது' என்றும் கூறினார். இனி விரும்பினனாகிப் புக்கான் எனவுமாம். இராமன் பேரருள் கொண்டு தம் தவச்சாலைக்கு வந்ததால் 'அருட்கரசு' என்றார். இராமன் வருகையே பெரும் பேறு; இனிச் செய்யும் தவம் வேறு இல்லை என்பது புலப்பட 'அருந்தவம் முடித்தனை' என்றார். பெரியோர் தம் விருந்திடம் இவ்வாறு கூறி அவர்*

*தம் பெருமையை உணர்த்தித் தம் அன்பின் பெருக்கையும் வெளிப்படுத்துவர். விருந்து - புதுமை; புதிதாய் வந்தவர்க்குச் செய்யும் உபசாரத்துக்கு ஆம். இருமடியாகுபெயர்.*

***2680. என்ற முனியைத் தொழுது,***
***இராமன், 'இமையோரும்,***
***நின்ற தவம் முற்றும்***
***நெடியோரின் நெடியோரும்,***
***உன் தன் அருள்***
***பெற்றிலர்கள்; உன் அருள் சுமந்தேன்;***
***வென்றனென் அனைத்து உலகும்; மேல்***
***இனி என்?' என்றான்.***

***என்ற முனியை இராமன் தொழுது -*** *என்று கூறிய அகத்திய முனிவரை இராமன் வணங்கி;* ***இமையோரும் நின்ற தவம் முற்றும்நெடியோரின் நெடியோரும் -*** *தேவர்களும், தாம் செய்ய வேண்டிய தவத்தை முழுதும் செய்து முடித்த மேலோர் யாவர்க்கும் மேலான மா முனிவர்களும்;* ***உன்தன் அருள் பெற்றிலர்கள் -*** *உன்னுடைய கருணையைப் பெற்றார் இல்லை;* ***உன் அருள் சுமந்தேன் -*** *உன் கருணையைப் பெற்றேன்;* ***அனைத்து உலகும் வென்றனென் -*** *(ஆகையால்) எல்லா உலகங்களையும் வென்றவனானேன்;* ***மேல் இனி என் என்றான் -*** *இதற்கு மேலாக இனி எனக்குக் கிடைக்கும் நன்மை என்ன உள்ளது என்று கூறினான்.*

*உன்னருள் சுமந்தேன் என்றது என் தகுதிக்கு மேலாக நீ எனக்கு அருள் புரிந்தாய் என்பதாம். அகத்தியர் தனக்குப் பின்னர்த் தெய்வப் படைக் கலன்களை அருளுவதை முன்னரே எண்ணிக் கூறியதுமாம். முன்னர் அகத்தியர் இராமனை 'அருட்கு அரச!' (2679) என்று கூறிய நிலையில் தான் அகத்தியரின் 'அருள் சுமந்தேன்' எனக் கூறிய இராமன் நிலை எண்ணிப் பார்த்தற்குரியது. எல்லா உலகையும் அகத்தியர் அருளால் வெல்லும் நம்பிக்கை இராமனிடம் புலப்படுகிறது. இதனால் அகத்தியரை இராமன் மிக உயர்வாக எண்ணிய எண்ணம் வெளிப்படுகிறது.*

***2681. ' "தண்டக வனத்து உறைதி"***
***என்று உரைதரக் கொண்டு,***
***உண்டு வரவு இத் திசை என,***
***பெரிது உவந்தேன்;***
***எண் தகு குணத்தினை;' எனக்***
***கொடு, உயர் சென்னித்***
***துண்ட மதி வைத்தவனை ஒத்த***
***முனி சொல்லும்:***

***உயர் சென்னித் துண்டமதி வைத்தவனை ஒத்த முனி சொல்லும்-*** *தன் உயர்ந்த தலையில் பிறைச் சந்திரனைச் சூடிய சிவபெருமானைப் போன்ற அகத்திய முனிவர் சொல்வாரானார்;* ***எண்தகு குணத்தினை -****யாவரும் மதிக்கத்தக்க நற்பண்புகளுடைய*

*இராமனே! ;* ***தண்டக வனத்து உறைதி என்று உரைதரக் கொண்டு -*** *தண்டகாரணியத்தில் நீ எழுந்தருளியிருக்கிறாய் என (இங்கு வரும் முனிவர்கள்) கூறிய சொல்லைக் கேட்டு;* ***இத்திசை உண்டு வரவு எனக் கொடு -*** *இத்திசைக்கு உனது வருகை உண்டு என்று கொண்டு;* ***பெரிது உவந்தேன் -*** *மிக மகிழ்ந்திருந்தேன்;* ***என -*** *அசை.*

*எண் தகு குணத்தினை - எட்டு மேலான பண்புகளைக் குறிக்கும் என்பர். (குறள். 9) துண்டமதி - மதித்துண்டு, இளம்பிறை மதி. அகத்தியரைச் சிவபிரானுக்கு ஒப்பிடல் முன்னர்க் காணப்படுகிறது. 'ஈசன் நிகர் ஆய்' (2670); உண்டு வரவு எனக் கருதியதை ஒட்டி இராமன் எழுந்தருளியமை குறிப்பால் பெறப்படும்.*

***2682. 'ஈண்டு உறைதி, ஐய! இனி,***
***இவ் வயின் இருந்தால்,***
***வேண்டியன மா தவம்***
***விரும்பினை முடிப்பாய்;***
***தூண்டு சின வாள் நிருதர்***
***தோன்றியுளர் என்றால்,***
***மாண்டு உக மலைந்து, எமர்மனத்***
***துயர் துடைப்பாய்;***

***ஐய! ஈண்டு உறைதி -*** *ஐயனே! இங்கு நீ தங்கி இருப்பாயாக;* ***இனி இவ்வயின் இருந்தால் -*** *இனிமேல் இவ்விடத்தில் நீ இருந்தால்,* ***வேண்டியன மாதவம் விரும்பினை முடிப்பாய் -*** *நீ விரும்பிய பெரிய தவங்களை விரும்பியவாறே செய்து முடிப்பாய்;* ***தூண்டுசின வாள் நிருதர் தோன்றியுளர் என்றால் -*** *தூண்டப்பட்ட கோபத்தோடு கூடிய வாளேந்திய அரக்கர்கள் வந்தனர் என்றால்;* ***மாண்டுஉக, மலைந்து -*** *அவர்கள் அழிந்து கீழே சிதறப் போர் செய்து;* ***எமர் மனத்துயர் துடைப்பாய் -*** *எம்போன்ற முனிவர்களின் மனத்துன்பத்தைப் போக்குவாய்.*

*வேண்டியன மாதவம் என்பது இராமனின் சிறிய தாய் கைகேயி கூறிய வண்ணம் ஆகும். தவங்கள் என்பர் (1601). வாள்நிருதர் - வாள்போல்கொடிய அரக்கர் எனலுமாம். வாள் எனில் கொடுமையும் ஆம். நீ இங்கேஇருந்தால் நீயும் தவம் செய்யலாம். எம்போன்ற முனிவர் தவத்திற்குஇடையூறு செய்ய வரும் அரக்கர்களை நீ அழிப்பதால் அவர்களும் தவம் செய்ய இயலும் என அகத்தியர் கூறுவதால் தவச் செயல் கெடாது நிலைபேறு எய்தலை இராமன் வரவுணர்த்தும்.*

***2683. 'வாழும் மறை; வாழும் மனு நீதி;***
***அறம் வாழும்;***
***தாழும் இமையோர் உயர்வர்;***
***தானவர்கள் தாழ்வார்;***
***ஆழி உழவன் புதல்வ! ஐயம்***
***இலை; மெய்யே;***
***ஏழ் உலகும் வாழும்; இனி, இங்கு***
***உறைதி' என்றான்.***

***ஆழி உழவன் புதல்வ -*** *ஆணைச் சக்கரத்தை உலகெங்கும் செலுத்தும் தயரதன் மகனே!;* ***இனி மறைவாழும் -*** *(நீ இங்குத் தங்குவதால்) இனி மேல் வேதங்கள் வாழ்வு பெறும்;* ***மனுநீதி வாழும் -*** *மனு தருமசாத்திரமும் வாழும்;* ***அறம் வாழும் -*** *எல்லா வகைத் தருமங்களும் நிலை பெறும்;* ***தாழும் இமையோர் உயர்வர் -*** *அரக்கர் கொடுமையால் தாழ்வுற்ற தேவர்கள் உயர்ந்த நிலை அடைவர்;* ***தானவர்கள் தாழ்வார் -*** *அரக்கர்கள் தாழ்வடைவார்கள்;* ***ஏழ் உலகும் வாழும் -*** *ஏழு உலகங்களும் வாழ்வடையும்;* ***ஐயம் இலை மெய்யே -*** *இதில் சந்தேகம் இல்லை; உண்மையே!;* ***இங்கு உறைதி என்றான் -*** *இவ்விடத்தில் தங்குவாயாக என்று அகத்தியர் கூறினார்.*

*வாழும் மறை என்றதால் எக்காலத்தும் அழியாத வேதங்கள் என்பர் சிலர். பதினெட்டு நீதி நூல்களில் தலையாயது மனுநூல் ஆகையால் அதனை எடுத்துரைத்தார். ஆழி உழவன் - ஆணைச் சக்கரமாம் ஏரைக் கொண்டு உலகு முழுவதையும் உழுபவன் எனத் தயரதனின் ஆட்சிப் பெருமை கூறப்பட்டது. தானவர் என்பவர் தனு என்பாளிடம் தோன்றியவர் எனும் பொருளால் அசுரர்களைச் சுட்டும். அசுரர்போல அரக்கர்கள் கொடியவர்கள் எனவே அவரையே சுட்டியது என்பர்.*

***2684. 'செருக்கு அடை அரக்கர் புரி தீமை***
***சிதைவு எய்தித்***
***தருக்கு அழிதர, கடிது***
***கொல்வது சமைந்தேன்;***
***வருக்க மறையோய்! அவர் வரும்***
***திசையில் முந்துற்று***
***இருக்கை நலம்; நிற்கு அருள் என்?'***
***என்றனன் இராமன்.***

***இராமன் (அகத்தியரிடம்) வருக்க மறையோய்! -****தொகுதியாகிய வேதங்களை உடையவனே!,* ***செருக்கு அடை அரக்கர் புரிதீமை -*** *ஆணவம் அடைந்த இராக்கதர் செய்யும் கொடுமை எல்லாம்,****சிதைவு எய்தித் தருக்கு அழிதர(க்)கடிது கொல்வது சமைந்தேன் -****அழிவை அடைந்து களிப்பு அழியும்படி விரைவில் கொல்ல ஆயத்தமாக உறுதி பூண்டேன், (ஆகையால்);* ***அவர்வரும் திசையில் முந்துற்று -****அவர்கள் வருகின்ற (தென்) திக்கில் முற்படச் சென்று,* ***இருக்கை நலம் -****இருப்பது நன்மை தரும்,* ***நிற்கு அருள் என் -*** *உம் விருப்பம் யாது,* ***என்றனன் -*** *என்று கேட்டனன்.*

*வருக்கமறை என்பது நான்கு வேதங்களையும் அவற்றைச் சார்ந்த அங்கங்கள் பிறவற்றையும் கூறியதாம். அரக்கர்களைக் கொல்வதால் அகத்தியர் ஆச்சிரமத்தின் தூய்மை கெடும். ஆதலால் 'முந்துற்று இருக்கை நலம்' என்றான். செருக் கடை என்று கொண்டு போர்க்களம் எனப் பொருள் கூறுவாருமுளர். 'கொல்வது சமைந்தேன்' என்றது இராமன் முன் தண்டக வன முனிவர்களுக்கு அபயமளித்துறுதி கூறியதை நினைவூட்டும். (2647-2654).*

*அகத்தியன் இராமனுக்குப் படைக்கலங்கள் வழங்குதல்*

***2685. 'விழுமியது சொற்றனை; இவ் வில் இது***
***இவண், மேல்நாள்***
***முழுமுதல்வன் வைத்துளது;***
***மூஉலகும், யானும்,***
***வழிபட இருப்பது; இதுதன்னை***
***வடி வாளிக்***
***குழு, வழு இல் புட்டிலொடு கோடி'***
***என, நல்கி,***

*(அது கேட்ட அகத்தியன்)* **விழுமியது சொற்றனை -***சிறப்பானவற்றைச் சொன்னாய்;* **இவண் இவ்வில் இது -** *இவ்விடத்திலுள்ள இந்த வில்;* **மேல்நாள் முழுமுதல்வன் வைத்துளது -** *முற்காலத்தில் திருமால் வைத்திருந்தது;* **மூ உலகும் யானும் வழிபட இருப்பது -** *மூன்று உலகங்களும் நானும் வணங்கிப் பூசை செய்ய இருப்பது;* **இது தன்னை -** *இவ் வில்லை;* **வடிவாளிக்குழு -** *கூர்மையான அம்புகளின் கூட்டம்,* **வழு இல் புட்டிலொடு கோடி -** *குற்றமில்லாத அம்புப் புட்டிலொடு கொள்வாயாக;* **எனநல்கி -** *என்று கொடுத்து,     முழுமுதல்வன் என்பதற்குச் சிவபெருமான் என்பாரும் உளர். ஆயினும் இவ்வில்லின் வரலாறு பற்றிக் கூறும் போது இதனை விசுவகருமா செய்து திருமாலிடம் அளித்தான். அது பரசுராமனிடம் வந்து பின்னர் இராமனிடம் கொடுக்கப்பட்டது. அதனை இராமன் வருணனிடம் கொடுக்க (1307) அவன் அரக்கர் வதம் குறித்து இராமனிடமே அளிக்குமாறு அகத்தியரிடம் அளித்தான் என்பர். கரன் வதைப்படலத்தில் 'வில்லை வருணன் கொடுத்தனன்' என வருவதால் (3052) இப்போது அகத்தியர் அளித்த வில் வேறு என்பர்.                    5*

***2686   இப் புவனம் முற்றும் ஒரு***
***தட்டினிடை இட்டால்***
***ஒப்பு வரவிற்று என உரைப்ப***
***அரிய வாளும்,***
***வெப்பு உருவு பெற்ற அரன்***
***மேரு வரை வில்லாய்***
***முப்புரம் எரித்த தனி மொய்க்***
***கணையும், நல்கா,***

*(மேலும் அகத்தியர்)* **இப்புவனம் முற்றும் ஒரு தட்டினிடை இட்டால் -** *இவ்வுலக முழுவதையும் ஒரு தராசுத் தட்டில் வைத்து நிறுத்தாலும்;* **ஒப்பு வரவிற்று என உரைப்ப அரிய வாளும் -***ஒப்பாக வருதலை உடையது எனச் சொல்வதற்கு இயலாத ஓர் அரிதான வாளையும்;* **வெப்பு உருவு பெற்ற அரன் -** *தீ வடிவு கொண்ட சிவபெருமான்;* **மேருவரை வில்லாய் முப்புரம் எரித்த தனி மொய்க் கணையும் நல்கா -** *மகா மேரு மலையை வில்லாகக் கொண்டு திரிபுரங்களை எரித்த ஒப்பில்லாத வலிய அம்பையும் கொடுத்து,*

*ஒப்பு வரவு இற்று என - ஒப்பாக வருவது இல்லாதாகும் என - என்று பொருள் கொள்வர். நல்கா - நல்கி. சிவபெருமான் திரிபுரங்களை எரித்த போது மேருமலையை வில்லாகவும் திருமாலை அம்பாகவும் கொண்டார் எனப் புராணம் கூறும்.*

மொய்கணை என்பதைச் சிலப்பதிகாரம் (6.40-41) எரிமுகப் பேரம்பு என்று கூறும். வான்மீகம், இந்த வில் விசுவகருமாவினால் செய்யப் பெற்றுத் **திருமாலிடம்** அளித்தது என்றும், அந்த அம்பு பிரமனால் அளிக்கப் பெற்றதென்றும், அவ்வம்புப் புட்டிலும் வாளும் இந்திரனால் கொடுக்கப் பெற்றவை என்றும் அகத்தியர் கூறி இராமனிடம் அளித்ததாகக் கூறும். 'மொய்க்கவச நல்கா' என்ற பாடம் கொண்டு அகத்தியர் இராமனுக்குக் கவசமும் அளித்தார் என்பர். இதற்குப் பிற நூல்களில் சான்றில்லை.

பஞ்சவடியின் சிறப்பு

**2687. 'ஓங்கும் மரன் ஓங்கி, மலை ஓங்கி,**
**மணல் ஓங்கி,**
**பூங் குலை குலாவு குளிர் சோலை**
**புடை விம்மி,**
**தூங்கு திரை ஆறு தவழ் சூழலது ஓர்**
**குன்றின்**
**பாங்கர் உளதால், உறையுள்**
**பஞ்சவடி-மஞ்ச!**

**மஞ்ச -** மைந்தனே! **ஓங்கும் மரன் ஓங்கி -** உயர்ந்த மரங்கள் நிமிர்ந்து வளரப் பெற்றும்; **மலை ஓங்கி -** மலைகள் உயர்ந்து விளங்கப்பெற்றும்; **மணல் ஓங்கி -** மணற்குன்றுகள் உயர்ந்து விளங்கப் பெற்றும்; **பூங் குலை குலாவு குளிர் சோலை புடைவிம்மி -** பூங் கொத்துகள் விளங்கும் குளிர்ந்த சோலைகள் பக்கங்களில் விளங்கப் பெற்றும்; **தூங்குதிரை ஆறுதவழ் சூழலது ஓர் குன்றின் பாங்கர் -** குதிக்கும்அலைகளுடைய ஆறுகள் பாயப் பெற்றுமுள்ள சூழ்ந்த இடங்களையுடைய ஒரு சிறு மலையின் பக்கத்தில்; **பஞ்சவடி உறையுள் உளது -**பஞ்சவடி என்னும் வாழிடம் ஒன்று உள்ளது; **ஆல் -** அசை.

பஞ்சவடி - ஐந்து ஆலமரங்களின் கூட்டம். அதனை உடைய இடத்தைச் சுட்டியது. அகண்ட கோதாவரி ஆற்றின் கரையில் நாசிகாத்திரி யம்பகத்துக்கு அருகில் உள்ளது பஞ்சவடி. அது இராமனின் கருத்திற்கியைந்த வாழிடமாம் என்பது. ஆறு - கோதாவரி முதலிய ஆறுகள். அகத்தியர் ஆசிரமத்திலிருந்து பஞ்சவடி இரண்டு யோசனை தூரம் என வான்மீகம் கூறும். பூங்குலை உம்மைத் தொகையாகக் கொண்டு பூக்களும் பழங்களும் என்றுமாம். மஞ்ச என்பது மைந்த என்பதன் போலி. ஓங்கு என்ற சொல் முதலடியில் நான்கு முறை ஒரு பொருளில் அடுக்கி வந்ததால் சொற்பொருட் பின்வரு நிலையணி.

**2688. 'கன்னி இள வாழை கனி**
**ஈவ; கதிர் வாலின்**
**செந்நெல் உள; தேன் ஒழுகு**
**போதும் உள; தெய்வப்**
**பொன்னி எனல் ஆய புனல்**

***ஆறும் உள; போதா,***
***அன்னம் உள, பொன் இவளொடு***
***அன்பின் விளையாட.***

*(பஞ்சவடியில்)* ***கனி ஈவ கன்னி இளவாழை -*** *பழங்களைத் தரும் மிக இளமையான வாழை மரங்களும்;* ***கதிர் வாலின் செந்நெல் உள -****ஒளி பொருந்திய நுனியையுடைய செந்நெற்பயிர்களும் உள்ளன;* ***தேன் ஒழுகு போதும் உள -*** *தேன் வழிகின்ற மலர்களும் உள்ளன;* ***தெய்வப் பொன்னி எனல் ஆய புனல் ஆறும் உள -*** *தெய்வத் தன்மை பொருந்திய 'காவிரி என்று கூறத்தக்க நீர் வெள்ளம் பாயும் நதிகளும்' உள்ளன;* ***பொன் இவளொடு அன்பின் விளையாட -*** *பொன்னையொத்த இச்சீதையுடன் அன்போடு விளையாடுவதற்கு;* ***போதா அன்னம் உள -****பெருநாரைகளும் அன்னங்களும் உள்ளன.*

*கன்னி இளவாழை - ஒன்றன் பின் ஒன்றாக அழியாது ஈன்று கொண்டேயிருக்கும் வாழை எனலுமாம். பஞ்சவடி நீர்வளம் மிக்க இடமாதலால் வாழை, நெல், சோலை, நீர்ப்பறவைகள் ஆகியன விளங்கி நிற்கின்றன. கதிர்வால் - ஒளி பொருந்திய வாலோடு விளங்கும் என்பர். உணவுக்கும் நீருக்கும் அவ்விடத்தில் பஞ்சமில்லை என்பது இதனால் விளங்கும். மீண்டும் சீதைக்குப் பொழுது போகப் பறவைக் கூட்டங்கள் உள்ளன என்றார். பொன்னி யாற்றைக் கூறியதால் கவியின் நாட்டுப்பற்று நன்கு புலப்படும். கன்னி இள - ஒரு பொருட் பன்மொழி. கதிர்வாலின் செந்நெல் எனப் பாடங் கொண்டு ஒளிரும் வாலை உடைய ஒருவகைக் கெண்டை மீனைக் குறிக்கும் என்பர்.*

*இராமன், அகத்தியனிடம் விடைபெற்று புறப்படுதல்*

***2689. 'ஏகி, இனி அவ் வயின் இருந்து***
***உறைமின்' என்றான்;***
***மேக நிற வண்ணனும் வணங்கி,***
***விடை கொண்டான்;***
***பாகு அனைய சொல்லியொடு***
***தம்பி பரிவின் பின்***
***போக, முனி சிந்தை தொடர,***
***கடிது போனான்.***

***இனி அவ்வயின் ஏகி இருந்து உறைமின் என்றான் -****இனிமேல் அவ்விடத்திற்கு நீங்கள் சென்று அங்குத் தங்கியிருந்து வாழுங்கள் என்று அகத்திய முனிவர் கூறினார்;* ***மேக நிற வண்ணனும் வணங்கி விடை கொண்டான் -*** *முகில் போன்ற கரிய நிறங்கொண்ட இராமனும் அகத்தியரைத் தொழுது அவ்விடத்திலிருந்து செல்ல அனுமதி பெற்றான்;* ***பாகு அனைய சொல்லியொடு தம்பி பரிவின் பின்போக -*** *தேன் பாகு போன்ற இனிய சொற்களை உடைய சீதையோடு தம்பியாகிய இலக்குவனும் அன்போடு பின்போக;* ***முனி சிந்தை தொடர -*** *அகத்திய முனிவரின் மனம் பின் தொடரவும்;* ***கடிது போனான் -*** *விரைவாக அப்பால் சென்றான்.*

மேக நிற வண்ணன் - முகிலின் தன்மை போல் கைம்மாறு கருதாது அருள் புரிபவன். பாகு அனைய சொல்லி' எனச் சீதையை இங்குக் குறிப்பிட்டது போல முன்னர் மிதிலைக் காட்சிப் படலத்தில் 'பாகு ஒக்கும் சொல் பைங்கிளி யோடும்' எனக் குறிக்கப் பெறுவாள் (500). சிந்தை தொடர்தல் என்பது அன்புடையார் பிரியும் போது அவரைப்பின் பற்றி மனமும் நினைக்கும் என்பதைக் குறிக்கும்.

## *சடாயு காண் படலம்*

*இப்படலம் அகத்தியன் ஆச்சிரமத்திலிருந்து பஞ்சவடிக்குச் செல்லும் வழியில் கழுகரசனாம் சடாயுவைக்கண்டு அவர் நட்பைப் பெற்ற செய்தியைக் கூறும். சடாயு, இராமன் முதலிய மூவரையும் கண்ட செய்தியைக் கூறுவது என்றும் கொள்ளலாம். சடாயு என்ற சொல்லுக்குப் பல மயிர்கள் சேர்த்துத் திரித்த சடை போன்ற வாழ்நாளைக் கொண்டவன் என்பது பொருள். இறகில் உயிரை உடையவன் என்றும், சடையை உடையவன் என்றும் கூறுவர். இவர் அருணனின் மகன். சம்பாதியின் தம்பி தயரதனின் தமையன் முறை ஆதல் பற்றி இவர்க்கு வைணவ மரபில் 'பெரியவுடையார்' என்ற பெயர் உளது.*

*இப்படலத்திற்குச் சடாயுப் படலம் என்ற பெயரும் சில சுவடிகளில் காணப் பெறும்.*

*இங்கு இராமன் முதலானோர் சடாயுவைக் காண்கின்றனர். சடாயுவின் தோற்றப் பொலிவு விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளது. முதலில் இராமலக்குவர் சடாயுவின் பேருருவைக் கண்டு அரக்கனோ என ஐயுற்றனர். அவர்களைப் போன்றே இராமலக்குவரை யார் எனச் சடாயு அறிய இயலாமல் அவர்களையே வினவி அறிகிறார். தயரதன் மறைவை அறிந்து சடாயு வருந்துகிறார். பின் அவர்களிடம் தம் வரலாற்றைக் கூறுகின்றார். தயரதன் பிரிவால் தானும் உயிர்விடத் துணிந்து பின் அதைத் தவிர்க்கிறார். அவர்கள் காட்டிற்கு வந்த வரலாற்றை அறிகிறார். இராமனின் பண்பைப் பெரிதும் பாராட்டுகிறார். அவர்கள் பஞ்சவடிக்குச் செல்லும் விருப்பை அறிந்து சடாயு அவ்விடத்தில் அவர்களைச் சேர்ப்பிக்கிறார்.*

*காட்டு வாழ்க்கையில் முதலில் அரக்கர்களின் தடையை வென்று சரபங்கர் சாலையை அடைந்த பின் தண்டகாரணிய முனிவர்களைக் காக்க முற்படும்போது அகத்தியரிடம் படைக்கலம் பெற்றது போலக் கழுகின் வேந்தனின் உதவியை இராமன் பெறுகிறான்.*

*இராமன் முதலியோர் சடாயுவைக் காணுதல்*

*கலி விருத்தம்*

***2690. நடந்தனர் காவதம் பலவும்;***
***நல் நதி***
***கிடந்தன, நின்றன,***
***கிரிகள் கேண்மையின்***
***தொடர்ந்தன, துவன்றின;***
***சூழல் யாவையும்***
***கடந்தனர்; கண்டனர்***
***கழுகின் வேந்தையே.***

*(இராமன் முதலிய மூவரும்)* **காவதம் பலவும் நடந்தனர் -** *பல காத வழியும் நடந்தவர்களாய்;* **கிடந்தன நல் நதி -** *இடையே ஓடும் சிறந்த ஆறுகளையும்;* **நின்றன**

***கேண்மையின் தொடர்ந்தன கிரிகள் -*** *ஆங்காங்கே நிலைபெற்றனவாயும் உறவுள்ளன போலத் தொடர்ச்சியாகவுள்ளனவுமான மலைகளும்;* ***துவன்றின -****நெருங்கியிருந்தன;* ***சூழல் யாவையும் கடந்தனர் -*** *இத்தகைய மலைகள் சூழ்ந்திருந்த காடுகளையும் தாண்டிச் சென்றனர்;* ***கழுகின் வேந்தை(க்) கண்டனர் -*** *சடாயு எனும் கழுகரசனைப் பார்த்தனர்;* ***ஏ -*** *அசை.*

*காவதம் - காதம். கிடந்தன - படுத்திருந்தன எனக் கூறும் வகையில் நீண்டு விளங்கின என்றும் உரைப்பர். நின்றன என்பது தனித் தனியாய் இருந்த மலைகள். தொடர்ந்தன என்பது மலைத் தொடர்ச்சிகள். நல்நதி - புண்ணிய ஆறுகள் என்றும் ஆம்.*

***2691. உருக்கிய சுவணம் ஒத்து, உதயத்து***
***உச்சி சேர்***
***அருக்கன் இவ் அகல் இடத்து***
***அலங்கு திக்கு எல்லாம்***
***தெரிப்புறு செறி சுடர்ச்***
***சிகையினால் சிறை***
***விரித்து இருந்தனன் என,***
***விளங்குவான் தனை,***

***உருக்கிய சுவணம் ஒத்து -*** *தீயில் காய்ச்சி உருக்கப் பெற்ற பொன்னைப் போன்றுள்ள;* ***உதயத்து உச்சிசேர் அருக்கன் -****உதயகிரியின் சிகரத்தைச் சேர்ந்த இளஞ்சூரியன்;* ***இவ் அகல் இடத்து அலங்கு திக்கு எல்லாம் -*** *இந்த அகன்ற உலகில் பொருந்திய எல்லாத் திசைகளையும்;* ***தெரிப்புறு செறி சுடர்ச் சிகையினால் -*** *விளங்கச் செய்யும் அடர்ந்த தன் ஒளிக் கீற்றுக்களால்;* ***சிறை விரித்து இருந்தனன் என -****சிறகுகளை எங்கும் விரித்துக் கொண்டு இருந்தான் என்று சொல்லும்படி,* ***விளங்குவான் தனை -*** *விளங்கும் சடாயுவை, உதயகிரிக்கு உருக்கிய பொன் உவமை. உருக்கிய பொன் ஒத்துவிளங்குவான் எனவும் உரைப்பர். சடாயுவுக்கு இளங்கதிரவனும் அவன் விரித்த சிறகுகளுக்குக் கதிர்களும் உவமை. சடாயு தன் சிறகுகளை விரித்து ஒரு மலை உச்சியில் தங்கியிருந்த காட்சியை இவ்வாறு காட்டுவார் கவிஞர். சடாயுவின் நிறம் பொன்னிறம் என்பது இக்கவியால் அறியலாம். வடமொழியில் அம்மலைக்கு உதயம் என்றே பெயர்.*

***2692*** ***முந்து ஒரு கருமலை***
***முகட்டு முன்றிலின்***
***சந்திரன் ஒளியொடு***
***தழுவச் சார்த்திய,***
***அந்தம் இல் கனை கடல்***
***அமரர் நாட்டிய,***
***மந்தரகிரி என***
***வயங்குவான்தனை,***

***முந்து ஒரு கருமலை முகட்டு முன்றிலின் -*** *முன்னொரு காலத்தில் ஒரு பெரிய கரியமலையின் உச்சியிடத்தில்;* ***அந்தம் இல் கனைகடல் -*** *அளவில்லாத ஒலிக்கும் திருப்பாற்கடலில்;* ***சந்திரன் ஒளியொடு தழுவ -*** *மதியின் ஒளியுடன் பொருந்தும்படி;* ***அமரர் சார்த்திய நாட்டிய -*** *தேவர்கள் சேர்த்து நிறுத்திவைத்த;* ***மந்தரகிரி என வயங்குவான் தனை -*** *மந்தர மலை போல விளங்கும் சடாயுவை,*

*சடாயுவுக்கு முறையே மந்தர கிரி அவர் தோற்றத்திற்கு, சந்திரனின் நிலவொளி அவர் உடலின் தோற்ற இன்பத்திற்கும் உவமை. கழுத்திலிருந்து காணப் பெறும் வெண்மை நிறத்திற்கும் நிலவு உவமை ஆம் என்பர். சடாயு ஒரு ஆலமரத்தில் தங்கியிருந்ததாக வான்மீகம் கூறும். இங்குக் கருமலை முகட்டு முன்றில் என உளது.*

*அமரரும் அசுரரும் அமுதமெழப் பாற்கடலைக் கடைந்த போது மந்தர கிரியை மத்தாக நட்டனர் என்பது புராணம். முன்னர் இளங்கதிரவனை ஒளிக்கு உவமை கூறி இங்கு நிலவொளியைக் கூறுவதைக் காணும்போது சடாயுவின் காட்சி நிலவொளி போல் இன்பமூட்டியது எனக் கொள்ளலாம். முன்றில் - இல்முன், இலக்கணப்போலி.*

***2693.*** ***மால் நிற விசும்பு எழில்***
***மறைய, தன் மணிக்***
***கால் நிறச் சேயொளி***
***கதுவ, கண் அகல்***
***நீல் நிற வரையினில்***
***பவள நீள் கொடி***
***போல் நிறம் பொலிந்தென,***
***பொலிகின்றான்தனை,***

***மால்நிற விசும்பு எழில் மறைய -*** *கருநிறமுடைய வானத்தின் அழகு மறையவும்;* ***தன்மணிக் கால் நிறச் சேயொளி கதுவ -*** *தன்னுடைய அழகியகால்களின் நிறத்தின் சிவந்த ஒளி பொருந்தவும்;* ***கண் அகல் நீல் நிற வரையினில் -*** *இடம் அகன்ற நீல நிறத்தையுடைய மலையில்;* ***பவள நீள் கொடி போல் நிறம் பொலிந்தென -*** *நீண்ட பவளக் கொடி போன்றுஅழகிய நிறத்தோடு விளங்குதல் போல;* ***பொலிகின்றான் தனை -*** *விளங்குகின்ற சடாயுவை,*

*விசும்பின் மால்நிறம் சடாயுவின் மேனி நிறத்தால் மறைந்தது எனும் போது அவ்வொளி மேலே வீசுவதைச் சுட்டும். காலின் செந்நிறம் கீழ்ப்புறம் வீசிக் கரிய மலையில் பவளக் கொடி படர்ந்தது போல் விளங்கி நிற்கும் நிலை அதன் சிறப்பைக் கூறும். சேய் என்பது செம்மை என்பதன் விகாரம் நீல் என்பது நீலம் என்பதன் - கடைக்குறை.*

***2694. தூய்மையன், இருங்***
***கலை துணிந்த கேள்வியன்,***
***வாய்மையன், மறு இலன்,***
***மதியின் கூர்மையன்,***
***ஆய்மையின் மந்திரத்து***
***அறிஞன் ஆம் எனச்***
***சேய்மையின் நோக்குறு***
***சிறு கணான்தனை,***

***தூய்மையன் -*** *(உள்ளும் புறமும்) தூய்மை உடையவன்;* ***இருங்கலை துணிந்த கேள்வியன் -*** *மிக்க கல்வியையும் தெளிந்த துணிவையும்கொண்ட கேள்விச் செல்வமுமுடையவன்;* ***வாய்மையன் -****உண்மை உடையவன்;* ***மறுஇலன் -*** *குற்றம் இல்லாதவன்;* ***மதியின் கூர்மையன் -*** *அறிவின் நுட்பமுடையவன்;* ***ஆய்மையின் மந்திரத்து அறிஞன் ஆம் என -*** *ஆராய்ச்சியுடைய மந்திராலோசனையில் வல்ல அறிவுள்ள அமைச்சனைப் போல;* ***சேய்மையின் நோக்குறு -*** *மிகத் தூரத்தில் உள்ளவற்றைக் கண்டறியும்;* ***சிறுகணான் தனை -*** *சிறிய கண்ணுடையவன் ஆகிய சடாயுவை,*

*இருங்கலை துணிந்த கேள்வியன் என்பது பல சாத்திரங்களையும் கற்றும் தக்கோரிடத்துக் கேட்டும் தெளிவு உடையவன், கற்றவை எல்லாம் பின்னர்க் கேள்வியால் துணிவுபெறும். வாய்மை என்பது மெய்யின் தன்மை. மறு என்பது காமம், வெகுளி, மயக்கம் முதலியவை. மதியின் கூர்மை - நுட்பத்தினுள்ளும் நுட்பமாக நுழைந்து ஆயும் நுண்ணறிவு. மந்திரத்து அறிஞன் என்பதன் விளக்கமாக அயோத்தியா காண்ட மந்திரப் படலத்தில் 'உற்றது கொண்டு மேல் வந்து உறு பொருள் உணரும் கோளார்' (1319) 'தெரியும் காலம் மும்மையும் உணர வல்லார்' (1321) எனக் கூறப்பட்டது. சடாயு அறிவு நுட்பமும் கட்புல நுட்பமும் வாய்ந்தவர் என்பதைச் சேய்மையின் நோக்குறு சிறுகணான்' என்ற தொடர் காட்டும். உலகவழக்கில் 'கழுகுக் கண்ணுடையவன்' என்று கூறுதல் இதனை மேலும் விளக்கும். சேயதை நோக்கல் என்பதற்குக் காலமிடையிட்டவற்றையும் தேயமிடையிட்டவற்றையும் அறியும் நுண்ணறிவு என்றும் பகை வெல்லும் அறிவு எனவும் கூறுவர். பறவையுள் பிறப்பினும் சடாயு உடல் தூய்மையும்,கல்வி வேள்வியும், நுண்ணறிவும் பெற்று சேய்மைப் பொருளை அறியவல்லார் என்பதாம்.*

***2695. வீட்டி வாள் அவுணரை,***
***விருந்து கூற்றினை***
***ஊட்டி, வீழ் மிச்சில் தான்***

***உண்டு, நாள்தொறும்***
***தீட்டி, மேல் இந்திரன் சிறு***
***கண் யானையின்***
***தோட்டிபோல் தேய்ந்து***
***ஒளிர் துண்டத்தான்தனை.***

***வாள் அவுணரை வீட்டி -*** *வாளேந்திய கொடிய அசுரர்களை போரில் (உயிரும் உடலும் வேறுவேறாக) விடுவித்து;* ***கூற்றினை விருந்து ஊட்டி -*** *யமனைத் தன் விருந்தாகக் கொண்டு அவர்களை உண்ணச் செய்து;* ***வீழ்மிச்சில் தான் உண்டு -*** *அந்த யமன் உண்டது போகக் கீழே வீழ்ந்த மீதியைத் தான் அருந்தி;* ***நாள்தொறும் தீட்டி -*** *தினமும் மர முதலியவற்றில் தீட்டப் பெற்று;* ***சிறுகண் யானையின் மேல் இந்திரன் தோட்டிபோல் -*** *சிறிய கண்களையுடைய ஐராவதம் என்னும் யானையின் மேல் விளங்கும் இந்திரனுடைய அங்குசம் போல்;* ***தேய்ந்து ஒளிர் துண்டத்தான் தனை -*** *தேய்ந்து விளங்கும் மூக்கை உடைய சடாயுவை,*

*சடாயு அவுணர்களைக் கொன்று அவர்கள் உயிரை யமனுக்கு விருந்தாக்கி மீதியிருக்கும் உடலைத் தான் உண்பவர் என்பதாம், தீயவரை அழிப்பதும், விருத்தோம்பலும் ஆகிய மேலான நெறியில் சடாயு வாழ்பவர் எனத் தெரிகிறது. யானையைச் செலுத்துதற்குக் குத்துவதால் தேய்ந்து விளங்கும் அங்குசம் போல் பகைவர் உடலை உண்டு உண்டு சடாயுவின் மூக்கும் தேய்ந்து விளங்குகிறது. கழுகின் அலகு கூர்மையும் வலிவும் தூய்மையும் உடையது என்பதை இது காட்டும். துண்டம் - பறவையின் அலகு. உருவில் பெரிய யானையின் கண் சிறியது. அது போல் கழுகின் கண்ணும் அளவில் சிறுத்துத் தொலைவில் உள்ளவற்றை நோக்கும்திறமையது.*

*கூற்றினை ஊட்டி - கூற்றுக்கு ஊட்டி என்ற பொருளில் உருபு மயக்கமுமாம். இந்திரன் யானையின் தோட்டி - புகழ்ப் பொருள் உவமை.*

***2696. கோள் இரு-நாலினோடு***
***ஒன்று கூடின***
***ஆளுறு திகிரி போல்***
***ஆரத்தான் தனை,***
***நீளுறு மேருவின்***
***நெற்றி முற்றிய***
***வாள் இரவியின்***
***பொலி மௌலியான்தனை,***

***இரு நாலினோடு ஒன்று கூடின கோள் -*** *எட்டோடு ஒன்று சேர்ந்து ஒன்பதாகிய கிரகங்களை;* ***ஆளுறு திகிரி போல் -****ஆளுதலைக் கொண்ட சிம்சுமாரம் எனும் துருவச்சக்கரம் போல் விளங்கும்;****ஆரத் தான் தனை -*** *நவரத்தின மாலையை உடையவனை;* ***நீளுறு மேருவின் நெற்றி முற்றிய -*** *உயர்ந்த மேருமலையின் உச்சியில் பொருந்திய;* ***வாள் இரவியின் பொலி மௌலியான் தனை -*** *ஒளியுடைய கதிரவன் போல விளங்குகின்ற கிரீடத்தை உடைய சடாயுவை;*

*சடாயுவின் உருவிற்கு மேருவும், தலைக்குச் சிகரமும், கிரீடத்திற்குக் கதிரவனும் உவமை. சடாயு கழுகரசன் ஆதலால் முடியும் ஆரமும் கூறப் பெற்றன. ஆரத்திற்கு சிம்சுமாரம் எனும் துருவசக்கரம் உவமை ஆகிறது. அச்சக்கரம் நவக்கிரகங்களை இயக்குவது என்பது புராணச் செய்தி, நவக்கிரகங்கள் நவமணிக்கு உவமை ஆயின. நிறவேற்றுமையைச் சுட்டுகிறது. நவக்கிரகங்கள் முறையே சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது. நவமணிகளாவன : கோமேதகம், நீலம், பவழம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம்.*

*துருவன் நடுவிலிருந்து சுற்றிக் கொண்டு காற்றின் வடிவான கயிறுகளால் கட்டப் பெற்ற நவக்கிரகங்களையும் சுற்றும் சக்கரம், ஆளுறுதிகிரி எனப்படும். இவ்வுவமைகளால் சடாயுவின் கழுத்தில் விளங்கும் உரோமமும், தலையில் விளங்கும் கொண்டையும் சிறப்பிக்கப் பெற்றன.*

***2697. சொல் பங்கம் உற நிமிர்***
***இசையின் சும்மையை,***
***அல் பங்கம் உற வரும்***
***அருணன் செம்மலை,***
***சிற்பம் கொள் பகல் எனக்***
***கடிது சென்று தீர்***
***கற்பங்கள் எனைப் பல***
***கண்டுளான்தனை,***

***சொல் பங்கம் உற நிமிர் இசையின் சும்மையை -*** *சொற்கள் கூறமுடியாமல் தோல்வியுறும்படி வளர்கின்ற புகழின் பெரும் தொகுதி போன்றவனை;* ***அல்பங்கம் உற வரும் அருணன் செம்மலை -****இருள் அழிவடையும்படி தோன்றும் அருணனின் மகனை;* ***கற்பங்கள் எனைப் பல-*** *பல கல்ப காலங்களை;* ***கடிது சென்று தீர் சிற்பங்கொள் பகல் என -*** *விரைவில் கழியும் சிறுமையுற்ற நாட்களைப் போல;* ***கண்டுளான் தனை -*** *கண்டுள்ள சடாயுவை*

*இதனால் சடாயு மிக்கபுகழும், நீண்ட வாழ்நாளும் கொண்டவர் என்க. இவன் புகழைச் சொல்லச் சொல்ல தீராது என்பதைச் 'சொல் பங்கம் உறநிமிர் இசை' என்ற தொடர் சுட்டும். அருணன் கதிரவனின் தேரோட்டி, அருணன் உதயமானால் இருள் இரிந்தோடுவதால் 'அல்பங்கம் உற வரும் அருணன்' எனப்பட்டான். சிற்பம் - சிறுமை, அற்பம்*

***2698. ஓங்கு உயர் நெடுவரை ஒன்றில்***
***நின்று, அது***
***தாங்கலது இரு நிலம்***
***தாழ்ந்து தாழ்வுற***
***வீங்கிய வலியினில்***

***இருந்த வீரனை-***
***ஆங்கு அவர் அணுகினர்,***
***அயிர்க்கும் சிந்தையார்.***

***ஓங்கு உயர் நெடுவரை ஒன்றில் நின்று -*** *மிக உயர்ந்த பெரிய மலை ஒன்றில் தங்கியிருந்து;* ***அது தாங்கலது இருநிலம் தாழ்ந்து தாழ்வுற-*** *அம்மலை தன்னைத் தாங்க முடியாமல் பெரிய பூமியில் புதைந்து ஆழ்ந்து போக;* ***வீங்கிய வலியினில் இருந்த வீரனை -*** *மிக்க பலத்தோடு இருந்த வீரனாம் அச்சடாயுவை;* ***அவர் ஆங்கு அயிர்க்கும் சிந்தையார் அணுகினர் -*** *இராமலக்குவர் அவ்விடத்தில் ஐயமுற்ற மனமுடையவராய் அருகே சென்றனர்.*

*அவர் தங்கியிருந்த மலை அவர் உடற் பொறையைத் தாங்காமல் பூமியில் ஆழ்ந்த தால் அவர் வலிமை புலப்படும். சடாயு தங்கியிருந்த மலை பிரசரவணம் எனப்படும். இராமலக்குவர் ஐயுறக்காரணம் அவருடைய பேருருவைக் கண்டு அரக்கனோ என எண்ணியதாம்.*

*இராம-இலக்குவரும், சடாயுவும் ஒருவரை ஒருவர் ஐயுறல்*

***2699. 'இறுதியைத் தன்வயின்***
***இயற்ற எய்தினான்***
***அறிவு இலி அரக்கன் ஆம்;***
***அல்லனாம் எனின்,***
***எறுழ் வலிக் கலுழனே?***
***என்ன உன்னி, அச்***
***செறி கழல் வீரரும்,***
***செயிர்த்து நோக்கினார்.***

***அச் செறி கழல் வீரரும் -*** *அந்த நெருங்கிய வீரக்கழல் அணிந்த வீரர்களாம் இராமலக்குவர்களும்; (இவன்)* ***தன்வயின் இறுதியை இயற்ற எய்தினான் -*** *தனக்குச் சாவை உண்டாக்கிக் கொள்ள இங்கு வந்தவனாம் இவன்;* ***அறிவு இலி அரக்கன் ஆம் -*** *அறிவற்ற யாரோ ஓர் அரக்கன் ஆவான்;* ***அல்லன் ஆம் எனின் -*** *அவ்வாறு அரக்கன் அல்லாதவன்ஆனால்;* ***எறுழ் வலிக் கலுழனே -*** *மிக்க வலிமையுடைய கருடனேஆவான்;* ***என்ன உன்னி -*** *என்று எண்ணி;* ***செயிர்த்து நோக்கினார் -*** *சந்தேகப்பட்டுப் பார்த்தனர்.*

*தன்வயின் இறுதி இயற்ற என்பதற்குத் தன்மூலமாக இராமலக்குவர்க்கு அழிவைச் செய்ய என்று கூறலுமாம். நல்லறிவின்றித் தீயவழிப் புகுந்து தனக்குத் தானே அழிவைத் தேடியதால் 'அறிவிலி அரக்கன்' எனப்பட்டான். எறுழ் வலி - ஒருபொருட்பன்மொழி. இது வடிவு பற்றி வந்த ஐயநிலை உவமையணி.*

***2700. வனை கழல் வரி சிலை***
***மதுகை மைந்தரை,***
***அனையவன்தானும் கண்டு,***
***அயிர்த்து நோக்கினான்-***
***'வினை அறு நோன்பினர்***
***அல்லர்; வில்லினர்;***
***புனை சடை முடியினர்;***
***புலவரோ?' எனா***

***அனையவன் தானும் -*** *அச்சடாயு தானும்;* ***வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை -*** *கட்டிய வீரக்கழலையும் கட்டமைந்த வில்லையும் வலியையும் உடைய (தயரதன்) மக்களை;* ***கண்டு -*** *பார்த்து;* ***வினை அறு நோன்பினர் அல்லர் -*** *இருவினைகளை அறுத்திட முயலும் தவசிகள் அல்லர்; (மாறாக)* ***வில்லினர் -*** *வில்லுடையவராக விளங்குகின்றனர்;* ***புனை சடை முடியினர் -*** *தரித்த சடையோடு கூடிய முடியுடையவராயுள்ளனர்; (அதனால்)* ***புலவரோ -*** *தேவர்களோ;* ***எனா அயிர்த்து நோக்கினான் -*** *என்று எண்ணி ஐயுற்றான்*

*தவம் புரிகின்ற முனிவர் சடைமுடி பூண்டிருப்பர். ஆயின் வில்லேந்தி வாரார். இதனால் சடாயு ஐயுறுதற்குக் காரணம் ஏற்பட்டது. இராமலக்குவர் திருமேனியின் ஒளி கண்டு தேவரோ என எண்ணினார் எனலுமாம்.*

*இராமலக்குவர் சடாயுவைப் பார்த்து 'நீ யார்?' என்று கேட்ட போது நான் உன் தந்தை தயரதன் நண்பன் என்று என்னைத் தெரிந்து கொள்' என விடை கூறியதாக வான்மீகம் கூறும்.*

***2701. 'புரந்தரன் முதலிய***
***புலவர் யாரையும்***
***நிரந்தரம் நோக்குவென்;***
***நேமியானும், அவ்***
***வரம் தரும் இறைவனும்,***
***மழுவலாளனும்,***
***கரந்திலர் என்னை; யான்***
***என்றும் காண்பெனால்,***

***புரந்தரன் முதலிய புலவர் யாரையும் -*** *இந்திரன் முதலான தேவர்கள் அனைவரையும்;* ***நிரந்தரம் நோக்குவென் -*** *எப்போதும் பார்ப்பேன்;* ***நேமியானும் -*** *சக்கரப்படையுடைய திருமாலும்;* ***அவ்வரம் தரும் இறைவனும் -*** *விரும்பிய வரங்களை அளிக்கும் அந்தப் பிரமனும்;* ***மழுவலாளனும் -*** *மழுப்படையுடைய சிவபெருமானும்;* ***என்னைக் கரந்திலர் -*** *எனக்கு மறைந்து கொள்ளமாட்டார்கள்;* ***என்றும் யான்காண்பென் -*** *எப்போதும் நான் அவர்களைப் பார்ப்பேன்;* ***ஆல் -*** *ஈற்றசை.*

*முன்னைய பாடலில் புலவரோ என ஐயுற்றதனை இதில் மேலும் விளக்கிக் காட்டுவார். 'கரந்திலர் என்னை; யான் என்றும் காண்பெனால்' என்றதால் இவர்கள்*

*அத்தேவர்கள் அல்லர் என்பது புலப்படும். இச்செய்யுளால் சடாயு நாள்தோறும் திருமால், பிரமன், சிவபெருமான் ஆகியோரை நேரில் கண்டு வழிபாடு செய்பவர் என்பது பெறப்பட்டது. சடாயு சிவனை வழிபடப் புள்ளிருக்கும். வேளூர்க்கும், திருமாலை வழிபடத் திருப்புட்குழிக்கும் செல்வார் என்பதைச் சம்பந்தர் தேவாரமும் திருப்புள்ளிருக்கும் வேளூர்ப் பற்றிய (2.43.1. 4, 6, 9, 10 தருமைப் பதிப்பு) திருமங்கை மன்னர் பெரிய திருமொழிப் பாடலும் கூறும். (பெரிய திரு. 2.7.8) பிரமனை நோக்கியே பெரிதும் வரம் பெற முயல்வதை எண்ணி 'வரந்தரும் இறைவன்' எனப்பட்டார். (சடாயு சூரியனின் மகனெனச் சம்பந்தர் குறிப்பிடுவதை எண்ணிப் பார்க்கத்தக்கது 2.43.9 தருமைப் பதிப்பு) என்னை- உருபுமயக்கம்.*

***2702. 'காமன் என்பவனையும்,***
***கண்ணின் நோக்கினேன்;***
***தாமரைச் செங் கண் இத்***
***தடக் கை வீரர்கள்***
***பூ மரு பொலங் கழற்***
***பொடியினோடும், ஒப்பு***
***ஆம் என அறிகிலென்;***
***ஆர்கொலாம் இவர்?***

***காமன் என்பவனையும்** - மன்மதன் என்று அழகிற் சிறப்பித்துச்சொல்லப்படுகின்றவனையும்; **கண்ணின் நோக்கினேன்** -கண்ணால் கண்டுள்ளேன்; **தாமரைச் செங்கண் இத்தடக்கை வீரர்கள்** -தாமரை இதழ் போன்ற சிவந்த கண்களையும் நீண்ட கைகளையுமுடைய இந்த வீரர்களின்; **பூமரு பொலங் கழற் பொடியினோடும்** - தாமரை மலர்போன்ற பொற் பாதங்களில் ஒட்டிய தூளியோடும்; **ஒப்பு ஆம் என அறிகிலென்** - ஒப்பாவான் என்று அறிகின்றேனில்லை; **இவர் ஆர்கொலாம்** - இவ்வீரர்கள் யாவரோ? 'ஒப்பாம் என அறிகிலேன்' என்றதால் 'ஒப்பாக மாட்டான் என அறிவேன்' என்பது தெளிவு. இவை இரு பாட்டாலும் சடாயு இராமலக்குவரைப் புலவரல்லர் எனத் தெளிந்தமை கூறப்பட்டது. இவர்கள் இருவராக இருந்ததாலும் புரந்தரன் முதலியோர் கொண்டுள்ள வச்சிரப்படை முதலியவை காணப் பெறாமையாலும் இம்முடிவுக்குச் சடாயு வந்தார். பழைய இராமாயணத் தனிச் செய்யுளில் சாம்பவன் கூற்றில் 'அலைகடல் கடையக் கண்டேன்' எனத் தொடங்கிச் 'சிலை மதன் வடிவுகண்டேன்' என்ற தொடர் காணப்படுகிறது. இதனால் சடாயுவும் மன்மதன் சிவபெருமானால் எரிக்கப்படாமைக்கு முன் கண்ட செய்தி வெளிப்படுகிறது.*

***2703. 'உலகு ஒரு மூன்றும் தம்***
***உடைமை ஆக்குறும்***
***அலகு அறும் இலக்கணம்***
***அமைந்த மெய்யினர்;***
***மலர்மகட்கு உவமையா***
***ளோடும் வந்த இச்***
***சிலை வலி வீரரைத்***
***தெரிகிலேன்' எனா,***

***உலகு ஒரு மூன்றும் தம் உடைமை ஆக்குறும் -*** மூன்று உலகங்களையும் தமக்குரிய பொருளாகச் செய்யவல்ல; ***அலகு அறும் இலக்கணம் அமைந்த மெய்யினர் -*** அளவு சொல்ல முடியாத நல்ல ஆண்மக்களின் இலட்சணங்களோடு கூடிய திருமேனிகளை உடையவர்களாய்; ***மலர்மகட்கு உவமையாளோடும் -*** தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் திருமகளுக்கு உவமையாகக் கூறத்தக்க பெண்ணோடும்; ***வந்த இச் சிலை வலி வீரரைத் தெரிகிலேன் எனா -*** இங்கு வந்த இந்த வில் வலிமையுடைய வீரர்களை இன்னார் என அறியேன் எனக் கருதி,

*இவர்களின் உடல் உறுப்பின் இலக்கணங்களைப் பார்க்கும் போது இவர்கள் சுவர்க்கம், பூமி, பாதலம் ஆகிய மூன்று உலகங்களுக்கும் உரியவராதல் வேண்டும் என்றும், சீதையின் தெய்வத் தன்மையை அறிந்து திருமகள் போன்றவள் என்றும் சடாயு எண்ணுகிறார். முன்னர்க் காமனை இராமலக்குவர்க்கு உவமை ஆகான் எனக் கூறிய சடாயு சீதைக்குத் திருமகளை ஒப்புமை கூறியது காப்பிய நோக்குடன் ஒத்துச் செல்கிறது. மிதிலைக் காட்சிப் படலத்தில் சீதையின் உரு வெளிப்பாடு கண்ட இராமனும் 'பூமகள் ஆகும் கொலோ' (620) எனக் காப்பியப் போக்குக்கு ஏற்ப எண்ணியது ஒப்பிடத்தக்கது.*

***2704. 'கரு மலை செம் மலை***
***அனைய காட்சியர்;***
***திரு மகிழ் மார்பினர்; செங்***
***கண் வீரர்தாம்,***
***அருமை செய் குணத்தின் என்***
***துணைவன் ஆழியான்***
***ஒருவனை, இருவரும்***
***ஒத்துளார்அரோ.'***

***கருமலை செம்மலை அனைய காட்சியர் -*** நீல மலையையும் பொன் மலையையும் போன்ற தோற்ற முடையவர்களும்; ***திருமகிழ் மார்பினர் -*** வெற்றித் திருமகள் மகிழ்ந்து வீற்றிருக்கும் மார்பை உடையவர்களுமான; ***செங்கண் வீரர் இருவரும் -*** சிவந்த கண்களை உடைய இருவீரர்கள்; ***அருமைசெய் குணத்தின் என் துணைவன்ஆழியான் ஒருவனை ஒத்துளார் -*** பெறற்கரிய நற்பண்புகளை உடைய என் நண்பனாம் தயரத சக்கரவர்த்தியைப் போன்று இருக்கின்றனர்;***தாம் அசை, அரோ -*** ஈற்றசை.

*கருமலை - இந்திர நீல மலை. செம்மலை - செம்பொன்னிறமுள்ள மேருமலை. இராமனுக்குக் கரு மலையும், இலக்குவனுக்குச் செம்மலையும் உவமை. அரக்கர்களை அழிக்கச் சினத்தால் சிவந்த கண்கள் எனவும், தாமரை மலர் போன்ற சிவந்த கண்கள் எனவும் கூறலாம். திருமாலைச் 'செங்கண் மால்' என்பதால் இராமலக்குவர் திருமாலின் அம்சம் என்பது குறிப்பால் பெறலாம். தந்தையின் சாயல் மக்களிடம் இருப்பது இயல்பு. இதனால் 'ஆழியான் ஒருவனை இருவரும் ஒத்துளார்' எனச் சடாயு கருதினார். தாம் - துணிவுப் பொருளுணர்த்தும் இடைச் சொல்லுமாம். அரோ வியப்புப் பொருள் தரும் இடைச்சொல் எனலுமாம்.*

*'நீவிர் யார்?' எனச் சடாயு வினவுதல்*

***2705. எனப் பல நினைப்புஇனம்***
***மனத்துள் எண்ணுவான்,***
***சினப்படை வீரர்மேல் செல்லும்***
***அன்பினான்,***
***'கனப் படை வரி சிலைக் காளை***
***நீவிர் யார்?***
***மனப்பட, எனக்கு உரைவழங்***
***குவீர்' என்றான்.***

***எனப்பல நினைப்பு இனம் மனத்துள் எண்ணுவான் -*** *என்று பல எண்ணங்களின் தொகுதியை உள்ளத்தில் நினைப்பவரும்;* ***சினப்படை வீரர்மேல் செல்லும் அன்பினான் -*** *கொடிய ஆயுதங்களை உடைய அவ்வீரரிடத்துச் செல்வதற்கான அன்பினை உடையவருமான சடாயு;* ***கனப்படை வரிசிலைக் காளை நீவிர் யார் -*** *வலிய ஆயுதமாகிய கட்டமைந்த விற்படை கொண்ட காளை போன்றவர்களே நீங்கள் யாவர்?;* ***மனப்பட எனக்கு உரை வழங்குவீர் என்றான் -*** *என் உள்ளத்தில் பதியும்படி மறுமொழி கூறுங்கள் எனக் கேட்டுக் கொண்டார். பலவேறு பட்ட ஐயவுணர்கள் கொண்ட சடாயு தம் நண்பன் தயரதனின் சாயலை இராமலக்குவரிடம் கண்டதால் அவ்விருவர் மீதும் மிக்க பரிவு கொண்டதால் 'நீவீர் யார்?' எனக் கேட்டதுடன் 'என மனத்தில்பதியும்படி கூறுங்கள்' என வேண்டிக் கொண்டார். நினைப்பு இனம் - பல எண்ணங்களின் கூட்டம் இவற்றின் விளக்கத்தை முந்திய பாடல்களில் கண்டோம் (2700 - 2704).*

*'தயரதன் மைந்தர்' எனக் கேட்டு, சடாயு மகிழ்தல்*

***2706. வினவிய காலையில்,***
***மெய்ம்மை அல்லது***
***புனை மலர்த்***
***தாரவர் புகல்கிலாமையால்,***
***'கனை கடல் நெடு நிலம்***
***காவல் ஆழியான்,***
***வனை கழல் தயரதன்,***
***மைந்தர் யாம்' என்றார்.***

***வினவிய காலையில் -*** *கேட்ட பொழுது;* ***மெய்ம்மை அல்லதுபுகல்கிலாமையால் புனை மலர்த் தாரவர் -*** *உண்மை அல்லாமல் வேறொன்றைப் பேசுவதில்லை ஆதலால் அழகிய பூமாலை அணிந்த இராமலக்குவர்;* ***கனை கடல் நெடுநிலம் காவல் ஆழியான் -*** *ஒலிக்கும் கடலாற் சூழ்ந்த பெரிய உலகம் யாவையும் காக்கும் ஆணைச் சக்கரமுடையவனும்;* ***வனை கழல் தயரதன் மைந்தர்யாம் என்றார் -*** *தரித்த வீரக்கழலுடையவனுமாகிய தயரதனுடைய மக்கள் நாங்கள்' எனக் கூறினர்.*

*முன்னம் அறியாதவரிடம் உண்மையைக் கூறக் கூடாது என்பதுஅரசியல் நீதி. எனினும் இராமலக்குவர் எத்தகையோரிடமும் அஞ்சாது உண்மை கூறும் தனிப் பண்புடையவர்களாவர். புனை - அழகு தயரதன் - தசரதன் என்பதன் திரிபு. பத்துத் திக்குகளிலும் தன் தேரைச் செலுத்தி வெற்றி கண்டவன்; அரக்கர் தேர் பத்தை வென்றவன்; கருடனைத் தன் தேர்க் கொடியாகக் கொண்டவன் எனவும் பல காரணம் கூறுவர்.*

*புகல்கிலாமை என்பதிலுள்ள கில் என்பது உறுதிப் பொருளை உணர்த்தும் இடைநிலை.*

***2707. உரைத்தலும், பொங்கிய***
***உவகை வேலையன்,***
***தரைத்தலை இழிந்து அவர்த்***
***தழுவு காதலன்,***
***'விரைத் தடந் தாரினான்,***
***வேந்தர் வேந்தன்தன்,***
***வரைத் தடந் தோள் இணை***
***வலியவோ?' என்றான்.***

***உரைத்தலும் -*** *என்று அவர்கள் சொன்னதும்;* ***பொங்கிய உவகை வேலையன் -*** *கிளர்ந்த மகிழ்ச்சியாம் கடல் போன்றவரான அச் சடாயு;* ***தரைத் தலை இழிந்து அவர்த் தழுவு காதலன் -*** *அம்மலை உச்சியிலிருந்து பூமியில் இறங்கி வந்து அவர்களைத் தழுவிக் கொள்ளும் அன்புடைவனாய்;* ***விரைத் தடந்தாரினான் -*** *மணம் பொருந்திய பெரியமாலை அணிந்தவனான;* ***வேந்தர் வேந்தன் தன் -*** *அரசர்க்கரசனான தயரதனின்;* ***வரைத் தடந்தோள் இணை வலியவோ என்றான் -*** *மலை போல அகன்று விளங்கும் தோளிரண்டும் வலியனவாக உள்ளனவா எனக் கேட்டார்.*

*தயரதன் மைந்தர் எனக் கேட்டதும் சடாயு தன் நண்பனின் இனிய வாழ்வு பற்றி வினவினார் என்க. அரசர் எனும் முறையால் 'தோள் இணை வலியவோ' என்று கேட்டார். பகைவர்களை அழித்து, உலகைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏந்தியவை அரசர்களின் தோள்களாம். 'வரை தடந்தாரினிர்' எனக் கொண்டு இராமலக்குவரை விளித்தாகக் கொள்வதுமுண்டு.*

*தயரதன் மறைவுகேட்டு, சடாயு அரற்றல்*

***2708. 'மறக்க முற்றாத தன் வாய்மை***
***காத்து அவன்***
***துறக்கம் உற்றான்' என,***
***இராமன் சொல்லலும்,***
***இறக்கம் உற்றான் என***
***ஏக்கம் எய்தினான்;***

**உறக்கம் உற்றான் என**
**உணர்வு நீங்கினான்.**

**அவன் மறக்க முற்றாத தன் வாய்மை காத்து துறக்கம் உற்றான் -** தயரதன் மறக்கக் கூடாததான தமக்குரிய சத்தியத்தைப் பாதுகாத்துச் சுவர்க்கம் அடைந்தார்; **என இராமன் சொல்லலும் -** என்று இராமன் கூறியதும்; **இறக்கம் உற்றான் என ஏக்கம் எய்தினான் -** தயரதன் மரணமடைந்தான் எனப் பெரிய ஏமாற்றம் அடைந்து; **உறக்கம் உற்றான் என உணர்வு நீங்கினான் -** தூக்கத்தில் ஆழ்ந்தவன் போல அறிவு நீங்கப் பெற்றார்.

*தயரதன் இறந்ததைக் காரணத்தோடு இராமன் கூறியதும் சடாயு பெருந் துன்பமுற்று அறிவுணர்வு சோர்ந்தார் என்பதாம். தயரதன் வாய்மை காத்து அதனால் உயிர் துறந்தார் என்பதை 'மெய் விடக் கருதாது விண் ஏறினான்' எனச் சடாயு பின்னர்க் கூறுவதாலும் (2717) வாலி வதைப் படலத்தில் வாலி தயரதனை 'வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' (4018) எனக் கூறுவதாலும் தயரதன் வாய்மை காத்த நிலை நன்கு புலனாகும்.ஏக்கம் - ஏமாற்றம் தயரதன் சடாயுவிடம் முன்னர் 'நீ உடல் தான் ஆவி' (2712) என்று கூறியதை நினைவிற் கொள்வதால் சடாயுவுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை இது குறிக்கும்.*

*உறக்கம் - சாவு எனலுமாம். பின்வரும் பாடல் இதைக் காட்டும் (2709).*

**2709. தழுவினர், எடுத்தனர், தடக் கையால்; முகம்**
**கழுவினர் இருவரும், கண்ணின் நீரினால்;**
**வழுவிய இன் உயிர் வந்த மன்னனும்,**
**அழிவுறு நெஞ்சினன், அரற்றினான்அரோ.**

**இருவரும் -** இராமலக்குவராம் இருவரும்; **தடக்கையால் தழுவினர் எடுத்தனர் -** பெரிய கைகளால் தழுவி எடுத்தவர்களாய்;**கண்ணின் நீரினால் முகம் கழுவினர் -** கண்ணீரால் சடாயுவின் முகத்தைக் கழுவினார்கள்; **வழுவிய இன்உயிர் வந்த மன்னனும் -** நீங்கியது எனக் கருதப் பெற்ற இனிய உயிர் திரும்பவும் வரப் பெற்ற கழுகரசனும்;**அழிவுறு நெஞ்சினன் அரற்றினான் -** மனம் அழிந்தவனாய்ப் பின்வருமாறு வாய்விட்டுப் புலம்பினான்; **அரோ -** ஈற்றசை.

*தயரதனின் மரணத்தைக் கேட்ட சடாயு உணர்வு நீங்கினார். அவரைத் தழுவி எடுத்துத் தம் கண்ணீரால் நீராட்டினர் இராமலக்குவர். அவர்அவ்வாறு ஆவன செய்ததால் சடாயுவுக்கு மூர்ச்சை தெளிந்து உணர்வு வந்தது. தம் நண்பன் இறந்த துன்பம் பெருக அவர் புலம்பலானார். தடக்கை - முழந்தாள் அளவு நீண்டகை, கண்ணீராற் கழுவுதல், பரதன் வசிட்ட முனிவனோடு தயரதனின் உருவைக் கண்டழுத நிலையில் 'கண்ண நீரினால் கழுவி ஆட்டினான்' என்ற நிலையோடு ஒப்பிடற் குரியது (2225).*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***2710. 'பரவல் அருங்கொடைக்கும், நின்தன் பனிக்குடைக்கும்,***
***பொறைக்கும், நெடும் பண்பு தோற்ற***
***கரவல் அருங் கற்பகமும், உடுபதியும்,***
***கடல் இடமும், களித்து வாழ-***
***புரவலர்தம் புரவலனே! பொய்ப் பகையே!***
***மெய்க்கு அணியே! புகழின் வாழ்வே!-***
***இரவலரும், நல் அறமும், யானும், இனி***
***என் பட நீத்து ஏகினாயே?***

***புரவலர் தம் புரவலனே -*** *மன்னர்க்கெல்லாம் மன்னனே!,* ***பொய்ப் பகையே -*** *பொய்க்குப் பகைவனே!;* ***மெய்க்கு அணியே -****உண்மைக்கு அணிகலம் ஆனவனே!;* ***புகழின் வாழ்வே -*** *புகழுக்கு வாழ்விடமாய் இருப்பவனே!;* ***நின்தன்பரவல் அரும் கொடைக்கும் -****உன்னுடைய புகழ்வதற்குரிய ஈகைக்கும்;* ***பனிக்குடைக்கும் -*** *குளிர்ந்த வெண் கொற்றக்குடைக்கும்;* ***பொறைக்கும் -*** *பொறுமைக்கும்;* ***நெடும் பண்பு தோற்ற -*** *பெரிதும் குணம் மாறுபட்டுத் தோற்றுவிட்ட;* ***கரவல் அரும் கற்பகமும் -*** *இரப்போர்க்கு ஈவதில் ஒளிக்காத கற்பக மரமும்;* ***உடுபதியும் -*** *விண்மீன்களின் தலைவனான சந்திரனும்;* ***கடல் இடமும் -****கடலால் சூழ்ந்துள்ள உலகமும்;* ***களித்து வாழ -*** *மகிழ்ந்து வாழும்படியாக;* ***இரவலரும் நல் அறமும் யானும் -*** *உன்னிடம் வந்து இரப்போரும் சிறந்த தருமமும் நானும்;* ***இனி என்பட நீத்து ஏகினாயே -*** *இனிமேல் என்ன துன்பப்பட எங்களை விட்டுப் போனாய்?* ***ஏ -*** *ஈற்றசை.*

*தயரதன் இறந்ததால் இனித் தன்னைவிடப் பிறர்க்கு ஈவோர் யாரும் இல்லை எனக் கற்பக மரம் மகிழ்ந்தது. அவர் ஆட்சிக்குடை உலகில் நிலைத்து வளர்ந்து நிழல்தந்து பகையை நீக்கியதால் இனி அதன் தன்மை அழிந்தது எனச் சந்திரன் மகிழ்ந்தான். அவன் பொறுமையில் சிறந்தவர் என்ற நிலை மாறி அப்புகழ் தன்னிடம் வரும் என நிலம் மகிழ்ந்தது. இனிச் சம்பரனை வென்று விண்ணரசை இந்திரனுக்குத் தயரதன் வாழ்வளித்ததால் (322) கற்பகம் மகிழ்ந்தது எனலாம். சந்திரனையும் தயரதன் குடையையும் ஒப்பிட்டு 'மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து, தேய்வு இன்றி, தன் நிழல் பரப்பவும் இருளைத் தள்ளவும் அண்ணல் தன் குடை மதி அமையவும்' (176) என்ற பாடல் வரிகள் ஒப்பிடத்தக்கவை. 'வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர் செய் எனத்' தயரதன் தன்னைக் காத்து நின்ற (179) நிலை மாறியது என நிலம் மகிழ்ந்தது எனவும் கூறலாம். இழிந்த கழுகு எனக் கருதாமல் தன்னை நட்பாகக் கொண்டவன் இறந்ததால் இனித் தங்க வேறு இடமில்லை எனச் சடாயு வருந்தினார். கொடைக்குக் கற்பகம், குடைக்கு உடுபதி, பொறைக்குக் கடலிடம் என நிரல் நிரையாக அமைந்துள்ளதால் இது நிரல்நிறை அணி.*

*பரவு அலரும் கரவு அலரும் எனக் கொண்டு புகழ் விரிந்த, கரத்தால் உண்டாகிய எனவும் பொருள் கொள்வர்.*

***2711. 'அலங்காரம் என உலகுக்கு அமுது அளிக்கும்***
***தனிக் குடையாய்! ஆழி சூழ்ந்த***
***நிலம் காவல்அது கிடக்க, நிலையாத***
***நிலை உடையேன் நேய நெஞ்சின்***

***நலம் காண நடந்தனையோ? நாயகனே!***
***தீவினையேன், நண்பினின்றும்,***
***விலங்கு ஆனேன் ஆதலினால், விலங்கினேன்;***
***இன்னும் உயிர் விட்டிலேனால்.***

***நாயகனே -*** *தலைவனே!,* ***உலகுக்கு அலங்காரம் என அமுது அளிக்கும் தனிக் குடையாய் -*** *உலக உயிர்களுக்கு அழகைத் தருமென்று சொல்லத் தேவாமிர்தம் போன்ற அருள் அளிக்கும் ஒப்பற்ற வெண் கொற்றக் குடை உடையவனே!;* ***ஆழி சூழ்ந்த நிலங்காவல் அது கிடக்க -*** *கடல் சூழ்ந்த பூவுலகின் காவல் தொழில் தடைப்பட்டு நிற்கவும்;* ***நிலையாத நிலை உடையேன் -*** *நிலையற்ற நிலையுடைய எனது;* ***நேய நெஞ்சின் நலம்காணநடந்தனையோ -*** *அன்புள்ள உள்ளத்தின் நன்மையைக் கண்டறிய இவ்வுலகை விட்டுப் போனாயோ?;* ***தீவினையேன் நண்பினின்றும் விலங்கு ஆனேன் -*** *பாவம் புரிந்த நான் நட்பிலிருந்து நீங்கிய விலங்குச் சாதியில் பிறந்தவன்,* ***ஆதலினால் விலங்கினேன் -*** *ஆதலால் நட்பில் தவறியவனாய்;* ***இன்னும் உயிர் விட்டிலேன் -*** *இன்னமும் உயிர் விடாது வாழ்கிறேன்;* ***ஆல் -*** *ஈற்றசை.*

*அரசனின் வெண் கொற்றக் குடை வெளிப்படையாக அழகுடன் தோன்றினாலும் உண்மையில் உலகளிக்கும் அருள் கொண்டதாம். தனிக்குடையாய் ஒப்பற்ற குடையை உடைய பேரரசன். அரசனின் குடை 'வெயின் மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய குடி மறைப்பதுவே' என்ற புறப்பாடல் வரிகள் ஒப்பிடற்குரியன (புறம்35.20-21). விலங்காய் இருப்பதால் தான் இன்னும் உயிர்விடவில்லை எனச் சடாயு தம் பிறப்பின் இழிநிலையைக் குறிக்கிறார். இல்லாதிருப்பின் உடன் உயிர் விட்டிருப்பது குறிப்பு.*

*இதனால் தலையாய நட்பினர் நண்பர் மறைவைக் கேட்டவுடனே உயிர் துறக்கும் நிலை வெளிப்படுகிறது. நிலையாத நிலை என்பது உறுதியற்ற மனநிலையையும் எப்போதும் திரிகின்ற உடல் நிலையையும் காட்டும்.*

*விலங்கு என்பது இங்குப் பறவை நிலையையும் உள்ளடக்கியுளது.*

*ஏகினாய் - என்பது இறந்தமையைக் காட்டும் மங்கல வழக்கு.*

*2712.* ***'தயிர் உடைக்கும் மத்து என்ன உலகை நலி***
***சம்பரனைத் தடிந்த அந் நாள்,***
***அயிர் கிடக்கும் கடல் வலயத்தவர் அறிய,***
***"நீ உடல்; நான் ஆவி" என்று***
***செயிர் கிடத்தல் செய்யாத திரு மனத்தாய்!***
***செப்பினாய்; திறம்பா, நின் சொல்;***
***உயிர் கிடக்க, உடலை விசும்பு ஏற்றினார்,***
***உணர்வு இறந்த கூற்றினாரே.***

***செயிர் கிடத்தல் செய்யாத திரு மனத்தாய் -*** *குற்றம் சிறிதும் தங்காத அழகிய மனத்தை உடையவனே!;* ***தயிர் உடைக்கும் மத்து என்ன-*** *தயிர்க் கட்டியை உடைத்துச் சிதறச்*

*செய்யும் மத்துப் போல;* ***உலகை நலி சம்பரனைத் தடிந்த அந்நாள் -*** *உலக உயிர்களை வருத்திய சம்பராசுரனை வெட்டி வீழ்த்திய அன்று;* ***அயிர் கிடக்கும் கடல் வலயத்தவர் அறிய -*** *நுண் மணல் படிந்து கிடக்கும் கடல் சூழ்ந்த உலகினர் அறியுமாறு;* ***நீ உடல் நான் ஆவி என்று செப்பினாய் -*** *நீ உடல் என்றும் நான் உயிர் என்றும் கூறினாய்;* ***நின் சொல்திறம்பா -*** *உன்னுடைய அச்சொற்கள் மாறுபடா;* ***உயிர் கிடக்க உடலை விசும்பு ஏற்றினார் -*** *(ஆயினும்) உயிர் இம்மண்ணில் இருக்க உடம்பை விண்ணிற்குக் கொண்டு போனார்;* ***உணர்வு இறந்த கூற்றினார் -*** *அறிவில்லாத யமன்;* ***ஏ -*** *ஈற்றசை.     சம்பரனை அழித்த செய்தி, பாலகாண்டத்தில் விசுவாமித்திரன் புகழுரையில் 'சம்பரனைக் குலத்தோடும் தொலைத்து நீ கொண்டு அன்று அளித்த அரசு அன்றோ புரந்தரன் இன்று ஆள்கின்றது (322) என்றதொடராக வெளிப்படும். அப்போது சடாயு தயரதனுக்கு உதவியதால் 'நீ உடல் நான் ஆவி' எனக் கூறினான். அதை எண்ணிய சடாயு, உலகில் யமன் உயிரைக் கொண்டு உடலை விட்டுச் செல்லும் இயல்புக்கு மாறாக உயிரை விட்டு விட்டு உடம்பாம் தயரதனைக் கொண்டு சென்றதை எண்ணி வருந்துகிறார். யமனின் அறிவற்ற செயலை எண்ணி உணர்வு இறந்த கூற்றினார் என்றார். கூற்றினார் என்பது யமனின் இழிந்த செயலை எண்ணி இகழ்ந்த எள்ளல் வெளிப்படும்.*

*உலகுக்குத் தயிரும் சம்பரனுக்கு மத்தும் உவமை. இதனைச் சிந்தாமணியுள் 'ஆயர் மத்தெறி தயிரினாயினார்' என்பதுடன் (சீவக. 421) ஒப்பிடலாம்.*

*"உணர்வு இறந்த கூற்றினார்' என்ற தொடரை உயிர் கிடக்க உடலை விசும்பு ஏற்றினார் என்ற தொடர் சமர்த்தித்து நின்றதால் இது தொடர்நிலைச் செய்யுட் குறியணி.*

***2713. 'எழுவது ஓர் இசை பெருக, இப்பொழுதே,***
***ஒப்பு அரிய எரியும் தீயில்***
***விழுவதே நிற்க, மட மெல்லியலார்-***
***தம்மைப்போல் நிலத்தின்மேல் வீழ்ந்து***
***அழுவதே யான்?' என்னா, அறிவுற்றான்***
***என எழுந்து, ஆங்கு அவரை நோக்கி,***
***'முழுவது ஏழ் உலகு உடைய மைந்தன்மீர்!***
***கேண்மின்' என முறையின் சொல்வான்:***

***எழுவது ஓர் இசை பெருக -*** *உண்டாகும் ஒப்பற்ற புகழ் வளர்ந்தோங்கும்படி;* ***இப்பொழுதே ஒப்பு அரிய எரியும் தீயில் விழுவதே நிற்க -*** *தயரதன் மறைவைக் கேட்ட இக்கணமே ஒப்புரைக்க முடியாத சுடர் விட்டு எரியும் நெருப்பில் வீழ்ந்து மடியும் செயலைச் செய்யாமல் விட்டு;* ***மடமெல்லியலார் தம்மைப் போல் -*** *பேதமைப் பெண்களைப் போல;* ***நிலத்தின்மேல் வீழ்ந்து யான் அழுவதே என்னா -*** *பூமியின் மேல்விழுந்து அழுவது தகுமோ? என்று;* ***அறிவுற்றான் என எழுந்து -*** *மூர்ச்சை தெளிந்து அறிவு பெற்றவன் போல் எழுந்திருந்து;* ***ஆங்கு அவரை நோக்கி -*** *அப்பொழுது இராமலக்குவரைப் பார்த்து;* ***முழுவது ஏழ் உலகு உடைய மைந்தன்மீர் கேண்மின் -*** *ஏழு உலகங்கள் முழுதையும் உடைமைப் பொருளாகக் கொண்ட மக்களே! கேளுங்கள்;* ***என முறையின் சொல்வான் -*** *என்று முறையாகச் சடாயு கூறுவார்.*

*கணவன் இறந்த காலத்தில் பெண் நிலத்தின் மேல் வீழ்ந்து அழுதல் இயற்கை. அவ்வாறு அழுவதை விட்டு எரியில் புகும் உயர்ந்த மகளிர் போலத் தீயில் புகுவதே தான் செய்யத்தகுந்தது எனச் சடாயு கருதினார். 'பசைந்தாரின் தீர்தலின் தீப்புகுதல் நன்று' என்ற நான்மணிக் கடிகையின் (நான்மணி 13) கருத்து இங்குக் கருதத்தக்கது. 'முழுவதேழுலகுடையான் மைந்தன்மீர்' எனக் கொண்டு ஏழு உலகங்களையும் தன்னடிக் கீழ்க்கொண்ட தயரதனின் மக்களே என்றும் பொருள் உரைப்பர். இனிச் சடாயு எரியில் வீழஉறுதி கொண்டு அழுவதை விட்டு இராமலக்குவரிடம் தம் வரலாறுகூறலானார்.*

*தந்தையின் நண்பன் என்று சடாயு கூறியதும் அவரைப் பூரித்துப் பின் அவர் பெயர், குலம் வினவிய இராமனிடம் சடாயு கூறினார் என வான்மீகம் கூறும்.*

*சடாயு தன் வரலாறு கூறி, இறக்கத் துணிதல்*

***2714. 'அருணன்தன் புதல்வன்யான்; அவன் படரும்***
***உலகு எல்லாம் படர்வேன்; ஆழி***
***இருள் மொய்ம்பு கெடத் துரந்த தயரதற்கு இன்***
***உயிர்த் துணைவன்; இமையோரோடும்***
***வருணங்கள் வகுத்திட்ட காலத்தே***
***வந்து உதித்தேன்; கழுகின் மன்னன்;-***
***தருணம்கொள் பேர் ஒளியீர்!-***
***சம்பாதிபின் பிறந்த சடாயு' என்றான்.***

***தருணம் கொள் பேர் ஒளியீர் -** இளமை பூண்ட பெரும் ஒளியுடையவர்களே!; **யான் அருணன் தன் புதல்வன் -** நான் அருணனது மகன்; **அவன் படரும் உலகு எல்லாம் படர்வேன் -** அவன் செல்லும் உலகங்களெல்லாம் செல்லும் ஆற்றல் உடையேன்; **ஆழி இருள் மொய்ம்பு கெடத் துரந்த தயரதற்கு இன் உயிர்த் துணைவன் -** ஆணைச் சக்கரத்தைக் கொண்டு பகை இருளின் வலிமை கெடும்படி செலுத்திய தயரதனுக்கு இனிய உயிர் நண்பன்; **இமையோரோடும் -**தேவர்களோடு; **வருணங்கள் வகுத்திட்ட காலத்தே வந்து உதித்தேன் -** மற்ற சாதிகளை வகைப்படுத்திய பொழுதில் நான் வந்து பிறந்தேன்; **கழுகின் மன்னன் -** கழுகுகளுக்கெல்லாம் அரசன்; **சம்பாதி பின் பிறந்த சடாயு என்றான் -** சம்பாதி என்னுமவனுக்குத் தம்பியாம் சடாயு என்ற பெயருடையேன்என்றார்.*

*தருணம் - இளமை. அயோத்தியா காண்டத்தில் தைலமாட்டு படலத்தில் 'தருண வஞ்சிக் கொம்பு அழுது ஒசிந்தன என, சிலர் குழைந்தார்' (1853) என்ற தொடரில் தருணம் இப் பொருளில் வந்துள்ளது. ஒளியைத் தயரதனுக்கும் இருளைப் பகைவர்க்கும் கொள்ளலாம். தயரதனை ஒளி என்று கூறாவிடினும் குறிப்பால் கொள்ள இடமுளது. அருணன் - சூரியனின் சாரதி, காசிபனுக்கும் விநதைக்கும் பிறந்தவன். இவன் அரம்பையுடன் கூடிடச் சம்பாதி, சடாயு பிறந்தனர். சம்பாதி - நன்றாகப் பறப்பவன். கழுகின் வேந்தனாம் சம்பாதி எனக் கூறுவோரும் உளர்.*

*2715. **ஆண்டு அவன் ஈது உரைசெய்ய, அஞ்சலித்த***
***மலர்க்கையார் அன்பினோடும்***
***மூண்ட பெருந் துன்பத்தால் முறை முறையின்***
***நிறை மலர்க்கண் மொய்த்த நீரார்,-***
***பூண்ட பெரும் புகழ் நிறுவி; தம் பொருட்டால்***
***பொன்னுலகம் புக்க தாதை,***
***மீண்டனன் வந்தான் அவனைக் கண்டனரே***
***ஒத்தனர் - அவ் விலங்கல் தோளார்.***

**ஆண்டு அவன் ஈது உரை செய்ய -** *அப்போது சடாயு இவ்வரலாற்றைக் கூற;* **அவ் விலங்கல் தோளார் -** *மலைபோல் பெருமையும் வலிமையும் வாய்ந்த தோள்களை உடைய அவ்விராமலக்குவர்;* **அஞ்சலித்த மலர்க்கையார் -** *தாமரை மலர் போன்ற கூப்பிய கைகளை உடையவராய்;* **அன்பினோடும் மூண்ட பெருந்துன்பத்தால் -** *அன்போடும் கூடி மிகுந்த பெரிய வருத்தத்தால்;* **முறை முறையின் நிறை மலர்க்கண் மொய்த்த நீரார் -** *அடிக்கடி மேன் மேலும் தாமரை மலர்போலும் தம் கண்கள் நிறைந்த நீரையுடையவராய்;* **பூண்ட பெரும் புகழ் நிறுவி -** *தான் தாங்கிய பெரிய புகழை உலகில் என்றும் நிலைநாட்டி;* **தம் பொருட்டால் பொன்னுலகம் புக்க தாதை -** *மைந்தராகிய தாம் வனம் சென்ற காரணத்தால் துறக்கம் சென்ற தம் தந்தையாம் தயரதன்;* **மீண்டனன் வந்தான் அவனைக் கண்டனரே ஒத்தனர் -** *மீண்டு தம்மைக் காண வந்தவனைப் பார்த்தவரையே போலானார்.*

*ஆண்டவன் எனக் கொண்டு பெருமை மிக்க பண்புகளை ஆண்ட சடாயு என்பாரும் உளர். இராமன் சடாயுவைத் தன் பெரிய தந்தை போல் பாராட்டும் பண்பு இதில் வெளிப்படும். தந்தை இறந்துவிட்டார் என இராமலக்குவர் எண்ணிய போது துக்கக் கண்ணீரும் தயரதனே மீண்டு வந்தது போல் சடாயுவைக் கண்டதால் மகிழ்ச்சிக் கண்ணீரும் மாறி மாறி நிறைந்தன.*

*முறை முறையே - தாரை தாரையாக எனக் கொள்வோருமுளர்.வாய்மை காக்க இராமலக்குவரைக் காட்டிற்கு அனுப்பிவிட்டு அம்மைந்தரைப் பிரிந்த துக்கம் தாளாமல் துறக்கம் சென்றதை எண்ணிப் 'பூண்ட பெரும் புகழ் நிறுவி, தம் பொருட்டால் பொன்னுலகம் புக்க தாதை' எனத் தயரதனைக் குறித்தனர். கண்டனரே - ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது.*

*2716. **மருவ இனிய குணத்தவரை இரு சிறகால்***
***உறத் தழுவி, 'மக்காள்! நீரே***
***உரிய கடன் வினையேற்கும் உதவுவீர்;***
***உடல் இரண்டுக்கு உயிர் ஒன்று ஆனான்***
***பிரியவும், தான் பிரியாதே இனிது இருக்கும்***
***உடல்பொறை ஆம்; பீழை பாராது,***
***எரிஅதனில் இன்றே புக்கு இறவேனேல்,***
***இத் துயரம் மறவேன்' என்றான்.***

(பின் அச்சடாயு) ***மருவ இனிய குணத்தவரை இரு சிறகால் உறத் தழுவி -*** தழுவுவதற்கு ஏற்ற இனிய பண்புடைய இராமலக்குவரைத் தம் இரண்டு சிறகுகளாலும் நன்றாக அணைத்துக் கொண்டு; ***மக்காள் நீரே உரிய கடன் வினையேற்கும் உதவுவீர் -*** என் மக்களே! நீங்கள் தீ வினை செய்தஎனக்கும் உரிய இறுதிக் கடன்களைச் செய்தருள்வீர்; ***உடல் இரண்டுக்கும் உயிர் ஒன்று ஆனான் பிரியவும் -*** இரண்டு உடல்களுக்கும் ஒருயிர் ஆன என் நண்பன் தயரதன் உயிர் பிரியவும்; ***தான் பிரியாதே இனிது இருக்கும் உடல் பொறை ஆம் -*** நான் மட்டும் இறவாமல் இனிதாக வாழ்ந்திருக்கும் என் உடலைச் சுமப்பது பெரும் சுமை ஆகும்.***பீழை பாராது -*** துன்பம் தருவதைப் பார்க்காமல்; ***எரி அதனில் இன்றே புக்கு இறவேனேல் -*** தீயில் இப்போதே இறங்கிச் சாகாவிட்டால்;***இத்துயரம் மறவேன் என்றான் -*** இந்தத் துன்பத்தை மறக்க மாட்டேன் என்றார்.

குஞ்சுகளைத் தாய்ப் பறவை சிறகால் தழுவுவது இயற்கை. அதனால் இராமலக்குவரைச் சடாயு தம் சிறகுக்கரங்களால் அணைத்துக் கொண்டார். நண்பரின் மக்களைத் தம் மக்கள் எனக் கொள்வதால் 'மக்காள்' எனச் சடாயு இராமலக்குவரை விளித்தார். 'வினையேன்' என்றது தம் நண்பனாம் தயரதனை இழந்த கொடிய வினையைக் குறித்தது. இது நண்பன் இறந்தது கேட்டுத் தாம் இறவாதிருக்கும் கொடிய நிலையையும் குறிக்கும். பிரிவின் கண் பீழை தருவது ஒன்றில் (குறள் 839) என்ற கருத்தின்படி 'பீழை பாராது' என்றார். எரியில் புக நினைந்தது சடாயுவின் பெரும் நட்புக் கிழமையை உணர்த்தும்.

வான்மீகத்தில் சடாயு இராமலக்குவரிடம் சீதைக்குக் காவலாக இருப்பேன் என அவர்கள் அவரை வணங்கிச் சீதைக்குக் காவலாக இருக்க வேண்டி பஞ்சவடி சேர்ந்தார் என உளது.

இராம-இலக்குவர் தடுத்து உரைத்தலும் சடாயு இணங்குதலும்

கலி விருத்தம்

**2717. உய்விடத்து உதவற்கு**
**உரியானும், தன்**
**மெய் விடக் கருதாது,**
**விண் ஏறினான்;**
**இவ் இடத்தினில், எம்**
**பெருமாஅன்! எமைக்**
**கைவிடின், பினை யார்**
**களைகண் உளார்?**

***உய்விடத்து உதவற்கு உரியானும் -*** தீங்கிலிருந்து தப்ப வேண்டிய போது காப்பாற்றி உதவி அளித்தற்கு ஏற்றவனும்; ***தன் மெய்விடக் கருதாது விண் ஏறினான் -*** தன் வாய்மையைக் கைவிட எண்ணாமல் துறக்கம் புகுந்தான்; ***இவ்விடத்தினில் எம்பெருமாஅன் எமைக் கைவிடின் -*** இக்காட்டில் எங்கள் தலைவனே எங்களை விட்டு

*இறந்தால்;* ***பினையார்களை கண் உளார் -*** *பின்பு எங்களுக்கு எவர் பற்றுக் கோடாக உள்ளார்? (ஒருவரும் இல்லை).*

*உய்விடத்து உதவற்குரியான் - தயரதன் மெய்விடக் கருதாது - தயரதன் தான் முன் கைகேயிக்கு அளித்த இருவரங்களைக் கொடுக்காவிடில் வாய்மை சிதையும். எனவே அதைக் கருதி வரங்களைக் கொடுத்துமெய்காத்தான். களைகண் - கொடிகள் வளர்ந்து படர ஊன்றப் பெறும் கொம்பு. 'ஆருளர் களை கணம்மா அரங்கமா நகருளானே' (திருமாலை.29) என்ற தொடர் இதனுடன் ஒப்பிடற் குரியது. இக்கொடிய வனத்தில், நீங்கள் களைகணாய் உதவாவிடில் வேறு ஆதரவு எங்களுக்கு இல்லை' என இராமலக்குவர் சடாயுவிடம் அவர் உளங் கொளக் கூறினர். கைவிடுதல் - துன்ப வேளையில் உதவாமல் விட்டு நீங்குதல். பெருமாஅன் - விளியின் பொருட்டு வந்த அளபெடை.*

***2718. "தாயின், நீங்க அருந்***
***தந்தையின், தண் நகர்***
***வாயின், நீங்கி, வனம்***
***புகுந்து, எய்திய***
***நோயின் நீங்கினெம் நுன்னின்"***
***என் எங்களை***
***நீயும் நீங்குதியோ?-***
***நெறி நீங்கலாய்!"***

***நெறி நீங்கலாய் -*** *அறநெறியிலிருந்து நீங்காதவரே!;* ***நீங்க அரும் தாயின் தந்தையின் -*** *ஒரு போதும் நீங்காத தாயை விட்டும் தந்தையை விட்டும்;* ***தண்நகர் வாயின் நீங்கி -*** *குளிர்ந்த நீர் வளம் கொண்ட அயோத்தி நகரின் கோட்டை வாயிலை விட்டும் நீங்கி;* ***வனம் புகுந்து எய்திய நோயின் நுன்னின் நீங்கினெம் -*** *காட்டிற்கு வந்தடைந்த துன்பத்திலிருந்து உங்களை அடைந்ததால் நீங்கினோம்;* ***என் எங்களை நீயும் நீங்குதியோ -*** *இந்நிலையில் எங்களை விட்டு நீங்களும் இறந்து போவீர்களா? (இறத்தல் கூடாது என்றபடி).*

*தாயையும் தந்தையையும் விட்டுப் பிரிந்தும் அயோத்தி நகரை விட்டு நீங்கியும் காட்டை அடைந்து இராமலக்குவர் துன்பம் எய்தினர். அத்துன்பம் சடாயுவைக் கண்டு நீங்கிய நிலையில் என்ன செய்ய இயலும் எனக் கேட்டு அவர்கள் சடாயுவைத் தீப் புகுவதிலிருந்து தடுத்தனர். நீங்க அரும் என்பதைத் தாய், தந்தை ஆகிய இரு சொற்களின் முன்னரும் கூட்டுவதால் மத்திம தீபம்.*

*நுன் - உன் கன்னட நாட்டுத் திசைச்சொல் என்பார் நச்சினார்க்கினியர் (சீவக. 324). நீயும் - உயர்வுச் சிறப்பும்மை இறந்தது தழுவிய எச்ச உம்மை எனவும் கொள்வர். தாயின் தந்தையின், வாயின், நுன்னின் - இவற்றில் உள்ள இன் உருபு நீக்கப்படு பொருளாயும் எல்லைப் பொருளாயும் கொள்ளப் பெறும்.*

**2719. என்று சொல்ல, இருந்து**
**அழி நெஞ்சினன்,**
**நின்ற வீரரை**
**நோக்கி நினைந்தவன்,**
**"அன்று அது" என்னின்,**
**அயோத்தியின், ஐயன்மீர்**
**சென்றபின் அவற் சேர்குவென்**
**யான்' என்றான்.**

*__என்று சொல்ல -__ என்று இராமலக்குவர் வருந்திக் கூற; __இருந்துஅழி நெஞ்சினன் -__ அழிந்த வண்ணம் இருக்கின்ற மனத்தை உடைய சடாயு; __நின்ற வீரரை நோக்கி நினைந்தவன் -__ தன் எதிரே நின்ற வீரர்களாம் இராமலக்குவரைப் பார்த்து ஒரெண்ணத்தை எண்ணியவனாய்; __அது அன்று என்னின் -__ தீக்குளிக்கும் அச்செயல் உடன்பாடு அன்று என்றால்; __ஐயன்மீர் அயோத்தியின் சென்றபின் அவற்சேர்குவென் யான் என்றான் -__ அன்புடையவர்களே! நீங்கள் அயோத்தி நகரைப் போய்ச் சேர்ந்த பின் நான் தயரதனைத் துறக்க உலகில் சென்று அடைவேன் எனக் கூறினார்.*

*இப்போது நான் இறப்பது உங்களுக்கு உடன்பாடு அன்று என்றால் வன வாசம் முடிந்து அயோத்தி செல்லும் அளவு உங்களுக்குக் களைகணாய் இருக்கிறேன் எனச் சடாயு இராமலக்குவரின் கருத்துக்கிசைந்து கூறியது புலனாகிறது. அயோத்தியில் அகழி, மதில், படை, சான்றோர், அமைச்சர் இருப்பதால் அவர்க்குப் பாதுகாப்பு வேறு வேண்டாம் என்பதால் அயோத்தியின்... சென்றபின்' என்றார்.*

*அன்பினால் இராமலக்குவரை 'ஐய' என விளித்தார் சடாயு. இது மரபு வழுவமைதி.*

*சடாயு, 'நீவிர் வனம் புகுந்தமை என்?' என வினவல்*

**2720. 'வேந்தன் விண் அடைந்தான்**
**எனின், வீரர் நீர்**
**ஏந்து ஞாலம் இனிது**
**அளியாது, இவண்**
**போந்தது என்னை? புகுந்த என்?**
**புந்தி போய்க்**
**காந்துகின்றது, கட்டுரையீர்'**
**என்றான்.**

*(பின் அச்சடாயு) __வேந்தன் விண் அடைந்தான் எனின் -__ தயரதச்சக்கரவர்த்தி துறக்கம் சென்றான் என்றால்; __வீரர் நீர் ஏந்து ஞாலம் இனிது அளியாது இவண் போந்தது என்னை -__ வீரர்களாகிய நீங்கள் ஆள்வதற்குரிய நாட்டை மனம் விரும்பிக் காப்பாற்றாமல் இங்கு வந்தது எக்காரணத்தால்?; __புகுந்த என் -__ வந்து சேர்ந்த தீமைகள் எவை?; __புந்திபோய்க் காந்துகின்றது -__ என் அறிவு ஒரு நிலையில் நிற்காமல் எரிகின்றது; __கட்டுரையீர் என்றான் -__ எடுத்து முறையாகக் கூறுங்கள் என்றார்.*

*வீரர் நீர் என்றதால் பெரு வீரர்களாய்க் காணப்படும் இராமலக்குவரைப் பகைவர் விரட்டியிருக்க இயலாது என எண்ணியஎண்ணம் குறிப்பாக உணரப்பெறுகிறது. 'ஏந்து ஞாலம்' என்பது வழி வழி உரிமையுடன் ஆண்டு வரும் நில உலகம். புந்தி - புத்தி, இங்கு மனம் எனவும் கொள்ளலாம்.*

*கட்டுரை என்பது மனத்திலுள்ள பொருளை வகைப்படுத்தி முறையாகத் தொகுத்துரைத்தல்.*

***2721. 'தேவர், தானவர், திண் திறல்
நாகர், வேறு
ஏவர் ஆக, இடர்
இழைத்தார்எனின்,-
பூ அராவு பொலங்
கதிர் வேலினீர்!-
சாவர் ஆக்கி, தருவென்
அரசு' என்றான்.***

**பூ அராவு பொலங்கதிர் வேலினீர் -** *கூராகத் தீட்டப் பெற்றுப் பொன் ஒளி வீசும் வேல்படையைக் கொண்டவர்களே!;* **தேவர் தானவர் திண் திறல் நாகர் வேறு ஏவர் ஆக இடர் இழைத்தார் எனின் -** *தேவர்களாயினும் அசுரர்களாயினும் நாகலோகத்தவராயினும் வேறு ஏவராயினும் உங்களுக்குத் துன்பம் செய்தார் என்றால்;* **சாவர் ஆக்கி அரசு தருவென் என்றான் -** *அவர்களை மாண்டவராக்கி உங்கள் அரசை மீட்டுக் கொடுப்பேன் என உறுதி கூறினார் (சடாயு).*

*பூ - கூர்மை. பூத்தொழில் அமையுமாறு பல சிற்பத் தொழில் படஅராவுதல் என்றும் கொள்வர். பூ அராவு வேற் புரந்தரன் (3017) என்பார் பின்னரும், ஏவர் என்றதால் பிற மனிதர், கந்தருவர் போன்றவரைக் குறிக்கிறது.*

*திண்திறல் - ஒருபொருட் பன்மொழி.*

இராமன் குறிப்பினால் இலக்குவன் விடையிறுத்தல்

***2722. தாதை கூறலும்,
தம்பியை நோக்கினான்
சீதை கேள்வன்; அவனும்,
தன் சிற்றவை-
மாதரால் வந்த செய்கை,
வரம்பு இலா
ஓத வேலை, ஒழிவு
இன்று உணர்த்தினான்.***

***தாதை கூறலும் -*** *தந்தை போன்ற சடாயு அவ்வாறு சொன்னதும்;* ***சீதை கேள்வன் தம்பியை நோக்கினான் -*** *சீதையின் கணவனாம் இராமன் தன் தம்பியாம் இலக்குவனைக் குறிப்பால் பார்த்தான்;****அவனும் தன்சிற்றவை மாதரால் வந்த செய்கை -*** *(இராமனின் குறிப்பறிந்து) இலக்குவனும் தன் சிற்றன்னையாம் கைகேயி எனும் பெண்ணால் உருவாகிய செயல்களாம்;* ***வரம்பு இலா ஓத வேலை ஒழிவு இன்று உணர்த்தினான் -*** *எல்லையற்ற ஒலியுடைய பெருங்கடல் போன்ற துன்ப நிகழ்ச்சிகளைச் சிறிதும் விட்டுவிடாமல் சடாயுவுக்கு விளக்கமாகக் கூறினான்.*

*சடாயுவைத் தாதை என்றது தங்கள் தந்தையாம் தயரதனின் நண்பன் என்ற முறைமையால். சடாயுவும் இராமலக்குவரை இம்முறை பற்றியே 'மைந்தன்மீர்' (2713) என்றும் 'மக்காள்' (2716) என்றும் கூறினார். சடாயுவைத் தாதை என இக்காண்டத்தில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது (2715, 3492). இராமன் இலக்குவனைச் சடாயுவிடம் செய்திகளைக் கூறுமாறு குறிப்பால் நோக்கியது சிற்றன்னை கைகேயி மீது தான் குற்றம் கூறுவதை விரும்பாமை ஆகும். இராமனின் குறிப்பைஇலக்குவன் அறியும் ஆற்றலுடையவன் என்பதை 'நோக்கினான்' என்பதால் உணரலாம். சிறு+அவ்வை=சிற்றவை. அவ்வை - தாய் ஒலியை உடைய கடல் போல ஒழிவின்று உணர்த்தினான் இலக்குவன் எனவும் உரைப்பர். கடல் கரையை உடைவது. ஆனால் கைகேயினால் உண்டான துன்பம் கரை கடந்த எல்லையற்ற துன்பம் என்பதை வரம்பிலா ஓத வேலை என்பதில் காணும் 'வரம்பிலா' என்ற சொல்லால் சுட்டப்பெறும்.*
*சடாயு இராமனைப் போற்றுதல்*

***2723. 'உந்தை உண்மையன் ஆக்கி,***
***உன் சிற்றவை***
***தந்த சொல்லைத் தலைக்***
***கொண்டு, தாரணி,***
***வந்த தம்பிக்கு***
***உதவிய வள்ளலே!***
***எந்தை வல்லது யாவர்***
***வல்லார்?' எனா,***

*(அது கேட்ட சடாயு இராமனைப் பார்த்து)* ***உந்தை உண்மையன்ஆக்கி -*** *உன் தந்தையாம் தயரதனை வாய்மையாளன் என்று நிலை நாட்டி;* ***உன் சிற்றவை தந்த சொல்லைத் தலைக் கொண்டு -*** *உன் சிறிய தாயாம் கைகேயி கட்டளையைச் சிரமேல் கொண்டு,* ***தாரணி வந்த தம்பிக்கு உதவிய வள்ளலே -*** *உனக்கு உன் தந்தை அளித்த அரசுச் செல்வத்தை உன்பின் பிறந்த தம்பியாம் பரதனுக்குக் கொடுத்த கொடையீற் சிறந்தவனே!;* ***எந்தை வல்லது யாவர் வல்லார் எனா -*** *என் தந்தை போன்ற நீ செய்ததைப் போல யார் உலகில் செய்யத் திறமை உள்ளவர் ஆவார்? (ஒருவருமில்லை) எனக்கூறி,*

*தந்தை தயரதனை வாய்மையாளன் என நிலைநாட்டித் தனக்குக் கிடைத்த அரசைத் தன் தம்பிக்கு ஈந்த வள்ளன்மை கருதி 'வள்ளலே!' எனவிளிக்கின்றார் சடாயு. மேலும் உன் போலும் தன்னலமின்றிச் செயல் புரிபவர் யார் என வியக்கின்றார். 'எந்தை'*

*என்பதை அண்மை விளியாகக் கொண்டும் பொருள் கொள்வர். தாரணி - தரணி என்பதன் நீட்டல் விகாரம். எந்தை என்பது என் தந்தை என்பதன் மரூஉச் சொல்.*

*சடாயுவை வைணவ மரபில் பெரியவுடையார் என ஏற்றிக் கூறுவதற்கேற்ப அவர் தம் உள்ளம் இதில் வெளிப்படுகிறது.*

***2724. அல்லித் தாமரைக் கண்ணனை***
***அன்பு உறப்***
***புல்லி, மோந்து,***
***பொழிந்த கண்ணீரினன்,***
***'வல்லை மைந்த! அம்***
***மன்னையும் என்னையும்***
***எல்லை இல் புகழ்***
***எய்துவித்தாய்' என்றான்.***

*(மேலும் சடாயு)* ***அல்லித் தாமரைக் கண்ணனை -*** *அகவிதழ் களையுடைய தாமரை மலர் போன்ற கண்களையுடைய இராமனை;* ***அன்பு உறப்புல்லி மோந்து பொழிந்த கண்ணீரினன் -*** *அன்பு மிக அணைத்து உச்சி மோந்து சொரிந்த கண்ணீரை உடையவனாய்;* ***மைந்த அம்மன்னனையும் என்னையும் எல்லை இல் புகழ் எய்து வித்தாய் -*** *மகனே! தயரதச் சக்கரவர்த்தியையும் என்னையும் அளவில்லாத பெரிய புகழ் அடையச் செய்தாய்;* ***வல்லை என்றான் -*** *நீயே வல்லவன் என்று கூறினார்.*

*அல்லி - அகவிதழ். புல்லிமோந்து அன்பைத் தெரிவித்தல். பெற்றோர் குழந்தையிடம் புரியும் முறை. இதனைச் சடாயு இராமனைத் தன் குழந்தையாகவே கருதியதால் செய்தார். மோத்தல் - மூக்கால் முகர்தல். 'மோப்பக் குழையும் அனிச்சம்' (குறள். 90) என்றார் வள்ளுவரும். சடாயு உயிர் நீங்கும் போது இராமலக்குவரை அருகில் அழைத்துத் 'தாக்கிஅரக்கன் மகுடத் தலை தகர்த்த மூக்கினால் உச்சி முறை முறையேமோக்கின்றான்' (3504) என வருதல் காண்க. 'மன்னையும் என்னையும்' என்றதால் தயரதனையும் தம்மையும் ஒருவராகவே கருதியதும் அவன் புகழ் தம் புகழாகக் கொண்டதும் வெளிப்படும்.*

*வல்லை - சாமர்த்தியம் உடையவன் எனவும் கொள்வர். 'வல்லை உன் கட்டுரைகள்' என்றார் ஆண்டாளும் (திருப்பாவை 15). விரைவிலே என்றும் இச்சொல்லிற்குப் பொருள் கொள்வர்.*

*தாமரை கண்களுக்கும் அகவிதழ் இமைகளுக்கும் உவமை.*

*சடாயு, சீதையைப்பற்றி வினவ, இலக்குவன் இயம்புதல்*

***2725. பின்னரும், அப்***
***பெரியவன் பெய் வளை***

***அன்னம் அன்ன***
***அணங்கினை நோக்கினான்;***
***'மன்னர் மன்னவன்***
***மைந்த! இவ் வாணுதல்***
***இன்னள் என்ன***
***இயம்புதியால்' என்றான்.***

***பின்னரும் -*** *பிறகும்;* ***அப்பெரியவன் பெய் வளை அன்னம் அன்ன அணங்கினை நோக்கினான் -*** *அப்பெரியோராம் சடாயு, அணிந்த வளையல்களையுடைய அன்னம் போன்ற தெய்வப் பெண்ணாம் சீதையைப் பார்த்தவராய்;* ***மன்னர் மன்னவன் மைந்த -*** *சக்ரவர்த்தி தயரதனின் மகனே!;* ***இவ்வாணுதல் இன்னள் என்ன இயம்புதியால் என்றான் -*** *இந்த ஒளி பொருந்திய நெற்றியை உடையவள் இன்னாள் என்று சொல்வாய் என்றார்.*

*பெரியவன் - பண்பு, கல்வி, வாழ்நாள் முதலியவற்றால் பெரியவர். பெய் வளை அன்னம் என்பது இல்பொருள் உவமை. அணங்கு - உருவகம். நோக்கினான் - முற்றெச்சம். வாள்+நுதல்=வாணுதல், ஒளிபொருந்திய நெற்றியை உடையவள்; அன்மொழித் தொகை.*

***2726. அல் இறுத்தன***
***தாடகை ஆதியா,***
***வில் இறுத்தது இடை***
***என, மேலைநாள்***
***புல் இறுத்தது யாவும்***
***புகன்று, தன்***
***சொல் இறுத்தனன்-***
***தோன்றல்பின் தோன்றினான்.***

***தோன்றல் பின் தோன்றினான் -*** *இராமனுக்குப் பின் பிறந்த தம்பியாம் இலக்குவன்;* ***மேலைநாள் அல் இறுத்தன தாடகை ஆதியா -*** *முன் நாளில், இருள் ஒரு வடிவு எடுத்து வந்தாற் போன்ற தாடகையைக் கொன்றது முதலாக;* ***வில் இறுத்தது இடை என -*** *சீதையை மணக்கச் சனகன் அவையில் வில்லை முறித்தது நடுவாக;* ***புல் இறுத்தது யாவும் புகன்று -*** *வனம் அடைந்து புல்லிற் படுத்தது ஈறாக எல்லாவற்றையும் கூறி;* ***தன் சொல் இறுத்தனன் -*** *தன்னுடைய வார்த்தையை முடித்தான்.*

*தாடகையுடன் கொன்றது என்ற சொல்லையும் 'புல் இறுத்தது' என்பதுடன் ஈறாக என்ற சொல்லையும் கூட்டுக. தோன்றல் - ஆடவரில் சிறந்தவன்; தலைவன். தாடகை - மலையில் திரிபவள். 'வில்லிறுத்தங்கு அரிவையை மேலை நாள் புல்லுறுத்து' எனப் பாடம் கொண்டு மிதிலையில் சிவ வில்லை முறித்து அங்குச் சீதையை மணந்து கொண்டு எனப் பொருள்காண்பர். 'புல்இறுத்தது' என்பதற்குக் காட்டில் தயரதனுக்குச் சரமக்கிரியை செய்ததென்றும் கூறுவர். 'புல் இறுத்தன யாவும் எனவும் பாடம் கொண்டு பொருந்த உண்டான எல்லாம் எனவும் உரைப்பர்.*

*பஞ்சவடியில் தங்கும் தன் விருப்பை இராமன் உரைத்தல்*

***2727. கேட்டு உவந்தனன், கேழ்***
***கிளர் மௌலியான்;***
***'தோட்டு அலங்கலினீர்!***
***துறந்தீர், வள***
***நாட்டின்; நீவிரும்***
***நல்நுதல்தானும் இக்***
***காட்டில் வைகுதிர்; காக்குவென்***
***யான்' என்றான்.***

**கேழ் கிளர் மௌலியான் கேட்டு உவந்தனன் -** *ஒளி விளங்கும் முடியுடைய சடாயு அது கேட்டு மிகவும் மகிழ்ந்தவராக;* **தோட்டு அலங்கலினீர் -** *பூவிதழையுடைய மாலை அணிந்தவர்களே;* **வள நாட்டின் துறந்தீர் -** *வளப்பமுள்ள நாட்டை விட்டு நீங்கி வந்தவர்களானீர்;* **நீவிரும் நல்நுதல் தானும் இக்காட்டில் வைகுதிர் -** *நீங்களும் நல்ல நெற்றியை உடைய சீதையும் இந்த வனத்தில் தங்கி வாழுங்கள்;* **யான் காக்குவென் என்றான் -** *நான் உங்களை எல்லாம் காப்பேன் எனக் கூறினார்.*

*சடாயு முடியுடையவர் என்பதை முன்னரே 'நீளுறு மேருவின் நெற்றி முற்றிய வாள் இரவியின் பொலி மௌலியான்தனை (2696) எனச் சுட்டுவார்; கழுகுக்குள்ள உச்சிக் கொண்டை போன்ற மயிர்த் தொகுதியை மௌலி என உரைத்தார் என்பர்.*

*தோடு - பூவிதழ். தந்தையாம் தயரதன் மறைந்தாலும் நாடு விட்டுக் காடு வந்தாலும் இராமன் முதலியோர்க்குத் தாம் காவலாய் இருப்பதாகக் கூறும் சடாயுவின் கூற்றில் தந்தையுளம் வெளிப்படுகிறது.*

***2728. 'இறைவ! எண்ணி,***
***அகத்தியன் ஈந்துளது,***
***அறையும் நல் மணி ஆற்றின்***
***அகன் கரைத்***
***துறையுள் உண்டு ஒரு சூழல்;***
***அச் சூழல் புக்கு***
***உறைதும்' என்றனன்-***
***உள்ளத்து உறைகுவான்.***

**உள்ளத்து உறைகுவான் -** *எல்லா உயிர்களின் மனத்தில் தங்கியுள்ள இராமன்; (சடாயுவைப் பார்த்து)* **இறைவ அகத்தியன் எண்ணி ஈந்துளது -** *தலைவனே! அகத்திய முனிவர் நாங்கள் தங்கற்கு உரிய இடம் எனஆலோசித்துக் கூறியருளியதாகிய;* **அறையும் நல்மணி ஆற்றின் அகன் கரைத் துறையுள் ஒரு சூழல் உண்டு -** *ஒலிக்கின்ற சிறந்த அழகியகோதாவரி ஆற்றின் அகன்ற கரையின் நீர்த்துறை இடத்தில் ஓர் இடம்*

*உள்ளது;* ***அச்சூழல் புக்கு உறைதும் என்றனன் -*** *அந்த இடத்தை அடைந்து வாழ்வோம் என்று கூறினான்.*

*உள்ளத்து உறைகுவன் என்ற கருத்து விளங்க அயோத்தியா காண்டக் கடவுள் வாழ்த்துப் பாடலில் (1313) 'உள்ளும் புறத்தும் உளன்' என்று கூறுவார், சடாயு கழுகுகளுக்கு அரசன் ஆதலாலும் தங்களுக்குத் தந்தை முறை ஆதலாலும் 'இறைவ' என விளித்தான் இராமன். 'அறையும் நல்மணி ஆறு' என்பதற்குச் சிறப்பித்துக் கூறுகின்ற நல்ல முத்துப் போலத் தெளிந்த நீருள்ள ஆறு என்றுமாம். இவ்வாற்றின் கரையிலுள்ள இடம் அகத்திய முனிவர் கூறிய பஞ்சவடியாம்.*

*சடாயுவின் விருப்பை மறுத்தற்குத் தக்க காரணமாக அகத்திய முனிவரின் கருத்துப் படி தான் பஞ்சவடி செல்வதை இராமன் பணிவுடன் கூறுகிறான். இதனால் சடாயுவும் தான் பஞ்சவடி செல்வதை ஒப்புக் கொள்வார் என்பது குறிப்பு.*

*சடாயு வழி காட்ட பஞ்சவடியை அடைதல்*

***2729. 'பெரிதும் நன்று; அப் பெருந்***
***துறை வைகி, நீர்***
***புரிதிர் மா தவம்; போதுமின்;***
***யான் அது***
***தெரிவுறுத்துவென்' என்று, அவர்,***
***திண் சிறை***
***விரியும் நிழலில் செல்ல,***
***விண் சென்றனன்.***

*(அது கேட்ட சடாயு)* ***பெரிதும் நன்று -*** *(அகத்தியர் கூற்றுப்படி அங்குச் சென்று தங்குவது) மிகவும் நன்மை தரத்தக்கது;* ***அப்பெருந்துறை வைகி நீர் மாதவம் புரிதிர் போதுமின் என்று -*** *அந்தப் பெரிய ஆற்றின் துறையிடத்துத் தங்கி நீங்கள் சிறந்த தவத்தைப் புரிவீர்களாக வாருங்கள்;* ***யான் அது தெரிவுறுத்துவென் -*** *யான் அவ்விடத்தை உங்களுக்குக் காட்டுவேன் என்று கூறி;* ***திண் சிறை விரியும் நிழலில் அவர் செல்ல விண் சென்றனன் -*** *தன் வலிய சிறகுகளின் பரந்த நிழலின் கீழ் அவர்கள் நடந்து வரும்படி வானில் பறந்து சென்றார்.*

*'பெரிதும் நன்று' என்பது உலக நன்மை தோன்ற இராவண வதத்தைக் குறிப்பால் உணர்த்தி நிற்கிறது. சடாயு வாயிலாக அதற்குத் தோற்றுவாய் எழுந்தது எனலாம். இனிப் பெரிது நன்று அப்பெருந்துறை என ஆற்றின் பெருமையை உரைப்பாரும் உளர். 'புனை சடை முடியின'ராகச் சடாயுஅவர்களைக் கண்டதால் (2700) 'புரிதிர் மாதவம்' என்றார். தம் மக்கள் துயருறாமல் தந்தை காப்பது போல் அவர்கட்குச் சடாயு நிழல் தந்துநின்றார்.*

*'விண் சென்றனன்' என்ற தொடர் காப்பிய வளர்ச்சியில் இக்கதை மாந்தர் இராவணனுடன் சீதையைக் காக்கப் போரிட்டு மடியும் நிலையைக் குறிப்பாக உணர்த்துகிறது எனலாம்.*

***2730. ஆய சூழல்***
***அறிய உணர்த்திய***
***தூய சிந்தை அத் தோம்***
***இல் குணத்தினான்***
***போய பின்னை, பொரு***
***சிலை வீரரும்***
***ஏய சோலை இனிது***
***சென்று எய்தினார்.***

***ஆய சூழல் அறிய உணர்த்திய** - அத்தகைய பஞ்சவடி எனும் இடத்தை அறியும்படி தெரிவித்த; **அத்தூய சிந்தை தோம்இல் குணத்தினான்** - அந்தத் தூய்மையான மனமும் குற்றமற்ற நற்பண்புகளும் கொண்ட சடாயு; **போய பின்னை** - அவ்விடம் விட்டுச் சென்ற பின்னர்; **பொரு சிலை வீரரும் ஏய சோலை இனிது சென்று எய்தினார்** -போர் புரிதற்குரிய வில்லை உடைய வீரர்களாம் இராமலக்குவர் அங்கு அமைந்திருந்த சோலையை மகிழ்ந்து போய் அடைந்தனர்.*

*ஏய சோலை - அகத்தியர் அவர்களைத் தங்குமாறு கூறிய சோலை எனலுமாம். தூய சிந்தை தோமில் குணத்தை முன்னரே தூய்மையான (2694) என்ற பாடலில் உணர்த்தியுள்ளார் இத்தொடர் சடாயுவை நன்கு விளக்குதற்குரிய நயமுடையது.*

***2731. வார்ப் பொற் கொங்கை***
***மருகியை, மக்களை,***
***ஏற்பச் சிந்தனையிட்டு,-***
***அவ் அரக்கர்தம்***
***சீர்ப்பைச் சிக்கறத்***
***தேறினன்-சேக்கையில்***
***பார்ப்பைப் பார்க்கும்***
***பறவையின் பார்க்கின்றான்.***

***அவ் வரக்கர் தம் சீர்ப்பைச் சிக்கறத் தேறினன்** - அங்குள்ள அரக்கர்களது சிறப்பை ஐயமில்லாமல் நன்றாய் அறிந்த சடாயு;**சிந்தனை இட்டு** - ஆலோசித்து; **வார் பொற் கொங்கை மருகியை மக்களை** -கச்சணிந்த அழகிய மார்பகங்கள் கொண்ட தம் மருமகளாம் சீதையையும் தம் மக்களாம் இராமலக்குவரையும்; **சேக்கையில் பார்ப்பைப் பார்க்கும் பறவையின் பார்க்கின்றான்** - கூட்டிலுள்ள தன் குஞ்சுகளைப் பாதுகாக்கும் தாய்ப் பறவை போலப் பாதுகாத்து வருகின்றார்.*

*பொன் - பொன்னிறம் எனலுமாம். சீர்ப்பு - வலிமை, மிகுதி முதலியவற்றின் சிறப்புக்கள். சிக்கு - தடையுமாம். சேக்கை - தங்கி இருக்கும் இடம். பார்ப்பு - சிறகு முளைக்காமல் தாயின் பாதுகாப்பை மட்டுமே நம்பியுள்ள இளங் குஞ்சுகள், பார்ப்பைப் பார்க்கும் பறவைஎன்றமையால் சடாயு அவர்களிடம் கொண்ட பற்றையும், பாதுகாக்க வேண்டும் என்ற ஆர்வத்தையும் வெளிக்காட்டும். கழுகின்*

வேந்தனுக்கு அவர் இனத்தைச் சுட்டும் பறவை என்பதே பொருத்தமான உவமையாக அமைகிறது.

அரக்கர் சீர்ப்பைத் தேறினன் என்றதால் அரக்கரால் அவர்கட்குத் துன்பம் வரலாகாது என்ற கருத்தைச் சுட்டும்.

## சூர்ப்பணகைப் படலம்

சூர்ப்பணகையின் செய்தியைக் கூறும் பகுதியாகும். பஞ்சவடியில் சூர்ப்பணகை இராமனைக் கண்டு அவன் மேல் ஆசை கொண்டு அதனால் அவள் அடைந்த துன்பத்தைக் கூறுவது இப்படலம். சூர்ப்பம் ஸ்ரீநகம் எனப் பிரித்து முறம் போன்ற நகம் உள்ளவள் என்று பொருள் கூறுவர். சூர்ப்பம் எனில் இரத்தம் நிறைந்த கலம். அதனைக் கொண்டு யாகம் முதலிய நற்செயல்களைக் கெடுப்பவள். நகா எனில் கெடுப்பவள் என்று பொருள். அரக்கர்கள் முனிவர்களின் யாகத்தின் தூய்மையைக் கெடுக்க இரத்தம் இறைச்சி முதலியவற்றைச் சொரிவர். இவ்வாறு யாகத்தை அழிப்பவளாக சூர்ப்பணகையின் பெயர்ப் பொருள் காண்பர் சிலர்.

இப்படலத்தைப் பஞ்சவடிப் படலம் என்றும், சூர்ப்பநகி மூக்கரி படலம் என்றும் இரண்டாகக் கொள்வர். வேறு சிலர் இவ்விரண்டின்இடையில் சூர்ப்பணகைப் படலம் என ஒன்றை சேர்த்து மூன்றாகவும் கொள்வர்.

சூர்ப்பணகை பிரமனின் மகளாகிய புலத்திய முனிவரின் மகனாம் விசிரவசுவுக்கும் அவரின் இரண்டாம் மனைவியாம் கேகசிக்கும் பிறந்த மகள். இவளுடைய அண்ணன்மார் இராவணனும் கும்பகர்ணனும் ஆவர். தம்பி வீடணன். இவள் கணவன் காலகேயரைச் சார்ந்த வித்யுச்சிகுவன். இராவணன் காலகேயருடன் போரிட்ட போது வித்யுச்சிகுவன் கொல்லப் பட்டான். கணவனை இழந்த சூர்ப்பணகை இராவணனிடம் முறையிட அவளுக்கெனத் தண்டகாருணியப் பகுதியில் ஓர் அரசுண்டாக்கி அதில் அவள் சிறப்புடன் இருக்கக் கூறித் தூடணனைச் சேனாதிபதியாக்கி ஒரு பெரும் படையையும் அவளுக்குத் துணையாக்கினான். தன் தாய் மாமன் மகனாம் கரனையும் அவளுக்குத் துணையாக்கி அவள் விருப்பப்படி இருக்குமாறு செய்தான்.

அதனால் அங்குக் குடியிருந்து அங்குள்ள மக்களை வருத்தி இன்புற்று வந்தாள் சூர்ப்பணகை. அப்போது அவள் பஞ்சவடியில் சீதை இலக்குவருடன் வாழ்ந்த இராமனின் திருமேனி அழகைக் கண்டு பெருங் காமம் கொண்டு, அழகிய பெண் வடிவெடுத்து அவனிடம் சென்று தன்னைக் கூடுமாறு வேண்டினாள். அதற்கு இராமன் உடன்படாது பலவாறு மறுத்தான். அவ்வாறு தன்னை இராமன் மறுத்ததற்குக் காரணம் அவன் மனைவி பேரழகு படைத்தவளாய் இருப்பதுதான் என எண்ணிச் சீதையை வஞ்சனையாக எடுத்து மறைத்து வைத்தால் இராமனுடன் கூடி வாழ முடியும் என நம்பினாள். மறுநாள் காலையில் இராமன் வெளியே சென்ற போது சீதையைக் கவரத் தொடர்ந்து சென்றாள். இலக்குவன் அதைக் கண்டு வெகுண்டு அவள் கூந்தலைப் பற்றி மூக்கு, காது முலை ஆகிய உறுப்புகளை அறுத்து விட்டான். பெண் கொலை பாவம் என அவளைக் கொல்லாது விட்டான். பேரோலமிட்டுச் சூர்ப்பணகை இராமனிடம் தன்னை மணம் செய்ய வேண்டினாள் அல்லது இராமன் தன் தம்பிக்காவது தன்னைமணமுடிக்குமாறு வேண்டினாள். அதனால் சற்றும் பயன் பெறாமல் அவர்களால் விரட்டப்பட்டாள். இவ்வாறு ஏமாற்றமுற்ற சூர்ப்பணகை அவர்களை அழிக்கக் கரனுடன் வருவதாக அச்சுறுத்திச் சென்றாள். இதுவே இப் படலச் செய்தி.

காப்பியப் போக்கில் நல்லதோர் திருப்பம் ஏற்படும் வலுவான கட்டமிது. முன்னர் இராமன் முடியிழக்கக் கைகேயி என்ற பெண் காரணமானது போன்று இப்போது மனைவியைப் பறி கொடுக்க மற்றோர் பெண் காரணமாவதை மிகச் சிறந்த முறையில் காட்டும் படலம் இது. இராமன் சூர்ப்பணகை உரையாடல் 'கம்ப நாடகம்' என்ற

*பெயரமைவதற்குத் தக்க சான்றாக அமைந்துள்ளது. சூர்ப்பணகையின் வடிவ மாற்றம், எண்ணப் போக்கு, உரையாடும் திறம், ஆசைப்பட்டவனை அடையாததால் அடையும் ஏமாற்ற நிலை, புலம்பும் பெற்றி, உறுப்பிழந்த நிலையில் இடும் ஓலம்உதவிக்கு அழைக்கும் அவலம், மீட்டும் மீட்டும் தான் கொண்ட முயற்சியில் தளராமை, ஏதும் பயனற்ற நிலையில் சினத்தீ பொங்க அழிவுக்கு வழி காணல் ஆகியவை இப்படலத்தின் சிறப்புக்குச் சான்றாம். காப்பியத்திருப்பத்திற்கு நல்லதோர் அடித்தளமாக அமைகிறது இப்பகுதி எனலாம்.*

கோதாவரியின் பொலிவு

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***2732. புவியினுக்கு அணிஆய், ஆன்ற பொருள்***
***தந்து, புலத்திற்று ஆகி***
***அவி அகத் துறைகள் தாங்கி,***
***ஐந்திணை நெறி அளாவி,***
***சவி உறத் தெளிந்து, தண்ணென்***
***ஒழுக்கமும் தழுவி, சான்றோர்***
***கவி எனக் கிடந்த கோதாவரியினை***
***வீரர் கண்டார்.***

***புவியினுக்கு அணியாய் -*** *பூமிக்கு ஓர் அணிகலன் போன்று அழகூட்டுவதாய் அமைந்து;* ***ஆன்ற பொருள் தந்து -*** *சிறந்த பொருள்களைக் கொடுத்து;* ***புலத்திற்று ஆகி -*** *வயல்களுக்குப் பயன்படுவதாக ஆகி;* ***அவி அகத்துறைகள் தாங்கி -*** *தன்னுள் அமைந்த பல நீர்த் துறைகளைக் கொண்டு;* ***ஐந்திணை நெறி அளாவி -****குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் எனும் ஐந்து நிலப்பகுதி வழிகளில் பரவிச் சென்று;* ***சவி உறத் தெளிந்து -*** *செவ்வையாய் தெளிவுடையதாகி;* ***தண்ணென் ஒழுக்கமும் தழுவி -*** *குளிர்ந்த நீரோட்டமும் உடையதாய்;* ***சான்றோர் கவியென(க்)கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார் -*** *கல்வியில் நிறைந்த பெரியோரின் செய்யுள் போல் விளங்கிய கோதாவரி எனும் ஆற்றை இராமலக்குவராம் வீரர்கள் பார்த்தனர்.*

*இனி, சான்றோர் கவியைக் குறிக்குமிடத்து;* ***புவியினுக்கு அணியாய் -*** *உலக மக்களுக்குப் பல அலங்காரமாகி;* ***ஆன்ற பொருள் தந்து -****சிறந்தஅறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பொருள்களை உணர்த்தி;* ***புலத்திற்று ஆகி -*** *அறிவில் தங்கி;* ***அவி அகத்துறைகள் தாங்கி -****செவ்விதாய் அமைந்த அகப் பொருள் துறைகளை ஏற்று;****ஐந்திணை நெறி அளாவி -*** *குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் எனும் ஐந்து அக ஒழுக்கங்கள் விரவப் பெற்று;* ***சவி உறத் தெளிந்து -*** *விளங்குமாறு பொருள் தெளிவுற அமைந்து;* ***தண்ணென் ஒழுக்கமும் தழுவி -*** *நல்லொழுக்கத்தையும் உணர்த்தி;* ***சான்றோர் கவி -*** *புலமையால் நிறைந்தவர் செய்யுள் (எனப் பொருள்படும்).*

*'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்பதற்கேற்பப் புவியினுக்கு அணியாக அமைகிறது. நிலமகள் மார்பிற்கு ஆரம் போல் பொலிகிறது எனலுமாம். ஆன்ற பொருள் - மலைபடு பொருளாம் தேக்கு, சந்தனம் அகில் பலவகை மணிகள்*

*முதலியவை "அவி அகத் துறைகள் தாங்கி" என்பதற்கு அவி உணவைத் தேவர்க்களிக்கும் வேள்விச் சாலைகளைத் தன் கரையில் கொண்டு - என்பர். சவி - ஒளி தண்ணென் ஒழுக்கம் - எப்போதும் குளிர்ந்த நீரோடிக் கொண்டிருக்கும் ஒழுக்கு. புலத்திற்றாதல் என்பதற்கு வெள்ளப் பெருக்கினாலும் வாய்க்கால் வழியாகவும் பரவி நிறைதல் என்பர். இவையெல்லாம் கோதாவரி பற்றியது.*

*இனிச் சான்றோர் கவி பற்றிக் காணும்போது அணி என்பதை நன்னூலாரும் வல்லோர் அணி பெறச் செய்வன செய்யுள் (நன். 268) என்ற நூற்பாவால் உணர்த்துவர். புலத்திற்றாதல் - தன்னைக் கற்போர்க்கு நுண்ணறிவூட்டி அதனால் ஆய்வு செய்யச் செய்ய நன்கு புலப்படும்ஆழ்ந்த பொருள் கொண்டு அறிவுக்கு உரியது ஆதல், அகத்துறை - அகப்பொருளாம் களவு, கற்பு எனும் ஒழுக்கங்களைக் கூறுதல். புறப் பொருளினும் அகப் பொருள் கேட்போர் உள்ளத்தைக் கவரும் பான்மை கொண்டதால் இதனை முதன்மைப்படுத்திக் கூறினார். போசராசனும் சுவை பலவற்றிலும் இன்பச் சுவை ஒன்றனையே மிகுத்துக் கூறியதை இங்கு நினைவு கூரலாம். ஐந்திணை நெறி - புணர்தல் இருத்தல், பிரிதல் ஊடல், இரங்கல் என்பவையாம். சவியுறத் தெளிதல் - மயக்கத்திற்கு இடமில்லாமல் விளங்க வைத்தல். தண்ணென் ஒழுக்கம் என்பதற்கு மெல்லோசையுடன் தட்டுப்பாடு இன்றிச் செல்லும் இனிய நடைப் போக்கு என்பர்.*

*வீரக் கண்டார் என ஆடவர் மேல் வைத்துக் கூறினும் சீதையும்கண்டாள் எனக் கொள்க.*

*இவ்வாறு கோதாவரி ஆறும் சான்றோர் கவியும், அணி, பொருள், துறை, திணை முதலியன கொண்டு ஒழுகுவதாய், இரட்டுற மொழியும் திறனால் சிலேடை அணியின் சிறப்பை நன்குணரலாம்.*

***2733. வண்டு உறை கமலச் செவ்வி***
***வாள் முகம் பொலிய, வாசம்***
***உண்டு உறை குவளை ஒண்கண்***
***ஒருங்குற நோக்கி, ஊழின்***
***தெண்திரைக் கரத்தின் வாரி,***
***திருமலர் தூவி, செல்வர்க்***
***கண்டு அடி பணிவதென்ன,***
***பொலிந்தது கடவுள்யாறு***

***கடவுள் யாறு -** அந்தத் தெய்வத் தன்மை கொண்ட கோதாவரி ஆறு; **வண்டு உறை கமலச் செவ்வி வாள்முகம் பொலிய -**வண்டுகள் தங்கும் தாமரை மலர் ஆகிய அழகிய ஒளி பொருந்திய முகம் மலர்ந்து விளங்க; **வாசம் உண்டு உறை குவளை ஒண் கண் ஒருங்குற நோக்கி -** நறுமணத்தை உட்கொண்டு அங்கே உள்ள குவளை மலர்களாம் ஒளி மிக்க கண்களால் ஒரு முகமாகப் பார்த்து; **ஊழின் தெண்திரைக் கரத்தின் -** முறையே வரிசையாக வரும் தெளிந்த அலைகளாம் கைகளால்;**திருமலர் வாரி தூவி -** அழகிய மலர்களை ஒருசேர எடுத்துச் சொரிந்து;**செல்வர்க் கண்டு அடிபணிவ தென்ன(ப்) பொலிந்தது -** இராமன் முதலியவரைக் கண்டு அவர்களின் திருவடிகளை வணங்குவது போல விளங்கிற்று.*

ஏழு புண்ணிய நதிகளில் ஒன்றாகிய கோதாவரியைக் கடவுள் யாறு என்றார். பெரியோரைக் காணும் போது முகமலர்ந்து மலர் தூவி அடி வணங்குவது முறைமையாகும். அதன்படி இராமன் முதலோரைக் கண்ட கோதாவரி முகமாம் தாமரை பொலியக் கண்ணாம் குவளை நோக்கஅலைகளாம் கைகளால் மலர் தூவி வணங்கியதாக உருவகிக்கப் பெற்றுள்ளது. ஆறுகளில் தாமரை, குவளை இருப்பதாகக் கற்பனை செய்வது கவி மரபு. 'புள்ளார் புறவிற் பூங்காவி புலன் கொள் மாதர் கண் காட்ட நள்ளார் கமலம் முகங் காட்டும் நறையூர்' என்ற ஆழ்வார் வாக்கும் (பெரிய திருமொழி 6,7,3) 'தெண்ணீர்ப் பொன்னி திரைக்கை யாலடி வருட' என்ற பாசுர வரியும் (பெருமாள் திருமொழி 1) ஒப்பிடத்தக்கன. அயோத்தியா காண்டக் குகப் படலத்தில் 'தெண்திரை எனும் நிமிர்கையால் ஏந்தினாள்' (1988) எனக் கங்கையின் அலையைக் கையாக உருவகம் செய்ததையும் எண்ணிப் பார்க்க இடமுளது. ஊழின் தூவி என்பதற்குப் பெரியோர்க்கு அருச்சனை செய்யும் முறைப்படி அருச்சித்து எனவும் கூறுவர்.

**2734. எழுவுறு காதலாரின் இரைத்து**
**இரைத்து, ஏங்கி ஏங்கி,**
**பழுவ நாள் குவளைச் செவ்விக்**
**கண்பனி பரந்து சோர,**
**வழு இலா வாய்மை மைந்தர் வனத்து**
**உறை வருத்தம் நோக்கி,**
**அழுவதும் ஒத்ததால், அவ் அலங்கு**
**நீர் ஆறு மன்னோ**

**அவ் அலங்கு நீர் ஆறு -** அந்த அசைந்து ஓடுகிற நீரையுடைய கோதாவரி எனும் நதி; **வழு இலா வாய்மை மைந்தர் வனத்து உறை வருத்தம் நோக்கி -** குற்றம் இல்லாத மெய்ம்மை மொழியுடைய இராமலக்குவர் காட்டில் வந்து வாழும் துன்ப நிலையைப் பார்த்து; **எழுவுறு காதலாரின் -** அவர்கள் மேல் எழுந்த அன்பினார்போல்; **இரைத்துஇரைத்து ஏங்கி ஏங்கி -** அடிக்கடி பெருமூச்சு விட்டு மிகவும் இரங்கி; **பழுவ நாள் குவளைச் செவ்விக் கண்பனி பரந்து சோர -**தொகுதியாக உள்ள அன்றலர்ந்த நீல மலர்கள் ஆகிய அழகுள்ள கண்களிலிருந்து நீர்த்துளிகள் எங்கும் பரவி வழிய; **அழுவது ஒத்தது -** புலம்பி அழுவதைப் போன்றிருந்தது; **ஆல், மன், ஓ -** என்பன அசைகள்.

அலங்குதல் - அசைந்தாடுதல் வழுஇலா வாய்மை என்பது தண்டகாரணிய முனிவர்களுக்கு, அவர்களை அரக்கரின் கொடுமையிலிருந்து விடுவிக்கக் கூறிய மொழிகளை நிறை வேற்ற நிற்பவர் எனலாம். மேலும், தம் தந்தை கைகேயிக்குக் கொடுத்த வரத்தின் மெய்ம்மையைக்காக்க வனம்புகுந்த மைந்தர் எனலும் பொருந்தும் கண்ணுக்குக் குவளை; முந்திய பாடலில் (2733) 'குவளை ஒண் கண்' எனக் கூறியதை நோக்குக. கண்பனி - கண்ணீர். பழுவம் என்பது காடு. இது ஆகுபெயராய்த் தொகுதியை உணர்த்திற்று. குவளைக்காடு எனலுமாம். பின்னர் 'எல்லி அம் குவளைக் கானத்து' (2737) எனவும் வருதல் காண்க. குவளை மலரில் தோன்றும் தேன் வழிவதைக் கண்ணீர் (கள்+நீர்) வடிப்பதாகக் கொள்வாரும் உளர். கோதாவரியைச் சேர்ந்த காலம் பனிக்காலத்திற்குச் சற்று முந்தியது. ஆதலால் பனி என்பதற்கு பனி நீர்த்துளி எனவும் கூறுவர்.

*இரைத்து இரைத்து, ஏங்கி ஏங்கி எனும் அடுக்குகள் மிகுதி குறித்து நின்றன. உருவகமும், தற்குறிப்பேற்ற அணியும் இப்பாடலில் அமைந்துள்ளன.*

*இராமனும் சீதையும் இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்தல்*

***2735. நாளம்கொள் நளினப் பள்ளி,***
***நயனங்கள் அமைய, நேமி***
***வாளங்கள் உறைவ கண்டு,***
***மங்கைதன் கொங்கை நோக்கும்,***
***நீளம்கொள் நிலையோன்; மற்றை***
***நேரிழை, நெடியநம்பி***
***தோளின்கண் நயனம் வைத்தாள்,***
***சுடர்மணித் தடங்கள் கண்டாள்.***

***நீளம் கொள் சிலையோன் -*** *நீண்ட வில்லை உடைய இராமன்;* ***நாளம் கொள் நளினப் பள்ளி -*** *தண்டினைக் கொண்ட தாமரை மலராகிய படுக்கையில்;* ***நயனங்கள் அமைய நேமி வாளங்கள் உறைவ கண்டு -*** *கண்கள் மூடியிருக்கச் சக்கரவாகப் பறவைகள் தங்கியிருப்பதைப் பார்த்து;* ***மங்கை தன் கொங்கை நோக்கும் -*** *சீதையின் மார்பகங்களைப் பார்த்தான்;* ***நேரிழை நெடியநம்பி தோளின்கண் நயனம் வைத்தாள் -*** *தக்க அணிகலன்களை அணிந்த சீதை பெரியோனும் ஆண்களிற் சிறந்தவனுமான இராமனின் தோளினைப் பார்த்தாள்;* ***சுடர்மணித் தடங்கள் கண்டாள் -*** *ஒளிவீசும் நீலமணியால் ஆகிய குன்றுகளை நோக்கினாள்;* ***மற்று -*** *வினை மாற்றுப் பொருளில் வந்து;* ***ஐ -*** *சாரியை. நாளம் - உட்துளை கொண்ட தண்டு. நேமி வாளம் - சக்கர வாகம் எனும் நீர்வாழ் பறவை. இது வட்டமாய்க் குவிந்துயர்ந்த வடிவு கொண்டது. எனவே தாமரை மலரில் இப்பறவைகளைப் பார்த்ததும் சீதையின் கொங்கை வடிவை இராமன் கண்டான். பம்பைப் பொய்கையை வருணிக்கும் போது 'மங்கைமார் தடமுலை எனப் பொலிவன வாளம்' (3728) என்பர். சீதை இராமனின் தோள்களைக் கண்டு அவற்றைப் போன்று ஆற்றின் கண் உள்ள மணற்குன்றுகள் இருப்பதை எண்ணினாள். இராமன் புறப்பொருளினைக் காணும் போது தன் துணைவியையும் இராமனின் தோள் அழகைக் காணும் போது சீதைக்குப் புறத்தே உள்ள மணற்குன்றின் அமைப்பையும் உவமையாகக் காணும் நிலை புலப்படுகின்றது. புறக்காட்சியில் அகநிலையும் அகக் காட்சியில் புறநிலையும் காண்பதில் முறையே இராமன் சீதைஆகியோரின் அன்புள்ளம் தெரிகிறது. மணித்தடம் - அழகிய கரை எனலுமாம். நெடியோனாய் உலகளந்த திருமாலை நினைப்பூட்டும் 'நெடிய நம்பி' எனும் தொடர் தயரதனின் மூத்த மகன் எனலுமாம். மகளிர்க்குக் கொங்கையும் ஆடவர்க்குத் தோளும் சிறந்த உறுப்புகளாதலால் அவற்றை இங்கே ஒருங்கே காண்கிறோம். நேரிழை என்பது அத்திரி முனிவனின் மனைவி அனுசுயை கொடுத்த அணிகலன்களை நினைவூட்டும். சக்கரவாகம் என்ற சொல் சக்கரவாளம் என ஆயிற்று. சக்கரம் என்பதை நேமி என்ற சொல்லால் சுட்டினார். நேரிழை - அன் மொழித் தொகை.*

*ஒரு பொருளைக் கண்டு ஒப்புமையால் மற்றொரு பொருளை நினைப்பது கூறியதால் இது நினைப்பணி.*

*2736.* ***ஓதிமம் ஒதுங்க, கண்ட***
***உத்தமன், உழையள் ஆகும்***
***சீதை தன் நடையை நோக்கி, சிறியது ஓர்***
***முறுவல் செய்தான்;***
***மாது அவள் தானும், ஆண்டு வந்து,***
***நீர் உண்டு, மீளும்***
***போதகம் நடப்ப நோக்கி, புதியது ஓர்***
***முறுவல் பூத்தாள்.***

**ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் -** *அன்னப் பறவை நடந்து செல்லக் கண்ட மேலானவனான இராமன்;* **சீதை தன் நடையை நோக்கி சிறியது ஓர் முறுவல் செய்தான் -** *சீதையின் நடையைப் பார்த்து ஒரு புன் சிரிப்புக் கொண்டவனானான்;* **ஆண்டுவந்து நீர் உண்டு மீளும் போதகம் நடப்ப நோக்கி -** *அங்கு வந்து நீரைப் பருகி மீளுகின்ற ஆண்யானை நடந்து செல்வதைப் பார்த்து;* **மாது அவள் தானும் புதியது ஓர் முறுவல் பூத்தாள் -** *அச்சீதையும் அதுவரை இல்லாத ஒரு தனிப் புன்னகை பூண்டாள்.*

*உண்ணல் என்பது உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன என்ற சிறப்பு வினைகளைக் கூறாது இங்கு பொது வினையைக் குறித்தது என்பர். போதகம் - பத்தாண்டு நிறைந்த யானைக் கன்று. சீதையின் நடைக்கு அன்னம் தோற்றது என்பதை 'ஒதுங்க' என்ற சொல்லும் இராமன் நடைக்கு ஆண்யானை தோற்றதை 'மீளும்' என்ற சொல்லும் சுட்டும். கோலங் காண் படலத்தில் சீதை மண்டபத்தை நோக்கி நடந்தபோது 'அன்னமும் அரம்பையரும் ஆர் அமிழ்தும் நாணமன் அவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள்' (1144) என்பதை நினைவு கொள்ளலாம். அம்மண்டபத்தில் வில்லொடிக்க எழுந்த இராமன் நாகமும் நாண நடந்தான்' (697) என்பதையும் ஒப்பிடலாம். சென்ற பாடலில் புறப்பொருள்கள் உவமையாக அமைந்தன. இங்கு, புறப்பொருளின் செயல்களைத் தலைமக்களின்செயல்கள் வென்ற நிலையில் அமைவதைக் காணலாம். ஆடவர் செயலினும் மகளிர் செயல் அடங்கி நிற்பதைப் புதிய தோர் முறுவல் பூத்தாள்' என்பார்.*

*இதில் ஏதுத்தற்குறிப்பேற்ற அணி அமைந்துள்ளது.*

*2737.* ***வில் இயல் தடக் கை வீரன், வீங்கு நீர்***
***ஆற்றின் பாங்கர்,***
***வல்லிகள் நுடங்கக் கண்டான்,***
***மங்கைதன் மருங்குல் நோக்க,***
***எல்லிஅம் குவளைக் கானத்து, இடை இடை***
***மலர்ந்து நின்ற***
***அல்லிஅம் கமலம் கண்டாள், அண்ணல்தன்***
***வடிவம் கண்டாள்.***

***வில்லியல் தடக்கை வீரன் -*** *வில் வித்தையில் தேர்ச்சி பெற்ற நீண்ட கைகளை உடைய வீரனான இராமன்;* ***வீங்கு நீர் ஆற்றின் பாங்கர் -*** *மிகுந்த நீரையுடைய கோதாவரி நதியிடத்தே;* ***வல்லிகள் நுடங்கக் கண்டான் -*** *கொடிகள் அசைவதைப் பார்த்து;* ***மங்கைதன் மருங்குல் நோக்க -*** *சீதையின் (துவளும்) இடையைப் பார்க்க;* ***(அச்சீதை) எல்லி அம் குவளைக் கானத்து இடை இடை -*** *இருள் போல் கறுத்த அழகிய நீலமலர்த் தொகுதியின் நடுநடுவே;* ***மலர்ந்து நின்ற அல்லி அம் கமலம் கண்டாள் -*** *பூத்து விளங்கிய அகவிதழ்களை உடைய அழகிய தாமரை மலர்களைப் பார்த்து;* ***அண்ணல் தன் வடிவம் கண்டாள் -****இராமனின் (கரிய) திருமேனியை நோக்கினாள்.*

*வில் இயல் தடக்கை - வில் பொருந்திய வலிய கை எனவுமாம். எல்லி அம் குவளைக் கானத்து - இரவில் மலர்ந்து விளங்கும் அழகிய குவளைக் காட்டிடத்து என்றும் கூறுவர். குவளை இரவில் மலரும் மலர். இராமன் கொடியைக் கண்டு ஒப்புமையால் சீதையின் இடையை நினைத்தான். குவளை மலர்களின் இடையே மலர்ந்த தாமரை மலர்களைக் கண்டுஇராமனின் வடிவை, சீதை உற்று நோக்கினாள். குவளை மலர்க் கூட்டத்தின் இடையே மலர்ந்த தாமரை மலர்கள் இராமனின் கரிய மேனியில் சிவந்து விளங்கும் கண் கால் முகம் முதலிய உறுப்புகளை ஒத்திருந்தன என்க.*

*பாங்கர் - பாங்கு என்ற சொல்லின் ஈற்றுப் போலி. இப்பாடலும் நினைப்பணி.*

***2738. அனையது ஓர் தன்மை ஆன அருவி நீர்***
***ஆற்றின் பாங்கர்,***
***பனி தரு தெய்வப் 'பஞ்சவடி' எனும்,***
***பருவச் சோலைத்***
***தனி இடம் அதனை நண்ணி,***
***தம்பியால் சமைக்கப்பட்ட***
***இனிய பூஞ் சாலை எய்தி இருந்தனன்***
***இராமன். இப்பால்,***

***அனையது ஓர் தன்மை ஆன -*** *அத்தகைய ஓர் (அழகிய) தன்மையுடைய;* ***அருவி நீர் ஆற்றின் பாங்கர் -*** *அருவியாகப் பெருகிய நீருடைய கோதாவரி நதியின் அருகே;* ***பனிதரு தெய்வப் பஞ்சவடி எனும் -*** *குளிர்ச்சி பொருந்திய தெய்வத் தன்மை பொருந்திய பஞ்சவடி என்று அழைக்கப் பெறும்;* ***பருவச் சோலைத் தனி இடம் அதனை நண்ணி -*** *காலத்தால் மலரும் சோலையாகிய ஒப்பற்ற அந்த இடத்தை அடைந்து;* ***தம்பியால் சமைக்கப்பட்ட இனிய பூஞ்சாலை எய்தி -****இலக்குவனால் அமைக்கப்பட்ட இன்பம் நிறைந்த அழகிய பர்ண சாலையை அடைந்து;* ***இராமன் இருந்தனன் -*** *இராமன் தங்கியிருந்தான்;* ***இப்பால் -****இதன்பின்.*

*முன்னர் அகத்தியப் படலத்தில் 'ஓங்கும் மரன் ஓங்கி..... உறையுள் பஞ்சவடி' (2687) என்பதை இத்துடன் எண்ண இடமுளது. பூஞ்சாலை - அழகிய தழைகளால் வேய்ந்த தவச்சாலை. இராமனும் சீதையும் ஆற்று வளனை நுகர்ந்து இன்பம் நுகர்ந்த போது இலக்குவன் இராமனின் கட்டளைக்கேற்பச் சாலை அமைத்தனன் என்பது குறிப்பால் அறியும் செய்தி. 'பனிதரு... பஞ்சவடி' என்றதால் இனிமேல் வரப்போகும் துன்பத்தைப் 'பனி' என்ற தொனியால் உணர்த்தி நின்றது. (பனி - வருத்தம்).*

*இச் செய்யுளுடன் பஞ்சவடிப் படலம் முடியும் என்ற குறிப்பு சிலசுவடிகளில் காணப்பெறும்.*

கலிவிருத்தம்

***2739. நீல மா மணி நிற***
***நிருதர் வேந்தனை***
***மூல நாசம் பெற முடிக்கும்***
***மொய்ம்பினாள்,***
***மேலைநாள் உயிரொடும்***
***பிறந்து, தான் விளை***
***காலம் ஓர்ந்து, உடன் உறை கடிய***
***நோய் அனாள்,***

**நீல மா மணி நிற நிருதர் வேந்தனை -** *சிறந்த நீல ரத்தினம் போன்ற கருநிறமுடைய இராக்கதர் அரசனாம் இராவணனை;* **மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள் -** *வேரோடு அழிவு அடையுமாறு சூழ்ச்சி செய்து அழிக்கும் வலிமை உடையவளும்;* **மேலைநாள் உயிரொடும் பிறந்து -** *முற்காலத்தில் உயிரோடு கூடவே தோன்றி;* **தான் விளை காலம் ஓர்ந்து -** *தான் செயலியற்றுதற்கு உரிய காலத்தை எதிர்பார்த்து எண்ணி;* **உடன் உறை கடிய நோய் அனாள் -** *அவ்வுயிரோடு கூடவே தங்கும் கொடிய வியாதியைப் போன்றவளும்; (ஆகிய சூர்ப்பணகை)*

*இச்செய்யுள் மேற்றொடர்ந்து வரும் செய்யுளில் (2741) உள்ள 'எய்தினள்' என்ற வினைமுற்றுடன் முடியும். நீலமாமணி இராவணனின் கரு நிறத்திற்கு உவமை. நிருதர் என்பவர் நிருதி எனும் தென்மேற்குத் திசைக்குக் காவல் பூண்ட தெய்வத்தின் வழி வந்தவர் என்பர். வேரோடு அழிதல் என்பது குலம் முற்றிலும் அற்றுப் போதலைக் குறிக்கும். முன்பு - உடல் வலிமை. மேல் என்பது ஐகாரச் சாரியை பெற்று மேலை என ஆயிற்று. உடன் பிறந்தே கொல்லும் வியாதி என்ற வழக்கிற்கேற்பச்சூர்ப்பணகையை 'உடன் உறை கடிய நோய் அனாள்' என்றார். கரன் வதைப் படலத்தில் இக்கருத்தை வலியுறுத்தல் போன்று 'உடன் உறைந்து உயிர்கள் தம்மை அந்தகர்க்கு அளிக்கும் நோய் போல் அரக்கி முன் ஆக' (2930) எனக் குறிப்பிடப் பெறுவதை எண்ணிப் பார்க்கலாம்.*

*முன்னர் 'இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல் துன்னரும் கொடு மனக் கூனி தோன்றினாள்' (1445) என்றும் அதற்கு முன் இராமனின் அம்பால் தாடகை வீழ்ந்த போது 'முடியுடை அரக்கற்கு, அந்நாள், முந்தி உற்பாதம் ஆக, படியிடை அற்று வீழ்ந்த வெற்றி அம் பதாகை ஒத்தாள்' (390) என்றும் கொடியவர்களை இராவணனோடு தொடர்புபடுத்திச் செல்லும் காப்பிய நெறி எண்ணி மகிழ்தற்குரியது. இச் செய்யுள் முதல் 'சூர்ப்பநகி மூக்கரி படலம்' என்றும் 'சூர்ப்பணகைப் படலம்' என்றும் காணப் பெறும்.*

***2740. செம் பராகம் படச்***
***செறிந்த கூந்தலாள்,***

வெம்பு அராகம் தனி
விளைந்த மெய்யினாள்,
உம்பர் ஆனவர்க்கும், ஒண்
தவர்க்கும், ஓத நீர்
இம்பர் ஆனவர்க்கும், ஓர்
இறுதி ஈட்டுவாள்,

**செம்பு அராகம் பட** - தாமிரத்தின் செந்நிறம் போலச் செந்நிறம் பொருந்த; **செறிந்த கூந்தலாள்** - அடர்ந்த தலை மயிரை உடையவளும்; **வெம்பு அராகம் தனி விளைந்த மெய்யினாள்** - வெப்பம் கொள்ளும் (காம) ஆசை ஒப்பிலாது வளர்ந்து தழைத்த உடம்பை உடையவளுமான சூர்ப்பணகை; **உம்பர் ஆனவர்க்கும்** - தேவர்களுக்கும்; **ஒண் தவர்க்கும்** - சிறந்த தவத்தை உடைய முனிவர்களுக்கும்; **இம்பர் ஆனவர்க்கும்** - இவ்வுலக மக்களுக்கும்; **ஓர் இறுதி ஈட்டுவாள்** - ஒப்பற்ற ஓர் அழிவைச் செய்ய வல்லவளும் ஆன (சூர்ப்பணகை),

செம்பராகம் படச் செறிந்த கூந்தலாள் - செம்பட்டை மயிருடையவள். செந்நிறம் இவள் கூந்தல் முன் நிற்க மாட்டாது அழிவுறும்படி. அடர்ந்த கூந்தலுடையவள் என்றுமாம். செம் - பராகம் எனப் பிரித்துச் சிவந்த புழுதி நிறம் பொருந்த எனக் கூறுவாருமுளர். 'வெம்ப ராகு' எனக் கொண்டு திருமாலை வஞ்சித்து அமுது பெறக் கருதிய இராகு போல் சூர்ப்பணகை இராமனை வஞ்சித்து இன்பம் பெறக் கருதினள் என்பாருமுளர். இராகுவின் கொடுமை இவளுக்கும் ஏற்புடைத்து. இராமவதாரத்தின் பயன் சூர்ப்பணகை வாயிலாக நடைபெற்றது என்பதை முன் செய்யுளாலும் (2739) இச் செய்யுளாலும் உணர்த்துகிறார். இது போன்று முன்னரும் 'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூய் மொழி மடமான்' எனக் கைகேயியைப் பற்றிக் கூறியமை (1484) காண்க. இவ்வாறே பின்னர் இலக்குவன் பற்றிக் கூறும்போது 'தேவர் செய் தவத்தினால் செம்மல் ஏகினான்' (3337) என்பதால் இக்காப்பிய நெறி புலப்படும் அவர்களின் செய்கை உலக நன்மைக்குக் காரணமாயிற்று என இதனால் உணரலாம். இதனடிப்படையில் 'ஓர் உறுதி ஈட்டுவாள்' எனப் பாடம்கொண்டு ஒப்பற்ற நன்மையைத் தேடித் தருவாள் என்று பொருள் காண்பர்.

2741. வெய்யது ஓர் காரணம்
உண்மை மேயினாள்,
வைகலும் தமியள் அவ்
வனத்து வைகுவாள்,
நொய்தின் இவ் உலகு எலாம்
நுழையும் நோன்மையாள்,-
எய்தினள், இராகவன்
இருந்த சூழல்வாய்.

**வெய்யது ஓர் காரணம் உண்மை மேயினாள்** - கொடிதான ஒரு காரணம் தன்னிடம் உள்ளதைப் பொருந்தியவளாய்; (அதனால்)**தமியள் அவ்வனத்து வைகலும் வைகுவாள்**

*- தனியளாய் அக்காட்டில் நாளும் வாழ்ந்து வருபவளாய்;* ***இவ் உலகு எலாம் நொய்தின் நுழையும் நோன்மையாள் -*** *இவ்வுலகம் முழுவதும் விரைவாகப் புகுந்து செலும் வலிமையுடையவளாய் உள்ள சூர்ப்பணகை;* ***இராகவன் இருந்த சூழல்வாய் எய்தினள்*** *- இராமன் தங்கிய பூஞ்சாலையிடத்து வந்தாள்.*

*வெய்யதோர் காரணம் - இராவணன் சூர்ப்பணகையின் கணவனாம் வித்யுச்சிவனைக் கொன்ற கொடுமைக்குப் பழி வாங்குதல் காரணமாம். இனிச் சூர்ப்பணகை கொண்ட கொடிய காம இச்சையைக் குறிப்பாகக் காரணம் எனக் கூறியதுமாம். மேலும் சூர்ப்பணகை கணவனை இழந்து வருந்திய போது இராவணனின் விருப்பப்படி கரன் முதலிய இராக்கதர் துணையோடு தண்டகாரணியத்தில் சனத்தானம் எனுமிடத்தில் தான் விரும்பிய போதெல்லாம் திரிந்து முனிவர்களை வருத்த வேண்டும் என்ற காரணமுமாம். இராவணன் முதலியோர் குலத்துடன் அழியும் கொடிய ஊழ்வினை காரணம் எனலுமாம். இராமன் சீதையைப் பிரியும்படியான காரணமுமாம் தமியள் என்பது அவ்வனம் முழுதும் தனியே உலவிவருபவள் என்றும், பெண்களுக்குரிய அடக்கம், கட்டுப்பாடு இன்றி விருப்பப்படி திரிபவள் என்றுமாம். இரகு என்ற அரசன் மரபில் தோன்றியதால் இராகவன் என்ற பெயர் பெற்றான். சூழல் வாய் - என்பது ஏழன் உருபாய் இடப்பொருளுணர்த்தி நின்றது.*

***2742. எண் தகும் இமையவர், 'அரக்கர்***
***எங்கள்மேல்***
***விண்டனர்; விலக்குதி'***
***என்ன, மேலைநாள்***
***அண்டசத்து அருந் துயில்***
***துறந்த ஐயனைக்***
***கண்டனள், தன் கிளைக்கு***
***இறுதி காட்டுவாள்.***

***மேலைநாள் எண்தகும் இமையவர் அரக்கர் எங்கள்மேல் விண்டனர் விலக்குதி என்ன -*** *முன்னொரு காலத்தில் நன்கு மதிக்கத்தக்க தேவர்கள் 'எங்களை அரக்கர்கள் பகைத்தனர். அவர்கள் தரும் துன்பத்தை நீக்குவாய்' என வேண்ட; (அதனால்),* ***அண்டசத்து அருந்துயில் துறந்த ஐயனை -*** *ஆதிசேடன் என்ற பாம்பின் மீது அரிய யோக நித்திரை செய்வதை விட்டு விட்டு உலகில் அவதரித்த இராமனை;* ***தன் கிளைக்கு இறுதி காட்டுவாள் கண்டனள் -*** *தன் சுற்றத்தாராம் அரக்கர்களுக்கு முடிவை உண்டாக்குபவளான சூர்ப்பணகை பார்த்தாள்.*

*எண் - புகழுமாம். எண்தரும் என்பதற்கு முப்பத்து முக்கோடி எனும் எண்ணிக்கையைக் குறிக்கிறது என்றும் உரைப்பர். விண்டனர் - வேறுபட்டனர் என்ற பொருள் பகைமை கொண்டதைக் குறிக்கும். அண்டசம் எனின் முட்டை; அதிலிருந்து தோன்றிய பாம்பைக் குறிக்கும். கிளைக் கிறுதி காட்டுவாள் ஐயனைக் கண்டனள் என்பதால் இராமன் மேல் இவள் கொண்ட காமத்தால் அரக்கர் குலமே அழியப் போவதைச் சுட்டி நிற்கிறது. தேவர்கள் அரக்கர்களின் கொடுமையால் திருமாலை வேண்டியதால் இராமனாக அவதரித்ததைப் பாலகாண்டத் திருஅவதாரப் படலம்*

*விவரித்தது (184-207) மெய்மறந்து மக்கள் தூங்குவது போலன்றி எல்லா உயிர்களையும் காப்பாற்றுவதை எண்ணியவாறே உறங்கும் உறக்கத்தை அறிதுயில் என்பர்.*

*காட்டுவாள் என்பதை முற்றெச்சமாகக் கொண்டு தன் சுற்றத்திற்கு அழிவை அடைவிப்பவளாய் இராமனைக் கண்டாள் எனக் கொள்வாரும் உளர்.*
*இராமன் அழகைச் சூர்ப்பணகை வியத்தல்*

***2743. 'சிந்தையின் உறைபவற்கு***
***உருவம் தீர்ந்ததால்;***
***இந்திரற்கு ஆயிரம்***
***நயனம்; ஈசற்கு***
***முந்திய மலர்க் கண் ஓர் மூன்று;***
***நான்கு தோள்,***
***உந்தியில் உலகு அளித்தாற்கு'***
***என்று உன்னுவாள்.***

**சிந்தையின் உறைபவற்கு உருவம் தீர்ந்தது -** *(எல்லோருடைய)மனத்திலும் தங்குபவனாகிய மன்மதனுக்கு வடிவம் ஒழிந்து போயிற்று;* **இந்திரற்கு ஆயிரம் நயனம் -** *தேவேந்திரனுக்கு ஆயிரம் கண்கள்(உண்டு);* **ஈசற்கு முந்திய மலர்க்கண் ஓர் மூன்று -** *சிவனுக்கு சிறந்த தாமரை மலர் போன்ற கண்கள் மூன்றாம்;* **உந்தியில் உலகு அளித்தாற்கு நான்கு தோள் -** *தன்திருநாபியில் உலகங்களைத் தந்தருளிய திருமாலுக்குத் தோள்கள் நான்காம்;* **என்று உன்னுவாள் -** *எனச் சூர்ப்பணகை நினைப்பாள்.*

*இராமனின் அழகைக் கண்டு வியந்த சூர்ப்பணகை 'இவன் மன்மதனோ?' என முதலில் ஐயுற்றாள். 'மன்மதனுக்கு வடிவமில்லை. இவனோ வடிவுடையவன். எனவே இவன் மன்மதனன்று' எனத் தெளிந்தாள். பின்னர் 'இவன் இந்திரனோ, சிவனோ, திருமாலோ' என ஐயுற்றபின்முறையே ஆயிரங் கண்ணும், மூன்று கண்ணும். நான்கு கையும் இல்லாததால் அவர்கள் அல்லன் எனத் தெளிந்தாள். அகப்பொருள் துறையில் தலைவன் தலைவியைக் கண்டு ஐயுறலுக்கு மாறாக இங்குப் பெண் மற்றோர் ஆணைக் கண்டதும் முதலில் ஐயுறுவதால் இது பொருந்தாக் காமம் ஆகிய பெருந்திணையின் பாற்படும்.*

*மன்மதன் உருவமற்ற நிலை எய்தியதை (339) விசுவாமித்திரன் வாயிலாக அறிகிறோம். அத்துடன் அடுத்த பாட்டிலும் 'கற்றை அம்சடையவன் கண்ணின் காய்தலால் இற்றவன்' (2744) எனவும் காணப் பெறும். சிவனுக்குச் சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்று கண்கள். முறையே செந்தாமரை, வெண்டாமரை, செவ்வல்லி ஆகிய மலர்கள் போன்ற கண்களாகப் புலப்படுவதால் 'மலர்க்கண் ஓர் மூன்று' என வந்துள்ளது.*

*இப்பாடலில் ஐயமும் ஐயமறுப்பும் அமைந்துள்ளன. ஆல் - அசை.*

*2744. 'கற்றை அம் சடையவன்*
*கண்ணின் காய்தலால்*
*இற்றவன், அன்று தொட்டு*
*இன்றுகாறும், தான்*
*நல் தவம் இயற்றி, அவ்*
*அனங்கன், நல் உருப்*
*பெற்றன னாம்' எனப்*
*பெயர்த்தும் எண்ணுவாள்*

***கற்றை அம் சடையவன் கண்ணின் காய்தலால் இற்றவன் -*** *தொகுதியான அழகிய சடையை உடைய சிவனின் நெற்றிக் கண்ணால் எரித்தலால் உடல் அழியப் பெற்றவனான;* ***அவ் அனங்கன் தான் -****அந்த மன்மதனே;* ***அன்று தொட்டு இன்று காறும் நல் தவம் இயற்றி -****தன் உடல் அழிந்த அன்று முதல் இன்று வரை நல்ல தவங்களைச் செய்து;* ***நல் உருப் பெற்றனனாம் -*** *இந்த நல்ல வடிவைப் பெற்றனன் ஆகும்;****எனப் பெயர்த்தும் எண்ணுவாள் -*** *என்று மீண்டும் சூர்ப்பணகை நினைப்பாள்.*

*முன்னர் மன்மதனோ என்று ஐயுற்று அவன் வடிவம் தான் சிவன் நெற்றிக் கண்ணால் எரிந்து விட்டதே என எண்ணியவள் இந்த வடிவைப் பெறுதற்கு வேறு காரணம் இருக்க வேண்டும் என எண்ணுகிறாள். அனங்கன் - அங்கம் இல்லாத மன்மதன். தான் - துணிவுப் பொருளுணர்த்தும் இடைச்சொல். இது தற்குறிப்பேற்ற அணி. மன்மதன் அனங்கனான கதை: முன்னர்க் கைலாயத்தில் சனகாதி முனிவர்க்குச் சிவன் யோக நிலையை உணர்த்த யோக நிலையில் இருந்த போது தேவர்களின் ஏவலான் மன்மதன் சிவன் மீது மலர்ப்பாணங்களை எறிய அதனால் சினங் கொண்ட சிவன் தன் நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்தார்.*

*2745. 'தரங்களின் அமைந்து, தாழ்ந்து,*
*அழகின் சார்பின;*
*மரங்களும் நிகர்க்கல;*
*மலையும் புல்லிய;*
*உரங்களின் உயர் திசை*
*ஓம்பும் ஆனையின்*
*கரங்களே, இவன் மணிக் கரம்*
*என்று உன்னுவாள்.*

***இவன் மணிக்கரம் -*** *இவனது அழகிய கைகள்;* ***தரங்களின் அமைந்து தாழ்ந்து அழகின் சார்பின -*** *சிறப்பில் உத்தம இலக்கணம் கூறியபடி பொருந்தி (முழந்தாள் அளவும்) நீண்டு அழகுக்குத் தங்குமிடம் ஆக உள்ளன;* ***மரங்களும் நிகர்க்கல -*** *(பெரியபனை) மரங்களும் ஒப்பானவை அல்ல;* ***மலையும் புல்லிய -*** *(உவமையில்) மலைகளும்இழிந்தவை ஆம்;* ***உரங்களின் உயர் திசை ஓம்பும் ஆனையின் கரங்களே -*** *வலிமைகளால் மிக்க திக்குகளைத் தாங்கும் யானைகளின் துதிக்கைகளே ஆம்;* ***என்று உன்னுவாள் -*** *எனச் சூர்ப்பணகை எண்ணுவாள்*

*ஆடவர் கரங்களுக்கு வலிமையாலும் நிறத்தாலும் ஒப்புமை உடைய பனை மரங்களும் இவன் நீல நிறமுள்ள வலிய கரங்களுக்கு ஒப்பாகமாட்டா. சிலர் 'தாழ்ந்துயர்ந்த தாலமா மரங்களும் நிகர்க்கில' என வேறு பாடம் கொள்வர் செழித்துப் பருத்து வளர்ந்து உருண்டு நீண்ட தன்மையால் மரத்தைக் கைக்கு உவமை கூறுவர். ஆயினும் அவையும் ஈடாகா; அழித்தற்கரிய வலிமையாலும் தோற்றப் பெருமையாலும் மலையைக் கைக்கு உவமை கூறுவர். அதுவும் இங்குப் பொருந்தாது எனச் சூர்ப்பணகைஇராமனின் மணிக்கர அழகில் தோய்கின்றாள். எல்லா இலக்கணமும் பொருந்திய இவன் கைகளுக்குத் திக்கு யானைகளின் துதிக்கைகளே பொருந்தும் என நினைக்கிறாள். இராமன் மேனி அழகைப் பற்றிச் சீதையிடம் அனுமன் 'நீடுறு கீழ்த்திசை நின்ற யானையின் கோடு உறுகரம் என, சிறிது கூறலாம், தோடு உறு மலர் எனச் சுரும்பு சுற்று அறாத் தாள் தொடு தடக்கை' (5274) எனக் கூறிய மொழிகளை இத்துடன் ஒப்பிடலாம் கரங்களே - ஏகாரம் துணிவுப் பொருளது.*

***2746. 'வில் மலை வல்லவன்***
***வீரத் தோளொடும்***
***கல்மலை நிகர்க்கல;***
***கனிந்த நீலத்தின்***
***நல் மலை அல்லது,***
***நாம மேருவும்***
***பொன்மலை ஆதலால்,***
***பொருவலாது' என்பாள்.***

***வில்மலை வல்லவன் வீரத் தோளொடும் கல் மலை நிகர்க்கல -** வில்லால் போர் செய்ய வல்லவனாம் இவனுடைய வீரம் பொருந்திய தோள்களோடும் வெறும் கல்லால் அமைந்த மலைகள் ஒப்பு ஆகா;**கனிந்த நீலத்தின் நல் மலை அல்லது -** முதிர்ந்த நீல ரத்தின மயமான அழகிய மலை அல்லாமல்; **நாம மேருவும் பொன் மலை ஆதலால் பொருவலாது என்பாள் -** புகழ்மிக்க மேரு மலையும் பொன்மயமான மலை ஆதலின் ஒப்பாகாது எனச் சூர்ப்பணகை சொல்லுவாள்.*

*மலை வல்லவன் - மலைதலில் வல்லவன் மலைய எனும் செயவென் எச்சம் தொக்கு நின்றது என்பர் மலை என்பதனை முதனிலைத் தொழிற் பெயராகவும் கொள்வர். மலை வில் என மாற்றி மலை போன்ற வலிய பெரிய வில் எனவும் கொள்வர். இவன் தோளுக்குக் கல் மலையும், பொன் மலையும் வலிமையாலும் நிறத்தாலும் ஒப்பாகா. இந்திர நீல மலையே ஒப்பாகும். நாமம் - புகழ், பெருமை. அச்சத்தையூட்டும் மலை எனினும் அமையும்.*

***2747. தாள் உயர் தாமரைத்***
***தளங்கள் தம்மொடும்***
***கேள் உயர் நாட்டத்துக்***
***கிரியின் தோற்றத்தான்***
***தோளொடு தோள் செலத்***

***தொடர்ந்து நோக்குறின்,***
***நீளிய அல்ல கண்;***
***நெடியமார்பு!' என்பாள்.***

***தாள் உயர் தாமரைத் தளங்கள் தம்மொடும் கேள் உயர் நாட்டத்துக் கிரியின் தோற்றத்தான் -*** *நாளத்தோடு கூடி உயர்ந்த செந்தாமரை மலரின் இதழ்களுடன் ஒளி சிறந்து விளங்கும் கண்களையும் மலை போன்று சிறந்து விளங்கும் தோற்றத்தையும் உடைய இவனது;* ***தோளொடு தோள் செலத் தொடர்ந்து நோக்குறின் -*** *ஒரு தோளோடு மற்றொரு தோளை அளாவத் தொடர்ச்சியாகப் பார்த்தால்;* ***கண் நீளிய அல்ல -*** *என் கண்கள் நீண்டன அல்ல;* ***மார்பு நெடிய என்பாள் -****மார்பு நீண்டு பரந்துள்ளது என்று சொல்வாள்.*

*நீர்ப்பூக்களில் தாமரை மலரே நீர்மட்டத்திற்கு மேலே உயர்ந்து தோன்றும் நாளங்களை உடையது. எனவே தாளுயர் தாமரை எனப்பட்டது. தளம் - பூவிதழ். கேள் - கேழ் என்பதன் திரிபு. கேள் என்பதற்கு ஒற்றுமைஎனவும் பொருள் காண்பர். தாமரை இதழ் செவ்வரி படர்ந்து குளிர்ச்சியையும் மகிழ்ச்சியையும் தரும் அழகுடையதால் இராமனின் கண்களுக்கு உவமை கூறப்பெற்றது. தோள்கள் இரண்டிற்கும் நடுவிலுள்ள மார்பின் பரப்பு முழுவதையும் ஒரே சமயத்தில் பார்க்கக் கூடாதவாறு பரந்து விரிந்து இருப்பதால் 'நீளிய அல்ல கண்' என்றாள். உத்தம இலக்கணப்படி இராமனின் மார்பின் பரப்பளவு இத்தன்மையது எனக் கூறப் பெற்றுளது. பறிக்கப்படாத மலர் என்பதனைச் சுட்டத் 'தாளுயர் தாமரை' எனலுமாம்.*

*கண் - கண்ணின் பார்வைக்கு இலக்கணை. இப்பாடலில் உவமை அணி உளது.*

***2748. அதிகம் நின்று ஒளிரும்***
***இவ் அழகன் வாள்முகம்***
***பொதி அவிழ் தாமரைப்***
***பூவை ஒப்பதோ?***
***கதிர் மதி ஆம் எனின்***
***கலைகள் தேயும்; அம்***
***மதி எனின், மதிக்கும்***
***ஓர் மறு உண்டு' என்னுமால்***

***அதிகம் நின்று ஒளிரும் இவ் அழகன் வாள்முகம் -****மிகுதியாக நிலை பெற்று எப்போதும் ஒளிவீசும் இந்த அழகியவனின் ஒளிமிக்க முகம்;* ***பொதி அவிழ் தாமரைப் பூவை ஒப்பதோ -*** *மொட்டு அவிழ்ந்து மலரும் தாமரை மலரை ஒத்திருக்குமோ? (ஆகாது என்பதாம்);* ***கதிர்மதி ஆம் எனின் கலைகள் தேயும் -*** *ஒளியுடைய சந்திரன் என உவமை கூறுவோம் என்றால் அந்தச் சந்திரனின் கலைகள் நாள்தோறும் தேய்ந்து விடும்;* ***அம்மதி எனின் மதிக்கும் ஓர்மறு உண்டு என்னும் -*** *அவ்வாறே அந்தச் சந்திரனை உவமை கூறினாலும் அந்தச் சந்திரனுக்கும் கறை எனும் ஒரு குற்றம் எப்போதும் உள்ளது என்று சொல்லுவாள்;* ***ஆல் -*** *ஈற்றசை.*

*பொதி - மொட்டு, அரும்பு 'பொதியினை நகுவன புணர்முலை' (75) எனப் பால காண்டத்தில் நாட்டுப்படல வரி இதனை வலியுறுத்தும். அடிக்கடி கூம்பி மலரும் தாமரைப் பூவும், நிலை மாறிய நிலையையும் எப்போதும் கறையையும் கொண்ட சந்திரனும் இராமனின் முகத்திற்கு ஒப்பாகா எனக் காரணத்தோடு இராமனின் முக அழகின் சிறப்பைச்சூர்ப்பணகை நினைப்பாள்.*

*ஒப்பதோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. என்றும் மலர்ந்து வாடாது விளங்குவது இராமனின் முகம், வளர்ந்து தேயும் மதி இதற்கு ஈடாகாது கலைகள் தேய மறு மட்டும் நிலைத்திருக்கும் என உவமேயத்தால் உவமைக்குள்ள வேற்றுமையை விளக்குவதால் இது வேற்றுமை அணி. 1*

***2749'எவன் செய, இனிய இவ்***
***அழகை எய்தினோன்?***
***அவம் செயத் திரு உடம்பு***
***அலச நோற்கின்றான்;***
***நவம் செயத்தகைய இந்***
***நளின நாட்டத்தான்***
***தவம் செய, தவம் செய்த தவம்***
***என்?' என்கின்றாள்.***

***இனிய இவ் அழகை எய்தினோன் -*** *இன்பம் அளிக்கும் இப்படிப் பட்ட அழகை அடைந்த இவன்;* ***எவன் செய -*** *எதைப் பெறுவதற்காக;* ***அவம் செயத் திரு உடம்பு அலச நோற்கின்றான் -*** *வீண் ஆக்கிக்கொள்ளத் தன் அழகிய திருமேனி வருந்தத்தவம் செய்கிறான்?;* ***நவம் செயத் தகைய இந் நளின நாட்டத்தான் -*** *மேலும் புதுமையை உண்டாக்கத்தக்க இந்தத் தாமரை மலர் போன்ற கண்களை உடைய இவன்;* ***தவம் செய -*** *தவம் செய்யும்படி;* ***தவம் செய்த தவம் என்' என்கின்றாள் -*** *அத்தவம் தான் முன்னர்ச் செய்த தவம் எதுவோ' என்று வியந்து சொல்கின்றாள்.*

*எவன் - யாது. செயல் - தேடிப் பெறுதல். 'செயத்திரு' எனச் சேர்ந்து வெற்றித் திருமகள் எனப் பொருள் கொண்டு அவள் வாழும் திரு மேனி என்பாரும் உளர். நவம் - புதுமை, இதற்கு நட்பு எனப் பொருள் கொண்டு நட்புக் கொளத்தக்க எனவும் பொருள் கொள்வர்.*

*நளினம் - தாமரை; அது கண்டோர்க்கு ஒரு விருப்பத்தைத் தோற்றுவித்தலால் 'தவம் செய்த தவம்' என்ற தொடரினைப் பின்னர்ச் சுந்தர காண்டத்திலும் 'தவம் செய்த தவமாம் தையல்' (6037) எனச் சீதையைக் குறிப்பதுடன் ஒப்பிடலாம். தவம் செய்வது அரக்கிக்கு வெறுப்பூட்டுவது எனினும் இராமனின் தவக்கோலம் அவள் மனத்திலும் தவம் பற்றி உயர்வாக எண்ணச் செய்தது. அழகிய மேனி தவம் செய்வதால் வருத்தத்திற்குட்படுகிறதே என இராமன் அழகு வாடுவதற்கு வருந்துகின்றாள்.*

*எவன் - குறிப்பு வினை முற்றாலணையும் பெயர்.*

***2750. உடுத்த நீர் ஆடையள்,***
***உருவச் செவ்வியள்***
***பிடித் தரு நடையினள்***
***பெண்மை நன்று; இவன்***
***அடித்தலம் தீண்டலின்***
***அவனிக்கு அம்மயிர்***
***பொடித்தன போலும், இப்புல்***
***என்று உன்னுவாள்***

***உடுத்த நீர் ஆடையள் -*** *கடலாகிய நீரைத் தன் ஆடையாக உடுத்தவளும்;* ***உருவச் செவ்வியள் -*** *வடிவத்தின் அழகை உடையவளும்;* ***பிடித்தரு நடையினள் அவனிக்கு -*** *பெண் யானையின் நடையைப் போன்ற நடை உடையவளும் ஆன நிலமகளின்;* ***பெண்மை நன்று -*** *பெண் தன்மை நன்றாய் உள்ளது (ஏன் எனில்);* ***இப்புல் இவன் அடித்தலம் தீண்டலின் -*** *இந்நிலத்தில் முளைத்த இப்புல் இராமனாம் இவனுடைய திருவடிகள் பட்டமையால்;* ***அம்மயிர் பொடித்தன போலும் -*** *(அந்நிலமகளின்) உடலிலுள்ள அந்த அழகிய மயிர்கள் சிலிர்த்தன போலும்;* ***என்று உன்னுவாள் -*** *என நினைப்பாள்.*

*உடுத்த நீர் ஆடையள் என்பதற்குக் கடலை உடுத்துக் கொண்ட ஆடையாக உடையவள் எனவும் கொள்வர். மகளிர் நடைக்குப் பெண் யானை நடையை உவமை கூறுவது மரபு. ஆடவன் உடல் தன் மேற் படவும் இன்ப உணர்வு மீதூரப் பெண்ணின் உடலில் மயிர் பொடித்துநிற்பது போல நிலத்தின் மேல் புற்கள் நின்றநிலை சூர்ப்பணகை கண்களுக்குத் தென்பட்டது. இவ்வுணர்வு அவள் அடிமனத்தில் இராமன் மேல் கொண்ட காம உணர்வால் அவன் அடித்தலம் தன் மேல் படாதா என ஏங்கிய ஏக்கத்தின் வெளிப்பாடு எனலாம். பூமகளின் மயிர்களாகப் புற்கள் உருவகம் செய்யப்பட்டுள்ளன. இக் கருத்தே கிட்கிந்தா காண்டக் கார் காலப் படலத்தில் 'நெடு நில மடந்தை, புறமயிர்த்தலம் பொடித்தன போன்றன - பசும் புல்' என உருவகமாகப் புலப்படும் (4190).*

*பிடித்தரு நடை - ஒற்று மிகுந்தது எதுகை நோக்கி. தரு - உவமைச் சொல்.*

*இப்பாடலில் தற்குறிப்பேற்ற அணி அமைந்துளது.*

***2751. வாள் நிலா முறுவலன்***
***வயங்கு சோதியைக்***
***காணலனே கொலாம்,***
***கதிரின் நாயகன்?***
***சேண் எலாம் புல் ஒளி***
***செலுத்தி, சிந்தையில்***
***நாணலன், மீமிசை***
***நடக்கின்றான்' என்றாள்***

***வாள் நிலா முறுவலன் -*** *ஒளிமிக்க நிலவு போலப் பற்களை உடைய இவனது;* ***வயங்கு சோதியைக் காணலனே கொலாம் கதிரின் நாயகன் -*** *திருமேனியில் விளங்கும் ஒளியை பார்த்திலனே போலும் ஒளியின் தலைவனாம் சூரியன் (ஏன் எனில்);* ***சேண் எலாம் புல் ஒளி செலுத்தி -*** *நெடுந்தூரத்தில் அவன்தன் அற்ப ஒளியைச் செல்லவிட்டு;* ***சிந்தையில் நாணலன் -*** *உள்ளத்தில் வெட்கம் இல்லாதவனாய்;* ***மீமிசை நடக்கின்றான் என்றாள் -*** *மிகவும் மேலேயுள்ள வானத்தில் செல்கின்றான் என இழித்துக் கூறினாள்.*

*இராமனின் திருமேனி ஒளியைச் சூரியன் கண்டிருந்தால் இவன் ஒளியுடன் தன்னொளி ஒவ்வாது என வெட்கி ஒளிந்திருப்பான். ஆதலால்'காண்கிலன்' எனக் கதிரவனைச் சூர்ப்பணகை பழிப்பாள். மற்றைய கதிர்களை நோக்கச் சூரியன் ஒளிமிக்கவன் எனவே கதிரின் நாயகன்' எனப்பட்டான். இவ்வாறு இராமனின் ஒளிச் சிறப்பைப் போற்றும் வகையில். அயோத்தியா காண்டத்தில் கங்கைப் படலத்தில் சீதை இலக்குவனுடன் இராமன் வழிநடந்த போது 'வெய்யோன் ஒளி தன் மேனியின் விரி சோதியின் மறைய' (1926) என அழியா அழகுடையவனாகப் பாராட்டப் பெறுவான்.*

*சூர்ப்பணகை இராமனின் திருமேனி அழகில் ஈடுபட்டு அறிவழிந்து உணர்வு பொங்கக் கதிரவனைப் பழிக்கின்றாள்.*

***2752. குப்புறற்கு அரிய மாக்***
***குன்றை வென்று உயர்***
***இப்பெருந் தோளவன்***
***இதழுக்கு ஏற்பது ஓர்***
***ஒப்பு என, உலகம் மேல்***
***உரைக்க ஒண்ணுமோ?***
***துப்பினில் துப்புடை***
***யாதைச் சொல்லுகேன்?***

***குப்புறற்கு அரிய மாக் குன்றை வென்று உயர் இப்பெருந் தோளவன் இதழுக்கு -*** *கடத்தற்கு அருமையான பெரிய மலைகளை வென்று உயர்ந்த இந்தப் பெரிய தோள்களை உடைய இவனுடைய உதடுகளுக்கு;* ***ஏற்பது ஓர் ஒப்பு என உலகம் மேல் உரைக்க ஒண்ணுமோ -*** *தகுதியானதோர் உவமை என்று உலகத்தில் சொல்வதற்குப் பொருந்துமோ (பொருந்தாது); (ஆனால்)* ***துப்பினில் துப்புடை யாதைச் சொல்லுகேன் -*** *பவளத்தினைவிட மேம்பட்ட எதைச் சொல்லுவேன் (என்றாள் சூர்ப்பணகை)*

*குப்புறல் - கடத்தல், தாண்டிச் செல்லல்; 'குறுமுனி குடித்த வேலை குப்புறம் கொள்கைத்து ஆதல் வெறுவிது' எனக் கடல்தாவு படலத்தில் (4754) இப்பொருளில் இச்சொல் வரும். மாக்குன்று பெரிய மேருமலையுமாம். துப்பு என்ற சொல் பவளம், வலிமை அழகு, சிறப்பு போன்ற பொருளில் வரும் இதழுக்குப் பவளம் உவமையாகப் பயன்படும். ஆனால் இராமன் இதழுக்கு இது ஒப்பாகாது என மறுப்பாள். 'உரைக்கின் உள்ளமே துப்பெனில்' எனப் பாடம் கொண்டு, (பவளத்தை உவமையாகக்) கூறினால் உள்ளமே காறி உமிழ்வாய் எனப் பொருள் கொள்வர்.*

*இனி, இப்பாடத்திற்கே, இதழுக்கு ஒப்பாக உலகில் வேறோர் பொருளை உவமை கூறினால் அவ்வாறு கூறிய மனமே கடுமையானது என்பர். இராமன் இதழுக்குப் பவளம் ஒப்பாகாது என்று அனுமன் சீதையிடம் இராமன் மேனி பற்றிக் கூறும் போது 'பூவாப் பவளமோ மொழியற் பாற்றே?' (5279) என்பது இத்துடன் ஒப்பிடற்குரியது உலகம் - இடவாகுபெயர். இப்பாடலில் எதிர்நிலை அணி உளது.*

***2753'நல்கலை மதிஉற***
***வயங்கு நம்பிதன்***
***எல்கலை திருஅரை***
***எய்தி ஏமுற,***
***வற்கலை நோற்றன;***
***மாசு இலா மணிப்***
***பொன்கலை நோற்றில***
***போலுமால்' என்றாள்***

***நல்கலை மதிஉற வயங்கு நம்பிதன் -*** *சிறந்த கலைகள் நிரம்பிய முழுமதி போல் விளங்கும் இவ்ஆண்மகனின்;* ***எல்கலை திருஅரை எய்தி ஏமுற -*** *சூரியனைத் தன் ஒளியால் அழிக்கும் அழகிய இடையை இன்பமுற;* ***வற்கலை நோற்றன -*** *மரவுரியே தவம் செய்தன;* ***மாசு இலா மணிப் பொன் கலை நோற்றில போலுமால் என்றாள் –*** *குற்றமற்ற பொன்னாடை தவம் செய்தில போலும் என்றாள் (சூர்ப்பணகை)* ***ஆல் -*** *அசை.*

*நல்கலை மதி உற வயங்கு நம்பி என்பதால் இராமச்சந்திரன் என்ற பெயரின் காரணம் புலப்படும். உற - ஒப்பு. எல் கலை என்பதற்கு இருளை ஓட்டும் எனவும் உரைப்பர். உடலின் நடுப் பகுதியிலிருப்பதால் இடை எனப்பட்டது. பொற்கலை - பொன்பட்டு. இராமன் வனம் புகுமுன் கைகேயி ஏவலால் ஏவல் மகளிர் மரவுரி ஏந்தி வந்ததை 'வற்கலை ஏந்தி வந்தார்' (1747) என்பதும் குகன் பரதன் மரவுரி அணிந்த நிலையில் 'வற் கலையின் உடையானை'க் (2331) கண்டதாகக் காட்டுவதும் இச் சொல்லின் இப்பொருளைக் காட்டும். பூர்சம் எனும் ஒரு வகை மரத்திலிருந்து எடுக்கும் பட்டையாலாகிய ஆடை வற்கலை என்பர். இராமனின் இடையில் மரவுரி அணிந்ததால் அது பொன்னாடை செய்யாத தவத்தைச் செய்தது என, தவத்தைச் செய்வோரை அழிக்கும் அரக்கர் குலப்பெண் மனத்தில் தோன்றுவது வியப்பிற்குரியது.*

*ஏமம் ஏம் என வந்தது இடைக்குறை. இப்பாடலில் தன்மைத் தற்குறிப்பேற்ற அணியும் திரிபு அணியும் வந்துள்ளன.*

***2754. 'தொடை அமை நெடு மழைத்***
***தொங்கல் ஆம் எனக்***
***கடை குழன்று, இடைநெறி,***
***கரிய குஞ்சியைச்***
***சடை எனப் புனைந்திலன்***

*என்னின் தையலா-*
*ருடை உயிர் யாவையும்*
*உடையுமால்' என்றாள்.*

***தொடை அமை நெடுமழைத் தொங்கல் ஆம் என*** *-தொடர்ச்சி பொருந்திய நீண்ட மேகக் கூறுகள் கீழிறங்கிய வரிசை என்று உவமைகூறும்படி;* ***கடை குழன்று -*** *நுனி சுருண்டு;* ***இடை நெறி கரிய*** *-இடை இடையே நெறிப்புக் கொண்டு கரிதாக உள்ள;* ***குஞ்சியைச் சடை எனப் புனைந்திலன் என்னின் -*** *தன் தலை மயிரைச் சடையாகத் தரித்திலன் என்றால்,* ***தையலாருடை உயிர் யாவையும் உடையுமால் என்றாள்*** *- பெண்களுடைய உயிர்கள் எல்லாம் அழியும் என்று கூறினாள் - (சூர்ப்பணகை).* ***ஆல் -*** *அசை.*

*உடைதல் - அழிதல், தகர்தல். உயிரும் என்ற உம்மையால் எஞ்சிய நாண், கற்பு முதலியவற்றையும் தழுவி நிற்கும். சடையாகக் கொள்ளாத இராமனின் குஞ்சி மகளிர் உயிரை அழிக்கும் என்பதாம். அனுமன் சீதையிடம் இராமன் குஞ்சி பற்றிக் கூறும் போது' நீண்டு குழன்று நெய்த்து இருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம் பூண்டு புரிந்து சரிந்து கடை சுருண்டு புகையும் நறும்பூவும் வேண்டும் அல்ல என, தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி' (5284) என்பதுடன் இதனை ஒப்பிடலாம்.*

*உடை உயிர் என்பதை உடையும் உயிரும் என உம்மைத் தொகை யாகவும் கொள்வர்.*

*இதில் ஏதுத் தற்குறிப்பேற்ற அணி உளது என்பர்.*

***2755. 'நாறிய நகை அணி***
***நல்ல, புல்லினால்***
***ஏறிய செவ்வியின்***
***இயற்றுமோ?' எனா***
***'மாறு அகல் முழுமணிக்கு***
***அரசின் மாட்சிதான்***
***வேறு ஒரு மணியினால்***
***விளங்குமோ?' என்பாள்.***

***நாறிய நகை அணி நல்ல புல்லினால் -*** *விளங்கிய ஒளிமிக்க அணிகலன்களில் சிறந்தவை இவன் திருமேனியைத் தழுவினால்;* ***ஏறிய செவ்வியின் இயற்றுமோ எனா -*** *மிக்க அழகினால் விளங்கல் கூடுமோ? என்று சொல்லி;* ***மாறு அகல் முழுமணிக்கு அரசின் மாட்சிதான் -*** *ஒப்பிலா நல்லிலக்கணம் பொருந்திய சிறந்த இரத்தினங்களுக்கெல்லாம் அரசாக விளங்கும் கௌத்துவ மணியின் சிறப்பு;* ***வேறு ஒரு மணியினால் விளங்குமோ என்பாள் -*** *மற்றோர் இரத்தினத்தைத் தன் மேல் பூணுவதால் ஒளி விடுமோ (விடாதன்றே) என்று எண்ணினாள்.*

*நாறுதல் - விளங்குதல், தோன்றுதல். முழுமணிக்கு அரசு - கௌத்துவ மணி ஊர்தேடு படலத்தில் 'மணிகள் எத்துணை பெரியவும் மால் திரு மார்பின் அணியும் காசினுக்கும் அகன்றன உள' (4842) என்ற கருத்துடன் ஒப்பிடலாம். இயல்பில் சிறந்து மிகுந்த*

*அழகுடன் விளங்கும் முழுமணிக்கு அழகு செய்யவே ஒரு மணி வேண்டாம். அதுபோல் அழகினுக்கெல்லாம் தலைவனாம் இராமனுக்கு வேறு அணிகலம் வேண்டுவதில்லை என்பதாம். முற்ற முழு மணிப் பூணுக்குப் பூண் வேண்டார் யாரே அழகுக் கழகுசெய்வார்' (நீதி நெறி. 12) என்பதும் ஒப்பிடத்தக்கது. இயற்றுமோ - ஓகாரம் எதிர்மறைப் பொருள் குறித்தது. இதில் எடுத்துக் காட்டுவமை அணி உளது.*

***2756. 'கரந்திலன், இலக்கணம்***
***எடுத்துக் காட்டிய,***
***பரம் தரு நான்முகன்; பழிப்பு***
***உற்றான் அரோ-***
***இரந்து, இவன் இணை அடிப்***
***பொடியும், ஏற்கலாப்***
***புரந்தரன், உலகு எலாம்***
***புரக்கின்றான்' என்றாள்.***

***இலக்கணம் கரந்திலன் எடுத்துக் காட்டிய பரம் தரு நான்முகன் -*** *உத்தம இலக்கணங்களை எல்லாம் (இவனுடம்பில்) அமைத்து விளங்கச் செய்த மேன்மை பொருந்திய நான்முகன்;* ***பழிப்பு உற்றான் அரோ -****இகழப்பட்டவன் ஆனான் அல்லவா? (ஏனெனில்);* ***இவன் இணை அடிப் பொடியும் இரந்து ஏற்கலாப் புரந்தரன் -*** *இவனுடைய திருவடித்தூசின் பெருமையை வேண்டியும் பெற முடியாத தேவேந்திரன்;* ***உலகு எலாம் புரக்கின்றான் என்றாள் -*** *மூவுலகங்களையும் ஆட்சி புரிகின்றான் என்று கருதினாள். (சூர்ப்பணகை).*

*காட்டிய - உண்டாக்கிய, படைத்த. பழிப்புற்றமை - இவன் கால் தூசிக்கு ஒப்பாகாத இந்திரன் மூவுலகுக்கும் அரசுரிமை பெற்றுள்ளான். உத்தம இலக்கணங்கள் கொண்ட இவனோ காட்டிலே திரிகின்றான். எனவே அவ்வாறு படைத்த பிரமனின் தொழில் பயனற்றதாக இகழ்ச்சிக்கு இடந்தந்தது.*

*பரந்தரு நான் முகன் - பரம் பொருளாம் திருமாலால் பெறப்பட்ட பிரமன் எனலுமாம். தேவேந்திரன் தேவருலகிற்கு மட்டுமின்றி மூவுலகிற்கும் அரசன் என்பது புராணமரபு.*

*அரோ - வினாப் பொருளில் வந்தது; இதனைப் பொது நோக்கில் அசை என்பாரும் உளர்.*

சூர்ப்பணகையின் காம வெறி

***2757. நீத்தமும் வானமும்***
***குறுக, நெஞ்சிடைக்***
***கோத்த அன்பு உணர்விடைக்***
***குளிப்ப மீக்கொள,***

**ஏத்தவும், பரிவின் ஒன்று**
**ஈகலான், பொருள்**
**காத்தவன், புகழ் எனத்**
**தேயும் கற்பினாள்.**

**நீத்தமும் வானமும் குறுக -** *கடல் நீரும் ஆகாயமும் குறைந்தவையாய்த் தோன்றும் வண்ணம்;* **நெஞ்சிடைக் கோத்த அன்பு உணர்விடைக் குளிப்ப மீக்கொள -** *மனத்திலே தொடர்ச்சியாகக் கொண்ட அன்பு வெள்ளம் அறிவிலே மூழ்கும்படி மிகுதியாக;* **ஏத்தவும் பரிவின் ஒன்று ஈகலான் பொருள் காத்தவன் புகழ் என -** *இரப்போர் தன்னைப் புகழவும் அவர்களிடத்து இரக்கத்தோடு ஒரு சிறிதும் கொடுக்காதவனாய்த் தன் செல்வத்தைக் காத்து நின்றவன் புகழைப் போல;* **தேயும் கற்பினாள் -** *குறைந்தழியும் கற்பையுடையவளாம் (சூர்ப்பணகை).*

*கற்பு - உறுதிப்பாடு. பெருமைக்குக் கடலும் வானமும் எல்லை ஆயின. இதனை 'நன்மை கடலின் பெரிது' (குறள். 103), 'வான் உயர்தோற்றம்' (குறள். 272) என்ற குறள்களுடன் ஒப்பிட்டுணரலாம். இராமனின் அழகைச் சூர்ப்பணகை பலவாறு எண்ணியதால் அவளுடைய ஆசை வெள்ளம் கடலையும் வானையும் கடந்து நின்றது. அதனால் அறிவழிந்து கற்பொழிந்தாள். இந்நிலையைக் கவிஞர் தன்னைப் பாடி வந்தவர்க்குப் பரிசில் தராமல் பொருளைப் பாதுகாத்தவனின் புகழ் தேய்வதற்கு ஒப்பிடுவர்.*

*இப்பாடலில் உயர்வு நவிற்சி அணியும், உவமை அணியும் அமைந்துள்ளன.*

***2758.* வான்தனில், வரைந்தது**
**ஓர் மாதர் ஓவியம்**
**போன்றனள்; புலர்ந்தனள்;**
**புழுங்கும் நெஞ்சினள்;**
**தோன்றல்தன் சுடர் மணித்**
**தோளில் நாட்டங்கள்**
**ஊன்றினள், பறிக்க**
**ஓர் ஊற்றம் பெற்றிலள்,**

**வான்தனில் வரைந்தது ஓர் மாதர் ஓவியம் போன்றனள் -** *ஆகாயத்தில் தீட்டியதொரு பெண் வடிவான சித்திரத்தை ஒத்து;* **புலர்ந்தனள் புழுங்கும் நெஞ்சினள் -** *மனம் வாடி வெதும்பும் மனமுடையவளாய்;* **தோன்றல் தன் சுடர் மணித் தோளின் நாட்டங்கள் ஊன்றினள் -** *இராமனின் ஒளி விளங்கும் அழகிய தோள்களில் தன் கண்களைப் பதிய வைத்தவளாய்;* **பறிக்க ஓர் ஊற்றம் பெற்றிலள் -***(அவற்றை) மீட்டிடத் தக்கதொரு வலிமை பெறாதவளாயினாள் (சூர்ப்பணகை)*

*நாட்டம் - கண். ஊற்றம் - ஊன்று கோல், பற்றுக் கோடு. இங்கு வன்மை எனும் பொருளில் வந்தது. மாதர் - காதல் எனும் பொருளும் உரைப்பர். அழகு எனவும் கொள்வர். ஓவியம் என்பது அசைவற்ற நிலையைச் சுட்டும். இவ்வாறு எண்ணும் நிலையில் கொடிய அரக்கி உருவில்தான் இருந்தாள் என்பதை இனி வரும் பாடலில்*

*(2760) 'எயிறுடை அரக்கி, எவ் உயிரும் இட்டது ஓர் வயிறுடையாள்' என வருவதால் உணரலாம். இராமன் தோளில் பதித்த கண்ணை வாங்கும் வலிமை அற்றிருந்தாள். 'தோள் கண்டார் தோளே கண்டார்' (1081) என உலாவியற் படலத்தில் இராமனைக் கண்ட மகளிர் நிலை இத்துடன் ஒப்பிடற்பாலது.*

*ஊற்றம் - இலக்கணை. இப்பாடலில் இல்பொருளுவமை அணி அமைந்துள்ளது. சூர்ப்பணகை இராமனைக் கண்டு காமுற்று அவன் தன் மீது அன்பு கொள்ள இவ்வாறு அழகிய உருவம் தாங்கி வந்ததாக வான்மீகத்தில் இல்லை.*

***2759. நின்றனள்-'இருந்தவன்***
***நெடிய மார்பகம்***
***ஒன்றுவென்; அன்று***
***எனின், அமுதம் உண்ணினும்***
***பொன்றுவென்; போக்கு இனி***
***அரிதுபோன்ம்' எனா,***
***சென்று, எதிர் நிற்பது***
***ஓர் செய்கை தேடுவாள்***

**நின்றனள் -** *(இராமன் தோளைப் பார்த்தவாறே) நின்ற அச்சூர்ப்பணகை;* **இருந்தவன் நெடிய மார்பகம் ஒன்றுவென் -***இங்கு இருந்தவனாம் இராமனின் பரந்த மார்பினிடத்தே சேர்ந்து தழுவுவேன்;* **அன்று எனின் அமுதம் உண்ணினும் பொன்றுவென் -***அவ்வாறு தழுவா விடில் சாவா மருந்தாம் தேவாமிர்தத்தை உண்டாலும் இறந்து விடுவேன்;* **போக்கு இனி அரிது போன்ம் எனா -** *வேறு வழி இனி எனக்கு இல்லை போலும் என்று எண்ணி;* **சென்று எதிர் நிற்பது ஓர் செய்கை தேடுவாள் -** *அவனிடம் சென்று அவனுக்கு எதிரில் நிற்கும் வழியை ஆராய்வாள் ஆனாள்.*

*நின்றவள் என்பதற்கு 'வான்தனில் வரைந்தது ஓர் ஓவியம்' போன்று நின்ற நிலையைக் (2758) குறித்தது எனவும் கூறுவர். இருந்தவன் என்பது பன்ன சாலைக்கு அருகே ஓரிடத்தில் தனியே இருந்தவன் எனவும் பெருந்தவம் செய்யும் வடிவில் உள்ளவன் எனவும் ஆம். இவனைக் கூடி மகிழாவிடில் உயிர் விடுவேன் என்று எண்ணுபவள் தான் இறப்பை நீக்கும் அமுதம் உண்டாலும் இவனை அடையா விடில் சாவு உறுதி எனக் கருதியதால் இராமனை அடையும் உபாயத்தைத் தேடினாள். அமுதினும் மிக இனியது இராமனின் சேர்க்கை என்று சூர்ப்பணகை எண்ணியது இதனால் புலனாம். போன்ம் - மகரக் குறுக்கம். (நன். 96)*

சூர்ப்பணகை கோல வடிவம் கொள்ளுதல்

***2760. ' "எயிறுடை அரக்கி, எவ்***
***உயிரும் இட்டது ஓர்***
***வயிறுடையாள்" என***
***மறுக்கும்; ஆதலால்,***

***குயில் தொடர் குதலை, ஓர்***
***கொவ்வை வாய், இள***
***மயில் தொடர் இயலி ஆய், மருவல்***
***நன்று' எனா,***

***எயிறுடை அரக்கி எவ் உயிரும் இட்டது ஓர் வயிறுடையாள் -*** கோரப் பற்களை உடைய இந்த அரக்கப் பெண் எல்லா உயிரினங்களையும் இடப் பெற்ற பெரிய வயிற்றை உடையாள்; ***என மறுக்கும் -*** என்று எண்ணி இவன் என்னை ஏற்காமல் மறுக்கக்கூடும்; ***ஆதலால் குயில் தொடர் குதலை -*** ஆதலின் குயிலைப் போன்ற கொஞ்சும் மொழிகளையுடைய; ***ஓர் கொவ்வை வாய் -*** ஒரு கொவ்வைப் பழம்போன்ற சிவந்த வாயுடைய; ***இளமயில் தொடர் இயலி ஆய் -***இளம் மயிலுக்குப் பொருந்திய சாயலுள்ள ஓர் பெண் வடிவங் கொண்டு; ***மருவல் நன்று எனா -*** தழுவி ஏற்றுக் கொள்வது நல்ல செயல் என்று எண்ணி;

*எயிறு என்பதற்குக் கோணற் பற்கள் எனவும் கொள்வர். எவ்வுயிரும் உண்ணும் பெருவயிற்றை உடைய அரக்கி எனத் தன் உருவத்தைக் கண்டு இராமன் விலக்குவான் என முதலில் எண்ணினாள். குயில் தொடர் - குயில் போன்ற உவம வாசகம். குதலையும் மதலையும் ஒரு பொருளாகக் கொள்வாரும் உளர். சிலர் குதலை என்பது எழுத்து வடிவு பெறாத பொருள் விளங்காது இளங்குழந்தை கூறும் சொல். மழலை என்பது எழுத்து வடிவம் பெற்றுச் சொல் வடிவம் பெறாதது என்பர்.*

*குயில் தொடர் குதலை... மயில் - இல்பொருளுவமை.*

***2761. பங்கயச் செல்வியை***
***மனத்துப் பாவியா,***
***அங்கையின் ஆய***
***மந்திரத்தை ஆய்ந்தனள்;***
***திங்களின் சிறந்து ஒளிர்***
***முகத்தள், செவ்வியள்,***
***பொங்கு ஒளி விசும்பினில்***
***பொலியத் தோன்றினாள்.***

***பங்கயச் செல்வியை மனத்துப்பாவியா -*** செந்தாமரை மலரில் வாழும் திருமகளை உள்ளத்தில் தியானத்து; ***அங்கையின் ஆய மந்திரத்தை ஆய்ந்தனள் -*** தனக்குச் சித்தியாய் இருந்த அத்திருமகளின் மூலமந்திரத்தைச் செபித்தாள்; (அதன் பயனாய்) ***திங்களின் சிறந்து ஒளிர் முகத்தள் செவ்வியள் -*** முழுமதியைவிட மேம்பட்டு விளங்கும் முகமுடையவளும் அழகியவளுமாய்; ***பொங்கு ஒளி விசும்பினில் பொலியத் தோன்றினாள் -*** மிக்க ஒளி வானில் பரவி விளங்க வடிவம் மாறி வெளிப்பட்டாள். திங்களின் சிறந்து - மதியைப் போலச் சிறந்து - என ஒப்புப் பொருளிலும் கொள்வர். செவ்வி - பருவ அழகின் நிறைவு. அங்கையின் ஆய மந்திரம் என்பது முன்னர்த் தனக்குச் சித்தியாயுள்ள மந்திரம் -திருமகள் மந்திரத்தைத் தியானத்தோடு கூறி மிகுந்த அழகு பெற்றாள். அழகின் செல்வியாக உள்ள திருமகளை நினைந்து வேண்டும் அழகிய வடிவம் பெற்றாள் என்பதாம். முதல் நூலில் சூர்ப்பணகை பார்க்கப்

*பயங்கரமான முகமுடையவள்; பேரியைப் போலப் பருத்த வயிற்றை உடையவள்; பார்க்கப் பயங்கரமான கண்களை உடையவள்; நெருப்புக் கொழுந்து போல் சிவந்து விரிந்து குறுகிய தலைமயிரை உடையவள்; பார்ப்பவர்களுக்குச் சொல்ல முடியாத வெறுப்பை உண்டாக்கும் வடிவு கொண்டவள்; அவள் குரல் கேட்பவர்களை மூர்ச்சை அடையச் செய்யும்; மிகவும் வயது சென்றவள்; கபடமாகப் பேசுபவள்; கெட்ட நடத்தை உடையவள்; குரூபிகளுக்குள் முதலானவள் என வருணிக்கப் பெறுவாள். (வான்மீகம் ஆரண்ய. 17 ஆம் சருக்கம்) இதற்கு நேர் எதிரான வடிவம் இப்பாடலிலும் அடுத்த பாடலிலும் (2762) தீட்டப் பெற்றுள்ளது.*

சூர்ப்பணகையின் நடையழகு

*கலி முடுகு விருத்தம்*

***2762. பஞ்சி ஒளிர், விஞ்சு குளிர்***
***பல்லவம் அனுங்க,***
***செஞ் செவிய கஞ்சம் நிகர்,***
***சீறடியள் ஆகி,***
***அம் சொல் இள மஞ்ஞை என, அன்னம்***
***என, மின்னும்***
***வஞ்சி என, நஞ்சம் என, வஞ்ச***
***மகள் வந்தாள்.***

***பஞ்சி*** *- செம்பஞ்சும்,* ***ஒளிர் விஞ்சு குளிர் பல்லவம் அனுங்க*** *- விளங்குகின்ற மிகச் செழித்த தளிர்களும் (செம்மையிலும் மென்மையிலும் தமக்கு ஒப்பாகாமல்) வருந்தும்படி;* ***செஞ்செவிய கஞ்சம் நிகர் சீறடியள் ஆகி*** *- சிறந்த அழகுள்ள தாமரைக்கு ஒப்பான சிறிய பாதங்கள் உடையவள் ஆகி;* ***அம் சொல் இள மஞ்ஞை என*** *- அழகிய சொல்லுடைய இளமையான மயில் போலவும்;* ***அன்னம் என*** *-அன்னம் போலவும்;* ***மின்னும் வஞ்சி என*** *- விளங்குகின்ற வஞ்சிக் கொடி போலவும்;* ***நஞ்சம் என-*** *கொடிய விடம் போலவும்;* ***வஞ்சமகள் வந்தாள்-*** *வஞ்சனை புரியும் சூர்ப்பணகை அங்கு இராமன் முன் வந்தாள்.*

*பஞ்சி எனினும் பஞ்சு எனினும் ஒக்கும். செம்பஞ்சிக் குழம்பூட்டப் பெற்ற தளிரும் ஒவ்வாது வருந்தும்படி எனவும் உரைப்பர். பஞ்சியும் பல்லவமும் வருந்தக் காரணம் அவை ஒளி, நிறம், மென்மை, குளிர்ச்சி ஆகிய பண்புகளால் அவள் அடிகளுக்கு ஒப்பாகாமையாம். செவ்வியஎன்பது செவிய என இடைக்குறையாய் வந்தது. சிறுமை+அடி = சீறடி. மயில் சாயலுக்கும், அன்னம் நடைக்கும் வஞ்சிக்கொடி, துவண்ட நிலைக்கும் நஞ்சு கொடுமைக்கும் உவமை ஆயின. மயிலை நடைக்கும் திருமுருகாற்றுப்படை உவமையாகக் கொண்டு 'மயில் கண்டன்ன மட நடை மகளிர் (திருமுருகு. 205, 310) என்று கூறும். நஞ்சு குளிர்ச்சியாக இருந்தும் கொல்லும் என்பர் (நீதிநெறி. 30).*

*இதில் பல உவமைகள் மாலை போல் வந்ததால் மாலையுவமைஅணியாம். இப் பாடலில் காணும் சந்த இன்பம் மெல்லொலி நயம் வாய்ந்தது.*

***2763. பொன் ஒழுகு பூவில் உறை***
***பூவை, எழில் பூவை,***
***பின் எழில் கொள் வாள் இணை***
***பிறழ்ந்து ஒளிர் முகத்தாள்,***
***கன்னி எழில் கொண்டது,***
***கலைத் தட மணித் தேர்,***
***மின் இழிவ தன்மை, இது,***
***விண் இழிவது என்ன,***

***பொன் ஒழுகு பூவில் உறை பூவை -*** *பொன்னிறமாய் விளங்கும் செந்தாமரை மலரில் வாழும் திருமகளின் அழகும்;* ***எழில் பூவை -****அழகு மிக்க நாகணவாய்ப் புள்ளின் அழகும்;* ***பின் எழில் கொள் -****தனக்குப் பிறபடும்படி சிறந்த அழகைக் கொண்ட;* ***வாள் இணை பிறழ்ந்து ஒளிர் முகத்தாள் -*** *இரண்டு வாள்கள் போலக் கண்கள் மாறி மாறி ஒளி வீசும் முகத்தை உடையவளாம் சூர்ப்பணகை;* ***கன்னி எழில் கொண்டது -*** *இளம் பெண்ணின் அழகைக் கொண்டதாக உள்ள;* ***கலைத் தட மணித்தேர் -*** *அழகிய சீலைகளால் ஒப்பனை செய்யப் பெற்ற பெரிய அழகிய தேர்;* ***மின் இழிவ தன்மை இது -*** *மின்னல் கீழிறங்கும் இயல்பை உடையதாய்;****விண் இழிவது என்ன -*** *வானிலிருந்து கீழே இறங்கி வருகிறது எனக் கூறும்படி,*

*பொன் - பொன்னிறமான மகரந்தப் பொடி எனவும் கூறுவர். பொன் ஒழுகு என்பதற்கு அழகு மிக்க வழிகின்ற என்றுமாம். கன்னி எழில்கொண்ட கலைத்தடமணித் தேரையுடைய மின் போல விண்ணில் இழிந்தது எனக் கொள்வர். மின் - ஒளியுமாம் கன்னி - இளமை, புதுமை, அழியாத் தன்மை. சூர்ப்பணகை இளம் பெண் வடிவையும் மேகலை சூழ்ந்த அல்குலையும் கொண்ட மின்னல் வானிலிருந்து இறங்கி வந்தது போல் வந்தாள் எனவும் கூறுவர். பொன், பூவை, வாளிணை, தேர் உவமையாகு பெயராகக் கொண்டு பொருள் காண்பர். இதில் உருவக உயர்வு நவிற்சி அணியும், இல்பொருள் உவமை அணியும் உள்ளன. 3*

***2764 கானில் உயர் கற்பகம்***
***உயிர்த்த கதிர் வல்லி***
***மேனி நனி பெற்று, விளை காமம்***
***நிறை வாசத்***
***தேனின் மொழி உற்று, இனிய செவ்வி***
***நனி பெற்று, ஓர்***
***மானின் விழி பெற்று, மயில்***
***வந்ததுஎன,-வந்தாள்.***

***கானில் உயர் கற்பகம் உயிர்த்த கதிர்வல்லி -*** *நறுமணத்தில் சிறந்த கற்பகமரம் பெற்றெடுத்த ஒளி வீசும் காமவல்லி எனும் கொடியின்;****மேனி நனி பெற்று -*** *வடிவைத் தான் நன்கு அமையப் பெற்று;* ***விளை காமம் நிறை வாசத் தேனின் மொழி உற்று -***

*மேன்மேலும் விளையும் காம ஒழுக்கம் நிறைந்து நறுமணமிக்க தேன் போலும் சொற்களையும் அடைந்து;* ***இனிய செவ்வி நனி பெற்று -*** *கண்ணிற்கினிய அழகை மிகுதியும் அடைந்து;* ***ஓர் மானின் விழி பெற்று -*** *ஒப்பில்லாத மான் பார்வை போன்ற பார்வையைப் பெற்று;* ***மயில் வந்தது என வந்தாள் -****மயில் போலச் சாயலும் நடையும் பெற்று வந்தது போல நடந்து வந்தாள்.*

*தேவர் உலகில் கற்பக மரத்தைச் சார்ந்து அதன் மேல் படரும் காமவல்லி என்னும் பூங்கொடி, பெண் வடிவையும் தேன் போன்ற இனிய சொற்களையும் மிகுந்த அழகையும், மானின் பார்வையையும் மயில்நடையையும் அதன் சாயலையும் பெற்று வந்தது போல வந்தாள். உத்தம சாதிப் பெண்களின் உடலில் இயற்கையாக நறு மணம் வீசும் என்பது பண்டைக் காலத்தில் நிலவிய நம்பிக்கையை இது உணர்த்தும். சூர்ப்பணகை தன் பெயரைக் 'காமவல்லி ஆம் கன்னி' எனக் கூறுவாள் (2770) அதற்கேற்ப இப்பாடல் அமைந்துள்ளது. மேற்கண்ட (2761, 2763, 2764) பாடல்களில் ஒன்றுக்கு மேற்பட்ட உவமைகளை அழகுறப் படைத்துள்ளமை காப்பிய அழகை மிகுவிக்கிறது; அரக்கியின் மாயத்தை விளக்கவும்துணைபுரிகிறது.*

*இதில் தன்மைத் தற்குறிப்பேற்ற அணி உளது.*

இராமன் வியப்படைதல்

***2765. 'நூபுரமும், மேகலையும்,***
***நூலும், அறல் ஓதிப்***
***பூ முரலும் வண்டும், இவை***
***பூசலிடும் ஓசை-***
***தாம் உரைசெய்கின்றது; ஒரு தையல்***
***வரும்' என்னா,***
***கோ மகனும், அத் திசை குறித்து,***
***எதிர் விழித்தான்.***

***நூபுரமும் மேகலையும் நூலும் அறல் ஓதிப் பூ முரலும் வண்டும் இவை பூசலிடும் ஓசை -*** *காற்சிலம்பும், இடை அணியும், நூலிற் கோத்த அணிகலன்களும் கருமணல் போன்ற கூந்தலில் சூடும் மலரில் மொய்க்கும் வண்டுகளும் ஆகிய இவை ஆரவாரம் செய்யும் ஓசை;* ***ஒருதையல் வரும் என்னா உரை செய்கின்றது -*** *ஒரு பெண் வருகிறாள் என்று சொல்கிறதாக;* ***கோமகனும் அத்திசை குறித்து எதிர் விழித்தான் -*** *சக்கரவர்த்தி திருமகனாம் இராமனும் அவ்வோசை வந்த திக்கைக் குறித்து எதிர் நோக்கினான்.* ***தாம் -*** *அசை.*

*மேகலை - இடையில் அணியும் மணிகள் கோத்த பல வடங்களையுடைய ஓர் அணிகலன். நூல் - பூணூல் போன்று அணியும் பொன் மாலை என்பர். பூசல் - பேரொலி. 'பூசல் வண்டரற்றும் கூந்தல் பொய்ம்மகள்' (2778) என வருதல் காண்க. அணிகலன்களின் ஒலியும் வண்டின் ஒலியும் ஒரு பெண் வருகின்றாள் என்பதைக் கட்டியம் கூறின. உரை செய்தல் - குறிப்பித்தல் எனலுமாம்.*

நூல் - ஆகுபெயர். பேசாததைப் பேசுவது போலக் கூறியது. மரபுவழுவமைதி.

*2766.* ***விண் அருள வந்தது ஒரு***
***மெல் அமுதம் என்ன,***
***வண்ண முலை கொண்டு, இடை***
***வணங்க வரு போழ்தத்து,-***
***எண் அருளி, ஏழைமை துடைத்து,***
***எழு மெய்ஞ்ஞானக்***
***கண் அருள்செய் கண்ணன்***
***இரு கண்ணின் எதிர் கண்டான்.***

**விண் அருள வந்தது ஒரு மெல் அமுதம் என்ன -**தேவருலகம் கொடுக்க வந்ததான ஒப்பற்ற இனிய அமுதம் போல; **வண்ண முலை கொண்டு இடை வணங்க வருபோழ்தத்து -** அழகிய மார்பகங்களைக் கொண்டு அதன் பாரத்தால் இடை துவளும்படி அடுத்து வரும் சமயத்தில்; **எண் அருளி ஏழைமை துடைத்து -** (திருவுளத்தில்) அருள் கொண்டு (அதனால்) அடியவர்களின் அறியாமையைப் போக்கி; **எழு மெய்ஞ்ஞானக் கண் அருள் செய் கண்ணன் -** மேலும் வளரும் தத்துவ ஞானமாம்கண்ணை அளிக்கும் திருமால் அவதாரமாம் இராமன்; **இரு கண்ணின் எதிர் கண்டான் -** இரண்டு கண்களாலும் எதிரே பார்த்தான்.

அமுதம் தேவரிடத்து இருப்பதால் அவர்கள் அளிக்க வந்தது என்க. அமுதத்தை முலைக்கு அடையாகக் கொள்வதுடன் அவளுக்கும் அடையாகக் கொள்ளலாம். ஏழைமை - அறியாமை. கண்ணன் - எல்லாருடைய கண்களைக் கவரும் அழகுடையவன்; எல்லார்க்கும் அறிவுக் கண்ணை அளிப்பவன்; பால காண்ட உலாவியற் படலத்தில் 'யாவர்க்கும் கண்ணன் என்றே ஓதிய பெயர்க்குத்தானே உறு பொருள் உணர்த்திவிட்டான்' (1068) என வருதல் காண்க. மேலும் யாவர் மாட்டும் கருணைபொழியும் கண்ணை உடையவன் எனலுமாம். பரம்பொருளாய் நின்று உலகிற்கு மெய்ஞ்ஞானக் கண் அருள்பவன் தான் எடுத்த மானிடப்பிறப்பிற்கேற்பப் புரியும் அலகிலா விளையாட்டைக் குறிக்கும். இதனால் சூர்ப்பணகை மாறு வேடம் கொண்டு மயக்க எண்ணித் தோல்வியுற்றதை எண்ண இடமுளது. இவளைப் போன்றே மாரீசனும் முயன்று தோல்வியுறுகிறான். காப்பியப் போக்குக்கு இவர்தம் முயற்சிகள் துணை புரிகின்றன.

*2767.* ***பேர் உழைய நாகர்-உலகில்,***
***பிறிது வானில்,***
***பாருழையின், இல்லது ஒரு***
***மெல் உருவு பாரா,***
***'ஆருழை அடங்கும்? அழகிற்கு***
***அவதி உண்டோ?***
***நேரிழையர் யாவர், இவர் நேர்?'***
***என நினைத்தான்.***

***பேர் உழைய நாகர் உலகில் -*** பெரிய இடமுடைய நாகங்கள் வாழும் பாதலத்திலும்; ***பிறிது வானில் -*** அதனில் வேறான சுவர்க்கலோகத்திலும்; ***பார் உழையின் -*** நில உலகத்திலும்; **இல்லது ஒரு மெல் உருவு பாரா -** இல்லாததான ஒப்பற்ற மென்மை பொருந்திய பெண் வடிவைப் (இராமன்) பார்த்து; ***ஆர் உழை அடங்கும் -*** இவள் அழகுயாரிடத்து அமையும்?; ***அழகிற்கு அவதி உண்டோ -*** இவள் அழகிற்கு எல்லை உள்ளதோ?; ***நேரிழையர் யாவர் இவர் நேர் என நினைத்தான் -*** மகளிர் இவளுக்கு ஒப்பானவர் யார் உள்ளார்? என்று எண்ணினான்.

*பேர் - பெருமை என்றதன் நீட்டல் விகாரம். உழை - இடம். அவதி - எல்லை, கீழ், மேல், நடு ஆகிய மூன்று உலகங்களிலும் இப்படிப்பட்ட அழகைக் காணல் அரிது. எனவே இத்தகைய அழகு படைத்தவள் யார் எனத் தன் மானிட அவதாரத்திற் கேற்ப இராமன் எண்ணினான். 'அழகிற்கு அவதி உண்டோ?' என இங்குக் கேட்ட கேள்விக்கு விடை போலப் பின்னர் 'அழகிற்கு எல்லை இல்லை ஆம்' (2791) என்ற தொடர் அமைந்துள்ளது.*

*நேரிழையர் - ஏற்ற அணிகலன் அணிந்த பெண்டிர். ஒத்த ஆடையை உடையவர் எனவும் கொள்வர். (இழை - நூல், நூலின் பெயர் ஆடைக்கு ஆம். கருவியாகுபெயர்). புதிதாகக் கண்ட பெண்ணை மரியாதையுடன் எண்ணும் இராமனின் பண்பிற்கேற்ப யாவர் இவர் நேர் என நினைக்கின்றான்.*

*சூர்ப்பணகை இராமனை வணங்கி, நாணி, நிற்றல்*

***2768. அவ் வயின், அவ் ஆசை தன்***
***அகத்துடைய அன்னாள்,***
***செவ்வி முகம் முன்னி, அடி***
***செங்கையின் இறைஞ்சா,***
***வெவ்விய நெடுங் கண்-அயில்***
***வீசி, அயல் பாரா,***
***நவ்வியின் ஒதுங்கி, இறை***
***நாணி, அயல் நின்றாள்.***

***அவ் வயின் அவ் ஆசை தன் அகத்துடைய அன்னாள் -*** அப்போது அந்த இராமன் மீது கொண்ட ஆசையைத் தன் மனத்திற் கொண்ட சூர்ப்பணகை; **செவ்வி முகம் முன்னி -** இராமனின் அழகிய முகத்தை நோக்கி; ***அடி செங்கையின் இறைஞ்சா -*** அவன் திருவடியைத் தன் சிவந்த கைகளால் வணங்கி; ***வெவ்விய நெடுங்கண் அயில் வீசி அயல் பாரா -*** கொடிய தனது நீண்ட கண்களாம் வேல்களை இராமன் மீது வீசிப் பின் அவனைப் பாராதது போலப் பார்த்து; ***நவ்வியின் ஒதுங்கி -*** மான்போல ஒருபுறம் விலகி; ***இறை நாணி அயல் நின்றாள் -***சிறிதே நாணம் கொண்டு அருகே நின்றாள்.

*செவ்வி முகம் முன்னி என்பதைச் சூர்ப்பணகைக்கே ஏற்றித் தன் அழகிய முகத்தை இராமன் காணும் வகையில் முன் காட்டினாள் எனலுமாம். கொடிய கண்ணாம் வேல்*

*கொண்டு தன் காம உணர்வை வெளிப்படுத்தி ஆண்களை வாட்டுவது மகளிர் இயல்பு. ஆதலால் கண்ணை வேல் என்றார். புதிய பொருளைக் கண்டதும் மருளும் இயல்புடையது மான். அதனைப் போல இவள் இராமனைக் கண்டு ஒதுங்கி நின்றாள் என்பதாம். இதுஇவளுடைய மயக்கும் முறைகளில் ஒன்று. சிறிது நாணம் கொண்டதுவும் இப்பண்பையே சுட்டும். அயல் பாரா என்ற செயலை 'யான் நோக்குங் காலை நிலனோக்கும் (குறள். 1094) என்பதுடன் ஒப்பிடலாம். அயல் நின்றாள் என்பதால் இராமனை விட்டு அகலாத விருப்பைப் புலப்படுத்தும்.*

*இராமன்-சூர்ப்பணகை உரையாடல்*

***2769. 'தீது இல் வரவு ஆக, திரு! நின்***
***வரவு; சேயோய்!***
***போத உளது, எம்முழை ஓர்***
***புண்ணியம்அது அன்றோ?***
***ஏது பதி? ஏது பெயர்? யாவர்***
***உறவு?' என்றான்.***
***வேத முதல்; பேதை அவள் தன்***
***நிலை விரிப்பாள்;***

***வேத முதல் -*** *வேதங்களுக்கு மூலமான இராமன்;* ***திருசேயோய் -*** *திருமகள் போன்றவளே!; செந்நிறமுடையவளே!;* ***நின்வரவு தீது இல் வரவு ஆக -*** *உன்னுடைய வருகை தீங்கில்லா நல்வரவு ஆகுக;* ***போத உளது எம்முழை ஓர் புண்ணியம் அது அன்றோ -*** *வர உள்ளது எம்மிடத்து ஒரு புண்ணியம் அல்லவா?;* ***ஏதுபதி -*** *எது உன் ஊர்?;* ***ஏது பெயர் -****எது உன் பெயர்?;* ***யாவர் உறவு -*** *எவர் உன் உறவினர்?;* ***என்றான் -*** *என்று கேட்டான்;* ***பேதை அவள்தன் நிலை விரிப்பாள் -*** *பேதையளான சூர்ப்பணகை தன்னுடைய தன்மையை விளக்கிச் சொல்வாளானாள்.*

*சேயோய் என்பதற்கு அன்னியளே எனவும் உரை காண்பர். அதற்குச் சான்றாகச் (தக்க. பரணி 194 உரை) சேயோய் என்பது தூரியாய் என்றவாறு என்ற பகுதியையும் 'புறத்தார்க்குச் சேயோன்' (திருவா. சிவபுராணம் 8) என்ற தொடரையும் காட்டுவர். 'தீது இல் வரவு ஆக' என்பது தம்மிடம் வந்தோர்க்கு இன்மொழி கூறும் முறைமை பற்றியதாகும். பால காண்டத்தில் கையடைப் படலம்தனில் கோசிக முனியைத் தயரதன் வரவேற்ற பாங்குடன் (319, 320) ஒப்பிடற்குரியது இது. 'வேத முதல்' என்பதற்கு வேதங்களின் சித்தாந்தம் செய்யப்பட்ட முதற் கடவுள் என்பர்; வேதன் முதல் எனப் பாடம் கொண்டு அன்னமாய் வேதத்தை உரைத்தவன் எனப் பிரமனை முதலாகக் கொண்டு குல வரலாற்றைச் சூர்ப்பணகை கூறினாள் என்பர். இராமனைத் தன்னிச்சைக்கு இணங்கச் செய்ய முடியும் என அவள்கருதியதால் பேதை எனப்பட்டாள்.*

*அறுசீர் விருத்தம்*

***2770. 'பூவிலோன் புதல்வன் மைந்தன்***
***புதல்வி; முப்புரங்கள் செற்ற***
***சே-வலோன் துணைவன் ஆன செங்கையோன்***
***தங்கை; திக்கின்***
***மா எலாம் தொலைத்து, வெள்ளிமலை***
***எடுத்து, உலகம் மூன்றும்***
***காவலோன் பின்னை; காமவல்லி ஆம்***
***கன்னி' என்றாள்.***

***பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி -*** *தாமரைப் பூவைத்தன் இருப்பிடமாய்க் கொண்ட பிரமன் மகனாம் புலத்தியரின் மகன் விச்சிரவசுவின் மகள் ஆவேன்;* ***முப்புரங்கள் செற்ற சேவலோன் துணைவன் ஆன செங்கையோன் தங்கை -*** *திரிபுரங்களை எரித்து அழித்த காளை மீது ஏறிச் செலுத்தவல்லவனாம் சிவபெருமானின் நண்பனான சிவந்த கைகளை உடைய குபேரனின் தங்கை ஆவேன்;* ***திக்கின் மாஎலாம் தொலைத்து வெள்ளிமலை எடுத்து உலகம் மூன்றும் காவலோன் பின்னை -*** *எட்டுத்திசைகளிலுள்ள யானைகளின் வலி எலாம் இழந்து ஓடச் செய்து வெள்ளி மயமான கயிலை மலையைப் பெயர்த்தெடுத்து மூன்று உலகங்களையும் காக்கும் திறம்படைத்த இராவணனின் பின் பிறந்த தங்கை ஆவேன்;* ***காமவல்லி ஆம் கன்னி என்றாள் -*** *காம வல்லி என்ற பெயரையுடைய கன்னி என்று கூறினாள்.*

*பிரமனின் மகன் புலத்தியன். புலத்தியனின் மகன் விச்சிரவசு. அவன் மகள் சூர்ப்பணகை. மணம் செய்வோர் மூன்று தலைமுறை கூறுவதைஎண்ணித் தன் மணக் குறிப்பையும் வெளியிட்டாள் எனலாம். இராவணனால் இலங்கையிலிருந்து துரத்தப்பட்ட குபேரன் சிவன்பால் தவம் செய்து அவர் நண்பனானான். கொடுத்துக் கொடுத்துச் சிவந்ததால் 'செங்கையோன்' எனப்பட்டான். இராவணனின் வெற்றியையும் ஆற்றலையும் ஆட்சிப் பெருமையையும் முறையே எட்டுத் திக்கு யானைகளை வென்றமையாலும் கயிலையை எடுத்தமையாலும் மூவுலகின் காவலாலும் சுட்டினாள் என்க.*

*உத்தர காண்டத்தில் புலத்தியன் மகனாம் விச்சிரவசு என்பவன்சுமாலியின் மகள் கைகசியை மணந்து இராவணன், கும்பகர்ணன், சூர்ப்பணகை, வீடணன் ஆகியோரைப் பெற்றனன் என்பதை அறியலாம். வியாச பாரதமும் பெருந்தேவனார் பாரதமும் இதுபற்றி வேறுபட்ட செய்தியைக் கூறும். அவற்றின் படி விச்சிரவசுவிற்கு மூன்று மனைவியர். அவருள் புட்போத்கடை என்பவளுக்கு இராவணனும் கும்பகர்ணனும் பிறந்தனர். மாலினிக்கு வீடணனும் இராகைக்குக் கரனும், சூர்ப்பணகையும் பிறந்தனர்.*

***2771. அவ் உரை கேட்ட வீரன்,***
***ஐயுறு மனத்தான், 'செய்கை***
***செவ்விது அன்று; அறிதல் ஆகும் சிறிதின்'***
***என்று உணர, ' "செங்கண்***

***வெவ் உரு அமைந்தோன் தங்கை" என்றது***
***மெய்ம்மை ஆயின்***
***இவ் உரு இயைந்த தன்மை இயம்புதி***
***இயல்பின்' என்றான்.***

***அவ்வுரை கேட்ட வீரன் ஐயுறு மனத்தான் -*** *சூர்ப்பணகை சொன்ன அச்சொற்களை அறிந்த இராமன் சந்தேகம் கொண்ட மனமுடையவனாகி;* ***செய்கை செவ்விது அன்று -*** *இவள் செயல் களங்கமற்றது அன்று;* ***சிறிதின் அறிதல் ஆகும் என்று உணர -****சிறிது கேட்டுத் தெரிவது தகுதி என எண்ணி;* ***செங்கண் வெவ் உரு அமைந்தோன் தங்கை என்றது மெய்ம்மை ஆயின் -*** *சிவந்த கண்களையும் கொடிய வடிவையும் கொண்ட இராவணனின் தங்கை என்பது உண்மையானால்;* ***இவ் உரு இயைந்த தன்மை இயல்பின் இயம்புதி என்றான் -*** *இந்த அழகிய வடிவு பொருந்திய விதத்தை எனக்கு உள்ளபடி கூறுவாய் என்று சொன்னான். செய்கை - உடம்பு என்பாருமுளர்; தொழிலாகு பெயர். செவ்விதன்று - மாயையால் அமைந்தது போலும். செங்கண் மிகுந்த சினத்தைக் குறிக்கும். சிறிதின் அறிதல் ஆகும் என்பது சிறிய பொழுதில் அறியலாம் என்பாருமுளர். சூர்ப்பணகையின் அழகிய தோற்றத்திற்கும் இராவணனின் தங்கை என்று அவள் கூறிய சொல்லுக்கும் இயைபின்மையால் ஐயுற்றான். இராமனின் கேள்விகளும் சூர்ப்பணகையின் விடையும் கம்ப நாடகத்தில் சுவைமிக்க பகுதியாகும். 4*

*2772* ***தூயவன் பணியாமுன்னம் சொல்லுவாள்,***
***சோர்வு இலாள்; 'அம்***
***மாய வல் அரக்கரோடு***
***வாழ்வினை மதிக்கலாதேன்,***
***ஆய்வுறு மனத்தேன் ஆகி, அறம்***
***தலைநிற்பது ஆனேன்;***
***தீவினை தீய, நோற்றுத் தேவரின்***
***பெற்றது' என்றாள்.***

***தூயவன் பணியா முன்னம் -*** *பரிசுத்தமான பண்புள்ள இராமன்இவ்வாறு சொன்ன உடனே;* ***சோர்வு இலாள் சொல்லுவாள் -*** *(தக்கவிடைகூறச் சிறிதும்) சலிப்பில்லாதவளாய் விடை கூறுபவளாய்;* ***அம் மாயவல் அரக்கரோடு வாழ்வினை மதிக்கலாதேன் -*** *அந்த மாயையும் கொடுமையும் நிறைந்த அரக்கர்களுடன் வாழ்வதை எண்ணமாட்டாதவளாய்;* ***ஆய்வுறு மனத்தேன் ஆகி*** *(நன்மை தீமையை) ஆராயும் உள்ளம் உடையவள் ஆகி;* ***அறம் தலை நிற்பது ஆனேன் -*** *தருமநெறியில் செல்லும் தன்மை உடையவளான் நான்;* ***தீவினை தீய நோற்றுத் தேவரின் பெற்றது என்றாள் -*** *பாவம் ஒழியத் தவம் செய்து தேவர்களின் அருளால் அடைந்தது (இவ் அழகிய வடிவம்) என்று சொன்னாள்.*

*பணித்தல் - கட்டளை. இடுதல் எனவுமாம். தேவரின் பெற்றது - தேவர் போலப் பெற்ற வடிவம் எனவும் உரைப்பர். 'இவ்வுரு இயைந்த தன்மை இயம் புதி இயல்பின்' என முன் பாடலில் (2771) கேட்டதற்கிணங்க இவ்வாறு விடை இறுக்கலானாள். இவ்விடையால் சூர்ப்பணகை தன்னிடம் அரக்கர் போன்று தீக்குணமின்மையும்,*

*தீயோர் சேர்க்கை இன்மையும் முதலில் கூறினாள். பின் அத்தீயோர் பண்பிற் கெதிராக அறநெறியில் நிற்பதையும், தவம் புரிந்து தேவர் அளித்ததால் அழகிய வடிவம் பெற்றதையும் கூறித் தான் தூய நிலையில் இருப்பதாய்த் தூயவனாம் இராமனுக்குத் தன் மாய உரையால் விடை கூறினாள்.*

***2773. 'இமையவர் தலைவனேயும் எளிமையின்***
***ஏவல் செய்யும்***
***அமைதியின், உலகம் மூன்றும் ஆள்பவன்***
***தங்கை ஆயின்,***
***சுமையுறு செல்வத்தோடும் தோன்றலை;***
***துணையும் இன்றி,***
***தமியை நீ வருதற்கு ஒத்த தன்மை என்?***
***தையல்!' என்றான்.***

***தையல் -*** *பெண்ணே!;* ***இமையவர் தலைவனேயும் எளிமையின் ஏவல் செய்யும் -*** *தேவர்களின் தலைவனாம் இந்திரன் கூட இழிந்தநிலையில் ஏவிய சிறு தொழிலையும் செய்யும்படியுள்ள;* ***அமைதியின் உலகம் மூன்றும்ஆள்பவன் தங்கை ஆயின் -*** *மூன்று உலகங்களையும் ஆட்சியில்அடக்கி ஆள்பவனாம் இராவணனின் தங்கை ஆனால்;* ***சுமையுறு செல்வத்தோடும் தோன்றலை -*** *மிக்க செல்வச் சிறப்பின் பெருமிதத்தோடு நீ காணப்படவில்லை;* ***துணையும் இன்றி -*** *தோழியர் காவலர் முதலியவர் இல்லாமல்;* ***தமியை நீ வருதற்கு ஒத்த தன்மை என் என்றான் -*** *தனியளாக இவ்வாறு வருவதற்கு உரிய காரணம் என்ன என்று கேட்டான்.*

*தையல் - அலங்கரித்த பெண் எனலுமாம், அழகுடையவள் என்றுமாம், (கலி. 27.19). எளிமையின் ஏவல் செய்தல் என்பது தன்னுயர் நிலை கருதாமல் ஏவிய பணிகளைச் சிறிதும் தடையில்லாமல் அச்சமுடன் அடக்கமாகச் செய்தல்.*

*மூவுலகும் ஆள்பவன் தங்கை என்று கூறியதற்கு இணங்கத் தோழிமார் முதலிய பல வகைச் சிறப்புடன் வருதலின்றித் தனியே ஏன் வந்தாய் எனக் கேட்கும் போது இராமனின் ஐயம் நன்கு வெளிப்படுகிறது.*

***2774. வீரன் அஃது உரைத்தலோடும்,***
***மெய்இலாள், 'விமல! யான் அச்***
***சீரியரல்லார் மாட்டுச்***
***சேர்கிலென்; தேவர்பாலும்***
***ஆரிய முனிவர்பாலும் அடைந்தனென்;***
***இறைவ! ஈண்டு ஓர்***
***காரியம் உண்மை, நின்னைக் காணிய***
***வந்தேன்' என்றாள்.***

***வீரன் அஃது உரைத்தலோடும் -*** *வீரனாம் இராமன் அவ்வார்த்தையைச் சொன்னவுடன்;* ***மெய் இலாள் -*** *உண்மையில்லாதவளாம் சூர்ப்பணகை; (இராமனைப்*

*பார்த்து)* ***விமல யான் அச்சீரியரல்லார் மாட்டுச் சேர்கிலென் -*** *குற்றமற்றவனே! நான் அந்த நற்பண்பும் நற்செய்கையுமில்லாத அரக்கர்களிடத்து சேர்வேன் அல்லேன்;* ***தேவர் பாலும் ஆரிய முனிவர் பாலும் அடைந்தனென் -*** *தேவர்கள் இடத்தும் சிறந்தவராம் முனிவர்களிடத்தும் சேர்ந்துள்ளேன்;* ***இறைவ ஈண்டு ஓர் காரியம் உண்மை நின்னைக் காணிய வந்தேன் என்றாள் -*** *தலைவனே! இங்கு ஒரு செயல் எனக்கு ஆக வேண்டி இருப்பதால் உன்னைக் காண வந்தேன் என்று சொன்னாள்.*

*'மெய்இலாள்' என்பதற்கேற்பச் 'சீரியரல்லார் மாட்டுச் சேர்கிலேன் என்றும் தேவர் பாலும் ஆரிய முனிவர் பாலும் அடைந்தனென் என்றாள். 'விமல' என்பதற்கேற்பவும் அவன் மனம் கொள்ளுமாறும் அரக்கரைச் 'சீரியரல்லார்' எனக் கூறினாள். தலைவனைக் காண வருவது அவனுக்குட்பட்டவர் செயலாம். எனவே சூர்ப்பணகை இராவணனைத் தன் தலைவனாக ஏற்காமல் இராமனைத் தன் தலைவனாக ஏற்றுக் கொண்டாள் என்பதை இதனால் உணருமாறு செய்கிறாள். முனிவரிடம் சேர்ந்ததால் எவ்வித ஆடம்பரமின்றி வந்ததையும், 'தமியை நீ வருதற்கு ஒத்த தன்மைஎன்' என இராமன் முன்னர்க் கேட்டதற்கு (2773) உரிய விடையாகவும் இவ்வாறு உரைக்கின்றாள்.*

***2775. அன்னவள் உரைத்தலோடும், ஐயனும்,***
***'அறிதற்கு ஒவ்வா***
***நல் நுதல் மகளிர் சிந்தை நல்***
***நெறிப் பால அல்ல;***
***பின் இது தெரியும்' என்னா, 'பெய் வளைத்***
***தோளி! என்பால்***
***என்ன காரியத்தை? சொல்; அஃது இயையுமேல்***
***இழைப்பல்' என்றான்.***

***அன்னவள் உரைத்தலோடும் -*** *சூர்ப்பணகையாம் அவள் அவ்வாறு சொன்னதும்;* ***ஐயனும் -*** *இராமனும்;* ***நல் நுதல் மகளிர் சிந்தை நல்நெறிப் பால அல்ல -*** *அழகிய நெற்றியை உடைய பெண்களின் மனக் கருத்துக்கள் நல்வழியில் செல்வன அல்ல;* ***அறிதற்கு ஒவ்வா -*** *ஆண்களால் எளிதில் அறிய முடியாதன;* ***பின் இது தெரியும் -*** *பிறகு இதனைத் தெரியக் கூடும்;* ***என்னா -*** *என்று எண்ணி;* ***'பெய் வளைத் தோளி' என்பால் என்ன காரியத்தை -*** *வளைகள் அணிந்த தோளை உடையவளே! நீ என்னிடம் என்ன செயலை எண்ணி வந்துள்ளாய்?;* ***சொல் அஃது இயையுமேல் இழைப்பல் என்றான் -*** *அதனைச் சொல்வாயாக. அது செய்யத் தக்கதானால் செய்வேன் என்று கூறினான்.*

*'மகளிர் சிந்தை அறிதற்கு ஒவ்வா' என்ற பொதுக் கொள்கை சிந்தாமணியில் காணும் 'பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா உண்ணிறையுடைய வல்ல வொராயிர மனத்த வாகும்' (சீவக. 1597) எனும் கருத்துடன் ஒப்பிடற் பாலது. பின் இது தெரியும் என எண்ணியதும் 'இயையுமேல் இழைப்பல்' என உரைத்தலும் இராமனின் திறத்தை வெளிப்படுத்தும். இராமன் கொண்ட ஐயத்தை முன்னரே உள்ள செய்யுள் (2771) காட்டும்.*

*வளைத் தோளி - அன்மொழித் தொகை. இங்கு அண்மை விளியாய் வந்துள்ளது. காரியத்தை - காரியத்தை உடையாய் - முன்னிலைக் குறிப்பு வினைப் பொருளில் ஐ விகுதி பெற்று வந்தது. இசையு மேல் இசைப் பென் எனப் பாடம் கொண்டு இராமன்*

*தன் ஆற்றலுக்கு ஒத்ததாயின் ஒப்புக் கொள்வேன் என்று கொள்வாரும் உளர்.*

***2776. 'தாம் உறு காமத் தன்மை தாங்களே***
***உரைப்பது என்பது***
***ஆம் எனல் ஆவது அன்றால், அருங் குல***
***மகளிர்க்கு அம்மா!***
***ஏமுறும் உயிர்க்கு நோவேன்; என் செய்கேன்?***
***யாரும் இல்லேன்;***
***காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக்***
***காத்தி' என்றாள்.***

*(சூர்ப்பணகை)* ***தாம் உறு காமத் தன்மை தாங்களே உரைப்பது என்பது -*** *பெண்கள் தாம் கொண்ட காம வேட்கையின் தன்மையைத் தாங்களே வெளிப்படையாகக் கூறுவது என்பது;* ***அருங்குல மகளிர்க்கு ஆம் எனல் ஆவது அன்று -*** *அரிய குலத்திற் பிறந்த பெண்களுக்குப் பொருந்துவது என்பது நடக்கக் கூடியது அன்று; (ஆயின்)* ***ஏமுறும் உயிர்க்கு நோவேன் என் செய்கேன் யாரும் இல்லேன் -*** *எல்லா இன்பத்தையும் அடையக் கூடிய உயிரோடு கூடி வாழ்வதற்காக வருந்துவேன், என்ன செய்ய வல்லேன். எனக்குத் துணையென யாரும் இல்லாதவளானேன்;* ***காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக் காத்தி என்றாள் -*** *மன்மதன் என ஒருவன் செய்கின்ற கொடுமையைத் தடுத்துக் காப்பாற்றுவாய் எனக் கூறினாள்;* ***ஆல் -*** *அசை;* ***அம்மா -*** *வியப்பிடைச் சொல்.*

*'ஆம் எனல் ஆவது அன்று' என நீண்ட தொடராகக் கூறுவதன் நோக்கம் பொருந்துவது அன்று என்ற பொருளைச் சுட்டும் நோக்குடையது. தன் காமத்தைத் தானே சொல்லத் துணிந்தமையால் இவ்வாறு பல சொற்களால் தன்னிலையை விரித்து உரைக்கிறாள். 'கன்னியருற்ற நோய் கண்ணனார்க்கு மஃதின்ன தென்றுரையலர்' (சீவக. 1028) என்ற பாடல் வரிகளை இப்பாடல் முதலிரண்டடிகளுடன் ஒப்பிடற்குரியது. ஏமுறுதல் - மயக்கமுறுதலுமாம். ஏக்கம் எனவும் கூறுவர். என் உளக் காதலை எடுத்துரைத்தற்குரிய தூதுவர் யாருமிலர் எனவும் தன்னிலையைச் சூர்ப்பணகை எடுத்துரைப்பாள். காமமூட்டித் துன்புறுத்துவதில் பிறர்க்கு ஒப்பில்லாதவன் என்பதை உணர்த்த 'ஒருவன்' என்றார்.*

*ஏம் என்பது ஏமம் என்பதின் விகாரம்.*

***2777. சேண் உற நீண்டு, மீண்டு, செவ்***
***அரி சிதறி, வெவ்வேறு***
***ஏண் உற மிளிர்ந்து, நானாவிதம் புரண்டு,***
***இருண்ட வாள்-கண்***
***பூண் இயல் கொங்கை அன்னாள்***
***அம் மொழி புகறலோடும்,***

***'நாண் இலள், ஐயள், நொய்யள்; நல்லளும்
அல்லள்' என்றான்.***

**சேண் உற நீண்டு மீண்டு -** *பார்வை நெடுந்தூரம் செல்லுமாறு நீண்டு அப்புறம் செல்ல இடமின்றித் திரும்பி;* **செவ்வரி சிதறி -***சிவந்த கோடுகள் பரவி;* **வெவ்வேறு ஏண் உற மிளிர்ந்து -** *பலவகைச் சிறப்புப் பொருந்தப் பிறழ்ந்து;* **நானாவிதம் புரண்டு இருண்ட வாள்கண் -***பல் வேறு வகையாய் மாறித் திரும்பி இருள் போல் கருமைநிறம் கொண்ட வாள் போலும் கண்களோடு;* **பூண்இயல் கொங்கை அன்னாள் -***அணிகலன் அணிந்த மார்பகங்களை உடைய அச்சூர்ப்பணகை;* **அம்மொழி புகறலோடும் -***அச்சொற்களைக் கூறியவுடன்;* **நாண் இலள் ஐயள் நொய்யள் நல்லளும் அல்லள் என்றான் -** *இவள் வெட்கம் இல்லாதவள் பெரிதும் இழிந்தவள். நல்லவள் அல்லாதவள் என்று இராமன் நினைத்தான்.*

*ஏண் - உயர்ச்சி, சிறப்பு. சேண்உற நீண்டு மீண்டு என்பது நாற்புறத்தும் மூக்கு, புருவம், காது போன்ற உறுப்புகள் தடையாக இல்லாதிருப்பின் முகம் முழுதும் கண்கள் நீண்டு பரந்திடும் என்பது இதன் கருத்தாம். வெவ்வேறு பார்வைகள் கொண்டமை நோய் நோக்கு அதற்குரிய நோய் நீக்கும் மருந்து நோக்குப் போன்றவையாகும். (குறள் 1091) ஐ -நுட்பம் ஐயள் நொய்யள் என்பது இழிவின் மிகுதியைச் சுட்டும். சூர்ப்பணகையின் காமக் குறிப்பை அவளது கண்களும் கொங்கைகளும் வெளிப்படுத்தின. நாணம் உயிரினும் சிறந்ததாகப் போற்றப்படுவது. அது சூர்ப்பணகையிடம் இல்லை என இராமன் முதலில் அறிகிறான். எனவே தீயவள் என்று முடிவு செய்கிறான். இப்பாடலை முன்னர்க் கண்ட பாடலுடன் (2768) ஒப்பிடின் சூர்ப்பணகையின் நிலை புலப்படும்.*

***2778. பேசலன், இருந்த வள்ளல் உள்ளத்தின்
பெற்றி ஓராள்;
பூசல் வண்டு அரற்றும் கூந்தல் பொய்ம் மகள்,
'புகன்ற என்கண்
ஆசை கண்டருளிற்று உண்டோ? அன்று
எனல் உண்டோ?' என்னும்
ஊசலின் உலாவுகின்றாள்; மீட்டும்
ஓர் உரையைச் சொல்வாள்;***

**பேசலன் இருந்த வள்ளல் உள்ளத்தின் பெற்றி ஓராள் -** *(அவ்வாறு எண்ணி மேலும்) பேசாதிருந்த இராமனின் மனத்தின் தன்மையை உணராதவளான;* **பூசல் வண்டு அரற்றும் கூந்தல் பொய்ம்மகள் -** *மொய்க்கும் வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையுடைய பொய்யுருக் கொண்ட சூர்ப்பணகை;* **புகன்ற என்கண் ஆசை கண்டு அருளிற்று உண்டோ -** *இவன் என்னிடத்தில் கூறிய சொற்கள் ஆசை உண்டாகி அருள் புரிந்தது ஆகுமோ?;* **அன்று எனல் உண்டோ -** *நீ விரும்புவது தக்கது அன்று எனக் கூறுவதாகுமோ?;* **என்னும் ஊசலின் உலாவுகின்றாள் -***என்று இரு வேறுபட்ட எண்ணங்களிடையே ஊஞ்சலைப் போல் முன்னும் பின்னும் தடுமாறும் கருத்துடையவளானாள்;* **மீட்டும் ஓர் உரையைச் சொல்வாள் -** *மீண்டும் ஒரு சொல்லைக் கூறுவாள் ஆனாள்.*

*பெற்றி - பெருமையும் ஆம். பூசல் - ரீங்கார ஒலி எனவும் ஆம். பொய்ம்மகள் - பொய் பேசும் பெண் எனவும் உரைப்பர். கண்டு - உண்டாகி, 'முனைவன் கண்டது முதல் நூலாகும்' (தொல். சொல். மரபு. 94) ஆசை கொண்டானோ கொள்ளவில்லையோ எனத் தடுமாறும் கருத்து நிலையை 'ஊசலின் உலாவுகின்றாள்' என்பர். உரை - முதனிலைத் தொழிற் பெயர். ஊசல் தடுமாறும் கருத்தைக் குறிப்பதோர் இலக்கணை.*

*2779.* ***'எழுத அரு மேனியாய்! ஈண்டு***
***எய்தியது அறிந்திலாதேன்;***
***முழுது உணர் முனிவர் ஏவல் செய் தொழில்***
***முறையின் முற்றி,***
***பழுது அறு பெண்மையோடும் இளமையும்***
***பயனின்று ஏக,***
***பொழுதொடு நாளும் வாளா கழிந்தன***
***போலும்' என்றாள்.***

***எழுத அரு மேனியாய்! -*** *ஓவியத்தில் தீட்டுதற்கு அரிதான வடிவழகுடையவனே!;* **ஈண்டு எய்தியது அறிந்திலாதே -** *(நீ) இங்கு வந்து சேர்ந்ததை அறியாதவளாம் நான்;* **முழுதுணர் முனிவர் ஏவல் செய்தொழில் முறையின் முற்றி -** *எல்லாம் அறிந்த முனிவர்களின்ஏவலை ஏற்றுச் செய்யும் தொழிலை முறையாக முடித்துக் கொண்டிருந்ததால்;* **பழுது அறு பெண்மையோடும் இளமையும் பயனின்று ஏக -** *குற்றமற்ற (என்) பெண் தன்மையோடும் இளம் பருவமும் பயன்படாமல் போக;* **பொழுதொடு நாளும் வாளா கழிந்தன என்றாள் -** *ஒவ்வொரு நாளும் அதன் சிறுபொழுதும் வீணாகப் போயின என்றுகூறினாள்;* **போலும் -** *அசைச்சொல்.*

*இராமன் எழுதரு மேனியன் என்பதை 'இவ் எழுத அரிய திருமேனிக் கருங்கடலைச் செங்கனி வாய்க் கவுசலை என்பாள் பயந்தாள்' (656) என்ற விசுவாமித்திரர் கூற்றாலும் 'ஓவியத்தில் எழுத ஒண்ணா உருவத்தாய்' (4020) எனும் வாலி கூற்றாலும் அறியலாம். முன்னர் 'அறந்தலை நிற்பதானேன்' (2772) என்று சூர்ப்பணகை கூறிய மொழிகள் பொய் என்பதை 'அங்கு இராமன் எய்தியது அறியாததால் பொழுதொடு நாளும் வாளா கழிந்தன' என்கிறாள். இராமனைக் கூடினால் தன் பெண்மையும் இளமையும் பயன்படும் என்று தன் காம உணர்வை வெளிப்படுத்தினாள். சிறு பொழுது என்பவை காலை, நண்பகல், எற்பாடு, மாலை, இடையாமம், வைகறை ஆகும். போலும் என்பதை வினாப் பொருளில் வந்த இடைச்சொல் என்பாருமுளர். முற்றி என்பது முற்ற என்ற எச்சத் திரிபு.*

*2780.* ***'நிந்தனை அரக்கி நீதி நிலை இலாள்;***
***வினை மற்று எண்ணி***
***வந்தனள் ஆகும்' என்றே வள்ளலும்***
***மனத்துள் கொண்டான்;***
***'சுந்தரி! மரபிற்கு ஒத்த தொன்மையின்***
***துணிவிற்று அன்றால்,***

***அந்தணர் பாவை நீ; யான் அரசரில்***
***வந்தேன்' என்றான்.***

***வள்ளலும் -*** *(அது கேட்ட) இராமனும்;* ***நிந்தனை அரக்கி நீதி நிலை இலாள் -*** *இவள் எல்லோரும் பழிக்கத்தக்க அரக்கி என்பதுடன் நியாய நெறியில் நில்லாதவள்;* ***மற்று வினை எண்ணி வந்தனள் ஆகும் என்றே மனத்துள் கொண்டான் -*** *வேறு ஒரு தீவினையைச் செய்யநினைத்து இங்கு வந்தாள் ஆக வேண்டும் எனவே மனத்தினுள் முடிவாகக் கருதியவனாய்;* ***சுந்தரி -*** *அழகிய பெண்ணே;* ***யான் அரசரில் வந்தேன் -*** *நான் மன்னர் குலத்தில் பிறந்தவன்;* ***நீ அந்தணர் பாவை -*** *நீயோ அந்தணர் குலத்தில் பிறந்த பெண்;* ***மரபிற்கு ஒத்த தொன்மையின்துணிவிற்று அன்று என்றான் -*** *மணம் புரியும் சாதிமரபு முறைக்கு ஏற்ற தொன்று தொட்ட ஒழுக்க நெறிக்கு உறுதி அளிப்பது அன்று என்றுசொன்னான்;* ***ஆல் -*** *அசை.*

*தன்னிடம் காமங் கொண்டு வந்தாள் என்பதை 'வினை மற்றெண்ணி' என இடக்கரடக்கில் எண்ணினான். இராமனுக்கு இப்போதுதான் சூர்ப்பணகை கருத்து நன்கு வெளிப்பட்டது. எனவே, நகைச்சுவை தோன்ற 'மரபிற்கு ஒத்த.. அன்று' எனவும் 'பிறப்பால் வேறுபட்டவர்' எனவும் இராமன் கூறுகிறான். பண்டைய மரபுப் படி மேற் குலப் பெண்ணை மணத்தல் கூடாது. அந்தணர் பாவை என்றது சூர்ப்பணகையின் புலத்தியர் வழி மரபைக் குறித்ததாகும். சுந்தரி என்ற விளி அழகி எனினும் மரபால் ஏற்கத்தக்கவள் அன்று என்பதைக் குறிக்கும்.*

*தொன்மை-பண்பாகு பெயர்-பழைய ஒழுக்கத்திற்கு ஆகி வந்தது.*

***2781. 'ஆரண மறையோன் எந்தை; அருந்ததிக் கற்பின் எம் மோய், தாரணி புரந்த சாலகடங்கட மன்னன் தையல்; போர் அணி பொலம் கொள் வேலாய்! பொருந்தலை இகழ்தற்கு ஒத்த காரணம் இதுவே ஆயின், என் உயிர் காண்பென்' என்றாள்.***

***போர் அணி பொலம் கொள் வேலாய் -*** *போர் செய்தலே தனக்கு அணிகலமாகக் கொண்ட அழகிய வேலையுடையவனே!;* ***எந்தை ஆரண மறையோன் -*** *என் தந்தை வேதங்களை ஓதியுணர்ந்த விசிரவசு எனும் முனிவர்;* ***அருந்ததி கற்பின் எம்மோய் -*** *அருந்ததி போன்ற கற்பிற் சிறந்த என் தாய்;* ***தாரணி புரந்த சாலகடங்கட மன்னன் தையல் -*** *உலகை ஆண்ட சால கடங்கடர் என்னும் அரச குல மரபில் வந்த பெண்;* ***பொருந்தலை இகழ்தற்கு ஒத்த காரணம் இதுவே ஆயின் -*** *நீ இசையாமல் என்னை இகழ்ந்து ஏற்றுக் கொள்ளாததற்குத் தக்க காரணம் இதுவே ஆனால்;* ***என் உயிர் காண் பென் என்றாள் -*** *என் உயிர் அழியாமல் அதைப் பெற்றவள் ஆவேன் எனச் சூர்ப்பணகை சொன்னாள். எந்தை - விசிரவசு. ஆரண மறையோன் என்பது வெறும் சாதிப்பெயராய் நின்றது. வேதமோதிக் கொண்டிருந்த புலந்தியன் முன் திருணபிந்து என்னும் இராசவிருடியின் மகள் நின்று கருவுற்றதால் அக்காரணம் பற்றி விசிரவசு என்ற விசிரவசு என்ற பெயர் பெற்றார். மோய்- தாய் குலசேகர ஆழ்வார் தம் பெருமாள் திருமொழியில் (9.9) 'உன் மோயின் வருத்தமும்' என்று கூறியுள்ளார். வேலோய் - வேல் என்பது போர்க் கருவிகளுக்குரிய பொதுப் பெயராய் வந்தது. பொருந்தலை -முற்றெச்சம். அருந்ததி - வசிட்ட முனிவரின் மனைவி. கற்புடை மகளிரில் சிறப்புடையவளாய் வானில் விண்மீனாய்க் கணவனைப் பிரியாதிருக்கும் நிலை பெற்றவள். சால - கடங்கட*

*மன்னன் தையல் என்பது சாலகடங்கடை என்பாளிடம் தோன்றிய அரக்கர் குலத்தில் பிறந்தவனைச் சுட்டும். இது பற்றிப் பல்வேறு கதைகள் உள்ளன. புலத்தியர் மகனாம் விசிரவசு கதை வரலாறு இதனைக் காட்டும். சாலகடங்கடர் மன்னராதலின் இராமன் கூறிய மறுப்பாம் 'அந்தணர் பாவை' என்பதற்குரிய விடையாய் அமைந்து தன்னை ஏற்குமாறு சூர்ப்பணகை வலியுறுத்துகிறாள்; 'மணம் செய்து கொள்வானாயின் என் காம வேதனை தணிந்து பிழைத்திடுவேன்' என்றாள். 'என் உயிர் காண்பென்' என்பதற்குச் 'சாவேன்' என்று பொருளுரைப்பாரும் உளர்.*

*சால கடங்கடர் மரபு - அரக்கர் குலத்தில் பிறந்த ஏதி என்பவன்மகன் வித்யுத் கேசன் என்பவன் சந்தியையின் மகளாம் சாலகடங்கடை என்பவளை மணந்து சுகேசனைப் பெற்றாள். அவன் மக்களாம் மாலியவான், சுமாலி, மாலி என்பவருள் சுமாலியின் மகள் கேகசி என்பவள் இராவணன், சூர்ப்பணகை முதலியோரைப் பெற்றனள். மேலும் சாலகடங்கடை பிள்ளையைப் பெற்றவுடன் தனியே விட்டு விட்டுக் கணவனுடன் சென்றாள். யாருமின்றிக் கிடந்த குழந்தையைச் சிவனும் உமையும் எடுத்து அதற்கு அப்போதே தாய்க்குச் சமமான பருவம் உண்டாக அருள் புரிந்து நீண்ட ஆயுளையும் வானில் பறந்து செலும் நகரத்தையும் அளித்தனர். அது முதல் அரக்கர் மகளிர் விரைவிற் கருவுறலும், உடன் மகப்பெறலும், பிறந்தகுழந்தை உடனே தாயின் ஒத்த பருவம் அடைதலும் ஆகிய பேற்றைப் பெற்றனர். காலங்காலமாகச் சாலகடங்கடர் ஆண்டு வந்ததால் அரச மரபினர் எனப்பட்டார்.*

***2782. அருத்தியள் அனைய கூற, அகத்துறு நகையின் வெள்ளைக்***
***குருத்து எழுகின்ற நீலக் கொண்டல் உண்டாட்டம் கொண்டான்,***
***"வருத்தம் நீங்கு அரக்கர்தம்மில் மானிடர் மணத்தல், நங்கை!***
***பொருத்தம் அன்று" என்று, சாலப் புலமையோர் புகல்வர்' என்றான்.***

***அருத்தியள் அனைய கூற** - ஆசை கொண்ட சூர்ப்பணகை அச்சொற்களைச் சொல்ல; **அகத்துறு நகையின் வெள்ளைக் குருத்து எழுகின்ற நீலக் கொண்டல் உண்டாட்டம் கொண்டான்** - தன் உள்ளத்தில்சிரிப்பின் வெண்ணிற இளங் குருத்து மேல் தோன்றுகிறது என்று தோன்றச் சிரித்த கரிய மேகம் போன்ற இராமன் ஒரு விளையாட்டை மேற்கொண்டான்; **நங்கை** - பெண்ணே!; **வருத்தம் நீங்கு அரக்கர் தம்மில் மானிடர் மணத்தல் பொருத்தம் அன்று** - துன்பமில்லாத இராக்கதரோடு மனிதர் திருமணம் புரிதல் இயைபுடையதன்று;**என்று சாலப் புலமையோர் புகல்வர் என்றான்** - என மிகுந்த அறிவுடையோர் சொல்லுவர் எனக் கூறினான்.*

*அருத்தியள் - இரப்போள் எனப் பொருள்படும். குருத்து - இளம்கொழுந்து இது இளவொளியுடைமையைக் குறிக்கும் மானிடர் - காசிப முனிவரின் மனைவிமார்களில் மனு என்பவளிடம் பிறந்தவர் என்பதைக் குறிக்கும் சொல் என்பர். அரக்கியை மானிடர் மணப்பதற்குக் கணப்பொருத்தம் தடையாகும். சிரிப்பைப் பெரிதும் வெளிப்படுத்தாமல் மெல்லிய இயல்பிற்கேற்ப அகத்துறு நகையாக*

*வெளிப்பட்டதைக் குறிக்கும். சூர்ப்பணகையின் பேதமை கருதி இங்கு இராமனிடம் நகை தோன்றியது. கோபம் கொண்டு அவளைத் துரத்தி விடாமல் உடன்படல், மறுத்தல் எனும் இரு தன்மை உடையவன் போல் வெவ்வேறு காரணங்களைக் கூறிப் பேச்சை வளர்ப்பதைக் குறிக்கும் 'உண்டாட்டம் கொண்டான்' எனும்தொடர். குருத்து - இலக்கணை. நீலக்கொண்டல் - உவம ஆகுபெயர்.*

***2783. 'பராவ அருஞ் சிரத்தை ஆரும் பத்தியின்***
***பயத்தை ஓராது,***
***"இராவணன் தங்கை" என்றது ஏழைமைப்***
***பாலது' என்னா,***
***'அரா-அணை அமலன் அன்னாய்!***
***அறிவித்தேன் முன்னம்; தேவர்ப்***
***பராவினின் நீங்கினேன், அப்***
***பழிபடு பிறவி' என்றாள்.***

***அரா அணை அமலன் அன்னாய்! -*** *பாம்பணை மீது பள்ளி கொள்ளும் குற்றமற்ற திருமாலைப் போன்றவனே!;* ***பராவ அரும் சிரத்தை ஆரும் பத்தியின் பயத்தை ஓராது -*** *விரித்துக் கூறுவதற்கு அரிய சிரத்தை என்னும் ஊக்கம் நிரம்பிய பத்தியால் நான் பெற்ற நல்ல பயனை உணராமல்;* ***இராவணன் தங்கை என்றது ஏழைமைப் பாலது என்னா -*** *நான் இராவணனின் தங்கை எனும் ஒரு காரணத்தைக் காட்டி மறுப்பது உன் அறியாமையில் நிகழ்ந்தது என்று கூறி;* ***அப்பழி படுபிறவி -****அரக்கர் பிறவியாம் அப்பழிக்கத்தக்க பிறப்பை;* ***தேவர்ப் பராவினின் நீங்கினேன் -*** *தேவர்களை வணங்கித் துதித்ததால் நீங்கி விட்டேன் (இதனை)****முன்னம் அறிவித்தேன் என்றாள் -*** *முன்னமே தெரிவித்துள்ளேன் என்று சூர்ப்பணகை சொன்னாள்.*

*சிரத்தை ஆரும் பத்தி - சிரத்தையோடு கூடின பத்தி. பழிபடு பிறவி - பாவம் செய்ததால் உண்டான பிறப்பு. ஏழைமைப் பாலது - ஆராய்ச்சி இல்லாததால் உண்டானது என்பதுமாம். அல்லாமல், சூர்ப்பணகை தான் தவத்தால் பெற்ற மரபு வேறுபாட்டை மறந்து 'இராவணன் தங்கை எனக் கூறியது தன் பேதமைப்பாலது என்பதும் ஆம். தன் மரபு மாற்றத்தைமுன்னம் அறிவித்தேன் என்றது 'தீவினை தீய நோற்றுத் தேவரின் பெற்றது' (2772) என்பதைச் சுட்டியது.*

*'பராவரும் வித்தியாதர் பன்னி' என்ற பாட வேறுபாடு கொண்டுசொல்லுதற்கரிய வித்தியாதரப் பெண்ணாவேன் எனப் பொருள் கூறுவர்.*

***2784. 'ஒருவனோ உலகம் மூன்றிற்கு ஓங்கு ஒரு***
***தலைவன், ஊங்கில்***
***ஒருவனோ குபேரன், நின்னோடு***
***உடன்பிறந்தவர்கள்; அன்னார்***
***தருவரேல், கொள்வென்; அன்றேல்,***
***தமியை வேறு இடத்துச் சார;***

***வெருவுவென்;-நங்கை!' என்றான்;மீட்டு***
***அவள் இனைய சொன்னாள்:***

***நங்கை! -*** *பெண்களில் சிறந்தவளே!;* ***நின்னொடு உடன் பிறந்தவர்கள் -*** *உன்னுடன் கூடப் பிறந்தவர்களில்;* ***ஒருவனோ உலகம் மூன்றிற்கு ஓங்கு ஒரு தலைவன் -*** *ஒருத்தனோ மூன்று உலகங்களுக்கும் சிறப்பில் ஒப்பில்லாத தலைவனாம் இராவணன்;* ***ஊங்கில் ஒருவனோ குபேரன்;*** *- சிறப்பில் மற்றொருவனோ செல்வத்திற்குக் கடவுளாம் குபேரன்;* ***அன்னார் தருவரேல் கொள்வென் -*** *அத்தகையோர் உன்னைக் கொடுப்பார் எனில் ஏற்றுக் கொள்வேன்;* ***அன்றேல் தமியை வேறு இடத்துச் சார வெருவுவென் என்றான் -*** *அவ்வாறன்றி நீ மட்டும் தனியாக வேறு ஒருவரைத் தேர்ந்து அடைவதை எண்ணி அஞ்சுவேன் என்று சொன்னான் இராமன்;* ***மீட்டு அவள் இனைய சொன்னாள் -*** *மீண்டும் சூர்ப்பணகை இத்தகைய சொற்களைச் சொன்னாள்.*

*ஊங்கில்-ஊங்கு+இல்-மேம்பட்டது கல்வியின் ஊங்கில்லை (நீதி நெறி.1) என்ற தொடரில் இப்பொருள் காண்க. ஊன்றி நோக்குமிடத்து என்றும் கூறுவர். அவ்விடத்தில் என்றும் பொருள் கொள்வார். உடன்பிறப்பில் குபேரனை முதலில் கூறாது இராவணனை முன்னர்க் கூறியது அவன் சூர்ப்பணகைக்கு ஒரு தாய் வயிற்றுப் பிறப்பால் அண்ணன் ஆகின்ற நிலையைக் குறித்து நின்றது. இராவணனின் ஆட்சிப் பெருமையும் குபேரனின் செல்வப் பெருமையும் கூறி அவள் இவ்வாறு தனித்து ஒழுகல் தகாது என்பதை இராமன் சுட்டினான். தமியை வேறு இடத்துச் சாரஎன்பதற்குத் தனியாக வருவது என்ற பொருளும் கொள்வர்.*

*குபேரன் என்ற சொல்லுக்கு விகாரப்பட்ட உடம்பை உடையவன் என்பது பொருள். இமயத்தில் தவம் செய்யும் போது அருள் செய வந்த சிவனின் பக்கத்திலிருந்த உமைமேல் இடக் கண்ணைச் செலுத்திய குற்றத்தால் அக்கண் ஒளி குன்றியது. அதனால் இப்பெயர் பெற்றான் என்பர். இது புராண வரலாறு.*

***2785. 'காந்தர்ப்பம் என்பது உண்டால்;***
***காதலின் கலந்த சிந்தை***
***மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளே***
***வகுத்த கூட்டம்;***
***ஏந்தல்-பொன்-தோளினாய்! ஈது***
***இயைந்தபின், எனக்கு மூத்த***
***வேந்தர்க்கும் விருப்பிற்று ஆகும்; வேறும் ஓர்***
***உரை உண்டு' என்றாள்.***

*(மேலும் சூர்ப்பணகை இராமனிடம்)* ***ஏந்தல் பொன் தோளினாய் -*** *மலை போன்ற அழகிய தோள்களை உடையவனே!;* ***காதலின் கலந்த சிந்தை மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் காந்தர்ப்பம் என்பது உண்டு-*** *வேட்கையில் ஒன்று பட்ட மனமுடைய ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் காந்தருவம் என்பது உள்ளது;* ***மறைகளே வகுத்த கூட்டம் -*** *அது வேதங்களே வகுத்து வைத்த மணமுறை ஆகும்;* ***ஈது இயைந்த பின் எனக்கு மூத்த வேந்தர்க்கும் விருப்பிற்று ஆகும் -*** *இம்மண முறை நமக்கு நடந்த பின் என் அண்ணன்மார்க்கும் (இது) விருப்புடையதேஆகும்;* ***வேறும் ஓர் உரை***

***உண்டு என்றாள் -*** *வேறொரு தனிச் செய்தியும் உள்ளது என்று சூர்ப்பணகை கூறினாள்;* ***ஆல் -*** *அசை.*

*காந்தர்வம் எண் வகைப்பட்ட மணங்களுள் ஒன்று. எட்டு வகையாவன பிரமம், தெய்வம், பிரசாபத்தியம், ஆரிடம், ஆசுரம், காந்தர்வம், இராக்கதம், பைசாசம் என்பன ஆகும். ஒத்த அன்பினராய்த் தலைவனும் தலைவியும் கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தம்மில் கூடும் கூட்டம் காந்தருவமாகும். யாழோர் கூட்டம் என இதனைக் குறிப்பர். ஏந்தல் - உயர்ச்சி உடையது. மலைக்குக் காரணப் பெயர். வேந்தர்க்கு என உரைத்ததால் தான் அரச குலத்தைச் சேர்ந்தவள் என்பதை மீண்டும் வலியுறுத்திக் கூறியதாகும். முன்னர், இராவணன் குபேரன் ஆகியோர் தருவதை இராமன் சுட்டியதால் அவன் அவர்க்கு அஞ்சியதாக எண்ணிக் காந்தர்வ மணத்தால் அவர்களின் விருப்பத்தைப் பின்னர்க் கொள்ள இயலும் எனக் கூறினாள். முறையற்ற செயலுக்கு வேத முறைப்படி கூறிய காந்தர்வ மணம் பூண்பது குறித்துச் சூர்ப்பணகை கூறுவது அவளது பொய்ம்மகளின் (2778) பண்பைப் புலப்படுத்தும்.*

***2786. 'முனிவரோடு உடையர், முன்னே முதிர் பகை;***
***முறைமை நோக்கார்;***
***தனியை நீ; ஆதலால், மற்று அவரொடும்***
***தழுவற்கு ஒத்த***
***வினையம் ஈது அல்லது இல்லை; விண்ணும்***
***நின் ஆட்சி ஆக்கி,***
***இனியர் ஆய், அன்னர் வந்து உன்***
***ஏவலின் நிற்பர்' என்றாள்***

*(என் தமையன்மார்)* ***முன்னே முனிவரோடு முதிர்பகை உடையர் -*** *முன்னமே முனிவர்களுடன் முற்றிய பகைமை கொண்டவராவர்;* ***முறைமை நோக்கார் -*** *நீதி அறநெறி ஆகிய முறைகளைப் பாரார்;* ***நீ தனியை -*** *நீயோ இக்காட்டில் தனியனாக உள்ளாய்;* ***ஆதலால் மற்று அவரொடும் தழுவற்கு ஒத்த வினையம் ஈது அல்லது இல்லை -*** *ஆகையால் அந்த அரக்கரோடு நட்புடன் வாழ்வதற்குரிய தந்திரம் இது அல்லாமல் வேறு இல்லை; (காந்தர்வ மணம் செய்து கொண்டால்)* ***விண்ணும் நின் ஆட்சி ஆக்கி -*** *தேவருலகையும் உன் அரசாட்சிக் கீழ் அமைத்து;* ***இனியர் ஆய் -*** *இனிய அன்பு உன்பால் உடையவர்களாய்;* ***அன்னர் வந்து உன் ஏவலின் நிற்பர் என்றாள் -*** *அத்தகையோர் உன்னிடம் வந்து நீ இட்ட கட்டளைப்படி நடப்பர் எனச் சூர்ப்பணகை சொன்னாள்.*

*தவவேடம் பூண்ட இராமனிடம் இராவணன் முனிவர்களிடம் கொண்ட பகையை முதலில் கூறி அவனோடு நட்பாம் வழி தன்னைக் காந்தர்வ மணம் முடிப்பதே என உரைத்தாள். மேலும், தன்னை மணப்பதால் விண்ணரசு செய்யலாம் என ஆசை ஊட்டுகிறாள். அத்துடன் அன்றி அரக்கரும் இராமன் ஏவல்படி நிற்பர் என வாழ்வில் ஓர் உயர் நிலை உறுவதையும் சுட்டுகிறாள் இவற்றை ஆக்கிக் கொள்ளும் வினையமாகத் தன்னை மணந்து கொள்வதே எனச் சுட்டாமல் சுட்டுவாள். வினையம் - செயல் என்பாருமுளர். விண்ணும் என்பதில் உள்ள எச்ச உம்மையால் மண்ணும் எனக் கொள்ள இடமுள்ளது. விண்ணும் என்பதைச் சிறப்பும்மையாகவும் கூறுவர்.*

*2787.* ***'நிருதர்தம் அருளும் பெற்றேன்; நின்***
***நலம் பெற்றேன்; நின்னோடு***
***ஒருவ அருஞ் செல்வத்து யாண்டும் உறையவும்***
***பெற்றேன்; ஒன்றோ,***
***திரு நகர் தீர்ந்த பின்னர், செய்***
***தவம் பயந்தது?' என்னா,***
***வரி சிலை வடித்த தோளான் வாள்***
***எயிறு இலங்க நக்கான்.***

***வரிசிலை வடித்த தோளான் -*** *(சூர்ப்பணகை கூறிய மொழிகளைக் கேட்டபின்) கட்டுக்கள் அமைந்த வில் தொழில் பயின்ற தோளை உடைய இராமன்;* **நிருதர் தம் அருளும் பெற்றேன் -** *அரக்கர்களின் அருளையும் அடைந்தேன்;* **நின் நலம் பெற்றேன் -** *உன்னை அடையும் நன்மையும் அடைந்தேன்;* **நின்னொடு ஒருவ அருஞ் செல்வத்து யாண்டும் உறையவும் பெற்றேன் -** *உன்னோடு எக்காலத்தும் நீங்காத பெரும் செல்வத்தை நீங்காது எப்போதும் நிலைத்திருக்கவும் அடைந்தேன்;* **ஒன்றோ -** *இது மட்டுமா?;* **திருநகர் தீர்ந்த பின்னர் செய்தவம் பயந்தது -** *அழகிய அயோத்தியை நான் நீங்கிய பிறகு நான் செய்த தவத்தின் பயனாய் விளைந்தது போலும்;* **என்னா வாள் எயிறு இலங்க நக்கான் -***என்று சொல்லி ஒளியுள்ள தன் பற்கள் புலப்படச் சிரித்தான்.*

*நலம் - அழகும் ஆம். 'சிலைவடிப்ப வீங்கி விரையெனத் திரண்ட தோளான்' என்ற சீவக சிந்தாமணித் (1450) தொடருக்கு நச்சினார்க்கினியர்'வில்லைப் பயிற்றுதலாற் பெருத்துத் திரண்ட தோளான்' என்று எழுதும் உரை ஒப்பிடற்குரியது. வரிகளாய் சிலைத் தழும்பு உண்டானதென்றும் கூறலாம். அரக்கர் அருளும், அருஞ் செல்வமும். அவள் நலமும் பெறுமாறு தான்செய்த முன்னைய தவம் பலித்தது என எதிர் மறையில் இகழ்ச்சியுற நகைத்தான் இராமன்.*

*சீதையைக் கண்ட சூர்ப்பணகை கொண்ட எண்ணங்கள்*

*2788.* ***விண்ணிடை, இம்பர், நாகர், விரிஞ்சனே***
***முதலோர்க்கு எல்லாம்***
***கண்ணிடை ஒளியின் பாங்கர்,***
***கடி கமழ் சாலைநின்றும்,***
***பெண்ணிடை அரசி, தேவர் பெற்ற நல்***
***வரத்தால், பின்னர்***
***மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே***
***போல்வாள், வந்தாள்.***

***விண்ணிடை இம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம்-*** *வான்உலகத்தும் இம்மண்ணுலகத்தும் பாதல உலகத்தும் பிரமன் முதலிய அனைவர்க்கும்;* **கண்ணிடை ஒளியின் பாங்கர் -** *கண்களிடத்து ஒளி வடிவமுள்ள இராமனின் பக்கத்தில்;* **கடிகமழ்**

***சாலை நின்றும்*** -*நறுமணம் வீசும் பன்ன சாலையிலிருந்து;* ***பெண்ணிடை அரசி*** - *பெண்களின் அரசி போல்வாள்;* ***பின்னர் மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள்***- *பின்னர் இம்மண்ணுலகில் பிறந்த இரத்தினத்திலிருந்துதோன்றிய வஞ்சிக்கொடி போன்ற சீதை;* ***தேவர் பெற்ற நல்வரத்தால் வந்தாள்*** - *விண்ணோர் முன் திருமாலிடம் பெற்ற வரம் நிறைவேறும்படி வந்தாள்.*

*உறுப்புக்களில் கண் சிறந்ததால் கண்ணிடை ஒளி என இராமன் சிறப்பிக்கப் பெற்றான். கண்ணிலும் விழி சிறந்தது. அவ்விழியினும் அதன் ஒளி மிகச் சிறந்தது ஆம். இதனால் இராமன் எல்லா உயிர்களின் கண் ஒளியாய் விளங்குகிறான் என்பதாம். யாவரும் கண்டு கண் கூசும் படியான ஒளியோடு சீதை பன்னசாலையிலிருந்து வெளியே வந்தாள் என்பதுமாம். இலைக் குடிசைக்கு மணம் வந்தவாறு யாதெனில் அதைச் சுற்றிலுமுள்ள செடி கொடி மரங்களில் பூத்த மலர்களால் வந்ததாம். தேவர் பெற்ற நல்வரம் - சீதை வெளியே வர அது கண்ட சூர்ப்பணகையின் செயல்களால் பல செயல்கள் நிகழ்ந்து இராவணன் சீதையை எடுத்துச் செல்லவும்அதனால் அரக்கர் அழிவும் நிகழ்ந்ததைத் தேவர் பெற்ற நல் வரத்தால் நிகழ்ந்ததாகக் கருதுவர். இனி அவர்கள் பெற்ற நல் வரத்தால் பாற்கடல் விட்டு இம்மண்ணிடைப் பிறந்த சீதை எனவும் உரைப்பர். தேவர் துயரம் நீங்கச் சீதை பிறப்பும் அவள் இராமனை மணந்து காடேகி இராவணனால் கவரக் காரணமாகி அதனால் இராவணாதிகள் அழிவும் உண்டாயிற்று. இதனை அடுத்த பாட்டில் (2789) 'அரக்கர் என்னும் கான் சுட முளைத்த கற்பின் கனலி' எனச்சுட்டும். இவ்வாறு அவதார நோக்கினைக் காப்பியத்தின் பல இடங்களில் அறிவுறுத்துவது மரபு. விண்ணிடை என்பதில் உள்ள இடை என்ற சொல்லை இம்பர், நாகர் முதலிய சொற்களுடன் கூட்டியுரைக்கப் பெற்றது. விரிஞ்சனே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. கண்ணிடை ஒளி என உருவக அணி அமைந்துள்ளது.*

***2789. ஊன் சுட உணங்கு பேழ் வாய் உணர்வு***
***இலி, உருவில் நாறும்***
***வான் சுடர்ச் சோதி வெள்ளம் வந்து***
***இடை வயங்க, நோக்கி,***
***மீன் சுடர் விண்ணும் மண்ணும்***
***விரிந்த போர் அரக்கர் என்னும்***
***கான் சுட முளைத்த கற்பின் கனலியைக்***
***கண்ணின் கண்டாள்.***

***ஊன் சுட உணங்கு பேழ்வாய் உணர்வு இலி*** - *தன் உடலை (காமத் தீ) எரிக்க அதனால் வாடிய பெரிய வாயையுடைய நல்லுணர்வில்லாத சூர்ப்பணகை;* ***உருவில் நாறும் வான் சுடர்ச் சோதி வெள்ளம் வந்து இடைவயங்க நோக்கி*** - *(சீதையின்) வடிவிலிருந்து வெளித் தோன்றும் பெருஞ்சுடர் ஒளி மயமான பெருக்காக வந்து அவ்விடம் விளங்க அதனைப் பார்த்து;* ***மீன் சுடர் விண்ணும் மண்ணும் விரிந்த போர் அரக்கர் என்னும்*** - *விண்மீன்கள் ஒளிரும் வானமும் நில உலகும் பரவிய போர் செய்யும் கொடிய இராக்கதர் எனும்;* ***கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணின் கண்டாள்*** - *காட்டை அழிக்கப் பிறந்த கற்பு என்னும் தீயாகிய சீதையைத் தன் கண்முன் (வரப்) பார்த்தாள்.*

*ஊன்சுட உணங்கு பேழ்வாய் - தசையைப் பதம் செய்து உண்பதற்குப் பதைக்கிற திறந்த வாய் எனவும் கூறுவர். தன்னுயிர் போல் மன்னுயிரைக் கருதாத சூர்ப்பணகையை 'உணர்விலி' என்றார். அரக்கர் குலத்தை அழிக்க வந்த சீதையைச் 'சோதி வெள்ளம்' என்றும் 'கற்பின் கனலி' எனவும்சுட்டினார். இத்துடன் 'பொன்னின் ஒளி. மின்னின் எழில் அன்னவள் தன் ஒளி' எனக் கோலங் காண் படலத்தில் சீதையை வருணித்ததை (1144) ஒப்பிடுக. மேலும் கற்புக்கனலி என்பதைக் காட்டும் வகையில் சூடாமணிப் படலத்தில் (5403) 'அரக்கர் ஆம் இருந்தை வெந்து உக, சனகி எனும் ஒரு தழல்' என்பதையும் ஒப்பிட்டுக் காணலாம். உணர்விலிக்குச் சோதி வெள்ளமாய்க் கனலியாய்த் தென்பட்டாள் சீதை என்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.*

***2790. 'மரு ஒன்று கூந்தலாளை வனத்து***
***இவன் கொண்டு வாரான்;***
***உரு இங்கு இது உடையர் ஆக, மற்றையோர்***
***யாரும் இல்லை;***
***அரவிந்த மலருள் நீங்கி, அடி***
***இணை படியில் தோய,***
***திரு இங்கு வருவாள்கொல்லோ?' என்று அகம்***
***திகைத்து நின்றாள்.***

***மரு ஒன்று கூந்தலாளை வனத்து இவன் கொண்டு வாரான்*** *- நறுமணம் பொருந்திய கூந்தலை உடைய இவளைக் காட்டிற்கு இவன் அழைத்து வரமாட்டான்;* ***இது உரு உடையர் ஆக மற்றையோர் இங்கு யாரும் இல்லை*** *- இத்தகைய அழகுள்ளவராக வேறு எந்த மகளிரும் இவ்விடத்தில் இல்லை;* ***திரு அரவிந்த மலருள் நீங்கி அடியிணை படி யில் தோய இங்கு வருவாள் கொல்லோ*** *- திருமகள் தான் தங்கும்செந்தாமரை மலரிலிருந்து புறப்பட்டு இருபாதமும் நிலத்தில் படிய இவ்விடத்திற்கு வருவாளோ;* ***என்று அகம் திகைத்து நின்றாள்*** *-என மனம் மருண்டு நின்றாள் சூர்ப்பணகை.*

*சீதை மரு ஒன்று கூந்தலாள் என்றதால் உத்தம சாதிப் பெண் என்பது புலனாம் அவர்கள் கூந்தலில் இயற்கை மணம் உண்டு என்பது மரபு. நம்மாழ்வார் பாடிய திருவிருத்தத்தில் (55) வைகுந்த மன்னாள் குழல்வாய் விரைபோல் வண்டுகள் வாரும் மலருளவோ?' என்ற அடிகள் இதனை விளக்கி நிற்கும். இவன் தன் மனைவி எனின் இத்தகைய அழகுடையவளைக் காட்டிற்கு அழைத்து வாரான். காட்டிலோ இத்தகைய அழகிகள் இல்லை. எனவே தான் வழிபடும் திருமகளே இங்கு வந்து விட்டாளோ என முதலில் சூர்ப்பணகை நினைத்தாள். ஆனால் சீதையின் அடிகள் நிலத்தில் தோய்ந்ததால் இவள் திருமகள் அல்லளோ எனத் திகைத்தாள். இனித் திருமகள் தனக்கு அருள வந்தாளோ? அன்றிக்கேடு புரிய வந்தாளோ எனத் திகைத்தாளுமாம். முதலில் கண்ணில் கண்ட (2788) சூர்ப்பணகை இப்போது சீதையின் நறுமணத்தை மூக்குப் புலனாலும் உணர்ந்தாள் மலருள் - வேற்றுமை மயக்கம் கொல் ஓ - வினாக் குறித்து நின்றன.*

***2791. பண்பு உற நெடிது நோக்கி,***
***'படைக்குநர் சிறுமை அல்லால்,***

***எண் பிறங்கு அழகிற்கு எல்லை இல்லை***
***ஆம்' என்று நின்றாள்;***
***'கண் பிற பொருளில் செல்லா; கருத்து***
***எனின், அஃதே; கண்ட***
***பெண் பிறந்தேனுக்கு என்றால், என்படும்***
***பிறருக்கு?' என்றாள்.***

***பண்பு உற நெடிது நோக்கி -*** *(சீதையைச் சூர்ப்பணகை) நன்றாகநீண்ட நேரம் உற்றுப் பார்த்து;* ***படைக்குநர் சிறுமை அல்லால் எண் பிறங்கு அழகிற்கு எல்லை இல்லை ஆம் என்று நின்றாள் -*** *பிறப்பிப்போர்க்குக் குறைவே அல்லாமல் கருத்தில் விளங்கும் அழகுக்கு ஒரு வரையறை கிடையாது ஆகும் என்று சொல்லும் வகையில் இவள் விளங்கி நின்றாள்;* ***கண்பிற பொருளில் செல்லா -*** *(இவளைப் பார்த்த) கண்கள் வேறு பொருட்களைப் பார்க்கப் போகா;* ***கருத்து எனின் அஃதே-*** *மனம் என்றாலும் அதுவும் வேறு தோன்றினும் அங்கே செல்லாது;****கண்ட பெண் பிறந்தேனுக்கு என்றால் என்படும் பிறருக்கு என்றாள் -*** *பெண்ணாகப்பிறந்த எனக்கு இந்நிலை உண்டானால் இவளைக் கண்ட ஆடவர்க்கு என்ன ஆகுமோ என வியந்து கூறினாள்.*

*இராமனின் அழகில் முதலில் ஈடுபட்ட சூர்ப்பணகை பெண்ணாம் சீதையின் அழகையும் கண்டு வியக்கிறாள். அவளது எல்லையில்லா அழகைக் கண்டு அழகைப் படைப்பவரின் குறைவினால் அன்றி அழகுக்கு எல்லை இல்லை எனக் கருதினாள். மேலும் அழகைப் படைக்கும் ஓவியன், சிற்பி, கவிஞன் போன்றவர்கள் கையாளும் கருவிப் பொருள்களாம்,வண்ணம், கல், சொல் போன்று படைப்பதற்கு எடுத்துக் கொள்ளும் எல்லைக்குள் அழகு உட்படும், ஆயின் அழகுக்கு எல்லை இல்லைஎன்பதுமாம்.*

*கண்ணின் வழியே அழகு கருத்தில் பதிகிறது. முன்னர்ப் பால காண்டத்தில் சீதையின் அழகு குறித்து 'அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றதே' (513) என்றும், சதானந்த முனிவன் கூற்றில் 'அழகு இவளைத் தவம் செய்து பெற்றது காண்' (683) என்றும் குறிக்கப் பெற்றுளது. 'கண் வாங்கு இருஞ் சிலம்பு' (கலி. 39.15) என்னும் அடிக்குப் பார்த்தவர்கள்கண்ணைத் தன்னிடத்தே வாங்கிக் கொள்ளும் கரியமலை' என நச்சினார்க்கினியர் உரையும் 'கண் பிற பொருளில் செல்லா' என்பதுடன் ஒப்பிடற்குரியது. பெண் பிறந்தேனுக்கு என்பதுடன் 'குழவிக்கோட்டு' எனும் சீவக சிந்தாமணிப் பாடலில் (165) விசயையின் அழகு புலப்படும் பிறையும் மதியும் கூடினபோல் அழகு கொண்ட நுதலும் முகமும் வாயும் முறுவலும் மூக்கும் உருப்பசியை உருக்குமே என வருவதையும் ஒப்பிடற் பாலது. பெண்ணாம் தனக்கே இந்நிலை எனில் ஆடவர் நிலையைக் கூற இயலாது என்று எண்ணுவாள்.*

*பெண் பிறந்தேனுக்கு என்றால் என்படும் பிறர்க்கு என்பது தொடர் நிலைச் செய்யுட் பொருட்பேறணி.*

***2792. பொரு திறத்தானை நோக்கி, பூவையை***
***நோக்கி, நின்றாள்;***
***'கருத மற்று இனி வேறு இல்லை;***

***கமலத்துக் கடவுள்தானே,***
***ஒரு திறத்து உணர நோக்கி, உருவினுக்கு,***
***உலகம் மூன்றின்***
***இரு திறத்தார்க்கும், செய்த வரம்பு இவர்***
***இருவர்' என்றாள்.***

***பொரு திறத்தானை நோக்கி*** - *போரில் வல்லமை பெற்ற இராமனைப் பார்த்து;* ***பூவையை நோக்கி நின்றாள்*** - *சீதையைக் கண்டு வியந்து நின்ற சூர்ப்பணகை;* ***கருத மற்று இனி வேறு இல்லை*** - *எண்ணிப் பார்க்க இனிமேல் வேறொன்றும் இல்லை; (யாதெனில்)****கமலத்துக் கடவுள் தானே*** - *தாமரை மலரில் விற்றிருக்கும் பிரமனும்;****ஒருதிறத்து உணர நோக்கி*** - *ஒப்பற்ற வகையில் ஆழ்ந்து நினைத்துப் பார்த்து;* ***உருவினுக்கு உலகம் மூன்றின்*** - *ஏற்றவடிவத்திற்கு இம் மூன்று உலகங்களிலும்;* ***இவர் இருவர் இருதிறத்தார்க்கும் செய்த வரம்பு என்றாள்*** - *இவர்கள் இருவரும் ஆடவர்பெண்டிர் ஆகிய இரு பாலர்க்கும் உண்டாக்கிய எல்லை ஆம் எனஎண்ணினாள்.*

*பூவை - நாகணவாய்ப் புள் போன்ற சொல்லையுடைய சீதை, ஆண் பெண் ஆகிய இரு வடிவத்தார்க்கும் பிரமன் படைத்த வரம்பாக இராமனும் சீதையும் அமைந்துள்ளனர். 'படைக்குநர் சிறுமை அல்லாமல் எண்பிறங்கு அழகிற்கு எல்லை இல்லை ஆம்' என முன்னர்க் (2791) காட்டியதற்கிணங்க 'வரம்பு இவர் இருவர்' என்றார்.*

*பூவை - உவமை ஆகுபெயர்.*

*2793.* ***'பொன்னைப்போல் பொரு இல் மேனி,***
***பூவைப் பூ வண்ணத்தான், இம்***
***மின்னைப்போல் இடையாளோடும் மேவும்***
***மெய் உடையன் அல்லன்;***
***தன்னைப்போல் தகையோர் இல்லா,***
***தளிரைப்போல் அடியினாளும்,***
***என்னைப்போல் இடையே வந்தாள்;***
***இகழ்விப்பென் இவளை' என்னா,***

***பூவைப்பூ வண்ணத்தான்*** - *காயாம்பூப் போன்று கரிய நிறத்தையும் உடைய இவன்;* ***பொன்னைப் போல் பொரு இல் மேனி இம் மின்னனைப் போல் இடையாளோடும் மேவும் மெய் உடையன் அல்லன்*** - *பொன் போன்று ஒப்புக் கூறுதற்கு இல்லாமல் ஒளிவீசும்உருவத்தையும் இந்த மின்னல் போன்ற நுண்ணிய இடையையும் உடைய இப்பெண்ணோடு மணந்த உடம்பை உடையவன் அல்லன் (இவன் கணவனல்லன்);* ***தன்னைப் போல் தகையோர் இல்லா*** - *தன்னைப் போல அழகு உள்ளவரைப் பெறாத ஒப்பற்ற;* ***தளிரைப் போல் அடியினாளும்*** - *இளந்தளிர் போன்ற மெல்லிய செவ்வடிகளை உடைய இப்பெண்ணும்;* ***என்னைப் போல் இடையே வந்தாள்*** - *என்னைப் போன்று (இவன் மேல் ஆசை கொண்டு) இடையில் வந்தவளாவள்;* ***இவளை இகழ்விப்பென் என்னா*** - *இகழும்படி செய்வேன் என்று எண்ணி,*

*தகையோர் - அழகியோர் என்பர். தகுதி உடையோர் எனவும் உரைப்பர். தன்னைப் போல் தகைப் படாதவர் (அடக்கப் படாதவர்) என்று சூர்ப்பணகை தன்னியல்புக்கு ஏற்பச் சீதை குறித்தும் எண்ணினாள் என்பர். பொன் மேனியும் காயாம் பூ போன்ற மேனியும் உடைய இவர் நிறத்தால் வேறுபட்டிருப்பதால் மணம் புரிந்தவர்களாக இருத்தல் இயலாது என எண்ணினாள். கரிய நிறம் கொண்ட தான் கரிய நிற இராமனுக்கு ஏற்றவள் என்பது இதனால் குறிப்பாக வெளிப்படும். எனினும் சீதையின் மெல்லிய தன்மையை உணர்ந்தும் தன்போல் இடையே வந்தவளாதலின் அவளை இகழ்ச்சியுறச் செய்து இராமனிடமிருந்து இவளை நீக்குவேன் என எண்ணும் உள்ளத்தில் பொறாமையும் அதனால் பிறர் பழி கூறும் தீய பண்பும் புலப்படும்.*
*62 சூர்ப்பணகை, சீதையை அரக்கி எனல்*

***2794. 'வரும் இவள் மாயம் வல்லள்;***
***வஞ்சனை அரக்கி; நெஞ்சம்***
***தெரிவு இல; தேறும் தன்மை, சீரியோய்!***
***செவ்விது அன்றால்;***
***உரு இது மெய்யது அன்றால்; ஊன்***
***நுகர் வாழ்க்கையாளை***
***வெருவினென்; எய்திடாமல் விலக்குதி,***
***வீர!' என்றாள்.***

***சீரியோய்! வீர்!*** *- நற்பண்பும் செய்கையும் உடையவனே! வீரனே!;* ***வரும் இவள் மாயம் வல்லள்*** *- (உன்னிடம்) வரும் இப்பெண் மாயையில் தேர்ச்சி பெற்றவள்;* ***வஞ்சனை அரக்கி*** *- வஞ்சகத் தன்மை கொண்ட இராக்கதப் பெண் ஆவாள்;* ***நெஞ்சம் தெரிவு இல*** *- இவள் எண்ணங்கள் அறிய முடியாதவை;* ***தேறும் தன்மை செவ்விது அன்று*** *- இவளை நல்ல பெண் எனத் துணியும் இயல்பு நல்லது அன்று;* ***உரு இது மெய்யது அன்று*** *- இவள் கொண்ட இவ் அழகிய உருவமும் உண்மை அன்று;* ***ஊன்நுகர் வாழ்க்கையாளை வெருவினென்*** *- தசையை உண்டு வாழும் வாழ்க்கையையுடைய இவளைக் கண்டு அஞ்சினேன்;* ***எய்திடாமல்விலக்குதி என்றாள்*** *- அருகே வராமல் இவளைத் தடுத்து அப்பால் செலுத்துவாய் எனக் கூறினாள்;* ***ஆல்*** *- அசை.*

*முன்னரே சூர்ப்பணகையை 'மெய்இலாள்' (2774) என்றும் 'பொய்ம் மகள்' (2778) என்றும் கூறியதற்கேற்ப இங்குச் சீதையையே இராமனிடம் மாயம் வல்லள், வஞ்சனை அரக்கி, ஊன் நுகர் வாழ்க்கையாள் எனப் பொய்யாகச் சூர்ப்பணகை பழி கூறுகின்றாள். தன்னை இராமன் 'எயிறுடை அரக்கி, எவ்வுயிரும் இட்டது ஓர் வயிறுடையாள் என மறுக்கும்' என (2760) எண்ணித் தன் வடிவை மாற்றிக் கொண்ட 'வஞ்சமகள்' (2762) சூர்ப்பணகை ஆதலால் சீதையை அவ்வாறு கூறி இராமன் வெறுக்குமாறு செய்ய வழி காண்கிறாள். மேலும் அஞ்சுகிற பெண்களுக்கு அபயம் கொடுப்பதே வீரரின் பண்பாகும். எனவே இராமனை 'வீர' என விளிக்கிறாள் 'சீரியோனாம்' இராமன் மெய்யில் உருவு கொண்டவளை நல்லவள் எனக் கொள்வது அவன் பண்புக்கு ஏற்ற தன்று எனவும் குறிப்பால் சுட்டுவாள்.*

*வெருவினென் - இறந்த கால வினைமுற்று நிகழ்காலப் பொருளில் வந்தது, கால வழுவமைதி.*

***2795. 'ஒள்ளிது உன் உணர்வு; மின்னே! உன்னை***
***ஆர் ஒளிக்கும் ஈட்டார்?***
***தெள்ளிய நலத்தினால், உன் சிந்தனை***
***தெரிந்தது; அம்மா!***
***கள்ள வல் அரக்கி போலாம் இவளும்?***
***நீ காண்டி' என்னா,***
***வெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட,***
***வீரன் நக்கான்.***

***வீரன் -** வீரனாம் இராமன்; **மின்னே -** மின்னல் போன்ற பெண்ணே!; **உன் உணர்வு ஒள்ளிது -** உன்னுடைய அறிவு ஒளி மிக்கது; **உன்னை ஆர் ஒளிக்கும் ஈட்டார் -** உன்னை யார் வஞ்சித்து மறையும் ஆற்றல் உள்ளவர்?; **தெள்ளிய நலத்தினால் உன் சிந்தனை தெரிந்தது -** தெளிவான உன் அறிவுச் சிறப்பால் உன் ஆலோசனை இவ்வுண்மையை அறிந்தது; **அம்மா -** இது வியப்பாம்; **இவளும் கள்ளவல் அரக்கி போலாம் நீ காண்டி -** இங்கு வரும் இப் பெண் திருட்டுத்தனமிக்க கொடிய இராக்கதப் பெண் போலும் நீ இவளை நன்கு பார்; **என்னாவெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட நக்கான் -** என்று கூறி வெண்மையான தன் பற்களாம் முத்துக்கள் வெளியே தோன்றச் சிரித்தான்.*

*ஒள்ளிது - சிறப்புடையது எனவுமாம். இதனைக் கன்னட மொழிச் சொல் என்பர். ஈட்டார் - வலிமையுடையார். காண்டி - நீயே குறிப்பாகப் பார்த்துக் கவனித்துக் கொள் எனும் குறிப்புப் பொருள் கொண்டது. உண்மையில் இராமன் சூர்ப்பணகையே அறியாமை உடையவள்; அறிவுத் தெளிவு இல்லாதவள்; சீதை உண்மையில் அரக்கி அல்லள் - என்றபொருள்பட எதிர்மறையாகக் கூறி அவளை வஞ்சப் புகழ்ச்சி செய்தான். இது இராமனின் 'உண்டாட்ட'த்தின் (2787) கொடு முடியாகும். இராமன் புன் சிரிப்பை முதலில் 'அகத்துறு நகையின் வெள்ளைக் குருத்து' எனவும் (2782) 'வாள் எயிறு இலங்க நக்கான்' எனவும் (2787) கூறி இங்கு 'வெள்ளியமுறுவல் முத்தம் வெளிப்பட வீரன் நக்கான்' எனக் கூறியதால் இராமனின் நகையுணர்வின் வளர்நிலை செயல் விளக்கமாகப் புலப்படும்.*

*அம்மா - வியப்பிடைச் சொல். போல் - அசைநிலை ஒப்பில் போலி எனவுமாம். இப்பாடலில் வஞ்சப் புகழ்ச்சி அணி உளது.*

*சீதையைச் சூர்ப்பணகை வெகுளலும், இராமன் அவளைக் கடிதலும்*

***2796. ஆயிடை, அமுதின் வந்த, அருந்ததிக்***
***கற்பின் அம் சொல்***
***வேய் இடை தோளினாளும், வீரனைச்***
***சேரும் வேலை,***
***'நீ இடை வந்தது என்னை? நிருதர்தம்***

*பாவை!' என்னா,*
*காய் எரி அனைய கள்ள*
*உள்ளத்தாள் கதித்த லோடும்.*

***ஆயிடை -*** *அந்த நேரத்தில்;* ***அமுதின் வந்த அருந்ததிக் கற்பின் அம் சொல் வேய்இடை தோளினாளும் -*** *தேவரமுது போல் வந்த அருந்ததிபோல் கற்பின் சிறப்பையும் அழகிய இனிய சொற்களையும்மூங்கில் பின்னிடும் படி அழகிய தோள்களையும் உடைய சீதை;* ***வீரனைச் சேரும் வேலை -*** *வீரனாம் இராமனை அணுகும் போது;* ***நிருதர் தம்பாவை நீ இடை வந்தது என்னை -*** *அரக்கர் பெண்ணே! எங்களுக்கு இடையில் நீ குறுக்கிட்டது ஏன்;* ***என்னா காய் எரி அனைய கள்ள உள்ளத்தாள் கதித்தலோடும் -*** *என்று கூறிப் பற்றி எரியும் தீப் போன்ற வஞ்சக எண்ணத்தாளாம் சூர்ப்பணகை சினந்து வேகமாக வந்ததும்.*

*அமுதின் வந்த - திருப்பாற் கடலில் அமுதத்துடன் தோன்றிய (திருமகளாம் சீதை) எனவும் ஆம். அமுதின் வந்த அம் சொல் எனக் கூட்டுவாரும் உளர். கிட்கிந்தா காண்டத்தில் தாரையைப் பற்றிக் கூறும்போது 'ஆயிடை, தாரை என்று அமிழ்தின் தோன்றிய வேயிடைத் தோளினாள்' (3956) என்பார். அதனை இங்கு ஒப்பிடற் பாலது 'அருந்ததிக் கற்பு' என இங்குக் கூறியது போன்றே வனம் புகு படலத்தில் இராமன் சீதையை அருந்ததி அனையாளே' (2006) என விளிப்பான். வேலை - சமயம், பொழுது, காலம். கதித்தல் - விரைந்து செல்லல். சீதையை அமுது என்பதால் சூர்ப்பணகை தீய நஞ்சாகிறாள். இரண்டும் முரண்பட இங்கு அமையும் நாடகப் பாங்கு சுவைத்தற்குரியது.*

*ஆயிடை - அகரச் சுட்டு செய்யுள் விகாரமாய் நீண்டது. பாவை - அண்மை விளி இது இயல்பாய் நின்றது.*

*2797. அஞ்சினள்; அஞ்சி அன்னம், மின்*
*இடை அலச ஓடி,*
*பஞ்சின் மெல் அடிகள் நோவப்*
*பதைத்தனள்; பருவக் கால*
*மஞ்சிடை வயங்கித் தோன்றும்*
*பவளத்தின் வல்லி என்ன,*
*குஞ்சரம் அனைய வீரன் குவவுத்*
*தோள் தழுவிக் கொண்டாள்.*

***அஞ்சினள் -*** *(சூர்ப்பணகை அருகே வரக்கண்டு) அச்சமுற்றவளாம் சீதை;* ***அஞ்சி அன்னம் மின் இடை அலச ஓடி -*** *அச்சுற்று அன்னப் பறவை தன் மின்னல் போன்ற இடை தள்ளாட ஓடிச் சென்று;* ***பஞ்சின் மெல் அடிகள் நோவப் பதைத்தனள் -*** *பஞ்சுபோலும் மென்மையான பாதங்கள் வருத்தத் துடித்தவளாய்;* ***பருவக்கால மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி என்ன -*** *கார் காலத்தில் தோன்றும் கரிய மேகத்திடையே தோன்றும் சிவந்த பவளக்கொடி போல;* ***குஞ்சரம் அனைய வீரன் குவவுத் தோள் -*** *யானை போன்ற வீரனாம் இராமனின் திரண்ட தோள்களை;* ***தழுவிக் கொண்டாள் -*** *அணைத்துக் கொண்டாள்.*

*இடைக்கு மின்னல் உவமையாம் நுட்பமும் ஒளி வீசும் தன்மையாலும் ஒப்பாம். அலசல் - தள்ளாடுதல் மந்திரப் படலத்தில் இராமனை வேண்டும் தயரதன் 'ஐய! சாலவும் அலசினென்' (1374) என்பான் இப்பொருள்பட இராமனுக்குக் கார் கால மேகமும் சீதைக்குப் பவள வல்லியும் ஒப்பாம்.அச்சத்தால் விளையும் செயலைக் கூறிச் சீதை இராமனைத் தழுவும் பாங்கில் அது அடைக்கலம் பூணும் நிலையை உணர்த்தும். மேகம் கடல் நீரைப் பருகிய போது பவளக் கொடியும் சேர்ந்து வந்தது என்பாருமுளர். இது இல்பொருளுவமை அணி.*

***2798. 'வளை எயிற்றவர்களோடு வரும்***
***விளையாட்டு என்றாலும்,***
***விளைவன தீமையே ஆம்' என்பதை***
***உணர்ந்து, வீரன்,***
***'உளைவன இயற்றல்; ஒல்லை உன்***
***நிலை உணருமாகில்,***
***இளையவன் முனியும்; நங்கை! ஏகுதி***
***விரைவில்' என்றான்.***

**வளை எயிற்றவர்களோடு வரும் விளையாட்டு என்றாலும் -** *வளைந்த கோரப் பற்களை உடைய இராக்கதருடன் விளையாட்டு நேர்வதானாலும்;* ***தீமையே விளைவன ஆம் என்பதை உணர்ந்து -*** *உண்டாகும் பயன் தீங்கே என அறிந்து;* ***வீரன் -*** *இராமன்;* ***உளைவன இயற்றல் -*** *துன்பம் தரும் செயல்களைச் செய்யாதே;* ***ஒல்லை உன் நிலை உணருமாகில் -*** *விரைவில் உனது நிலையை அறிவானானால்;* ***இளையவன் முனியும் -*** *(என்) தம்பி (இலக்குவன்) கோபிப்பான்;* ***நங்கை விரைவில் ஏகுதி என்றான் -*** *பெண்ணே விரைவாகச் செல்வாய் என்று சொன்னான்.*

*அரக்கரோடு விளையாட்டாகச் செயலைச் செய்தாலும் அது தீமையாக முடியும். 'இன்பக் காரணமாம் விளையாட்டினுள் துன்பக் காரணமாய்த் துறப்பித்திடும்' என்ற சிந்தாமணிச் செய்யுளுக்குக் (சிந்தா. 909) 'கடுநட்புப் பகை காட்டும்' என்னும் பழமொழி என நச்சினார்க்கினியர் எழுதியஉரையும் இங்கு எண்ணத் தக்கது. முன்னர் மந்தரையின் கூன் முதுகில் விளையாட்டுக்கென உண்டை செலுத்தி அதனால் அரசினை விட்டுக் காடு வந்ததையும் இது நினைப்பிக்கும். 'பண்டை நாள் இராகவன் பாணிவில் உமிழ் உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உன்னுவாள் (1447) என வருதல் காண்க. 2794 ஆம் பாடல் முதல் 2798 ஆம் பாடல் வரை இராமன் 'வீரன்' எனவே சுட்டப்படுவது எண்ணத்தக்கது. குறிப்பாகப் பிறன் மனை நோக்காத பேராண்மை'யை (குறள். 148) இது குறிக்கிறது எனலாம். இலக்குவன் முனியும் செயல் பின் வருதலை இப்பாடல் முன்னரே அறிவிக்கிறது எனலாம்.*

***2799. பொற்புடை அரக்கி, 'பூவில்,***
***புனலினில், பொருப்பில், வாழும்***
***அற்புடை உள்ளத்தாரும், அனங்கனும்,***
***அமரர் மற்றும்,***

***எற் பெறத் தவம் செய்கின்றார்; என்னை***
***நீ இகழ்வது என்னே,***
***நல் பொறை நெஞ்சில் இல்லாக்***
***கள்வியை நச்சி?' என்றாள்.***

**பொற்புடை அரக்கி -** *அழகிய வடிவைக் கொண்ட அரக்கியாம்சூர்ப்பணகை;* **பூவில் புனலினில் பொருப்பில் வாழும் அற்புடை உள்ளத்தாரும் அனங்கனும் மற்றும் அமரர் -** *தாமரை மலரிலும் பாற்கடலிலும் கயிலை மலையிலும் வாழ்கின்ற என்பால் அன்பு கொண்ட மனமுள்ள நான்முகன், திருமால், சிவன் ஆகியோரும் மன்மதனும் பிற தேவர்களும்;* **எற்பெறத்தவம் செய்கின்றார் -** *என்னை மணக்கத் தவம் செய்து வருகின்றனர்;* **நல்பொறை நெஞ்சில் இல்லா கள்வியை நச்சி -** *நன்மை தரும் பொறுமையை மனத்தில் கொள்ளாத இவ்வரக்கியை விரும்பி;* **என்னை நீ இகழ்வது என்னே என்றாள் -** *என்னை நீ புறக்கணிப்பது எக்காரணம் பற்றியோ? எனக் கேட்டாள்.*

*மூவரையும் தேவரையும் கருதாமல் உன்னை நாடி வந்த என்னை நீ புறக்கணிப்பது சரியன்று எனச் சூர்ப்பணகை இராமனுக்கு உணர்த்தவிரும்பினாள். பூவில் என்பதற்கு நிலவுலகில் வாழும் மாந்தரும், புனலில் என்பதற்கு நீரர மக்களும், மலையில் என்பதற்கு மலையில் வாழும் வித்தியாதரரும் எனப் பொருள் கூறுவாரும் உளர். சீதையை நல்பொறை நெஞ்சில் இல்லாக் கள்வி எனக் கூறியது இராமன் உளத்தில் அவளது தீய பண்பைக் கூறி விலக்க நினைத்ததாம். இதனால் தானே கள்வி என்பதையும் உணர்த்தி நிற்கிறாள். இதுவே நாடக அங்கதமாகும். அற்பு - அன்பு என்பதன் திரிந்த வடிவம்.*

***2800. 'தன்னொடும் தொடர்வு இலாதேம்***
***என்னவும் தவிராள்; தான்இக்***
***கல் நெடு மனத்தி சொல்லும், கள்ள***
***வாசகங்கள்' என்னா,***
***மின்னொடு தொடர்ந்து செல்லும்***
***மேகம்போல், மிதிலை வேந்தன்***
***பொன்னொடும் புனிதன் போய், அப்***
***பூம் பொழிற் சாலை புக்கான்.***

**இக்கல் நெடு மனத்தி தன்னொடும் -** *இந்தக் கல் போன்ற கடின மனம் கொண்ட இவளோடும்;* **தொடர்வு இலாதேம் என்னவும் தவிராள் -** *எத்தகைய தொடர்பும் இல்லாதவர் எனக் கூறியும்;* **தான் -** *இவள் தானும்,* **கள்ள வாசகங்கள் சொல்லும் என்னா -** *வஞ்சகச் சொற்களை இவள் மேலும் சொல்லுவாள் என்று எண்ணி;* **புனிதன் -** *தூயோனாம் இராமன்;* **மின்னொடு தொடர்ந்து செல்லும் மேகம் போல் -** *மின்னல் பின்னே தொடர மேகம் முன்னே செல்வது போல்;* **மிதிலை வேந்தன் பொன்னொடும் போய் அப்பூம் பொழிற் சாலை புக்கான் -***மிதிலை மன்னனாம் சனகனின் மகள் சீதையுடன்சென்று அந்த அழகிய சோலையிலுள்ள பன்ன சாலைக்குள் புகுந்தான்.*

*கல் நீரிலே கிடப்பினும் அதன் ஈரத்தைப் பெறாதிருக்கும் அது போல் அரக்கரும் இரக்கமற்ற பண்பினராம். 'வைகலும் நீருட்கிடப்பினும் கல்லிற்கு மெல்லென்றல் சால*

*அரிதாகும் - அஃதே போல வைகலும் நல்லறம்கேட்பினும் கீழ்கட்குக் கல்லினும் வல்லென்னும் நெஞ்சு' (அறநெறிச் சாரம் 51) என்ற பாடலின் கருத்தை இத்துடன் ஒப்பிடலாம்.*

*தொடர்பு இலாதேம் குலம், கல்வி, பிறப்பு, பண்பு முதலிய எவ்வகையிலும் தொடர்பு இல்லாதவர்கள். கள்ள வாசகங்கள் - வஞ்சகச் சொற்கள். மின்னலும் மேகமும் இணைந்த கருத்தினை ஒட்டி முன்னரே 'பருவக்கால மஞ்சிடை வயங்கித் தோன்றும் பவளத்தின் வல்லி' (2797) என வருதல் காண்க. மிதிலையை மிதி என்ற மன்னன் ஆண்டதால் அந்நகருக்கு இப்பெயர் வந்தது. பொன் - தன்மையாலும் அருமையாலும் சுடச் சுட ஒளிர்வதாலும் சீதைக்கு ஒப்பாயிற்று. பிற மாதரைச் சிந்தையாலும் தீண்டாததால் இராமன் புனிதன் எனப்பட்டான். இதில் உவமை அணி உளது.*

*சூர்ப்பணகை மனம் நைந்து ஏகுதல்*

***2801. புக்க பின், போனது என்னும் உணர்வினள்;***
***பொறையுள் நீங்கி***
***உக்கது ஆம் உயிரள்; ஒன்றும்***
***உயிர்த்திலள்; ஒடுங்கி நின்றாள்;***
***தக்கிலன்; மனத்துள் யாதும் தழுவிலன்;***
***சலமும் கொண்டான்;***
***மைக்கருங் குழலினாள்மாட்டு அன்பினில்***
***வலியன்' என்பாள்.***

***புக்கபின் -*** *(இராமனும் சீதையும் பன்னசாலையுள்) சென்ற பின்னர்;* ***போனது என்னும் உணர்வினள் -*** *போயிற்று என்று கூறுதற்குரிய அறிவு நீங்கியவளாய்;* ***பொறையுள் நீங்கி உக்கது ஆம் உயிரள் -*** *உடம்பிலிருந்து நீங்கி உதிர்த்து விட்டதான உயிர் உடையவளாய்;* ***ஒன்றும் உயிர்த்திலள் ஒடுங்கி நின்றாள் -*** *சிறிதும் மூச்சு விடவும் மாட்டாமல் ஒடுங்கி நின்று;* ***தக்கிலன் மனத்துள் யாதும் தழுவிலன் -*** *மனத்தில் தகுதிக் குணமில்லாதவனும் (காமுற்ற என்னிடம்) யாதொரு உதவி செய்யாதவனுமாகி;* ***சலமும் கொண்டான் -*** *தணியாச் சினம் கொண்டுள்ளான்;* ***மைக்கருங் குழலினாள் மாட்டு அன்பினில் வலியன் என்பாள் -*** *மை போன்ற கரிய கூந்தலுடையவளிடத்து (இவன்) அன்பு காட்டுவதில் உறுதியுள்ளவன் என்று எண்ணியவளாய்.*

*பொறை - சுமை போலுள்ள உடல், உயிரைப் பொறுத்துக் கொண்டுள்ள உடல் எனலும் ஆம். தக்கிலன் - தகவிலன் (திருக்கோவையார் 376 கொளு). சலம் - தணியாச் சினம். அன்பினில் வலியன் - தளராத அன்புடையவன் எனலுமாம். இராமன் பன்ன சாலைக்குள் சென்றவுடன் அறிவு ஒழிய, உயிர்ப்பு ஒடுங்க, செயல், அடங்க, உயிர் நீங்கினாற் போன்று மூர்ச்சித்துப் பின் தெளிந்து பலவாறு எண்ணினாள். இது சூர்ப்பணகையின்உடலும் மனமும் பட்ட துன்பத்தைக் காட்டும். காமவேதனை மிக்க சூர்ப்பணகைக்கு வலிமையற்ற நிலையில் தன் உடம்பும் தாங்கமாட்டாத பெரும் சுமையாகத் தோன்றியதால் உடம்பைப் பொறை என்று குறித்தார்.*

***2802. நின்றிலள்; அவனைச் சேரும்***
***நெறியினை நினைந்து போனாள்;***
***'இன்று, இவன் ஆகம் புல்லேன்எனின்,***
***உயிர் இழப்பென்' என்னா,***
***பொன் திணி சரளச் சோலை,***
***பளிக்கறைப் பொதும்பர் புக்காள்;***
***சென்றது, பரிதி மேல் பால்; செக்கர்***
***வந்து இறுத்தது அன்றே.***

***நின்றிலள் அவனைச் சேரும் நெறியினை நினைந்து போனாள் -*** *(சூர்ப்பணகை) அங்கு நிற்காமல் இராமனைத் தான் அடைந்து பெறும் வாழ்வை எண்ணி அவ்விடம் விட்டுச் சென்றவள்;* ***இன்று இவன் ஆகம் புல்லேன் எனின் உயிர் இழப்பென் என்னா -*** *இன்று நான் இவன்மார்பைத் தழுவவில்லை என்றால் என் உயிரை விடுவேன் என்று எண்ணி;* ***பொன் திணி சரளச் சோலை பளிக்கறைப் பொதும்பர் புக்காள் -*** *பொன் அடர்ந்துள்ள தேவதாரு மரங்கள் நிறைந்த சோலையைக் கடந்து பளிங்கு மண்டபம் அமைந்த சோலையுள் புகுந்தாள்;* ***பரிதி மேல் பால் சென்றது -*** *கதிரவன் மேற்றிசையில் சென்று மறைந்தான்;* ***செக்கர் வந்து இறுத்தது -*** *அங்குச் செவ்வானம் வந்து சேர்ந்தது* ***அன்று, ஏ -*** *அசைகள்.*

*ஆகம் - உடல் எனலும் ஆம். இராமனைச் சேராவிடில் உயிர் இழப்பேன் எனக் கூறியது கொண்டு சூர்ப்பணகையின் விரக வேதனை புலப்படும். பளிக்கு அறை எனக் கொண்டு பளிங்குப் பாறை என்பாருமுளர். 'அகலறை' என்பதற்கு அகன்ற பாறை என நச்சினார்க்கினியர் உரை காண்பர் (மலைபடு கடாம், 133) திருமால் வீற்றிருக்கும் நூற்றெட்டுத் தலங்களில் திருவெள்ளறை என்ற தலத்தில் வெண்பாறையில் கோயில் அமைந்திருப்பதையும் சான்று கூறுவர். சூர்ப்பணகையின் ஒரு தலைக் காமம் மேலும் பெருகுதற்கு மாலை நேரமும் செவ்வானமும் துணை செய்கின்றன. பொதும்பர் என்பதைக் குறுங்காடு எனவும் கூறுவர்.*
*சூர்ப்பணகையின் காமத் தீ*

*கலி விருத்தம்*

***2803. அழிந்த சிந்தையளாய் அயர்***
***வாள்வயின்,***
***மொழிந்த காமக் கடுங்***
***கனல் மூண்டதால்-***
***வழிந்த நாகத்தின் வன்***
***தொளை வாள் எயிற்று***
***இழிந்த கார் விடம்***
***ஏறுவது என்னவே.***

***வழிந்த நாகத்தின் வன் தொளை வாள் எயிற்று*** - *மேலே வெளிப்பட்டுப் பெருகிய நாகப்பாம்பின் வலிய தொலையுள்ள ஒளி பொருந்திய நச்சுப் பல்லிலிருந்து;* ***இழிந்த கார்விடம் ஏறுவது என்ன*** - *இறங்கிய கரிய நஞ்சு தலைக்கு ஏறியது போல;* ***அழிந்த சிந்தையளாய் அயர் வாள் வயின்*** - *அழிந்து போன மனமுடையவளாய் சோர்வுற்ற சூர்ப்பணகையினிடத்து;* ***மொழிந்த காமக் கடுங் கனல் மூண்டது*** - *முன்கூறிய காமமாம் பெருநெருப்பு மிகுந்து எரிந்தது.* ***ஆல், ஏ*** *-அசைகள்.*

*சூர்ப்பணகை கொண்ட காமத் தீ மூண்டெரிந்தது என்பதை நாலடியாரில் காணும் ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு நீருள் குளித்தும் உயலாகும் - நீருட் குளிப்பினும் காமம் சுடுமே குன்றேறி ஒளிப்பினும் காமம் சுடும் (90) என்ற பிறன்மனை நயவாமை அதிகாரத்திலுள்ள பாடலுடன் ஒப்பிடத் தகும். சூர்ப்பணகை பிறள் கணவனை நயந்தமை இங்கு எண்ணத்தக்கது. 'நாகத்தின்' வன்தொளை வாள் எயிறு' என்பதற்கு ஏற்ப முன்னர் அயோத்தியா காண்டத் தைலம் ஆட்டு படலத்தில் (1921) 'மான அரவின் வாய்த் தீயவளை வான்தொளைவாள் எயிற்றின் வழி ஆன கடுவுக்கு' எனக் காட்டுவார். நஞ்சின் கொடுமையைக் காமத்துடன் ஒப்பிட்டுக் காட்டும் வகையில் இப்படலத்திலே 'நஞ்சு நக்கினர் போல நடுங்குவாள்' (2817) என மீண்டும் உரைப்பார்.*

***2804. தாடகைக் கொடி யாள்***
***தட மார்பிடை,***
***ஆடவர்க்கு அரசன் அயில்***
***அம்பு போல்,***
***பாடவத் தொழில் மன்மதன்***
***பாய் கணை***
***ஓட, உட்கி, உயிர்***
***உளைந்தாள் அரோ!***

***தாடகைக் கொடியாள்*** - *தாடகை எனும் கொடிய அரக்கியின்;* ***தடமார்பிடை*** - *பெரிய மார்பினிடத்து;* ***ஆடவர்க்கு அரசன் அயில் அம்பு போல்*** - *ஆண்களுக்கு எல்லாம் அரசனாம் இராமனின் கூர்மையான அம்பு சென்று பாய்ந்தது போன்று;* ***பாடவத் தொழில் மன்மதன் பாய்கணை ஓட*** - *திறமிக்க காமப் போர் வினை புரியும் மன்மதனின் பாய்கின்ற அம்புகள் (சூர்ப்பணகை) மார்பில் தைக்க; (அதனால்)* ***உட்கி உயிர் உளைந்தாள்*** - *அஞ்சி உயிர் வருந்தினாள்.* ***அரோ*** - *அசை.*

*கொடியாள் - இராவணனின் வெற்றிக் கொடி போன்றவள் எனலுமாம். இராமபாணம் தாடகையைக் கொன்ற போது 'தலைகள் தோறும் முடியுடைஅரக்கற்கு, அந்நாள், முந்தி உற்பாதம் ஆக, படியிடை அற்று வீழ்ந்த வெற்றி அம்பதாகை ஒத்தாள்' (390) என்ற வரிகளால் இதன் விளக்கம் கிட்டும் ஆடவர்க்கு அரசன் - புருடோத்தமன். அயில் அம்பு - அரத்தால் அராவிக் கூராக்கிய அம்பு ஆம். பாடவம் என்ற சொல்லுக்கு வல்லமை, களிப்பு, இன்பம், பெருமை எனப் பல பொருள் கூறலாம். இதற்கு மதிப்பு எனக் கூறும் பழையவுரை. மன்மதன் - மனத்தைக் கலக்கி வருத்துபவன் என்ற பொருளுக்கு ஏற்ப 'உட்கி உயிர் உளைந்தாள்' என்பார். தாடகை மீது இராமன் செலுத்திய அம்பு போல் மன்மதன் சூர்ப்பணகை மீது தன் அம்புகளைச் செலுத்தினான்.*

காப்பிய நிகழ்ச்சியே உவமையாக இங்கு வந்தது சுவையை மிகுவிக்கிறது.

உயிர் உளைந்தாள் - வழுவமைதி.

***2805. கலை உவா மதியே கறி***
***ஆக, வன்***
***சிலையின் மாதனைத் தின்னும்***
***நினைப் பினாள்,***
***மலையமாருத மா நெடுங்***
***கால வேல்***
***உலைய மார்பிடை ஊன்றிட,***
***ஓயு மால்.***

***கலை உவா மதியே கறி ஆக -*** பதினாறு கலைகள் நிறைந்த முழு மதியே உணவுக்குத் தொடு கறி ஆக; ***வன் சிலையின் மாரனைத் தின்னும் நினைப்பினாள் -*** வலிய கரும்பு வில்லையுடைய மன்மதனை உண்ணும் எண்ணமுடையவளானாள் சூர்ப்பணகை; ***மலைய மாருதமா நெடுங் காலவேல் உலைய -*** பொதிகைத் தென்றல் பெரிய நீண்ட யமனின் சூலம் வருந்தும்படி; ***மார்பிடை ஊன்றிட ஓயும் -*** தன் மார்பிலே அழுந்தித்தைக்கச் செயலற்றவளாய் ஒடுங்கினாள். ***ஆல் -*** அசை.

உவா - அமாவாசை பௌர்ணமி இரண்டிற்கும் உரியது. மதி எனத் தொடர்ந்து வந்ததால் இது பௌர்ணமியைச் சுட்டிற்று. கறி - கறிக்கப்படுவது. இதற்கு 'அரிமா கொடிப்புல் கறிக்குமோ' (நாலடி. 141) என்ற தொடரை ஒப்பிடலாம். கரி எனப் பாடம் கொளின் சான்றுமாம். காமன் வில்லாம் கரும்பு மெல்லியது எனினும் காமமூட்டும் செயலால் வலியதாயிற்று. தென்றலும் மதியும் காமுற்றோரை வருத்தும் என்பது நூன் மரபு. அரக்க குணத்திற்கேற்பத் தன்னைத் துன்புறுத்தும் மதியைத் தின்னச் சூர்ப்பணகை எண்ணும் போதே தென்றலாம் சூலம் அவளைச் சாய்த்தது. ஒன்றைச் செய்ய நினைக்கும் போது மற்றொரு செயல் அதனைச் செய்ய விடாமல் தடுக்கும் என்பதை இந்நிலை காட்டும். இவ்வாறே பின்னும் தொடர்ந்து காணப் பெறும். பஞ்சவடியில் இராமனைச் சூர்ப்பணகை கண்டது முழுநிலாக் காலம் என்பது இதனால் புலனாம். தென்றல் சூலமாக உருவகம் செய்யப்பட்டதால் உருவக அணி இப் பாடலில் அமைந்துள்ளது.

*2806   அலைக்கும் ஆழி அடங்கிட,*
*அங் கையால்,*
*மலைக் குலங்களின், தூர்க்கும்*
*மனத் தினாள்;*
*நிலைக்கும் வானில் நெடு மதி*
*நீள் நிலா*
*மலைக்க, நீங்கும் மிடுக்கு*
*இலள்; மாந்துவாள்.*

***அலைக்கும் ஆழி அடங்கிட*** - *தன்னை வருத்தும் கடல் ஓசையின்றி அடங்கிப்போக;* ***அங்கையால் மலைக் குலங்களின் தூர்க்கும் மனத்தினாள்*** - *தன் உள்ளங்கையால் மலைக் கூட்டங்களைக் கொண்டு வற்றச் செய்யும் எண்ணம் கொண்டவளானாள்; (ஆனால்)* ***வானில்நிலைக்கும் நெடுமதி*** - *ஆகாயத்தில் விளங்கும் முழுமதி;* ***நீள் நிலா மலைக்க*** - *நீண்டு பரவிய நிலவொளி எதிர்த்து அழித்தலால்;* ***நீங்கும் மிடுக்கு இலள் மாந்து வாள்*** - *தப்பும் வலிமை குறைந்தவளாய் மனம் வருந்துவாள்.*

*அலைக்கும் ஆழி - அலை வீசும் கடலுமாம். அலை ஓசை காமுற்றவரைத் தூங்க விடாமல் வருத்தும். அதனால் கடல் நீரைத் தூர்க்கவும் மலைகளைத் தன் உள்ளங்கையால் எடுத்துப் போட்டு அடக்கவும் எண்ணினாள். நிலாவோ கடலில் தோன்றிய உறவுமுறை உடையது. எனவே தன் தாயாம் கடலைச் சூர்ப்பணகை தூர்க்காமல் காக்கத் தன் நிலவால் அவளுடன் மலைத்தது. தாயைக் காக்க மகன் போர் புரியும் செயல் இங்கு நினைத்தற்குரியது.*

*'நீள் நிலா வலைக்கு நீங்கும்' என்ற பாடம் ஓதி அதற்கு நீண்டு பரவியுள்ள நிலாவாகிய வலையிலிருந்து தப்பிச் செல்லும் எனப் பொருள் காண்பர். இப்பாடலில் முன்னர்த் தப்பிய முழுமதி (2805) கடலைத் தூர்க்கச் சூர்ப்பணகையின் செயலைத் தடுத்தது என்பது எண்ணுதற்குரியது.*

*2807.  'பூ எலாம் பொடி ஆக,*
*இப் பூமியுள்*
*கா எலாம் ஒடிப்பென்'*
*என, காந்துவாள்;*
*சேவலோடு உறை செந்*
*தலை அன்றிலின்*
*நாவினால் வலி எஞ்ச,*
*நடுங்கு வாள்.*

***பூ எலாம் பொடி ஆக*** - *மலர்கள் யாவையும் காய்ந்து பொடியாய் உதிரும்படி;* ***இப்பூமியுள் கா எலாம் ஒடிப்பென் என(க்) காந்து வாள்*** - *இந்த நிலவுலகில் உள்ள சோலைகளையெல்லாம் ஒடித்து அழிப்பேன் என்று சினம் கொள்வாள்;* ***சேவலோடு உறை செந்தலை அன்றிலின் நாவினால்*** - *(ஆனால்)தன் ஆணோடு சேர்ந்து தங்கும்*

*சிவந்த தலையையுடைய அன்றில் பறவையின் (மகிழ்ந்த) நாவின் குரலால்;* ***வலி எஞ்ச நடுங்குவாள்*** *-தன் பலம் குறைய அஞ்சி நடுக்கம் கொண்டாள் (சூர்ப்பணகை)*

*பூவெலாம் பொடியாக நினைப்பதற்குக் காரணம் மன்மதன் பூக்களாம் அம்புகளைக் கொண்டு தன்னை வருத்துவதால் அவை இல்லாமல் செய்ய எண்ணினாள். உலகில் பூக்களை இல்லாமல் செய்ய அவை மலரும்சோலைகளையே இல்லாமல் அழிக்க முனைகிறாள். சோலையாம் காரணத்தை அழித்தால் காரியமாம் பூக்கள் மலர்ந்து தனக்குத் துன்பம் செய்யா என எண்ணும் எண்ணம் இதில் வெளிப்படுகிறது. இங்குச் 'செந்தலை அன்றில்' என்றுரைப்பதற்கேற்பக் குறுந்தொகையும் (160)'நெருப்பினன்ன செந்தலை அன்றில்' எனக் குறிக்கும். அன்றில் பறவை எப்போதும் ஆணும் பெண்ணும் கூடியே இருக்கும். பிரிவு நேரில் சில முறை கூவித் தன் துணையை அழைக்கும். அப்போதும் அது வராவிடில் வாழாது என்பர். வட மொழியில் இப்பறவையைக் 'கிரௌவுஞ்சம்' என்பர். மிதிலைக் காட்சிப் படலத்தில் மாலை வரச் சீதை வருந்திப் புலம்பும் போது 'அன்றில் ஆகி வந்தாயோ?' என்பாள் (547). உண்டாட்டுப் படலத்திலும் ஒரு பெண் எனக்கு அன்றிலோடு ஒத்தி என்று அழுது சீறினாள்' என வரும் (989)*

***2808. 'அணைவு இல் திங்களை***
***நுங்க, அராவினைக்***
***கொணர்வென், ஓடி' எனக்***
***கொதித்து உன்னுவாள்;***
***பணை இன் மென்***
***முலைமேல் பனி மாருதம்***
***புணர, ஆர் உயிர்***
***வெந்து புழுங்குமால்.***

***அணைவு இல் திங்களை நுங்க -*** *தனக்கு இணக்கமாக இல்லாத சந்திரனை விழுங்க;* ***அராவினை ஓடிக் கொணர்வென் எனக் கொதித்து உன்னுவாள் -*** *இராகு கேது எனும் பாம்புகளை ஓடிச் சென்று கொண்டுவருவேன் என்று கோபத்தால் கொதிப்படைந்து எண்ணுவாள்; (ஆனால்)* ***பணை இன் மென் முலை மேல் பனிமாருதம் புணர*** *-தனது பருமையும் இனிமையும் மென்மையும் கொண்ட கொங்கைகள் மீது குளிர்ந்த காற்று வீசிப்படிய;* ***ஆர் உயிர் வெந்து புழுங்கும் -*** *தன் அரிய உயிர்காமச் சூட்டால் வெந்து வருந்துவாள் (சூர்ப்பணகை);* ***ஆல் -*** *அசை.*

*கலவியிற் கூடினவர்க்கு இன்பமூட்டும் சந்திரன் காமத்தால் வருந்துவோர்க்குத் துன்பம் செய்வான். அதற்கு அவனை விழுங்கும் இராகு கேது எனும் கரும்பாம்பு செம்பாம்புகளைப் பற்றிக் கொணர்ந்தால் அவை சந்திரனை விழுங்கி விடத் தனக்குத் துன்பம் நேராது எனச் சூர்ப்பணகைஎண்ணினாள். அப்போது குளிர்ந்த காற்று அவள் மீது பட்டு மேலும்துன்புறுத்தியது. பாம்பைக் கொண்டு வர எண்ணியதும் அதன் உணவாம் காற்றும் அவளை வருத்தத் தொடங்கியது. பாம்பு மதியை விழுங்குவது என்பது புராண மரபு.*

*தன்னை வருத்தும் காற்றையும் தான் கொண்டு வரும் பாம்பு உண்ணும். அதனால் தனக்கு வருத்தம் நேராது எனக் கருதினாள் என்று கொள்ளற்கும் இடமுளது.*

***2809. கைகளால், தன் கதிர்***
***இளங் கொங்கைமேல்,***
***ஐய தண் பனி அள்ளினள்,***
***அப்பினாள்;***
***மொய் கொள் தீயிடை***
***வெந்து முருங்கிய***
***வெய்ய பாறையில் வெண்ணெய்***
***நிகர்க் குமால்.***

***தன் கதிர் இளம் கொங்கை மேல் -*** *(சூர்ப்பணகை தன் காமத் தீயைத் தணிப்பதற்காக) தனது ஒளி மிக்க இளமையான முலைகள் மீது;* ***கைகளால் ஐய தண்பனி அள்ளினள் அப்பினாள் -*** *தன்னிரு கரங்களால் மிக நுட்பமான குளிர்ந்த பனிக் கட்டிகளை அள்ளி எடுத்து அப்பிக்கொண்டாள்; (ஆனால்)* ***மொய்கொள் தீயிடை வெந்து -****வலிமையால் பற்றிப் பரவிய காமமாம் தீயிடத்தே வெந்து;* ***முருங்கிய வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்கும் -*** *காய்ந்த சூடான பாறை மேல் இட்ட வெண்ணெய் போன்று உருகி அழிந்தது.* ***ஆல் -*** *அசை.*

*தீயானது சூர்ப்பணகை கொண்ட காமத்திற்கும், வெய்ய பாறை அவளுடைய முலைகளுக்கும், பனியானது வெண்ணெய்க்கும் உவமையாயின. பனி என்பதைப் பனிக் கட்டியாகக் கொள்ளலாம். ஐய என்பதற்கு மென்மையான எனவும் பொருள் கூறுவர். வெய்ய பாறையில் வெண்ணெய் உருகியது போலப் பனிக்கட்டியும் சூர்ப்பணகையின் தனங்களின் காம வெப்பத்தால் உருகியொழிந்தது. இவ்வுவமையின் அழகைக் குறுந்தொகையில் (58) 'ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்... வெண்ணெய் உணங்கல் போல' என்ற உவமையுடன் ஒப்பிட்டு இன்புறலாம். பனிக்கட்டியை அப்பிக் காம வெப்பிலிருந்து தப்ப நினைத்தும் அது பலிக்கவில்லை.*

***2810. அளிக்கும் மெய், உயிர், காந்து***
***அழல் அஞ்சினள்;***
***குளிக்கும் நீரும் கொதித்து***
***எழ, கூசுமால்;***
***'விளிக்கும், வேலையை, வெங்***
***கண், அனங்கனை,***
***ஒளிக்கல் ஆம் இடம் யாது?'***
***என, உன்னுமால்.***

***அளிக்கும் மெய் உயிர் காந்து அழல் அஞ்சினள் -*** *அன்போடுகாக்கப்படும் உடம்பையும் உயிரையும் சுட்டெரிக்கும் நெருப்பைக் கண்டு பயந்தவளாகி;* ***குளிக்கும் நீரும் கொதித்து எழ(க்) கூசுமால் -*** *அவ்வெப்பம் தணியத் தான் குளிப்பாளாக அந்த*

*நீரும் தன் காம வெப்பத்தால் கொதித்துப் பொங்கி வரக் குளிப்பதற்குக் கூச்சம் அடைவாள்;* ***விளிக்கும் வேலையை -*** *பேரொலியால் தன்னைத் துன்புறுத்தும் கடலை;* ***வெங்கண் அனங்கனை -*** *கொடிய மன்மதனை;* ***ஒளிக்கல் ஆம் இடம் யாது என உன்னும் -*** *மறைத்து வைக்கும் இடம் எது எனக் கருதுவாள்;* ***ஆல் -*** *அசை.*

*காந்து அழல் பற்றிய விளக்கம் அடுத்த பாடலில் (2811) வெந்து காந்த வெதும்புறு மேனியாள் 'எனக் காணலாம் விளித்தல் பேரொலி செய்தல். வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்' எனும் பெரும்பாணாற்றுப்படை வரி (300) இத்துடன் எண்ணத்தக்கது. முன்னர் இக்காண்டத்திலேயே சிந்தையில் உறைபவற்கு உருவம் தீய்ந்ததால் (2743) எனக் குறித்தமை காண்க. அதனால் அநங்கன் - உருவற்றவன் ஆனான். மன்மதன், சிவனால் எரியுண்ட கதை ஈண்டு நினைத்தற்குரியது. இங்குச் சூர்ப்பணகை காமத் தீயால் வேகின்றமை குறிப்பு. காமத்தீ சுட்டெரிப்பதை 'வீரமில் கேள்வனுறீஇய காமத் தீ நீருட் புகினும் சுடும்' (கலி. 144. 61-62) என்றவரிகளுடன் ஒப்பிடற்குரியது.*

***2811. வந்து கார் மழை***
***தோன்றினும், மா மணிக்***
***கந்து காணினும், கைத்***
***தலம் கூப்புமால்;***
***இந்துகாந்தத்தின் ஈர***
***நெடுங் கலும்***
***வெந்து காந்த, வெதுப்***
***புறு மேனியாள்.***

***இந்து காந்தத்தின் ஈர நெடுங்கலும் -*** *சந்திர காந்தம் எனும் குளிர்ந்த பெரும் கல்லும்;* ***வெந்து காந்த வெதுப்புறு மேனியாள் -****தன் மேல் படச் சூடுண்டு கருகும் வண்ணம் வெப்பமுற்ற உடலை உடைய சூர்ப்பணகை;* ***கார் மழை வந்து தோன்றினும் -*** *கரிய மேகம் தன் முன்னே வந்து தென்பட்டாலும்;* ***மாமணிக் கந்து காணினும் -*** *நீல மணியால் ஆகிய தூணை எதிரே கண்டாலும்;* ***கைத்தலம் கூப்பும் -****கைகுவித்து வணங்குவாள்;* ***ஆல் -*** *அசை.*

*இந்து காந்தம் - சந்திர காந்தம் எனும் ஒருவகைக்கல். இது சந்திரனின் முன்னே நீரை உமிழும் தன்மையுடையது. கந்து - தறி எனவும் கூறுவர். கார் மழையையோ நீலக்கந்துவையோ கண்டதும் கை தொழக் காரணம் அவற்றைக் கண்டதும் இராமனைக் கண் முன்னே கண்ட மெய்ப்பாட்டைஉறுவதாம். அசோக வனத்தில் சீதை 'அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதல் இவை அதிகம் கரிய காண்டலும் கண்ணின் நீர் கடல்புகக் கலுழ்வாள்' (5075) என்பதும் இராமனைக் கரிய பொருள்களில் சீதை கண்ட நிலையாம். நாலாம் திருவாய்மொழி 'மண்ணை' எனத் தொடங்கி 'நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும் நன்று பெய்யும் மழை காணில் நாரணன் வந்தான் என்று ஆலும் (4.4.4) 'கரும் பெரு மேகங்கள் காணில் கண்ணன் என்றே பறக்கும்' (4.4.9) அடிகளில் தலைவி படும் பாடு இந்நிலையைச் சுட்டும்.*

*2812.* **வாம மா மதியும்,**
**பனி வாடையும்,**
**காமனும், தனைக் கண்டு**
**உணரா வகை,**
**நாம வாள் எயிற்று ஓர்**
**கத நாகம் வாழ்**
**சேம மால் வரையின்**
**முழை சேருமால்.**

**வாம மா மதியும் -** *அழகுமிக்க முழு மதியமும்;* **பனி வாடையும் -** *குளிர்ந்த காற்றும்;* **காமனும் தனைக் கண்டு உணரா வகை -***மன்மதனும் தன்னைப் பார்த்து அறியாதபடி;* **நாமவாள் எயிற்று ஓர் கத நாகம் வாழ் சேமமால் வரையின் முழை சேரும் -** *அச்சம் தரும் கூரிய நச்சுப் பல்லுடைய ஒருநாகப் பாம்பு வாழ்கின்ற பாதுகாவலாக உள்ள பெரிய மலையின் குகையுள் சென்று சேர்ந்தாள்;* **ஆல் -** *அசை.*

*சூர்ப்பணகை தனக்குத் துன்பம் செய்யும் சந்திரன், காற்று, மன்மதனிடமிருந்து தப்பப் பாம்பு வாழும் குகையைப் பாதுகாப்பான இடமாக நாடிச் சென்றாள். பாம்பு தன்னை உண்ணும் எனச் சந்திரனும் காற்றும் அங்குச் செல்லா. மன்மதனும் தன்னைச் சுட்டெரித்த சிவனின் அணிகலன் பாம்பு ஆதலால் அது வாழுமிடத்திற்குச் செல்லான் என்பது கருத்து. 'நாகமாய்' எனப் பாடம் கொண்டு நாகப் பாம்பின் வடிவோடு என்று சூர்ப்பணகை பாம்பு வடிவு பூண்டதாகக் கொள்வர். அதற்குச் சான்றாக அடுத்த பாடலில் (2813) காணும் 'முன்ன மேனியளாய்' என்ற தொடரைக் காட்டுவர்.*

*2813.* **அன்ன காலை, அழல்**
**மிகு தென்றலும்**
**முன்னின் மும் மடி ஆய்,**
**முலை வெந்து உக,**
**இன்னவா செய்வது என்று**
**அறியாது, இளம்**
**பொன்னின் வார்**
**தளிரில் புரண்டாள்அரோ.**

**அன்ன காலை அழல் மிகு தென்றலும் -** *அச்சமயத்தில் வெப்பம் மிக்க தென்றல் காற்றும்;* **முன்னின் மும்மடி ஆய் -** *முன்புவருத்தியதைவிட மூன்று மடங்கு மிகுதியாய் (வருத்த);***முலை வெந்து உக -** *கொங்கைகள் வெப்பமுற்று அனல் சொரிய;* **இன்னவா செய்வது என்று அறியாது -** *இன்ன வகையாகச் செய்வேன் என்று தெரியாமல்;* **இளம் பொன்னின் வார் தளிரில் புரண்டாள் -** *இளமையும் பொன்போன்ற நிறமும் கொண்ட தளிர்களின் மீது விழுந்து புரண்டாள்;***அரோ -** *அசை.*

*இளம் பொன்னின் வார் தளிரில் புரண்டாள் என்பது காமத் தீயில் வருந்தும் பெண்களைத் தளிர்ப்படுக்கையில் கிடத்தி ஆற்றுவிக்கும் நிலையைக் காட்டும். தோழிகள் தளிரைப் பரப்பித் தலைவி துயரைத் தணிப்பர் இதனை மிதிலைக் காட்சிப் படலத்தில் சீதை பட்ட துன்பத்தைக் கூறும்போது 'கரிந்தன பல்லவங்களே' (529)*

*என்பர். மேலும் 'தாயரின் பரி சேடியர் தாதுரு வீ, அரித்தளிர், மெல்லணை மேனியில் காய் எரிக் கரியக் கரிய கொணர்ந்து ஆயிரத்தின் இரட்டி அடுக்கினர்' (560) என்பர் இங்குத் தாதியரோ பிறரோ உதவாமல் தனக்குத் தானே சூர்ப்பணகை தளிர்களைப் பரப்பி அவற்றில் புரண்டாள் என்பதாம். இவளுக்குத் தென்றலும் பகையாயிற்று.*

***2814. வீரன் மேனி வெளிப்பட,***
***வெய் யவள்,***
***கார் கொள் மேனியைக்***
***கண்டனளாம் என,***
***சோரும்; வெள்கும்; துணுக்***
***கெனும்; அவ் உருப்***
***பேருங்கால், வெம் பிணி***
***யிடைப் பேருமால்.***

***வீரன் மேனி வெளிப்பட** - (அப்போது) இராமனின் திருமேனியின் உரு வெளித்தோற்றம் எழ; **வெய்யவள் கார்கொள் மேனியைக் கண்டனளாம் என** - கொடிய அரக்கியாம் சூர்ப்பணகை கருமேகம்போன்ற அவனது திருமேனியைக் கண்டவளே போல; **சோரும்** -சோர்வு அடைவாள்; **வெள்கும்** - வெட்கமடைவாள்; **துணுக் கெனும்** - திடுக்கிட்டு நடுங்குவாள்; **அவ்வுருப் பேருங்கால் வெம் பிணியிடைப் பேரும்** -அந்த வடிவம் மறையும் போது கொடிய காம நோயில் மீண்டும் அகப்படுவாள்; **ஆல்** - அசை. வெம்மை - கொடுமை. விருப்பம் எனக் கொண்டால் இராமன் மீது விருப்பம் கொண்டவள் என ஆம். காமத்தால் உருவெளித் தோற்றம் காண்பது காப்பியப் படைப்பின் இயல்பாம். மிதிலைக் காட்சிப் படலத்தில் இராமன் சீதையின் உருவெளிப் பாட்டைக் கண்டு வருந்தியதைப் பல பாடல்கள் விளக்கும் (619.630). பின்னர்ச் சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலத்தில் சீதையின் உருவெளிப்பாடு தோன்றியதால் இராவணன் வருந்திக் கூறிய கூற்றையும் விரித்துரைக்கும் (3208-3210). கார் கொள் என்பதில் கொள் என்பது உவம வாசகம். 8*

***2815 ஆகக் கொங்கையின், ஐயன்***
***என்று அஞ்சன***
***மேகத்தைத் தழுவும்;***
***அவை வெந்தன***
***போகக் கண்டு புலம்பும்,***
***அப் புன்மையாள்***
***மோகத்துக்கு ஓர் முடிவும்***
***உண்டாம் கொலோ?***

***அஞ்சன மேகத்தை ஆகக் கொங்கையின் ஐயன் என்று தழுவும்**- மை போன்று கரிய மேகத்தை இராமன் என எண்ணித் தன் மார்பிலுள்ள முலைகளில் பிடித்து அணைப்பாள்; **அவை வெந்தன போகக் கண்டு புலம்பும் அப்புன்மையாள்** - அம்மேகங்கள் (காமத் தீப்பட்ட உடலின் வெப்பத்தால்) வெந்து அழிந்தமை கண்டு*

*வாய்விட்டுப் புலம்புவாள் அந்த இழிந்த பண்பு கொண்ட சூர்ப்பணகை;* **மோகத்துக்கு ஒர் முடிவும் உண்டாம் கொலோ -** *காமத்திற்கு ஒரு முடிவு உண்டாகுமோ? (ஆகாது).*

*கரிய மேகங்களைக் கண்டு இராமன் எனச் சூர்ப்பணகை எண்ணிக் கைகூப்பிய நிலையை முன்னர்க் கண்ட பாடல் கூறியது (2811). இப்போது அந்நிலையின் வளர்ச்சிப்படியாக மேகத்தைத் தழுவி நின்றாள். அதுவே காமத் தீயின் வெப்பத்தால் வெந்தொழிந்தது, மேகம் என்பது அழுதலும் பிதற்றலுமாகிய மன்மதாவத்தையாம். முன் மூன்றடிகளில் கூறிய சிறப்புப் பொருளை ஈற்றடியிலுள்ள பொதுப் பொருள் விளக்கி நிற்கும். இதனை வேற்றுப் பொருள் வைப்பணி என்பர் ஒர்-ஓர் என்பதன் குறுக்கல் விகாரம்.*

*சூர்ப்பணகை மோக வெறியால் புலம்பல்*

***2816. 'ஊழி வெங் கனல் உற்றனள்***
***ஒத்தும், அவ்***
***ஏழை ஆவி இறந்திலள்'***
***என் பரால்-***
***'ஆழி யானை அடைந் தனள்,***
***பின்னையும்***
***வாழலாம் எனும்***
***ஆசை மருந்தினே.'***

**ஊழி வெங்கனல் உற்றனள் ஒத்தும் -** *காமத்தால் பிரளய காலத்தில் பரவும் கொடிய தீயில் பட்டவள் போலத் துன்புற்றாள் எனினும்;* **ஆழி யானை அடைந்தனள் பின்னையும் வாழலாம் எனும் ஆசை மருந்தினே -** *கடல் வண்ணனாம் இராமனைச் சேர்ந்து இன்னும் வாழக்கூடும் என்ற அவாஆகிய மருந்தினால்;* **அவ் ஏழை ஆவி இறந்திலள் என்பர் -***அந்த அறிவில்லாத சூர்ப்பணகை உயிர் விடவில்லை எனக் கூறுவர்;* **ஆல் -** *அசை.*

*காமத்தீயாம் நோயிலிருந்தும் அவள் சாகாதிருப்பதற்குக் காரணம் சூர்ப்பணகை இராமனை அடைந்து வாழலாம் என்ற ஆசை கொண்டமையாகும். இராமன் மீது கொண்ட ஆசையே மருந்தாகி அவளை வாழச் செய்தது. 'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை தன் நோய்க்குத் தானே மருந்து' (குறள் 1102) என்ற கருத்து இங்கு ஒப்பு நோக்குதற்குரியது. உருக்காட்டுப் படலத்தில் சீதையின் துயர் மொழியில் 'பேணும் உணர்வே! உயிரே! பெருநாள் நாண் இன்று உழல்வீர்; தனி நாயகனைக் காணும் துணையும் கழிவீர் அலிர்' (5235) என்று வரும் பாங்கும் ஒப்பிடற்குரியது.*

*செய்கையின் ஆழியானை என்ற பாடம் கொண்டு சிவந்த கைகளையுடைய இராமனை எனவும் கொள்வர்.*

***2817. 'வஞ்சனைக் கொடு மாயை'***
***வளர்க்கும் என்***

***நெஞ்சு புக்கு, எனது ஆவத்தை***
***நீக்கு' எனும்;***
***'அஞ்சனக் கிரியே!***
***அருளாய்' எனும்;***
***நஞ்சு நக்கினர் போல***
***நடுங் குவாள்.***

***நஞ்சு நக்கினர் போல நடுங்குவாள் -*** *விடத்தை நாவினால் நக்கியவர் போன்று சூர்ப்பணகை உடல் நடுக்கமுற்று; (இராமனை முன் நிற்பது போல் எண்ணி அழைத்து)* **அஞ்சனக்கிரியே அருளாய் எனும் -** *மைம்மலை போன்றவனே! எனக்கு அருள் புரிவாயாக என்பாள்;* **வஞ்சனைக் கொடு மாயை வளர்க்கும் என் நெஞ்சு புக்கு எனதுஆவத்தை நீக்கு எனும் -** *வஞ்சனையையும் கொடிய மாயையும் வளர்க்கின்ற என் மனத்துள் நீ புகுந்து எனக்குண்டான ஆபத்தைப் போக்குவாய் என்பாள். மதி மயக்கம் கொண்ட சூர்ப்பணகை தன் முன் இராமன் இருப்பதாகவே எண்ணினாள். தன் மனத்துன்பம் தீராததால் கொடிய நஞ்சுண்டவர் உடலும் உயிரும் துடிப்பது போல நடுங்கினாள். தான் செய்யும் வஞ்சனையையும் மாயையையும் தன்னிடமிருந்து நீக்க வேண்டும் என இராமனிடம் தன் குறையை வெளிப்படுத்தினாள் என்பர். இராமனின் திருமேனியும் கறுப்பு. நஞ்சின் நிறமும் கறுப்பு எனக் கொண்டு நஞ்சுநக்கினர் போல நடுங்கினள் என்பர். வேண்டத் தகாத ஆசையைச் சூர்ப்பணகை கொண்டதை நஞ்சு நக்குதற்கு உவமை ஆக்கினர். 'அஞ்சனக்கிரியே' என விளிப்பதற்கேற்ப முன்னர்த் தைலமாட்டு படலத்தில் 'அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும்' (1890) என்பர். 8*

***2818' காவியோ, கயலோ,***
***எனும் கண் இணைத்***
***தேவியோ திருமங் கையின்***
***செவ் வியாள்;***
***பாவியேனையும் பார்க்கும்***
***கொலோ?' எனும்-***
***ஆவி ஓயினும், ஆசையின்***
***ஓய்வு இலாள்.***

***ஆவி ஓயினும் ஆசையின் ஓய்வு இலாள் -*** *தன் உயிர் ஓய்ந்து அழிந்தாலும் தான் இராமன் மேல் கொண்ட ஆசையிலிருந்து நீங்காத சூர்ப்பணகை;* **காவியோ கயலோ எனும் கண்ணிணைத் தேவியோ -** *நீலமலரோ கயல்மீனோ என்று கூறத்தக்க இருகண்களையுடைய அவன் மனைவியோ;* **திருமங்கையின் செவ்வியாள் -** *இலக்குமியை விட அழகுள்ளவளாக இருக்கிறாள்; (அதனால்)* **பாவியேனையும் பார்க்கும் கொலோ எனும் -** *பாவியாகிய என்னையும் அவன் கண்ணெடுத்துப் பார்ப்பானோ என்று கூறி வருந்துவாள்.*

*ஆவி ஓயினும் ஆசையின் ஓய்வு இலாள் என்ற கருத்திற்கு ஒப்பாக நளவெண்பாவில் 'பூவின் வாய் வாளிபுகுந்த வழியே யென் ஆவியார் போனாலும் மவ்வழியே - பாவியேன் ஆசை போகா தென்றழிந்தாள்' (நள : 1.96) என்ற பாடல் உள்ளது. கண்ணுக்குக் காவியும் கயலும் உவமையாக வருவது காவிய மரபாகும்.*

*'திருமங்கையில்' என ஒப்புப் பொருளாகக் கொள்வதும் உண்டு. பாவியும் - இழிவு சிறப்பும்மை கொலோ - கொல் ஐயப்பொருளிலும் ஓ எதிர் மறைப் பொருளிலும் வந்தன.*

***2819. 'மாண்ட கற்புடையாள்***
***மலர் மா மகள்,***
***ஈண்டு இருக்கும் நல்லாள்***
***மகள்' என்னுமால்;***
***வேண்டகிற்பின் அனல்***
***வர மெய்யிடைத்***
***தீண்டகிற்பது அன்றோ,***
***தெறும் காமமே?'***

***ஈண்டு இருக்கும் நல்லாள் மகள் -** (இவன்) அருகில் உள்ள அழகிய பெண்; **மாண்ட கற்புடையாள் மலர்மா மகள் என்னும் -** பெருமை மிக்க கற்புடையவளான செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளே என்று கூறுவாள்; **வேண்டகிற்பின் தெறும் காமமே -** (ஒரு தலைவனை) ஆசைப்பட்டால் (அப்போதே) அழிப்பதாம் ஆசை நோயே; **அனல் வர மெய்யிடைத் தீண்டகிற்பது அன்றோ -** நெருப்பைப் போல வெப்பமுண்டாக உடம்பில் சேர்வதல்லவா எனக் கூறுவாள். **ஆல் -**அசை. திருமால் போன்ற இவன் அருகில் இருப்பவள் திருமகளே எனச் சூர்ப்பணகை நினைக்கிறாள். இதனால் அவன் தன்னை விரும்பான் என்பது குறிப்பு. 'மாண்ட கற்புடையாள்' என்பதற்கு அழிந்த கற்புடையவள் எனப் பொருள் கூறிச் சூர்ப்பணகையை இத் தொடர் குறிக்கும் என்பர். இதற்குச் சான்றாக முன்னர் வந்த தேயும் 'கற்பினாள்' (2757) என்ற தொடரைக்காட்டுவர். இராமனை உரு வெளித் தோற்றமாகச் சூர்ப்பணகை மீண்டும் மீண்டும் காண்பதால் 'ஈண்டு' என்றாள். பன்னிரண்டடிகள் காமத்தியல்பு கூறுகின்றன. இதனால் சூர்ப்பணகையின் காம நோய் நன்கு புலப்படும்.*

*இது பொதுப் பொருளால் சிறப்புப் பொருளை விளக்குவதால் பிறிது மொழிதல் எனும் அணியாம்.*

*(இப்பாடல் சிறந்த சுவடிகளிலும் சிறந்த அச்சுப்படிகளிலும் இல்லை. எனவே இதனை மிகைப் பாடலாகக் கொள்வர்.)*

***2820. ஆன்ற காதல் அஃது***
***உற எய்துழி,***
***மூன்று உலோகமும் மூடும்***
***அரக்கர் ஆம்***
***ஏன்ற கார் இருள்***
***நீக்க இராகவன்***
***தோன்றினான் என,***
***வெய்யவன் தோன்றினான்.***

***ஆன்ற காதல் அஃது உற எய்துழி -*** *மிகுந்த காதலாம் அத் துன்பத்தைச் சூர்ப்பணகை பெரிதும் அடைந்து வருந்தும் போது;* ***மூன்று உலோகமும் மூடும் அரக்கர் ஆம் -*** *வானுலகு, பூமி, பாதலம் எனும் மூன்று உலகங்களையும் மூடி விடக் கூடிய வலிமை படைத்த இராக்கதர் ஆகிய;* ***ஏன்ற கார் இருள் நீக்க -*** *எதிர்ப்படும் கரிய இருட்டைப் போக்க;* ***இராகவன் தோன்றினான் என வெய்யவன் தோன்றினான் -*** *இராமன் அவதரித்தது போலச் சூரியன் உதயம் ஆனான்.*

*சூர்ப்பணகை பட்ட காம வேதனையை 2803 முதல் இது வரையுள்ள 18 பாடல்கள் விரித்துரைக்கின்றன. இருளுக்கு அரக்கர்களும் அதைப் போக்கும் கதிரவனுக்கு இராமனும் உவமை ஆம். சூர்ப்பணகை பட்ட துன்பத்தை அரக்க நிலைக்கு ஏற்பக் கூறியது எண்ணத்தக்கது. மிதிலைக் காட்சிப் படலத்தில் சீதை கொண்ட காதல் நோயை (519-539) ஒப்பிட்டுக் காணின் இவ்வேறுபாடு நன்கு புலனாகும். இப்பாடலுடன் சூர்ப்பணகைப் படலம் முடிந்ததாகவும் அடுத்த பாடல் முதல் மூக்கரி படலம் தொடங்குவதாகவும் சில சுவடிகளில் உள்ளன.*

*சீதையைத் தூக்கிச் செல்லச் சூர்ப்பணகை முயலுதல்*

***2821. விடியல் காண்டலின், ஈண்டு, தன்***
***உயிர் கண்ட வெய்யாள்,***
***'படி இலாள் மருங்கு உள்ள அளவு,***
***எனை அவன் பாரான்;***
***கடிதின் ஓடினென் எடுத்து, ஒல்லைக்***
***கரந்து, அவள் காதல்***
***வடிவினானுடன் வாழ்வதே***
***மதி' என மதியா,***

***விடியல் காண்டலின் ஈண்டு தன் உயிர் கண்ட வெய்யாள் -*** *பொழுது விடிந்ததைப் பார்த்ததால் உடலோடு கூடிய தன் உயிரைப் பார்த்த கொடியவளாம் சூர்ப்பணகை;* ***படி இலாள் மருங்கு உள்ள அளவு -*** *ஒப்பில்லாதவளாம் அப்பெண் (சீதை) பக்கத்தில் உள்ள வரை;* ***எனை அவன் பாரான் -*** *என்னை அவன் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டான்; (ஆதலால் நான்)* ***கடிதின் ஓடினென் எடுத்து ஒல்லைக் கரந்து -*** *விரைவாக ஓடிச் சென்று எடுத்துக் கொண்டு போய் விரைவில் மறைத்த பின்;* ***அவள் காதல் வடிவினானுடன் வாழ்வதே மதி என மதியா -*** *அவளது ஆசை வடிவமான அவனுடன் கூடி வாழ்வதே சிறந்தது என எண்ணி,*

*படி - ஒப்பு, இராமன் மேனி பற்றிச் சீதை வினவ அனுமன் 'படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்து அன்று படிவம்' (5265) 'எனக் கூறிய விடையில் இப்பொருள்பட இச்சொல் வருதல் காண்க. சீதையை எடுத்து வேறோர் இடத்தில் மறைத்து வைப்பது அவள் கருத்து. பழைய உரையில் சூர்ப்பணகை 'தன் வயிற்றிடை அவளை ஒளித்துத் தின்று' எனப் பொருள் காணப்பெறும். இராமனுடன் சூர்ப்பணகை சீதையின் வடிவெடுத்து அவனுடன் வாழ நினைத்தாள். ஏனெனில் அவள் விரும்பும் வடிவெடுக்கும் ஆற்றலுடையவள் ஆம். இரவில் சூர்ப்பணகையின் காம நோய், பகல் தொடங்கியதும் குறைந்த நிலையை முதலடி காட்டும். இரவு, கலவிக்கு உரிய காலம்.*

*அதனால் காம நோய் மிகும். பகலில் பல்வேறு பொருளை நாட இடமேற்பட வழியுண்டு. அதலால் காம நோய் குறையும். எனவே 'தன் உயிர் கண்ட வெய்யாள்' எனப்பட்டாள் சூர்ப்பணகை.*

***2822.** **வந்து, நோக்கினள்; வள்ளல் போய்,***
***ஒரு மணித் தடத்தில்***
***சந்தி நோக்கினன் இருந்தது***
***கண்டனள்; தம்பி,***
***இந்து நோக்கிய நுதலியைக் காத்து,***
***அயல், இருண்ட,***
***கந்தம் நோக்கிய, சோலையில்***
***இருந்தது காணாள்.***

**வந்து நோக்கினள் -** *இராமன் முதலியோர் தங்கியிருந்த இடத்தில் வந்து பார்த்தாள்; (அப்போது)* **வள்ளல் போய் ஒரு மணித்தடத்தில் சந்தி நோக்கினன் இருந்தது கண்டனள் -** *இராமன் அவ்விடத்தை விட்டுச் சென்று ஒரு அழகிய நீர்த் துறையில் சந்தியாவந்தனம் முதலிய செயல்களில்ஈடுபட்டமையைப் பார்த்தாள்;* **தம்பி இந்து நோக்கிய நுதலியைக் காத்து-** *தம்பியாம் இலக்குவன் பிறைமதியைப் போன்ற நெற்றியையுடைய சீதையைப் பாதுகாத்துக் கொண்டு;* **அயல் கந்தம் நோக்கிய இருண்ட சோலையில் இருந்தது காணாள் -** *அருகே நறுமணம் வீசிய இருள் நிறைந்த சோலையில் இருந்ததைச் சூர்ப்பணகை பார்க்கவில்லை.*

*பின்னர், 'நின்று அந்த நதியகத்து. நிறை தவத்தின் குறை முடித்து' (2845) என இராமன் வந்த நிலையைக் கூறுவதால் கோதாவரி நதித் துறையிலே சந்தியாவந்தனம் செய்தான் எனலாம். 'இந்து நோக்கிய நுதலி' என்பதில் நோக்கிய என்பது உவம வாசகம் இனிச் சந்திரனும் கண்டு வியக்கும் அழகிய நெற்றியுடையவள் எனலும் ஆம். இந்து - எட்டாம் பிறை. இராமனை வள்ளல் என்றது அவன் உயிர்களுக்கு வரையறையின்றி அருள் புரியும் கடமை பூண்டமையைப் புலப்படுத்தும். இலக்குவனைச் சூர்ப்பணகை காணாததற்குக் காரணம் சோலை இருண்டிருந்தமையாகும். அவன் தனியிடத்து ஒதுங்கியிருந்தமையும் ஆகும்.*

*சந்தி என்பது அக்காலத்தே நிகழும் கடன்களைக் குறிக்கும் கால ஆகுபெயராம்.*

***2823.** **'தனி இருந்தனள்; சமைந்தது என்***
***சிந்தனை; தாழ்வுற்று***
***இனி இருந்தது எனக்கு எண்ணுவது இல்'***
***என, எண்ணா,***
***துனி இருந்த வல் மனத்தினள்***
***தோகையைத் தொடர்ந்தாள்;***
***கனி இரும் பொழில், காத்து,***
***அயல் இருந்தவன் கண்டான்.***

***தனி இருந்தனள் -*** *(நான் வந்த இப்பொழுதில்) இவள் தனியளாக உள்ளாள்;* ***என் சிந்தனை சமைந்தது -*** *என் எண்ணம் பலித்தது;* ***தாழ்வுற்று இனி இருந்தது எனக்கு எண்ணுவது இல் என எண்ணா -*** *காலம் தாமதித்து இனிமேல் இங்கு இருந்து எனக்கு வேறு செயல் பற்றி நினைக்க வேண்டியது இல்லை என நினைத்து;* ***துனி இருந்த வல் மனத்தினள் தோகையைத் தொடர்ந்தாள் -*** *வெறுப்புடைய கொடிய வன்னெஞ்சினளாம் சூர்ப்பணகை மயில் போன்ற சீதையைப் பிடித்தற்குப் பின் தொடர்ந்தாள்;* ***கனி இரும் பொழில் காத்து அயல் இருந்தவன் கண்டான் -*** *பழங்கள் நிறைந்த பெரிய சோலையில் சீதையைக் காத்து அருகிலிருந்த இலக்குவன் (அதனைப்) பார்த்தான்.*

*சமைந்தது - தன் காரியம் கை கூடியது என உறுதியாக எண்ணிய துணிவைக் காட்டும். சீதையிடத்துச் சூர்ப்பணகை வெறுப்புற்றதற்குக் காரணம் அவளருகில் இருப்பதால் இராமன் தன்னை விரும்பான் என எண்ணியதாகும். இதனை முன்னர்ப் 'படியிலாள் மருங்குள்ள அளவு எனை அவன் பாரான்' (2821) என்ற எண்ணத்தில் வெளிப்பட்டது. 'எனக்கு எண்ணுவது இல்' எனத் தன் மீது கொண்ட மிகுந்த நம்பிக்கை இலக்குவன் இருந்ததை அவள்பாராத பிழையால் எல்லாச் செயலும் நிறைவேறாது குலைந்து போனது. எனவே அவள் பிழை நிலை புலப்படும்.*

*சமைந்தது - எதிர்காலத்தில் அமைய வேண்டியது இறந்த காலத்தில் வந்ததால் கால வழுவமைதி. தோகை - உவமையாகுபெயர்.*

*இலக்குவன், சூர்ப்பணகையின் உறுப்புக்களை அறுத்தல்*

***2824. 'நில் அடீஇ' என, கடுகினன்,***
***பெண் என நினைத்தான்;***
***வில் எடாது அவள் வயங்கு எரி***
***ஆம் என விரிந்த***
***சில் வல் ஓதியைச் செங் கையில்***
***திருகுறப் பற்றி,***
***ஒல்லை ஈர்த்து, உதைத்து, ஒளி***
***கிளர் சுற்று-வாள் உருவி,***

*(அதைக் கண்ட இலக்குவன்)* ***'அடீ இ நில்' என -*** *'அடீ நில்' என்று அதட்டி;* ***கடுகினன் -*** *விரைந்தான்,* ***பெண் என நினைத்தான் -****இவள் ஒரு பெண் என்று எண்ணினான்;* ***வில் எடாது -*** *தன்னுடைய வில்லை எடுக்காமல்;* ***அவள் வயங்கு எரி ஆம் என விரிந்த சில் வல் ஓதியை -*** *சூர்ப்பணகையின் விளங்குகின்ற தீப்போன்று பரந்து செந்நிறம் கொண்ட சிலவாகிய வலிய கூந்தலை;* ***செங்கையில் திரு குறப்பற்றி -*** *தனது சிவந்த கைகளால் சுருட்டிப் பிடித்து;* ***ஒல்லை ஈர்த்து உதைத்து -****விரைவில் பற்றி இழுத்து அவளைத் தன் காலால் உதைத்துத் தள்ளி;* ***ஒளிகிளர் சுற்றுவாள் உருவி -*** *ஒளி விளங்கும் தன் உடைவாளை உறையிலிருந்து உருவி எடுத்து,*

*சூர்ப்பணகை சீதையைப் பின் தொடரும் நோக்கத்தை அறிந்த இலக்குவனின் சினம் பொங்க 'நில் அடீ இ' என அவளைத் தடுத்தான். இராமன் காடு செல்வான் என அறிந்த*

*இலக்குவன் சீற்றம் கொண்டதை நகர் நீங்கு படலத்தில் விளக்கமாகக் காணலாம் (1716-1724). இராமனை அழைத்துச் செல்ல வந்த பரதனையும் அவன் படையையும் கண்டு இலக்குவன் சீறிய சீற்றமும் கூறிய சின மொழியும் இவனுடைய பண்பு நலத்தை நன்கு காட்டும் (2400-2415). சூர்ப்பணகையைப் பெண்ணெனஇலக்குவன் நினைப்பது தாடகையை இராமன் கண்டு 'பெண்' என மனத்திடை நினைத்த தோடு ஒப்பிடலாம் (374). சில்லல் எனப் பாடம் ஓதிச் சிறு எனப் பொருள் கூறுவர். எனினும் வல் என்பது அரக்க மகளிர்க்குரிய மென்மையற்ற கூந்தலைக் குறிக்கும் எனலாம். சுற்று என்பது இடையைச் சுற்றியுள்ளதான இடைக் கச்சைக் குறிக்கும். சுற்றுவாள் என்பது அதில் கட்டப்பட்ட வாளைச் சுட்டும், (பெரும்பாண். 73, முல்லைப். 46-47) இலக்குவன் அயோமுகி உறுப்பையும் வாளால் துணித்தமை இங்கு நினைத்தற்குரியது (3631).*

***2825. 'ஊக்கித் தாங்கி, விண் படர்வென்***
***என்று உருத்து எழுவாளை,***
***நூக்கி, நொய்தினில், 'வெய்து***
***இழையேல்' என நுவலா,***
***மூக்கும், காதும், வெம் முரண்***
***முலைக் கண்களும், முறையால***
***போக்கி, போக்கிய சினத்தொடும்,***
***புரி குழல் விட்டான்.***

***ஊக்கித் தாங்கி விண்படர் வென் என்று உருத்து எழுவாளை -*** *முயன்று இவனையும் எடுத்துக் கொண்டு வான்வழிச் செல்வேன் என்று கோபித்து மேற்கிளம்பிய சூர்ப்பணகையை;* ***நொய்தினில் நூக்கி -*** *(இலக்குவன்) எளிதில் கீழே தள்ளி;* ***வெய்து இழையேல் என நுவலா -*** *கொடுந்தொழிலைச் செய்யாதே என்று கூறி;* ***மூக்கும் காதும்வெம் முரண் முலைக்கண்களும் முறையால் போக்கி -*** *மூக்கையும் காதுகளையும் கொடிய வலிய முலைக் காம்புகளையும் ஒன்றன்பின் ஒன்றாய் அறுத்தெறிந்து;* ***போக்கிய சினத்தொடும் புரிகுழல் விட்டான் -****சினத்தை விட்டு முறுக்கிப் பிடித்த அவள் கூந்தலையும் விட்டான்.*

*மூக்கும் காதும் அறுத்தது அவளுக்கு அவலட்சணம் உண்டாக்குதற்காம். முலையை அறுத்தது அவள் பெண்மை நலம் சிதைத்தற்காம். 'காதிரண்டும் இல்லாதான் ஏக்கமுத்தம் செய்தலும் (சிறுபஞ்சமூலம் 5) 'முலையிரண்டுமில்லாதாள் பெண்மை காமுற்றற்று (குறள். 402) என்பவற்றுடன் ஒப்பிட்டுணரலாம். இனி மேல் வாயும் மேலுதடும் அறுத்த செய்தி பின்னர்க் காணப் பெறும் (2869). வான்மீகம் மூக்கும் காதும் மட்டுமே கொய்தான் எனக் கூறும். மேலும் முதல் நூலில் இராமன் சூர்ப்பணகையை இலக்குவனை அணுகுமாறு சொல்லவும் அவ்வாறு அவள் சென்று தன்னை ஏற்குமாறு கூற அவன் இராமனையே மணக்குமாறு கேட்கக் கூறினான். மீண்டும் இராமனை அவள் வேண்ட அவன் மறுக்கவே ஆத்திரத்தில் சீதை மீது பாய்ந்து உண்ண முயன்ற போது இராமனின் கட்டளைப்படி இலக்குவன் சூர்ப்பணகையின் மூக்கையும் காதையும் போக்கினான். (ஆரணிய காண்டம் 18ஆம் சருக்கம்).*

*சூர்ப்பணகையின் ஓலம்*

***2826. அக் கணத்து அவள் வாய் திறந்து***
***அரற்றிய அமலை,***
***திக்கு அனைத்தினும் சென்றது;***
***தேவர்தம் செவியும்***
***புக்கது; உற்றது புகல்வது என்?***
***மூக்கு எனும் புழையூடு***
***உக்க சோரியின் ஈரம் உற்று,***
***உருகியது உலகம்.***

***அக்கணத்து அவள் வாய் திறந்து அரற்றிய அமலை -****அந்த நேரத்தில் சூர்ப்பணகை வாயைத் திறந்து கதறிய ஓசை;* ***திக்கு அனைத்தினும் சென்றது -*** *எல்லாத் திசைகளிலும் சென்று பரவியது;* ***தேவர் தம் செவியும் புக்கது -*** *வானுலகில் உள்ள தேவர்களுடையகாதுகளிலும் சென்று நுழைந்தது;* ***உற்றது புகல்வது என் -*** *இனி அங்கு நடந்ததைச் சொல்ல வேண்டியது என்ன?;* ***மூக்கு எனும் புழையூடு உக்க சோரியின் -*** *அவள் மூக்கு என்ற துளைகளின் வழியே வழிந்த இரத்தத்தினால்;* ***உலகம் ஈரம் உற்று உருகியது -*** *உலகம் முழுவதும் ஈரம் படிந்து கரைந்தது.*

*சூர்ப்பணகை தன் உறுப்பிழந்து இட்ட பேரொலி எட்டுத் திசைகளை எட்டியது மட்டுமன்று வானுலகையும் அடைந்தது என்றதால் பாதலத்தையும் எட்டியது என்பது குறிப்பு. அறுபட்ட மூக்கின் துளைகளிலிருந்து வழிந்த இரத்தத்தின் பெருக்காலும் வெப்பத்தாலும் உலகமே கரைந்தது. இது உயர்வு நவிற்சி அணி.*

***2827. கொலை துமித்து உயர் கொடுங் கதிர்***
***வாளின், அக் கொடியாள்***
***முலை துமித்து, உயர் மூக்கினை***
***நீக்கிய மூத்தம்,***
***மலை துமித்தென, இராவணன்***
***மணியுடை மகுடத்***
***தலை துமித்தற்கு நாள் கொண்டது,***
***ஒத்தது, ஓர் தன்மை.***

***கொலை துமித்து -*** *கொல்லுவதை நீக்கி;* ***உயர் கொடுங் கதிர் வாளின் அக்கொடியாள் முலை துமித்து -*** *சிறந்த ஒளிமிக்க சுற்றுவாளால் அந்தக் கொடிய சூர்ப்பணகையின் முலைகளை அறுத்து;* ***உயர் மூக்கினை நீக்கிய மூத்தம் -*** *உயர்ந்து விளங்கிய மூக்கையும் அறுத்த நல்ல நேரம்;* ***மலை துமித்தென -*** *மலையின் சிகரங்களை வெட்டியது போல;* ***இராவணன் மணியுடை மகுடத் தலை துமித்தற்கு -****இராவணனுடைய இரத்தினம் பதித்த கிரீடங்களை அணிந்த பத்துத் தலைகளை அறுத்தற்கு;* ***நாள் கொண்டது ஒத்தது ஓர் தன்மை -*** *தொடக்கச் சடங்கு செய்யமுகூர்த்தம் செய்ததை ஒத்ததாயிருந்தது.*

*துமித்தல் - விலக்கல், கதிர் என்பது, கூர்மையுமாம். 'கொலை துமித்து' என்பதனை வாளுக்கு அடையாக்கிக், கொன்று பகையை வெட்டி மேம்பட்ட (வாள்) என்பதும் ஆம். மூத்தம் - முகூர்த்தம் இராவணனைக் கொல்ல நேரம் குறித்தல்*

*இக்காண்டத்திலேயே கரன் வதைப் படலத்தில் மூத்தம் ஒன்றில் முடிந்தவர் மொய் புண்ணீர் நீத்தம் ஓடி' (3063) என இப்பொருள் வெளிப்பட வரும். நாள் கொண்டது - குறிப்பிட்ட நல்ல நாளில் நற்செயலைத் தொடங்குதல். கட்டியங்காரனுடன் பின்னர்ச் செய்யும்போருக்கு முதலே நாட் கொண்டது என்பது 'தான் செய்யும் தொழில் நிகழ்த்துவதற்கு முன்பே தொடங்கி வைத்தலை 'என நச்சினார்க்கினியர் உரை (சிந்தா. 448) இதனை மேலும் விளக்கும்.தாடகையை இராமன் கொன்ற போது 'அரக்கற்கு அந்நாள் முந்தி உற்பாதம் ஆக, படியிடை அற்று வீழ்ந்த வெற்றி அம் பதாகை ஒத்தாள் (390) என்பதும் காண்க. காப்பிய நிகழ்ச்சிகளை இவ்வாறு இயைத்துச் சுவைபட மொழிவது காப்பிய மரபாம். மலை துமித்தென வந்தது உவமையணி.*

***2828. அதிர, மா நிலத்து, அடி***
***பதைத்து அரற்றிய அரக்கி-***
***கதிர் கொள் கால வேல் கரன் முதல்***
***நிருதர், வெங் கதப் போர்***
***எதிர் இலாதவர், இறுதியின்***
***நிமித்தமா எழுந்து, ஆண்டு,***
***உதிர மாரி பெய் கார் நிற மேகம்***
***ஒத்து,-உயர்ந்தாள்.***

***அதிர மா நிலத்து அடி பதைத்து அரற்றிய அரக்கி -****அதிர்ச்சி உண்டாக, பெரிய தரையில் தன் நோவினால் பாதங்களைப் பதைப்புடன் வைத்துக் கதறிய இராகக்கதச் சூர்ப்பணகை;* ***கால கதிர் கொள் வேல் கரன் முதல் நிருதர் -*** *யமன் போன்ற ஒளி மிக்க வேற்படையையுடைய கரன் முதலாக உள்ள அரக்கர்களாகிய;* ***வெங்கதப் போர் எதிர் இலாதவர்-*** *கொடிய சினமிக்க போரில் தமக்கு எதிர் இல்லாதவர்களுடைய;* ***இறுதியின் நிமித்தமா -*** *சாவின் பொருட்டு;* ***எழுந்து ஆண்டு உதிரமாரி பெய் கார் நிற மேகம் ஒத்து உயர்ந்தாள் -*** *எழுந்து அங்கு இரத்த மழையைப் பொழியும் கரிய நிற மேகத்தைப் போன்றவளாகி நிமிர்ந்து நின்றாள்.*

*பதைத்தல் - உதறுதலுமாம். யமன் எப்படி உயிர்களைப் பற்றுவதிலிருந்து தவறானோ அவ்வாறே கரனின் வேலும் பகைவரைக் கொல்வதிலிருந்து பிழையாது. கரன் முதலிய அரக்கரின் முடிவை முன்கூட்டியே அறிவிக்கும் தீய குறியாய் இரத்த மழை பெய்யும் மேகத்தைப் போல அவ்வரக்கர் வாழும் இடம் நோக்கிச் சூர்ப்பணகை எழுந்தாள். அவள் உருவம் கரிய மேகத்திற்கும் அவள் உடலிலிருந்து ஒழுகிய இரத்தப் பெருக்கு இரத்த மழைக்கும் உவமையாம். மேகம் இரத்த மழை பெய்தல் தீய சகுனமாம். ' குருதி மாமழை சொரிந்தன மேகங்கள்' (2944) எனக் கரன் வதைப் படலத்தில் அகம்பன் கண்ட தீக்குறியாக இது விளங்கும். வான்மீகத்திலும் 'இரத்தம் பெருகி ஓட மழைக் காலத்தில் மேகங்கள்கர்ஜிப்பது போல் கோரமாக அலறினாள் என்று வருவதை ஒப்பிடலாம் (5.11) இது தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

***2829. உயரும் விண்ணிடை; மண்ணிடை***
***விழும்; கிடந்து உழைக்கும்;***
***அயரும்; கை குலைத்து அலமரும்;***

*ஆர் உயிர் சோரும்;*
*பெயரும்; 'பெண் பிறந்தேன் பட்ட*
*பிழை' எனப் பிதற்றும்;-*
*துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத்*
*தொல் குடிப் பிறந்தாள்.*

***துயரும் அஞ்சி முன் தொடர்ந்திலாத் தொல்குடிப் பிறந்தாள் -*** *துன்பம் என்பது பயந்து இதற்கு முன் எப்போதும் அணுகாத பழையஅரக்கர் குடியில் பிறந்த சூர்ப்பணகை;* ***விண்ணிடை உயரும் -****(துன்பம் தாங்காமல்) வானில் உயர்ந்து எழுவாள்;* ***மண்ணிடை விழும் -****தரை மீது விழுவாள்;* ***கிடந்து உழைக்கும் -*** *தரையில் வீழ்ந்தபடியே கிடந்து மிக வருந்துவாள்;* ***அயரும் -*** *தளர்ச்சி உறுவாள்;* ***கை குலைந்து அலமரும் -*** *கைகளைப் பிசைந்து மனம் சுழல்வாள்;* ***ஆர் உயிர் சோரும் -****அரிய உயிர் சோர்ந்து மூர்ச்சை அடைவாள்;* ***பெயரும் -*** *பின் மூர்ச்சை தெளிந்து எழுந்து செல்வாள்;* ***வெண் பிறந்தேன் பட்ட பிழை எனப் பிதற்றும் -*** *பெண் பிறவியாய்ப் பிறந்து நான் பட்ட துன்பம் இது எனப் பிதற்றுவாள்.*

*பிரமனை முதல்வனாகக் கொண்ட பழைய குடி சூர்ப்பணகை பிறந்த குடியாம். எனவே 'தொல் குடி' எனப்பட்டது. இது வரை துன்பம் அக் குடியைத் தொடர அஞ்சியது என்று கூறும் போது சூர்ப்பணகையின் இச்செயலால் இனி மேல் துன்பம் அக்குடியைத் தொடரப் போகிறது என்பது புலனாம். 'உளைக்கும்' எனப் பாடம் கொண்டு ஊளையிடுவாள் எனப் பொருள் கூறுவர். மேலும் இதற்கு வருந்துதல் எனவும் உரைப்பர். உறுப்பிழந்த பெண் எவ்வாறு துன்பப்படுவாள் என்பதை மிக விளக்கமாக பல்வேறு வினை அடுக்குகளால் இப்பாடல் காட்டும். பெண் பிறவி என்பதே துன்பத்திற்குரியது என அரக்கர் குலப்பெண்ணும் எண்ணுவது கருதற்குரியது. துயர் அஞ்சுதல் என்பது மரபு வழுவமைதி.*

*2830. ஒற்றும் மூக்கினை; உலை உறு*
*தீ என உயிர்க்கும்;*
*எற்றும் கையினை, நிலத்தினில்;*
*இணைத் தடங் கொங்கை*
*பற்றும்; பார்க்கும்; மெய் வெயர்க்கும்;*
*தன் பரு வலிக்காலால்*
*சுற்றும்; ஓடும்; போய், சோரி*
*நீர் சொரிதரச் சோரும்.*

*(சூர்ப்பணகை)* ***மூக்கினை ஒற்றும் -*** *இரத்தம் வழியும் மூக்கை ஆடையால் ஒற்றிக் கொள்வாள்;* ***உலை உறு தீ என உயிர்க்கும் -*** *கொல்லன் உலைக் களத்தில் எழும் தீச்சுடர் போன்று பெருமூச்சு விடுவாள்;* ***கையினை நிலத்தினில் எற்றும் -*** *கைகளை தரை மீது ஓங்கி அடிப்பாள்;* ***இணைத் தடங் கொங்கை பற்றும் பார்க்கும் -*** *தன் இரு பெரிய முலைகளைக் கைகளால் பற்றிப் பார்ப்பாள்;* ***மெய் வெயர்க்கும் -****உடல் வேர்ப்பாள்;* ***தன் பருவலிக் காலால் சுற்றும் ஓடும் -*** *தனது பெரிய வலிமை படைத்த கால்களால் சுற்றி ஓடி வருவாள்;* ***போய்(ச்) சோரி நீர் சொரிதரச் சோரும் -*** *ஓடிப் போய் இரத்தம் பொழியத் தளர்வாள். ஒற்றுதல் மேலும் இரத்தம் பெருகாமலிருப்பதற்காம். உலை*

*உறுதீயைப் பற்றி - உலைமுகப் புகை நிமிர் உயிர்ப்பின் மாய்ந்ததே (527) எனவும் 'கொல்லன் ஊது உலையில் கனல் என்ன வெய்து உயிர்த்தான் (1506) எனவும் வருதல் கொண்டு நன்குணரலாம். சுற்றும் ஓடும் எனத் தனித் தனியாகவும் பொருள் காண்பர்.*

***2831. ஊற்றும் மிக்க நீர் அருவியின்***
***ஒழுகிய குருதிச்***
***சேற்று வெள்ளத்துள் திரிபவள்,***
***தேவரும் இரிய,***
***கூற்றும் உட்கும் தன் குலத்தினோர்***
***பெயர் எலாம் கூறி,***
***ஆற்றுகிற்கிலள்; பற்பல பன்னி***
***நின்று, அழைத்தாள்.***

***ஊற்றும் மிக்க நீர் அருவியின் -*** *பொழிகின்ற மிகுந்த நீருள்ள அருவி போல;* ***ஒழுகிய குருதிச் சேற்று வெள்ளத்துள் திரிபவள் -****வழிந்தோடும் இரத்தச் சேறாம் நீர்ப் பெருக்கில் அலைபவளாம் சூர்ப்பணகை;* ***ஆற்று கிற்கிலள் -*** *தன்னால் பொறுக்க முடியாதவளாய்;* ***தேவரும் இரிய -*** *அவள் அலறலைக் கேட்டுத் தேவர்களும் நிலை குலைந்து ஓட;* ***கூற்றும் உட்கும் தன் குலத்தினோர் பெயர் எலாம்கூறி-*** *யமனும் அஞ்சும் தன் குலத்தில் பிறந்த அரக்கர் பெயர்களை எல்லாம்எடுத்துக் கூறி;* ***பற்பல பன்னி நின்று அழைத்தாள் -*** *பல பலவாறுவிளக்கமாகக் கூறி நின்று கூப்பிட்டாள்.*

*ஊற்றும் - இடைவிடாது பொழியும், தேவரும் அவள் குரல் கேட்டு அஞ்சி ஓடினர்; யமனும் அது கேட்டு மனம் துணுக்குற்றான் என்பதால் அவளது குரலின் ஆற்றல் புலனாம். பன்னுதல் - மீண்டும் மீண்டும் கூறுதல், பெருவெள்ளமாய் இரத்தம் பெருகியதால் அவள் நின்ற இடம் சேறாயிற்று.*

*தேவரும், கூற்றும் - என்பனவற்றில் உள்ள உம்மைகள் உயர்வு சிறப்பின.*

*உறவினரைக் கூவி அழைத்தல்*

*கலி விருத்தம்*

***2832. 'நிலை எடுத்து, நெடு நிலத்து***
***நீ இருக்க, தாபதர்கள்***
***சிலை எடுத்துத் திரியும்இது சிறிது***
***அன்றோ? தேவர் எதிர்***
***தலையெடுத்து விழியாமைச் சமைப்பதே!***
***தழல் எடுத்தான்***
***மலை எடுத்த தனி மலையே!***
***இவை காண வாராயோ?***

***தழல் எடுத்தான் மலை எடுத்த தனி மலையே -*** *தீயைக் கையில் ஏந்திய சிவனின் கயிலை மலையைக் கையால் எடுத்த ஒப்பற்ற மலை போன்ற அண்ணாவே!;* ***நீ நெடுநிலத்து நிலை எடுத்து இருக்க -*** *நீ இந்தப் பெரிய உலகில் நிலை பெற்ற புகழால் விளங்கி நிற்கும் போது;* ***தாபதர்கள் சிலை எடுத்துத் திரியும் இது சிறிது அன்றோ -*** *தவம் புரிவோர் வில்லேந்தி நடமாடுவது உன் புகழுக்கு இழுக்கல்லவா?; (அன்றியும்)* ***தேவர் எதிர் தலை எடுத்து விழியாமைச் சமைப்பதே -*** *தேவர்கள் முன்னே தலை நிமிர்ந்து பார்க்காமல் வெட்கி நிற்பதும் ஆகக்கூடியதோ?;* ***இவை காணவாராயோ -*** *(எனக்கு நேர்ந்த இச் சிறுமைகளை) நீ பார்க்க வரமாட்டாயா?*

*தாபதர் - இராமலக்குவர். தவவேடம் பூண்டு வனத்தில் இருந்த நிலையை இது சுட்டும் 'இவை காண' என்பது தன் உறுப்புகள் அறுப்புண்டு துன்புறும் நிலையைக் காண எனவும் பொருள்படும். சமைத்தல் - அமைத்தல்.*

*சிவன் கையில் அனலேந்தியது - தாருக வன முனிவர்கள் சிவனை அழிக்க ஏவிய தீயினைச் சிவன் தன் கையில் ஏந்திய செயலைக் குறிக்கும். மலை இராவணனுக்கு உவம ஆகுபெயர்.*

***2833. "புலிதானே புறத்து ஆக, குட்டி***
***கோட்படாது" என்ன,***
***ஒலி ஆழி உலகு உரைக்கும் உரை***
***பொய்யோ? ஊழியினும்***
***சலி யாத மூவர்க்கும்,***
***தானவர்க்கும், வானவர்க்கும்,***
***வலியானே! யான் பட்ட வலி***
***காண வாராயோ?***

***ஊழியினும் சலியாத மூவர்க்கும் தானவர்க்கும் வானவர்க்கும் வலியானே -*** *கற்ப முடிவிலும் ஆற்றல் தளராத மும் மூர்த்திகளுக்கும் அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் மிக்க வலிமை கொண்ட இராவணனே;* ***புலி தானே புறத்து ஆக(க்) குட்டி கோட்படாது -*** *தாய்ப் புலியானது பக்கத்திலிருக்க அதன் குட்டி எவராலும் பிடிக்கப்பட்டுத் துன்புறாது;* ***என்ன ஒலி ஆழி உலகு உரைக்கும் உரை பொய்யோ -*** *என்று முழக்கத்துடன் கூடிய கடல் சூழ்ந்த உலக மக்கள் கூறும் பழமொழி பொய்யோ?;* ***யான்பட்ட வலி காண வாராயோ -*** *நான் அடைந்த கொடும் துன்பத்தைப் பார்க்க வரமாட்டாயா? புலிதானே புறத்தது ஆகக்குட்டி கோட்படாது என்ற பழமொழியைப் புறநானூற்றில் உள்ள 'புலி புறங்காக்கும் குருளை போல' (புறம். 42.10) என்ற அடியோடு ஒப்பிடத்தக்கது. 'குட்டியைத் தின்னலாமே கோட்புலி புறத்ததாக' எனவரும் சிந்தாமணி (1134) அடியும் இதனை விளக்கும் 'வலியானே! யான் பட்ட வலி காணவாராய்' என்பதில் உள்ள சொல் பின்வரு நயம் எண்ணி மகிழ்தற்குரியது. தானவர் என்பவர்கள் தனு என்பவளுக்குக் காசிபரிடம் பிறந்த அசுரர் என்பர்.*

*உலகு - இடவாகுபெயர். இதில் பிறிது மொழிதல் அணி உளது. உலக உண்மை மொழி தன்னிலையால் பொய்த்து விட்டதே எனச் சூர்ப்பணகை கூறியது குறிப்புமொழியாம்.*

***2834. 'ஆர்த்து, ஆணைக்கு-அரசு உந்தி, அமரர்***
***கணத்தொடும் அடர்ந்த***
***போர்த் தானை இந்திரனைப் பொருது,***
***அவனைப் போர் தொலைத்து,***
***வேர்த்தானை, உயிர் கொண்டு***
***மீண்டானை, வெரிந் பண்டு***
***பார்த்தானே! யான் பட்ட***
***பழி வந்து பாராயோ?***

**ஆர்த்து ஆணைக்கு அரசு உந்தி அமரர் கணத்தொடும் அடர்ந்த போர்த்தானை இந்திரனைப் பொருது -** *ஆரவாரம் செய்து யானைகளுக்கு அரசனான ஐராவதத்தைச் செலுத்தித் தேவர் கூட்டத்துடனே நெருங்கிய போர்ப் படையோடு கூடிய இந்திரனை எதிர்த்துப் போர் புரிந்து;* **அவனைப் போர் தொலைத்து வேர்த் தானை உயிர் கொண்டு மீண்டானை -** *அவனைப் போரிலே அழியச் செய்து அச்சத்தால் உடல் வியர்த்துத் தப்பி உயிர் கொண்டு ஓடிப்போனவனை;* **பண்டு வெரிந்பார்த்தானே -** *முன்பு முதுகிட்டோடப் பார்த்த இராவணனே;* **யான்பட்ட பழி வந்து பாராயோ -** *நான் இங்கு அடைந்த இழிவை நீ வந்து பார்க்க மாட்டாயோ?.*

*ஆனைக்கு அரசு - இந்திரனின் வாகனமாகிய ஐராவதம் எனும் வெள்ளை யானையே. வெரிந் - புறமுதுகு.*

*இப்பாடலுக்கு வேறு வகையில் பொருள் காண்பதும் உண்டு. தேவேந்திரனை வென்ற இந்திரசித்தே! பெருவலிமை படைத்த நீ எனக்கு நேர்ந்த இப்பழியைப் பார்த்து இதற்கு மாற்றம் செய்யமாட்டாயா? என்று சூர்ப்பணகை கதறினாள் என்பர்.*

*இராவணன் திக்கு விசயம் செய்து யாவரையும் வென்ற போது விண்ணுலகு சென்று அங்கும் இந்திரனுடன் போர் புரிந்தான். அவன் தேவர் படையோடு ஐராவத யானை மீதேறி இராவணனும் வியக்கப் போர் புரிந்தான். அப்போது இராவணன் மகன் மேகநாதன் மாயை புரிந்து போர் செய்த போது இந்திரன் புறமுதுகிட்டோட அவனை மாயைப் பாசத்தால் பிணித்துச் சிறையில் அடைத்தான். அப்போது பிரமன் முதலான தேவர்கள் வந்துஅவனுக்கு 'இந்திரசித்' என்ற பட்டமும் வரமுமளித்து இந்திரனைமீட்டதாகப் புராண வரலாறு கூறும்.*

*முன் பின் பாடல்களில் இராவணனை விளிப்பதால் இதுவும் இராவணனை அழைத்ததாகவே கொள்வது பொருத்தம்.*

***2835. 'காற்றினையும், புனலினையும், கனலினையும்,***
***கடுங் காலக்***
***கூற்றினையும், விண்ணினையும், கோளினையும்,***
***பணி கொண்டற்கு***

***ஆற்றினை நீ; ஈண்டு, இருவர்***
***மானுடவர்க்கு ஆற்றாது***
***மாற்றினையோ, உன் வலத்தை? சிவன்***
***தடக்கை வாள் கொண்டாய்!***

***சிவன் தடக்கை வாள் கொண்டாய் -*** *சிவபிரான் தம் பெருமை பொருந்திய கையை நீட்டி அளித்த சந்திர காசம் எனும் வாளைப் பெற்றுக் கொண்ட இராவணனே!;* ***காற்றினையும் -*** *வாயு தேவனையும்;* ***புனலினையும் -*** *நீர்க்கடவுளாம் வருணனையும்;* ***கனலினையும் -****அக்கினி தேவனையும்;* ***கடும் காலக் கூற்றினையும் -*** *கொடிய கால தேவனாம் யமனையும்;* ***விண்ணினையும் -*** *வானத்தையும்;* ***கோளினையும் -****நவக் கிரகங்களையும்;* ***பணி கொண்டற்கு -*** *ஏவல் கொள்வதற்கு;****ஆற்றினை -*** *வேண்டுவன செய்வித்தாய்;* ***நீ ஈண்டு இருவர் மானுடவர்க்கு ஆற்றாது -*** *அத்தகைய ஆற்றல் கொண்ட நீ இங்கு இரு மனிதர்க்கு எதிரிடும் வலிமையற்று;* ***உன் வலத்தை மாற்றினையோ -*** *உன் வலிமையை மாற்றிக் கொண்டாயோ?*

*காற்று, நீர், தீ, காலம், விண், கோள் ஆகியவற்றினை அடக்கியஆற்றல் பெற்றவன் இராவணன். அத்தகையோன் இரு மனிதர் ஆற்றலை அடக்க மாட்டானா எனக் கூவி அழைக்கிறாள் சூர்ப்பணகை. இருமானிடவர் - இராமனும் இலக்குவனும். சிவன் தடக்கை வாள் பெற்றமை: இராவணன் சிவன் வீற்றிருந்த கயிலாய மலையைப் பெயர்த்தெடுத்த போது அவர் தம் திருவடிப் பெருவிரலால் அழுத்த இராவணன் நசுக்குண்டு கதறினான். பின் சாம வேதம் பாடிடச் சிவன் மனமிரங்கி அவனை விடுவித்து 'இராவணன்' என்ற பெயரையும் நீண்ட வாழ் நாளையும்,சந்திரகாசம் எனும் வாளையும் அளித்தார்.*

***2836. 'உருப் பொடியா மன்மதனை***
***ஒத்துளரே ஆயினும், உன்***
***செருப்பு அடியின் பொடி ஒவ்வா***
***மானிடரைச் சீறுதியோ?***
***நெருப்பு அடியில் பொடி சிதற, நிறைந்த***
***மதத் திசை யானை***
***மருப்பு ஒடிய, பொருப்பு இடிய,***
***தோள் நிமிர்த்த வலியோனே!***

***அடியில் நெருப்பு(ப்)பொடி சிதற -*** *(கால்களைப் பதிய வைத்து நடக்கும்போது) அக்கால்களால் எழுப்பப்படும் துகள் நெருப்புப் பொறி சிந்தவும்;* ***நிறைந்த மதத் திசை யானை மருப்பு ஒடிய -*** *மிகுந்த மதநீர் பொழியும் திக்கு யானைகளின் கொம்புகள் ஒடியவும்;* ***பொருப்பு இடிய -*** *மலைகள் இடிந்திடவும்;* ***தோள் நிமிர்த்த வலியோனே -*** *இருபது தோள்களையும் நிமிர்த்துப் போர் புரிந்த வலிமை கொண்ட இராவணனே!;* ***உருப் பொடியா மன்மதனை ஒத்துளரே ஆயினும் -*** *சிவன் கோபத்தால் உருவம் நீறாக்கப் பெற்ற மன்மதனைப் போன்று உள்ளவர்களே ஆனாலும்;* ***உன் செருப்பு அடியின் பொடி ஒவ்வா மானிடரைச் சீறுதியோ -*** *உன்னுடைய செருப்பின் கீழே உள்ள துகளுக்கு ஒப்பாகாத மனிதர்களை நீ கோபிப்பாயோ? (கோபிக்க மாட்டாய்).*

*உருப்பு ஒடியா மன்மதன் எனவும் பொருள் கூறுவர். உருப்பு ஒடியா- கொடுமை செய்வதில் குறையாத என்பது அதன் பொருள். நெருப்பு ஒடிய எனப் பாடம் கொண்டு அக்கினி தேவன் தோல்வியுற்று எனப் பொருள் கூறுவர்.*

*இராமலக்குவரைச் 'செருப்பு அடியின் பொடி ஒவ்வா மானிடர்' எனக் கூறலாமா எனக் கேட்டவர்க்குக் கம்பரின் மகன் அம்பிகாபதி கவியுளம் காணும் வகையைக் கூற, நாதமுனிகள் இதனைக் கவிக் கூற்றாகக் கொள்ளாமல் இராமலக்குவரால் ஏமாற்றமும் உறுப்புக் குறையுமடைந்த சூர்ப்பணகை அவர்களிடத்துக் கொண்ட வெறுப்பால் இவ்வாறு கூறினாள் என்பர். மேலும் செரு+படி எனக் கொண்டு யுத்த பூமியில் ஒரு துகளுக்கு ஒப்பாகாத மானுடர் என்று கொள்ளவும் இடமுளது. எனவே இது கவித்திறன் அன்றி அபசாரமன்று என அவர் அருளினார் என்பது கதை. (விநோதரச மந்திரி வீராசாமி செட்டியார், பதிப்பு டி.ர. பாலகிருஷ்ணண், சென்னை 1969 ப. 192).*

***2837. 'தேனுடைய நறுந் தெரியல்***
***தேவரையும் தெறும் ஆற்றல்***
***தான் உடைய இராவணற்கும், தம்பி***
***யர்க்கும், தவிர்ந்ததோ?***
***ஊனுடைய உடம்பினர் ஆய், எம்***
***குலத்தோர்க்கு உணவு ஆய***
***மானுடவர் மருங்கே புக்கு***
***ஒடுங்கினதோ வலி? அம்மா!***

***தேனுடைய நறுந் தெரியல் தேவரையும் -*** *தேனைக் கொண்ட நறுமணமிக்க கற்பகப்பூ மாலை அணிந்த தேவர்களையும்;* ***தெறும் ஆற்றல் தான் உடைய இராவணற்கும் தம்பியர்க்கும் தவிர்ந்ததோ -****அழிக்கின்ற வல்லமையை உடைய இராவணனுக்கும் அவன் தம்பிமார்க்கும் (இப்போது அவ்வலிமை) நீங்கி விட்டதோ?;* ***ஊன் உடைய உடம்பின ராய் -*** *தசையும்உதிரமுமுள்ள உடம்பை உடையவர்களாய்;* ***எம் குலத்தோர்க்கு உணவு ஆய -*** *எமது அரக்க குலத்தார்க்கு இரையாக உள்ள;* ***மானுடவர் மருங்கே புக்கு வலி ஒடுங்கினதோ -*** *மனிதரிடத்துச் சென்று அடங்கியதோ?;* ***அம்மா -*** *இது வியப்பிற்குரியது;*

*தம்பியர் - இராவணனின் தம்பிமார்களாகிய கும்பகர்ணன், கரன் முதலியோர். வீடணன் இவர்கள் செயலுக்கு உடன் செல்லான். ஆகையால் அவனை இவள் நினைக்கவில்லை எனலாம். ஊனுடைய உடம்பினர் என்றதால் மானுடர் அரக்கர்க்கு உணவாகும் தகுதியுடையவரன்றி வேறு சிறப்பில்லை என்பது குறிப்பு.*

*உண்பாராகிய அரக்கர்க்கு உண்ணப் படுபவராகிய மானிடர் வலிமை பெற்றவர் ஆய்விட்டாரே என வியப்பு எழுந்ததாம். அம்மா என்ற சொல் இதனைக் குறிக்கும். தேவரையும் - உயர்வு சிறப்பும்மை.*

***2838. 'மரன் ஏயும் நெடுங் கானில்***
***மறைந்து உறையும் தாபதர்கள்***

*உரனேயோ? அடல் அரக்கர் ஓய்வேயோ?*
*உற்று எதிர்ந்தார்,*
*"அரனேயோ? அரியேயோ? அயனேயோ?"*
*எனும் ஆற்றல்*
*கரனேயோ! யான் பட்ட*
*கையறவு காணாயோ?*

***மரன் ஏயும் நெடுங்கானில் -*** *மரங்கள் அடர்ந்த இப்பெரிய காட்டில்;* ***மறைந்து உறையும் தாபதர்கள் உரனேயோ -****அரக்கர்க்கு அஞ்சி ஒளிந்து வாழும் தவம் புரிவோர் வலிமையைக் குறிப்பதோ?; (அல்லது)* ***அடல் அரக்கர் ஓய்வேயோ -*** *வலிமை மிக்க இராக்கதர்களின் வலிமை ஓய்ந்து போனதைக் குறிப்பதோ? (எது என அறியேன்);****உற்று எதிர்ந்தார் -*** *எதிர்ப்பட்டுப் போர் புரிந்தார்;* ***அரனேயோ -*** *சிவனோ?;****அரியேயோ -*** *திருமாலோ?;* ***அயனேயோ -*** *பிரம்மாவோ?;* ***எனும் ஆற்றல் கரனேயோ -*** *என்று கருதும் வலிமை பொருந்திய கரனே!;****யான் பட்ட கையறவு காணாயோ -*** *நான் அடைந்த துன்பத்தை நீ பார்க்க மாட்டாயா?*

*இராவணனை உதவிக்கழைத்த சூர்ப்பணகை கரனைக் கூவி அழைக்கிறாள். கரன் இராவணனுக்குத் தம்பி முறையாவான். இராவணனின் தந்தையாம் விசுரவசு முனிக்கும் இராவணன் தாயாம் கேகசியின் தங்கையாம் கும்பீநசிக்கும் பிறந்தவன். தண்டகாரணியத்தில் சூர்ப்பணகைக்கென உண்டாக்கிய அரசில் அவள் பாதுகாப்புக்கென அமைத்த அரக்கர்சேனையின் முதல் தலைவனாவான். தம் பகைவரை அழிக்கும் வலிமை படைத்த சிவன், திருமால், பிரம்மா போன்று வலிமை படைத்தவன் கரன். மனிதரால் தான்பட்ட துன்பத்தை அண்மையிலுள்ள கரன் கேட்டு உதவி செய்ய வாரானோ எனக் கூவினாள். காட்டில் வாழும் தவசியர் வலிமைக்கு நகரங்களில் வாழும் அரக்கர் வலிமை குன்றியதோ என அவள் ஐயுற்றாள். காமக் கடவுளும் கையற்றேங்க (சிலம்பு 15.102) எனவரும். மன்னனினா குலம் மயங்கிற்றெனவே (சிந்தா. 2629) என்ற அடிக்கு நச்சினார்க்கினியர் சீவகனைப் போலே கையறவிலே மயங்கிற் றென்க' என்று உரைத்தார். கையறவு என்ற சொற் பொருள் இவற்றால் நன்கு விளங்கும்.*

***2839. 'இந்திரனும், மலர் அயனும்,***
***இமையவரும், பணி கேட்ப,***
***சுந்தரி பல்லாண்டு இசைப்ப, உலகு***
***ஏழும் தொழுது ஏத்த,***
***சந்திரன்போல் தனிக் குடைக்கீழ்***
***நீ இருக்கும் சவை நடுவே***
***வந்து, அடியேன் நாணாது,***
***முகம் காட்ட வல்லேனோ?***

***இந்திரனும் மலர் அயனும் இமையவரும் பணிகேட்ப -*** *தேவேந்திரனும் தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரம்மாவும் தேவர்களும் நீ இட்ட கட்டளைகளைக் கேட்டுக் குற்றேவல் செய்ய;* ***சுந்தரி பல்லாண்டு இசைப்ப -*** *இந்திராணி 'பல்லாண்டு' எனும்*

*வாழ்த்துப் பாடலைப் பாட;* ***உலகு ஏழும் தொழுது ஏத்த -*** *ஏழு உலகங்களில் உள்ளவர்கள் வணங்கிப் புகழ;* ***சந்திரன் போல் தனிக் குடைக்கீழ் நீ இருக்கும் சவை நடுவே -*** *முழுமதி போன்ற ஒப்பற்ற வெண்கொற்றக் குடையின் கீழே நீ கொலு வீற்றிருக்கும் சபையின் நடுவில்;* ***அடியேன் வந்து நாணாது முகம் காட்ட வல்லேனோ -*** *அடியாளாகிய நான் வந்து வெட்கமின்றி (மூக்கும் காதும் அறுபட்ட) என் முகத்தைக் காட்டும் தகுதி உடையேனோ? (ஆகேன் என்றவாறு);*

*சுந்தரி - தேவமங்கையர் எனவும் கூறுவர் 'பொன்னகர் மடந்தையர், விஞ்சையர் பூவையர், பன்னக வனிதையர், இயக்கர் பாவையர், முன்னின பணி முறை மாறி முந்துவார் (4883) என ஊர்தேடு படலத்தில் வந்த செய்யுள் இதற்கு மேலும் விளக்கம் தரும்.*

*பல்லாண்டு - பல ஆண்டுக் காலம் வாழ வாழ்த்துதல் பெரியாழ்வார் பாடிய 'திருப்பல்லாண்டு' நினைத்தற்குரியது. (நாலாயிர திவ்வியப் பிரபந்தம் பெரியாழ்வார், திருப்பல்லாண்டு 1-12) உலகேழு - கீழேழு மேலேழு உலகங்களைக் குறிக்கும். அடியேன் - தங்கை நிலையைக் குறிக்கும். இப்பாடல் இராவணன் கொலு மண்டபச் சிறப்பும் அங்கு உறுப்பறைகள் செல்லல் கூடாது என்பதையும் சுட்டும்.*

***2840. 'உரன் நெரிந்து விழ, என்னை உதைத்து,***
***உருட்டி, மூக்கு அரிந்த***
***நரன் இருந்து தோள் பார்க்க,***
***நான் கிடந்து புலம்புவதோ?***
***கரன் இருந்த வனம் அன்றோ?***
***இவை படவும் கடவேனோ?-***
***அரன் இருந்த மலை எடுத்த***
***அண்ணாவோ! அண்ணாவோ!!***

***அரன் இருந்த மலை எடுத்த அண்ணாவோ அண்ணாவோ -*** *சிவன் வீற்றிருக்கும் கயிலாய மலையைப் பேர்த்தெடுத்த அண்ணனே! அண்ணனே!!;* ***உரன் நெரிந்து விழ -*** *மார்பு சிதைந்து கீழே விழும்படி;* ***என்னை உதைத்து உருட்டி மூக்கு அரிந்த நரன் இருந்து தோள்பார்க்க -*** *என்னைக் காலால் உதைத்து உருண்டு விழச் செய்து என் மூக்கைஅரிந்த மனிதன் தன் தோளைப் பார்த்துப் பெருமிதம் கொள்ள;* ***நான் கிடந்து புலம்புவதோ -*** *நான் ஆதரவு இன்றித் தனியே இருந்து அழுவது தகுதியோ?;* ***கரன் இருந்த வனம் அன்றோ -*** *இது கரன் ஆட்சி செலுத்தியிருக்கும் காடு அல்லவா?;* ***இவை படவும் கடவேனோ -*** *(இக்காட்டிலே) நான் இக்கேடு அடையத் தகுவேனோ?*

*சூர்ப்பணகையை இலக்குவன் உதைத்து உருட்டி மூக்கரிந்ததை முன் வந்த பாடல்கள் கூறும் (2824-25). தோள் பார்த்தல் - வீரச் செயல் புரிந்தவர்கள் தம் தோள்களைச் செருக்குடன் பார்த்து மகிழ்தல். இப்பொருள் வெளிப்பட 'எள்ளுநர்கள் சாயவென தோளிரண்டும் நோக்கி' (சிந்தா. 847) 'கோவனும் மக்களும் குளிர்ந்து தோணோக்கினர்' (சிந்தா. 1843) என்ற தொடர்கள் உள்ளன.*

*கரன் இருந்த வனம் என்பது சூர்ப்பணகைக்கு உறு துணையாகஇராவணனால் கரன் அமர்த்தப் பெற்ற வனம் என ஆம்.*

*'அண்ணாவோ அண்ணாவோ' என இரட்டித்து வந்தது போல் பின்னரும் 'இராவணவோ! இராவணவோ!!' (2841) எனவும் 'மருகாவோ! மருகாவோ!!' (2842) எனவும் வருதல் காணலாம்.*

***2841. 'நசையாலே, மூக்கு இழந்து, நாணம்***
***இலா நான் பட்ட***
***வசையாலே, நினது புகழ்***
***மாசுண்டது ஆகாதோ?-***
***திசை யானை விசை கலங்கச்***
***செருச் செய்து, மருப்பு ஒசித்த***
***இசையாலே நிறைந்த புயத்து***
***இராவணவோ! இராவணவோ!!***

***திசை யானை விசை கலங்கச் செருச் செய்து மருப்பு ஒசித்த -*** *திக்குகளிலுள்ள யானைகள் கலக்கமுற்று ஓயப்போர் செய்து அவற்றின் கொம்புகளை ஒடித்த;* ***இசையாலே நிறைந்த புயத்து இராவணவோ இராவணவோ -*** *புகழாலே நிறைவுற்ற தோள்களையுடைய இராவணனே! இராவணனே!!;* ***நசையாலே மூக்கு இழந்து நாணம் இலா நான் பட்ட வசையாலே -*** *ஆசை காரணமாய் என் மூக்கைப் பறி கொடுத்த நான்வெட்கமில்லாமல் அடைந்துள்ள பழியினால்;* ***நினது புகழ் மாசுண்டது ஆகாதோ -*** *உன்னுடைய கீர்த்தியும் களங்கம் அடைந்தது ஆகாதோ? (ஆகும்).*

*எட்டுத்திக்குகளில் காவலுக்காக நிறுத்தப் பெற்ற யானைகளோடு போரிட்டு அவற்றின் கொம்புகளை ஒடித்துத் தன் புகழை நிறுவிய இராவணன் தங்கையின் மூக்கையும் காதையும் மானிடர் பறிக்க அதனால் இகழ்ச்சி உண்டாவதா எனக் கேட்பதால் அம்மானுடரை இராவணன் அடக்க வேண்டும் என்ற சூர்ப்பணகை ஆசை வெளிப்படுகிறது. 'நசை' என்பது அவள் இராமன் மீது கொண்ட ஆசையைக் குறிப்பிட்டாலும் சீதையை இராவணன் அடைய வேண்டி அவளை எடுத்து வரமுற்பட்ட ஆசையைக் கருத்தில் கொண்டது பின்னர்ப் புலப்படும் (2881, 3147) இவ்வாறு கூறுவதால் இவ்விடத்திலும் சூர்ப்பணகை தன்னைப் 'பொய்ம்மகள்' (2778) என்பதை நிறுவுகின்றாள்.*

***2842. 'கானம் அதினிடை, இருவர், காதொடு***
***மூக்கு உடன் அரிய,***
***மானமதால், பாவியேன், இவண்***
***மடியக் கடவேனோ?-***
***தானவரைக் கரு அறுத்து, சதமகனைத்***
***தளை இட்டு,***

*வானவரைப் பணி கொண்ட*
*மருகாவோ! மருகாவோ!!*

***தான வரைக் கரு அறுத்து -*** *வித்தியாதரர்களைக் குலத்தோடு அழித்து;* ***சதமகனைத் தளையிட்டு -*** *நூறு அசுவமேத யாகம் செய்த இந்திரனைப் போரில் வென்று சிறைப்படுத்தி;* ***வானவரைப் பணி கொண்ட மருகாவோ மருகாவோ -*** *தேவர்களை ஏவல் கொண்ட மருமகனாம் இந்திரசித்தே! இந்திரசித்தே!!;* ***கானம் அதனிடை இருவர் காதொடு மூக்கு உடன் அரிய -*** *இக்காட்டிலே இரு மனிதர் என்னுடைய காதுகளையும் மூக்கையும் ஒரு சேர அறுத்து விட;* ***பாவியேன் மானமதால் இவண் மடியக் கடவேனோ -*** *பாவம் செய்த நான் அவமானத்தால் இங்குக்கிடந்து சாவதற்கு உரியவள் ஆவனோ; தானவர் என்பதற்கு அசுரர்கள் எனப் பொருள் கூறுவர். ஆயின், சிந்தாமணியில் (535) தப்பில் வாய் மொழித் தானவர் வைகிய' என்ற அடியிலுள்ள 'தானவர்' என்பதற்கு வித்தியாதரர் என்ற அடிக்குறிப்பு மேருமந்தர புராணத்தில் (சஞ்சயந்தன். 6) உள்ள பாடலில் 'சாம மார்ந் திலங்கு மேனித் தானவனொருவன்' என வரும் அடிக்கேற்பப் பொருள் கொள்ளப்படும். அது போன்றே இங்கும் வித்தியாதரர் எனவே பொருள் கொள்வது பின்வரும் 'சதமகனைத் தளையிட்டு' என்பதனோடு இயையும். அசுரர் பலரை அழித்ததாகப் பொருள் கூறுவோர் உத்தரராமாயணத்திலிருந்து இந்திரசித்து அசுரரை அழித்ததற்குச் சான்று பொருள் கூறுவோரும் உளர் மானம் - அவமானம். இப்பொருளில் 'மானந் தலை வருவ செய்பவோ' என நாலடியாரிலும் (198) ஆளப் பெறும். இதுவும் அடுத்த பாடலும் இராவணன் மகன் இந்திரசித்துவை நோக்கிக் கூறியவை. 11*

*2843* ***'ஒரு காலத்து, உலகு ஏழும் உருத்து***
***எதிர, தனு ஒன்றால்,***
***திருகாத சினம் திருகி, திசை***
***அனைத்தும் செல நூறி,***
***இரு காலில், புரந்தரனை***
***இருந்த தளையில் இடுவித்த***
***மருகாவோ! மானிடவர் வலி***
***காண வாராயோ?***

***ஒரு காலத்து உலகு ஏழும் உருத்து எதிர -*** *முன்னொரு காலத்தில் ஏழு உலகங்களும் சினந்து எதிர் வந்து போர் செய்ய;* ***தனு ஒன்றால் திருகாத சினம் திருகி -*** *தன் ஒரு வில்லால் தணியாக் கோபம் முதிர்ந்து;* ***திசை அனைத்தும் செல நூறி -*** *எல்லாத் திக்குகளிலும் அஞ்சி ஓடிச் செல்ல அழித்து;* ***புரந்தரனை இருகாலில் இருந்தளையில் இடுவித்த -*** *இந்திரனின் இரண்டு கால்களிலும் வலிய விலங்குகளிட்டுப் பிணித்த;* ***மருகாவோ -*** *மருமகனாம் இந்திரசித்தே!;* ***மானிடவர் வலி காண வாராயோ -*** *இந்த மனிதர்களின் வலிமையைக் காண வரமாட்டாயா?*

*முன்பு இராவணன் ஏழுலகங்களையும் வென்ற போது அவனுக்குத் துணையாக அவன் மகன் இந்திரசித்துவும் சென்று போரிட்டுப் பலரையும் வென்ற நிகழ்ச்சியைச் சூர்ப்பணகை நினைத்து இவ்வாறு கூறுகின்றாள். ஏழுலகங்களையும் இந்திரசித்து தன் ஒரு வில்லாலேயே வென்றமையால் அவன் வலிமை நன்கு புலப்படும். அத்தகையோன் மானிடவர் வலிமை காண்பது மட்டுமின்றி அவர் வில்லாற்றலையும்*

*வீழ்த்துவான் என்பது குறிப்பு. 'இருஞ் சிறையிலிட வைத்த' எனப் பாடம் கூறி இந்திரனைப் பெரிய சிறையிலடைத்தமையைக் கூறுவர். இந்திரன் இவனிடம் பல முறைதோற்றான் என்பதை யுத்த காண்ட நாகபாசப் படலத்தில் காணலாம்.*

***2844. 'கல் ஈரும் படைத் தடக் கை,***
***அடல், கர தூடணர் முதலா,***
***அல் ஈரும் சுடர் மணிப் பூண்,***
***அரக்கர் குலத்து அவதரித்தீர்!***
***கொல் ஈரும் படைக் கும்ப***
***கருணனைப் போல், குவலயத்துள்***
***எல்லீரும் உறங்குதிரோ?***
***யான் அழைத்தல் கேளீரோ?'***

***கல் ஈரும் படைத்தடக்கை அடல் கர தூடணர் முதலா -*** *கல்லையும் பிளக்க வல்ல போர்க்கருவிகள் கொண்ட பெரிய கைகளுடைய வலிமை பெற்ற கரனும் தூடணனும் முதலாக;* ***அல் ஈரும் சுடர் மணிப் பூண் அரக்கர் குலத்து அவதரித்தீர் -*** *இருளை அழிக்கும் ஒளியுடைய மாணிக்கக்கலன்களை அணிந்த இராக்கதர் குலத்தில் தோன்றியவர்களே!;* ***கொல் ஈரும் படைக் கும்பகருணனைப் போல் -*** *கொல்லனால் அராவப்பட்ட கூரிய படைக்கலன் கொண்ட கும்பகருணனைப் போன்று;* ***குவலயத்துள் எல்லீரும் உறங்குதிரோ -*** *உலகத்தில் எல்லோரும் தூங்குகின்றீர்களா?;* ***யான் அழைத்தல் கேளீரோ -*** *(அதனால்) நான் கூப்பிடுவதைக் கேட்க மாட்டீர்களா?*

*சேய்மைக் கண் உள்ள இலங்கையில் இராவணன் இந்திரசித்துப் போன்றவர்கள் நான் கதறுவதைக் கேட்காமலிருக்கலாம். ஆனால் அண்மையிலுள்ள கரன் தூடணன் போன்றவர்கள் கேட்கலாம். ஆனால் அவர்கள் கேளாததற்குக் கும்பகருணன் போல உறங்கி விட்டார்களோ என ஐயுறுகிறாள் சூர்ப்பணகை. கும்பகருணன் - குடம் போலக் காதை உடையவன். இவன் தவம் செய்த போது பிரமன் இவன் முன் தோன்றி 'வரம் கேள்' என அருளிய போது இவன் நாவில் வந்து தங்கிய கலைமகளின் சூழ்ச்சியால் என்றும் நித்திரையுள்ளவனாக வரம் கேட்டதால் எப்போதும் தூங்கிய வண்ணமிருந்தான். இது புராண வரலாறு. இராமாவதாரக் காப்பியத்தில் அரக்கர்களும் அவதாரம் செய்ததாகவே சூர்ப்பணகை விளிக்கின்றாள்.*

*இராமன் வர, அவனிடம் முறையிடுதல்*

***2845. என்று, இன்ன பல பன்னி, இகல்***
***அரக்கி அழுது இரங்கி,***
***பொன் துன்னும் படியகத்துப்***
***புரள்கின்ற பொழுதகத்து,***
***நின்று, அந்த நதியகத்து, நிறை***
***தவத்தின் குறை முடித்து,***

***வன்திண்கைச் சிலை நெடுந்தோள்***
***மரகதத்தின் மலை வந்தான்.***

***என்று இன்ன பல பன்னி*** - *என இவ்வாறு பலவற்றைச் சொல்லி;* ***இகல் அரக்கி அழுது இரங்கி*** - *வலிய அந்தச் சூர்ப்பணகை புலம்பி வருந்தி;* ***பொன் துன்னும் படியகத்துப் புரள்கின்ற பொழுதகத்து*** - *அழகு மிக்க (அத்தவச்சாலையின்) நிலத்திடத்துப் புரண்டழும் காலத்து;* ***வன் திண்கைச் சிலை நெடுந்தோள் மரகதத்தின் மலை*** - *மிகவலிய கையில் வில்லை ஏந்தி நெடுந் தோளுடைய மரகதம் போன்ற மலை எனும்படி உள்ள இராமன்;* ***அந்த நதியகத்து நிறை தவத்தின் குறை முடித்து நின்று வந்தான்*** - *அக்கோதாவரி ஆற்றின் துறையில் விதி முறைப்படி செய்யும் நாட்கடன்களைச் செய்து முடித்து அங்கிருந்து தவச்சாலை நோக்கிவந்தான்.*

*பன்னுதல் - பலமுறை வருந்திக் கூறுதல். முன்னரும் 'தன் குலத்தினோர் பெயரெலாங் கூறி ஆற்றுகிற்கிலள்; பற்பல பன்னி நின்று அழைத்தாள்' (2831) என வரும். பொன் - அழகு. 'பொன் புனைந்த கழலடியோன்' (பு. வெ. மாலை 7.2. கொளு) என்று இப்பொருளில் பயன்பட்டுள்ளது. பொழுது - இங்குக் காலையைக் குறிக்கும். இராமனுக்கு மரகதமலை இக்காப்பியத்தில் பல இடங்களில் 'மரகதப் பெருங்கல்' (532)'பொரு அரு மரகதப் பொலன் கொள் மால்வரை' (5273) எனக் குறிக்கப் பெறும். இராமன் கடன்களாற்றுவதால் தவத்தின் குறை தீர்ந்தது எனவும் கூறுவர்.*

***2846. 'வந்தானை முகம் நோக்கி,***
***வயிறு அலைத்து, மழைக் கண்ணீர்,***
***செந் தாரைக் குருதியொடு***
***செழு நிலத்தைச் சேறு ஆக்கி,***
***அந்தோ! உன் திருமேனிக்கு***
***அன்பு இழைத்த வன் பிழையால்***
***எந்தாய்! யான் பட்டபடி***
***இது காண்' என்று, எதிர் விழுந்தாள்.***

***வந்தானை*** - *அங்கு வந்த இராமனை;* ***முகம் நோக்கி வயிறு அலைத்து*** - *அவன் முகத்தை (சூர்ப்பணகை) பார்த்துத் தன் வயிற்றில் அடித்துக் கொண்டு;* ***மழைக் கண்ணீர் செந்தாரைக் குருதியொடு செழுநிலத்தைச் சேறு ஆக்கி*** - *மழை போல் கண்ணீராலும் தொடர்ந்து ஒழுகும் சிவந்த இரத்தத்தாலும் செழுமையான அந்த மண்ணைச் சேறாகக் கொண்டு;* ***எந்தாய் அந்தோ உன் திருமேனிக்கு அன்பு இழைத்த வன் பிழையால்*** - *என் தலைவனே! ஐயோ! உன் அழகிய வடிவின் மீது ஆசை கொண்ட கொடிய குற்றத்தால்;* ***யான்பட்டபடி இது காண் என்று எதிர் விழுந்தாள்*** - *நான் அடைந்த இக்கேட்டைப் பார் என இராமன் முன் வீழ்ந்தாள்.*

*முகம் நோக்கல் - இரக்கம் வேண்டி ஒருவர் முகத்தைப் பார்த்தல். வயிறு அலைத்தல் - மகளிர் தங்களுக்குத் துன்பம் வந்தபோது கைகளால் வயிற்றில் அடித்துக் கொள்ளல். இதனைச் சுட்டும் வகையில் 'எயிற்றி மாதர் வயிறு அலைத்து ஓட' (25) என வந்துள்ளது.*

*பொதுவாக வன்பு இழைத்தவர்கள் தான் துன்புறுவர். ஆனால் இராமனிடத்துத் தான் அன்பு கொண்ட காரணத்தால் உறுப்பிழந்த அவலத்தை அவனிடம் கூறி அவன் தன் மீது ஆசை கொள்ள வைக்கலாம் எனச் சூர்ப்பணகை கெஞ்சுகிறாள். 'அன்பிழைத்த வன் பிழை' என்ற தொடரில் காணும் முரண், உலகியலுக்கு எதிராக நடை பெற்ற கொடுமையை இராமன் உணர வேண்டும் என்ற உட்கருத்தும் வெளிப்படும். தன் சொல்லாலும் எதிர் விழுந்த செயலாலும் இராமன் உளத்தை ஈர்க்கவே சூர்ப்பணகை முயலும் பாங்கு அவலக் காட்சியாக இதில் வெளிப்படுகிறது.*

***2847. விரிந்து ஆய கூந்தலாள்,***
***வெய்ய வினை யாதானும்***
***புரிந்தாள் என்பது, தனது***
***பொரு அரிய திருமனத்தால்***
***தெரிந்தான்; இன்று, இளையானே***
***இவளை நெடுஞ் செவியொடு மூக்கு***
***அரிந்தான் என்பதும் உணர்ந்தான்;***
***அவளை, 'நீயார்?' என்றான்.***

***விரிந்து ஆய கூந்தலாள் -*** *விரிந்துள்ள கூந்தலை உடைய அவள்;* ***வெய்ய வினை யாதானும் புரிந்தாள் என்பது -*** *கொடிய செயல் ஏதேனும் செய்தாள் என்பதை;* ***தனது பொரு அரிய திருமனத்தால் தெரிந்தான் -*** *(இராமன்) தன் ஒப்பற்ற சிறந்த உள்ளத்தால் அறிந்தாள்;* ***இன்று இளையானே இவளை -*** *இப்போது தன் தம்பி யாம் இலக்குவனே இவளை;* ***நெடுஞ் செவியொடு மூக்கு அரிந்தான் என்பதும் உணர்ந்தான் -*** *நீண்ட காதுடன் மூக்கையும் அறுத்தான் என்பதையும் அறிந்தான்;(அதன்பின்)* ***அவளை நீ யார் என்றான் -*** *சூர்ப்பணகையைப் பார்த்து, நீ யார்? எனக் கேட்டான்.*

*விரிந்த கூந்தல், சூர்ப்பணகையின் அவல நிலையைக் காட்டுகிறது. வெய்ய வினை - பிறர்க்குத் தீங்கு செய்யும் கொடிய செயல். இராமன் எதையும் பிழையின்றி உணரும் மனம் பெற்றவன் என்பதைப் 'பொரு அரிய திருமனம்' என்பது காட்டும் - அந்த அரக்கிக்கு இத்தகைய செயல் செய்திருப்பவன் இலக்குவன் என்றும் அவள் பிறர்க்கு யாதேனும் தீமை செய்ய விருந்ததைத் தடுக்கவே இலக்குவன் இச் செயல் செய்திருப்பான் என்றும் எண்ணிய இராமனின் உள்ளம் நன்கு தன் தம்பியர் மீது கொண்ட நம்பிக்கையைப் புலப்படுத்துகிறது. எனினும் புதியதாகச் சூர்ப்பணகையைக் காண்பவன் போன்று நீ யார்?' எனக் கேட்டான். காமவல்லி உருவம்மாறியிருந்ததால் இவ்வாறு கேட்டான் எனலுமாம்.*

***2848. அவ் உரை கேட்டு, அடல் அரக்கி,***
***'அறியாயோ நீ, என்னை?***
***தெவ் உரை என்று ஓர் உலகும்***
***இல்லாத சீற்றத்தான்;***
***வெவ் இலை வேல் இராவணனாம்,***
***விண் உலகம் முதல் ஆக***

***எவ் உலகும் உடையானுக்கு***
***உடன்பிறந்தேன் யான்' என்றாள்.***

***அவ்வுரை கேட்டு அடல் அரக்கி -*** *(இராமனின்) அவ்வார்த்தையைக் கேட்டு;* ***என்னை நீ அறியாயோ -*** *நீ முன்பே என்னை அறிய மாட்டாயோ?;* ***தெவ் உரை என்று ஓர் உலகும் இல்லாத சீற்றத்தான் -*** *பகைமைப் பேச்சு என்று கூறும் சொல்லை உலகம் ஒன்றிலும் இல்லாதபடி செய்த கோபமுடையவனான;* ***வெவ் இலை வேல் இராவணனாம் விண் உலகம் முதல் ஆக எவ் உலகும் உடையானுக்கு -*** *கொடிய இலை போல்வடித்த வேலை உடைய இராவணன் எனும் சுவர்க்கலோகம் முதல் எந்த உலகத்தையும் தன்னாட்சிக் கீழ் உடையவனுக்கு;* ***உடன்பிறந்தேன் யான்என்றாள் -*** *கூடப் பிறந்த தங்கை நான் எனக் கூறினாள் சூர்ப்பணகை.*

*இராமன் 'வெய்ய வினை யாதானும் புரிந்தாள்' என எண்ணியதற்கேற்ப (2847) 'அடல் அரக்கி' எனப்பட்டாள். 'நேற்று வந்த என்னை நீ அறியாயோ? என்ற குறிப்பு அவள் கேள்வியில் தொனிக்கிறது. 'எனக்குத் தீங்கு செய்தவர் பகையை உலகெங்கும் பகைச் சொல்லேஇல்லாது' ஆண்ட இராவணன் அழிப்பான் என அச்சுறுத்துகிறாள்.இராவணனிடம் பல படைகளிருப்பினும் வேற்படை சிறப்பாகக் கூறப்பட்டது. இது யுத்த காண்டத்தில் நன்கு வெளிப்படும்.*

***2849. 'தாம் இருந்த தகை அரக்கர்***
***புகல் ஒழிய, தவம் இயற்ற***
***யாம் இருந்த நெடுஞ் சூழற்கு***
***என் செய வந்தீர்?' எனலும்,***
***"வேம் இருந்தில் எனக் கனலும்***
***வெங்காம வெம் பிணிக்கு***
***மா மருந்தே! நெருநலினும்***
***வந்திலெனோ யான்?" என்றாள்.***

***தகை அரக்கர் தாம் இருந்த புகல் ஒழிய -*** *பெருமை பெற்ற இராக்கதர் இருந்த இடம் நீங்க, (அவ்விடம் விட்டு);* ***தவம் இயற்ற யாம் இருந்த நெடுஞ்சூழற்கு என் செய வந்தீர் எனலும் -*** *நாங்கள் தவம் செய்ய வந்த இத்தூரத்தில் உள்ள இடத்திற்கு எச் செயல் செய்ய வந்தீர் என இராமன் கேட்கவும்;* ***வேம் இருந்தில் எனக் கனலும் வெங்காம வெம் பிணிக்கு மாமருந்தே -*** *நெருப்பில் எரியும் கரிபோல் வாட்டும்கொடிய காமமாம் கொடு நோய்க்குரிய சிறந்த மருந்து போன்றவனே!;* ***யான் நெருநலினும் வந்திலெனோ என்றாள் -*** *நான் நேற்றும் வரவில்லையா எனக் கேட்டாள் சூர்ப்பணகை.*

*பகைவராயினும் அவர்தம் வலிமை புலப்படத் 'தகை அரக்கர்' என்றார் இராமன் காட்டுக்குத் தவம் செய்ய வந்த குறிப்பு. அயோத்தியா காண்டத்தில் கைகேயி கூறும் மொழியில் 'ஆழிசூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய், தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந்தவம் மேற் கொண்டு (1601) என வரும். இருந்தில் - கரி. காமத்தை வெங்காமம் என்றும் அதனையே வெம் பிணி என்றும் கூறியது அதன் கொடுமை சுட்டி நின்றது. காமத்தைத் தீர்க்க இராமன் மருந்து எனக் கூறியதில் அவன் சூர்ப்பணகையை மணக்க வேண்டும் என்பதே வெளிப்படைப் பொருள்; எனினும் இராமன் காமத்தை*

*நீக்கும் மாமருந்து என உயர் பொருளையும் குறிப்பாகக் காட்டும்.*

***2850. ' "செங் கயல்போல் கரு நெடுங் கண்,***
***தே மரு தாமரை உறையும்***
***நங்கை இவர்" என நெருநல்***
***நடந்தவரோ நாம்?' என்ன,***
***'கொங்கைகளும், குழைக்காதும், கொடிமூக்கும்,***
***குறைத்து அழித்தால்,***
***அம் கண் அரசே! ஒருவர்க்கு அழியாதோ***
***அழகு?' என்றாள்.***

***செங்கயல் போல் கரு நெடுங் கண் -*** *சிவந்த கயல் மீன் போன்று பிறழும் கரிய நீண்ட கண்களையுடைய;* ***தே மரு தாமரை உறையும்நங்கை இவர் -*** *தேன் பொருந்திய தாமரை மலரில் தங்கிய திருமகளே இவர்;* ***என நெருநல் நடந்தவரோ நாம் என்ன -*** *என்று கூறும்படி நேற்று வந்தவர் நீரோ என (இராமன்) கேட்க;* ***கொங்கைகளும் குழைக்காதும் கொடி மூக்கும் குறைந்து அழித்தால் -*** *மார்பகங்களும் குழைகளை அணிந்த காதுகளும் கொடி போல் உயர்ந்து நீண்ட மூக்கும் குறைபடுமாறு அறுத்தால்;* ***அம்கண் அரசே! -*** *அழகிய கண்களை உடைய அழகின் அரசே!;* ***ஒருவர்க்கு அழகு அழியாதோ என்றாள் -*** *எப்படிப்பட்ட ஒருவர்க்கும் அழகு அழியாதோ எனக் கேட்டாள் சூர்ப்பணகை.*

*கயல் மீன் - மகளிர் கண்ணுக்கு உவமை. இலக்குவன் சூர்ப்பணகையின் 'மூக்கும் காதும்வெம் முரண் முலைக் கண்களும் முறையால் போக்கி'யதைக் (2825) கண்டோம். அச் செயலைக் கூறி அவ்வாறு அங்கங் குறைபட்ட பெண்ணிடம் அழகு எவ்வாறு இருக்கும் என இராமனை நோக்கிச் சூர்ப்பணகை கேட்டாள். அப்போதும் அவனுடைய கண் அத்தகைய கொடுமையைப் பாராது இராது எனக் கூறும் வகையில் 'அம் கண் அரசே' என்றாள். 'நாம்' என இராமன் இங்குக் குறித்ததை 'முன்னிலை உளப்பாட்டுத் தன்மையில் உயர்வு தோன்ற முன்னிலை வந்தது' எனத் திருக்கோவையார் இரவுக் குறியில் தளர்வகன்றுரைத்தல் பற்றிய கூற்றில் காணும் 'பையவே நாம் அரையாமத்து என்னோ வந்து வைகி நயந்ததுவே' (164) என்ற தொடரில் 'நாம்' என்ற சொற்குப் பேராசிரியர் கூறும் உரையுடன் ஒப்பிடத்தக்கது.*

*இராமன், 'இவள் இழைத்த பிழை என்?' என இலக்குவன் விடையிறுத்தல்*

***2851. மூரல் முறுவலன், இளைய***
***மொய்ம் பினோன் முகம் நோக்கி,***
***'வீர! விரைந்தனை, இவள்தன்***
***விடு காதும், கொடி மூக்கும்,***
***ஈர, நினைந்து இவள் இழைத்த***
***பிழை என்?' என்று இறை வினவ,***
***சூர நெடுந்தகை அவனை***
***அடி வணங்கி, சொல்லுவான்.***

***இறை*** - *தலைவனாம் இராமன்,* ***மூரல் முறுவலன்*** - *புன்சிரிப்புப்பூத்து;* ***இளைய மொய்ம்பினோன் முகம் நோக்கி*** - *இளைய வீரனாம் இலக்குவனின்முகத்தைப் பார்த்து;* ***வீர*** - *வீரனே!;* ***விரைந்தனை*** - *மிக விரைவாக;* ***இவள் தன் விடுகாதும் கொடி மூக்கும் ஈர இவள் நினைந்து இழைத்த பிழை என்' என்று வினவ*** - *இவளுடைய தொங்கவிடப்பட்ட காதும் நீண்ட மூக்கையும் அறுத்தெறிய இவள் எண்ணிச் செய்த குற்றம் யாது எனக் கேட்கவும்;* ***சூர நெடுந் தகை*** - *சூரத்தன்மையும் பெருமையும்கொண்ட இலக்குவன்;* ***அவனை அடிவணங்கி(ச்) சொல்லுவான்*** - *இராமன் திருவடியைப் பணிந்து கூறலானான்.*

*மூரல் முறுவலன் - பற்கள் சிறிது வெளியே தெரியச் சிரிப்பவன் இப்படலத்தில் 'சீதை தன் நடையை நோக்கி, சிறியது ஓர் முறுவல் செய்தான்' (2736) எனக் கூறிப் பின் சூர்ப்பணகை காமவல்லியாய் வந்துரையாடிய போது 'வாள் எயிறு இலங்க நக்கான்' (2787) என்பதும் காண்க. மற்ற இரு உறுப்புகளைக் கூறிய இராமன் கொங்கைகளைக் கூறாமை 'ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய வழுக்கியும் வாயால் சொலல்' (குறள். 139) என்ற வள்ளுவர் காட்டிய ஒழுக்கமுடைமைக்கு ஏற்ற செயலாம். 'கொடி மூக்கு' என முன்னும் வந்தது (2850). இப்படல இறுதியிலும் (2874) கொடிமூக்கு குறிக்கப் பெறும். இவள் கொடுஞ் செயலே இலக்குவனை அவ்வாறு விரைந்து செயல்படுமாறு தூண்டியிருக்கும் என்ற கருத்துவெளிப்பட 'இவள் இழைத்த பிழை என்?' என இராமன் கேட்ட கேள்வி அமைகிறது.*

***2852. 'தேட்டம்தான் வாள் எயிற்றில்***
***தின்னவோ? தீவினையோர்***
***கூட்டம்தான் புறத்து உளதோ? குறித்த***
***பொருள் உணர்ந்திலனால்;***
***நாட்டம்தான் எரி உமிழ,***
***நல்லாள்மேல் பொல்லாதாள்***
***ஓட்டந்தாள்; அரிதின் இவள் உடன்று***
***எழுந்தாள்' என உரைத்தான்.***

***வாள் எயிற்றில் தின்ன(த்) தேட்டம் தானோ*** - *கூரிய பற்களால்தின்னுதற்குத் தேடுதலாலேயோ;* ***தீவினையோர் கூட்டம் தான் புறத்து உளதோ*** - *கொடுஞ் செயல் புரிகின்ற அரக்கர் கூட்டம் பின்னே இருந்ததோ?;* ***குறித்த பொருள் உணர்ந்திலன்*** - *(இவள்) செய்யக் கருதிய காரணத்தை அளிந்தேனில்லை;* ***பொல்லாதாள் நாட்டம் தான் எரி உமிழ*** - *தீமை புரியும் இவளுடைய கண்கள் தீயைக் கக்க;* ***அரிதின் உடன்று இவள் எழுந்தாள்*** - *பிறர்க்கு உணர இயலா வகையில் கோபித்து இவள் புறப்பட்டாள்;* ***நல்லாள் மேல் ஓட்டந்தாள் என உரைத்தான்*** - *நற்பண்புள்ள சீதையை நோக்கி ஓடி வந்தாள் என்று சொன்னான்;* ***ஆல்*** - *அசை.*

*தேட்டம் - தேடுதல், நாட்டம் - கண், பொருள் - காரணம். இலக்குவனுக்குச் சூர்ப்பணகை செய்த செயலின் காரணம் தெரியவில்லை. சீதையைக் கைப்பற்றித் தின்னுதற்குத் தான் மட்டும் வந்தாளா அன்றித் தன் அரக்கர் கூட்டத்துடன் வந்தாளா எனத் தெரியவில்லை. 'தம்பி இருண்டசோலையில் இருந்தது காணாள்' (2822) என்று*

*முன்னர் வந்துளது கொண்டு அச்சோலைக்குப் புறத்தே அரக்கர் இருக்கலாம் என இலக்குவன் எண்ணினான்.*

*முதல் மூன்று அடிகளில் வரும் 'தான்' எனும் மூன்று சொற்களும் தேற்றப் பொருளில் வந்த இடைச் சொற்கள் 'நல்லாள் மேல் வந்த பொல்லாதாள்' - முரண் அணி. ஓட்டந்தாள் - ஓட்டம் தந்தாள் என்பதன் விகாரம். அயோத்தியா காண்ட நகர் நீங்கு படலத்தில் தயரதன் தன் சாப வரலாறு கூறும் போது 'வீட்டுண்டு அலறும் குரலாம் வேழக்குரல் அன்று எனவே ஓட்டந்து எதிரா' (1686) என இப்பொருளில் வந்துளது. சூர்ப்பணகை தன்மேல் வரக் கண்ட சீதை உயிரிழந்தவள் போல் தளர்ந்து கிடந்து பின் தன்னுயிரை மீண்டும் பெற்றாள் எனவும் பொருள் உரைப்பர்.*

*சூர்ப்பணகை இடை மறித்து உரைத்தல்*

***2853. ஏற்ற வளை வரி சிலையோன்***
***இயம்பாமுன், இகல் அரக்கி,***
***'சேற்ற வளை தன் கணவன்***
***அருகு இருப்ப, சினம் திருகி,***
***சூல் தவளை, நீர் உழக்கும் துறை***
***கெழு நீர் வள நாட!***
***மாற்றவளைக் கண்டக்கால்***
***அழலாதோ மனம்?' என்றாள்.***

***ஏற்ற வளை வரி சிலையோன் இயம்பாமுன் -*** *வளைந்த கட்டமைந்த வில்லுடைய இலக்குவன் இவ்வாறு சொல்லி முடிக்குமுன்;* ***இகல் அரக்கி -*** *பகைமை கொண்ட அரக்கியாம் சூர்ப்பணகை;* ***சூல் தவளை தன் கணவன் அருகு சேற்றவளை இருப்ப -*** *கருவுற்ற பெண் தவளை தன் கணவனாம் ஆண் தவளை அருகே சேற்றில் ஒரு சங்கு தங்கியிருக்க;* ***சினம் திருகி நீர் உழக்கும் துறை கெழு நீர்வள நாட! -*** *கோப முதிர ஊடல் கொண்டு நீரைக் கலக்கும் நீர்த்துறை பொருந்திய நீர் நிலைகளால் வளம் பெற்ற நாட்டையுடையவனே!;* ***மாற்றவளைக் கண்டக்கால் மனம் அழலாதோ என்றாள் -*** *தன் கணவனின் மற்றொரு மனைவியைக் கண்டால் மனம் எரியாதோ எனக் கேட்டாள்.*

*ஏற்ற வரிசிலையோன் - மேலும் சூர்ப்பணகை தீச் செயல் புரிய நினைத்தால் அவள் மேல் அம்பு எய்யப் பூட்டிய வில்லுடைய இலக்குவன் எனலுமாம். சூல்தவளை சங்கோடு சினக்கும் என நாட்டு வளம் கூறும்போது அஃறிணை உயிர்களே தன் கணவன் அருகே பிற பெண்ணிருக்கச் சினக்கும் போது, தான் விரும்பும் இராமன் அருகே மாற்றாளாய் ஒருத்தி நிற்கக் கண்டு சினவாமல் இருக்க இயலுமா எனக் குறித்துக் கேட்கிறாள் சூர்ப்பணகை.*

*இந்நாட்டு வள வரிகளைச் சங்கப் பாடலில் காணும் 'புழற் காலாம் பலகலடை நீழற் கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுகயேற்றை நாகின வளையொடு பகன் மணம் புகூஉம் நீர்திகழ் கழனிநாடு' (புறம் 266-3-6) வரிகளுடன் ஒப்பிடலாம்.*
*122'ஓடிப் போ' என்று இராமன் கடிதலும், அவள் தன்னை ஏற்குமாறு இறைஞ்சலும்*

*2854. 'பேடிப் போர் வல் அரக்கர்*
*பெருங் குலத்தை ஒருங்கு அவிப்பான்*
*தேடிப் போந்தனம்; இன்று,*
*தீ மாற்றம் சில விளம்பி,*
*வீடிப் போகாதே; இம்*
*மெய் வனத்தை விட்டு அகல*
*ஓடிப் போ' என்று உரைத்த*
*உரைகள் தந்தாற்கு, அவள் உரைப்பாள்:*

*(சூர்ப்பணகை சொற்களைக் கேட்டு இராமன்)* **பேடிப் போர் வல்அரக்கர் பெருங்குலத்தை ஒருங்கு அவிப்பான் தேடிப் போந்தனம் -** *பேடித் தன்மையுள்ள மாயப் போர்கள் செய்வதில் வல்ல இராக்கதர்களின் பெரிய குலத்தை முற்றிலும் அழிக்க அவர்களைத் தேடி இங்கு வந்தோம்;* **இன்று தீ மாற்றம் சில விளம்பி வீடிப் போகாதே -** *இப்போது தீய சொற்களில் சிலவற்றைக் கூறி அழிந்து போகாதே;* **இம் மெய் வனத்தை விட்டு அகல ஓடிப்போ -** *மெய்ம்மைக்குரிய இந்தக் காட்டிலிருந்து அகன்று ஓடிப் போ;* **என்று உரைத்த உரைகள் தந்தாற்கு அவள் உரைப்பாள் -** *எனக் கூறிய சொற்களைச் சொன்ன இராமனிடம் சூர்ப்பணகை இவ்வாறு கூறலானாள்.*

*பேடித்தல் - அச்சம் கொள்ளல் எனக் குடநாட்டு வழக்குப் பற்றிப் பொருள் கூறுவர். அறப் போர் புரியாமல் மறைந்திருந்து பல மாயம் செய்து போர் புரியும் அரக்கரைப் பேடிப் போர் செய்வோராகக் கூறினான். எனலாம். இனிச் சூர்ப்பணகையையும் அச்சுறுத்தினான் இராமன்.*

*'உரை கடந்தான்' என்று புணர்ச்சிச் செயன்மைப் பட்டு விளங்கும் தொடர்க்குப் பல வகையில் பொருள் காண்பர்.*

*உரை கடந்தான் என்ற தொடர்க்கு வேதியர் முனிவர் தேவர் முதலானோர் சொற்கள் கூறும் பொருளுக்கு அப்பாற்பட்டவன் என்பர்.*

*உரைகள் தந்தான் என்பதற்கு வேதங்களை (ப்பிரமனுக்கு) உரைத்தவன் என்பர்.*

*2855. 'நரை திரை என்று இல்லாத*
*நான்முகனே முதல் அமரர்*
*கரை இறந்தோர், இராவணற்குக் கரம்*
*இறுக்கும் குடி என்றால்,*
*விரையும் இது நன்று அன்று; வேறு*
*ஆக யான் உரைக்கும்*
*உரை உளது, நுமக்கு உறுதி உணர்வு*
*உளதேல்' என்று உரைப்பாள்:*

***நரை திரை என்று இல்லாத -*** *மயிர் நரைத்தலும் தோல் சுருங்குதலும் ஆகிய கிழத்தன்மை என்பதில்லாத;* ***நான்முகனே முதல் அமரர் கரை இறந்தோர் -*** *பிரம்மா முதலான தேவர்களில் எல்லையற்ற அளவுள்ளவர்கள்;* ***இராவணற்குக் கரம் இறுக்கும் குடி என்றால் -****என் அண்ணனாம் இராவணனுக்கு இறை செலுத்தி அவன் ஆட்சிக்குட்பட்ட குடிமக்கள் என்று சொன்னால்;* ***விரையும் இது நன்று அன்று -*** *இப்போது அவசரப் பட்டுச் செய்யும் செயல் நல்லது ஆகாது;* ***நுமக்கு உறுதி உணர்வு உளதேல் -*** *உங்களுக்கு உயிர் வாழும் உறுதியான அறிவு இருக்குமானால்;* ***வேறு ஆக யான் உரைக்கும் உரை உளது என்று உரைப்பாள் -*** *தனிப்பட நான் கூறும் சொல் உள்ளது எனக் கூறுவாள்.*

*நரை திரை இல்லாத என்று கூறியதால் மூப்பும் அதன் வழி வரும் சாவும் இல்லை எனக் கொள்ளப் பெறும். நான்முகன் முதலான தேவர்கள் எப்போதும் அழியா இளமை பூண்டவர்கள் என்பது புராண மரபு.*

*கரம் - கப்பம், திறைப் பொருள் குடி இறை எனவுமாம். பெருங்கதையுள் (1.32.61-62) கணக்கரை வியன் கரக் கலவறை காக்கும் திணைத் தொழிலாளரைப் புகுத்துமின் ஈங்கென' வரும். 'விரையும் இது' என்றது 'ஓடிப்போ' என (2854) எனக் கூறியதாம். 'உறுதி உணர்வு உளதேல் என்னுரை கேளுங்கள்' என்ற நயப்பு நிலை இதில் புலனாம்.*

***2856. '"ஆக்க அரிய மூக்கு, உங்கை***
***அரியுண்டாள்" என்றாரை***
***நாக்கு அரியும் தயமுகனார்;***
***நாகரிகர் அல்லாமை,***
***மூக்கு அரிந்து, நும் குலத்தை***
***முதல் அரிந்தீர்; இனி, உமக்குப்***
***போக்கு அரிது; இவ் அழகை எல்லாம்***
***புல்லிடையே உகுத்தீரே!'***

***உங்கை ஆக்கரிய மூக்கு அரியுண்டாள் -*** *"உன் தங்கை (சூர்ப்பணகை) படைப்பதற்கருமையான மூக்கு அறுபட்டாள்",* ***என்றாரை நாக்கு அரியும் தயமுகனார் -*** *நாக்கை அறுக்கும் பத்துத் தலையுடைய இராவணனார்,* ***நாகரிகர் அல்லாமை -*** *கண்ணோட்டம் உடையவர்அல்லாமையால்,* ***மூக்கு அரிந்து -*** *என் மூக்கை அறுத்து;* ***நும் குலத்தை முதல் அரிந்தீர் -*** *உம் குலத்தின் வேரையே அறுத்தவர் ஆனீர்;* ***இனி உமக்குப் போக்கு அரிது -*** *இனிமேல் உமக்குத் தப்பிப் பிழைக்கும் வழி இல்லை;* ***இவ் அழகை எல்லாம் புல்லிடை உகுத்தீரே -*** *இந்த அழகையெல்லாம் புல் அடர்ந்த காட்டில் சிந்தினவர் ஆயினீரே!';* ***ஏ-*** *அசை. மூக்கு என்றது அத்துடன் காதுகளையும் முலைகளையும் குறித்து நின்றது. தயமுகனார் இராவணனின் பத்துத் தலை உடைமையைச் சுட்டுகிறது. நாகரிகம் - கண்ணோட்டம். பெயக் கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர் (குறள். 580) என்ற ஆட்சியைக் காண்க. நாகரிகத்து (பெருங். 1.35.214) எனப் பெருங்கதையிலும் இப்பொருளில் வந்துளது. தங்கையின் மூக் கரிதல் கேட்டு இராவணன் இராமனின் குல முதலை அரிதல் உறுதி எனச் சூர்ப்பணகை கூறுகிறாள்.*

*இராமன் மறையின் அவன் அழகும் அழியுமே எனத் தன் காம வேகத்தில் சூர்ப்பணகை புலம்புகிறாள். இனி, அழகின் பொருளாக இருந்த தன் மூக்கை அரிந்து வீணாக்கி விட்டமையைச் சுட்டினாள் என்பர். புல்லிடை உகுத்தல் - வீணாக்கல் 'புல்லிடை உகுத்த அமுது ஏயும் போல் எனக் கூனி கைகேயியிடம் கூறுவாள் (1468). பரதன் கோசலையிடம்சூளுரை கூறியபோதும் 'ஆண் தொழில் புல்லிடை உகுத்தனென்' என்பான். (2214). தயமுகனார் - வடசொல் திரிபு. அரிந்தீர் - காலவழுவமைதி இப்பாடலில் உடனிகழ்ச்சி அணி உளது.*

***2857. 'வான் காப்போர், மண் காப்போர்,***
***மாநாகர் வாழ் உலகம்-***
***தான் காப்போர், இனி தங்கள் தலை***
***காத்து நின்று, உங்கள்***
***ஊன் காக்க உரியார் யார்?***
***என்னை, உயிர் நீர் காக்கின்,***
***யான் காப்பென்; அல்லால், அவ்***
***இராவணனார் உளர்!' என்றாள்***

***என்னை நீர் உயிர் காக்கின் -** (என் ஆசையை நிறை வேற்றி) என் உயிரை அழியாமல் நீர் காப்பீரானால்; **யான் காப்பென் -** நான் உங்களை இராவணனாரிடமிருந்து காப்பேன்; **அல்லால் இனி அவ் இராவணனார் உளர் -** அல்லாவிடில் உம்மை அழிக்க என் அண்ணனாம் அந்த இராவணனார் இருக்கிறார்; (அதனால்) **வான் காப்போர் -** மேலுலகைக் காக்கும் தேவர்களிலும்; **மண்காப்போர் -** நிலவுலகைக் காக்கும் அரசர்களிலும்; **மாநாகர் வாழ் உலகம் காப்போர் -** பெரிய நாகர்கள் வாழும் உலகங்காப்போரிலும்; **தங்கள் தலைகாத்து நின்று -**தங்களுடைய தலையை அறுபடாமல் காத்து; **உங்கள் ஊன் காக்க உரியார் யார்என்றாள் -** உங்களுடைய உடல்களைப் பாதுகாக்கத் தக்கவர் யார் என்று கேட்டாள். (ஒருவருமில்லை, என்னைத் தவிர). **தான் -** அசை.*

*மண்ணுலகு விண்ணுலகு மற்றெல்லா உலகுகள் ஆகியவற்றில்உள்ளவர்கள் இராவணனுக்கு அடிப்பட்டவரே. அவர்களில் எவரும்இராமனைக் காக்க இராவணனை எதிர்த்து வாரார். எனவே உங்களைக் காக்க நான் ஒருத்தியே உளேன்' எனச் சூர்ப்பணகை கூறினாள்.*

*ஊன் - உடல் 'ஊனைக் குறித்த உயிரெல்லாம்' (குறள். 1013) எனவருதல் காண்க. மாநகர் என்று பாடங் கொண்டு மாநகரங்களில் வாழும் உலகம்காப்போர் என்றுங் கூறுவர்.*

***2858. 'காவல் திண் கற்பு அமைந்தார்***
***தம் பெருமை தாம் கழறார்;***
***ஆவல் பேர் அன்பினால்,***
***அறைகின்றேன் ஆம் அன்றோ?***

***' "தேவர்க்கும் வலியான்தன் திருத்***
***தங்கையாள் இவள்; ஈண்டு***
***ஏவர்க்கும் வலியாள்" என்று,***
***இளையானுக்கு இயம்பீரோ?***

***திண் காவல் கற்பு அமைந்தார் தம் பெருமை தாம் கழறார் -*** *வலிய காவலாகிய கற்பு நெறியில் பொருந்திய பெண்கள் தம் உயர்வைத் தாமே எடுத்துக் கூறமாட்டார்;* ***ஆவல் பேர் அன்பினால் அறைகின்றேன் ஆம் அன்றோ -*** *(அப்படியாயினும்) உம்மிடம் நான் கொண்ட ஆசையால் பெரிய அன்பு கொண்டு இதனைச் சொல்கின்றேன் அல்லவா?;* ***தேவர்க்கும் வலியான் தன் திருத்தங்கையாள் இவள் -*** *வானவர்க்கும் வலிமையுடைய இராவணனாரின் பெருமைமிக்க உடன் பிறந்தாள் இவள்;* ***ஈண்டு ஏவர்க்கும் வலியாள் -*** *இவ்வுலகில் எப்பேர்ப் பட்டவர்க்கும் வலிமையுடையவள்;* ***என்று இளையானுக்கு இயம்பீரோ -*** *என்று உம் தம்பியாம் இலக்குவனுக்குக் கூற மாட்டீர்களா?*

*திண் கற்பு என்பதைக் கற்பென்னும் திண்மை (குறள். 54) என்பதுடன் ஒப்பிடுக. ஆவல் பேரன்பு - அளவு கடந்த பெரிய அன்பு. 'இளையான் என் வலி கருதாது என் உறுப்புகளை அறுத்துவிட்டான் எனினும் என் பேராற்றலையும் என் அண்ணனாம் இராவணனின் பேராற்றலையும் அவன் உணருமாறு கூறுக' என்றாள் சூர்ப்பணகை. இதில் சீதையைக் காட்டிலும் தன் பெருமை இருப்பதைக் கூறிக் கொண்டாள் எனலுமாம். ஆம் அன்றோ- தேற்றோகாரம்.*

***2859. 'மாப் போரில் புறங் காப்பேன்;***
***வான் சுமந்து செல வல்லேன்;***
***தூப் போல, கனி பலவும், சுவை***
***உடைய, தர வல்லேன்;***
***காப் போரைக் கைத்து என்? நீர்***
***கருதியது தருவேன்; இப்***
***பூப் போலும் மெல்லியலால்***
***பொருள் என்னோ? புகல்வீரே.***

***மாப் போரில் புறங்காப்பேன் -*** *பெரிய சண்டையில் (உங்களைப்) பாதுகாப்பேன்;* ***வான் சுமந்து செல வல்லேன் -*** *ஆகாய வழியில் உங்களை நான் எடுத்துக் கொண்டு (நீங்கள் கூறிய இடத்திற்கு) செல்லத் திறமை உடையவள் ஆவேன்;* ***தூப் போல -*** *மாமிசம் போல,* ***சுவைஉடைய, கனி பலவும் தரவல்லேன் -*** *நல்ல சுவை உடைய பழங்கள் பலவற்றையும் கொண்டு வந்து கொடுக்க வல்லவள் ஆவேன்;* ***காப்போரைக் கைத்து என் -*** *யார் காவல் செய்தாலும் அவர்களைவெறுத்து அழிக்க நீர் கருதியது ஏன்?* ***நீர் கருதியது தருவேன் -****நீங்கள் மனத்தால் விரும்பியதைக் கொண்டு வந்து கொடுப்பேன்;* ***இப்பூப் போலும் மெல்லியலால் பொருள் என்னோ புகல்வீரே -*** *இந்தப் பூவைப் போல் மெல்லிய பெண்ணால் பெறும் பயன் என்ன? சொல்வீர்.*

*புறங்காத்தல் - பகைவரால் வரும் தீமையை வாராமல் பாதுகாத்தல், வழிபடு தெய்வம் நிற் புறங் காக்க' எனத் தொல்காப்பியத் தொடர் இப் பொருளை*

*வலியுறுத்தும் (தொல். பொருள். 422). வானில் சுமந்து செல்லல் சூர்ப்பணகையின் ஆற்றலை வெளிப்படுத்தும். தூ - ஊன் 'காப்போரைக் கைத் தென்னில் கருதியது தருவேன்' எனப் பாடம் கொண்டு யார் எப் பொருளைக் காவல் செய்திருந்தாலும் அவரை அழித்து நீர் விரும்பியதைக் கொண்டு தருவேன் எனப் பொருள் கூறுவர். பூப்போலும் மெல்லியல் எனச் சீதையைக் குறித்தற்குக் காரணம் அவளால் அவர்களைக் காப்பாற்றவோ, வேண்டிய பொருளைத் தரவோ இயலா நிலையைக் குறித்து இழித்தது. பொருள் - பயன். 'மெய்ப் பொருள் காண்பது அறிவு' (குறள். 423) இதனைக் குகப் படலத்தில் குகன் 'தேனும் மீனும் அமுதினுக்கு அமைவது ஆகத் திருத்தினென் கொணர்ந்தேன். என் கொல் திரு உளம்?' (1966) என்ற கூற்றுடன் ஒப்பிட்டு இவ் இருவரின் வேறுபட்ட நிலையை உணரலாம்.*

***2860. 'குலத்தாலும், நலத்தாலும்,***
***குறித்தனவே கொணர்தக்க***
***வலத்தாலும், மதியாலும்,***
***வடிவாலும், மடத்தாலும்,***
***நிலத்தாரும், விசும்பாரும்,***
***நேரிழையார், என்னைப்போல்***
***சொலத்தான் இங்கு உரியாரைச்***
***சொல்லீரோ, வல்லீரேல்?***

**குலத்தாலும் -** *பிறந்த உயர் குலச்சிறப்பாலும்,* **நலத்தாலும் -***நன்மை தரும் பண்பாலும்,* **குறித்தனவே கொணர்தக்க வலத்தாலும் -***நீங்கள் குறிப்பிட்ட பொருளைக் கொண்டு வந்து தரவல்ல ஆற்றலாலும்,* **மதியாலும்-** *அறிவாலும்,* **வடிவாலும் -** *உருவ அழகாலும்,* **மடத்தாலும் -** *பெண்ணிற்குரிய மடமைப் பண்பாலும்;* **நிலத்தாரும் -** *மண்ணுலக மக்களும்;* **விசும்பாரும் -** *விண்ணுலகத் தேவரும்;* **என்னைப் போல் நேரிழையார்-** *என்னைப் போன்ற பெண்கள்;* **சொலத் தான் இங்கு உரியாரை வல்லீரேல் சொல்லீரோ -** *ஒப்பாகச் சொல்வதற்கு இங்கு உரிய பெண்களை நீங்கள் சொல்ல ஆற்றலுடையவர்களாயின் சொல்லுவீரோ? (சொல்ல முடியாது) தலை மக்களின் 'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு உருவு நிறுத்த காம வாயில் நிறையே அருளே உணர்வொடு திரு என முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே, என்ற தொல்காப்பிய நூற்பா (தொல். பொருள். மெய்ப்பாட்டு. 25) இங்கு ஒப்பிடத்தக்கது. ஆயின் இது சூர்ப்பணகையின் தற்புகழ்ச்சி குறித்து உண்மைக்கு எதிராக முரண்பட அமைந்துளது. மடம் - மென்மை, 'தெளிநடை மடப்பிணை' (புறம். 23) என இப்பொருளில் வந்துளது. அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற பெண்களுக்குரிய நான்கு உயர் வான பண்புகளில் இஃதும் ஒன்றாம். மடம் - மேன்மை எனவும் உரைப்பர்.*

***2861. 'போக்கினீர் என் நாசி;***
***போய்த்து என்? நீர் பொறுக்குவிரேல்,***
***ஆக்குவென் ஓர் நொடி வரையில்;***
***அழகு அமைவென்; அருள்கூரும்***
***பாக்கியம் உண்டு எனின், அதனால்,***
***பெண்மைக்கு ஓர் பழுது உண்டோ?***

***மேக்கு உயரும் நெடு மூக்கும்***
***மடந்தையர்க்கு மிகை அன்றோ?***

***என் நாசி போக்கினீர்*** - *என்னுடைய மூக்கை அறுத்தீர்கள்,* ***போய்த்து என்*** - *அதனால் போன இழப்பு என்ன? (எதுவுமில்லை),* ***நீர் பொறுக்குவிரேல் ஓர் நொடி வரையில் ஆக்குவென்*** - *நீர் என்னை ஏற்றுக் கொண்டால் ஒரு நொடிப் பொழுதில் அம்மூக்கை உண்டாக்குவேன்;* ***அழகு அமைவென்*** - *அழகும் நிரம்பப் பெறுவேன்;* ***அருள்கூரும் பாக்கியம் உண்டு எனின்*** - *உங்கள் கருணை மிகப் பெறும் பேறு எனக்குக் கிட்டும் என்றால்;* ***பெண்மைக்கு ஓர் பழுது அதனால் உண்டோ*** - *என்னுடைய பெண் தன்மைக்கு ஒரு குற்றம் அதனால் உண்டாகுமா?;* ***மேக்கு உயரும் நெடு மூக்கும் மடந்தையர்க்கு மிகை அன்றோ*** - *பெரிதும் உயர்ந்துள்ள நீண்ட மூக்கும் பெண்களுக்கு அதிகம் அல்லவா?.*

*போய்த்து - போயிற்று. சூர்ப்பணகை தன் மூக்கை மீண்டும் படைத்துக் கொள்ளும் ஆற்றல் கொண்டிருப்பினும் இராமன் விரும்பினால் தன் மூக்கை மறுபடியும் ஆக்கிக் கொள்வதாகக் கூறுவதால் அவன் மீது அவள் கொண்ட ஆசை நன்கு புலப்படுகிறது. தன் பெண்மைப் பண்பு இராமனின் அருள் பெருக்கில் குற்றம் நீங்கி நிலை பெறும் என்பதையும் எடுத்துரைக்கிறாள். அவள் சிந்தனை மற்றொரு பக்கம் செல்கிறது மகளிர்க்கு உயர்ந்து நீண்ட மூக்கு மிகை என்று கருதித்தான் இலக்குவன் அறுத்து விட்டானோ எனத்தான் எண்ணிய கருத்தை வெளிப்படுத்துகிறாள். மிகை - குற்றம் எனப் பழைய உரை கூறும்.*

***2862. 'விண்டாரே அல்லாரோ,***
***வேண்டாதார்? மனம் வேண்டின்,***
***உண்டாய காதலின், என்***
***உயிர் என்பது உமது அன்றோ?***
***கண்டாரே காதலிக்கும்***
***கட்டழகும் விடம் அன்றோ?***
***கொண்டாரே கொண்டாடும்***
***உருப் பெற்றால், கொள்ளீரோ?***

***வேண்டாதார் விண்டாரே அல்லாரோ*** - *மனம் விரும்பப் படாதவர் மனம் வேறுபட்டவர் அல்லரோ?;* ***மனம் வேண்டின் உண்டாய காதலின் என் உயிர் என்பது உமது அன்றோ*** - *மனம் விரும்பினால் ஏற்பட்டஆசையால் என் உயிரானது உம்முடையது அல்லவா?;* ***கண்டாரே காதலிக்கும் கட்டழகும் விடம் அன்றோ*** - *கண்டோர் எல்லோரும்ஆசைப்படும் உடலழகும் (ஒரு பெண்ணுக்கு) நஞ்சு அல்லவா?;* ***கொண்டாரே கொண்டாடும் உருப் பெற்றால் கொள்ளீரோ*** *-கணவர் மேம்பட்டுரைக்கும் உருவை மட்டும் நான் அடைந்தால் நீங்கள் என்னை ஏற்கமாட்டீரா? (ஏற்பீர்).*

*'விண்டாரை அல்லாரோ வேண்டாதார் என்பதற்கு உலகில் தம்மை விரும்பாதவரை ஒருவர் விரும்பினால் அவர்கள் பகைவர் அல்லரோ? ஆதலால் இராமன் தன்னை விரும்பாத சீதையை ஆசைப் பட வேண்டாம் என்பது பொருள். மன ஒற்றுமை*

*இல்லாத நிலை பகைமை ஆகும். அது ஏற்படின் ஒன்றிய உணர்வால் தம் உயிரையும் கொடுப்பர். மேலும் பெண்களுக்கு மிக்க அழகு, நஞ்சு போன்றது. ஆனால் தன்னிடம் அவன் விரும்பத்தக்க அழகு உள்ளது என்பது குறிப்பு. கட்டு+அழகு; யாக்கை, எலும்பு, தசை, நரம்பு இவற்றால் கட்டப்பட்டது. எனவே கட்டு என்பது உடம்பைச் சுட்டியதாம். கட்டழகு என்பது மிகுதியான அழகுமாம்.*

*'கண்டாரே காதலிக்கும் கட்டழகு விட மன்றோ?' எனப் பொது உண்மையைக் கூறிப் பேரழகு கொண்ட சீதை இராமனுக்குப் பெருந் துன்பம் தருவாள் எனக் குறிப்பாக உணர்த்தினாள்.*

*விண்டாரே, கண்டாரே, கொண்டாரே என்ற சொற்களில் காணும் ஏகாரங்கள் தேற்றப் பொருளில் வந்தன. அல்லாரோ, அன்றோ, கொள்ளீரோ என்ற சொற்களில் காணும் ஓகாரங்கள் வினாவாயினும் உடன்பாட்டுப் பொருளில் வந்தன.*

***2863. 'சிவனும், மலர்த் திசைமுகனும்;***
***திருமாலும், தெறு குலிசத்து-***
***அவனும், அடுத்து ஒன்றாகி***
***நின்றன்ன உருவோனே!***
***புவனம் அனைத்தையும், ஒரு தன்***
***பூங் கணையால் உயிர் வாங்கும்***
***அவனும், உனக்கு இளையானோ?***
***இவனேபோல் அருள் இலனால்.***

***சிவனும்** - சிவபெருமானும், **மலர்த்திசை முகனும்** - தாமரை மலர் மீது இருக்கும் பிரமனும், **திருமாலும்** - மகாவிட்டுணுவும்; **தெறு குலிசத்து அவனும்** - பகைவரை அழிக்கும் வச்சிரப் படையுடைய இந்திரனும்; **அடுத்து ஒன்றாகி நின்றன்ன உருவோனே** - சேர்ந்து ஒன்றாகி நின்றது போன்ற அழகிய உருவம் உடையவனே!; **புவனம் அனைத்தையும் ஒருதன் பூங்கணையால் உயிர் வாங்கும் அவனும்** - உலகங்கள் எல்லாவற்றையும் ஒப்பற்ற தன் மலர் அம்புகளால் எல்லா உயிர்களையும் வருத்தும் அம் மன்மதனும்; **இவனே போல் அருள் இலனால் உனக்கு இளையானோ** - உன் தம்பி இலக்குவனைப் போல இரக்கமற்றவனாய் இருப்பதால் அவனும் உனக்குத் தம்பியோ?*

*சிவன் அழிவுக்கும், பிரமன் படைப்பிற்கும், திருமால் காப்பிற்கும் உள்ளது போல் இராமன் முத்தொழிலும் ஒருங்கே செய்யும் முதல்வன் போல் விளங்குவதை இப்பாடல் சுட்டும். மன்மதன் பெண்களிடம் அன்பின்றி அவர்களைக் காம நோயால் துன்புறுத்துவது போன்று இலக்குவனும் தன் உறுப்புகளை அறுத்துத் துன்பம் செய்தான் என்பது சூர்ப்பணகை கொண்ட பொருளாம். மன்மதனின் ஐம் பூங் கணைகளில் நீல மலர் உயிரைக் கொல்லும் ஆற்றலுடையது.*

*இராமனை விளித்து இலக்குவனின் குறையைக் கூறுகின்றாள் சூர்ப்பணகை. 'ஆக்கரியமூக்கு' எனத் தொடங்கும் பாடலிலிருந்து (2856) 'விண்டாரே' என்பது வரை (2862) பன்மையில் விளித்து இங்கு ஒருமையைப் பயன்படுத்தியுள்ளமை*

*எண்ணுதற்குரியது. இவற்றுள் சில இருவரையும் சில இராமனையும் குறிப்பனவாக உள்ளன. ஓகாரம் வினா: ஏகாரம் பிரிநிலை.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***2864.** **பொன் உருவப் பொரு கழலீர்! புழை காண,***
***மூக்கு அரிவான் பொருள் வேறு உண்டோ?***
***"இன் உருவம் இது கொண்டு, இங்கு இருந்து***
***ஒழியும் நம் மருங்கே; ஏகாள் அப்பால்;***
***பின், இவளை அயல் ஒருவர் பாரார்"***
***என்றே, அரிந்தீர்; பிழை செய்தீரோ?***
***அன்னதனை அறிந்து அன்றோ, அன்பு இரட்டி***
***பூண்டது நான்? அறிவு இலேனோ?***

***பொன் உருவப் பொருகழலீர் -** பொன்னால் ஆக்கப்பட்ட அழகுள்ள வீரக்கழல் அணிந்தவரே!; **புழைகாண மூக்கு அரிவான்பொருள் வேறு உண்டோ -** பெருந்துளைப் படும்படி என மூக்கை அறுத்ததற்கு வேறு ஏதேனும் பொருள் உள்ளதா?; (எது வெனில்);**இன் உருவம் இது கொண்டு இங்கு இருந்து ஒழியும் நம்மருங்கு -**(மூக்கறு படலுக்கு முன்னிருந்த) இனிய அழகிய வடிவம் இதைக் கொண்டு இவ்விடத்திலிருந்து சென்று விடுவாள்நம்மை விட்டு; **அப்பால் ஏகாள் -** மூக்கை இழந்த பிறகு வேற்றிடம்செல்லாள்; **பின் இவளை அயல் ஒருவர் பாரார் என்றே -** பின்னர் இப்பெண்ணை மற்றவர் எவரும் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டார் என்று; **அரிந்தீர் -** என் முக்கை அறுத்தீர்; **பிழை செய்தீரோ -** ஆதலால் நீங்கள் தவறு செய்தவர் ஆவீர்களோ (மாட்டீர்); **அன்னதனை அறிந்து அன்றோ -** அவ்வுண்மையை அறிந்து அல்லவா; **அன்பு இரட்டி நான் பூண்டது -** உங்களிடத்து இருமடங்கு அன்பு நான் கொண்டேன்; **அறிவு இலேனோ -** நான் இதை உணராத அறிவு இல்லாதவளா? (இல்லை). **ஏ -** அசை.*

*மூக்கரிந்ததற்குரிய காரணத்தைச் சூர்ப்பணகை கூறும் முறை வியப்பிற்குரியது. அழகான இவள் நம்மை விட்டுப் பிறரிடம் போய்விடக் கூடாது என்ற உணர்வால் இலக்குவன் அரிந்ததும் அதை உணரும்அறிவைத் தான் பெற்றிருந்ததையும் கற்பித்துக் கூறும் போது அவள் திறன் எல்லை கடந்து செல்கிறது. கம்பரின் நாடகத்திறனுக்கு இது தக்க சான்றாம்.*

***2865.** **'வெப்பு அழியா நெடு வெகுளி வேல் அரக்கர்***
***ஈது அறிந்து வெகுண்டு நோக்கின்,***
***அப் பழியால், உலகு அனைத்தும், நும் பொருட்டால்***
***அழிந்தன ஆம்; அறத்தை நோக்கி,***
***ஒப்பழியச் செய்கிலார் உயர் குலத்துத்***
***தோன்றினோர்; உணர்ந்து, நோக்கி,***

***இப் பழியைத் துடைத்து உதவி, இனிது இருத்திர்,***
***என்னொடும்' என்று, இறைஞ்சி நின்றாள்.***

***வெப்பு அழியா வெகுளி நெடுவேல் அரக்கர் -*** *கொதிப்பு நீங்காத சினமுடைய நீண்ட வேலை ஏந்திய இராக்கதர்கள்;* ***ஈது அறிந்து வெகுண்டு நோக்கின் -*** *(எனக்கு நீங்கள் செய்த) இக்கொடுமையைஅறிந்து சினந்து பார்த்தாரானால்;* ***அப்பழியால் உலகு அனைத்தும் நும் பொருட்டால் அழிந்தன ஆம் -*** *பழிவாங்கும் அச் செயலால் உலகங்கள் எல்லாம் உம் கொடிய செயல் காரணமாக அழிந்து போனவை ஆகும்;* ***அறத்தை நோக்கி -*** *தருமத்தை எண்ணி;* ***உயர் குலத்துத் தோன்றினோர் ஒப்பழியச் செய்கிலார் -*** *மேலான குலத்தில் பிறந்தோர் உலகம் ஏற்கும் முறை கெடும் படியான செயலைச் செய்ய மாட்டார்கள்; (ஆதலால்)****உணர்ந்து நோக்கி இப்பழியைத் துடைத்து உதவி என்னொடும் இனிது இருத்திர் -*** *இந்த பழிபடும் செயலை நீக்கி அருள் செய்து என்னுடன் சேர்ந்து நன்கு வாழ்வீர்;* ***என்று இறைஞ்சி நின்றாள் -*** *என வணங்கி நின்றாள் சூர்ப்பணகை. வெப்பு - கொடுமையுமாம். 'என் பொருட்டு உங்களுக்குக் கருணை உண்டாகா விட்டாலும் உங்கள் செயலால் சினந்த அரக்கர் இவ்வுலகங்களை அழிப்பது உறுதி. அதனை எண்ணி இரக்கம் பூண்டு என்னோடு வாழ்வீர்' என வணங்கிய நிலையில் சூர்ப்பணகை கூறும் மொழிகளில் உயிரும் உலகமும் அழிவதைச் சுட்டியும் அறம் காக்கும் கடமையை நினைவூட்டியும் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளும் தன்னலமே மேலோங்கித் தெரிகிறது.*

*இராமன் சினந்து, சூர்ப்பணகையை அச்சுறுத்தல்*

***2866. 'நாடு அறியாத் துயர் இழைத்த நவை அரக்கி,***
***நின் அன்னைதன்னை நல்கும்***
***தாடகையை, உயிர் கவர்ந்த சரம் இருந்தது;***
***அன்றியும், நான் தவம் மேற்கொண்டு,***
***தோள் தகையத் துறு மலர்த் தார் இகல் அரக்கர்***
***குலம் தொலைப்பான், தோன்றி நின்றேன்;***
***போடு, அகல, புல் ஒழுக்கை; வல் அரக்கி!'***
***என்று இறைவன் புகலும், பின்னும்:***

***வல் அரக்கி -*** *கொடிய அரக்கியே!,* ***நாடு அறியாத் துயர் இழைத்த நவை அரக்கி -*** *உலகம் படாத துன்பத்தைச் செய்யும் குற்றமுள்ள இராக்கதப் பெண்ணாகிய;* ***நின் அன்னை தன்னை நல்கும் தாடகையை -*** *உன் தாயாம் கேகசியைப் பெற்ற தாடகையை;* ***உயிர் கவர்ந்த சரம் இருந்தது -*** *உயிரைப் பறித்த அம்பு உள்ளது;* ***அன்றியும் நான் தவம் மேற் கொண்டு -*** *மேலும் நான் தவத்தை இயற்றி;* ***தோள் தகையத் துறு மலர்த் தார் இகல் அரக்கர் குலம் தொலைப்பான் தோன்றி நின்றேன்-*** *தோள் வலிமையுடையவரான நெருங்கிய பூமாலை அணிந்தவர்களும் பகைமை கொண்டவருமான இராக்கதரின் குலத்தை அழிக்க வேண்டிப் பிறந்துள்ளேன்;* ***புல் ஒழுக்கை அகலப்போடு -*** *தீய நடத்தையைத் தூரவிட்டிடு;* ***என்று இறைவன் பின்னும் புகலும் -*** *என்று சொல்லிஇராமன் மீண்டும் சொல்வான்.*

*நவை அரக்கி என்பதைச் சூர்ப்பணகையை நோக்கி விளித்ததாகவும் கொள்வர். நின் அன்னை தன்னை நல்கும் தாடகை - சூர்ப்பணகையின் தாயாம் கேகசியைப் பெற்ற தாடகை எனப் பொருள் தரினும் நேரடியாக அவள் கேகசியைப் பெறவில்லை ஆயினும், இராவணன் முதலியோர் தாடகையைப் பாட்டி என முறை கொண்டாடியதும் தாடகை மைந்தராம் சுபாகு மாரீசர்களை மாமன்மார் என முறை கொண்டாடியதும் ஆம். ஒற்றுமை நயம் கருதி இவ்வாறு கூறச் செய்தது எனலாம். புல்லொழுக்கு - சூர்ப்பணகையின் காமமும் சீதையைக் கவர முயன்றதும் ஆம். பாடு அகல எனப் பாடம் கொண்டு அகலப்பாடு என மாற்றி உரை காண்பாரும் உளர். தகைய அழகுடைய எனலுமாம்.*

***2867. 'தரை அளித்த தனி நேமித் தயரதன் தன்***
***புதல்வர் யாம்; தாய்சொல் தாங்கி,***
***விரை அளித்த கான் புகுந்தேம்; வேதியரும்***
***மா தவரும் வேண்ட, நீண்டு***
***கரை அளித்தற்கு அரிய படைக் கடல் அரக்கர்***
***குலம் தொலைத்து, கண்டாய், பண்டை,***
***வரை அளித்த குல மாட, நகர் புகுவேம்;***
***இவை தெரிய மனக்கொள்' என்றான்.***

***யாம் -** நாங்கள், **தரை அளித்த தனி நேமித் தயரதன் தன் புதல்வர் -** உலகை ஆண்ட ஒப்பற்ற ஆணைச் சக்கரத்தை உடைய தயரத சக்கரவர்த்தியின் மக்கள்; **தாய் சொல் தாங்கி -** சிற்றன்னையாம் கைகேயியின் ஆணைச் சொல்லை மேற்கொண்டு; **விரை அளித்த கான் புகுந்தேம் -** நறுமணம் வீசும் இக்காட்டை வந்தடைந்தோம்;**வேதியரும் மாதவரும் வேண்ட -** வேதம் ஓதுவோரும் பெருந்தவம் புரிவோரும் விரும்பித் தெரிவித்தபடி; **நீண்டு கரை அளித்தற்கு அரிய படைக் கடல் அரக்கர் குலம் தொலைத்து -** பரந்து எல்லை காண முடியாத படைகளாம் கடலை உடைய இராக்கதரின் குலத்தை வேரோடு ஒழித்து;**பண்டை வரை அளித்த குலமாட நகர்புகுவேம் -** ஊழிதோறும் நிலைத்துள்ள மலை போன்ற சிறந்த மாளிகைகளை உடைய அயோத்தி நகரத்தில் சேர்வோம்; **இவை தெரிய மனக் கொள் -** இவற்றை ஆராய்ந்து மனத்திலே கொள்ளுக; **கண்டாய் -** நீ தெரிந்து கொள், **என்றான் -** என இராமன் அறிவுறுத்தினான்.*

*தந்தை பெருமை கூறித் தாயின் ஆணையைப் பின்கூறித் தன் வாழ்வின் நோக்கை முன்னறிவுறுத்துகிறான். 'மணம் வீசும் காட்டில் இப்படி மறச் செயல் செய்யும் நீ கடல் போல் அரக்கர் படையைக் கொண்டுவரினும் அவர்கள் குலத்தை அழிப்பேன்' எனத் தன் வலி கூறினான் இராமன். 'பண்டை வரை அளித்த குலமாட நகர்' என்பதுடன் நகரப் படலத்தில் 'ஊழியின் இறுதி உறையுளோ' என்பது ஒப்பிடற்குரியது (94). அளித்த - போன்ற. கண்டாய் என்பது முன்னிலை அசையுமாம். இராமனின் அவதார நோக்கை இப்பாடல் குறிப்பாக உணர்த்துகிறது.*

***2868. ' "நெறித் தாரை செல்லாத நிருதர் எதிர்***
***நில்லாதே, நெடிய தேவர்***
***மறித்தார்; ஈண்டு, இவர் இருவர்; மானிடவர்"***

**என்னாது, வல்லை ஆகின்,**
**வெறித் தாரை வேல் அரக்கர், விறல் இயக்கர்,**
**முதலினர், நீ மிடலோர் என்று**
**குறித்தாரை யாவரையும், கொணருதியேல்,**
**நின் எதிரே கோறும்' என்றான்.**

**நெறித்தாரை சொல்லாத நிருதர் -** நல்லொழுக்க வழியில் போகாத அரக்கர்களுடைய; **எதிர் நில்லாதே -** எதிரில் நிற்காமல்; **நெடிய தேவர்மறித்தார் -** நீண்டகாலம் வாழ்ந்த தேவர்கள் தோற்று ஓடிப் போனார்கள்; **ஈண்டு இவர் இருவர் மானிடவர் என்னாது -** இங்குள்ள இவர் இருவரும் மனிதர்கள் எனக் குறைவாகக் கருதாமல்; **வல்லை ஆகின் -** திறமை உடையவள் ஆனால்; **வெறித் தாரை வேல் அரக்கர் விறல் இயக்கர் முதலினர் -** மணமிக்க மாலை அணிந்த வேற்படையை உடைய இராக்கதர் வெற்றி பூண்ட இயட்சர்கள் முதலானவர்கள் - ஆகியோருள்; **நீ மிடலோர் என்று குறித்தாரை -** நீ வலிமையுடையோர் எனக் கருதியவர்கள்; **யாவரையும் கொணருதியேல் நின் எதிரே கோறும் -**எல்லோரையும் போரிட அழைத்து வந்தால் உன் முன்னே அவர்களைக் கொல்வோம், **என்றான் -** எனக் கூறினான் இராமன்.

அரக்கர் வழி அல்லாத வழி என்பதைச் சுட்ட 'நெறித்தாரை செல்லாத' என்றார். தேவரே தோற்கும் போது மனிதர் தாமே இவர் என மதிக்கமாட்டாள் என்ற குறிப்பு இதில் புலப்படுகிறது. இயக்கரைச் சுட்டியது குபேரன் இவள் தமயன் எனக் குறித்ததால். வெறி - என்பதற்கு புலால் நாற்றம் எனலுமாம். வெறித்தார்+ஐ+வேல்+அரக்கர் எனப் பிரித்து செருக்குற்றவரான அழகிய வேல் ஏந்திய இராக்கதர் எனவும் பொருள் கூறலாம்.

இராமனின் வீரவுரை சூர்ப்பணகையின் வீரர்குலப் பெருமைக்குரிய விடையாகும்.

சூர்ப்பணகை மீண்டும் வற்புறுத்தல்

**2869. 'கொல்லலாம்; மாயங்கள் குறித்தனவே**
**கொள்ளலாம்; கொற்ற முற்ற**
**வெல்லலாம்; அவர் இயற்றும் வினை எல்லாம்**
**கடக்கலாம்;-மேல் வாய் நீங்கி,**
**பல் எலாம் உறத் தோன்றும் பகு வாயள்"**
**என்னாது, பார்த்தி ஆயின்,**
**நெல் எலாம் சுரந்து அளிக்கும் நீர் நாட!**
**கேள்' என்று, நிருதி கூறும்:**

**நெல் எலாம் சுரந்து அளிக்கும் நீர் நாட -** நெல் முதலிய பொருள்களை மிகுதியாக விளைத்தளிக்கும் நீர்வளமுள்ள கோசலநாட்டவனே; **கேள் -** கேட்பாயாக; **மேல்வாய் நீங்கி(ப்) பல் எலாம் உறத் தோன்றும் பகுவாயள் என்னாது பார்த்தி ஆயின் -** வாயின் மேற்புறம் அறுபட்டுப் பற்கள் எல்லாம் நன்றாக வெளிப்பட்ட பெரிய வாயினை உடையவள் என என்னை இகழாமல் கருணை கொண்டு அருள்புரிவாய் என்றால்; **கொல்லலாம் -** (அரக்கர்களையும் மற்றவர்களையும்) கொன்றுவிடலாம்; **மாயங்கள்**

***குறித்தனவே கொள்ளலாம் -****அவர்களின் மாயச் செயல்களை முன்னதாக அறிந்து மேற்கொள்ளலாம்;* ***கொற்ற முற்ற வெல்லலாம் -*** *அரசுகள் அனைத்தும் வென்று ஆளலாம்;* ***அவர் இயற்றும் வினை எல்லாம் கடக்கலாம் -*** *அரக்கர் முதலியோர் செய்யும் வஞ்சனைச் செயல்களை வெல்லலாம்;* ***என்று நிருதி கூறும் -*** *என்று அரக்கியாம் சூர்ப்பணகை சொல்வாள். நாடு, நெல்வளம் சுரப்பது போல இராமன் தன் மீது அருள் புரிய வேண்டும் என்பது இதன் கருத்து ஆம். மேல்வாய் நீங்கி என்பதால் இலக்குவன் சூப்பணகையின் மூக்கை அறுத்த போது அவள் மேலுதடும் அறுபட்ட நிலை தெரியும். தன் அவல நிலையை இவ்வாறு கூறி இராமனின் கருணையைப் பெற நினைத்தாள். முன்னர்க் கூறிய இராமனின் சொற்கள் இவளிடம் எம்மாற்றத்தையும் உண்டாக்கவில்லை என இதனால் அறியலாம். அரக்கரை வெல்லத் தன்பால் இராமன் அருள் செய வேண்டும் என்பதை மேலும் வலியுறுத்துகிறாள்.*

***2870. 'காம்பு அறியும் தோளாளைக் கைவிடீர்;***
***என்னினும், யான் மிகையோ? கள்வர்***
***ஆம், பொறி இல், அடல் அரக்கர் அவரோடே***
***செருச் செய்வான் அமைந்தீர் ஆயின்,***
***தாம் பொறியின் பல மாயம் தரும் பொறிகள்***
***அறிந்து, அவற்றைத் தடுப்பென் அன்றே?***
***"பாம்பு அறியும் பாம்பின் கால்" என***
***மொழியும் பழமொழியும் பார்க்கிலீரோ?***

***காம்பு அறியும் தோளாளைக் கைவிடீர் என்னினும் -*** *மூங்கில்போலும் தோளை உடைய உம் மனைவியைத் (சீதையை) துறக்க மாட்டீர் என்றாலும்;* ***யான் மிகையோ -*** *நான் உம்மோடு சேர்ந்திருப்பது அதிகமாகுமா? (ஆகாது);* ***கள்வர் ஆம் பொறிஇல் அடல் அரக்கர் அவரோடே செருச் செய்வான் அமைந்தீர் ஆயின் -*** *வஞ்சகரானஅறிவும் திருவுமில்லாத வலிமிக்க இராக்கதர்களுடனே போர் செய்ய விரும்பினீர் என்றால்;* ***தாம் பொறியின் பல மாயம் தரும் பொறிகள் அறிந்து -*** *இராக்கதர் தாம் ஐம்பொறிகள்போல் பல மயக்கந்தரும் வஞ்சனைகள் செய்யும் அவர்களின் தந்திரங்களை அறிந்து;****அவற்றைத் தடுப்பென் அன்றே -*** *அத்தந்திரச் செயல்களைத் தடுத்து விடுவேன்அல்லவா?;* ***பாம்பு அறியும் பாம்பின் கால் என மொழியும் பழமொழியும் பார்க்கிலீரோ -*** *பாம்பானது பாம்பின் காலை அறியும் எனக் கூறும் உலக முதுமொழியையும் அறியீரோ? காம்பு - மூங்கில். மகளிர் தோள்களுக்கு மூங்கில் உவமை ஆகும். அறியும் - போலும், அரக்கர் குலத்தில் பிறந்தும் சூர்ப்பணகை அவர்களைக் 'கள்வர்' எனக் கூறுவது இராமனை அடைய விரும்பியதின் விளைவு. அவன் வெறுத்தவர்களை அவளும் வெறுப்பதாகக் காட்டுவதுடன் அவர்களை அழிக்க அவனுக்குத் துணை யாவதாகவும் ஆசை மீதூரக் கூறுகிறாள். மேலும் விளக்கம் தரப் பழ மொழியையும் எடுத்துரைக்கிறாள். 'புலமிக்கவரைப் புலமை தெரிதல் புலமிக்கவர்க்கே புலனாம் - நலமிக்க பூம்புனலூர பொது மக்கட்காகாதே பாம்பறியும் பாம்பின கால் (பழமொழி நானூறு 5.) என்பது கீழ்க்கணக்காம். பாம்புறையும் இடம் எனக் கூறுவர் 'அரவுக் குறியி னயலவரறியா' (பெருங். 4.13.149) என்பதும் காண்க. 13*

***2871' "உளம் கோடல் உனை இழைத்தாள் உளள்***
***ஒருத்தி" என்னுதியேல், நிருதரோடும்***
***களம் கோடற்கு உரிய செருக் கண்ணியக்கால்,***
***ஒரு மூவேம் கலந்தகாலை,***
***குளம் கோடும் என்று இதுவும் உறுகோளே?***
***என்று உணரும் குறிக்கோள் இல்லா***
***இளங்கோவோடு எனை இருத்தி, இரு கோளும்***
***சிறை வைத்தாற்கு இளையேன்' என்றாள்.***

***உளம் கோடல் உனை இழைத்தாள் உளள் ஒருத்தி என்னுதியேல்-*** *மனத்திலே உன்னை விரும்பிக் கணவனாகக் கொள்ளுதலைச் செய்த ஒருத்தி உன்னுடன் இருக்கிறாள் எனக் கூறு வாயானால்;* ***நிருத ரோடும் களம் கோடற்கு உரிய செருக் கண்ணியக்கால் -*** *அரக்கருடன் போர்க்களம் அடைவதற்குத் தக்க போரைக் கருதினால்;* ***ஒரு மூவேம் கலந்த காலை -*** *நீயும் உன் தம்பியும் நானும் ஆகிய நாம் மூவரும் சேர்ந்து அவர்களை எதிர்த்த போது;* ***குளம் கோடும் என்று இதுவும் உறுகோளே -*** *அப்போர்க் களத்தை குருதிக் குளமாக்கி வெற்றி கொள்வோம் என்பதும் நிறைவேறா நிகழ்ச்சியோ,* ***என்று உணரும் குறிக்கோள் இல்லா -*** *என அறியும் எல்லை குறித்த அறிவு இல்லாத;* ***இளங்கோவோடு எனை இருத்தி -*** *இலக்குவனாம் இளையவனுடன் என்னை வாழ வைப்பாய்;* ***இரு கோளும் சிறை வைத்தாற்கு இளையேன் என்றாள் -*** *சூரியன் சந்திரன் ஆகிய இரு கோள்களையும் சிறைப் பிடித்த இராவணன் தங்கையாகிய நான் எனக் கூறினாள்.*

*என்னுதி - என்று கூறுவாய், நிருதர் - அரக்கர், கண்ணுதல் - கருதுதல், மூவேம் - மூன்று பேராகிய நாம், உறுகோள் - நிகழ்ச்சி, சம்பவம் இளங்கோவுக்கு இளையாள் பொருத்தம் என்பதுமாம். இளையேன் -குறைவிலேன் என்றும் உரை காண்பர். முன்னது உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும் பெயர்; பின்னது எதிர் மறைத் தெரிநிலை முற்று.*

***2872. 'பெருங்குலா உறு நகர்க்கே ஏகும் நாள்,***
***வேண்டும் உருப்பிடிப்பேன்; அன்றேல்,***
***அருங் கலாம் உற்று இருந்தான் என்னினும்***
***ஆம்; இளையவன்தான், "அரிந்த நாசி***
***ஒருங்கு இலா இவளோடும் உறை வெனோ?"***
***என்பானேல், இறைவ! "ஒன்றும்***
***மருங்கு இலாதவளோடும் அன்றோ" நீ***
***"நெடுங்காலம் வாழ்ந்தது" என்பாய்.***

***பெருங்குலா உறு நகர்க்கே ஏகும் நாள் -*** *பெரிய கொண்டாட்டம் மிகுந்த அயோத்தி நகரத்து நீங்கள் மீண்டு செல்லும் நாளில்;* ***வேண்டும் உருப்பிடிப்பேன் -*** *நீங்கள் வேண்டும் வடிவம் கொள்வேன்;* ***அன்றேல் -*** *அல்லாவிடில்;* ***இளையவன் தான் அருங்க லாம் உற்று இருந்தான் என்னினும் ஆம் -*** *உன் தம்பி நீங்கற்கரிய கோபம் கொண்டவனாயிருந்தான் ஆயினும்;* ***அரிந்த நாசி ஒருங்கு இலா இவளோடும்***

**உறைவெனோ என்பானேல் -** *அறுபட்ட மூக்கு முழுதுமில்லாதவளுடனே வாழ்வேனோ என்று கூறுவானாயினும்;* **இறைவ நீ -** *தலைவனே நீ;* **மருங்கு ஒன்றும் இலாதவளோடும் அன்றோ நெடுங்காலம் வாழ்ந்தது என்பாய் -** *இடை சிறிதும் இல்லாதவளோடு அன்றோ நீண்ட காலம் வாழ்ந்து வந்தாய் என விடை கூறுவாய்.*

*குலா - மகிழ்ச்சியும் ஆம் உருப்பிடிப்பேன் - வேண்டும் உருவத்தை விரும்பியவாறு அமைத்து கொள்வேன் என்றாள். இதற்கு இவளுடைய மாய ஆற்றல் பயன்படும் என்பதாம். அருங்கலாம் - அரிய கலாய்ப்பு. என்பது பழைய உரை. இனி அரிய காரியம் பல சாதித்தோம் எனவுமாம். பெண்டிர்க்கு இடை நுணுகி இருத்தல் அழகு. அதனை மருங்கில்லாதவள் என உயர்வு நவிற்சியால் கூறுவாள். மூக்கின்மைக்கு இடையின்மை சாலும் என விடை கூறுமாறு சூர்ப்பணகை வேண்டுகிறாள்.*

*சூர்ப்பணகை அவர்களை அச்சுறுத்தி அகலுதல்*

***2873. என்றவள்மேல், இளையவன்தான், இலங்கு***
***இலை வேல் கடைக்கணியா, 'இவளை ஈண்டு***
***கொன்று களையேம்என்றால், நெடிது அலைக்கும்;***
***அருள் என்கொல்? கோவே!' என்ன,***
***'நன்று, அதுவே ஆம் அன்றோ? போகாளேல்***
***ஆக!' என நாதன் கூற,***
***'ஒன்றும் இவர் எனக்கு இரங்கார்; உயிர்***
***இழப்பென், நிற்கின்' என, அரக்கி உன்னா.***

**என்றவள்மேல் -** *என்று கூறிய சூர்ப்பணகையின் மேல்;* **இளையவன் தான் இலங்கு இலை வேல் கடைக் கணியா -***இலக்குவன் விளங்குகின்ற இலை வடிவிலுள்ள வேலைக் கடைக் கண்ணால் பார்த்து;* **இவளை ஈண்டு கொன்று களையேம் என்றால் நெடிது அலைக்கும் -** *இந்த அரக்கியை இவ்விடத்தில் கொன்று ஒழித்திடவில்லை எனின் மிகவும் வருத்துவாள்;* **அருள்என் கொல் கோவே என்ன -** *(உன்) கட்டளை எதுவோ தலைவா! என்று கேட்க;* **நன்று அதுவே ஆம் அன்றோ போகாளேல் ஆக என நாதன் கூற -** *நற்செயல் நீ கூறியதே ஆகும் அல்லவா அவ்வாறு அவள் போகாவிடில் அவ்வாறே செய்க என்று தலைவனாம் இராமன் சொல்ல;* **எனக்கு ஒன்றும் இவர் இரங்கார் நிற்கின் உயிர் இழப்பென் எனஅரக்கி உன்னா -** *என்னிடம் ஒரு வகையிலும் இவர்கள் அருள் செய்ய மாட்டார் இனி இங்கு நின்றால் என் உயிரை இழப்பேன் எனச் சூர்ப்பணகை எண்ணி;*

*கடைக்கணியா - போர் செய்யும் போது வீரர் தம் போர்க் கருவியைப் பார்த்துக் கூறுதல், அது அவர்கள் அப்போர்க் கருவி கொண்டு செய்யும் போர்த் தொழிலையும் சுட்டும். அருள் என் கொல் - இடும் ஆணைஎதுவோ? என எதிர் நோக்கிக் கேட்டது. இனி, இவ்வரக்கியிடம் இதுவரை அருள் காட்டுவதன் காரணம் எதுவோ என்றலுமாம். இருவர் உரையாடலும் அவர்தம் நிலையைக் காட்டும் நாடகத் திறம் புலப்பட அமைந்துளது.*

***2874. 'ஏற்ற நெடுங் கொடி மூக்கும், இரு காதும்,***
***முலை இரண்டும், இழந்தும், வாழ***
***ஆற்றுவனே? வஞ்சனையால், உமை உள்ள***
***பரிசு அறிவான் அமைந்தது அன்றோ?***
***காற்றினிலும் கனலினிலும் கடியானை,***
***கொடியானை, கரனை, உங்கள்***
***கூற்றுவனை, இப்பொழுதே கொணர்கின்றேன்'***
***என்று, சலம்கொண்டு போனாள்.***

***ஏற்ற நெடுங் கொடி மூக்கும் இருகாதும் முலை இரண்டும் இழந்தும் வாழ ஆற்றுவனே -*** *என் அழகுக்குப் பொருத்தமாயிருந்த நீண்ட கொடி போலும் உயர்ந்திருந்த மூக்கும் இரண்டு செவிகளும் இரு கொங்கைகளும் அறுக்கப் பெற்றும் உயிரோடு வாழ்வதைப் பொறுத்து இருப்பேனோ (மாட்டேன்);* ***வஞ்சனையால் உமை உள்ள பரிசு அறிவான் அமைந்தது அன்றோ -*** *கபடமாய் நான் உம்முடைய நோக்கினை அறியச் செய்த செயல் அல்லவா?; (ஆதலால்)* ***காற்றினிலும் கனலினிலும் கடியானை -*** *காற்றையும் தீயையும் விட ஆற்றலுடையானை;* ***கொடியானை -*** *கொடியவனை;* ***கரனை -*** *கரன் எனும் பெயருடையவனை;* ***உங்கள்கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன் -*** *உங்களை அழிக்கும் யமனை இக்கணத்தே கூட்டி வருகிறேன்;* ***என்று சலம் கொண்டு போனாள் -*** *எனக் கூறித் தணியாத கோபமுற்றுச் சென்றாள்.*

*'நெடுங் கொடி மூக்கு' என்பதை முன்னரே 'மேக்கு உயரும் நெடு மூக்கு' எனக் கூறினாள் (2861). காற்றுப் போல் வேகமும் தீப்போலக் கொடுமையும் பூண்ட என நிரல் நிரையாகப் பொருள் கூறுவர். சலம் - தணியாப் பகையுமாம். 'சலம் புணர்கொள்கைச் சலதி' எனச் சிலப்பதிகாரம் கூறுவதும் கொண்டு (சிலம்பு.9.69) முன்னர்க் காதல் மொழி கூறியும் இறுதியில்வஞ்சனையால் உமை உள்ள பரிசு அறிவான் அமைந்தது, கரனை உங்கள் கூற்றுவனை இப்பொழுதே கொணர்கிறேன் எனக் கூறுவதும் சூர்ப்பணகையின் பொய் நிலையைக் காட்டும் எனலுமாம். இவளைத் தாடகை போல் கொல்லாமல் விட்டதற்குக் காரணம் கரன் முதல் இராவணன் குலத்தை அழிக்கும் நோக்கமே எனக் குறிப்புப் பொருள் காண்பர். இப்படலம் முழுதும் 'கம்ப நாடகம்' என்ற பெயர்க்கு ஏற்பப் பொருத்தமான உரையாடல்கள் செவ்விய நிலையில் அமைந்துள்ளன.*

## *கரன் வதைப் படலம்*

*கரனது வதையைப் பற்றிக் கூறும் பகுதியெனப் பொருள்படும். படலச் சுருக்கம்: சூர்ப்பணகை கரன்முன் விழுந்து முறையிடுகின்றாள். அது கண்ட கரன் கொதித்தெழுகின்றான்; அப்பொழுது அக்கரனை விலக்கிப் பதினான்கு வீரர்கள் போரிடச் செல்லுகின்றனர்; அப் போரில் அரக்க வீரர் மடியச் சூர்ப்பணகை கரனிடம் மறுபடியும் ஓடுகின்றாள்; அதைக் கண்ட கரன் வெகுண்டெழுகின்றான்; பின், போர்ப் பறை கேட்டு நாற்படையும் எழுகின்றன; கரன் படையினர் போர்க் கருவிகளை ஏந்தி நிற்கின்றனர்; தானைத் தலைவரும் சேனை வீரரும் எழுகின்றனர். கரனும் பெருந்தானையோடு இராமன் உறைவிடம் சேர்கின்றான். இராமன், இலக்குவனைத் தடுத்துப் போருக்குப் புறப்படுகின்றான். ஆனால், இலக்குவனோ 'இப் போரினை எனக்கு அருளுக'வென மீண்டும் வேண்டுகிறான். இலக்குவனுக்கு இசையாத இராமன் தானே போர் மேல் செல்லுகிறான். அப்பொழுது சூர்ப்பணகை கரனுக்கு இராமனைக் காட்டுகிறாள். கரனும் இராமனுடன் தானே பொருவேன் என்கிறான். அந்நிலையில் தீய குறிகளைக் கண்ட அகம்பன் அறிவுரை கூறுகிறான். ஆனால், அந்த அறிவுரையைக் கரன் புறக்கணிக்கப் படைகளும் போர்மேற் செல்லுகின்றன. அப் படைகள் யாவும் இராமன் விடுத்த பாணத்தால் அழிகின்றன. படைத் தலைவர் பதினால் வரும் மாய்கின்றனர்; பின் திரிசிரா போர் செய்ய வருகின்றான்; சேனைகளையும் திரிசிராவையும் இராமன் எதிர்த்துப் பொருகிறான்; போரில் திரிசிரா இரண்டு தலைகளை இழந்து ஒரு சிரசோடு போர் செய்கிறான். பின் அத் திரிசிரா மடிய, அரக்கர் சேனை சிதறி ஓடுகின்றது. அவ்வாறு புறங் கொடுப்பாரைத் தேற்றித் தூடணன் வீரவுரை கூறுகின்றான். அத் தூடணன் எதிர்த்து வர, இராமன் அவனோடு பொருகின்றான். அப்போரில் தூடணன் மாயக் கரன் வெகுண்டு பெரும்படையுடன் போருக்கு எழுகின்றான்; அவன் இராமன் முன் எதிர்ப்படுகின்றான். இராமன் பிடித்த வில் ஒடிந்ததைக் கண்ட வானவர் ஏங்கியஞ்சுகின்றனர். இராமன் வருணன் கொடுத்த வில்லைப் பெறுகின்றான். கரனும் இராமனும் எதிரெதிரே நின்று போர் செய்கின்றார்கள். முடிவில், கரன் மடிய, வானவர் மகிழ்கின்றார்கள்; பின்னர் இராமன் சீதையை அணுகுகின்றான். சூர்ப்பணகையோ அழுது புலம்பி இலங்கைக்கு ஏகுகின்றாள்.*

சூர்ப்பணகை கரன்முன் விழுந்து முறையிடுதல்

கலிவிருத்தம்

***2875. இருந்த மாக் கரன் தாள்***
***இணையின் மிசை,***
***சொரிந்த சோரியள், கூந்தலள்,***
***தூம்பு எனத்***
***தெரிந்த மூக்கினள், வாயினள்,***
***செக்கர் மேல்***
***விரிந்த மேகம் என***
***விழுந்தாள் அரோ.***

***சொரிந்த சோரியள் -*** *பெருகுகின்ற இரத்தத்தையுடையவளும்;* ***கூந்தலள் -*** *(விரிந்த) தலைமயிரையுடையவளும்;* ***தூம்பு எனத் தெரிந்த மூக்கினள் -*** *மதகு போலத் துவாரங் கொண்ட மூக்கையுடையவளும்;* ***வாயினள் -*** *(அகன்ற) வாயையுடையவளுமாகிய சூர்ப்பணகை;* ***மேல் செக்கர் விரிந்த மேகம் என -*** *மேலே செவ்வானம் படர்ந்துள்ள மேகம் போல;* ***இருந்த மாக்கரன் -*** *(அவையில்) இருந்த பெருமை மிக்க கரனுடைய;* ***தாள் இணையின் மிசை -*** *இரண்டு கால்களின் மேலும்;* ***வீழுந்தாள் -*** *வீழ்ந்தாள்.*

*'உங்களுக்குக் கூற்றுவனான கரனை இப்போதே கொண்டு வருகின்றேன்' என்று மூண்ட வயிரத்தோடு சென்ற சூர்ப்பணகை அறுபட்ட தன் உறுப்புக்களிலிருந்து இரத்தம் பெருக, விரித்த கூந்தலோடும் பெரிய வாயினாற் கதறிக் கொண்டு சபையில் வீற்றிருந்த கரனுடைய அடிகளில் வீழ்ந்தாள் என்பது. அவளது உடம்பில் பெருகும் இரத்தப் பெருக்கிற்கும், செம்பட்டை மயிர்க்கும் செவ்வானமும், கரிய உடம்புக்கு மேகமும் உவமைகளாயின. அரோ : ஈற்றசை; உவமையணி.*

***2876. ''அழுங்கு நாள் இது' என்று,***
***அந்தகன் ஆணையால்***
***தழங்கு பேரி எனத்***
***தனித்து ஏங்குவாள்;***
***முழங்கு மேகம் இடித்த***
***வெந் தீயினால்***
***புழுங்கு நாகம் எனப்***
***புரண்டாள் அரோ.***

***அழுங்கு நாள் -*** *(அந்த அரக்கர்கள்) அழியக் கூடிய நாள்;* ***இதுஎன்று -*** *இதுவே என்று;* ***அந்தகன் ஆணையால் -*** *யமனுடைய கட்டளையால்;* ***தழங்கு பேரி என -*** *(அடிக்கப்பட்டு) ஒலிக்கின்ற பெரிய முரசு போல;* ***தனித்து ஏங்குவாள் -*** *தனியே (பேராரவாரம் உண்டாகுமாறு) கதறியழுபவளான சூர்ப்பணகை;* ***முழங்கு மேகம் இடித்த -*** *ஆரவாரிக்கின்ற மேகம் கக்கும்;* ***வெந் தீயினால் -*** *கொடிய நெருப்பாகிய இடியினால்;* ***புழுங்கு நாகம் என -*** *வெந்து துடிக்கின்ற பாம்பு போல;* ***புரண்டாள் -*** *(நிலத்திலே) புரண்டாள்.*

*சூர்ப்பணகை கதறியழுத குரலோசை அங்குள்ள கரன் முதலான அரக்கரை இராமனோடு உடனே போர் செய்ய எழுமாறு தூண்டிஅவரனைவரும் அன்றே இறந்தொழிவதற்குக் காரணமாவது குறித்து அந்தக் கதறல் இராக்கத அழிவுக் குறிப்பாக யமன் அறைவித்த பறைபோலுமென்றது தன்மைத் தற்குறிப்பேற்றவணி. பின்னிரண்டடி; உவமையணி. இடிக்கு அழிதல் நாகத்தின் இயல்பு. அரோ - ஈற்றசை.*

***2877. வாக்கிற்கு ஒக்க, புகை***
***முந்து வாயினான்***
***நோக்கி, 'கூசலர், நுன்னை***
***இத் தன்மையை***

***ஆக்கிப் போனவர் ஆர்கொல்?'***
***என்றான்-அவள்***
***மூக்கின் சோரி முழீஇக்***
***கொண்ட கண்ணினான்.***

**அவள் மூக்கின் சோரி -** *அந்தச் சூர்ப்பணகையின் மூக்கிலிருந்து வடிந்த இரத்தத்தில்;* **முழீஇக் கொண்ட -** *மூழ்கடிக்கப்பட்ட;* **கண்ணினான் -** *கண்களையுடையவனும்;* **வாக்கிற்கு ஒக்க -** *(தன் வாயிலிருந்து பிறக்கும்) சொற்களுக்கு ஒத்தபடி;* **புகை முந்து வாயினான் -** *புகை முந்தி வெளிப்படுகின்ற வாயையுடையவனுமான கரன்;* **நோக்கி -** *(அந்தச்)சூர்ப்பணகையைப் பார்த்து;* **கூசலர் -** *கூச்சமில்லாதவர்களாய்;* **நுன்னை -** *உன்னை;* **இத் தன்மையை ஆக்கிப் போனவர் -** *இவ்வாறு அலங்கோலப்படுத்திச் சென்றவர்;* **ஆர் கொல் என்றான் -** *யார் என்று கேட்டான்;*

*வாக்கிற்கு ஒக்க புகை - அவனது வாயிலிருந்து பின் வந்த பேச்சாகிய தீக்கு ஒப்ப, முன் எழுந்து வந்தது புகை.*

*இன்னாரென்று அறியாததால் 'போனவர்' என்று பன்மையால் கூறினான்; துணியலாகாத இடத்துப் பன்மையால் கூறுதல் மரபு. முழீஇ - சொல்லிசையளபெடை.*

***2878. 'இருவர் மானிடர்;***
***தாபதர்; ஏந்திய***
***வரி வில், வாள், கையர்;***
***மன்மதன் மேனியர்;***
***தரும நீரா;***
***தயரதன் காதலர்;***
***செருவில் நேரும்***
***நிருதரைத் தேடுவார்.***

**இருவர் மானிடர் -** *(அதுகேட்ட சூர்ப்பணகை) இரண்டு மனிதர்கள்;* **தாபதர் -** *தவ வேடத்திலிருக்கும் முனிவர்கள்;* **ஏந்திய வரிவில் வாள் கையர் -** *தரித்த கட்டமைந்த வில்லும் வாளுமுடைய கையினர்;* **மன்மதன் மேனியர்-** *மன்மதனைப் போன்ற அழகான வடிவுடையவர்கள்;* **தரும நீரர் -** *தருமநெறியில் நடப்பவர்கள்;* **தயரதன் காதலர் -** *தசரதச் சக்கரவர்த்தியின் மைந்தர்கள்;* **செருவில் நேரும் -** *போரில் எதிர்ப்படும்;* **நிருதரைத் தேடுவார் -** *அரக்கர்களைத் தேடித் திரிந்து கொண்டிருப்பவர்;*

*மரவுரியுடுத்தமையும் சடைமுடி தரித்தமையும் பற்றித் 'தாபதர்' என்றாள். தரும நீரர் - இராமலக்குவரின் பேரழகும், பெருங்குணமும்விளங்கும்.*

***2879. 'ஒன்றும் நோக்கலர் உன் வலி;***
***ஓங்கு அறன்***
***நின்று நோக்கி, நிறுத்தும்***

*நினைப் பினார்;*
*"வென்றி வேற் கை*
*நிருதரை வேர் அறக்*
*கொன்று நீக்குதும்" என்று*
*உணர் கொள்கையார்.*

***உன் வலி** - உனது வலிமையை; **ஒன்றும் நோக்கலர்** - சிறிதும் கருதுகின்றார்களில்லை; **ஓங்கு அறன் நின்று நோக்கி** - மேலான தரும வழிகளில் தாமும் நின்று ஆராய்ந்து; **நிறுத்தும் நினைப்பினார்** -அத் தருமத்தை எங்கும் நிலைபெறச் செய்யும் கருத்துடையவர்; **வென்றி வேல் கை நிருதரை** - வெற்றி தரும் வேலேந்திய கைகளையுடைய அரக்கரை; **வேர் அற** - அடியோடு; **கொன்று நீக்குதும்** - 'கொன்று தொலைப்போம்'; **என்று உணர்** - என்று தீர்மானித்துள்ள; **கொள்கையார்** - கோட்பாடு உடையவர்கள்.*

*அவர்கள் உன்னை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை; அறமாகிய பயிரைச் செழிக்க வைக்க அதற்குப் பகைவர்களான அரக்கர் என்னும் களைகளை வேரோடு அழித்துக் களையும் துணிவினர் என்றாள் சூர்ப்பணகை என்பது.*

*இங்கே 'தாபதர் அறம் நிறுத்தும் நினைப்பினர்; உன் வலி நோக்கலர்; இச் செய்தி முன் கூறப்பட்டுள்ளது என்று வேண்டாத செய்திகளை முற்கூறியது கரனின் வெறுப்பையும் கோபத்தையும் தூண்டுதற்காகஎனலாம்.*

*2880. 'மண்ணில், நோக்க அரு*
*வானினில், மற்றினில்,*
*எண்ணி நோக்குறின்,*
*யாவரும் நேர்கிலாப்*
*பெண்ணின் நோக்குடையாள்*
*ஒரு பேதை, என்*
*கண்ணின் நோக்கி உரைப்ப*
*அருங் காட்சியாள்;*

***ஒரு பேதை** - (அவர்களோடு உள்ள) ஓர் இளம் பெண்;**மண்ணில்**- இவ்வுலகத்திலும்; **நோக்க அரு வானினில்** - எளிதாகக் காண முடியாத மேலுலகத்திலும்; **மற்றினில்** - (இந்த மண், வானம் அல்லாத) பாதாளத்திலும்; **எண்ணி நோக்குறின்** - (இவளுக்கு ஒப்பாவார் யாரென்று) கருதிப் பார்க்குமிடத்து; **யாவரும் நேர்கிலா** - ஒருவரும் ஒப்புமை ஆகமாட்டாத; **பெண்ணின் நோக்கு உடையாள்** - பெண்ணழகு முழுவதும் உடையவள்; **என் கண்ணின் நோக்கி** - என் கண்களால் பார்த்து; **உரைப்ப அருங்காட்சியாள்** - வாயால் எடுத்துச் சொல்லமுடியாத அரிய தோற்றமுடையவள்.*

*சீதையின் அழகு மிகுதியும், எவ்வளவு காணினும் முற்றும் காண முடியாத கட்டழகின் மிகுதியும், அவ் விரண்டும் வாயினால் எடுத்துச் சொல்லமுடியாத தன்மையும் ஈற்றடியில் புலப்படும்.*

*நோக்கு: அழகு - 'நோயிகந்து நோக்கு விளங்க' - (மதுரைக்: 13) மற்றினில்: இடைச்சொல் உருபேற்று வந்தது.*

***2881. 'கண்டு, "நோக்க அருங்***
***காரிகையாள்தனைக்***
***கொண்டு போனவன், இலங்கையர்***
***கோக்கு" எனா,***
***விண்டு மேல் எழுந்தேனை***
***வெகுண்டு, அவர்***
***துண்டம் ஆக்கினர், மூக்கு'***
***எனச் சொல்லினாள்.***

***கண்டு -** (இத் தன்மையுடைய அழகிய பெண்ணைப்) பார்த்து; **நோக்கு அருங் காரிகையாள்தனை -** காணவியலாத அழகுடையஇப்பெண்ணை; **இலங்கையர் கோக்கு -** இலங்கையில் வாழும் அரக்கர்க்கு அரசனான இராவணனுக்காக; **கொண்டு போவன் எனா விண்டு -** (இவளை) எடுத்துக் கொண்டு போவேன் என்று சொல்லி; **மேல் எழுந்தேனை -** அவள் மேல் பாயக் கிளம்பிய என்னை; **அவர் வெகுண்டு -** அந்த இராமலக்குவர்கள் சினந்து; **மூக்குத் துண்டம் ஆக்கினர் -** என் மூக்கையறுத்தார்கள்; **எனச் சொல்லினாள் -**என்று கூறினாள்.*

*இராவணன் பொருட்டு அந்தக் கட்டழகியைக் கொண்டு போவேனென்று அவள் மேல் பாய்ந்த பொழுது அவர்கள் வெகுண்டு என் மூக்கை அறுத்தார்கள் என்கிறாள். மேல் விழுதல் - மிகப் பரபரப்போடு முயலுதல் காரிகை - அழகு; 'கழல் யாப்பு காரிகை நீர்த்து' (குறள் 777) மூக்கு என்றது, அறுபட்ட மற்ற உறுப்புக்களுக்கும் உபலட்சணமாம். 7கரன் கொதித்து எழுதல்*

***2882. கேட்டனன் உரை;***
***கண்டனன் கண்ணினால்,***
***தோட்ட நுங்கின்***
***தொளை உறு மூக்கினை;***
***'காட்டு' எனா, எழுந்தான்,***
***எதிர் கண்டவர்***
***நாட்டம் தீய : -***
***உலகை நடுக்குவான்.***

***எதிர் கண்டவர் நாட்டம் தீய -** (தன்னை எதிரில்) பார்த்தவர்களின் கண்கள் கருகிப் போய்விடும்படி; **உலகை நடுக்குவான் -** உலகத்து உயிர்களை நடுங்கச் செய்பவனான கரன்; **உரை கேட்டனன் -** சூர்ப்பணகை சொன்ன வார்த்தைகளைக் கேட்டு; **தோட்ட நுங்கின் -** தோண்டியெடுக்கப்பட்ட பனை நுங்கைப் போல; **தொளை உறு -**துளை பொருந்திய; **மூக்கினை -** அவளது மூக்கை; **கண்ணினால் கண்டனன் -** (தன்) கண்களால்*

*பார்த்து;* ***காட்டு எனா எழுந்தான் -*** *(உனக்கு இக்கெடுதி செய்தவரை எனக்குக்) காட்டு என்று சொல்லிக் கிளம்பினான்.*

*சூர்ப்பணகையின் மூக்கு அறுபட்டுத் துவாரங்கள் மட்டும் விளங்கிய முகத்தின் தோற்றம், நுங்கு தோண்டி எடுக்கப்பட்டபின் விளங்கும் பனங்காய் போன்றிருந்தது என்பது. நுங்கு மானிட உறுப்புக்கு ஒப்பு. (நாலடி. 44). பனங்காய் அந்த அரக்கியின் முகத்தின் வடிவத்திற்கும்; நிறத்திற்கும் மிக்க பொருத்தமான உவமை.*

***2883. எழுந்து நின்று, உலகு***
***ஏழும் எரிந்து உகப்***
***பொழிந்த கோபக் கனல்***
***உக, பொங்குவான்;***
***' "கழிந்து போயினர்***
***மானிடர்" என்னுங்கால்,***
***அழிந்ததோ இவ் அரும்***
***பழி?' என்னுமால்.***

***எழுந்து நின்று -*** *(இவ்வாறு சொல்லி) எழுந்து நின்று;* ***உலகு ஏழும் எரிந்து உக -*** *ஏழுலகங்களும் எரிந்து பொடியாய்ச் சிதறும்படி;* ***பொழிந்த கோபம் கனல் உக -*** *(கண்கள்) சொரிந்த கோபத் தீ வெளியே சிந்த;* ***பொங்குவான் -*** *மனங் கொதிப்பவனான கரன்;* ***மானிடர் கழிந்து போயினர் என்னுங்கால் -*** *(இத் தீய செயல் செய்த) மனிதர்கள் (என்னால்) அழிந்து விட்டார்கள் என்னும் மாத்திரத்தில்;* ***இவ் அரும் பழி -*** *(நமக்கு உண்டான) இந்த அரிய பழி;* ***அழிந்ததோ -*** *தீர்ந்ததாக ஆகுமோ (ஆகாது);* ***என்னும்-*** *என்று சொன்னான்.*

*தான் இப்பொழுது இராமலக்குவர்களை எதிர்த்து அழிப்பது உறுதியென்பதும், அப்படி அவர்களை அழித்தாலும் அரக்கர் சமூகத்திற்கு அந்த மானிடரால் உண்டான பழி அழியாது என்பது கரன் கொண்ட கருத்தாகும்.*

*உலகேழ் - மேலேழும் கீழேழுமாகிய பதினான்கு உலகங்கள். எழுந்து நின்று பொங்குவான் என இயையும். ஆல் ஈற்றசை.*

*கரனை விலக்கி பதினான்கு வீரர்கள் போரிடச் செல்லுதல்*

***2884. 'வருக, தேர்!' எனும்***
***மாத்திரை, மாடுளோர்,***
***இரு கை மால் வரை***
***ஏழினொடு ஏழ் அனார்,***
***ஒரு கையால் உலகு***
***ஏந்தும் உரத்தினார்,***

***'தருக இப் பணி எம்வயின்***
***தான்' என்றார்.***

*(இவ்வாறு கூறிய கரன்)* ***தேர் வருக எனும் மாத்திரை -*** *எனது தேர் வரட்டும் என்று சொல்லிய அளவில்;* ***மாடு உளோர் -*** *அவன் பக்கத்தில் இருப்பவர்களும்;* ***இரு கை மால்வரை ஏழினோடு ஏழ் அனார் -****இரண்டு கைகளையுடைய பெரிய பதினான்கு மலைகளை ஒத்தவர்களும்;****ஒரு கையால் -*** *ஒவ்வொருவரும் தத்தம் ஒரு கையினாலே;* ***உலகு ஏந்தும் உரத்தினார் -*** *உலகம் முழுவதையும் தாங்கி ஏந்தும் வலிமையுள்ளவர்களுமான அவனுடைய படைத் தலைவர்கள் பதினால்வர்;* ***இப்பணி -*** *(கரனை நோக்கி) இப் பணியாகிய போர்த் தொழிலை;****எம் வயின் தான் தருக -*** *எங்களிடமே தந்தருளுக;* ***என்றார் -*** *என்று வேண்டினர்.*

*இரண்டு கைகளையுடைய பெருவலி படைத்த பதினால்வரான இவர்களின் வடிவம் உருவத்தாலும், வலிமையாலும் பெரிய மலை போல இருத்தலால் உவமானமாகிய மலைக்கு 'இருகை' என்ற அடைமொழி தந்தார் என்பது; இல்பொருளுவமை.*

*மாடு: பக்கம்; மாத்திரை: கண்ணிமைக்கும் அல்லது கை நொடிக்கும் கால அளவு.*

*கரனின் படைத் தலைவர் பதினான்கு பேர் என்பதை உணரலாம். தான் : பிரிநிலை.*

***2885. சூலம், வாள், மழு,***
***தோமரம், சக்கரம்,***
***கால பாசம், கதை,***
***பொரும் கையினார்;***
***வேலை ஞாலம் வெரு வுறும்***
***ஆர்ப் பினார்;***
***ஆல காலம் திரண்டன்ன***
***ஆக்கை யார்.***

*(அந்த அரக்கர்கள்)* ***சூலம் வாள் மழு தோமரம் சக்கரம் கால பாசம் கதை பொரும் கையினார் -*** *சூலம் முதல் கதை வரையுள்ளபோர்ப் படைகளால் போர் செய்யும் கைகளையுடையவர்கள்;****வேலை ஞாலம் -*** *கடல் சூழ்ந்த இவ்வுலகத்து உயிர்கள் யாவும்;* ***வெருவுறும்ஆர்ப்பினார் -*** *அஞ்சத்தக்க ஆரவாரம் உடையவர்கள்;****ஆலகாலம் திரண்டன்ன -*** *ஆலகாலம் என்ற நஞ்சு உருவெடுத்து வந்தாற்போன்ற;* ***ஆக்கையார் -*** *உடலையுடையவர்கள்.*

*கையினார், ஆர்ப்பினார், ஆக்கையார் 'ஏழினோடு ஏழனார்' என்ற அடைமொழியோடு (2884) கூட்டுக. சூலம் - முத்தலைவேல்; மழு - கோடரி; தோமரம் - இரும்புலக்கை; காலபாசம் - கயிற்றாலான ஒரு போர்க்கருவி; கதை - தண்டாயுதம் ஆலகாலம் - கரிய நிறத்திற்கும் கொடுஞ்செயலுக்கு உவமை. ஞாலம் - ஆகுபெயர்.*

***2886. வெம்பு கோபக்***
***கனலர் விலக்கினார்,***

***'நம்பி! எம் அடிமைத்***
***தொழில் நன்று' எனா,***
***'உம்பர்மேல் இன்று***
***உருத்தனை போதியோ?***
***இம்பர்மேல் இனி யாம்***
***உளெமோ?' என்றார்,***

***வெம்பு கோபக் கனலர் -*** *கொதிக்கின்ற கோபத் தீயையுடைய அந்த அரக்கர்கள்;* ***(கரனை நோக்கி) நம்பி -*** *சிறந்த தலைவனே!;* ***எம் அடிமைத் தொழில் நன்று -*** *எங்களது அடிமைத் தொழில் நன்றாகஇருந்தது;* ***எனா -*** *என்று தம்மை இகழ்ந்தவர்களாய்;* ***இன்று உம் பர்மேல் -*** *இப்பொழுது தேவர்கள் மேல்;* ***உருத்தனை போதியோ -****கோபித்துப் போர் செய்யப் போகிறாயோ (அப்படி இல்லையே இவ்வாறு நீ மனிதரோடு போருக்குச் சென்றால்);* ***இனி இம்பர்மேல் -*** *இனி இந்தவுலகத்தில்;* ***யாம் உளெமோ -*** *நாங்கள் உயிரோடு வாழ்பவர்களாவேமோ?; -* ***என்றார் விலக்கினார் -*** *என்று சொல்லி (க்கரனைப் போருக்குச் செல்லாதபடி) தடுத்தார்கள்.*

*'எம் அடிமைத் தொழில் நன்று' - நாங்கள் உனக்கு அடியவர்களாய் நீ இட்ட கட்டளையை ஏற்றுச் செய்வதற்குப் பணியாளராகக் காத்திருக்க, நீஎங்களுக்கு எந்தவிதக் கட்டளையுமிடாமல் நேரே போருக்குச் சென்றால் எங்கள் அடிமைத் திறம் என்ன பயனைத் தரும்? என்பது; இகழ்ச்சிக் குறிப்பு. நம்பி - அண்மை விளி.*

***2887. 'நன்று சொல்லினிர்; நான்***
***இச் சிறார்கள்மேல்***
***சென்று போர் செயின்,***
***தேவர் சிரிப்பரால்;***
***பொன்று, சோரி குடித்து,***
***அவர் கொள்கையை***
***வென்று, மீளுதிர்***
***மெல்லியலோடு' என்றான்.***

***நன்று சொல்லினிர் -*** *நன்றாகச் சொன்னீர்கள்;* ***நான் இச்சிறார்கள் மேல் -*** *இந்த மானிடச் சிறுவர்களையெதிர்த்து;* ***சென்று போர் செயின் -*** *போய்ப் போர் புரிந்தால்;* ***தேவர் சிரிப்பர் -*** *தேவர்கள் நம்மை இகழ்ந்து சிரிப்பார்கள்;* ***கொன்று சோரி குடித்து -*** *(ஆதலால்) நீங்கள் சென்றுஅவர்களைக் கொன்று அவர்களின் இரத்தத்தைப் பருகி;* ***அவர் கொள்கையை வென்று -*** *அவர்கள் கொண்ட கோட்பாட்டைச் சிதைத்து வெற்றி கொண்டு;* ***மெல்லியலோடு மீளுதிர் -*** *அவர்களிடமுள்ள மென்மைத் தன்மையுடைய பெண்ணோடு திரும்பி வாருங்கள்;****என்றான் -*** *என்று அந்த வீரர்களுக்குக் கட்டளையிட்டான்.*

*நன்று சொல்லினிர் - தக்கதையே சொன்னீர்கள் என்பது. அவர்கொள்கை : அரக்கர்களைக் கொன்று அறத்தைக் காப்பது என்ற அவர்களின் கோட்பாடு. நிலவுலகில் நிகழும் போரை வானத்திலிருந்து காணுதல் தேவர்தம் இயல்பு. ஆல் :*

ஈற்றசை.

*2888.* **என்னலோடும், விரும்பி**
**இறைஞ்சினார்;**
**சொன்ன நாண்இலி**
**அந்தகன் தூது என,**
**அன்னர் பின்**
**படர்வார் என, ஆயினார்;**
**மன்னன் காதலர்**
**வைகு இடம் நண்ணினார்.**

**என்னலோடும் -** என்று கரன் உத்தரவிட்ட அளவிலே; **விரும்பி இறைஞ்சினார் -** மகிழ்ச்சியோடு அவனை வணங்கி; **சொன்ன நாண் இலி-** இராமலக்குவர்களைப் பற்றிச் செய்தி கூறின வெட்கங் கெட்டவளான சூர்ப்பணகையை; **அந்தகன் தூது என -** யமன் அனுப்பிய தூதாகமுன்னிட்டுக் கொண்டு; **அன்னர் பின் படர்வார் என ஆயினார் -** அவள் பின்னே செல்பவராகி; **மன்னன் காதலர் -** தசரத மன்னனின் குமாரர்கள்; **வைகு இடம் நண்ணினார் -** தங்கியிருந்த இடத்தைச் சேர்ந்தார்கள்.

சூர்ப்பணகை வழிகாட்டிக் கொண்டு முன்னே செல்ல அவளைத் தொடர்ந்து பின்னே அரக்கர்கள் சென்றதற்கு, தம்மைப் பரலோகத்திற்கு அழைத்துப் போதற்பொருட்டு யமன் அனுப்பிய தூதன் முன்னே செல்ல பின்னே அவன் காட்டும் வழியிலே தொடர்ந்து செல்லுதலை உவமையாக்கினார். தற்குறிப்பேற்றவணி.

'சொன்ன நாண் இலி' என்பதைச் சொன்னம் நாண் இலி எனப் பிரித்து சொர்ணமயமான மங்கல நாணில்லாத விதவையான சூர்ப்பணகையென்றும் உரைக்கலாம்.

நாணிலி என்றது அவள் வெட்கமில்லாமல் தகாத முறையில் காதல் கொண்டது குறித்தும், அவர்கள் தனக்கு இழைத்த கேட்டையும் அவமானத்தையும் கருதாமல் பெண்களுக்குரிய நாணமின்றி அவர்களைப் புகழ்ந்து பாராட்டியதைக் கருதியும் கூறியது.

சூர்ப்பணகை இராமனைச் சுட்டிக் காட்டுதல்

*2889.* **துமிலப் போர் வல்**
**அரக்கர்க்குச் சுட்டினாள்,**
**அமலத் தொல் பெயர்**
**ஆயிரத்து ஆழியான்**
**நிமலப் பாத நினைவில்**
**இருந்த அக்**
**கமலக் கண்ணனை,**
**கையினில் காட்டினாள்.**

***அமலத் தொல் பெயர் ஆயிரத்து -*** *குற்றமற்ற பழமை வாய்ந்த ஆயிரந் திருநாமங்களையுடைய;* ***ஆழியான் -*** *சக்கரப் படையேந்திய திருமாலின்;* ***நிமலப் பாத நினைவில் இருந்த -*** *குற்றமற்ற திருவடிகளைத் தியானித்த நிலையில் இருந்த;* ***அக் கமலக் கண்ணனை -****செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய அந்த இராமனை;* ***துமிலப் போர்வல் அரக்கர்க்கு -*** *ஆரவாரத்தோடு போர் செய்வதில் வல்ல அந்த இராக்கதர்களுக்கு;* ***கையினில் சுட்டினாள் காட்டினாள் -****(சூர்ப்பணகை) தன் கையால் சுட்டிக் காண்பித்தாள்.*

*ஆழியான் - சக்கராயுதம் கொண்ட திருமால்; இங்கே அரங்கநாதன் : இராமன் குல தெய்வம். இராமன் அரங்கநாதனைத் தியானித்து வணங்கினான். 'கோதறு தவத்துத் தம்குலத்துளோர் தொழும், ஆதியஞ் சோதியை அடி வணங்கினான்' (1208) - ஐயனும் அச்சொற் கேளா ஆயிரம் மௌலியானைக் கைதொழுது' - (1576) என்று கூறப்பட்டுள்ள செய்திகளையும் 'பணி அரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாம் காண, அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார் (638) என்று கூறப்பட்டுள்ள செய்தியையும் இணைத்துநோக்கினால், இராமன் வழிபட்டது அரங்கநாதப் பெருமானையே என்பது தெளிவாகும்.*

*அமலப் பெயர் : தன்னை உச்சரித்தவரின் கருமங்களையொழிக்கும் திருநாமம். துமிலம் : பேராரவாரம், போர்க்குழப்பம்.*

*இப்பாடல் இராமனின் தவநிலையையும் அரக்கரின் அவநிலையையும் ஒரு மிக்கக் கூறியவாறு காணலாம்.*

***2890. 'எற்றுவாம் பிடித்து;***
***ஏந்துதும்' என்குநர்,***
***'பற்றுவாம் நெடும்***
***பாசத்தின்' என்குநர்,***
***'முற்றுவாம் இறை சொல்***
***முறையால்' எனா,***
***சுற்றினார் - வரை***
***சூழ்ந்தன்ன தோற்றத்தார்.***

***பிடித்து எற்றுவாம் -*** *(இந்த மனிதர்களைப்) பிடித்து மோதுவோம்;****(பிடித்து) ஏந்துதும் -*** *(அவர்களைக்) கையிலே பிடித்து ஏந்திக் கொள்வோம்;* ***என்குநர் -*** *என்று சொல்பவர்களும்;* ***நெடும் பாசத்தின் -*** *நீண்ட காலபாசம் என்னும் கயிற்றுச் சுருக்கால்;* ***பற்று வாம் என்குநர் -*** *பிடித்துக் கட்டுவோம் என்று சொல்பவர்களும்;* ***இறை சொல் முறையால் -*** *நம் தலைவனான கரன் சொன்னவாறு;* ***முற்றுவாம் எனா -*** *அந்தச் செயலைச் செய்து முடிப்போம் என்றும் சொல்லி;* ***வரை சூழ்ந்தன்ன தோற்றத்தார் -*** *மலைகள் பல சூழ்ந்து நின்றாற் போன்ற தோற்றம் உடையவர்களாய்;* ***சுற்றினார் -*** *(இராமன் இருந்த இடத்தைச்) சூழ்ந்து கொண்டார்கள்.*

*எற்றுவாம் பிடித்து ஏந்துதும் என்றது - **பந்துகளைக் கொண்டு விளையாடுவது** போல இராமலக்குவர்களை எற்றிப் பிடித்து ஏந்திப் போர் செய்வோம் என எளிதாகக் கருதிக் கூறியது.*

*பிடித்து : மத்திம தீபம் (நடுவில் இருந்து இரு பக்கமும் விளக்குகின்ற இடைநிலை விளக்கு).*

*இராமன் போருக்கு எழுதல்*

***2891. ஏத்து வாய்மை***
***இராமன், இளவலை,***
***'காத்தி தையலை' என்று,***
***தன் கற்பகம்***
***பூத்தது அன்ன பொரு***
***இல் தடக் கையால்,***
***ஆத்த நாணின் அரு***
***வரை வாங்கினான்.***

***ஏத்து வாய்மை இராமன் -** யாவரும் புகழ்ந்து கொண்டாடும் சத்தியத்தையுடைய இராமன்; **இளவலை -** தம்பியான இலக்குவனை (நோக்கி); **தையலை(க்) காத்தி என்று -** தேவியாகிய சீதையை நீ பாதுகாத்துக் கொண்டிரு என்று கூறி; **பூத்தது கற்பகம் அன்ன -** பொலிவு பெற்ற கற்பக மரம் போன்ற; **பொருவு இல் -** வேறு ஒப்பில்லாத; **தன்தடக் கையால் -** தன்னுடைய பெரிய கையினால்; **ஆத்த நாணின் -** கட்டப்பட்ட நாண்கயிற்றையுடைய; **அருவரை வாங்கினான் -** அழித்தற்கரிய மலை போன்ற வில்லை எடுத்துக் கொண்டான்.*

*ஏத்து வாய்மை இராமன் - தண்டகாரணியத்தில் வசிக்கும் முனிவர்கள் அரக்கர்களின் தொல்லை பொறுக்க முடியாமல் தன்னைச் சரணடைந்த பொழுது அவர்களுக்கு இராமன் அந்த அரக்கர்களையெல்லாம் வேரறுப்பதாக வாக்குறுதி தந்திருந்ததைப் பழுதுபடாதவாறு நிறைவேற்றத் தொடங்கினான் என்பது.*

*ஆத்த - யாத்த: மரூஉ; வரை - உவமையாகுபெயர்.*

***2892. வாங்கி, வாளொடு வாளி***
***பெய் புட்டிலும்***
***தாங்கி, தாமரைக்***
***கண்ணன், அச் சாலையை***
***நீங்கி, 'இவ்வழி***
***நேர்மின், அடா!' எனா,***
***வீங்கு தோளன்***
***மலைதலை மேயினான்.***

***தாமரைக் கண்ணன் -*** *செந்தாமரை மலர் போன்ற அழகிய கண்களையுடைய இராமன்;* ***வாங்கி -*** *வில்லை எடுத்துக் கொண்டு;****வாளொடு -*** *வாளுடனே;* ***வாளி பெய் புட்டிலும் -*** *அம்புகளை வைத்துள்ள அம்பறாத் தூணியையும்;* ***தாங்கி -*** *தரித்துக் கொண்டு;****அச் சாலையை நீங்கி -*** *அந்தப் பர்ணசாலையை விட்டு நீங்கி;* ***இவ்வழிநேர்மின் அடா எனா -*** *இந்த இடம் (போருக்கு) வாருங்களடா என்று (அரக்கரை நோக்கிக்) கூறி;* ***வீங்கு தோளன் -*** *(போர் கருதியதால்) பூரித்த தோள்களையுடையவனாய்;* ***மலைதலை மேயினான் -*** *போர் செய்யத் தொடங்கினான்.*

*இராமன் வாளை இடையிலும், அம்புப் புட்டிலைத் தோள்புறத்திலும் தாங்கினான் என்பது. உள்ளத்தைக் கவரும் அழகும் குளுமையும் நிறமும் உருவும் ஒத்தமையால் தாமரைமலர் இராமனின் கண்களுக்கு உவமையாயிற்று.*
*18அரக்க வீரர் மடிய, சூர்ப்பணகை கரனிடம் ஓடுதல்*

***2893. மழுவும், வாளும், வயங்கு***
***ஒளி முச் சிகைக்***
***கழுவும், கால வெந் தீ***
***அன்ன காட்சியார்,***
***எழுவின் நீள் தடக்***
***கை எழு நான்கையும்,***
***தழுவும் வாளிகளால், தலம்***
***சார்த் தினான்.***

***கால வெந் தீ அன்ன -*** *கொடிய ஊழிக் காலத்துத் தீயைப் போன்ற;* ***காட்சியார் -*** *தோற்றத்தையுடையவர்களாகிய அந்த அரக்கர்களின்;* ***மழுவும் -*** *மழுவென்னும் ஆயுதத்தையும்;* ***வாளும் -*** *வாள்களையும்;****வயங்கு ஒளி -*** *விளங்குகின்ற ஒளியுடைய;* ***முச் சிகைக் கழுவும் -*** *முத்தலைகளையுடைய சூலங்களையும்;* ***எழுவின் நீள் தடக்கை எழுநான்கையும் -*** *(இவ்வாறான படைக்கலங்களை ஏந்திய) - தூண்களைப் போன்று நீண்ட பெரிய கைகள் இருபத்தெட்டையும்;* ***தழுவும் வாளிகளால் -*** *குறி தவறாமல் தாக்கும் அம்புகளால்;* ***தலம் சார்த்தினான் -****துணித்துத் தரையில் வீழ்த்தினான்.*

*அப் பதினான்கு அரக்க வீரர்களின் கைகளையும் இராமன் தன் அம்புகளால் துண்டித்துத் தரையிலே தள்ளினான் என்பதாம். போரின் தொடக்கத்திலேயே பதினான்கு அரக்கர்களும் தம் படைகளுடன் கைகளை இழந்தனர் என்பது.*

***2894. மரங்கள்போல், நெடு***
***வாளொடு தோள் விழ,***
***உரங்களான் அடர்ந்தார்;***
***உரவோன் விடும்***
***சரங்கள் ஓடின***
***தைக்க, அரக்கர்தம்***

*சிரங்கள் ஓடின;*
*தீயவள் ஓடினாள்.*

***நெடு வாளொடு -*** *நீண்ட வாள்களோடு;* ***தோள் -*** *தங்கள் தோள்கள்;* ***மரங்கள்போல் விழ -*** *மரங்கள் வெட்டப்பட்டுக் கீழே விழுவது போலத் துணிபட்டு வீழ்ந்தபின்பும்;* ***உரங்களான் அடர்ந்தார் -*** *(பொருட்படுத்தாமல் மேலும்) அந்தப் படைத் தலைவர்கள் மார்பின் வலிமை கொண்டு தாக்கிப் போர் செய்தனர்;* ***உரவோன் விடும் சரங்கள் -*** *வலிமையுள்ள இராமன் அவர்கள்மேல் எய்த அம்புகள்;* ***ஓடின தைக்க -*** *விரைவாகச் சென்று பாய்தலால்;* ***அரக்கர்தம் சிரங்கள் -*** *அவ்வரக்கர்களுடைய தலைகள்;****ஓடின -*** *அறுபட்டு அப்பால் விழுந்தன;* ***தீயவள் ஓடினாள் -****(அதுகண்டு) கொடியவளான சூர்ப்பணகையும் அஞ்சி ஓடலுற்றாள்.*

*அந்தப் படைத் தலைவர் பதினால்வரின் கைகளும் பிடித்த படைக் கருவிகளோடு அற்றுக் கீழே விழுந்திடவும் அவர்கள் சலியாமல் நின்று தம் மார்பு வலிமையால் போர் செய்ய, அப்போது இராமனின் அம்புகள் விரைந்து சென்று தைக்க அவர்களின் தலைகள் அறுபட்டு வீழ்ந்தன என்பது. வாள் - இங்கே படைக் கருவிகளின் பொதுவைக் குறித்தது.சரங்கள் ஓடின, சிரங்கள் ஓடின, தீயவள் ஓடினாள் என்ற அடுக்கு விரைவில் உண்டான ஏக கால நிகழ்ச்சிகளின் குறிப்பை உணர்த்தியது.*

*கரன் வெகுண்டு எழுதல்*

***2895. ஒளிறு வேல் கரற்கு,***
***உற்றது உணர்த்தினாள்-***
***குளிறு கோப வெங் கோள்***
***அரிமா அட,***
***களிறு எலாம் பட, கை***
***தலைமேல் உற***
***பிளிறி ஓடும் பிடி***
***அன்ன பெற்றியாள்.***

***குளிறு -*** *கர்ச்சிக்கின்ற;* ***கோப வெங் கோள் அரிமா -*** *சினத்தையுடைய கொடிய வலிய சிங்கம்;* ***அட -*** *கொன்றதால்;****களிறு எலாம் பட -*** *ஆண் யானைகளெல்லாம் இறந்தொழிய (அதுகண்டு);****கை தலைமேல் உற -*** *துதிக்கை தன் தலை மேல் படிய வைத்துக் கொண்டு;* ***பிளிறி ஓடும் -*** *வீரிட்டு ஒடுகின்ற;* ***பிடி அன்ன -*** *பெண் யானை போன்ற;* ***பெற்றியாள் -*** *தன்மையுடையவளான சூர்ப்பணகை;* ***ஒளிறு வேல் கரற்கு -*** *ஒளிவீசும் வேலேந்திய கரனிடம்;* ***உற்றது உணர்த்தினாள் -*** *நடந்த செய்தியைத் தெரிவித்தாள்.*

*சிங்கம் அடர்த்ததனால் தன் குலத்துக் களிறுகளெல்லாம் இறந்தொழியத் தன் துதிக்கையை மத்தகத்துக் கொண்டு வீரிட்டோடுகின்ற பெண்யானை போல இராமபிரானால் அரக்கப் படை வீரர்கள் அழியவே தன் கையைத் தலைமேற் கொண்டு சூர்ப்பணகை கதறியவாறு ஓடிப்போய்க் கரனுக்கு உணர்த்தினாள் என்பது.*

*அரிமா இராமனுக்கும், களிறு அரக்கர்க்கும், பிடி சூர்ப்பணகைக்கும் உவமை. உவமையணி யானை அஞ்சி வெருண்டோடும் போது துதிக்கை தலைமேல் பொருந்தத் தூக்கிக் கொண்டு ஓடும் இயல்பினது.*

***2896. 'அங்கு அரக்கர் அவிந்து***
***அழிந்தார்' என,***
***பொங்கு அரத்தம் விழிவழிப்***
***போந்து உக,***
***வெங் கரப் பெயரோன்,***
***வெகுண்டான், விடைச்***
***சங்கரற்கும் தடுப்பு***
***அருந் தன்மையான்.***

***விடைச் சங்கரற்கும் -*** *காளை வாகனத்தையுடைய (அழித்தற் கடவுளான) சிவபிரானுக்கும்;* ***தடுப்பு அரும் தன்மையான் -*** *தடுக்கமுடியாத வீரத்தன்மையுடையவனான;* ***வெங் கரப் பெயரோன் -****கொடிய கரனென்னும் பெயரையுடைய அந்த அரக்கன்;* ***அங்கு அரக்கர் அவிந்து அழிந்தார் என -*** *தான் அனுப்பிய படைத் தலைவர்கள் இறந்தொழிந்தனர் என்று (சூர்ப்பணகை) சொல்ல (க் கேட்டு);* ***பொங்கு அரத்தம் -*** *உள்ளிருந்து பொங்குகின்ற இரத்தம்;* ***விழிவழிப் போந்து உக -*** *தன்கண்களின் வழியாக வெளியே சிந்த;* ***வெகுண்டான் -*** *கோபங் கொண்டான்.*

*சங்கரனுக்கும் - உம்மை உயர்வு சிறப்பினது. ரத்தம் என்பதனோடு அகர உயிர் முதலில் வந்து* ***அரத்தம்*** *என்றாயிற்று.*

***2897. 'அழை, என் தேர்; எனக்கு***
***ஆக்கு, வெம் போர்ப் படை;***
***உழையர் ஓடி, ஒரு***
***நொடி ஓங்கல்மேல்,***
***மழையின், மா முரசு***
***எற்றுதிர், வல்' என்றான்-***
***முழையின், வாள் அரி***
***அஞ்ச முழங்குவான்.***

***முழையின் வாள் அரி அஞ்ச முழங்குவான் -*** *குகைக்குள் பதுங்கியிருக்கும் கொடிய சிங்கங்கள் அஞ்சும்படி முழக்கம் இடுபவனான கரன்;* ***என் தேர் அழை -*** *என் தேரை இங்கே அழையுங்கள்;* ***வெம் போர்ப் படை எனக்கு ஆக்கு -*** *எனக்கு வலிய போர் செய்வதற்குரிய படைக் கலங்களை ஆக்கு;* ***வல் உழையர் ஓடி -*** *விரைவில் ஏவலாட்கள் ஓடிச் சென்று;* ***ஒரு நொடி ஓங்கல்மேல் -*** *ஒரு நொடிக்குள்ளாக யானையின்மேல்;* ***மழையின் -*** *மேகம் அதிர்வது போல;* ***மா முரசு எற்றுதிர் -*** *பெரிய போர் முரசங்களை முழக்குங்கள்;* ***என்றான் -****என்று கட்டளையிட்டான்.*

*உழையர் - குற்றவேல் பணி செய்வோர். வெகுண்ட கரன் படைக்கலங்களையும் தேரையும் கொண்டு வருக, முரசை முழக்குக என்று கட்டளையிட, பக்கத்தில் இருந்தவர் ஓடிச் சென்று யானை மேல் முரசேற்றிப்பறையறைந்து அரக்கச் சேனை வருமாறு கரனது கட்டளையைத் தெரிவித்தனர் என்பது. ஓங்கல் - யானை: உவமவாகுபெயர். முரசு முழக்குக்கு மேக முழக்கு உவமையாம்.*
*போர்ப் பறை கேட்டு, நான்குவகைப் படை எழுதல்*

***2898.* பேரி ஓசை**
***பிறத்தலும், பெட்புறு***
***மாரி மேகம் வரம்பு***
***இல வந்தென,***
***தேரின் சேனை***
***திரண்டது; தேவர்தம்***
***ஊரும், நாகர்***
***உலகும் உலைந்தவே.***

**பேரி ஓசை பிறத்தலும் -** *அவ்வாறு போர்ப் பறை முழங்கிய மாத்திரத்தில்;* **பெட்பு உறு -** *பெருமை மிக்க;* **மாரிமேகம் வரம்பு இல -** *மழைபொழியும் மேகங்கள் அளவில்லாதன;* **வந்து என -** *திரண்டு வந்தாற்போல;* **தேரின் சேனை -** *தேர்களையுடைய அரக்கச் சேனை;* **திரண்டது -** *ஒன்றாகத் திரண்டு வந்து கூடியது;* **தேவர் தம் ஊரும் -***(அதனால்) தேவலோகம்;* **நாகர் உலகும் -** *நாகலோகமும்;* **உலைந்த -** *நிலைகுலைந்து வருந்தின.*

*தீயோரை நலிந்து தங்களைப் பாதுகாக்கும் பொருட்டு அவதாரம் எடுத்துள்ள இராமபிரானுக்கு இதனால் என்னவாகுமோ என்று தேவர்களும், அளவற்ற சேனைகள் ஒருங்கு கூடியதனாலாகிய பார மிகுதியைத் தாங்க மாட்டாமல் பாதாளவுலகத்து நாக சாதியாரும் வருந்தினர் என்பது.*

*சேனைகள் படைக்கலங்களைப் பொழிவதையும், பெருமுழக்கம்செய்வதையும், கரு நிறம் மிகுந்து இருப்பதையும் கருதி மாரி மேகத்தை உவமை கூறினார். அஃதாவது தேருக்கு - மேகம் நிறத்தாலும் உயர்ந்து விளங்கும் உருவாலும்* ***ஒலியாலும் உவமை என்பது. ஏ - ஈற்றசை.***

***2899.* போர்ப் பெரும் பணை**
***'பொம்' என் முழக்கமா,***
***நீர்த் தரங்கம் நெடுந்***
***தடந் தோள்களா,***
***ஆர்தது எழுந்தது -***
***இறுதியில், ஆர் கலிக்***
***கார்க் கருங் கடல்***
***கால் கிளர்ந்தென்னவே.***

***போர்ப் பெரும் பணை -*** *போரினைத் தெரிவிக்கும் பெரிய முரசுகளின் ஓசை;* ***பொம் என் முழக்கமா -*** *பொம்மென்று ஒலிக்கின்றஆரவாரமாக இருக்க;* ***நீர்த் தரங்கம் ஆ -*** *கடல் நீரிலுள்ள அலைகளாக;* ***நெடுநந் தடத் தோள்கள் -*** *நீண்ட பெரிய தோள்கள் இருக்க;* ***இறுதி இல் ஆர் கலி கார்க் கருங்கடல் -*** *முடிவே இல்லாத ஆரவாரத்தையும் மேகம் போன்ற கரு நிறத்தையுமுடைய கடல்;* ***கால் கிளர்ந்து என்ன -****ஊழிக் காற்றினால் பொங்கி மேலெழுந்தாற் போல;* ***ஆர்த்து எழுந்தது -****(அரக்கர் சேனை) ஆரவாரம் செய்து கொண்டு (போருக்கு) எழுந்தது.*

*ஊழிக் காலத்தில் கிளர்ந்து பேராரவாரத்துடன் கடல் எழுவது போல அரக்கர் சேனை எழுந்தது என்பது தற்குறிப்பேற்றவணி. பொம்மென - ஒலிக் குறிப்பு. பணை - ஒலி : முதலாகுபெயர். ஏ - ஈற்றசை.*

*சேனை கடல் என்றதற்கேற்ப அலைகள் தோள்களாகக் கூறப்பெற்றன.*

***2900. காடு துன்றி,***
***விசும்பு கரந் தென***
***நீடி, எங்கும் நிமிர்ந்த***
***நெடுங் கொடி-***
***'ஓடும் எங்கள் பசி' என்று,***
***உவந்து, எழுந்து,***
***ஆடுகின்ற அலகையின்***
***ஆடவே,***

***காடு துன்றி -*** *காடுகள் எல்லாம் அடர்ந்து நெருங்கி;* ***விசும்பு கரந்தென -*** *வானத்தை மறைத்தாற் போல;* ***எங்கும் நீடி நிமிர்ந்த -*** *எல்லா இடத்தும் நீண்டு உயர்ந்த;* ***நெடுங் கொடி -*** *தேர்களின் நீண்ட கொடிகள்;* ***எங்கள் பசி ஓடும் என்று -*** *எங்களுடைய பசி விரைவில் நீங்கிவிடும் என்று;* ***உவந்து எழுந்து -*** *மகிழ்ச்சியோடு எழுந்து நின்று;* ***ஆடுகின்ற அலகையின் -*** *கூத்தாடுகின்ற பேய்களைப் போல;****ஆட -*** *அசையவும்;* ***'ஏ' -*** *ஈற்றசை.*

*தேரின் கொடிகள் அடர்ந்து வானம் மறைய அசைந்து மேலோங்கி நிற்பது அக் காட்டின் மரங்கள் மேலெழுந்து வானத்தையளாவி நின்று மறைத்தல் போலும் என்பது தற்குறிப்பேற்றவணி.*

*அலகைகள் பசி ஓடும் என்றது போரில் இறந்தவர் உடலையும் குருதியையும் உண்ண இடமாகும் என்று கருதியதால் ஆகும். கொடிக்குப் பேய் ஒப்பு.*

***2901. தறியின் நீங்கிய, தாழ்***
***தடக் கைத் துணை,***
***குறிகொளா, மத வேழக்***
***குழு அனார்,***

***செறியும் வாளொடு வாளிடை***
***தேய்ந்து உகும்***
***பொறியின், கான் எங்கும்***
***வெங் கனல் பொங்கவே.***

***தறியின் நீங்கிய -*** *(மதத்தால்) கட்டுத்தறியிலிருந்து வெளிப்பட்டவையும்;* ***குறிகொளா -*** *(எவரையும்) ஒரு பொருட்டாக மதியாதவையுமான;* ***தாழ் தடக்கைத் துணை -*** *தாழ்ந்து தொங்குகின்ற பெரிய இரண்டு துதிக்கைகளையுடைய;* ***மதவேழக் குழு அனார் -****மதங் கொண்ட யானைக் கூட்டத்தை ஒத்தவர்களாகிய அரக்கர்களின்;****செறியும் வாளொடு வாள் -*** *அடர்ந்த வாளாயுதங்கள் ஒன்றோடு ஒன்று;****இடை தேய்ந்து -*** *நடுவிலே உராய்தலால்;* ***உகும் பொறியின் -*** *வெளிச் சிந்தும் தீப் பொறிகளால்;* ***கான் எங்கும் -*** *அந்த வனம் எங்கும்;* ***வெம் கனல் பொங்க -*** *கொடிய நெருப்பு ஓங்கியெழவும்;* ***ஏ -*** *ஈற்றசை.*

*அரக்கப் படை வீரர்க்குத் தறியின் நீங்கிய தாழ் தடக்கைத் துணை மத வேழங்கள் உவமையாம். இந்தப் பாடல், தேர்ப் படையைத் தொடர்ந்து சென்ற அரக்கப் படை வீரர்களின் செறிவையும் அவர்கள் ஏந்திய வாட்படைகளின் மிகுதியையும் விளக்கியது. தறி - தூண். தன்னைக்கட்டியுள்ள தறியைக் கடுங்கோபத்தால் முறித்துத் தள்ளிவிட்டுத் தடையின்றி வெளிச் செல்வது மதயானையின் இயல்பு.*

***2902. முருடு இரண்டு முழங்குறத்***
***தாக்கு ஒலி***
***உருள் திரண்டு எழும்***
***தேர் ஒலியுள் புக,***
***அருள் திரண்ட அருக்கன்***
***தன்மேல், அழன்று***
***இருள் திரண்டு வந்து***
***ஈண்டியது என்னவே,***

***இரண்டு -*** *இரண்டு பக்கங்களிலும்;* ***முருடு முழங்குற -*** *முருடு என்னும் போர்ப் பறை முழக்கம் உண்டாகும்படி;* ***தாக்கு ஒலி -*** *அடிக்கப்படுதலாலாகிய ஓசை;* ***உருள் திரண்டு எழும் -*** *சக்கரங்கள் பல ஒன்றாக உருளுவதால் உண்டாகும்;* ***தேர் ஒலியுள் புக -*** *தேர்களின்ஆரவாரத்தினுள்ளே அடங்கவும்;* ***அருள் திரண்ட -*** *கருணையே (ஒருருவாகத்) திரண்டு வடிவெடுத்தாற் போன்று விளங்கும்;****அருக்கன்தன் மேல் -*** *சூரியன்மேல்;* ***அழன்று -*** *கோபித்து;* ***இருள் திரண்டு வந்து ஈண்டியது என்ன -*** *இருளெல்லாம் ஒன்று சேர்ந்து நெருங்கியது போலவும்.*

*இராமனுக்குச் சூரியனையும், அவன்மேல் போருக்கு எழுந்து நெருங்கிய அரக்கர் சேனைக்குச் சூரியன்மேல் வந்து நெருங்கிய இருளின் தொகுதியையும் உவமை கூறியதால் கதிரவன்முன் இருள் போல இராமபிரான்முன் அரக்கர்கள் எளிதில் அழியப் போவது பெறப்படும். இருளையொழித்தல், மிக்க ஒளியைத் தருதல் ஆகிய செயல்கள். உலகிற்கு மிகப் பேருதவியாக இருப்பதால் அவனை 'அருள் திரண்ட அருக்கன்' என்றார். சூரிய குலத்தவனான இராமனுக்குச் சூரியனும்,கருநிறமுடைய*

*அரக்கரின் கூட்டத்திற்கு இருளின் திரட்சியும் உவமையாக நன்கு பொருந்தும். இரண்டு : எண்ணலளவையாகுபெயர். முருடு - ஒருவகைப் பறை. மத்தளமும் ஆம்.*

***2903. தலையில், மாசுணம்,***
***தாங்கிய தாரணி***
***நிலை நிலாது, -***
***முதுகை நெளிப்புற,***
***உலைவு இல் ஏழ்***
***உலகத்தினும் ஓங்கிய***
***மலை எலாம், ஒரு***
***மாடு தொக்கென்னவே.***

***மாசுணம் தலையில் தாங்கிய -*** *(ஆதிசேடன் முதலான) பாம்புகள் தலைமேற் கொண்டு சுமக்கின்ற;* ***தாரணி நிலை நிலாது -*** *பூமி (மிகுதியான பாரத்தைப் பொறுக்கமுடியாமல்) ஒரு நிலையில் நிற்க முடியாமல்;* ***முதுகை நெளிப்புற -*** *(தன்) முதுகை நெளிக்கும்படி;* ***உலைவு இல் ஏழ் உலகத்தினும் -*** *அழிவில்லாத ஏழுலகங்களிலும்;* ***ஓங்கிய மலை எலாம் -*** *ஓங்கி வளர்ந்துள்ள மலைகள் யாவும்;* ***ஒரு மாடு தொக்கு என்ன -*** *ஓரிடத்தில் வந்து சேர்ந்தாற் போலவும்;* ***ஏ -*** *ஈற்றசை.*

*ஏழுலகத்து மலைகளும் ஒருங்கு திரண்டாற் போல அரக்கர்கள்அந்தப் போர்க்களத்தில் ஒருங்கே திரண்டனர் என்பது - தற்குறிப்பேற்றவணி.*

*சராசரப் பொருள் அனைத்தையும் தரித்து நிற்பதால் பூமி தாரணி எனப்பட்டது. தேர்ப்படை மலைகளின் தொகுதிக்கு உவமை; அவைவலிமையும் பெருமையும் உயர்வும் பெற்றுள்ளமை பொதுத்தன்மை.*

*'கார்க் கருங்கடல் கால் கிளர்ந்தென்ன' (2899), 'அலகையின் ஆட' (2900), 'பொறியினிற் கானெங்கும் வெங்கனல் பொங்க' (2901), 'இருள் திரண்டு வந்து ஈண்டிய தென்ன' (2902), 'மலையெலாம் ஒருமாடு வந்து தொக்கென்ன' (2903), 'தேரின் சேனை திரண்டது' (2898) எனத் தொகுத்துப் பொருள் முடிவு காண்க.*

***2904. 'வல்லியக் குழாங்களோ?***
***மழையின் ஈட்டமோ?***
***ஒல் இபத் தொகுதியோ?***
***ஓங்கும் ஓங்கலோ?***
***அல்ல, மற்று அரிகளின்***
***அனிகமோ?' என,***
***பல பதினாயிரம் படைக்***
***கை வீரரே.***

***வல்லியக் குழாங்களோ*** - *புலிகளின் கூட்டங்களோ?;* ***மழையின் ஈட்டமோ*** - *மேகங்களின் கூட்டமோ?;* ***ஒல் இபத் தொகுதியோ*** - *ஆரவாரம் செய்யும் யானைகளின் கூட்டமோ?;* ***ஓங்கும் ஓங்கலோ*** - *உயர்ந்து விளங்கும் மலைகளோ?;* ***அல்ல*** - *(இவை யாவும்) அல்ல;* ***மற்று அரிகளின் அனிகமோ என*** - *சிங்கங்களின் சேனைகளே என்று சொல்லும்படி (வந்த) ;* ***படைக் கை வீரர்*** - *போர்ப் படைகளை ஏந்திய கைகளையுடைய அரக்கர்களின் தொகை;* ***பல் பதினாயிரம்*** - *மிகப் பல பதினாயிரமாகும்;* ***ஏ*** - *ஈற்றசை.*

*வீரர்களான அரக்கர்கள் புலிக் கூட்டங்களைப் போலவும், யானைத் தொகுதிகளைப் போலவும், மலைக் கூட்டங்களை ஒப்பவும், சிங்கப் படைகளைப் போலவும், பல பதினாயிரக் கணக்கில் போருக்கு வந்தனர் என்பது. கொடுமைக்குப் புலியும், பெரிய உருவத்திற்கும் கர்ச்சனைக்கும் மேகமும், பெரியவலிய உருவத்திற்கு யானையும், வீர பராக்கிரமத்திற்குச் சிங்கமும் அந்த அரக்க வீரர்க்கு உவமைகளாயின.*

*ஐயவணி அல்லது மயக்கவணியாம். இரண்டும் கலந்து வந்த கலவையணியுமாம். ஒல் - ஒலிக்குறிப்பு.*

***2905. ஆளிகள் பூண்டன,***
***அரிகள் பூண்டன,***
***மீளிகள் பூண்டன,***
***வேங்கை பூண்டன,***
***ஞாளிகள் பூண்டன,***
***நரிகள் பூண்டன,***
***கூளிகள் பூண்டன,***
***குதிரை பூண்டன,***

***ஆளிகள் பூண்டன*** - *யாளிகள் பூட்டப் பட்டவையும்;* ***அரிகள் பூண்டன*** - *சிங்கங்கள் பூட்டப்பட்டவையும்;* ***மீளிகள் பூண்டன*** *-பேய்கள் பூட்டப்பட்டவையும்;* ***வேங்கை பூண்டன*** - *புலிகள் பூட்டப் பட்டவையும்;* ***ஞாளிகள் பூண்டன*** - *நாய்கள் பூட்டப் பட்டவையும்;* ***நரிகள் பூண்டன*** - *நரிகள் பூட்டப் பட்டவையும்;* ***கூளிகள் பூண்டன*** - *பூதங்கள் பூட்டப்பட்டவையும்;* ***குதிரை பூண்டன*** - *குதிரைகள் பூட்டப்பட்டவையும் (ஆகிய)*

*ஆளி (யாளி) மரூஉமொழி - துதிக்கையுடையதும், யானையைக்கொல்வதும், சிங்கம் போல்வதுமான ஒரு மிருகம். சொற்பொருள் பின்வருநிலையணி. கூளி - பூதம் : குறுகிப் பருத்த உருவமுடையது.*

***2906. ஏற்றுஇனம் ஆர்த்தன,***
***ஏனம் ஆர்த்தன,***
***காற்றுஇனம் ஆர்த்தன,***
***கழுதை ஆர்த்தன,***
***தோற்றின மாத்திரத்து***
***உலகு சூழ்வரும்***

***பாற்றுஇனம் ஆர்த்தன,***
***பணிலம் ஆர்த்தன.***

***ஏற்று இனம் ஆர்த்தன*** *- எருதுகளின் கூட்டம் கட்டப்பட்டவையும்;* ***ஏனம் ஆர்த்தன*** *- பன்றிகள் கட்டப்பட்டவையும்;* ***காற்று இனம் ஆர்த்தன*** *- காற்று வடிவான பேய்க் கூட்டங்கள் கட்டப்பட்டவையும்;* ***கழுதை ஆர்த்தன*** *- கழுதைகள் கட்டப்பட்டவையும்;* ***பாற்றினம் ஆர்த்தன*** *- பருந்து வகைகள் கட்டப்பட்டவையும்;* ***தோற்றின மாத்திரத்து*** *- மனத்தே எண்ணிய அளவிலே;* ***உலகு சூழ்வரும்*** *- உலகத்தைச் சுற்றி வரும் தன்மையுள்ளனவும்;* ***பணிலம் ஆர்த்தன*** *- சங்குகள் முழங்கினவுமான.*

*இறுதியிலுள்ள ஆர்த்தன என்பது முற்று; மற்றவை பெயர்கள்.*

*காற்று - பேய் : உலகவழக்கு பாறு - கழுகு, பருந்து. (பாறு + இனம் = பாற்றினம்).*

***2907. தேர்இனம் துவன்றின; சிறு***
***கண் செம் முகக்***
***கார்இனம் நெருங்கின;***
***காலின், கால் வரு***
***தார்இனம் குழுமின;-தடை***
***இல் கூற்று எனப்***
***பேர்இனம் கடல்***
***எனப் பெயருங்காலையே.***

***தேர் இனம்*** *- தேர்களின் கூட்டங்கள்;* ***துவன்றின*** *- நெருங்கின;* ***சிறுகண் செம்முகக் கார் இனம்*** *- சிறிய கண்களையும் சிவந்த முகத்தையுமுடைய மேகங்களைப் போன்ற யானைக் கூட்டங்கள்;* ***நெருங்கின*** *- அடர்ந்தன;* ***காலின் கால்வரு*** *- காற்றைப் போலக் கால்களால் விரைந்து ஓடி வரும்;* ***தார் இனம்*** *- குதிரைப் படைகளின் கூட்டங்கள்;* ***குழுமின*** *- திரண்டன;* ***தடை இல் கூற்று என*** *-தடுக்கப் படாத யமனைப் போல;* ***பேர் இனம்*** *- பெரிய அரக்கராகிய காலாட் படை;* ***கடல் என*** *- கடல் போல;* ***பெயரும் காலை*** *- செல்லும் பொழுதில்;* ***ஏ*** *- ஈற்றசை.*

*கார் - உவமவாகுபெயர் : யானை என்பது விளங்கச் 'சிறுகண் செம்முகக் கார்' என்றார் சிறிய கண்களும் செம்புள்ளிகளும் உத்தமயானைக்கு இலக்கணமாம். தார் : குதிரைச் சேனை.*

*துவன்றின், நெருங்கிய, குழுமின என்பவற்றில் ஒரு பொருளே மீண்டும் வந்ததால் பொருட் பின்வரு நிலையணியாம். முன்னே காலாட்படைபெயரத் தேர், யானை, குதிரை என்னும் முப்படைகளும் பின்னே பெயர்த்தன என்பது கூறப்பட்டது. தார் - கிண்கிணிமாலை. அதனைப் பூண்ட குதிரை என்க.*
*கரன் படையினர் ஏந்திய போர்க் கருவிகள்*

*2908.* ***மழுக்களும், அயில்களும்,***
***வயிர வாள்களும்,***
***எழுக்களும், தோமரத்***
***தொகையும், ஈட்டியும்,***
***முழுக் கலும், முசுண்டியும்,***
***தண்டும், முத் தலைக்***
***கழுக்களும், உலக்கையும்,***
***கால பாசமும்.***

***மழுக்களும் -*** *எரியிரும்பு ஆயுதங்களும்;* ***அயில்களும் -*** *வேற்படைகளும்;* ***வயிர வாள்களும் -*** *உறுதியான வாட் படைகளும்;* ***எழுக்களும் -*** *குத்துக் கோல்களும்;* ***தோமரத் தொகையும் -*** *ஏறியீட்டிகளின் தொகுதியும்;* ***ஈட்டியும் -*** *பெரிய ஈட்டிகளும்;* ***முழுக்கலும் -*** *முழுக் கற்களான கவண் கற்களும்;* ***முசுண்டியும் -*** *முசுண்டியென்னும் சிறுவாள்களும்;* ***தண்டும் -*** *தண்டாயுதமாகிய கதைகளும்;* ***முத்தலை கழுக்களும் -*** *மூன்று தலைகளையுடைய சூலங்களும்;* ***உலக்கையும் -*** *உலக்கைகளும்;* ***கால பாசமும் -*** *கால பாசமாகிய சுருக்குக் கயிறுகளும்.*

*முசுண்டி - சிறுவாள் 2908, 2909, 2910 ஆகிய மூன்று செய்யுட்கள்படையினர் எடுத்துச் சென்ற படைக் கருவிகளைக் கூறும்.*

*2909.* ***குந்தமும், குலிசமும்,***
***கோலும், பாலமும்,***
***அந்தம் இல் சாபமும்,***
***சரமும், ஆழியும்,***
***வெந் தொழில் வலயமும்,***
***விளங்கு சங்கமும்***
***பந்தமும், கப்பணப்***
***படையும், பாசமும்,***

***குந்தமும் -*** *சிறிய ஈட்டிகளும்;* ***குலிசமும் -*** *வச்சிரப் படைகளும்;* ***கோலும் -*** *தடிகளும்;* ***பாலமும் -*** *பிண்டிபாலமென்னும் முறுக்குத் தடிகளும்;* ***அந்தம் இல் சாபமும் -*** *அளவில்லாத விற்களும்;* ***சரமும் -*** *அம்புகளும்;* ***ஆழியும் -*** *சக்கரப் படைகளும்;* ***வெந் தொழில் வலயமும் -*** *கொடிய தொழிலையுடைய வளையங்களும்;* ***விளங்கு சங்கமும் -*** *வெண்ணிறமாக விளங்கும் சங்குகளும்;* ***பந்தமும் -*** *தீப் பந்தங்களும்;* ***கப்பணப் படையும் -*** *கப்பணமென்னும் ஆயுதங்களும்;* ***பாசமும் -*** *கயிறுகளும்-;     தனது பெருமுழக்கத்தால் பகைவரை அஞ்சச் செய்து அழித்தலால் சங்கும் ஆயுதத்தின் பால் சேரும். திருமாலின் ஐந்து படைகளுள் பாஞ்சசன்னியம் என்ற சங்கும் ஒன்றாதலை அறியலாம். கப்பணம் -இரும்பால் யானை நெருஞ்சிமுள் வடிவில் செய்த கருவி.*

*2910.* ***ஆதியின், அருக்கனும்***
***அனலும் அஞ்சுறும்***

***சோதிய, சோரியும்***
***தூவும் துன்னிய,-***
***ஏதிகள் மிடைந்தன, -***
***இமையவர்க்கு எலாம்***
***வேதனை கொடுத்தன,***
***வாகை வேய்ந்தன.***

***ஆதியின் -*** *(மழு முதலாகப் பாசம் ஈறாக முன் சொன்னவை) முதலாகவுள்ள;* ***அருக்கனும் அனலும் -*** *சூரியனும் அக்கினியும்;* ***அஞ்சுறும் சோதிய -*** *அஞ்சத்தக்க ஒளியுடையனவும்;* ***சோரியும் தூவும் துன்னிய -*** *(பகைவரின்) இரத்தமும் மாமிசமும் நிறைந்து பொருந்தினவையும்;* ***இமையவர்க்கு எலாம் -****தேவர்களுக்கெல்லாம்;* ***வேதனை கொடுத்தன -*** *(முன்னைய போர்களில்) துன்பந் தந்தவையும்;* ***வாகை வேய்ந்தன -*** *(வெற்றிக்கு அடையாளமான) வாகைப் பூமாலை சூடிய வையுமாகிய;* ***ஏதிகள் மிடைந்தன -*** *ஆயுதங்கள் நெருங்கி விளங்கின.*

*தூ - தசை. வாகை - இருமடியாகுபெயர். சோரியும் தூவும் துன்னியது- முன்பு தேவர்களுடன் செய்த போர்களில் தாக்கிப் பகைவரின் இரத்தத்தையும், அவரது உடலின் மாமிசத்தையும் கொண்டமை. ஆதியின் - ஏதிகள் என இயையும்.*

*தானைத் தலைவரும் சேனை வீரரும்*

***2911. ஆயிரம் ஆயிரம்***
***களிற்றின் ஆற்றலர்;***
***மா இரு ஞாலத்தை***
***விழுங்கும் வாயினர்;***
***தீ எரி விழியினர்; -***
***நிருதர் சேனையின்***
***நாயகர், பதின்மரோடு***
***அடுத்த நால்வரே.***

***ஆயிரம் ஆயிரம் களிற்றின் ஆற்றலர் -*** *பல ஆயிரக்கணக்கான யானைகளின் வலிமையுடையவர்களும்;* ***மா இரு ஞாலத்தை -****மிகப் பெரியஉலகத்தையே;* ***விழுங்கும் வாயினர் -*** *விழுங்கக் கூடிய பெரிய வாயையுடையவர்களும்;* ***தீ எரி விழியினர் -*** *நெருப்பு மூண்டெழுகின்ற கண்களையுடையவர்களும் ஆகிய;* ***பதின்மரோடு அடுத்த நால்வர் நிருதர்-*** *பதினான்கு அரக்க வீரர்கள்;* ***சேனையின் நாயகர் -*** *அச் சேனைக்குத் தலைவர்களாவார்கள்;* ***ஏ -*** *ஈற்றசை.*

*'மாயிரு ...... வாயினர்' - உயர்வு நவிற்சியணி மற்றவை - தன்மைநவிற்சியணி.*

*இங்கே கூறிய படைத்தலைவர், முன்பு இராமனது அம்பால் இறந்த (2894) படைத் தலைவர் பதினால்வரின் வேறாவர்; மாஇரு - ஒரு பொருட் பன்மொழி.*

***2912. ஆறினோடு ஆயிரம்***
***அமைந்த ஆயிரம்***
***கூறின ஒரு படை;***
***குறித்த அப் படை***
***ஏறின ஏழினது***
***இரட்டி என்பரால்-***
***ஊறின சேனையின்***
***தொகுதி உன்னுவார்.***

***ஊறின சேனையின் தொகுதி உன்னுவார் -*** *(வலிமையில்) ஊன்றிய படையின் தொகையை எண்ணிக் கணக்கிடுபவர்;* ***கூறின ஒரு படை -*** *முன் சொல்லிய சேனைகளுள் ஒரு சேனை;* ***ஆறினோடு ஆயிரம் அமைந்த ஆயிரம் -*** *அறுபது இலட்சமாகும்;* ***குறித்த அப்படை -*** *அவ்வாறு கணக்கிடப்பட்ட அந்தப் படைகளின்;* ***ஏழினது இரட்டி ஏறின -****ஏழின் இரு மடங்காகப் பெருக்கப்பட்ட பதினான்காகும்;* ***என்பர் -*** *என்று கூறுவர்.*

*ஆல் : அசை ஆறினால் பெருக்கிய, ஆயிரத்தால் பெருக்கிய ஆயிரம் எனக் கொள்க. அங்குப் போருக்கு வந்த படை ஒன்றுக்கு அறுபது இலட்சம் கொண்ட பதினான்கு படைகள் இருந்தன என்பது.*

***2913. உரத்தினர்; உரும் என***
***உரறும் வாயினர்;***
***கரத்து எறி படையினர்;***
***கமலத்தோன் தரும்***
***வரத்தினர்; மலை என,***
***மழை துயின்று எழு***
***சிரத்தினர்; தருக்கினர்;***
***செருக்கும் சிந்தையார்.***

*(அந்தச் சேனை வீரர்கள்)* ***உரத்தினர் -*** *மிக்க வலிமை வாய்ந்தவர்கள்;* ***உரும் என உரறும் வாயினர் -*** *இடி போல முழங்கும் பேச்சினையுடையவர்கள்;* ***கரத்து எறி படையினர் -*** *கைகளால் வீசியெறியும் ஆயுதங்களையுடையவர்கள்;* ***கமலத்தோன் தரும் வரத்தினர்-*** *தாமரைப் பூவில் தோன்றிய பிரமன் தந்த வரங்களைப் பெற்றவர்கள்;* ***மலை என, மழை துயின்று எழு சிரத்தினர் -*** *மலைகளென்று எண்ணி மேகங்கள் நீண்ட பொழுது தங்கிப் பின்பு எழுந்து சென்ற தலையையுடையவர்கள்;* ***தருக்கினர் -*** *கருவம் மிக்கவர்கள்;****செருக்கும் சிந்தையார் -*** *போரில் பகைவரையழிக்கும் எண்ணங் கொண்டவர்கள்.*

*மலையென மழைதுயின்றெழு சிரத்தினர் - மயக்க வணி உரறுதல் - முழக்குதல். கரத்து - உருபுமயக்கம்.*

*அரக்கரின் தலைவர்கள் மட்டுமல்லாமல், பொதுவாக அரக்கர் பலரும் தவத்தால் வரம் பெற்றவர்கள் என்ற குறிப்பினைக் 'கமலத் தோன் தரும் வரத்தினர்' என்ற தொடரால் புலப்படுத்துகிறார். செருத்தல் - அழித்தல். செருக்கதல் - எழுச்சியுறுதல்; உற்சாகம் என்றும் கொள்ளலாம்.*

***2914. விண் அளவிட நிமிர்ந்து***
***உயர்ந்த மேனியர்;***
***கண் அளவிடல் அரு***
***மார்பர்; காலினால்,***
***மண் அளவிடு நெடு***
***வலத்தர்; வானவர்***
***எண் அளவிடல் அருஞ்***
***செரு வென்று ஏறினார்.***

***விண் அளவிட** - ஆகாயத்தை அளந்து பார்க்கும்படி;**நிமிர்ந்து உயர்ந்த மேனியர்** - மிக ஓங்கி வளர்ந்த உடம்பையுடையவர்கள்;**கண் அளவிடல் அரு மார்பர்** - கண்களால் பார்த்து அளவிட்டுக் கூறமுடியாத விரிந்த மார்பையுடையவர்கள்; **காலினால் மண் அளவிடு** -(தங்கள்) கால்களால் பூமியை அளந்து பார்க்கக் கூடிய; **நெடு வலத்தர்** -மிகுந்த வலிமையுடையவர்கள்; **வானவர்** - தேவர்களோடு நிகழ்ந்த; **எண் அளவிடல் அருஞ்செரு** - எண்ணால் கணக்கிட்டுச் சொல்ல முடியாத போர்களில்; **வென்று ஏறினார்** - போர்களில் (அவர்களை) வெற்றி கண்டு மேம்பட்டவர்கள்.*

***எண் அளவிட - மனத்திலே கொண்டு மதிக்கும்படி. செருவரும் - (இப்பொழுது) பெரும் போர் நேரும் என்று ஏறினார் - என்று எண்ணி வீராவேசம் மிகப் பெற்றவர்கள் என்றும் உரை காணலாம். வலம் - பலம், வலிமை, வெற்றி.*** *4*

***2915இந்திரன் முதலினோர்***
***எறிந்த மாப் படை***
***சிந்தின தெறித்து உக,***
***செறிந்த தோளினார்;***
***அந்தகன், அடி தொழுது***
***அடங்கும் ஆணையார்;***
***வெந் தழல் உருவு***
***கொண்டனைய மேனியார்***

***இந்திரன் முதலினோர்** - இந்திரன் முதலான தேவர்கள்;**எறிந்த மாப்படை** - (தம்மேல்) வீசித் தாக்கிய சிறந்த ஆயுதங்கள்; **சிந்தின தெறித்து உக** - (தம்மைச் சிறிதும் ஊறு படுத்தாமல்) தெறித்துச் சிதறிப் பொடியாகச் சிந்திப் போகும்படி; **செறிந்த தோளினார்** - வலிமை செறிந்த தோள்களை யுடையவர்கள்; **அந்தகன் அடிதொழுது** - (உயிர்களைவதைக்கும்) யமனும் தங்கள் பாதங்களில் வணங்கி; **அடங்கும் ஆணையார்** - அடங்கிப் பணியும்படி செய்யும் அதிகாரமுடையவர்கள்;**வெந்தழல்** - கொடிய*

*நெருப்பே;* ***உருவு கொண்டு அனைய மேனியார் -*** *ஒரு வடிவெடுத்து வந்தாற்போன்ற வடிவம் உடையவர்கள்.*

*வெம் தழல் உருவு கொண்டனைய மேனியார்- தற்குறிப்பேற்றவணி.*

***2916. சூலமும், பாசமும், தொடர்ந்த***
***செம் மயிர்ச்***
***சாலமும், தறுகணும்,***
***எயிறும், தாங்கினார்;***
***'ஆலமும் வெளிது' எனும்***
***நிறத்தர்; ஆற்றலால்,***
***காலனும், 'காலன்' என்று,***
***அயிர்க்கும் காட்சியார்.***

***சூலமும் -*** *சூலாயுதத்தையும்,* ***பாசமும் -*** *பாசம் என்னும் ஆயுதத்தையும்;* ***தொடர்ந்த செம்மயிர்ச் சாலமும் -*** *அடர்ந்த சிவந்த மயிர்த் திரளையும்;* ***தறுகணும் -*** *அஞ்சாமையையும்;* ***எயிறும் -****கோரப் பற்களையும்;* ***தாங்கினார் -*** *கொண்டவர்கள்;* ***ஆலமும் வெளிது எனும் நிறத்தர் -*** *நஞ்சும் (தங்கள் நிறத்திற்கு முன்) வெண்மையானது என்று சொல்லத்தக்கவாறு கரிய நிறத்தையுடையவர்கள்;* ***ஆற்றலால் -****(தமது) வலிமையால்;* ***காலனும் -*** *யமனும்;* ***காலன் என்று அயிர்க்கும் -*** *(தன்னையழிக்கும்) யமனோ என்று ஐயம் கொள்ளத்தக்க;****காட்சியார் -*** *தோற்றமுடையவர்கள்.* *அரக்கரின் கருமை நிறத்தை விளக்க 'ஆலமும் வெளிதென்னும் நிறத்தர்' என்றார். காலம் - திரள்.*

***2917. கழலினர்; தாரினர்;***
***கவச மார்பினர்;***
***நிழலுறு பூணினர்;***
***நெறித்த நெற்றியர்;***
***அழலுரு குஞ்சியர்; அமரை***
***வேட்டு, உவந்து,***
***எழலுறு மனத்தினர்;***
***ஒருமை எய்தினார்.***

***கழலினர் -*** *(காலில்) வீரக் கழல் பூண்டவர்கள்;* ***தாரினர் -*** *மாலையை யணிந்தவர்கள்;* ***கவச மார்பினர் -*** *கவசம் தரித்த மார்பையுடையவர்கள்;* ***நிழல் உறு பூணினர் -*** *ஒளி மிகுந்த ஆபரணங்களையுடையவர்கள்;* ***நெறித்த நெற்றியர் -*** *கோபத்தால் மேலே நெறித்த நெற்றியையுடையவர்கள்;* ***அழல் உறு குஞ்சியர் -****நெருப்புப் போன்று சிவந்து அடர்ந்த தலைமயிரை யுடையவர்கள்;* ***அமரை வேட்டு -*** *போரினை விரும்பி;* ***உவந்து எழல் உறு மனத்தினர் -*** *உற்சாகங் கொண்டு எழுகின்ற மனத்தையுடையவர்கள்;* ***ஒருமை எய்தினார் -****(தமக்குள்) ஒற்றுமை பூண்டவர்கள்;*

*அழல் உறு - உறு; உவமவுருபு ஒருமை எய்தினார் - ஒன்று கூடினர் என்றும் போரில் ஒரே கருத்தைக் கொண்டனர் என்றும் கொள்ளலாம். நிழல் : ஒளி.*

*'போர் எனில் புகலும் புனைகழல் மறவர்' எனப் போர் என்றாலேவிரும்புவோரும் வீரக்கழல் புனைந்தவரும் ஆகிய வீரரைப் புறநானூறு (31) குறிப்பதை இப் பாடல் நினைவுறுத்துகிறது.*

***2918.** **மருப்பு இறா மத களிற்று***
***அமரர் மன்னனும்,***
***விருப்புறா, முகத்து எதிர்***
***விழிக்கின், வெந்நிடும்;***
***உருப் பொறாது உலைவுறும்***
***உலகம் மூன்றினும்***
***செருப் பெறாத் தினவுறு***
***சிகரத் தோளினார்.***

***இறா மருப்பு -** (எளிதில்) ஒடியாத வலிய தந்தங்களையும்; **மத களிற்று -** மதத்தையுமுடைய ஐராவதமென்னும் யானையையுடைய; **அமரர் மன்னனும் -** தேவர்களுக்கு அரசனான இந்திரனும்; **விருப் புறா முகத்து எதிர் விழிக்கின் -** விருப்பமில்லாமல் தங்களுடைய முகத்துக்கு எதிரே விழிக்கநேரிட்டாலும்; **வெந் இடும் -** (அப்போதே) அஞ்சி முதுகு காட்டி ஓடுவான்; **உருப் பொறாது -** (அது வல்லாமலும்) பெற்றுள்ள உருவத்தைக் கொண்டு நிற்க முடியாமல்; **உலைவு உறும் -** அழியும்படியான; **உலகம் மூன்றினும்-** சுவர்க்கம், பூமி, பாதாளம் என்னும் மூவுலகங்களிலும்; **செருப் பெறாத் தினவு உறு -** (தங்களை எதிர்ப்பவர் எவரும் இல்லாமையால்) போரினைப் பெறாமல் தினவு கொண்ட; **சிகரத் தோளினார் -** மலைச் சிகரம் போன்ற பருத்த தோள்களையுடையவர்கள்.*

*இந்த அரக்க வீரர்களைப் போருக்கு எதிர்த்து வரும் நிலையில்லாமல் மற்ற நேரங்களில் கண்ணால் பார்க்க நேர்ந்தாலும் அப்போதும் இந்திரனும் இவர்கள் முன் நிற்கமாட்டாமல் அச்சத்தால் முதுகிட்டோடுவான் என்று இவர்களின் வீரக் கடுமையை வலியுறுத்தினார்.*

*வெந்நிடும் என்ற பயனிலைக்கு 'அமரர் மன்னனும்' என்பது எழுவாய். இறா மருப்பு என்றதால் அதன் வலிமை கூறியவாறு.*

***2919.** **'குஞ்சரம், குதிரை, பேய்,***
***குரங்கு, கோள்அரி,***
***வெஞ் சினக் கரடி, நாய்,***
***வேங்கை, யாளி' என்று,***
***அஞ்சுற, கனல் புரை***
***முகத்தர்; ஆர்கலி***
***நஞ்சு தொக்கெனப்***
***புரை நயனத்தார்களும்-***

***குஞ்சரம் குதிரை -*** *யானை, குதிரைகள்;* ***பேய், குரங்கு -****பேய்கள், குரங்குகள்;* ***கோள் அரி -*** *வலிய சிங்கம்;* ***வெம் சினக் கரடி -****கொடிய கோபமுடைய கரடி;* ***நாய், வேங்கை -*** *நாய்கள், புலிகள்;* ***யாளி என்று -*** *யாளிகள் என்னும் இவற்றின் முகவடிவங்களாக;* ***அஞ்சுற -****(காண்பவர்) அஞ்சும்படி;* ***கனல் புரை முகத்தர் -*** *நெருப்பைப் போன்ற முகத்தையுடையவர்களாகி;* ***ஆர்கலி நஞ்சு தொக்கு எனப் புரை -****பாற்கடலில் தோன்றிய நஞ்சு திரண்டது போல விளங்கும்;* ***நயனத்தார்கள் -*** *கண்களையுடையவர்கள்;*

*இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராக இயைந்து முற்றுப் பெறும். அந்த அரக்கர் யானை முதலாகப் பல கொடிய மிருகங்களின் முகங்களையுடையவர்கள்; அன்னவரின் முகங்கள் கனல் போலவும்கண்கள், ஆலகால நஞ்சு திரண்டு வந்தது போலவும் கொடுமை அமையப் பெற்றன. ஆர்கலி நஞ்சு தொக்கென நயனம் : ஆர்கலி அரக்கர்களின் உருவத்தினது கருமைக்கும் பெருமைக்கும் நஞ்சு அவர்களுடைய கண்களின் கொடுமைக்கும் உவமைகள் ஆயின.     ஆலகால நஞ்செலாம் கூடி வந்தது போன்ற கண்கள் என்றது, அச்சுறுத்தலுக்கும் கொடுமைக்கும் உவமையாயிற்று. 'புரை உயர்பாகும் என்ற நூற்பாவை நினைத்தால் நஞ்சு தொகுத்தது போலக் கொடுமையால் உயர்ந்த நயனங்கள் எனப் பொருள் கொள்ளலாம்.                4*

***2920   எண் கையர்; எழு கையர்; ஏழும்***
***எட்டும் ஆய்க்***
***கண் கனல் சொரிதரு***
***முகத்தர்; காலினர்;***
***வண் கையின் வளைத்து,***
***உயிர் வாரி, வாயின் இட்டு***
***உண்கையில் உவகையர்;***
***உலப்பு இலார்களும்.***

***எண் கையர் -*** *எட்டுக் கைகளை உடையவர்கள்;* ***எழு கையர் -****ஏழு கைகளை உடையவர்கள்;* ***ஏழும் எட்டுமாய்க் கண் கனல் சொரி தரு முகத்தர் -*** *ஏழு, எட்டு என்று எண்ணிக்கை கொண்ட கண்களில் நெருப்பினைச் சொரியும் முகங்களை உடையவர்கள்;* ***காலினர் -*** *(வலிமையான) கால்கள் உடையவர்கள்;* ***உயிர் -*** *எதிர்ப்படும் உயிரினங்களை;* ***வண் கையின் வளைத்து -*** *வலிமை கொண்ட தங்கள் கைகளால் வளைத்துப் பிடித்து;* ***வாரி -*** *வாரியெடுத்து;* ***வாயில் இட்டு உண்கையில் -*** *வாயிலே இட்டு உண்பதிலே;* ***உவகையர் -*** *மகிழ்ச்சிகொள்பவர்கள்;* ***உலப்பு இலார்கள் -*** *எண்ணி முடியாத அளவுக்கு மிகுந்தவர்கள்.*

*இயல்பான உருவமைப்புக்கு மாறாகக் கைகள் பல, கண்கள் பல, முகங்களும் பல கொண்டவர்கள் அரக்கரில் பலர். இராவணனுக்கு மட்டுமே பத்துத் தலைகள் என்று கருத வேண்டா என்பது குறிப்பு. உணர்வொழுங்கில் மட்டுமன்றி உருவக் கோணலும் பல கொண்ட இனம், அரக்கர் இனம். முன் பாடலில் (2919) பல வகை விகார முகங்கள் கொண்டோராக அரக்கரை வருணித்ததையும் இங்கு நினைவில் கொள்க. முன் பாடல் இறுதியிலும் இப்பாடல் இறுதியிலும் வரும் உம்மைகள்உரையசையாக விடுக்கப்பட்டன; எண்ணும்மையாகவும் கொண்டு பொருள் காணலாம்.*

***2921. இயக்கரின் பறித்தன,***
***அவுணர் இட்டன,***
***மயக்குறுத்து அமரரை***
***வலியின் வாங்கின,***
***துயக்கு இல் கந்தர்ப்பரைத்***
***துரந்து வாரின,***
***நயப்புறு சித்தரை***
***நலிந்து வவ்வின,***

***இயக்கரின் பறித்தன -*** *(முன்பு நடந்த போரில்) யட்சர்களிடமிருந்து வலியக் கவர்ந்தவையும்;* ***அவுணர் இட்டன -*** *அசுரர்கள் (தோற்றோடும்போது) விட்டுச் சென்றவையும்;* ***அமரரை மயக்குறுத்து -*** *தேவர்களை(ப் போரில்) மாயையால் மயங்கச் செய்து;* ***வலியின் வாங்கின -*** *தம் வலிமையால்கவர்ந்து கொண்டவையும்;* ***துயக்கு இல் கந்தர்ப்பரை -****சோர்வில்லாத வலிய கந்தர்வர்களை;* ***துரந்து வாரின -*** *துரத்தியோடச் செய்து அவர்களிடமிருந்து வாரிக் கொண்டவையும்;* ***நயப்புறு சித்தரை -****அன்பு மிகுந்த சித்தர்களை;* ***நலிந்து வவ்வின -*** *வருந்திக் கவர்ந்தவையுமான-;*

*இந்தச் செய்யுளால் அச் சேனையிற் கட்டியுள்ள கொடிகள் இன்னின்ன வகையாய் வந்தன என்பதைக் கூறுகிறார்.*

*அவுணர் என்பார் ஓர் அரக்க இனத்தவர். முரண்படும் தெய்வ இனத்தவராயினும் தம் இனத்தவராகிய வேறுபட்டவராயினும் இலங்கை அரக்கரின் கொடுமைக்கு இலக்காவர் என்பது இப்பாடலின் குறிப்பு. நயப்புறு சித்தர் என்பதால் எவருடைய அன்புக்கும் உரியவர் அவர் என்பது தெளிவு. ஆயினும் இலங்கை அரக்கர் அவர்களிடமும் அன்பு பாராட்ட மாட்டார்கள் என்பது உணர்த்தப்பட்டது. இச் செய்யுள் அடுத்த செய்யுளுடன் (2922) இயைந்து வினை முடிவு கொள்ளும்.*

***2922. கொடி, தழை, கவிகை,***
***வான் தொங்கல், குஞ்சரம்***
***படியுறு பதாகை, மீ***
***விதானம், பல் மணி***
***இடையிலாது எங்கணும்***
***இசைய மீமிசை***
***மிடைதலின், உலகு எலாம்***
***வெயில் இழக்கவே.***

***கொடி -*** *துகிற்கொடிகளும்;* ***தழை -*** *மயிற்பீலிகளும்;* ***கவிகை -*** *குடைகளும்;* ***வான் தொங்கல் -*** *உயர்ந்த குஞ்சங்களும்;* ***குஞ்சரம் படியுறு பதாகை -*** *யானைகளின் மேல் பொருந்திய பெரிய கொடிகளும்;* ***மீ விதானம் -*** *மேற்கட்டிகளும்;* ***பல் மணி இடையிலாது -*** *பல வகை இரத்தினங்களும் இடைவெளியில்லாமல்;* ***எங்கணும் இசைய -****எல்லா இடத்தும் பொருந்த;* ***மீமிசை மிடைதலின் -*** *வானத்தில்*

*நெருங்குவதால்;* ***உலகு எலாம் வெயில் இழக்கவே -*** *உலகங்களெல்லாம் சூரியனொளியை இழந்தன.*

*கொடி முதலியன உலகு முழுவதும் வெயில் புகாதபடி மறைத்துஇருளைச் செய்தன என்பது தொடர்புயர்வு நவிற்சியணி.*

*தொங்கல்; குஞ்சம்; ஆகுபெயர்கள்.*

*பெருந் தானையோடு கரன் இராமன் உறைவிடம் சேர்தல்*

***2923. எழுவரோடு எழுவர் ஆம்,***
***உலகம் ஏழொடு ஏழ்***
***தழுவிய வென்றியர்,***
***தலைவர்; தானையர்:-***
***மழுவினர், வாளினர்;***
***வயங்கு சூலத்தர்;***
***உழுவையோடு அரி என***
***உடற்றும் சீற்றத்தார்;***

***எழுவரோடு எழுவர் ஆம் தலைவர் -*** *பதினால்வராகிய அந்தச்சேனைத் தலைவர்கள்;* ***உலகம் ஏழொடு ஏழ் தழுவிய வென்றியர் -*** *பதினான்கு உலகங்களிலும் பொருந்திய வெற்றியையுடையவர்கள்;****தானையர் -*** *பெரும்படையுடையவர்கள்;* ***மழுவினர் -*** *மழுவையுடையவர்கள்;* ***வாளினர் -*** *வாளைத் தாங்கியவர்கள்;* ***வயங்கு சூலத்தர் -*** *விளங்கும் சூலத்தையுடையவர்கள்;* ***உழுவையோடு அரி என -*** *புலியும் சிங்கமும் போல;* ***உடற்றும் சீற்றத்தார் -*** *(பிறவுயிரை) வருத்தும் சினமுடையவர்கள்.*

*இங்குக் கூறப்பெற்ற பதினான்கு தானைத் தலைவர் வேறு; முன்பு போரில் மடிந்தவர் வேறு;*

***2924. வில்லினர்; வாளினர்; இதழின்***
***மீது இடும்***
***பல்லினர்; மேருவைப்***
***பறிக்கும் ஆற்றலர்;***
***புல்லினர் திசைதொறும்;***
***புரவித் தேரினர்;***
***சொல்லின முடிக்குறும்***
***துணிவின் நெஞ்சினர்.***

***வில்லினர் -*** *வில்லையுடையவர்களும்;* ***வாளினர் -*** *உடை வாளையுடையவர்களும்;* ***இதழின் மீது இடும் பல்லினர் -****உதடுகளின் மேல் வைத்து ஊன்றும் பற்களையுடையவர்களும்;* ***மேருவை பறிக்கும் ஆற்றலர் -*** *மகா மேருமலையையும்*

*பறித்தெடுக்கக் கூடிய வல்லமையுடையவர்களும்;* ***புரவித் தேரினர் -*** *குதிரைகள் பூட்டப் பெற்ற தேரினையுடையவர்கள்;* ***சொல்லின முடிக்குறும் -*** *(தாம்) சொல்லியவற்றைச் சொன்னவாறே செய்து முடிக்கவல்ல;* ***துணிவின் நெஞ்சினர் -*** *வலிமையுள்ள மனமுடையவர்களுமான அவர்கள்;* ***திசை தொறும் புல்லினர் -*** *எல்லாத் திக்குகளிலும் வந்து சூழ்ந்து நின்றார்கள்.*

*இதழின் மிதிடும் பல்லினர் என்பது சினத்தின் மெய்ப்பாடு.*

***2925. தூடணன், திரிசிராத்***
***தோன்றல், ஆதியர்,***
***கோடணை முரசினம்***
***குளிறு சேனையர்,***
***ஆடவர் உயிர் கவர்***
***அலங்கல் வேலினர்,***
***பாடவ நிலையினர்,***
***பலரும் சுற்றினர்.***

***ஆடவர் உயிர் கவர் -*** *வீரர்களின் உயிரை (உடம்பிலிருந்து) எடுக்கவல்ல;* ***அலங்கல் வேலினர் -*** *வெற்றி மாலை சூடிய;* ***பாடவநிலையினர் -*** *திறமை வாய்ந்த நிலையுடையவர்களுமாகிய;* ***தூடணன் -*** *தூடணன்;* ***திரிசிராத் தோன்றல் -*** *திரிசிரசு என்னும் வீரன்;* ***ஆதியர் -*** *முதலிய தலைவர்களை முன்னிட்டவரான;* ***பலரும் -*** *சேனைத் தலைவர் பலரும்;* ***கோடணை முரசு இனம் குளிறு சேனையர் -*** *ஆரவாரத்தையுடைய பேரிகை வாத்தியங்கள் முழங்குகின்ற சேனைகளையுடையவர்களாய்;* ***சுற்றினர் -*** *(கரனை) வந்து சூழ்ந்தார்கள்.*

*தூடணன் முதலான பெருஞ் சேனைத் தலைவர்கள் தங்கள் சேனையோடு வந்து கரனுக்கு உதவுவதற்காகக் கரனைச் சூழ்ந்து கொண்டார்கள் என்பது செய்தி.*

*தூடணன் - யாவரையும் நிந்திப்பவன்; திரிசிரா மூன்று தலைகளையுடையவன்; வடமொழிப் பெயர்கள். தோன்றல் - ஆண்மையில் சிறந்தவன்; கோடணை - கோஷணம்; ஆரவாரம்; பாடவம் - திறமை; குளிறுதல் - பேரொலி செய்தல்.*

***2926. ஆன்று அமை எறி***
***படை அழுவத்து ஆர்கலி.***
***வான் தொடர் மேருவை***
***வளைத்ததாம் என,***
***ஊன்றின தேரினன்,***
***உயர்ந்த தோளினன்,***
***தோன்றினன் யாவரும்***
***துணுக்கம் எய்தவே.***

***ஆன்று அமை -*** *நிறைந்து விளங்கிய;* ***எறிபடை -*** *பகைவர்களைத் தாக்கவல்ல சேனைகளாகிய;* ***அழுவத்து ஆர்கலி -*** *மிக்க பரப்பையுடைய கடல்;* ***வான் தொடர்***

**மேருவை -** ஆகாயத்தையளாவிய மேருமலையை; **வளைத்ததாம் என -** வளைத்துக் கொண்டது போல; **ஊன்றின தேரினன்-** (தன்னைச் சூழ நடுவில்) நிலை நிறுத்திய தன் தேரையுடையவனும்; **உயர்ந்த தோளினன் -** உயர்ந்த தோள்களையுடையவனுமாய்; **யாவரும் துணுக்கம் எய்த -** எல்லோரும் அஞ்சி நடுங்கும்படி; **தோன்றினன் -** போர்க்களத்திலே (கரன்) வந்து தோன்றினான். கடல், மேருவை வளைத்தது போலத் தூடணன் முதலிய அரக்கச் சேனையர் கரனைச் சூழ நின்றனர். மேரு கரனுக்கு உவமை; உருவகத்தை அங்கமாகக் கொண்டு வந்த உவமையணி.

***2927. அசும்புறு மத கரி,***
***புரவி, ஆடகத்***
***தசும்புறு சயந்தனம், அரக்கர்***
***தாள், தர,***
***விசும்புறு தூளியால்,***
***வெண்மை மேயின-***
***பசும் பரி, பகலவன், பைம்***
***பொன் தேர் அரோ.***

**அசும்பு உறு மதகரி -** நீரூற்றைப் போன்று (இடைவிடாது) பெருகுகின்ற மதநீரையுடைய யானைகளும்; **புரவி -** குதிரைகளும்; **ஆடகத் தசும்பு உறு சயந்தனம் -** பொன்னாலான கலசத்தையுடைய தேர்களும்; **அரக்கர் தாள் தர -** அரக்கர்களும் (ஆகிய நால்வகைச் சேனைகளும்) கால்களை வைத்து நடந்தமையால்; **விசும்பு உறு தூளியால் -** (மேலெழுந்து) வானத்தில் போய்ப் படிந்த புழுதிகளால்; **பகலவன் -** சூரியனுடைய; **பசும் பரி -** (தேரில் பூண்ட) பச்சைக் குதிரைகளும்; **பைம்பொன் தேர் -** பசும் பொன்னிறமான தேரும்; **வெண்மை மேயின -** வெண்ணிறத்தை யடைந்தன; **அரோ -** ஈற்றசை.

நால்வகைச் சேனைகள் எழுப்பிய வெண் புழுதி மிகப் படிவதால் கதிரவனின் பசும் பொன் தேரும், அதில் பூட்டப் பெற்ற பச்சைக் குதிரைகளும் வெண்ணிறமடைந்தன என்பது. இதனால் மேலெழுந்த புழுதியின் மிகுதி தொனிக்கும். அசும்பு - ஊற்று. சூரியனின் தேர்க் குதிரைகள் ஏழு; அவை பசுமை நிறமுடையவை.

***2928. வனம் துகள்பட்டன, மலையின்***
***வான் உயர்***
***கனம் துகள்பட்டன;***
***கடல்கள் தூர்ந்தன,***
***இனம் தொகு தூளியால்;***
***இசைப்பது என் இனி?-***
***சினம் தொகு நெடுங்***
***கடற் சேனை செல்லவே.***

**சினம் தொகு -** கோபம் மிக்க; **நெடுங் கடல் சேனை -** பெரிய கடல் போன்ற அந்த அரக்கர் சேனைகள்; **செல்ல -**புறப்பட்டபோது; **இனம் தொகு தூளியால் -** கூட்டமாகத் திரண்டெழுந்த தூசியால்;**வனம் துகள் பட்டன -**காடுகளெங்கும் புழுதி படிந்தன; **வான் உயர் மலையின் -**வானோங்கி யுயர்ந்த மலைகளின் மேல்; **கனம் துகள் பட்டன -** படிந்திருந்த மேகங்களும் அத் தூசியால் மூடப்பட்டன; **கடல்கள் தூர்ந்தன -** கடல்களும் தூர்ந்துபோயின; **இனி இசைப்பது என்? -** இனிச் சொல்ல வேண்டுவது என்ன உள்ளது?; **ஏ -** ஈற்றசை.

சேனைகள் எழுப்பிய புழுதி வனம் முழுதும் தூளிமயமாக்கியதுமல்லாமல் வானத்து மேகங்களையும் தூளியாக்கியது; கடலிலும் நிரம்பித் தூர்த்தது. தொடர்புயர்வு நவிற்சியணி.

சேனையைக் கடல் என்றது அதன் மிகுதிநோக்கி.

**2929. நிலமிசை, விசும்பிடை,**
**நெருக்கலால், நெடு**
**மலைமிசை மலைஇனம்**
**வருவபோல், மலைத்**
**தலைமிசை, தலைமிசை,**
**தாவிச் சென்றனர்-**
**கொலைமிசை நஞ்சு எனக்**
**கொதிக்கும் நெஞ்சினார்.**

**நிலமிசை -** தரையின் மீதும்; **விசும்பு இடை -** ஆகாயத்தின் மேலும்; **நெருக்கலால் -** (இடைவெளியில்லாமல்) நெருக்க முண்டானதால்; **கொலை மிசை நஞ்சு என -** போரில் கொல்லுதலை மேற்கொண்டுவிடத்தைப் போன்று; **கொதிக்கும் நெஞ்சினார் -** கொதிக்கின்ற மனமுடைய கொடிய அரக்கர்; **நெடு மலைமிசை -** உயர்ந்த மலைகளின் மேல்; **மலை இனம் வருவபோல் -** வேறு மலைக் கூட்டங்கள் ஏறி வருவன போல; **மலைத் தலைமிசைத் தலைமிசை -** மலைகளின் சிகரங்கள் தோறும்; **தாவிச் சென்றனர் -** (கால் வைத்துத்) தாண்டிக்கொண்டு சென்றார்கள்.

பூமியிலும் வானத்திலும் சேனைகள் நெருங்கி வெற்றிடமில்லாமல் ஆக்கியதால் பல அரக்கர்கள் மலைகளின் மேலே பாய்ந்து நடந்து போயினர் என்பது அவர்களுக்கு மலை மேல் மலை வருவதை இல்பொருள் உவமையாகக் கூறினார். வருவ; பெயர்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**2930. வந்தது சேனை வெள்ளம்,**
**வள்ளியோன் மருங்கு-மாயா-**
**பந்த மா வினையம் மாளப்**
**பற்று அறு பெற்றியோர்க்கும்**

***உந்த அரு நிலையது ஆகி,***
***உடன் உறைந்து உயிர்கள்தம்மை***
***அந்தகற்கு அளிக்கும் நோய்போல்,***
***அரக்கி முன் ஆக அம்மா!***

***மாயா*** - *அழியாத;* ***பந்த மா வினையம் மாள*** - *பிணிப்பாகிய பெரிய கருமங்களையழிக்கும்படி;* ***பற்று அறு*** - *உலகப் பற்று நீங்கிய;* ***பெற்றியோர்க்கும்*** - *உயர்ந்த ஞானியர்களுக்கும்;* ***உந்த அரு நிலையது ஆகி*** - *விலக்க முடியாத நிலையுடையதாய்;* ***உடன் உறைந்து*** - *உடம்போடு பொருந்தியிருந்து;* ***உயிர்கள் தம்மை*** - *எல்லா உயிர்களையும்;* ***அந்தகற்கு அளிக்கும்*** - *யமனுக்குக் கொடுக்கின்ற (கொன்றொழிக்கின்ற) ;* ***நோய் போல்*** - *வியாதி போல;* ***அரக்கி முன்னாக*** - *அரக்கியான சூர்ப்பணகை முன்னே செல்ல;* ***சேனை வெள்ளம்*** - *அந்த இராக்கதச் சேனைப் பெருக்கு;* ***வள்ளியோன் மருங்கு*** - *வள்ளலாகிய இராமபிரான் அருகே;* ***வந்தது*** - *வந்து சேர்ந்தது.*

*அம்மா; ஈற்றசை, வியப்பிடைச் சொல்லும் ஆம். சூர்ப்பணகை, தன்னோடு பிறந்த கரன் முதலிய அரக்கர்களுக்கும் இது காரணமாக இராவணன் முதலோர்க்கும் அழிவுக்குக் காரணமாய் இருந்தாளாதலால் அவளுக்கு உயிர்களை யமனுக்கு அளிக்கும் நோய் உவமையாயிற்று. அரக்கர்கள் உயிர்களுக்கும், சூர்ப்பணகை நோய்க்கும், இராமபிரான் யமனுக்கும் உவமைகள்.*

*பந்தமா வினை - உயிரைக் கட்டுப்படுத்தும் பெரிய கருமம்.*

***2931. தூரியக் குரலின், வானின்***
***முகிற் கணம் துணுக்கம்கொள்ள;***
***வார் சிலை ஒலியின், அஞ்சி,***
***உரும் எலாம், மறுக்கம்கொள்ள;***
***ஆர்கலி, ஆர்ப்பின், உட்கி***
***அசைவுற; அரக்கர் சேனை,***
***போர் வனத்து இருந்த வீரர்***
***உறைவிடம் புக்கது அன்றே.***

***தூரியக் குரலின்*** - *வாத்தியங்களின் முழக்கத்தால்;* ***வானின் முகிற் கணம்*** - *ஆகாயத்திலுள்ள மேகக் கூட்டங்கள்;* ***துணுக்கம் கொள்ள*** - *அஞ்சி நடுக்கம் அடையவும்;* ***வார்சிலை ஒலியின்*** - *நீண்ட விற்களின் நாணொலியால்;* ***உரும் எலாம் அஞ்சி*** - *இடிகளெல்லாம் பயந்து;* ***மறுக்கம் கொள்ள*** - *கலக்கமடையவும்;* ***ஆர்ப்பின்*** - *(கர்ச்சனை முதலிய) ஆரவாரத்தால்;* ***ஆர்கலி உட்கி அசைவு உற*** - *கடல்களும் அஞ்சிநடுக்கமுறவும்;* ***அரக்கர்சேனை*** - *இராக்கதச் சேனை;* ***அன்றே*** - *அப்பொழுதே; _* ***வனத்து இருந்த போர் வீரர் உறைவிடம்*** *-அந்தக் காட்டில் தங்கியிருந்த போரில் வல்ல வீரர்களான (இராமலக்குவர்) வசிக்கும் இடத்தை;* ***புக்கது*** - *போய் அடைந்தது. தூரியங்களாகிய வாத்தியங்களின் ஒலியும் சிலையின் நாணொலியும் மிகுந்து தோன்ற அரக்கச் சேனை ஆரவாரம் செய்து கொண்டு இராமலக்குவர் இருந்த இடத்தைச் சென்றடைந்தது என்பது, - தொடர்புயர்வு நவிற்சியணி. அன்று, ஏ - அசையுமாம்.*

*சேனை முழக்கத்திற்கு மேகம், கடல் இவற்றின் முழக்கங்கள் உவமையாம்.*

***2932. வாய் புலர்ந்து அழிந்த மெய்யின்***
***வருத்தத்த, வழியில் யாண்டும்***
***ஓய்வில, நிமிர்ந்து வீங்கும்***
***உயிர்ப்பின, உலைந்த கண்ண,***
***தீயவர் சேனை வந்து சேர்ந்தமை***
***தெரிய, சென்று,***
***வேய் தெரிந்து உரைப்ப போன்ற-***
***புள்ளொடு விலங்கும் அம்மா!***

***புள்ளொடு விலங்கும் -*** *அந்த வனத்திலுள்ள பறவைகளும் மிருகங்களும்;* ***வாய் புலர்ந்து அழிந்த -*** *(அச் சேனையைக் கண்டு அஞ்சியதால்) வாய் உலர்ந்து மனநிலை கெட்டனவும்;* ***மெய்யின் வருத்தத்த -*** *உடம்பில் வருத்தம் உடையனவும்;* ***வழியில் யாண்டும் ஓய்வு இல -*** *இடை வழியில் எங்கும் தங்கி இளைப்பாறாதனவும்;* ***நிமிர்ந்துவீங்கும் உயிர்ப்பின -*** *அண்ணாந்து பார்த்துப் பெருமூச்சு விடுவனவும்;* ***உலைந்த கண்ண -*** *பார்வை மழுங்கிய கண்களையுடையனவுமாகி;* ***தீயவர் சேனை வந்து சேர்ந்தமை -*** *(ஓடிவந்து) கொடிய அந்த அரக்கர் சேனை வந்து சேர்ந்த செய்தியை;* ***தெரிந்து -*** *தாம் அறிந்து,* ***சென்று தெரியஉரைப்ப -*** *முன் வந்து இராமலக்குவர் அறியும் படி செய்தி கூறுபவரான;* ***வேய் போன்ற -*** *ஒற்றர்களை ஒத்தன.*

*அம்மா - ஈற்றசை; வியப்பிடைச் சொல்லுமாம். பறவைகளும் மிருகங்களும் மிகவும் அஞ்சி நிலைகெட்டுத் தரிப்பின்றி அரக்கர் சேனை வருவதற்கு முன்பே இராமபிரான் வீற்றிருந்த பர்ணசாலையை நோக்கி விரைந்தோடி வந்தன, அரக்கர் சேனை வருவதையறிவதற்குக் காரணமாயிற்று என்பது. அந்தப் பறவை விலங்குகளை வந்து செய்தி கூறும் ஒற்றர் போன்றன என்றார். தன்மைத் தற்குறிப்பேற்றவணி.*

***2933. தூளியின் படலை வந்து***
***தொடர்வுற, மரமும் தூறும்***
***தாள் இடை ஒடியும் ஓசை***
***'சடசட' ஒலிப்ப, கானத்து***
***ஆளியும் அரியும் அஞ்சி***
***இரிதரும் அமலை நோக்கி,***
***மீளி மொய்ம்பினரும், 'சேனை மேல்வந்தது***
***உளது' என்று உன்னா,***

***தூளியின் படலை -*** *தூசியின் தொகுதி;* ***வந்து தொடர்வு உற -*** *முன்னே வந்து படியவும்;* ***மரமும் தூறும் -*** *(அக் காட்டிலிருந்த) மரங்களும் புதர்களும்;* ***தாள்இடை ஒடியும் ஓசை -*** *வரும் அரக்க வீரர்களின் கால்களில் அகப்பட்டு ஒடிவதால் உண்டாகிய ஓசை;* ***'சடசட' ஒலிப்ப -*** *சடசடவென்று ஒலிக்கவும்;* ***கானத்து ஆளியும் -*** *காட்டிலுள்ள யாளிகளும்;* ***அரியும் -*** *சிங்கங்களும்;* ***அஞ்சி இரிதரும் -*** *பயந்து நிலைகெட்டு ஓடுகின்ற;*

***அமலை நோக்கி -*** *பேராரவாரத்தைப் பார்த்து;* ***மீளி மொய்ம்பினரும் -*** *வலிய தோள்களையுடைய இராமலக்குவரும்;* ***சேனை மேல் வந்தது உளது என்று உன்னா -*** *அரக்கர் சேனை தம்மோடு போருக்கு வந்துள்ளது என்று எண்ணி..*

*உன்னா என்னும் செயவென் எச்சம் அடுத்த செய்யுளிலுள்ள மொழியலுற்றான் என்ற வினை கொண்டு முடியும். படலை - கூட்டம், தொகுதி; அமலை - பேரொலி. சடசட - ஒலிக்குறிப்பு.*

*தூளியின் தொகுதியும், சடசட ஒலியும், ஆளியும் சிங்கமும் அஞ்சியோடும் ஆரவாரமும் நோக்கி மீளி மொய்ம்பினரான இராமலக்குவரும் அரக்கர் சேனை போர் செய்ய வந்துள்ளது என்றுஎண்ணினர் என்பது.*

*இலக்குவனைத் தடுத்து இராமன் போருக்கு எழுதல்*

***2934. மின் நின்ற சிலையன், வீரக்***
***கவசத்தன், விசித்த வாளன்,***
***பொன் நின்ற வடிம்பின் வாளிப்***
***புட்டிலன், புகையும் நெஞ்சன்,***
***'நில்; நின்று காண்டி, யான் செய்***
***நிலை' என விரும்பி நேரா***
***முன் நின்ற பின் வந்தோனை***
***நோக்கினன், மொழியலுற்றான்:***

***மின் நின்ற சிலையன் -*** *மின்னல் போன்று ஒளி பொருந்திய வில்லைத் தாங்கியவனும்;* ***வீரக் கவசத்தன் -*** *அழியாத வலிமை வாய்ந்த கவசத்தையுடையவனும்;* ***விசித்த வாளன் -*** *(இடையில்) கட்டிய உடைவாளையுடையவனும்;* ***பொன் நின்ற -*** *அழகு பொருந்திய;****வடிம்பின் வாளிப் புட்டிலன் -*** *நுனியுள்ள அம்புகளைக் கொண்ட அம்பறாத் தூணியையுடையவனும்;* ***புகையும் நெஞ்சன் -*** *கோபத் தீ மூண்ட மனமுடையவனுமாய் (இராமனை நோக்கி);* ***'நில் -*** *(போர் தொடங்காது) நில்;* ***நின்று -*** *(அப்படி) நின்று;* ***யான் செய் நிலை -*** *நான் செய்யக் கூடியபோரின் திறமையை;* ***'காண்டி' என -*** *காண்பாய் என்று சொல்லி;****விரும்பி-*** *(போர் செய்ய) விருப்பங் கொண்டு;* ***நேரா -*** *போருக்கு ஆயத்தமாகி;* ***முன் நின்ற -*** *(தனக்கு) முன்னே வந்து நின்ற;* ***பின் வந்தோனை -****(தன்)தம்பியான இலக்குவனை;* ***நோக்கினன் -*** *பார்த்து;* ***மொழியல் உற்றான் -*** *(இராமன்) சொல்லத் தொடங்கினான்.*

*வனத்திலே கொடிய அரக்கர்களாலும், கொடிய மிருகங்களாலும் தன் தமையனுக்கும், அவன் மனைவிக்கும் என்றேனும் ஏதேனும் தீங்கு நேருமோ என்று சந்தேகித்து இலக்குவன் எப்பொழுதும் விழிப்போடுவில்லேந்தித் தூணி தாங்கிக் கவசம் தரித்து வாள் கட்டிப் போருக்குச் சித்தனாக நிற்பவன். அவ்வாறு நின்ற அவன் இப்போது போர் வருவது தெரிந்தவுடனே பின்னும் போர் முயற்சியை மேற்கொள்கிறான் என்பது.*

*மின்நின்ற சிலை : இல்பொருளுவமை. விரும்பி நேரா - போர் செய்ய விரும்பி அதற்கு உடன்பட்டு என்றும் பொருள் கொள்ளலாம்.*

***2935. 'நெறி கொள் மா தவர்க்கு, முன்னே***
***நேர்ந்தனென்: "நிருதர் ஆவி***
***பறிக்குவென் யானே" என்னும்***
***பழமொழி பழுதுறாமே,***
***வெறி கொள் பூங் குழலினாளை, வீரனே!***
***வேண்டினேன் யான்,***
***குறிக்கொடு காத்தி; இன்னே கொல்வென்,***
***இக் குழுவை' என்னா,***

***வீரனே -*** *வீரனே;* ***நெறி கொள் மாதவர்க்கு*** *-தவவொழுக்கத்தைக் கடைப் பிடிக்கும் தவ முனிவர்களுக்கு;* ***முன்னே நேர்ந்தனென் -*** *முன்னமே நான் உடன்பட்டு;* ***யானே நிருதர் ஆவி பறிக்குவென்*** *-நானே அரக்கர்களின் உயிரைக் கவர்வேன்;* ***என்னும் பழமொழி*** *-என்று உறுதிமொழி கூறிய பழைய வார்த்தை;* ***பழுதுறாமே -*** *வீண் போகாதவாறு;* ***இக் குழுவை இன்னே கொல்வேன் -*** *இந்த அரக்கர் கூட்டத்தை இப்பொழுதே கொல்வேன்;* ***வெறி கொள் பூங் குழலினாளை -*** *மணங்கமழும் பூக்களைச் சூடின கூந்தலையுடைய சீதையை;* ***குறிக்கொடுகாத்தி -*** *நீ கருத்தோடு காப்பாய்;* ***யான் வேண்டினேன்*** *-நான் உன்னை இது வேண்டினேன்;* ***என்னா -*** *என்று (இராமன் இலக்குவனிடம்) சொல்லி.....;*

*'புட்டில் கட்டிச் சாபமும் தரித்தான்' என வரும் அடுத்த செய்யுளோடு தொடரும். அரக்கர்களுக்கு அஞ்சிச் சரணடைந்த தண்டகாரணிய முனிவர்களுக்கு இராமன் அபயமளித்தது. அகத்தியப் படலத்தில் கூறப்பெற்றது. குறிக் கொள்ளுதல்- உன்னிப்பாய்ப் பார்த்துக்கொள்ளுதல்.*

***2936. மரன் படர் கானம் எங்கும்***
***அதர்பட வந்த சேனை***
***கரன் படை என்பது எண்ணி, கரு***
***நிறக் கமலக்கண்ணன்,***
***சரன் படர் புட்டில் கட்டி, சாபமும்***
***தரித்தான்; தள்ளா***
***உரன் படர் தோளில் மீளாக் கவசம்***
***இட்டு, உடைவாள் ஆர்த்தான்.***

***மரன் படர் கானம் எங்கும் -*** *மரங்கள் வளர்ந்த காடு முழுவதும்;* ***அதர்பட -*** *வழியுண்டாக;* ***வந்த சேனை -*** *அங்கு வந்த அரக்கர் சேனை;* ***கரன் படை என்பது எண்ணி -*** *கரனது சேனை என்பதை நினைத்து;* ***கரு நிறக் கமலக் கண்ணன் -*** *கரிய நிறத்தையும், தாமரை போன்ற பொலிவையும் கொண்ட கண்களையுடைய இராமபிரான்;* ***தள்ளா உரன் படர் தோளில் -*** *(தன்) நீங்காத வலிமை மிக்க தோளிலே;* ***சரன் படர் புட்டில் கட்டி-*** *அம்புகள் நிறைந்த தூணியைக் கட்டி;* ***சாபமும் தரித்தான்-*** *வில்லையும் தரித்தவனாகி;*

***மீளாக் கவசம் இட்டு*** - *தகர்க்க முடியாத கவசத்தைத் தரித்து;* ***உடைவாள் ஆர்த்தான்*** - *உடைவாளையும் (அரையில்) கட்டினான்.*

*மரன், சரன், உரன் மாறி வரும் கடைப் போலி, வந்தது கரன் படையே என இராமன் தீர்மானித்தது முன் "கரனை, உங்கள் கூற்றுவனை இப்பொழுதே கொணர்கிறேன்" (2874) என்று சூர்ப்பணகை கூறிச் சென்றுள்ளாளாதலால் என்க. மதர்பட எனப் பாடங்கொண்டு செருக்கு மேலிட்டு எனப் பொருள் கூறுதலுமுண்டு.*

*'இப் போரினை எனக்கு அருள்க என, இலக்குவன் மீண்டும் வேண்டுதல்*

***2937. 'மீள அருஞ் செருவில், விண்ணும்***
***மண்ணும் என்மேல் வந்தாலும்,***
***நாள் உலந்து அழியும் அன்றே? நான்***
***உனக்கு உரைப்பது என்னே?***
***ஆளியின் துப்பினாய்! இவ் அமர்***
***எனக்கு அருளிநின்று, என்***
***தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத்***
***துடைத்தி' என்றான்.***

***ஆளியின் துப்பினாய்*** - *யாளி போன்ற வலிமையுடையவனே!;* ***விண்ணும் மண்ணும்*** - *வானுலகத்து உயிர்களும், இம் மண்ணுலகில் வாழ்பவர்களும்;* ***மீள அருஞ் செருவில்*** - *வென்று திரும்பிச் செல்ல முடியாத போரில்;* ***என் மேல் வந்தாலும்*** - *என்னை எதிர்த்துத் திரண்டு வந்தாலும்;* ***நாள் உலந்து அழியும் அன்றே*** - *(அந்த வானுலக உயிர்களும் நிலவுலக உயிர்களும் ஆகிய யாவும்) என் முன்னே தம்ஆயுட் காலம் ஒழிந்து அழிந்திடுமல்லவா?;* ***நான் உனக்கு உரைப்பது என்னே*** - *இதைப் பற்றி நான் உனக்குச் சொல்ல வேண்டுவது உண்டோ?;* ***இவ் அமர் எனக்கு அருளி நின்று*** - *(ஆதலால்) இந்தப் போரை எனக்கு நீ கொடுத்து;* ***என்தோளினைத்*** - *என் தோள்களை;* ***தின்னுகின்ற சோம்பினை*** - *வருத்துகின்ற சோம்பலை;* ***துடைத்தி என்றான்*** - *(நீ) போக்குவாய் என்று இலக்குவன் இராமனை நோக்கிக் கூறினான்.*

*'நான் உனக்கு உரைப்பதென்னே' என்றது உனக்குத் தெரிந்ததேயென வற்புறுத்தியவாறு. சோம்பு : போர்த் தொழிலில்லாமல் கிடக்கின்ற மந்த குணம். அடுத்த செய்யுளில் (2938) 'என்றனன் இளைய வீரன்' என்றதனால் இப் பாட்டிற்கு எழுவாய் இலக்குவன் என்பது அறியப்படும்.*
*இலக்குவனுக்கு இசையா இராமன் தானே போர்மேல் செல்லுதல்*

***2938. என்றனன் இளைய வீரன்;***
***இசைந்திலன் இராமன், ஏந்தும்***
***குன்று அன தோளின் ஆற்றல்***
***உள்ளத்தில் உணரக் கொண்டான்;***
***அன்றியும், அண்ணல் ஆணை***

*மறுக்கிலன்;அங்கை கூப்பி-*
*நின்றனன், இருந்து கண்ணீர் நிலன்*
*உறப் புலர்கின்றாள்பால்*

***என்றனன் இளைய வீரன் -*** *இவ்வாறு இலக்குவன் சொன்னான்;* ***இராமன் இசைந்திலன் -*** *(அதைக் கேட்ட) இராமபிரான் உடன்படவில்லை; (ஆதலால் பின்னர் இலக்குவன்);* ***ஏந்தும் குன்று அன தோளின் ஆற்றல் -*** *(இராமனுடைய) உயர்ந்த மலையைப் போன்ற தோள்களின் வலிமையை;* ***உள்ளத்தில் உணரக் கொண்டான் -*** *மனத்திலே அறிந்து கொண்டானாதலாலும்;* ***அன்றியும் அண்ணல் ஆணை மறுக்கிலன் -*** *(அது அல்லாமலும்) தமையனது கட்டளையை மறுக்க மாட்டாதவனாதலாலும்;* ***அங் கை கூப்பி -*** *(தன்) அழகிய கைகளைக் கூப்பித் தொழுது;* ***கண் நீர் நிலன் உற -*** *கண்ணீர் நிலத்திலே வழியும்படி;* ***புலர்கின்றாள்பால் -*** *வருந்துகின்ற சீதையின் அருகே;* ***இருந்து -*** *(பாதுகாப்பாக) இருந்து;* ***நின்றனன் -*** *காவல் காத்து நின்றான்.*

*சீதை புலந்தது, போரில் பெருமானுக்கு என்ன துன்பம் உண்டாகுமோ என்பதால், துணையில்லாமல் தனியே மிகப் பலரோடு போர் செய்ய எழுந்த இராமனைக் குறித்துச் சீதை கவலைப்பட்டது போல இலக்குவன் வருத்தப்படாததன் காரணத்தை இரண்டாமடி விளக்கும். இராமன் கரனை எதிர்த்துப் போர் செய்யப் புறப்பட்டபோது சீதை வருந்தியதைப் பின்னும் கூறுவார். (5086)*

*2939.* ***குழையுறு மதியம் பூத்த கொம்பனாள்***
***குழைந்து சோர***
***தழையுறு சாலைநின்றும், தனிச்***
***சிலை தரித்த மேரு,***
***மழை என முழங்குகின்ற வாள்***
***எயிற்று அரக்கர் காண,***
***முழையின் நின்று எழுந்து செல்லும்***
***மடங்கலின், முனிந்து, சென்றான்.***

***குழையுறு -*** *காதணி பொருந்திய;* ***மதியம் பூத்த -*** *சந்திரனை மலராகப் பெற்ற;* ***கொம்பு அனாள் -*** *ஒரு பூங்கொம்பையொத்தவளான சீதை;* ***குழைந்து சோர -*** *தளர்ந்து வருத்தமடைய;* ***தழை உறு சாலை நின்றும் -*** *தழைகளால் அமைந்த அந்தப் பர்ணசாலையிலிருந்து;****தனிச் சிலை தரித்த மேரு -*** *ஒப்பற்ற வில்லையேந்திய மேரு மலையைப் போன்ற இராமன்;* ***மழை என முழங்குகின்ற -*** *மேகம்போல ஆரவாரிக்கின்ற;* ***வாள் எயிற்று அரக்கர் காண -*** *கூரிய பற்களையுடைய அந்த அரக்கர்கள் பார்க்கும்படி;* ***முழையின் நின்று -*** *மலைக் குகையிலிருந்து;* ***எழுந்துசெல்லும் மடங்கலின் -*** *எழுந்து வெளியே செல்லும் ஆண் சிங்கம் போல;* ***முனிந்து சென்றான் -*** *கோபத்தோடு புறப்பட்டான்.*

*பர்ணசாலையிலிருந்து இராமன் புறப்பட்ட காட்சி மலைக் குகையிலிருந்து ஒரு சிங்கம் முழங்கி வெளியே புறப்படுவது போல உள்ளது என்றார். குழையுறு மதியம் பூத்த கொம்பு - இல் பொருளுவமை. குழையென்னும் அணியைப் பூண்ட முகம் முழு நிலவையும், அழகிய திருமேனி பூங் கொம்பையும் ஒத்திருப்பதால் இவ்வாறு*

கூறினார். மேரு - உவமையாகுபெயர். சிலை தந்த மேரு - இல்பொருளுவமை.

சூர்ப்பணகை கரனுக்கு இராமனைக் காட்டுதல்

**2940. தோன்றிய தோன்றல் தன்னைச்**
**சுட்டினள் காட்டி, சொன்னாள்-**
**வான் தொடர் மூங்கில் தந்த வயங்கு**
**வெந் தீ இது என்ன,**
**தான் தொடர் குலத்தை எல்லாம்**
**தொலைக்குமா சமைந்து நின்றாள்-**
**'ஏன்று வந்து எதிர்ந்த வீரன் இவன்,**
**இகல் இராமன்' என்றே.**

**வான் தொடர் மூங்கில் தந்த -** ஆகாயத்தையளாவி வளர்ந்த மூங்கில்கள் (உராய்வதால்) உண்டாக்கிய; **வயங்கு வெம் தீ இது என்ன -** விளங்குகின்ற கொடிய நெருப்பைப் போல; **தான் தொடர் குலத்தை எல்லாம் -** தான் பிறந்த குலம் முழுவதையும்; **தொலைக்குமா சமைந்து நின்றாள் -** அழிக்கும்படி அச் செயலில் பொருந்தி நின்ற சூர்ப்பணகை; **தோன்றிய தோன்றல் தன்னை -** வெளியே தென்பட்ட இராமபிரானை; **சுட்டினள் காட்டி -** சுட்டிக் காண்பித்து; **ஏன்று வந்து எதிர்த்த வீரன் இவன் -** போர் கோலம் பூண்டு வந்து எதிர்ப்பட்ட இந்த வீரனே; **இகல் இராமன் என்று -** (நம்மிடம்) பகைமை கொண்ட இராமன் என்று; **சொன்னாள் -** கூறினாள். **ஏ -** அசை. மூங்கிலில் பிறந்த தீ அந்த மூங்கில் தொகுதிகளையெல்லாம் எரித்தழிப்பது போல அரக்கர் குலத்திலே பிறந்த சூர்ப்பணகை அந்த அரக்கர் குலத்தையெல்லாம் பூண்டோடு அழிப்பதற்கு மூல காரணமாக இருந்தமையால் அவளை மூங்கிலிலிருந்து தோன்றும் நெருப்புக்கு உவமை கூறினார் சுட்டினாள் : முற்றெச்சம்.

கரன் இராமனுடன் தானே பொருவேன் எனல்

**2941. கண்டனன், கனகத் தேர்மேல்,**
**கதிரவன் கலங்கி நீங்க,**
**விண்டனன் நின்ற, வென்றிக்**
**கரன் எனும் விலங்கல் தோளான்;**
**'மண்டு அமர் யானே செய்து, இம்**
**மானிடன் வலியை நீக்கி,**
**கொண்டனென் வாகை' என்று,**
**படைஞரைக் குறித்துச் சொன்னான்.**

**கதிரவன் கலங்கி நீங்க -** பல ஆயிரம் கதிர்களையுடைய சூரியனும் கலக்கமுற்று நீங்கும்படி; **கனகத் தேர்மேல் -** பொன் மயமான தேரின் மேல்; **விண்டனன் நின்ற -** பகைத்து நின்ற; **வென்றிக் கரன் எனும் -** வெற்றியையுடைய கரன் என்கிற; **விலங்கல் தோளான் -**மலைகள் போன்ற தோள்களையுடைய அரக்க வீரன்; **கண்டனன் -**

*(இராமபிரானைக்) கண்டு;* ***படைஞரைக் குறித்து -*** *தன் படை வீரர்களை நோக்கி;* ***'யானே மண்டு அமர் செய்து -*** *நான் ஒருவனே இந்தப் பெரிய போரைச் செய்து;* ***இம் மானிடன் வலியை நீக்கி -*** *இந்த மனிதனது ஆற்றலை அழித்து;* ***வாகை கொண்டனென்' -*** *வெற்றிமாலையைச் சூடுவேன்;* ***என்று சொன்னான் -*** *என்று கூறினான்.*

*தனிப்பட இராமன் ஒருவனே போர் செய்ய எதிரே நிற்பதால் அது கண்ட கரன் 'இவனை வெல்வதற்குத் துணையாக எனக்குச் சேனையோ துணைப் படையோ வேண்டா; நானே வெல்வேன்' என்று எளிதாகக்கூறினான் என்பது.*

*விரைவும் தெளிவும் பற்றிக் கொண்டனன் இறந்த காலத்தால் கூறினான்; காலவழுவமைதி. விண்டனன் கண்டனன் - முற்றெச்சங்கள். விண் : இடவாகுபெயர். விலங்கல் : மலை - தொழிற்பெயர். விலங்கல் தோள் : மலை போல வலிமையும் பெருமையும் கொண்டமையால்.*

***2942. ' "மானிடன் ஒருவன்; வந்த வலி***
***கெழு சேனைக்கு, அம்மா!***
***கான் இடம் இல்லை" என்னும்***
***கட்டுரை கலந்த காலை***
***யானுடை வென்றி என் ஆம்?***
***யாவரும் கண்டு நிற்றிர்;***
***ஊனுடை இவனை, யானே, உண்கு***
***வென் உயிரை' என்றான்.***

***மானிடன் ஒருவன் -*** *(மேலும் கரன் தன் படை வீரர்களை நோக்கி) 'எதிரியாக நிற்கும் மனிதனோ ஒருவன்;* ***வந்த வலி கெழு சேனைக்கு -*** *(அவனோடு எதிராகப் போர் செய்ய) வந்த வலிமையுள்ள அரக்கர் சேனைக்கோ;* ***கான் இடம் இல்லை -*** *காட்டில் (நிற்க) இடம் போதவில்லை;* ***அம்மா என்னும் -*** *ஆச்சரியம் தான் என்று (உலகத்தார்) சொல்கின்ற;* ***கட்டுரை கலந்த காலை -*** *ஏற்ற வார்த்தை தோன்றும் போது;* ***யான் உடை வென்றி என் ஆம் -*** *நான் கொண்டுள்ள வெற்றி என்ன பயனைத் தருவதாகும்? (பயனற்றது) (ஆதலால்);* ***யாவரும் கண்டு நிற்றிர் -*** *நீங்கள் எல்லோரும் (போர் செய்யாமல்) பார்த்துக் கொண்டு நில்லுங்கள்;* ***யானே -*** *நான் ஒருவனே;* ***ஊனுடை இவனை -*** *(நமக்கு) இறைச்சியுணவாகும் இம் மனிதனை;* ***உயிரை உண்குவென்' என்றான் -*** *உயிரைக் குடிப்பேன்;* ***என்றான் -*** *என்றும் கூறினான்.*

*ஒரு மனிதனோடு போர் செய்யப் பெரிய சேனையோடு சென்று மிக்க சேனை எதிர்த்து வெற்றி கண்டால் அது எனது புகழுக்குப் பழியாகும். ஆதலால் நீங்கள் அனைவரும் காண நானே இந்த மனிதனை வென்று கொன்று தின்பேன் என்றான் கரன் என்பது.*

*யாவரும் நிற்றிர் - இடவழுவமைதி. இவனை உயிரை உண்குவென் - இரண்டு செயப்படுபொருள் வந்த வினை.*

*தீய சகுனம் கண்ட அகம்பன் அறிவுரை*

*2943.* ***அவ் உரை கேட்டு வந்தான், அகம்பன்***
***என்று அமைந்த கல்விச்***
***செவ்வியான் ஒருவன்; 'ஐய!***
***செப்புவென்; செருவில் சால***
***வெவ்வியர் ஆதல் நன்றே;***
***வீரரில் ஆண்மை வீர!***
***இவ் வயின் உள ஆம் தீய நிமித்தம்'***
***என்று, இயம்பலுற்றான்.***

***அகம்பன் என்று அமைந்த -*** *அகம்பன் என்று பெயர் கொண்ட;* ***கல்விச் செவ்வியான் ஒருவன் -*** *கல்விச் சிறப்புடைய ஓர் அரக்கன்;* ***அவ் உரை கேட்டு வந்தான் -*** *கரனின் அந்த வார்த்தைகளைக் கேட்ட அளவில் (அவன் அருகே) வந்து;* ***'ஐய -*** *தலைவனே!;* ***வீரரில் ஆண்மை வீர -****வீரர்களுள் சிறந்த வலிமையுடைய வீரனே;* ***செப்பு வென் -*** *நான் ஒரு செய்தியைச் சொல்லுவேன் (கேட்பாயாக);* ***செருவில் சால வெவ்வியர் ஆதல் நன்று -*** *'போரில் மிகக் கடுமையுடையவராக இருப்பது இயல்பாக நல்லதுதான் (ஆனாலும்);* ***இவ்வயின் -*** *இந்த இடத்தில் (இப்பொழுது);* ***தீய நிமித்தம் உள ஆம் -*** *அழிவைக் காட்டிடும் தீய அறிகுறிகள் உண்டாகின்றன;* ***என்று -*** *என்று சொல்லி;* ***இயம்பல் உற்றான் -****(அக் கொடிய நிமித்தங்களைக் குறித்து) விரிவாகக் கூறத் தொடங்கினான்;* ***ஏ -*** *அசை.*

*நூல் தெரிந்தவன் என்பது தோன்ற அகம்பனை 'அமைந்த கல்விச் செவ்வியான்' என்றார். அகம்பன் - போரில் சலனம் (நடுக்கம்) இல்லாதவன். நிமித்தம் - பின்னே வரும் பயன்களை முன்னே அறிவிக்கும் குறி, உற்பாதமாகும்.*

*கலிநிலைத் துறை*

*2944.* ***'குருதி மா மழை சொரிந்தன,***
***மேகங்கள் குமுறி;***
***பருதி வானவன் ஊர் வளைப்***
***புண்டது; பாராய்,-***
***கருது வீர!- நின் கொடிமிசைக்***
***காக்கையின் கணங்கள்***
***பொருது வீழ்வன, புலம்புவ,***
***நிலம் படப் புரள்வ;***

***வீர -*** *வீரனே!;* ***மேகங்கள் குமுறி -*** *மேகங்கள் முழங்கி;* ***குருதி மா மழை சொரிந்தன -*** *மிக்க இரத்த மழையைப் பொழிந்தன;* ***பருதி வானவன் -*** *சூரியனை;* ***ஊர் வளைப்புண்டது -*** *பரிவேடம் சூழ்ந்து கொண்டது;* ***பாராய் -*** *(அவற்றை) பார்ப்பாய்;* ***காக்கையின் கணங்கள் -*** *காக்கைக் கூட்டங்கள்;* ***நின் கொடி மிசை -*** *உன் கொடியின் மேல்;* ***பொருது வீழ்வன -*** *சண்டையிட்டுக் கீழே விழுவனவாய்;* ***புலம்புவ -*** *கதறியழுது*

கொண்டு; **நிலம்படப் புரள்வ -** தரையில் விழுந்து புரளுகின்ற; **கருது -** (இதனை நீ) மனத்திற் கொள்வாய்;

மேகங்கள் குமுறி, இரத்த மழை பொழிதலும், சூரியனைப் பரிவட்டம் சூழ்தலும், கொடி மேல் காக்கைக் கூட்டங்கள் சண்டையிட்டுப் புலம்பி நிலத்தில் புரளுதலும் ஆகிய தீ நிமித்தங்களைக் கரனுக்கு அகம்பன் சொன்னான் என்பது.

ஊர் - பரிவட்டம் : சூரியனைச் சுற்றித் தோன்றும் வட்டம்.

*2945.* **'வாளின் வாய்களை ஈ**
**வளைக்கின்றன; வயவர்**
**தோளும் நாட்டமும் இடம்**
**துடிக்கின்றன; தூங்கி,**
**மீளி மொய்ம்புடை இவுளி**
**வீழ்கின்றன; விரவி,**
**ஞாளியோடு நின்று, உளைக்கின்ற**
**நரிக் குலம் பலவால்;**

**'வாளின் வாய்களை -** வாள்களின் வெட்டு வாய்களை; **ஈ வளைக்கின்றன -** ஈக்கள் சுற்றுகின்றன; **வயவர் தோளும் நாட்டமும் -** படை வீரர்களின் தோள்களும் கண்களும்; **இடம் துடிக்கின்றன -**இடப் பக்கமாகத் துடிக்கின்றன; **மீளி மொய்ம்புடை இவுளி -** வலிய தோள்களையுடைய சேனைத் தலைவரின் குதிரைகள்; **தூங்கி வீழ்கின்றன -** (போர் செய்யும் நிலையில்) தூங்கிக் கீழே விழுகின்றன;**ஞாளியோடு நரிக்குலம் பல -** நாய்களோடு பல நரிக் கூட்டங்கள்; **விரவி நின்று -** சேர்ந்து வந்து நின்றவாறு; **உளைக்கின்ற -** ஊளையிடுகின்றன;**ஆல் -** ஈற்றசை.

ஆயுதங்களின் வெட்டு வாய்களை ஈக்கள் சுற்றுவதும், வீரர்களின் தோள்களும் கண்களும் இடம் துடிப்பதும், குதிரைகள் தாமே தூங்கிவிடுவதும், நாய் நரிகள் ஊளையிடுவதும் தீ நிமித்தங்களாகும். உளைக்கின்ற - பலவின் பால் முற்று.

*2946.* **'பிடி எலாம் மதம் பெய்திட, பெருங்**
**கவுள் வேழம்**
**ஒடியுமால் மருப்பு; உலகமும் கம்பிக்கும்;**
**உயர் வான்**
**இடியும் வீழ்ந்திடும்; எரிந்திடும்**
**பெருந்திசை; எவர்க்கும்**
**முடியின் மாலைகள் புலாலொடு**
**முழு முடை நாறும்**

**'பிடி எலாம் -** பெண் யானைகளெல்லாம்; **மதம் பெய்திட -** மதநீரைச் சொரிய; **பெருங்கவுள் வேழம் -** பெரிய கதுப்புகளையுடைய ஆண் யானைகளின்; **மால் மருப்பு ஒடியும் -** பெரிய தந்தங்கள் ஒடிந்து விழுகின்றன; **உலகமும் கம்பிக்கும் -** பூமியும்

*அதிர்ச்சியடைந்து நடுங்குகின்றது;* ***உயர் வான் இடியும் -*** *ஓங்கிய வானத்திலிருந்து இடிகளும்;* ***வீழ்ந்திடும் -*** *மேலே விழும்;* ***பெருந் திசை எரிந்திடும் -*** *பெரிய திக்குகள் தாமே தீப் பற்றி எரிகின்றன;* ***எவர்க்கும் -*** *(அரக்கர்) எல்லோருக்கும்;* ***முடியின் மாலைகள் -*** *(தம்) தலையின் மேலே அணிந்த பூமாலைகள்;* ***புலாலொடு முழு முடை நாறும் -*** *புலால் நாற்றத்தோடு மிக்க கெட்ட நாற்றமும் வீசுகின்றன;* ***ஆல் -*** *அசை.*

*பெண் யானைக்கு இயற்கையில் மதம் இல்லை; ஆதலால் அவை மதநீர் பொழிதல் தீ நிமித்தமாகும். பெண் யானைகள் மதநீரைச் சொரிவதும், ஆண்யானைகளின் தந்தங்கள் ஒடிவதும், உலகம் நடுங்குவதும் இடிவிழுவதும், திசைகள் தீப் பற்றி எரிவதும், மாலைகள் துர்நாற்றம் வீசுவதும் தீ நிமித்தங்களாம்.*

*ஒடியுமால் மருப்பு - 'ஆல்' அசையுமாகும்.*

***2947. 'இனைய ஆதலின், "மானிடன்***
***ஒருவன்" என்று, இவனை***
***நினையலாவது ஒன்று அன்று அது;-***
***-நீதியோய்!-நின்ற***
***வினை எலாம் செய்து வெல்லல் ஆம்***
***தன்மையன் அல்லன்;***
***புனையும் வாகையாய்! பொறுத்தி, என் உரை'***
***எனப் புகன்றான்.***

***'இனைய ஆதலின் -*** *இத்தகைய தீ நிமித்தங்கள் நிகழ்வனவாதலால்;* ***இவனை மானிடன் ஒருவன் என்று -*** *இவனை ஒரு (எளிய) மனிதனென்று;* ***நினையல் ஆவது -*** *துச்சமாக நினைப்பது;* ***அது ஒன்று அன்று -*** *பொருந்துவது ஆகாது;* ***நீதியோய் -*** *நீதியையுணர்ந்தவனே!;* ***நின்ற வினை எலாம் செய்து -*** *(நீ) போருக்குரிய தொழில்கள் எல்லாவற்றையும் செய்தாலும்;* ***வெல்லல் ஆம் தன்மையன் அல்லன் -*** *வெல்லக் கூடிய (அவ்வளவு) எளிமையுடையவனாக (அவன்) இல்லை;* ***புனையும் வாகையாய் -*** *வெற்றி மாலையுடையவனே;* ***என் உரை பொறுத்தி' -*** *(நான் கூறிய) என்னுடைய இந்த வார்த்தைகளைப் பொறுத்துக் கொள்வாய்;* ***எனப் புகன்றான் -*** *என்று (அகம்பன்) சொன்னான்.*

*இப்பொழுது நிகழ்ந்துள்ள தீநிமித்தங்களைப் பார்த்தால், நீ அரக்கர்களை அணிவகுத்துப் பெரும் போர் செய்தாலும் வெல்ல முடியாதவன் இராமனென்று தோன்றுகிறதென அகம்பன் கரனுக்கு எச்சரிக்கை செய்தான் என்பது.*

*அறிவுரையைக் கரன் புறக்கணிக்க, படைகள் போர்மேல் செல்லுதல்*

***2948. உரைத்த வாசகம் கேட்டலும்,***
***உலகு எலாம் உலையச்***
***சிரித்து, 'நன்று நம் சேவகம்!***
***தேவரைத் தேய***

***அரைத்த அம்மி ஆம் அலங்கு எழில்***
***தோள், அமர் வேண்டி***
***இரைத்து வீங்குவ, மானிடற்கு***
***எளியவோ?' என்றான்.'***

***உரைத்த வாசகம் கேட்டலும் -*** *(இவ்வாறு) அகம்பன் கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடன்;* ***உலகு எலாம் உலையச் சிரித்து -****(கரன்)உலகங்கள் யாவும் நிலை தளர்ந்து நடுங்குமாறு சிரித்து;* ***தேவரைத் தேய அரைத்த -*** *தேவர்களைத் தேய்த்து உருத்தெரியாமல் அரைத்த;****அம்மி ஆம் -*** *அம்மிக்கல் என்னும்;* ***அலங்கு எழில் தோள் -*** *அசைந்து விளங்குகிற என் தோள்கள்;* ***அமர் வேண்டி -*** *போரினை விரும்பி;* ***இரைத்து வீங்குவ -*** *பூரித்துப் பெருத்துள்ளன;* ***மானிடற்கு எளியவோ -*** *(அத்தகைய தோள்கள்) ஒரு மனிதனுக்கு எளிமைப் படுவனவோ?;****நம் சேவகம் நன்று' -*** *நமது வீரம் நன்றாயிருந்தது;* ***என்றான் -*** *என்று கூறினான்.*

*தான் முன்னர்ப் புயவலிமையால் தேவர் பலரை அழித்தமை குறித்துத் 'தேவரைத் தேய அரைத்த அம்மியாம் தோள்' என்றது. தேவர்களைஎளிதில் அழித்த நாமோ இம் மனிதனுக்கு அஞ்சுவது? என்று அகம்பன் கூறியதை ஏளனஞ் செய்து கூறியவாறு.*

*நன்றிது : இது - அசைநிலை. இரைத்து வீங்கும் - ஒரு பொருட் பன்மொழி தோளாகிய அம்மிக்கு வலிமையைக் குழவியாகவும், தேவர்களை அரைக்கப்படு பொருளாகவும் கொள்ளுதல் வேண்டும்: ஏகதேசஉருவகம்.*

***2949. என்னும் மாத்திரத்து, எறி படை***
***இடி என இடியா,***
***மன்னர் மன்னவன் மதலையை,***
***வளைந்தன-வனத்து***
***மின்னும் வால் உளை மடங்கலை,***
***முனிந்தன வேழம்***
***துன்னினாலென, சுடு சினத்து***
***அரக்கர்தம் தொகுதி.***

***என்னும் மாத்திரத்து -*** *என்று (கரன்) கூறிய அளவில்;* ***வனத்து -*** *காட்டிலே;* ***மின்னும் வால் உளை மடங்கலை -*** *ஒளி வீசும் தூய பிடரி மயிர்களையுடைய சிங்கத்தை;* ***முனிந்தன வேழம் -*** *கோபம் கொண்ட பல யானைகள்;* ***துன்னினால் என -*** *சூழ்ந்து நெருங்கினாற் போல;****மன்னர் மன்னவன் மதலையை -*** *தசரதச் சக்கரவர்த்தியின் குமாரனான இராமனை;* ***சுடு சினத்து அரக்கர்தம் தொகுதி -*** *கொதிக்கும் கோபத்தையுடைய அரக்கர்களின் கூட்டங்கள்;* ***எறிபடை இடி என இடியா -****தாக்குகின்ற படைக் கருவிகளை ஒன்றோடு ஒன்று வீசி இடி போன்ற முழக்கத்தைச் செய்து கொண்டு;* ***வளைந்தன -*** *சூழ்ந்தன.*

*இராமன் ஒருவனால் அரக்கர் கூட்டம் எளிதில் அழிவது குறித்துச் சிங்கத்தை யானைகள் வளைத்தலாகிய இல்பொருள் உவமை கூறினார்.*

*அரக்கப் படை வீரர்க்கு யானைகளும், இராம பிரானுக்கு மடங்கலும் உவமைகள். 75படை எலாம் இராம பாணத்தால் அழிதல்*

***2950. வளைந்த காலையில், வளைந்தது, அவ்***
***இராமன் கை வரி வில்;***
***விளைந்த போரையும் ஆவதும்***
***விளம்புதும்; விசையால்,***
***புளைந்த பாய் பரி புரண்டன;***
***புகர் முகப் பூட்கை***
***உளைந்த, மால் வரை உரும் இடி***
***பட ஒடிந்தென்ன.***

***வளைந்த காலையில் -*** *(இவ்வாறு அரக்கர் படை இராமனைச்)சூழ்ந்து கொண்ட போது;* ***அவ் இராமன் கை வரி வில் வளைந்தது -*** *அந்த இராம பிரானின் கையிலுள்ள கட்டமைந்த வில்லும் (அம்பு தொடுக்க) வளைந்தது;* ***விளைந்த போரையும் -*** *(அப்பொழுது) நிகழ்ந்த போரினைக் குறித்தும்;* ***ஆவதும் -*** *அதனால் ஏற்பட்ட முடிவு பற்றியும்;****விளம்புதும் -*** *கூறுவோம்;* ***விசையால் -*** *(இராமபாணங்களின்) வேகத்தால்;* ***பாய் பரி -*** *பாய்ந்து செல்லும் குதிரைகள்;* ***புளைந்த புரண்டன -****துளைபட்டனவாய்க் கீழே விழுந்து புரண்டன;* ***உரும் இடிபட -*** *பேரிடி விழுவதால்;* ***மால் வரை ஒடிந்து என்ன -*** *பெரிய மலைகள் முறிபட்டாற் போல;* ***புகர் முகப் பூட்கை -*** *செம்புள்ளிகள் அமைந்த முகங்களையுடைய யானைகள்;****உளைந்த -*** *வருந்திக் கீழே விழுந்தன.*

*அரக்கர் சேனை இராமனை வளைந்து கொள்ளவே. அந்த இராமனின் கை வில்லும் வளைந்தது. அவ் வில்லிலிருந்து அம்பெறிந்த வேகத்தால் குதிரைகள் புரள, இடியால் முறிந்த மலைகளைப் போல யானைகள்வருந்தின என்பது. புளைந்த - முற்றெச்சம். பூட்கை - புழைக்கை என்பதின் மரூஉ; யானையைக் குறிக்கும் சொல்; அன்மொழித்தொகை. இச்சொல்லால் யானையைக் கம்பர் பின்னும் குறிப்பர் (5588, 5601, 5608) ஆவதும் - கால வழுவமைதி.*

***2951. சூலம் அற்றன; அற்றன சுடர் மழு;***
***தொகை வாள்***
***மூலம் அற்றன; அற்றன முரண்***
***தண்டு; பிண்டி-***
***பாலம் அற்றன; அற்றன பகழி;***
***வெம் பகு வாய்***
***வேலும் அற்றன; அற்றன***
***வில்லொடு பல்லம்.***

*(இராம பாணங்களால் அரக்கர்களின்)* ***சூலம் அற்றன -*** *சூலங்கள் அறுபட்டன;* ***சுடர் மழு அற்றன -*** *ஒளியைக் கக்கும் மழுவென்னும்ஆயுதங்கள் அழிந்தன;* ***தொகை வாள் மூலம் அற்றன -****பலவாகிய வாட் படைகள் அடியோடு அறுபட்டன;* ***முரண் தண்டு***

***அற்றன -***வலிமையுள்ள தண்டாயுதங்கள் அறுபட்டன; ***பிண்டி பாலம் அற்றன -*** பிண்டி பாலம் என்னும் படைக் கருவிகள் அழிந்தன; ***பகழி அற்றன -*** அம்புகள் ஒடிந்தன; ***வெம் பகுவாய் வேலும் அற்றன -*** கொடிய பிளக்கும் வாயையுடைய வேல்களும் அழிந்தன; ***வில்லொடும் பல்லம் அற்றன -*** விற்களோடு பல்லம் என்னும் பாண வகைகளும் அழிந்தன.

*பல்லம் - ஒரு வகை அம்பு : பகுவாய் - வினைத்தொகை. அற்றன - சொற்பொருள் பின்வருநிலையணி.*

***2952. தொடி துணிந்தன தோளொடு;***
***தோமரம் துணிந்த;***
***அடி துணிந்தன கட களிறு; அச்சொடு,***
***நெடுந் தேர்,***
***கொடி துணிந்தன; குரகதம்***
***துணிந்தன; குல மா***
***முடி துணிந்தன; துணிந்தன,***
***முளையொடு முசலம்.***

***தொடி துணிந்தன -*** தொடியென்னும் வீரவளைகள் துண்டு பட்டு விழுந்தன; ***தோளொடு தோமரம் துணிந்த -*** கைகளோடு தோமரம் என்னும் ஆயுதங்களும் துண்டாயின; ***கட களிறு அடி துணிந்தன -*** மத யானைகளின் கால்கள் துண்டிக்கப்பட்டன; ***அச்சொடு நெடுந்தேர் -*** பெரிய தேர்களின் அச்சுக்களோடு; ***கொடி துணிந்தன -***கொடிகளும் துண்டிக்கப் பெற்றன; ***குரகதம் துணிந்தன -*** குதிரைகள் துண்டங்களாக வெட்டப்பட்டன; ***குல மா முடி துணிந்தன -*** கூட்டமாகிய (யாளி முதலான) மிருகங்களின் தலைகள் துண்டிக்கப் பெற்றன; ***முசலம் முளையொடு துணிந்தன -*** உலக்கைகள் தண்டாயுதங்களோடு துணிக்கப்பட்டன.

*அச்சு - இருசு; முளையொடு - அடியோடு என்றும் பொருளுரைக்கலாம் தோமரம் - தண்டாயுதம் என்பர்; முளை முசலம் என்பது ஒரு வகை ஆயுதமாகும்.*

***2953. கருவி மாவொடு, கார் மதக்***
***கைம்மலைக் கணத்து ஊடு-***
***உருவி மாதிரத்து ஓடின,***
***சுடு சரம்; உதிரம்***
***அருவி மாலையின் தேங்கினது;***
***அவனியில் அரக்கர்***
***திரு இல் மார்பகம் திறந்தன;***
***துறந்தன சிரங்கள்.***

***சுடு சரம் -*** (இராமபிரான்) ஏவிய கொடிய பாணங்கள்; ***கருவி மாவொடு -*** கல்லணை பூண்ட குதிரைகளையும்; ***கார் மதக் கைம் மலைக் கணத்து -*** கரிய நிறத்தையும்,

*மதத்தையுமுடைய மலை போன்ற யானைக் கூட்டங்களையும்;* ***ஊடு உருவி மாதிரத்து ஓடின -*** *ஊடுருவி அப்பாலே சென்று திசைகள் எங்கும் விரைந்து சென்றன;* ***உதிரம் அருவி மாலையின் தேங்கினது -*** *இரத்தம் அருவிகளின் ஒழுங்குபோலத் தேங்கி நின்றது;* ***அவனியில் அரக்கர் -*** *பூமியிலே அரக்கர்களின்;* ***திரு இல் மார்பகம் திறந்தன -*** *பொலிவற்ற மார்பிடங்கள் பிளவுபட்டன;* ***சிரங்கள் துறந்தன -*** *தலைகள் துணிக்கப்பட்டு (உடலைவிட்டு) நீங்கின;*

*அந்தப் போரில் இராமனின் கொடிய அம்புகள் குதிரைகளையும், யானைகளையும் ஊடுருவித் திசைகளெங்கும் ஓட, பூமியிலே அரக்கர்களின், மார்பகங்கள் பிளக்கப் படத் தலைகள் துண்டிக்கப்பட்டன; அப்போது உதிரம் அருவியொழுங்கு போல அம்பு பட்ட மிருகங்களின் உடலிலிருந்து பெருகியது என்பது கருவி : குதிரையின் மேலிருக்கை, தவிசு கல்லணை (குதிரைச்சேணம்).*

*மாவொடு, கணத்தொடு - உருபுமயக்கம். திருவின் மார்பகம் என எடுத்து - வீரத்திருமகளையுடைய மார்பு என்றும், திரு வில் என எடுத்து - மேலானஒளியையுடைய என்றும் உரைக்கலாம்; மேலும், திரு இல் மார்பகம்- அரக்கர்களின் வெற்றித் திரு இல்லாத மார்பகம் எனலும் ஆம்.*

***2954. ஒன்று, பத்து, நூறு, ஆயிரம்,***
***கோடி, என்று உணரா***
***துன்று பத்திய, இராகவன்***
***சுடு சரம் துரப்ப,***
***சென்று, பத்திரத் தலையின***
***மலை திரண்டென்ன,***
***கொன்று, பத்தியில் குவித்தன***
***பிணப் பெருங் குன்றம்.***

***ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடி என்று உணரா -*** *ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், இலக்கம், கோடி என்று கணக்கிட்டு அறிய முடியாதபடி;* ***துன்று பத்திய -*** *நெருங்கின வரிசையாகவுள்ள;* ***சுடு சரம் -****நெருப்புப் போன்ற கொடிய அம்புகளை;* ***இராகவன் துரப்ப -*** *இரகு குலத்தில் தோன்றிய இராமன் செலுத்த;* ***சென்று -*** *(அந்த அம்புகள்) பகைவர் மேல் சென்று;* ***கொன்று -*** *அவ்வரக்கர்களைக் கொன்று;* ***பத்திரத் தலையின மலை -*** *அம்புகளைத் தலையிற் கொண்ட பல மலைகள்;* ***திரண்டு என்ன-*** *திரண்டு கிடந்தன போல;* ***பிணப் பெருங் குன்றம் -*** *பெரிய பிணக் குவியல்களை;* ***பத்தியில் குவித்தன -*** *வரிசையாகக் குவிந்து கிடக்கச் செய்தன. அம்புகள் பொத்திய பிணக் குன்றுகளுக்கு அம்புகள் பாய்ந்துள்ள மலைகள் உவமையாம்.*

*பத்திரம் - அம்பு. நூறாயிரம் - இரட்டுற மொழிதல், நூறும் ஆயிரமும்; நூறாயிரம் (இலட்சம்) எனக் கொள்க. பத்திரத் தலையின் - மலைகளின் சிகரங்களை ஒத்தனவாக என்னலுமாம்.*

***2955. காடு கொண்ட கார் உலவைகள்***
***கதழ் எரி கதுவ,***
***சூடு கொண்டன எனத் தொடர்***
***குருதி மீத் தோன்ற,***
***ஆடுகின்றன அறுகுறை; அயில்***
***அம்பு, விண்மேல்***
***ஓடுகின்றன, உயிரையும்***
***தொடர்வன ஒத்த.***

***காடு கொண்ட கார் உலவைகள் -*** *வனத்தில் அடர்த்தியாகவுள்ள கரிய மரக் கிளைகள்;* ***கதழ் எரி கதுவ -*** *மூளுகின்ற நெருப்புப் பற்றிக் கொள்ள;* ***சூடு கொண்டன என -*** *சூடு பொருந்தின போல;****அறுகுறை -*** *தலையறுபட்ட முண்டங்கள்;* ***தொடர் குருதி மீத் தோன்ற -****வழிகின்ற இரத்தம் மேலே காணப்பட;* ***ஆடுகின்றன -*** *துடித்து ஆடுகின்றன;* ***விண்மேல் ஓடுகின்றன அயில் அம்பு -*** *(அரக்கர்களின் உடல்களையறுத்துவிட்டு) ஆகாயத்தின் மேல் விரைந்து செல்லுகின்ற கூரிய அம்புகள்;* ***உயிரையும் தொடர்வன ஒத்த -*** *(அரக்கர்களின் உடம்பையழித்து மனநிறைவு கொள்ளாமல் அவர்களின்) உயிரையும் ஒழிக்கத் தொடர்வன போன்றன.*

*தழையில்லாமல் மொட்டையாகவுள்ள மரக்கிளை தலையற்ற அரக்கர்தம் உடற்குறையையும், அதன் மேல் தீப் பற்றியெரிதல் அவ்வுடம்பிலிருந்து இரத்தம் பெருகி வருதலையும் போலும் என்றதுதன்மைத் தற்குறிப்பேற்ற வணியாம். அவ்வாறு உடற்குறையான கவந்தம் ஆடுமாறு அரக்கர்களின் தலைகளையறுத்துச் சென்ற இராமனுடைய அம்புகள் ஆகாயத்தின் மேற் செல்பவை வீர சுவர்க்கத்துக்குச் சென்ற அரக்கர் உயிர்களையும் ஒழிப்பதற்குத் தொடர்வன போலும் என்றார் : இதுவும் தன்மைத் தற்குறிப்பேற்றவணி.*

*குருதி எழுந்தமை இராம பாணங்கள் எழுந்தமைக்கு உவமை.*

***2056. கைகள் வாளொடு களம் பட,***
***கழுத்து அற, கவச***
***மெய்கள் போழ்பட, தாள் விழ,***
***வெருவிட, நிருதர்***
***செய்ய மாத் தலை சிந்திட,***
***திசை உறச் சென்ற-***
***தையலார் நெடு விழி எனக்***
***கொடியன சரங்கள்***

***தையலார் நெடு விழிஎன -*** *மகளிரின் நீண்ட கண்களைப் போல;* ***கொடியன சரங்கள்-*** *கொடுமையான இராமபாணங்கள்;* ***நிருதர் வெருவிட-*** *அரக்கர் அஞ்சிடுமாறு;* ***கைகள் வாளொடு -*** *அவர்களின் கைகள் பிடித்திருந்த வாள்களோடு;* ***களம்பட -*** *போர்க் களத்தில் அறுபட்டு விழ;* ***கழுத்து அற -*** *கழுத்துக்கள் அறுபட;* ***கவச மெய்கள் போழ்பட -*** *கவசமணிந்த உடல்கள் பிளவுபட;* ***தாள் விழ -*** *கால்கள் அற்றுவிட;****செய்ய***

***மாத்தலை சிந்திட* -** *(அவர்களுடைய) சிவந்த பெரிய தலைகள் சிதறிவிழ;* ***திசை உறச் சென்ற* -** *(செய்து) திக்குகளின் எல்லையை அளாவ அப்பாற் சென்றன.*

*இராம பாணங்களுக்குத் தையலார் விழி உவமானமாயிற்று : உவமானத்தை உவமேயமாகக் கூறியதால்; எதிர்நிலையணி மகளிரின் கண்களைப் போன்று கூரியனவும், பெருந் துயரை விளைப்பனவுமான இராம சரங்கள், அரக்கரின் வாளேந்திய கைகளும் கால்களும் அற்று விழவும், கவசமணிந்த உடல்கள் பிளவுபடவும், கழுத்துக்கள் அறுபடவும், தலைகள் சிதறவும் செய்து திசையுறச் சென்றன என்றவாறு.*

***2957. மாரி ஆக்கிய வடிக் கணை,***
***வரை புரை நிருதர்***
***பேர் யாக்கையின் பெருங் கரை***
***வயின்தொறும் பிறங்க,***
***ஏரி ஆக்கின; ஆறுகள்***
***இயற்றின; நிறையச்***
***சோரி ஆக்கின; போக்கின, வனம்***
***எனும் தொன்மை.***

***வரை புரை நிருதர்* -** *மலைகளையொத்த அரக்கர்களின்;* ***பேர் யாக்கையின் -*** *பெரிய உடல்களாகிய;* ***பெருங்கரை* -** *பெரிய கரைகள்;* ***வயின்தொறும் பிறங்க* -** *பக்கங்களிலெல்லாம் விளங்க;* ***ஏரி ஆக்கின* -** *(வெற்றிடமான அங்கு) ஏரிகளின் தோற்றத்தைச் செய்தனவும்;* ***ஆறுகள் இயற்றின* -** *நதிகளின் தோற்றத்தை உண்டாக்கினவுமாகி; (அப்போது);* ***மாரி ஆக்கிய* -** *(இடைவிடாது சொரிவதால்) மழையின் தோற்றத்தைச் செய்த;* ***வடிக் கணை* -** *கூரிய இராம சரங்கள்;* ***நிறையச் சோரி ஆக்கின* -***(ஏரியும் ஆறும் போன்ற வெற்றிடங்களை) நிறையும்படி இரத்தத்தைப் பெருகச் செய்தன (இவ்வாறு செய்ததால்);* ***வனம் எனும் தொன்மைபோக்கின* -** *(தண்டக வனங்களின்) காடுகள் என்ற பழைய தன்மையை நீக்கிவிட்டன.*

*இராமசரத்தால் இறந்து வீழ்ந்த அரக்கருடல்கள் ஏரிகளின் கரை போலவும், ஆறுகளின் கரை போலவும் அமைந்து இரு கரைகளுக்கும் இடைப்பட்ட இடங்களை நீரற்ற ஏரியின் உள்ளிடங்கள் போலவும்,ஆற்றின் உள்ளிடம் போலவும் காணப்படும் தோற்றத்தையுண்டாக்க, இராம பாணங்கள் மழை போலப் பெய்து இரத்தப் பெருக்கையுண்டாக்கி, அந்த ஏரிகளையும் யாறுகளையும் நிரப்பின என்பது. தொடர்புயர்வு நவிற்சியணி. மழை பெய்து ஆறு ஏரி நிரம்புமாதலின் அது கணை மழையாகக் கூறப்பெற்றது.*

***2958. அலை மிதந்தன குருதியின்***
***பெருங் கடல், அரக்கர்***
***தலை மிதந்தன; நெடுந்***
***தடி மிதந்தன; தடக் கைம்-***
***மலை மிதந்தன; வாம் பரி***

*மிதந்தன; வயப் போர்ச்*
*சிலை மிதந்தன; மிதந்தன,*
*கொடி நெடுந் தேர்கள்.*

*(அப்பொழுது)* ***அலை மிதந்தன -*** *அலைகள் பொங்கி மேலெழுந்தனவாயின;* ***குருதியின் பெருங்கடல் -*** *அந்தப் பெரிய இரத்தக் கடலில்;* ***அரக்கர் தலை மிதந்தன -*** *அரக்கர்களின் தலைகள் மிதந்தன;* ***நெடுந்தடி மிதந்தன -*** *பெரிய தசைத் துண்டுகள் மிதந்தன,****தடக்கைம் மலை மிதந்தன -*** *பெரிய துதிக்கைகளையுடைய யானைகள் மிதந்தன;* ***வாம் பரி மிதந்தன -*** *தாவிச் செல்லும் குதிரைகள் மிதந்தன;* ***வயப் போர்ச் சிலை மிதந்தன -*** *வலிய போருக்குரிய விற்கள் மிதந்தன;****கொடி நெடுந் தேர்கள் மிதந்தன -*** *கொடிகளோடு நீண்ட தேர்கள் மிதந்தன.*

*அந்தப் போரில் இராமனின் கூரிய அம்புகள் உண்டாக்கிய இரத்தக் கடலில் அரக்கர் தலைகள் முதலாயின மிதந்தன என்பது. தும்பிக்கையுடைய யானையைக் கைம்மலை என்றார். மிதந்தன : சொற்பின்வருநிலையணி.*

***2959. ஆய காலையில், அனல் விழித்து***
***ஆர்த்து இகல் அரக்கர்,***
***தீய வார் கணை முதலிய தெறு***
***சினப் படைகள்,***
***மேய மால் வரை ஒன்றினை***
***வளைத்தன மேகம்***
***தூய தாரைகள் சொரிவன***
***ஆம் என, சொரிந்தார்.***

***ஆய காலையில் -*** *அவ்வாறானபோது;* ***இகல் அரக்கர் -*** *வலிமையுடைய அரக்கர் (பலர்);* ***அனல் விழித்து -*** *நெருப்புப் பொறி சிதறக் கோபத்தோடு விழித்துப் பார்த்து;* ***ஆர்த்து -*** *ஆர்ப்பரித்து;****மேய மால் வரை ஒன்றினை -*** *நிலைபொருந்திய பெரிய மலையொன்றினை;* ***வளைத்தனமேகம் -*** *சூழ்ந்த மேகங்கள்;* ***தூய தாரைகள் சொரிவன ஆம் என -*** *வெண்மையான மழைத் தாரைகளைப் பொழிவன போல;* ***தீய வார் கணை முதலிய -*** *கொடிய நீண்ட அம்புகள் முதலான;* ***தெறு சினப் படைகள் -*** *பகையழிக்கும் உக்கிரமுள்ள ஆயுதங்களை;* ***சொரிந்தார் -****(இராமன்மேல்) பொழிந்தார்கள்.*

*மலை இராமபிரானுக்கும் இன மேகம் அரக்கர்களுக்கும் மழைத் தாரைகள் ஆயுதங்களுக்கும் உவமைகளாம். இந்த உவமையால், மேகங்கள் திரண்டு சூழ்ந்து எவ்வளவு மழை பொழிந்தாலும் அது மலைக்கு எந்தவொரு தீங்கினையும் செய்யாதது போல, அரக்கர் திரண்டு சூழந்து எறிந்த படைகள் இராமனுக்கு எந்த ஊறுபாடும் செய்யமாட்டாமை விளங்கும்.*

*படைகளையேந்தியவரின் சினத்தை அப் படைகளின் மேலேற்றித் 'தெறு சினப் படை' என்றார் : உபசாரவழக்கு.*

***2960. சொரிந்த பல் படை துணிபட,***
***துணிபட, சரத்தால்***
***அரிந்து போந்தன சிந்திட,***
***திசை திசை அகற்றி,***
***நெரிந்து பார்மகள் நெளிவுற,***
***வனம் முற்றும் நிறைய,***
***விரிந்த செம் மயிர்க் கருந் தலை***
***மலை என வீழ்த்தான்.***

***சொரிந்த பல்படை -** (இராமபிரான்) (அரக்கர் தன்மேல்) பொழிந்த பலவகை ஆயுதங்களையும்; **துணிபட, துணிபட -** பல துண்டுகளாகத் துண்டுபடும்படி; **சரத்தால் அரிந்து -** (தான் எய்யும்) அம்புகளால் அறுத்துத் தள்ளி; **போந்தன -** மற்றும் மேல் வந்த ஆயுதங்களை;**திசை திசை சிந்திட -** எல்லாத் திசைகளிலும் சிதறும்படி; **அகற்றி -** (தன்னுடைய அம்புகளால்) விலக்கி; **பார்மகள் நெரிந்து நெளிவு உற -** பூமிதேவி நொறுங்கி அதிக பாரத்தால் நெளியவும்; **வனம் முற்றும் நிறைய -**அக் காடு முழுவதும் நிரம்பவும்; **விரிந்த செம்மயிர் கருந்தலை -**படர்ந்த செம்பட்டை மயிர்களையுடைய அந்த அரக்கர்களின் பெரிய தலைகளை; **மலை என வீழ்த்தான் -** அறுத்துத் தள்ளிய மலை போலக் கீழே வீழ்த்தினான். இராமபிரான் அரக்கர் பொழிந்த பல படைகளையும் தன் அம்புகளால் விலக்கிவிட்டுப் பின்பு பெரும் பாரத்தால் பூமிதேவியின் முதுகு நெளியும்படியும். அக் காடெல்லாம் நிரம்பும்படியும் அரக்கர்களின் கருந்தலைகளை மலைகள் போல் தோன்றும்படி தன் அம்புகளால் கொய்து வீழ்த்தினான் என்பது : துணிபட துணிபட என்ற அடுக்கு - மிகுதியை விளக்குவது. திசை திசை - 'அடுக்கு' எண்ணுப் பொருளது. பார் மகள் நெரிந்து நெளிவுற்றது : அரக்கர்களின் தலைகள் விழுந்த அதிர்ச்சியாலும், அவற்றின் பார மிகுதியாலும் நெளிதல் இயல்பு. 8*

***2961 கவந்தபந்தங்கள் களித்தன,***
***குளித்த கைம்மலைகள்,***
***சிவந்து பாய்ந்த வெங் குருதியில்;***
***திருகிய சினத்தால்***
***நிவந்த வெந் தொழில் நிருதர்தம்***
***நெடு நிணம் தெவிட்டி,***
***உவந்த, வன் கழுது; உயிர் சுமந்து***
***உளுக்கியது உம்பர்.***

*(அப்பொழுது) **கவந்த பந்தங்கள் -** தலையற்ற குறையுடல் தொகுதிகள்; **களித்தன -** கூத்தாடின; **கைம் மலைகள் -**யானைகள்; **சிவந்து பாய்ந்த வெங் குருதியில் -** செந்நிறமாகப் பெருகிய வெப்பமான இரத்த வெள்ளத்தில்; **குளித்த -** மூழ்கின; **வன் கழுது -** வலிய பேய்கள்; **திருகிய சினத்தால் -** கடுமையான கோபத்தால்; **நிவந்த வெம் தொழில் நிருதர்தம் -** மேலோங்கிய கொடுஞ் செயலையுடைய அரக்கர்களின்; **நெடுநிணம் தெவிட்டி -** மிக்க கொழுப்பைத் தெவிட்டும்படி நிரம்ப உண்டு; **உவந்த -** மகிழ்ந்தன; **உம்பர் -** தேவருலகம்; **உயிர் சுமந்து -** (இறந்த அரக்கர்களின்) உயிர்களை*

*மிகுதியாகத் தாங்கி;* ***உளுக்கியது -****(சுமையைப் பொறுக்க மாட்டாமல்) உடல் நெளிந்தது.*

*இராம பாணங்களால் அரக்கர் பெருந்திரளாக மடிந்து விழ, உடற் குறைகளாகிய கவந்தங்கள் கூத்தாட, பெருகிய இரத்தப் பெரு வெள்ளத்தில் யானைகள் மூழ்கின; பேய்கள் அரக்கர்களின் கொழுப்புகளைத் தின்று மகிழ்ந்தன; வீர சுவர்க்கம் செல்லும் அரக்க வீரர்களின் உயிர்களைத் தாங்க மாட்டாது தேவருலகம் உடல் நெளிந்தது என்பது. தெவிட்டுதல் : விரும்பப்படாது மிகுதல் உளுக்குதல் : நெளிதல்.*

*வேறு உரை : நிணந்தெவிட்டி உவந்த வன்கழுது - கொழுப்பினிடம் மிக்க விருப்பம் கொண்டு உண்டு மகிழ்ந்த பேய்க் கூட்டங்கள்; உயிர்சுமந்து - (அளவுக்கு அதிகமாக உண்டாதல் வயிறு பருத்த தம்முடைய உடம்பைச் சுமக்க முடியாமல்) பெருமூச்சு விட்டு; உம்பர் உளுக்கியது - ஆகாயத்தில் அசைந்து சென்றன.*

***2962. மருள் தரும் களி வஞ்சனை வளை***
***எயிற்று அரக்கர்,***
***கருடன் அஞ்சுறு, கண் மணி***
***காகமும் கவர்ந்த;***
***இருள் தரும் புரத்து இழுதையர்***
***பழுது உரைக்கு எளிதோ?***
***அருள் தரும் திறத்து அறன்***
***அன்றி, வலியது உண்டாமோ?***

***மருள் தரும் -*** *மாயையைச் செய்கின்ற;* ***களி வஞ்சனை -****களிப்பும் வஞ்சனையுமுள்ள;* ***வளை எயிற்று அரக்கர் -*** *வளைந்த கோரமான பற்களையுடைய இராக்கதர்களின்;* ***கருடன் அஞ்சுறு கண்மணி -****கருடனும் காண அஞ்சும்படியான கண்களின் கருவிழிகளை;* ***காகமும் கவர்ந்த -*** *(இப்பொழுது) காக்கைகளும் பறித்தெடுத்தன;* ***இருள் தரும் புரத்து இழுதையர் -*** *இருளைப் போன்ற மிகக் கரிய உடம்பையுடைய வஞ்சகர்களிடம்;* ***பழுது உரைக்கு -*** *கேடு சொல்வதற்கு;* ***எளிதோ -*** *எளியது ஆகுமோ;* ***அருள் தரும் திறத்து -*** *கருணை செய்யும் தன்மையையுடைய;* ***அறன் அன்றி -*** *தருமமேயல்லாமல்;* ***வலியது -*** *வலிமையுடையது;* ***உண்டாமோ -*** *(உலகத்தில் வேறு) உள்ளதாகுமோ?*

*உயிர்களுக்குத் தருமத்தினும் மிக்க நன்மை தருவதும், அதருமத்தினும் மிக்க கேடு தருவதும் வேறு இல்லையாதலால் கொடியவரான அரக்கர் எளிதாக அழிவடைந்தனர் என்பது.*

*'அருள் தரும் திறத்து அறனன்றி வலியது உண்டாமோ' - இராமபிரானே வெற்றி பெற்றமையைத் தெரிவிப்பது : பிறிது மொழிதலணி. 'இருள் தரும் புரத்து இழுதையர் பழுது உரைக்கு எளிதோ' - வேற்றுப் பொருள் வைப்பணி. காகமும் - உம் : இழிவு சிறப்பும்மை. அறத்துக்கு அருள் மிக இன்றியமையாததால் 'அருள் தரும் திறத்து அறன்' எனப்பட்டது.*

கலிவிருத்தம்

***2963. பல் ஆயிரம்இருள் கீறிய***
***பகலோன் என ஒளிரும்***
***வில்லாளனை முனியா, வெயில்***
***அயில் ஆம் என விழியா,-***
***கல் ஆர் மழை, கண மா முகில்***
***கடைநாள், விழுவனபோல்,-***
***எல்லாம் ஒரு தொடையா உடன்***
***எய்தார்; வினை செய்தார்.***

*(இவ்வாறு அரக்கரையழித்து)* **பல் ஆயிரம் இருள்** - *மிகப் பலவாகிய இருளின் தொகுதியை;* **கீறிய பகலோன் என ஒளிரும்** -*பிளந்து அழித்த சூரியனைப் போல ஒளி வீசுகின்ற;* **வில்லாளனை** - *வில்லில் வல்லவனான இராமபிரானை; (மற்றும் பல அரக்கர்);***முனியா** - *கோபித்து;* **வெயில் அயில் ஆம் என விழியா** - *ஒளியையுடைய வேலைப் போலக் கூர்மையாகக் கண் விழித்துப் பார்த்து;* **கண மா முகில்**- *கூட்டமாகிய பெரிய மேகங்கள்;* **கடை நாள்** - *யுக முடிவுக் காலத்தில்;* **கல் ஆர் மழை** - *கற்களைப் போன்ற மழை;* **விழுவன போல்** - *சொரிவது போலத் தோன்றுமாறு;* **எல்லாம் ஒரு தொடையா** -*எல்லா வகை அம்புகளையும் ஒரே தொடர்ச்சியாக;* **உடன் எய்தார்** - *சேர்த்து எய்து;* **வினை செய்தார்** - *போர்த் தொழிலைச் செய்தார்கள். பல்லாயிரம் இருள் போரில் இறந்துபட்ட பல்லாயிரம் அரக்கர்களுக்கும், பகலவன் இராமனுக்கும் கல் மழை அம்பு பொழிதலுக்கும் மேகக் கூட்டம் அரக்கர் கூட்டத்துக்கும் உவமை. முனியா, விழியா செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள்.*

***2964. எறிந்தார் என, எய்தார் என,***
***நினைந்தார் என, எறிய***
***அறிந்தார் என, அறியாவகை, அயில்***
***வாளியின் அறுத்தான்;***
***செறிந்தாரையும், பிரிந்தாரையும்,***
***செறுத்தாரையும், சினத்தால்***
***மறிந்தாரையும், வலித்தாரையும், மடித்தான்-***
***சிலை பிடித்தான்.***

**சிலை பிடித்தான்** - *வில்லைக் கையில் ஏந்தியவனான இராம பிரான்;* **செறிந்தாரையும்** - *கூட்டமாகத் திரண்டு வந்த அரக்கர்களையும்;* **பிரிந்தாரையும்** - *தனித் தனியே எதிர்த்து வந்த அரக்கர்களையும்;* **செறுத்தாரையும்** - *மிகக் கோபித்துப் பகைத்த அரக்கர்களையும்;* **சினத்தால் மறிந்தாரையும்** - *(தோற்றோடிப் பின்பு) கோபத்தால் திரும்பி வந்த அரக்கர்களையும்;* **வலித்தாரையும்** - *வலிந்து போர் செய்ய வந்தவர்களையும் (ஆகிய அனைவரையும்);* **எறிந்தார் என** -*இன்னவர் வேல் முதலிய எறிபடைகளை வீசினவர்களென்றும்;* **எய்தார் என** -*இன்னார் பாணங்களைப் பிரயோகித்தவரென்றும்;* **நினைந்தார் என** - *(இன்னார் ஆயுதங்களைப் பயன்படுத்தக்)*

*கருதினவரென்றும்;* ***எறியஅறிந்தார் என -*** *(இன்னார் ஆயுதங்களை) வீச ஆராய்ந்து துணிந்தவரென்றும்;* ***அறியாவகை -*** *அறியாதபடி;* ***அயில் வாளியின் அறுத்தான் -*** *கூர்மையான (தன்னுடைய) அம்புகளால் துணித்து;* ***மடித்தான் -*** *கொன்றொழித்தான்.*

*சிலை பிடித்தவன் அறுத்தான் மடித்தான் என்று வினை முடிவு செய்க. இன்ன அரக்கர் இன்ன விதமாக இன்னது செய்தாரென்று அறிய முடியாதபடி அவர்களையெல்லாம் மிக விரைவில் இராமபிரான் துணித்தான் என்பது. செறிந்தார் - தன்னைச் சூழ்ந்து நெருங்கி நின்றவரும், பிரிந்தார் - விலகித் தூரத்தில் நின்றவரும் எனவும் உரைக்கலாம்.*

***2965. வானத்தன; கடலின் புற***
***வலயத்தன; மதி சூழ்***
***மீனத்தன; மிளிர் குண்டல***
***வதனத்தன மிடல் வெங்***
***கானத்தன; மலையத்தன; திசை***
***சுற்றிய கரியின்***
***தானத்தன-காகுத்தன் சரம்***
***உந்திய சிரமே.***

***மிளிர் குண்டல வதனத்தன -*** *விளங்குகின்ற குண்டலம் என்னும் காதணியைக் கொண்ட முகத்தையுடையனவும்;* ***காகுத்தன் சரம் உந்திய சிரம் -*** *இராமபிரானின் அம்புகளால் அறுத்துத் தள்ளப் பட்டனவுமாகிய தலைகள்;* ***வானத்தன -*** *மேக மண்டலத்தில் சென்று சேர்ந்தவையும்;* ***கடலின் புற வலயத்தன -*** *கடலின் வெளிவட்டத்திற் சென்று சேர்ந்தவையும்;* ***மதி சூழ் மீனத்தன -*** *சந்திரனைச் சூழ்ந்த நட்சத்திரமண்டலங்களிற் சென்று சேர்ந்தவையும்;* ***மிடல் வெம் கானத்தன -****வலிய கொடிய காடுகளில் சென்று சேர்ந்தவையும்;* ***மலையத்தன -****மலைகளிற் சென்று சேர்ந்தவையும்;* ***திசை சுற்றிய கரியின் -*** *திசைகளைச் சுற்றிலுமுள்ள (எட்டுத் திக்கு) யானைகளிடத்தில்;* ***தானத்தன -****சென்று சேர்ந்தவையுமாயின.* ***ஏ -*** *ஈற்றசை.*

*அறுபட்ட தலைகள் எப்புறத்தும் நெடுந் தூரத்திற்கு அப்பால் சென்று விழுந்தன என்பது மீன் - விண்மீன்; வானத்தன, வலயத்தன - அ - ஆறனுருபு.*

***2966. மண் மேலன; மலை மேலன; மழை***
***மேலன; மதி தோய்***
***விண் மேலன; நெடு வேலையின்***
***மேல் கீழன; மிடலோர்***
***புண் மேலன;-குருதிப் பொரு***
***திரை ஆறுகள் பொங்க,***
***திண் மேருவை நகு மார்பினை***
***உருவித் திரி சரமே.***

***புண் மேலன குருதி*** - *புண்பட்ட உடல்களிலிருந்து பெருகும் இரத்த வெள்ளமாகிய;* ***பொரு திரை ஆறுகள் பொங்க*** - *மோதுகின்ற அலைகளையுடைய நதிகள் மிகும்படியாக;* ***மிடலோர்*** *-வலிமையுள்ள அரக்கர்களின்;* ***திண் மேருவை நகு மார்பினை*** *- வலிய மேருமலையையும் (தமது வலிமைக்கு ஈடாகாதென்று) இகழ்கின்ற மார்புகளை;* ***உருவித் திரி சரம்*** *- முழுவதும் துளைத்து அப்பாலே சென்ற இராமனுடைய அம்புகள்;* ***மண் மேலன*** *- தரையில் விழுந்தவையும்;* ***மலை மேலன*** *- மலைகளின் மேல் விழுந்தவையும்;* ***மழை மேலன*** *- மேகங்களின் மேற்பட்டவையும்;* ***மதி தோய் விண் மேலன*** *-சந்திரன் பொருந்தி விளங்கும் ஆகாயத்தின் மேல் சென்றவையும்;* ***நெடு வேலையின் மேல் கீழன*** *- பெரிய கடல்களின் மேலேயும் கீழேயும் உள்ளவையுமாயின;* ***ஏ*** *- ஈற்றசை.    இரத்த நதிகள் பெருகுமாறு அரக்கர்களின் மார்புகளை ஊடுருவிச் சென்ற இராம பாணங்கள் மண்மேலன, மலை மேலன, மழை மேலன, விண் மேலன, வேலையின் மேல் கீழனவாக அமைந்தன என்பது.*

*இச் செய்யுள் இராமனின் அம்புகள் பகைவர் தம் உடல்களை ஊடுருவிச் சென்ற வேகத்தின் மிகுதியை விளக்கும். அரக்கர்கள் மார்புகளுக்கு மேருமலை ஒப்பு - அதன் திண்மையும் பெருமையும் பற்றி. அரக்கர் மார்பு பொழியும் குருதிக்கு மலையருவி நிகர்.*

***2967.  பொலந் தாரினர், அனலின் சிகை***
***பொழி கண்ணினர், எவரும்***
***வலம் தாங்கிய வடி வெம் படை***
***விடுவார், சர மழையால்***
***உலந்தார்; உடல் கடலோடு உற,***
***உலவா உடல் உற்றார்;***
***'அலந்தார் நிசிசரர் ஆம்' என,***
***இமையோர் எடுத்து ஆர்த்தார்.***

***பொலம் தாரினர்*** *- அழகிய மாலையணிந்தவர்களும்;* ***அனலின் சிகை பொழி கண்ணினர்*** *- நெருப்பின் சுடர்களைச் சிந்துகின்ற கண்களையுடையவர்களும்;* ***வலம் தாங்கிய*** *- வலிமை கொண்ட;* ***வடி வெம் படை விடுவார் எவரும்*** *- கூரிய கொடிய போர்க் கருவிகளை இராமன் மேல் விடுபவர்களான அரக்கர்கள் யாவரும்;* ***சர மழையால் உலந்தார்*** *- (இராமன் எய்த) அம்பு மழையால் இறந்தனர்;* ***உடல் கடலோடு உற*** *- அவ்வாறு இறந்தோர் தம் உடல்கள் கடலோடு போய்ச் சேர;* ***உலவா உடல் உற்றார்*** *- (பின்) அழியாத தேவ உடலைப் பெற்றார்கள்;* ***இமையோர்*** *- (அதனால்) தேவர்கள்;* ***நிசிசரர் அலந்தார் ஆம் என ஆர்த்தார்*** *- அரக்கர்கள் அழிந்தார்களென்று மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள்.*

*நிசிசரர் - அரக்கர் : இரவில் சஞ்சரிப்பவர்.*

***2968.  ஈரல் செறி கமலத்தன, இரதத்***
***திரள் புளினம்,***

***வீரக் கரி முதலைக் குலம்,***
***மிதக்கின்றன உதிக்கும்***
***பாரக் குடர் மிடை பாசடை***
***படர்கின்றன பலவா,***
***மூரித் திரை உதிரக் குளம் முழுகிக்***
***கழுது எழுமே.***

***ஈரல் செறி கமலத்தன -*** *(இறந்த அரக்கர்களின்) ஈரல்களாகிய நிறைந்த தாமரை மலர்களையுடையவையும்;* ***இரதம் திரள் புளினம் -*** *தேர்களாகியதிரண்ட மணற்குன்றுகளையுடையவை;* ***வீரக் கரி -*** *வலிய யானைகளாகிய;* ***முதலைக் குலம் -*** *முதலைகளின் கூட்டம்;* ***மிதக்கின்றன -****மிதக்கப் பெற்றவையும்;* ***பாரம் குடர் -*** *கனத்த குடல்களாகிய;* ***மிடை பாசடை -*** *நெருங்கிய பசுமையான தாமரையிலைகள்;* ***படர்கின்றன -*** *மேலே படரப் பெற்றவையுமாகிய;* ***மூரித் திரை உதிரம் குளம் பல -*** *பெரிய அலைகளையுடைய இரத்தக் குளங்கள் பல;* ***கழுது முழுகி எழ -****பேய்கள் முழுகி நீராடி எழுமாறு;* ***உதிக்கும் -*** *உண்டாயின.*

*பெரிய இரத்த வெள்ளத்தைப் பேய்கள் நீராடியெழுவதற்கு இடமான தாமரைப் பொய்கைகளென்று உருவகப்படுத்தி, அவற்றிற்குக் குடல்களைத் தாமரையிலைகளாகவும், ஈரல்களைத் தாமரை மலர்களாகவும் தேர்களை மணற் குன்றுகளாகவும், யானைகளை முதலைகளாகவும் குறித்து வருணித்தார். முற்றுவமையணி.*

***2969. அழைத்தார் சிலர், அயர்த்தார் சிலர்,***
***அழிந்தார் சிலர், கழிந்தார்;***
***உழைத்தார் சிலர், உயிர்த்தார் சிலர்,***
***உருண்டார் சிலர், புரண்டார்;***
***குழைத் தாழ் திரைக் குருதிக் கடல்***
***குளித்தார் சிலர், கொலை வாய்***
***மழைத் தாரைகள் படப் பாரிடை***
***மடிந்தார் சிலர், உடைந்தார்.***

***கொலை வாய் மழைத் தாரைகள் பட -*** *(பகைவரைக்) கொல்லும் தன்மையுடைய கூரிய நுனியுள்ள (இராமனுடைய) அம்புகளாகிய மழைத் தாரைகள் மேல் விழுவதனால்;* ***சிலர் அழைத்தார் -****(அரக்கர்களில்) சில பேர் (துன்பம் பொறுக்க மாட்டாமல் ஐயா அப்பா என்று) கூவியழைத்தார்கள்;* ***சிலர் அயர்த்தார் -*** *சிலர் சோர்ந்து தளர்ந்தார்கள்;* ***சிலர் அழிந்தார் -*** *சிலர் இறந்தொழிந்தார்கள்;* ***(சிலர்) கழிந்தார் -****சிலர் நெடுந்தொலைவு விலகிச் சென்றார்கள்;* ***சிலர் உழைத்தார் -*** *சிலர் மிக வருந்தினார்கள்;* ***சிலர் உயிர்த்தார் -*** *சிலர் பெருமூச்சு விட்டனர்;****சிலர் உருண்டார் -*** *சிலர் (தரையிலே) உருண்டார்கள்; (சிலர்)* ***புரண்டார் -****சிலர் (தரையிலே) புரண்டு தத்தளித்தனர்;* ***சிலர் குழை தாழ் -*** *சிலர் சேறு ஆழ்ந்து;* ***திரைக் குருதிக் கடல் குளித்தார் -*** *அலைகளோடு கூடிய இரத்தக் கடலில் மூழ்கினார்கள்;* ***சிலர் பார் இடை மடிந்தார் -****சிலர் தரையிலே விழுந்து இறந்தார்கள்;* ***(சிலர்) உடைந்தார் -*** *சிலர் உறுதிநிலை கெட்டு ஓடினார்கள்.*

அரக்க வீரர் பலரும் இராமனுடைய அம்புகளால் பலபடி, ஆயினமையை இச் செய்யுள் புலப்படுத்தும். 'கொலைவாய்' என்ற அடைமொழியால் 'மழை' அம்புமழையாயிற்று. முன் செய்யுளில் குருதிக் குளமாகவிருந்தது இச் செய்யுளில் குருதிக் கடலாகப் பொங்கியது என்பது.

படைத் தலைவர் பதினால்வரும் பொருதல்

***2970. உடைந்தார்களை நகைசெய்தனர், உருள்***
***தேரினர், உடன் ஆய்***
***அடைந்தார், படைத் தலைவீரர்கள்***
***பதினால்வரும்; அயில் வாள்***
***மிடைந்தார், நெடுங் கடல்-தானையர்,***
***மிடல் வில்லினர், விரிநீர்***
***கடைந்தார் வெருவுற மீது எழு கடு***
***ஆம் எனக் கொடியார்.***

**விரி நீர் கடைந்தார் -** பரந்த பாற்கடலைக் கடைந்த தேவாசுரர்கள்; **வெருவு உற -** அச்சங்கொள்ளும்படி; **மீது எழு கடு ஆம் என -**(அக் கடலிலிருந்து) மேலெழுந்த நஞ்சு போல; **கொடியார் -** கொடுமையுள்ளவர்களான; **படைத் தலை வீரர்கள் பதினால்வரும் -** அந்த அரக்கர் படைத் தலைவர்களான வீரர்கள் பதினான்கு பேரும்; **உடைந்தார்களை -** தம்முள் தோற்றோடியவர்களை; **நகை செய்தனர் -** இகழ்ந்து சிரித்துக் கொண்டு; **உருள் தேரினர் -** வலிமையான சக்கரத்தையுடைய தேர்களில் ஏறியவர்களும்; **அயில்வாள் மிடைந்தார் -** வேலும் வாளும் பொருந்தியவர்களும்; **நெடுங் கடல் தானையர் -**பெரிய கடல் போன்ற சேனையைச் சூழ்ந்தவர்களும்; **மிடல் வில்லினர் -**வலிய வில்லேந்தியவர்களுமாய்; **உடனாய் அடைந்தார் -** ஒன்றாக வந்து (இராமனுள்ள இடத்தைச்) சேர்ந்தார்கள்.

கடைந்தார் என்றமையால் விரிநீர் என்பது பாற்கடல் எனக் கொள்ளப்பட்டது. படைத் தலைவர்க்குப் பாற்கடலில் எழுந்த விடம்உவமையாயிற்று. கடல் தானையர் என்றமையால் அவர்களோடு வந்த அரக்கர் படைக்குக் கடல் உவமையானது. படைத் தலைவர் பதினால்வர் கரனுடன் வந்தவர்.

***2971. நாகத் தனி ஒரு வில்லியை, நளிர்***
***முப்புரர், முன் நாள்***
***மாகத்திடை வளைவுற்றனர் என,***
***வள்ளலை மதியார்,***
***ஆகத்து எழு கனல் கண்வழி***
***உக, உற்று எதிர் அழன்றார்;***
***மேகத்தினை நிகர் வில்லியை***
***வளைத்தார், செரு விளைத்தார்.***

***நாகத் தனி ஒரு வில்லியை*** - *மேருமலையை ஒப்பற்ற வில்லாகக் கொண்ட சிவபெருமானை;* ***முன்நாள்*** - *முன்னொரு காலத்தில்;* ***மாகத்திடைவளைவுற்றனர்*** - *ஆகாயத்தில் சூழ்ந்து கொண்டவர்களான;* ***நளிர் முப்புரர் என*** - *பெரிய திரிபுரத்து அசுரர்களைப் போல (அச் சேனைத் தலைவர் பதினால்வரும்);* ***வள்ளலை மதியார்*** - *இராமபிரானை (ஒரு பொருட்டாக) மதியாதவர்களாய்;* ***ஆகத்து எழு கனல்*** - *அவர்களுடைய உடலிலிருந்தெழுந்த கோபத் தீ;* ***கண் வழி உக*** - *கண்களின் வழியாகச் சிந்தும்படி;* ***எதிர் உற்று அழன்றார்*** - *எதிர்த்து வந்து சீற்றம் கொண்டவர்களாய்;* ***மேகத்தினை நிகர்*** - *காள மேகத்தைப் போன்ற;* ***வில்லியை வளைத்தார்*** - *வில் வீரனான இராம பிரானைச் சூழ்ந்து கொண்டு;* ***செரு விளைத்தார்*** - *போர் செய்தார்கள்.*

*முன் காலத்தில் திரிபுரத்து அசுரர்கள் சிவபெருமானை வளைத்துக் கொண்டு செரு விளைத்தது போலச் சேனைத் தலைவர் பதினால்வர் இராமபிரானை வளைத்துக் கொண்டு போர் விளைத்தார் என்பது. தனி வில்லி - வேறு துணை எதுவுமில்லாமல் தனித்துப் போருக்குச் சென்ற வில் வீரன். இராமனுக்கு மேகம் - கருநிறத்தாலும், (அம்பு) மழை பொழிவதாலும், வில்லைப் பெற்றிருப்பதாலும் உவமையாகும். முப்புரம் : இரும்பாலும் செம்பாலும் பொன்னாலும் அமைந்து, நினைத்த இடத்திற்கு எழுந்து பறக்கக் கூடிய சக்தியமைந்த கோட்டைகளால் அமைந்த ஊர்கள்; இம் முப்புரங்களையும் அவற்றிற்குரிய வித்யுந்மாலி, தாருகாட்சன் கமலாட்சன் என்னும் மூன்று அசுரர்களையும் சிவபிரான் தன் சிரிப்பால் தீயெழச் செய்து அழித்தான் என்பது புராண வரலாறு. சிவனின் பெருமையறியாமல் அவனை எதிர்த்துப் பின்பு அழிந்த திரிபுரர் போல அரக்கர் படைகள் இராமனை வளைத்து நின்று அழிவுற்றனர் என்பது குறிப்பு. நாகம் : பல பொருள் குறித்த திரிசொல்; இங்கு மலையைக் குறிக்கும்.*

***2972. எய்தார் பலர்; எறிந்தார் பலர்;***
***மழு ஓச்சினர்; எழுவால்***
***பொய்தார் பலர்; புடைத்தார் பலர்;***
***கிடைத்தார் பலர்; பொருப்பால்***
***பெய்தார் மழை; பிதிர்த்தார் எரி;-பிறை***
***வாள்எயிற்று அரக்கர்-***
***வைதார் பலர்; தெழித்தார் பலர்; மலை***
***ஆம் என வளைத்தார்.***

***பிறை வாள் எயிற்று*** - *பிறைச் சந்திரனைப் போன்ற கோரப் பற்களையுடைய;* ***அரக்கர் பலர்*** - *(சேனைகளுடன் வந்த) அரக்கர்களில் அநேகம் பேர்;* ***எய்தார்*** - *(இராமன்மேல்) அம்புகளை எய்தார்கள்.* ***பலர் எறிந்தார்*** - *(வேல் முதலிய ஆயுதங்களை) வீசினார்கள்;* ***(பலர்) மழுஓச்சினர்*** - *(பலர்) மழுவென்னும் ஆயுதங்களைச் செலுத்தினார்கள்;* ***பலர் எழுவால் பொய்தார்*** - *பலர் வளைதடிகளால் தாக்கினார்கள்;* ***பலர்புடைத்தார்*** - *பலர் ஆயுதங்களால் அடித்தார்கள்;* ***பலர் கிடைத்தார்*** - *பலர் எதிர்த்து நெருங்கினார்கள்;* ***பொருப்பால் மழை பெய்தார்*** - *மலைகளையெடுத்து மழைபோலச் சொரிந்தார்கள் பலர்;* ***எரி பிதிர்த்தார்*** - *பலர் நெருப்பைக் கொட்டினார்கள்;* ***பலர் வைதார்*** - *பலர் வசை மொழிகளைக் கூறினார்கள்;* ***பலர் தெழித்தார்*** - *பலர் அதட்டியார வாரித்தார்கள்;* ***மலை ஆம் என வளைத்தார்*** - *(இவ்வாறு செய்து யாவரும்) மலைகள் சூழ்ந்தாற் போல (இராமனைச்) சூழ்ந்தார்கள்.*

*கிடைத்தார் - நெருங்கினர். பொய்தார் - (போர்க் கருவிகளைக் கொண்டு) விளையாடினார் என்றும் கொள்ளலாம்.*

***2973. தேர் பூண்டன விலங்கு யாவையும்,***
***சிலை பூண்டு எழு கொலையால்,***
***பார் பூண்டன; மத மா கரி பலி***
***பூண்டன; பரிமா***
***தார் பூண்டன, உடல் பூண்டில***
***தலை; வெங்கதிர் தழிவந்து***
***ஊர் பூண்டன பிரிந்தாலென,***
***இரிந்தார் உயிர் உலைந்தார்.***

***சிலை பூண்டு எழு கொலையால் -*** *இராமபிரானின் வில்லிலிருந்து கிளம்பிய கொல்லுதல் தன்மையுடைய அம்புகளால்;* ***தேர் பூண்டனவிலங்கு யாவையும் -*** *(அந்த அரக்கர்களின்) தேர்களில் பூட்டப் பட்ட மிருகங்களெல்லாம்;* ***பார் பூண்டன -*** *(இறந்து விழுந்து) தரையைச் சேர்ந்தன;* ***மத மா கரி -*** *மதம் பிடித்த பெரிய யானைகள்;* ***பலி பூண்டன -*** *பலியிடப்பட்டன (கொல்லப்பட்டன) ;* ***தார் பூண்டன பரிமா -****கிண்கிணி மாலையணிந்த குதிரைகள்;* ***உடல் தலை பூண்டில -*** *உடல்களில் தம் தலைகள் பொருந்தப் பெறாதனவாயின (இவ்வாறு ஆகவே அரக்கர்கள்);* ***வெங் கதிர் தழிவந்து ஊர் பூண்டன -*** *வெப்பமான கதிர்களையுடைய சூரியனைத் தழுவிச் சூழ்ந்த ஊர்கோள் என்னும் பரிவேடங்கள்;****பிரிந்தால் என -*** *விரைவில் நீங்கினாற் போல;* ***இரிந்தார் -*** *நிலைகெட்டு ஓடி,****உயிர் உலைந்தார் -*** *உயிர் நடுங்கினார்கள்.*

*'வெங்கதிர் தழி வந்து ஊர் பூண்டன பிரிந்தால்' என்றது, இராமனை இடைவிடாமற் சூழ்ந்த அரக்கர்கள் அப் பெருமானை யாதொன்றும் செய்ய மாட்டாமல் விரைவிலே எளிமைப்பட்டு விலகிச் சென்றதை விளக்கக் கூடிய உவமையாம். ஒருவர் பின் ஒருவராகப் பல வரிசையரக்கர்களும் சூழ்ந்து நின்றதை விளக்குவதற்கு 'ஊர் பூண்டன' என்று உவமையைப் பன்மையில் கூறினார். தழி - தழுவி என்னும் வினையெச்சத்தின் மரூஉ.*

***2974. மால் பொத்தின மறவோர் உடல் மழை***
***பொத்தின; வழி செம்-***
***பால் பொத்தின, நதியின் கிளர் படி***
***பொத்தின; படர் வான்-***
***மேல் பொத்தின குழு விண்ணவர் விழி***
***பொத்தினர்; விரை வெங்***
***கால் பொத்தினர் நமன் தூதுவர், கடிது***
***உற்று, உயிர் கவர்வார்.***

***மால் பொத்தின -*** *மயக்கம் நிறைந்த;* ***மறவோர் உடல் -*** *கொடியஅரக்கர்களின் உடம்பில்;* ***மழை பொத்தின -*** *அம்பு மழை துளைத்தன;* ***வழி செம்பால் பொத்தின -***

*வழிகின்ற இரத்தப் பெருக்கு நிறைந்ததுவாய்;* ***நதியின் கிளர்படி பொத்தின -*** *ஆறுகள் போல விளங்கும் பூமியைமறைத்தது;* ***படர் வான் மேல் பொத்தின -*** *பரந்த வானத்தின் மேல் நிறைந்த;* ***குழு விண்ணவர் -*** *கூட்டமாகவுள்ள தேவர்கள்;* ***விழி பொத்தினர் -*** *(போரின் உக்கிரத்தைக் காண விரும்பாமல்) கண்களை மூடிக் கொண்டார்கள்;* ***நமன் தூதுவர் -*** *யமதூதர்கள்;* ***விரை வெங்கால் பொத்தினர் -*** *விரைவாக வீசும் கொடிய காற்றையொத்தவர்களாய்;* ***கடிது உற்று -*** *விரைவாக வந்து;* ***உயிர் கவர்வார் -*** *அரக்கருயிரைப் பறிப்பவர்களாயினர்.*

*வீரர்களை மலைகளுக்கு உவமித்ததற்கேற்ப, அவர்களின் உடல்களிலிருந்து பெருகியோடும் இரத்த வெள்ளத்தை நதிகளாகக் கூறினார்.*

*நமன் தூதுவர் தூது பொருந்தியது - அவர்களின் மிகுதியையும், அவர்களின் கால்களால் அந்தப் போர்க்களம் மூடுண்டதையும் அரக்கர்களின் அழிவு மிகுதியையும் அறிவிப்பது.*

*பொத்துதல் - நிறைதல், மறைதல், மூடுதல் மழை - மழை போல் சொரிந்த அம்புத் தொகுதி : உவமையாகுபெயர். செம்பால் - இரத்தம்.*

*'விரை வெங்கால் பொத்தினர் கடிதுற்று' - 'விரைந்து செல்லும் தன்மையுள்ள கொடிய தம் கால்களை அடித்துக் கொண்டு விரைந்து வந்து' எனப் பொருள் உரைப்பினும் அமையும்.*

***2975. பேய் ஏறின செரு வேட்டு எழு பித்து***
***ஏறினர் பில வாய்,***
***நாய் ஏறின; தலைமேல் நெடு நரி***
***ஏறின; எரி கால்***
***வாய் ஏறின வடி வாளியின் வான்***
***ஏறினர், வந்தார்;***
***தீ ஏறு, இகல் அரி ஏறு என, முகில்***
***ஏறு எனச் செறிந்தார்.***

***பேய் ஏறின -*** *பேய்கள் கூட்டமாக வருவதற்குக் காரணமான;* ***செரு வேட்டு -*** *போரை விரும்பி;* ***எழு பித்து ஏறினர் -*** *எழுகின்ற பைத்தியம் பிடித்த அரக்கர்களின்;* ***பில வாய் -*** *மலைக் குகை போல (ஆழ்ந்து அகன்ற) வாய்களின் மேல்;* ***நாய் ஏறின -*** *பல நாய்கள் எறின;* ***தலை மேல் நெடுநரி ஏறின -*** *தலைகளின் மேல் பெரிய நரிகள் வந்து ஏறின;* ***தீ ஏறு (என) -*** *பெரிய நெருப்புப் போலவும்;* ***இகல் அரி ஏறு என -*** *வலிய ஆண் சிங்கம் போலவும்;* ***முகில் ஏறு என -*** *மேகத்திலே தோன்றும் பேரிடி போலவும்;* ***வந்தார் செறிந்தார் -*** *வந்து நெருங்கிய அரக்கர்கள்;* ***எரி கால் வாய் -*** *நெருப்பையுமிழும் நுனியிலே;* ***ஏறின வடி வாளியின் -*** *கூரிய (இராமனுடைய) அம்புகளால்;* ***வான் ஏறினர் -*** *(போரில் மடிந்து) வீரசொர்க்கத்திற்கு ஏறிச் சென்றார்கள்.*

*பேயேறின செரு - பேய்கள் பிணங்களைத் தின்ன விரும்பி மிகுதியாக வருமாறு பிராணிகளுக்கு அழிவையுண்டாக்கும் போர். பித்து - வரம்பு கடந்த ஆசை. நாயும்*

*நரியும் இறந்தவுடல்களைப் பிடுங்கித் தின்ன வந்தவையாம்.*

***2976. தலை சிந்தின; விழி சிந்தின,***
***தழல் சிந்தின; தரைமேல்***
***மலை சிந்தினபடி சிந்தின, வரி***
***சிந்துரம்; மழைபோல்***
***சிலை சிந்தின கணை சிந்தின, திசை***
***சிந்தின, திசையூடு***
***உலை சிந்தின, பொறி சிந்தின,***
***உயிர் சிந்தின, உடலம்.***

***தலை சிந்தின -*** *(அரக்கர்களின்) தலைகள் சிதறின;* ***தழல் சிந்தின விழி சிந்தின -*** *நெருப்புப் பொறிகளையுமிழ்ந்த (அவர்களின்) கண்கள் சிதறின;* ***வரி சிந்துரம் -*** *(இருக்கை வரிந்து) கட்டப்பட்ட யானைகள்;* ***தரை மேல் மலை சிந்தினபடி சிந்தின -*** *பூமியின் மேலே மலைகள் சிதறிவிழுந்தாற் போலச் சிதறின;* ***சிந்தின மழை போல் சிலை சிந்தின கணை-*** *பெய்த மேகம் போல (இராமனது) வில் உமிழ்ந்த அம்புகள்;* ***திசை சிந்தின -*** *எல்லாத் திசைகளிலும் சிதறி விழுந்தன;* ***திசையூடு உலை சிந்தின -*** *அந்தத் திக்குகளிலெல்லாம் உலைக் களத்திலிருந்து சிதறிய; பொறி சிந்தின உடலம் - தீப் பொறி போன்ற நெருப்புப் பொறிகளைச் சிதறிய (அரக்கரின்) உடம்புகள்;* ***உயிர் சிந்தின -*** *உயிர்கள் நீங்கின.*

*விழி சிந்தின - கண்கள் சிதறின; தழல் சிந்தின - (அந்தக் கண்கள் கொடுமையால் மேலும்)* ***தீயுமிழ்ந்தன*** *என்றும், உயிர் சிந்தின உடலம் - உயிர் நீங்கிய உடம்புகள்; உலை சிந்தின பொறி சிந்தின - (கொடுமையால் பின்பும்) உலை சிந்தின அனற் பொறிகளைச் சிதறின எனவும் பொருள் உரைக்கலாம். மழை போல் சிலை கணை சிந்தின - மேகம் போல வில் அம்புகளைச் சொரிந்தன; சிந்தின திசை (அந்த அம்புகள்) சிதறி விழுந்த திக்குகள்; சிந்தின - அந்த அம்புகளின் வேகத்தால், இடிந்து விழுந்தன; திசையூடு உலை சிந்தின - பொறி சிந்தின அத்திக்குகளிலெல்லாம் உலைக் களத்துப் பொறிகள் போன்ற தீப்பொறிகள் சிதறின என்றும் உரைக்கலாம். 102கலிவிருத்தம்*

***2977. படைப் பெருந் தலைவரும்,***
***படைத்த தேர்களும்,***
***உடைத் தடம் படைகளும், ஒழிய,***
***உற்று எதிர்***
***விடைத்து அடர்ந்து எதிர்ந்தவர்,***
***வீரன் வாளியால்,***
***முடைத்த வெங் குருதியின்***
***கடலில் மூழ்கினார்.***

***படைப் பெருந் தலைவரும் -*** *பெரிய சேனைத் தலைவர் பதினால் வரும்;* ***படைத்த தேர்களும் -*** *(அவர்கள்) பெற்றிருந்த இரதங்களும்;* ***உடைத் தடம் படைகளும் -*** *அவர்கள்*

*தாங்கிய பெரிய போர்க் கருவிகளும்;* ***ஒழிய -*** *நீங்கலாக;* ***எதிர் உற்று -*** *(இராமபிரானுக்கு) எதிரில் வந்து;* ***விடைத்து அடர்ந்து எதிர்ந்தவர் -*** *கோபங் கொண்டு நெருங்கித் தாக்கியெதிர்த்த அரக்கர்கள் எல்லோரும்;* ***வீரன் வாளியால் -*** *இராமனுடைய அம்புகளால்;* ***முடைத்த -*** *துர்நாற்றம் மிகுந்த;* ***வெங்குருதியின் கடலில் -*** *கொடிய இரத்தக் கடலிலே;* ***மூழ்கினார் -****முழுகி இறந்தார்கள்.*

*இராமனை எதிர்த்த அரக்கர்களுள் சேனைத் தலைவர் பதினால்வர் தவிர மற்றவர் யாவரும் அழிந்தமையை இதில் கூறினார்.*

*முடைத்த - குறிப்புப் பெயரெச்சம்.*

***2978. சுற்றுற நோக்கினர்,***
***தொடர்ந்த சேனையில்***
***'அற்றில தலை' எனும்,***
***ஆக்கை கண்டிலர்;***
***தெற்றினர் எயிறுகள்;***
***திருகினார் சினம்;***
***முற்றினர் இராமனை,***
***முடுகு தேரினார்.***

*(படைத் தலைவர் பதினால்வரும்)* ***சுற்றுற நோக்கினர் -****(தம்மைச்) சுற்றிலும் எல்லாப் பக்கங்களிலும் பார்த்து;* ***தொடர்ந்த சேனையில் -*** *தம்மைத் தொடந்து வந்த சேனைகளில்;* ***தலை அற்றில எனும் ஆக்கை -*** *தலை அறாதவையென்று சொல்லக் கூடிய அரக்கரின் உடம்புகளை;* ***கண்டிலர் -*** *(ஒன்றேனும்) காணாதவராகி;* ***எயிறுகள் தெற்றினர் -*** *பற்களைக் கடித்துக் கொண்டனர்;* ***சினம் திருகினார் -*** *கோபம் மூண்டு;* ***முடுகு தேரினார் -****விரைந்து செல்லும் தேர்களையுடையவர்களாய்;* ***இராமனை முற்றினர் -*** *இராமபிரானைச் சூழ்ந்து கொண்டனர்.*

*சேனையிலிருந்த குதிரைகள், யானைகள் உட்பட யாவும் தலையறு பட்டமை விளங்கும். சினம் திருகுதல் - கோபத்தால் முறுக்கேறுதல். பற்களைக் கடித்தல் கோபத்தால் உண்டாகும் மெய்ப்பாடுகளுள் ஒன்று.*

***2979. ஏழ்-இரு தேரும் வந்து,***
***இமைப்பின் முன்பு, இடை***
***சூழ்வன, கணைகளின்***
***துணிய நூறினான்;***
***ஆழியும், புரவியும், ஆளும்***
***அற்று, அவை***
***ஊழி வெங் கால் எறி***
***ஒங்கல் ஒத்தவே.***

***வந்து இடை சூழ்வன* -** *வந்து பக்கத்திலே சூழ்ந்தவையான;* ***ஏழ்இரு தேரும்* -** *பதினான்கு தேர்களையும்;* ***இமைப்பின் முன்பு* -** *கண்ணிமைக்கும் நேரத்தில்;* ***கணைகளின்* -** *அம்புகளால்;* ***துணிய நூறினான்* -** *துண்டாகும்படி (இராமன்) அழித்தான் (அப்பொழுது);* ***ஆழியும் புரவியும்* -** *தேர்ச் சக்கரங்களும் குதிரைகளும்;* ***ஆளும் அற்று* -** *தேர்ச் சாரதிகளும் ஒழிந்து;* ***அவை ஊழி வெம்கால்* -** *அவை கொடிய ஊழிக் காற்றால்;* ***எறி ஓங்கல் ஒத்த* -** *எடுத்தெறியப்படுகின்ற மலைகளைப் போன்றன;* ***ஏ* -** *ஈற்றசை.*

*ஊழிக் காற்று - இராமனுடைய அம்புக்கும், மலைகள் - வலிய பெரிய சக்கரம் பூண்ட தேர் முதலியவற்றுக்கும் உவமை.*

***2980. அழிந்தன தேர்; அவர்,***
***அவனி கீண்டு உக,***
***இழிந்தனர்; வரி சிலை***
***எடுத்த கையினர்;***
***ஒழிந்திலர்; சரங்களை உருமின்***
***ஏறு எனப்***
***பொழிந்தனர், பொழி கனல்***
***பொடிக்கும் கண்ணினார்.***

***அழிந்தன தேர்* -** *(இவ்வாறு) தேர்கள் அழிந்தன;* ***அவர்* -***(அழிந்து போகவே) அந்தப் படைத் தலைவர் பதினான்கு பேரும்;* ***அவனி கீண்டு உக* -** *பூமி பிளந்துவிடும்படி;* ***இழிந்தனர்* -** *கீழே இறங்கினர்;****வரிசிலை எடுத்த கையினர்* -** *கட்டமைந்த வில்லேந்திய கையையுடையவர்களும்;* ***ஒழிந்திலர்* -***(இவ்வாறு தளர்ச்சிக்கிடையிலும்) போர்க் களத்தை விட்டு நீங்கினாரல்லர்;* ***பொழிகனல்* -** *நெருப்பைச் சிந்துகின்ற;* ***பொடிக்கும் கண்ணினார்* -***கோபிக்கும் கண்களையுடையவர்களாகி;* ***சரங்களை* -** *அம்புகளை;****உருமின் ஏறு என* -** *பேரிடிகள் என்று சொல்லும்படி;* ***பொழிந்தனர்* -** *இடைவிடாது சொரிந்தார்கள்.*

*தாம் ஏறியிருந்த தேர்கள் அழிந்து விடவே பதினான்கு சேனைத் தலைவரும் தரையிலிருந்தவாறே அம்பு மழை பொழிந்தார்களென்பது.*

***2981. நூறி சரம் எலாம்***
***நுறுங்க வாளியால்***
***ஈறுசெய்து, அவர் சிலை***
***ஏழொடு ஏழையும்***
***ஆறினோடு ஆறும் ஓர்***
***இரண்டும் அம்பினால்,***
***கூறுசெய்து, அமர்த் தொழிற்***
***கொதிப்பை நீக்கினான்.***

**நூறிய சரம் எலாம் -** *அழிக்கும் இயல்புடைய (அந்த அரக்கர்களின்) அம்புகளையெல்லாம்;* **நுறுங்க -** *பொடியாகும்படி;* **வாளியால் -** *(இராமன் தன்) பாணங்களால்;* **ஈறு செய்து -** *அழித்து;***அவர் சிலை ஏழொடு ஏழையும் -** *அவர்களின் விற்கள் பதினான்கையும்;* **ஆறினொடு ஆறும் ஓர் இரண்டும் அம்பினால் -** *பதினான்கு அம்புகளால்;* **கூறு செய்து -** *துண்டுகளாக்கி;* **அமர்த் தொழிற் கொதிப்பை நீக்கினான் -** *போர்ச் செயலில் அவர்களின் உக்கிரத்தைப் போக்கினான்.*

*இராமன் பதினான்கு அரக்கர் தொடுத்து விடுத்த அம்புகளையெல்லாம் தன் அம்புகளால் அழித்துப் பதினான்கு அம்புகளால் அந்த வீரர்களின் விற்களைத் துண்டிக்கவே அன்னாரின் போரின் உக்கிரம் (வேகம்) குறைந்தது என்பது.*

***2982. வில் இழந்து, அனைவரும்***
***வெகுளி மீக்கொள,***
***கல் உயர் நெடு வரை***
***கடிதின் ஏந்தினார்,***
***ஒல்லையில் உருத்து, உயர்***
***விசும்பில் ஓங்கி நின்று,***
***எல் உயர் பொறி உக,***
***எறிதல் மேயினார்.***

**அனைவரும் -** *அந்தப் படைத் தலைவர் எல்லோரும்;* **வில் இழந்து-** *(தம்) விற்களையிழந்ததனால்;* **வெகுளி மீக்கொள -** *கோபம் மேலிட;* **கல்உயர் நெடுவரை -** *கல்லால் உயர்ந்த பெரிய மலைகளை;* **கடிதின் ஏந்தினார் -** *விரைவில் (கையிலே) எடுத்துக் கொண்டு;***ஒல்லையில் உருத்து -** *விரைவாக எழுந்து சீறி;* **உயர் விசும்பில் ஓங்கி நின்று -** *ஓங்கிய ஆகாயத்தில் உயர நின்று கொண்டு;* **எல் உயர் பொறி உக -** *கதிரவன் ஒளி போன்ற அளவில்லாத தீப் பொறிகள் சிந்த;* **எறிதல் மேயினார் -** *(அந்த மலைகளை) இராமன் மேல் வீசியெறிந்தார்கள்.*

*தம்முடைய விற்கள் துண்டிக்கப்படவே அந்த அரக்க வீரர் மலைகளையேந்தி வானத்தில் ஓங்கி நின்று எறியத் தொடங்கினர் என்பது.*

***2983. கலைகளின் பெருங் கடல்***
***கடந்த கல்வியான்***
***இலை கொள் வெம் பகழி***
***ஏழ்-இரண்டும் வாங்கினான்;***
***கொலை கொள் வெஞ் சிலையொடு***
***புருவம் கோட்டினான்;***
***மலைகளும் தலைகளும்***
***விழுந்த, மண்ணினே.***

***கலைகளின் பெருங் கடல் கடந்த -*** கலைகளாகிய பெரிய கடல்களை முற்றும் கற்றுத் தேர்ந்த; ***கல்வியான் -*** கல்வி நிரம்பிய இராமன்; ***இலை கொள் வெம் பகழி ஏழ் இரண்டும் -*** இலை வடிவத்தைக் கொண்ட கொடிய பதினான்கு அம்புகளை;***வாங்கினான் -*** எடுத்து எய்தான்; ***கொலை கொள் வெம் சிலையொடு -*** கொல்லும் தொழிலைக் கொண்ட கொடிய தனது வில்லுடன்; ***புருவம் கோட்டினான் -*** தன் புருவங்களையும் வளைத்தான்; ***மலைகளும் -*** *(அந்த அரக்கர்கள் எறிந்த)* மலைகளும்; ***தலைகளும் -*** *(அவர்களின்)* தலைகளும்;***மண்ணின் விழுந்த -*** *(துண்டாகித்)* தரையில் விழுந்தன. ***ஏ -*** ஈற்றசை.

*இராமன் கோபங்கொண்டு புருவத்தை நெரித்துப் பதினான்கு அம்புகளைப் பொழிய மலைகளும், அவற்றையெறிந்த அரக்கர்களின் தலைகளும் ஒரு சேரத் துணிபட்டுத் தரையில் விழுந்தன என்பது. புருவம் விற்போன்றதென்றும், தலைகள் மலைகள் போன்றனவென்றும் தோன்றும். கலைகளைக் கடல் என்றதற்கு ஏற்ப அறிவைப் புணையென்னாமையால் ஏகதேச உருவகவணி.*

*படைத் தலைவர்கள் மாய, திரிசிரா போர்மேல் வருதல்*

***2984. படைத் தலைத் தலைவர்கள்***
***படலும், பல் படை***
***புடைத்து, அடர்ந்து, எதிர் அழல்***
***புரையும் கண்ணினார்.***
***கிடைத்தனர், அரக்கர்கள்; கீழும்***
***மேலும் மொய்த்து***
***அடைத்தனர் திசைகளை;***
***அமரர் அஞ்சினார்.***

***படைத் தலைத் தலைவர்கள் படலும் -*** சேனையிடத்து முதன்மை பெற்ற தலைவர்கள் பதினான்கு பேரும் இவ்வாறு இறந்த அளவிலே; ***அரக்கர்கள் -*** மற்றுமுள்ள இராக்கதர்கள்; ***பல் படை புடைத்து -*** தம்முடைய பல வகை ஆயுதங்களையும் வீசிக் கொண்டு;***அடர்ந்து -*** நெருங்கி; ***அழல் புரையும் கண்ணினார் -*** நெருப்பைப் போன்ற கண்களையுடையவர்களாய்; ***எதிர் கிடைத்தனர் -*** இராமன் எதிரில்நெருங்கி; ***கீழும் மேலும் மொய்த்து -*** நிலத்திலும் ஆகாயத்திலுமாகமொய்த்துக் கொண்டு; ***திசைகளை அடைத்தனர் -*** திக்குகளை மறைத்தார்கள் *(அதனைக் கண்டு)*; ***அமரர் அஞ்சினார் -*** தேவர்கள் அச்சங் கொண்டார்கள்.

*பதினான்கு படைத் தலைவரும் இறந்திடவே வேறு அரக்கர்கள்சினத்தோடு ஆயுதங்களை வீசிக் கொண்டு எல்லாப் பக்கங்களிலும் திரண்டு நெருங்கவே, தேவர்கள் அஞ்சினர் என்பது - படைத்தலை - 'தலை' ஏழனுருபு.*

*படைத் தலைவர்களோடு வந்த வீரர்கள் யாவரும் அழிந்தனர். என்று முன் (3978) கூறினமையால் இங்கு வந்தவர் வேறு என்பதாயிற்று.*

***2985. முழங்கின பெரும் பணை,***
***மூரி மால் கரி;***
***முழங்கின வரி சிலை***
***முடுகு நாண் ஒலி;***
***முழங்கின சங்கொடு புரவி;***
***மொய்த்து உற***
***முழங்கின அரக்கர்தம்***
***முகிலின் ஆர்ப்புஅரோ.***

***மூரி மால் கரி -*** *வலிய பெரிய யானைகளும்;* ***பெரும் பணை -*** *(அப்பொழுது) பெரிய போர்ப் பறைகளைப் போல;* ***முழங்கின -****பேரொலி செய்தன;* ***வரி சிலை முடுகு நாண் ஒலி -*** *கட்டமைந்த விற்களில் விரைவாகப் பூட்டப்பட்ட நாணின் ஓசைகள்;* ***முழங்கின -****ஆரவாரித்தன;* ***சங்கொடு புரவி -*** *சங்க வாத்தியங்களும் குதிரைகளும்;* ***முழங்கின -*** *முழக்கமிட்டன;* ***அரக்கர்தம் முகிலின் ஆர்ப்பு -*** *அரக்கர்களின் மேகம் போன்ற கர்ச்சனை;* ***மொய்த்து உற -*** *மிக அடர்ந்து;* ***முழங்கின -*** *பேரொலி செய்தன;* ***அரோ -*** *ஈற்றசை.*

*சொற்பொருட் பின்வரு நிலையணி.* *111அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***2986. வெம் படை, நிருதர், வீச விண்ணிடை***
***மிடைந்த;வீரன்***
***அம்பு இடை அறுக்க, சிந்தி அற்றன***
***படும்' என்று, அஞ்சி,***
***உம்பரும் இரியல்போனார்;உலகு***
***எலாம் உலைந்து சாய்ந்த;***
***கம்பம் இல் திசையில் நின்ற களிறும்,***
***கண் இமைத்த அன்றே.***

***நிருதர் வீச -*** *அரக்கர்கள் வீசியெறிவதால்;* ***வெம்படை -****கொடிய அப் படைக் கருவிகள்;* ***விண்ணிடை மிடைந்த -*** *வானத்தில் நெருங்கின;* ***வீரன் அம்பு இடை அறுக்க -*** *இராமபிரானின் அம்புகள் இடையே புகுந்து அறுத்ததால்;* ***அற்றன -*** *துணிபட்டனவாய்;* ***சிந்திப் படும் -****சிதறி (நம்மேல் ஊறு ஏற்பட) விழக்கூடும்;* ***என்று -*** *என்று எண்ணி;****அஞ்சி -*** *அஞ்சினவர்களாய்;* ***உம்பரும் இரியல் போனார் -*** *தேவர்களும் ஓடிப் போனார்கள்;* ***உலகு எலாம் -*** *மற்ற உலகங்கள் எல்லாம்;* ***உலைந்துசாய்ந்த -*** *நிலைகெட்டு நடுங்கித் தளர்ந்தன;* ***கம்பம் இல் -****நிலைபெயராத;* ***திசையில் நின்ற களிறும் -*** *திசைகளைச் சுமந்து நின்ற திக்கு யானைகளும்;* ***கண் இமைத்த -*** *(அச்சத்தால்) கண்களை மூடிக் கொண்டன.*

*அன்று ஏ - அசைகள். அரக்கர் எறிந்த படைக்கலன்களை இராமபிரானின் அம்பு இடையே அறுத்ததால் அறுபட்ட அந்த ஆயுதங்கள் நம்மேல் படக்கூடுமென்று அஞ்சித் தேவர்களும் நிலைகெட்டோட, உலகமெல்லாம் நடுங்கித் தளர, திக்கு யானைகளும் அச்சத்தால் கண்ணிமைத்தன என்பது. தொடர்புயர்வு நவிற்சியணி.*

*கலி விருத்தம்*

***2987. அத் தலைத் தானையன்,***
***அளவு இல் ஆற்றலன்,***
***முத் தலைக் குரிசில், பொன்***
***முடியன்; முக்கணான்***
***கைத்தலைச் சூலமே***
***அனைய காட்சியான்;***
***வைத தலைப் பகழியால் மழை***
***செய் வில்லினான்.***

***அத் தலைத் தானையன் -*** *சிறந்த அந்தச் சேனையையுடைய தலைவன் (யாரென்றால்);* ***அளவு இல் ஆற்றலன் -*** *அளவற்ற வலிமையுடையவனும்;* ***பொன் முடியன் -*** *பொன்னாலாகிய கிரீடத்தையுடையவனும்;* ***வைத்தலைப் பகழியால் -*** *கூரிய நுனிகொண்ட அம்புகளால்;* ***மழை செய் வில்லினான் -*** *மழை பொழிகின்ற வில்லையுடையவனும்;* ***முக்கணான் கைத்தலை -*** *மூன்று கண்களையுடையவனான சிவபிரானின் கையிலுள்ள;* ***சூலமே அனைய காட்சியான் -*** *சூலம் போன்ற தோற்றத்தையுடையவனுமாகிய;* ***முத் தலைக் குரிசில் -*** *மூன்று தலைகளையுடைய திரிசிரா என்னும் வீரனாவான்.*

*திரிசிரா என்னும் படைத் தலைவனின் தன்மையை இப் பாடல் கூறுகிறது. மூன்று தலைகளைக் கொண்டமைக்கும். அழித்தல் தொழில் செய்யுங் கொடுமைக்கும் சிவபெருமானின் சூலம் உவமையாயிற்று.*

***2988. அன்னவன் நடுவுற,***
***'ஊழி ஆழி ஈது'***
***என்ன, வந்து, எங்கணும்***
***இரைத்த சேனையுள்,***
***தன் நிகர் வீரனும்,***
***தமியன், வில்லினன்,***
***துன் இருள் இடையது ஓர்***
***விளக்கின் தோன்றினான்.***

***அன்னவன் நடுவுற -*** *அத்தகைய திரிசிரன் என்பவன் நடுவிலேபொருந்தியிருக்க;* ***'ஊழி ஆழி ஈது' என்ன -*** *ஊழிக் காலத்துப் பெருங்கடல் இதுவென்று சொல்லும்படி;* ***எங்கணும் வந்து -****எல்லாப் பக்கங்களிலும் வந்து;* ***இரைத்த சேனையுள் -*** *ஆரவாரித்த அரக்கர் சேனையிலே;* ***தன் நிகர் வீரனும் -*** *(வேறு உவமையில்லாது) தன்னைத் தானேயொத்த வீரனான இராமனும்;* ***தமியன் வில்லினன் -****தனியே வில்லையேந்தியவனாய்; துன் இருள் இடையது - அடர்ந்த இருளின் நடுவேயுள்ள;* ***ஓர் விளக்கின் -*** *ஒரு விளக்குப் போல;****தோன்றினான் -*** *விளங்கினான்.*

*திரிசிரா நடுவிலே பொருந்திய அரக்கச் சேனைகள் தன்னைச் சூழ்ந்து நிற்க அவர்களுக்கு நடுவே இராமபிரான் இருளிடையே தோன்றும் விளக்குப் போல விளங்கினான் என்பது.*

*சேனையோடு திரிசிராவை இராமன் எதிர்த்துப் பொருதல்*

***2989. ஓங்கு ஒளி வாளினன்,***
***உருமின் ஆர்ப்பினன்,***
***வீங்கிய கவசத்தன்,***
***வெய்ய கண்ணினன்-***
***ஆங்கு-அவன் அணிக்கு எதிர்***
***அணிகள் ஆக, நேர்***
***தாங்கினன் இராமனும்,***
***சரத்தின் தானையால்.***

***ஓங்கு ஒளி வாளினன் -*** *மிக்க ஒளியையுடைய வாளையுடையவனும்;* ***உருமின் ஆர்ப்பினன் -*** *இடி போன்ற முழக்கத்தையுடையவனும்;****வீங்கிய கவசத்தன் -*** *பெரிய கவசத்தையுடையவனும்;* ***வெய்ய கண்ணினன் -*** *கொடிய கண்களையுடையவனுமான;* ***ஆங்கு அவன் -*** *அங்கே வந்த திரிசிரா என்னும் அரக்கனுடைய;* ***அணிக்கு -*** *படை வகுப்புகளுக்கு;* ***எதிர் அணிகள் ஆக -*** *எதிர்ப்படை வகுப்புக்களாக;* ***இராமனும் -*** *இராமபிரானும்;* ***சரத்தின் தானையால் -*** *அம்புகளாகிய சேனையால்;* ***நேர் தாங்கினன் -*** *எதிரிட்டு நின்றான்.*

*நான்கு படைகளமைந்த திரிசிரனது படை வகுப்புக்கு எதிரில் இராமன் அம்புகளைக் கொண்டு படை வகுத்திட்டான் என்பது.*

*அதாவது கரனது சேனையில் எத்துணை யானை தேர் குதிரை காலாள்களுண்டோ அத்துணை யம்புகளை இராமன் அவற்றின் மேல் ஒழுங்காக எதிர் தொடுத்தான் என்பது இதன் கருத்தாகும். அரக்கனது பலவகைச் சேனையைத் தடுக்கத் தன்னிடம் போதிய படையில்லாக்குறையை இராமபிரான் தன் அம்புகளால் நிரப்பித் தடுத்து எதிர்த்தான் என்பது நயம்.*

***2990. தாள் இடை அற்றன;***
***தலையும் அற்றன;***
***தோள் இடை அற்றன;***
***தொடையும் அற்றன;***
***வாள் இடை அற்றன;***
***மழுவும் அற்றன;***
***கோள் இடை அற்றன;***
***குடையும் அற்றன;***

***தாள் இடை அற்றன -*** *(அவ்வாறு இராமன் ஒழுங்குபட எதிர்தொடுத்த அம்புகளால்) அரக்கர்களின் கால்கள் நடுவே அறுபட்டு வீழ்ந்தன;* ***தலையும் அற்றன -*** *(அவ்வரக்கர்களின்) தலைகளும் அறுபட்டன;* **தோள் இடை அற்றன -** தோள்களும் துண்டிக்கப்பட்டன; **தொடையும் அற்றன -** தொடைகளும் துண்டுபட்டன; **வாள் இடைஅற்றன -** வாள்களும் பல முறிந்தன; **மழுவும் அற்றன -** மழுப்படைகளும் முறிந்து விழுந்தன; **கோள் இடை அற்றன -** *(அவர்களின்)* வலிமையும் போரிலே சிதைந்தது; **குடையும் அற்றன -** குடைகளும் அழிந்தன   இராமனின் அம்புகளால் அரக்கப் படைகளின் கால்கள் முதலியன அறுபட்டன என்பது. *11.*

***2991   கொடியொடு கொடுஞ்சு இற,***
***புரவிக் கூட்டு அற,***
***படியொடு படிந்தன, பருத்த***
***தேர்; பணை***
***நெடிய வன் கட கரி***
***புரண்ட, நெற்றியின்***
***இடியொடு முறிந்து வீழ்***
***சிகரம் என்னவே.***

**கொடியொடு -** *(தேர்களின் மேல் பறந்த)* கொடிகளும்;**கொடுஞ்சு இற -** தேர் உறுப்பாகிய கொடிஞ்சி முறியவும்; **புரவிக் கூட்டு அற -**குதிரைகளின் தொகுதிகள் துணிபட்டழியவும்; **பருத்த தேர் -** பெரியதேர்கள்; **படியொடு படிந்தன -** நிலத்திலே சாய்ந்தன; **பணை நெடிய வன் கடகரி -** பருத்து உயர்ந்த வலிய மத யானைகள்; **நெற்றியின் இடியொடு -** தன் உச்சியில் விழுந்த இடியால்; **முறிந்து வீழ்சிகரம் என்ன -** இடிந்து விழுகின்ற மலைச் சிகரங்கள் போல; **புரண்ட -** கீழே விழுந்து புரண்டன; **ஏ -** ஈற்றசை.

கொடிஞ்சி - தேர்த் தட்டின் முன் கைக்கு உதவியாகத் தாமரை மொட்டு வடிவில் அமைத்துத் தொங்கவிட்டிருக்கும் ஓர் அழகிய உறுப்பு : கொடுஞ்சு என இங்கே குறிக்கப்பட்டது.

***2992.  'அற்றன சிரம்' என***
***அறிதல் தேற்றலர்,***
***கொற்ற வெஞ் சிலை சரம்***
***கோத்து வாங்குவார்***
***இற்றவர்; இறாதவர்***
***எழுந்து, விண்ணினைப்***
***பற்றின மழை எனப்***
***படை வழங்குவார்.***

**இற்றவர் -** *தலையறுபட்ட அரக்கர்கள்;* **சிரம் அற்றன என -***(தம்) தலைகள் அறுபட்டனவென்று;* **அறிதல் தேற்றலர் -***அறியாதவர்களாய்;* **கொற்ற வெம் சிலை சரம் கோத்து வாங்குவார் -** வெற்றி தரும் கொடிய வில்லிலிருந்து அம்புகளைப்

*பூட்டியெய்வார்கள்;* ***இறாதவர் -*** *தலையறுபடாதவர்கள்;* ***எழுந்து -*** *எழுந்து;* ***விண்ணினைப் பற்றின மழை என -*** *ஆகாயத்தைக் கவிந்த மழை போல;* ***படை வழங்குவார் -****போர்க் கருவிகளை வீசுவார்கள்.*

*தலை அற்றமை தெரியாத பேராவேசம் விளங்குகிறது. இச் செய்யுளில் தலையறுபட்டவர். தலையறுபடாதவர் ஆகிய இரு வகை யரக்கர்களின் போர்ச் செயல்கள் குறிக்கப் பெறுகின்றன. ஒப்பு : 'அடுசிலைப் பகழி தொடுத்து விடப் புகுமளவினில் அயலெதிர் விட்டவர் வெட்டின உடல் சில இரு துணிபட்டன பட்ட பின் ஒரு துணி கருதும் இலக்கை யழிக்குமே' (க. பரணி 421)*

***2993. கேடகத் தடக் கைய,***
***கிரியின் தோற்றத்த,***
***ஆடகக் கவசத்த,***
***கவந்தம் ஆடுவ-***
***பாடகத்து அரம்பையர்***
***மருள, பல்வித***
***நாடகத் தொழிலினை***
***நடிப்ப ஒத்தவே.***

***கேடகத் தடக் கைய -*** *கேடகம் என்னும் படைக் கருவியையேந்திய பெரிய கையையுடையனவும்;* ***கிரியின் தோற்றத்த -*** *மலை போன்ற வடிவையுடையனவும்;* ***ஆடகக் கவசத்த -*** *பொன்னாலாகிய கவசங்களையுடையனவுமாகிய;* ***கவந்தம் ஆடுவ -*** *தலையற்ற உடற் குறைகள் துடித்துத் துள்ளுவன;* ***பாடகத்து அரம்பையர் மருள -*** *பாடகமாகிய காலணியையணிந்த தேவமாதர்கள் மயங்கும்படி;****பல்வித நாடகத் தொழிலினை -*** *பல வகைப்பட்ட நடனத் தொழில்களை;****நடிப்ப ஒத்த -*** *நடித்துக் காட்டுவன போன்றன.*

*தலை அறுபட்ட வீரர்களின் உடற்குறைகள், ஆடல் வல்ல தேவமாதர்களும் கண்டு வியக்கும்படி, பலவாறு விசித்திரமாகக் கூத்தாடின என்பது.*

*அரம்பையர் என்பது இங்கே பொதுவாகத் தேவ மகளிரைக் குறிக்கும். பாடகம் - ஒரு வகைக் காலணி.*

***2994. கவரி வெண் குடை எனும்***
***நுரைய; கைம்மலைச்***
***சுவரன; கவந்தம் ஆழ்***
***சுழிய; தண் துறை***
***பவர் இனப்படு மணி***
***குவிக்கும் பண்ணைய;***
***உவரியைப் புதுக்கின-***
***உதிர-ஆறுஅரோ.***

***உதிர ஆறு*** - *(போர்க் களத்தில் பெருகியோடிய) இரத்த ஆறுகள்;* ***கவரி வெண்குடை*** - *வெண் சாமரங்களும் வெண் குடைகளும்;* ***எனும் நுரைய*** - *என்கின்ற நுரைகளைக் கொண்டன;* ***கைம் மலைச் சுவரன*** - *இறந்த யானைகளாகிய பக்கச் சுவர்களையுடையனவாயின;* ***கவந்தம் ஆழ் சுழிய*** - *குறையுடல்கள் ஆழத்தக்க சுழிகளையுடையன;* ***தண் துறை*** - *குளிர்ந்த நீர்த் துறைகளிலே;* ***பவர் இனப் படு மணி குவிக்கும்*** - *நெருங்கியபலவகைப்பட்ட இரத்தினங்களைக் கொண்டு வந்து குவிக்கின்ற;* ***பண்ணைய-*** *சேணங்களாகிய படகுகளையுடையவையான;* ***உவரியைப் புதுக்கின*** - *கடலைப் புதிய தாக்கின.*

*போரில் அறுபட்ட படைகளின் உதிரப் பெருக்கின் வருணனை கூறியது இது. 'உவரியைப் புதுக்கின' என்பதன் விளக்கம் வருமாறு :ஆற்றின் புது வெள்ளம் வேகமாகச் சென்று கடலிலே விழுந்து நெடுந்தூரம் கடலின் நிறத்தை வேறுபடுத்திக் கரிய கடலைச் செந்நிறமாக்கின.*

*கைம்மலை : யானை சுவர் இங்கே கரை எனும் பொருளினது. உவமேயமாகிய சேணமும் உவமானமாகிய படகும் என இரு பொருளையும் 'பண்ணை' என்ற ஒரு சொல்லே தந்துள்ளது - சிலேடையுருவகவணி.*

*சேணங்களில் பல வகையிரத்தினங்கள் பதிப்பதும் படகுகளில் பல வகை இரத்தினங்களைக் கொண்டு வந்து சேர்த்தலும், கருதிப் பண்ணைக்குப் 'பவரினப் படுபணி குவிக்கும்' என்ற அடைமொழி கொடுத்தார், அரோ - ஈற்றசை.*

*நதிக்கு அமையக் கூடிய நுரை, சுவர், சுழி பண்ணை முதலியனஇரத்த ஆற்றுக்கும்' உள்ளனவாயின.*

***2995. சண்ட வெங் கடுங் கணை***
***தடிய, தாம், சில***
***திண் திறல் வளை எயிற்று***
***அரக்கர், தேவர் ஆய்,***
***வண்டு உழல் புரி***
***குழல் மடந்தைமாரொடும்***
***கண்டனர், தம் உடல்-***
***கவந்த நாடகம்.***

***சண்ட வெங் கடுங்கணை*** - *வலிய மிகக் கொடிய இராம பாணங்கள்;* ***தடிய*** - *தாக்கிக் கொன்றமையால்;* ***திண் திறல் வளை எயிற்று சில அரக்கர்*** - *மிக்க வலிமையையும் வளைவான கோரைப் பற்களையுமுடைய சில அரக்கர்கள்;* ***தேவர் ஆய்*** - *(வீர சொர்க்கம்பெறும்) தேவர்களாகி;* ***வண்டு உழல் புரிகுழல் மடந்தைமாரொடும்*** - *வண்டுகள் சூழ்ந்து மொய்க்கத்தக்க பின்னிய கூந்தலையுடைய தெய்வ மகளிருடனே (கூடி);* ***தம் உடல் கவந்த நாடகம் கண்டனர்*** - *தங்களுடைய உடற்குறைகளின் கூத்தாட்டத்தைப் பார்த்தார்கள்.*

*தாம் - அசை. அரக்கரது உடல் இராமனது அம்புகளால் சின்னபின்னப்பட்டுத் துடித்துத்துள்ள உயிர் உடனே தேவரின் உடம்பையுற்று அரம்பையரோடு கூடி அந்த உடம்புகளின் ஆட்டத்தை வியந்து கண்டன என்பது. இராமபாணம் பட்டு இறந்தோர் விரைவில் சொர்க்கமெய்தித் தெய்வ மகளிரோடு மகிழ்ந்து வாழ்வார்கள் என்பது இதனால் விளங்கும். 12*

***2996 ஆய் வளை மகளிரொடு***
***அமரர் ஈட்டத்தர்,-***
***தூய வெங் கடுங் கணை துணித்த***
***தங்கள் தோள்,***
***பேய் ஒருதலை கொள,***
***பிணங்கி, வாய்விடா***
***நாய் ஒருதலை கொள-***
***நகையுற்றார், சிலர்.***

***சிலர் -*** *சில அரக்கர்கள்;* ***அமரர் ஈட்டத்தர் -*** *போரில் இறந்து தேவர் கூட்டத்தில் சேர்ந்தவர்களாய்;* ***ஆய் வளை மகளிரொடு -****சிறந்த வளையல்களையுடைய தேவமாதர்களுடன்;* ***தூய வெங் கடுங் கணை துணித்த -*** *தூய்மையான மிகக் கொடிய இராம பாணங்களால் துண்டிக்கப்பட்ட;* ***தங்கள் தோள் -*** *தம்முடைய தோள்களை;* ***பேய் ஒருதலை கொள -*** *ஒரு பக்கம் பேய்கள் பற்றிக் கொள்ள;* ***பிணங்கி -*** *(அவற்றோடு) மாறுபட்டு;* ***வாய்விடா நாய் ஒரு தலை கொள -****வாயால் பற்றியதை விடாத நாய்கள் மற்றொரு பக்கத்திலே கவ்விக் கொள்ளக் (கண்டு);* ***நகையுற்றார் -*** *வேடிக்கையாகப் பார்த்துச் சிரித்தார்கள்.*

*ஆய்வளை - வளைகள் பலவற்றுள் தெரிந்தெடுத்த வளை; ஆய்தல் - தேர்ந்தெடுத்தல்.*

***2997. தெரி கணை மூழ்கலின்***
***திறந்த மார்பினர்,***
***இரு வினை கடந்து போய்***
***உம்பர் எய்தினார்,***
***'நிருதர்தம் பெரும் படை***
***நெடிது; நின்றவன்***
***ஒருவன்' என்று, உள்ளத்தின்***
***உலைவுற்றார், சிலர்.***

***தெரி கணை மூழ்கலின் -*** *இராமனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அம்புகள் தைத்துப் பாய்தலால்;* ***திறந்த மார்பினர் சிலர் -****பிளக்கப்பட்ட மார்புகளையுடைய சில அரக்கர்கள்;* ***இருவினை கடந்து போய் -*** *தம்முடைய நல்வினை தீவினை மாய;* ***உம்பர் எய்தினார் -****மேலுலகம் அடைந்த சில அரக்கர்கள்;* ***'நிருதர் தம் பெரும்படை நெடிது -*** *அரக்கர்களுடைய பெரிய சேனையோ மிக நீண்டது;* ***நின்றவன் -*** *(இவர்களை எதிர்த்து)*

*நின்ற இராமபிரானோ;* ***ஒருவன்' என்று*** *- துணையற்றஒருவனே' என்று கருதி;*
***உள்ளத்தின் உலைவு உற்றார்*** *- மனத்தில் அச்சங் கொண்டார்கள்.*

*அரோ : ஈற்றசை.*

***2998. கைக் களிறு அன்னவன்***
***பகழி, கண்டகர்***
***மெய்க் குலம் வேரொடும்***
***துணித்தி வீழ்த்தின-***
***மைக் கரு மனத்து ஒரு வஞ்சன்,***
***மாண்பு இலன்,***
***பொய்க் கரி கூறிய கொடுஞ்***
***சொல் போலவே.***

***கைக் களிறு அன்னவன் பகழி*** *- துதிக்கையையுடைய ஆண் யானை போன்ற இராமபிரானின் அம்புகள்;* ***கண்டகர் மெய்க்குலம்*** *- மிகக் கொடிய அரக்கர்களின் உடற் கூட்டங்களை;* ***வேரொடும் துணித்திவீழ்த்தின*** *- வேரோடு அறுத்துத் தள்ளிய காட்சிகள்;* ***மாண்பு இலன்*** *- உயர்குணம் இல்லாதவனாகிய;* ***மைக்கரு மனத்து ஒரு வஞ்சன்*** *-மை போன்று இருண்ட மனத்தையுடைய ஒரு வஞ்சகன்;* ***பொய்க் கரி கூறிய*** *- நீதிமன்றத்தில் பொய்ச் சாட்சி சொன்ன;* ***கொடுஞ் சொல் போல*** *-கொடிய சொற்களையொத்தன.*

*பொய்ச் சாட்சி வார்த்தைகள் சொன்னவர்களது குலத்தை வேரோடு அறுத்து அழிப்பது போல, இராமபாணங்கள் அரக்கர் குலத்தை வேரோடு அறுத்துத் தள்ளின என்பது. பொய்ச் சாட்சியின் சொற்கள் வழக்கு விசாரணையில் பயனற்று வீழ்வது போல் அரக்கர் உடல்கள் சீவனற்று வீழ்ந்தன என்றும் விளக்கலாம். வலிமையிலும், உயர் தோற்றத்திலும், நடையிலும் இராமனுக்கு யானை உவமையாவது மட்டுமல்லாமல் யானைத் துதிக்கை இராமனின் கைகளுக்குத் திரண்டுருண்டு நீண்ட வடிவில்ஒப்புமையாதலும் பற்றிக் 'கைக் களிறு அன்னவன்' என யானைக்கும் அடைமொழி தந்து கூறினார். கண்டகர் - முள்ளைப் போலக் கொடியவர். மெய்க் குலம் - உடற் கூட்டம்.*

***2999. அஞ்சிறை அறுபதம்***
***அடைந்த கீடத்தைத்***
***தஞ்சு எனத் தன் மயம்***
***ஆக்கும் தன்மைபோல்,***
***வஞ்சகத்து அரக்கரை வளைத்து,***
***வள்ளல்தான்,***
***செஞ் சரத் தூய்மையால்,***
***தேவர் ஆக்கினான்.***

***அம் சிறை அறுபதம் -*** *அழகான இறகுகளையுடைய குளவி;* ***தஞ்சு என அடைந்த கீடத்தை -*** *அடைக்கலமாகத் தன்னிடம் சேர்ந்த புழுக்களை;* ***தன் மயம் ஆக்கும் தன்மை போல -*** *தன் வடிவமாகச்செய்யும் தன்மை போல;* ***வள்ளல் தான் -*** *அருள் வள்ளலாகிய இராமன் ஆனவன்;* ***வஞ்சகத்து அரக்கரை வளைத்து -*** *வஞ்சனை நிரம்பிய அரக்கர்களை வளைத்துக் கொண்டு;* ***செந் சரத் தூய்மையால் -*** *தன்னுடைய சிறந்த அம்புகளின் தூய்மையால்;* ***தேவர் ஆக்கினான் -*** *(அவர்களைத்) தேவராகுமாறு செய்தான்.*

*குளவி புழுக்களைப் பிடித்துக் கொட்டித் தன் வடிவமாக்குதல் போலத் தேவனான இராமன் அரக்கர்களையழித்துத் தேவர்களாக்கினான் என்பது. குளவி புழுக்களைக் கொண்டு சென்று கூட்டில் வைத்து அவற்றின் தலையில் அடிக்கடி கொட்ட அவை குளவியையே நினைந்து கொண்டிருப்பதால் அதன் வடிவமாக மாறிச் சிறகு முளைக்கப் பெற்றுப் பறந்து செல்லும் தன்மையையடையுமென்பர்.*

***3000. 'வலம் கொள் போர், மானிடன்***
***வலிந்து கொன்றமை,***
***அலங்கல் வேல் இராவணற்கு***
***அறிவிப்பாம்' என,***
***சலம்கொள் போர் அரக்கர்தம்***
***உருக்கள் தாங்கின,***
***இலங்கையின் உற்ற, அக்***
***குருதி ஆறுஅரோ.***

***'வலம் கொள் -*** *வலிமை கொண்ட;* ***போர் -*** *போரில்;* ***மானிடன் வலிந்து கொன்றமை -*** *சிறந்த ஒரு மனிதனான இராமன் அரக்கர் பலரை வலிமையாற் கொன்றதை;* ***அலங்கல் வேல் இராவணற்கு -****மாலையணிந்த வேல் ஏந்திய இராவணனுக்கு;* ***அறிவிப்பாம்' என -*** *சென்று தெரிவிப்போம் என்று;* ***அக்குருதி ஆறு -*** *அங்குள்ள அந்த இரத்த நதி;* ***சலம் கொள் போர் -*** *மாயப் போர் செய்த;* ***அரக்கர் தம் உருக்கள் -*** *அரக்கரின் உடல்களை;* ***தாங்கின -*** *சுமந்து கொண்டு போய்;* ***இலங்கையின் உற்ற -*** *(அவற்றை) இலங்கையில் சேர்த்தது.* ***அரோ -*** *ஈற்றசை.*

*போரில் இறந்துவிட்ட அரக்கர்களின் உடல்களைச் சுமந்த இரத்தப் பெருக்கு. கடலிலே கலந்து அந்த உடல்களை இலங்கை நகருக்குக்கொண்டு சேர்த்தது என்பது.*

*போரில் அரக்கர்களுக்கு உண்டான அழிவை இராவணனுக்குத் தெரிவித்ததோடு இதனால் இராமனது பேராற்றலையும், அவனையெதிர்த்தால் இராவணனுக்கும் இலங்கைக்கும் இதே கேடு சூழும் என்பதையும் அந்த இரத்தப் பெருக்கு அறிவித்தது என்பது புலப்படும்.*

*'வலங்கொள் போர் மானிடன்' என்று சொற்கூட்டி, மானிடனான இராமனுக்கே வெற்றி என்பதைக் குறிப்பால் உணர்த்தியதாக நயம் காணலுமாம்.*
*126திரிசிரா இரு சிரங்களை இழத்தல்*

***3001. சூழ்ந்த தார் நெடும் படை,***
***பகழி சுற்றுறப்***
***போழ்ந்து உயிர் குடித்தலின்,***
***புரளப் பொங்கினான்,***
***தாழ்ந்திலன்; முத் தலைத்***
***தலைவன், சோரியின்***
***ஆழ்ந்த தேர், அம்பரத்து***
***ஓட்டி ஆர்க்கின்றான்.***

***சூழ்ந்த தார் நெடும்படை -*** *தன்னைச் சூழ்ந்துள்ள அணிவகுத்துநிற்கும் பெரிய அரக்கச் சேனைகளை;* ***பகழி -*** *இராமபாணங்கள்;**சுற்றுறப் போழ்ந்து -*** *சுற்றிலும் வளைத்துக் கொண்டு பிளந்து;* ***உயிர் குடித்தலின் -*** *(அவ் அரக்கர்களின்) உயிர்களைப் பருகியதால்;* ***புரள -*** *(அவர்கள்) கீழே விழுந்து புரள;* ***முத்தலைத் தலைவன் -*** *(அதைக் கண்டு) திரிசிரா என்னும் படைத்தலைவன்;* ***பொங்கினான் -*** *கோபங் கொண்டவனாகி;**தாழ்ந்திலன் -*** *தாமதிக்காது;* ***சோரியின் ஆழ்ந்த தேர் -*** *இரத்த வெள்ளத்தில் அழுந்தியிருந்த தனது தேரை;* ***அம்பரத்து ஓட்டி -*** *ஆகாயத்திலே செலுத்தி;* ***ஆர்க்கின்றான் -*** *முழங்குகின்றான்.*

*இரத்தச் சேற்றில் அழுந்தியிருந்ததால் தரை மீது செல்லஇடமில்லாமல் திரிசிரா என்பவன் வான் வழியே தன் தேரைச்செலுத்தினான், என்பது. அம்பரம் - ஆகாயம்.*

***3002. ஊன்றிய தேரினன்***
***உருமின் வெங் கணை,***
***வான் தொடர் மழை என,***
***வாய்மை யாவர்க்கும்***
***சான்று என நின்ற அத்***
***தரும மன்னவன்***
***தோன்றல்தன் திரு***
***உரு மறையத் தூவினான்.***

***ஊன்றிய தேரினன் -*** *(இராமனெதிரில்) நிலைநிறுத்திய தேரை யுடையவனான அந்தத் திரிசிரா;* ***வாய்மை -*** *(தவறாத) சத்தியத்தில்;**யாவர்க்கும் சான்று என -*** *எல்லோர்க்கும் ஓர் எடுத்துக்காட்டாக;**நின்ற -*** *விளங்கிய;* ***அத் தரும மன்னவன் -*** *அற நெறிவழுவாத அந்தத் தசரத மன்னவனுக்கு;* ***தோன்றல்தன் -*** *மைந்தனான இராமபிரானின்;* ***திரு உரு மறைய -*** *அழகிய திருமேனி மறையும்படி;* ***உருமின் வெம் கணை -****இடிபோன்ற கொடிய அம்புகளை;* ***வான் தொடர் மழை என -****வானத்திலிருந்து இடைவிடாது பெய்யும் மழை போல;* ***தூவினான் -*** *மிகுதியாகச் சொரிந்தான்.*

*தசரதன் சம்பராசுரப் போரில் கைகேயிக்கு இரண்டு வரம் தருவதாக வாக்குறுதியளித்தான்; அது தவறாதவாறு கைகேயியின் கொள்கைக்கு மாறு சொல்லாமல் இராமனைப் பிரிந்தான்; அந்தப் புத்திர சோகத்தால் உயிர் நீத்தான். அதனால் தசரதன் சத்தியம் தவறாமைக்கு யாவரும் போற்றும்*

*எடுத்துக்காட்டாயினான். ஆதலால் 'வாய்மை யாவர்க்கும் சான்றென நின்ற அத் தரும மன்னவன்' என்றார்.*

*தேரில் நின்ற திரிசிரா மேகத்திற்கும், அவன் செலுத்திய அம்புகள் மழைக்கும் உவமையாம்.*

***3003. தூவிய சரம் எலாம் துணிய,***
***வெங் கணை***
***ஏவினன் இராமனும்;***
***ஏவி, ஏழ்-இரு***
***பூ இயல் வாளியால், பொலம்***
***கொள் தேர் அழித்து,***
***ஆவி, வெம் பாகனை,***
***அழித்து மாற்றினான்.***

***தூவிய சரம் எலாம் -*** *(அந்தத் திரிசிரா) சொரிந்த அம்புகளெல்லாம்;* ***துணிய -*** *துண்டுபட்டு அழியுமாறு;* ***இராமனும் -*** *இராமபிரானும்;* ***வெங்கணை ஏவினன் -*** *கொடிய அம்புகளைத் தொடுத்தான்;* ***ஏவி -*** *அவ்வாறு தொடுத்து;* ***பூ இயல் ஏழ் இரு வாளியால் -*** *பொலிவுடைய பதினான்கு பாணங்களால்;* ***பொலம்கொள் தேர் அழித்து -*** *பொன் மயமான அவன் தேரை நாசப்படுத்தி;* ***வெம் பாகனை -*** *கொடிய அவனுடைய தேர்ச் சாரதியையும்;* ***ஆவி அழித்து மாற்றினான் -*** *உயிரழித்து அப் போர் நிலையை மாறுபடச் செய்தான்.*

*இராமன், தன்னை மறையத் தூவிய அம்புகளைத் துண்டித்துப் பதினான்கு அம்புகளை ஏவித் திரிசிராவின் தேரையழித்துத் தேர்ப் பாகனையும் ஒழித்தான் என்பது.*

*பூ இயல் வாளி - பொலிவு பொருந்திய அம்பு.*

***3004. அன்றியும், அக் கணத்து,***
***அமரர் ஆர்த்து எழ,***
***பொன் தெரி வடிம்புடைப்***
***பொரு இல் வாளியால்,***
***வன் தொழில் தீயவன்***
***மகுட மாத் தலை***
***ஒன்று ஒழித்து, இரண்டையும்***
***உருட்டினான் அரோ.***

***அன்றியும் -*** *அவையல்லாமலும்;* ***அக்கணத்து -*** *அதே நேரத்தில்;* ***அமரர் ஆர்த்து எழ -*** *தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரஞ் செய்துகொண்டாடும்படி;* ***பொன் தெரி வடிம்பு உடை -*** *பொன் மயமாய் விளங்கும் கூரிய நுனியுடைய;* ***பொரு இல் வாளியால் -*** *ஒப்பற்ற அம்புகளால்;* ***வன் தொழில் தீயவன் -*** *கொடுந் தொழில்களையுடைய*

*தீயவனான அத் திரிசிராவின்;* ***மகுட மாத் தலை -*** *பொன் முடியணிந்த மூன்று பெரிய தலைகளுள்;* ***ஒன்று ஒழிந்து இரண்டையும் -****ஒன்றை மட்டும் விட்டுவிட்டு மற்றைய இரண்டு தலைகளையும்;* ***உருட்டினான் -*** *(துணிக்கப்பட்டுக்) கீழே விழுந்து உருளச் செய்தான்.*

*இராமன் தன் ஒப்பற்ற பாணத்தால் அந்தத் திரிசிராவின் மூன்றுதலைகளில் இரண்டை உருளச் செய்தான் என்பது.*

*திரிசிரா ஒரு தலையுடன் போர்செய்தல்*

***3005. தேர் அழிந்து, அவ் வழி,***
***திரிசிரா எனும்***
***பேர் அழிந்ததனினும்,***
***மறம் பிழைத்திலன்;***
***வார் அழிந்து உமிழ்***
***சிலை, வான நாட்டுழிக்***
***கார் இழிந்தாலென,***
***கணை வழங்கினான்.***

***அவ்வழி -*** *அந்தப் போர்க் களத்தில்;* ***தேர் அழிந்து -*** *தனது தேர் அழியப் பெற்று;* ***திரிசிரா எனும் பேர் அழிந்ததனினும் -*** *திரிசிரன் என்ற தன் காரணப் பெயர் அழிந்ததனாலும்;* ***மறம் பிழைத்திலன் -*** *வீரம் நீங்காதவனாய்;* ***வார் அழிந்து உமிழ் சிலை -*** *(அவ்வரக்கன்) நீளம்குறைந்து (வளைந்து) அம்புகளை வெளியிடும் தன்மையுள்ள (தன்) வில்லிலிருந்து;* ***வான நாட்டுழி -*** *ஆகாயத்திலிருந்து;* ***கார் இழிந்தாலென -*** *கூரிய மேகங்கள் பொழிந்தது போல;* ***கணை வழங்கினான் -*** *அம்பு மழை பொழிந்தான்.*

*தன் தேரும் மூன்று தலைகளுள் இரண்டு தலைகளும் அழிந்துங்கூட அஞ்சாமல் வீரத்தோடு வானத்தில் நின்று அம்பு சொரிந்தான் திரிசிரன் என்பது 'திரிசிராவெனும் பேர் அழிந்து' : மூன்று தலைகளைக் கொண்டமையால் அமைந்த காரணப் பெயர் பொருந்தாமல் போன நிலையைக் குறித்தது.*

***3006. ஏற்றிய நுதலினன்***
***இருண்ட கார் மழை***
***தோற்றிய வில்லொடும்***
***தொடர, மீமிசைக்***
***காற்று இடை அழித்தென,***
***கார் முகத்தையும்***
***மாற்ற அரும்பகழியால்,***
***அறுத்து மாற்றினான்.***

***ஏற்றிய நுதலினன் -*** *(கோபத்தால்) நெறித்து நெற்றியின் மேல் ஏற்றிய புருவத்தையுடைய இராமபிரான்;* ***இருண்ட கார் மழை தோற்றிய வில்லொடும் -*** *இருண்ட கார்காலத்து மேகம் மழையை உண்டாக்குகின்றது போல விளங்கிய தன் வில்லுடன்;* ***தொடர -*** *விடாது நெருங்கிப் போர் செய்ய;* ***மீ மிசைக் காற்று இடை அழித்தென -*** *வானத்தின் மேல் அடிக்கின்ற காற்று (மேகத்தை) இடையிலே புகுந்து சிதறியழித்தது போல (அழியுமாறு);* ***கார்முகத்தையும் -*** *திரிசிரனது வில்லையும்;* ***மாற்ற அருபகழியால் அறுத்து மாற்றினான் -*** *யாராலும் விலக்க இயலாத தன் பாணங்களால் வெட்டி யெறிந்தான்.*

*பின்னும் திரிசிரா தொடர்ந்து போர் செய்ய, இராமபிரான் அவனது வில்லையறுத்தெறிந்தான் என்பது. ஏற்றின நுதல் : நெற்றி நுதல் மேல் ஏறுதல் வீரத்தில் தோன்றும் மெய்ப்பாடுகளில் ஒன்று. முந்தின பாடலில் 'திரிசிரா' 'கார் இழிந்தாலெனக் கணைகள் சிந்தினான்' என்று கூறி இச் செய்யுளில் இராமபிரான், 'கார் மழை தோற்றிய வில்லொடும் தொடர்ந்தான்' என்று இரண்டிடத்தும் ஒரே உவமையையே அமைத்தது நயம். சரங்களுக்கு மழையும், பகழிக்குக் காற்றும் உவமைகளாம். 'ஏற்றிய நுதலினன்' என்ற தொடரைத் திரிசிரனுக்கு ஆக்கி உரை செய்வாரும் உளர்.*

*கலிநிலைத் துறை*

***3007. வில் இழந்தனன் என்னினும்,***
***விழித்த வாள் முகத்தின்***
***எல் இழந்திலன்; இழந்திலன்***
***வெங் கதம்; இடிக்கும்***
***சொல் இழந்திலன்; தோள்***
***வலி இழந்திலன்; சொரியும்***
***கல் இழந்திலன்; இழந்திலன்***
***கறங்கு எனத் திரிதல்.***

***வில் இழந்தனன் என்னினும் -*** *(அத் திரிசிரன்) வில்லையிழந்து விட்டானென்றாலும்;* ***விழித்த வாள் முகத்தின் எல் இழந்திலன் -*** *உறுத்துப் பார்க்கின்ற ஒளிமிக்க தனது முகத்தின் ஒளியை இழந்துவிடவில்லை;* ***வெம் கதம் இழந்திலன் -*** *கொடிய கோபத்தைஇழந்தானில்லை;* ***இடிக்கும் சொல் இழந்திலன் -*** *இடி முழக்கம் போலப் பேசும் வீர வார்த்தைகளைஇழந்தானில்லை;* ***தோள் வலி இழந்திலன் -*** *தோள்களின் வலிமையையும் இழந்தானில்லை;* ***சொரியும் கல் இழந்திலன் -*** *(இராமன்மேல்) பொழியும் கற்களை இழந்தானில்லை;* ***கறங்கு எனத் திரிதல் இழந்திலன் -*** *காற்றாடி போலச் சுழன்று திரிவதையும் விட்டுவிட்டானில்லை.*

*வில் ஒழிந்த பின்பும் அத் திரிசிரன் அச்சமின்றி வீரமொழிகளைப் பேசிக் கொண்டு, தான் ஒருவனே எல்லாப் பக்கமும் சுற்றி வந்து தோள் வலிமையால் கற்களையெடுத்து இராமன் மேல் சொரிந்தான் என்பது. கறங்கு : காற்றாடி. அவன் முகத்தில் ஒளி இழவாமையையும், மனத்தில் துணிவு இழவாமையையும் அறியக் கிடத்தலை விளக்குவார் 'முகத்தின் எல்இழந்திலன்' என்றார். எல் - விளக்கம், ஒளி.*

***3008. ஆள் இரண்டு-நூறு உள***
***என, அந்தரத்து ஒருவன்***
***மூள் இரும் பெரு மாய***
***வெஞ் செரு முயல்வானை,***
***தாள் இரண்டையும் இரண்டு***
***வெங் கணைகளால் தடிந்து,***
***தோள் இரண்டையும் இரண்டு***
***வெங் கணைகளால் துணித்தான்.***

***அந்தரத்து*** - *ஆகாயத்திலே;* ***ஒருவன்*** - *தான் தனியொருவனாகநின்று கொண்டு;* ***இரண்டு நூறு ஆள் உள என*** - *இருநூறு வீரர்கள் உள்ளார்கள் என்று தோன்றும்படி;* ***மூள் இரும்பெரு மாய வெஞ் செரு முயல்வானை*** - *தொடங்கிய மிகப் பெரிய மாயம் நிறைந்த கொடியபோரைச் செய்கின்ற திரிசிரனை;* ***தாள் இரண்டையும்*** *-(இராமபிரான்) இரண்டு கால்களையும்;* ***இரண்டு வெங்கணைகளால் தடிந்து*** *-கொடிய இரண்டு பாணங்களால் துண்டித்து;* ***தோள் இரண்டையும்*** *-இரண்டு தோள்களையும்;* ***இரண்டு வெங்கணைகளால் துணித்தான்*** *-கொடிய இரண்டு அம்புகளால் துண்டித்தான்.*

*தான் ஒருவன் போர் செய்தலே இருநூறு பேர் போர் செய்வது போலத் தோன்றும்படி பெரு மாயையால் கடும் போர் செய்த திரிசிரன் என்னும் அரக்கனை, இராமன் தன் பாணங்களால் மாயையையொழித்துத் தாள்களையும் தோள்களையும் துணித்தான் என்பது.*

*செரு என்னும் ஒரு சொல்லுக்கு மூள், இரும், பெரு, மாய, வெம் என ஐந்து அடைமொழிகள் தந்து மாயப் போர் செய்த திரிசிரன் மறம் புலப்படுத்தினார் கம்பர். ஆள் - வீரன். இரும் - பெரிய.*

*திரிசிரா மடியக் கண்ட அரக்கர்கள் சிதறியோடுதல்*

***3009. அற்ற தாளொடு தோளிலன்,***
***அயில் எயிறு இலங்க,***
***பொற்றை மா முழைப் புலாலுடை***
***வாயினின், புகுந்து***
***பற்ற ஆதரிப்பான்தனை***
***நோக்கினன்; பரிவான்,***
***கொற்ற வார் சரத்து, ஒழிந்தது ஓர்***
***சிரத்தையும் குறைத்தான்.***

***அற்ற தாளொடு தோளிலன்*** - *கால்களும் கைகளும் அறுபட்டவனாகி;* ***அயில் எயிறு இலங்க*** - *(அதற்குப் பின்பும்) தன் கூரிய பற்கள் தோன்றுமாறு;* ***பொற்றை மா முழைப் புலால் உடை வாயினின்*** - *மலையின் பெரிய குகை போன்ற புலால் நாற்றம் வீசும் தன்*

*வாயினால்;* ***புகுந்து பற்ற ஆதரிப்பான்தனை -*** *(தன் மேல்) விழுந்து தனை (இராமனைப்) பற்றி விழுங்க விருப்பமுற்ற அத் திரிசிரனை;* ***நோக்கினன் -*** *பார்த்து (இராமன்);* ***பரிவான் -*** *(அவன்மேல்) இரக்கங் கொண்டவனாய்;* ***கொற்ற வார் சரத்து -*** *வெற்றி தரும் தனது நீண்ட அம்பினால்;* ***ஒழிந்தது ஓர் சிரத்தையும் குறைத்தான் -*** *அறுக்கப்படாது எஞ்சியிருந்த ஒருதலையையும் துணித்தான்.*

*படைக் கருவிகளையிழந்தவனாய்க் கால் கைகளாகிய முக்கியஉறுப்புக்களும் அறுபட்டு நின்ற நிலையிலும் அவனது கொடுமை நீங்காமல் இராமனை விழுங்கிவிடக் கருதியவனிடம் இராமன் இரக்கப்பட்டு அவனது எஞ்சிய சிரத்தையும் துண்டித்து வீழ்த்தினான் என்பது. பொற்றை - மலை.*

***3010. திரிசிரா எனும் சிகரம் மண்***
***சேர்தலும், செறிந்த***
***நிருதர் ஓடினர், தூடணன்***
***விலக்கவும் நில்லார்;-***
***பருதி வாளினர், கேடகத் தடக்***
***கையர், பரந்த***
***குருதி நீரிடை, வார் கழல்***
***கொழுங் குடர் தொடக்க.***

***திரிசிரா எனும் சிகரம் -*** *திரிசிரன் என்னும் மலைச் சிகரம்;* ***மண் சேர்தலும் -*** *தரையில் விழுந்ததும்;* ***தூடணன் விலக்கவும் நில்லார் -*** *தூடணன் என்ற சேனைத் தலைவன் (தங்களைத்) தடுக்கவும் நில்லாதவர்களாய்;* ***பருதி வாளினர் -*** *கதிரவனைப் போல் ஒளி வீசும் வாட்படையையுடையவர்களும்;* ***கேடகத் தடக்கையர் -****கேடகங்களைப் பிடித்த பெரிய கைகளையுடையவர்களுமாகிய;* ***செறிந்த நிருதர் -****(முன்பு) நெருங்கி நின்ற அரக்கர்கள்;* ***வார் கழல் -*** *நீண்ட கால்கள்;* ***பரந்த குருதி நீரிடை -*** *பரவிய இரத்த வெள்ளத்திலுள்ள;* ***கொழுங் குடர் -****கொழுத்த குடல்களிலே;* ***தொடக்க -*** *மாட்டிக் கொண்டு தடை செய்ய;* ***ஓடினர் -*** *ஓடினார்கள். போரில் எதிர்த்து நிற்க முடியாமல் மிக அஞ்சி ஓடிப் போகின்ற நிலையிலும் சிலர்க்கு அவ்வாறு விரைந்து செல்ல முடியாதபடி தற்செயலாகத் தடை நேர்கின்ற விதியின் கொடுமை ஈற்றடியில் விளங்கும். கைகளில் படைக்கலம் இருந்தும் போர்க்குத் துணியாத அவர்களது ஆற்றலின்மையைப் புலப்படுத்துவதற்கு, 'பருதி வாளினர் கேடகத் தடக்கையர்' என்ற அடைமொழி கொடுத்தார். படைக் கலங்களையும் கை, கால் முதலிய உறுப்புகளையும் இழந்த நிலையிலும் போர் துறவர் வீரனாகிய திரிசிரனின் பெருமையை (3007, 3008) படைக்கலங்கள் இருந்தும் ஓடிய அரக்கர் சிறுமையொடு ஒப்பிட்டுணர்க.*

***3011. கணத்தின் மேல் நின்ற வானவர்***
***கை புடைத்து ஆர்த்தார்,***
***பணத்தின்மேல் நிலம் குழியுற,***
***கால் கொடு பதைப்பார்,***
***நிணத்தின்மேல் விழுந்து அழுந்தினர்***
***சிலர்; சிலர், நிவந்த***

*பிணத்தின்மேல் விழுந்து உருண்டனர்,*
*உயிர் கொடு பிழைப்பார்.*

***கணத்தின் மேல் நின்ற வானவர்*** *- (அரக்கர்களின் கால்கள் களத்தில் கிடந்த குடல்களில் சிக்கியதைக் கண்டு) கூட்டமாக வானத்தில் திரண்டு நின்ற தேவர்கள்;* ***கைபுடைத்து ஆர்த்தார்*** *-மகிழ்ச்சியோடு பரிகசித்துக் கைகொட்டி யாரவாரித்தார்கள்;* ***சிலர்*** *- சில அரக்கர்கள்;* ***பணத்தின் மேல் நிலம் குழி உற*** *- (ஆதிசேடனாகிய பாம்பின்) படங்களின் மேலுள்ள பூமி குழிபடும்படி;* ***கால் கொடு பதைப்பார்*** *- (தங்கள்) கால்களைப் பதிய வைத்து விரைந்தோடினவர்களாய்;* ***நிணத்தின் மேல் விழுந்து அழுந்தினர்*** *- (அக் களத்தில் கிடந்த) கொழுப்பில் வழுக்கி விழுந்து (அந்தச் சேற்றிலே) அழுந்தினார்கள்;* ***சிலர்*** *-மற்றும் சிலர்;* ***உயிர் கொடு பிழைப்பார்*** *- உயிர் நீங்காதபடி காத்து கொண்டு பிழைத்தோட முயன்றவர்களாய்;* ***நிவந்த பிணத்தின் மேல் விழுந்து உருண்டனர்*** *- உயர்ந்து கிடந்த பிணங்களின்மேல் இடறி விழுந்து கீழே புரண்டார்கள்.*

*ஓடிச் செல்லும் அரக்கர்களின் உடற்பார மிகுதியையும் செல்லும் வேகத்தின் மிகுதியையும் இச் செய்யுள் விளக்குகின்றது. 'பணத்தின்மேனிலம் குலைவுறல்' - ஓடும் அரக்கரின் வேகத்தாலும் பளுவாலும்ஆகும்.*

*3012.* ***வேய்ந்த வாளொடு வேல் இடை***
***மிடைந்தன வெட்ட,***
***ஓய்ந்துளார் சிலர்; உலந்தனர் உதிர***
***நீர் ஆற்றில்***
***பாய்ந்து, கால் பறித்து அழுந்தினர்***
***சிலர்; சிலர் பயத்தால்***
***நீந்தினார், நெடுங் குருதிஅம் கடல்***
***புக்கு நிலையார்.***

***சிலர்*** *- (அஞ்சியோடுகின்ற) சில அரக்கர்கள்;* ***இடை வேய்ந்த வாளொடு வேல்*** *- வழியிலே (இறந்து கிடக்கின்ற அரக்கர்களின்) கைகளில் கொண்டுள்ள வாள்களும் வேல்களும்;* ***மிடைந்தன வெட்ட*** *- நெருங்கினவாய் (தம் கால்களை) வெட்டுதலாலே;* ***ஓய்ந்துளார்*** *-ஒட முடியாமல் தளர்ச்சியடைந்தார்கள்;* ***சிலர்*** *- சில அரக்கர்;* ***உலந்தனர் உதிர நீர் ஆற்றில்*** *- முன்பு இறந்தவர்களான அரக்கர்களின் இரத்த நதியில்;* ***பாய்ந்து கால் பறித்து*** *- தாவி விழுந்து கால்கள் இழுக்கப்பட்டு;* ***அழுந்தினர்*** *- மூழ்கிவிட்டார்கள்;* ***சிலர்*** *- இன்னும் சில அரக்கர்;* ***பயத்தால்*** *- அச்சத்தால்;* ***நெடுங் குருதி அம் கடல்புக்கு*** *- பெரிய இரத்தக் கடலில் இறங்கி;* ***நீந்தினார் நிலையார்*** *- நீந்திச் சென்று, அங்கே நிலை கொள்ளாதவராய்த் தத்தளித்தார்கள்.*

*உயிர் தப்புவதற்காக அரக்கர் சிலர் ஓடும்போது அவரைப் போர்க்களத்தில் நெருங்கிக் கிடக்கின்ற வாள்களும் வேல்களும் ஊறு செய்ய, அதனால் அவர்கள் நடை ஓய்ந்தவராயினார், ஒரு சிலர் குருதியாற்றால் இழுக்கப்பட்டு அழுந்தினர், இன்னும் சிலர் அச்சத்தால் இரத்தக் கடலில் இறங்கி நீந்திக் கொண்டே அதைக் கடந்து அப்பாலே சென்றாவது உயிர் பிழைக்கலாமென்று துணிய ஆனாலும் கை கால் ஓய்ந்து தளர்ந்தனர். அரக்கர்கள் தம் கையிற் பிடித்த படைக் கருவிகள் போர் வெற்றிக்கு*

*உதவாமல் கைகளுக்கு ஓர் அணிகலம் போல விளங்கினமையால் 'வேய்ந்த வாளொடு வேல்' என்றார்.*

***3013. மண்டி ஓடினர் சிலர், நெடுங்***
***கட கரி வயிற்றுப்***
***புண் திறந்த மாமுழையிடை***
***வாளொடும் புகுவார்,***
***தொண்டை நீங்கிய கவந்தத்தை,***
***'துணைவ! நீ எம்மைக்***
***"கண்டிலேன்" எனப் புகல்'***
***என, கை தலைக் கொள்வார்.***

***மண்டி ஓடினர் சிலர்** - விரைந்த ஓடின சில அரக்கர்கள்;**நெடுங் கடகரி வயிற்று** - பெரிய மத யானைகளின் வயிற்றில்; **புண் திறந்த** - (இராமபாணத்தால் உண்டான) புண்ணாலாகிய (பெருந் துளையென்னும்); **மா முழையிடை** - பெரிய குகைகளில்; **வாளொடும் புகுவார்** - தம் கைவாளோடு உள்ளே நுழைந்து செல்பவர்களாய்; **தொண்டை நீங்கிய கவந்தத்தை** - தொண்டையறுபட்ட குறையுடலைப் பார்த்து (சிலர்); **'துணைவ** - 'நண்பனே!; **நீ எம்மை** - நீ எங்களை; **"கண்டிலேன்" என** - "பார்க்கவில்லை" யென்று; **புகல்' என** - சொல்வாய்' என்று வேண்டி;**கை தலைக் கொள்வார்** - தங்கள்கைகளைத் தலைமேற் கொண்டு (அந்தக் குறையுடலை) வணங்கி நிற்பார்கள்.*

*இராமனது பாணத்திற்கு அஞ்சி மலைக் குகையில் ஓடியொளிந்து உயிர் பிழைக்கக் கருதுபவர் இடையிலே பெரிய யானையின் வயிற்றில் உண்டான புண்ணாகிய துளையைக் கண்டு அந்தத் துளையே மலைக் குகையென்று மயங்கி அதனுள்ளே ஒளிந்து கொள்ளச் சென்றார்கள்; அவ்வாறு செல்கையில் அருகில் நின்ற தலையற்ற உடலைப் பார்த்து 'இராமன் எங்களைத் தேடி வந்தால் நீ எங்களைக் காணவில்லையென்று சொல்' என்று வேண்டிக் கைகூப்பி வணங்கினர் என்பது. உயர்வு நவிற்சியின் உச்சம் காண்க.*

***3014. கச்சும் வாளும் தம் கால்***
***தொடர்ந்து ஈர்வன காணார்,***
***அச்சம் என்பது ஒன்று உருவு***
***கொண்டாலென, அழிவார்;***
***உச்ச வீரன் கைச் சுடு சரம்***
***நிருதர் நெஞ்சு உருவத்***
***தச்சு நின்றன கண்டனர், அவ்***
***வழித் தவிர்ந்தார்.***

***கச்சும் வாளும்** - (தமது) கச்சும் (அதில் செருகப்பட்ட) உடை வாளும்; **தம் கால் தொடர்ந்து ஈர்வன** - (விரைந்தோடும்போது) நழுவி விழுந்து தங்கள் கால்களைச் சுற்றிக் கொண்டு அறுப்பதை;**காணார்** - தெரிந்து கொள்ளாதவர்களாய்; (இராமனின்*

*அம்புகளே தம்மை அறுக்கின்றன என்று கருதி);* ***அச்சம் என்பது ஒன்று உருவு கொண்டால் என -*** *பயம் என்கின்ற ஒரு குணமே ஓர் உருவம் கொண்டு வந்தது போல;* ***அழிவார் -*** *மனமழிவார் (அந்த இடத்தில்);* ***நிருதர் நெஞ்சு உருவத் தச்சு நின்றன -*** *(அங்கே கிடக்கின்ற) அரக்கர்களின் மார்பு முழுவதும் துளைபடும்படி தைத்து நின்றவையான;* ***உச்ச வீரன் கைச் சுடு சரம் -*** *சிறந்த வீரனான இராமனது கையினால் எய்யப்பட்ட கொடிய அம்புகளை;* ***கண்டனர் -*** *பார்த்தவர்களாய்;* ***அவ்வழித் தவிர்ந்தார் -*** *அந்த வழியே (தாம் செல்லுவதை) விட்டொழித்தார்கள்.*

*'மருண்டவன் கண்ணுக்கு இருண்ட தெல்லாம் பேய்' என்றபடி அச்சங் கொண்ட அரக்கர்களுக்குத் தம் கச்சும் வாளுமே அச்சத்திற்குக் காரணமாயின; அத்துடன் பிறர்மேல் தைத்து நின்ற அம்புகளைக் கண்டு அவை தம் உடலிலும் தைக்குமோ என்ற ஐயத்தைத் தரவே அவ்வழியே செல்லுவதையும் தவிர்த்தனர் என்பது. உச்சம் - உயர்வு; தச்சு - தைத்து என்பதன் போலி.*

*புறங்கொடுப்பவரைத் தேற்றித், தூடணன் வீரவுரை கூறல்*

***3015. அனையர் ஆகிய அரக்கரை, ' "ஆண்***
***தொழிற்கு அமைந்த***
***வினையம் நீங்கிய மனித்தரை***
***வெருவன்மின்" என்னா,***
***நினையும் நான் உமக்கு உரைப்பதும்***
***உண்டு' என, நின்றே,***
***துனையும் வாம் பரித் தேரினன்***
***தூடணன் சொன்னான்.***

***அனையர் ஆகிய அரக்கரை -*** *அத்தன்மையராய் அஞ்சியோடுகின்ற இராக்கதர்களை (நோக்கி);* ***துனையும் வாம் பரித் தேரினன் தூடணன் -*** *விரைந்து தாவிச் செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரின் மேல் ஏறியவனான தூடணன் என்னும் படைத் தலைவன்;* ***"ஆண் தொழிற்கு அமைந்த -*** *'ஆண்மைச் செயலுக்குப் பொருந்திய;* ***'வினையம் நீங்கிய மனித்தரை -*** *தந்திரங்களை மேற்கொள்ளாத இந்த மனிதர்களைக் கண்டு;* ***வெருவன்மின்" என்னா -*** *நீங்கள் அஞ்சாதீர்கள் என்று கூறி;* ***'நான் நினையும் உமக்கு உரைப்பதும் உண்டு' என -****'நான் கருதக் கூடிய ஒன்றை உங்களுக்குச் சொல்ல வேண்டியுள்ள' தென்று;* ***நின்று சொன்னான் -*** *ஓரிடத்தில் நின்று (அவர்களுக்குக்) கூறினான்.*

*தங்களைப் போல மாயையால் வஞ்சகப் போரைச் செய்யாமல் சூதின்றித் தருமப் போர் செய்வதையே இராமலக்குவர்க்கு ஒரு குறையாக்கி 'ஆண் தொழிற்கு அமைந்த வினையம் நீங்கிய மனித்தர்' என்றான். மனித்தர் - விரித்தல் விகாரம். வினையம் - சாமர்த்தியம் அல்லது உபாயமும் ஆம்.*

***3016. 'வச்சை ஆம் எனும் பயம் மனத்து***
***உண்டு என வாழும்***

***கொச்சை மாந்தரைக் கோல் வளை***
***மகளிரும் கூசார்;***
***நிச்சயம் எனும் கவசம்தான்***
***நிலைநிற்பது அன்றி,***
***அச்சம் என்னும் ஈது ஆர் உயிர்க்கு***
***அருந் துணை ஆமோ?***

***'வச்சை ஆம் எனும் -*** *பழிப்புக்கு இடமாகும் என்று சொல்லப்படுகின்ற;* ***பயம் மனத்து உண்டு என வாழும் -****அச்சமானது தமது மனத்திலே உள்ளதாக உயிர் வாழ்கின்ற;* ***கொச்சை மாந்தரை -*** *இழிந்த மனிதர்களுக்கு;* ***கோல்வளை மகளிரும் -*** *அழகான வளையல் அணிந்த பெண்களும்;* ***கூசார் -*** *அஞ்சமாட்டார்கள் (அதுவல்லாமல்);* ***நிச்சயம் எனும் கவசம்தான் -*** *மனத் துணிவு என்கின்ற கவசமே;* ***நிலை நிற்பது அன்றி -*** *(போரில் உயிரைக் காத்து) நிற்கக் கூடியதல்லாமல்;* ***அச்சம் என்னும் ஈது -****(உங்களிடமுள்ள) பயம் என்கின்ற இக்குணம்;* ***ஆர் உயிர்க்கு அருந்துணை ஆமோ -*** *அரிய உயிருக்கு அருமையான காக்கும் துணையாகுமோ (ஆகாது).*

*பழிப்புக்குக் காரணமான பயத்தை மனத்திலே கொண்டு நாமும்பிழைத்திருக்கிறோமென்று சொல்லியவாறு இழிந்த மனிதர்களிடம் மகளிரும் கூசாது அலட்சியம் செய்வார்கள்; ஆகவே, இவ்வாறான அச்சத்தைவிட்டு மனவுறுதி கொள்வதே உயிர்க்குக் கவசம் போல அரணாகும் என்பது.*

*வசையென்பது எதுகை நோக்கி வச்சையென விரிந்தது. கோல் -கோலம் என்பதன் விகாரம்; கோலம் - அழகு. 'அச்சத்தையே குணமாகக் கொண்ட மாந்தரைக் கண்டு அச்சமே அற்ற அரக்கர் அஞ்சலாமோ' என்று கூறினான், தூடணன். கொச்சை மாக்கள் - இழிந்த மனிதர்.*

***3017. 'பூ அராவு வேல்***
***புரந்தரனோடுதான், பொன்றா***
***மூவரோடுதான், முன் நின்று***
***முட்டிய முனையில்***
***ஏவர் ஓடினர் இராக்கதர்? நுமக்கு***
***இடைந்து ஓடும்***
***தேவரோடு கற்றறிந்துளிரோ?***
***மனம் திகைத்தீர்!***

***மனம் திகைத்தீர் -*** *மன உணர்வால் திகைத்தவர்களே;* ***பூ அராவு வேல் -*** *மிகக் கூர்மையாக அராவப்பட்ட வேலையுடைய;****புரந்தரனோடு தான் -*** *தேவேந்திரனோடும்;* ***பொன்றா மூவரோடு தான் -****அழிவில்லாத மும்மூர்த்திகளுடனும்;* ***முன் நின்று முட்டிய முனையில் -*** *முன்பு எதிர் நின்று தாக்கிய போர்க்களத்தில்;* ***இராக்கதர் ஏவர் ஓடினர் -*** *எந்த அரக்கர்கள் அஞ்சியோடினார்கள்? (யாருமில்லை);* ***நுமக்கு இடைந்து ஓடும் தேவரோடு -*** *(முன்பெல்லாம்) உங்களைக் கண்டு அஞ்சியோடிய தேவர்களிடத்தில்;*

***கற்றறிந்துளிரோ -*** *புறமுதுகு காட்டி அஞ்சியோடுவதைக் கற்று அறிந்து கொண்டீர்களோ?*

*'தேவர்கள் தலைவனான இந்திரனோடும், முத் தொழில் புரியும் மும்மூர்த்திகளோடும் நேர்ந்த போர்களில் எதிலும் அரக்கர் அஞ்சியோடினதில்லையே! அப்படியிருக்க உங்களுக்கு எதிரே பல முறை அஞ்சியோடின தேவர்களைக் கண்டுகண்டு நீங்களும் அஞ்சிப் புறங்காட்டியோடும் தொழிலைக் கற்றுக் கொண்டீர்களோ? என்றான். அழிவில்லாத வேற்படை தாங்கிய இந்திரனுக்கும், என்றும் அழியாத இயல்புடைய மும்மூர்த்திகளுக்கும் அஞ்சாத உங்களுக்கு எளிய மனிதரைக் கண்டு ஓடுதல் இயற்கைக் குணமாகாது; அது செயற்கைப் பண்பேயாம் என்ற குறிப்பும் புலப்படும். ஏவர் - எவர் என்பதன் நீட்டல் விகாரம். திகைத்தீர் - விளி (திகைத்தவர்களே).*

***3018. 'இங்கு ஓர் மானிடற்கு, இத்தனை***
***வீரர்கள், இடைந்தீர்;***
***உம் கை வாளொடு போய் விழுந்து,***
***ஊர் புகலுற்றீர்;***
***கொங்கை மார்பிடைக் குளிப்புறக்***
***களிப்புறு கொழுங் கண்***
***நங்கைமார்களைப் புல்லுதிரோ?***
***நலம் நுகர்வீர்!***

***'இங்கு ஓர் மானிடற்கு -*** *இங்குப் போருக்கு வந்த தனி மனிதன் ஒருவனுக்கு;* ***இத்தனை வீரர்கள் இடைந்தீர் -*** *நீங்கள் இவ்வளவு வீரர்களும் பின்னிட்டு ஓடலானீர்கள்;* ***உம் கை வாளொடு போய் விழுந்து-*** *உங்கள் கையிலுள்ள வாட்படையோடு ஒருவர் மேல் ஒருவர் மோதிவிழுந்து கொண்டு;* ***ஊர் புகலுற்றீர் -*** *விரைந்து ஊருக்குள்ளே புகுந்து கொள்ள முற்பட்டீர்கள்;* ***களிப்புறு -*** *(அவ்வாறு ஒளிந்தது மட்டுமல்லாமல்) களிப்புக் கொண்டு;* ***கொங்கை மார்பிடைக் குளிப்புற -*** *தனங்கள் மார்பிலே அழுந்தும்படி;* ***உம் கொழுங்கண் நங்கைமார்களை -*** *மதர்த்த கண்களையுடைய உங்கள் மனைவியரை;* ***புல்லு திரோ -*** *அணைப்பீர்களோ?*

*இத்துணை வீரர்களிருந்தும் படைக் கருவிகளை இழவாதிருந்தும், தனி ஒரு மனிதனுக்கு அஞ்சியோடி ஒளிக்க முற்பட்டு ஆண்மையிழந்த நீங்கள் நாணமின்றி எவ்வாறு உங்கள் மனைவியரைச் சேர்விரென்று இகழ்ந்தான் என்பது. அதுவல்லாமலும் உங்களது ஆண்மை பகைவன்முன் நின்று பொருது வெல்லுவதற்கு அமையாமல் உங்கள் மனைவியரைத் தழுவுவதற்கே யமைந்தது என்ற இகழ்ச்சிக் குறிப்பும் தோன்றும்.*

***3019. 'செம்பு காட்டிய கண் இணை***
***பால் எனத் தெளிந்தீர்!***
***வெம்பு காட்டிடை நுழைதொறும்,***

***வெரிந் உறப் பாய்ந்த***
***கொம்பு காட்டுதிரோ, தட***
***மார்பிடைக் குளித்த***
***அம்பு காட்டுதிரோ, குல***
***மங்கையர்க்கு? அம்மா!***

*'**செம்பு காட்டிய கண் இணை** - போரில் கோபத்தால் செம்பின் நிறம் போலச் சிவந்து தோன்றிய உங்கள் இரண்டு கண்களும்; **பால் எனத் தெளிந்தீர்!** - (அச்சத்தால்) பால் போல் வெளுத்துத் தெளிவடையப் பெற்றுள்ளீர்; **குல மங்கையர்க்கு** - நற்குலத்தில் பிறந்த உங்கள் மனைவியர்க்கு; **வெம்பு காட்டிடை நுழைதொறும்** - கொடிய காடுகளிடையே (நீங்கள்) நுழைந்து ஓடும்போதெல்லாம்; **வெரிந் உறப் பாய்ந்த** - உங்கள் முதுகிலே நன்றாகப் பாய்ந்து தாக்கிய; **கொம்பு காட்டுதிரோ** - மரக் கொம்புகளாலாகும் புண்களைக் காட்டுவீர்களோ?; **தட மார்பிடைக் குளித்த** -(அன்றி) பெரிய மார்பிலே தைத்த; **அம்பு காட்டுதிரோ** -அம்புகளாலான புண்களைக் காட்டுவீர்களோ? (யாது செய்வீர்?).*

*அம்மா - இரக்கச் சொல். 'போர்க்குப் புறப்பட்டு வந்த நீங்கள் மீண்டு சென்று உங்கள் வெற்றியை எதிர் நோக்கும் மனைவியர்க்கு அப் போரில் மார்பிலே பட்ட புண்களைக் காட்டி மகிழ்வித்தலன்றோ சிறப்பு? பகைவனுக்கு அஞ்சி அடர்ந்த வனத்தில் நுழைந்தோடும் போது முதுகிலே மரக் கொம்பு பட்ட புண்ணைக் காட்டினால் இகழ்ச்சிக்கு இடனாகுமல்லவா?' என்கிறான். செம்பெனச் சிவத்தல் சினத்துக்கும் பால் என வெளிறித்தெளிதல் அச்சத்துக்கும் மெய்ப்பாடுகள்.*

***3020. 'ஏக்கம் இங்கு இதன்மேலும்***
***உண்டோ? இகல் மனிதன்***
***ஆக்கும் வெஞ் சமத்து, ஆண்மை***
***அவ் அமரர்க்கும் அரிதாத்***
***தாக்க அரும் புயத்து உம் குலத்***
***தலைமகன் தங்கை***
***மூக்கொடு அன்றி, நும் முதுகொடும்***
***போம் பழிமுயன்றீர்.***

*'**இகல் மனிதன்** - பகைமையுள்ள இந்த மனிதன் ஒருவன்;**ஆக்கும் வெம் சமத்து ஆண்மை** - செய்கின்ற கொடிய போர்த் திறமை;**அவ் அமரர்க்கும் அரிதா** - (இந்திரன் முதலிய) அத் தேவர்கள் பலர்க்கும் இல்லாததென்று சொல்லும்படி; **தாக்க அரும் புயத்து** - யாராலும் எதிர்த்துத் தாக்கவொண்ணாத தோள் வலிமையுடைய; **உம் குலத் தலைமகன்** - உங்கள் குலத்துத் தலைவனான இராவணனின்;**தங்கை** - தங்கையான சூர்ப்பணகையின்; **மூக்கொடு அன்றி** - மூக்கு அறுபட்டுப் போனதோடு மட்டுமல்லாமல்; **நும் முதுகொடும் போம் பழி** - நீங்கள்புறமுதுகு காட்டிச் செல்வதனால் அமையும் பழிச் சொல்லையும்;**முயன்றீர்**- உண்டாக்கிவிட்டீர்கள்; **இங்கு இதன் மேலும் ஏக்கம் உண்டோ** - இங்கு நடந்த இதற்கு மேலும் ஓர் இழிந்த செயலுண்டோ? (இல்லை என்றபடி) சிறந்த தேவர்களின் எதிரில் பின்னிடாத நீங்கள்*

*இந்த இழிந்த மனிதனுக்குப் பின்னிடுவதால், இம் மனிதனிடமுள்ள போராண்மை தேவர்களுக்குமில்லை யென்றாகிறது. மேலும், உங்கள் குலத் தலைவனின் தங்கை அடைந்த அவமானத்தை நீங்கள் போர் செய்து பகைவரையழித்தலால் ஒழிக்க வேண்டுவதாயிருக்க, அதைச் செய்யாமல் அந்தப் பழியோடு நீங்கள் புறமுதுகிட்டோடும் அவமானத்தையும் உண்டாக்க முற்பட்டீர்களேயென்று தூடணன் கேட்டான். வீரத்துக்கு உண்டாம் பழி இகழ்ந்து கூறப்படுகிறது. முதுகொடும் - இறந்தது தழுவிய எச்சம். சமம் - சமரம்; போர். 14*

***3021' ஆர வாழ்க்கையின் வணிகராய்***
***அமைதிரோ? அயில் வேல்***
***வீர வாள் கொழு என மடுத்து***
***உழுதிரோ?-வெறிப் போர்த்***
***தீர வாழ்க்கையின் தேவரைச்***
***செருவிடைப் பறித்த***
***வீர வாட் கையீர்!-எங்ஙனம்***
***வாழ்திரோ? விளம்பீர்.'***

***'வெறிப் போர் -*** *மூர்க்கச் செயலை மேற் கொண்ட போரில்;* ***தீர வாழ்க்கையின் -*** *வீரத்தோடு கூடிய வாழ்வினால்;* ***தேவரைச் செருவிடைப் பறித்த -*** *தேவர்களிடமிருந்து போரில் பறித்துக் கொண்ட;* ***வீர வாள் கையீர் -*** *வலிமையுள்ள வாளைக் கையில் ஏந்தியவர்களே!; (போரில் தோற்றோடிப் போர்த் தருமத்தையிழந்த நீங்கள் போர்த் தொழிலை விட்டு);* ***ஆர வாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ -*** *இனி முத்து முதலிய பண்டங்களை விற்று வாழும் வணிகர்களாக அமைவீர்களோ? (அல்லது);* ***அயில் வேல் வீர வாள் -*** *(உழவராகிக்) கூர்மையான வேலையும், வலிமையுள்ள வாளினையும்;* ***கொழு என மடுத்து உழுதிரோ -*** *ஏரின் கொழுவாக மண்ணில் ஆழ்த்தி உழுது பயிரிடப் போகிறீர்களோ?;* ***எங்ஙனம் வாழ்திரோ -*** *எவ்வாறு வாழப் போகின்றீர்கள்?;* ***விளம்பீர்' -*** *சொல்லுங்கள்.*

*இவ்வாறு போரில் தோற்றோடி வெட்கங் கெட்ட உங்களுக்குப் போர் வீரராக வாழ வகையில்லை : இனி, நீங்கள் பண்டங்களை விற்று வாழும் வணிகராகவோ, உழுதுண்டு வாழும் வேளாளராகவோ வாழ்வதே உங்களுக்கு அமைவது என்றான். கையீர் - விளி; ஓ - ஐயம்.*

*தூடணன் எதிர்த்து வர, இராமன் அவனோடு போர்தொடங்குதல்*

***3022. என்று, தானும், தன் எறி***
***கடற் சேனையும், 'இறை நீர்***
***நின்று காண்டிர் என் நெடுஞ்சிலை***
***வலி' என நேராச்***
***சென்று தாக்கினன்; தேவரும்***
***மருள்கொண்டு திகைத்தார்;***

***நன்று! காத்தி' என்று, இராமனும்***
***எதிர் செல நடந்தான்.***

***என்று -*** *இவ்வாறு தூடணன் கூறி;* ***'நீர் இறை நின்று -*** *நீங்கள் சிறிது நேரம் ஓடாது நின்று;* ***என் நெடுஞ் சிலை வலி -*** *எனது நீண்ட வில்லின் வலிமையை;* ***காண்டிர்' என -*** *காண்பீர்களாக என்று சொல்லி;* ***தானும் தன் எறிகடல் சேனையும் -*** *தானும் தன்னுடைய அலை வீசும் கடல் போன்றசேனையுமாக;* ***நேராச் சென்று தாக்கினன் -*** *(இராமனுக்கு) எதிராகச் சென்று போர் செய்தான்; (அந்த உக்கிரத்தைக் கண்டு);* ***தேவரும் மருள் கொண்டு திகைத்தார் -*** *தேவர்களும் மயக்கமுற்றுப் பிரமித்தார்கள்;* ***இராமனும் -*** *இராமபிரானும்;* ***'நன்று காத்தி' என்று -*** *(உன் சேனையை) நன்றாகக் காத்துக் கொள் என்று சொல்லி;* ***எதிர் செல நடந்தான் -*** *(அவனுக்கு) எதிராக நடந்து சென்றான்.*

*திகைத்தல் - இன்னது செய்வது என்று தீர்மானிக்க முடியாமல் பிரமித்து நிற்றல் நின்று காத்தி : திறமையுண்டேல் என்னை எதிர்த்து நின்று உன்னையும் உன் சேனைகயையும் காப்பாற்றிக் கொள் என்று பெருமிதத்தோடு கூறிய வீர மொழி.*

***3023. ஊடு அறுப்புண்ட, மொய் படை;***
***கையொடும் உயர்ந்த***
***கோடு அறுப்புண்ட, குஞ்சரம்;***
***கொடிஞ்சொடு கொடியின்***
***காடு அறுப்புண்ட, கால் இயல்***
***தேர்; கதிர்ச் சாலி***
***சூடு அறுப்புண்ட எனக் கழுத்து***
***அறுப்புண்ட, துரகம்.***

***மொய் படை -*** *இராமபாணங்களால் வலிய படைக்கருவிகளுடன்;* ***ஊடு அறுப்புண்ட -*** *இடையே துணிக்கப்பட்டன;* ***குஞ்சரம் -*** *யானைகள்;* ***கையொடும் உயர்ந்த கோடு அறுப்புண்ட -*** *தும்பிக்கையோடு உயர்ந்து வளர்ந்த தந்தங்கள் அறுபட்டன;* ***கால் இயல் தேர் -*** *காற்றுப் போலவிரைந்து செல்லக்கூடிய தேர்கள்;* ***கொடிஞ்சொடு -*** *தேர்த் தட்டின் முன்னேயுள்ள கொடிஞ்சியென்னும் உறுப்போடு;* ***கொடியின் காடு -*** *கொடிகளின் தொகுதியும்;* ***அறுப்புண்ட -*** *அறுக்கப்பட்டன;* ***துரகம் -*** *குதிரைகள்;* ***கதிர்ச்சாலி சூடு அறுப்புண்ட என -*** *கதிர்களையுடைய செந்நெறபயிர்களின் கொண்டைகள் அறுக்கப்பட்டன போல;* ***கழுத்து அறுப்புண்ட -*** *கழுத்து அறுபட்டன.*

*இப் பாட்டில் பதாதி, யானை, தேர் குதிரைகளின் அழிவைக் குறித்துள்ளார். கதிர் முதிர்ச்சியால் தலை சாய்ந்த செந்நெற் பயிரும்குதிரையும் வடிவில் ஒத்தலால் கழுத்தறுப்புண்ட குதிரைகளுக்கு, முடியறுப்புண்ட சாலிப் பயிர்கள் உவமையாம். 'உண்ட' என வந்த ஐந்தனுள், நான்காவது பெயர், மற்றவை - முற்று. கொடிஞ்சி - தேர்மொட்டு; தாமரை வடிவமாகச் செய்து தேரின் முன்னிடத்து வைக்கப்படுவதோர் உறுப்பு.*

*3024.* ***துருவி ஓடின, உயிர் நிலை,***
***சுடு சரம், துரந்த;***
***கருவி ஓடின, கச்சையும்***
***கவசமும் கழல;***
***அருவி ஓடின என அழி***
***குருதி ஆறு ஒழுக,***
***உருவி ஓடின, கேடகத்***
***தட்டொடும் உடலம்.***

***துரந்த** - (இராமபிரானால்) செலுத்தப்பட்ட; **சுடுசரம்** - கொடிய அம்புகள்; **உயிர்நிலை துருவி ஓடின** - (அரக்கர்களின் உடம்பில்) உயிர் நின்ற இடங்களைத் தேடிக் கொண்டு விரைந்து சென்றன (வேறு சில அம்புகள்); **கச்சையும் கவசமும் கழல** - அரக்கர்களின் இடைக்கச்சும் உடற்கவசமும் கழன்றமையால்; **கருவி ஓடின** - படைக் கலங்கள் விரைந்து பாய்ந்தன (இன்னும் சில அம்புகள்); **அழி குருதி ஆறு** -(அவர்களின் உடல்கள்) சிதைந்ததனாலாகிய இரத்த நதிகள்; **அருவி ஓடின என ஒழுக** - மலையருவிகளாக ஓடின போல இடையறாது பெருகுமாறு;**கேடகத் தட்டொடும்** - (கையில் பிடித்த) கேடகம் என்னும் தட்டையும்;**உடலம்** - அவர்களுடம்பையும்; **உருவி ஓடின** - உள்ளே துளைத்து அப்பாற் சென்றன.*

*சுடுசரம் கழல, அலைப்ப உருவி ஓடின என வினைமுடிவு அமையும்.*

*3025.* ***ஆய்ந்த கங்கபத்திரங்கள் புக்கு,***
***அரக்கர்தம் ஆவி***
***தோய்ந்த; தோய்வு இலாப் பிறை முகச்***
***சரம் சிரம் துமித்த;***
***காய்ந்த வெஞ் சரம் நிருதர்தம்***
***கவச மார்பு உருவப்***
***பாய்ந்த; வஞ்சகர் இதயமும்***
***பிளந்தன, பல்லம்.***

***ஆய்ந்த** - (இராமபிரானால்) ஆராய்ந்தெடுத்து எய்யப் பெற்ற; **கங்கபத்திரங்கள்** - கங்கபத்திரம் என்னும் ஒருவகை அம்புகள்;**புக்கு** - உடம்புக்குள் புகுந்து; **அரக்கர் தம் ஆவி தோய்ந்த** -அரக்கர்களின் மார்பிலே அழுந்தின; **தோய்வு இலாப் பிறை முகச் சரம்** - மேற் சொன்னவாறு அரக்கர் உடலில் புகாத அர்த்த சந்திர பாணங்கள்;**சிரம் துமித்த** - அவ் அரக்கர் சிலரின் தலைகளைத் துண்டித்தன;**காய்ந்த வெம்சரம்** - (இராமன் எய்த) மிகக் கொடிய சில அம்புகள்;**நிருதர்தம் கவச மார்பு உருவ** - அரக்கருடைய கவசம் அணிந்த மார்பு ஊடுருவும்படி; **பாய்ந்த** - நுழைந்தன; **பல்லம்** - வேறு சில அம்புகள்;**வஞ்சகர் இதயமும் பிளந்தன** - வஞ்சனை நிறைந்த அரக்கர்களின் நெஞ்சையும் பிளந்துவிட்டன. இச் செய்யுளில் கங்க பத்திரம், பிறைமுகச்சரம், சரம், பல்லம் ஆகிய பலவகை அம்புகள் குறிக்கப் பெற்றுள்ளன; அதனால் இது பொருட்பின்வரு நிலையணியாம். இராக்கதரைக் குறிக்க அரக்கர், நிருதர், வஞ்சகர் என்ற சொற்கள் அமைந்தமையால் இதுவும் பொருட் பின்வரு நிலையணியாம்.*

*கங்க பத்திரம் - கழுகின் இறகையுடையது என்னும் காரணப் பொருளது. பிறைமுகச் சரம் - பிறைவடிவில் அமைந்த அம்பு.*

***3026. தூடணன் விடு சுடு சரம்***
***யாவையும் துணியா,***
***மாடு நின்றவர் வழங்கிய***
***படைகளும் மாற்றா***
***ஆடல் கொண்டனன், அளப்ப அரும்***
***பெரு வலி அரக்கர்***
***கூடி நின்ற அக் குரை கடல்***
***வறள்படக் குறைத்தான்.***

***தூடணன் விடு சுடுசரம் யாவையும் -*** *தூடணன் எய்த கொடியஅம்புகள் அனைத்தும்;* ***துணியா -*** *துணிபடவும்;* ***மாடு நின்றவர் வழங்கிய படைகளும் மாற்றா -*** *அவனருகில் நின்ற அரக்கர்கள் ஏவிய படைக்கலங்களும் அழியவும்;* ***ஆடல் கொண்டனன் -*** *போர் செய்யும் ஆடலைக் கொண்டவனாய் (இராமபிரான்);* ***அளப்பு அரும் பெரு வலி அரக்கர் கூடி நின்ற -*** *அளவிடுவதற்கரிய பெரிய வலிமையையுடைய அரக்கர்கள் ஒன்று கூடி நின்ற;* ***அக் குரைகடல் வறள்படக் குறைத்தான் -*** *ஒலிக்கும் கடல் போன்ற அச் சேனையை வற்றிப் போகும்படி அழித்தான்.*

*இராமபிரான் மிக எளிதாக அரக்கர் சேனைக் கடலையழித்தமை கூறுவது இது. மிகக் கொடிய அரக்கர் சேனையைத் தான் ஒருவனே தனியாக அழித்தான் என்பார் 'ஆடல் கொண்டனன் குறைத்தான்' என்றார்.*

*துணியா, மாற்றா : உடன்பாட்டு வினைகள். கொண்டனன் : முற்றெச்சம். அரக்கர் படைகளைக் குரைகடல் என்பதற்கேற்ப 'வறள்படக் குறைத்தான்' என்ற நயம் உணரத்தக்கது.*

***3027. ஆர்த்து எழுந்தனர் வானவர்;***
***அரு வரை மரத்தோடு***
***ஈர்த்து எழுந்தன, குருதியின்***
***பெரு நதி; இராமன்***
***தூர்த்த செஞ் சரம் திசைதொறும்***
***திசைதொறும் தொடர்ந்து,***
***போர்த்த வெஞ் சினத்து அரக்கரைப்***
***புரட்டின, புவியில்.***

***(அதுகண்டு) வானவர் -*** *தேவர்கள்;* ***ஆர்த்து எழுந்தனர் -*** *(மகிழ்ச்சியால்) ஆரவாரஞ் செய்தார்கள்;* ***குருதியின் பெருநதி -****இரத்தப் பேராறுகள்;* ***அருவரை மரத்தோடு -*** *அழித்தற்கரிய மலைகளையும்மரங்களையும்;* ***ஈர்த்து எழுந்தன -*** *இழுத்துக் கொண்டு சென்றன;****இராமன் தூர்த்த செஞ்சரம் -*** *இராமபிரான் ஏவி நிரப்பிய செவ்விய அம்புகள்;*

***திசைதொறும் திசைதொறும் தொடர்ந்து -*** *எல்லாத்திக்குகளிலும் தொடர்ந்து சென்று;* ***போர்த்த வெம் சினத்து அரக்கரை -*** *அத் திசைகளை(த் தம் கூட்டத்தால்) மறைத்த கொடிய சினங்கொண்ட இராக் கதர்களை;* ***புவியில்புரட்டின -*** *தரையில் புரளும்படி செய்தன.*

*இராமனுடைய செஞ்சரம் திசைதொறும் தொடர்ந்து போர்த்த வெஞ் சினத்து அரக்கரைப் புவியில் புரட்டின என்றும் உரைக்கலாம்.*

*செஞ்சரம் - வளைவில்லாத நேரிய அம்பு; பகைவரின் இரத்தம் தோய்ந்து நுனி சிவந்த அம்பு; தீயவரை அழித்து நன்மை புரியும் அம்பு.*

***3028. தோன்றும் மால் வரைத் தொகை எனத்***
***துவன்றிய நிணச் சேறு***
***ஆன்ற பாழ் வயிற்று அலகையைப் புகல்வது***
***என்? அமர் வேட்டு***
***ஊன்றினார் எலாம் உலைந்தனர்;***
***ஒல்லையில் ஒழிந்தார்;***
***கான்ற இன் உயிர் காலனும்***
***கவர்ந்து, மெய்ம்மறந்தான்.***

***அமர் வேட்டு ஊன்றினார் எலாம் -*** *போரை விரும்பி நிலை நின்ற அரக்கர்கள் எல்லோரும்;* ***ஒல்லையில் -*** *விரைவிலே;* ***உலைந்தனர் ஒழிந்தார் -*** *மடிந்தொழிந்தார்கள்;* ***காலனும் -*** *யமனும்;* ***கான்ற இன்னுயிர் -*** *(அரக்கர்களின் உடம்பிலிருந்து) வெளியேறிய இனிய உயிர்களை;* ***கவர்ந்து -*** *எடுத்துச் சென்று;* ***மெய்ம் மறந்தான் -*** *உடல் தளர்ந்து வருந்தினான்;* ***தோன்றும் மால்வரைத் தொகை எனத் துவன்றிய -*** *உயர்ந்து விளங்கும் பெரிய மலைகள் கூட்டம் போல நெருங்கிக் கிடந்த;* ***நிணச் சேறு -*** *(அரக்கர்களின்) கொழுப்பாகிய சேற்றை;* ***ஆன்ற -****தின்று நிறைந்த;* ***பாழ் வயிற்று அலகையை -*** *பாழ்த்த வயிற்றையுடைய பேய்களைப் பற்றி;* ***புகல்வது என் -*** *சொல்வதற்கு என்ன இருக்கிறது?*

*இராமனை எதிர்த்த அரக்கரெல்லாரும் அழிந்தார்கள்; உயிர்க் கொலையே தன் தொழிலாகக் கொண்ட யமனும் அவர்களின் உயிரை இடையறாது கவர்ந்து செல்லும் தளர்ச்சியால் மெய் சோர்ந்தான் என்பது. அவ்வாறு இறந்த எண்ணற்ற அரக்கர்களின் நிணம் உயர்மலையென நெருங்கிக் கிடக்க அந்த நிணச் சேற்றையெல்லாம் பேய்கள் உண்டுவிட்டன என்று சொல்லி, அவ்வாறு இறந்த அரக்கர்களின் நிணத்தை நிரம்பவுண்டுஉடல் பருத்த பேய்க் கூட்டம் பல என்பதைக் குறித்துச் சொல்ல வேண்டுவதில்லை என்ற மற்றொரு பொருளையும் பெற வைத்தார். பாழ் வயிறு - ஊனைத் தின்று ஊனைப் பெருக்கும் பெருவயிறு.*

***3029. களிறு, தேர், பரி, கடுத்தவர்***
***முடித் தலை, கவந்தம்,***
***ஒளிறு பல் படை, தம் குலத்து***

***அரக்கர்தம் உடலம்,***
***வெளிறு சேர் நிணம், பிறங்கிய***
***அடுக்கலின் மீதாக்***
***குளிறு தேர் கடிது ஓட்டினன்***
***தூடணன், கொதித்தான்.***

*(அப்பொழுது)* ***தூடணன் -*** *தூடணன் என்னும் சேனைத் தலைவன்;* ***களிறு -*** *யானைகளும்;* ***தேர் -*** *தேர்களும்;* ***பரி -*** *குதிரைகளும்;****கடுத்தவர் முடித்தலை -*** *கோபித்துப் போர் செய்த அரக்கர்களின் பொன்முடியணிந்த தலைகளும்;* ***கவந்தம் -*** *(அவர்களின்) குறையுடல்களும்;* ***ஒளிறு பல்படை -*** *விளங்கும் பல வகை ஆயுதங்களையுடைய;* ***தம் குலத்து அரக்கர் தம் -*** *தங்கள் குலத்தில் தோன்றிய சேனைத் தலைவர்களாகிய அரக்கர்களின்;* ***உடலம் -*** *உடல்களும்;* ***வெளிறு சேர் நிணம் -*** *வெண்ணிறமுடைய (அவர்களுடைய) கொழுப்பும்;* ***பிறங்கிய அடுக்கலின் மீதா -****(ஆகிய இவை) உயர்ந்து குவிந்ததனாலாகிய மலைகளின் மேலே;* ***குளிறு தேர் கடிது ஓட்டினன் -*** *முழக்கம் செய்கின்ற (தன்) தேரை விரைவில் செலுத்தினான்;* ***கொதித்தான் -*** *(அவ்வாறு தேரைச் செலுத்தியவனாகிய தூடணன் தன் இனத்தவரான அரக்கர்களின் பிணக் குவியல்களைக் கண்டு) மனங் கொதித்தவன் ஆயினான்.*

*நால்வகைச் சேனைகளோடு அரக்கரின் கவந்தம், உடல் என்பனவும், அவர்களின் கொழுப்பும் மலை போலக் குவிந்து கிடக்க, அம் மலைகளின் மேல் தூடணன் தன் தேரைச் செலுத்தினான் என்பது.*

*அடுக்கல் : கற்களை அடுக்கினாற் போல இருப்பது : மலை.*

*3030.* ***அறம் கொளாதவர் ஆக்கைகள்***
***அடுக்கிய அடுக்கல்***
***பிறங்கி நீண்டன, கணிப்பு இல;***
***பெருங் கடு விசையால்,***
***கறங்கு போன்றுளது ஆயினும்,***
***பிணப் பெருங் காட்டில்***
***இறங்கும், ஏறும்; அத் தேர் பட்டது***
***யாது என இசைப்பாம்?***

***அறம் கொளாதவர்-*** *தருமத்தைக் கைக் கொள்ளாத அரக்கர்களுடைய;* ***ஆக்கைகள் -*** *உடல்கள்;* ***அடுக்கிய அடுக்கல் -*** *ஒன்றன் மேல் ஒன்றாகக் குவிந்ததனாலாகிய மலைகள்;* ***பிறங்கி நீண்டன -*** *உயர்ந்து நீண்டுள்ளவை;* ***கணிப்பு இல -*** *எண்ணிக்கை இல்லாதனவாம்;* ***பெருங்கடு விசையால் -*** *(ஆதலால்) மிகக் கடுமையான வேகத்தால்;* ***கறங்கு போன்று உளது ஆயினும் -*** *காற்றாடி போன்று உள்ளதானாலும்;* ***அத்தேர் -*** *தூடணன் ஏறிய அத்தேர்;* ***பிணப் பெருங்காட்டில் -*** *பிணக்குவியல்களாகிய காட்டிலே;* ***இறங்கும் ஏறும் -*** *பள்ளமான இடங்களில் இறங்கும் மேடான இடங்களில் ஏறும்;* ***(அத்தேர்) பட்டது -*** *உற்ற இடர்நிலையை;* ***யாது என இசைப்பாம் -*** *நாம் என்ன வென்று சொல்லுவோம்? (கூறவியலாது).*

*தூடணனது தேர் எண்ணிக்கையற்ற மலை போன்ற பிணக்குவியல்களில் ஏறியிறங்குதலால் இடறி மிகத் துன்பப்பட்டது என்பது. விரைந்து செல்வதில் தேர்க்குக் காற்றாடி உவமை.*

***3031. அரிதின் எய்தினன் - ஐ-ஐந்து***
***கொய் உளைப் பரியால்***
***உருளும் ஆழியது ஒரு தனித்***
***தேரினன், உலகத்து***
***இருளை நீக்கிய இந்துவின்***
***பொலிகின்ற இராமன்***
***தெருளும் வார் கணைக் கூற்று எதிர்,***
***ஆவி சென்றென்ன.***

*(தூடணன்)* ***கொய் உளை ஐ ஐந்து பரியால் -*** *அழகாகக் கத்தரிக்கப்பட்ட பிடரி மயிர்களையுடைய இருபத்தைந்து குதிரைகள் பூட்டியதால்;* ***உருளும் ஆழியது -*** *(எளிதில்) உருளும் சக்கரங்களையுடையதான;* ***ஒரு தனித் தேரினன் -*** *ஒப்பற்ற தனித்த தேரையுடையவனாய்;* ***கூற்று எதிர் -*** *யமனுக்கு எதிரிலே;* ***ஆவி சென்று என்ன -*** *உயிர் வலியச் சென்றாற் போல;* ***உலகத்து இருளை -*** *இவ்வுலகிலுள்ள இருட்டை;* ***நீக்கிய இந்துவின் -*** *ஒழிக்கின்ற சந்திரன் போல;* ***பொலிகின்ற இராமன் -*** *விளங்குகின்ற இராமனுடைய;* ***தெருளும் வார்கணை -*** *தெளிவான நீண்ட அம்புக்கு எதிரில்;* ***அரிதின் எய்தினன் -*** *மிகுந்த சிரமப்பட்டு வந்து சேர்ந்தான்.*

*யமனுக்கு எதிரே அவனால் கவரப்படுவதற்குரிய உயிர் வந்து நின்றாற் போல இராமபிரான் கணைக்கு எதிரே இருபத்தைந்து குதிரைகள் பூட்டிய தனித் தேரையுடைய தூடணன் அரிதின் எய்தினான் என்பது.*

*இராமனுக்குச் சந்திரன் உவமை - குளிர்ச்சி தந்து உயிர்களை மகிழ்விப்பதால். குறித்த இலக்கைத் தவறாது அழிப்பது பற்றி இராமபாணத்திற்குக் கூற்றுவன் ஒப்பாவான்.*

*இராமபாணத்தால் இவன் உடனே அழிதற்குக் காரணமாதலால்'கூற்றெதிர் ஆவி சென்றென்ன' என்றார். 'இருளின் நீங்கிய இந்து' - சூழ்ந்திருந்த அரக்கர் பட்டொழியத் தான் மட்டும் நின்ற இராமபிரானுக்கு உவமையாம்.*

*தூடணன் மாய்தல்*

***3032. சென்ற தேரையும், சிலையுடை***
***மலை எனத் தேர்மேல்***
***நின்ற தூடணன்தன்னையும்***
***நெடியவன் நோக்கி,***
***'நன்று-நன்று, நின் நிலை!'***
***என, அருள், இறை நயந்தான்***

***என்ற காலத்து, அவ் வெய்யவன்***
***பகழி மூன்று எய்தான்.***

***சென்ற தேரையும் -*** *(அவ்வாறு எதிரில்) வந்த தேரையும்;* ***சிலைஉடை மலை என -*** *வில்லையேந்திய ஒரு மலை போல;* ***தேர் மேல்நின்ற -*** *அத் தேரின் மேல் (வில்லேந்தி) நின்ற;* ***தூடணன் தன்னையும் -*** *தூடணனையும்;* ***நெடியவன் நோக்கி -*** *இராமபிரான் பார்த்து;* ***'நின் நிலை நன்று நன்று' என -*** *'(போரில்) உனது உறுதி நிலை மிக நன்றாயிருந்தது' என்று;* ***இறை அருள் நயந்தான் -*** *அவனைச் சிறிது அருளோடு மதித்தான்;* ***என்ற காலத்து -*** *அவ்வாறு கூறிய அச் சமயத்தில்;****அவ் வெய்யவன் -*** *அந்தக் கொடியவனான தூடணன்;* ***பகழி மூன்று எய்தான் -*** *மூன்று அம்புகளைத் தொடுத்தான்.*

*தேரின் மேல் வில்லேந்தியவனாகத் தூடணன் வந்து நிற்க, அவனது தளராத வீரத்தை இராமன் பாராட்டி நிற்கையில் அத் தூடணன் இராமன் மேல் மூன்று கணைகளை விடுத்தான் என்பது.*

*சிலையுடை மலை - வில்லேந்திய தூடணனுக்கு உவமை : இல்பொருளுவமை. நன்று நன்று - அடுக்கு உவமை பற்றியது. நெடியவன் - எங்கும் வியாபித்த திருமாலாகிய இராமபிரான். தன் பகைவனான தூடணனது வீரத்தைப் பாராட்டிய இராமனது சிறப்பைக் காட்டுவது இது. இறை - சிறிது.*

***3033. தூர வட்ட எண் திசைகளைத்***
***தனித்தனி சுமக்கும்***
***பார எட்டினோடு இரண்டினில்***
***ஒன்று பார் புரக்கப்***
***பேர விட்டவன், நுதல் அணி***
***ஓடையின் பிறங்கும்,***
***வீர பட்டத்தில் பட்டன,***
***விண்ணவர் வெருவ.***

***தூர -*** *நெடுந்தூரம் நீண்ட;* ***வட்ட -*** *வட்டமாய் அமைந்துள்ள;****எண் திசைகளை -*** *எட்டுத் திக்குகளையும்;* ***தனித்தனி சுமக்கும் -*** *தனித்தனியேசுமக்கின்ற;* ***பார எட்டினோடு -*** *வலிய எட்டுத் திசை யானைகளோடு சேர்ந்த;* ***இரண்டினில் ஒன்று -*** *(பூமியைச் சுமக்கின்ற மற்ற இரண்டான ஆதிசேடன், ஆதி கூர்மம் என்ற) இரண்டனுள் ஒன்றாகிய ஆதிசேடனை; (ஆதிசேட அம்சமான பாதுகைகளை);* ***பார் புரக்க -*** *உலகை ஆட்சிசெய்யுமாறு;* ***பேர விட்டவன் -*** *(அயோத்திக்குத்) திருப்பியனுப்பியவனான இராமபிரானின்;* ***நுதல் அணி -*** *நெற்றியில் அணிந்துள்ள;****ஓடையின் பிறங்கும் -*** *(யானையின்) முகபடாம் போல விளங்குகின்ற;* ***வீர பட்டத்தில் -*** *வீர பட்டிகையில்;* ***விண்ணவர் வெருவ -*** *தேவர்களும் அஞ்சும்படி;* ***பட்டன -*** *(அந்த மூன்று அம்புகளும்) தாக்கின.*

*இராமபிரானது வீரபட்டிகையில் தூடணன் எய்த அம்புகள் பட்டன என்பது. இராமனது நெற்றிப் பட்டிகைக்கு யானையின் நெற்றிப் பட்டத்தை உவமை கூறியதால் இராமன் களிறு போன்றவன் என்பது விளங்கும். எட்டுத் திக்குகளிலுள்ள எட்டு*

*யானைகளும், நடுவில் ஆதி சேடனும் அதன் கீழ் ஆதி கூர்மமுமாக இப்பத்தும் பூமிக்குக் கீழேயிருந்து அதனைத் தாங்குகின்றன என்பது நூற் கொள்கை.*

*வீரபட்டம் - வெற்றி பெற்ற வீரர் அதற்கு அறிகுறியாக நெற்றியிலணியும் பொன்தகடு.*

*எட்டு, இரண்டு - எண்ணலளவையாகு பெயர்கள்.*

***3034. 'எய்த காலமும் வலியும் நன்று'***
***என நினைந்து. இராமன்,***
***செய்த சேயொளி முறுவலன், கடுங்***
***கணை தெரிந்தான்;***
***நொய்தின், அங்கு அவன் நொறில்***
***பரித் தேர் பட நூறி,***
***கையில் வெஞ் சிலை அறுத்து,***
***ஒளிர் கவசமும் கடிந்தான்.***

***'எய்த காலமும்' -*** *(இந்த அரக்கன்) அம்பு எய்த காலமும்**வலியும்-** அவனது வலிமையும் **நன்று' என -** நல்லன என்று **நினைந்து -** எண்ணி; **இராமன் -** இராமபிரான்; **சேய் ஒளி செய்த முறுவலன் -** அழகுள்ள ஒளியுடைய புன்னகை பூத்தவனாய்; **கடும் கணை தெரிந்தான் -** கொடிய பாணங்களை ஆராய்ந்து தொடுத்து (அவற்றால்); **அங்கு நொய்தின் -** அங்கே விரைவிலே; **அவன் -** அந்த அரக்கர் படைத்தலைவனான தூடணனது; **நொறில் பரித் தேர் -** விரைவாகச் செல்லும் குதிரைகள் பூட்டிய தேரை; **பட நூறி -** அழியும்படி சிதைத்து;**கையில் வெம்சிலை அறுத்து -** அவன் கையிலிருந்த கொடிய வில்லையும் துண்டித்து; **ஒளிர் கவசமும் கடிந்தான் -** விளங்குகின்ற அவனது கவசத்தையும் பிளந்து அழித்தான். இராமன் தூடணனது செயலைப் பாராட்டியவாறு கடுங்கணைகளைத் தேர்ந்தெடுத்து எய்து அந்த அரக்கர் சேனைத் தலைவனான தூடணனது தேரையும் நிலையையும் சிதைத்துக் கவசத்தையும் அழித்தான் என்பது.*

*சேயொளி - செம்மை ஒளி அழகைக் குறிக்கும். செய்த முறுவலன் - முறுவல் செய்தவன் : விகுதி பிரித்துக் கூட்டல்.*

*காலமும் வலியும் நன்று என்றது : படை வீரர்கள் அஞ்சியோடிய போது அஞ்சாது எதிர் சென்று அவர்களைத் தடுத்து நிறுத்திப் போர்க்கு ஏகச் செய்து, தானும் அஞ்சாது எதிர்த்துப் போர் செய்யும் அவனது போர் செய்த நேரத்தையும் வலிமையையும் பாராட்டியது. நொறில் - விரைவு குறித்த உரிச்சொல்.*

***3035. தேவர் ஆர்த்து எழ, முனிவர்கள்***
***திசைதொறும் சிலம்பும்***
***ஓவு இல் வாழ்த்து ஒலி கார்க் கடல்***
***முழக்கு என ஓங்க,***

***'கா அடா இது, வல்லையேல், நீ'***
***என, கணை ஒன்று***
***ஏவினான்; அவன் எயிறுடை***
***நெடுந் தலை இழந்தான்.***

***தேவர் ஆர்த்து எழ*** - *தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரம் செய்யவும்* ***முனிவர்கள் திசைதொறும் சிலம்பும்*** - *முனிவர்கள் எல்லாத் திக்குகளிலும் நின்று ஆரவாரத்தோடு கூறுகின்ற;* ***ஓவு இல் வாழ்த்து ஒலி*** *-ஒழிவில்லாத வாழ்த்துகளின் ஓசை;* ***கார்க் கடல் முழக்கு என ஓங்க*** - *கரிய கடலின் முழக்கம் போல மிகுந்து விளங்கவும்;* ***'நீ வல்லையேல் இது கா அடா' என*** - *'நீ வல்லமையுள்ளவனானால் இந்த அம்பைத் தடுத்து உன்னைக் காத்துக் கொள்ளடா' என்று வீரவாதம் கூறி;* ***கணை ஒன்று ஏவினான்*** - *இராமபிரான் ஓர் அம்பைத் தொடுத்தான்;* ***அவன்*** - *அந்த அரக்கனான தூடணனும்;* ***எயிறு உடை நெடுந்தலை இழந்தான்*** - *கோர தந்தங்களையுடைய தன் பெரிய தலையை இழந்தான்.*

*கார்க் கடல் முழக்கு : நாற்றிசையிலும் நின்று நான்கு வேத மந்திரங்களைக் கொண்டு ஆசி கூறும் பேரொலிக்குக் கார்க் கடல் முழக்கு உவமையாம்.*

*கலி விருத்தம்*

*கரன் வெகுண்டு, பெரும்படையுடன் போருக்கு எழுதல்*

***3036. தம்பி தலை அற்ற படியும்,***
***தயரதன் சேய்***
***அம்பு படையைத்***
***துணிபடுத்ததும், அறிந்தான்,***
***வெம்பு படை விற் கை விசயக்***
***கரன் வெகுண்டான்-***
***கொம்பு தலை கட்டிய கொலைக்***
***கரியொடு ஒப்பான்.***

***கொம்பு தலை கட்டிய*** - *தந்தங்கள் முகத்தில் உறுதியாக விளங்குகின்ற;* ***கொலைக் கரியோடு ஒப்பான்*** - *கொல்லுதலில் வல்ல யானை போன்றவனான;* ***வெம்பு படை வில் கை விசயக் கரன்*** - *உக்கிரமான பல வகைப் படைக்கலங்களையும் வில்லையும் ஏந்தியகைகளையும், வெற்றியையுமுடைய கரன்;* ***தம்பி தலை அற்றபடியும்*** - *தன் தம்பியான தூடணன் (இராமனது அம்பால்) தலை அறுபட்டு அழிந்ததையும்;* ***தயரதன் சேய் அம்பு*** - *தசரதனின் மைந்தனான இராமனது பாணம்;* ***படையைத் துணி படுத்ததும்*** - *தன் அரக்கப் படைகளை வெட்டித் துண்டாடியதையும்;* ***அறிந்தான்*** - *அறிந்து;* ***வெகுண்டான்*** - *சினங் கொண்டான்.*

*இராமபிரானால் தூடணன் தலையறுபட்டதையும், அரக்கச் சேனை துண்டு பட்டதையும் அறிந்து, கரன் வெகுண்டான் என்பது.*

'கொம்பு தலை கட்டிய - கரனது முகத்தில் வெளிப்பட்டுக் காணப்படுகின்ற கோர தந்தங்கள் யானைத் தந்தம் போல்வன என்பது விளங்கும்.

***3037. அந்தகனும் உட்கிட,***
***அரக்கர் கடலோடும்***
***சிந்துரம். வயப் புரவி,***
***தேர் திசை பரப்பி,***
***இந்துவை வளைக்கும் எழிலிக்***
***குலம் என, தான்***
***வந்து, வரி விற் கை மத***
***யானையை வளைத்தான்.***

***அந்தகனும் உட்கிட -*** *(கோபங்கொண்ட கரன்) யமனும் அஞ்சும்படி;* ***அரக்கர் கடலோடும் -*** *இராக்கதர் படையுடனே;* ***சிந்துரம் -*** *யானைகளையும்;* ***வயப் புரவி -*** *வலிய குதிரைகளையும்;* ***தேர் -*** *தேர்களையும்;* ***திசை பரப்பி -*** *எல்லாத் திசைகளிலும் பரவியிருக்கச் செய்து;* ***இந்துவை வளைக்கும் -*** *சந்திரனை வளைத்துக் கொண்ட;****எழிலிக் குலம் என -*** *மேகக் கூட்டங்கள் போல;* ***தான் வந்து -*** *அரக்கனாகிய கரன் வந்து;* ***வரி விற் கை மத யானையை -****கட்டமைந்த வில்லையேந்திய கையையுடைய மதயானை போன்ற இராமபிரானை;* ***வளைத்தான் -*** *சூழ்ந்து கொண்டான்.*

*அரக்கனான கரன் நான்கு வகைச் சேனைகளையும் கொண்டு இராமபிரானை வளைத்தான் என்பது.*

*இராமனுக்குச் சந்திரனும், அரக்கர் கூட்டத்திற்கு மேகக் கூட்டமும் உவமை. வரி விற்கை மத யானை - இல்பொருளுவமை. எழிலி - மேகம் கடல், யானை : உவமையாகுபெயர்கள்.*

***3038. அடங்கல் இல் கொடுந் தொழில்***
***அரக்கர், அவ் அனந்தன்***
***படம் கிழிதர, படிதனில்,***
***பலவிதப் போர்,***
***கடம் கலுழ் தடங் களிறு,***
***தேர், பரி, கடாவி,***
***தொடங்கினர்; நெடுந்தகையும் வெங்***
***கணை துரந்தான்.***

***அடங்கல் இல் -*** *கட்டுக்கடங்காத;* ***கொடுந் தொழில் அரக்கர் -*** *கொடிய செயல்களையுடைய இராக்கதர்கள்;* ***அவ் அனந்தன் படம் கிழிதர -*** *அந்த ஆதிசேடனது படம் கிழிந்துவிடும்படி;* ***படிதனில் -*** *பூமியில்;****கடம் கலுழ் தடங் களிறு -*** *மத நீர் பொழியும் பெரிய யானைகளையும்;****தேர் பரி -*** *தேர்களையும் குதிரைகளையும்;* ***கடாவி***

*- மிகுதியாகச் செலுத்தி;* ***பல விதப் போர் தொடங்கினர் -*** *பல வகைப்பட்ட போரைச் செய்யத் தொடங்கினார்கள்;* ***நெடுந் தகையும் -*** *பண்பால் சிறந்த இராமபிரானும்;* ***வெங் கணை துரந்தான் -*** *கொடிய அம்புகளை விரைவாக எய்தான்.*

*அரக்கர் அடங்காமல் சேனைகளோடு மீண்டும் போர் தொடங்க, இராமபிரானும் கொடிய கணைகளை ஏவினான் என்பது 'அவ் அனந்தன் படம் கிழிதர' என்றது படைகள் யாவும் ஒரிடத்தே ஒருங்கே திரண்ட பார மிகுதி பற்றி. கடம் : கன்னம் இங்கே - மதநீர்க்கு இடவாகு பெயர். நெடுந்தகை : பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

***3039. துடித்தன கடக் கரி;***
***துடித்தன பரித் தேர்;***
***துடித்தன முடித் தலை; துடித்தன***
***தொடித் தோள்;***
***துடித்தன மணிக் குடர்; துடித்தன***
***தசைத் தோல்;***
***துடித்தன கழல்-துணை; துடித்தன***
***இடத் தோள்.***

***கடக் கரி -*** *மதயானைகள்;* ***துடித்தன -*** *(இராமபாணங்களால்) பதைத்து விழுந்தன;* ***பரித்தேர் -*** *குதிரைகள் பூட்டப் பெற்ற தேர்கள்;****துடித்தன -*** *துள்ளித் துடித்துக் கீழே விழுந்தன;* ***முடித்தலை துடித்தன -*** *பொன் முடியணிந்த தலைகள் பதறி விழுந்தன;* ***தொடித் தோள் -*** *தொடியென்னும் வளைகள் பூண்ட அரக்கரின் தோள்கள்;****துடித்தன -*** *துடித்தன;* ***மணிக் குடர்துடித்தன -*** *அன்னவரின் சிறுகுடல்களும் துடித்தன;* ***தசைத் தோல்துடித்தன -*** *தசையோடு பொருந்திய தோல்களும் துடித்தன;* ***கழல் துணை துடித்தன -*** *இரண்டு கால்களும் துடித்தன;* ***இடத் தோள் துடித்தன -*** *இடப் புறத்துத் தோள்களும் துடித்தன.*

*தேர் துடித்தல் - தேர் துள்ளிக் கீழே விழுந்ததைக் குறிக்கிறது - முறிந்து விழுதல்.இடத்தோள் துடித்தன - சாகாத அரக்கர்களின் இடத்தோள் துடித்தன - ஆடவர்க்கு இடத்தோள்துடித்தல் தீ நிமித்தமாம்.*

*சொற்பொருட் பின்வருநிலையணி - துடித்தன : பன்முறை ஒரேபொருளில் அடுக்கி வந்தது.*

***3040. வாளின் வனம், வேலின் வனம், வார்***
***சிலை வனம், திண்***
***தோளின் வனம், என்று இவை***
***துவன்றி, நிருதப் பேர்***
***ஆளின் வனம் நின்றதனை,***
***அம்பின் வனம் என்னும்***

***கோளின் வன வன்***
***குழுவினின், குறைபடுத்தான்.***

***வாளின் வனம் -*** *வாட்படைகளின் தொகுதியும்;* ***வேலின் வனம் -*** *வேற்பைடையின் தொகுதியும்;* ***வார் சிலை வனம் -****விற்படைகளின் தொகுதியும்;* ***திண் தோளின் வனம் -*** *வலிய தோள்களின் தொகுதியும்;* ***என்று இவை துவன்றி -*** *ஆகிய இவை போதும் நெருங்கப் பெற்று;****நிருதப் பேர் ஆளின் வனம் நின்றதனை -*** *அரக்க வீரர்களின் பெரிய தொகுதி எதிர் நின்றதை;* ***அம்பின் வனம் என்னும் -*** *(இராமன்) தன் அம்புகளின் தொகுதியென்று சொல்லக் கூடிய;* ***கோளின் வன வன் குழுவினின் -*** *கொலைத் தொழிலையுடைய அழகான வலிய கூட்டத்தால்;* ***குறை படுத்தான் -*** *துணித்து வீழ்த்தினான்.*

*வாள் முதலிய படைக்கலங்களோடு எதிர் நின்ற அரக்கர்களின்தொகுதியை இராமபிரான் தன்னுடைய அம்புகளால் துணித்திட்டான் என்பது. வனம் - அடர்ந்த வலிய தொகுதி : (மிகுதி) பெரு மழையால் வனங்கள் அழிதல் போல அழிந்தன என்பது குறிப்பு.*

***3041. தான் உருவு கொண்ட தருமம்***
***தெரி சரம்தான்***
***மீன் உருவும்; மேருவை விரைந்து***
***உருவும்; மேல் ஆம்***
***வான் உருவும்; மண் உருவும்;***
***'வாள் உருவி வந்தார்***
***ஊன் உருவும்' என்னும் இது***
***உணர்த்தவும் உரித்தோ?***

***தான் உருவு கொண்ட தருமம் -*** *தருமமே ஒரு மனித வடிவம் கொண்டாற் போன்ற இராமபிரான்;* ***தெரி சரம் தான் -****தேர்ந்தெடுத்து எய்த அம்புதான்;* ***மீன் உருவும் -*** *நட்சத்திரங்களையும் ஊடுருவிச் செல்லும்;* ***மேருவை விரைந்து உருவும் -*** *மேரு மலையையும் விரைவாகப் புகுந்து உருவிச் செல்லும்;* ***மேல் ஆம் வான் உருவும் -*** *மேலேயுள்ளவான மண்டலத்தையும் உருவிச் செல்லும்;* ***மண் உருவும் -****பூமியையும் உருவித் துளைத்துச் செல்லும்; (என்றால்);* ***வாள் உருவி வந்தார் -*** *வாளையுருவிக் கொண்டு போரிட வந்த அரக்கர்களின்;* ***ஊன் உருவும் என்னும் இது -*** *உடம்பை ஊடுருவிச் செல்லுமென்பது;****உணர்த்தவும் உரித்தோ -*** *எடுத்துக் கூறுவதற்கும் உரியதோ? (ஆகாது).*

*நட்சத்திரம் முதலியவற்றைத் தடையற முழுதும் துளைத்துச் செல்லவல்ல கூரிய வேகமுள்ள இராமபாணம் அரக்கருடலைத் துளைத்ததென்பது தானே விளங்கும் என்றவாறு. தான் உருவு கொண்ட தருமம் - அறமூர்த்தியான இராமன்.*

***3042. அன்று இடை வளைத்தவர்***
***குலங்களொடு அடங்கச்***
***சென்று உலைவுறும்படி,***
***தெரிந்து கணை சிந்த,***
***மன்றிடை நலிந்து***
***வலியோர்கள் எளியோரைக்***
***கொன்றனர், நுகர்ந்த பொருளின்,***
***கடிது கொன்ற***

***அன்று இடை வளைத்தவர் -*** *அப்பொழுது தன்னைச் சூழ்ந்த அரக்கர்கள்;* ***குலங்களொடு அடங்க -*** *தத்தம் கூட்டங்களோடு ஒரு சேர;* ***சென்று உலைவு உறும்படி-*** *அழிந்து போகும்படி;* ***கணை தெரிந்து சிந்த-*** *இராமபிரான் அம்புகளை ஆராய்ந்தெடுத்துச் செலுத்த (அந்த அம்புகள்);* ***வலியோர்கள் -*** *வலிமை மிக்கவர்;* ***எளியோரை -*** *எளியவர்களை;* ***மன்றிடை நலிந்து கொன்றனர் -*** *வெளியிடத்தில் வருத்திக் கொன்று;* ***நுகர்ந்த பொருளின் -*** *(அவர்களிடமிருந்து கவர்ந்து) தாம் அனுபவித்த (அவர்களை விரைவில் அழிக்கும்) செல்வம் போல;* ***கடிது கொன்ற -*** *விரைவாகக் கொன்றன. வலியவர் தம்மினும் எளியவரை வருத்தி அவரிடமிருந்து கவர்ந்த பொருள் அவ் வலியவரை நாசப்படுத்துமென்பது. நலிந்து கொள்வதற்கு ஏற்ற இடமாதல் குறித்து மன்றைக் கூறினார். 16*

***3043 கடுங் கரன் எனப் பெயர்***
***படைத்த கழல் வீரன்,***
***அடங்கலும் அரக்கர்***
***அழிவுற்றிட, அழன்றான்;***
***ஒடுங்கல் இல் நிணக் குருதி***
***ஓதம்அதில் உள்ளான்***
***நெடுங் கடலில் மந்தரம் என,***
***தமியன் நின்றான்.***

***கடுங் கரன் எனப் பெயர் படைத்த -*** *கொடிய கரன் என்று பேர்பெற்ற;* ***கழல் வீரன் -*** *வீரக் கழல் பூண்ட வீரன்;* ***அரக்கர் அடங்கலும் அழிவு உற்றிட -*** *அரக்கரெல்லோரும் (போரில்) அழிவடைய;* ***அழன்றான் -*** *சினங் கொண்டான்;* ***ஒடுங்கல் இல் -*** *குறைவில்லாத;* ***நிணக் குருதி ஓதம் அதில் -*** *கொழுப்போடு கூடிய இரத்த வெள்ளத்தினிடையே;* ***உள்ளான் -*** *உள்ளவனான கரன்;* ***நெடுங் கடலில் மந்தரம் என -*** *பெரிய கடலினிடையே மந்தர மலை போல;* ***தமியன் நின்றான் -****தனித்தவனாக நின்றான்.*

*அரக்கர் எல்லோரும் போரில் அழிவெய்திட, நிணக் குருதி வெள்ளத்தில் நிற்கும் கரன் பாற்கடலைக் கடையும்பொழுது, அதனிடையில் நின்ற மந்தர மலை என்னும் மத்துப் போன்றவன் என்றார்.*

*இராமன்முன் கரன் எதிர்ப்படல்*

***3044. செங் கண் எரி சிந்த, வரி***
***வில் பகழி சிந்த,***
***பொங்கு குருதிப் புணரியுள்,***
***புகையும் நெஞ்சன்-***
***கங்கமொடு காகம் மிடைய,***
***கடலின் ஓடும்***
***வங்கம் எனல் ஆயது ஒரு***
***தேரின்மிசை-வந்தான்.***

***புகையும் நெஞ்சன் -*** *சினத்தீ மூளும் மனமுடைய அந்தக் கரன்;* ***செங்கண் எரி சிந்த -*** *சிவந்த கண்கள் நெருப்புப் பொறியைச் சொரியவும்;* ***வரிவில் பகழி சிந்த -*** *கட்டமைந்த வில் அம்புகளைப் பொழியவும்;* ***பொங்கு குருதிப் புணரியுள் -*** *மேலே பொங்கியெழுகின்ற இரத்தக் கடலிலே;* ***கங்கமொடு காகம் மிடைய -*** *கழுகுகளும் காக்கைகளும்நெருங்க;* ***கடலில் ஓடும் வங்கம் எனல் ஆயது -*** *கடலிலே விரைந்து செல்லும் கப்பலென்று உவமை சொல்லுமாறு;* ***ஒரு தேரின் மிசை வந்தான்-*** *ஒரு தேரின் மேல் வந்தான். கங்கம் - கழுகு கங்கமொடு காகம் - இவை பிணங்களைத் தின்னும் பொருட்டுப் போர்க் களத்திற்கு வந்தவை. இது கரனுக்குத் தீ நிமித்தமுமாம். குருதி வெள்ளமாக அமைந்ததற்கேற்ப அதனிடையே செல்லும் தேர் வங்கமாக உவமிக்கப் பெற்றது.*

***3045. செறுத்து, இறுதியில் புவனி***
***தீய எழு தீயின்,***
***மறத்தின் வயிரத்து ஒருவன்***
***வந்து அணுகும் முந்தை,***
***கறுத்த மணிகண்டர் கடவுட்***
***சிலை கரத்தால்***
***இறுத்தவனும், வெங் கணை***
***தெரிந்தனன், எதிர்ந்தான்.***

***இறுதியில் புவனி தீய -*** *யுகம் முடியும் ஊழிக் காலத்தில் உலகம்எரியும்படி;* ***எழுதீயின் -*** *கிளர்ந்து எழுகின்ற ஊழித் தீப்போல;* ***செறுத்து -*** *உக்கிரம் கொண்டு;* ***மறத்தின் வயிரத்து ஒருவன் -*** *கொடுமையிலும் பகைமையிலும் ஒப்பற்றவனான அந்தக் கரன்;* ***வந்து அணுகும் முந்தை -*** *வந்து நெருங்குவதற்கு முன்னே;* ***கறுத்த மணிகண்டர் -*** *(நஞ்சுண்டதால்) கருநிறங் கொண்ட நீலமணி போலும் கழுத்தையுடைய;* ***கடவுட் சிலை கரத்தால் இறுத்தவனும் -*** *சிவபிரானின் தெய்வத் தன்மையுள்ள வில்லை (ச் சீதையை மணக்கும் பொருட்டுக்) கையால் ஒடித்திட்ட இராமபிரானும்;* ***வெம் கணை தெரிந்தனன் எதிர்ந்தான் -*** *கொடிய அம்புகளை ஆராய்ந்து எடுத்து எதிரே சென்றான்.*

*அரக்கனான கரன் வருமுன்பே இராமபிரான் கடுங்கணை தெரிந்து எதிர்த்தான் என்பது.*

*சிவபிரான் தந்த வில் சனகனால் சீதையின் திருமணத்திற்கு ஒரு பந்தயமாக வைக்கப்பட்டிருந்ததென்பதும், அதனை இராமபிரான் எடுத்து வளைக்குங்கால் அவ்வில் முறிந்துவிட்டதென்பதும் வரலாறு கரனுக்கு ஊழித் தீ உவமை.*

***3046. தீ உருவ, கால் விசைய,***
***செவ்வியன, வெவ் வாய்***
***ஆயிரம் வடிச் கணை***
***அரக்கர்பதி எய்தான்;***
***தீ உருவ, கால் விசைய,***
***செவ்வியன, வெவ் வாய்***
***ஆயிரம் வடிக் கணை***
***இராமனும் அறுத்தான்.***

***தீ உருவ -*** *நெருப்புப் போன்ற வடிவையுடையனவும்;* ***கால் விசைய-*** *காற்றைப் போல வேகம் உள்ளனவும்;* ***செவ்வியன -*** *பிற இலக்கணங்கள் எல்லாம் அமைந்தவையுமான;* ***வெவ் வாய் வடிக்கணை ஆயிரம் -*** *கொடிய வாயையும் கூர்மையுமுடைய ஆயிரம் அம்புகளை ஏவி;****அரக்கர் பதி எய்தான் -*** *அரக்கர் தலைவனான கரன் இராமன் மேல் தொடுத்தான்;* ***தீ உருவ, கால் விசைய செவ்வியன -*** *அவ்வாறே நெருப்புப் போன்ற வடிவுடையனவும் காற்றுப் போல வேகமுள்ளவையும் சிறப்புடையனவும்;* ***வெவ் வாய் -*** *கொடிய நுனிகளையுடையனவுமான;* ***ஆயிரம் வடிக்கணை -*** *ஆயிரம் கூரிய அம்புகளைத் தூண்டி;* ***இராமனும் அறுத்தான் -*** *இராமபிரானும் துணித்தான்.*

*கரன் வரும் போதே ஆயிரம் அம்புகளை எய்ய இராமபிரானும்அத்தகைய கணைகளால் அவற்றையறுத்தான் என்பது. கரன் கணை செலுத்தியதையும் இராமன் அவற்றைத் துணித்ததையும் ஒரே தொடர்களால் குறித்தது. போர் உத்தியில் சமநிலை காட்டப் போலும்.*

***3047. ஊழி எரியின் கொடிய***
***பாய் பகழி ஒன்பான்,***
***ஏழ் உலகினுக்கும் ஒரு***
***நாயகனும், எய்தான்;***
***சூழ் சுடர் வடிக் கணை***
***அவற்று எதிர் தொடுத்தே,***
***ஆழி வரி விற்***
***கரனும், அன்னவை அறுத்தான்.***

***ஏழ் உலகினுக்கும் ஒரு நாயகனும் -*** *ஏழு வகையான உலகங்களுக்கெல்லாம் ஒப்பற்ற நாயகனான இராமபிரானும்;* ***ஊழி எரியின் கொடிய -*** *ஊழிக் காலத்து உலகையழிக்க வல்ல நெருப்பைக் காட்டிலும் கொடுமையுடையனவாய்;* ***பாய் பகழி ஒன்பான் -*** *பாய்ந்து செல்லும்ஒன்பது பாணங்களை;* ***எய்தான் -*** *(கரன்மேல்) தொடுத்தான்;* ***ஆழி***

***வரிவிற் கரனும் -*** *வட்டமாக வளைந்த வில்லையுடைய கரன் என்னும் அரக்கனும்;* ***சுடர் சூழ் வடிக் கணை -*** *ஒளி பரவும் கூரிய (ஒன்பது) அம்புகளை;* ***அவற்று எதிர் தொடுத்து -*** *அந்தக் கணைகளுக்கு எதிராகச் செலுத்தி;* ***அன்னவை அறுத்தான் -*** *அந்த அம்புகளைத் துணித்தான்;* ***ஏ -*** *அசை. ஏழுலகினுக்கு ஒரு நாயகன் - கீழேழு, மேலேழு ஆகிய பதினான்கு உலகங்களுக்கும் தலைவனாகிய இராமபிரான். 'செம்மாண் தனிக்கோல் உலகேழினும் செல்ல நின்றான்' (168) எனத் தயரதன் சிறப்பிக்கப் பெற்றமையால் அவனுக்குப் பின் அவன் மைந்தனான இராமபிரானுக்கும் அவ்வுரிமையுடைமை காரணமாகவும் கூறப் பெற்றது எனலாம். 17*

***3048 கள்ள வினை மாய***
***அமர் கல்வியின் விளைத்தான்;***
***வள்ளல் உருவைப் பகழி***
***மாரியின் மறைத்தான்;***
***உள்ளம் உலைவுற்று, அமரர்***
***ஓடினர் ஒளித்தார்;***
***வெள் எயிறு இதழ்ப்***
***பிறழ, வீரனும் வெகுண்டான்.***

*(அவ்வாறு அம்புகளால் இராமபாணங்களை அறுத்த கரன்)****கல்வியின்-*** *(தான் கற்றறிந்த) வித்தையினால்;* ***கள்ள மாய வினை அமர் -****வஞ்சகம் நிறைந்த மாயப் போர்;* ***விளைத்தான் -*** *செய்தான்;* ***பகழி மாரியின் -*** *(தான் எய்த) அம்பு மழையால்;* ***வள்ளல் உருவை மறைத்தான் -*** *இராமபிரானின் திருமேனியை மறையச் செய்தான் (அதைக் கண்ட);* ***அமரர் உள்ளம் உலைவுற்று -*** *தேவர்கள் மனத்தில் நடுக்கமுற்று;* ***ஓடினர் ஒளித்தார் -*** *ஓடியொளிந்து கொண்டார்கள்;* ***வீரனும் -*** *மாவீரனானஇராமபிரானும்;* ***வெள் எயிறு இதழ்ப் பிறழ -*** *தன் வெண்மையான பற்கள் உதட்டின் மேல் விளங்க (பற்களால் உதட்டைக் கடித்தவாறு);****வெகுண்டான்-*** *கோபங் கொண்டான்.*

*தேவர்களும் அஞ்சி நடுங்குமாறு கரன் மாயப் போரால் இராமனின் திருமேனியை அம்பு மழையால் மறையச் செய்தான் என்பது. கல்வி : கற்ற வித்தை மந்திரம்.*

*கள்ள மாய வினையமர் : தனது உண்மையுரு மறைந்தும், வேறு வேறு பல வடிவங் கொண்டும் நின்று பல வகையாகச் செய்யும் போர்.*

*இராமன் பிடித்த வில் ஒடிதலும் வானவர் ஏங்கி அஞ்சுதலும்*

*கலிவிருத்தம்*

***3049. 'முடிப்பென் இன்று, ஒரு***
***மொய் கணையால்' எனா,***
***தொடுத்து நின்று, உயர் தோள்***
***உற வாங்கினான்;***
***பிடித்த திண் சிலை, பேர்***

*அகல் வானிடை*
*இடிப்பின் ஓசை பட,*
*கடிது இற்றதே.*

***'இன்று -*** *இப்பொழுது;* ***ஒரு மொய் கணையால் -*** *ஏவிய அம்பு ஒன்றாலே;* ***முடிப்பென்' எனா -*** *இவனையழிப்பேன் என்று மனங் கொண்டு;* ***நின்று தொடுத்து -*** *(இராமன்) நிலை நின்று ஓர் அம்பை வில்லிலே பூட்டி;* ***உயர் தோள் உற வாங்கினான் -*** *உயர்ந்த தன் தோளையளாவும்படி(வில்லின் நாணியை) வலிய இழுத்தான்; (அப்போது);* ***பிடித்த திண் சிலை -*** *(இராமன்) கையில் பிடித்திருந்த வலிய வில்லானது;* ***பேர் அகல் வான் இடை இடிப்பின் -*** *அகன்ற பெரிய வானத்திலுண்டாகும் இடி முழக்கம் போன்ற;* ***ஓசை பட -*** *ஓசையுண்டாகுமாறு;* ***கடிது இற்றது -****விரைவிலே ஒடிந்தது.*

*ஏ : ஈற்றசை. இவனையழிப்பேனென்று இராமன் கணை தொடுத்து வில்லை வளைக்கும் பொழுது இடி போலப் பேரொலியெழ அந்த வில் முறிந்தது என்பது.*

*3050. வெற்றி கூறிய வானவர்,*
*வீரன் வில்*
*இற்ற போது, துணுக்கம்*
*உற்று ஏங்கினார்;*
*மற்று ஓர் வெஞ் சிலை*
*இன்மை மனக் கொளா,*
*'அற்றதால் எம் வலி'*
*என, அஞ்சினார்.*

***வெற்றி கூறிய வானவர் -*** *(இராமபிரானின்) வெற்றியைப் புகழ்ந்து சொல்லிக் கொண்டிருந்த தேவர்கள்;* ***வீரன் வில் இற்ற போது -*** *இராமபிரானின் வில் ஒடிந்தபொழுது;* ***துணுக்கம் உற்று ஏங்கினார் -*** *நடுக்கமுற்று வருந்தினார்கள்;* ***மற்று ஓர் வெம்சிலை இன்மை மனக் கொளா -*** *(அந்த இராமனுக்கு) வேறொரு கொடிய வில் இல்லாததை மனத்திலே கொண்டு;* ***எம் வலி அற்றது என அஞ்சினார் -*** *எமது வலிமையொழிந்தது என்று அச்சங் கொண்டனர்.* ***ஆல் -*** *அசை.*

*இராமபிரானின் வில் ஒடிந்ததால் இனி அரக்கர்க்கே வெற்றியென்றும், அதனால் தமக்கு உதவி செய்வார் வேறு இல்லாமையறிந்து தம் வலிமையற்றது என்றும், இனி அரக்கரால் பெரிதும் இடருற வேண்டுமென்றும் அஞ்சினார் வானவர் என்பது.*

*மற்றொரு வெஞ்சிலையின்மை மனக் கொளா - சேம வில்லொன்று துணையில்லாததைக் கருதி.*

வருணன் கொடுத்த வில்லை இராமன் பெறுதல்

***3051. என்னும் மாத்திரத்து,***
***ஏந்திய கார்முகம்***
***சின்னம் என்றும்,***
***தனிமையும், சிந்தியான்;***
***மன்னர் மன்னவன்***
***செம்மல், மரபினால்,***
***பின் உறத் தன் பெருங்***
***கரம் நீட்டினான்.***

***என்னும் மாத்திரத்து -*** *அவ்வாறு (இராமனது வில்) ஒடிந்த அளவிலே;* ***மன்னவர் மன்னவன் செம்மல் -*** *அரசர்களுக்கு அரசனான தசரத மன்னனின் மகனான இராமன்;* ***ஏந்திய கார்முகம் சின்னம் என்றும்-*** *(தான்) பிடித்திருந்த வில் துணிபட்டதென்பதையும்;* ***தனிமையும் -****(தான்) தனித்திருக்கும் தன்மையையும்;* ***சிந்தியான் -*** *மனத்தில் கருதாது;* ***மரபினால் -*** *பழைய போரின் மரபுப் படி;* ***தன் பெருங் கரம் பின் உற நீட்டினான் -*** *தனது நீண்ட கையைப் பின்புறம் செல்லுமாறு நீட்டினான்.*

*தனிமை - வில்லாகிய துணையொன்றும் இல்லாமை. இராமன் முன்பு பரசுராமனிடம் தான் பெற்ற விட்டுணுதனுசை வருணனிடத்தில் கொடுத்து, அதனை நன்றாகப் பாதுகாத்து வைத்திருக்கும்படியும் உரிய சமயத்தில் கொண்டு வந்து கொடுக்குமாறும் வேண்டியிருந்தானாதலின் அக் குறிப்பால் வில் ஒடிந்தது குறித்து மனந் தளராமல் அந்த வில்லின் வரவுக்காகப் பின்னே கைந் நீட்டினான் என்பார் 'மரபினால் பின்னுறத் தன் பெருங்கரம் நீட்டினான்' என்றார்.*

***3052. கண்டு நின்று, கருத்து***
***உணர்ந்தான் என,***
***அண்டர் நாதன் தடக்***
***கையில், அத் துணை,***
***பண்டு போர்***
***மழுவாளியைப் பண்பினால்***
***கொண்ட வில்லை,***
***வருணன் கொடுத்தனன்.***

***வருணன் -*** *(வானத்திலிருந்து வந்து போரைப் பார்த்து நின்ற) வருண தேவன்;* ***கண்டு நின்று -*** *(இராமன் பின்னால் கையை நீட்டியதைப்) பார்த்து நின்று;* ***கருத்து உணர்ந்தான் என -*** *(அப் பெருமானின்) மனக் கருத்தை யறிந்தவனாகி;* ***பண்ட போர் மழு வாளியை -*** *முன்பு போர்க்கு உரிய கருவியாக மழுவைக் கொண்டவனான பரசுராமனிடமிருந்து;****பண்பினால் கொண்ட வில்லை -*** *(இராமன்) உரிமையால் கொண்ட விட்டுணுதனுசு என்னும் வில்லை;* ***அத் துணை -*** *அச் சமயத்தில்;* ***அண்டர் நாதன் தடக் கையில் -*** *தேவர்களுக்குத் தலைவனான இராமபிரானின் நெடிய கரத்திலே;* ***கொடுத்தனன் -*** *கொடுத்திட்டான்.*

*மழுவாளி - மழுவையாள்பவன், பரசுராமன்.*

***3053.* கொடுத்த வில்லை, அக்**
**கொண்டல் நிறத்தினான்**
**எடுத்து வாங்கி, வலம் கொண்டு,**
**இடக் கையில்**
**பிடித்த போது, நெறி**
**பிழைத்தோர்க்கு எலாம்**
**துடித்தவால், இடக்**
**கண்ணொடு தோளுமே.**

***கொடுத்த வில்லை -*** *(வருணன் கொடுத்த அந்த வில்லை;* ***அக் கொண்டல் நிறத்தினான் -*** *நீர் கொண்ட மேகம் போன்ற கரிய நிறத்தையுடைய இராமபிரான்;* ***எடுத்து -*** *கையில் ஏந்தி;* ***வலம் கொண்டு வாங்கி -*** *வலிமையால் வளைத்து;* ***இடக் கையில் பிடித்த போது -****இடக் கையால் பிடித்த பொழுது;* ***நெறி பிழைத்தோர்க்கு எலாம் -*** *தரும நெறியிலிருந்து தவறிய அரக்கர் எல்லோர்க்கும்;* ***இடக் கண்ணொடு தோளும் துடித்த -*** *இடக் கண்ணும் இடத்தோளும் துடித்தன;*

*ஆல். ஏ : அசைகள். வாங்குதல் - வளைத்தல். ஆடவர்க்கு இடக்கண்ணும் தோளும் துடித்தல் தீய நிமித்தம். கொண்டல் - தொழிலாகு பெயர்.*

*இராமனும் கரனும் எதிர்ரெதிர் பொருதல்*

***3054.* ஏற்றி நாண், இமையாமுன்**
**எடுத்து, அது,**
**கூற்றினாரும் குனிக்க,**
**குனித்து, எதிர்**
**ஆற்றினான்அவன் ஆழிஅம்**
**தேர், சரம்**
**நூற்றினால், நுண்**
**பொடிபட, நூறினான்.**

*(இவ்வாறு)* ***இமையாமுன் -*** *கண் இமைக்கும் நேரத்திலே;* ***அது எடுத்து -*** *அந்த வில்லையேந்தி;* ***கூற்றினாரும் குனிக்க -*** *யமனும் கண்டு அஞ்சும்படி;* ***குனித்து -*** *வளைத்து;* ***நாண் ஏற்றி -*** *நாணையிழுத்துப் பூட்டி;* ***சரம் நூற்றினால் -*** *நூறு அம்புகளால்;* ***எதிர் ஆற்றினான் அவன் -*** *எதிரே வந்து போர் செய்தவனான அந்த அரக்கனுடைய;* ***ஆழி அம் தேர்-*** *வலிய சக்கரம் பூண்ட அழகிய தேரை;* ***நுண் பொடிபட நூறினான் -*** *நுண்ணிய பொடியாகுமாறு அழித்தான். எதிர்த்த கரனது தேரை இராமபிரான் நூறு அம்புகளால் அழித்தான் என்பது. கூற்றினாரும் குனித்தது - அதுகாறும் இராவணனது ஆணைக்கு அஞ்சி அரக்கரிடம் அணுகாதிருந்து, இப்பொழுது இராமனின் துணை வலியால் இனி அவ்வரக்கர்களைப் பற்றலாம் என்றமையால். 18*

*3055 எந்திரத் தடந் தேர்*
*இழந்தான்; இழந்து,*
*அந்தரத்திடை ஆர்த்து எழுந்து,*
*அம்பு எலாம்*
*சுந்தரத் தனி வில்லிதன்*
*தோள் எனும்*
*மந்தரத்தில் மழையின்*
*வழங்கினான்.*

*(கரன்)* ***எந்திரத் தடந் தேர் இழந்தான் -*** *வலிய சக்கரம் பூண்ட தனது பெரிய தேரை இழந்தான்;* ***இழந்து -*** *(அவ்வாறு) தேரையிழந்ததனால்;* ***ஆர்த்து அந்தரத்திடை எழுந்து -*** *ஆரவாரம் செய்து கொண்டு வானத்திலே கிளம்பி;* ***சுந்தரத் தனி வில்லிதன் தோள் எனும் மந்தரத்தில் -*** *அழகிய ஒப்பற்ற வில்லையுடைய இராமபிரானின் தோளாகிய மந்தர மலையின் மேல்;* ***மழையின் -*** *மழை பொழிந்தாற் போல;* ***அம்பு எலாம் வழங்கினான் -*** *(தன்) அம்புகளையெல்லாம் சொரிந்தான்.*

*தேரை இழந்த அரக்கனான கரன் வானத்தில் ஆர்த்தெழுந்து இராமனுடைய தோள் மேல் மழை போல அம்புகளைச் சொரிந்தான் என்பது. அந்த அம்புகள் இராமனின் தோள்களுக்குச் சிறிதும் அழிவுண்டாக்காமையை 'மந்தரத்தில் மழையின்' என்னும் உவமை விளக்கும். மந்தரம் பாற்கடலைக் கலக்கியது; அது போல இராமனின் தோள் அரக்கர் சேனைக் கடலைக் கலக்குவதென்பார் 'தோளெனும் மந்தரத்தின்' என்றார்.*

*3056. தாங்கி நின்ற*
*தயரத ராமனும்,*
*தூங்கு தூணியிடைச்*
*சுடு செஞ் சரம்*
*வாங்குகின்ற வலக்*
*கை ஓர் வாளியால்,*
*வீங்கு தோளொடு*
*பாரிடை வீழ்த்தினான்.*

***தாங்கி நின்ற தயரத ராமனும் -*** *(கரன் சொரிந்த அம்புகளைத் தன் மேல் விழாதபடி) தடுத்து நின்ற தசரதனின் மைந்தனான இராமபிரானும்;* ***தூங்கு தூணியிடை -*** *(தோளில்) கட்டப்பட்ட அம்பறாத் தூணியிலிருந்து;* ***சுடு செஞ்சரம் வாங்குகின்ற -*** *வெம்மையான சிவந்த அம்புகளையெடுத்து விடுகின்ற;* ***வலக் கை -*** *அக்கரனின் வலக்கையை;* ***வீங்கு தோளொடு -*** *பருத்த தோள்களோடு;* ***ஓர் வாளியால் பாரிடை வீழ்த்தினான் -*** *ஓர் அம்பினால் துண்டித்து நிலத்தின் மேல் விழச் செய்தான். இராமனும் கரனது அம்பு வாங்கும் வலக் கையை ஓர் அம்பினால் தோளோடும் வீழ்த்தினான் என்பது. தூங்குதல் - தொங்குதல்; வாங்குதல் - வெளியே எடுத்தல்.*

*3057. வலக் கை வீழ்தலும், மற்றைக்*
*கையால் வெற்றி*

***உலக்கை, வானத்து உரும்***
***என, ஓச்சினான்;***
***இலக்குவற்கு முன்***
***வந்த இராமனும்***
***விலக்கினான், ஒரு வெங்***
***கதிர் வாளியால்.***

***வலக்கை வீழ்தலும் -*** *(தனது) வலக்கை வெட்டுண்டு கீழே விழுந்தவுடனே;* ***மற்றைக் கையால் -*** *(கரன்) இடக் கையினால்;****வெற்றி உலக்கை -*** *வெற்றி தரக் கூடிய உலக்கையை;* ***வானத்து உரும் என -*** *மேகத்தினிடையே தோன்றும் இடியைப் போல;* ***ஓச்சினான் -*** *உயரேஎடுத்து (இராமன் மேல்) வீசினான்;* ***இலக்குவற்கு முன் வந்த இராமனும் -*** *இலக்குவனுக்கு முன்னே பிறந்த இராமனும்;* ***ஒரு வெம் கதிர் வாளியால் -*** *கொடிய ஒளியுடைய ஓர் அம்பினால்;* ***விலக்கினான் -*** *(தன் மேல் படாதவாறு) தடுத்து விலக்கினான்.*

*வலக் கையை இழந்த கரன் இடக்கையால் உலக்கையை இராமன் மேல் எறிய, அவ் இராமனும் ஓர் அம்பினால் அதைத் தடுத்தான் என்பது. இலக்குவற்கு முன் வந்த இராமன் : இரட்டுற மொழிதலால் இலக்குவனுக்கு முன்னே பிறந்த இராமன் எனவும், போர்க்கெழுந்த இலக்குவனைத் தடுத்து அவனுக்கு முன்னே வந்த இராமன் எனவும் பொருள் கொள்ளலாம்.*

***3058. விராவரும் கடு வெள்***
***எயிறு இற்றபின்,***
***அரா அழன்றது அனைய***
***தன் ஆற்றலால்***
***மரா மரம் கையில் வாங்கி***
***வந்து எய்தினான்;***
***இராமன் அங்கு ஓர்***
***தனிக் கணை ஏவினான்.***

***விராவரும் -*** *பொருந்தியுள்ள;* ***கடு வெள் எயிறு -****விடத்தையுடைய தன் வெண்மையான பற்கள்;* ***இற்றபின் -*** *முறிபட்ட பின்பு;* ***அரா அழன்றது அனைய -*** *நாகப் பாம்பு சீறியதைப் போன்ற;* ***தன் ஆற்றலால்-*** *தனது வல்லமையால்;* ***மராமரம் கையில் வாங்கி -*** *(கரன்) ஒரு மராமரத்தைக் கையிலே எடுத்துக் கொண்டு;* ***வந்து எய்தினான் -*** *(இராமனருகே)நெருங்கி வந்தான்;* ***இராமன் அங்கு -*** *இராமன் அப்பொழுது;* ***ஓர் தனி கணை ஏவினான் -*** *ஒப்பற்ற ஓர் அம்பினை அவன் மேல் செலுத்தினான்.*

*வலக்கையும், உலக்கையும் அறுபட்ட பின்பும் கரன் சீறி வந்த வல்லமைக்கு விடப் பற்கள் முறிந்த பின்பு நாகப் பாம்பு சீறுதலை உவமை கூறினார். விரா வரும் ஒரு சொல். விராவ அரு எனப் பிரித்து அருகில் நெருங்கவொண்ணாத கடு என்றும் பொருள் கொள்ளலாம். இம் மூன்று பாடல்களிலும் காப்பியத் தலைவனின் பெயர் தொடர்ந்து ஒவ்வொரு விதமாக வந்துள்ளது.*

***3059. வரம் அரக்கன்***
***படைத்தலின், மாயையின்,***
***உரமுடைத் தன்மையால்,***
***உலகு ஏழையும்***
***பரம் முருக்கிய***
***பாவத்தினால், வலக்***
***கரம் என, கரன்***
***கண்டம் உற்றான்அரோ.***

***வரம் படைத்தலின் -*** *வரங்கள் பெற்றுள்ளமையாலும்;* ***மாயையின் -*** *மாயைகளைக் கொண்டுள்ளமையாலும்;* ***உரம் உடைத் தன்மையால் -*** *வலிமையைப் பெற்றுள்ளமையாலும்;* ***அரக்கன் -*** *அரக்கனான இராவணன்;* ***உலகு ஏழையும் -*** *ஏழுலகத்து உயிர்களையும்;* ***பரம் முருக்கிய -*** *மிகுதியாக அழித்த;* ***பாவத்தினால் -*** *தீவினையால்;* ***கரன் வலக்கரம் என-*** *கரன் முன்பு வலக்கை துணிக்கப்பட்டது போல;* ***கண்டம் உற்றான் -****இப்பொழுது தனது கழுத்தறுபட்டான்.*

*அரோ - ஈற்றசை. மிகப் பெருஞ் சேனைக்குத் தலைவனாய் மிக்க வலியவனாக இராவணனுக்குத் தம்பி முறையில் நின்ற கரன் அழிந்தது இராவணனின் மிக்க வருத்தத்துக்கும் வலிமைக் குறைவிற்கும் காரணமாதலைக் கொண்டு வர பலமும், மாயா பலமும், உடல் வலிமையும் ஆகிய இவ் வலிமைகளால் இராவணன் எல்லாவுலகத்தையும் நலிந்த தீவினையால் கரன் அழிந்தான் என்றார். கழுத்து அறுபட்டதற்குக் கையறுபட்டதையுவமை கூறினார். கரன் இராவணனுக்கு வலக்கரம்போன்றவன். என்று குறிப்பு நயம் காண்க.*

*வானவர் மகிழ்தல்*

***3060. ஆர்த்து எழுந்தனர்,***
***ஆடினர், பாடினர்,***
***தூர்த்து அமைந்தனர், வானவர்***
***தூய் மலர்;***
***தீர்த்தனும் பொலிந்தான்,***
***கதிரோன் திசை***
***போர்த்த மென் பனி***
***போக்கியது என்னவே.***

*(அப்பொழுது)* ***வானவர் -*** *தேவர்கள்;* ***ஆர்த்து எழுந்தனர் -*** *ஆரவாரஞ் செய்து எழுந்து;* ***ஆடினர் பாடினர் -*** *ஆடிப் பாடிக் கொண்டு;* ***தூய்மலர் தூர்த்து -*** *தூய்மையான கற்பக மலர்களை (இராமன் மேல்) பொழிந்து;* ***அமைந்தனர் -*** *நின்றார்கள்;* ***தீர்த்தனும் -*** *தூயவனான இராமபிரானும்;* ***திசை போர்த்த -*** *திசையெங்கும் மூடிய;* ***மென் பனி -***

*மென்மையான பனியை;* ***கதிரோன் -*** *சூரியன்;* ***போக்கியது என்ன -****போக்கி விளங்கியது போல;* ***பொலிந்தான் -*** *(பகையழித்து) விளங்கினான்.*

*கதிரவன் திசையெங்கும் கவிந்த பனியைப் போக்குவது போல இராமன் தன்னைச் சூழ்ந்த அரக்கர் கூட்டத்தை எளிதில் விரைவிலே அழித்தான் என்பது. இதில் இராமனைக் கதிரவனாகவும் போரில் சூழ்ந்திருந்த அரக்கர்களை மென்பனியாகவும் உவமித்தார்.*

*இராமன் சீதையை அணுகுதல்*

***3061. முனிவர் வந்து முறை***
***முறை மொய்ப்புற,***
***இனிய சிந்தை***
***இராமனும் ஏகினான்,***
***அனிக வெஞ் சமத்து ஆர்***
***உயிர் போகத் தான்***
***தனி இருந்த உடல்***
***அன்ன, தையல்பால்.***

***முனிவர் -*** *முனிவர்கள் பலர்;* ***முறை முறை வந்து -*** *மேன் மேலும் வரிசை வரிசையாக வந்து;* ***மொய்ப்புற -*** *நெருங்கிச் சூழ்ந்து கொள்ள;* ***இனிய சிந்தை இராமனும் -*** *நல்ல மனத்தையுடைய இராமனும்;****அனிக வெஞ் சமத்து -*** *அரக்கப் படைகளோடு செய்யும் கொடிய போரில்;****ஆர் உயிர் போக -*** *தன் அரிய உயிர் நீங்கிச் செல்ல;* ***தான் தனி இருந்த -*** *தனித்து (உயிரில்லாமல்) கிடந்த;* ***உடல் அன்ன தையல்பால் -*** *உடம்பையொத்த சீதையின் இடத்திற்கு;* ***ஏகினான் -*** *சென்றான். இராமன் அரக்கரோடு போர் செய்வதற்குப் பிரிந்து செல்லத் தான் பர்ண சாலையில் தனியேயிருந்த சீதைக்கு, உயிர் போகத் தனித்துக் கிடந்த உடம்பை உவமை கூறினார். இதனால் உயிர்க் காதலன் ஆன இராமனிடம் சீதைக்குள்ள அன்பு மிகுதி புலனாகும். இராமனை உயிராகவும் பிராட்டியை உடலாகவும் கம்பர் பல இடங்களில் குறிக்கும் இயல்பினர். (1249, 3473, 10009)* *18*

***3062 விண்ணின் நீங்கிய***
***வெய்யவர் மேனியில்***
***புண்ணின் நீரும்***
***பொடிகளும் போய் உக,***
***அண்ணல் வீரனைத்***
***தம்பியும் அன்னமும்***
***கண்ணின் நீரினில்***
***பாதம் கழுவினார்.***

***விண்ணில் நீங்கிய -*** *போரில் இறந்து வீரசுவர்க்கம் அடைந்த;* ***வெய்யவர் மேனியில் -*** *கொடிய அரக்கர்களின் உடலில் ஏற்பட்ட;* ***புண்ணின் நீரும் -*** *புண்களிலிருந்து வந்த*

*இரத்தமும்;* ***பொடிகளும் -*** *(அந்தப் போர்க் களத்திலுள்ள) தூசிகளும்;* ***போய் உக -*** *நீங்கிவிடும்படி;* ***அண்ணல் வீரனை -*** *பெருமை மிக்க வீரனாகிய இராமபிரானை;* ***தம்பியும் அன்னமும் -*** *இலக்குவனும் சீதையும்;* ***கண்ணின் நீரினால் -*** *(தங்கள்) கண்ணீரால்;* ***பாதம் கழுவினார் -*** *திருவடிகளைக் கழுவினார்கள்.*

*இராமன் மீண்டு வருகையில் இலக்குவனும் சீதையும் அவ் இராமனின் திருவடிகளில் விழுந்து வணங்கும்போது அவர் தம் கண்களிலிருந்துபெருகிய ஆனந்தக் கண்ணீர் அத் திருவடிகளில் வழிந்தமை அரக்கரின் இரத்தமும் போர்க்களப் புழுதியும் அத் திருவடிகளில் படிந்திருந்தவற்றை நீர் கொண்டு கழுவுதல் போலுமென்பது தற்குறிப்பேற்றவணி. அன்னம் : உவமவாகுபெயர்.*

***3063. மூத்தம் ஒன்றில், முடிந்தவர்***
***மொய் புண்ணீர்***
***நீத்தம் ஓடி, நெடுந்***
***திசை நேர் உற***
***கோத்த வேலைக் குரல்***
***என, வானவர்***
***ஏத்த, வீரன இனிது***
***இருந்தான் அரோ.***

***மூத்தம் ஒன்றில் -*** *ஒரு முகூர்த்த நேரத்திலே;* ***முடிந்தவர் -****இறந்த அந்த அரக்கர்களின்;* ***மொய் புண் நீர் நீத்தம் -*** *மிகுதியாகத் திரண்ட இரத்த வெள்ளம்;* ***ஓடி -*** *ஓடிச் சென்று;* ***நெடுந்திசை நேர் உற -****நெடிய திசைகளின் எல்லையில் சேர்ந்திட;* ***வீரன் -*** *இராமபிரான்;* ***கோத்த வேலைக் குரல் என -*** *கோத்தாற் போன்ற (அலைகள் ஒழுங்குபட்ட) கடலினது முழக்கம் போல;* ***வானவர் ஏத்த -*** *தேவர்கள் துதி செய்துஆரவாரிக்க;* ***இனிது இருந்தான் -*** *இனிமையாக இருந்தான். அரோ : ஈற்றசை. தேவர்கள் துதித்ததால் எழுந்த ஒலி கடல் ஒலித்தல் போலும் என்பது.*

*மூத்தம் : முகூர்த்தம் - இரு நாழிகைப் பொழுது என்பர்.*

*சூர்ப்பணகை அழுது புலம்பி, இலங்கைக்கு ஏகுதல்*

***3064. இங்கு நின்றது***
***உரைத்தும்: இராவணன்***
***தங்கை தன் கை,***
***வயிறு தகர்த்தனள்;***
***கங்குல் அன்ன கரனைத்***
***தழீஇ, நெடும்***
***பொங்கு வெங் குருதிப்***
***புரண்டாள் அரோ.***

***இங்கு நின்றது -*** *இவ்விடத்தில் (சொல்லாமல்) எஞ்சி நின்ற செய்தியை;* ***உரைத்தும் -*** *இனிச் சொல்லுவோம்;* ***இராவணன் தங்கை -*** *இராவணன் தங்கையான சூர்ப்பணகை;* ***தன் கை வயிறு தகர்த்தனள் -*** *தன் கைகளால் வயிற்றில் அடித்துக் கொண்டு;* ***கங்குல் அன்ன கரனைத் தழீஇ -*** *இருளையொத்த மேனியையுடைய கரனைத் தழுவி;* ***நெடும்பொங்கு வெம் குருதிப் புரண்டாள் -*** *மேலே பொங்கியெழுந்த நெடிய வெப்பமான இரத்த வெள்ளத்தில் விழுந்து புரண்டாள்.*

*அரோ : ஈற்றசை. கரன் என்றது அவனது உயிர் நீத்த உடலை. தழீஇ சொல்லிசையளபெடை. வயிறு தகர்த்தல் - சோகமுற்ற மகளிரின் இயல்பு.*

***3065. 'ஆக்கினேன் மனத்து ஆசை; அவ்***
***ஆசை என்***
***மூக்கினோடு முடிய,***
***முடிந் திலேன்***
***வாக்கினால், உங்கள்***
***வாழ்வையும் நாளையும்***
***போக்கினேன்; கொடியேன்'***
***என்று போயினாள்.***

***மனத்து -*** *என் மனத்தில்;* ***ஆசை ஆக்கினேன் -*** *(இராமன்பால்)ஆசையை வளர்த்தேன்;* ***அவ் ஆசை -*** *அந்த (வேண்டாத) ஆசை;* ***என் மூக்கினோடு முடிய -*** *என் மூக்கு முதலியன அறுபட்டதோடு முடிந்தொழிய;* ***முடிந்திலேன் -*** *(அவ்வளவில்) இறந்து படாத நான்;* ***வாக்கினால் -*** *என் வாய்ச் சொற்களால்;* ***உங்கள் வாழ்வையும் நாளையும் போக்கினேன் -*** *உங்களுடைய வாழ்க்கையையும் வாழ்நாளையும் ஒழித்தேன்;* ***கொடியேன் -*** *(ஆதலால்) மிகவும் கொடியவளாவேன்;* ***என்று போயினாள் -*** *என்று புலம்பிக் கொண்டு அந்த இடத்தைவிட்டுச் சென்றாள்.*

*நான் இராமன்பால் ஆசை வைத்தேன்; அத் தகாத ஆசை என்னுடைய மூக்கு ஆகியவற்றைப் போக்கிற்று; அதனால் நாணமுற்று எனது உயிரைப் போக்கியிருக்க வேண்டும்; ஆனால், அவ்வாறு இறந்திடாமல் 'எம்மவரே' இராமலக்குவரின் உயிரைப் போக்குங்கள் என்று உங்களை ஏவி, உங்கள் செல்வ வாழ்வையும், உயிர் வாழ்க்கையையும் ஒழிக்கக் காரணமானேன்; ஆகையால் நான் கொடியவள்' என்று தன்னை நொந்தவாறு சூர்ப்பணகை சென்றாள் என்பது.*

***3066. அலங்கல் வேற் கை***
***அரக்கரை ஆசு அறக்***
***குலங்கள் வேர் அறுப்பான்***
***குறித்தாள், உயிர்***
***கலங்கு சூறை வன் போர்***
***நெடுங் கால் என,***

**இலங்கை மா நகர் நொய்தின்
சென்று எய்தினாள்.**

***அலங்கல் வேற் கை அரக்கரை -*** *வெற்றி மாலையணிந்த வேலைக் கையிலே கொண்ட அரக்கர்களை;* ***குலங்கள் ஆசு அற வேர் அறுப்பான்-*** *குலங்கள் அடியோடு ஒழிய வேரறுக்கும் பொருட்டு;* ***குறித்தாள் -*** *எண்ணினவளாய் (சூர்ப்பணகை);* ***உயிர் கலங்கு வன் போர் சூறை நெடுங் கால் என -*** *உலகத்து உயிர்கள் கலங்கியழிதற்குக் காரணமான வன்மையாகத் தாக்கும் பெரிய சூறாவளியைப் போல;* ***நொய்தின் சென்று -*** *விரைவாகச் சென்று;* ***இலங்கை மா நகர் எய்தினாள் -*** *இலங்கை மாநகரை அடைந்தாள். சூர்ப்பணகை இலங்கை சென்று, சீதையைத் தான் கவரத் தொடங்கியது முதல் கரன் முதலியோர் சேனையோடும் மடிந்தமை ஈறாகவுள்ள செய்திகளைக் கூறுதல் - உடனே இராவணன் வந்து சீதையையெடுத்துப் போதற்கும் அது இராவணன் முதலான அரக்கர்களின் நாசத்திற்கும் காரணமாதல் பற்றி இவள் சென்று செய்தி கூறக் கருதுவதை மற்றை யரக்கரையும் அழிக்கக் கருதியதாக நினைந்து, அரக்கரை ஆசறக் குலங்கள் வேரறுப்பான் குறித்தாள்' என்றார். தற்குறிப்பேற்றவணி.*

## சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம்

*இராவணன் தங்கை சூர்ப்பணகை தன் குற்றம் மறைத்துத் தனக்குப் பகையாகி விட்ட இராம இலக்குவரைப் பழி தீர்க்க நினைந்து அச்சூழ்ச்சிக்கு இராவணனை உளப்படுத்தும் முயற்சி மேற் கொள்கிறாள். எனவே இப்படலம் சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம் எனப்பட்டது.*

*சில சுவடிகளில் இப்படலமும் அடுத்த படலமும் சேர்த்து மாரீசன் வதைப் படலம் என்று அழைக்கப் பெறவும் காண்கிறோம்.*

*சூர்ப்பணகை அலங்கோலமாக வருங்கால் இராவணன் அவைக்களத்தே அமர்ந்திருந்த மாட்சியுடன் இப்படலம் தொடங்குகின்றது. சூர்ப்பணகை கோலம் கண்ட நகர மாந்தர் நிலையும், அவள் தமையனிடம் சென்று தன் கருத்துக்கு ஏற்ப நிகழ்ந்தவற்றை வருணித்தலும் தொடர்கின்றன. சீதையின் அழகைச் சூர்ப்பணகை நயமுற எடுத்துரைத்தலும். அது கேட்டு இராவணன் காமம் மீதூரப் பெறுதலும் விளக்கப்படுகின்றன. தன் நிலை திரிந்த இராவணன் பருவ காலங்களை மாற்றியும், சந்திரனைப் பழித்தும் காம நோயால் துன்புறுகிறான். சீதையின் உருவெளிப்பாட்டுத் தோற்றத்தால் மதிமயங்குதலும், சந்திர காந்த மண்டபம் சென்றும் துன்பம் மாறாது தென்றலைச் சீறுதலும் இப்படலச் செய்திகளாக விரிகின்றன.*

*சூர்ப்பணகை வரும்பொழுது, இராவணன் இருந்த நிலை*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3067. இரைத்த நெடும் படை அரக்கர் இறந்ததனை***
***மறந்தனள், போர் இராமன் துங்க***
***வரைப் புயத்தினிடைக் கிடந்த பேர் ஆசை***
***மனம் கவற்ற, ஆற்றாள் ஆகி,***
***திரைப் பரவைப் பேர் அகழித் திண்***
***நகரில் கடிது ஓடி, 'சீதை தன்மை***
***உரைப்பென்' எனச் சூர்ப்பணகை வர, இருந்தான்***
***இருந்த பரிசு உரைத்தும் மன்னோ.***

***இரைத்த நெடும் படை அரக்கர்** - ஆரவாரம் செய்த பரந்த பெரிய படையுடைய (கரன் முதலாகிய) அரக்கர்கள்; **இறந்ததனை மறந்தனள்** - மடிந்தொழிந்ததை (சூர்ப்பணகை) மறந்து போனாள்; **போர் இராமன்** - போர்த் திறத்தில் சிறந்த இராமபிரானுடைய; **துங்கவரைப் புயத்தினிடை** - உயர்ந்தமலைகளைப் போன்ற தோள்களின் இடத்து; **கிடந்த பேர் ஆசை** -(தான் கொண்ட) மிக்க ஆசை; **மனம் கவற்ற** - மனத்தை வருத்துதலால்; **ஆற்றாள் ஆகி** - (அத்துன்பத்தைப்) பொறுத்துக் கொள்ளாதவளாய்; **திரைப் பரவைப் பேர் அகழி** - அலை கடலையே பெரிய அகழியாகக் கொண்ட, **திண் நகரில்** - வலிமை வாய்ந்த இலங்கை நகருக்குள்;**கடிது ஓடி** - விரைந்தோடி வந்து; **'சீதை தன்மை உரைப்பென்' என** - சீதையின் அழகுச் சிறப்பை (இராவணனுக்குக்) கூறுவேன்*

*என்று எண்ணியவளாய்;* ***சூர்ப்பணகை வர -*** *சூர்ப்பணகை வந்த போது;* ***இருந்தான் இருந்த பரிசு -*** *அங்கிருந்த இராவணன் (அரசவையில்) வீற்றிருந்த கோலத்தை;* ***உரைத்தும் -*** *சொல்லுகின்றோம். (மன் ஓ - அசைகள்).*

*இராமன் அழகில் கொண்ட காமத்தால் எண்ணற்ற வீரர்களின் மரணத்தையும் மறந்தாள் இராமனை அடைவதற்குச் சீதையே தடையெனக் கருதி அவளைக் குறித்துத் தமையனிடம் பேச அவள் மறக்கவில்லை என்ற குறிப்பை உணர்த்துகின்றார். நில அரண், மலை அரண். காட்டரண் என்ற வரிசையில் நீர் அரண் இயற்கையாகவே அமைந்திருந்ததைத் திரைப் பரவைப் பேரகழி' என்பதனால் சுட்டினார்.*

*முதன் முதல் இராவணன் அறிமுகமாகும் இடமாகையால் பின்னர் ஏற்படவிருக்கும் வீழ்ச்சிக்கு முரணாக நகரின் திண்மையும், இராவணன் மாட்சி மிக்க வீற்றிருப்பும் சொல்லத் தொடங்குகின்றார்.*

***3068. நிலை இலா உலகினிடை நிற்பனவும்***
***நடப்பனவும் நெறியின் ஈந்த***
***மலரின்மேல் நான்முகற்கும் வகுப்பு அரிது,***
***நுனிப்பது ஒரு வரம்பு இல் ஆற்றல்***
***உலைவு இலா வகை இழைத்த தருமம் என,***
***நினைந்த எலாம் உதவும் தச்சன்***
***புலன் எலாம் தெரிப்பது, ஒரு புனை மணி***
***மண்டபம் அதனில் பொலிய மன்னோ,***

***நிலை இலா -*** *நிலையற்றதான;* ***உலகினிடை -*** *உலகத்தில்;* ***நிற்பனவும் -*** *(இடம் பெயராது) நிலை நிற்கும் இயல்புடைய தாவரப் பொருள்களையும்;* ***நடப்பனவும் -*** *(இடம் பெயரும் இயல்பினவான) சங்கமப் பொருள்களையும்;* ***நெறியின் ஈந்த -*** *முறையாகப் படைத்த;* ***மலரின் மேல் நான்முகற்கும் -*** *(திருமாலின்) உந்திக் கமலத்தின் மேலமர்ந்த பிரமனுக்கும்;* ***வகுப்பு அரிது -*** *படைத்தற்கு அரியதாகவும்;* ***நுனிப்பது ஒரு வரம்பு இல் ஆற்றல் -*** *நுட்பமாக அறிகிற ஒப்பற்றதும் அளவற்றதுமாகிய வல்லமையால்;* ***உலைவு இலா வகை இழைத்த -*** *(தமக்கும் பிறர்க்கும்) தீமை தராத வகையில் செய்யப் பெற்ற;* ***தருமம் என -*** *அறத்தினைப் போன்று;* ***நினைந்த எலாம் உதவும் -*** *நினைத்த அனைத்தையும் நினைத்தபடியே உண்டாக்கித் தரவல்ல;* ***தச்சன் -*** *தெய்வத்தச்சனாகிய விசுவகர்மாவின்;* ***புலன் எலாம் -*** *சிற்ப நூலறிவு முழுவதையும்;* ***தெரிப்பது -*** *எடுத்துக் காட்டுவதாகிய;* ***ஒரு -*** *ஒப்பற்ற;* ***புனை மணி மண்டபம் அதனில் -*** *மணிகள் குயிற்றிச் செய்யப் பெற்ற சபை மண்டபத்திலே;* ***பொலிய -*** *(தன் வீற்றிருக்கையால்) அம் மண்டபம் அழகு பெறுமாறும்...(மன் ஓ - அசைகள்).*

*இப்பாடல் முதல் இருபத்திரண்டு பாடல்களில் வினையெச்சங்களாகத் - (பொலிய, வயங்க, குலவ என்றாற் போல) தொடர்ந்து இருபத்து மூன்றாம் பாடலில் இருந்தனன் என்னும் வினைமுற்றால் பொருள் முடிவு எய்துகின்றது.*

*இராவணனின் மணி மண்டபம் தெய்வத் தச்சனின் அறிவுத் திறமெலாம் புலப்படுத்துவது; அதன் மேலும் அதன் சிறப்பை வரம்பு இலா ஆற்றல் கொண்டதும்*

*எவர்க்கும் தீமை தராத வகையில் செய்யப் பெற்றதுமான அறத்தை உவமையாக்கிப் புலப்படுத்திய பாங்கு நினையத்தக்கது.*

*நான்முகனாலும் படைத்தற்கு அரியது; தெய்வத் தச்சன் புலன் எலாம் தெரிப்பது மண்டபத்தின் சிறப்பு. அம் மண்டபத்தில் வீற்றிருப்பதால் இராவணனுக்குப் பொலிவு என்பதனை உணர்த்தப் 'பொலிய' எனச்சுட்டினார்.*

***3069. புலியின் அதள் உடையானும், பொன்னாடை***
***புனைந்தானும், பூவினானும்***
***நலியும் வலத்தார் அல்லர்; தேவரின் இங்கு***
***யாவர், இனி நாட்டல் ஆவார்?***
***மெலியும் இடை, தடிக்கும் முலை, வேய் இளந்***
***தோள், சேயரிக் கண், வென்றி மாதர்***
***வலிய நெடும் புலவியினும் வணங்காத***
***மகுட நிரை வயங்க மன்னோ.***

**தேவரின் -** *தேவர்களுக்குள்ளே;* **புலியின் அதள் உடையானும் -** *புலியின் தோலை ஆடையாக உடுத்த சிவபெருமானும்;***பொன்னாடை புனைந்தானும் -** *பொன் மயமான பீதாம்பரத்தை அணிந்துள்ள திருமாலும்;* **பூவினானும் -** *உந்தித் தாமரையில் வசிக்கும் பிரமனும்;* **நலியும் வலத்தார் அல்லர் -** *(இராவணனை) வருத்தும் வலிமையுடையவர் ஆகமாட்டார்;* **இங்கு -** *இவ்வுலகத்தில்;* **இனி யாவர் நாட்டல் ஆவார் -** *இனிமேல்வேறு எவர் (இராவணனை) வெல்லுதற்குக் குறித்தவர் ஆவார்! (எவரும் இல்லை), மேலும்;* **மெலியும் இடை -** *மெல்லியதாய் விளங்கும் இடையும்;* **தடிக்கும் முலை -** *பருத்துத் தோன்றும் மார்பகங்களையும்;* **வேய் இளந்தோள் -** *மூங்கிலுக்கு நிகரான இளம் தோள்களையும்;* **சேய் அரிக் கண் -** *சிவந்த வரிகளை உடைய கண்களையும்;* **வென்றி மாதர் -** *எவரையும் வெல்லும் தன்மையையும் கொண்ட மகளிரது;* **வலிய நெடும் புலவியினும் -** *உறுதியான நீண்ட ஊடற் காலத்தும்;* **வணங்காத -** *தாழ்வுறாத;* **மகுடநிரை -** *மணிமுடிகளின் வரிசை;* **வயங்க -** *ஒளி வீசித் துலங்கவும்....(மன், ஓ - அசைகள்). இராவணன் திரிமூர்த்திகளாலும் வெல்லுதற்கு அரிய வர பலமுடையவன் என்பதை முதலிரண்டு அடிகளாற் கூறினார். மகளிர் ஊடற் காலத்துக்கும் வணங்க மாட்டான் என்பதைப் பின்னிரண்டு அடிகளால் உணர்த்தினார். இரணியன், 'என், வாளினைத் தொழுவதல்லால் வணங்குதல் மகளிர் ஊடல் நாளினும் உளதோ' என இரணியன் வதைப் படலத்தில் (6334) கூறுதல் ஒப்பு நோக்கற்குரியது. 'மெலியுமிடை தடிக்கு முலை' - தொடை முரண்.*

***3070. வண்டு அலங்கு நுதல் திசைய வயக் களிற்றின்***
***மருப்பு ஒடிய அடர்த்த பொன்-தோள்***
***விண் தலங்கள் உற வீங்கி, ஓங்கு உதய***
***மால் வரையின் விளங்க, மீதில்***
***குண்டலங்கள், குல வரையை வலம் வருவான்***
***இரவி கொழுங் கதிர் சூழ் கற்றை***

***மண்டலங்கள் பன்னிரண்டும், நால்-ஐந்து ஆய்ப்***
***பொலிந்த என வயங்க மன்னோ,***

***வண்டு அலங்கு நுதல் -*** *வண்டுகள் மொய்க்கின்ற நெற்றியினை உடையனவும்;* ***திசைய -*** *எட்டுத் திக்குகளில் உள்ளனவும் (ஆகிய) ;****வயக் களிற்றின் -*** *வலிமை மிக்க யானைகளின்;* ***மருப்பு ஒடிய -****கொம்புகள் முறியும்படி;* ***அடர்த்த பொன்தோள் -*** *வன்மையுறத் தாக்கிய அழகிய தோள்கள்;* ***விண் தலங்கள் உற வீங்கி -*** *வான் அளாவும் படி பருத்துயர்ந்து;* ***ஓங்கு உதய மால் வரையின் விளங்க -*** *மேல் வளர்ந்த பெரிய உதய பருவதம் போல் ஒளி வீசவும்;* ***மீதில் குண்டலங்கள் -*** *(அத்தோள்களின்) மேலே (செவியிலிருந்து தொங்கும்) குண்டலங்கள் (இருபதும்);* ***கொழுங் கதிர்க் கற்றை சூழ் -*** *வளமான கிரணங்கள் செறிந்து சூழ்ந்த;* ***இரவி மண்டலங்கள் பன்னிரண்டும் -*** *கதிரவன் மண்டலங்கள் பன்னிரண்டும்;* ***குல வரையை வலம் வருவான் -*** *(மலைக் குலத்தில் உயர்ந்த) மேரு மலையை வலமாய் வர;* ***நால் - ஐந்து ஆய்ப் பொலிந்த என -*** *இருபதாய் விளங்கின என;* ***வயங்க -*** *ஒளி வீசவும்...(மன், ஓ -அசைகள்)*

*இராவணன் திக்கு விசயப் பொழுதில் திசை யானைகளோடு பொருத, அவற்றின் கொம்புகள் இவன் தோள்களின் வலிமையால் முறிந்தன என்பர். ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சனம், புட்ப தந்தம், சார்வ பௌமம், சுப்பிரதீகம் என்பன எட்டுத் திசை யானைகள். சூரியர் பன்னிருவர் : தாதா, இந்திரன், அரியமா, மித்திரன், வருணன், அம்சுமான், பர்ஜன்யன், பகன், விவசுவான், பூஷா, விட்டுணு, துவஷ்டா ஆகியோர்.*

*தோள் உதய பருவதம் போன்றிருத்தல் உவமையணி. பன்னிரு சூரியர் இராவணனின் இருபது குண்டலங்களாய் நின்றாற் போலிருந்தனர் என்பது தற்குறிப்பேற்ற அணி.*

***3071. வாள் உலாம் முழு மணிகள் வயங்கு ஒளியின்***
***தொகை வழங்க, வயிரக் குன்றத்***
***தோள் எலாம் படி சுமந்த விட அரவின்***
***பட நிரையின் தோன்ற, ஆன்ற***
***நாள் எலாம் புடை தயங்க, நாம நீர்***
***இலங்கையில் தான் நலங்க விட்ட***
***கோள் எலாம் கிடந்த நெடுஞ் சிறை அன்ன***
***நிறை ஆரம் குலவ மன்னோ.***

***வாள் உலாம் முழு மணிகள் -*** *ஒளி வீசுகின்ற (அணிகலன்களில் பதித்த) பெரிய இரத்தினங்கள்;* ***வயங்கு ஒளியின் தொகை -****விளங்கும் ஒளிப் பிழம்பை;* ***வழங்க -*** *பெரிதும் வீசியளிக்கவும்;* ***வயிரக் குன்றத்தோள் எலாம் -*** *உறுதி வாய்ந்த மலை போன்ற தோள்கள் யாவும்;****படி சுமந்த விட அரவின் -*** *பூமியைச் சுமக்கும் நஞ்சு மிக்க ஆதிசேடனாகிய பாம்பரசனின்;* ***பட நிரையின் தோன்ற -*** *ஆயிரம் படங்களின் வரிசை போல் திகழவும்;* ***ஆன்ற நாள் எலாம் -*** *பெருமைக்குரிய விண்மீன்கள் யாவும்;* ***புடை தயங்க -*** *பக்கங்களில் விளங்கும் வண்ணம்;* ***நாம நீர் இலங்கையில் -*** *அச்சம் தருகின்ற கடல் நீரால் சூழப்பட்ட இலங்காபுரியில்;* ***தான் நலங்க விட்ட -*** *(அவ்விராவணன்) தான்*

*அடைத்து விட்ட;* ***கோள் எலாம் -*** *கிரகங்கள் எல்லாம்;* ***கிடந்த -*** *தங்கியிருந்த;* ***நெடுஞ் சிறைஅன்ன -*** *பெரிய சிறைச் சாலையைப் போன்ற;* ***நிறை ஆரம் -****நிறைந்த சன்ன வீரம் என்னும் இரத்தின மாலை;* ***குலவ -*** *விளங்கித் தோன்றவும்..... (மன், ஓ - அசைகள்).*

*இராவணனின் வலிமையால் அவன் நவக்கிரகங்களையும் கட்டி வைத்த ஆற்றலை அவனைக் குறித்த வருணனையிலேயே இணைத்துக் கூறினார். இப்பாடலின் பின்னிரண்டு அடியும் தற்குறிப்பேற்ற அணி.*

*கலிவிருத்தம்*

***3072. ஆய்வு அரும் பெரு வலி***
***அரக்கர் ஆதியோர்***
***நாயகர் நளிர் மணி***
***மகுடம் நண்ணலால்,***
***தேய்வுறத் தேய்வுறப் பெயர்ந்து,***
***செஞ் சுடர்***
***ஆய் மணிப் பொலன் கழல்***
***அடி நின்று ஆர்ப்பவே,***

***செஞ்சுடர் ஆய்மணி -*** *சிவந்த ஒளி படைத்த தேர்ந்தெடுத்த மாணிக்கங்கள் பதிக்கப் பெற்ற;* ***பொலன் கழல் -*** *பொன்னால் ஆகிய வீரக் கழல்;* ***ஆய்வு அரும் பெருவலி -*** *(இவ்வளவினதென்று) ஆராய்தற்கரிய பெரிய வலிமையை உடைய;* ***அரக்கர் ஆதியோர் -*** *இராக்கதர்கள்முதலானவர்களுடைய;* ***நாயகர் நளிர்மணி மகுடம் -****தலைவர்களின் பெருமைக்குரிய மணிகள் பதித்த கிரீடங்கள்;* ***நண்ணலால் -****(அவர்கள் வணங்கும் போதெல்லாம்) வந்து தன் மேற்படுதலால்;* ***தேய்வு உறத் தேய்வுற -*** *தேய்வினை அடையுந்தோறும்,* ***பெயர்ந்து -*** *புதிய ஒளியை மீண்டும் பெற்று;* ***அடிநின்று ஆர்ப்ப -*** *(தன்) பாதங்களில் பொருந்தி ஒலிக்கவும்.... (ஏ - அசை)*

*இது முதல் ஆறு கவிகள் பல்வகைத் தேவரும் இராவணன் அவையில் பணிந்து நிற்றலைக் கூறுகின்றன.*

***3073. மூவகை உலகினும்***
***முதல்வர் முந்தையோர்,***
***ஓவலர் உதவிய***
***பரிசின் ஓங்கல்போல்,***
***தேவரும் அவுணரும்***
***முதலினோர், திசை***
***தூவிய நறு மலர்க்***
***குப்பை துன்னவே.***

***மூவகை உலகினும் -*** *மூன்று உலகங்களிலும்;* ***முதல்வர் -*** *தலைவர்களாக உள்ளவர்கள்;* ***முந்தையோர் -*** *முற்பட்டு வந்தவர்களாய்;* ***ஓவலர் உதவிய -*** *ஓய்வின்றிக் கொண்டு வந்து தந்த;* ***பரிசின் ஓங்கல் போல் -*** *காணிக்கைகளின் குவியல் போல;* ***தேவரும் அவுணரும் முதலினோர் -*** *தேவர், அசுரர் முதலியவர்கள்;* ***திசை தூவிய -*** *அனைத்துத் திசைகளிலிருந்தும் சொரிந்த;* ***நறுமலர்க் குப்பை -****மணமலர்க் குவியல்கள்;* ***துன்ன -*** *நிறைந்திருக்கவும்...(ஏ - அசை).*

*இராவணன் மேற் சொரிந்த மலர் மழைக்கு அவன் முன் வைத்த பொன் மலர்க் குவியலை உவமை கூறினார்.*

***3074. இன்னபோது இவ் வழி***
***நோக்கும் என்பதை***
***உன்னலர், கரதலம்***
***சுமந்த உச்சியர்,***
***மின் அவிர் மணி முடி***
***விஞ்சை வேந்தர்கள்***
***துன்னினர், முறை முறை***
***துறையில் சுற்றவே,***

***மின் அவிர் மணி முடி -*** *மின்னலென ஒளி விரிக்கும் மணிகள் பொருந்திய மகுடம் சூடிய;* ***விஞ்சை வேந்தர்கள் -*** *வித்தியாதர மன்னர்கள்;* ***இன்ன போது இவ் வழி நோக்கும் என்பதை -*** *இன்னநேரம் இந்தப் பக்கம்(இராவணன்) நோக்குவான் என்பதை;* ***உன்னலர் -****அறியாதவர்களாய்;* ***கரதலம் சுமந்த உச்சியர் -*** *(எப்போதும் தங்கள்) கரங்களைத் தலைமேற் சுமந்தவர்களாய்;* ***துன்னினர் -*** *நெருங்கி நின்று;* ***முறை முறை -*** *வரிசை வரிசையாக;* ***துறையில் சுற்ற -*** *அவை மண்டபத்தே சூழ்ந்து நிற்கவும்.... (ஏ- அசை).*

*இராவணன் பார்வை படப் பரிதவித்துக் காத்து நிற்கும் வித்தியாதர வேந்தர் நிலை கூறப்பட்டது. உன்னலர், உச்சியர் - முற்றெச்சங்கள்.*

***3075. மங்கையர்திறத்து ஒரு***
***மாற்றம் கூறினும்,***
***தங்களை ஆம் எனத்***
***தாழும் சென்னியர்,***
***அங்கையும் உள்ளமும்***
***குவிந்த ஆக்கையர்,***
***சிங்க ஏறு என, திறல்***
***சித்தர் சேரவே.***

***மங்கையர் திறத்து -*** *(ஏவல்) மகளிரின் பால்;* ***ஒரு மாற்றம் கூறினும் -*** *ஏதேனும் கட்டளை மொழியினும்;* ***தங்களை ஆம் என -*** *(இராவணன்) தங்களிடம் கூறிய தாம்*

*என்று;* ***தாழும் சென்னியர் -*** *வணங்கும் தலையினையும்;* ***அங்கையும் உள்ளமும் -*** *அழகிய கையும் மனமும்;* ***குவிந்த ஆக்கையர் -*** *வளைந்த உடம்பினையும் (உடையவர்களாய்);* ***சிங்க ஏறு எனத் திறல் சித்தர் -*** *ஆண் சிங்கம்போன்ற சித்தர்கள்;* ***சேர -*** *திரண்டு நிற்கவும்..... (ஏ - அசை).*

*சித்தர்கள் ஒரு தேவ சாதியார் : தவப் பேராற்றலால் சித்தர்களானோரும் இராவணன் அவையிலே அவன் தவப் பெருக்கத்தால் சிறியோராயினர்.*

***3076. அன்னவன் அமைச்சரை நோக்கி,***
***ஆண்டு ஒரு***
***நல் மொழி பகரினும்***
***நடுங்கும் சிந்தையர்,***
***'என்னைகொல் பணி?'***
***என இறைஞ்சுகின்றனர்.***
***கின்னரர், பெரும்***
***பயம் கிடந்த நெஞ்சினர்.***

***அன்னவன் -*** *இராவணன்;* ***அமைச்சரை நோக்கி -*** *தன் அமைச்சர்களைப் பார்த்து;* ***ஆண்டு -*** *அவ்விடத்தில்;* ***ஒரு நல்மொழி பகரினும் -*** *ஒரு நல்ல சொல்லைப் பேசிடினும்;* ***நடுங்கும் சிந்தையர் -*** *(தங்களைத் தண்டிக்கும்படி உரைத்ததாக எண்ணி) அஞ்சும் மனத்தவர்களாய்;* ***பெரும் பயம் கிடந்த நெஞ்சினர் -*** *மிகுந்த பயம் செறிந்த உள்ளத்தவர்களாய்;* ***பணி என்னை கொல் என -*** *கட்டளை யாதோ என்று;* ***கின்னரர் -*** *கின்னர வேந்தர்;* ***இறைஞ்சுகின்றனர் -****வணங்கி நிற்கவும்....*

*கின்னரர் - கின்னரம் என்னும் இசைக் கருவி வாசிக்கும் தேவ இனத்தவர்.*

***3077. பிரகர நெடுந் திசைப்***
***பெருந் தண்டு ஏந்திய***
***கரதலத்து அண்ணலைக்***
***கண்ணின் நோக்கிய***
***நரகினர் ஆம் என,***
***நடுங்கும் நாவினர்,***
***உரகர்கள், தம் மனம்***
***உலைந்து சூழவே.***

***பிரகர -*** *(பாவியரைத்) தண்டனை புரியும்;* ***நெடுந்திசை -****(தெற்குப்) பெருந்திசைக்குரிய;* ***பெருந்தண்டு ஏந்திய கரதலத்து -*** *பெரிய காலதண்டம் ஏந்திய கரம் படைத்த;* ***அண்ணலை -*** *தலைவனாம் யமனை;* ***கண்ணின் நோக்கிய -*** *கண்ணெதிரே கண்ட;* ***நரகினர் ஆம் என -****நரகவாசிகள் போல;* ***உரகர்கள் -*** *நாகராசர்கள்;* ***தம் மனம் உலைந்து -*** *தம் உள்ளம் சோர்ந்து;* ***நடுங்கும் நாவினர் -*** *(இராவணைக் கண்டு) வாய் குழறியவர்களாய்;* ***சூழவே -*** *சூழ்ந்து நிற்கவும்....(ஏ - அசை).*

*ப்ரஹரம் - அடித்தல் எனும் பொருள் உடைய வட சொல். இராவணனின் கொடுமை உணர்த்த எமன்என்றார்.*

***3078. திசை உறு கரிகளைச்***
***செற்று, தேவனும்***
***வசையுறக் கயிலையை மறித்து,***
***வான் எலாம்***
***அசைவுறப் புரந்தரன்***
***அடர்த்த தோள்களின்***
***இசையினைத் தும்புரு***
***இசையின் ஏத்தவே.***

***திசை உறு கரிகளை -*** *எட்டுத் திக்குகளிலும் உள்ள யானைகளை (திக்கயங்களை);* ***செற்று -*** *வென்று;* ***தேவனும் வசையுற -****சிவபெருமானும் பழியேற்கும்படி;* ***கயிலையை மறித்து -*** *மேரு மலையைப் பெயர்த்து;****வானெலாம் அசைவுற -*** *விண்ணுலகம் நடுங்க;* ***புரந்தரன் அடர்த்த -*** *இந்திரனை நெருங்கிப் போரிட்ட;* ***தோள்களின் -*** *(இருபது) தோள்களினது;****இசையினை -*** *புகழை;* ***தும்புரு -*** *தும்புருவென்னும் கந்தருவன்;* ***இசையின் ஏத்த -*** *(வீணை) இசையோடு புகழவும்....(ஏ - அசை).*

*இராவணன் வெற்றித் தோள்களைத் தும்புரு என்னும் கந்தருவன் இசை பாடிப் புகழ்ந்தமை கூறினார். தும்புரு நாரதன் போலும் முனிவன். அவன் வீணை கலாவதி.*

***3079. சேண் உயர் நெறி முறை***
***திறம்பல் இன்றியே***
***பாணிகள் பணி செய,***
***பழுது இல் பண் இடை***
***வீணையின் நரம்பிடை***
***விளைத்த தேமறை,***
***வாணியின், நாரதன்,***
***செவியின் வார்க்கவே.***

***சேண் உயர் -*** *தொலைவிலுள்ள விண்ணுலகில் மேம்பட்ட;****நெறி முறை -*** *இசை விதிகளின் ஒழுங்கு;* ***திறம்பல் இன்றி -*** *தவறுதல் இல்லாமல்;* ***பாணிகள் -*** *கைகள்;* ***பணி செய -*** *(இசைத் தானங்களில்) உரிய தொழில் செய்ய;* ***வீணையின் நரம்பிடை விளைத்த -*** *வீணையின் நரம்புகளில் தடவி எழுப்பிய;* ***பழுது இல் பண் இடை -****குற்றமில்லாத இராகத்தில்;* ***தே மறை -*** *இனிய வேதத்தை;* ***நாரதன் -*** *நாரத மாமுனி;* ***வாணியின் -*** *கலைமகளைப் போல;* ***செவியின் வார்க்க -****காதுகளில் பொழிய....(ஏ - அசை).*

*இராவணன் கேட்டு மகிழ வீணை தடவிச் சாம வேத கீதம் நாரதன் இசைத்தான். தே மறை என்றலால் சாம வேதமாயிற்று. நாரதன் - ஆத்ம ஞானம் அளிப்பவன்; மனிதர் ஒற்றுமை கெடுப்பவன் என்றும் பொருள் கூறுவர். அவன் வீணையின் பெயர் மகதீ.*

*(சரசுவதி வீணை - கச்சபி).*

***3080. மேகம் என் துருத்தி கொண்டு,***
***விண்ணவர் தருவும் விஞ்சை***
***நாகமும் சுரந்த தீந் தேன்***
***புனலொடும் அளாவி, நவ்வித்***
***தோகையர் துகிலில் தோயும்***
***என்பது ஓர் துணுக்கத்தோடும்***
***சீகர மகர வேலைக்***
***காவலன், சிந்த மன்னோ,***

***விண்ணவர் தருவும் -*** *தேவர்களின் கற்பக மரங்கள் தரும் மலர்களும்;* ***விஞ்சை நாகமும் -*** *வித்தியாதரர்களின் சிறந்த மரங்களின் மலர்களும்;* ***சுரந்த தீந்தேன் -*** *சொரியும் இனிய தேனை;* ***புனலொடும் அளாவி -*** *நன்னீரோடுகலந்து;* ***மேகம் என் துருத்தி கொண்டு -*** *முகில்களாகிற வீசு குழலில் எடுத்துக் கொண்டு;* ***மகர வேலைக் காவலன் -*** *சுறா மீன்கள் நிரம்பிய கடலுக்குத் தலைவனாகிய வருணன்;* ***நவ்வித் தோகையர் துகிலில் தோயும்-*** *(இராவணன் அவையிலுள்ள) மானும் மயிலும் போன்ற மகளிரது ஆடைகளில் படியும்;* ***என்பது ஓர் துணுக்கத்தோடும் -*** *என்னும் ஓர் அச்சத்தோடு;* ***சீகரம் சிந்த -*** *சிறு துளிகளாகச் சிதறவும்........(மன்; ஓ -அசைகள்).*

*தரு, நாகம் என்பன மரங்கள்; இங்கு முதலாகு பெயர்களாய் மலர்களைச் சுட்டின. அவைக்களத்திலுள்ள மகளிர் ஆடையை நனைத்துவிடுமோ என்று அஞ்சினான். இப்பாடல் முதல் ஆறு கவிகள் நீர்க் கடவுள் முதலியோர் நீர் தெளித்தல் முதலிய பணிவிடைகள் செய்தலைக் கூறும்.*

***3081. நறை மலர்த் தாதும் தேனும்,***
***நளிர் நெடு மகுட கோடி***
***முறை முறை அறையச் சிந்தி***
***முரிந்து உகும் மணியும் முத்தும்***
***தறையிடை உகாதமுன்னம் தாங்கினன்***
***தழுவி வாங்கி,***
***துறைதொறும் தொடர்ந்து நின்று, சமீரணன்***
***துடைப்ப மன்னோ,***

***நறைமலர் -*** *நறுமண மலர்களினின்றும் (சிந்துகிற);* ***தாதும் தேனும் -*** *மகரந்தமும், தேனும்;* ***நளிர் நெடு மகுட கோடி -*** *('அவையினைச் சார்ந்து வந்த அரசர்களின்) பெரிய உயர்ந்த கிரீடத் தொகுதிகள்;* ***முறை முறை அறைய -*** *(நெரிசலால்) ஒன்றோடொன்று உராய்ந்து கொள்ளுதலால்;* ***முரிந்து சிந்தி உகும் -*** *சேத முற்று சிந்திச் சிதறும்;* ***மணியும் முத்தும் -*** *மாணிக்கங்களும் முத்துக்களும்;* ***தறையிடை உகாத முன்னம் -****தரையில் விழும் முன்னரே;* ***சமீரணன் -*** *வாயுவாகிய காற்றுக் கடவுள்;****தழுவித் தாங்கினன் வாங்கி -*** *ஆங்காங்கு சென்று ஏந்தியெடுத்து;* ***துறை தொறும் தொடர்ந்து நின்று -***

*(மண்டபத்தின்) ஒவ்வோர் இடத்திலும் விடாது சென்று நின்று;* ***துடைப்ப -*** *அவ்விடங்களை மாசுபடாமல் தூய்மை செய்யவும்..... (மன்; **ஓ -** அசைகள்).*

*இராவணன் அவையில் குப்பையாக விழுவன மலர் மகரந்தமும் மணிகளுமே ஆகும் எனவும், அவையும் உடனுக்குடன் தூய்மை செய்யப்பட்டன எனவும் கூறப்பட்டன.*

*கலிவிருத்தம்*

***3082. மின்னுடை வேத்திரக்***
***கையர், மெய் புகத்***
***துன் நெடுங் கஞ்சுகத்***
***துகிலர், சோர்விலர்,***
***பொன்னொடு வெள்ளியும்,***
***புரந்தரா தியர்க்கு***
***இன் இயல் முறை***
***முறை இருக்கை ஈயவே,***

***மின்னுடை வேத்திரக் கையர் -*** *மின்னல் போல் ஒளி வீசும் பொறிபிரம்பு ஏந்தியவர்களாய்;* ***மெய் புகத்துன் -*** *உடல் முழுதும் மூடி நெருங்கிய;* ***நெடுங் கஞ்சுகத் துகிலர் -*** *நீண்ட சட்டையைத் தரித்தவர்களாய்;* ***பொன்னொடு வெள்ளியும் -*** *தேவகுரு வியாழனும், அசுர குரு வெள்ளியும்;* ***புரந்தராதியர்க்கு -*** *இந்திரன் முதலிய தேவர்களுக்கு;* ***சோர்விலர் -*** *தளர்ச்சியில்லாதவர்களாய்;* ***முறை முறை -*** *தக்க வரிசைப்படி;* ***இருக்கை இன் இயல் ஈய -*** *ஆசனங்களை இனிய தன்மையோடு காட்டி அமரச் செய்தனர்.....( **ஏ -** அசை).*

***3083. சூலமே முதலிய***
***துறந்து, சுற்றிய***
***சேலையால் செறிய வாய்***
***புதைத்த செங்கையன்,***
***தோலுடை நெடும் பணை***
***துவைக்குந்தோறு எலாம்,***
***காலன் நின்று, இசைக்கும்***
***நாள் கடிகை கூறவே,***

***சூலமே முதலிய துறந்து -*** *(தனக்கு உரிய) சூலம் முதலிய படைக்கலங்கள் நீத்து;* ***சுற்றிய சேலையால் செறிய வாய் புதைத்த -*** *சுற்றிய ஆடைத் தலைப்பால் இறுக்கமாக வாயையும் மறைத்து;* ***காலன் -*** *காலத்தை அறியும் கடவுளாகிய எமன்;* ***செங்கையன் -*** *சிவந்த கரங்கள் படைத்தவனாய்;* ***தோலுடை நெடும் பணை -*** *தோல் போர்த்த பெரிய பேரிகைகளை;* ***துவைக்கும் தோறு எலாம் -*** *அடிக்கப்படும் நேரங்களில் எல்லாம்;* ***நின்று -*** *வந்து நின்று;* ***இசைக்கும் நாள் கடிகை கூற -*** *கூறத்தக்க நாளின் நாழிகைக் கணக்கை எடுத்துரைக்கவும்....( **ஏ -**அசை).*

*அனைவரையும் நடுங்க வைக்கும் எமன் பட்டபாடு உரைக்கப்பட்டது.*

***3084.* நயம் கிளர் நான நெய்**
**அளாவி, நந்தல் இல்**
**வியன் கருப்பூரம் மென்**
**பஞ்சின் மீக்கொளீஇ,**
**கயங்களில் மரை மலர்க்**
**காடு பூத்தென,**
**வயங்கு எரிக் கடவுளும்,**
**விளக்கம் மாட்டவே.**

**வயங்கு எரிக் கடவுளும் -** *விளங்குகின்ற அக்கினி தேவனும்;* **நயம் கிளர் நானநெய் அளாவி -** *நலம் மிக்க நறுமண நெய்யை (அகலில்) சொரிந்து;* **வியன் கருப்பூரம் -** *சிறந்த கற்பூரத்தை;* **மென் பஞ்சின் மீக்கொளீஇ -** *மெல்லிய பஞ்சுத் திரியின் மேல் வைத்துப் பற்றும் படி செய்து;* **கயங்களில் -** *குளங்களில்;* **மரைமலர்க் காடு பூத்தென -***சிவந்த தாமரைப் பூக்கள் பூத்தாற் போல;* **நந்தலில் விளக்கம் மாட்ட -** *அணைதலில்லாத விளக்குகளை ஏற்றவும்....(* **ஏ -** *அசை).*

*இராவணனுக்கு அங்கியங் கடவுள் விளக்கேற்றும் பணி செய்தமை கூறப்பட்டது.*

***3085.* அதிசயம் அளிப்பதற்கு**
**அருள் அறிந்து, நல்**
**புதிது அலர் கற்பகத்**
**தருவும், பொய் இலாக்**
**கதிர் நெடு மணிகளும்,**
**கறவை ஆன்களும்,**
**நிதிகளும், முறை முறை**
**நின்று, நீட்டவே,**

**நல் புதிது அலர் கற்பகத் தருவும் -** *சிறந்த புத்தம் புது மலர்களைக் கொண்ட கற்பக மரங்களும்;* **பொய் இலாக் கதிர் நெடு மணிகளும் -** *தவறுதல் இல்லாத ஒளி உமிழும் பெரிய (சிந்தாமணி போன்ற) தேவரத்தினங்களும்;* **கறவை ஆன்களும் -** *பால் சுரக்கும் (காமதேனு போன்ற) பசுக்களும்;* **நிதிகளும் -** *தேவருலகில் உள்ள (சங்கநிதி பதுமநிதி போன்ற) பெரு நிதிக் குவியல்களும்;* **அதிசயம் அளிப்பதற்கு -** *(இராவணனுக்கு) வியப்பை அளிக்கும் முறையில்; அருள் அறிந்து - (அவன்) அன்பு காட்டும் நேரமறிந்து;* **முறை முறை நின்று நீட்ட -** *வரிசை வரிசையாய் நின்று தம் பரிசுகளை வழங்கவும் .. (* **ஏ -** *அசை).*

*இராவணன் அருள் காட்டுவார்க்கு இத்தேவர் உலகச் செல்வங்கள் அவ்வப்போது பரிசுகள் பொழிந்தன எனவும் கூறலாம். கற்பகத் தரு - சந்தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம், அரிசந்தனம் என ஐந்து; தேவமணிகள் - சிந்தாமணி, சூளாமணி; பசுக்கள்*

*காமதேனுவும் அதன்கன்றான நந்தினியும்; நிதிகள் - சங்கம், பதுமம், மகாபதுமம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என ஒன்பது.*

***3086. குண்டலம் முதலிய குலம்***
***கொள் பேர் அணி***
***மண்டிய பேர் ஒளி***
***வயங்கி வீசலால்,***
***'உண்டுகொல் இரவு, இனி***
***உலகம் ஏழினும்?***
***எண் திசை மருங்கினும்***
***இருள் இன்று' என்னவே,***

***குண்டலம் முதலிய -*** *குண்டலம் தொடங்கி அமைந்த;* ***குலம் கொள் பேரணி -*** *பல்வேறு வகையினவாகிய சிறந்த அணிகலன்கள்;* ***மண்டிய பேர் ஒளி -*** *திரண்ட மிக்க ஒளியை;* ***வயங்கி வீசலால் -*** *(எங்கும்) விளங்கும்படி வீசுவதால்;* ***இனி உலகம் ஏழினும் -*** *இனி மேல் ஏழு உலகங்களிலும்;* ***இரவு உண்டு கொல் -*** *இருள் செறிந்த பொழுதும் உண்டாகுமோ?;* ***எண்திசை மருங்கினும் -*** *எட்டுத் திக்குகளின் பக்கங்களிலும்;* ***இருள் இன்று என்ன -*** *இருள் காண முடியவில்லையே என்று கூறும் படியாகவும்.....(ஏ - அசை).*

*ஏழு உலகமாவன - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர் லோகம், ஜன லோகம், தபோ லோகம், சத்ய லோகம் என மேல் ஏழும், அதல, விதல, கதல, தராதல ரசாதல, மகாதல, பாதலம் எனக் கீழ் ஏழுமாம்.*

***3087. கங்கையே முதலிய***
***கடவுட் கன்னியர்***
***கொங்கைகள் சுமந்து இடை***
***கொடியின் ஒல்கிட,***
***செங் கையில் அரிசியும்***
***மலரும் சிந்தினர்,***
***மங்கல முறை மொழி***
***கூறி, வாழ்த்தவே,***

*கங்கையே முதலிய - கங்கை தொடங்கியமைந்த; கடவுட் கன்னியர்- (புண்ணிய தீர்த்தங்களாகிற) தெய்வப் பெண்கள்; கொங்கைகள் சுமந்து - பருத்த தனங்கள் தாங்கிய; இடைகொடியின் ஒல்கிட - தம் இடை கொடி போல் துவள நின்று; செங்கையில் அரிசியும் மலரும் சிந்தினர் -சிவந்த கைகளில் ஏந்திய மங்கல அரிசியையும் மலர்களையும் (இராவணன் மேல்) தூவினராகி; முறை - வரிசையாக; மங்கல மொழி கூறி வாழ்த்த -மங்கல மொழிகள் கூறி வாழ்த்தவும்......(ஏ - அசை).2*

***3088 ஊருவில் தோன்றிய உயிர்***
***பெய் ஓவியம்***
***காரினில் செருக்கிய***
***கலாப மஞ்ஞைபோல்,***
***வார் விசிக் கருவியோர்***
***வகுத்த பாணியின்,***
***நாரியர், அரு நடம்***
***நடிப்ப, நோக்கியே,***

***ஊருவில் தோன்றிய** - (நாராயண முனிவனது) தொடையினின்றும் பிறந்து; **உயிர்பெய் ஓவியம்** - உயிர் நிரம்பிய ஓவியம் போன்ற ஊர்வசி முதலான; **நாரியர்** - பெண்கள்; **வார் விசிக் கருவியோர் வகுத்த பாணியின்** - தோல் கயிற்றால் கட்டப்பட்ட இசைக் கருவியாளர்கள் அமைக்கும் தாள ஒழுங்கிற்கேற்ப; **காரினில் செருக்கிய கலாப மஞ்ஞை போல்** - மேகங்களைக் கண்டு உவகை பூண்ட தோகை மயில்களைப் போல; **அருநடம் நடிப்ப** - அருமையான நடனத்தை ஆட; **நோக்கி** - அதனைப் பார்த்தவாறும்........ ( **ஏ** - அசை).*

*பாணியின் ஆரியர் என்று பாடங்கொண்டு ஆரியக் கூத்து எனப் பொருள் கூறலும் உண்டு.*

***3089. இருந்தனன் - உலகங்கள் இரண்டும்***
***ஒன்றும், தன்***
***அருந் தவம் உடைமையின்,***
***அளவு இல் ஆற்றலின்***
***பொருந்திய இராவணன்,***
***புருவக் கார்முகக்***
***கருந் தடங் கண்ணியர்***
***கண்ணின் வெள்ளத்தே.***

***தன் அருந்தவம் உடைமையின்** - தன்னுடைய அரிய தவ வலிமைப் பேற்றினால்; **உலகங்கள் இரண்டும் ஒன்றும்** - மூன்று உலகங்களையும்; **அளவு இல் ஆற்றலின் பொருந்திய** - (தன்) வரம்பிலா வலிமையோடு தன் கீழ்ப் பொருந்தும்படி பெற்ற; **இராவணன்** - இலங்கை வேந்தனாகிய இராவணன்; **புருவக் கார்முகக் கருந்தடங் கண்ணியர்** - வில் போன்ற புருவங்களையும் கரிய பெரிய கண்களையும் உடைய மாதர்களின்; **கண்ணின் வெள்ளத்தே** - பார்வைப் பெருக்கினிடையே; **இருந்தனன்** - வீற்றிருந்தான்.*

*கோகர்ண ஆசிரமத்தில் ஒவ்வொரு தலையாய் அரிந்திட்டு ஓமம் செய்த பெருந்தவத்தால் வரபலம் பெற்றவன் இராவணன். முன் இருபத்திரண்டு செய்யுள்களின் பொருள் இச் செய்யுளால் முடிவுற்றது. விஞ்சை வேந்தர் சுற்ற, சித்தர் சேர, கின்னரர் இறைஞ்ச, உரகர் சூழ, தும்புரு ஏத்த, நாரதன் வார்க்க, வருணன் சிந்த, சமீரணன் துடைப்ப, வியாழ வெள்ளிகள் இருக்கை ஈய, காலன் நாழிகைக் கணக்குக்*

*கூற, அக்கினி விளக்கேற்ற, கற்பகத்தரு முதலியன செல்வம் நீட்ட, அணிகள் இருளை ஓட்ட, கடவுட் கன்னியர் வாழ்த்த, ஊர்வசி முதலியோர் ஆட, இராவணன் தோளும் குண்டலமும் ஒளி வீச, மகுடம் பிரகாசிக்க, ஆரம் குலவ, கழல் ஆர்ப்ப, மலர்க்குப்பை துன்ன, மண்டபம் பொலிய, பார்வை வெள்ளத்து வீற்றிருந்தான் என முடிக்க.*
*சூர்ப்பணகையின் வருகை கண்ட இலங்கையர் துயரம்*

***3090. தங்கையும், அவ் வழி,***
***தலையில் தாங்கிய***
***செங் கையள், சோரியின்***
***தாரை சேந்து இழி***
***கொங்கையள், மூக்கிலள்,***
***குழையின் காதிலள்,***
***மங்குலின் ஒலி படத்***
***திறந்த வாயினள்,***

***அவ்வழி** - அவ்விடத்தில் (அந்நேரத்தில்); **தங்கையும்** - (இராவணன்) தங்கையாகிய சூர்ப்பணகையும்; **தலையில் தாங்கிய செங்கையள்** - தலை மேல் சுமந்த சிவந்த கையை உடையவளும்; **சோரியின் தாரை** - இரத்த வெள்ளத்தால்; **சேந்து இழி கொங்கையள்** - சிவந்து பெருகும் மார்பை உடையவளும்; **மூக்கிலள்** - மூக்கை இழந்தவளும்; **குழையின் காதிலள்** - குழையணிந்த காதுகளை இழந்தவளும்; **மங்குலின் ஒலிபட** - மேகத்தின் இடி முழக்கம் தோற்கும்படி; **திறந்த வாயினள்** - ஓலமிட்டுத் திறந்த வாயை உடையவளும்.*

*கொங்கை, மூக்கு, காது ஆகிய உறுப்புக்களை இலக்குவனால் இழந்த நிலை கூறப்படுகிறது. பொருள் அடுத்த பாடலில் முடிகிறது.*

***3091. முடையுடை வாயினள், முறையிட்டு,***
***ஆர்த்து எழு***
***கடையுகக் கடல் ஒலி***
***காட்டக் காந்துவாள்,***
***குட திசைச் செக்கரின்***
***சேந்த கூந்தலாள்,***
***வட திசை வாயிலின்***
***வந்து தோன்றினாள்.***

***முடையுடை வாயினள்** - முடை நாற்றம் வீசும் வாயினால்; **முறையிட்டு ஆர்த்து** - தன் குறையை உரக்கக் கூவுகின்றவளும்;**எழுகடையுகக் கடல் ஒலி காட்ட** - யுக முடிவில் எழும் கடலின் ஆரவாரம் செய்து; **காந்துவாள்** - மனம் எரிகின்றவளும்; **குடதிசைக் செக்கரின் சேந்த கூந்தலாள்** - மேற்குத் திசையிற் காணப்படும் அந்திச் செவ்வானம் போல் சிவந்த கூந்தலை உடையவளுமாய்; **வடதிசை வாயிலின் வந்து தோன்றினாள்** - வடக்குப் பக்கத்து அரண்மனை வாசலில் வந்து சேர்ந்தாள்.*

*இலங்கைக்கு வடக்கிலுள்ள தண்டக வனத்தில் சின்னா பின்னப்பட்டுச் சூர்ப்பணகை வருதலால் வடதிசை வாயிலில் புகுந்து வருதல் கூறினார்.*

***3092. தோன்றலும், தொல் நகர்***
***அரக்கர் தோகையர்***
***ஏன்று எதிர், வயிறு அலைத்து,***
***இரங்கி ஏங்கினார்;***
***மூன்று உலகு உடையவன்***
***தங்கை மூக்கு இலள்,***
***தான் தனியவள் வர,***
***தரிக்க வல்லரோ?***

***தோன்றலும் -*** *(இவ்வாறு சூர்ப்பணகை) வந்து காட்சி தந்ததும்;* ***தொல் நகர் அரக்கர் தோகையர் -*** *பழமையான இலங்கை நகரின் அசுர குலப் பெண்கள்;* ***ஏன்று -*** *எதிர்கொண்டு;* ***எதிர் -*** *அவளெதிரில்;* ***வயிறு அலைத்து -*** *வயிற்றில் அடித்துக் கொண்டு;* ***இரங்கி ஏங்கினார் -*** *வருந்தி அழுதனர்;* ***மூன்று உலகு உடையவன் தங்கை -*** *மூவுலகங்களுக்கும் தலைவனான இராவணன் தங்கை;* ***மூக்கு இலள் -*** *மூக்கு இழந்தவளாய்;* ***தான் தனியவள் வர -*** *தான் துணையின்றி வர;* ***தரிக்க வல்லரோ? -*** *பொறுக்க இயல்பவராய் ஆவரோ?*

*இது முதல் பத்தொன்பது பாடல்கள் அவள் நிலை கண்டு இலங்கை மக்கள் உற்ற துயரைக் கூறுவனவாம். இது வரை காணாத ஒன்று இலங்கையர் கோன் தங்கைக்கு நேர்தல் கண்டு அரக்கர் அதிர்ந்தனர்.*

***3093. பொருக்கென நோக்கினர்,***
***புகல்வது ஓர்கிலர்,***
***அரக்கரும் இரைத்தனர்;***
***அசனி ஆம் எனக்***
***கரத்தொடு கரங்களைப்***
***புடைத்து, கண்களில்***
***நெருப்பு எழ விழித்து, வாய்***
***மடித்து, நிற்கின்றார்.***

***அரக்கரும் -*** *இராக்கதர்களும்;* ***பொருக்கென நோக்கினர் -*** *(சூர்ப்பணகையைத்) திடீரென்று பார்த்தவர்களாய்;* ***புகல்வது ஓர்கிலர் -*** *இன்னது கூறுவதென அறியாது;* ***அசனி ஆம் என இரைத்தனர் -*** *இடி முழக்கம் போலக் கதறி ஒலி செய்து;* ***கரத்தொடு கரங்களைப் புடைத்து -*** *கைகளோடு கைகளை அறைந்து கொண்டு;* ***கண்களில் நெருப்பு எழ விழித்து -*** *கண்களில் நெருப்புப் பொறி பறக்க விழித்துப் பார்த்து;* ***வாய் மடித்து நிற்கின்றார் -*** *உதட்டைக் கடித்துக் கொண்டு நின்றார்கள்.*

***3094. 'இந்திரன் மேலதோ? உலகம்***
***ஈன்ற பேர்***
***அந்தணன் மேலதோ?***
***ஆழி யானதோ?***
***சந்திர மௌலிபால்***
***தங்குமே கொலோ,***
***அந்தரம்?' என்று நின்று***
***அழல்கின்றார் சிலர்.***

***சிலர் -*** *அரக்கர் சிலர்;* ***அந்தரம் -*** *தீமையானது;* ***இந்திரன் மேலதோ -*** *தேவேந்திரன் மீதில் அமையுமோ?;* ***உலகம் ஈன்ற பேர் அந்தணன் மேலதோ -*** *உலகைப் படைத்த பிரமன்மீதில் அமையுமோ?;* ***ஆழியானதோ -*** *சக்கரப்படை கொண்ட திருமால் மீதில் அமையுமோ?;* ***சந்திர மௌலிபால் தங்குமே கொலோ -*** *சந்திரனை முடியில் தரித்த சிவனிடத்தில் தங்கி அமையுமோ?;* ***என்று நின்று அழல்கின்றார் -****என்று சொல்லி நின்று மனக் கொதிப்புற்றார்கள்.*

*சந்திரமௌலி - வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஆழியான் என்னும் சொற்கு பாற் கடலிடத்தான் என்றும் நீலக்கடல் போலும் மேனியான் என்றும் பொருள் கூறலாம்.*

***3095. 'செப்புறற்கு உரியவர்***
***தெவ்வர் யார் உளர்?***
***முப் புறத்து உலகமும்***
***அடங்க மூடிய***
***இப் புறத்து அண்டத்தோர்க்கு***
***இயைவதுஅன்று இது;***
***அப்புறத்து அண்டத்தோர் ஆர்?'***
***என்றார் சிலர்.***

***செப்புறற்கு உரியவர் தெவ்வர் -*** *குறித்துச் சொல்லத்தக்க பகைவர்;* ***யார் உளர்? -*** *(இராவணனுக்கு) யாவர் உள்ளார்?;* ***முப்புறத்து உலகமும் அடங்க மூடிய -*** *மூவகை உலகம் முற்றிலும் உள்ளடங்கும் படி கவிந்த;* ***இப்புறத்து அண்டத்தோர்க்கு -*** *இவ்வண்ட கோளத்தில் உள்ளவர்களுக்கு;* ***இது இயைவது அன்று -*** *இவ்வாறு செய்தல் சாத்தியமன்று;* ***அப்புறத்து அண்டத்தோர் ஆர்? -*** *வேறு அண்டத்தில் உள்ளவர் யார் இது செய்திருப்பார்?;* ***என்றார் சிலர் -*** *என்று பேசினர் சில அரக்கர்கள்.*

*அப்புறத்தண்டம் - பகிரண்டம், வெளியண்டம்.*

***3096. 'என்னையே! "இராவணன்***
***தங்கை" என்றபின்,***

*"அன்னையே" என்று, அடி*
*வணங்கல் அன்றியே,*
*உன்னவே ஒண்ணுமோ,*
*ஒருவரால்? இவள்*
*தன்னையே அரிந்தனள்,*
*தான்' என்றார் சிலர்.*

***என்னையே -*** *(இது) என்ன வியப்பு!;* ***இராவணன் தங்கை என்றபின் -*** *இராவணன் தங்கை இவளென உணர்த்திய பின்;****அன்னையே என்றடி வணங்கல் அன்றியே -*** *(யாவராயினும்) 'எம் தாயே' என்றுவழிபடுவதே அல்லாமல்;* ***ஒருவரால் உன்னவே ஒண்ணுமோ? -*** *எவராலும் தீமை செய்ய நினைக்கவும் முடியுமோ?; (ஆதலால்);****இவள் தன்னையே தான் அரிந்தனள் -*** *இச்சூர்ப்பணகை தன்னைத் தானே உறுப்புக்களை அறுத்துக் கொண்டாளாதல் வேண்டும்;* ***என்றார் சிலர் -*** *என்று சில அரக்கர் கூறிக் கொண்டனர்.*

*இராவணன் தங்கையென அறிந்தும் தீங்கு இழைப்பார் இரார் எனக் கருதி இவ்வாறு உரைத்தனர்.*

*3097. 'போர் இலான் புரந்தரன்,*
*ஏவல் பூண்டனன்;*
*ஆர் உலாம் நேமியான்,*
*ஆற்றல் தோற்றுப்போய்*
*நீரினான்; நெருப்பினான்,*
*பொருப்பினான்; இனி*
*ஆர் கொலாம் ஈது?' என,*
*அறைகின்றார் சிலர்.*

***புரந்தரன் -*** *இந்திரன்;* ***போர் இலான் -*** *(இராவணனுடன்) போர் செய்யமாட்டாதவனாய்;* ***ஏவல் பூண்டனன் -*** *அடிமைத் தொழில் பூண்டான்;* ***ஆர் உலாம் நேமியான் -*** *ஆரங்கள் கொண்ட சக்கரப் படை ஏந்திய திருமால்;* ***ஆற்றல் தோற்றுப் போய் -*** *வலிமை அழிந்து போனவனாய்;****நீரினான் -*** *கடலில் வாழலானான்;* ***நெருப்பினான் -*** *கையில் நெருப்பேந்திய சிவபெருமான்;* ***பொருப்பினான் -*** *(இவனிடம் பயந்து) கைலை மலையில் தங்கலானான்;* ***இனி ஆர் கொல் ஆம் ஈது -*** *இதனைச் செய்தவர் வேறு யாராக இருக்கக் கூடும்?;* ***என அறைகின்றார் சிலர் -*** *என்று சில அரக்கர் வினவி நின்றனர்.*

*பாற்கடலிலும், கயிலை மலையிலும் உறைகின்ற தெய்வங்களின் இயல்பை, அஞ்சி அவ்வாறு வாழ்வதாய்க் கற்பித்து உரைத்தார். 'ஆற்றல் தோற்றுப் போய்' என்பதைச் சிவனுக்கும் கூட்டுக. நெற்றியில் நெருப்புக்கண் உடையவன், நெருப்பு வடிவாய் நின்றவன் என்றும் பொருள் கூறலாம்.*

*3098. 'சொல்-பிறந்தார்க்கு இது*
*துணிய ஒண்ணுமோ?*
*"இற்பிறந்தார் தமக்கு*
*இயைவ செய்திலள்;*
*கற்பு இறந்தாள்" என,*
*கரன்கொலாம் இவள்*
*பொற்பு அறையாக்கினன்போல்?'*
*என்றார் சிலர்.*

***சொல் பிறந்தார்க்கு -*** *புகழ் உரைகள் கூறத்தக்க உயர் குடிப் பிறந்த பெண்களுக்கு;* ***இது -*** *(கற்பழியும்) இச் செயல்;* ***துணிய ஒண்ணுமோ? -*** *துணிந்து செய்யக் கூடியதாகுமோ?; அன்று (ஆதலால்)****இற்பிறந்தார் தமக்கு -*** *நற்குடிப் பிறந்தவர்களுக்கு;* ***இயைவ செய்திலள் -****பொருந்திய செயல் இவள் செய்திலள்;* ***கற்பு இறந்தாள் என -*** *கற்பு நெறி தவறினாள் என்று;* ***இவள் பொற்பு அறை ஆக்கினன் போல் கரன் கொல் ஆம் -*** *கரன் இப் பெண்ணின் அழகை அழியும்படி செய்தான் போலும்;****என்றார் சிலர் -*** *எனச் சில அரக்கர் எண்ணினர்.*

*இவள் ஒழுக்கக் கேடு கண்டு கரன் உறுப்பு அரிந்து தண்டித்தான் என்று சிலர் கருதினர்.*

*3099. 'தத்து உறு சிந்தையர்,*
*தளரும் தேவர் இப்*
*பித்து உற வல்லரே?*
*பிழைப்பு இல் சூழ்ச்சியார்,*
*முத் திறத்து உலகையும்*
*முடிக்க எண்ணுவார்,*
*இத் திறம் புணர்த்தனர்'*
*என்கின்றார் சிலர்.*

***தத்து உறு சிந்தையர் -*** *தடுமாறும் உள்ளம் கொண்டவர்களாய்;* ***தளரும் -*** *சோர்ந்து போகிற;* ***தேவர் இப் பித்துற வல்லரே -****தேவர்களில்எவரேனும் இத்தகைய பைத்தியக்காரச் செயலைச் செய்யவும் துணிந்தனரோ?;* ***பிழைப்பு இல் சூழ்ச்சியார் -*** *(அவ்வாறு செய்திருப்பின்)* ***பிழைத்து வாழும் ஆலோசனை அற்றவர்களாய் ;*** ***முத்திறத்து உலகையும் முடிக்க எண்ணுவார் -*** *(தாம் மட்டுமன்றி) மூவகை உலகங்களையும் அழித்தொழிக்க எண்ணியவர்களாய்;* ***இத்திறம் புணர்த்தனர் -*** *இவ்வாறு அழிவைத் தரும் செயல் செய்தனர் போலும்;* ***என்கின்றார் சிலர் -*** *எனச் சில அரக்கர் கூறலாயினர்.*

*பித்துற்றார் பேரழிவை அறியாராய் இவ்வாறு செய்திருக்கலாம் எனச் சிலர் கருதினர்.*

*3100. 'இனி ஒரு கற்பம்*
*உண்டுஎன்னின் அன்றியே,*

***வனை கழல் வயங்கு வாள்***
***வீரர் வல்லரோ?***
***பனி வரும் கானிடைப் பழிப்பு***
***இல் நோன்புடை***
***முனிவரர் வெகுளியின் முடிபு'***
***என்றார் சிலர்.***

***இனி ஒரு கற்பம் உண்டு என்னின் அன்றியே -*** *இனி வேறொரு ஊழிக்காலம் உண்டானால் அன்றி;* ***வனை கழல் வயங்கு வாள் -*** *புனைந்த வீரக் கழலையும், விளங்கும் வாளையும் உடைய;* ***வீரர் வல்லரோ? -*** *(இந்நாளில் வாழும்) வீரர் இச் செயல் செய்ய வல்லமை உடையவர்களோ? (இலர்); (ஆதலால்);* ***பனி வரும் கானிடை -****அச்சம் உண்டாகும் காட்டில்;* ***பழிப்பில் நோன்புடை முனிவரர் -*** *குற்றமற்றதவம்செய்யும் தவசிகள் கொண்ட;* ***வெகுளியின் முடிபு -*** *சினத்தின் விளைவேயாகும்;* ***என்றார் சிலர் -*** *என்று சிலர் கூறினார்கள்.*

*கற்பம் - ஊழிக்காலம்;*

***3101. கரை அரு திரு நகர்க்***
***கருங் கண் நங்கைமார்***
***நிரை வளைத் தளிர்க் கரம்***
***நெரித்து நோக்கினர்;***
***பிரை உறு பால் என,***
***நிலையின் பின்றிய***
***உரையினர், ஒருவர்முன்***
***ஒருவர் ஓடினார்.***

***கரை அரு திரு நகர் -*** *கடற் கரையில் அரிதின் அமைந்த செல்வம் மிக்க இலங்கையின்;* ***கருங்கண் நங்கைமார் -*** *கரிய கண்கள் கொண்டஅரக்கர் மாதர்;* ***நிரை வளைத் தளிர்க் கரம் -*** *வளையல் வரிசைகள் பூண்ட தளிர்போன்ற மென் கரங்களை;* ***நெரித்து நோக்கினர் -****பிசைந்த கோலத்தில் (சூர்ப்பணகையை) உற்று நோக்கினர்;* ***பிரை உறு பால் என -*** *பிரை குத்திய பாலைப் போல;* ***நிலையின் பின்றிய உரையினர் -****இயல்பு குலைந்த தடுமாறிய உரையினராக;* ***ஒருவர் முன் ஒருவர் ஓடினார் -*** *(யாது நேருமோ என அஞ்சி) ஒருவருக்கு முன் ஒருவராக ஓடிச் சென்றனர்.*

*கரைதல் சொல்லுதல் எனக் கொண்டு கரை அரு திருநகர் : புகழை எடுத்துச் சொல்லுதலுக்கு அரிய செல்வ நகர் எனவும் கொள்ளலாம். (கரை- முதனிலைத் தொழிற் பெயராகக் கொள்ளின் இப் பொருளாம்).*

***3102. முழவினில், வீணையில்,***
***முரல் நல் யாழினில்,***
***தழுவிய குழலினில்,***

***சங்கில், தாரையில்,***
***எழு குரல் இன்றியே,***
***என்றும் இல்லது ஓர்***
***அழு குரல் பிறந்தது, அவ்***
***இலங்கைக்கு அன்றுஅரோ.***

***அவ் இலங்கைக்கு -*** *அந்த இலங்கை மாநகருக்குத் (தீ நிமித்தமாக) ;* ***முழவினில் வீணையில் -*** *மத்தளம், வீணைகளிலிருந்து;* ***முரல் நல் யாழினில் -*** *இசைக்கும் இனிய யாழிலிருந்து;* ***தழுவிய குழலினில் -*** *தன் வசமாக்கும் புல்லாங்குழலிலிருந்து;* ***சங்கில் தாரையில் -*** *சங்கு, எக்காளம் ஆகியவற்றிலிருந்து;* ***எழு குரல் இன்றியே -*** *எப்போதும் எழுகிற மங்கல ஒலி வாராது;* ***என்றும் இல்லது ஓர் அழு குரல் -*** *இதுவரை கேட்காத அழுகை ஓசையானது;* ***அன்று பிறந்தது -*** *அப்பொழுது தோன்றி ஒலித்தது;* ***அரோ -*** *அசை.*

*இன்னிசை முழங்கிய நகரில் அமங்கல அழுகை ஒலி கேட்கலாயிற்று. தீ நிமித்தம் கூறியவாறு.*

***3103. கள்ளுடை வள்ளமும்,***
***களித்த தும்பியும்,***
***உள்ளமும், ஒரு வழிக்***
***கிடக்க ஓடினார்;-***
***வெள்ளமும் நாண் உற***
***விரிந்த கண்ணினார்-***
***தள்ளுறும் மருங்கினர், தழீஇக்***
***கொண்டு ஏகினார்.***

***வெள்ளமும் நாண்உற -*** *பெருங்கடலும் தோற்றுப்போகும் படி;* ***விரிந்த கண்ணினார் -*** *விரிந்த கண்களையுடைய அரக்க மகளிர்;* ***கள்ளுடை வள்ளமும் -*** *(தாம் அருந்தும்) மதுக் கிண்ணங்களும்;****களித்த தும்பியும் -*** *மதுவை மொய்த்து ஆரவாரிக்கும் வண்டுகளும்;****உள்ளமும் -*** *மதுவில் ஈடுபட்ட மனமும் (ஆகியவற்றை);* ***ஒருவழிக் கிடக்க -****ஒரு புறத்திலே விட்டு விட்டு;* ***ஓடினார் -*** *ஓடிச் சென்றார்;* ***தள்ளுறும் மருங்கினர் -*** *துவண்ட இடையினை உடையராய்;* ***தழீஇக் கொண்டு ஏகினார் -*** *(ஒருவரை யொருவர்) தழுவிக் கொண்டு செல்லலாயினர்.*

*இனி, சூர்ப்பணகை நிலை கண்டு கண்ணீர் வெள்ளம் பொழிந்தகண்களோடு, மது முதலியவற்றை ஒதுக்கிவிட்டு, அவளைத் தழுவிச் சென்றனர் எனவும் கூறுவர்.*

***3104. நாந்தக உழவர்மேல்***
***நாடும் தண்டத்தர்,***
***காந்திய மனத்தினர்,***
***புலவி கைம்மிகச்***

***சேந்த கண் அதிகமும்***
***சிவந்து நீர் உக,***
***வேந்தனுக்கு இளையவள்***
***தாளில் வீழ்ந்தனர்.***

*(வேறு சில பெண்கள்); **நாந்தக உழவர் மேல் -** வாள் உழவரான தம் கணவர்மேல்; **நாடும் தண்டத்தர் -** (ஊடல் காரணமாக) தண்டனை தர விரும்பியவர்களாய்; **காந்திய மனத்தினர் -** எரியும் நெஞ்சினராய்;**புலவி கைம்மிக -** ஊடல் மிகக் கொண்டு; **சேந்த கண், -** சினத்தால் சிவந்த கண்கள்; **அதிகமும் சிவந்து நீர் உக -** (இப்போது சூர்ப்பணகையைக் கண்டு) மேலும் கலங்கிச் சிவந்து கண்ணீர் சிந்த; **வேந்தனுக்கு இளையவள் -** இராவணன் தங்கையின்; **தாளில் வீழ்ந்தனர் -**பாதங்களில் வீழ்ந்தனர்.*

***3105. பொன்-தலை மரகதப்***
***பூகம் நேர்வு உறச்***
***சுற்றிய மணிவடம்***
***தூங்கும் ஊசலின்***
***முற்றிய ஆடலில்***
***முனிவுற்று ஏங்கினார்,***
***சிற்றிடை அலமரத்***
***தெருவு சேர்கின்றார்.***

*(மற்றும் சில மகளிர்); **பொன்தலை மரகதப் பூகம் -**பொன்னாய்ப் பழுத்த காய்கள் குலுங்கும் பச்சை நிறக் கமுக மரங்களின்;**நேர்வுறச் சுற்றிய -** (கழுத்து) நோகும்படியாகக் கட்டப்பட்டுள்ள; **மணிவடம் தூங்கும் ஊசலின் -** மணிகள் பதித்த கயிற்றில் தொங்கும் ஊஞ்சலில் அமர்ந்து; **முற்றிய ஆடலில் முனிவுற்று -** முனைப்பாக ஆடிக் கொண்டிருந்த ஆடலை (சூர்ப்பணகையைக் கண்டதால்) வெறுத்து; **ஏங்கினார் -** துயரம் கொண்ட நிலையில்; **சிற்றிடை அலமர -** மெல்லிடை நோகும் படி;**தெருவு சேர்கின்றார் -** தெருக்களில் சென்று கூடினர்.*

*ஊஞ்சல் அமைக்கப்பட்டுள்ள அழகும், அதற்கு மாறான சோகமும் முரணுற அமைந்துள்ளன. 'பூகம் நோவுற' என்னும் கூற்று மரங்களுக்கும் உயிருண்டு என்ற சிந்தனையைப் புலப்படுத்திற்று.*

***3106. எழு என, மலை என,***
***எழுந்த தோள்களைத்***
***தழுவிய வளைத் தளிர்***
***நெகிழ, தாமரை***
***முழு முகத்து இரு கயல்***
***முத்தின் ஆலிகள்***
***பொழிதர, சிலர் உளம்***
***பொருமி விம்முவார்.***

***சிலர் -*** வேறு சில பெண்கள்; ***எழு என -*** தூண் போன்ற; ***மலை என -*** குன்று போன்ற; ***எழுந்த தோள்களை -*** (தம் நாயகரின்) உயர்ந்த தோள்களை; ***தழுவிய வளைத் தளிர் நெகிழ -*** அணைத்திருந்த தளிர் போன்ற வளையணிந்த கரங்கள் நெகிழ்ச்சியடையவும்; ***தாமரை முழு முகத்து -*** தாமரை போன்ற எழில் மிக்க முகத்திலுள்ள; ***இரு கயல் -*** கயல்மீன் போன்ற இரு கண்களிலும்; ***முத்தின் ஆலிகள் பொழிதர -*** முத்துப் போன்ற கண்ணீர்த் துளிகள் சிந்தவும்; ***உளம் பொருமி விம்முவார் -*** மனம் விம்மி அழத் தொடங்கினார்கள்.

*தழுவிய கணவரையும் நெகிழவிட்டு அழுத பெண்களின் செயலைக் கூறினார்.*

*கலிவிருத்தம் (வேறு)*

***3107. 'நெய்ந் நிலைய வேல் அரசன்,***
***நேருநரை இல்லான்,***
***இந் நிலை உணர்ந்த பொழுது,***
***எந் நிலையம்?' என்னா,***
***மைந் நிலை நெடுங் கண் மழை***
***வான் நிலையது ஆக,***
***பொய்ந்நிலை மருங்கினர்***
***புலம்பினர், புரண்டார்.***

***நெய்ந்நிலைய வேல் அரசன் -*** நெய் பூசி அழகு செய்யப் பெற்ற வேலேந்திய அரசனும்; ***நேருநரை இல்லான் -*** தனக்கு எதிராக நிற்பார் எவரும் இல்லாதவனும் (ஆகிய இராவணன்); ***இந்நிலை உணர்ந்த பொழுது-*** (சூர்ப்பணகைக்கு உற்ற) இக் கொடிய நிலையினை அறியுங்கால்; ***எந்நிலையம் என்னா -*** எத்தகைய மனநிலை கொள்ள நேருமோ என்று; ***மைந்நிலை நெடுங்கண் -*** மை நிலைபெற்ற தம் பெரிய கண்களில்;***மழை வான் நிலையது ஆக -*** பொழியும் கண்ணீர் மேகம் சொரியும் மழையை நிகர்த்ததாக; ***பொய்ந் நிலை மருங்கினர் -*** பொய்யோ என்னும் இடை படைத்த பெண்கள்; ***புலம்பினர், புரண்டார் -*** அழுது கீழே விழுந்து புரண்டனர்.

*இடையின் மென்மையை உயர்வு நவிற்சியாகப் பொய்யான இடை என்று மொழிந்தார். (3606 வரையிலும் உள்ளது போலவே 3107 முதல் 3128 முடியுமளவு உள்ளனவும் கலிவிருத்தங்களே எனினும் சீரின் அசைகள் வேறு அமைப்புடையன).*

***3108. மனந்தலை வரும் கனவின்***
***இன் சுவை மறந்தார்;***
***கனம் தலை வரும் குழல்***
***சரிந்து, கலை சோர,***
***நனந் தலைய கொங்கைகள்***
***ததும்பிட, நடந்தார்;-***
***அனந்தர் இள மங்கையர்-***
***அழுங்கி அயர்கின்றார்.***

***அனந்தர் இள மங்கையர் -*** துயில் கொண்டிருந்த இளம் பெண்கள் சிலர்; ***மனம் தலை வரும் கனவின் இன்சுவை மறந்தார் -*** (சூர்ப்பணகையின் அழுகை கேட்டு) மனத்தின் இடத்தே உண்டான கனவினால் விளையும் இனிய இன்பத்தையும் மறந்து போனவர்களாய்; ***கனம் தலை வரும் குழல் சரிந்து -*** முகிலென அமைந்த கூந்தல் சரிந்தவர்களாய்; ***கலை சோர -*** ஆடை கலைந்தவர்களாய்; ***நனந் தலைய கொங்கைகள் ததும்பிட -*** விரிந்தமைந்த மார்பகங்கள் அசைய; ***நடந்தார் -*** நடக்கலாயினர்; ***அழுங்கி அயர்கின்றார் -*** வருத்தம் ஓங்க மயங்கலாயினர்.

*மனந்தலை - மனத்தலை என்பதன் மெலித்தல் விகாரம். கனம் மேகம் என்னும் பொருளினது.*

***3109. 'அங்கையின் அரன் கயிலை***
***கொண்ட திறல் ஐயன்***
***தங்கை நிலை இங்கு இதுகொல்?'***
***என்று, தளர்கின்றார்;***
***கொங்கை இணை செங் கையின்***
***மலைந்து,-குலை கோதை***
***மங்கையர்கள்-நங்கை அடி***
***வந்து விழுகின்றார்.***

***'அங்கையின் அரன்கயிலை கொண்ட -*** தன் (இருபது) கரங்களால் சிவபிரான் கயிலை மலையை எடுத்த; ***திறல் ஐயன் -*** ஆற்றல் மிக்க நம் தலைவன் (இராவணனுடைய) ; ***தங்கை நிலை -*** தங்கையாகிய சூர்ப்பணகையின் கதியே; ***இங்கு இது கொல் -*** இப்போது இவ்வாறாயிற்றோ?; ***என்று -*** என எண்ணி; ***குலை கோதை மங்கையர்கள்-*** அவிழ்ந்து சிதறிய கூந்தலை உடைய அரக்க மகளிர் சிலர்; ***தளர்கின்றார்-*** வருத்தம் கொண்டவர்களாய்; ***கொங்கை இணை செங்கையின் மலைந்து-*** இரு மார்பகங்களையும் தமது சிவந்த கரங்களால் அடித்துக் கொண்டு; ***நங்கை அடி -*** சூர்ப்பணகை காலடியில்; ***வந்து விழுகின்றார் -***வந்து வீழ்கின்றவர்களாயினர்.

*இராவணன் ஆற்றலை நினைந்து, அவன் தங்கைக்கும் இந்நிலையோ என்று கவலை கொண்டனர்.*

***3110. 'இலங்கையில் விலங்கும் இவை***
***எய்தல் இல, என்றும்,***
***வலங் கையில் இலங்கும் அயில்***
***மன்னன் உளன் என்னா;***
***நலம் கையில் அகன்றதுகொல்,***
***நம்மின்?' என, நைந்தார்;***
***கலங்கல் இல் கருங் கண்***
***இணை வாரி கலுழ்கின்றார்.***

**வலம்** - வெற்றி மிக்கதாய்; **கையில் இலங்கும்** - கரத்திலே விளங்கும்; **அயில் மன்னன்** - வேற்படை ஏந்திய அரசனாகிய (இராவணன்); **உளன் என்னா** - (ஆட்சித் தலைவனாய்) உள்ளான் என்பதால்; **இலங்கையில்** - இலங்கை மாநகரில்; **என்றும் விலங்கும் இவை எய்தல் இல** - எக்காலத்தும் மிருகங்களும் இத்தகைய கொடுமையை அடைந்ததில்லை; **நம்மின் நலம்** - நம்முடைய சிறப்புக்கள்; **கையில் அகன்றது கொல்** - நம் கைவிட்டு நீங்கிப் போயிற்றோ?;**என** - என்று எண்ணி; **நைந்தார்** - வருந்தியவர்களாய்; **கலங்கல் இல்** - இதுவரை கலங்கியறியாத; **கருங்கண் இணை** - கரிய இரு கண்களிலும்; **வாரி கலுழ்கின்றார்** - வெள்ளம் பெருக நின்றார்கள்.

விலங்குகளும் துன்பம் அறியாத நாடாக இராவணன் ஆட்சியில் இலங்கை விளங்கியமை புலப்படுத்தப்படுகிறது மயன் மகளை மணம் செய்த காலத்து இராவணனுக்கு மிக்க சிறப்புடைய வேல் மயனால் வழங்கப் பெற்றது என்பது வரலாறு. 44இராவணன் அடிகளில் சூர்ப்பணகை விழுதல்

*3111.* **என்று, இனைய வன்**
**துயர் இலங்கைநகர் எய்த,**
**நின்றவர் இருந்தவரொடு**
**ஓடு நெறி தேட,**
**குன்றின் அடி வந்து படி**
**கொண்டல் என, மன்னன்**
**பொன் திணி கருங் கழல்**
**விழுந்தனள், புரண்டாள்.**

**என்று இனைய வன் துயர்** - இவ்வாறான பெருந்துயரத்தை; **இலங்கை நகர் எய்த** - இலங்கை நகர மக்கள் எய்தவும்; **நின்றவர்இருந்தவரொடு ஓடு நெறி தேட** - அமர்ந்திருந்தவரும், நின்றிருந்தவரும் ஓடுதற்கு வழி பார்க்கவும்; **குன்றின் அடி வந்துபடி கொண்டல் என** - மலையடிவாரம் நாடிச் சேர்ந்த மேகத்திரளைப் போல; (சூர்ப்பணகை) ; **மன்னன் பொன் திணி கருங்கழல்** - அரசன் இராவணனுடைய பொன்னாலாகிய வீரக்கழல் அணிந்த கரிய பாதங்களில்;**விழுந்தனள் புரண்டாள்** - வந்து வீழ்ந்து உருண்டாள்.

இராவணன் சீற்றம் கொள்ளும் போது தாங்க ஒண்ணாதென ஓடக் கருதினர் மக்கள். உவமையணி. இராவணன் - குன்று; சூர்ப்பணகை - கருமேகம். கருங் கழல் - பாதத்துக்கு அன்மொழித்தொகை.

*3112.* **மூடினது இருட் படலம்**
**மூஉலகும் முற்ற;**
**சேடனும் வெருக்கொடு சிரத்**
**தொகை நெளித்தான்;**
**ஆடின குலக் கிரி;**
**அருக்கனும் அயிர்த்தான்;**

***ஓடின திசைக் கரிகள்;***
***உம்பரும் ஒளித்தார்.***

***மூஉலகும் முற்ற -*** *மூன்று உலகங்கள் முழுவதிலும்;* ***இருட் படலம் மூடினது -*** *இருள் செறிந்து கவிந்தது;* ***சேடனும் -*** *பூமி தாங்கும் ஆதி சேடனும்;* ***வெருக்கொடு -*** *அச்சம் கொண்டு;* ***சிரத்தொகை நெளித்தான் -*** *தன் ஆயிரம் தலைகளையும் ஒடுக்கினான்;* ***குலக்கிரி ஆடின -****மலைத் தொகுதிகள் இடம் பெயர்ந்தன;* ***அருக்கனும் அயிர்த்தான் -*** *சூரியனும் தனக்கு ஏதேனும் கேடு வருமோ என ஐயப்பட்டான்;****திசைக்கரிகள் ஓடின-*** *திக்கு யானைகள் அஞ்சி ஓடின;* ***உம்பரும் ஒளித்தார் -****தேவர்களும் வெருண்டு ஓடி ஒளிந்தனர். இராவணன் சினக் கோலம் கருதித் திங்களும், விண்மீன்களும், அக்கினியும் மறைய இருள் சூழ்ந்ததாகவும், அவன் எழுந்த அதிர்ச்சியில் ஆதிசேடன் நெளிந்ததாகவும், காலை மிதித்தூன்ற மலைகள் நடுங்கியதாகவும், அவன் கோபம் எழ சூரியன், திக்கு யானைகள், தேவர்கள் திகைத்து ஒளிந்ததாகவும் கற்பனை செய்தார்.*

*குலக்கிரிகள் - கயிலை, இமயம், மந்தரம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்பன. சேஷன் - அனைத்தும் அழிகிற ஊழியிலும் தான் அழியாது மீதியாய் நிற்பவன்.*

***3113. விரிந்த வலயங்கள் மிடை***
***தோள் படர, மீதிட்டு***
***எரிந்த நயனங்கள் எயிறின்***
***புறம் இமைப்ப,***
***நெரிந்த புருவங்கள் நெடு***
***நெற்றியினை முற்ற,***
***திரிந்த புவனங்கள்; வினை,***
***தேவரும், அயர்த்தார்.***

***விரிந்த வலயங்கள் -*** *ஒளி விரிந்த வாகு வளைகள்;* ***மிடை தோள் படர -*** *பொருந்திய தோள்கள் பொங்கி எழவும்;* ***நயனங்கள் -****கண்கள்;* ***மீதிட்டு எரிந்த -*** *நெருப்புக் கிளர்ந்து எரியவும்;* ***எயிறின் புறம் இமைப்ப -*** *பற்கள் வெளித் தோன்றி ஒளிவீசவும்;* ***நெரிந்த புருவங்கள் -*** *வளைந்துயரும் புருவங்கள்;* ***நெடு நெற்றியினை முற்ற -*** *விரிந்த நெற்றியின் மீதேறிச் சேரவும்; (அக்கோபக் காட்சி கண்டு);****புவனங்கள் திரிந்த -*** *உலகங்கள் நிலைகுலைந்தோடின;* ***தேவரும் -****தேவர்களும்;* ***வினை அயர்த்தார் -*** *செய்தற்குரிய கடமைகளை மறந்தனர்.*

*பொங்கியெழும் தோளும், நெருப்புமிழ் கண்களும், புறத்திடும் பற்களும், உயரும் புருவமும் சின அறிகுறிகள். 'நயனங்கள் எரிந்த' என்ற தொடரில் 'எரிந்த என்ற பலவின் பால் வினைமுற்றை (முற்றெச்சம்) என எச்சமாக்கிப் பொருள் கொள்ளப்பட்டது.*

***3114. தென் திசை நமன்தனொடு***
***தேவர் குலம் எல்லாம்,***

***இன்று, இறுதி வந்தது***
***நமக்கு' என, இருந்தார்;***
***நின்று உயிர் நடுங்கி, உடல்***
***விம்மி, நிலை நில்லார்,***
***ஒன்றும் உரையாடல் இலர்,***
***உம்பரினொடு இம்பர்.***

***தென் திசை நமன் தனொடு*** - தெற்குத் திசையினனாகிய எமனுடன்; ***'தேவர் குலம் எல்லாம்*** - அனைத்துத் தேவர்களும்'; ***'நமக்கு இன்று இறுதி வந்தது'*** - 'நம் எல்லாருக்கும் இன்றோடு முடிவு காலம் வந்துவிட்டது'; ***என இருந்தார்*** - என்று கருதினர்; ***உம்பரினொடு இம்பர்*** - வானுலகரும் மண்ணுலகரும்; ***நின்று உயிர் நடுங்கி*** - அஞ்சி நின்று உயிரும் பதைக்க; ***உடல் விம்மி*** - உடல் பெருமூச்செறிந்து; ***நிலை நில்லார்*** - ஒரு நிலையில் நிற்க முடியாதவர்களாய்; ***ஒன்றும் உரையாடல் இலர்*** - ஏதும் பேசலாற்றாது மௌனம் பூண்டனர்.

*'இப்படிச் செய்தவர் யார்' என இராவணன் கேட்டல்*

***3115. மடித்த பில வாய்கள்தொறும்,***
***வந்து புகை முந்த,***
***துடித்த தொடர் மீசைகள்***
***சுறுக்கொள உயிர்ப்ப,***
***கடித்த கதிர் வாள் எயிறு***
***மின் கஞல, மேகத்து***
***இடித்த உரும் ஒத்து உறறி,***
***'யாவர் செயல்?' என்றான்.***

***மடித்த*** - சினத்தால் உதடு அதுக்கிய; ***பில வாய்கள் தொறும்*** - மலைக் குகை போன்ற பத்து வாய்களிலும்; ***வந்து புகை முந்த*** -சினத் தீயின் புகை பொங்கி வர; ***துடித்த தொடர் மீசைகள்*** - கோபத்தால் துடிதுடிக்கும் அடர்ந்த மீசைகள்; ***சுறுக்கொள உயிர்ப்ப*** - பொசுங்கி நாறும்படி பெருமூச்சு வெளிப்பட; ***கடித்த கதிர் வாள் எயிறு*** -இறுக மென்ற, ஒளி வீசும் கூரிய பற்கள்; ***மின் கஞல*** - மின்னல் போல் பிரகாசிக்க; ***மேகத்து இடித்த உரும் ஒத்த உறறி*** - முகில்களில் ஓசை செய்து எழும் இடி முழக்கம் போல் பேரொலி செய்து; ***'யாவர் செயல்' என்றான்*** - 'இது யாருடைய செயல்' என்று வினவினான்.

*தங்கை நிலைகண்ட இராவணன் கொண்ட சினமும் கேட்ட வினாவும் இப்பாடலில் அமைந்துள்ளன.*

***3116. 'கானிடை அடைந்து புவி***
***காவல் புரிகின்றார்;***
***மீனுடை நெடுங் கொடியினோன்***
***அனையர்; மேல் கீழ்***

***ஊனுடை உடம்பு உடைமையோர்***
***உவமை இல்லா***
***மானிடர்; தடிந்தனர்கள் வாள்***
***உருவி' என்றாள்.***

***கானிடை அடைந்து -*** *(நான் இருந்த) கானகத்திற்கு வந்து;* ***புவி காவல் புரிகின்றார் -*** *இந்தப் பூமியைப் பாதுகாக்கும் பணியினை மேற் கொண்டிருக்கின்றனர்;* ***மீனுடை நெடுங் கொடியினோன் அனையர் -*** *மகர மீன் கொடியை உடைய மன்மதனுக்கு நிகரானவர்கள்;* ***மேல் கீழ் -*** *விண்ணிலும் மண்ணிலும்;* ***ஊனுடை உடம்பு உடைமையோர் -*** *தசையாலாகிய உடம்பு படைத்தோர் எவரும்;* ***உவமை இல்லா மானிடர் -*** *தமக்கு உவமையாகக் கூற முடியாத (அழகும் வீரமும் உடைய) மானிடர் இருவர்;* ***வாள் உருவித் தடிந்தனர்கள் -*** *வாளை உருவி இவ்வாறு அரிந்தனர்;* ***என்றாள் -*** *என்று (சூர்ப்பணகை) கூறினாள்.*

*தனக்குத் தீமை செய்தவர்களின் அழகையும் காம மிகுதியால் பாராட்டி உரைத்தாள். புவி காவல் புரிகின்றார் என்றது அரசகுமாரர்கள் என்ற குறிப்பை உணர்த்த எனலாம். அனுபவிக்கும் அவலத்திடையிலும் முறையிட்டுப் பழி தூண்டும் செயலிடையிலும் இராமலக்குவரின் மேனி அழகை மறக்க முடியவில்லை.*

*இராவணன் மீண்டும் சூர்ப்பணகையை வினவல்*

***3117. 'செய்தனர்கள் மானிடர்'***
***என, திசை அனைத்தும்***
***எய்த, நகை வந்தது; எரி***
***சிந்தின, கண் எல்லாம்;***
***'நொய்து அவர் வலித் தொழில்;***
***நுவன்ற மொழி ஒன்றோ?***
***பொய் தவிர்; பயத்தை ஒழி;***
***புக்க புகல்' என்றான்.***

*(சூர்ப்பணகை) ;* ***'மானிடர் செய்தனர்கள்' என -*** *மனிதர்கள் இவ்வாறு செய்தார்கள் என்று கூறவும்;* ***திசை அனைத்தும் எய்த நகை வந்தது -*** *(இராவணனுக்குத்) திசைகளெல்லாம் எதிரொலிக்கும்படி நகைப்புப் பிறந்தது;* ***கண் எல்லாம் எரி சிந்தின -*** *கண்களில் நெருப்புப் பொறிபறந்தது;* ***'அவர் வலித் தொழில் -*** *அம் மனிதர்களின் துணிச்சலான செயல்;* ***நொய்து -*** *அற்பமானது;* ***நுவன்ற மொழி ஒன்றோ -*** *நீ கூறிய செய்தி உண்மையானது தானே? ;* ***பொய்தவிர் -*** *பொய்யை விட்டுச் சொல்;* ***பயத்தை ஒழி -*** *அச்சத்தை ஒழிவாயாக;* ***புக்க புகல் -****நடந்தவற்றை மெய்யாகச் சொல்';* ***என்றான் -*** *என்று மொழிந்தான்.*

*மனிதர் செயலெனின் உண்மையாய் இருக்க முடியாதே என்று கருதி இவ்வாறு கேட்டான். புக்க - புகுந்தவை நிகழ்ந்தவை; பலவின்பாற் பெயர். 51சூர்ப்பணகையின் விடை*

*3116. 'மன்மதனை ஒப்பர், மணி*
*மேனி; வட மேருத்*
*தன் எழில் அழிப்பர், திரள்*
*தோளின் வலிதன்னால்;*
*என், அதனை இப்பொழுது*
*இசைப்பது? உலகு ஏழின்*
*நல் மதம் அழிப்பர், ஓர்*
*இமைப்பின், நனி, வில்லால்.*

***மணி மேனி*** *- (அம்மானிடர்) மணி போல் ஒளி வீசும் மேனியழகால்;* ***மன்மதனை ஒப்பர்*** *- காமனை ஒத்திருப்பார்கள்;* ***திரள் தோளின் வலி தன்னால்*** *- திரண்ட தோள்களின் வலிமையைக் கணக்கிட்டால்;* ***வடமேருத் தன் எழில் அழிப்பர்*** *- வடக்கில் உள்ள மேரு மலையின் அழகையும் தோல்வியுறச் செய்வர்;* ***என் அதனை இப்பொழுது இசைப்பது?*** *- அவ்வாற்றல்களை இங்கே இப்போது விரித்துப் பேசி என்ன பயன்;* ***வில்லால்*** *- (தம்) வில்லாற்றலால்;* ***ஓர் இமைப்பின்*** *- கண்ணிமைப் பொழுதில்;* ***உலகு ஏழின் நல்மதம் நனி அழிப்பர்*** *- ஏழு உலகங்களின் வலிமை மிக்காரை யெல்லாம் மிக ஆற்றலோடு அழிக்க வல்லவர் ஆவர்.*

*இராம இலக்குவரின் அழகு, வலிமை இரண்டினையும் இப்பாடலில் கூறினாள்.*

*3119. 'வந்தனை முனித்தலைவர்பால்*
*உடையர்; வானத்து*
*இந்துவின் முகத்தர்; எறி*
*நீரில் எழு நாளக்*
*கந்த மலரைப் பொருவு*
*கண்ணர்; கழல், கையர்;*
*அந்தம் இல் தவத் தொழிலர்;*
*ஆர் அவரை ஒப்பார்?*

*(மேலும் அவர்கள்);* ***முனித்தலைவர் பால் வந்தனை உடையர்*** *- தவ நலம் சான்ற பெரியோரிடம் வணக்கம் செய்யும் இயல்பினர்;* ***வானத்து இந்துவின் முகத்தர்*** *- விண்ணில் விளங்கும் மதியம் போல் முகம் உடையவர்;* ***எறி நீரில்*** *- அலை வீசும் நீர் நிலையில்;* ***எழு நாளக் கந்த மலரை*** *- வளரும் தண்டோடு கூடிய மண மிகு தாமரைப் பூவை;* ***பொருவு கண்ணர்*** *- ஒத்த கண்களை உடையவர்;* ***கழல் கையர்*** *- அம்மலர் போன்றே அமைந்த காலும் கரமும் உடையவர்;* ***அந்தம் இல்தவத் தொழிலர்*** *- எல்லையற்ற தவமே கடமையாகக் கொண்டவர்;* ***ஆர் அவரை ஒப்பார்?*** *- அவர்களுக்கு நிகராக யாரைக் கூற முடியும்? (எவரையும் கூற முடியாது). முனிவரை வணங்குவரென்றமையின் பிறர் யாரையும் வணங்க மாட்டார் என உணர்த்தினாள். இப்பாடலிலும் அவர்கள் அழகும் பண்பும் உரைக்கப்பட்டன.*

***3120. 'வற்கலையர்; வார் கழலர்;***
***மார்பின்அணி நூலர்;***
***விற் கலையர்; வேதம் உறை***
***நாவர்; தனி மெய்யர்;***
***உற்கு அலையர்; உன்னை ஓர்***
***துகள்-துணையும் உன்னார்;***
***சொற் கலை எனத் தொலைவு***
***இல் தூணிகள் சுமந்தார்.***

*(இன்னும் அவர்கள்)* ***வற்கலையர் -*** *மரவுரி தரித்திருப்பர்;* ***வார் கழலர் -*** *நெடிய வீரக்கழல் அணிந்திருப்பர்;* ***மார்பின் அணி நூலர் -*** *மார்பில் முப்புரி நூல் அணிந்திருப்பர்;* ***விற்கலையர் -*** *வில்லின் கலையெல்லாம் அறிந்திருப்பர்;* ***வேதம் உறை நாவர் -*** *மறை பயின்ற நாவை உடையவர்;* ***தனி மெய்யர் -*** *தனிச் சிறப்பு மிக்க மேனி அழகுடையவர்;* ***உற்கு அலையர் -*** *உனக்கு அஞ்சாதவர்கள்;****உன்னை ஓர் துகள் துணையும் உன்னார் -*** *ஒரு சிறு தூசியளவு கூட உன்னை மதியாதவர்;* ***சொற் கலை என -*** *சொல்லால் அமைந்த கலைப் படைப்புப் போல;* ***தொலைவு இல் தூணிகள் சுமந்தார் -*** *அழிவில்லாத அம்புகளைக் கொண்ட அம்பறாத் தூணிகள் தாங்கினவர்கள்.*

*மரவுரியும் அவர்க்கு அழகானமையின் வற்கலையர் என்றாள். கரன் முதலியோரை அழித்த அருமை விளங்க விற்கலையர் என்றாள். உன்னை அவர்கள் மதிக்கவில்லை என்பதை எனக்கு நேர்ந்தவையே காட்டும் என்று குறிப்பால் காட்டினாள். இதனால் இராவணனின் சினத்தையும் தூண்டினாள். சொல்லும் அம்பும் இணையானவை 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசுரம்' எனத் (388) தாடகை வதைப் படலத்தும் கூறினார்.*

***3121. 'மாரர் உளரே இருவர், ஓர்***
***உலகில் வாழ்வார்?***
***வீரர் உளரே, அவரின் வில்***
***அதனின் வல்லார்?***
***ஆர் ஒருவர் அன்னவரை***
***ஒப்பவர்கள், ஐயா?***
***ஓர் ஒருவரே இறைவர்***
***மூவரையும் ஒப்பார்.***

***ஐயா -*** *ஐயனே;* ***ஓர் உலகில் வாழ்வார் -*** *ஒரே உலகின்கண் வாழ்கின்றவர்களாய்;* ***இருவர் மாரர் உளரே? -*** *இரண்டு மன்மதர்கள் இருக்கின்றார்களா?;* ***அவரின் வில்லதனில் வல்லார் -****அவர்களைக் காட்டிலும் வில் வலிமையில் வல்லவர்;* ***வீரர் உளரே -*** *(வேறு) வீரர்களும் இருக்கின்றார்களா?;* ***ஒருவர் அன்னவரை ஒப்பவர்கள் ஆர் -*** *அவர்களுக்குச் சமானமாக உள்ளவர் எவரேனும் உண்டா?;* ***ஓர் ஒருவரே இறைவர் மூவரையும் ஒப்பார் -*** *அவர்களில் ஒவ்வொருவருமே மும்மூர்த்திகளுக்கு நிகரானவர்களாய் இருப்பார்கள்.*

*மும்மூர்த்திகளும் சேர்ந்தால் இவர்களில் ஒருவருக்குச் சமமாவர் என இவர்களை உயர்த்திக் கூறினாள்.*

***3122. "ஆறு மனம் அஞ்சினம், அரக்கரை"***
***எனச் சென்று***
***ஏறு நெறி அந்தணர் இயம்ப,***
***"உலகு எல்லாம்***
***வேறும்" எனும் நுங்கள் குலம்,***
***"வேறொடும் அடங்கக்***
***கோறும்" என, முந்தை ஒரு***
***சூளுறவு கொண்டார்.***

***ஏறு நெறி அந்தணர் -*** *மேலான நெறியில் வாழும் முனிவர்கள்;* ***ஆறுமனம் அஞ்சினம் அரக்கரை -*** *அடக்கம் மிக்க எங்கள் மனம்அரக்கர்களைக் கண்டு அஞ்சுகிறது;* ***எனச் சென்று இயம்ப -****என்று (அம்மானிடரிடம்) சென்று சொல்லவும் (அம்மனிதர்கள்);* ***உலகு எல்லாம் வேறும் எனும் -*** *அனைத்து உலகங்களையும் நாங்கள் வெல்வோம் என்று கூறும்;* ***நுங்கள் குலம் -*** *அரக்கர்களாகிய உங்கள் வமிசத்தை;****வேறொடும் அடங்கக் கோறும் என -*** *வேரோடு அழித்து முடிப்போம் என்று;****முந்தை ஒரு சூளுறவு கொண்டார் -*** *முன்பு ஒரு சபதம் செய்துள்ளனர்.*

*அகத்தியப் படலத்தில் முனிவர்க்கு அபயம் தந்த செயல் கூறப்பட்டுள்ளது. ஆறு மனம் - வினைத் தொகை.*

***3123. 'தராவலய நேமி உழவன்,***
***தயரதப் பேர்ப்***
***பராவ அரு நலத்து ஒருவன்,***
***மைந்தர்; பழி இல்லார்;***
***விராவ அரு வனத்து, அவன்***
***விளம்ப, உறைகின்றார்;***
***இராமனும் இலக்குவனும் என்பர்,***
***பெயர்' என்றாள்.***

*(அவர்கள்)* ***தரா வலய நேமி உழவன் -*** *பூமி முழுவதையும் தன்ஆட்சிச் சக்கரத்தால் கட்டுப்படுத்தியவனான;* ***தயரதப் பேர் -****தயரதன் என்னும் பெயரை உடைய;* ***பராவரு நலத்து ஒருவன் -****புகழ்ந்துரைக்க ஒண்ணாத சிறப்புக்கள் கொண்ட ஒரு மன்னனது;* ***மைந்தர் -****மக்கள்;* ***பழி இல்லார் -*** *பழி கூறலாகாத சிறப்புடையவர்;* ***அவன் விளம்ப -*** *அத்தயரதன் இட்ட கட்டளையால்;* ***விரா வரு வனத்து உறைகின்றார் -*** *நெருங்குதற்கு அரிய காட்டில் வசிக்கின்றார்கள்;* ***பெயர் இராமனும்இலக்குவனும் என்பர் -*** *அவர்கள் முறையே இராமன் என்றும் இலக்குவன் என்றும் பெயருடையார்;* ***என்றாள் -*** *என்று (சூர்ப்பணகை) கூறினாள்.*

*இராமலக்குவர் வனம் புகுந்த வரலாறு கூறினாள்.*

*இராவணன் தன்னைத் தானே பழித்துக் கூறுதல்*

***3124. 'மருந்து அனைய தங்கை மணி***
***நாசி வடி வாளால்***
***அரிந்தவரும் மானிடர்; அறிந்தும்,***
***உயிர் வாழ்வார்;***
***விருந்து அனைய வாளொடும், விழித்து,***
***இறையும் வெள்காது.***
***இருந்தனன் இராவணன் இன்***
***உயிர்கொடு, இன்னும்.***

***மருந்தனைய தங்கை -** அமுதம் போல் அடியவளான தங்கை சூர்ப்பணகையின்; **மணிநாசி -** அழகிய மூக்கை; **வடிவாளால் அரிந்தவரும் -** கூர்வாள் கொண்டு அறுத்தெறிந்தவர்களும்;**மானிடர் -** (இழிந்த) மனிதர்களே ஆவர்; **அறிந்தும் உயிர் வாழ்வார் -**(அங்ஙனம்) தாக்கப்பட்டாள் என் தங்கை என அறிந்த பின்னும் உயிர் பிழைத்திருந்தனர்; **இராவணன் -** இராவணனாகிய நான்;**விருந்தனைய வாளொடும் -** புதிது போலும் என் வாளொடும்; **இன்னும் விழித்து -** இன்னும் விழித்துக் கொண்டு; **இறையும் வெள்காது -** சற்றும் வெட்கமின்றி; **இன்னுயிர் கொடு -** இனிய உயிரைச் சுமந்து கொண்டு;**இருந்தனன் -** இருக்கின்றேன்!*

*மனிதர்கள் தீங்கிழைத்த பின்னும் அவர்களை மாய்க்காமல் இருக்கும் தன்னையே நொந்து கொள்கிறான் இராவணன்.*

***3125. 'கொற்றம்அது முற்றி,***
***வலியால் அரசு கொண்டேன்;***
***உற்ற பயன் மற்று இதுகொலாம்?***
***முறை இறந்தே***
***முற்ற, உலகத்து முதல்***
***வீரர் முடி எல்லாம்***
***அற்ற பொழுதத்து, இது***
***பொருந்தும் எனல் ஆமே?***

***கொற்றம் அது முற்றி -** வெற்றி மேல் வெற்றி நிறைந்து;**வலியால் அரசு கொண்டேன் -** என் ஆற்றலால் இலங்கை ஆட்சியை நிறுவிக் கொண்டேன்; **உற்ற பயன் மற்று இது கொலாம் -** (இத்தகு பெருமைக்குரிய நான்) **அடைந்த பயன் இவ்வளவுதானா? ;முறை இறந்தே -** என் ஆட்சி முறை அழிந்து போக; **முற்ற உலகத்து -** முழுவதுமாய் இப்பேருலகின்; **முதல் வீரர் முடி எல்லாம் -**தலைமை சான்ற வீரர்களுடைய தலைகள் எல்லாம்; **அற்ற பொழுதத்து -**அறுபட்ட நிலை வந்தாலும்; **இது பொருந்தும் எனல் ஆமே -** (ஏற்பட்டுள்ள) இழிவு என் தகுதிக்குப் பொருந்தியதாகுமோ?*

உலகத்து வீரர்கள் தலை இழந்தாலும் தங்கை மூக்கிழந்தமை நேராகுமோ என்பது தோன்ற உரைத்தான்.

***3126. 'மூளும் உளது ஆய பழி***
***என்வயின் முடித்தோர்***
***ஆளும் உளதாம்; அவரது ஆர்***
***உயிரும் உண்டாம்;***
***வாளும் உளது; ஓத விடம்***
***உண்டவன் வழங்கும்***
***நாளும் உள; தோளும் உள;***
***நானும் உளென் அன்றோ?***

**மூளும் உளதாய பழி** - உருவாகி வந்திருக்கும் அவமானத்தை; **என் வயின் முடித்தோர்** - என்பால் இழைத்த; **ஆளும் உளதாம்** - மானிடர்கள் இன்னும் இருந்தனர்; **அவரது ஆர் உயிரும் உண்டாம்** - அவர்களின் இனிய உயிரும் இன்னும் அழிக்கப்படாமல் இருந்தது; **வாளும் உளது** - (என் கை) வாளும் வறிதே இருந்தது; **ஓதவிடம் உண்டவன்** - கடலில் பிறந்த நஞ்சினை உண்ட சிவபெருமான்; **வழங்கும் நாளும் உள** - அளித்த என் ஆயுட் காலமும் இருந்தது; **தோளும் உள நானும் உளென் அன்றோ?** - (பயனின்றி) என் தோள்களும் உள்ளன, நானும் (செயலின்றி) இருந்தேன் அல்லவா?

வாளும், தோளும் பிறவுமாம் வல்லமை பெற்றிருந்தும் பழிக்கு ஆளானேன் என்ற தன்னிரக்கம் புலப்படுத்தப்படுகிறது.

***3127. 'பொத்துற உடற்பழி***
***புகுந்தது" என நாணி,***
***தத்துறுவது என்னை? மனனே!***
***தளரல் அம்மா!***
***எத் துயர் உனக்கு உளது?***
***இனி, பழி சுமக்க,***
***பத்து உள தலைப் பகுதி;***
***தோள்கள் பல அன்றே?***

**மனனே** - என் உள்ளமே! **உடல் பொத்துறப் பழி புகுந்தது** - உடலையும் துளைத்துப் பழி சென்று நின்றது; **என நாணி** - என்று வெட்கமுற்று; **தத்துறுவது என்னை?** - ஏன் தடுமாறுகிறாய்?; **தளரல்** - சோர்வடையாதே; **உனக்கு எத்துயர் உளது?** - உனக்கு அவமானம் சுமக்கும் எவ்விதத் துன்பமும் வேண்டியதில்லை (ஏனெனில்); **இனிப் பழி சுமக்க** - இனிமேல் அப்பழியைத் தாங்க; **பத்துள தலைப்பகுதி** - தலைகள் பத்து உள்ளன; **தோள்கள் பல அன்றே** - தோள்களும் பல உள்ளன அன்றோ?

*அம்மா - இடைச் சொல் பழி தீர்க்க வேண்டிய தலைப் பாரமும்,தோள் வலிமையும் உண்டென மொழிகின்றான்.*
*கரன் முதலியோர் பற்றி இராவணன் வினவல்*

***3128. என்று உரைசெயா, நகைசெயா,***
***எரி விழிப்பான்,***
***'வன் துணை இலா இருவர்***
***மானிடரை வாளால்***
***கொன்றிலர்களா, நெடிய***
***குன்றுடைய கானில்***
***நின்ற கரனே முதலினோர்***
***நிருதர்?' என்றான்.***

***என்று உரை செயா -*** *எனக் கூறி;* ***நகை செயா -*** *சிரித்து;* ***எரி விழிப்பான் -*** *நெருப்பெழ விழித்து (இராவணன்);* ***நெடிய குன்றுடைய கானில் -*** *பெரு மலை சூழ்ந்த கானகத்தில்;* ***நின்ற கரனே முதலினோர் நிருதர் -*** *காவலில் நிலை பெற்ற கரன் முதலாகிய அரக்க வீரர்கள்;* ***வன்துணை இலா இருவர் மானிடரை -*** *பெருந்துணை ஏதும் இல்லாமல் எதிர்த்த அவ்விரு மனிதர்களை;* ***வாளால் கொன்றிலர்களா? -****வாள் வீசிக் கொல்ல வில்லையா?;* ***என்றான் -*** *என்று வினவினான்.*

*துணை வலிமையும் இல்லாதவர்களை ஆயுத வலிமை கொண்டோர் தோற்பிக்க வில்லையா என்றான்.* *62நடந்ததுபற்றிச் சூர்ப்பணகை கூறல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3129. அற்று அவன் உரைத்தலோடும், அழுது***
***இழி அருவிக் கண்ணள்,***
***எற்றிய வயிற்றள், பாரினிடை***
***விழுந்து ஏங்குகின்றாள்,***
***'சுற்றமும் தொலைந்தது, ஐய!***
***நொய்து' என, சுமந்து கையள்,***
***உற்றது தெரியும்வண்ணம்,***
***ஒருவகை உரைக்கலுற்றாள்:***

***அற்று அவன் உரைத்தலோடும் -*** *அவ்வாறு (இராவணன்) கூறிய மாத்திரத்தில்;* ***அழுது இழி அருவிக் கண்ணள் -*** *அழுவதால் வழியும் அருவி போன்ற கண்ணீரை உடையவளாய் (சூர்ப்பணகை) ;****எற்றிய வயிற்றள் -*** *(கைகளால்) அடிக்கப்படும் வயிற்றை உடையவளாய்;* ***பாரினிடை விழுந்து ஏங்குகின்றாள் -*** *நிலத்தின் மேல் விழுந்து புரண்டு அழுகின்றவளாய்;* ***'ஐய -*** *ஐயனே;* ***சுற்றமும் நொய்து தொலைந்தது -*** *(காவல் நின்ற) உறவும் விரைவில் அழிந்து போனது;* ***எனச் சுமந்த கையள்-*** *எனத் தலை மீது கையை வைத்தவாறு;* ***உற்றது தெரியும் வண்ணம் -*** *(கரன் முதலியோருக்கு) நேர்ந்த அழிவின் வரலாறு விளங்கும்படியாக;* ***ஒரு வகை உரைக்கலுற்றாள் -*** *ஒருவாறு*

*தொகுத்துக் கூறலாயினாள்.*

***3130. ' "சொல்" என்று என் வாயில் கேட்டார்;***
***தொடர்ந்து எழு சேனையோடும்***
***"கல்" என்ற ஒலியில் சென்றார்,***
***கரன் முதல் காளை வீரர்;***
***எல் ஒன்று கமலச் செங் கண் இராமன்***
***என்று இசைத்த ஏந்தல்***
***வில் ஒன்றில், கடிகை மூன்றில்,***
***ஏறினர் விண்ணில்' என்றாள்.***

***கரன் முதல் காளை வீரர்*** - *கரன் முதலிய இளங்காளைகளான வீரர்கள்;* ***சொல் என்று என் வாயில் கேட்டார்*** - *நேர்ந்தது சொல் என்று என் வாய்மொழியைக் கேட்ட உடனே;* ***தொடர்ந்து எழு சேனையோடும்***- *இடைவிடாது வரும் படைகளோடும்;* ***கல்லென்ற ஒலியில் சென்றார்*** - *கல்லென்ற பேரொலி முழங்கப் புறப்பட்டனர்;* ***எல் ஒன்று கமலம்*** - *ஒளிக்கதிர் பட்டு விரிந்த தாமரை போலும்;* ***செங்கண் இராமன்*** -*சிவந்த கண்களை உடைய இராமன்;* ***என்று இசைத்த ஏந்தல்*** - *எனப் பெயர் பெற்ற தலைவனின்;* ***வில் ஒன்றில் கடிகை மூன்றில்*** - *புகழ் பெற்றவில்லால்மூன்றே நாழிகையில்;* ***ஏறினர் விண்ணில் என்றாள்*** - *இறந்து விண்ணுலகடைந்தனர் எனக் கூறினாள்.*

*இராமன் வில்லாற்றல் விளங்க, சென்றவர் மூன்றே நாழிகையில் மடிந்தார் என விரைவு தோன்றக் கூறினாள். இந்த நிலையிலும் கூட இராமன் அழகிலும் வீரத்திலும் சூர்ப்பணகை கொண்ட கவர்ச்சி தெளிவாக விளங்குகிறது.*

***3131. தாருடைத் தானையோடும் தம்பியர்,***
***தமியன் செய்த***
***போரிடை, மடிந்தார் என்ற உரை***
***செவி புகாதமுன்னம்,***
***காரிடை உருமின், மாரி***
***கனலொடு பிறக்குமாபோல்***
***நீரொடு நெருப்புக் கான்ற, நிரை***
***நெடுங் கண்கள் எல்லாம்.***

***தமியன் செய்த போரிடை*** - *இராமன் ஒருவனாகவே செய்த போரில்;* ***தாருடைத் தானையோடும் தம்பியர்*** - *மாலைகள் சூடிய வீரர்களோடு கரன் முதலிய தம்பிமார்கள்;* ***மடிந்தார்*** -*மரணமுற்றார்;* ***என்ற உரை*** - *என்னும் மொழி;* ***செவி புகாத முன்னம்*** - *தன் காதில் விழு முன்னர்;* ***காரிடை மாரி*** - *மேகங்களில் பிறந்த மழை;* ***உருமின்கனலொடு*** - *இடி மின்னல் நெருப்புக்களோடு;* ***பிறக்குமா போல்*** - *தோன்றினாற் போல;* ***நிறை நெடுங் கண்கள் எல்லாம்*** - *நிறைந்த பெரிய கண்கள் எல்லாவற்றிலும்;* ***நீரொடு நெருப்புக் கான்ற*** - *கண்ணீரும் கனலும் வீசின.*

*சோகத்தால் கண்ணீரும், கோபத்தால் நெருப்பும் பிறந்தமைக்கு மழையும் இடி மின்னல்களும் பிறந்த மேகத்தை உவமையாக்கினார்.*

*இராவணன் வினாவும் சூர்ப்பணகை விளக்கமும்*

***3132. ஆயிடை எழுந்த சீற்றத்து அழுந்திய***
***துன்பம் மாறி,***
***தீயிடை உகுத்த நெய்யின்,***
***சீற்றத்திற்கு ஊற்றம் செய்ய,***
***'நீ இடை இழைத்த குற்றம் என்னைகொல்,***
***நின்னை, இன்னே,***
***வாயிடை இதழும் மூக்கும் வலிந்து***
***அவர் கொய்ய?' என்றான்.***

***ஆயிடை** - அவ்வமயம்; **எழுந்த சீற்றத்து** - உண்டாகிய கோபத்தில்; **அழுந்திய துன்பம் மாறி** - அனுபவித்த துயரம் நீங்கி; **தீயிடை உகுத்தநெய்யின்** - நெருப்பிலே விழுந்த நெய்போல; **சீற்றத்திற்கு ஊற்றம் செய்ய** - (துயரம் குறைந்த இடத்தில்) கோபம் வலிமை கொள்ள; (இராவணன் சூர்ப்பணகையிடம்); **அவர் வலிந்து** - இராம இலக்குவர் பலம் கொண்டு; **நின்னை இன்னே** - உன்னை இவ்வாறு; **வாயிடை இதழும் மூக்கும் கொய்ய** - காதின் மடலும் மூக்கும் அரிய; **நீ இடை இழைத்த குற்றம்** - நீ அவர்கள்பாற் செய்த தவறு; **என்னைகொல்** -யாதேனும் உண்டோ; **என்றான்** - என்று கேட்டான்.*

*ஊற்றம் - ஊன்று கோல். ஓசை உட்புகும் வழியாதலால் செவியை வாய் என்றும் செவிமடலை இதழ் என்றும் மொழிந்தார்.*

***3133. 'என்வயின் உற்ற குற்றம்,***
***யாவர்க்கும் எழுத ஒண்ணாத்***
***தன்மையன் இராமனோடும்***
***தாமரை தவிரப்போந்தாள்,***
***மின்வயின் மருங்குல் கொண்டாள்,***
***வேய்வயின் மென் தோள் கொண்டாள்,***
***பொன்வயின் மேனி கொண்டாள்,***
***பொருட்டினால் புகுந்தது' என்றாள்.***

*(அதற்குச் சூர்ப்பணகை) **என் வயின் உற்ற குற்றம்** -என்னிடத்தில் நேர்ந்த பிழை யாதெனில்; **தாமரை தவிர** - தன் இருக்கையான தாமரைப் பூவை விட்டு; **யாவர்க்கும் எழுத ஒண்ணாத் தன்மையன் இராமனோடும்** - எத்தகு திறன்மிக்க ஓவியனாலும் எழுதிக் காட்ட முடியாத எழில் மிக்க இராமனுடன்; **போந்தாள்** - வந்தவளும்; **மின் வயின் மருங்குல் கொண்டாள்** - மின்னலிடம் இடையைப் பெற்றவளும்; **வேய் வயின் மென்றோள் கொண்டாள்** - மூங்கிலினிடம் மெல்லிய தோள்களைப் பெற்றவளும்;*

**பொன் வயின் மேனி கொண்டாள் பொருட்டினால் -** செம்பொன்னிடத்தில் தனி உடலைக் கொண்டவளுமான ஒருத்தி காரணமாக; **புகுந்தது என்றாள் -** நேர்ந்தது எனச் சொன்னாள்.

நான் உனக்காக இராமனுடன் வந்த கட்டழகியைக் கருதியதுதான் குற்றம் என மறைமுகமாகக் கூறினாள்.

குலமுறை கிளத்து படலத்துள் எழுதரிய திருமேனி (657) என்றும்வாலி வதைப் படலத்துள் ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய் என்றும் முறையே (4020) இராமன் அழகு கூறப்பட்டது. அடுக்கிக் கூறிய உவமைகளால் சீதையின் அழகு ஓர் உவமையில் அடங்குவதன்று என உணர்த்தினார்.

பிராட்டியின் அழகினை சூர்ப்பணகை விரித்துக் கூறுதல்

**3134. 'ஆர் அவள்?' என்னலோடும்,**
**அரக்கியும், 'ஐய! ஆழித்**
**தேர், அவள் அல்குல்; கொங்கை, செம்**
**பொன் செய் குலிகச் செப்பு;**
**பார் அவள் பாதம் தீண்டப்**
**பாக்கியம் படைத்தது அம்மா!**
**பேர் அவள், சீதை' என்று வடிவு**
**எலாம் பேசலுற்றாள் :**

(அது கேட்டு ஆர்வமுற்ற இராவணன்) **ஆர் அவள் என்ன லோடும் -** அந்தப் பெண் யார் என்று கேட்டவுடன்; **அரக்கியும் -** சூர்ப்பணகையும்; **ஐய -** ஐயனே; **அவள் அல்குல் ஆழித்தேர் -** அவளுடைய அல்குல் சக்கரம் பூட்டிய தேர் போலும்; **கொங்கை செம் பொன் செய் குலிகச் செப்பு -** அவளுடைய மார்பகங்கள் தங்கத்தால் செய்யப்பட்ட குங்குலியச் செப்புப் போலும்; **அவள் பாதம் தீண்டப் பார் பாக்கியம் படைத்தது -** அவள் திருவடி பட பூமி புண்ணியம் செய்தது போலும்; **அம்மா -** வியப்பு இது; **அவள் பேர் சீதை -** அவள் பெயரோ சீதையாம்; **என்று வடிவெலாம் பேசலுற்றாள் -** எனச் சீதையின் அழகு நலங்களை உரைக்கத் தொடங்கினாள்.

இராவணன் ஆசைத் தீயை வளர்க்க நெய் சொரிந்தாற் போல் இவ்வங்க வருணனைகள் அமைந்துள்ளன.

**3135. 'காமரம் முரலும் பாடல், கள், எனக்**
**கனிந்த இன் சொல்;**
**தே மலர் நிறைந்த கூந்தல்; "தேவர்க்கும்**
**அணங்கு ஆம்" என்னத்**
**தாமரை இருந்த தையல், சேடி**
**ஆம் தரமும் அல்லள்;**

***யாம் உரை வழங்கும் என்பது***
***ஏழைமைப்பாலது அன்றோ?***

*(அவளுடைய)* ***கள் எனக் கனிந்த இன்சொல் -*** *மதுவைப் போல் மயக்கமூட்டும் இனிய மொழிகள்;* ***காமரம் முரலும் பாடல் -*** *காமரம்என்னும் பண்ணிசை கமழும் பாடலை ஒக்கும்;* ***தேமலர் நிறைந்த கூந்தல்-*** *இனிய மலர்கள் சூடப் பெற்ற கூந்தலை உடைய (அவள்);****தேவர்க்கும் அணங்கு ஆம் -*** *தேவமாதரும் போற்றும் அழகுமிக்கவளாம்;****என்ன -*** *என்று சொல்லும்படி;* ***தாமரை இருந்த தையல் -*** *தாமரை மலரில் வசிக்கும் திருமகளும்;* ***சேடி ஆம் தரமும் அல்லள் -*** *தோழியாதற்குக் கூடத் தகுதி அற்றவள்;* ***யாம் உரை வழங்கும் என்பது -*** *அவளுடைய அழகைக்குறித்து நான் எடுத்துச் சொல்லக் கருதுவது;* ***ஏழைமைப் பாலது அன்றோ?-*** *அறியாமையின் பாற்பட்டது ஆகும் அன்றோ?     மானுடப் பெண்களினும் தேவமாதர் அழகுடையார். தேவமாதர்க்கும் தலைவியாய், திருமகள் தாதியாம் தரமும் பெறாமற் போமளவு சிறந்த எழிலுடையாள் சீதை எனக் கூறுகின்றாள்.*

***3136. மஞ்சு ஒக்கும் அளக ஓதி; மழை***
***ஒக்கும் வடிந்த கூந்தல்;***
***பஞ்சு ஒக்கும் அடிகள்; செய்ய***
***பவளத்தின் விரல்கள்; ஐய!***
***அம் சொற்கள் அமுதின் அள்ளிக் கொண்டவள்***
***வதனம் மை தீர்***
***கஞ்சத்தின் அளவிற்றேனும்,***
***கடலினும் பெரிய கண்கள்!***

***அம் சொற்கள் -*** *அழகிய சொற்களை;* ***அமுதின் அள்ளிக் கொண்டவள் -*** *அமுதத்திலிருந்து முகந்தெடுத்துக் கொண்ட அம்மங்கையின்;* ***அளக ஓதி -*** *கூந்தல்;* ***மஞ்சு ஒக்கும் -*** *மேகத்தை நிகர்க்கும்;* ***வடிந்த கூந்தல் -*** *முடியாது தாழ்ந்த கூந்தலோ;* ***மழை ஒக்கும் -*** *(இறங்கும்) மழைக்கார் போன்றிருக்கும்;* ***அடிகள் பஞ்சுஒக்கும் -*** *பாதங்கள் செம்பஞ்சினைப் போன்றிருக்கும்;* ***விரல்கள் செய்ய பவளத்தின் ஐய -*** *விரல்கள் சிவந்த பவளத் துண்டுகள் போல அழகானவை;****வதனம் -*** *முகம்;* ***மை தீர் கஞ்சத்தின் அளவிற்றேனும் -*** *களங்கமற்ற தாமரைப்பூ அளவினதாயினும்;* ***கண்கள் கடலினும் பெரிய -*** *(அம்முகத்துக்) கண்களோ கடலைக் காட்டிலும் பெரியவை.*

*கடலினும் பெரிய கண்கள் - உயர்வு நவிற்சி அணி. அளகம் - ஐவகைக் கூந்தல் முடிப்புகளில் ஒன்று முன் நெற்றி மயிர் என்பர் வாடுதல், முள்ளுடைமை, சேற்றில் பிறத்தல் போன்ற குற்றங்கள் தாமரைக்குக் கூற முடியும். முகத்தின் அளவினும் கண்களைப் பெரிதாகக் கூறுதற்குக் காரணம் அவற்றின் உயிர்த் தன்மையும் பார்வை அகற்சியும் கருதி. 'கேட்டார் பிற செயல்களை மறந்து நிற்றலின் அமிழ்தத்தை உவமை கூறினார் என்று ஐயரவர்கள் (குறுந். 206) எழுதிய குறிப்பு நினையத்தக்கது. அளக ஓதி - இருபெயரொட்டுப் பண்புத் தொகை.*

*3137. ' "ஈசனார் கண்ணின் வெந்தான்"*
*என்னும் ஈது இழுதைச் சொல்; இவ்*
*வாசம் நாறு ஓதியாளைக் கண்டனன்,*
*வவ்வல் ஆற்றான்,*
*பேசல் ஆம் தகைமைத்து அல்லாப் பெரும்*
*பிணி பிணிப்ப, நீண்ட*
*ஆசையால் அழிந்து தேய்ந்தான்*
*அனங்கன், அவ் உருவம் அம்மா!*

***அனங்கன் -*** *உருவிலியாகிய மன்மதன்;* ***ஈசனார் கண்ணின் வெந்தான் -*** *சிவபிரான் நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்டான் என்பது;* ***என்னும் ஈதுஇழுதைச் சொல் -*** *என்று சொல்லப்படும் இச் செய்தி பொய்ச் செய்தியாகும்; (உண்மை யாதெனில்);* ***இவ் வாசம் நாறு ஓதியானை -*** *இந்த மணம் கமழும் கூந்தலுடைய சீதையை;* ***கண்டனன் -*** *கண்டு (மோகமுற்று) ;* ***வவ்வல் ஆற்றான் -*** *கவர்ந்து செல்ல இயலாதவனாகி;* ***பேசல் ஆம் தகைமைத்து அல்லா -*** *வெளியே சொல்லவும் முடியாத;* ***பெரும் பிணி பிணிப்ப -*** *காமப் பெரு நோய் பற்றிக் கொள்ள;* ***நீண்ட ஆசையால் -*** *மிகுதியான ஆசையினாலே;* ***அவ் வுருவம் அழிந்து தேய்ந்தான் -*** *அழகிய மேனி மெலிவுற்று அழிந்தான்;* ***அம்மா -*** *வியப்பு!*

*உண்மையாக மன்மதன் உருவிலியான காரணம் ஒன்றாக இருக்க மற்றொன்றைக் காரணமாக்குதல் ஒழிப்பு அணி. சீதையைக் கவரும் ஆற்றல் மன்மதனுக்கு இல்லை என்று சொல்லி, அதனைச் செய்யுமாறு இராவணனை மறைமுகமாகத் தூண்டுகிறாள்.*

*3138. 'தெவ் உலகத்தும் காண்டி;*
*சிரத்தினில் பணத்தினோர்கள்*
*அவ் உலகத்தும் காண்டி; அலை*
*கடல் உலகில் காண்டி;*
*வெவ் உலை உற்ற வேலை, வாளினை,*
*வென்ற கண்ணாள்*
*எவ் உலகத்தாள்? அங்கம்*
*யாவர்க்கும் எழுத ஒணாதால்!*

***வெவ் உலை உற்ற வேலை, வாளினை -*** *வெப்பம் மிகுந்த கொல்லர் உலையில் உருவாக்கப்பட்ட வேல், வாள் முதலியவற்றைக் (கூர்மையால்);* ***வென்ற கண்ணாள் -*** *வெற்றி கொண்ட கண்களை உடையவள் (சீதை) ;* ***எவ்வுலகத்தாள்? -*** *எந்த உலகைச் சார்ந்தவளோ (அறியேன்);* ***அங்கம் யாவர்க்கும் எழுத ஒணாதால் -*** *சித்திரத்தில் கூட யாராலும் இத்தகைய அழகு வடிவம் தீட்ட முடியாத சிறப்புடையாள்;* ***தெவ் உலகத்தும் காண்டி -*** *(இவளைப் போன்ற அழகுடையார் உண்டா என்று) பகைவர் உலகங்களிலும் தேடிக் காண்பாயாக;* ***சிரத்தினில் பணத்தினோர்கள் அவ்வுலகத்தும் காண்டி -*** *தலைகளில் படமேந்திய நாகர் உலகத்தும் தேடிக் காண்பாயாக;* ***அலை கடல் உலகில் காண்டி -*** *கடல் சூழ்ந்த பூவுலகிலும் தேடிக் காண்பாயாக. (எங்கும் இவளை ஒப்பாரைக் காணமாட்டாய்)*

*இராவணன் ஆணை செல்ல வல்ல எவ்வுலகத்தும் இவளை நிகர்த்த அழகுடையார் இல்லை என்பதாம்.*

***3139. 'தோளையே சொல்லுகேனோ? சுடர்***
***முகத்து உலவுகின்ற***
***வாளையே சொல்லுகேனோ?***
***அல்லவை வழுத்துகேனோ?***
***மீளவும் திகைப்பதல்லால், தனித்தனி***
***விளம்பல் ஆற்றேன்;***
***நாளையே காண்டி அன்றே? நான்***
***உனக்கு உரைப்பது என்னோ?***

***தோளையே சொல்லுகேனோ? -*** *(அவளுடைய) தோளின் அழகை எடுத்துக் கூறுவேனோ?;* ***சுடர் முகத்து உலவுகின்ற வாளையே சொல்லுகேனோ? -*** *ஒளி வீசும் முகத்தில் திரிகின்ற வாளை மீன் போன்ற கண்ணழகை எடுத்துக் கூறுவேனோ?;* ***அல்லவை வழுத்துகேனோ? -*** *அல்லாது பிற உறுப்புக்களை எடுத்துக் கூறுவேனோ?;* ***மீளவும் திகைப்பது அல்லால் -*** *மறுபடியும் திகைத்துப் போகின்றேனே அன்றி;* ***தனித் தனி விளம்பல் ஆற்றேன் -*** *ஒவ்வோர் உறுப்பழகையும் தனியே வருணிக்க வலிமை இல்லேன்;* ***நான் உனக்கு உரைப்பது என்னோ? -*** *நான் உனக்கு விவரித்துச் சொல்ல வேண்டுவது யாதுமில்லை;* ***நாளையே காண்டிஅன்றே -*** *நாளைக்கு நீயே காணப் போகின்றாய் அல்லவா?*

*இவ்வாறு கூறுவதன் மூலம் சீதையைக் காணும் ஆவலை இராவணன் உள்ளத்தே மூட்டுகின்றாள்.*

***3140. 'வில் ஒக்கும் நுதல் என்றாலும், வேல்***
***ஒக்கும் விழி என்றாலும்,***
***பல் ஒக்கும் முத்து என்றாலும்,***
***பவளத்தை இதழ் என்றாலும்,***
***சொல் ஒக்கும்; பொருள் ஒவ்வாதால்;***
***சொல்லல் ஆம் உவமை உண்டோ?***
***"நெல் ஒக்கும் புல்" என்றாலும்,***
***நேர் உரைத்து ஆகவற்றோ!***

***வில் ஒக்கும் நுதல் என்றாலும் -*** *வில்லைப் போல் நெற்றி அமைந்திருக்கிறது என்று சொன்னாலும்;* ***விழி வேல் ஒக்கும் என்றாலும்-*** *கண்கள் வேல் போல் விளங்குகின்றன என்று சொன்னாலும்;* ***பல் முத்து ஒக்கும் என்றாலும் -*** *பற்கள் முத்துக்கள் போன்றிருக்கும் என்று சொன்னாலும்;* ***பவளத்தை இதழ் என்றாலும் -*** *பவளமே இவள் இதழ்கள் என்று சொன்னாலும்;* ***சொல் ஒக்கும் -*** *உவமிக்கப்படும் சொல் பொருத்தம் ஆகலாம்; (அல்லாது);* ***பொருள் ஒவ்வாதால் -*** *(சீதையின் உறுப்பழகை உணர்த்தும் முழுமையான) பொருளால் பொருந்தாது;* ***சொல்லல் ஆம் உவமை உண்டோ -*** *(எனவே)*

*சொல்லத்தக்க உவமை வேறு ஏதேனும் உளதாகுமோ? (இல்லை) ;* ***புல் ஒக்கும் நெல் -*** *புல்லைப் போன்றிருக்கும்நெல்;* ***என்றாலும் -*** *என்று கூறினாலும்;* ***நேர் உரைத்தாக அற்றோ? -*** *பொருத்தமாக கூறியதாகக் கருத முடியுமா? (பொருந்தாது).*

*வருணனைக்கு அப்பாற்பட்ட பொலிவும் அழகும் சீதைபால் பொருந்தியுள்ளன எனவும், அதனால் நீயே நேரிற் காண்பதே பொருத்தம் எனவும் சூர்ப்பணகை உணர்த்துகின்றாள்.*

*இராவணன் காமுறும் வண்ணம் சூர்ப்பணகை உரையாற்றுதல்*

***3141. 'இந்திரன் சசியைப் பெற்றான்;***
***இரு- மூன்று வதனத்தோன்தன்***
***தந்தையும் உமையைப் பெற்றான்;***
***தாமரைச் செங்கணானும்***
***செந் திருமகளைப் பெற்றான்;***
***சீதையைப் பெற்றாய் நீயும்;***
***அந்தரம் பார்க்கின் நன்மை***
***அவர்க்கு இலை உனக்கே; ஐயா!***

***ஐயா -*** *ஐயனே;* ***இந்திரன் சசியைப் பெற்றான் -*** *தேவேந்திரன் சசியை மனைவியாகப் பெற்றான்;* ***இருமூன்று வதனத்தோன் தன் தந்தையும் -*** *ஆறுமுகங்களை உடைய முருகனின் தந்தையாகிய சிவபெருமானும்;* ***உமையைப் பெற்றான் -*** *உமையம்மையாரைத் துணைவியாகப் பெற்றான்;* ***தாமரைச் செங்கணானும் -*** *செந்தாமரைக் கண்ணோனான திருமாலும்;* ***செந்திருமகளைப் பெற்றான் -*** *சிவந்தஇலக்குமி தேவியை மனைவியாக அடைந்தான்;* ***நீயும் சீதையைப் பெற்றாய்-*** *(இராவணனாகிய) நீயும் சீதையை மனைவியாக அடைந்து விட்டாய்;* ***அந்தரம் பார்க்கின் -*** *(உங்களுள்) அழகிய உயர்வுற்றார் யாரெனப் பார்த்தால்;* ***நன்மை உனக்கே -*** *(சீதையைப் பெறுவதால் கிடைக்கும்) நலங்களெல்லாம் உன்னையே அடைந்தன;* ***அவர்க்கு இல்லை -****(முன்னர் குறித்த) தேவர்களுக்கு இத்தகைய பேறு வாய்க்கவில்லை.*

*பிற தெய்வ மாதர்களினும் சீதை உயர்ந்தவள் எனச் சுட்டிக் காட்டினாள். இன்னும் சீதையை இராவணன் அடையாத போதும் 'பெற்றாய்' என இறந்த காலத்தால் பேசினாள். அவளை அடைய வேண்டும் விரைவை உணர்த்தும் முறையிலும், இராவணன் நினைத்தால் அவளை அடைவது திண்ணம் என அவன் வலிமையை உணர்த்தும் முறையிலும் இவ்வாறு கூறனாள் சூர்ப்பணகை.*

*குறிப்பு மொழியாக, 'அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கு! உனக்கு இலை!' என்றும் பிரித்துப் பொருள் கொள்ளுமாறு பாடல் அமைந்துள்ளது.*

***3142. 'பாகத்தில் ஒருவன் வைத்தான்;***
***பங்கயத்து இருந்த பொன்னை***

*ஆகத்தில் ஒருவன் வைத்தான்;*
*அந்தணன் நாவில் வைத்தான்;*
*மேகத்தில் பிறந்த மின்னை வென்ற*
*நுண் இடையினாளை-*
*மாகத் தோள் வீர!-பெற்றால்,*
*எங்ஙனம் வைத்து வாழ்தி?*

***ஒருவன் -*** *(சிறப்புக்குரிய) சிவபெருமான் (தன் தேவியை);* ***பாகத்தில் வைத்தான் -*** *தன் இடப்பாகத்தில் வைத்துப் பெருமை கொண்டான்;* ***ஒருவன் -*** *(மற்றொரு தெய்வமாகிய) திருமால்;* ***பங்கயத்து இருந்த பொன்னை -*** *தாமரையில் வசிக்கும் பொன்மகளாகிய திருவை;* ***ஆகத்தில் வைத்தான் -*** *மார்பில் அமர்த்திப் போற்றினான்;* ***அந்தணன் -*** *பிரம்ம தேவன்;* ***நாவில் வைத்தான் -*** *தன் நாவில் குடியிருத்திச் சிறப்புற்றான்;* ***மாகத் தோள் வீர! -*** *விண்ணளவு உயர்ந்த தோள்களைப் பெற்ற வீரனே!;* ***மேகத்தில் பிறந்த மின்னை -*** *மழை முகில்களிடையில் உதிக்கும் மின்னலை;* ***வென்ற நுண் இடையினாளை -*** *வெற்றி கொள்ளும் மெல்லிய இடையைப் பெற்ற சீதையை;* ***பெற்றால் -*** *அடைந்து விட்டாயானால்;* ***எங்ஙனம் வைத்து வாழ்தி? -*** *(மற்றத் தெய்வப் பெண்களினும் மேம்பட்டவள், ஆதலால்) எங்கே இருத்தி நீ வாழ இருக்கின்றாயோ?*

*இப்பாடலிலும் இராவணனுக்கு நேரவிருக்கும் அழிவு குறிப்பால் உணர்த்தப் பெறுகின்றது. 'எங்ஙனம் வைத்து வாழ்தி'? என்னும் வினா, 'உன்னால் வாழ முடியாது' என்ற குறிப்புப் பொருளைத் தந்து நிற்கின்றது.*

*3143. 'பிள்ளைபோல் பேச்சினாளைப்*
*பெற்றபின், பிழைக்கலாற்றாய்;*
*கொள்ளை மா நிதியம் எல்லாம்*
*அவளுக்கே கொடுத்தி; ஐய!*
*வள்ளலே! உனக்கு நல்லேன்;*
*மற்று, நின் மனையில் வாழும்*
*கிள்ளைபோல் மொழியார்க்கு எல்லாம்*
*கேடு சூழ்கின்றேன் அன்றே?*

***ஐய -*** *ஐயனே;* ***பிள்ளை போல் பேச்சினாளை -*** *மழலை போல இனிமையாகப் பேசுகின்ற சீதையை;* ***பெற்றபின் -*** *அடைந்த பின்னர்;* ***பிழைக்கலாற்றாய் -*** *(அவள் அருகிருப்பதால்) எப் பிழையும் நீ செய்ய மாட்டாய்;* ***வள்ளலே -*** *கொடை நலம் உடையவனே;* ***கொள்ளை மாநிதியம் எல்லாம் -*** *மிகுதியாக நிறைந்துள்ள உன் செல்வம் அனைத்தையும்;* ***அவளுக்கே கொடுத்தி -*** *(அன்பு காரணமாக) அவளுக்கே தந்து விடுவாய்;* ***உனக்கு நல்லேன் -*** *(என் தூண்டுதலால் அவளை அடைந்து அவளுக்கே செல்வம் தருவதால்) உனக்கு நான் நன்மை செய்தவள் ஆகிறேன்;* ***மற்று -*** *மாறாகக் கூறுமிடத்து;* ***நின் மனையில் வாழும் -*** *உன் அரண்மனையில்வாழ்கின்ற;* ***கிள்ளை போல் மொழியார்க்கு எல்லாம் -*** *கிளி போல்மிழற்றும் உன் மகளிர் அனைவருக்கும்;* ***கேடு சூழ்கின்றேன் அன்றே? -*** *தீமையை விளைவிக்கின்றேன்? அன்றோ?*

*எப்போதும் திறந்து கிடக்கும் களஞ்சியமாதலால் பலராலும், பலகாலும் எடுத்துச் சொல்லப்படும் செல்வம் என்பதால் 'கொள்ளை போகின்றசெல்வம்' என்றும் இனிப் பகைவரால் கொள்ளையிடப்பட இருக்கின்றசெல்வம் என்றும் கூறுவதாகவும் கொள்ளலாம்.*

*'பிழைக்கலாற்றாய்' என்பதில் இறந்து படுவாய் என்றும், 'கேடு சூழ்கின்றேன்' என்பதில் மெய்யாகவே தீங்கு செய்கின்றேன் என்றும்குறிப்புப் பொருள்கள் பொதிந்துள்ளன. கம்பரின் சொல்லாற்றலைப்புலப்படுத்தும் இச் சிறந்த பாடல் குறிப்பு நயமும் நாடகப் பாங்கும்கொண்டது.*

***3144. 'தேர் தந்த அல்குல் சீதை, தேவர்தம்***
***உலகின், இம்பர்,***
***வார் தந்த கொங்கையார்தம் வயிறு***
***தந்தாளும் அல்லள்;***
***தார் தந்த கமலத்தாளை, தருக்கினர்***
***கடைய, சங்க***
***நீர் தந்தது; அதனை வெல்வான் நிலம்***
***தந்து நிமிர்ந்தது அன்றே.***

***தேர் தந்த அல்குல் சீதை -*** *தேர் போன்ற அல்குலை உடைய சீதை;* ***தேவர் தம் உலகின் -*** *அமரர் உலகத்திலும்;* ***இம்பர் -*** *இந்த மண்ணுலகத்திலும் இருக்கும்;* ***வார் தந்த கொங்கை யார் தம் -*** *கச்சணிந்த மார்பினை உடைய பெண்களின்;* ***வயிறு தந்தாளும் அல்லள் -*** *வயிற்றில் பிறந்தவளும் அல்லள்; (வேறு எவ்வாறு பிறந்தாள் எனில்);* ***சங்க நீர் -*** *சங்குகளை உடைய திருப்பாற்கடல்;* ***தருக்கினர் கடைய -****செருக்கு மிக்க தேவர்களும் அசுரர்களும் (தன்னைக்) கடைந்த போது;* ***தார் தந்த கமலத்தாளை -*** *மலர்ந்த தாமரையில் வாழ்கின்ற திருமகளை;* ***தந்தது -*** *அளித்தது;* ***அதனை வெல்வான் -*** *அக்கடலின் இக்கொடையை வெல்லும் பொருட்டு;* ***நிலம் -*** *பூமியானது;* ***தந்து நிமிர்ந்தது -*** *சீதையை அளித்துப் பெருமையால் உயர்ந்தது. (* ***அன்றே -*** *ஈற்றசை).*

*திருப்பாற் கடல் திருமகளைத் தந்த சிறப்பை வெல்வதற்காகப் பூமி சீதையை அளித்தது என்பது கருத்து. இது தற்குறிப்பேற்ற அணி. சங்க நீர் - சங்கு போல் வெளுத்த பாற்கடல் என்றும் கூறலாம். தந்த என்ற சொல் முதல் அடியில் உவமை உருபாகவும், இரண்டாம் அடியில் அணிந்த என்ற பொருளிலும், மூன்றாவது அடியில் பூத்த என்ற பொருளிலும் வருகின்றது.*

***3145'மீன் கொண்டு ஊடாடும் வேலை***
***மேகலை உலகம் ஏத்த,***
***தேன் கொண்டு ஊடாடும் கூந்தல்,***
***சிற்றிடை, சீதை என்னும்***
***மான் கொண்டு ஊடாடு நீ; உன்***
***வாள் வலி உலகம் காண,***
***யான் கொண்டு ஊடாடும்வண்ணம்,***
***இராமனைத் தருதி என்பால்.***

***மீன்கொண்டு ஊடாடும் வேலை*** *- மீன்களைத் தன்னகத்தே கொண்டு அசையும் கடலினை;* ***மேகலை*** *- மேகலை அணியாகப் பெற்றிருக்கும்;* ***உலகம்*** *- உலக மக்கள்;* ***ஏத்த*** *- புகழும் வண்ணம்;* ***தேன் கொண்டு ஊடாடும் கூந்தல்*** *- வண்டுகள் மணம் நாடித் தேடி வந்துஆடும் கூந்தலையும்;* ***சிற்றிடை*** *- சிறிய இடையையும் உடைய;* ***சீதை என்னும் மான்*** *- சீதையென்னும் மான் போன்றவளை;* ***நீ கொண்டுஊடாடு*** *- நீ மனைவியாகக் கொண்டு அவளோடு மகிழ்ந்திருப்பாயாக;* ***உன் வாள் வலி உலகம் காண*** *- உன்னுடைய வாளாற்றலை உலகம் கண்டு வியக்கும்படியாக;* ***யான் கொண்டு ஊடாடும் வண்ணம்*** *- நான் துணைவனாகக் கொண்டு மகிழ்ந்திருக்குமாறு;* ***இராமனை என்பால் தருதி*** *- இராமனை எனக்குக் கொடுப்பாயாக.*

*உன் வலிமையால் இராமனையும் சீதையையும் கைப்பற்றி அவனை எனக்குத் தந்து, அவளை நீ எடுத்துக்கொள் எனத் தன் காம நோக்கை வெட்கமின்றிக் கூறினாள்.*

***3146. 'தருவது விதியே என்றால், தவம்***
***பெரிது உடையரேனும்,***
***வருவது வருநாள் அன்றி,***
***வந்து கைகூட வற்றோ?***
***ஒருபது முகமும், கண்ணும், உருவமும்,***
***மார்பும், தோள்கள்***
***இருபதும், படைத்த செல்வம் எய்துதி***
***இனி, நீ, எந்தாய்!***

***எந்தாய்*** *- என் ஐயனே;* ***தருவது*** *- உரிய காலத்தில் எதனையும் தருவது;* ***விதியே*** *- ஊழ்வினையே ஆகும்;* ***என்றால்*** *-அவ்வாறாயின்;* ***தவம் பெரிது உடையரேனும்*** *- பெரிய தவ வலிமை பெற்றவர்களாயினும்;* ***வருவது*** *- வர வேண்டும் நலங்கள்;* ***வருநாள் அன்றி வந்து கைகூட வற்றோ*** *- உரிய காலம் வரு முன் வந்து கையிற் சேர முடியுமோ? (முடியாது);* ***ஒருபது முகமும்*** *- பத்து முகங்களும்;* ***இருபது கண்ணும் தோள்கள்*** *- இருபது கண்களும் இருபது தோள்களும்;* ***மார்பும் உருவமும்*** *- வீர மார்பும் பொலிவுமிக்க உருவமும்;* ***படைத்த*** *- நீ வரத்தால் பெற்றதனுடைய;* ***செல்வம்*** *- (உண்மையான) சிறப்பை;* ***இனி நீ எய்துதி*** *- (சீதையைப் பெறுவதால்) இனிமேல் தான் நீ அடைய இருக்கின்றாய்.*

எல்லையற்ற அழகுடைய சீதையின் நலம் நுகரப் போதாதென்றே பத்து முகம், இருபது கண்கள். இருபது தோள்கள் உற்றாய் என்று உயர்த்திக் கூறினாள்.

*3147.* ***'அன்னவள்தன்னை நின்பால்***
***உய்ப்பல் என்று எடுக்கலுற்ற***
***என்னை, அவ் இராமன் தம்பி***
***இடைப் புகுந்து, இலங்கு வாளால்***
***முன்னை மூக்கு அரிந்து விட்டான்; முடிந்தது***
***என் வாழ்வும்; உன்னின்***
***சொன்னபின், உயிரை நீப்பான் துணிந்தனென்'***
***என்னச் சொன்னாள்.***

***அன்னவள் தன்னை -*** *அத்தகு தன்மையுடைய சீதையை;* ***நின் பால் உய்ப்பல் என்று -*** *உன்னிடம் கொண்டு சேர்ப்பேன் என்று;* ***எடுக்கலுற்ற என்னை -*** *எடுத்துவர முற்பட்ட என்னை;* ***அவ்விராமன் தம்பி -*** *அந்த இராமனுடைய தம்பியான இலக்குவன்;* ***இடைப் புகுந்து -*** *குறுக்கே நுழைந்து;* ***இலங்கு வாளால் -*** *ஒளிவீசும் தன் வாளால்;* ***முன்னை -*** *முதலில்;* ***மூக்கு அரிந்து விட்டான் -*** *(என்) மூக்கினை அறுத்து விட்டான்;* ***என் வாழ்வும் முடிந்தது -*** *(அப்போதே) என் வாழ்க்கையும் முற்றுப் பெற்றது;* ***உன்னின் சொன்ன பின் -*** *(ஆயினும்) உன்னிடம் நிகழ்ந்தவற்றைச் சொன்ன பிறகு;* ***உயிரை நீப்பான் துணிந்தனென் -*** *என் உயிரை விட்டு விடலாம் என முடிவு செய்தேன்;* ***என்னச் சொன்னாள் -*** *என்று (சூர்ப்பணகை) கூறினாள்.*
*இராவணன் காம வெறியன் ஆதல்*

*3148.* ***கோபமும், மறனும், மானக் கொதிப்பும்,***
***என்று இனைய எல்லாம்,***
***பாபம் நின்ற இடத்து நில்லாப்***
***பெற்றிபோல், பற்று விட்ட;***
***தீபம் ஒன்று ஒன்றை உற்றால் என்னல்***
***ஆம் செயலின், புக்க***
***தாபமும் காமநோயும் ஆர் உயிர்***
***கலந்த அன்றே.***

***பாபம் நின்ற இடத்து -*** *பாவம் நிலைபெற்ற இடத்தில்;* ***நில்லாப் பெற்றி போல் -*** *நிற்கமாட்டாத பெருமைகளைப் போல;* ***கோபமும் மறனும் மானக்கொதிப்பும் -*** *சினமும், வீரமும், மானத்தால் விளையும் மனக் கொதிப்பும்;* ***என்று இனைய எல்லாம் -*** *என்னும் இப் பண்புகள் எல்லாம்;* ***பற்றுவிட்ட -*** *(இராவணனின் காமம் காரணமாக) தொடர்பு விட்டு நீங்கின;* ***தீபம் ஒன்று ஒன்றை உற்றால் என்னல் ஆம் செயலின் -*** *ஒரு விளக்குமற்றொரு விளக்கை அடைந்ததென்று சொல்லத்தக்க வண்ணம்;* ***புக்க -*** *உள்ளத்தில் நுழைந்த;* ***காம நோயும் தாபமும் -*** *காம நோயும் அதனால் விளைந்த தவிப்பும்;* ***ஆர் உயிர் கலந்த அன்றே -*** *(இராவணனின்) அரிய உயிரில் அப்போதே கலக்கலாயின.*

*தங்கைக்கு விளைவிக்கப்பட்ட துன்பம் கருதி எழுந்த சினம், வீரம், கொதிப்பு என்பனவெல்லாம் காமத்தால் வெற்றி கொள்ளப்பட்டன.*

***3149.*** ***கரனையும் மறந்தான்; தங்கை***
***மூக்கினைக் கடிந்து நின்றான்***
***உரனையும் மறந்தான்; உற்ற பழியையும்***
***மறந்தான்; வெற்றி***
***அரனையும் கொண்ட காமன்***
***அம்பினால், முன்னைப் பெற்ற***
***வரனையும் மறந்தான்; கேட்ட***
***மங்கையை மறந்திலாதான்.***

***கேட்ட மங்கையை மறந்திலாதான் -*** *(சூர்ப்பணகை வாயிலாகக்) கேள்விப்பட்ட சீதையென்னும் பெண்ணை மட்டும் மறவாமலிருக்கும் இராவணன்;* ***அரனையும் வெற்றி கொண்ட காமன் அம்பினால் -****சிவபெருமானையும் வெற்றி கொண்டதாகிய மன்மதனின் மலரம்பினால் (காம வயப்பட்டு);* ***கரனையும் மறந்தான் -*** *(தன் வட திசைக் காவற்படைத் தலைவனாகிய) கரன் மாண்டு போனதையும் மறந்து போனான்;****தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான் -*** *தன் தங்கையாகிய சூர்ப்பணகையின் மூக்கை அறுத்து எறிந்தவன்;* ***உரனையும் மறந்தான் -****வலிமையையும் மறந்து போனான்;* ***உற்ற பழியையும் மறந்தான் -*** *(அதனால் தனக்கு) நேர்ந்த பழியையும் மறந்து போனான்;* ***முன்னைப் பெற்ற வரனையும் மறந்தான் -*** *முன்பு (தான் தவம் செய்து) பெற்ற வரங்களின் ஆற்றலையும் மறந்து போனான்.*

*காமத்தால் அனைத்தையும் மறந்தவன் சீதையை மட்டும்மறக்கவில்லை என்று காட்டினார். காமன் அம்புகள் - தாமரை, மா,அசோகு, நீலோற்பலம், முல்லை என்னும் மலர்கள்.*

***3150.*** ***சிற்றிடைச் சீதை என்னும்***
***நாமமும் சிந்தைதானும்***
***உற்று, இரண்டு ஒன்று ஆய் நின்றால், ஒன்று***
***ஒழித்து ஒன்றை உன்ன***
***மற்றொரு மனமும் உண்டோ? மறக்கல்***
***ஆம் வழி மற்று யாதோ?***
***கற்றவர் ஞானம் இன்றேல்,***
***காமத்தைக் கடத்தல் ஆமோ?***

***சிற்றிடைச் சீதை என்னும் நாமமும் -*** *மெல்லிய இடையை உடைய சீதை என்னும் பெயரும்;* ***சிந்தை தானும் -*** *இராவணன் மனமும்;****உற்ற -*** *நெருங்கி;* ***இரண்டு ஒன்றாய் நின்றால் -*** *இரண்டு என்ற நிலை கடந்து ஒன்றாகப் பொருந்திப் போய்விட்டால்;* ***ஒன்று ஒழித்து ஒன்றை உன்ன -*** *சீதை என்ற ஒன்றின் பெயரை நீக்கி மற்றொரு பொருளை எண்ணுதற்கு;* ***மற்றொரு மனமும் உண்டோ -*** *இன்னொரு மனமும் இருக்கின்றதோ?*

*(இல்லை); (எனவே);* ***மறக்கல் ஆம் வழி மற்று யாதோ -*** *சீதையை மறப்பதற்குப் பொருந்திய வழி வேறு யாது உள்ளது? (எதுவும் இல்லை) ;* ***கற்றவர் -*** *கல்வி வல்லவராயினும்;* ***ஞானம் -*** *நன்மை தீமை பற்றிய உயரறிவு;* ***இன்றேல் -*** *இல்லையெனில்;* ***காமத்தைக் கடத்தல் ஆமோ? - (*** *பொருந்தாக்) காமத்தை வெல்லுதல் இயலுமோ? (இயலாது).*

*'சிற்றிடைச் சீதை' என்று முன்னர்ச் (3145) சூர்ப்பணகை அறிமுகம் செய்ததை இராவணன் மறந்திலன் என்பது தோன்றக் கூறுகின்றார்.*

***3151. மயிலுடைச் சாயலாளை வஞ்சியா***
***முன்னம், நீண்ட***
***எயிலுடை இலங்கை நாதன், இதயம்***
***ஆம் சிறையில் வைத்தான்;***
***அயிலுடை அரக்கன் உள்ளம்,***
***அவ் வழி, மெல்ல மெல்ல,***
***வெயிலுடை நாளில் உற்ற வெண்ணெய்போல்,***
***வெதும்பிற்று அன்றே.***

***மயிலுடைச் சாயலாளை -*** *மயிலின் (இயற்கையான) சாயல் படைத்தவளை;* ***வஞ்சியா முன்னம் -*** *வஞ்சனையால் கவர்வதன் முன்னரே;* ***நீண்ட எயிலுடை இலங்கை நாதன் -*** *உயர்ந்தோங்கிய கோட்டை மதில்களை உடைய இலங்கையின் தலைவன்;* ***இதயமாம் சிறையில் வைத்தான் -*** *(தன்) மனமாகிய சிறைச்சாலையின் உள்ளே வைத்தான்; (அதன் விளைவாக);* ***அயிலுடை அரக்கன் உள்ளம் -*** *வேற்படை கொண்ட இராவணனாகிய இராக்கதன் மனம்;* ***அவ்வழி -****அவ்வகையில்;* ***வெயிலுடை நாளில் உற்ற வெண்ணெய் போல் -*** *வெயிற் பொழுதில் வைக்கப்பட்ட வெண்ணெய் போன்று;* ***மெல்ல மெல்ல வெதும்பிற்று -*** *சிறிது சிறிதாக வெப்பத்தால் உருகலாயிற்று. (* ***அன்றே -*** *ஈற்றசை). அசோக வனத்துச் சிறைக்கு முன்பே மனச்சிறையில் வைத்தான் என நயம்பட உரைத்தார்.*

***3152. விதியது வலியினாலும், மேல்***
***உள விளைவினாலும்,***
***பதி உறு கேடு வந்து***
***குறுகிய பயத்தினாலும்,***
***கதி உறு பொறியின் வெய்ய காம***
***நோய், கல்வி நோக்கா***
***மதியிலி மறையச் செய்த தீமைபோல்,***
***வளர்ந்தது அன்றே.***

***விதியது வலியினாலும் -*** *ஊழ்வினையின் ஆற்றலினாலும்;****மேல் உள விளைவினாலும் -*** *இனிமேல் அதனால் உண்டாக இருக்கிற பயன்களாலும்;* ***பதி உறு கேடு வந்து குறுகிய பயத்தினாலும் -****இலங்கை மா நகருக்கு அழிவுக்குரிய நிலை ஏற்பட்டு நெருங்கியுள்ள பலன்களாலும்;* ***கதி உறு பொறியின் -*** *விரைவாய் உற்று பொறிகளின் வழியே;****வெய்ய***

***காம நோய் -*** *(இராவணனைப் பற்றிய) கொடிய காம நோயானது;* ***கல்வி நோக்கா மதியிலி -*** *கல்வி அறிவு அற்ற அறிவிலி ஒருவன்;* ***மறையச் செய்த தீமை போல் -*** *யாருமறியாமல் மறைவாகச் செய்த கெடுதி போல;* ***வளர்ந்தது -*** *ஓங்கிப் பெருகியது;* ***அன்றே -*** *அசை.*

*வேதவதி சாபம், வானரங்களால் இலங்கை அழிய வேண்டுமென நந்தி இட்ட சாபம் முதலியனவெல்லாம் நிறைவேறத் தக்க காலம் நெருங்கியது. ஞானமற்றவன் மறைவாகச் செய்த தீங்கும் விரைவாக வெளிப்படும் என்பது தோன்றக் கூறினார்.*

***3153. பொன் மயம் ஆன நங்கை மனம்***
***புக, புன்மை பூண்ட***
***தன்மையோ-அரக்கன் தன்னை***
***அயர்த்தது ஓர் தகைமையாலோ-***
***மன்மதன் வாளி தூவி நலிவது***
***ஓர் வலத்தன் ஆனான்?***
***வன்மையை மாற்றும் ஆற்றல்***
***காமத்தே வதிந்தது அன்றே?***

***பொன்மயமான நங்கை -*** *(அழகு மிகுதியினால்) பொன்னின் ஒளி சூழும் எழிலுடைய சீதை;* ***மனம் புக -*** *மனத்தில் புகுந்துவிட்டதனால்;* ***புன்மை பூண்ட தன்மையோ -*** *(இராவணன்) இழிவடைந்து விட்டானோ? (அல்லது);* ***அரக்கன் -*** *அவ்விராவணன்;* ***தன்னை அயர்த்ததோர் தகைமையாலோ -*** *தனக்குத் தானே மறந்துவிட்டதாகிய தன்மையினாலோ;* ***மன்மதன் வாளி தூவி -*** *மன்மதன் அம்புகள் ஏவி;* ***நலிவது ஓர் வலத்தன் ஆனான் -*** *(இராவணனுக்கு) வருத்தம் தரும் வல்லமையுடையவன் ஆனான்;* ***வன்மையை மாற்றும் ஆற்றல் -*** *ஒருவனுடைய வீரத்தை அழிக்கும் திறமை;* ***காமத்தே வதிந்தது அன்றே -*** *காமத்தின் பால் பொருந்திற்று அன்றோ?*

*வீராதி வீரனையும் வீழ்த்த எளிய மலரம்புகளே காரணமாயின என உணர்த்தினார்.*

***3154. எழுந்தனன் இருக்கைநின்று; ஆண்டு,***
***ஏழ் உலகத்துளோரும்***
***மொழிந்தனர் ஆசி; ஓசை முழங்கின,***
***சங்கம் எங்கும்;***
***பொழிந்தன பூவின் மாரி;***
***போயினர் புறத்தோர் எல்லாம்;***
***அழிந்து ஒழி சிந்தையோடும் ஆடகக்***
***கோயில் புக்கான்.***

***இருக்கை நின்று எழுந்தனன் -*** *(இராவணன்) தான் வீற்றிருந்த அரியாசனத்தினின்றும் எழுந்தான்;* ***ஆண்டு -*** *அப்பொழுது;* ***ஏழ் உலகத்துளோரும் -*** *ஏழு உலகங்களிலும் இருப்பவர்களும்;* ***ஆசி மொழிந்தனர் -*** *வாழ்த்துக்களைக் கூறினார்கள்;* ***எங்கும் சங்கம்***

***ஓசை முழங்கின*** - எவ்விடத்தும் சங்குகள் ஒலி முழக்கம் செய்தன;***பூவின் மாரி பொழிந்தன*** - மலர் மழை பொழியலாயிற்று; ***புறத்தோர் எல்லாம் போயினர்*** - அருகிருந்த பிறர் எல்லாம் அகன்று சென்றனர்;***அழிந்து ஒழி சிந்தையோடும்*** - (இராவணனும்) சிதைந்து குலைகிற மனத்தோடு;***ஆடகக் கோயில் புக்கான்*** - பொன் மாளிகையான (தன்) அரண்மனைக்கு சென்றான்.

*ஆடகம் - நால் வகைப் பொன்னில் ஒருவகை. சாதரூபம், கிளிச்சிறை, சாம்புநதம் என்பன பிற.*

*இராவணன் காம நோய் மேலும் முதிர்தல்*

***3155. பூவினால் வேய்ந்து செய்த பொங்கு***
***பேர் அமளிப் பாங்கர்,***
***தேவிமார் குழுவும் நீங்கச்***
***சேர்ந்தனன்; சேர்தலோடும்,***
***நாவி நாறு ஓதி நவ்வி நயனமும்,***
***குயமும், புக்குப்***
***பாவியா, கொடுத்த வெம்மை***
***பயப்பயப் பரந்தது அன்றே.***

*(அரண்மனையுட் புகுந்த இராவணன்);* ***தேவிமார் குழுவும் நீங்க*** - *(தன்) மனைவியர் கூட்டத்திலிருந்து விலகியவனாய்;* ***பூவினால் வேய்ந்து செய்த*** - *மலர்கள் பரப்பி அமைக்கப்பட்ட;* ***பொங்கு பேர் அமளிப் பாங்கர் சேர்ந்தனன்*** - *உயர்ந்த பெரிய படுக்கையிடத்தில் சேர்ந்தான்;* ***சேர்தலோடும்*** - *அவ்வாறு சேர்ந்த மாத்திரத்தில்;* ***நாவி நாறு ஓதி நவ்வி*** - *புனுகின் நறுமணம் வீசும் கூந்தலையுடைய மான் போன்ற சீதையினுடைய;* ***நயனமும்*** - *கண்களும்;* ***குயமும்*** - *மார்பும்;* ***புக்குப் பாவியா*** - *மனத்தினுள் பல்வகை நினைவுகளை ஊட்ட;* ***கொடுத்த வெம்மை*** *-(அப்பாவனைகள்) தந்த உணர்ச்சி வெப்பம்;* ***பயப்பயப் பரந்தது*** *-சிறிது சிறிதாக மிகுதிப்படலாயிற்று. (* ***அன்றே*** - *அசை).*

*எழுசீர் ஆசிரிய விருத்தம்*

***3156. நூக்கல் ஆகலாத காதல் நூறு***
***நூறு கோடி ஆய்ப்***
***பூக்க, வாச வாடை வீசு சீத நீர்***
***பொதிந்த மென்***
***சேக்கை வீ கரிந்து, திக்கயங்கள்***
***எட்டும் வென்ற தோள்,***
***ஆக்கை, தேய, உள்ளம் நைய,***
***ஆவி வேவது ஆயினான்.***

***நூக்கல் ஆகலாத*** *- ஒதுக்கி விலக்க முடியாத;* ***காதல்*** *- காம விருப்பம்;* ***நூறு நூறு கோடியாய்ப் பூக்க*** *- அளவிட முடியாதபடி பன்மடங்கு பெருகி மலர;* ***வாச வாடை வீசு*** *- நறுமணக் காற்றுப் பட்டு;* ***சீத நீர் பொதிந்த*** *- குளிர்ந்த நீர்த் துளிகள் பொருந்திய;* ***மென் சேக்கை வீ*** *- மெல்லிய படுக்கையில் பரப்பிய பூக்கள்;* ***கரிந்து*** *- கருகிப் போகும்படி;* ***திக்கயங்கள் எட்டும் வென்ற தோள் ஆக்கை தேய*** *- எட்டுத் திசை யானைகளை வென்ற தோள்களும் உடலும் மெலிந்துபோகும்படி;* ***உள்ளம் நைய*** *- மனம் குழையும்படி;* ***ஆவி வேவது ஆயினான்*** *- (இராவணன்) தன் உயிரும் வெதும்பும் நிலை அடைந்தான்.*

*நூறு நூறு கோடி என்றது அளவிட முடியாத என்ற பொருள் தந்தது.*

***3157. தாது கொண்ட சீதம் மேவு சாந்து,***
***சந்த மென் தளிர்,***
***போது, கொண்டு அடுத்தபோது,***
***பொங்கு தீ மருந்தினால்***
***வேது கொண்டதென்ன, மேனி***
***வெந்து வெந்து, விம்மு தீ***
***ஊது வன் துருத்திபோல், உயிர்த்து***
***உயிர்த்து, உயங்கினான்.***

***தாது கொண்ட போது*** *- மகரந்தம் பொருந்திய மலர்களையும்;* ***சீதம் மேவு சாந்து*** *- குளிர்ச்சி உடைய சந்தனத்தையும்;* ***சந்த மென்தளிர்*** *- அழகிய மெல்லிய தளிர்களையும்;* ***கொண்டு அடுத்தபோது*** *-எடுத்துக் கொண்டு பணிப் பெண்கள் (இராவணனை) நெருங்கிய காலத்தில்;* ***பொங்கு தீ மருந்தினால் வேது கொண்ட தென்ன*** *- கொதிக்கும் நெருப்புச் சேர்ந்த மருந்தினால் வேது கொடுத்தாற் போல;* ***மேனி வெந்து வெந்து*** *- உடல் வெப்பத்தால் சூடுபட்டு;* ***விம்மு தீ ஊது வன் துருத்தி போல்*** *- பொங்கி எழும் நெருப்பை ஊதி வளர்க்கும் (கொல்லன்) துருத்தி போன்று;* ***உயிர்த்து உயிர்த்து உயங்கினான்*** *- பெருமூச்சு விட்ட வண்ணம் மயங்கிச் சோர்ந்தான்.*

*சில நோய்களுக்கு வெப்ப நெருப்பால் வேது கொடுத்தலை உவமையாக்கினார். 'செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச் சந்தனம் என்று ஆரோ தடவினார்' என்ற நந்திக் கலம்பகச் செய்யுளை ஒப்பிடுக. வேது - குறிப்பு வினையாலணையும் பெயர்.*

***3158. தாவியாது, தீது எனாது,***
***தையலாளை மெய் உறப்***
***பாவியாத போது இலாத பாவி-***
***மாழை, பானல், வேல்,***
***காவி, ஆன கண்ணி மேனி***
***காண மூளும் ஆசையால்,***
***ஆவி சால நொந்து நொந்து, -***
***அழுங்குவானும் ஆயினான்.***

***தாவியாது*** - *(தடுமாறும்) உள்ளத்தை ஒரு நிலைப்படுத்தாது;* ***தீதுஎனாது*** - *(பிறன்மனை நயத்தலைத்) தீவினை எனக் கருதாது;****தையலாளை-*** *சீதையை;* ***மெய் உறப் பாவியாத*** - *(சிறிது நேரமேனும்) உள்ளார எண்ணாமல்;* ***போது இலாத பாவி*** - *(நல்ல) நேரம் இல்லாத (காலம்) பாவி (இராவணன்);* ***மாழை*** - *மாவடுவும்;* ***பானல்*** - *நெய்தல் பூவும்;* ***வேல்*** - *வேலாயுதமும்;* ***காவி*** - *கருங்கு வளையும்;* ***ஆன கண்ணி*** *-நிகர்த்த கண்களையுடைய சீதையின்;* ***மேனி காண மூளும் ஆசையால்*** - *உடம்பைக் காணப் பொங்கும் காமத்தால்;* ***ஆவி சால நொந்து நொந்து*** - *உயிர் பெரிதும் துன்பம் கொள்ள;****அழுங்குவானும் ஆயினான்*** - *வருந்துகின்றவனும் ஆனான்.*

*பழி பாவங்களைக் காமத்தால் இராவணன் மறந்து போனான்.*

***3159. பரம் கிடந்த மாதிரம்பரித்த,***
***பாழி யானையின்***
***கரம் கிடந்த கொம்பு ஒடிந்து அடங்க***
***வென்ற காவலன்-***
***மரம் குடைந்த தும்பிபோல, அனங்கன்***
***வாளி வந்து வந்து***
***உரம் குடைந்து, நொந்து நொந்து,***
***உளைந்து உளைந்து-ஒடுங்கினான்.***

***பரம் கிடந்த மாதிரம் பரித்த*** - *பாரம் தாங்கும் திசைகளைச் சுமந்த;* ***பாழி யானையின்*** - *வலிமை மிக்க திக்கு யானைகளுடைய;* ***கரம் கிடந்த கொம்பு ஒடிந்து*** - *தும்பிக்கையோடு பொருந்திய கொம்புகள் முறிய;* ***அடங்க வென்ற காவலன்*** - *முழுவதாக வெற்றி கொண்ட இராவணன்;* ***மரம் குடைந்த தும்பி போல்*** - *மரத்தைக் குடைகிற வண்டு போல்;* ***அனங்கன் வாளி வந்து வந்து*** - *மன்மதனின் அம்பு தொடர்ந்து வந்து;* ***உரம் குடைந்து*** - *(தன்) மார்பை ஊடுருவ;* ***நொந்து நொந்து*** *-மிகவும் வருத்தமுற்று;* ***உளைந்து உளைந்து*** - *மிகவும் அயர்ச்சியுற்று;* ***ஒடுங்கினான்*** - *மெலிவுற்றான்.*

*வலிய திக்கு யானைகளையும் வெல்லும் திறமுடையோன்மென்மையான மலர்க் கணைகளுக்குத் தோற்றான் என முரண் காட்டிக்கூறினார். துன்ப மிகுதி காட்ட, வந்து வந்து, நொந்து நொந்து, உளைந்துஉளைந்து என அடுக்கி உரைத்தார். அடங்க - முற்றிலும்;*

***3160. 'கொன்றை துன்று கோதையோடு ஓர்***
***கொம்பு வந்து என் நெஞ்சிடை***
***நின்றது, உண்டு கண்டது' என்று,***
***அழிந்து அழுங்கும் நீர்மையான்,***
***மன்றல் தங்கு அலங்கல் மாரன்***
***வாளி போல, மல்லிகைத்***

தென்றல் வந்து எதிர்ந்த
போது, சீறுவானும் ஆயினான்.

'**கொன்றை துன்று கோதையோடு** - கொன்றைக் காயை ஒத்த கூந்தலுடனே; **ஓர் கொம்பு வந்து** - ஒரு பூங்கொம்பு போன்றாள் வந்து; **என் நெஞ்சிடை நின்றது** - எனது மனத்திற்குள் தங்கினாள்;**கண்டது உண்டு** - (அவளை) நான் பார்த்ததுண்டு'; **என்று அழிந்து அழுங்கும் நீர்மையான்** -என்று கருதி மனம் சிதைந்து வருந்தும் தன்மையனான இராவணன்; **மன்றல் தங்கு அலங்கல் மாரன்** - மணம் பொருந்திய மலர் மாலை சூடிய மன்மதன்; **வாளி போல** - எய்யும் கணை போன்ற; **மல்லிகைத் தென்றல் வந்து** - மல்லிகை மணம் சுமந்த தென்றல் காற்று வந்து; **எதிர்ந்த போது**- மேனியில் பட்டபோது; **சீறுவானும் ஆயினான்** - (அக்காற்றின் மீது)சினம் கொள்வானும் ஆனான்.

குளிர்ந்த தென்றலும் காமநோயை மிகுவித்தது என்று கூறினார்.கொன்றைக் காய் குழலுக்கு உவமையாவதை 'கொன்றையம் பூங்குழலாள்' எனச் சிலப்பதிகாரமும் கூறும் (சிலம்பு : ஆய்ச்சியர் குரவை - கொளு 6) மன்மதன் மலர்க் கணை போலவே மல்லிகை மணம் சுமந்த தென்றலும் வருத்தியது; உவமை மிகு நயமானது.

இராவணன் ஒரு குளிர் சோலை அடைதல்

3161. அன்ன காலை, அங்குநின்று எழுந்து,
அழுங்கு சிந்தையான்,
'இன்ன ஆறு செய்வென்' என்று, ஓர்
எண் இலான், இரங்குவான்;
பன்னு கோடி தீப மாலை,
பாலை யாழ் பழித்த சொல்
பொன்னனார், எடுக்க, அங்கு,
ஓர் சோலையூடு போயினான்.

**அன்ன காலை** - அப்பொழுது; **அழுங்கு சிந்தையான்** -நொந்த மனத்தினனாகிய இராவணன்; **அங்கு நின்று எழுந்து** - அவ்விடத்திலிருந்தும் செல்ல எழுந்து; '**இன்னவாறு செய்வென்** -இம் முறையில் நடந்து கொள்வேன்'; **என்று ஓர் எண் இலான்** - என்று எண்ணும் சிந்தனை ஏதும் இல்லாதவனாய்; **இரங்குவான்** - வருந்துகின்றவன்; **பாலை யாழ் பழித்த சொல் பொன்னனார்** -பாலை யாழின் இன்னிசையை வென்ற அழகிய பேச்சுக்களை உடைய பொன் மேனிப் பணிப் பெண்கள்; **பன்னு கோடி தீப மாலை எடுக்க** -பாராட்டி உரைக்கத்தக்க எண்ணற்ற விளக்கு வரிசைகளை ஏந்த; **அங்கு ஓர்சோலையூடு போயினான்** - அங்குள்ள ஒரு சோலைக்குள் நுழைந்தான்.

செய்தல் அறியானாய் இராவணன் சோலைக்குச் சென்றான். பாலை யாழ் நால்வகைப் பண்களுள் ஒன்று குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன பிற.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

***3162. மாணிக்கம், பனசம்; வாழை***
***மரகதம்; வயிரம், தேமா;***
***ஆணிப் பொன் வேங்கை;***
***கோங்கம், அரவிந்தராகம்; பூகம்***
***சேண் உய்க்கும் நீலம்; சாலம்***
***குருவிந்தம்; தெங்கு வெள்ளி;***
***பாணித் தண் பளிங்கு, நாகம்;***
***பாடலம் பவளம் மன்னோ.***

*(அச் சோலையில்);* ***பனசம் மாணிக்கம் -*** *பலா மரங்கள் மாணிக்க மயமாகவும்;* ***வாழை மரகதம் -*** *வாழை மரங்கள் மரகத மயமாகவும்;* ***தேமா வயிரம் -*** *இனிய மாமரங்கள் வைர மயமாகவும்;* ***வேங்கை ஆணிப்பொன் -*** *வேங்கை மரங்கள் உயர்வகைப் பொன் மயமாகவும்;* ***கோங்கம் அரவிந்த ராகம் -*** *கோங்கு மரங்கள் பதும ராகம் என்னும் இரத்தின மயமாகவும்;* ***பூகம் சேண் உய்க்கும் நீலம் -*** *கமுகு நெடுந்தொலைவுஒளிரும் நீலமணி மயமாகவும்;* ***சாலம் குருவிந்தம் -*** *ஆச்சா மரங்கள் குருவிந்தம் என்னும் மணி மயமாகவும்;* ***தெங்கு வெள்ளி -****தென்னை மரங்கள் வெள்ளி மயமாகவும்;* ***நாகம் பாணித் தண் பளிங்கு -*** *சுர புன்னை மரங்கள் நீரோட்டம் மிக்க கண்ணாடி மயமாகவும்;* ***பாடலம் பவளம் -*** *பாதிரி மரங்கள் பவள மயமாகவும் (இருந்தன). (* ***மன்னோ -*** *அசை)*

*இராவணனின் சோலை மரங்கள் தங்கம், மணிகள் மயமானவை என்று சுந்தரகாண்டச் செய்யுள் (4853) விளக்குகிறது. வினை முற்று வருவித்து முடிக்கப்பட்டது.*

***3163. வான் உற நிவந்த செங் கேழ் மணி***
***மரம் துவன்றி, வான***
***மீனொடு மலர்கள் தம்மின்***
***வேற்றுமை தெரிதல் தேற்றா,***
***தேன் உகு, சோலைநாப் பண், செம்பொன்***
***மண்டபத்துள், ஆங்கு ஓர்***
***பால் நிற அமளி சேர்ந்தான்; பையுள்***
***உற்று உயங்கி நைவான்.***

***வானுற நிவந்த செங் கேழ் -*** *விண் தொடுமாறு உயர்ந்த அழகிய ஒளியுடைய;* ***மணி மரம் -*** *இரத்தின மயமான மரங்கள்;* ***துவன்றி -*** *நெருங்கி வளர்ந்து;* ***வான மீனொடு மலர்கள் தம்மின் -*** *விண் மீன்களுக்கும் மரங்களின் மலர்களுக்கும் இடையே;* ***வேற்றுமை தெரிதல் தேற்றா -*** *வேறுபாடு தெரிய முடியாதபடி (அமைந்திருக்கும்);* ***தேன் உகு சோலை நாப்பண் -*** *தேன் சிந்தும் சோலையின் நடுவே;* ***செம்பொன் மண்டபத்துள் -*** *தங்கமயமான மண்டபத்தில்;* ***ஆங்கு ஓர் -*** *அங்கே இடப்பட்ட ஒரு;* ***பால் நிற அமளி சேரந்தான் -*** *பால் போன்ற வெள்ளை நிறப் படுக்கையினை அடைந்த (இராவணன்);* ***பையுள் உற்று -****துயரம் வந்தடைய;* ***உயங்கி நைவான் -*** *நொந்து வருந்தினான்.*

*முதல் இரண்டடியில் உவமை அணி அமைந்துள்ளது.97பறவைகள் ஒலி அடங்கலும், பருவங்கள் தடுமாறுதலும்*

***3164. கனிகளின், மலரின், வந்த கள்***
***உண்டு களிகொள் அன்னம்,***
***வனிதையர் மழலை இன்சொல்***
***கிள்ளையும், குயிலும், வண்டும்,***
***இனியன மிழற்றுகின்ற யாவையும்,***
***'இலங்கை வேந்தன்***
***முனியும்' என்று அவிந்த வாய;***
***மூங்கையர் போன்ற அன்றே.***

***கனிகளின், மலரின் -*** *பழங்களிலிருந்தும் பூக்களிலிருந்தும்;* ***வந்த கள் உண்டு -*** *பெருகிய மதுவை அருந்தி;* ***களி கொள் அன்னம் -****கள் வெறி கொண்ட அன்னப் பறவைகளும்;* ***வனிதையர் மழலை இன்சொல் கிள்ளையும் -*** *மகளிர் போல் இனிய மழலை மொழி பேசும் கிளிகளும்;* ***குயிலும், வண்டும் -*** *குயில்களும், தேன் வண்டுகளும்;* ***இனியன மிழற்றுகின்ற யாவையும் -*** *இனிதே பேசுதல் வல்ல வேறு பல பறவைகளும்;* ***'இலங்கை வேந்தன் -*** *இலங்கையர் கோனாகிய இராவணன்;* ***முனியும் என்று -*** *கோபித்துக் கொள்வான்' என்று;* ***அவிந்த வாய -****மௌனம் கொண்ட வாயினவாய்;* ***மூங்கையர் போன்ற -****ஊமைகளாகக் காட்சி தந்தன; (* ***அன்றே -*** *ஈற்றசை)*

*இராவணனுக்கு அஞ்சிப் பறவைகள் ஒலி அடங்கின. கிளிக் குரல் போன்ற மழலை என்னும் மரபை மாற்றி மழலை ஒத்த கிளிச் சொல் என்றது எதிர் நிலையுவமையணி.*

***3165. பருவத்தால் வாடை தந்த பசும்***
***பனி, அனங்கன் வாளி***
***உருவிப் புக்கு ஒளித்த புண்ணில்,***
***குளித்தலும், உளைந்து விம்மி,***
***'இருதுத்தான் யாது அடா?' என்று***
***இயம்பினன்; இயம்பலோடும்,***
***வெருவிப் போய், சிசிரம் நீங்கி, வேனில்***
***வந்து இறுத்தது அன்றே.***

***பருவத்தால் -*** *(பின் பனிப்) பருவம் காரணமாக;* ***வாடை தந்த பசும்பனி -*** *வடதிசைக் காற்றுடன் கலந்து வந்த புதிய பனியானது;****அனங்கன் வாளி -*** *மன்மத பாணங்கள்;* ***உருவிப் புக்கு ஒளித்த புண்ணில் -*** *பாய்ந்து நுழைந்து ஓடி மறைந்ததால் விளைந்த புண்ணில்;* ***குளித்தலும் -*** *சென்று தைத்தலும்;* ***உளைந்து விம்மி -*** *வருந்திக் கலங்கி (இராவணன்);* ***'இருதுத் தான் யாது அடா என்று -*** *இப்பொழுது நடப்பிலுள்ள பருவ காலம் தான் ஏதடா' என்று;* ***இயம்பினன் -*** *வினவினான்;* ***இயம்பலோடும் -*** *அவ்வாறு வினவியதும்;* ***வெருவிப் போய் சிசிரம் நீங்கி -*** *அச்சமுற்றுப் பின் பனியான அப்பருவம்*

*நீங்கிச் செல்ல;* ***வேனில் வந்து இறுத்தது -*** *(தொடர்ந்து வரும்) வேனிலாகிய வசந்தகாலம் வந்து சேர்ந்தது; (* ***அன்றே -*** *அசை)*

*இராவணனுக்குப் பயந்து பின்பனி விலக வேனிற் பருவம் வந்துஇசைந்தது. இயல்பின் இயங்கும் பருவ காலங்களும் அஞ்சித் தடுமாறும் வகையில் இலங்கையர் கோன் ஆட்சி அமைந்தது; உயர்வு நவிற்சிதான் எனினும் காவிய நிகழ்ச்சிக்குப் பொருத்தமானது. ருது என்னும் வடசொல் இருது என வந்தது. முதுவேனில், கார், கூதிர், முன்பனி என்பன பிறபருவங்கள்.*

***3166. வன் பணை மரமும், தீயும்,***
***மலைகளும் குளிர வாழும்***
***மென் பனி எரிந்தது என்றால்,***
***வேனிலை விளம்பலாமோ?***
***அன்பு எனும் விடம் உண்டாரை***
***ஆற்றலாம் மருந்தும் உண்டோ?-***
***இன்பமும் துன்பம்தானும் உள்ளத்தோடு***
***இயைந்த அன்றே?***

***வன்பணை மரமும் -*** *வைரம் பாய்ந்த பெரிய கிளைகளைக் கொண்ட மரங்களும்;* ***தீயும் மலைகளும் -*** *காட்டுத் தீயும் மலைகளும்;* ***குளிர வாழும் மென்பனி -*** *குளிர்ச்சி பெறும்படி நிலை பெற்ற மெல்லிய பனியே;* ***எரிந்தது என்றால் -*** *(இராவணன் மேனியில்) எரிச்சலை ஊட்டியது என்றால்;* ***வேனிலை விளம்பலாமோ? -*** *(வெயில் விரிகின்ற) வேனிற்காலம் (எத்தகைய துன்பம் தந்திருக்கும்) எனக் கூறுதல் இயலுமோ? (இயலாது); (மேலும்)* ***அன்பு எனும் விட முண்டாரை -*** *காமம் என்னும் நஞ்சு அருந்தியவர்களை;* ***ஆற்றல் ஆம் மருந்தும் உண்டோ? -****அதிலிருந்து காக்கும் வலிமை சான்ற மருந்தும் உலகில் உண்டோ? (இல்லை);* ***இன்பமும் துன்பம் தானும் -*** *இன்ப துன்பமாகிய இரண்டு மாறுபட்ட நிலைகளையும் படைத்துத் தருவது;* ***உள்ளத்தோடு இயைந்த அன்றே -****உள்ளத்தோடு பொருந்திய உணர்வுகளே அல்லவா?*

*நன்மை தீமைகளை மனமே உணர வைக்கிறது. புறச்சூழல் அல்ல என எடுத்துக் காட்டுகின்றார். அன்பு என்ற சொல் இங்கே காமமாகிய அன்பைக் குறித்தது பின்பனிப் பருவத்தை விட இளவேனிற் பருவம் மிகுதியாகத் துன்பம் தந்தது. இப் பொதுப் பொருள் கொண்டு, இராவணன் மன உணர்வினை விளக்கிச் சிறப்புப் பொருள் புலப்படுத்தியதால் வேற்றுப் பொருள் வைப்பணியாகும்.* *100*

***3167. மாதிரத்து இறுதிகாறும், தன் மனத்து***
***எழுந்த மையல்-***
***வேதனை வெப்பம் செய்ய, வேனிலும்***
***வெதுப்பும் காலை,***
***'யாது இது இங்கு? இதனின் முன்னைச்***
***சீதம் நன்று; இதனை நீக்கி,***

***கூதிர்ஆம் பருவம் தன்னைக் கொணருதிர்***
***விரைவின்' என்றான்.***

***தன் மனத்து எழுந்த மையல்*** - *அவன் உள்ளத்தில் எழுந்த காமம்;* ***மாதிரத்து இறுதிகாறும்*** - *திசைகளின் எல்லைகளையும் தொட்டு;* ***வேதனை வெப்பம் செய்ய*** - *துன்பமாகிய வெம்மையைப் பரப்ப;* ***வேனிலும் வெதுப்பும் காலை*** - *வேனிற் காலமும் கொடிய வெப்பத்தை உண்டுபண்ண; அவன்;* ***'இங்கு இது யாது?*** - *இங்கு துன்பம் தரும் இப்பருவம் யாது?;* ***முன்னைச் சீதம் இதனின் நன்று*** - *முன்பு வந்த குளிர்ச்சிப் பனிப்பருவம் இதனினும் நன்றாயிருந்தது;* ***இதனை நீக்கி*** - *இவ் வேனிற் பருவத்தை விலக்கி;* ***கூதிராம் பருவம் தன்னை*** - *கூதிராம் பருவகாலத்தை;* ***விரைவின் கொணருதிர்*** - *விரைந்து கொண்டு வாருங்கள்';* ***என்றான்*** - *என்று பணியாளரிடம் கட்டளையிட்டான்.*

*வேனிற் காலம் தன் இயல்புக் கேற்பக் காம உணர்வை மிகுவிக்கக் கூதிர்ப் பருவத்தைக் கொணர இராவணன் ஆணையிட்டான்.*

***3168. கூதிர் வந்து அடைந்தகாலை, கொதித்தன***
***குவவுத் திண்தோள்;***
***'சீதமும் சுடுமோ? முன்னைச் சிசிரமேகாண்***
***இது' என்றான்;***
***'ஆதியாய்! அஞ்சும் அன்றே, அருள்***
***அலது இயற்ற?' என்ன,***
***'யாதும், இங்கு, இருது ஆகாது; யாவையும்***
***அகற்றும்' என்றான்.***

***கூதிர் வந்து அடைந்த காலை*** - *குளிர் காலம் உடன் வந்து சேர்ந்த போது;* ***குவவுத் திண் தோள் கொதித்தன*** - *வலிமை வாய்ந்த திரண்ட (இராவணன்) தோள்கள் முன்னை விட வெப்பம் பூண்டன; (அப்போது அவன்);* ***சீதமும் சுடுமோ?*** - *கூதிர் காலத்துக் குளிர்ச்சியும் சுடுவது உண்டோ?;* ***முன்னைச் சிசிரமே இது காண்*** - *பழைய பனிக் காலம் தான் இது;* ***என்றான்*** - *எனக் கூறினான்; அதற்குப் பணியாளர்;* ***'ஆதியாய்*** - *(எம்) தலைவனே;* ***அருள் அலது இயற்ற அஞ்சும் அன்றே-*** *தங்கள்பால் உத்தரவு இல்லாத ஒன்றைச் செய்ய எம்மனோர் அச்சம் கொள்வரே';* ***என்ன*** - *என்றுதெரிவிக்க; (அது கேட்ட இராவணன்);* ***இங்கு இருது யாதும் ஆகாது*** - *இனி இங்கு எவ்வகைப் பருவ காலமும் வருதல் கூடாது;* ***யாவையும் அகற்றும் என்றான்*** - *எல்லாப் பருவகாலங்களையும் நீக்கி விடுங்கள்' என ஆணையிட்டான்.*

*அனைத்துப் பருவகாலங்களையும் அகன்று போகுமாறு கட்டளையிட்டான் இராவணன்.*

***3169. என்னலும், இருது எல்லாம் ஏகின;***
***யாவும் தம்தம்***
***பன் அரும் பருவம் செய்யா,***

***யோகிபோல் பற்று நீத்த;***
***பின்னரும், உலகம் எல்லாம், பிணி***
***முதல் பாசம் வீசித்***
***துன் அருந் தவத்தின் எய்தும் துறக்கம்போல்,***
***தோன்றிற்று அன்றே.***

***என்னலும் -*** *என இராவணன் ஆணை பிறப்பித்ததும்;* ***இருது எல்லாம் ஏகின -*** *எல்லாப் பருவங்களும் விலகிப் போயின;* ***யாவும் -*** *ஆறு பருவ காலங்களும்;* ***தம் தம் பன் அரும் பருவம் செய்யா -****தத் தமக்குரிய பருவ கால நிகழ்வுகளைச் செய்யாமல்;* ***யோகி போல் பற்று நீத்த -*** *தனக்குள் ஒடுங்கும் தவசி போல் செயல்பாடுகளைக் கைவிட்டன;* ***பின்னரும் உலகம் எல்லாம் -*** *அதன் பின்பு அனைத்துலகும்;****பிணி முதல் பாசம் வீசி -*** *நோய் முதலிய வினைத் தொடர்புகளை ஒழித்து;* ***துன்னருந் தவத்தின் எய்தும் -*** *செயற்கரிய தவத்தால் அடையத்தக்க;* ***துறக்கம் போல் தோன்றிற்று -*** *முக்தி உலகம் போல் எவ்வித மாறுபாடுமின்றி விளங்கலாயிற்று.* ***அன்றே -*** *ஈற்றசை.*

*உலகம் செயலற்றுப் போன நிலையை இவ்வாறு கூறினார். இன்ப, துன்பங்களுக்குக் காரணமாவன பருவங்கள். பருவங்கள்தொழிற்படாமையால் இன்ப, துன்ப நிலைகளற்ற துறக்க உலகம் போலாயிற்றுஇலங்கை என்பது கருத்து.*

***3170. கூலத்து ஆர் உலகம் எல்லாம்***
***குளிர்ப்பொடு வெதுப்பும் நீங்க,***
***நீலத்து ஆர் அரக்கன் மேனி நெய்***
***இன்றி, எரிந்தது அன்றே-***
***காலத்தால் வருவது ஒன்றோ?***
***காமத்தால் கனலும் வெந் தீ***
***சீலத்தால் அவிப்பது அன்றி,***
***செய்யத்தான் ஆவது உண்டோ?***

***கூலத்து ஆர் உலகம் எல்லாம் -*** *கடலால் சூழப்பெற்ற உலகம் முழுவதும்;* ***குளிர்ப்பொடு வெதுப்பும் நீங்க -*** *குளிர்ச்சியும் வெப்பமும் இல்லாமற் போன நிலையிலும்;* ***நீலத்தார் அரக்கன் மேனி -*** *நீல நிறம் பொருந்திய இராக்கதனாகிய இராவணனின் உடல்;* ***நெய்யின்றி எரிந்தது -*** *எண்ணெயின்றியே எரியலாயிற்று;* ***காலத்தால் வருவது ஒன்றோ? -*** *இவ்வெம்மைக்குக் காலம் (பருவம்) காரணமென்று கூறமுடியுமோ?;* ***காமத்தால் கனலும் வெந்தீ -*** *காமநோயால் எரியும் கொடு நெருப்பை;* ***சீலத்தால் அவிப்பது அன்றி -*** *நல்லொழுக்கத்தால் அணைக்கலாமே அன்றி;* ***செய்யத் தான் ஆவது உண்டோ? -*** *வேறு மாற்று ஏதேனும்செய்தல் இயலுவதோ? (இயலாது).* ***அன்றே -*** *அசை.*

*நெய்யின்றி நெருப்பு எரிந்தது என்றது காரணமின்றியே காரியம்நிகழ்வதாகக் காட்டுவதால் விபாவனை அணி.*

*இராவணன் சந்திரனைக் கொணருமாறு கூறுதல்*

*3171. நாரம் உண்டு எழுந்த மேகம்,*
*தாமரை வளையம், நானச்*
*சாரம் உண்டு இருந்த சீதச் சந்தனம்,*
*தளிர், மென் தாதோடு,*
*ஆரம், உண்டு எரிந்த சிந்தை*
*அயர்கின்றான்; அயல் நின்றாரை,*
*'ஈரம் உண்டு என்பர் ஓடி, இந்துவைக்*
*கொணர்மின்' என்றான்.*

***நாரம் உண்டு எழுந்த மேகம்** - நீரை அருந்தி எழுந்த முகில்களும்; **தாமரை வளையம்** - தாமரை மாலைகளும்; **நானச் சாரம் உண்டு இருந்த**- கஸ்தூரியின் சாரம் கலந்திருக்கின்ற; **சீதச் சந்தனம்** -குளிர்ந்த சந்தனமும்; **தளிர்** - தளிர்களும்; **மென்தாதோடு** - மென்மையான மகரந்தமும்; **ஆரம்** - குளிர்ந்த முத்துக்களும்; **உண்டு** - மேனியில் பூசப்பெற்றும்; **எரிந்த சிந்தை அயர்கின்றான்** - வெப்ப மிகுதியால் மனம் தளர்கின்ற இராவணன்; **அயல் நின்றாரை** - அருகில் நின்ற பணியாளரை நோக்கி; **'ஈரம் உண்டு என்பர்** - நிலாவுக்குக் குளிர்ச்சி உண்டு என்கிறார்கள்; **ஓடி** - நீங்கள் விரைந்தோடி; **இந்துவைக் கொணர்மின்** - சந்திரனைக் கொண்டு வாருங்கள்'; **என்றான்** - எனக் கட்டளையிட்டான். பருவ காலங்கள் அகன்ற பின் குளிர்ந்த பொருள்கள் எவையும்பயன்படாமல் போகச் சந்திரனைக் கொண்டு வர இராவணன் உத்தரவிட்டான். 10*

*3172வெஞ் சினத்து அரக்கன் ஆண்ட*
*வியல் நகர்மீது போதும்*
*நெஞ்சு இலன், ஒதுங்குகின்ற*
*நிறை மதியோனை நேடி,*
*'அஞ்சலை; வருதி; நின்னை*
*அழைத்தனன் அரசன்' என்ன,*
*சஞ்சலம் துறந்துதான், அச்*
*சந்திரன் உதிக்கலுற்றான்.*

***வெஞ்சினத்து அரக்கன்** - கொடிய சினம் படைத்த இராக்கதனான இராவணன்; **ஆண்ட வியல் நகர் மீது** - அரசாளுகின்ற பெரிய இலங்கை மாநகரின் மேலே; **போதும்** - போவதற்கு; **நெஞ்சு இலன்** - மன உறுதி இல்லாதவனாய்; **ஒதுங்குகின்ற** - (ஒரு பக்கமாய்) ஓரத்தில் செல்லுகின்ற; **நிறை மதியோனை நேடி** - பூரணச் சந்திரனை (ஏவலர்கள்) தேடிக் கண்டு; **'அஞ்சலை வருதி'** - அச்சம் நீத்து வருவாயாக; **"நின்னை அழைத்தனன்" அரசன் என்ன** - உன்னை அழைத்து வரும்படி மன்னன் ஏவினான்' என்று கூற; **சஞ்சலம் துறந்து** - மனக் கவலை நீத்து; **அச் சந்திரன்** - அந்தச் சந்திரன்; **தான் உதிக்கலுற்றான்** - அவ்விலங்கை மாநகரின் மீது உதிக்கத் தொடங்கினான்.*

*3173. அயிர் உறக் கலந்த நல் நீர்*
*ஆழிநின்று, ஆழி இந்து-*

***செயிர் உற்ற அரசன், ஆண்டு ஓர்***
***தேய்வு வந்துற்ற போழ்தில்,***
***வயிரம் உற்று உடைந்து சென்றோர்***
***வலியவன்-செல்லுமாபோல்***
***உயிர் தெற உவந்து வந்தான் ஒத்தனன்,***
***-உதயம் செய்தான்.***

***செயிர் உற்ற அரசன் -*** *பகைமை பாராட்டிய ஒரு மன்னவன்;* ***ஆண்டு -*** *ஒருக்கால்;* ***ஓர் தேய்வு வந்துற்ற போழ்தில் -*** *மெலிவு வந்து ஆற்றல் குன்றிய நேரத்தில்;* ***உடைந்து சென்றோர் வலியவன் -****முன்னம் அவனிடம் தோல்வி கண்ட ஒரு வல்லவன்;* ***வயிரம் உற்றுச் செல்லுமா போல் -*** *(பழம் பகைக்குப் பழி தீர்க்கப்) பகைமை பாராட்டி மேற் சென்றாற் போல;* ***ஆழி இந்து -*** *சக்கர வட்டம் போன்ற சந்திரன்;****அயிர் உறக் கலந்த நல் நீர் -*** *நுண் மணல் சூழ்ந்த நல்ல நீரை உடைய;****ஆழி நின்று -*** *கடலிலிருந்து மேலெழுந்து;* ***உயிர் தெற -*** *இராவணன் உயிரை வருத்த;* ***உவந்து வந்தான் ஒத்தனன் -*** *மகிழ்வோடு வந்தவனைப் போல் விளங்கி;* ***உதயம் செய்தான் -*** *புலப்பட்டுத் தோன்றலுற்றான். முன்பு இராவணனிடம் அஞ்சி ஏவல் செய்த சந்திரன், அவன் மீது பழி தீர்க்க வந்தான் போல் உதயம் செய்தான். இப்பாடலில் தற்குறிப்பேற்ற அணி அமைந்துள்ளது.*

*3174.* ***பராவ அருங் கதிர்கள் எங்கும் பரப்பி,***
***மீப் படர்ந்து, வானில்***
***தராதலத்து, எவரும் பேணா,***
***அவனையே சலிக்கும் நீரால்,***
***அரா-அணைத் துயிலும் அண்ணல், காலம்***
***ஓர்ந்து, அற்றம் நோக்கி,***
***இராவணன் உயிர்மேல் உய்த்த திகிரியும்,***
***என்னல் ஆன.***

***பராவ அருங் கதிர்கள் -*** *போற்றுதற்கரிய (சிறப்புமிக்க) (அச்சந்திரனின்) கிரணங்களை;* ***எங்கும் பரப்பி -*** *எத்திசையிலும் பரவ விட்டுக் கொண்டு;* ***மீப் படர்ந்து -*** *மேற் சென்று;* ***வானில் -****விண்ணுலகில்;* ***தராதலத்து -*** *மண்ணுலகில்;* ***எவரும் பேணா அவனையே -****எவராலும் நேசிக்கப்படாத இராவணனையே;* ***சலிக்கும் நீரால் -*** *துன்புறுத்தும் தன்மையினால்;* ***அரா அணைத் துயிலும் அண்ணல் -****ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையில் உறங்கும் திருமால்;* ***காலம் ஓர்ந்து -*** *சமயம் பார்த்து;* ***அற்றம் நோக்கி -*** *அவன் (இராவணன்) அழிவைக் கருதி;****இராவணன் உயிர்மேல் உய்த்த -*** *அவ்விராவணன் உயிர் மீது ஏவிய;* ***திகிரியும் என்னல் ஆன -*** *சக்கரப்படை என்று சொல்லும்படியாகவும் விளங்கின.*

*கடலினின்றும் பொங்கிய நிலா, பாற்கடல் துயிலும் பரமன் ஏவிய சக்கரமாகக் கற்பித்தல் தன்மைத் தற்குறிப்பேற்ற அணி.*

*3175. **அருகுறு பாலின் வேலை அமுது***
***எலாம் அளைந்து வாரிப்***
***பருகின, பரந்து பாய்ந்த நிலாச் சுடர்ப்***
***பனி மென் கற்றை,***
***நெரியுறு புருவச் செங் கண் அரக்கற்கு,***
***நெருப்பின் நாப்பண்***
***உருகிய வெள்ளி அள்ளி வீசினால்***
***ஒத்தது அன்றே.***

***அருகு உறு பாலின் வேலை** - பக்கத்தில் அமைந்துள்ள பாற் கடலினின்றும்; **அமுதெலாம் அளைந்து வாரி** - அமுதம் முழுவதையும் வாரி யெடுத்து; **பருகின பரந்து பாய்ந்த நிலாச் சுடர்** - குடித்து எங்கும் விரிந்து பரவிய சந்திரனின் ஒளியான; **பனி மென் கற்றை** -மெல்லிய குளிர்ந்த கிரணங்கள்; **நெரியுறு புருவச் செங்கண் அரக்கற்கு** - இப்போது நெரிந்தபுருவங்களையும் சிவந்த கண்களையும் உடைய இராக்கதனாகிய இராவணனுக்கு; **நெருப்பின் நாப்பண்** - நெருப்பின் நடுவே (வைக்கப்பட்டதால்); **உருகிய வெள்ளி** - கொதித்த வெள்ளிக் குழம்பை; **அள்ளி வீசினால் ஒத்தது** - கைகளால் வாரி வீசினாற் போன்றிருந்தது. ( **அன்றே** - அசை).*

*பாற்கடலில் தோன்றிய சந்திரன் அக்கடலிலிருந்தும் தோன்றியஅமுதத்தைப் பருகி நிலவொளியாக வெளியிடுவதாகக் கூறுதல் தற்குறிப்பேற்ற அணி.*

*3176. **மின் நிலம் திரிந்தது அன்ன***
***விழுநிலா-மிதிலை சூழ்ந்த***
***செந்நெல் அம் கழனி நாடன் திரு***
***மகள் செவ்வி கேளா,***
***நல் நலம் தொலைந்து சோரும்***
***அரக்கனை, நாளும் தோலாத்***
***துன்னலன் ஒருவன் பெற்ற***
***புகழ் எனச்சுட்டது அன்றே.***

***மின் நிலம் திரிந்தது அன்ன** - மின்னல் ஒன்று நிலத்தில் உலாவியது போன்ற; **விழுநிலா** - சிறந்த சந்திர கிரணமானது;**மிதிலை சூழ்ந்த** - மிதிலை நகரத்தைச் சூழ்ந்த; **செந்நெல் அம் கழனி நாடன்** - செந்நெல் வயல்களை உடைய விதேக நாட்டு அரசனான சனகனது; **திரு மகள்** - செல்வ மகளான சீதையின்; **செவ்வி** - வடிவப் பொலிவை;**கேளா** - (தங்கை வாயிலாகக்) கேட்டறிந்து; **நல் நலம் தொலைந்து சோரும் அரக்கனை** - (அதனால்) தன் இனிய நலம், சிறப்பு ஆகியனவற்றை இழந்து தவிக்கும் இராக்கதனாம் இராவணனை; **நாளும் தோலா** - எந்நாளும் தோல்வியுறாத; **துன்னலன் ஒருவன்** - பகைவன் ஒருவன்; **பெற்ற** - அடைந்த; **புகழ் எனச் சுட்டது** - புகழாகிய பெருமை மனதைச் சுடுவது போன்று துன்பம் தந்தது. **அன்றே** - ஈற்றசை.*

இப்பாடலில் அமைந்திருப்பது உவமையணி.

*3177.* ***கருங் கழல் காலன் அஞ்சும்***
***காவலன், கறுத்து நோக்கி,***
***'தரும் கதிர்ச் சீத யாக்கைச்***
***சந்திரன்-தருதிர் என்ன,***
***முருங்கிய கனலின், மூரி விடத்தினை***
***முருக்கும் சீற்றத்து,***
***அருங் கதிர் அருக்கன்தன்னை ஆர்***
***அழைத்தீர்கள்?' என்றான்.***

***கருங்கழல் காலன் -*** *பெரிய வீரக் கழலை அணிந்த இயமனும்;* ***அஞ்சும் காவலன் -*** *அஞ்சுகின்ற பெருமை படைத்த இராவணன் -****கறுத்து நோக்கி -*** *(தன் பணியாளரைச்) சினந்து நோக்கி;* ***சீதம் தரும் கதிர் -*** *குளிர்ச்சியைத் தரும் கிரணங்கள் கொண்ட;* ***யாக்கைச் சந்திரன் -*** *மேனி படைத்த சந்திரனை;* ***தருதிர் என்ன -*** *அழைத்து வாருங்கள் என்று (யான்) கூற;* ***முருங்கிய கனலின் -*** *அழிக்கும் கொடு நெருப்பையும்;****மூரி விடத்தினை -*** *வலிமை மிக்க நஞ்சினையும்;* ***முருக்கும் சீற்றத்து -****கடும் கோபத்தையும்;* ***அருங்கதிர் அருக்கன் தன்னை -*** *(கொண்ட) வெப்பக் கிரணங்களையும் கொண்ட சூரியனை;* ***'ஆர் அழைத்தீர்கள்' என்றான் -*** *அழைத்து வந்தது யார் என்று கேட்டான்.*

குளிர் நிலவைக் கடுங்கதிராய் உணர்ந்தான்.

*3178.* ***அவ் வழி, சிலதர் அஞ்சி, 'ஆதியாய்!***
***அருள் இல்லாரை***
***இவ் வழித் தருதும் என்பது இயம்பல்***
***ஆம் இயல்பிற்று அன்றால்;***
***செவ் வழிக் கதிரோன் என்றும்***
***தேரின்மேல் அன்றி வாரான்;***
***வெவ் வழித்து எனினும், திங்கள்,***
***விமானத்தின் மேலது' என்றார்.***

***அவ்வழிச் சிலதர் அஞ்சி -*** *இராவணன் இவ்வாறு வினவிய போது பணியாளர் அச்சம் கொண்டு;* ***ஆதியாய் -*** *முதல்வனே;* ***அருள் இல்லாரை-*** *உன்னால் அருளப்பட்டாரையன்றிப் பிறரை;* ***இவ் வழித் தருதும் என்பது-*** *இங்கு யாம் அழைத்து வருதல் என்பது;* ***இயம்பலாம் இயல்பிற்று அன்று -*** *பேசத் தக்க தன்மையது அன்று;* ***செவ்வழிக் கதிரோன் -*** *சிவந்த கிரணங்கள் உடைய சூரியன்;* ***என்றும் தேரின் மேல் அன்றி வாரான் -*** *எப்போதும் தேர் மீதன்றி வரமாட்டான்;* ***வெவ்வழித்து எனினும் -*** *(உனக்கு) வெப்பம் தருவதாய் இருப்பினும்;* ***திங்கள் -****சந்திரன்;* ***விமானத்தின் மேலது என்றார் -*** *விமானத்தின் மீதில் உள்ளான் என்றனர்;* ***ஆல் -*** *அசை.*

*கதிரவனும் திங்களும் பயணம் செய்யும் முறைமை எடுத்துக் காட்டினார்.*

*இராவணன் நிலாவைப் பழித்தல்*

***3179. பணம் தாழ் அல்குல் பனி மொழியார்க்கு***
***அன்புபட்டார் படும் காமக்***
***குணம்தான் முன்னம் அறியாதான்***
***கொதியாநின்றான்; மதியாலே,***
***தண் அம் தாமரையின் தனிப் பகைஞன்***
***என்னும் தன்மை, ஒருதானே***
***உணர்ந்தான்; உணர்வுற்று, அவன்மேல் இட்டு,***
***உயிர்தந்து உய்க்க உரைசெய்வான்;***

***பணம்** - பாம்பின் படம்; **தாழ்** - தோற்கும்படியான; **அல்குல்** - அல்குலையும்; **பனி மொழியார்க்கு** - குளிர்ச்சி பொருந்திய பேச்சையும் உடைய பெண்களிடம்; **அன்புபட்டார்** - ஆசை கொண்டார்; **படும்** -அடைகின்ற; **காமக் குணம்** - காதல் நோயின் தன்மையை; **தான் முன்னம் அறியாதான்** - முன் எப்போதும் துய்த்தறியாத இராவணன்;**மதியாலே கொதியா நின்றான்** - சந்திரனால் துன்பம் கொண்டவனாகி; **தண் அம் தாமரையின்** - குளிர்ந்த அழகிய தாமரைக்கு; **தனிப் பகைஞன் என்னும் தன்மை** - (இந்தச் சந்திரனே) நேரான எதிரி என்னும் உண்மையை;**ஒரு தானே உணர்ந்தான்** - தனக்குத் தானே உணர்ந்து கொண்டான்; **உணர்வுற்று** - இவ்வுண்மை உணர்வு வந்து எய்தியதும்; **அவன் மேல் இட்டு** - அச் சந்திரன் மேல் வைத்து; **உயிர் தந்து உய்க்க** - தன் உயிரை அளித்துக் காக்குமாறு; **உரை செய்வான்** - கூறத் தொடங்கினான்.*

*இதுகாறும் தான் விரும்பிய மகளிரை அடைதலல்லாது நினைந்து வருந்தும் அனுபவம் இராவணனுக்கு ஏற்படவில்லை என்பதாம்.*

***3180. 'தேயாநின்றாய்; மெய் வெளுத்தாய்;***
***உள்ளம் கறுத்தாய்; நிலை திரிந்து***
***காயா நின்றாய்; ஒரு நீயும்,***
***கண்டார் சொல்லக் கேட்டாயோ?***
***பாயாநின்ற மலர் வாளி பறியாநின்றார்***
***இன்மையால்***
***ஓயாநின்றேன்; உயிர் காத்தற்கு***
***உரியார் யாவர்?-உடுபதியே!***

***உடுபதியே** - விண்மீன்களின் தலைவனே!; **தேயா நின்றாய்** - (நீ,உன்) உடல் தேயப் பெற்றாய்; **மெய் வெளுத்தாய்** - மேனி வெண்ணிறமுற்றாய்; **உள்ளம் கறுத்தாய்** - உள்ளிடத்தே கறுத்தும் விளங்குகின்றாய்; **நிலை திரிந்து காயா நின்றாய்** - குளிர்ச்சி நிலை மாறி வெப்பமும் தருகின்றாய்; **ஒரு நீயும்** - உயர்ந்தவனாகிய நீயும்;**கண்டார் சொல்லக் கேட்டாயோ** - (என்னைப் போன்றே) சீதையின் அழகைக் கண்டவர்கள்*

*வருணிக்கக் கேட்டனையோ? **பாயா நின்ற மலர் வாளி** - (என் உடல் மீது) பாய்கின்ற மன்மதனின் மலர்க் கணைகள்; **பறியா நின்றார் இன்மையால்** - பறித்து என்னைப் பாதுகாப்பார் இல்லாமையினால்; **ஓயா நின்றேன்** - தளர்வுற்று நின்றேன்; **உயிர் காத்தற்கு** -என் (தவிக்கும்) உயிரைக் காப்பாற்ற; **உரியார் யாவர்** - உரியவர் தான் யார் உள்ளார்? (எவரும் இலர்).*

*எனது துயரைத் தணிக்க உன்னை அழைத்தால் நீயே துயர் மிக்கவனாய் உள்ளாய் என்பது கருத்து. உள்ளம் கறுத்தாய் - சிலேடை. விண்மீன்கள் சந்திரனின் மனைவியர் என்னும் புராணக் கருத்தால் உடுபதி என்றார்.*

***3181. 'ஆற்றார் ஆகின், தம்மைக் கொண்டு***
***அடங்காரோ? என் ஆர் உயிர்க்குக்***
***கூற்றாய் நின்ற குலச் சனகி குவளை***
***மலர்ந்த தாமரைக்குத்***
***தோற்றாய்; அதனால், அகம்கரிந்தாய்;***
***மெலிந்தாய்; வெதும்பத் தொடங்கினாய்,***
***மாற்றார் செல்வம் கண்டு அழிந்தால்,***
***வெற்றி ஆகவற்று ஆமோ?'***

*__என் ஆர் உயிர்க்கு__ - என்னுடைய இனிய உயிருக்கு; **கூற்றாய்நின்ற** - எமனாய் அமைந்த; **குலச் சனகி** - நற்குடிச் செல்வி சீதையின்; **குவளை மலர்ந்த தாமரைக்கு** - கண்களாகிய குவளைப் பூக்கள் பூத்திருக்கும் முகமாகிய தாமரைக்கு; **தோற்றாய்** - நீ தோல்வியுற்றாய்; **அதனால் அகம் கரிந்தாய்** - அக்காரணத்தால் உள்ளம் கரிந்து போனாய்; **மெலிந்தாய்** - உடல் தேய்ந்தாய்; **வெதும்பத் தொடங்கினாய்** -மேனி வெப்பமுறவும் தொடங்கினாய்; **மாற்றார் செல்வம் கண்டு அழிந்தால்** - பிறர் வளம் கண்டு இங்ஙனம் சிதைவுற்றால்; **வெற்றி ஆக வற்று ஆமோ**- வென்று உயர்தல் இயலுவதாகுமோ?; **ஆற்றார் ஆகின்** - தம்மால் வெல்ல இயலாதென உணர்ந்தால்; **தம்மைக் கொண்டு அடங்காரோ?** - (அறிவு மிக்கோர்) தம் நிலை உணர்ந்து கொண்டு அடங்கி விட மாட்டார்களோ? (அடங்குதல் தானே பொருத்தம்!)*

*முன் கவியிற் கூறியது போலன்றி இங்குத் தாமரைக்குப் பகைவனான சந்திரன் சீதையின் முகத் தாமரைக்குத் தோற்றான் என்றார். மேலும் தான் மலர்விப்பதற்குரிய குவளைகளும் பகையான தாமரைகள் மலரும் முகமாகிய குளத்தில் இருத்தலால் சந்திரன் தோற்றுப் போகிறான்.*

*என் ஆருயிர்க்குச் சானகியே கூற்று என்ற இராவணன் மொழிபின்வருவதை முன் உணர்த்தி நின்றது. உவமையாகு பெயராய்க் குவளை, கண்களை உணர்த்துகின்றது.*

*இராவணன் ஆணைப்படி பகலவன் வருதல்*

***3182. என்னப் பன்னி, இடர் உழவா, 'இரவோடு***
***இவனைக் கொண்டு அகற்றி;***

*முன்னைப் பகலும் பகலோனும் வருக'*
*என்றான்; மொழியாமுன்,*
*உன்னற்கு அரிய உடுபதியும் இரவும்*
*ஒழிந்த; ஒரு நொடியில்*
*பன்னற்கு அரிய பகலவனும்*
*பகலும் வந்து பரந்தவால்.*

***என்னப் பன்னி -*** *இவ்வாறு பல்வகையிலும் கூறி;* ***இடர் உழவா -*** *துன்பம் அனுபவித்து;* ***'இரவோடு இவனைக் கொண்டு அகற்றி -****இரவு நேரத்தையும்' இச்சந்திரனையும் இவ்விடம் விட்டு நீக்கி;****முன்னைப் பகலும்' பகலோனும் வருக -*** *முன்பு போலவே பகற் பொழுதையும் சூரியனையும் கொண்டு வருக;* ***என்றான் -*** *என இராவணன் ஆணை பிறப்பித்தான்;* ***மொழியாமுன் -*** *இந்தக் கட்டளையைக் கூறி முடிக்கும் முன்பே;* ***உன்னற்கு அரிய -*** *நினைத்தற்கு (துன்பத்தால்) முடியாத;* ***உடுபதியும் இரவும் ஒழிந்த -*** *சந்திரனும் இரவுப் பொழுதும் அகன்று சென்றனர்;* ***ஒரு நொடியில் -*** *கண நேரத்துக்குள்ளாக;* ***பன்னற்கு அரிய -*** *புகழ்தற்கு அரிய பெருமை வாய்ந்த;* ***பகலவனும் பகலும் வந்து பரந்த -*** *சூரியனும் பகற் பொழுதும் வந்து பரவலாயின;* ***உடு -*** *விண்மீன்;****ஆல் -*** *அசை.*

*3183.* ***இருக்கின் மொழியார் எரிமுகத்தின்***
***ஈந்த நெய்யின், அவிர்செம்பொன்***
***உருக்கி அனைய கதிர் பாய, அனல்போல்***
***விரிந்தது உயர் கமலம்;***
***அருக்கன் எய்த, அமைந்து அடங்கி***
***வாழா, அடாத பொருள் எய்திச்***
***செருக்கி, இடையே, திரு இழந்த***
***சிறியோர் போன்ற, சேதாம்பல்.***

***இருக்கின் மொழியார் -*** *ரிக் முதலிய வேத மந்திரங்கள் அறிந்தஅந்தணர்;* ***எரிமுகத்தின் -*** *நெருப்பின் முகத்தில்;* ***ஈந்த நெய்யின் -*** *சொரிந்த நெய்யினால்;* ***அவிர் செம்பொன் உருக்கி அனைய -****(எழும் நெருப்பில்) உருகிச் சுடர் விடும் தங்கம் போல்;* ***கதிர்பாய -*** *சூரியக் கதிர்கள் விரிய;* ***அனல்போல் -*** *நெருப்புத்துண்டு கனல் விடுதல் போல்;* ***உயர் கமலம் விரிந்தது*** *- மலர்களுட் சிறந்த தாமரைகள் மலர்ந்தன;* ***அருக்கன் எய்த -*** *சூரியன் வந்ததனால்;* ***சேதாம்பல் -*** *செவ்வாம்பல்மலர்கள்;* ***அடாத பொருள் எய்தி -*** *தம் தகுதிக்குப் பொருந்தாத செல்வம் பெற்றமையினால்;* ***செருக்கி -*** *கர்வம் பூண்டு;* ***அமைந்து அடங்கி வாழா -*** *இயல்பாக அடக்கம் கொண்டு வாழாது;* ***இடையே திரு இழந்த -*** *வாழ்வினிடையே அச் செல்வத்தை இழந்துவிட்ட;* ***சிறியோர் போன்ற -*** *கீழ் மக்களைப் போல் காட்சி தந்தன. சந்திரன் சற்றே ஒளி வீசி இராவணன் ஆணையால் உடன் மறைந்ததால் குவளைப் பூக்கள் சிறிது காலம் செல்வம் பெற்று இழந்த சிறியோர் போன்றன என்றார்.*

*சேதாம்பல் - பண்புத்தொகை.*

***3184. நாணிநின்று ஒளி மழுங்கி, நடுங்காநின்ற***
***உடம்பினன் ஆய்,***
***சேணில்நின்று புறம் சாய்ந்து,***
***கங்குல்-தாரம் பின்செல்ல,***
***பூணின் வெய்யோன் ஒரு திசையே புகுதப்***
***போவான், புகழ் வேந்தர்***
***ஆணை செல்ல, நிலை அழிந்த அரசர்***
***போன்றான்-அல் ஆண்டான்.***

***பூணின் வெய்யோன் -*** *உலகுக்கு அணியான கதிரவன்* ***ஒரு திசையே புகுத -*** *ஒரு வழியில் வந்து புகவும்;* ***அல் ஆண்டான் -*** *இரவின் ஆட்சித் தலைவனாகிய சந்திரன்;* ***நாணி நின்று -****வெட்கமுற்று;* ***ஒளி மழுங்கி -*** *ஒளி குன்றியவனாய்;* ***நடுங்கா நின்ற உடம்பினன் ஆய் -*** *நடுக்கம் மேவிய உடலோடு;* ***சேணில் நின்று -*** *தொலை தூரம் அகன்று;* ***புறம் சாய்ந்து -*** *முதுகுகாட்டிச் சென்று;* ***கங்குல் தாரம் பின் செல்ல -*** *இரவாகிய மனைவி உடன் செல்ல;* ***போவான் -*** *நீங்கிச் சென்றான்;****புகழ் வேந்தர் -*** *பெருமை மிக்க பேரரசர்;* ***ஆணை செல்ல -*** *கட்டளை பிறப்பிக்க;* ***நிலை அழிந்த -*** *தம் நிலை தடுமாறிய;* ***அரசர் போன்றான் -*** *சிற்றரசர் போலக் காட்சி தந்தான்.*

*அகலும் சந்திரன் தோல்வியுற்ற அரசர் போன்றிருந்தான். உவமை அணி.*

*அல்லாண்டான் - இரவின் நாயகன்.*

*கலிவிருத்தம்*

***3185. மணந்த பேர் அன்பரை,***
***மலரின் சேக்கையுள்,***
***புணர்ந்தவர், இடை ஒரு***
***வெகுளி பொங்கலால்,***
***கணம் குழை மகளிர்கள் கங்குல்***
***வீந்தது என்று***
***உணர்ந்திலர்; கனவினும்***
***ஊடல் தீர்ந்திலர்.***

***கணம் குழை மகளிர்கள் -*** *பலவகைக் காதணிகளும் பூண்ட அரக்க மகளிர்;* ***மலரின் சேக்கையுள் -*** *மலர்ப் படுக்கையில்;* ***மணந்த பேர்அன்பரை -*** *தம்மை மணந்த கணவர் தம்மை;* ***புணர்ந்தவர் -****அணைத்து மகிழ்ந்தவர்;* ***இடை ஒரு வெகுளி பொங்கலால் -*** *கூடலிடையே தம் கணவர்பால் கொண்ட ஊடலின் சினம் மீதூர்தலால்;* ***கங்குல் வீந்தது -*** *இரவு முடிந்து போய் விட்டது;* ***என்று உணர்ந்திலர் -*** *என அறியாமற் போயினர்;*

***கனவினும்*** - *உறக்கத்தில் எழும் கனவிலும்;* ***ஊடல் தீர்ந்திலர்-*** *தம் ஊடல் நீங்காதவராய் விளங்கினர்.*

*விரைவில் நீங்கும் இரவென உணராமல் ஊடற்கோபம் தொடர உறங்கினர் அரக்க மகளிர்.*

***3186. தள்ளுறும் உயிரினர்,***
***தலைவர் நீங்கலால்,***
***நள் இரவிடை உறும்***
***நடுக்கம் நீங்கலர்-***
***கொள்ளையின் அலர் கருங்***
***குவளை நாள்மலர்***
***கள் உகுவன என,***
***கலுழும் கண்ணினார்.***

***நள் இரவிடை*** - *நடு இராத்திரியெனக் கருதத்தக்க வேளையில்;* ***தலைவர் நீங்கலால்*** - *(விடிந்து போனதால்) தங்கள் கணவர் பிரிந்து சென்றமையினால்;* ***தள்ளுறும் உயிரினர்*** - *உடல் விட்டு நீங்கும் உயிரென்ற தன்மை உடையராய்;* ***உறும் நடுக்கம் நீங்கலர்*** - *மெய்யில் ஏற்பட்ட நடுங்குதல் நீங்காதவராய் (அரக்க மகளிர் சிலர்);* ***கொள்ளையின் அலர்*** - *மிகுதியாகச் செழித்து மலர்ந்த;* ***கருங்குவளை நாள் மலர்*** -*புதிய கருங்குவளை மலர்கள்;* ***கள் உகுவன என*** - *தேன் சிந்துவன போன்று;* ***கலுழும் கண்ணினார்*** - *கண்ணீர் பொழியும் கண்களை உடையார் ஆயினர்.*

*இரவு நீங்கியதால் ஏற்பட்ட விசித்திர நிகழ்ச்சிகளில் ஒன்றாக இதனைக் கூறினார்.*

***3187. அணைமலர்ச் சேக்கையுள்***
***ஆடல் தீர்ந்தனர்,***
***பணைகளைத் தழுவிய***
***பவள வல்லிபோல்,***
***இணை மலர்க் கைகளின்***
***இறுக, இன் உயிர்த்***
***துணைவரைத் தழுவினர்,***
***துயில்கின்றார் சிலர்.***

***சிலர்*** - *மேலும் சில அரக்க மகளிர்;* ***அணைமலர்ச் சேக்கையுள்*** - *பஞ்சு மெத்தை மேல் மலர் தூவிய படுக்கையில்;* ***ஆடல் தீர்ந்தனர்*** -*கலவி முற்றியவராய்;* ***பணைகளைத் தழுவிய*** - *பருத்த மரங்களைப் பின்னிய;* ***பவளவல்லி போல்*** - *பவளக் கொடிகளைப் போல;* ***இன் உயிர்த் துணைவரை*** - *இனிய உயிரனைய கணவர்களை;* ***இணை மலர்க் கைகளின்*** - *மலர் போன்ற இரண்டு கரங்களாலும்;* ***இறுகத் தழுவினர்*** - *அழுத்தமாக அணைத்தவாறு;* ***துயில்கின்றார்*** - *உறங்கினர்.*

*உயிர்த் துணைவர் - உவமத் தொகை (உயிர் போன்ற துணைவர்). ஆடவரின் திண்மைக்கு மரங்களும், பெண்டிரின் எழிலுக்கும் மென்மைக்கும் பவளக் கொடிகளும் பொருந்திய உவமைகளாயின.*

***3188. அளிஇனம் கடம்தொறும்***
***ஆர்ப்ப, ஆய் கதிர்***
***ஒளி பட உணர்ந்தில,***
***உறங்குகின்றன;***
***தெளிவுஇல இன் துயில்***
***விளையும் சேக்கையுள்***
***களிகளை நிகர்த்தன, களி***
***நல் யானையே.***

***அளி இனம் -** வண்டுகளின் கூட்டம்; **கடம் தொறும் ஆர்ப்ப -** கன்னங்களில் பொழியும் மதநீரில் மொய்த்து ஆரவாரிக்கவும்; **ஆய் கதிர் ஒளிபட -** வெளிச்சத்தால் சிறந்த சூரிய ஒளி பாயவும்; **உணர்ந்தில உறங்குகின்றன -** விழிப்புறாமல் உறங்குகின்றனவான; **களி நல் யானை -** மதங்கொண்ட உயர்ந்த யானைகள்; **இன்துயில் விளையும் சேக்கையுள் -** இனிய உறக்கம் தரும் படுக்கையில்; **தெளிவு இல -** தூக்கம் தெளியாமல் உறங்கும்; **களிகளை நிகர்த்தன -** கட்குடியர்களைப் போல விளங்கின; **ஏ-** ஈற்றசை.*

*திடீரென விடிந்தமையின் விளைவாய் யானைகளும்துயிலெழாதிருந்தன. களி(ப்பு)கள் உண்பதால் வரும் போதை.கட்குடியர்களை உயர்திணையாகக் கருதுதலும் பொருந்தாது என்பார் போல்களிகள் என அஃறிணையில் சுட்டினார்.*

***3189. விரிந்து உறை துறைதொறும்***
***விளக்கம் யாவையும்,***
***எரிந்து இழுது அஃகல,***
***ஒளி இழந்தன-***
***அருந் துறை நிரம்பிய***
***உயிரின் அன்பரைப்***
***பிரிந்து உறைதரும்***
***குலப் பேதைமாரினே.***

***அருந்துறை நிரம்பிய -** அரிய அறிவுத் துறைகளில் வல்ல;**உயிரின் அன்பரை -** (தம்) உயிர் போன்ற கணவரை; **பிரிந்து உறை தரும் -** பிரிந்து தனித்திருக்கும்; **குலப் பேதைமாரின் -** குல மாதர்களைப் போன்று; **விரிந்து உறை துறை தொறும் -** நகரின் விரிந்த பல பகுதிகளிலும்; **விளக்கம் யாவையும் -** உள்ள விளக்குகள் எல்லாம்; **எரிந்து இழுது அஃகல -** எரிந்து நெய் வற்றவில்லையாயினும்; **ஒளி இழந்தன -**(சூரியன் வரவால்) தம் ஒளி குன்றின; **ஏ -** ஈற்றசை.*

*பகலின் எதிர்பாராத வரவினால் நேர்ந்த இரண்டு நிகழ்ச்சிகளை ஒன்றற்கொன்று உவமையாக மொழிந்தார் அஃகுதல் - சுருங்குதல். அஃகுதல் இல : அஃகல்.*

***3190. புனைந்து இதழ் உரிஞ்சுறு***
***பொழுது புல்லியும்,***
***வனைந்தில, வைகறை***
***மலரும் மா மலர்;***
***நனந் தலை அமளியில்***
***துயிலும் நங்கைமார்***
***அனந்தரின் நெடுங் கணோடு***
***ஒத்த ஆம்அரோ.***

***வைகறை மலரும் மாமலர் -*** *விடியற் காலையில் மலர வேண்டிய தாமரை போன்ற சிறந்த மலர்கள்;* ***புனைந்து இதழ் உரிஞ்சுறு பொழுது -*** *(அழகியதாய்க்) கோலம் கொள்ளும் இதழ்கள் மலரும் உதயகாலம்;* ***புல்லியும் -*** *நெருங்கிய பின்னும்;* ***வனைந்தில -*** *மலரும் பாங்கு கொள்ள வில்லை;* ***நனந்தலை அமளியில் -*** *இடம் அகன்ற படுக்கையில்;* ***துயிலும் நங்கைமார் -*** *உறக்கம் கொள்ளுகின்ற அரக்க மகளிரின்;* ***அனந்தரின் நெடுங்கணோடு -*** *தூக்க வசப்பட்ட நெடிய கண்களோடு;* ***ஒத்த ஆம் -*** *ஒத்திருந்தன. (* ***அரோ -*** *அசை).*

*காரணம் தோன்றிக் காரியம் நிகழாமை கூறுதலால் விபாவனை அணி என்பர். முன் பாடலும் இவ்வாறு அமைந்தது. அனந்தர் - தூக்கக் கலக்கம்.*

***3191. இச்சையில் துயில்பவர்***
***யாவர் கண்களும்,***
***நிச்சயம், பகலும் தம்***
***இமைகள் நீக்கல-***
***'பிச்சையும் இடுதும்' என்று,***
***உணர்வு பேணலா***
***வச்சையர் நெடு மனை***
***வாயில் மானவே.***

***இச்சையில் துயில்பவர் யாவர் கண்களும் -*** *(அந்நகரத்தில்) விருப்பம் போல் தூங்குவோர் அனைவருடைய கண்களும்;* ***பகலும் தம் இமைகள் நீக்கல -*** *பகல் வந்த பின்னும் இமை விரியாதிருந்தன;* ***நிச்சயம்-*** *இது சத்தியம்; (இக்கண்கள்);* ***'பிச்சையும் இடுதும் -*** *கேட்போருக்குப்பிச்சை இடுவோம்;* ***என்று உணர்வு பேணலா -*** *என்னும் எண்ணம் இல்லாத;* ***வச்சையர் -*** *உலோபிகளின்;* ***நெடுமனை வாயில்மான -*** *உயர்ந்த இல்லங்களின் வாசற்கதவு போன்றிருந்தன. (அடைந்திருந்தன);* ***ஏ -*** *ஈற்றசை.*

*நெடுமனை வாயில் என்பதால் மனையின் வளம் தெரிகிறது. வளம் இருந்தாலும் பிச்சையேனும் இடுவோம் என்று நினையும் மனம் இல்லை. பெரிய கண்கள்,*

*பொழுதும் விடிந்தது; காண்பன காணும் எண்ணம் இல்லை. வாயிலைத் திறந்தால் எவரேனும் வந்து விடுவரோ என்று கருதி அடைத்த வாசல் என்பது குறிப்பு. உவமையணி, விருந்தினரையும் தக்கோரையும் தேடி வழங்கும் வள்ளன்மைதான் இல்லை; தேடி வரும் இரவலர்க்குப் பிச்சையேனும் இடலாமே என்ற எண்ணம் இல்லை என்பதைப் பிச்சையும் என்ற இழிவு சிறப்பும்மை புலப்படுத்திற்று.*

***3192. நஞ்சு உறு பிரிவின,***
***நாளின் நீளம் ஓர்***
***தஞ்சு உற விடுவது ஓர்***
***தயாவு தாங்கலால்,***
***வெஞ் சிறை நீங்கிய***
***வினையினார் என,***
***நெஞ்சு உறக் களித்தன-***
***நேமிப்புள் எலாம்.***

***நாளின் நீளம் -*** *பகல் நேரம் நீளுதலால்;* ***ஓர் தஞ்சு உற -****அதுவே தஞ்சமாக அமைய;* ***நஞ்சுறு பிரிவின -*** *கொடிய விடம் போலும் பிரிவுத் துன்பத்தினைப் பெற்றனவாய் விளங்கிய;* ***நேமிப்புள் எலாம் -****சக்கரவாகப் பறவைகளெல்லாம்;* ***விடுவது ஓர் தயாவு தாங்கலால் -****அத்துன்பம் நீங்கும் பகற் பொழுதின் கருணையினால்;* ***வெஞ்சிறை நீங்கிய -*** *பிறவியாகிய கொடிய சிறையினின்றும் விடுபட்ட;* ***வினையினார் என -*** *நல் வினையாளர் போல;* ***நெஞ்சு உறக் களித்தன -*** *மனம் நிறைந்து மகிழ்ந்தன.*

*இரவில் பிரிவுத் துன்பமுறும் சக்கரவாகப் புட்கள் பகலில் கூடி மகிழ்ந்தன. பிரிவு நஞ்செனஉவமிக்கப் பெற்றது. நீளம் - கூடு எனவும் பொருள் கொள்ளலாம். தயாவு : தயா, தயவு, கருணை.*

***3193. நாள்மதிக்கு அல்லது,***
***நடுவண் எய்திய***
***ஆணையின் திறக்கலா***
***அலரில் பாய்வன,***
***மாண் வினைப் பயன்படா***
***மாந்தர் வாயில் சேர்***
***பாணரின் தளர்ந்தன-***
***பாடல்-தும்பியே.***

***நாள் மதிக்கு அல்லது -*** *ஒவ்வொரு நாளும் உதிக்கும் நிலாவுக்கு அன்றி;* ***நடுவண் எய்திய ஆணையின் -*** *இடையில் வந்து சேரும் (பகலவனின்) கட்டளைக்கு;* ***திறக்கலா -*** *மலராத;* ***அலரில் பாய்வன -*** *குவளை போன்ற மலர்களில் பாய்வனவான;* ***பாடல் தும்பி -*** *இசை பாடும் வண்டுகள் (அவை குவிந்துள்ள நிலையில்);* ***மாண்வினைப் பயன்படா -*** *மாட்சி மிக்க கலைத் தொழிலைப் பயன் கொள்ளாத;* ***மாந்தர் வாயில் சேர்-***

*மனிதர்களின் வீட்டு வாசலை அடைந்து;* ***பாணரின் தளர்ந்தன -*** *(பயன்பெறாத) பாணர்களைப் போல் சோர்வுற்றன;* ***ஏ -*** *ஈற்றசை.*

*பகற் பொழுதில் குவிந்த மலர்களில் பாய்ந்த வண்டுகள் கலைநயமுணராதார் முன் சென்ற பாணர் போன்று சோர்வுற்றன.*

***3194. அரு மணிச் சாளரம்***
***அதனினூடு புக்கு***
***எரி கதிர் இன் துயில்***
***எழுப்ப எய்தவும்,***
***மருளொடு தெருளுறும்***
***நிலையர், மங்கையர்-***
***தெருளுற மெய்ப்***
***பொருள் தெரிந்திலாரினே.***

***அரு மணிச் சாளரம் -*** *அரிய மாணிக்கங்கள் பதித்த சன்னலில்;* ***அதனின் ஊடு புக்கு -*** *அங்கே உட்புகுந்து வந்து;* ***எரிகதிர் -*** *வெப்பம் மிக்க சூரியன்;* ***இன்துயில் எழுப்ப எய்தவும் -*** *தங்கள் இனிய உறக்கத்திலிருந்து தட்டியெழுப்ப வந்து சேர்ந்த பின்னும்;* ***மங்கையர் -*** *அரக்கர் குலப் பெண்கள்;* ***தெருள் உற மெய்ப் பொருள் தெரிந்திலாரின் -*** *தெளிவு தரும்படி உயர்ந்த உண்மைப் பொருளை அறியாத பேதையர் போன்று;* ***மருளொடு -*** *மயக்கமும்;* ***தெருளுறும் நிலையர் -*** *தெளிவும் கலந்த குழப்ப நிலையினராக விளங்கினர்;* ***ஏ -*** *ஈற்றசை.*

*இரவு சென்றதை நம்பமுடியாத நிலையால் ஏற்பட்ட குழப்பம், ஞானமில்லாதார் உலக வாழ்வின் உண்மையறியாத குழப்பத்தோடு ஒப்பிடப்படுகின்றது.*

***3195. ஏவலின் வன்மையை***
***எண்ணல் தேற்றலர்,***
***நாவலர் இயற்றிய நாழி***
***நாம நூல்***
***காவலின் நுனித்து உணர்***
***கணிக மாக்களும்,***
***கூவுறு கோழியும்,***
***துயில்வு கொண்டவே.***

***நாவலர் இயற்றிய -*** *புலமை நலம் சான்றோர் உருவாக்கிய;* ***நாழி நாம நூல் -*** *காலக் கணிதமான சோதிட நூல்களை;* ***காவலின் நுனித்து உணர் கணித மாக்களும் -*** *பாதுகாத்து ஆராய்ந்து உணர்ந்த சோதிட வல்லுநர்களும்;* ***கூவுறு கோழியும் -*** *விடியலைக் கூவி உணர்த்தும் சேவல்களும்;* ***ஏவலின் வன்மையை -*** *(இரவை விலக்கிப் பகலை வரச் சொன்ன) இராவணனின் ஆணையின் வல்லமையை;* ***எண்ணல் தேற்றலர்***

*- உணரும் ஆற்றல் இல்லாதவராய்;* ***துயில்வு கொண்ட*** *-உறக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். (* ***ஏ*** *- அசை).*

*இராவணன் ஆணையின் கடுமையால் காலக் கணிதமும் தோற்றது. இயற்கையை உணர்ந்த சேவல்களும் தோற்றன.*

*எழுவாய்க்கு ஏற்றபடி அஃறிணை முடிவு உயர்திணையாகப் பொருள் முடிவு பெற்றது.*

***3196. இனையன உலகினில்***
***நிகழும் எல்லையில்,***
***கனை கழல் அரக்கனும்,***
***கண்ணின் நோக்கினான்;***
***'நினைவுறு மனத்தையும்***
***நெருப்பின் தீய்க்குமால்;***
***அனைய அத் திங்களே***
***ஆகுமால்' என்றான்.***

***இனையன*** *- இத்தகைய நிகழ்ச்சிகள்;* ***உலகினில் நிகழும் எல்லையில்*** *- உலகெங்கும் நடைபெற்ற பொழுதில்;* ***கனை கழல் அரக்கனும்*** *- ஒலிக்கும் வீரக்கழல் புனைந்த இராவணனும்;* ***கண்ணின் நோக்கினான்*** *- கண்களால் சூரியனைக் கண்டு;* ***நினைவுறு மனத்தையும்*** *- எண்ணும் இதயத்தையும்;* ***நெருப்பின் தீய்க்குமால்*** *- இச் சூரியன் தீயாய்ச் சுட்டெரிக்கின்றான்; ஆதலால்;* ***அனைய அத்திங்களே ஆகும்*** *-இவனும் அச் சந்திரன் போன்றே இருக்கிறான்';* ***என்றான்*** *- என்று மொழிந்தான். (* ***ஆல்*** *- அசை).*

***3197. 'திங்களோ அன்று இது;***
***செல்வ! செங் கதிர்***
***பொங்கு உளைப் பச்சை அம்***
***புரவித் தேரதால்;***
***வெங் கதிர் சுடுவதே***
***அன்றி, மெய் உறத்***
***தங்கு தண் கதிர் சுடத்***
***தகாது, என்றார் சிலர்.***

***சிலர்*** *- (இராவணன் இவ்வாறு கூறக்கேட்ட) சில பேர்;* ***'செல்வ*** *-திரு மிக்கவனே;* ***இது திங்களோ அன்று*** *- இது சந்திரன் அல்ல;* ***செங்கதிர்*** *- சிவந்த கதிரவனே;* ***பொங்கு உளை*** *- வளர்ந்த பிடரி மயிரை உடைய;* ***பச்சை அம் புரவித் தேர் அது*** *- பச்சை நிறமான அழகியகுதிரைகள் பூட்டிய தேர் அது;* ***வெங்கதிர் சுடுவதே அன்றி*** *-வெப்பம் மிக்க சூரியன் சுடுதல் இயல்புடையதே அல்லாமல்;* ***மெய் உறத் தங்கு தண்கதிர்*** *- உடலில் பட்டுக் குளிர்ச்சி தரும் சந்திரன்;* ***சுடத் தகாது*** *- வெப்பம் ஊட்டுவது அன்று';* ***என்றார்*** *- என விளக்கம் கூறினர்;* ***ஆல்*** *- அசை.*

*சூரியன் குதிரைகள் பசுமை நிறம் கொண்டனவாகக் கூறுதல் புராண மரபு.*

*கலிநிலைத் துறை*

*இரவியை நீக்கி இளம் பிறை வருக எனல்*

***3198. 'நீலச் சிகரக் கிரி அன்னவன்,***
***'நின்ற வெய்யோன்,***
***ஆலத்தினும் வெய்யன்;***
***அகற்றி, அரற்றுகின்ற***
***வேலைக் குரலைத் "தவிர்க" என்று***
***விலக்கி, மேலை***
***மாலைப் பிறைப் பிள்ளையைக்***
***கூவுதிர் வல்லை' என்றான்.***

***நீலச் சிகரக் கிரி அன்னவன் -*** *சிகரங்கள் ஓங்கிய நீல மலை போன்ற இராவணன்;* ***'நின்ற வெய்யோன் -*** *இப்போது நிற்கும் கதிரவன்;* ***ஆலத்தினும் வெய்யன் -*** *நஞ்சினும் கொடியவன்;* ***அகற்றி -****அவனை நீக்கி விட்டு;* ***அரற்றுகின்ற வேலைக் குரலை -*** *பேரொலி எழுப்பும்கடலின் ஓசையையும்;* ***தவிர்க என்று விலக்கி -*** *நீங்குக என்று விலக ஆணையிட்டு;* ***மேலை -*** *முன்பு வந்த;* ***மாலைப் பிறைப் பிள்ளையை -*** *மாலைப் பொழுதின் இளம்பிறையை;* ***வல்லை -*** *விரைவாக;****கூவுதிர் -*** *அழையுங்கள்';* ***என்றான் -*** *எனப்(பணியாளருக்கு) உத்தரவிட்டான். மீண்டும் நிலவைக் கொணர ஆணையிட்டான். இளம்பிறையைப் பிறைப் பிள்ளை என்று படிமச் சிறப்புறக் குறித்த நயம் உணர்க.*

***3199. சொன்னான் நிருதர்க்கு இறை;***
***அம் மொழி சொல்லலோடும்;***
***அந் நாளில் நிரம்பிய அம் மதி,***
***ஆண்டு ஓர் வேலை***
***முந் நாளின் இளம் பிறை***
***ஆகி முளைத்ததுஎன்றால்,***
***எந் நாளும் அருந் தவம் அன்றி,***
***இயற்றல் ஆமோ?***

***நிருதர்க்கு இறை -*** *அரக்கரின் தலைவனாகிய இராவணன்;* ***சொன்னான் -*** *மேற் கூறியவாறு கட்டளையிட்டான்;* ***அம்மொழி சொல்லலோடும் -*** *அக் கட்டளை பிறப்பிக்கப்பட்டதும்;****அந்நாளில் நிரம்பிய அம்மதி -*** *அன்று முழுநிலவாய்த் திகழ்ந்த அச் சந்திரன்;* ***ஆண்டு -*** *அவ்விடத்தில்;* ***ஓர் வேலை -*** *ஒரு புறத்தில்;* ***முந்நாளின் -*** *மூன்றாம் நாளின்;* ***இளம்பிறை ஆகி -*** *கீற்று நிலவாக;* ***முளைத்ததுஎன்றால் -*** *உதித்தது எனில்;* ***எந்நாளும் -*** *எக்காலத்திலும்;****அருந்தவம் அன்றி -*** *அரிய நற்றவம் செய்திருந்தால் அல்லாமல்;* ***இயற்றல் ஆமோ?-*** *இத்தகு அருஞ்செயல் நிகழ்த்துவது சாத்தியம் ஆகுமா? (ஆகாது).*

*முந்நாள் இளம்பிறை - மூன்றாம் பிறைச்சந்திரன். 'வேண்டிய வேண்டி யாங்கு எய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப் படும்' (திருக்குறள் 265) என்னும் கருத்து ஒப்பிடத்தக்கது.*

*பிறையைப் பழித்தல்*

***3200. குடபாலின் முளைத்தது கண்ட***
***குணங்கள்-தீயோன்,***
***'வடவா அனல்; அன்று எனின்,***
***மண் பிடர் வைத்த பாம்பின்***
***விடவாள் எயிறு; அன்று எனின்,***
***என்னை வெகுண்டு, மாலை***
***அட, வாள் உருவிக்கொடு***
***தோன்றியது ஆகும் அன்றே.***

***குடபாலின் முளைத்தது கண்ட -** மேற்குத் திசையில் இளம்பிறை தோன்றியதைக் கண்ட; **குணங்கள் தீயோன் -** தீய பண்புகளை உடைய இராவணன்; (இது); **வடவா அனல் -** வடவைத் தீயே ஆகும்;**அன்று எனின் -** இல்லையெனில்; **மண்பிடர் வைத்த பாம்பின் -** பூமியைத்தலையில்ஏந்திய ஆதிசேடனின்; **விடவாள் எயிறு -** நஞ்சு தோய்ந்த கூரிய பல் ஆகும்; **அன்று எனின் -** இல்லையெனில்; **மாலை -** மாலைப் பொழுது; **என்னை வெகுண்டு -** என் மீது சினம் கொண்டு; **அட -**கொல்லுதற்காக; **வாள் உருவிக் கொடு -** வாளை உருவிக் கொண்டு; **தோன்றியது ஆகும்-** எதிரில் காட்சி தருவது ஆகும்; **அன்றோ -** அல்லவோ (என்றான்).*

*வடவைத் தீ கடலின் நடுவில் பெண் குதிரை முகத்தில் தோன்றுவது; பிரளய கால நெருப்பு என்றும் கூறுவர்.*

***3201. 'தாது உண் சடிலத் தலை வைத்தது-***
***தண் தரங்கம்***
***மோதும் கடலிற்கிடை***
***முந்து பிறந்தபோதே,***
***ஓதும் கடுவைத் தன் மிடற்றில்***
***ஒளித்த தக்கோன்,***
***"ஈதும் கடு ஆம்", என எண்ணிய***
***எண்ணம் அன்றே?***

***தண் தரங்கம் -** குளிர்ந்த அலைகள்; **மோதும் கடலிற்கிடை -** வீசும் திருப்பாற் கடலிடையே இருந்து; **முந்து பிறந்த போதே -**முன்பு உதித்த காலத்தில்; **ஓதும் கடுவை -** கொடிதாய் உரைக்கப்படும் ஆலகால நஞ்சை; **தன் மிடற்றில் ஒளித்த தக்கோன் -** தன் கழுத்தில் மறைத்த சிவபெருமான்; **தாது உண் சடிலம் -** (கொன்றைப் பூவின்) மகரந்தம் மலிந்த சடை முடி சூழ்ந்த; **தலை வைத்தது -** தலைமீது பிறையை வைத்துக்*

*கொண்டது;* ***ஈதும் கடு ஆம் என -*** *இதுவும் விடம் ஆகும்என்று;* ***எண்ணிய எண்ணம் அன்றே -*** *கருதிய கருத்தினால் அல்லவா?*

*இப்பாடலின் கருத்து தற்குறிப்பேற்ற அணி.*

***3202. 'உரும் ஒத்த வலத்து உயிர்***
***நுங்கிய திங்கள், ஒடித்***
***திருமு இச் சிறு மின் பிறை,***
***தீமை குறைந்தது இல்லை-***
***கருமைக் கறை நெஞ்சினில்***
***நஞ்சு கலந்த பாம்பின்***
***பெருமை சிறுமைக்கு ஒரு பெற்றி***
***குறைந்தது உண்டோ?'***

***உரும் ஒத்த வலத்து -*** *இடியேறு போல் வலிமையோடு;* ***உயிர் நுங்கிய திங்கள் -*** *என் உயிரை உண்ட முழு நிலவு;* ***ஒடித் திருமு -*** *சென்றுமறைந்து மீண்டும் வந்த;* ***இச் சிறு மின் பிறை -*** *இந்தச் சிறிய ஒளி வீசும் பிறை;* ***தீமை குறைந்தது இல்லை -*** *கொடுமையில் சிறிதும் குறைந்தது அன்று;* ***கருமைக் கறை நெஞ்சினில் -*** *சினக் கொடுமை மிக்க நெஞ்சு படைத்த;* ***நஞ்சு கலந்த பாம்பின் -*** *நச்சுத் தன்மையுடைய பாம்பினது;* ***பெருமை -*** *பெரிய உருவோ?;* ***சிறுமைக்கு -*** *சிறிய உருவம் தானே; (ஆயினும்)* ***ஒரு பெற்றி -*** *விடத் தன்மையில்;* ***குறைந்தது உண்டோ -*** *சற்றும் குறைவுற்றதாகுமோ? (ஆகாது).*

*பாம்பு சிறியதாயினும் பெரியதாயினும் நஞ்சுடைமை மாறுபடுவதில்லை. முழு நிலவும் பிறைக் கீற்றும் கொடுமையில் அவ்வாறே அமைவன.எடுத்துக் காட்டுவமை அணி.*

***3203. 'கன்னக் கனியும் இருள்தன்னையும்***
***காண்டும் அன்றே?***
***முன்னைக் கதிர் நன்று; இது***
***அகற்றுதிர்; மொய்ம்பு சான்ற***
***என்னைச் சுடும்என்னின், இவ்***
***ஏழ் உலகத்தும் வாழ்வோர்***
***பின்னைச் சிலர் உய்வர் என்று அங்கு***
***ஒரு பேச்சும் உண்டோ?***

***முன்னைக் கதிர் நன்று -*** *முன்பு வந்த கதிரவனே (இப்பிறையினும்) நன்றாகும்;* ***இது அகற்றுதிர் -*** *இப் பிறை நிலவை நீக்குமின்;* ***மொய்ம்பு சான்ற -*** *வலிமைமிக்க;* ***என்னைச் சுடும் என்னின் -*** *என்னையே இப் பிறை துன்புறுத்தும் எனில்;* ***இவ் ஏழ் உலகத்தும் வாழ்வோர் -*** *ஏழு உலகங்களிலும் வாழும் மக்களில்;* ***பின்னைச் சிலர் -*** *வேறு எவரேனும் சிலர்;* ***உய்வர் என்று -*** *பிழைப்பர் என்று;* ***அங்கு ஒரு பேச்சும் உண்டோ -*** *அப்படிப் பேசவும் வாய்ப்பு உண்டோ? (இல்லை) எனவே;* ***கன்னக் கனியும் -***

*கன்னங்கரேலெனச் செறியும்;* ***இருள் தன்னையும் காண்டும் அன்றே -*** *இருட்டின் இயல்பையும் காண்பது பொருத்தம்அல்லவா? (என்றான்)*

*இருளை வருமாறு கட்டளையிட்டான் என்பது கருத்து. பென்னம் பெரிய என்றாற்போல 'கன்னக் கனிய' என்றார்.*

*இருளினைப் பழித்தல்*

***3204. ஆண்டு, அப் பிறை நீங்கலும்,***
***எய்தியது அந்தகாரம்;***
***தீண்டற்கு எளிது ஆய், பல***
***தேய்ப்பன தேய்க்கல் ஆகி,***
***வேண்டின், கரபத்திரத்து***
***ஈர்த்து விழுத்தல் ஆகி,***
***காண்டற்கு இனிதாய், பல***
***கந்து திரட்டல் ஆகி,***

***ஆண்டு -*** *ஆங்கு;* ***அப்பிறை நீங்கலும் -*** *அவ்விளம் பிறை அகன்றதும்;* ***தீண்டற்கு எளிதாய் -*** *தொடுதற்கு எளிதானது போலவும்;* ***பல தேய்ப்பன தேய்க் கல் ஆகி -*** *பல பொருள்களையும் தேய்க்கத் தக்க பாறை போலவும்;* ***வேண்டின் -*** *விரும்பினால்;* ***கரபத் திரத்து ஈர்த்துவிழுத்தல் ஆகி -*** *வாளினால் அறுத்து வீழ்த்தலாம் தன்மை போலவும்;* ***காண்டற்கு இனிதாய் -*** *பார்க்க இனியது போலவும்;* ***பல கந்து திரட்டல் ஆகி -*** *பல தூண்களாகத் திரண்டது போலவும்;* ***எய்தியது அந்தகாரம் -*** *இருட்டு வந்து சேர்ந்தது.*

*இருளின் அடர்த்தியும் திண்மையும் உணர்த்தப் பெற்றன.*

***3205. முருடு ஈர்ந்து உருட்டற்கு எளிது என்பது***
***என்? முற்றும் முற்றிப்***
***பொருள் தீங்கு இல் கேள்விச் சுடர்***
***புக்கு வழங்கல் இன்றிக்***
***குருடு ஈங்கு இது என்ன, குறிக்கொண்டு,***
***கண்ணோட்டம் குன்றி,***
***அருள் தீர்ந்த நெஞ்சின் கரிது***
***என்பது அவ் அந்தகாரம்.***

***முருடு ஈர்ந்து -*** *(அவ்விருள்) திரட்சியான மரமென அறுக்கத் தக்கதாகி;* ***உருட்டற்கு எளிது என்பது என் -*** *கம்பமாய் உருட்சி செய்யத் தக்கதாய் எளிதாக அமைந்தது என்று சொல்லவும் வேண்டுமோ?;* ***பொருள் முற்றும் முற்றி -*** *பொருள் அறிவு முழுமையாய் அடைந்து;* ***தீங்கு இல் கேள்விச் சுடர் -*** *குற்றமற்ற கேள்விச் செல்வமாகிய ஒளி;* ***புக்கு வழங்கல் இன்றி -*** *உட்புகுந்து வெளிச்சம் தராமல்;* ***குருடு ஈங்கு இது என்ன -*** *இவ்வுலகில் மனக் குருடே உண்மையான குருடு எனும்படி;* ***குறிக் கொண்டு-*** *அப்*

*பெயருக்கு இலக்காகி;* **கண்ணோட்டம் குன்றி -** *அருள் நோக்குக் குறைந்து;* **அருள் தீர்ந்த -** *அருள் அருகிப் போன;* **நெஞ்சின் -***மனித உள்ளத்தை விடவும்;* **அவ்வந்தகாரம் -** *அவ்விருளானது;* **கரிது என்பது -** *கருமை என்று கூறத்தக்கதாம்.*

*அறிவொளி சாரா உள்ளத்தை இருளுக்கு உவமித்தார்.*

***3206. விள்ளாது செறிந்து இடை, மேல்***
***உற ஓங்கி, எங்கும்***
***நள்ளா இருள் வந்து, அகன்***
***ஞாலம் விழுங்கலோடும்,***
***'எள்ளா உலகு யாவையும் யாவரும்***
***வீவது என்பது***
***உள்ளாது, உமிழ்ந்தான், விடம் உண்ட***
***ஒருத்தன்' என்றான்.***

**விள்ளாது -** *துண்டு படாமல்;* **இடை செறிந்து -** *எங்கும் இடைவெளியின்றி நிறைந்து;* **மேல் உற ஓங்கி -** *விண்ணையும் வளைத்து வளர்ந்து;* **எங்கும் நள்ளா இருள் வந்து -** *எங்கும் பொருந்தாத இருள் வந்து;* **அகன் ஞாலம் விழுங்கலோடும் -** *பரந்த உலகினை மூடி மறைத்ததும்;* **விடம் உண்ட ஒருத்தன் -** *நஞ்சினை விழுங்கிய ஒப்பற்ற சிவபெருமான்;* **எள்ளா உலகு யாவையும் -** *இகழத் தக்கதல்லாத எல்லா உலகங்களையும்;* **யாவரும் -** *எல்லா மக்களையும் (பொருள்களையும்);* **வீவது என்பது உள்ளாது -** *அழிக்கும் என்று கருதாமல்;***உமிழ்ந்தான் -** *அந்நஞ்சை உமிழ்ந்து விட்டான்;* **என்றான் -** *என்று (இராவணன்) மொழிந்தான்.*

*இப்பாடல் உருவக அணி.*

***3207. 'வேலைத்தலை வந்து ஒருவன்***
***வலியால் விழுங்கும்***
***ஆலத்தின் அடங்குவது அன்று இது:***
***அறிந்து உணர்ந்தேன்;***
***ஞாலத்தொடு விண் முதல் யாவையும்***
***நாவின் நக்கும்***
***காலக் கனல் கார் விடம் உண்டு***
***கறுத்தது அன்றே.***

**வேலைத்தலை வந்து -** *திருப்பாற் கடலினின்றும் பிறந்து;***ஒருவன் வலியால் விழுங்கும் -** *ஒப்பற்ற சிவபெருமான் தன் ஆற்றலால் உண்ட;* **ஆலத்தின் -** *ஆலகால விடம் எனும் ஒன்றில்;* **இது -** *இவ்விருள்;* **அடங்குவதன்று -** *அடக்கத் தக்கதன்று;* **அறிந்து உணர்ந்தேன் -** *இதனை யான் தெளிந்து கொண்டேன்;* **ஞாலத்தொடு விண்முதல் யாவையும் -** *மண்ணையும் விண்ணையும் யாவற்றையும்;* **நாவின் நக்கும் -** *தன் நாவால் தீண்டி அழிக்கும்;* **காலக் கனல் -** *ஊழிக் காலமாகிய நெருப்புப் பாம்பு;* **கார்விடம்**

***உண்டு*** - *கரிய விடத்தைத் தேக்கி;* ***கறுத்தது அன்றே*** - *கருமை பூண்டதை ஒக்கும் அன்றோ?*

*ஆலகால நஞ்சு சிவனால் விழுங்கப்பட்டுவிட்டது; இந்த இருளை விழுங்கும் சக்தி வேறு எதுவுமே இல்லை. விழுங்கப்பட முடியாத இந்த இருளாகிய நஞ்சு மண் முதல் விண் ஈறாக உள்ள அனைத்தையும் விழுங்கிவிடும். தற்குறிப்பேற்ற அணி. நாவின் நக்கும் என்றமையால் காலக் கனலாகிய பாம்பு என வருவிக்கப்பட்டது.*
*141 பிராட்டியின் உருவெளிப்பாடு காணுதல்*

***3208. 'அம்பும் அனலும் நுழையாக்***
***கன அந்தகாரத்***
***தும்பு, மழைகொண்டு,-அயல் ஒப்பு***
***அரிது ஆய துப்பின்***
***கொம்பர்-குரும்பைக் குலம் கொண்டது,***
***திங்கள் தாங்கி,***
***வெம்பும் தமியேன்முன், விளக்கு என,***
***தோன்றும் அன்றே!***

***வெம்பும் தமியேன்முன்*** - *வேதனைப்பட்டுத் தனியே வெதும்பிக் கொண்டுள்ள என் முன்னே;* ***அயல் ஒப்பு அரிது ஆய துப்பின் கொம்பர்*** - *பிறிதொன்றை ஒப்புமையாகக் கொள்ள முடியாத ஒரு பவளக் கொம்பானது;* ***அம்பும் அனலும் நுழையா*** - *அம்பும் நெருப்பும் ஊடுருவ முடியாததாகிய;* ***கன அந்தகாரத் தும்பு மழை கொண்டு*** - *செறிந்த இருளை வரம்பாகக் கொண்ட மேகத்தைச் சுமந்து;* ***குரும்பைக் குலம் கொண்டது*** - *குரும்பைத் திரளைக் கொண்டதாகி;* ***திங்கள் தாங்கி*** - *சந்திரனைத் தாங்கிக் கொண்டு;* ***விளக்கு என*** - *விளக்கைப் போல;* ***தோன்றும்*** - *தோற்றமளிக்கிறது. (* ***அன்று, ஏ*** - *அசைகள்).*

*ஒரு பவளக் கொடி தமியேன்முன் விளக்கெனத் தோன்றும் எனக் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். பவளக்கொடி ஒன்று விளக்கைப் போல் தோன்றுகின்றதாக உணர்கிறான். கரிய நிறத்துக்கு இருளையே வரம்பாகக் கொண்ட மேகம்; மேகம் சுமந்த பவளக் கொம்பு;- கருங் கூந்தல் இவ்வாறு விளக்கப்படுகிறது. பவளக் கொடி ஒன்று கார்மேகத்தைச் சுமந்து, குரும்பைகள் ஏந்தி, திங்களைச் சுமந்து விளக்குப் போல் தோன்றுகிறது. கூந்தல், மார்பகம், முகம் ஆகியவற்றை மேகம், குரும்பை, திங்கள் ஆகியனவாகவும் கொடி போல் மென்மையாய் ஒளிரும் உருவத்தைப் பவளக் கொடியாகவும் கம்பர் சித்திரிக்கிறார்.*

*கயல் எழுதி வில்எழுதிக் காமன் செயல் எழுதித் தீர்ந்த முகம் திங்களோ காணீர்*

*(சிலம்பு - கானல்வரி 11) என்ற இளங்கோவடிகளின் கற்பனை இங்கே கருதத்தக்கது. இல் பொருளுவமைத் தன்மை கொண்ட உருவகம்; உயர்வு நவிற்சியும் கொண்டது. எதனையும் ஊடுருவும் கூர்மை கொண்ட அம்பும், எதனையும் ஊடுருவி எரிக்க வல்ல நெருப்பும் தோல்வி காணும் மேகம் என்றது கூந்தலின் செறிவையும் இருள்*

*நிறத்தையும் சுட்டியதாகும். தும்பு - வரம்பு. மழை - மேகம்.*

***3209. 'மருளூடு வந்த மயக்கோ? மதி***
***மற்றும் உண்டோ?***
***தெருளேம்; இது என்னோ? திணி மை***
***இழைத்தாலும் ஒவ்வா***
***இருளூடு, இரு குண்டலம் கொண்டும்***
***இருண்ட நீலச்***
***சுருளோடும் வந்து, ஓர் சுடர் மா***
***மதி தோன்றும் அன்றே!***

*(மேலும் இராவணன் சிந்திக்கின்றான்)* ***மருள் ஊடு வந்த மயக்கோ-*** *காமக் கலக்கத்தால் எனக்கு வந்த மயக்கமோ இது?;* ***மதி மற்றும் உண்டோ -*** *என் அறிவு வேறாய்த் திரிவுற்றதோ?;* ***தெருளேம், இது என்னோ -*** *தெளிவற்றேன் இவ்வுருவம்தான் யாதோ?;* ***திணி மை இழைத்தாலும் ஒவ்வா இருளூடு -*** *செறிந்த அஞ்சன மை குழைத்தாலும் இணையாகாத இவ்விருட்டின் நடுவே;* ***ஓர் சுடர் மாமதி -*** *ஒரு காந்தி மிக்க அழகிய சந்திரன்;* ***இரு குண்டலம் கொண்டும் -*** *இரண்டு குண்டலங்களாகிற காதணியோடும்;* ***இருண்ட நீலச் சுருளோடும் -*** *கருமை கொண்ட கூந்தலோடும்;* ***வந்து தோன்றும் -*** *என் முன் வந்து புலனாகின்றது. (* ***அன்றே -*** *அசை).*

*இராவணன் முன் தோன்றிய உருவெளித் தோற்றம் அவனைத் தடுமாற வைத்தது. 'ஒரு சுடர் மாமதி இருளூடு குண்டலம் கொண்டும் சுருளொடும் வந்து தோன்றும்' எனக் கூட்டிப் பொருள் காண்க. இதுவும் மேலைச்செய்யுள் போன்ற உவமை சார்ந்த உருவகமாகிய உயர்வு நவிற்சியே.*

***3210. 'புடை கொண்டு எழு கொங்கையும்,***
***அல்குலும், புல்கி நிற்கும்***
***இடை, கண்டிலம்; அல்லது எல்லா***
***உருவும் தெரிந்தாம்;***
***விடம் நுங்கிய கண் உடையார் இவர்;***
***மெல்ல மெல்ல,***
***மட மங்கையர் ஆய், என்***
***மனத்தவர் ஆயினாரே.***

***புடை கொண்டு எழு கொங்கையும் -*** *பக்கங்களில் பொங்கி எழுகின்ற மார்பகங்களையும்;* ***அல்குலும் -*** *அல்குலையும்,* ***புல்கி நிற்கும் இடை கண்டிலம் -*** *இணைக்கின்ற இடை என் கண்களுக்குப் புலனாகவில்லை;* ***அல்லது எல்லா உருவும் தெரிந்தாம் -*** *அது தவிரப் பிற உறுப்பெல்லாம் தெரிகின்றது;* ***விடம் நுங்கிய கண்ணுடையார் -*** *நஞ்சை அருந்திய கண்கள் இவருக்கு அமைந்தன;* ***மெல்ல மெல்ல -*** *மெதுவாக;* ***மடமங்கையர் ஆய் -*** *அழகிய இளம் பெண்ணாய்;* ***இவர் என் மனத்தவர் ஆயினார் -*** *இவர் என் நெஞ்சுக்குள் இடம் பெற்றுக் கொண்டார். (* ***ஏ -*** *அசை)*

*உருவெளித் தோற்றமாகையினால் சிறிது சிறிதாக உறுப்புக்கள் புலனாகி ஒரு வடிவுற்றதாய்க் காட்டுகின்றார்.*

***3211. 'பண்டு ஏய் உலகு ஏழினும்***
***உள்ள படைக்கணாரைக்***
***கண்டேன்; இவர் போல்வது***
***ஓர் பெண் உருக் கண்டிலேனால்;***
***உண்டே எனின், வேறு இனி,***
***எங்கை உணர்த்தி நின்ற***
***வண்டு ஏறு கோதை மடவாள்***
***இவள் ஆகும் அன்றே.***

***பண்டு ஏய் உலகு ஏழினும் -*** *முன்னமே ஏழு உலகங்களிலும்;* ***உள்ள படைக்கணாரைக் கண்டேன் -*** *இருக்கும் மகளிரைப் பார்த்துள்ளேன்;* ***இவர் போல்வதோர் பெண் உருக் கண்டிலேன் -*** *அவர்களிடையே இவ் வடிவம் போல் ஓர் பெண் உருவை நான் கண்டதில்லை;* ***இனி வேறு உண்டே எனின் -*** *உலகிலுள்ள பெண்களிலிருந்து மாறுபட்டதே இவ்வுரு என்றால்;* ***எங்கை உணர்த்தி நின்ற -*** *என் தங்கை சூர்ப்பணகை குறித்துச் சொன்ன;* ***வண்டு ஏறுகோதை மடவாள் -*** *வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய இளநங்கை;* ***இவள் ஆகும் -*** *இவளே ஆவாள். (* ***அன்றே -*** *தேற்றம்;* ***ஆல் -****அசை)*

*படைக் கண்ணார் - அம்பு, வாள் போன்ற கண்களை உடைய பெண்கள். இதுவரை காணாத அழகு என்பதால் சூர்ப்பணகை குறிப்பிட்டது அவளேயாகும் இவள் எனக் கருதினான்.*

***3212. 'பூண்டு இப் பிணியால் உறுகின்றது,***
***தான் பொறாதாள்,***
***தேண்டிக் கொடு வந்தனள்; செய்வது***
***ஓர் மாறும் உண்டோ?***
***காண்டற்கு இனியாள் உருக்***
***கண்டவட் கேட்கும் ஆற்றால்,***
***ஈண்டு, இப்பொழுதே, விரைந்து,***
***எங்கையைக் கூவுக' என்றான்.***

*(இவ்வாறு கருதிய இராவணன் மேலும் எண்ணலானான்)****'பூண்டு இப்பிணியால் -*** *காதல் நோய் பொருந்தி அந்த நோயால்;****உறுகின்றது தான் பொறாதாள் -*** *(யான்) வருந்துவதை அறிந்து பொறாதவளாய்;****தேண்டிக் கொடு வந்தனள் -*** *(சீதை) என்னைத் தேற்றும் பொருட்டுத் தேடிக் கொண்டு வந்து விட்டாள்;* ***செய்வது ஓர் மாறும் உண்டோ? -*** *யான் இவளுக்குச் செய்யத்தக்க கைம்மாறு ஏதும் உண்டா? (இல்லை);* ***காண்டற்கு இனியாள் -*** *கண்டு களிக்க இனியவளான சீதையினது;* ***உருக் கண்டவள் -*** *வடிவத்தை நேரிற்கண்ட சூர்ப்பணகையை;* ***கேட்கும் ஆற்றால் -*** *வினவி உண்மை அறியும் பொருட்டு;* ***ஈண்டு இப்பொழுதே -*** *இதோ இந்தக் கணமே;* ***விரைந்து -***

*விரைவாக;* ***எங்கையைக் கூவுக' என்றான் -*** *என் தங்கையை அழையுங்கள் என்று ஆணையிட்டான்.*

*உருவெளித் தோற்றத்தைச் சீதையென மயங்கியவன் உண்மை அறியத் தங்கையை அழைத்தான்.*

***3213. என்றான் எனலும், கடிது***
***ஏகினர் கூவும் எல்லை,***
***வன் தாள் நிருதக் குலம்***
***வேர்அற மாய்த்தல் செய்வாள்,***
***ஒன்றாத காமக் கனல்***
***உள் தெறலோடும், நாசி,***
***பொன் தாழ் குழைதன்னொடும்***
***போக்கினள் போய்ப் புகுந்தாள்.***

***என்றான் எனலும் -*** *இவ்வாறு இராவணன் கட்டளையிட்டான் என்றதும்; (பணியாளர்);* ***கடிது ஏகினர் கூவும் எல்லை -*** *விரைந்து சென்று (சூர்ப்பணகையை) அழைத்த பொழுதில்;* ***வன்தாள் நிருதக் குலம் -****வலிய முயற்சியை உடைய அரக்கர் மரபை;* ***வேர் அற மாய்த்தல் செய்வாள் -*** *ஆணி வேரோடு அழிக்கப் பிறந்த அவள்;* ***நாசி -*** *மூக்கையும்;****பொன்தாழ் குழை தன்னொடும் -*** *பொன்னாலாகிய குழையணிந்த செவியையும்;* ***போக்கினள் -*** *பறி கொடுத்தவள்;* ***ஒன்றாத காமக் கனல் -*** *ஒரு தலையாய்ப் பிறந்த காம நெருப்பு;* ***உள் தெறலோடும் -*** *மனத்தை வருத்தும் நிலையில்;* ***போய்ப் புகுந்தாள் -*** *அங்கு வந்து சேர்ந்தாள்.*

*சேர்ந்தாரை அழிக்கும் நெருப்புப் போன்றது காமமென்பதால் காமக்கனல் என்றார்.*

*இராவணன் சூர்ப்பணகை உரையாடல்*

***3214. பொய்ந் நின்ற நெஞ்சின்***
***கொடியாள் புகுந்தாளை நோக்கி,***
***நெய்ந் நின்ற கூர் வாளவன், 'நேர்***
***உற நோக்கு; நங்காய்!***
***மைந் நின்ற வாள்-கண் மயில் நின்றென***
***வந்து, என் முன்னர்***
***இந் நின்றவள் ஆம்கொல்,***
***இயம்பிய சீதை?' என்றான்.***

***நெய்ந் நின்ற கூர் வளாவன் -*** *நறு நெய் பூசிய கூரிய வாளை உடைய இராவணன்;* ***பொய்ந்நின்ற நெஞ்சின் -*** *பொய் குலவும் மனம் உடைய;* ***கொடியாள் புகுந்தாளை நோக்கி -*** *கொடிய சூர்ப்பணகை அங்குவரவும், அவளைப் பார்த்து;* ***நங்காய் -*** *பெண்ணே!;* ***நேர் உற நோக்கு -*** *நன்றாக உற்றுப்பார்;* ***மைந் நின்ற வாள் கண் -*** *அஞ்சன*

*மை பூசிய ஒளி மிக்க கண்களோடு;* ***மயில் நின்றென வந்து -*** *ஒரு தோகை மயிலென முன் வந்து;* ***என் முன்னர் -*** *எனக்கு எதிரில்;* ***இந்நின்றவள் ஆம் கொல் -*** *இதோ நிற்கும் இவளே போலும்;* ***இயம்பிய சீதை -*** *நீ குறிப்பிட்ட சீதை;* ***என்றான் -*** *என்று வினவினான்.*

*இராவணன் மனத்தைக் காமம் கவ்விய நிலையில் உருவெளித் தோற்றத்தை மெய்யாக நம்பி இங்ஙனம் தங்கையிடம் கேட்டான். அவளும் அதே நிலையினள் என்பதை வரும் பாடல் உணர்த்தும்.*

***3215. 'செந் தாமரைக் கண்ணொடும்,***
***செங் கனி வாயினோடும்,***
***சந்து ஆர் தடந் தோளொடும்,***
***தாழ் தடக் கைகளோடும்,***
***அம் தார் அகலத்தொடும், அஞ்சனக்***
***குன்றம் என்ன***
***வந்தான் இவன் ஆகும், அவ் வல்***
***வில் இராமன்' என்றாள்.***

***செந்தாமரைக் கண்ணொடும் -*** *சிவந்த தாமரை மலர் போன்ற கண்களோடும்;* ***செங்கனி வாயினோடும் -*** *கோவைக் கனி போன்ற இதழ்களோடும்;* ***சந்து ஆர் தடந் தோளொடும் -*** *சந்தனம் பொருந்திய உயர்ந்த தோள்களோடும்;* ***தாழ் தடக்கைகளோடும் -*** *நீண்ட பெரியகரங்களோடும்;* ***அம் தார் அகலத்தொடும் -*** *அழகிய மாலை புனைந்த மார்பினோடும்;* ***அஞ்சனக் குன்றம் என்ன வந்தான் -*** *நீல மலை போல வந்து தோன்றும்;* ***இவன் -*** *இவ்வுரு உடையவனே;* ***அவ் வல் வில் இராமன் ஆகும் -*** *அவ்வீர வில்லேந்திய இராமன் ஆவான்;* ***என்றாள் -*** *என்று சூர்ப்பணகை மொழிந்தாள்.*

*உருவெளித் தோற்றத்தை நேர் மாறாகக் காம வசப்பட்ட சூர்ப்பணகை இராமன் என்றாள்.*

*இந்த வேடிக்கையான உள்ளத்தின் விளையாட்டைக் கம்பர் மனவெளி நாடகமாக்கி மகிழ்விக்கின்றார். கம்ப நாடகம் என அறிஞர் இத்தகு காட்சிகளை வியப்பர். வேதம் முதலிய நூலுணர்வும் தவமேம்பாடும் வரங்கொண்ட மேன்மையும், வெற்றிக் கொற்றமும் மற்றும் பல சிறப்புக்களையும் கொண்ட இராவணன் காமத்தால் சிறுமையுற்று எள்ளப்படும் நிலை அடைகிறான்.*

***3216. 'பெண்பால் உரு, நான், இது***
***கண்டது; பேதை! நீ ஈண்டு,***
***எண்பாலும் இலாதது ஓர் ஆண்***
***உரு என்றி; என்னே!***
***கண்பால் உறும் மாயை***
***கவற்றுதல் கற்ற நம்மை,***

***மண்பாலெவரேகொல், விளைப்பவர்***
***மாயை?' என்றான்.***

***நான் கண்டது இது** - நான் பார்த்த இவ்வடிவம்; **பெண்பால் உரு** - பெண் வடிவமாகும்; **பேதை** - அறியாமை உடையவளே!; **நீ ஈண்டு** -நீயோ இங்கு; **எண்பாலும் இலாதது ஓர்** - எண்ணத்தில் எங்கும் கருதப்படாத ஒரு; **ஆண் உரு என்றி** - ஆண் வடிவம் என்று கூறுகின்றாய்; **என்னே** - இது வியப்பாய் இருந்தது; **கண்பால் உறும்மாயை** - கண்கள் நம்பும்படியான மாயச் செய்கை; **கவற்றுதல் கற்றநம்மை** - மயங்கும்படி செய்யவல்ல வித்தையாய்ப் பயின்ற நமக்கு; **மண்பால்** - இவ்வுலகில்; **மாயை விளைப்பவர் எவரே கொல்** -மாயை செய்தவர் யாராக இருக்கலாம்; **என்றான்** - என ஐயுற்று (இராவணன்) மொழிந்தான்.*

*மாயையில் வல்ல நம்மையும் ஏமாற்றும் மாயை உண்டோ என்றான். ஒருவர் பெண் என்ன, இன்னொருவர் ஆண் என்ன விளைந்த மயக்கத்தை இவ்வாறு குறித்தான்.*

***3217. 'ஊன்றும் உணர்வு அப்புறம்***
***ஒன்றினும் ஓடல் இன்றி,***
***ஆன்றும் உளது ஆம் நெடிது***
***ஆசை கனற்ற நின்றாய்க்கு***
***ஏன்று, உன் எதிரே, விழி***
***நோக்கும் இடங்கள்தோறும்,***
***தோன்றும், அனையாள்; இது தொல்***
***நெறித்து ஆகும்' என்றாள்.***

***'ஊன்றும் உணர்வு** - (சீதையின் பால்) பதிந்து போன அறிவு; **அப்புறம் ஒன்றினும் ஓடல் இன்றி** - வேறு எதனினும் சென்று தங்காமல்; **ஆன்றும் உளது ஆம் நெடிது ஆசை** - மிக வளர்ந்துவிட்ட பெரியகாமம்; **கனற்ற நின்றாய்க்கு** - வெப்ப மூட்ட விளங்கும் உனக்கு;**ஏன்று** - பொருந்தும்படி; **உன் எதிரே விழி நோக்கும் இடங்கள் தோறும்** -உன் முன் கண்கள் பார்க்கும் இடமெல்லாம்; **அனையாள் தோன்றும்** -அவள் உருவே தோன்றலாயிற்று; **இது தொல் நெறித்து ஆகும்** - இவ்வாறுதோன்றுதல் பண்டு முதல் வழக்கமானது தான்; **என்றாள்** - என்று சூர்ப்பணகை (சமாதானம்) கூறினாள்.*

*தொல்நெறித்து ஆகும் என்று இராவணனுக்குச் சொன்ன சிறுமை தனக்கும் உரியது என்பதைச் சூர்ப்பணகை உணராதது குறிக்கத்தக்கது. 151*

***3218. அன்னாள் அது கூற,***
***அரக்கனும், 'அன்னது ஆக;***
***நின்னால் அவ் இராமனைக் காண்குறும்***
***நீர் என்?' என்றான்;***
***'எந்நாள், அவன் என்னை இத் தீர்வு***
***அரும் இன்னல் செய்தான்,***

*அந் நாள்முதல், யானும்*
*அயர்த்திலென் ஆகும்' என்றாள்.*

***அன்னாள் அது கூற -*** *சூர்ப்பணகை இவ்வாறு கூறவும்;* ***அரக்கனும்-*** *இராவணனும்;* ***அன்னது அக -*** *நீ கூறியதே உண்மை ஆகுக; (எனில்)* ***நின்னால் அவ் இராமனை -*** *உன் கண்களில் அவ்விராமனை;****காண்குறும் நீர் என்? -*** *காணுகின்ற தன்மை நேர்ந்தது எவ்வாறு?';* ***என்றான் -****என்று கேட்டான் (அதற்கு அவள்);* ***எந்நாள் அவன் என்னை -*** *எப்பொழுது அவ்விராமன் எனக்கு;* ***இத்தீர்வு அரும் இன்னல் செய்தான் -****இவ்வாறு விலக்கலாகாத் தீமை செய்தானோ;* ***அந்நாள் முதல் -*** *அப்பொழுதுமுதலாக;* ***யானும் அயர்த்திலென் ஆகும் -*** *நானும் அவனை மறக்கவில்லை';* ***என்றாள் -*** *என்று பதிலிறுத்தாள்.*

*சீதையைத் தான் கண்டது ஆசையின் உரு வெளிப்பாடு என்றால் சூர்ப்பணகை கண்ணில் இராமன் தோன்றியது ஏன் என்ற ஐயம் இராவணனுக்கு எழுந்தது. சூர்ப்பணகை தன் காமத்தை ஒளித்து, அவனை நினைத்தற்குக் காரணம் அவன் செய்த கொடுமை எனத் தந்திரமாய் மொழிந்தாள்.*

*3219.* ***'ஆம் ஆம்; அது அடுக்கும்; என்***
***ஆக்கையொடு ஆவி நைய***
***வேமால்; வினையேற்கு இனி என்***
***விடிவு ஆகும்?' என்ன,***
***'கோமான்! உலகுக்கு ஒரு நீ,***
***குறைகின்றது என்னே?***
***பூ மாண் குழலாள்தனை வவ்வுதி,***
***போதி' என்றாள்.***

***'ஆம், ஆம் அது அடுக்கும் -*** *உண்மை, உண்மை, நீ கூறியது பொருந்தும்;* ***என் ஆக்கையொடு ஆவி நைய -*** *என் உடலும் உயிரும் கலங்க;* ***வேம் -*** *வெந்து தவிக்கிறேன்;* ***வினையேற்கு இனி என் விடிவு ஆகும் -*** *கொடிய வினை செய்த எனக்கு இனி விடுதலை தான் யாது';* ***என்ன -*** *என்று (இராவணன்) கேட்க;* ***'கோமான் -*** *தலைவனே;****உலகுக்கு ஒரு நீ -*** *இவ்வுலகுக்கே ஒப்பற்ற முதல்வனான நீ;* ***குறைகின்றது என்னே-*** *(இவ்வாறு) மனம் சிதைவது ஏனோ?;* ***பூ மாண் குழலாள்தனை -****பூக்கள் பொலியும் கூந்தலை உடைய சீதையை;* ***வவ்வுதி போதி -*** *சென்று கவர்ந்துவருவாயாக;* ***என்றாள் -*** *என (ஆலோசனை) கூறினாள் (* ***ஆல் -****அசை).*

*சீதையை நினைந்து நோவதைவிட, அவளைக் கைப்பற்றிஅடைவாயாக என்றாள் சூர்ப்பணகை.*

*3220.* ***என்றாள் அகன்றாள்; அவ்***
***அரக்கனும் ஈடழிந்தான்;***
***ஒன்றானும் உணர்ந்திலன்; ஆவி***

***உலைந்து சோர்ந்தான்;***
***நின்றாரும் நடுங்கினர்;***
***நின்றுள நாளினாலே***
***பொன்றாது உளன் ஆயினன்;***
***அத்துணைபோலும் அன்றே.***

***என்றாள் அகன்றாள் -*** *என்றுரைத்த சூர்ப்பணகை அவ்விடம் விட்டு நீங்கினாள்;* ***அவ் அரக்கனும் -*** *அவ் இராவணனும்;* ***ஈடு அழிந்தான் -*** *தன் சமநிலை குலைந்தான்;* ***ஒன்றானும் உணர்ந்திலன் -****எதனாலும் நல்லறிவு பெறாதவனாயினான்;* ***ஆவி உலைந்து சோர்ந்தான் -****உயிர் நிலைகுலைந்து தளர்ந்தான்;* ***நின்றாரும் நடுங்கினர் -*** *பணி செய்ய நின்றாரும் அச்சம் கொண்டனர்;* ***நின்றுள நாளினாலே -*** *மிச்சம் இருக்கிற ஆயுட் காலத்தால்;* ***பொன்றாது உளன் ஆயினன் -*** *சாகாது பிழைத்திருப்பான் ஆனான்;* ***அத்துணை போலும் அன்றே -****அவ்வளவே அவன் நிலை எனல் ஆயிற்று அன்றோ?*

*அவன் உயிர் இழவாதிருந்தது ஆயுள் பலத்தால் மட்டுமே என்றார்.*

*சந்திரகாந்த மண்டபம் அமைத்துத் தங்குதல்*

***3221. 'இறந்தார் பிறந்தார்' என,***
***இன் உயிர் பெற்ற மன்னன்,***
***மறம் தான் உணர்ந்தான், அவண்,***
***மாடு நின்றாரை நோக்கி,***
***' "கறந்தால் என நீர் தரு***
***சந்திரகாந்தத்தாலே,***
***சிறந்து ஆர் மணி மண்டபம்***
***செய்க" எனச் செப்புக' என்றான்.***

***இறந்தார் பிறந்தார் என -*** *மரணமுற்றவன் மீண்டும் பிறந்தான் எனும்படியாய்;* ***இன் உயிர் பெற்ற மன்னன் -*** *தன் இனிய உயிரைப் பெற்ற இராவணன்;* ***மறம் தான் உணர்ந்தான் -*** *தன் வலிமையை உணர்ந்து கொண்டவனாய்;* ***அவண் மாடு நின்றாரை நோக்கி -*** *அங்குப் பக்கத்தில் இருந்தவர்களைப் பார்த்து;* ***"கறந்தால் என -*** *பால் கறந்தால் சுரப்பதுபோன்று;* ***நீர்தரு சந்திர காந்தத்தாலே -*** *நீர் சுரப்பதாகிய சந்திர காந்தம் என்னும் கற்களாலே;* ***சிறந்து ஆர் மணிமண்டபம் -*** *சிறந்து விளங்கும் எழில் மிகு மணி மண்டபம் ஒன்றை;* ***செய்க என -*** *சமைக்க வேண்டும்' என;* ***செப்புக என்றான் -*** *சிற்பக் கலைஞரிடம் கூறுங்கள்" எனப் பணித்தான்.*

*சந்திரகாந்தம் - சந்திர கிரணம் பட்டதும் நீர் சொரியும் ஒரு வகைக்கல் சந்திர காந்தக் கல்லாலாகிய கட்டடம் பற்றி முன்னும் (122) கம்பர் குறித்திருக்கிறார். குளிர்ச்சியை நாடி இவ்வாறு கூறினான். செப்புக என்றது தெய்வச் சிற்பியைக் கருதிக் கூறியது.*

***3222. வந்தான் நெடு வான் உறை தச்சன்;***
***மனத்து உணர்ந்தான்;***
***சிந்தாவினை அன்றியும், கைவினை***
***யாலும் செய்தான்-***
***அம் தாம நெடுங் தறி ஆயிரத்***
***தால் அமைந்த***
***சந்து ஆர் மணி மண்டபம், தாமரை***
***யோனும் நாண.***

***நெடுவான் உறை தச்சன் -*** *உயர்ந்த தேவருலகத் தச்சனான விசுவகர்மா;* ***மனத்து உணர்ந்தான் -*** *இராவணன் கட்டளையைத் தன் மனதில் உணர்ந்து கொண்டவனாய்;* ***வந்தான் -*** *அங்கு வந்து சேர்ந்தான்;* ***அம் தாம நெடுந்தறி ஆயிரத்தால் -*** *அழகிய ஒளி மிக்க ஆயிரம் நெடுந்தூண்களால்;* ***அமைந்த சந்தார் மணிமண்டபம் -****அமைவதான அழகு பொலியும் சந்திர காந்த மணி மண்டபத்தை;****தாமரையோனும் நாண-*** *படைப்புக் கடவுளாகிய பிரமனும் வெட்கப்படும்படியாக;****சிந்தா வினைஅன்றியும் -*** *சிந்தித்து உருவாக்கிய தோடன்றி;****கைவினையாலும் செய்தான் -*** *கைவினைத் திறன் மிளிரவும் செய்து முடித்தான்.*

*சந்து - அழகு நினைவினாலும் திட்டமிட்ட செயலாலும் எழில் கூட்டி மண்டபம் அமைத்தான் விசுவகர்மா. வெற்றி பெறுதற்குத் திட்டமும்வேண்டும்; வினை செயல் வகையும் வேண்டும். இதை இச் செய்யுள்உணர்த்தியது.*

***3223. காந்தம், அமுதின் துளி***
***கால்வன, கால மீனின்***
***வேந்தன் ஒளி அன்றியும்,***
***மேலொடு கீழ் விரித்தான்;***
***பூந் தென்றல் புகுந்து***
***உறை சாளரமும் புனைந்தான்;***
***ஏந்தும் மணிக் கற்பகச்***
***சீதளக் கா இழைத்தான்.***

***கால மீனின் வேந்தன் -*** *விண்மீன்களின் தலைவனாகிய சந்திரன்;* ***ஒளி அன்றியும் அமுதின் துளி கால்வன -*** *ஒளி படராத போதும் அமுத நீரின் துளிகள் சிதறுவனவாகிய;* ***காந்தம் மேலொடு கீழ் விரித்தான் -*** *சந்திர காந்தக் கற்களை மேலிருந்து கீழ் வரை அமைத்தான்;* ***பூந் தென்றல் புகுந்து உறை சாளரமும் புனைந்தான் -*** *பூ மணக்கும் தென்றல் காற்று உள்ளே வரும்படியாகப் பலகணிகளும் உருவாக்கினான்;* ***ஏந்தும் மணிக் கற்பக -*** *விரும்பியவற்றை ஏந்தி அளிக்கும் மாணிக்கம் திகழும் கற்பக மரங்களின்;* ***சீதளக் கா இழைத்தான் -*** *குளிர்ச்சியான சோலையையும் உடன் அமைத்து வைத்தான் (விசுவகர்மா).*

*சந்திர கிரணம் படாத போதும் நீர் சுரக்கும் சந்திர காந்தம் என்ற சிறப்புமிக்க கற்களால் மண்டபம் அமைந்தது என வனப்பினை உயர்த்திக் கூறினார்.*

*3224.* ***ஆணிக்கு அமை பொன் கை, மணிச்***
***சுடர் ஆர் விளக்கம்***
***சேண் உற்ற இருள் சீப்ப, அத்***
***தெய்வ மடந்தைமார்கள்***
***பூணின் பொலிவார் புடை ஏந்திட,***
***பொங்கு தோளான்***
***மாணிக்க மானத்திடை மண்டபம்***
***காண வந்தான்.***

***ஆணிக்கு அமை பொன் கை -*** *ஆணிப் பொன் அணிகலன்கள் அணிந்த கரத்தில்;* ***மணிச் சுடர் ஆர் விளக்கம் -*** *ஒளிச் சுடர் பொருந்திய விளக்குகளை எந்தி;* ***பூணின் பொலிவார் -*** *நகைகளை அழகுற அணிந்தவரான;* ***அத் தெய்வ மடந்தை மார்கள் -*** *அந்தத் தேவமங்கையர்;* ***புடை ஏந்திட -*** *இருபுறமும் எடுத்து வர;* ***சேண் உற்ற இருள் சீப்ப -*** *வான்முழுதும் செறிந்த இருள் சிதறி ஓட;* ***பொங்கு தோளான் -*** *விம்மிய (இருபது) தோள்களை உடைய இராவணன்;****மாணிக்க மானத்திடை -*** *ஒரு மாணிக்க விமானம் ஏறி;* ***மண்டபம் காண வந்தான் -*** *அம்மணி மண்டபம் காண வருகை தந்தான்.*

*தேவ மகளிர் மணி விளக்கெடுப்ப, இராவணன் மாணிக்க விமானத்தில் மணி மண்டபம் காண வந்தான்.*

*3225.* ***அல் ஆயிரகோடி***
***அடுக்கியது ஒத்ததேனும்,***
***நல்லார் முகம் ஆம், நளிர் வால்***
***நிலவு ஈன்ற, நாமப்***
***பல ஆயிரகோடி பனிச் சுடர்***
***ஈன்ற, திங்கள்***
***எல்லாம் உடன் ஆய், இருள்***
***ஓட இரித்தது அன்றே.***

***அல் ஆயிர கோடி அடுக்கியது ஒத்ததேனும் -*** *ஆயிரம் கோடிஇருட்டை அடுக்கியது போல் இருள் செறிந்திருந்ததாயினும்;****நல்லார் முகம் ஆம் -*** *தேவமாதரின் முகங்களான;* ***நளிர் வால் நிலவு ஈன்ற -****குளிர்ந்த வெண்ணிலவுகளில் பிறந்த;* ***நாமப் பல் ஆயிர கோடி -*** *பெருமைமிக்க பல கோடி நூறாயிரம்;* ***பனிச் சுடர் ஈன்ற திங்கள் -*** *குளிரொளி தரும் சந்திரப் பேரொளிகள்;* ***எல்லாம் உடன் ஆய் -*** *எல்லாம் ஓரிடத்தே திரண்டாற் போன்ற ஒளி பெருக;* ***இருள் ஓட இரித்தது அன்றே -*** *இருட்டு ஓடித் தோற்று மறைந்தது அன்றோ?*

*அல் ஆயிரகோடி அடுக்கியது - தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. மகளிர் முகங்களால் இருள் ஒழிந்தது - உயர்வு நவிற்சி அணி.*

*3226.* ***பொற்பு உற்றன ஆய் மணி ஒன்பதும்***
***பூவில் நின்ற***
***கற்பத் தருவின் கதிர் நாள்***
***நிழற் கற்றை நாற,***
***அல் பற்று அழிய, பகல்***
***ஆக்கியதால் - அருக்கன்***
***நிற்பத் தெரிக்கின்றது நீள் சுடர்***
***மேன்மை அன்றோ?***

***பொற்பு உற்றன ஆய் -*** *அழகு பொருந்தியனவாய்;* ***கற்பத் தருவின் பூவில் நின்ற -*** *கற்பக மரத்தின் பூக்களாய்ப் பொருந்திய;* ***மணி ஒன்பதும் -*** *நவரத்தினங்களும்;* ***கதிர் நாள் நிழல் கற்றை நாற -*** *கதிரவனின் பகற்கால ஒளிக்கிரணங்கள் போல் தோன்ற;* ***அல் பற்று அழிய -****இருளின் பிடிப்புச் சிதையும்படி;* ***பகல் ஆக்கியது -*** *பகற் பொழுதை உருவாக்கியது;* ***அருக்கன் நிற்பத் தெரிக்கின்றது -*** *சூரியன் மறைந்து நிற்கவும் ஒளியானது வீசிக் கொண்டிருப்பது;* ***நீள் சுடர் மேன்மை அன்றோ -*** *கற்பக மரங்களிலிருந்து பெருகும் ஒளியின் சிறப்பு அல்லவா?*

***கற்பக மரங்களின் பூக்கள் தரும் ஒளியை வியந்தவாறாம். கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், முத்து, மாணிக்கம், வைரம், வைடூரியம் என்பன நவமணிகள்.*** ***16***

*3227****ஊறு, ஓசை, முதல் பொறி யாவையும்,***
***ஒன்றின் ஒன்று***
***தேறா நிலை உற்றது ஓர் சிந்தையன்;***
***செய்கை ஓரான்;***
***வேறு ஆய பிறப்பிடை, வேட்கை***
***விசித்தது ஈர்ப்ப,***
***மாறு ஓர் உடல் புக்கென,***
***மண்டபம் வந்து புக்கான்.***

***ஊறு -*** *தொடுதல்;* ***ஓசை -*** *கேட்டல்;* ***முதற் பொறியாவையும் -*** *முதலான உணர்வு தரும் ஐம் பொறிகளும்;* ***ஒன்றின் ஒன்று தேறா நிலை-*** *ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்து உணர முடியாத நிலையினை;****உற்றதோர் சிந்தையன் -*** *அடைந்த குழப்ப மனம் படைத்தவன்;****செய்கை ஓரான் -*** *இன்னது செய்வதென விளங்காத இராவணன்;* ***வேட்கை விசித்தது ஈர்ப்ப -*** *ஆசை பற்றி இழுத்து வர;* ***வேறு ஆய பிறப்பிடை -*** *மற்றொரு பிறவி எடுத்து (அப்பிறப்பில்);* ***மாறு ஓர் உடல் புக்கென -****இன்னொரு உடல் கொண்டு வந்தவன் போல்;* ***மண்டபம் வந்து புக்கான் -*** *சந்திர காந்த மண்டபம் அடைந்தான்.*

*ஐம்பொறி உணர்வுகளும் நிலைகுலைந்தமையால் ஆற்றல் மிக்க இராவணன் வேறொரு பிறவி எடுத்தவன் போல் வலிமையிழந்து காட்சி தந்தான்.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3228. தண்டல் இல் தவம் செய்வோர்,***
***தாம் வேண்டிய, தாயின் நல்கும்***
***மண்டல மகர வேலை***
***அமுதொடும் வந்ததென்ன,***
***பண் தரு சுரும்பு சேரும் பசு மரம்***
***உயிர்த்த பைம் பொன்***
***தண் தளிர் மலரின் செய்த சீதளச்***
***சேர்க்கை சார்ந்தான்.***

***தண்டல் இல் தவம் செய்வோர் -*** *விருப்பம் அழித்துத் தவம் புரிந்த தேவர்கள்;* ***தாம் வேண்டிய தாயின் நல்கும் -*** *எதனை விரும்பினாலும் தாயைப் போல் வழங்குகின்ற;* ***மண்டல மகர வேலை -*** *மகர மீன்கள் உலாவும் வட்ட வடிவமான பாற்கடல்;* ***அமுதொடும் வந்தது என்ன -*** *அமுத கலசத்தோடு வந்தாற்போல;* ***பண்தரு சுரும்பு சேரும் -*** *இசை பாடும் வண்டுகள் மொய்க்கும்;* ***பசுமரம் உயிர்த்த -*** *பச்சை மரங்களில் பிறந்த;* ***பைம்பொன் தண்டளிர் -*** *பொன்னிற இளந் தளிர்களாலும்;* ***மலரின் செய்த -*** *மலர்களாலும் சமைத்த;* ***சீதளச் சேர்க்கை -*** *குளிர்ச்சியான படுக்கை அமைந்திருக்க;* ***சார்ந்தான் -*** *(அதனை இராவணன்) அடைந்தான்.*

*அமுதப் பாற்கடல் போன்றிருந்த பூந்தளிர்ப் படுக்கை, தவம் பலனை எதிர் நோக்காது செய்யப்படுவது. ஆயினும் எதனையும் தரவல்லது. இதனைத் 'கண்டல் இல் தவம்' என்றார்.*

*தென்றலைச் சீறல்*

***3229. நேரிழை மகளிர் கூந்தல் நிறை***
***நறை வாசம் நீந்தி,***
***வேரி அம் சரளச் சோலை***
***வேனிலான் விருந்து செய்ய,***
***ஆர் கலி அழுவம் தந்த அமிழ்தென,***
***ஒருவர் ஆவி***
***தீரினும் உதவற்கு ஒத்த தென்றல்***
***வந்து இறுத்தது அன்றே.***

***நேரிழை மகளிர் கூந்தல் -*** *நல்ல அணிகலன்கள் அணிந்த பெண்களின் கூந்தலில்;* ***நிறை நறை வாசம் நீந்தி -*** *நிறைந்த (மலர்களின்) தேனும் மணமும் தோய்ந்து;* ***வேரி அம் சரளச் சோலை -*** *நறுமணம்நிரம்பிய அழகிய இனிய சோலைகளில்;* ***வேனிலான் விருந்து செய்ய -*** *மன்மதனுக்கு விருந்து வைக்கும் முகத்தான்;* ***ஆர்கலி அழுவம் தந்த அமிழ்தென -*** *ஓசைமிக்க கடல் உவந்தளித்த அமுதம் போன்றதும்;* ***ஒருவர் ஆவி***

***தீரினும்* - ஒருவர் உயிர் போகும் பொழுதிலும்;*உதவற்கு ஒத்த* - அதனை மீட்டுத் தர வல்லதான; *தென்றல்* - தென்றற் காற்று; *வந்து இறுத்தது* - அங்கு வந்து சேர்ந்தது ( *அன்றே* - அசை).**

*உயிர் போகும் போதும் மீட்டுத் தரும் இனிய தென்றல் இங்கு இராவணன் உயிரைப் பறிப்பது போல் வந்தது தோன்ற இவ்வாறு கூறினார்.*

***3230. சாளரத்தூடு வந்து தவழ்தலும்,***
***தரித்தல் தேற்றான்;***
***நீள் அரத்தங்கள் சிந்தி, நெருப்பு***
***உக, நோக்கும் நீரான்;***
***வாழ் மனை புகுந்தது ஆண்டு ஓர்***
***மாசுணம் வரக் கண்டன்ன***
***கோள் உறக் கொதித்து விம்மி,***
***உழையரைக் கூவிச் சொன்னான்:***

***நீள் அரத்தங்கள் சிந்தி* - நெடிய இரத்தத் துளிகள் சிந்தி;*நெருப்பு உக* - தீப்பொறிகளும் கக்கும்படி; *நோக்கும் நீரான்* - சினமுடன் பார்க்கும்கண்கள் கொண்ட இராவணன்; *சாளரத்தூடு வந்து தவழ்தலும்* - (தென்றல்) பலகணி வழியே வந்து பாயவும்; *தரித்தல் தேற்றான்* - பொறுக்க இயலாதவனாய் ஆனான்; *வாழ்மனை ஆண்டு* -வாழும் இல்லத்தின்கண்; *ஓர் மாகணம் புகுந்தது வரக் கண்டன்ன* - ஒரு மலைப் பாம்பு நுழைந்து வரக் கண்டது போல்; *கோள் உறக் கொதித்து* -துன்பம் கொண்டு சினமுற்று; *விம்மி* - கலங்கி; *உழையரைக் கூவிச் சொன்னான்*- பணியாளரைக் கூப்பிட்டுப் பின் வருமாறு கூறினான்.**

*மலையினின்று வரும் மலய மாருதமான தென்றலை மலைப் பாம்பாகக் குறிப்பிட்டார். தென்றல் என்றதற்கேற்ப அதன் அசைவினைத் தவழ்தல் என்றார்.*

***3231. 'கூவலின் உயிர்த்த சில் நீர்***
***உலகினைக் குப்புற்றென்ன,***
***தேவரில் ஒருவன் என்னை***
***இன்னலும் செயத்தக்கானோ?***
***ஏவலின் அன்றி, தென்றல்***
***எவ் வழி எய்திற்று' என்னா,***
***'காவலின் உழையர்தம்மைக் கொணருதிர்***
***கடிதின்' என்றான்.***

***கூவலின் உயிர்த்த சில் நீர்* - கிணற்றில் தோன்றிய சிறிதளவு தண்ணீர்; *உலகினைக் குப்புற்றென்ன* - உலகத்தை மூழ்கடித்தது என்றாற் போல; *தேவரில் ஒருவன்* - (எனக்கு ஆட்பட்ட) தேவரில் ஒருவனாகிய வாயு; *என்னை இன்னலும் செயத் தக்கானோ* - எனக்கே தீமையும் செய்ய வல்லவன் ஆகிவிட்டானோ; *ஏவலின் அன்றி* - என்**

*கட்டளையின்றி;* ***தென்றல் எவ்வழி எய்திற்று** - எவ்வாறு தென்றல் இங்கு வந்தது;* ***என்னா** - என்று (இராவணன்) வினவி;* ***காவலின் உழையர் தம்மை** - காவல் பணியாளர்களை;* ***கடிதின் கொணருதிர்** -விரைவாக அழையுங்கள்;* ***என்றான்** - எனக் கூறினான்.*

*கிணற்று நீர் உலகை மூழ்கடித்தாற் போல ஒரு தேவன் எனக்கு இன்னல் செய்தான் என்று ஏளனமாய் உரைத்தான் இராவணன்.*

***3232.** **அவ் வழி, உழையர் ஓடி, ஆண்டு**
**அவர்க் கொணர்தலோடும்,**
**வெவ் வழி அமைந்த செங் கண்**
**வெருவுற நோக்கி, வெய்யோன்,**
**'செவ் வழி, தென்றலோற்குத் திருத்தினிர்**
**நீர்கொல்?' என்ன,**
**'இவ்வழி இருந்த காலைத் தடை**
**அவற்கு இல்லை' என்றார்.***

***அவ்வழி** - அது கேட்ட பொழுதில்;* ***உழையர்** - பணியாளர்;* ***ஓடி** - ஓட்டமாய்ச் சென்று;* ***ஆண்டு அவர்க் கொணர்தலோடும்** - அங்கு அக் காவலாளரை அழைத்து வரவும்;* ***வெவ் வழி அமைந்த செங்கண் வெருவுற நோக்கி** - கொடுமை நிறைந்த சிவந்த கண்களால் (அக்காவலர்) அஞ்சும்படி நோக்கி;* ***வெய்யோன்** - கோபம் மிக்கவனாகிய இராவணன்;* ***தென்றலோற்கு** - தென்றல் காற்றுக்கு;* ***செவ்வழி திருத்தினிர் நீர் கொல்** - நன்கு வழி அமைத்துக் கொடுத்தவர் நீங்கள் தாமோ;* ***என்ன** -என்று (சின) வினா எழுப்பியதும்;* ***'இவ்வழி இருந்த காலை** - தாங்கள் இவண் எழுந்தருளும் பொழுதில்;* ***தடை அவற்கு இல்லை** - தென்றல் வரலாகாது என்ற தடை உத்தரவு இல்லை';* ***என்றார்** - என்று (பணிமொழி) பகர்ந்தனர்.*

*வாயிலை நாங்கள் காவல் காக்கிறோம். சன்னல் வழியே வருவதைத் தடுத்தோம் இல்லை எனக் கூறலுமாம்.*

***3233.** **'வேண்டிய நினைந்து செய்வான்**
**விண்ணவர் வருவது என்றால்,**
**மாண்டது போலும் கொள்கை,**
**யானுடை வன்மை? வல்லைத்**
**தேண்டி நீர் திசைகள்தோறும்**
**சேணுற விசையில் செல்குற்று**
**ஈண்டு இவன் தன்னைப் பற்றி,**
**இருஞ்சிறை இடுதிர்' என்றான்.***

***வேண்டிய நினைந்து செய்வான்** - தாங்கள் விரும்பியவாறு எண்ணிச் செயல்பட;* ***விண்ணவர் வருவது என்றால்** - தேவர்கள் வருவார்கள் என்றால்;* ***யானுடை வன்மைக்***

***கொள்கை*** -என்னுடைய ஆற்றற் கோட்பாடு; ***மாண்டது போலும்*** - அழிந்து போனது போலும்; ***வல்லைத் தேண்டி*** - விரைவாக எங்கும் தேடி; ***திசைகள் தோறும்*** - எட்டுத்திசைகளிலும்; ***வேணுற விசையில் செல்குற்று*** - தொலை தூரங்களிலும் வேகமாய்ச் சென்று; ***இவன் தன்னைப் பற்றி*** - வாயு தேவனைப் பிடித்து; ***நீர்*** - நீங்கள்; ***ஈண்டு இருஞ்சிறை இடுதிர்*** -இங்கே பெருஞ்சிறைச் சாலையில் தள்ளுமின்; ***என்றான்*** - என்று இராவணன் மொழிந்தான்.

*காற்றைப் பிடித்துக் கடுஞ்சிறையில் இட இராவணன் ஆணையிட்டான்.*
*167அமைச்சரோடு ஆராய்தலும் மாரீசனை அடைதலும்*

***3234. 'காற்றினோன்தன்னை வாளா***
***முனிதலின் கண்டது இல்லை;***
***கூற்றும் வந்து என்னை இன்னே***
***குறுகுமால், குறித்த ஆற்றால்***
***வேல் தரும் கருங் கட் சீதை மெய்***
***அருள் புனையேன்என்றால்;***
***ஆற்றலால் அடுத்தது எண்ணும் அமைச்சரைக்***
***கொணர்திர்' என்றான்.***

***காற்றினோன் தன்னை*** - வாயு பகவானை; ***வாளா*** - வறிதே; ***முனிதலின் கண்டது இல்லை*** - சினப்பதனால் ஒரு பயனும் இல்லை; ***குறித்த ஆற்றால்*** - நான் திட்டமிட்டபடி; ***வேல் தரும் கருங் கண் சீதை***- வேல் போலும் கரிய கண்களை உடைய சீதையின்; ***மெய் அருள் புனையேன் என்றால்*** - உண்மையான அன்பை நான் அடைய வில்லையெனில்; ***இன்னே*** - இப்பொழுதே; ***கூற்றும் வந்து என்னைக் குறுகும்*** - காலனும் என்னை நெருங்கி வந்து விடுவான்; எனவே; ***ஆற்றலால் அடுத்தது எண்ணும்*** - தம் வல்லமையால் வருங்காலத்தை உணரவல்ல; ***அமைச்சரைக் கொணர்திர்*** - மந்திரிமார்களை அழைத்து வாருங்கள்; ***என்றான்*** - என (இராவணன்) பணித்தான். ***ஆல்*** -அசை.

*என் வல்லமையால் சீதையைப் பெறவில்லையானால் காற்றைப்போலவும் கூற்றும் துன்பம் செய்ய வந்து விடுவதில் வியப்பதற்கில்லை என இராவணன் கருதினான்.*

***3235. ஏவின சிலதர் ஓடி, 'ஏ' எனும்***
***துணையில், எங்கும்***
***கூவினர்; கூவலோடும் குறுகினர் -***
***கொடித் திண் தேர்மேல்,***
***மாவினில், சிவிகை தன்மேல், மழை***
***மதக் களிற்றின் - வையத்***
***தேவரும், வானம் தன்னில் தேவரும்,***
***சிந்தை சிந்த.***

***ஏவின சிலதர் ஓடி -*** *கட்டளையைப் பெற்ற பணியாளர் விரைந்து;* ***ஏ எனும் துணையில் -*** *ஏ எனும் முன்னர்;* ***எங்கும் கூவினர் -****எங்கணும் சென்று அமைச்சரை அழைத்தனர்;* ***கூவலோடும் -*** *அவ்வாறு அழைத்ததும்;* ***வையத் தேவரும் -*** *உலகின் கண் உள்ள முனிவரும்;****வானம் தன்னில் தேவரும் -*** *விண்ணுலகத் தேவரும்;* ***சிந்தை சிந்த -*** *மனம் துணுக்குற; (அமைச்சர்கள் எல்லாம்);* ***கொடித் திண் தேர் மேல் -*** *கொடி அசையும்வலிய தேர்கள் மேலும்;* ***மாவினில் -*** *குதிரைகள் மேலும்;* ***சிவிகை தன் மேல் -*** *பல்லக்குகளின் மேலும்;* ***மழை மதக் களிற்றில் -****மழையென மதம் பொழியும் யானைகள் மேலும் (பயணம் செய்து);* ***குறுகினர் -*** *இராவணனை அடைந்தனர்.*

*இராவணன் ஆணையின் வலிமையும், அமைச்சர் அறிவின் வலிமையும் சேர்ந்தால் ஏதாகுமோ எனத் தேவரும் முனிவரும் அஞ்சினர்.*

***3236. வந்த மந்திரிகளோடு மாசு அற***
***மனத்தின் எண்ணி,***
***சிந்தையில் நினைந்த செய்யும் செய்கையன்,***
***தெளிவு இல் நெஞ்சன்,***
***அந்தரம் செல்வது ஆண்டு ஓர்***
***விமானத்தில், ஆரும் இன்றி,***
***இந்தியம் அடக்கி நின்ற மாரீசன்***
***இருக்கை சேர்ந்தான்.***

***வந்த மந்திரிகளோடு -*** *அங்கு வந்து சேர்ந்த அமைச்சர்களுடன்;* ***மாசு அற மனத்தின் எண்ணி -*** *குற்றம் குறைகள் இன்றி ஆலோசனை செய்தபின்;* ***தெளிவு இல் நெஞ்சன் -*** *தெளிவு பிறக்காத நெஞ்சம் உடையவனாய்;* ***சிந்தையில் நினைந்த செய்யும் செய்கையன் -****(இறுதியில் தான்) மனத்தில் கருதியதையே செய்யும் தன்மையுடையவனாய் விளங்கும் இராவணன்;* ***ஆரும் இன்றி -*** *எவர் துணையும் இல்லாமல்;****அந்தரம் செல்வது ஆண்டு ஓர் விமானத்தில் -*** *விண்ணில் செல்லும் ஒரு விமானத்தில் ஏறி;* ***இந்தியம் அடக்கி நின்ற -*** *புலன்களை அடக்கித் தவம் செய்கின்ற;* ***மாரீசன் இருக்கை சேர்ந்தான் -*** *மாரீசன் என்பானது இருப்பிடத்தை அடைந்தான். அமைச்சரோடு ஆலோசித்த போதிலும் தான் நினைத்ததையே செய்வது இராவணன் இயல்பு. அதனால் அமைச்சரின் நற் கருத்துக்களை அவன் ஏற்க வில்லை என்பதைக் குறிப்பால் உணர்த்தினார். மாரீசன் இராவணனுக்குத் தாய் வழி மாமன் ஆவான் (3240) விசுவாமித்திரர் செய்த வேள்வியைக் காக்கச் சென்ற இராமபிரானது கணைக்குத் தப்பி ஓடிப் பிழைத்தவன் இவன். இராமபாண தீட்சையால் பழி நெறி மாறித் தவநெறி மேற்கொண்டவன் இவன். ஆதலால், 'இந்தியம் அடக்கி நின்ற மாரீசன்' என்றார்.*

## மாரீசன் வதைப் படலம்

மாரீசனது வதையைக் கூறும் பகுதியென்று பொருள்படும்.

மாரீசன் சர்ச்சரன் என்ற இயக்கனது மகன் சுகேதுவின் மகள் தாடகைக்கும் சுந்தனென்ற இயக்கனுக்கும் மகன். சுபாகு இவன் உடன் பிறந்தான். அகத்தியரால் சுந்தன் அழிய, அம் முனிவரோடு தாடகையும் அவள் புதல்வரும் போரிடுகின்றனர். அவர் சாபத்தால் அரக்கராயினர்.

விசுவாமித்திரர் செய்ய முனைந்த யாகத்தை அழிக்கத் தாடகையும் அவள் புதல்வரும் துணிந்தனர். அம் முனிவரோடு வேள்வி காக்க வந்த இராமன். வழியில் எதிர்ப்பட்ட தாடகையைக் கொன்றான். பின்னர்ச் சுபாகுவும் இராமனால் கொல்லப்பட்டான். தப்பிப் பிழைத்த மாரீசன் சில காலம் கழித்து இராமனைத் தண்டகாரணியத்தில் மான் வடிவில் வந்து முட்டிக் கொல்ல முயன்றான். இம் முறையும் இராமனிடமிருந்து தப்பி இலங்கையுள் ஒரு சார் தவம் செய்து வாழ்ந்தான்.

சீதையை அடையும் பொருட்டு இராவணன் தன் வஞ்சனைக்குத் துணை புரிய மாரீசனை வேண்டுகின்றான். மாரீசன் பலவாறு இராவணனைத் தடுக்கிறான். இறுதியில் அவனுக்கு அஞ்சி இராவணன் திட்டத்திற்கு இசைகிறான். மாயமானாகச் சீதை முன் விளையாடுகிறான். அம்மானைப் பிடித்துத்தரச் சீதை வேண்டுகிறாள். இலக்குவன் தடுத்தும் கேளாமல், இராமன் மாய மான் பின்னே செல்கிறான். நெடுந்தூரம் இராமனை ஈர்த்துச் சென்ற மாரீசன் இறுதியில் இராமன் அம்புபட்டு, 'சீதா லட்சுமணா' என்று இராமன் குரலால் கூவி, இறந்துபடுகிறான். 'மாயம் இது' என்று உணர்ந்த இராமன் சீதைக்குத் துயர் நேருமென விரைந்து ஆசிரமம் நோக்கி வருகிறான். இப்படலத்தின் செய்திச் சுருக்கம் இது. ஒரு சில பதிப்புகளில் இதற்கு முன்னர் உள்ள சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலமும் அப்பெயர்தாங்காமல் இப்படலத்தில் உட்பகுதியாகவே கொள்ளப் பெற்றுள்ளது.

'வந்த கருத்து என்?' என, மாரீசன் வினவுதல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**3237. இருந்த மாரீசன், அந்த**
**இராவணன் எய்தலோடும்,**
**பொருந்திய பயத்தன், சிந்தை**
**பொருமுற்று வெருவுகின்றான்,**
**கருந் தட மலைஅன்னானை எதிர்கொண்டு,**
**கடன்கள் யாவும்**
**திருந்திய செய்து, செவ்வித் திருமுகம்**
**நோக்கிச் செப்பும்:**

***அந்த இராவணன் எய்தலோடும் -*** *அந்த (அரக்கர் தலைவன்) இராவணன் சென்று சேர்ந்தவுடன்;* **இருந்த மாரீசன் -** *அங்கிருந்த மாரீசன்;* **பொருந்திய பயத்தன் -** *அச்சம் அடைந்தவனாய்;* **சிந்தை பொருமுற்று -** *மனம் வெதும்பி;* **வெருவுகின்றான் -** *கலக்கம் அடைந்தவனாய்;* ***கருந்தட மலை அன்னானை -*** *கரிய பெரிய மலை போன்ற இராவணனை;* **எதிர் கொண்டு -** *முன் சென்று வரவேற்று;* **கடன்கள் யாவும் திருந்திய செய்து -** *சிறப்பான முறையில் உபசரணைகள் ஆற்றி;* **செவ்வித் திருமுகம்நோக்கி -** *பொலிவு மிக்க இராவணன் முகம் பார்த்து;* **செப்பும் -***பேசத் தொடங்கினான்.*

*தவநெறி மேற்கொண்டிருந்த மாரீசனுக்கு இராவணன் தனித்த வருகை மனத்தில் அச்சத்தை மூட்டியது.*

*கலிநிலைத் துறை*

***3238. 'சந்த மலர்த் தண் கற்பக***
***நீழல் தலைவற்கும்,***
***அந்தகனுக்கும், அஞ்ச அடுக்கும்***
***அரசு ஆள்வாய்!***
***இந்த வனத்து, என் இன்னல்***
***இருக்கைக்கு, எளியோரின்***
***வந்த கருத்து என்? சொல்லுதி'***
***என்றான்-மருள்கின்றான்.***

***மருள்கின்றான்*** *- (எதற்காக இராவணன் வந்தானோ என) மயங்குகின்ற மாரீசன்;* ***சந்த மலர்த்தண் -*** *அழகிய குளிர்ந்த மலர்களை உடைய;* ***கற்பக நீழல் தலைவற்கும் -*** *கற்பக மர நிழலில் அரசாளும் இந்திரனுக்கும்;* **அந்தகனுக்கும் -** *எமனுக்கும்;* **அஞ்ச -** *அச்சம் வரும்படி;* **அடுக்கும் அரசாள்வாய் -** *மேல் நெருங்கி அரசாட்சி புரிபவனே;***இந்த வனத்து -** *இந்தக் காட்டுக்குள்;* **என் இன்னல் இருக்கைக்கு -** *என்துன்பம் மிக்க குடியிருப்பை நாடி;* **எளியோரின் -** *யாருமற்ற எளியோரைப் போல;* **வந்த கருத்து என் -** *நீ வந்ததன் நோக்கம் யாது?;***சொல்லுதி என்றான் -** *எடுத்துரைப்பாயாக' என்று கூறினான்.*

*தன் குடியிருப்பை இன்னல் இருக்கை என்றது, காட்டுக்குள் வசதி இல்லாத தவச்சாலை என்பது பற்றி. இந்திரனையும் அந்தகனையும்இணைத்துக் கூறியது, இராவணனின் தலைமையையும், அழிக்கும் திறனையும் இணைத்துக் கூறியவாறாம்.*
*2இராவணன் சீதையைக் கவரத் துணையாகுமாறு வேண்டுதல்*

***3239. 'ஆனது அனைத்தும்; ஆவி***
***தரித்தேன், அயர்கின்றேன்;***
***போனது, பொற்பும்; மேன்மையும்***
***அற்றேன், புகழோடும்;***
***யான் அது உனக்கு இன்று எங்ஙன்***

***உரைக்கேன் இனி?' என்னா,***
***'வானவருக்கும் நாண அடுக்கும்***
***வசை மன்னோ?'***

**அனைத்தும் ஆனது -** *(நிகழ வேண்டாதன) பலவும் நிகழ்ந்து விட்டன;* **ஆவி தரித்தேன் -** *எனினும் உயிர் பிழைத்திருந்தேன்;* **அயர் கின்றேன் -** *இன்னும் தளர்ச்சியுறுகின்றேன்;* **பொற்பும் போனது -***என் பொலிவும் நீங்கியது;* **புகழோடும் மேன்மையும் அற்றேன் -** *என் பெருமைகளும், புகழும் அகன்றன;* **யான் இன்று உனக்கு -** *நான் இப்போது உன் பால்;* **இனி அது எங்ஙன் உரைக்கேன் -** *இனி அது பற்றி எவ்வாறு எடுத்துச் சொல்வேன்?;* **என்னா -** *என்று கூறி;* **வானவருக்கும் -** *தேவர்களுக்கும்;* **நாண அடுக்கும் வசை -** *வெட்கம் ஏற்படுத்தும் இழிவு அது என்றான். (மன்னோ - அசை).*

*மாரீசனின் அன்பைப் பெறும் பொருட்டுத் தன் நிலையை இவ்வாறு தாழ்த்தித் தெரிவித்தான், இராவணன்*

***3240. 'வன்மை தரித்தோர் மானிடர்; மற்று***
***அங்கு, அவர் வாளால்***
***நின் மருகிக்கும் நாசி இழக்கும்***
***நிலை நேர்ந்தார்;***
***என் மரபுக்கும் நின்***
***மரபுக்கும் இதன்மேல் ஓர்***
***புன்மை, தெரிப்பின், வேறு இனி***
***எற்றே? புகல்-வேலோய்!***

**வேலோய் -** *வேலேந்தியவனே;* **மானிடர் வன்மை தரித்தோர் -** *மனிதர்கள் வல்லமை உடையோர் ஆயினார்;* **மற்று அங்கு அவர் -***மேலும் அக்கானகத்தில் அவர்கள்;* **வாளால் -** *தம் வாள் வலிமையால்;* **நின் மருகிக்கும் -** *உன் மருமகள் முறைமை வாய்ந்த சூர்ப்பணகைக்கும்;* **நாசி இழக்கும் நிலை -** *மூக்கை இழக்கின்ற நிலையினை;* **நேர்ந்தார் -** *உண்டு பண்ணிவிட்டனர்;* **தெரிப்பின் -** *ஆய்ந்து பார்த்தால்;* **என் மரபுக்கும் -** *என் பரம்பரைக்கும்;* **நின் மரபுக்கும் -** *(எனக்கு உறவாகிய) உன் பரம்பரைக்கும்;* **இதன் மேல் ஓர் புன்மை -** *இதனைக் காட்டிலும் ஒரு பேரிழிவு;* **இனி வேறு எற்றே -** *இனி வேறு என்ன இருக்கிறது;* **புகல்-** *சொல்லுவாயாக. மானுடர் என இராமலக்குவரைக் குறித்தான். மாரீசன் மாமன் முறை என்பதால் சூர்ப்பணகையை மருகி என்றான்.*

***3241. 'திருகு சினத்தார் முதிர மலைந்தார்;***
***சிறியோர், நாள்***
***பருகினன் என்றால், வென்றி நலத்தில்***
***பழி அன்றோ?***
***இரு கை சுமந்தாய்! இனிதின் இருந்தாய்!***
***இகல் வேல் உன்***

***மருகர் உலந்தார்; ஒருவன் மலைந்தான்,***
***வரி வில்லால்.***

**ஒருவன் -** *ஒரு மானுடன் (சூர்ப்பணகையை மான பங்கம் செய்தமையால்);* **திருகு சினத்தார் -** *பெருகும் சினமுடைய வரும்;* **முதிர மலைந்தார் -** *முற்றிய போரில் ஈடுபட்டவரும்;* **சிறியோர் -** *எனக்கும்இளையவருமாகிய கரன் முதல் வீரருடைய;* **நாள் -** *வாழ்நாளை;* **வரிவில்லால் மலைந்தான் -** *கட்டமைந்த வில்லால் போரிட்டு;* **பருகினன் என்றால் -** *அழித்து முடித்தான் என்றால்;* **வென்றி நலத்தில் -***இதுவரை வெற்றியே பெற்று வந்த என் பெருமைக்கு;* **பழியன்றோ -** *அது இழுக்காகுமன்றோ?;* **இகல்வேல் உன் மருகர் -** *கொடிய வேலேந்திய உன் மருமக்கள்;* **உலந்தார் -** *அழிந்தனர்;* **இருகை சுமந்தாய் -** *இரண்டு கைகளையும் இன்னும் சுமந்தபடியாக;* **இனிதின் இருந்தாய் -** *மகிழ்வோடு வாழ்ந்து கொண்டிருக்கிறாயே (இது சரிதானா?)*

*கரன், திரிசிரன், தூடணன் என்பார் இராவணனுக்குத் தம்பி முறையாவதால் சிறியார் என்றும் மாரீசன் மருகர் என்றும்குறிக்கப்பட்டனர்.*

***3242. 'வெப்பு அழியாது என் நெஞ்சும்***
***உலர்ந்தேன், விளிகின்றேன்.***
***ஒப்பு இலர் என்றே, போர் செயல்***
***ஒல்லேன்; உடன் வாழும்***
***துப்புஅழி செவ் வாய் வஞ்சியை***
***வௌவ, துணை கொண்டிட்டு***
***இப் பழி நின்னால் தீரிய வந்தேன்,***
***இவண்' என்றான்.***

**வெப்பு அழியாது -** *(முற்கூறிய நிகழ்ச்சியால்) மனத்தின் வெப்பம்தணியாமல்;* **என் நெஞ்சும் உலர்ந்தேன் -** *என் உள்ளமும் வாடினேன்;* **விளிகின்றேன் -** *உயிரும் அழிகின்றேன்;* **ஒப்பு இலர் என்றே -** *அம்மானுடர் என் ஆற்றலுக்கு நிகர் ஆகாதார் என்பதால்;* **போர் செயல் ஒல்லேன் -** *அவர்களோடு போரிடவும் விருப்பம் கொள்ளேன்;* **உடன் வாழும் துப்பு அழி செவ்வாய் -** *பவளத்தை வெல்லும் சிவந்த இதழ்களை உடைய;* **வஞ்சியை வௌவ -** *சீதையைக் கவர்ந்து வர;* **துணை கொண்டிட்டு -** *உன் உதவியை மேற்கொள்ள வேண்டியும்;* **இப்பழி நின்னால் தீரிய -** *எனக்கு நேர்ந்த அவமானத்தை உன்னால் துடைப்பதற்கு வேண்டியும்;* **இவண் வந்தேன் -** *இங்கு (உன்பால்) வந்தேன்;* **என்றான் -** *என்று இராவணன் மொழிந்தான்.*

*என்னுடைய சகோதரியை அவர்கள் இழிவுபடுத்தியதால்அவர்களுடன் இருக்கும் சீதையைக் கவர்ந்து அவர்களைஇழிவுபடுத்துவேன் எனத் துணை நாடினான் இராவணன்.*

*மாரீசன் அறிவுரை*

*3243.* ***இச் சொல் அனைத்தும் சொல்லி,***
***அரக்கன், எரிகின்ற***
***கிச்சின் உருக்கு இட்டு உய்த்தனன்***
***என்னக் கிளராமுன்,***
***'சிச்சி' என, தன் மெய்ச் செவி***
***பொத்தி; தெருமந்தான்;***
***அச்சம் அகற்றி, செற்ற***
***மனத்தோடு அறைகின்றான்;***

***எரிகின்ற கிச்சின் -*** *பற்றி எரியும் தீயில்;* ***உருக்கு இட்டு -*** *இரும்பைப் போட்டுக் காய்ச்சி;* ***உய்த்தனன் என்ன -*** *அதனைச் செவியில் பாய்ச்சினாற் போன்று;* ***அரக்கன் -*** *இராவணன்;* ***இச்சொல் அனைத்தும் சொல்லி -*** *இவ்வாறு (தன் உணர்வுகளைச் சுமந்த) சொற்களை எல்லாம் கூறி;* ***கிளராமுன் -*** *தூண்ட முற்படு முன்; (மாரீசன்);* ***சிச்சி எனத்தன் மெய்ச் செவி பொத்தி -*** *சீச்சீ என்று தன் செவிகளை மூடி;* ***தெருமந்தான் -*** *தடுமாறினான்; (அதன் பிறகு);* ***அச்சம் அகற்றி -*** *இராவணனிடம் கொண்ட பயத்தை நீக்கி;* ***செற்ற மனத்தோடு -*** *சினம் பொங்கும் உள்ளத்தோடு;* ***அறைகின்றான் -*** *சொல்லத் தொடங்கினான்.*

*கிச்சு - நெருப்பு; கிருசாநு என்ற வடசொல்லின் திரிபு என்பர், உருக்கு - உருக்கப்படுவதால் பெற்ற காரணப் பெயர்.*

*3244.* ***'மன்னா! நீ உன் வாழ்வை***
***முடித்தாய்; மதி அற்றாய்;***
***உன்னால் அன்று ஈது; ஊழ்வினை***
***என்றே உணர்கின்றேன்;***
***இன்னாவேனும் யான் இது***
***உரைப்பென் இதம்' என்னா,***
***சொன்னான் அன்றே அன்னவனுக்குத்***
***துணிவு எல்லாம்.***

***'மன்னா -*** *வேந்தனே;* ***நீ உன் வாழ்வை முடித்தாய் -*** *நீ உன் வாழ்க்கைக்கு முடிவு தேடிக் கொண்டாய்;* ***மதியற்றாய் -*** *அறிவை அழித்து விட்டாய்;* ***உன்னால் அன்று ஈது -*** *இந்நிலை உன்னால் உண்டானதல்ல;* ***ஊழ்வினை என்றே உணர்கின்றேன் -*** *விதியின் வலியென்றே கருதுகின்றேன்;* ***இன்னா வேனும் -*** *உனக்கு இனிமையான வையல்லவெனினும்;* ***யான் இது இதம் உரைப்பென் -*** *நான் இதனை உனக்கு நலம் கருதிக் கூறுவேன்;* ***என்னா -*** *என, (மாரீசன்);* ***அன்னவனுக்கு -*** *இராவணனுக்கு;* ***துணிவு எல்லாம் -*** *உறுதிப் பொருள்கள் எல்லாம்;* ***சொன்னான் -*** *கூறலானான் (* ***அன்றே -*** *தேற்றம்)*

*இராவணனின் தவறான மனநிலைக்கு விதிதான் காரணமென உணர்ந்து கூறினான் மாரீசன். ஆவது அறிவதே அறிவு; இராவணன் அழிவுக்கு வழி தேடுவதால் 'மதியற்றாய்' என்றான்.*

*3245. 'அற்ற கரத்தோடு, உன் தலை நீயே*
*அனல் முன்னில்*
*பற்றினை உய்த்தாய்; பற்பல*
*காலம் பசி கூர*
*உற்று, உயிர் உள்ளே தேய, உலந்தாய்;*
*பினை அன்றோ*
*பெற்றனை செல்வம்? பின் அது*
*இகழ்ந்தால் பெறல் ஆமோ?*

***அற்ற கரத்தோடு -*** *(வாள் கொண்டு வெட்டி) அறுத்த கைகளோடு;* ***உன்தலை -*** *உன் தலைகளையும்;* ***நீயே அனல் முன்னில் -*** *நீயே யாக நெருப்பில்;* ***பற்றினை உய்த்தாய் -*** *எடுத்து இட்டாய்;* ***பற்பல காலம் -*** *மிக நெடுங்காலம்;* ***பசிகூர உற்று -*** *பட்டினி நோன்பு இருந்து;* ***உயிர் உள்ளே தேய உலந்தாய் -*** *உயிர் உடலில் வாடும்படி துன்புற்றாய்;* ***பினை அன்றோ -*** *(இவ்வாறு தவம் செய்த) பிறகு அல்லவா;* ***செல்வம் பெற்றனை -*** *திருவெல்லாம் உற்றாய்;* ***பின் அது இகழ்ந்தால் -*** *இத்தவப் பயனையெல்லாம் அலட்சியப்படுத்தினால்;* ***பெறல் ஆமோ? -****மீண்டும் அவற்றைப் பெறுதல் முடியுமோ? (முடியாது)*

*கோகர்ண ஆசிரமத்தில் ஆயிரம் ஆண்டு பட்டினித் தவம் புரிந்த இராவணன், ஒவ்வோர் ஆயிரம் ஆண்டுக்கும் ஒரு சிரமும் இருகரமும் அறுத்து, ஒன்பதினாயிரம் ஆண்டு தவம் புரிந்தான். கடைசித் தலையையும் கரங்களையும் வெட்ட முற்படுகையில் பிரமன் தோன்றி இழந்தன எலாம் தந்து வரங்களும் அருளினான். உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை ஆகிய இரட்டை இலக்கணம் கொண்டது தவம். உற்ற நோய் நோன்ற இராவணன் உயிர்க்கு உறுகண் தேட முயல்வது கண்டு வருந்திப் பேசுகிறான், மாரீசன்.*

*3246. 'திறத் திறனாலே, செய் தவம்*
*முற்றித் திரு உற்றாய்,*
*மறத் திறனாலோ? சொல்லுதி-சொல்*
*ஆய் மறை வல்லோய்!*
*அறத் திறனாலே எய்தினை அன்றோ?*
*அது, நீயும்*
*புறத் திறனாலே பின்னும்*
*இழக்கப் புகுவாயோ?*

***'சொல் ஆய் மறை வல்லோய் -*** *ஆய்ந்தெடுத்த சொற்களால் உருவான வேதங்களில் பயிற்சி உடையவனே;* ***திறத்திறனாலே -****அறநெறி நின்று;* ***செய்தவம் முற்றி -*** *கடுந்தவம் நிறைவுற்று;* ***திரு உற்றாய் -****செல்வ வளம் எய்தினாய்;* ***மறத்திறனாலோ சொல்லுதி -*** *(அன்றி) அதரும நெறியினாலோ அவை உனக்குக் கிடைத்தன என்று எண்ணிக் கூறுவாயாக;* ***அறத்திறனாலே -*** *நல்லற வழியினாலே;* ***எய்தினை அன்றோ -*** *அனைத்து*

*நலமும் பெற்றாய் அல்லவா;* ***பின்னும் -*** *மீண்டும்;* ***புறத்திறனாலே -*** *அறத்திற்குப் புறம்பான வழியிலே;* ***அது நீயும் -****அச் செல்வத்தை நீ தான்;* ***இழக்கப் புகுவாயோ? -*** *தொலைக்கும் வழியில் செல்லுவாயோ.*

*நீயும் - உயர்வு சிறப்பு உம்மை.*

***3247. 'நாரம் கொண்டார் நாடு கவர்ந்தார்,***
***நடை அல்லா***
***வாரம் கொண்டார், மற்று***
***ஒருவற்காய் மனை வாழும்***
***தாரம் கொண்டார், என்ற***
***இவர்தம்மைத் தருமம்தான்***
***ஈரும் கண்டாய்; கண்டகர்***
***உய்ந்தார் எவர்? ஐயா!***

***'நாரம் கொண்டார் -*** *அன்பு பூண்டாரது;* ***நாடு கவர்ந்தார் -*** *நாட்டைக் கைப்பற்றிக் கொண்டவர்களும்;* ***நடை அல்லா -*** *நீதி நெறிக்குப் பொருந்தாத;* ***வாரம் கொண்டார் -*** *வரிப் பொருளை (க் குடிமக்களை வருத்திப்) பெற்றவர்களும்;* ***மற்றொருவற்காய் -*** *பிறர் ஒருவருக்கு உரிமையாய்;* ***மனை வாழும் தாரம் கொண்டார் -*** *அவர் இல்லத்திலே வாழும் மனைவியை வசப்படுத்திக் கொண்டவரும்;* ***என்றிவர் தம்மை -*** *எனப்படும் இவர்களை;* ***தருமம் தான் -*** *அறக் கடவுள்தானே;* ***ஈரும் கண்டாய் -*** *(சின்னா பின்னமாக்கி) அழித்து விடுவான் என அறிவாய்;* ***ஐயா -*** *தலைவனே;* ***கண்டகர் உய்ந்தார் எவர் -*** *கொடியவருள் எவர் தப்பிப் பிழைத்துள்ளார்?' (எவரும் இல்லை). பிறன் மனை விழைவோர். அன்புடையோரின் நாடு கவர்ந்தோர், கொடிய வரி வாங்குவோர் மூவரையும் கண்டகர் என ஓரினப்படுத்தினான். கண்டகர் - முள் போல் பிறரைத் துன்புறுத்துவோர்.*

***3248. 'அந்தரம் உற்றான், அகலிகை***
***பொற்பால் அழிவுற்றான்,***
***இந்திரன் ஒப்பார்***
***எத்தனையோர்தாம் இழிவுற்றார்?***
***செந் திரு ஒப்பார் எத்தனையோர்***
***நின் திரு உண்பார்;***
***மந்திரம் அற்றார் உற்றது***
***உரைத்தாய்; மதி அற்றாய்.***

***'அந்தரம் உற்றான் -*** *வானுலகுக்கு உரிய இந்திரன்;* ***அகலிகை பொற்பால் அழிவுற்றான் -*** *அகலிகை அழகினால் பெருமை அழிந்தான்;* ***இந்திரன் ஒப்பார் -*** *அவ்விந்திரனுக்கு ஒப்பானவர்கள்;* ***எத்தனையோர்தாம் -*** *எத்தனையோ பேர்கள்;* ***இழிவுற்றார் -*** *(பிறன்மனை நயத்தலால்) தீமையுற்றவர்கள்;* ***மதியற்றாய் -*** *அறிவு இழந்தவனே;* ***செந்திரு ஒப்பார் -*** *திருமகளுக்கு நிகரானவர்கள்;* ***எத்தனையோர் நின்திரு***

***உண்பார்* - எத்தனையோ பெண்கள் (விரும்பி) உன் செல்வத்தை அனுபவிக்கின்றார்கள்; (அவ்வாறிருக்க) ; *மந்திரம் அற்றார்* -அறிவுரை கூறும் நல்லமைச்சரைப் பெறாதார்; *உற்றது உரைத்தாய்* -பேசத்தக்க ஒன்றை (நீயும்) பேசுகின்றனையே.*

*இந்திரன் அகலிகை கதை பால காண்டத்துள் அகலிகைப் படலத்தில் எடுத்துரைத்தார். உன்னை விரும்புவோர் பலரிருக்க, அழிவும் இழிவும் தருமாறு பிறன் மனை நயத்தல் ஏன் என மாரீசன் வினவினான். நல்லுரை கூறும் அமைச்சர் உனக்கு வாய்க்கவில்லையா? அன்றி அமைச்சர்களின் அறிவுரையை நீ மதிக்கவில்லையோ என்று கேளாமல் கேட்கிறான் மாமன் மாரீசன்.*

***3249. 'செய்தாயேனும், தீவினையோடும்***
***பழி அல்லால்***
***எய்தாது, எய்தாது; எய்தின், இராமன்,***
***உலகு ஈன்றான்,***
***வைதால் அன்ன வாளிகள் கொண்டு,***
***உன் வழியோடும்***
***கொய்தான் அன்றே, கொற்றம்***
***முடித்து, உன் குழு எல்லாம்?***

***'செய்தாயேனும்* - (என் கருத்தை மீறி) நீ செயல்பட்டாலும்; *தீ வினையோடும் பழி அல்லால்* - பாவமும் பழியும் அன்றி (வேறு நன்மை); *எய்தாது எய்தாது* - உனக்கு நிச்சயம் கிடைக்காது; *எய்தின்* -ஒருவேளைஉன் எண்ணப்படி (சீதையைச் சிறைபிடிப்பதில் வெற்றி பெற்றாலும்;*உலகு ஈன்றான் இராமன்* - உலகையெல்லாம் படைத்தளிக்கும் இராமபிரான்; *வைதால் அன்ன வாளிகள் கொண்டு* - (முனிவர்) சாபம் போன்ற கூரிய அம்புகளால்; *உன்குழு எல்லாம்* - உன் இனம் முழுவதையும்; *உன் வழியோடும்* - உன் சந்ததிகளோடும் சேர்த்து; *கொற்றம் முடித்து* - உங்கள் வெற்றி (வரலாறு) முடித்து; *கொய்தான் அன்றே* -நிச்சயமாய் அழித்துவிடுவான்.*

*பாவம் மறுமையையும், பழி இம்மையையும் அழிக்கும் என்பது கருத்து. உன்னால் உன் குலமும் அழியும் என எச்சரித்தான்.*

*வைதாலன்ன வாளிகள் - பால காண்டம் தாடகை வதைப் படலத்தில், 'சொல் ஒக்கும் கடிய வேகச் சுடு சரம்' (378) என்பதனோடு ஒப்புநோக்கத்தக்கது. எய்தாது, எய்தாது - அடுக்கு, உறுதியை வலியுறுத்தியது. நிகழ்ந்தே தீருமென்ற உறுதியால் கொய்தான் என்று இறந்த காலத்தில் குறித்தான்; கால வழுவமைதி.*

***3250. 'என்றால், என்னே! எண்ணலையே நீ,***
***கரன் என்பான்,***
***நின் தானைக்கு மேல் உளன் என்னும்***
***நிலை? அம்மா!***
***தன் தானைத் திண் தேரொடும்***

***மாளத் தனு ஒன்றால்***
***கொன்றான்; முற்றும் கொல்ல,***
***மனத்தில் குறிகொண்டான்.***

***என்றால்** - இவ்வாறு நான் அறிவுரை கூறினாலும்; **என்னே நீ எண்ணலையே** - ஏனோ நீ சிந்தித்துப் பார்க்க மறுக்கின்றாயே; **நின் தானைக்கு மேல் என்னும் நிலை உளன்** - உன் படைகளுக்குத் தலைவனாக உயர் நிலையில் இருந்த; **கரன் என்பான்** - கரன் என்னும் வீரன்; **தன் தானை** - தன் சேனைகளோடும்; **திண் தேரொடும் மாள** - வலிமை மிக்க தேர்ப் படைகளோடும் அழியும்படி; **தனு ஒன்றால் கொன்றான்** - ஒப்பற்ற தன் வில்லால் கொன்ற இராமன்; **முற்றும் கொல்ல-** அரக்கர் இனம் முழுதையும் அழிக்க; **மனத்தில் குறி கொண்டான்** - இப்போது மனத்திற் கருதி இருக்கின்றான்; **அம்மா** - இந்நிலை இரங்கத்தக்கது.*

*கரன் முதலியோரை அழித்தமை அவன் 'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன்' என்பதைக் காட்டும். அவ்வாறிருந்தும் நீ அறிவு பெற்றாய் இல்லை என்றான் மாரீசன்.*

***3251. 'வெய்யோர் யாரே, வீர விராதன்***
***துணை வெய்யோர்?***
***ஐயோ! போனான், அம்பொடும், உம்பர்க்கு***
***அவன் என்றால்,***
***உய்வார் யாரே நம்மில் எனக்***
***கொண்டு, உணர்தோறும்,***
***நையாநின்றேன்; நீ இது***
***உரைத்து நலிவாயோ?***

***வெய்யோர்** - கொடியவர்களில்; **வீர விராதன் துணை வெய்யோர்-** வீரனாகிய விராதனுக்கு இணையான கொடியவர்; **யாரே** - யார் உளர்?; **அம்பொடும்** - (இராமபிரான்) அம்பினால்; **ஐயோ** - என்ன பரிதாபம்!; **உம்பர்க்கு அவன் போனான் என்றால்** - வானுலகுக்கு அவனும் கொல்லப்பட்டுச் சென்றான் எனில்; **நம்மில் யாரே உய்வார்** - (அவ்விராமனிடமிருந்து) நம்மவரில் யார்தான் தப்பிப் பிழைக்க முடியும்?; **எனக்கொண்டு** - என்று கருதி; **உணர்தோறும் நையா நின்றேன்** -எண்ண, எண்ண நொந்திருக்கின்றேன்; **நீ இது உரைத்து நலிவாயோ?** - இப்போது (இவ்வாறு என்னிடம்) மேலும் கூறி என் வருத்தத்தை மிகுதிப்படுத்துவாயோ?*

*விராதன் வதை நமக்கு ஒரு பாடமன்றோ என மாரீசன் எடுத்துக் கூறினான். விராதனை இராமலக்குவர் வாளால் அழித்தனர். (2550) இங்கே அம்பு என்றது ஆயுதம் என்ற பொருளில் கொள்ளத்தக்கது.*

***3252. 'மாண்டார், மாண்டார்; நீ இனி***
***மாள்வார் தொழில் செய்ய***

***வேண்டா, வேண்டா; செய்திடின்,***
***உய்வான் விதி உண்டோ?***
***ஆண்டார் ஆண்டார் எத்தனை***
***என்கேன்? அறம் நோனார்,***
***ஈண்டார்; ஈண்டு ஆர் நின்றவர்?***
***எல்லாம் இலர் அன்றோ?***

***மாண்டார் மாண்டார்*** *- ஏற்கெனவே இறந்தவர்கள் இறந்து போயினர்;* ***இனி நீ*** *- இனிமேல் நீ;* ***மாள்வார் தொழில் செய்ய*** *- மரணமுறப் போகின்றவர்கள் செயத் தக்க செயலைச் செய்ய;* ***வேண்டா வேண்டா*** *- (அருள் கூர்ந்து) முறபட வேண்டாம்;* ***செய்திடின்*** *- நீ அவ்வாறு செய்வாயானால்;* ***உய்வான் விதி உண்டோ*** *- தப்பிப் பிழைக்க வழியும் உண்டோ? (இல்லை);* ***ஆண்டார் ஆண்டார்*** *- உனக்கு முன்னே இவ்வுலகை ஆண்டு சென்றோர்;* ***எத்தனை என்கேன்*** *-எத்தனையென்று கணக்குரைக்க முடியாது;* ***அறம் நோனார்*** *- அறத்தை நோற்காதவர்;* ***ஈண்டார்*** *- நிலை பெற்று நின்றதில்லை;* ***ஈண்டு ஆர் நின்றவர்*** *- (மேலும்) இவ்வுலகில்அழியாது நிலைத்தாரும் யாரும் இல்லை;* ***எல்லாம் இலர் அன்றோ?*** *- எல்லாரும் இல்லாமல் மறைந்தவர்கள் தானே?*

*அழிகின்றவர் செய்யும் செயலை நீயும் செய்யாதே. அறவழி நிற்போரே உண்மையில் அழியாதார். மற்றொன்று, யாக்கை நிலையாமை உணர்ந்து உண்மைகளைத் தேறுதல் வேண்டும் என மாரீசன் பலவாறு அறம் கூறினான்.*

*3253.* ***'எம்பிக்கும் என் அன்னைதனக்கும்***
***இறுதிக்கு ஓர்***
***அம்பு உய்க்கும் போர் வில்லிதனக்கும்,***
***அயல் நிற்கும்***
***தம்பிக்கும், என் ஆண்மை***
***தவிர்ந்தே தளர்வுற்றேன்;***
***கம்பிக்கும் என் நெஞ்சு, அவன்***
***என்றே; கவல்கின்றேன்.***

***'எம்பிக்கும்*** *- என் தம்பி சுபாகுவுக்கும்;* ***என் அன்னை தனக்கும்*** *- என் தாய் தாடகைக்கும்;* ***இறுதிக்கு*** *- உயிருக்கு அழிவு நேரும்படி;* ***ஓர் அம்பு உய்க்கும்*** *- ஒப்பற்ற தன் இராம பாணத்தை ஏவிய;* ***போர் வில்லி தனக்கும்*** *- போராற்றல் வாய்ந்த வில்லாளியான இராமனுக்கும்;* ***அயல் நிற்கும் தம்பிக்கும்*** *- அவன் அருகிலேயே இருக்கும் தம்பி இலக்குவனுக்கும்;* ***என் ஆண்மை தவிர்ந்தே*** *- என் வீரம் பின்னடைந்து;* ***தளர்வுற்றேன்*** *- மெலிந்துள்ளேன்;* ***அவன் என்றே*** *- அந்த இராமன் அல்லவா (உனக்கும் பகையாவான்) என்று;* ***கம்பிக்கும் என் நெஞ்சு*** *- என் மனமும் மிக நடுங்கும்;* ***கவல்கின்றேன்*** *- (விளைவு எண்ணிக்)கவலையும் கொள்ளுகின்றேன்.*

*'முன்னர் ஏற்பட்ட அனுபவத்தால் இராமனின் வல்லமையை நான் அறிவேன். அதனால் கலங்குகின்றேன்' என்றான் மாரீசன்.*

***3254. ' "நின்றும், சென்றும், வாழ்வன***
***யாவும் நிலையாவால்;***
***பொன்றும்" என்னும் மெய்ம்மை***
***உணர்ந்தாய்; புலை ஆடற்கு***
***ஒன்றும் உன்னாய்; என் உரை***
***கொள்ளாய்; உயர் செல்வத்து,***
***என்றும், என்றும், வைகுதி;***
***ஐயா! இனி' என்றான்.***

***'நின்றும் சென்றும் வாழ்வன யாவும் -*** *தாவர சங்கமம் என்று கூறப்படும் நிலையியல் இயங்கியல் பொருள்கள் எவையும்;* ***நிலையா -*** *நிலைத்து நிற்கமாட்டா;* ***பொன்றும் -*** *அழிந்தே தீரும்;* ***என்னும் மெய்ம்மைஉணர்ந்தாய் -*** *என்னும் உண்மையை நீ உணர்ந்திருக்கிறாய்;* ***புலைஆடற்கு ஒன்றும் உன்னாய் -*** *தீயன செய்தற்குச் சிறிதும் சிந்தியாதவனாய்;* ***என் உரை கொள்ளாய் -*** *என் பேச்சைக் கேட்பாயாக;* ***இனி ஐயா -*** *இனிமேலேனும், தலைமைக்கு உரியாய்;* ***உயல் செல்வத்து -*** *ஓங்கிய செல்வங்களோடு;* ***என்றும் என்றும் வைகுதி -*** *எப்போதும் எந்நாளும் இனிதே வாழ்வாயாக;* ***என்றான் -*** *என (மாரீசன்) எடுத்துரைத்தான்;* ***ஆல் -*** *அசை.*

*'உலகில் எப்பொருளும் நிலையாமையை உணர்ந்து நன்னெறி நின்று நலமுடன் வாழ்க' என வேண்டினான் மாரீசன். இராவணனின் அருந்தவம், அது தந்த பெரு வாழ்வு. அறநெறி தவறுதலால் விளையும் அழிவு, இந்திரன் போன்றோர் காமத்தால் வீழ்ந்தமை, கரன் முதலியோரை அழித்த இராமன் வலிமை எனப் பல நிலைகளிலும் மாரீசன் சிந்தித்து அறிவுரை கூறினான்.*

*இராவணன் மாரீசனை முனிதல்*

*கலி விருத்தம்*

***3255. ' "கங்கை சடை வைத்தவனொடும்***
***கயிலை வெற்பு ஓர்***
***அங்கையின் எடுத்த எனது ஆடு***
***எழில் மணித் தோள்,***
***இங்கு ஓர் மனிதற்கு எளிய"***
***என்றனை' என, தன்***
***வெங் கண் எரிய, புருவம்***
***மீதுற, விடைத்தான்.***

*(மாரீசன் அறிவுரை கேட்ட இராவணன்),* ***'கங்கை சடை வைத்த வனொடும் -*** *கங்கையைத் தலையின் மீது வைத்திருக்கும் சிவபெருமானோடு;* ***கயிலை வெற்பு -*** *கயிலையங்கிரியை;* ***ஓர் அங்கையின் எடுத்த -*** *உள்ளங்கை ஒன்றால் எடுத்த;* ***எனது ஆடு***

***எழில் மணித்தோள் -*** *என்னுடைய அழகு பொலியும் மாணிக்கத் தோள்கள்;* ***இங்கு ஓர் மனிதற்கு எளிய -*** *இவ்வுலக மானுடன் ஒருவனுக்கு இளைத்து விட்டன;* ***என்றனை என -*** *என்று கூறிவிட்டாயே என்று;* ***தன் வெங் கண் எரிய -*** *தன் கொடிய கண்களில் நெருப்புத் தவழ;* ***புருவம் மீதுற -****புருவங்கள் சினத்தால் மேலுயர;* ***விடைத்தான் -*** *பெருஞ் சினம் அடைந்தான்.*

*கயிலையங்கிரி எடுத்தவனுக்கு மானுடன் வலியவன் ஆவானோ என்றான் இராவணன்.*

***3256. 'நிகழ்ந்ததை நினைத்திலை; என்***
***நெஞ்சின் நிலை, அஞ்சாது***
***இகழ்ந்தனை; எனக்கு இளைய நங்கை***
***முகம் எங்கும்***
***அகழ்ந்த வரை ஒப்பு உற***
***அமைத்தவரை, ஐயா!***
***புகழ்ந்தனை; தனிப் பிழை; பொறுத்தனென்***
***இது' என்றான்.***

***'நிகழ்ந்ததை நினைத்திலை -*** *(நம் குலத்துக்கு) நேர்ந்த அவமானத்தை நீ எண்ணவில்லை;* ***என் நெஞ்சின் நிலை -*** *என் மன உறுதி நிலையை;* ***அஞ்சாது இகழ்ந்தனை -*** *சற்றும் பயமின்றி இகழ்ச்சி செய்தாய்;* ***எனக்கு இளைய நங்கை முகம் எங்கும் -*** *என் தங்கை சூர்ப்பணகையின் முகத்தையெல்லாம்;* ***அகழ்ந்த வரை ஒப்புற அமைத்த வரை -*** *குடைந்த மலை போலாகும்படி தீமை செய்தவரை;* ***புகழ்ந்தனை -*** *புகழ்ந்தும் பேசினாய்;* ***ஐயா -*** *ஐயனே!;* ***தனிப்பிழை இது -*** *இப் பெருங் குற்றத்தை;* ***பொறுத்தனென் -*** *மன்னித்தேன்;* ***என்றான் -*** *என இராவணன் கூறினான்.*

*குலப்பழி பொறுத்தல், இராவணன் ஆற்றலை இகழ்தல், தங்கைக்குத் தீமை செய்தாரைப் புகழ்தல் என்பன தனிப்பிழை என்றான் இராவணன்.*

*மீண்டும் மாரீசன் கூறுதல்*

***3257. தன்னை முனிவுற்ற***
***தறுகண் தகவிலோனை,***
***பின்னை முனிவுற்றிடும் எனத்***
***தவிர்தல் பேணான்***
***'உன்னை முனிவுற்று உன்***
***குலத்தை முனிவுற்றாய்;***
***என்னை முனிவுற்றிலை; இது***
***என்?' என இசைத்தான்.***

***தன்னை முனிவுற்ற -*** *தன் மீது சினம் கொண்ட;* ***தறுகண் -****வீரம் உடையவனும்;* ***தகவு இலோனை -*** *பெருமை இல்லாதவனுமான இராவணனை;* ***பின்னை முனிவுற்றிடும் எனத் -*** *மேலும் தன் மீது கோபம் கொள்ளுவான் என்பதனால்;* ***தவிர்தல் பேணான் -*** *அறிவுரை கூறாது விலக விரும்பாதவனாய்;* ***'உன்னை முனிவுற்று -*** *உன்னோடு நீயே சினம் கொண்டு;* ***உன் குலத்தை முனிவுற்றாய் -*** *உன் குலத்தோடும் சினம்கொண்டாய்; (உண்மையில்);* ***என்னை முனிவுற்றிலை -*** *என்னோடுசினமுற்றாய் இல்லை;* ***இது என் -*** *ஏன் இவ்வாறு செய்கிறாய்';****என இசைத்தான் -*** *என்று கேட்டான்.*

***உன் சினம் எனக்குச் செய்யும் அழிவினும் உனக்கும் குலத்துக்கும் அழிவு தருவதாகும் என மாரீசன் சுட்டிக் காட்டுகிறான்.2***

***3258'எடுத்த மலையே நினையின், "ஈசன்,***
***இகல் வில்லாய்***
***வடித்த மலை, நீ இது, வலித்தி"***
***என, வாரிப்***
***பிடித்த மலை, நாண் இடை பிணித்து***
***ஒருவன் மேல்நாள்***
***ஒடித்த மலை, அண்ட முகடு உற்ற***
***மலை அன்றோ?***

***எடுத்த மலையே நினையின் -*** *கயிலையங்கிரியை எடுத்ததையே பெரிதாக நீ கருதினால்;* ***ஈசன் இகல் வில்லாய் வடித்த மலை -****இது சிவபெருமான் முன்பு வளைத்து வில்லாய்ப் பிடித்த மேருமலை போன்றது;* ***நீ இது வலித்தி என -*** *இதனை நீ வளைப்பாயாக (என்று சனகன் கூற);* ***வாரிப் பிடித்த மலை -*** *அள்ளியெடுத்துப் பிடித்த மலைக்கு நிகரானதும்;* ***ஒருவன் -*** *ஒப்பற்ற இராமன் (அன்று);* ***நாணிடைப் பிணித்து -*** *நாண் கயிற்றைப் பற்றி;* ***மேல் நாள் -*** *முன்னொருநாள்;* ***ஒடித்த மலை -****ஒடித்த மலைக்கு நிகரானதுமான வில்;* ***அண்ட முகடு -*** *உச்சி வானத்தை;****உற்ற மலை அன்றோ -*** *தழுவிய மேரு மலை போன்றதே அன்றோ?*

*நீ எடுத்தது கயிலை மலை. ஆனால் இராமன் ஒடித்த வில் அதனினும் மேலான மேருமலை போன்றது. இதனால் வலிமையினை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுகிறான். சொற்பொருட் பின்வருநிலை அணி.*

***3259. 'யாதும் அறியாய்; உரை கொளாய்;***
***இகல் இராமன்***
***கோதை புனையாமுன், உயிர்***
***கொள்ளைபடும் அன்றே;***
***பேதை மதியால், "இஃது ஓர் பெண்***
***உருவம்" என்றாய்;***
***சீதை உருவோ? நிருதர் தீவினை***
***அது அன்றோ?***

***'யாதும் அறியாய் -*** *இராமன் வலிமை முதலானவற்றை முழுதும்அறியாதவன் நீ;* ***உரை கொளாய் -*** *எடுத்துச் சொன்னாலும் உணர மறுக்கிறாய்;* ***இகல் இராமன் கோதை புனையா முன் -*** *உன் பகையாய் நீ கருதும் இராமன் போர் புரியத் தும்பை மாலை சூடு முன்;* ***உயிர் கொள்ளை படும் அன்றே -*** *அவன் பகைவர் உயிர் சூறையாடப்படும் அன்றோ?;* ***பேதை மதியால் -*** *அறியாமை கொண்ட மதியால்;* ***இஃது ஓர் பெண் உருவம் என்றாய் -*** *(சீதையை) ஒரு மனிதப் பெண்ணாக மதித்திருக்கின்றாய்;* ***அது சீதை உருவோ? -*** *உண்மையில் அது சீதையின் வடிவமோ? (அன்று);* ***நிருதர் தீவினை அன்றோ -*** *அரக்கர் இழைத்த பாவத்தின் வடிவம் அன்றோ?'*

*தானும் அறியான், சொல் புத்தியும் கேளான் என இராவணனை இகழ்ந்தான் மாரீசன். இராமன் போருக்கு மாலை சூடு முன்பே பகைவர் உயிரிழப்பர் என அவன் ஆற்றலின் மிகுதி கூறினான். கோதை - மாலை. இங்கே அதிரப் பொருவதற்கு அடையாளமாகிய தும்பைப் பூ மாலை.*

***3260. ' "உஞ்சு பிழையாய் உறவினோடும்"***
***என உன்னா,***
***நெஞ்சு பறைபோதும்; அது***
***நீ நினையகில்லாய்;***
***அஞ்சும் எனது ஆர் உயிர்; அறிந்து***
***அருகு நின்றார்,***
***நஞ்சு நுகர்வாரை, "இது நன்று"***
***எனலும் நன்றோ?***

***"உஞ்சு பிழையாய் உறவினோடும் -*** *உன் உறவினரோடு நீயும் தப்ப முடியாது;* ***என உன்னா -*** *என்று எண்ணும் அளவில்;* ***நெஞ்சு பறை போதும் -*** *நெஞ்சம் பறை கொட்டி அறிவிக்கும் நிலையில்;* ***எனது ஆருயிர் அஞ்சும் -*** *என்அரிய உயிர் பதைக்கின்றது;* ***அது நீ நினையகில்லாய் -*** *நீ அதனைக் கருத்தில் எண்ணாதிருந்தாய்;* ***நஞ்சு நுகர்வாரை -*** *விடம் அருந்துகின்றவர்களை;* ***அறிந்து அருகு நின்றார் -*** *அறிந்து பக்கத்தில் நின்றோர்;* ***இது நன்று -*** *உங்கள் செயல் நன்று;* ***எனலும் நன்றோ -*** *என்று கூறுதலும் நல்ல செயலாகுமா?"*

*நீ நஞ்சு அருந்துவது போல் தீமை செய்யக் கருதுகையில், அதனை அறிந்த நான் நன்று எனப் பாராட்டல் சரியாகுமா எனக் கேட்டான் மாரீசன் நினைகில்லாய் - எண்ணும் ஆற்றல் இல்லாதவனாயினாய். (இல் - ஆற்றலை உணர்த்த வரும் இடைச்சொல்.)*

***3261. 'ஈசன் முதல் மற்றும் இமையோர்***
***உலகும், மற்றைத்***
***தேசம் முதல் முற்றும், ஓர்***
***இமைப்பின் உயிர் தின்ப-***
***கோசிகன் அளித்த கடவுட்***
***படை, கொதிப்போடு***

***ஆசு இல, கணிப்பு இல, இராமன்***
***அருள் நிற்ப,***

*__ஈசன் முதல் மற்றும் இமையோர் உலகும் -__ சிவபெருமான் முதல் தேவர் உலகு வரை; __மற்றைத் தேசம் முதல் முற்றும் -__ வேறு பகுதிகளையும்சேர்த்து முழுவதிலுமாய்; __கோசிகன் அளித்த கடவுட் படை -__ விசுவாமித்திர முனிவனால் வழங்கப்பட்ட தெய்வ அம்புகள்;__கொதிப்போடு-__ பொங்கும் அனலோடு; __ஓர் இமைப்பின் உயிர் தின்ப -__ இமைப் பொழுதில் உயிரைப் பருகி முடிக்கும் வல்லமை உடையன; __ஆசில -__ குற்றம் (தோல்வி) அறியாதவை; __கணிப்புஇல் -__ கணக்கில்லாதவை;__இராமன் அருள் நிற்ப -__ இராமபிரானிடம் (ஏவல் பூண்டு) அருள் காத்து நிற்பனவாம்.*

*தாடகை வதம் முடிந்து வேள்வி காத்தபின் விசுவாமித்திரரும், முனிவரும் அளித்த தெய்வப் படைகள் பல இராமனிடம் பொருந்திஉள்ளன. இது குறித்துப் பால காண்டம் வேள்விப் படலம் (394, 395, 396) கௌசிகன் - விசுவாமித்திர முனிவர். குசிகன் குலத்தில் பிறந்தோன்.*

***3262. 'வேதனை செய் காம விடம்***
***மேலிட மெலிந்தாய்;***
***தீது உரைசெய்தாய்; இனைய செய்கை***
***சிதைவு அன்றோ?***
***மாதுலனும் ஆய், மரபின் முந்தை***
***உற வந்தேன்,***
***ஈது உரை செய்தேன்; அதனை, எந்தை!***
***தவிர்க' என்றான்.***

*__வேதனை செய் காம விடம் -__ துயரம் தருகின்ற காமம் என்ற நஞ்சு; __மேலிட மெலிந்தாய் -__ மிகுதிப்படச் சோர்வுற்றாய்; __தீது உரை செய்தாய் -__ கொடுஞ் சொற்களையும் கூறினாய்; __இனைய செய்கை சிதைவு அன்றோ -__ இவ்வாறு செய்தல் அழிவு ஆகுமன்றோ?; __மாதுலனும் ஆய் -__உனக்கு மாமன் உறவுடையவனாய்; __மரபின் முந்தை உற வந்தேன் -__ உன் குலத்தில் முந்திப் பிறந்தவனானேன்; __ஈது உரை செய்தேன் -__ இம்மொழிகளை உனக்குச் சொன்னேன்; __எந்தை -__ என ஐயா;__அதனைத் தவிர்க -__ இத்தீய கருத்தை விட்டு விடுக; __என்றான் -__ என (மாரீசன்இராவணனுக்கு மறுபடியும் அறிவுரை பகன்றான்.*

*உன் குலத்து முந்தியவன் என்பதால் நீ என்னைக் கடிந்த போதும் நல்லன கூறினேன் என அறிவுரை கூறினான் மாரீசன். மாதாவின் உடன் பிறப்பு மாதுலன்.*

***3263. என்ன, உரை அத்தனையும்,***
***எத்தனையும் எண்ணிச்***
***சொன்னவனை ஏசின அரக்கர்***
***பதி சொன்னான்:***

***'அன்னை உயிர் செற்றவனை***
***அஞ்சி உறைகின்றாய்;***
***உன்னை, ஒருவற்கு ஒருவன்***
***என்று உணர்க்கை நன்றே?***

***என்ன, உரை அத்தனையும் -*** *என்று மாரீசன் சொன்ன கூற்றுகள் அனைத்தையும்;* ***எத்தனையும் எண்ணிச் சொன்னவனை -****சிறிதேனும் எண்ணிப் பார்க்கும்படிக் கூறிய மாரீசனை;* ***ஏசின -*** *இகழ்ந்த;****அரக்கர்பதி சொன்னான் -*** *அரக்கர் தலைவனாகிய இராவணன் கூறலானான்;****'அன்னை உயிர் செற்றவனை -*** *உன் தாய் தாடகையின் உயிரை அழித்தவனை;* ***அஞ்சி உறைகின்றாய் -*** *எண்ணி அச்ச முற்று இன்னும் உயிர்வாழ்கின்றாய்;* ***உன்னை -*** *(அப்படிப்பட்ட) உன்னை;* ***ஒருவற்குஒருவன் என்று -*** *ஒர் ஆண்மையாளன் என்று;* ***உணர்கை நன்றோ -*** *நினைப்பது பொருத்தமாகுமா? (ஆகாது என்றபடி).*

*தாயைக் கொன்றவனைப் பழிக்குப் பழி வாங்காத நீயும் ஆண் மகன்தானா என மாரீசனிடம் இராவணன் வினவினான். ஒருவற்கு ஒருவன் - இணையான சிறப்புள்ள வீரன் என மதித்தல் எனப் பொருள் பட்டது.*

***3264. 'திக்கயம் ஒளிப்ப, நிலை***
***தேவர் கெட, வானம்***
***புக்கு, அவர் இருக்கை புகைவித்து,***
***உலகம் யாவும்***
***சக்கரம் நடத்தும் எனையோ,***
***தயரதன் தன்***
***மக்கள் நலிகிற்பர்? இது***
***நன்று வலி அன்றோ?***

***'திக்கயம் ஒளிப்ப -*** *திசை யானைகள் ஓடி ஒளிந்து கொள்ளவும்;* ***தேவர்நிலை கெட -*** *தேவர் தங்கள் பெருமை அழியவும்;* ***வானம் புக்கு -*** *விண்ணுலகை நண்ணி;* ***அவர் இருக்கை புகைவித்து -****அவர்களின் மாட மாளிகைகளை நெருப்புக்கு இரையாக்கி;* ***உலகம் யாவும் -*** *அனைத்துலகங்களிலும்;* ***சக்கரம் நடத்தும் -*** *ஆணைச் சக்கரம் செலுத்தும்;* ***எனையோ -*** *(நிகரற்ற) என்னையோ;* ***தயரதன் தன் மக்கள் நலிகிற்பர் -*** *தசரதன் புதல்வரான இராமலக்குவர் அழிக்க வல்லார்?;* ***வலி இது நன்று அன்றோ -*** *இந்த ஆற்றலும் நன்று நன்று (என்றான்)*

*ஏனம் தோன்றும்படி தன் வலிமையோடு இராமலக்குவர் வலிமையை ஒப்பிட்டுக் காட்டிப் பேசினான் இராவணன். நன்று நன்று என்ற அடுக்கு ஏளனம் குறித்தது.* *2*

*3265 'மூஉலகினுக்கும் ஒரு*
*நாயகம் முடித்தேன்;*
*மேவலர் கிடைக்கின், இதன்மேல்*
*இனியது உண்டோ?*
*ஏவல் செயகிற்றி, எனது*
*ஆணை வழி; எண்ணிக்*
*காவல் செய் அமைச்சர் கடன்*
*நீ கடவது உண்டோ?*

***மூவுலகினுக்கும் -*** *மேல், நடு, கீழ் எனும் மூன்று உலகங்களுக்கு;* ***ஒரு நாயகம் -*** *தனி நாயகனாய்;* ***முடித்தேன் -*** *வெற்றி பெற்று முடித்தேன்; (அத்தகைய எனக்கு);* ***மேவலர் கிடைக்கின் -****(இன்னும் வெல்லுதற்குப்) பகைவர் கிடைப்பாராயின;* ***இதன் மேல் இனியது உண்டோ -*** *அதனினும் இனிதான ஒன்று வேறு உண்டோ;* ***எனது ஆணை வழி ஏவல் செயகிற்றி -*** *என் கட்டளைப்படி ஏவல் செய்வாயாக;* ***எண்ணிக்காவல் செய் அமைச்சர் கடன் -*** *சிந்தனை செய்து அரசுக்குப் பாதுகாப்புச் செய்யும் அமைச்சர் பொறுப்பை;* ***நீ கடவது உண்டோ -****நீ செய்யக் கருதுதல் பொருந்துமோ? (பொருந்தாது).*

*என் பணி செய்வதே உன் கடமை. அறிவுரை மொழியும் அமைச்சர் பொறுப்பு உனக்கு உரியதன்று என்று மாரீசனுக்கு இராவணன் கூறினான்.*

*(அறிவுடைய அமைச்சன் நீ அல்லை) (7361) எனக் கும்பகருணனிடமும் இராவணன் கூறுதல் ஒப்புநோக்கத் தக்கது.*

*3266. 'மறுத்தனை எனப் பெறினும்,*
*நின்னை வடி வாளால்*
*ஒறுத்து, மனம் உற்றது*
*முடிப்பென்; ஒழிகல்லேன்;*
*வெறுப்பன கிளத்தலுறும் இத்*
*தொழிலை விட்டு, என்*
*குறிப்பின்வழி நிற்றி, உயிர்கொண்டு*
*உழலின்' என்றான்.*

***மறுத்தனை எனப் பெறினும் -*** *என் கட்டளையை நீ மறுத்தாய் என்றாலும்;* ***நின்னை -*** *உன்னை;* ***வடிவாளால் -*** *என் கூர்மையானவாளால்;* ***ஒறுத்து -*** *வெட்டி;* ***மனம் உற்றது முடிப்பென் -*** *என் மனம்கருதியதை நிறைவேற்றுவேன்;* ***ஒழிகல்லேன் -*** *இந்நிலையிலிருந்துவிலகமாட்டேன்;* ***வெறுப்பன -*** *நான் வெறுக்கும் அறிவுரைகளை;* ***கிளத்தலுறும் இத்தொழிலைவிட்டு -*** *எடுத்துக் கூறும் இந்தச் செயலை விட்டொழித்து;* ***உயிர் கொண்டு உழலின் -*** *அவ்வாறு செய்தால் உயிரோடு பிழைக்கலாகும்;* ***என்***

***குறிப்பின் வழி நிற்றி*** *- என் கருத்தின் வழியே நின்று செயல் புரிவாயாக;* ***என்றான்-*** *என்று (இராவணன் மாரீசனுக்குக்) கூறினான்.*

*அறிவுரைகளை ஏற்கும் நிலையில் அவன் இல்லை என்பதையும், முடிவுகளை எடுத்த நிலையில் உள்ளான் என்பதையும் இராவணன் பேச்சுப் புலப்படுத்துகின்றது.*

*மாரீசன் உடன்படல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3267. அரக்கன் அஃது உரைத்தலோடும், அறிந்தனன்***
***அடங்கி, ' "நெஞ்சம்***
***தருக்கினர் கெடுவர்" என்றல் தத்துவ***
***நிலையிற்று அன்றோ?***
***"செருக்குநர்த் தீர்த்தும்" என்பார்தம்மின***
***ஆர் செருக்கர்?' என்னா,***
***உருக்கிய செம்பின் உற்ற நீர்***
***என, உரைக்கலுற்றான்:***

***அரக்கன் அஃது உரைத்தலோடும்*** *- இராவணன் அவ்வாறு கூறியதும்;* ***அறிந்தனன் அடங்கி*** *- இராவணன் மனப்போக்கை அறிந்தவனாய் அடக்கம் மேற்கொண்டு;* ***'நெஞ்சம் தருக்கினர் கெடுவர்' என்றல்*** *- மனச் செருக்குக் கொண்டவர்கள் அழிவார்கள் என்பது;* ***தத்துவ நிலையிற்று அன்றோ*** *- ஆழ்ந்த தத்துவ நிலையுடையது அல்லவா? (மேலும்);* ***"செருக்குநர்த் தீர்த்தும்" என்பார் தம்மின்*** *- செருக்கு உற்றவர்களை அழித்துவிடுவோம் என்று கருதுவோரைவிட;* ***ஆர் செருக்கர்*** *- மிகுந்த செருக்கு உடையவர்கள் யார்?;* ***என்னா*** *- என்று மனத்துள் நினைத்து;* ***உருக்கிய செம்பின் உற்ற நீர் என*** *- உருக்கப்பட்ட செம்பின் மீது பட்ட தண்ணீர்த்துளி வற்றுதல் போல; (வேகம் குன்றி);* ***உரைக்கலுற்றான்*** *- மாரீசன் பேசலுற்றான்.*

*தருக்குற்றார் அழிவர். தருக்குற்றவனைத் திருத்துதலும் பேதைமை என உணர்ந்து மாரீசன் அடங்கினான். மாரீசனின் உணர்வு முற்றும்அடங்கினமைக்கு உருக்கிய செம்பின் உற்ற நீர் உவமை.*

***3268. உன்வயின் உறுதி நோக்கி, உண்மையின்***
***உணர்த்தினேன்; மற்று,***
***என்வயின் இறுதி நோக்கி, அச்சத்தால்***
***இசைத்தேன் அல்லேன்;***
***நன்மையும் தீமை அன்றே, நாசம்***
***வந்து உற்ற போது?***
***புன்மையின் நின்ற நீராய்!***
***செய்வது புகல்தி' என்றான்.***

*'**உன்வயின் உறுதி நோக்கி** - (இராவணனாகிய) உன் நலத்தினை நாடி; **உண்மையின் உணர்த்தினேன்** - உண்மையாகவே எடுத்துக் கூறினேன்; **மற்று** - அவ்வாறன்றி; **என்வயின் இறுதி நோக்கி** -எனக்கு அழிவு நேரும் என்று கருதி; **அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்** - பயம் காரணமாக நான் அறிவுரை கூறினேன் இல்லை; **நாசம் வந்துஉற்றபோது** - அழிவு நெருங்கி வரும் நேரத்தில்; **நன்மையும் தீமை அன்றே** - நல்லது சொன்னாலும் அது தீமையாகவே கருதப்படும் அல்லவா?; **புன்மையின் நின்ற நீராய்** - தீய நெறியில் செல்லும் தன்மை உடையவனே; **செய்வது புகல்தி** - நான் செய்ய வேண்டியதைச் செப்புக'; **என்றான்** - என மாரீசன் (உடன்பட்டுப்) பேசினான்.*

*சீதையை அடையச் செய்திடும் சூழ்ச்சி*

***3269. என்றலும், எழுந்து புல்லி***
***ஏறிய வெகுளி நீங்கி,***
***'குன்று எனக் குவிந்த தோளாய்!***
***மாரவேள் கொதிக்கும் அம்பால்***
***பொன்றலில் இராமன் அம்பால் பொன்றலே***
***புகழ் உண்டு அன்றோ?***
***தென்றலைப் பகையைச் செய்த***
***சீதையைத் தருதி' என்றான்.***

***என்றலும்** - இவ்வாறு மாரீசன் கூறியதும்; **எழுந்து புல்லி** - இராவணன் எழுந்து அவனைத் தழுவி; **ஏறிய வெகுளி நீங்கி** -மேற் பொங்கிய சினம் மாறி; **'குன்று எனக் குவிந்த தோளாய்** -மலையெனத் திரண்ட தோள்களை உடையவனே; **மாரவேள் கொதிக்கும் அம்பால்** - மன்மதன் எய்த வேதனைக் கணையால்; **பொன்றலில்** - இறப்பதை விட; **இராமன் அம்பால்** - இராமனுடைய அம்பினால்; **பொன்றலே புகழ்உண்டு அன்றோ** - இறத்தலால் புகழ் ஏற்படும் அல்லவா?;**தென்றலைப் பகையைச் செய்த** - இனிய தென்றலையும் கொடிய பகையாக மாற்றிவிட்ட; **சீதையைத் தருதி** - சீதையை எனக்காகக் கொண்டு தருவாய்;**என்றான்** - என்று இராவணன் வேண்டினான். காமன் அம்பால் சாவதை விட இராமன் அம்பால் சாவது மேல்என்றான் இராவணன் : எவ்வாறாயினும் பின்னர் நிகழவிருப்பதை முன்னரே குறிப்பால் கூறுதல் கருதத்தக்கது.*
*3*

***3270*ஆண்டையான் அனைய கூற,**
***'அரக்கர் ஓர் இருவரோடும்,***
***பூண்ட என் மானம் தீரத்***
***தண்டகம் புக்க காலை,***
***தூண்டிய சரங்கள் பாய, துணைவர்***
***பட்டு உருள, அஞ்சி***
***மீண்டயான், சென்று செய்யும் வினை***
***என்கொல்? விளம்புக!" என்றான்.***

***ஆண்டையான் அனைய கூற -*** *அங்கிருந்த இராவணன் இவ்வாறு சொல்லியதும்;* ***அரக்கர் ஓர் இருவரோடும் -*** *இரண்டு அரக்கர் துணைவர;* ***பூண்ட என் மானம் தீர -*** *(தாயைக் கொன்ற) இராமனைப் பழி வாங்கும் வைராக்கியம் நிறைவேறுதற்காக;* ***தண்டகம் புக்க காலை -*** *தண்டகாரணியத்துக்கு (ஒரு சமயம் நான்) சென்ற போது;* ***தூண்டிய சரங்கள் பாய -*** *(இராமன் வில்லிலிருந்து) விடுபட்ட அம்புகள் பாய்ந்துவர;* ***துணைவர் பட்டு உருள -*** *என்னோடு துணைக்கு வந்த அரக்கர் இறந்து விழ;* ***அஞ்சி மீண்ட யான் -*** *பயந்து திரும்பி வந்த நான்;* ***சென்று செய்யும் -*** *இப்போது சென்று செய்யத்தக்க;* ***வினை என்கொல் -****பணி யாது?;* ***விளம்புக -*** *கூறுக;* ***என்றான் -*** *என (மாரீசன்) கேட்டான்.*

*கோதமன் வேள்வியின்போது இராமன் கணையால் கடலில் எறியப்பட்டான். (444) அதனை மாரீசன் இங்கு நினைவு கூர்கிறான்.*

*தண்டகாரண்யத்தில் மான் வடிவில் சென்று, இராமனைத் தாக்க மாரீசன் முயன்றதாக ஒரு செய்தி முதல் நூலில் கூறப்பட்டுள்ளது. இங்குக் கதைப் போக்கில் குறிக்கப் பெற்றது.*

*'முன் இருமுறை இராமன் அம்புக்குத் தப்பிப் பிழைத்த நான் மீண்டும் என்ன செய்ய இருக்கிறது' என மாரீசன் தன் செயலற்ற நிலையைக்கூறினான்.*

***3271. ஆயவன் அனைய கூற, அரக்கர் கோன்,***
***'ஐய! நொய்து உன்***
***தாயை ஆர் உயிர் உண்டானை, யான்***
***கொலச் சமைந்து நின்றேன்;***
***போய், ஐயா! புணர்ப்பது என்னே என்பது***
***பொருந்திற்று ஒன்றோ?***
***மாயையால் வஞ்சித்து அன்றோ வவ்வுதல்***
***அவளை' என்றான்.***

***ஆயவன் அனைய கூற -*** *மாரீசன் அவ்வாறு மொழியவும்;****அரக்கர் கோன் -*** *அரக்கர் தலைவனான இராவணன்;* ***'ஐய -*** *ஐயனே;* ***உன் தாயைநொய்து ஆருயிர் உண்டானை -*** *உனது தாயான தாடகையை இழிவான முறையில் மிக எளிதில் அழித்தவனை;* ***கொல -*** *கொல்லுதற்கு;****யான் சமைந்து நின்றேன் -*** *நான் ஒருப்பட்டு நிற்கின்றேன்;* ***ஐயா போய்ப்***

***புணர்ப்பது என்னே*** - ஐயனே, போய்ச் செயத் தக்கது என்ன; ***என்பது*** - என நீ கேட்பது; ***பொருந்திற்று ஒன்றோ*** - பொருத்தமான கேள்விதானா?; ***அவளை*** - அச்சீதையை; ***மாயையால் வஞ்சித்து அன்றோ வவ்வுதல்*** - மாயம் செய்து வஞ்சனையால் அன்றோ பற்றுதல் வேண்டும்; ***என்றான்*** - என்று (இராவணன்) கூறினான்.

*'என்ன செய்வது என்பதும் ஒரு கேள்வியா? போரிடுவதில்லை என முன்னமே சொல்லியிருப்பதால் மாய வஞ்சமே வழி' என இராவணன் கூறினான்.*

***3272. 'புறத்து இனி உரைப்பது என்னே?***
***புரவலன் தேவிதன்னைத்***
***திறத்துழி அன்றி, வஞ்சித்து***
***எய்துதல் சிறுமைத்து ஆகும்;***
***அறத்து உளது ஒக்கும் அன்றே? அமர்த்தலை***
***வென்று கொண்டு, உன்***
***மறத் துறை வளர்த்தி, மன்ன!' என்ன***
***மாரீசன் சொன்னான்.***

***மன்ன*** - வேந்தனே; ***புறத்து இனி உரைப்பது என்னே*** - இனி மேல் வேறு கூறுதற்கு யாது உள்ளது!; ***புரவலன் தேவி தன்னை*** -உலகு காக்கும் இராமனின் மனைவியை; ***திறத்துழி அன்றி*** - உன் திறன் காரணமாக அன்றி; ***வஞ்சித்து எய்துதல்*** - வஞ்சனையால் அடைதல் என்பது; ***சிறுமைத்து ஆகும்*** - உன் தகுதிக்குத் தாழ்வானது ஆகும்; ***அமர்த்தலை வென்று கொண்டு*** - போரில் இராமனை வெற்றி கொண்டு; ***உன் மறத்துறை வளர்த்தி*** - உன் வீரத் தகுதியை வளர்த்துக் கொள்வாயாக; ***அறத்து உளது ஒக்கும் அன்றே*** - அவ்வாறு செய்வது நீதியின் மரபுக்குப் பொருந்துவதும் ஆகும் அல்லவா?; ***என்ன மாரீசன் சொன்னான்*** - என்று மாரீசன் இராவணனிடம் கூறினான்.

*உன் தகுதிக்கும் பெருமைக்கும் வஞ்சனை தக்கதன்று; வீரத்தால் வெல்லுவதே மேன்மை என்று மாரீசன் கூறினான்.*

***3273. ஆனவன் உரைக்க, நக்க அரக்கர்கோன்,***
***'அவரை வெல்லத்***
***தானையும் வேண்டுமோ? என் தடக் கை***
***வாள் தக்கது அன்றோ?***
***ஏனையர் இறக்கின், தானும் தமியளாய்***
***இறக்கும் அன்றே***
***மானவள்? ஆதலாலே, மாயையின்***
***வலித்தும்' என்றான்.***

***ஆனவன் உரைக்க*** - உறவுடையவனான மாரீசன் இவ்வாறு கூறுதலும்; ***நக்க அரக்கர் கோன்*** - அது கேட்டுச் சிரித்த இராவணன்; ***அவரை வெல்ல*** - அம் மானுடரை வெற்றி கொள்ள; ***தானையும் வேண்டுமோ*** - சேனையும் அவசியம் தானோ?; ***என் தடக்கை வாள்***

***தக்கது அன்றோ*** - *என் வலிமைமிக்க கரங்களில் ஏந்திய வாள் ஒன்றுமே போதாதோ? (போதும் என்றாலும்);* ***ஏனையர் இறக்கின்*** - *தன்னைச்சார்ந்த இராமலக்குவர் மாய்வராயின்;* ***மானவள்*** - *மானுடப் பெண்ணான சீதையும்;* ***தானும் தமியளாய்*** - *தானும் தனித்திருக்கும் நிலை கருதி;* ***இறக்கும் அன்றே*** - *மடிந்து போவாள் அல்லவா?;* ***ஆதலாலே மாயையின் வலித்தும்*** - *அக்காரணத்தால் அவளை மாய வஞ்சனையில் கைப்பற்றுவோம்;* ***என்றான்*** - *என்று சொன்னான்.*

*மானவள் - மானுடப் பெண்; மான் போன்றவள், மானம் மிக்கவள் எனப் பல பொருள் விரிக்க இடம் தருகிறது. வஞ்சனை செய்ய வாய்ப்பான காரணம் கற்பிக்கின்றான் இராவணன். வஞ்சனைச் செயலுக்குச் சீதையிடம் இராவணன் வேறு ஒரு காரணம் சொல்வதை இராவணன் சூழ்ச்சிப்படலத்தில் காணலாம். (3401)*

***3274. 'தேவியைத் தீண்டாமுன்னம், இவன்***
***தலை சரத்தின் சிந்திப்***
***போம்வகை புணர்ப்பன் என்று, புந்தியால்***
***புகல்கின்றேற்கும்***
***ஆம் வகை ஆயிற்று இல்லை; யார்***
***விதி விளைவை ஓர்வார்?***
***ஏவிய செய்வது அல்லால், இல்லை வேறு***
***ஒன்று' என்று எண்ணா,***

***தேவியைத் தீண்டா முன்னம்*** - *இராமன் துணைவியான சீதையைத் தொடு முன்னரே;* ***இவன் தலை சரத்தின் சிந்தி*** - *இவ்விராவணன்தலைகளை இராமன் அம்பால் வீழ்த்தி;* ***போம் வகை புணர்ப்பன்*** -*விழும் வகையைச் செய்யலாம்;* ***என்று புந்தியால் புகல்கின்றேற்கும்*** -*என்று தந்திரத்தால் சொல்ல வல்ல எனக்கும்;* ***ஆம் வகை ஆயிற்று இல்லை*** - *(அதனைச் செய்து) பிழைக்கும் வழி புலனாகவில்லை;* ***விதி விளைவை ஓர்வார் யார்?*** - *விதியின் செயல்பாட்டை முற்றும் அறிந்தவர் யார்?;* ***ஏவிய செய்வது அல்லால்*** - *இராவணன் இட்ட கட்டளையை நிறைவேற்றுவதல்லாமல்;* ***வேறுஒன்று இல்லை*** - *வேறு செய்தற்கு ஏதும் வழி இல்லை;* ***என்று எண்ணா-*** *என்று சிந்தித்தவனாய்.........*

*(அடுத்த பாடலில் கருத்து முடியும்) தொடக்கத்தில் இராமனுடன் போர் செய் என்று மாரீசன் தூண்டியது ஒருவகைச் சூழ்ச்சியே. போர் வருமாயின் இராவணன் மடிவான். நாம் பிழைத்துக் கொள்ளலாம் என்பது அவன் திட்டம். அது பலிக்கவில்லையென்பதால் இராவணன் ஏவலைச் செய்ய முடிவு செய்கிறான்.*

***3275. 'என்ன மா மாயம் யான் மற்று இயற்றுவது?***
***இயம்புக' என்றான்,***
***'பொன்னின் மான் ஆகிப் புக்கு,***
***பொன்னை மால் புணர்த்துக' என்ன,***
***'அன்னது செய்வென்' என்னா,***

*மாரீசன் அமைந்து போனான்;*
*மின்னு வேல் அரக்கர்கோனும் வேறு*
*ஒரு நெறியில் போனான்.*

***'என்ன மா மாயம் யான் மற்று இயற்றுவது? -*** *நான் எவ்வகையான பெரிய மாயம் இங்கே செய்ய வேண்டும்?;* ***இயம்புக என்றான் -****கூறுக என மாரீசன் கேட்டான் (அதற்கு இராவணன்);* ***பொன்னின் மானாகிப் புக்கு -*** *ஒரு பொன் மானாகக் (காட்டில்) நுழைந்து;* ***பொன்னை -****பொன் போன்ற சீதைக்கு;* ***மால் புணர்த்துக -*** *மயக்கத்தை ஏற்படுத்துக;****என்ன -*** *என்று திட்டம் தந்தான்;* ***'அன்னது செய்வென் என்னா -****அவ்வாறே செய்கின்றேன் என்று;* ***மாரீசன் அமைந்து போனான் -*** *மாரீசன் ஏற்றுக் கொண்டு புறப்பட்டான்;* ***மின்னு வேல் அரக்கர் கோனும் -****ஒளிவீசும் வேல் ஏந்திய அரக்கர் தலைவனும்;* ***வேறொரு நெறியில் போனான் -*** *மற்றொரு திசையில் புறப்பட்டுச் சென்றான்.*

*மாரீசனுக்கு மாயா மார்க்கம் உணர்த்தப்படவே, மாயமான் ஆதற்கு அவன் செல்லலானான்.*

*மாரீசன் மனநிலையும் செயலும்*

*கலிவிருத்தம்*

*3276. மேல்நாள் அவர் வில்*
*வலி கண்டமையால்,*
*தான் ஆக*
*நினைந்து சமைந்திலனால்;*
*'மான் ஆகுதி'*
*என்றவன் வாள் வலியால்*
*போனான் மனமும்,*
*செயலும் புகல்வாம்.*

***மேல் நாள் -*** *முன் காலத்தில்;* ***அவர் வில்வலி கண்டமையால் -*** *இராமலக்குவர் வில்லாற்றலைக் கண்டறிந்திருப்பதால்;* ***தானாக நினைந்து -*** *(மாயமான் ஆதற்குத்) தானாகவே எண்ணி;* ***சமைந்திலன் -****மாரீசன் முடிவு செய்தான் இல்லை;* ***மான்ஆகுதி -*** *மாய மான் வடிவினை எடு;****என்றவன் வாள் வலியால் போனான் -*** *என ஆணையிட்ட இராவணன் வாளின் வலிமையை அறிந்திருந்ததால் அவன் ஆணையை ஏற்றுக் கொண்டவனாகிய மாரீசனது;* ***மனமும் செயலும் புகல்வாம் -*** *எண்ணத்தையும் செய்த செயல்களையும் இனிக் கூறுவோம்.*

*கவிக்கூற்று. போனான் - வினையாலணையும் பெயர். ஆல்- அசை.*

*3277.* ***வெஞ் சுற்றம் நினைந்து***
***உகும்; வீரரை வேறு***
***அஞ்சுற்று மறுக்குறும்; ஆழ்***
***குழி நீர்***
***நஞ்சு உற்றுழி, மீனின்***
***நடுக்குறுவான்***
***நெஞ்சு உற்றது ஓர் பெற்றி***
***நினைப்பு அரிதால்.***

**வெஞ் சுற்றம் -** *தன் விருப்பத்துக்கு உரிய உறவினரை;* **நினைந்து உகும் -** *(மாரீசன் மனம்) எண்ணி வருந்துவான்;* **வீரரை வேறு அஞ்சுற்று மறுக்குறும் -** *இராமலக்குவராகிய வீரர்களை ஒருபுறம் நினைந்து அச்சமுற்று மயங்குவான்;* **ஆழ் குழி நீர் -** *ஆழ்ந்த பள்ளத்து நீரானது;* **நஞ்சு உற்றுழி -** *முற்றும் நச்சுமயமானால்;* **மீனின் நடுக்குறுவான் -***மீன்கள் என்ன பாடு படுமோ அவ்வாறு நடுக்கமும் கொண்டான்;* **நெஞ்சு உற்றது ஓர் பெற்றி -** *அவன் நெஞ்சம் அடைந்த உணர்ச்சித் தன்மை;* **நினைப்பு அரிது -** *இவ்வாறிருந்தது என எண்ணிட முடியாததாய் இருந்தது;* **ஆல் -** *ஈற்றசை.*

*அழிவு உறுதி என்பதால் பிரிகின்ற சுற்றத்தை நினைத்து வருந்தினான். நச்சு நீரில் தப்பிக்க முடியாத மீன்போல் துடித்தான் மாரீசன்.*

*3278.* ***அக் காலமும், வேள்வியின்,***
***அன்று தொடர்ந்து***
***இக் காலும், நலிந்தும் ஓர்***
***ஈறு பெறான்;***
***முக் காலின்***
***முடிந்திடுவான் முயல்வான்***
***புக்கான், அவ் இராகவன்***
***வைகு புனம்.***

**வேள்வியின் அன்று -** *(விசுவாமித்திரர் செய்த) யாகம் நிகழ்ந்தபோதும்;* **அக்காலமும் -** *தண்ட காரண்யத்தில் மானாகச் சென்ற அப்போதும்;* **நலிந்தும் -** *துன்புற நேர்ந்தும்;* **தொடர்ந்து இக்காலும் -***இன்று வரை தொடர்ச்சியாக;* **ஓர் ஈறு பெறான் -** *ஒரு முடிவையோமரணத்தையோ பெறாத (மாரீசன்);* **முக்காலின் -** *இப்போது மூன்றாம் முறையாக;* **முடிந்திடுவான் முயல்வான் -** *மரணமுற இசைந்து அதன் வழியே செல்கின்றவனாய்;* **அவ் இராகவன் வைகு புனம் -** *அந்த இராமபிரான் தங்கியுள்ள வனம் நோக்கி;* **புக்கான் -***சென்றடைந்தான்.*

*மூன்றாம் முறை மரணம் உறுதியென அறிந்து அதனைச் சந்திக்க சென்றான் மாரீசன்.*

*மாயப் பொன் மானாய் மாரீசன் தோன்றுதல்*

***3279. தன் மானம் இலாத,***
***தயங்கு ஒளி சால்***
***மின் வானமும் மண்ணும்***
***விளங்குவது ஓர்***
***பொன் மான் உருவம்***
***கொடு போயினனால்-***
***நன் மான்***
***அனையாள்தனை நாடுறுவான்.***

***தன் மானம் இலாத -*** *தனக்கு நிகர் இல்லாத;* ***தயங்கு ஒளி சால் -*** *அசைகின்ற ஒளி பொருந்திய;* ***மின் -*** *உடல் மின்னுதலால்;* ***வானமும் மண்ணும் விளங்குவது ஓர் -*** *விண்ணும் மண்ணும் விளக்கமுறும் படியான ஒரு;* ***பொன் மான் உருவம் -*** *தங்க மானின் வடிவம்;* ***கொடு போயினன்-*** *எடுத்துக் கொண்டு மாரீசன் சென்றான்;* ***நன்மான் அனையாள் தனை -*** *உயர்ந்த மான் போன்ற சீதையினை;* ***நாடுறுவான் -*** *தேடிச் சென்று அடைந்தான்;* ***ஆல் -*** *அசை.*

*மாயமான் கண்டாரைக் கவரும் ஒளிமிக்கதாய் விளங்கியது. தனை நாடுறுவான் என்பதற்குச் சீதை தன்னை நாடும்படியாகச் சென்றான் எனவும் பொருள் கூறுவர்.*

***3280. கலைமான் முதல் ஆயின***
***கண்ட எலாம்,***
***அலை மானுறும் ஆசையின்,***
***வந்தனவால்-***
***நிலையா மன, வஞ்சனை,***
***நேயம் இலா,***
***விலை மாதர்கண் யாரும்***
***விழுந்தெனவே.***

***நிலையா மன(ம்) -*** *யாரிடத்தும் உறுதியாக நில்லாத மனமும்;* ***வஞ்சனை -*** *வஞ்சிக்கும் பாங்கும்;* ***நேயம் இலா -*** *உண்மையான அன்பும் இல்லாத;* ***விலைமாதர்கண் -*** *கணிகையரிடத்தில்;* ***யாரும் விழுந்தெனவே-*** *காமமுற்றார் மனம் இழந்தாற் போல;* ***கலைமான் முதல் ஆயின கண்ட எலாம் -*** *கானகத்தில் உள்ள கலை மான் முதலாக அப்பொன் மானைப் பார்த்த விலங்குகள் யாவும்;* ***அலை மானுறும் -*** *கடல் போன்று;* ***ஆசையின் வந்தன -*** *பெருகிய ஆவலுடன் வந்து சூழ்ந்தன;* ***ஆல் -*** *அசை.*

*விலைமகளிர் போலப் பொன்மான் அமைய, அம் மகளிரிடம் ஆசை கொண்டார் போலப் பிற விலங்குகள் வந்தன என்றார். உவமையணி.*

*விலைமகளிர் யார் மீதும் அன்பு வையார் அது போல் பொன்மானுக்கும் பிற விலங்குகளின் மீது பற்றில்லை. விலை மகளிருக்குப் பொன் மீது மட்டும் பற்று உண்டு. மாயமானுக்கும் பொன்னாகிய சீதை மீது நாட்டம் உண்டு.*

***3281. பொய் ஆம் என ஓது***
***புறஞ்சொலினால்***
***நையா இடை***
***நோவ நடந்தனளால்-***
***வைதேவி, தன் வால் வளை***
***மென் கை எனும்***
***கொய்யா மலரால் மலர்***
***கொய்குறுவாள்.***

***பொய் ஆம் என ஓது புறஞ்சொலினால் -*** *(இவள் இடை) பொய்யே ஆகும் என்று அயலாளர் கூறுவதற்கேற்ப;* ***நையா -****வருத்தம் கொண்டு விளங்கும்;* ***இடை நோவ -*** *இடை நோகும்படி;****நடந்தனள் -*** *நடப்பவளாய்;* ***வைதேவி -*** *சீதை;* ***தன் வால்வளை மென்கை எனும் -*** *ஒளி பொருந்திய வளையல் அணிந்த தன் மெல்லிய கரங்கள் என்னும்;* ***கொய்யா மலரால் -*** *பறிக்கப்படாத மலர்களால்;* ***மலர் கொய் குறுவாள் -*** *கானகத்தில் பூப்பறிக்க முற்பட்டாள்.* ***ஆல் -*** *அசை.*

*இடை பொய் எனல் கவிதை மரபு. இதனால் இடைக்கு வருத்தம் ஏற்பட்டதாகக் கற்பித்தார். விதேக அரசன் குலமகள் என்பதால் வைதேகி எனப்பட்டாள். இங்கு வைதேவி எனத் திரிந்து வந்தது. கையெனும் கொய்யா மலர்' - பறவாக் கொக்கு என மாமரம் அழைக்கப்பட்டாற்போல் கரங்களைஇவ்வாறு கூறினார். கொய்யா மலர் மலர் கொய்தது எனக் கவிதையழகு மிளிர முரண் அணியுடன் கூறினார். மூன்றாம் வரியில் 'வய்தேவி' என ஓசை எழுதலால் எதுகை பிழையாதாயிற்று.*

***3282. உண்டாகிய கேடு***
***உடையார், துயில்வாய்***
***எண் தானும் இயைந்து***
***இயையா உருவம்***
***கண்டார் எனலாம்***
***வகை, கண்டனளால்-***
***பண்டு ஆரும் உறா***
***இடர்பாடுறுவாள்.***

***உண்டாகிய கேடு உடையார் -*** *நிச்சயம் அழிவு நேரும் என்ற நிலையில் உள்ளார்;* ***துயில்வாய் -*** *உறக்கம் கொள்ளுகையில்;* ***எண் தானும் இயைந்து இயையா உருவம் -*** *எண்ணத்தில் ஒரு போதும் இசைந்திராத விசித்திர வடிவங்களை;* ***கண்டார் எனலாம் வகை -*** *கனவிற் கண்டார்கள் என்று கூறத்தக்க முறையில்;* ***பண்டு ஆரும் உறா இடர் -*** *எக்காலத்தும் முன்பு எவரும் படாத துயரம்;* ***பாடு உறுவாள் -*** *பட இருக்கின்றவளான சீதை;* ***கண்டனள் -*** *மாய மானைக் கண்டாள்; (* ***ஆல் -*** *அசை)*

*துன்பம் வருமுன் கனவு போன்ற முன் சகுனங்கள் தோன்றினாற் போலச் சீதை முன் பொன்மான் விபரீதம் விளைவிக்கத் தோன்றியது.*

*3283.* ***காணா இது, கைதவம்***
***என்று உணராள்;***
***பேணாத நலம்***
***கொடு பேணினளால்-***
***வாழ்நாள் அவ்***
***இராவணன் மாளுதலால்,***
***வீழ் நாள் இல் அறம்***
***புவி மேவுதலால்.***

**அவ் இராவணன் வாழ்நாள்** - *அந்த இராவணனின் ஆயுட் காலம்;* **மாளுதலால்** - *முடிய இருப்பதனாலும்;* **வீழ் நாளில்** - *அவன் மரணமுறுகிற நாளில்;* **அறம் புவி மேவுதலால்** - *தருமம் பூமியில் செழிக்க இருப்பதனாலும்; (சீதை);* **காணா** - *பொன்மானைக் கண்டு;* **'இது கைதவம்' என்று உணராள்** - *'இது வஞ்சனை வேடம்' என்று உணராதவள் ஆனாள்;* **பேணாத** - *ஆதரித்தற்கு ஒவ்வாத;* **நலம் கொடு பேணினள்** -*அழகில் ஆர்வம் கொண்டு (மாயமானை) விரும்பி நின்றாள். (* **ஆல்** *-அசை) சீதை மாயமானை விரும்பியதற்குக் காரணம் இராவணன் அழிவும், அறத்தின் புத்துயிர்ப்பும் ஒரு சேர நடைபெறும் காலம் நெருங்கியதால் என்றார்.*

*மானைக் கண்டு மயங்கிய சீதை இராமனை அடைதல்*

*3284.* ***நெற்றிப் பிறையாள்***
***முனம் நின்றிடலும்,***
***முற்றிப் பொழி***
***காதலின் முந்துறுவாள்,***
***'பற்றித் தருக என்பென்'***
***எனப் பதையா,***
***வெற்றிச் சிலை***
***வீரனை மேவினளால்.***

**நெற்றிப் பிறையாள் முனம்** - *இளம் பிறை போலும் நெற்றியை உடைய சீதை முன்;* **நின்றிடலும்** - *(மாய மான் வந்து) நிற்கவும்;* **முற்றிப் பொழி காதலின்** - *(அவள்) நிறைந்த ஆசை ததும்பி நிற்க;* **'பற்றித் தருக' என்பென்** - *'இம் மானைப் பிடித்துத் தரவேண்டும்' என்று இராமனைக் கேட்பேன்;* **எனப் பதையா** - *என உணர்ச்சி மிக்கவளாய்; (சீதை);* **வெற்றிச் சிலை வீரனை** - *வில்லால் வெற்றி கொள்ளும் வீரனாகிய இராமனை; முந்துறுவாள்;* **மேவினள்** - *அடைந்தாள். (* **ஆல்** *-அசை)*

*3285.* ***'ஆணிப் பொனின் ஆகியது;***
***ஆய் கதிரால்***
***சேணில் சுடர்கின்றது; திண்***

*செவி, கால்,*
***மாணிக்க மயத்து ஒரு***
***மான் உளதால்;***
***காணத் தகும்' என்றனள்,***
***கை தொழுவாள்.***

*(இராமனிடம் சென்று சீதை); **'ஆணிப் பொனின் ஆகியது -** மாற்றுயர்ந்த பொன்னால் ஆனதும்; **ஆய் கதிரால் சேணில் சுடர்கின்றது-** சிறந்த ஒளியினால் தொலைவிலும் பளபளக்கின்றதும்; **திண்செவி கால் -** வலிய காதுகளும் கால்களும்; **மாணிக்க மயத்து -** சிவந்த மாணிக்கங்களால் ஆகியதுமான; **ஒரு மான் உளது -** ஒரு மான் காட்சி தருகின்றது; **காணத் தகும் -** அழகால் காண்பதற்கு இனிதானது;**என்றனள்-** என்று கூறியவளாய்; **கைதொழுவாள் -** (அதனைப் பற்றி அளிக்க வேண்டுமெனக் கருதி) கையால் வணங்கி நின்றாள்; **ஆல் -** அசை. அம் மான் வேண்டுமென வாயால் கூறாது உணர்த்திக் காட்டினாள்.*

*3286.* ***'இம் மான் இந் நிலத்தினில்***
***இல்லை' எனா,***
***எம்மான் இதனைச் சிறிது***
***எண்ணல் செயான்,***
***செம் மானவள் சொல்கொடு,***
***தே மலரோன்***
***அம்மானும், அருத்***
***தியன் ஆயினனால்.***

***'இம் மான் -*** *இது போன்றதொரு மான்; **இந் நிலத்தினில் இல்லை -** இந்த உலகத்தில் இதுவரை இருந்ததில்லை; **எனா -** என்று ஆராய்ந்து; **எம்மான் -** எம் தலைவனும்; **தேமலரோன் அம்மானும் -** பிரமனது தந்தையுமாகிய இராமபிரான்; **இதனைச் சிறிது எண்ணல் செயான் -** இவ்வாறு சற்றும் சிந்தியாதவனாய்; **செம்மான் அவள் -** செம்மை நிரம்பிய மான் போன்ற சீதையின்; **சொல் கொடு -** ஆசைச் சொற்களை ஏற்று; **அருத்தியன் ஆயினன் -** தானும் (மானின்மேல்) விருப்பம் கொண்டான்; **ஆல் -** ஈற்றசை.*

*எல்லாவற்றையும் படைக்கும் பிரமனின் தந்தையான இராமனுக்கு, இம் மாயமான் போன்றதொரு படைப்பு இயற்கையில்லை என்ற ஆராய்ச்சி ஏற்படவில்லை.*

*இலக்குவன் 'அது மாயமான்' எனல்*

*3287.* ***ஆண்டு, அங்கு,***
***இளையான் உரையாடினனால்,***
***'வேண்டும் எனலாம் விழைவு***
***அன்று இது' எனா;***
***'பூண் துஞ்சு பொலங்***

*கொடியோய்! அது நாம*
*காண்டும்' எனும் வள்ளல்*
*கருத்து உணர்வான்.*

**வேண்டும் எனலாம் -** *சீதை விரும்பிக் கேட்கின்ற தன்மையினால்;* **விழைவு அன்று இது -** *பொருத்தமான ஆசை அன்று இது;* **எனா! -** *என்று கூறாது;* **'பூண் துஞ்சு பொலங் கொடியோய் -***அணிகலன்கள் அழகுடன் பொருந்தும் பொற்கொடி போன்றவளே!;* **அது நாம் காண்டும் -** *அந்த மானைக் காணலாம்;* **எனும் வள்ளல் கருத்து உணர்வான் -** *என்று கூறும் இராமனுடைய சிந்தனைப் போக்கை உணர்ந்தவனாய்;***இளையான் -** *தம்பியாகிய இலக்குவன்;* **ஆண்டு அங்கு உரையாடினன் -***அப்போதுஅவ்விடத்துத் தன் கருத்தை உரைக்கலானான்.* **ஆல் -** *அசை.*

*கேட்டதைக் கொடுப்பவன் என்பதால் வள்ளல் என்றார். உரிய சமயத்தில் இலக்குவன் குறுக்கிட்டான்.*

*3288. 'காயம், கனகம்; மணி,*
*கால், செவி, வால்;*
*பாயும் உருவோடு இது*
*பண்பு அலவால்;*
*மாயம் எனல் அன்றி,*
*மனக் கொளவே*
*ஏயும்? இறை மெய் அல'*
*என்ற அளவே.*

**'காயம் கனகம் -** *(அம்மானின்) உடல் பொன்னிறமாய் உள்ளது;* **கால் செவி வால் மணி -** *காலும், காதும், வாலும் மாணிக்க மயமாய் உள்ளன;* **பாயும் உருவோடு இது -** *வேகமாகப் பாய்ந்தோடும் வடிவோடு கூடிய இம்மான்;* **பண்பு அல -** *இயற்கைப் பண்போடு கூடியதன்று;***மாயம் எனல் அன்றி -** *இது ஒருவகை மாயை என்று கருதுதலே அல்லாமல்;* **மனக் கொளவே ஏயும் -** *வேறு விதமாகக் கருதுதல் பொருந்துமோ?;* **இறை -** *என் தலைவனே;* **மெய் அல -** *எவ்வகையிலும் இது உண்மையானது அன்று;* **என்ற அளவே -** *என இலக்குவன் கூறும் அளவில்....*

*(அடுத்த செய்யுளில் பொருள் முடிவுறும்).*

*இராமன் பதிலுரை*

*3289. நில்லா உலகின் நிலை, நேர்மையினால்*
*வல்லாரும் உணர்ந்திலர்; மன் உயிர்தாம்*
*பல் ஆயிரம்கோடி பரந்துளதால்;*
*இல்லாதன இல்லை-இளங்குமரா!*

***இளங்குமரா -*** *இளமையுடைய தம்பி!;* ***நேர்மையினால் வல்லாரும் -*** *முறையான அறிவிலே திறமை சான்றவரும்;* ***நில்லா உலகின் நிலை உணர்ந்திலர் -*** *நிலையில்லா உலகின் தன்மை முற்றும் அறிந்ததில்லை;* ***மன் உயிர்தாம் -*** *வாழும் நிலை பெற்ற உயிரினங்களோ எனில்;* ***பல்ஆயிரம் கோடி பரந்துளது -*** *எண்ணிலாக் கோடிகளாய் விரிந்து பரந்து உள்ளன;* ***இல்லாதன இல்லை -*** *இவ்வுலகில் இல்லாதவை என்று (நம் அறிவை மட்டும் வைத்து) எவற்றையும் விலக்கிக் கூற முடியாது' (என்றான் இராமன்);* ***ஆல் -*** *அசை.* *உலகின் இயற்கை முழுவதையும் யாரும் கணித்தறிந்ததில்லை. அதிலும் நீயோ இளங்குமரன், ஆனபடியால் புதிய ஒன்றை இல்லையென மறுத்தல் பொருந்தாது என்றான் இராமன்.*

***3290. 'என் என்று நினைத்தது,***
***இழைத்து உளம்? நம்***
***கன்னங்களின் வேறு***
***உள காணுதுமால்;***
***பொன்னின் ஒளி மேனி***
***பொருந்திய ஏழ்***
***அன்னங்கள் பிறந்தது***
***அறிந்திலையோ?***

***உளம் இழைத்து -*** *மனத்தினால் சிந்தித்து;* ***என் என்று நினைத்தது-*** *என்ன முடிவுக்கு வந்தாய்?;* ***நம் கன்னங்களின் -*** *நம் செவிகளில் (அன்றாடம்);* ***வேறு உள காணுதும் -*** *புதிது புதிதான செய்திகள் கேட்கின்றோமே;* ***பொன்னின் ஒளி மேனி பொருந்திய -*** *தங்க நிறம் உடலிற் பொருந்திய;* ***ஏழ் அன்னங்கள் -*** *ஏழு அன்னப் பறவைகள்;* ***பிறந்தது அறிந்திலையோ? -*** *தோன்றிய செய்தியை நீ கேட்டதில்லையா?" (* ***ஆல் -*** *அசை)*

*புராண மரபில் ஏழு பொன் அன்னங்களின் செய்தி கூறப்படுதலை இராமன் நினைவு கூர்ந்தான். (மானச சரோவரத்தின் கரையில் யோகாப்பியாசம் செய்த பரத்துவாச புத்திரர் எழுவர் ஒழுக்கம் குன்றியதால் தங்கள் பயிற்சி கைகூடாமல் மரணமுற்றனர். பின்னர்க் குருக்ஷேத்திரத்தில் கௌசிக புத்திரர்களாய்ப் பிறந்தனர். கார்க்க முனி சீடர்களாய் இருந்தபோது அவனுடைய காமதேனுப் பசுவைக் கொன்று தின்றனர். ஆயினும் முன்னோர்க்கு உரிய பிதிர்க்கடன் செய்தமையால் பல்வேறு பிறவிகளில் வேடராய், விலங்காய், சக்கரவாகப் பறவையாய், அன்னப் பறவையாய் மாறி மாறிப் பிறந்தனர். கடைசியில் முக்தி பெற்றனர் என்பர்.*

*பத்ம கர்ப்பம், அரவிந்தாட்சம், சீர கர்ப்பம், சுலோசனம், பிந்து, சுபிந்து, ஹைமகர்ப்பம் என அன்னங்கள் பெயர் பெற்றன).*

***3291. 'முறையும் முடிவும் இலை, மொய்***
***உயிர்' என்று,***
***இறைவன் இளையானொடு***
***இயம்பினனால்;***

***'பறையும் துணை, அன்னது பல்***
***நெறி போய்***
***மறையும்' என,***
***ஏழை வருந்தினளால்.***

***'முறையும் முடிவும் -*** *இப்படித்தான் இருக்க வேண்டுமென்னும் முறையும் முடிவும்';* ***மொய் உயிர் -*** *உலகத்தில் தோன்றிய உயிர்களுக்கு;* ***இலை -*** *கட்டுத்திட்டம் ஒன்றும் கிடையாது';* ***என்று -*** *என;* ***இறைவன் -*** *தலைவனாகிய இராமன்;* ***இளையானொடு இயம்பினன் -****தம்பியிடம் கூறினான்;* ***ஏழை -*** *(இதனிடையே) சீதையோ;* ***'பறையும் துணை -*** *இவ்வாறு பேசிக் கொண்டிருக்கிற நேரத்திற்குள்ளாக;* ***அன்னது -*** *அப்பொன் மான்;* ***பல்நெறி போய் மறையும் -*** *காட்டு வழிகள் பலவற்றுள்ளும் சென்று மறைந்து விடுமே';* ***என வருந்தினள் -****எனப் (பேதமையால்) வருந்தலானாள். (* ***ஆல் -*** *அசை)*

*அறியாமை சீதைக்கு ஏற்பட்டிருப்பதால் ஏழை என்றார்.*

*இராமன் சீதையோடு சென்று மானைக் காணுதல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3292. அனையவள் கருத்தை உன்னா, அஞ்சனக்***
***குன்றம் அன்னான்,***
***'புனையிழை! காட்டு அது' என்று***
***போயினான்; பொறாத சிந்தைக்***
***கனை கழல் தம்பி பின்பு சென்றனன்;***
***கடக்க ஒண்ணா***
***வினை என வந்து நின்ற மான் எதிர்***
***விழித்தது அன்றே.***

***அனையவள் கருத்தை உன்னா -*** *சீதையின் இவ் வருத்தச் சிந்தனையை எண்ணி;* ***அஞ்சனக் குன்றம் அன்னான் -*** *நீல மலை போன்ற இராமன்;* ***'புனையிழை -*** *நல்லணி புனைந்தவளே!;* ***அது காட்டு' என்று போயினான் -*** *அம்மானை எனக்குக் காட்டுவாயாக' என்று புறப்படலானான்;* ***பொறாத சிந்தை -*** *இதனை ஏற்றுக் கொள்ள மனமின்றி;* ***கனைகழல் தம்பி -*** *ஓசை செய்யும் வீரக் கழலணிந்த தம்பி இலக்குவனும்;* ***பின்பு சென்றனன் -*** *அவர்கள் பின்னே சென்றான்;* ***கடக்க ஒண்ணா வினை என -*** *தாண்டிச் செல்ல முடியாத விதியினைப் போல;* ***வந்து நின்ற மான் -*** *வந்து நின்ற மாயமான்;* ***எதிர் விழித்தது -*** *எதிரில் வந்து காட்சி தந்தது. (* ***அன்றே-*** *அசை).*

*விதி, தவறாமல் பயனளிப்பது போன்று, மாயமான் தீமை விளைவிக்கத் தவறாது வந்து நின்றது, எனினும் கவனமுள்ள தம்பி பின்தொடர்ந்தான்.*

*3293.* ***நோக்கிய மானை நோக்கி, நுதியுடை***
***மதியின் ஒன்றும்***
***தூக்கிலன்; 'நன்று இது' என்றான்;***
***அதன் பொருள் சொல்லல் ஆகும்?***
***சேக்கையின் அரவு நீங்கிப்***
***பிறந்தது தேவர் செய்த***
***பாக்கியம் உடைமை அன்றோ?***
***அன்னது பழுது போமோ?***

***நோக்கிய மானை நோக்கி -*** *எதிரில் விழித்து நின்ற மானைஉற்றுப் பார்த்து;* ***நுதியுடை மதியின் ஒன்றும் தூக்கிலன் -*** *இராமன்கூரிய அறிவின் துணை கொண்டு எதனையும் சீர்தூக்கிப்பார்க்கவில்லை;* ***நன்று இது என்றான் -*** *இந்த மான் மிக அழகியதுஎன்று தானும் கூறினான்;* ***அதன் பொருள் சொல்லல் ஆகும்? -*** *அச் சொல்லின் பொருள் நுட்பத்தை ஆராய்ந்து கூற முடியுமோ? முடியாது);* ***சேக்கையின் அரவு நீங்கிப் பிறந்தது -*** *அனந்தசயனத்திலிருந்து மண்ணுலகில் வந்து அவதாரம் செய்தமை;* ***தேவர்செய்த பாக்கியம் உடைமை அன்றோ -*** *தேவர்கள் ஆற்றியபுண்ணியம் என்று கூறலாம் அல்லவா?;* ***அன்னது பழுது போமோ?-*** *அப் புண்ணியம் வீணாகிப் போகுமோ? (போகாது என்றபடி).*

*தேவர் செய்த பாக்கியத்தால் இராமாவதாரம் நிகழ்ந்தமையின்,மாய மானை இராமனும் தொடர ஆசைப்பட்டதன் கருத்து மறைமுகமாகப் புலனாகின்றது என்று சுட்டிக் காட்டினார்.*

*3294.* ***'என் ஒக்கும் என்னல்***
***ஆகும்? இளையவ! இதனை நோக்காய்;***
***தன் ஒக்கும் உவமை அல்லால், தனை***
***ஒக்கும் உவமை உண்டோ?***
***பல், நக்க தரளம் ஒக்கும்; பசும்***
***புல்மேல் படரும் மெல் நா***
***மின் ஒக்கும்; செம் பொன், மேனி;***
***வெள்ளியின் விளங்கும் புள்ளி.***

***'இளையவ! -*** *தம்பியே!;* ***இதனை நோக்காய் -*** *இம்மானை நன்கு பாராய்;* ***என் ஒக்கும் என்னல் ஆகும் -*** *எதனை இதனோடுஒப்பிட்டுக் கூற முடியும்?;* ***தன் ஒக்கும் உவமை அல்லால் -*** *தனக்குத் தானே ஒப்பாக உவமை கூறத்தக்கதே அல்லாமல்;* ***தனைஒக்கும் உவமை உண்டோ? -*** *இதனைப் போன்ற ஒன்று என்று கூறவேறு பொருள் உலகில் ஏது?;* ***பல் -*** *இம் மானின் பற்கள்;* ***நக்க தரளம் ஒக்கும் -*** *சிரிக்கின்ற முத்துக்கள் போன்றுள்ளன;* ***பசும்புல் மேல் படரும் மெல் நா -*** *பச்சைப் புற்களின் மீது செல்லும் இதன் மெல்லிய நாக்கு;* ***மின் ஒக்கும் -*** *மின்னலைப் போன்றுள்ளது;* ***மேனி செம் பொன் -*** *உடலோ சிவந்த பொன்னைப் போன்றுள்ளது;* ***புள்ளிவெள்ளியின் விளங்கும் -*** *உடல் மேற் புள்ளிகளோ வெள்ளி போன்றுள்ளது (என்றான் இராமன்)முன் அடியில் உவமை கூற முடியாது என்றவர் கடைசி அடிகளில் பல்வேறு உவமைகளால் உறுப்புக்களை*

*வருணித்தார். உறுப்புக்களுக்கு உவமை கூற முற்படினும் முழுமையான தோற்றப் பொலிவிற்கு அத்தகு பொருள் ஏதும் இன்மையின் உவமை கூற முடியாது என்றார் எனக்கொள்க.*

***3295. 'வரி சிலை மறை வலோனே! மான்***
***இதன் வடிவை, உற்ற***
***அரிவையர், மைந்தர், யாரே***
***ஆதரம் கூர்கிலாதார்?***
***உருகிய மனத்த ஆகி, ஊர்வன,***
***பறப்ப, யாவும்***
***விரி சுடர் விளக்கம் கண்ட விட்டிலின்***
***வீழ்வ காணாய்!'***

***'வரிசிலை மறை வலோனே** - கட்டமைந்த வில்லின்கலையாகிய வேதத்தில் வல்லவனே!; **மான் இதன் வடிவை** - இம்மானின் உருவத்தை; **உற்ற** - நெருங்கிக் கண்ட; **அரிவையர் மைந்தர்**-பெண்களானாலும் ஆண்களானாலும்; **யாரே ஆதரம்கூர்கிலாதார்?** - (இதனிடம்) ஆசை கொள்ளாதவர் யாராவது இருக்கமுடியுமா?; **உருகிய மனத்த ஆகி** - உள்ளம் கரைந்துருகுவனவாகி; **ஊர்வன, பறப்ப யாவும்** - ஊர்ந்தும்பறந்தும் செல்லும் அனைத்துவிலங்குகளும் பறவைகளும்;**விரிசுடர் விளக்கம் கண்ட** - எரியும்நெருப்புச் சுடரின் வெளிச்சம் பார்த்து; **விட்டிலின் வீழ்வ** - விழும்விட்டில் பூச்சிகளைப் போல் விரும்பி அம் மானைச் சூழ்வதை; **காணாய்** - நீ பாராய் (என்றான் இராமன்)*

*உயிரினங்கள் அனைத்தும், ஆண் பெண் ஆன மானுடரும் இம் மானைக் கண்டு மயங்குவதால் சீதையின் மயக்கத்தில் வியப்பில்லைஎன இராமன் இலக்குவனுக்கு அமைதி காட்டுகின்றான்.*

***3296. ஆரியன் அனைய கூற,***
***அன்னதுதன்னை நோக்கி,***
***'சீரியது அன்று இது' என்று,***
***சிந்தையில் தெளிந்த தம்பி,***
***'காரியம் என்னை, ஈண்டுக்***
***கண்டது கனக மானேல்?***
***வேரி அம் தெரியல் வீர! மீள்வதே***
***மேன்மை' என்றான்.***

***ஆரியன்** - மேன்மை மிக்க இராமன்; **அனைய கூற** -இவ்வாறு எடுத்துக் கூறவும்; **அன்னது தன்னை நோக்கி** - அந்த மானை உற்றுப் பார்த்து; **'இது சீரியது அன்று** - இம்மான் இயற்கையானது அன்று'; **என்றுசிந்தையில் தெளிந்த தம்பி** - என்று தன் மனத்தில் உறுதி கொண்ட தம்பி இலக்குவன்; **வேரி அம் தெரியல் வீர** - மணம் கமழ்கின்ற மாலையணிந்த வீரனே; **ஈண்டு கண்டது கனக மானேல்** -*

*இங்குக்காணப்படுவது பொன்மானாக இருக்கிற தென்றாலும்;* ***என்னை காரியம்? -*** *அதனால் நமக்கு என்ன பயன்?;* ***மீள்வதே மேன்மை -*** *அதனை விட்டு நீங்கி வருவதே மேலான செயல்;* ***என்றான் -****என்று கூறினான்.*

*அது பொன்மயமான மான் என்பதால் நமக்கு என்ன பயன்என்ற இலக்குவன் வினாவில், மாயையிலிருந்து விரைவில் இராமன்மீள வேண்டுமே என்ற கவலை மேலோங்கி நிற்கின்றது.*

***3297. அற்று அவன் பகராமுன்னம்,***
***அழகனை, அழகியாளும்,***
***'கொற்றவன் மைந்த! மற்றைக்***
***குழைவுடை உழையை, வல்லை***
***பற்றினை தருதி ஆயின், பதியிடை***
***அவதி எய்தப்***
***பெற்றுழி, இனிது உண்டாடப் பெறற்கு***
***அருந் தகைமைத்து' என்றாள்.***

***அற்று அவன் பகரா முன்னம் -*** *இவ்வாறு இலக்குவன் கூறி முடிக்கும் முன்;* ***அழகனை -*** *(ஒப்பற்ற) பேரழகனான இராமனிடம்;* ***அழகியாளும் -*** *கட்டழகியான சீதையும்;* ***'கொற்றவன் மைந்த -*** *வெற்றியில் வல்ல தசரத குமாரனே;* ***மற்றைக் குழைவுடை உழையை -*** *மனத்தை நெகிழ்விக்கும் அந்த எழிலுடைய மானை;* ***வல்லை பற்றினை தருதியாயின் -*** *விரைவில் பிடித்துத் தருவாயானால்;* ***பதியிடை அவதி எய்தப்பெற்றுழி -*** *அயோத்திக்கு வனவாசக் காலம் முடிந்து செல்லுங்கால்;* ***இனிது உண்டாட -*** *மகிழ்வுடன் விளையாடுதற்கு;* ***பெறற்கு அருந் தகைமைத்து -*** *கிடைத்தற்கு அரிய பொருளாக இருக்கும்;* ***என்றாள் -*** *என்று கூறினாள்.*

*'இம்மானால் யாது பயன்' என்ற இலக்குவன் வினாவுக்கு விடை கூறினாற்போல் சீதையின் பேச்சு அமைந்தது. வனவாசம் முடிந்து அயோத்தியில் செல்லும்போது இம் மான் எனக்கு விளையாட்டுத் துணையாக இருக்கும் என்றாள். இக்கூற்று இராமன் பால் அருள் சுரக்கும்படி அமைந்தது.*
*மானைப்பற்றி இராமலக்குவர் மாறுபாடு கொள்ளல்*

***3298. ஐய நுண் மருங்குல் நங்கை அஃது***
***உரைசெய்ய, ஐயன்,***
***'செய்வென்' என்று அமைய, நோக்கத்***
***தெளிவுடைத் தம்பி செப்பும்***
***'வெய்ய வல் அரக்கர் வஞ்சம் விரும்பினார்***
***வினையின் செய்த***
***கைதவ மான் என்று, அண்ணல்! காணுதி***
***கடையின்' என்றான்.***

***ஐய நுண் மருங்குல் நங்கை -*** *'உண்டோ, இல்லையோ' என ஐயுறத்தக்க சிறிய இடையை உடைய சீதையாகிய நங்கை;* ***அஃது உரை செய்ய -*** *இவ்வாறு தன் ஆசையை வெளியிட்டுப் பேச;****ஐயன்-*** *தலைவனாகிய இராமன்;* ***செய்வென் என்று அமைய -*** *இதோ பிடித்துத் தருகிறேன் என்று முடிவு கூற;* ***நோக்கத் தெளிவுடைத் தம்பி -*** *சிந்தனையில் தெளிவுடைய தம்பி இலக்குவன்;* ***செப்பும் -*** *தமையனிடம் கூறலானான்;* ***'அண்ணல்! -*** *என் தலைவனே;****வெய்ய வல்லரக்கர் -*** *கொடுமையும் வன்மையும் உடைய அரக்கர்கள்;* ***வஞ்சம் விரும்பினார் -*** *வஞ்சனை செய்ய விரும்பியவராய்;* ***வினையின் செய்த -*** *தந்திரத்தால் இயற்றித் தந்த;* ***கைதவ மான் என்று -*** *மாயமான், என்று;* ***கடையின் காணுதி -*** *முடிவில் உணர்ந்து கொள்வாய்;* ***என்றான் -*** *என்று (எச்சரித்துக்) கூறினான்.*

***இலக்குவனின் விடாப்பிடியான அறிவுக் கூர்மையும் கடமை உணர்வும்*** *இங்குப் புலனாகின்றன. ஐய நுண் இடை என்பதற்கு மிகவும் சிறிய இடை எனவும் பொருள் கொள்ளலாம்; ஐய எனின் நுட்பம் என்று பொருள்படும்.*

***3299. 'மாயமேல், மடியும் அன்றே***
***வாளியின்; மடிந்தபோது***
***காய் சினத்தவரைக் கொன்று கடன்***
***கழித்தோமும் ஆதும்;***
***தூயதேல், பற்றிக் கோடும்; சொல்லிய***
***இரண்டின் ஒன்று***
***தீயதே? உரைத்தி' என்றான்-தேவரை***
***இடுக்கண் தீர்ப்பான்.***

***'மாயவேல் -*** *நீ கூறுவது போல் மாயமானாக இருக்குமாகில்;* ***வாளியின் மடியும் அன்றே -*** *என் அம்புக்கு அது இரையாகும் அல்லவா?;* ***மடிந்த போது -*** *அவ்வாறு மரணமுறும் போது;* ***காய் சினத்தவரைக் கொன்று -*** *கொடிய சினம் கொண்ட அரக்கரை அழித்து;* ***கடன் கழித்தோமும் ஆதும் -*** *நம் கடமையை ஆற்றினவர்களும் ஆவோம்; (அன்றி);* ***தூயதேல் -*** *உண்மையான மானாக இருக்குமாகில்;* ***பற்றிக் கோடும் -*** *பிடித்துக் கொண்டு வருவோம்;* ***சொல்லிய இரண்டின் ஒன்று -*** *இப்போது நான் கூறிய இரண்டில் ஏதேனும் ஒன்றை;* ***தீயதே -*** *தீமை என்று கூற முடியுமா?;****உரைத்தி -*** *சொல்லுவாயாக;* ***என்றான் -*** *என்று சொன்னான்;* ***தேவரை இடுக்கண் தீர்ப்பான் -*** *வானவர் துன்பத்தையும் அழிக்க வல்ல இராமன். மாயமான், மெய்யான மான் என்ற இரண்டு நிலையிலும்மானைப் பிடிப்பதால் தீமை இல்லை என உரைத்தான் இராமன். மாயமான் சாக்கிட்டு அவதார நோக்கம் நிறைவெய்தப் போவதால்,'தேவரை இடுக்கண் தீர்ப்பான்' என்று இராமனைக் குறித்தார்.*

***3300. 'பின் நின்றார் இளையர் என்றும்***
***உணர்கிலம்; பிடித்த மாயம்***
***என் என்றும் தெளிதல்***
***தேற்றாம்; யாவது ஈது என்றும் ஓராம்;***
***முன் நின்ற முறையின்***
***நின்றார் முனிந்துள வேட்டம் முற்றல்,***

***பொன் நின்ற வயிரத் தோளாய்! புகழ்***
***உடைத்தாம் அன்று' என்றான்.***

*'**பொன் நின்ற வயிரத் தோளாய் -** பொன் போல் அழகிய வைரம் பாய்ந்த தோள்களை உடையவனே; **பின் நின்றார் இனையர் என்றும் உணர்கிலம் -** இம் மாயமானை ஏவிப் பின்னே நிற்பவர் யாவர் என்றும் தெரியவில்லை; **பிடித்த மாயம் -** அவர்கள் கைக் கொண்டுள்ள மாயை; **என் என்றும் தெளிதல் தேற்றாம் -** எத்தகையது என்றும் உணர இயலவில்லை; **யாவது ஈது என்றும் ஓராம் -** இம் மான் தான் எத்தகையது என்றும் எண்ணிப் பார்க்க முடியவில்லை (அதனால்); **முன் நின்ற முறையின் நின்றார் -**நமக்கு முன்னே நீதி நெறியில் நின்ற பெரியோர்கள்; **முனிந்து உள -** வெறுத்து ஒதுக்கிய; **வேட்டம் முற்றல் -** வேட்டைத் தொழிலில் ஈடுபடுதல்; **புகழ் உடைத்தாம் அன்று -** புகழ் தரும் செயல் அன்று'; **என்றான் -** என்று (இலக்குவன்) கூறினான்.*

*வேறு காரணங்களுக்கு இசையாத இராமனிடம் முன்னோர்வெறுத்த வேட்டைத் தொழில் வேண்டாம் என்று புதிய உத்தியைஇலக்குவன் கையாளுகின்றான். சாது விலங்குகளை வேட்டையாடுதல்பெரியோர்களால் விலக்கப்பட்டது; ஆதலின் இலக்குவன் இம்மானுக்குஇடர் செய்ய வேண்டா என்று பேசிப் பார்க்கிறான்.*

***3301. 'பகையுடை அரக்கர் என்றும், பலர்***
***என்றும், பயிலும் மாயம்***
***மிகையுடைத்து என்றும், பூண்ட***
***விரதத்தை விடுதும் என்றல்***
***நகையுடைத்து ஆகும் அன்றே? ஆதலின்***
***நன்று இது' என்னா,***
***தகையுடைத் தம்பிக்கு, அந் நாள்,***
***சதுமுகன் தாதை சொன்னான்.***

*'**பகையுடை அரக்கர் என்றும் -** நமக்குப் பகைவரான அரக்கர்பெயரைக் கூறியும்; **பலர் என்றும் -** அவர்கள் எண்ணிக்கையால் பலர் என்று பயமுறுத்தியும்; **பயிலும் மாயம் மிகையுடைத்து என்றும்-** அவர்களின் மாயத் தந்திரங்கள் மிகுதியானவை என்று கூறியும்; **பூண்ட விரதத்தை -** அவர்களை அழிக்க நாம் கொண்ட விரதத்தை; **விடுதும் என்றல் -** விட்டு விடக் கருதுதல்; **நகை உடைத்து ஆகும் அன்றே -** பிறர் கேட்டுச் சிரிக்கத் தக்கதாகி விடும், அல்லவா?; **ஆதலின் இது நன்று -** ஆகையால், இம்மானைப் பிடிக்கும் செயலில் பிழையில்லை; **என்னா -** என்று; **அந்நாள் -** அப்போது; **சதுமுகன் தாதை -** பிரமனின் தந்தையாகிய இராமன்; **தகையுடைத் தம்பிக்கு -** பெருமைமிக்க தம்பி இலக்குவனுக்கு; **சொன்னான் -**எடுத்துரைத்தான்.*

*இராமனும் தன் கொள்கையில் பின் வாங்காது இலக்குவனிடம்,நம் விரதத்தினின்றும் மாறி நிற்றல் ஆகாது என்றான்.*

***3302. 'அடுத்தவும் எண்ணிச் செய்தல்,***
***அண்ணலே! அமைதி அன்றோ?***
***விடுத்து, இதன் பின் நின்றார்கள் பலர்***
***உளர் எனினும், வில்லால்***
***தொடுத்த வெம் பகழி தூவித் தொடர்ந்தனென்,***
***விரைந்து சென்று,***
***படுக்குவென்; அது அன்று ஆயின், பற்றினென்***
***கொணர்வென்' என்றான்.***

***'அண்ணலே! -*** *தலைமை மிக்கவனே;* ***அடுத்தவும் -****செய்யத்தக்க எச் செயலையும்;* ***எண்ணிச் செய்தல் -*** *ஆராய்ந்துசெய்தல்;****அமைதி அன்றோ -*** *பொருத்தம் உடையது அல்லவா?(அது நிற்க);* ***விடுத்து இதன்பின் நின்றார்கள் -*** *இம்மானை அனுப்பிஇதன் பின் ஒளிந்துநிற்போர்;* ***பலர் உளர் எனினும் -*** *பலராகஇருந்த போதிலும்;****வில்லால் தொடுத்த வெம் பகழி தூவி -*** *வில்லில் தொடுத்த கொடிய அம்புகளை ஏவி;* ***தொடர்ந்தனென் -*** *பின் தொடர்வேன்;* ***விரைந்து சென்று -****மேலும் வேகமாய்ப் போய்;* ***படுக்குவென் -*** *அவர்களை அழிப்பேன்;* ***அது அன்று ஆயின் -*** *இல்லையெனில்;* ***பற்றினென் கொணர்வென் -*** *மானைக்கைப்பற்றிஇழுத்து வருவேன்;* ***என்றான் -*** *என்று இலக்குவன் தெரிவித்தான்.*

*'மானின் பின் தாங்கள் செல்வதற்குப் பதில் நானே சென்றுவென்று வருவேன்' என இலக்குவன் வேண்டுகின்றான்.*

***3303. ஆயிடை, அன்னம் அன்னாள்,***
***அமுது உகுத்தனைய செய்ய***
***வாயிடை, மழலை இன்சொல்***
***கிளியினின் குழறி, மாழ்கி,***
***'நாயக! நீயே பற்றி***
***நல்கலைபோலும்' என்னா,***
***சேயரிக் குவளை முத்தம் சிந்துபு***
***சீறிப் போனாள்.***

***ஆயிடை -*** *இப்பேச்சுக்களின் இடைப்புகுந்து;****அன்னம்அன்னாள் -*** *பேடை அன்னம் போன்ற சீதை;* ***மாழ்கி -*** *வருத்தமுற்று;* ***அமுது உகுத்தனைய -*** *அமுதம் சிந்தினாற் போன்று;* ***செய்ய வாயிடை மழலை இன்சொல் -*** *சிவந்த வாயில் இனியமழலை போலும் சொற்களை;* ***கிளியினின் குழறி -*** *கிளி மொழிவதுபோல் கொஞ்சிக் கூறி;* ***'நாயக -*** *என் நாதனே;* ***நீயே பற்றி நல்கலைபோலும் -*** *இம்மானை நீயே பிடித்துத்தரமாட்டாயா;* ***என்னா -*** *என்று (ஊடல் கொண்டு);* ***சேயரிக் குவளை -*** *சிவந்த வரிகளைஉடைய குவளை மலர் போன்ற கண்களில்;****முத்தம் சிந்துபு -*** *கண்ணீர் முத்துக்கள் சிந்த;* ***சீறிப் போனாள் -*** *கோபம் கொண்டு செல்லத் தொடங்கினாள்.*

*இலக்குவன் கருத்தைத் தன் ஊடற் கோலத்தால் இராமபிரானிடம் மறுத்துக் கூறுகின்றாள் சீதை.*

இளையவனை நிறுத்திவிட்டு இராமன் மானைத் தொடர்தல்

***3304. போனவள் புலவி நோக்கி, புரவலன்,***
***'பொலன் கொள் தாராய்!***
***மான் இது நானே பற்றி, வல்லையின்***
***வருவென், நன்றே;***
***கான் இயல் மயில் அன்னாளைக்***
***காத்தனை இருத்தி' என்னா,***
***வேல் நகு சரமும், வில்லும்***
***வாங்கினன் விரையலுற்றான்.***

***போனவள் புலவி நோக்கி*** *- அவ்வாறு சென்ற சீதையின் ஊடலைப் பார்த்து;* ***புரவலன்*** *- அனைவரையும் காத்தல் வல்ல இராமன், (இலக்குவனிடம்);* ***'பொலன் கொள் தாராய்*** *- பொன்மயமான மலர் மாலை புனைந்தவனே;* ***மான் இது நானே பற்றி****- இம் மானை நானே பிடித்துக் கொண்டு;* ***வல்லையின் வருவென் நன்றே*** *- விரைவில் நன்கு வந்து விடுவேன்; (அதுவரை);* ***கான் இயல் மயில் அன்னாளை*** *- கானகத்து மயில் போன்ற சீதையை;* ***காத்தனை இருத்தி*** *- நீ காவல் காத்து இருப்பாயாக;* ***என்னா*** *- என்று கூறி;* ***வேல் நகு சரமும் வில்லும் வாங்கினன்*** *- வேல் போன்ற கூரிய அம்புகளையும் வில்லையும் எடுத்துக் கொண்டு;* ***விரையல் உற்றான்*** *- வேகமாகச் செல்லலானான். சீதையின் ஊடலைத் தவிர்க்கும் பொருட்டு இராமன் தானே புறப்பட்டான். மேகம் கண்டு களிக்கும் மயில் போல, நீல மேக வடிவினனான இராமனைக் கண்டு களிக்கும் மயில் சீதை என்பதாம். கோப்பெருந்தேவி ஊடல் பாண்டியனுக்கும் கண்ணகிக்கும் அவலம்விளைத்தது; சீதையின் ஊடல் சீதைக்கும் இராமனுக்கும் அவலம் விளைத்தது.*

***3305. 'முன்னமும் மக வாய் வந்த மூவரில்***
***ஒருவன் போனான்;***
***அன்ன மாரீசன் என்றே***
***அயிர்த்தனன், இதனை; ஐய!***
***இன்னமும் காண்டி; வாழி, ஏகு'***
***என, இரு கை கூப்பி,***
***பொன் அனாள் புக்க சாலை***
***காத்தனன், புறத்து நின்றே.***

***'முன்னமும் மக வாய் வந்த*** *- விசுவாமித்திர முனிவனது யாகத்தில் முன்னர் வந்த;* ***மூவரில் ஒருவன் போனான்*** *- மூன்று அரக்கருள் ஒருவன் ஆகிய மாரீசன் தப்பிப் போனான்;* ***இதனை அன்ன மாரீசன் என்றே*** *- அந்த மாரீசனாக (இம்மான்) இருத்தல் கூடுமோ என்று;* ***அயிர்த்தனன்*** *- ஐயம் கொண்டேன்; (அதனால்);* ***ஐய*** *- என் ஐயா;* ***இன்னமும் காண்டி*** *- மேலும் சிந்தித்துப் பாராய்;* ***ஏகு*** *- செல்வாயாக;* ***வாழி*** *- (தீங்கு நேராது) வாழ்க;* ***என இரு கை கூப்பி*** *- என்று இரண்டு கரங்களையும் எடுத்து வணங்கி;*

***பொன்னனாள் புக்க சாலை -*** *திருமகளான சீதை புகுந்த பர்ண சாலையை;* ***புறத்து நின்றே காத்தனன் -*** *வாசலில் நின்றவாறு காவல் காக்கத் தொடங்கினான்.*

*கூரிய அறிவு மிக்க இலக்குவன் தன் சகோதரனுக்குக் கடைசிக்கணத்திலும் அறிவுரை கூறித் தெருட்டும் நுட்பம் வியப்புக்கு உரியது. மகம் - யாகம்; மக வாய் வேள்வியின் போது.*

***3306. மந்திரத்து இளையோன் சொன்ன வாய்மொழி***
***மனத்துக் கொள்ளான்;***
***சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள்***
***சலத்தை நோக்கி,***
***சிந்துரப் பவளச் செவ் வாய் முறுவலன்,***
***சிகரச் செவ்விச்***
***சுந்தரத் தோளினான், அம்***
***மானினைத் தொடரலுற்றான்.***

***மந்திரத்து இளையோன் -*** *எண்ணிச் சிந்திக்க வல்ல தம்பி இலக்குவன்;* ***சொன்ன வாய்மொழி -*** *எடுத்துக் கூறிய வாய்மை மிக்க மொழியை;* ***சிகரச் செவ்விச் சுந்தரத் தோளினான் -*** *மலையென உயர்ந்த அழகிய தோள்களை உடைய இராமன்;* ***மனத்துக் கொள்ளான் -*** *தன் மனத்தில் ஏற்றுக் கொள்ளாதவனாய்;* ***சந்திரற்கு உவமை சான்ற -*** *பூரணச் சந்திரனுக்கு உவமை கூறத்தக்க;* ***வதனத்தாள் சலத்தை நோக்கி -*** *முகத்தை உடைய சீதையின் கோபத்தையே எண்ணியவனாய்;* ***சிந்துரப் பவளச் செவ்வாய் முறுவலன் -*** *சிந்தூரமும் பவளமும் போன்ற சிவந்த இதழ்களில் புன்முறுவல் பூண்டவனாய்;* ***அம்மானினைத் தொடரல் உற்றான் -*** *அந்த மானைத் தொடர்ந்து செல்லத் தொடங்கினான்.*

*வாய்மொழி - வாய்மை ஆகிய மொழி. பண்புத் தொகை. வாயின் மொழி எனப் பொருள் கொண்டால் வேற்றுமைத் தொகை.*

*இலக்குவனின் எச்சரிக்கையும், சீதையின் கோபமும்இராமனுக்குச் சிரிப்பைத் தந்தன, அவன் வீரனாகையால்.*

***3307. மிதித்தது மெல்ல மெல்ல;***
***வெறித்தது வெருவி; மீதில்***
***குதித்தது; செவியை நீட்டி, குரபதம்***
***உரத்தைக் கூட்டி,***
***உதித்து எழும் ஊதை, உள்ளம், என்று***
***இவை உருவச் செல்லும்***
***கதிக்கு ஒரு கல்வி வேறே***
***காட்டுவது ஒத்தது அன்றே.***

*(அந்த மாய மான்);* ***மெல்ல மெல்ல மிதித்தது -*** *மெதுவாய் மெதுவாய் நிலத்தில் ஊன்றி நடந்தது;* ***வெருவி வெறித்தது -*** *(பின்னர்) அஞ்சினாற் போல் வெறித்து நோக்கியது;* ***செவியை நீட்டி -*** *காதுகளை விறைத்து நீட்டியவாறு;* ***குரபதம் உரத்தைக் கூட்டி*** *-தன் கால் குளம்புகளை மார்புடன் ஒடுக்கி;* ***மீதில் குதித்தது -*** *வானேறித்தாவியது;* ***உதித்து எழும் ஊதை -*** *பொங்கி வரும் காற்று;* ***உள்ளம் என்று இவை -*** *மனம் என்னும் இவற்றை;* ***உருவச் செல்லும் கதிக்கு -*** *(வாயு வேகம், மனோ வேகம் என்கின்ற வேகங்களை) தாண்டிச் செல்லும் விரைவு நடைக்கு;* ***ஒரு கல்வி -*** *ஒரு புதிய பெயரைக் கற்பிக்கும்படி;* ***வேறே காட்டுவது ஒத்தது -*** *புதிதான நடையைக் காட்டுவதாய் அமைந்தது;* ***அன்றே -*** *ஈற்றசை.*

*வாயு வேக, மனோ வேகங்களைக் கடந்த வேகத்தில் இம்மான் சென்றதால் புதிய பெயர் ஒன்று சூட்டும்படியாக அவ்வேகம் அமைந்தது என்றார்.*

***3308. நீட்டினான், உலகம் மூன்றும்***
***நின்று எடுத்து அளந்த பாதம்;***
***மீட்டும் தாள் நீட்டற்கு, அம்மா! வேறும்***
***ஓர் அண்டம் உண்டோ?***
***ஓட்டினான், தொடர்ந்த தன்னை,***
***ஒழிவு அற நிறைந்த தன்மை,***
***காட்டினான் அன்றி, அன்று, அக்***
***கடுமை யார் கணிக்கற்பாலார்?***

*(இராமன் அந்த மாயமானைத் தொடருவதற்காக);* ***உலகம் மூன்றும் அளந்த பாதம் -*** *மூவுலகையும் அளந்த திருவடிகளை;* ***நின்று எடுத்து நீட்டினான் -*** *எடுத்து நீள வைத்தான்;* ***மீட்டும் தாள்நீட்டற்கு வேறும் ஓர் அண்டம் உண்டோ? -*** *மேலும் அவன் அளப்பதற்குரிய உலகம் வேறு ஒன்று இருக்கிறதோ?;* ***ஓட்டினான் -****அத்தகைய பாதங்களால் (மானைத்) துரத்தினான்;* ***தொடர்ந்த தன்னை -*** *அவ்வாறு துரத்திய பெருமான் மானைத் தொடர்ந்து தனது;* ***ஒழிவுஅற நிறைந்த தன்மை -*** *நீக்கமற எங்கும் நிறைந்த நிலையினை;* ***காட்டினான் -*** *(எங்கும் திரிந்ததால்) காட்டி நின்றான்;* ***அன்றி -*** *இதுதான் உண்மையே அன்றி;* ***அன்று அக்கடுமை -*** *அன்று அம்மான் சென்ற வேகத்தின் கடுமையை;* ***கணிக்கற்பாலார் யார்? -****கணக்கிட வல்லவர் யாவர்?*

*வாமனனாக இருந்து திருவிக்கிரமாவதாரம் எடுத்த காலை எல்லா உலகங்களிலும் கால் நீட்டிய திருமால், இன்று இந்த மான் காரணமாக எல்லா இடங்களிலும் தொடர்ந்து காட்சி தந்தான். அதனால் எங்கும் நிறை இறைவன் எனக் காட்டிக் கொண்டான். அம்மா - அசை; வியப்பிடைச் சொல்லுமாம்.*

***3309. குன்றிடை இவரும்; மேகக் குழுவிடைக்***
***குதிக்கும்; கூடச்***
***சென்றிடின், அகலும்; தாழின், தீண்டல்***
***ஆம் தகைமைத்து ஆகும்;***

***நின்றதே போல நீங்கும்;***
***நிதிவழி நேயம் நீட்டும்***
***மன்றல் அம் கோதை மாதர் மனம்***
***எனப் போயிற்று, அம்மா!***

**குன்றிடை இவரும்** - *அந்த மான் மலைகளின் மீது ஏறும்;* **மேகக் குழுவிடைக் குதிக்கும்** - *வான்முகில்களிடையே சென்று பாயும்;* **கூடச் சென்றிடின் அகலும்** - *அருகில் சென்றால் தொலைவில் விலகி ஓடும்;* **தாழின் தீண்டல் ஆம் தகைமைத்து ஆகும்** - *அருகில் செல்லத் தாமதித்தால் தீண்டுதற்கு அண்மையாகவந்து நிற்கும்;* **நின்றதே போல நீங்கும்** - *(அருகில் சென்றால்) நின்றாற் போல் தோன்றியபடி தொலைவில் விலகி நீங்கும்;* **நிதி வழி நேயம் நீட்டும்** - *கொடுத்த பணத்துக்கு ஏற்றபடி அன்பைப் பகிர்ந்து தரும்;* **மன்றல் அம் கோதை மாதர்** - *மணம் கமழ் மாலை சூடிய விலைமகளிர்;* **மனம் எனப் போயிற்று** - *(ஒரு வழி நில்லாத) மனத்தைப் போல் சென்றது (அம்மா - வியப்புக் குறித்த இடைச் சொல்).*

*எங்கும் நில்லாமல் பாயும் மானின் பாய்ச்சலை நிதி வழி நேயம் நீட்டும் விலை மகளிர் மனம் என உவமித்துக் கூறினார்.*

***3310. 'காயம் வேறு ஆகி, செய்யும் கருமம்***
***வேறு ஆகிற்று அன்றே?***
***ஏயுமே; என்னின் முன்னம்***
***எண்ணமே இளவற்கு உண்டே;***
***ஆயுமேல் உறுதல் செல்லாம்;***
***ஆதலால், அரக்கர் செய்த***
***மாயமே ஆயதே; நான் வருந்தியது'***
***என்றான் - வள்ளல்.***

**'காயம் வேறு ஆகி** - *(இந்த மானின்) வடிவம் மானாக வேறுபட்டிருந்தாலும்;* **செய்யும் கருமம் வேறு ஆகிற்று அன்றே** - *இதன் செயல்களோ மானின் இயல்பிலிருந்து மாறுபட்டதாய்த் தோன்றுகின்றன;* **என்னின் முன்னம்** - *எனக்கு முன்னே;* **இளவற்கு எண்ணமே உண்டே** - *தம்பி இலக்குவனுக்கு இது குறித்த சிந்தனைதோன்றியதில் நியாயம் உண்டு தானே;* **ஏயுமே** - *(அவன் எண்ணம்) பொருத்தமாகத்தான் இருக்கிறது;* **ஆயுமேல்** - *நன்றாக நானும் ஆராய்ந்திருந்தால்;* **உறுதல் செல்லாம்** - *இங்கு வந்திருக்க மாட்டேன்;* **ஆதலால்** - *எனவே;* **நான் வருந்தியது** - *நான் இப்போது வருந்தி உணர்வது;* **அரக்கர் செய்த மாயமே ஆயதே** - *இராக்கதர் மாயம் செய்ததன் விளைவையே;* **என்றான் வள்ளல்** - *என அருள் வள்ளலாகிய இராமன் எண்ணினான்.*

*மானின் இயல்புக்கு மாறாகத் தந்திரம் வல்லதாக இம் மாயமான் இயங்குகிறது. ஒரு கட்டத்தில் களைப்புற வேண்டிய விலங்குஇராமனை இழுத்துக் கொண்டு தொலை தூரம் வந்து விட்டது.இவற்றால் இராமன் மனம் சிந்திக்கலாயிற்று.*

*இராமன் அம்பால் மாரீசன் அலறி வீழ்தல்*

*கலிவிருத்தம்*

***3311.  'பற்றுவான், இனி,***
    ***அல்லன்; பகழியால்***
***செற்று, வானில் செலுத்தல்***
    ***உற்றான்' என***
***மற்ற அம் மாய***
    ***அரக்கன் மனக் கொளா,***
        ***உற்ற வேகத்தின்***
    ***உம்பரின் ஓங்கினான்.***

***'இனிப் பற்றுவான் அல்லன் -*** *இனி (இராமன் என்னைப்) பிடிக்க முயலமாட்டான்;* ***பகழியால் செற்று -*** *அம்பால் கொன்று;* ***வானில் செலுத்தல் உற்றான் -*** *விண்ணில் செலுத்தக் கருதினான்';* ***என -*** *என்று;* ***மனக் கொளா -*** *சிந்தையில் உணர்ந்தவனாய்;* ***அம் மாய அரக்கன் -*** *மாயை வல்ல அம்மாரீசன்;* ***உற்ற வேகத்தின் -*** *மிக்க விரைவுடன்;* ***உம்பரின் ஓங்கினான் -*** *வானத்தில் உயரே பாய்ந்தான்.* ***மற்ற -*** *அசை.*

*பிடிக்க எண்ணும் மனநிலை இராமனிடம் மாறிவிட்டதை மாரீசன் அறிந்தான். இனி அம்பால் கொல்வான் என்று கணித்தான்.*

***3312.  அக் கணத்தினில், ஐயனும்,***
    ***வெய்ய தன்***
***சக்கரத்தின் தகைவு***
    ***அரிது ஆயது ஓர்,***
***செக்கர் மேனிப்***
    ***பகழி செலுத்தினான்-***
***'புக்க தேயம் புக்கு இன்***
    ***உயிர் போக்கு' எனா.***

***அக் கணத்தினில் -*** *அந்த நொடிப் பொழுதில்;* ***ஐயனும் -*** *இராமனும்;* ***புக்க தேயம் புக்கு -*** *எங்கே அந்த மான் செல்லுகிறதோஅங்கெல்லாம் சென்று;* ***இன் உயிர் போக்கு எனா -*** *அதன் இனிய உயிரை நீக்கு என்று ஆணையிட்டு;* ***வெய்ய தன் சக்கரத்தின் -*** *கொடிய தன் சக்கராயுதம் போன்று;* ***தகைவு அரிது ஆயது ஓர் -*** *தடுப்பதற்கு இயலாத ஒரு;* ***செக்கர் மேனிப் பகழி -*** *சிவந்த அம்பினை;* ***செலுத்தினான் -*** *ஏவினான்.*

*தப்ப முயலும் மாரீசனைத் தாக்கி அழிக்கும் இராமபாணம் ஏவப் பெற்றது.*

***3313.  நெட்டிலைச் சரம் வஞ்சனை நெஞ்சுறப்***
***பட்டது; அப்பொழுதே, பகு வாயினால்,***

***அட்ட திக்கினும், அப்புறமும் புக***
***விட்டு அழைத்து, ஒரு குன்று என வீழ்ந்தனன்.***

**நெட்டிலைச் சரம் -** *நெடிய இலை வடிவம் கொண்ட அவ்வம்பு;* **வஞ்சனை நெஞ்சுறப் பட்டது -** *வஞ்சகம் நிரம்பிய (மாரீசன்) நெஞ்சில் சென்று தாக்கியது;* **அப்பொழுதே -** *அந்தக் கணமே;* **பகு வாயினால் -** *பிளவுபட்ட வாயினால்;* **அட்டதிக்கினும் -** *எட்டுத் திசைகளிலும்;* **அப்புறமும்புக -** *அதற்கு அப்பாலும் செல்லும்படி;* **விட்டு அழைத்து -** *(சீதா லட்சுமணா) என்று இராமன் குரலில் கூவி;* **ஒரு குன்று என வீழ்ந்தனன் -** *மலை விழுவது போல (தன் இயற்கை வடிவம் கொண்டு) வீழ்ந்தான்.*

*தன் குரலை இராமன் குரலாக மாற்றி அழைத்து மடிந்தான்.மடியும் போதும் வஞ்சனையால் 'சீதா லட்சுமணா' என்று குரல்கொடுத்தான்.*

*மாயம் உண்டு என மதித்து இராமன் பர்ண சாலைக்கு விரைதல்*

***3314. வெய்யவன், தன்***
***உருவொடு வீழ்தலும்,***
***'செய்யது அன்று' எனச்***
***செப்பிய தம்பியை,***
***ஐயன் வல்லன்; என்***
***ஆர் உயிர் வல்லன்; நான்***
***உய்ய வந்தவன் வல்லன்'***
***என்று உன்னினான்.***

**வெய்யவன் -** *கொடியவனாகிய மாரீசன்;* **தன் உருவொடு வீழ்தலும் -** *தன் இயற்கை வடிவத்தோடு மரண முற்று வீழவும்;* **செய்யது அன்று எனச் செப்பிய தம்பியை -** *இம்மான் உண்மையானது அன்று என்று (நுனித்துணர்ந்து) கூறிய தம்பி இலக்குவனைக் குறித்து;* **'ஐயன் வல்லன் -** *என் இளவல் திறமையாளன்;* **என் ஆர் உயிர் வல்லன் -** *என் இனிய உயிர் போன்றவன் வல்லமை உடையவன்;* **நான் உய்ய வந்தவன் வல்லன்-** *என்னைக் காக்க (என் தம்பியாக) வந்தவன் பேரறிவாளி';* **என்று உன்னினான் -** *என்று இராமன் எண்ணினான்.*

*வல்லன் என்று பன் முறை கூறியது இலக்குவன் வல்லமையை உணர்ந்த வியப்பினால் என்க. தம்பியை ஐயன், ஆர் உயிர், உய்ய வந்தவன் என்று பாராட்டிச் சிறப்பித்தான் இராமன்.*

***3315. ஆசை நீளத்து அரற்றினன்***
***வீழ்ந்த அந்***
***நீசன் மேனியை, நின்று***
***உற நோக்கினான்;***

***மாசு இல் மா தவன்***
***வேள்வியின் வந்த***
***மாரீசனே இவன்***
***என்பதும் தேறினான்.***

***ஆசை நீளத்து -*** *திசைகளின் எல்லை அளவும் எட்டும்படி;* ***அரற்றினன் வீழ்ந்த -*** *குரலெடுத்துக் கூவி மாண்ட;* ***அந்நீசன் மேனியை -****அக் கீழ்மகன் உடலை;* ***நின்று உற நோக்கினான் -*** *அருகில் நின்றுஉற்றுப் பார்த்தான் (இராமன்);* ***மாசு இல் மாதவன் -*** *குற்றம் இல்லாத பெருந்தவமுடைய விசுவாமித்திரனது;* ***வேள்வியின் வந்த -*** *யாக காலத்தில் வந்த;* ***மாரீசனே இவன் -*** *மாரீசனே இவன்;* ***என்பதும் தேறினான் -*** *என்பதனையும் உணர்ந்து கொண்டான்.*

*ஆசை - திக்க என்று பொருள்படும் வடசொல் இலக்குவன் உய்த்துணர்ந்த அரக்கன் மாயத்தை. இராமன் அனுபவித்தேஅறிந்தான்.*

***3316. 'புழைத்த வாளி உரம்***
***புக, புல்லியோன்,***
***இழைத்த மாயையின், என்***
***குரலால் இசைத்து***
***அழைத்தது உண்டு; அது கேட்டு***
***அயர்வு எய்துமால்,***
***மழைக் கண் ஏழை' என்று,***
***உள்ளம் வருந்தினான்.***

***'புழைத்த வாளி -*** *ஊடுருவிச் செல்லும் அம்பு;* ***உரம் புக -*** *தன் மார்பில் பட்டதும்;* ***புல்லியோன் -*** *இழிந்தவனாகிய மாரீசன்;* ***இழைத்த மாயையின் -*** *செய்த மாயத்தினால்;* ***என் குரலால் இசைத்து -*** *என் குரல் போன்ற குரலால் (சீதையையும் இலக்குவனையும்) கூவி;* ***அழைத்தது உண்டு -*** *அழைத்துள்ளான் அல்லவா?;* ***அது கேட்டு -*** *அக்குரலைப் பிறழ உணர்ந்து;* ***மழைக்கண் ஏழை -*** *மழை போல் குளிர்ந்த கண்களை உடைய பேதை ஆகிய சீதை;* ***அயர்வு எய்தும் -*** *துன்பம் உறுவாள்';* ***என்று உள்ளம் வருந்தினான் -*** *என்று மனம் நொந்தான் (இராமன்).* ***ஆல்-****அசை.*

*மழைக் கண் - மழை போல் கண்ணீர் விடுகிற கண் என்றுமாம்.*

***3317. 'மாற்றம் இன்னது, "மாய***
***மாரீசன்" என்று,***
***ஏற்ற காலையின் முன்***
***உணர்ந்தான் எனது***
***ஆற்றல் தேரும்***
***அறிவினன்; ஆதலால்,***

***தேற்றுமால் இளையோன்'***
***எனத் தேறினான்.***

***இளையோன் -*** *தம்பி இலக்குவன்;* ***ஏற்ற காலையின் -*** *மானை எதிர் கொண்ட அளவிலே;* ***மாய மாரீசன் என்று முன் உணர்ந்தான்-*** *மாயை செய்தவன் மாரீசன் என்று முன்னமே அறிந்து சொன்னான்;* ***எனது ஆற்றல்தேரும் அறிவினன் ஆதலால் -*** *(இப்போதும்) என்னுடைய வலிமையை நன்கு தெளிவாக அறிந்திருப்பவனாதலால்;* ***மாற்றம் இன்னது தேற்றும் -*** *சீதைக்கு ஆறுதல் கூறி இக்குரலின் உண்மையை உணர்த்தியிருப்பான்;* ***எனத் தேறினான் -*** *என ஆறுதல் கொண்டு மனத் தெளிவு கொண்டான்;* ***ஆல் -*** *அசை.*

*தம்பியின் அறிவையும், ஆறுதல் தரும் மாட்சியையும் போற்றி மகிழ்ந்தான்.*

***3318. 'மாள்வதே பொருள்***
***ஆக வந்தான்அலன்;***
***சூழ்வது ஓர் பொருள் உண்டு;***
***இவன் சொல்லினால்***
***மூள்வது ஏதம்;***
***அது முடியாமுனம்***
***மீள்வதே நலன்' என்று,***
***அவன் மீண்டனன்.***

*(எனினும்);* ***'மாள்வதே பொருள் ஆக -*** *சாவதே நோக்கமாக;* ***வந்தான் அலன் -*** *மாரீசன் வந்தவனாகத் தோன்றவில்லை;* ***சூழ்வது ஓர் பொருள் உண்டு -*** *இவன் திட்டமிட்ட ஒரு நோக்குடன் வந்துள்ளான்;* ***இவன் சொல்லினால் -*** *இவன் கூக்குரலால்;* ***மூள்வது ஏதம் -*** *தீங்கு நிகழ உள்ளது;* ***அது முடியா முனம் -*** *அத் தீங்கு நிறைவேறுவதன் முன்னே;* ***மீள்வதே நலன் -*** *திரும்பப் பர்ண சாலையை அடைவதே நலம் பயக்கும்;"* ***என்று அவன் மீண்டனன் -*** *என்று எண்ணித் திரும்பி வரலானான்.* *இப்படலத்தில் அரக்கர் மாயைக்கு அவதார நாயகர்களும் இலக்காவதும், உயர் குடிப் பெண்ணாயினும் தயக்க மயக்கங்களுக்கு இரையாவதும், நுட்ப அறிவுடையார் எத்தீமையையும் முன்கூட்டி அறிவர் என்பதும் வெளிப்படுத்தப்படுதலைக் காண்கிறோம்.*

## இராவணன் சூழ்ச்சிப் படலம்

*இராமனின் அம்பால் பொய்மான் வேடம் கொண்டு வீழ்ந்த மாரீசன் இராமனின் குரலில் கதறினான். அதனை அரக்கனின் வஞ்சனை என உணராத சீதையின் அவசரச் செயலால் காப்பியத்தில் பெரிய மாற்றம் ஏற்படுகிறது. இதனை விளக்குவது இப்படலம். மாரீசன் குரலை இராமன் குரல் அல்லவென்று உணர்ந்த இலக்குவன், வாளா விருந்தான். அவ்வுண்மையை உணராத சீதை இராமனுக்குப் பெருந்தீங்கு நிகழ்ந்ததாக அஞ்சி அழுது இராமனைக் காத்தற்கு உடனே செல்லாத இலக்குவன்மேற் குறை கூறினாள். அதற்கு மாறாக இராமனின் ஆற்றலைக் கூறி இலக்குவன் சீதைக்கு உண்மை நிலையை எடுத்துரைத்தும், அதைக் கேளாமல் அவனைப் பழித்துத் தீயில் விழப்போக, அவளைத் தடுத்து இராமனிருந்த இடத்தைத் தேடிச் சென்றான்.*

*சீதை தனியே இருப்பதைக் கண்ட இராவணன் தவக் கோலத்துடன் வந்தான். வந்தவனை உண்மைத் துறவி என்றே கருதி வரவேற்று, இன்மொழி கூறினாள். இராவணன் இருந்தவுடன் மலை,மரம், பறவை, விலங்கு ஆகியவை அஞ்சி ஒடுங்கின. இராவணன் சீதையைப் பற்றி வினவ, அவள் தன் வரலாறு கூறி அரக்கர்களையும் இராவணனையும் இழித்துரைத்தாள். அது கேட்டு வெகுண்ட இராவணன் தன் வேடம் நீங்கி உண்மை உருவொடு நின்றான். பலவாறு தன் பெருமையையும் தன்னை அடைந்தால் சீதை பெறப் போகும் நலனையும் விரித்துரைத்தான். அவள் கொண்ட சினத்தையும் பொருட்படுத்தாது அவள் அடி வணங்கினான். அஞ்சிய சீதை, இராமலக்குவரைக் கூவி அழைத்தாள். இராவணன் தன் முன்னைய சாபத்தை எண்ணிச் சூழ்ச்சி செய்து நிலத்தோடு பெயர்த்துச் சீதையைத் தன் தேர் மீது வைத்துச் செல்லலானான். பலவாறு சீதை அரற்றினாள். அதுகேட்டு இராவணன் ஏளனம் செய்து சிரித்தான். சீதை இராவணனின் வஞ்சனையைக் கூறி இழித்துரைத்தாள். 'வெள்ளி மலையை எடுத்த தோளால் மானுடருடன் போர் புரியின் பழி தரும்;அதைவிட வஞ்சமே பெரும் பயன் தரும்' என்றான். அதுகேட்ட சீதை அவன் வஞ்சித்த செயலைப் பழித்தாள்.*

*இவ்வாறு, மாய மானைக் காட்டி முதலில் இராமனையும் பின்னர் மாரீசனின் மாயக் குரலால் இலக்குவனையும் சூழ்ச்சியாகப் பிரித்துச் சீதையை வஞ்சக வேடம் பூண்டு நிலத்தோடு பெயர்த்துத் தேரில் ஏற்றிக் கவர்ந்த இராவணனின் சூழ்ச்சிச் செயலை இப்படலம் கூறும் சில பதிப்புகளில் இப் படலம் சடாயு உயிர் நீத்த படலத்தில் முன் பகுதியாக உள்ளது.*

*கலிவிருத்தம்*

***3319. சங்கு அடுத்த தனிக்கடல் மேனியாற்கு***
***அங்கு அடுத்த நிலைமை அறைந்தனம்;***
***கொங்கு அடுத்த மலர்க்குழல் கொம்பனாட்கு***
***இங்கு அடுத்த தகைமை இயம்புவாம்.***

***சங்கு அடுத்த தனிக்கடல் மேனியாற்கு*** *- சங்குகள் பொருந்திய ஒப்பில்லாத கடல் போன்ற நீல நிறமுள்ள திருமேனியுடைய இராமனுக்கு;* ***அங்கு அடுத்த நிலைமை***

***அறைந்தனம் -*** *பொன் மானைத் தொடர்ந்து போன இடத்தில் நிகழ்ந்த தன்மையைச் சொன்னோம்;* ***கொங்கு அடுத்த மலர்க்குழல் கொம்பனாட்கு -*** *நறுமணம் பொருந்திய பூக்களைச் சூடிய கூந்தலை உடைய பூங்கொம்பு போன்ற சீதைக்கு;* ***இங்கு அடுத்த தகைமை இயம்புவாம் -*** *இப்பன்னக சாலையில் நிகழ்ந்த தன்மையைச் சொல்லுவோம்.*

*இராமன் மேனிக்குக் கடல் உருவகம் 'கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலை என்பாள் பயந்தாள்' என வரும் (656). மேலும் 'மையோ மரகதமோ மறிகடலோ' எனவும் காணலாம் (1926). கொங்கு - தேனும் ஆம். தகைமை என்பதற்கு இராவணனால் பற்றப்பட்டமை எனவும் கூறுவர்.*

*மலர்க்குழல் கொம்பு - இல்பொருள் உவமை. இது காப்பியத்தின்முன் நிகழ்ச்சியைக் கூறி இனிக் காப்பியத் தலைவிக்கு வரப் போவதை உணர்த்தும் கவிக் கூற்றாம்.*

*சீதையின் துயர்நிலை*

*3320.* ***எயிறு அலைத்து முழை***
***திறந்து ஏங்கிய,***
***செயிர் தலைக்கொண்ட,***
***சொல் செவி சேர்தலும்,***
***குயில் தலத்திடை உற்றது***
***ஒர் கொள்கையாள்,***
***வயிறு அலைத்து***
***விழுந்து மயங்கினாள்.***

***எயிறு அலைத்து முழை திறந்து ஏங்கிய -*** *பற்களைக் கடித்துக் கொண்டு குகை போன்ற தன் வாயைத் திறந்து (மாரீசன்) முழங்கிய;* ***செயிர் தலைக் கொண்ட சொல் செவி சேர்தலும் -*** *துன்பத்தை மேற்கொண்ட வார்த்தை சீதையின் காதில் பட்டவுடன்;* ***குயில் தலத்திடை உற்றது ஒர் கொள்கையாள் -*** *ஒரு குயில் (மரத்திலிருந்து தவறி) நிலத்தில் விழுந்தது போன்ற துயர் அடைந்தவளாய்;* ***வயிறு அலைத்து விழுந்து மயங்கினாள் -*** *வயிற்றில் கையால் அடித்துக் கொண்டு தரையில் விழுந்து மயக்கமடைந்தாள்.*

*செயிர் - சினம், வஞ்சகம், துன்பம். செயிர் தலைக் கொண்ட சொல் - இராமன் அம்பினால் பொன்மான் வடிவிலிருந்த மாரீசன் வீழும் போது 'ஆ, சீதே! ஆ, இலக்குவா!' என இராமனின் குரலில் கூறிய வஞ்சகம் நிறைந்த சொல் ஆம். துன்பம் எனப் பொருள் கொண்டு இராமன் அம்பினால் சாகப்போகும் துன்பத்தில் விளைந்த சொல் எனவுமாம். இராமன் குரல் போன்ற குரலில் ஆபத்து வெளிப்படவே தரையிடை வீழ்ந்த குயில் போல் சீதை பெருந்துயருற்றாள். இது இராமனிடமிருந்து சீதை பிரிக்கப்படுதற்கு முன்னறி குறியாக அமைகிறது. துன்பமிகும் போதுபெண்கள் வயிற்றிலடித்துக் கொண்டழுவதை முன்னர்ச் சூர்ப்பணகைப் படலத்தில் 'வந்தானை முகம் நோக்கி வயிறு அலைத்து' (2846) என வந்தது காட்டும். முழை - உவம ஆகுபெயர்.*

***3321. ' "பிடித்து நல்கு, இவ் உழை"***
***என, பேதையேன்***
***முடித்தனென், முதல் வாழ்வு'***
***என, மொய் அழல்***
***கொடிப் படிந்தது என, நெடுங்***
***கோள் அரா***
***இடிக்கு உடைந்தது என,***
***புரண்டு ஏங்கினாள்.***

*(சீதை)* ***இவ்உழை பிடித்து நல்கு என -*** *இந்த மானை நீயே பிடித்து எனக்குக் கொடு எனச் சொல்லி;* ***பேதையேன் முதல் வாழ்வு முடித்தனென் என -*** *அறிவற்ற நான் கணவனொடு வாழும் குலமகளின் தலைமையுற்ற வாழ்வை முடித்துக் கொண்டேன் என்றுகூறி;* ***மொய் அழல் கொடிப் படிந்தது என -*** *நெருங்கிய தீ, ஒரு பூங்கொடியைப் பற்றி எரித்தது போலவும்;* ***நெடுங்கோள் அரா இடிக்கு உடைந்தது என -*** *நீண்ட வலிய பாம்பு, இடி ஓசை கேட்டுத் தன் வலிமை கெட்டுக் கிடந்தது போலவும்;* ***புரண்டு ஏங்கினாள் -*** *தரையில் புரண்டு வருந்தினாள்.*

*பேதை - பேதைப் பருவப் பெண்ணையும் குறிக்கும். இங்குப் பேதைமைப் பண்பால் சீதை தன்னையே குறித்துக் கொண்டாள். முதல் வாழ்வு என்பதை வாழ்வு முதல் என மாற்றியும் பொருள் காண்பர். இடைதல் - வருந்துதல்.*

*மாரீசனின் போலிக் குரலைக் கேட்ட சீதை, இராமனின் உண்மைக் குரல் எனக் கருதித் தீப்பட்ட பூங்கொடி போலவும் இடியுண்ட நாகம் போலவும் துன்புற்றாள். உவமை இவ்வாறு அடுக்கி வந்து சீதையின் துன்பத்தைப் பெருக்கிக் காட்டும். உதயணன் மார்பில் மூர்ச்சித்து விழுந்ததை 'இடியேறுண்ட நாகம் போல' எனப் பெருங்கதை கூறும் (பெருங்.2.10.112). சீவக சிந்தாமணியில் 'அருமை மாமணி நாக மழுங்கவோர் உருமுவீழ்ந்தென உட்கினர்' (242) என்ற உவமை காண்க. அது போல் இங்கும் மாரீசன் சொல் இடியாகப்பட்டது. சீதை புரண்டேங்குவது நாகம் இடிக்கு உடைதற்குப் பொருந்தும். மொய்குழற் கொடி - அன்மொழித்தொகை.*

***3322. 'குற்றம் வீந்த குணத்தின்***
***எம் கோமகன்,***
***மற்று அவ் வாள் அரக்கன்***
***புரி மாயையால்,***
***இற்று வீழ்ந்தனன் என்னவும்,***
***என் அயல்***
***நிற்றியோ, இளையோய்! ஒரு***
***நீ?' என்றாள்.***

***குற்றம் வீந்த குணத்தின் எம் கோமகன் -*** *குற்றம் என்பது இல்லா நற்பண்புடை எம் தலைவன்;* ***மற்று அவ் வாள் அரக்கன் புரி மாயையால் -*** *வேறு பட்ட அந்தக் கொடிய அரக்கன் செய்த வஞ்சகத்தால்;* ***இற்று வீழ்ந்தனன் என்னவும் -*** *உயிர் அற்றுக் கீழேவிழுந்தான் எனக் (அவன் குரலால்) கேட்ட பின்னும்;* ***இளையோய்ஒரு நீ -*** *இராமன் தம்பியாம் நீ ஒருவனும்;* ***என் அயல் நிற்றியோ -****என் அருகில் நிற்கின்றாயோ;* ***என்றாள் -*** *(எனச் சீதை இலக்குவனிடம்) கூறினாள்.*

*வீந்த - அழிந்த, வீதல் என்றதனடியாகப் பிறந்தது. வாள் - வாட்படையை உடைய எனலுமாம், 'இற்று வீழ்ந்தனன் என்னவும் என் அயல் நிற்றியோ' என்பதில் 'இராமனுக்கு நீ தீங்கு நிகழ்வதை விரும்பியுள்ளாய்' என்ற குறிப்பும் தொனிக்கக் கூறினாள். இச்சிறு தொடரில் ஆழமான பொருள் அடங்கியிருப்பதால் இதனைக் கம்ப சூத்திரம் என்பர். இராமன் 'குணத்தின் எம் கோமான்' என்றதால் இலக்குவன் குற்றம் நிறைந்தவன் என்பதாம். 'ஒரு நீ' என்பது 'நீயும் ஒரு தம்பியாக இருக்கின்றாயே' எனப் பழித்துக் கூறியதாம். சீதையின் கொடுஞ் சொற்களை இனிவரும் பாடல்களிலும் காண இயலும் (3330, 3331).*

*'இராமனுக்குத் தீங்கு நேராது' என்று இலக்குவன் அறிவுறுத்தல்*

***3323. 'எண்மை ஆர் உலகினில்,***
***இராமற்கு ஏற்றம் ஓர்***
***திண்மையார் உளர்***
***எனச் செப்பற்பாலரோ?***
***பெண்மையால் உரைசெயப்***
***பெறுதிரால்' என,***
***உண்மையான், அனையவட்கு***
***உணரக் கூறினான்.***

***எண்மை ஆர் உலகினில் -*** *எளிமை பொருந்திய உலகத்தில்;* ***இராமற்கு ஏற்றம் ஓர் திண்மை யார் உளர் எனச் செப்பற் பாலரோ -*** *இராமனுக்கு மிக்க, சிறப்புடைய ஒரு வலிமையுடையவர்இருக்கிறார் எனக் கூறுவார்களா?;* ***பெண்மையால் உரை செயப் பெறுதிரால் -*** *நீர்உம் பெண்ணறிவால் இவ்வாறு கூறிவிட்டீர்;* ***என உண்மையான் அனையவட்கு உணரக் கூறினான் -*** *என்று உண்மை நிலையை உணர்ந்த இலக்குவன் அச் சீதைக்கு அறிந்து கொள்ளும் வகையில் எடுத்துச் சொன்னான்.*

*எண்மை - எளிமை. எண் பொருளவாகச் செலச் சொல்லி' (குறள். 424) என்ற தொடரால் அறியலாம். எண்ணிக்கையும் ஆம். உண்மையான் என்பதுபொன்மானைப் பொய்ம் மானென்ற உண்மையை உணர்ந்தவனுமாம், என்றும் இராமனுக்கு உண்மையோடிருப்பவன் எனவும் ஆம். அனையவட்கு - அனை + அவட்கு எனக் கொண்டு தன் அன்னைபோன்ற சீதைக்கு என்றும் உரைப்பர். இனி உலகத் தாய் எனவும் கூறுவர்.*

*3324. 'ஏழுமே கடல், உலகு*
*ஏழும் ஏழுமே,*
*சூழும் ஏழ் மலை, அவை*
*தொடர்ந்த சூழல்வாய்*
*வாழும் ஏழையர் சிறு வலிக்கு,*
*வாள் அமர்,*
*தாழுமே இராகவன்*
*தனிமை? தையலீர்!*

***தையலீர்!* - *தாயே!;* கடல் ஏழுமே** - *ஏழு கடல்களும்;* **உலகு ஏழும் ஏழுமே** - *பதினான்கு உலகங்களும்;* **சூழும் ஏழ் மலை** - *சூழ்ந்துள்ள ஏழு மலைகளும்;* **அவை தொடர்ந்த சூழல் வாய்** - *அவற்றைப் பின் தொடர்ந்த இடங்களில்;* **வாழும் ஏழையர் சிறுவலிக்கு** - *வாழ்கின்ற எளியோரின் அற்ப பலத்திற்கு;* **இராகவன் தனிமை வாள் அமர் தாழுமே** - *இராமனின் தனிப்பட்டு நின்ற நிலையிலுள்ள வீரம் கொடிய போரில் தாழ்வுபட்டு விடுமா? (விடாது).*

*அண்டங்களிலும் கடல்களிலும் மலைகளிலும் வேறு எங்கும் வாழும் உயிரினங்களின் துணையில்லாமலே வெல்லும் ஆற்றல் கொண்டவன் இராமன் என்பதை இது காட்டும். இராமன் திறனைப் பின்னர் வாலியும் 'கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ!' (4023) என்பதால் வெளிப்படுத்துவான்.*

*வாள் - கொடுமையைக் குறித்தது. முன்னரும் 'வாள் அரக்கன்' (கம்ப. 3322) என வந்துளது.*

*ஏழும் என வந்தது முற்றும்மை. ஏழுமே என வந்த ஏகாரம் எண்ணுப் பொருள் கொண்டது.*

*3325. 'பார் என, புனல் என,*
*பவன, வான், கனல்,*
*பேர் எனைத்து, அவை, அவன்*
*முனியின் பேருமால்;*
*கார் எனக் கரிய அக்*
*கமலக் கண்ணனை*
*யார் எனக் கருதி, இவ்*
*இடரின் ஆழ்கின்றீர்?*

***பார் என*** - *பூமியும்;* ***புனல் என*** - *நீரும்;* ***பவன(ம்) வான் கனல் பேர் எனைத்து அவை*** - *காற்றும் வானமும் தீயும் எனப் பெயர் கொண்டவைஎவ்வளவு உண்டோ அவை அனைத்தும்;* ***அவன் முனியின் பேருமால்*** - *இராமன் சினந்தவுடன் நிலை கெடும் ஆதலால்;* ***கார் எனக் கரிய அக்கமலக் கண்ணனை*** - *மேகம் போன்று கருநிறம் கொண்ட அந்தத் தாமரை போலும் சிவந்த கண்ணுடையவனை;* ***யார் எனக் கருதி இவ்இடரின் ஆழ்கின்றீர்*** - *யார் என்று எண்ணி இத்துன்பக் கடலில் அழுந்துகின்றீர்?*

*மண் முதல் தீ வரை ஐம்பூதங்களையும் குறித்துப் பின் அவற்றையும் அடக்கி ஆளும் திறலுடையவன் இராமன் என வலியுறுத்திக் கூறினான் இலக்குவன். 'கமலக் கண்ணனைக் கையினில் காட்டினாள்' எனக் கரன் வதைப் படலத்திலும் இராமன் குறிப்பிடப்படுகிறான் (2889). அயோத்தியா காண்ட மந்திரப் படலத்திலும் 'புண்டரீகக் கண் புரவலன்' எனக் குறிக்கப் பெறுவான்இராமன் (1363). இங்குச் சீதைக்கு இராமனின் அவதார இரகசியத்தைக் கூறினான் எனலும் ஆம்.*

*என என்று முதலடியில் வந்தவை எண்ணுப் பொருளன. மூன்றாமடியில் வந்த என என்பது உவம உருபு. நான்காமடியில் வந்த என என்பது செயவென் எச்சம்.*

***3326. 'இடைந்துபோய் நிசிசரற்கு, இராமன்,***
***எவ்வம் வந்து***
***அடைந்த போது அழைக்குமே?***
***அழைக்குமாம் எனின்,***
***மிடைந்த பேர் அண்டங்கள்,***
***மேல, கீழன,***
***உடைந்துபோம்; அயன் முதல்***
***உயிரும் வீயுமால்.***

***இராமன் நிசிசரற்கு இடைந்து போய் -*** *இராமன் அரக்கனுக்கு வலி ஒடுங்கிப், பின் வாங்கி;* ***எவ்வம் வந்து அடைந்த போது அழைக்குமே -*** *துன்பம் வந்து சேர்ந்த சமயத்தில் (பிறரைத் துணைக்குக்) கூப்பிடுவானோ? (மாட்டான்);* ***அழைக்குமாம் எனின் -*** *கூப்பிட நேருமானால்;* ***மிடைந்த பேரண்டங்கள் மேல கீழன உடைந்துபோம் -*** *நெருங்கிய பெரிய அண்டங்களெல்லாம் மேல் கீழனவாய் அழிந்து போய்விடும்;* ***அயன் முதல் உயிரும் வீயும் -*** *பிரமன் முதலான உயிர்களும் அழியும்,* ***ஆல் -*** *ஈற்றசை.*

*இடைதல் - தோற்றுப்போதல் என்றுமாம். நிசிசரன் - இரவில் சஞ்சரிக்கும் அரக்கன். அண்டப் பெருவெளியில் பல்வேறு உலகங்கள் நெருங்கியிருப்பதை 'மிடைந்த' எனச் சுட்டினான். எவ்வம் - துன்பம். இராமன் எல்லா அண்டங்களிலுள்ள எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் கலந்துள்ளவன் என்பதை முதலில் கூறினான் இலக்குவன். அதனால் அவனுக்கு ஒரு தீங்கு நேரிடின் எல்லாம் அழிந்திருக்கும்; அவ்வாறு அழியாததால் இராமனுக்கு எந்தத் தீங்கும் வரவில்லை என்பதை உணர்த்தினானாம்.* *8*

***3327. 'மாற்றம் என் பகர்வது?***
***மண்ணும் வானமும்***
***போற்ற, வன் திரிபுரம்***
***எரித்த புங்கவன்***
***ஏற்றி நின்று எய்த வில்***
***இற்றது; எம்பிரான்***

## ஆற்றலின் அமைவது ஓர்
## ஆற்றல் உண்மையோ?

**பகர்வது மாற்றம் என் -** *(இராமன் ஆற்றல் குறித்து) மேலும் சொல்லும் வார்த்தை யாதுளது?;* **மண்ணும் வானமும் போற்ற -** *மண்ணுலகும் விண்ணுலகும் புகழ;* **வன் திரிபுரம் எரித்த புங்கவன் -** *வலிய மூன்று கோட்டைகளை எரித்த சிவபெருமான்;* **ஏற்றி நின்று எய்த வில் இற்றது -** *நாணேற்றி நின்று அம்பெய்யும் வில்லை (சீதையின் திருமணத்தின் போது) முறித்திட்டது;* **எம்பிரான் ஆற்றலின் அமைவது ஓர் ஆற்றல் உண்மையோ -** *எம் தலைவனாம் இராமனின் வல்லமையைக் காட்டிலும் பொருத்தமான ஒரு வலிமை உள்ளதோ? (இல்லை).*

*புங்கவன் - ஆண்களில் சிறந்தவன், காளை வாகனத்தை உடையவன் என்றும் உரைப்பர். சிவபெருமான் கையிலெடுத்து நாணேற்றிப் பகை வென்ற வலிய வில் இராமன் வலிமைக்கு ஆற்றாமல் முறிந்தது. இதனைக் கண்ணாரக் கண்ட சீதை இராமனின் ஆற்றல் பற்றி ஐயப்படக் கூடாது என்றும். அவளுக்குத் தான் வேறென்ன சொல்ல இருக்கிறது என்றும் குறிப்பாகக் கூறினான் இலக்குவன். இதனை 'மாற்றம் என் பகர்வது?' என்ற தொடர் சுட்டும்; ஏதேனும் கூறின் அது மிகையாம் என்பதும் வெளிப்படும்.*

### *3328.* 'காவலன், ஈண்டு நீர்
### கருதிற்று எய்துமேல்,
### மூவகை உலகமும் முடியும்;
### முந்து உள
### தேவரும், முனிவரும்
### முதல செவ்வியோர்
### ஏவரும், வீழ்ந்துளார்; மற்று
### அறமும் எஞ்சுமால்.

**காவலன் ஈண்டு நீர் கருதிற்று எய்துமேல் -** *இராமன் இப்பொழுது நீவிர் எண்ணியதான அழிவை அடைவானென்றால்;* **மூவகை உலகமும் முடியும் -** *மேல் உலகம் மண்ணுலகம் பாதலம் ஆகிய மூன்று உலகங்களும் அழிந்து போய் விடும்;* **முந்து உள தேவரும் முனிவரும் முதல செவ்வியோர் ஏவரும் வீழ்ந்துளார் -** *தொன்மைக் காலம் முதல் உள்ள தேவர்களும் முனிவர்களும் முதன்மையாகக் கொண்ட சிறந்தவர் யாவரும்அழிந்திருப்பர்;* **மற்று அறமும் எஞ்சும் -** *அது மட்டுமன்றி அறமும் அழியும்;* **ஆல் -** *ஈற்றசை.*

*காவலன் - தன்னைத் தானே காக்கும் வல்லமை உடையவன். நீர் கருதிற்று - இராமன் இறந்தான் எனச் சீதை எண்ணியது அதனைச் சொல்ல விரும்பாமல் மறை பொருளாக நீர் கருதிற்று எனக் கூறுகிறான் இலக்குவன். எஞ்சும் என்பது அழியும் என்ற பொருளில் 'வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல்' (குறள். 44) என வரும். முழு முதற்பொருளாம் இராமன் அழியின் தேவர் முனிவர் செவ்வியோர் யாவரும் வீழ்வதுடன் அறமும் அழியும் என்று உறுதியாக உரைக்கிறான் இலக்குவன்.*

*அறமும் - சிறப்பும்மை.*

***3329. 'பரக்க என் பகர்வது?***
***பகழி, பண்ணவன்***
***துரக்க, அங்கு அது பட,***
***தொலைந்து சோர்கின்ற***
***அரக்கன் அவ் உரை எடுத்து***
***அரற்றினான்; அதற்கு***
***இரக்கம் உற்று இரங்கலிர்; இருத்திர்***
***ஈண்டு' என்றான்.***

***பரக்க என் பகர்வது -*** *விரிவாக (யான் மேலும்) என்ன சொல்வது?;* ***பண்ணவன் பகழி துரக்க -*** *தலைவனாம் இராமன் அம்பினை எய்ய;* ***அங்கு அதுபட -*** *மான் சென்ற அவ்விடத்து அதன் மீது அவ்வம்பு தைத்த;* ***தொலைந்து சோர்கின்ற அரக்கன் அவ் உரை எடுத்து அரற்றினான் -*** *தன் ஆற்றல் அழிந்து வீழ்கின்ற அந்த இராக்கதன் இராமன் குரலில் கூறிய சொற்களை உரக்கக் கூவினான்;* ***அதற்கு இரக்கம் உற்று இரங்கலிர் -*** *அதற்காகக் கவலை கொண்டு வருந்தி அழ வேண்டாம்;* ***ஈண்டு இருத்திர் என்றான் -*** *இங்குக் கவலைப்படாது இருப்பீராக என்று இலக்குவன் கூறினான்.*

*பண்ணவன் - கடவுள், மேலோன். இராமன் எய்த அம்பு பட்டு மரிக்கும் அரக்கன் இறக்கும் போது வஞ்சகக் குரலால் கூறிய சொற்களை உண்மையாக நம்பி வருந்தி அழ வேண்டாம் எனத் தேற்றினான், இலக்குவன். தொலைந்து சோர்கின்ற என்ற தொடரைச் சோர்ந்து தொலைகின்ற எனப் பிரித்துப் பொருள் காண்பதுமுண்டு.*
*சீதை கடுஞ்சொல் செப்பலும், இலக்குவன் ஏகலும்*

***3330. என்று அவன் இயம்பலும்,***
***எடுத்த சீற்றத்தள்,***
***கொன்றன இன்னலள்,***
***கொதிக்கும் உள்ளத்தள்,***
***'நின்ற நின் நிலை, இது, நெறியிற்று***
***அன்று' எனா,***
***வன் தறுகண்ணினள்,***
***வயிர்த்துக் கூறுவாள்:***

***என்று அவன் இயம்பலும் -*** *என்று இலக்குவன் கூறலும்;* ***எடுத்த சீற்றத்தள் -*** *பொங்கிய கோபத்தவளும்;* ***கொன்றன இன்னலள் -*** *தன்னைக் கொன்றது போன்ற துன்பத்தை அடைந்தவளும்;* ***கொதிக்கும் உள்ளத்தள் -*** *கொதிக்கின்ற மனமுடையவளும் ஆன;* ***வன்தறு கண்ணினள் -*** *வலிய அஞ்சாமை உடைய சீதை;* ***நின்றநின் நிலை இது நெறியிற்று அன்று எனா -*** *(இலக்குவனை நோக்கி, 'இராமனுக்குற்ற தீங்கைக் கேட்டும் அவற்கு உதவச் செல்லாது) இங்கு நின்ற*

உன்னுடைய இந்த நிலை நீதிமுறைப்பட்டது அன்று' என்று; **வயிர்த்துக் கூறுவாள் -** பகை பாராட்டிச் சொன்னாள்.

கொன்றன - கொன்றது போன்ற, கொன்றன்ன இன்னா செயினும் (குறள். 109) என்று வருதலை ஒப்பிடலாம். சீதை, தன்னை இலக்குவன் கொன்றது போல வந்த துன்பத்தினள் என உரைப்பர். இந்நிலையைச், சீதை வாயிலாகவே சுந்தர காண்டக் காட்சிப் படலத்தில் 'இளவலை எண்ணலா வினையேன் சொன்ன வார்த்தை கேட்டு அறிவு இலள் எனத் துறந்தானோ?' (5082) என்பதால் உணரலாம்.

*3331.* ***'ஒரு பகல் பழகினார்***
***உயிரை ஈவரால்;***
***பெருமகன் உலைவுறு பெற்றி***
***கேட்டும், நீ***
***வெருவலை நின்றனை; வேறு என்?***
***யான், இனி,***
***எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென்,***
***ஈண்டு' எனா,***

***ஒரு பகல் பழகினார் உயிரை ஈவர் -*** ஒரு நாள் மட்டும் பழகின வராயினும் அன்புடையோர் தாம் பழகியவர்க்காகத் தம் உயிரையும் கொடுத்து உதவி புரிவர்; **நீ பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும் வெருவலை நின்றனை -** (மாறாக) நீயோ இராமன் அழிவடைந்தான் எனும் தன்மையைக் காதால் கேட்டும் அஞ்சாமல் நின்றாய்; **வேறுஎன் -** இனி எனக்கு வேறு வழி யாது?; **இனியான் எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென் ஈண்டு எனா -** இனிமேல் நான் தீயில் விரைந்து விழுந்து சாவேன் இவ்விடத்தே என்று கூறி...,**ஆல் -** அசை. ஒரு நாள் பழகினும் உயிரை ஈயும் என்பதற்குக் குகன்இராமனுடன் வனம் செல்லத் துணிந்தமை சான்றாகும் (1993).பெருமகன் - ஆண்களில் சிறந்தோன். பகல் - நாள், 'ஒல்லைகொடாஅ தொழித்த பகலும் (நாலடி. 169) என வருதல் காண்க. 1

*3332*___தாமரை வனத்திடைத்___
***தாவும் அன்னம்போல்,***
***தூம வெங் காட்டு எரி***
***தொடர்கின்றாள் தனை,***
***சேம விற் குமரனும்***
***விலக்கி, சீறடிப்***
***பூ முகம் நெடு நிலம்***
***புல்லி, சொல்லுவான்:***

***தாமரை வனத் திடைத் தாவும் அன்னம் போல் -*** செந்தாமரைக் காட்டில் தாவிச் செல்லும் அன்னப் பறவை போல;**தூம வெங்காட்டு எரி தொடர்கின்றாள் தனை -** புகை கூடிய கொடிய காட்டில் எரியும் தீயில் பாயும் சீதையை; **சேமவிற் குமரனும் விலக்கி-** பாதுகாவலுக்குரிய வில்லேந்திய இலக்குவனும் தடுத்து; **சீறடிப் பூ முகம் நெடுநிலம்**

***புல்லி(ச்) சொல்லுவான்*** - *(சீதையின்) சிற்றடிகளாம் தாமரை மலர்களுக்கு எதிரே நெடிய தரையைத் தழுவி வீழ்ந்து பின்வருமாறு கூறுவான்.*

*காட்டுத் தீக்குத் தாமரையும் சீதைக்கு அன்னமும் உவமை. காடெல்லாம் தீப்பற்றிய தோற்றம் தாமரைக் காடாகத் தெரிகிறது. இதுபோன்றே யுத்த காண்ட மீட்சிப் படலத்திலும் 'நீத்த அரும் புனலிடை நிவந்த தாமரை ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் எனப்பாய்ந்தனள்' (10036) என வருதலையும் ஒப்பிட்டுணரலாம். சேம வில்என்பது இராமன் சீதை ஆகியோர் நலத்தைப் பாதுகாக்கும் பணியை மேற் கொண்ட வில் எனவும் ஆம். பெண்களின் அடி சிறிதாயிருப்பது அழகுக்கடையாளம். சீதையின் திருவடிகளைத் தொடாமல் அவற்றின் முன்னுள்ள நிலத்தில் இலக்குவன் வீழ்ந்து வணங்கியது அவனுடைய தூய்மையை உணர்த்தும். குமரன் என்பது இளையவன் என்றும், சீதையிடம் கொண்ட, மகன் அன்பையும் குறிக்கும்.*

***3333. 'துஞ்சுவது என்னை? நீர் சொன்ன***
***சொல்லை யான்***
***அஞ்சுவென்; மறுக்கிலென்; அவலம்***
***தீர்ந்து இனி,***
***இஞ்சு இரும்; அடியனேன்***
***ஏகுகின்றனென்;***
***வெஞ் சின விதியினை***
***வெல்ல வல்லமோ?***

***துஞ்சுவது என்னை*** - *(நீர்) இறத்தல் ஏன்?;* ***நீர் சொன்ன சொல்லை யான் அஞ்சுவென் மறுக்கிலென்*** - *நீர் கூறிய சொற்களை நான் கேட்டுப் பயப்படுகிறேன் உம் கட்டளையை மறுக்க மாட்டேன்;* ***அவலம் தீர்ந்து இனி இஞ்சு இரும்*** - *துன்பம் நீங்கி இங்கேயே இருங்கள்;* ***அடியனேன்ஏகுகின்றனென்*** - *அடியேன் செல்கின்றேன்;* ***வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ*** - *கொடிய கோபமுள்ள ஊழினை வெல்ல வல்லமையுடையவர்களோ நாம்? (அல்லோம்)*

*துஞ்சுதல் - இறத்தல்; மங்கல வழக்கு. அவலம் - துன்பம். தீயிற் பாயச் சென்ற சீதையைத் தடுத்த இலக்குவன் 'நீர் இறப்பானேன்' என்றான். அவள் அடி வீழ்ந்த செயலாலும், தன் பணிவைக் காட்டினான். ஊழிற் பெரு வலியாவுள காண்க. இதே இலக்குவன் 'விதிக்கும் விதியாகும் என் விற்றொழில் காண்டி' (130) என்று கூறியது ஒப்பு நோக்கத்தக்கது. வெஞ்சினம் எனக் குறித்ததால் இது தீவினைஎனப்படும்.*

*இங்கு என்பது 'இஞ்சு' என எதுகை நோக்கித் திரிந்த போலி.*

***3334. 'போகின்றேன் அடியனேன்; புகுந்து***
***வந்து, கேடு***
***ஆகின்றது; அரசன்தன்***
***ஆணை நீர் மறுத்து,***

*"ஏகு" என்றீர் இருக்கின்றீர் தமியிர்'*
*என்று, பின்*
*வேகின்ற சிந்தையான்*
*விடைகொண்டு ஏகினான்.*

***அடியனேன் போகின்றேன் -*** *அடியேன் இப்போதே செல்கின்றேன்;* ***கேடு புகுந்து வந்து ஆகின்றது -*** *பெரிய தீங்கு வலிந்து நம்மிடம் வந்துள்ளது;* ***அரசன் தன் ஆணை நீர் மறுத்து ஏகு என்றீர் -*** *இராமன் எனக்கிட்ட கட்டளையை நீங்கள் கடந்து என்னைப் 'போ' என்று சொல்கின்றீர்கள்;* ***தமியிர் இருக்கின்றீர் -*** *துணையின்றித் தனியே இருக்கின்றீர்கள்;* ***என்று பின் வேகின்ற சிந்தையான் விடை கொண்டு ஏகினான் -*** *எனக் கூறிப்பின் துயரால் வெந்து துடிக்கும் மனத்தையுடைய இலக்குவன் சீதையிடம் அனுமதி பெற்றுச் சென்றான்.*

*இராமன் சீதையைக் காக்குமாறு ஆணையிட்டது 'கான் இயல் மயில் அன்னாளைக் காத்தனை இருத்தி' என்ற பாடலில் (3204) தெரிகிறது. அதனை மீறுமாறு சீதை கூறுவதால் அதனால் வரும் தீங்குக்கு அவளே பொறுப்பு என்பதை இலக்குவன் சுட்டினான். 'எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென் ஈண்டு' (3331) எனக் கூறிய சீதையின் மொழி இலக்குவனை இவ்வாறு செயல்படச் செய்தது 'நின்ற நின்நிலை, இது, நெறியிற்று அன்று' எனச் சீதை கூறிய சுடு மொழியால் (3330) 'வேகின்ற சிந்தை யான்' ஆயினான், இலக்குவன்.*

*3335. 'இருப்பெனேல், எரியிடை*
*இறப்பரால் இவர்;*
*பொருப்பு அனையானிடைப்*
*போவெனே எனின்,*
*அருப்பம் இல் கேடு வந்து*
*அடையும்; ஆர் உயிர்*
*விருப்பனேற்கு என் செயல்?'*
*என்று, விம்மினான்.*

***இருப்பெனேல் எரியிடை இவர் இறப்பர் -*** *(சீதை கூறியவாறு போகாமல்) இங்கிருப்பேனாயின் தீயிலே பிராட்டியார் வீழ்ந்து சாவார்;* ***பொருப்பு அனையானிடைப் போவெனே எனில் -*** *மலை போன்றஇராமனிடம் செல்வேனாயின்;* ***அருப்பம் இல் கேடு வந்து அடையும் -*** *காவலில்லாத தீங்கு பிராட்டிக்கு வந்து சேரும்;* ***ஆர்உயிர் விருப்பனேற்கு என் செயல் என்று விம்மினான் -*** *அரிய உயிர் மீது ஆசையுடைய எனக்கு எச் செயல் செய்வது என எண்ணி ஏங்கினான்.* ***ஆல் -*** *அசை.*

*இராமனுக்கு மலை உவமை ஆகிறது. இதனை அருப்பம் - அற்பம் எனவுமாம் தடையுமாம். ஆருயிர் விருப்பனேன் என்பதால் உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணும் எண்ணம் குறிப்பாகப் புலப்படுகிறது. இதனால் இலக்குவன் தன்னையே வெறுக்கும் மனநிலை உள்ளவன் என்பது தெரிகிறது.*

*3336. 'அறம்தனால் அழிவு இலது*
***ஆகல் ஆக்கலாம்;***
***இறந்துபாடு இவர்க்கு உறும்,***
***இதனின் இவ் வழித்***
***துறந்து போம் இதனையே துணிவென்;***
***தொல் வினைப்***
***பிறந்து, போந்து, இது படும்,***
***பேதையேன்' எனா,***

***அறம் தனால் அழிவு இலது ஆகல் ஆக்கலாம் -*** *தருமத்தால் மட்டுமே அழிவு இல்லாமையை ஆக்குவது முடியும்;* ***இறந்து பாடு இவர்க்கு உறும் -*** *(சீதை விருப்பப்படி போகாமல்) நான் இங்கு (இருந்தால்) பிராட்டி இறந்து போவது உறுதி (ஆதலால்);* ***இதனின் இவ்வழித் துறந்து போம் இதனையே துணிவென் -*** *இவ்விடத்திலிருந்து செல்லும் இச் செயலைச் செய்யவே துணிவேன்;* ***தொல் வினைப் பிறந்து போந்து இதுபடும் பேதையேன் எனா -*** *பழவினையின் பயனாகப் பிறந்து இத்துன்பத்தை அடையும் அறிவிலாத நான் என எண்ணி,*

*தருமம் சீதையைக் காப்பாற்றட்டும் என்ற நம்பிக்கை இலக்குவன் உள்ளத்தில் இருந்ததை இது காட்டும். நான் இருந்தால் இறப்பாள், எனவே இவ்விடம் விட்டு அகல்வதே நல்லது என இலக்குவன் துணிந்தான். சீதையைக் காவல் காத்து அண்ணன் ஆணை வழி நிற்பதா சீதை சொன்னபடி செல்வதா எனச் செய்வதறியாது திகைக்கின்றமையால் தன்னைப்'பேதையேன்' என்றான். அறத்தின் காவலும் விதியின் வலிமையும் ஒருங்கே இலக்குவன் எண்ணத்தில் வெளிப்படுகின்றன.*

*3337. 'போவது புரிவல் யான்;*
***புகுந்தது உண்டுஎனின்,***
***காவல்செய் எருவையின்***
***தலைவன் கண்ணுறும்;***
***ஆவது காக்கும்' என்று***
***அறிவித்து, அவ் வழி,***
***தேவர் செய் தவத்தினால்***
***செம்மல் ஏகினான்.***

***யான் போவது புரிவல் -*** *நான் செல்வேன்;* ***புகுந்தது உண்டெனின் -*** *(ஏதேனும் தீயது) நேர்வது உண்டானால்;* ***காவல் செய் எருவையின் தலைவன் கண்ணுறும் ஆவது காக்கும் -*** *காவல் புரிகின்ற கழுகரசன் சடாயு கண்டு தன்னாலியன்ற அளவு பாதுகாப்பான்;* ***என்று அறிவித்து -*** *எனச் சீதையிடம் கூறி;* ***செம்மல் தேவர் செய் தவத்தினால் அவ்வழி ஏகினான் -*** *இலக்குவன் தேவர்கள் செய்த தவத்தினால் (இராமன் மானைத் தொடர்ந்த) அந்த வழியில் சென்றான்.*

'காவல் செய் எருவையின் தலைவன்' என்பது சடாயுவைச் சுட்டும். சடாயு காண் படலத்தில் 'நீவிரும் நல்நுதல் தானும் இக் காட்டில் வைகுதிர்; காக்கு வென் யான்' என்ற மொழிகள் (2727) இதனை வலியுறுத்தும். இலக்குவன் சீதையைத் தனியே விட்டுச் செல்லவும் அப்போது இராவணன் அவளைக் கவர்ந்து செல்லவும் அதனால் அவனும் அவன் குலமும் மாளவும் செய்ததற்கு அடிப்படை தேவர்கள் செய்த தவமாகும்.

இலக்குவன் பெயர்ந்ததும், இராவணன் தவக் கோலத்துடன் தோன்றுதல்

***3338. இளையவன் ஏகலும்,***
***இறவு பார்க்கின்ற***
***வளை எயிற்று இராவணன்,***
***வஞ்சம் முற்றுவான்,***
***முளை வரித் தண்டு ஒரு***
***மூன்றும், முப் பகைத்***
***தளை அரி தவத்தவர்***
***வடிவம், தாங்கினான்.***

**இளையவன் ஏகலும் -** இலக்குவன் அவ்வாறு சென்றதும்; **இறவு பார்க்கின்ற வளை எயிற்று இராவணன் -** இலக்குவன் நீங்கிச்செல்வதைஎதிர் பார்த்திருந்த வளைந்த பற்களையுடைய இராவணன்; **வஞ்சம்முற்றுவான் -** தான் கருதிய வஞ்சகச் செயலைச் செய்து முடிப்பதற்காக; **வரிமுளைத்தண்டு ஒரு மூன்றும் -** வரிந்து கட்டிய மூங்கில் தண்டுகள் ஒரு மூன்றையும்; **முப்பகைத்தளை அரிதவத்தவர் வடிவம் தாங்கினான் -** காமம் வெகுளி மயக்கம் எனும் மூன்று உட்பகையாம் கட்டுகளை அறுத்த தவ வடிவையும் ஏற்றுக் கொண்டான்.

இறவு - நீக்கம். வளை எயிறு - வளைந்த பல். அரக்கர்க்கு இத்தகைய பற்கள் உண்டு. முளை வரித் தண்டு ஒரு மூன்று - முக்கோல் அல்லது திரிதண்டம் எனப்படும். மனப்பகையாம் காமம் வெகுளி மயக்கம் ஆகியவற்றை அடக்கியவர் என்பதை இத்திரிதண்டம் குறிக்கும். 'துறவிகளை முக்கோற் பகவர்' என்பர் முன்னையோர். நூலேகரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய (தொல். பொருள் மரபியல். 71) எனத் தொல்காப்பியம் கூறும். 'கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான் முக்கோலசை நிலை' என்பது முல்லைப் பாட்டு (37 - 38). 'உரைசான்ற முக்கோல்' எனக் கலித்தொகையில் காணலாம்.

***3339. ஊண் இலனாம் என***
***உலர்ந்த மேனியன்;***
***சேண் நெறி வந்தது ஓர்***
***வருத்தச் செய்கையன்;***
***பாணியின் அளந்து இசை***
***படிக்கின்றான் என,***

***வீணையின் இசைபட***
***வேதம் பாடுவான்.***

***ஊண் இலனாம் என உலர்ந்த மேனியன் -*** *உணவு இல்லாதவன் எனக் கூறும்படி வற்றிக் காய்ந்த உடலை உடையவனாயும்;* ***சேண் நெறி வந்தது ஓர் வருத்தச் செய் கையன் -*** *நெடுந்தூரம் நடந்து வந்தது போன்று பெருந்துன்பத்தை வெளிப்படுத்தும் செயலை உடையவனாயும்;* ***பாணியின் அளந்து இசை படிக்கின்றான் என -*** *தாளத்தால் வரையறுத்து இசைப் பாடலைப் பாடுபவன் போல;* ***வீணையின் இசைபட வேதம் பாடுவான் -*** *வீணை இசை போலச் சாம வேதப் பாடல் பாடுபவனாயும் ஆனான்.*

*ஊண் - உணவு. பாணி - கை; இங்குக் கையில் உள்ள தாளத்திற்கு ஆகுபெயராய் வந்தது. பாட்டு என்பாருமுளர். வேதம் எனக் குறிப்பிடினும் நான்கு வேதங்களில் பாடலிற் சிறந்தது சாமவேதம் ஆதலின் அதுவே கொள்ளப்பட்டது. வீணையின் இசைபட என்பதற்கு வீணை இசை ஒப்பாகாமல் கீழ்ப்படும் வகையில் எனவும் கொள்ளலாம். இராவணன் வேதத்தில் வல்லவன் என்பதை முன்னர் வந்த 'சொல் ஆய் மறை வல்லோய்' (3246) என்ற தொடரால் அறியலாம். பின்னரும் மந்திரத் தருமறை வைகு நாவினான்' (3359) என வரும் தொடரிலும் காணலாம். 21*

***3340. பூப் பொதி அவிழ்ந்தன***
***நடையன்; பூதலம்***
***தீப் பொதிந்தாமென***
***மிதிக்கும் செய்கையன்;***
***காப்பு அரு நடுக்குறும்***
***காலன், கையினன்;***
***மூப்பு எனும் பருவமும்***
***முனிய முற்றினான்.***

***பூப் பொதி அவிழ்ந்தன நடையன் -*** *பூவின் இதழ்கள் மென்மையாக விரிந்தாற் போலும் நடையுடையவனாகவும்;* ***பூதலம் தீப் பொதிந்தாமென மிதிக்கும் செய்கையன் -*** *நிலம் நெருப்பால் நிறைந்துள்ளது போலும் காலால் பட்டும்படாமலும் அடிவைத்து நடப்பவனாகவும்;* ***காப்பு அரு நடுக்குறும் காலன் கையினன் -*** *காக்க இயலாமல் நடுக்கங் கொண்ட கால்களையும் கைகளையும் உடையவனாகவும்;* ***மூப்பு எனும் பருவமும் முனிய முற்றினான் -*** *முதுமைப் பருவமும் பிறர் கண்டு வெறுக்கும் வகையில் முதியவனாகவும் ஆனான் (இராவணன்).*

*பொதி - இதழ், அரும்பு மலர்கின்ற பொதியவிழ் வான் பூ (குறுந். 330) பொதியவிழ் பூ மரம் (பெருங். 1.51.5) எனப் பிற நூல்களிலும் 'பொதியினை நகுவன புணர்முலை' (75) என இந் நூலிலும் வருவது காண்க. அரும்பு மலரும் போது மிக மெதுவாக அவிழ்தல் போல மெதுவாக அடி எடுத்து வைப்பதைப் பிறரறியாமல் நடப்பவன். குறுநடையும் குந்தி நடத்தலும் அந்தணர்க்கியல்பு என்பர். முதுமையைக் கண்டு பிறர் வெறுப்பதை 'ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய் ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்' (பெரிய திருமொழி 1.1.3) என்பதும் ஒப்பிடற்குரியது. முற்றிய மூப்பு தன்னையே வெறுக்களனவும் அமையும். தீப் பொதிந்ததாமென என்பது*

*தீப்பொதிந்தாமெனநின்றது.*

***3341. தாமரைக் கண்ணொடு ஏர்***
***தவத்தின் மாலையன்;***
***ஆமையின் இருக்கையன்;***
***வளைந்த ஆக்கையன்;***
***நாம நூல் மார்பினன்;***
***நணுகினான் அரோ-***
***தூ மனத்து அருந்ததி***
***இருந்த சூழல்வாய்.***

***தாமரைக் கண்ணொடு ஏர் தவத்தின் மாலையன் -*** *தாமரை மணிகளாலான அழகிய தவத்திற்குரிய மாலை அணிந்தவனாய்;* ***ஆமையின் இருக்கையன் -*** *ஆமை போல் ஐந்து பொறிகளை அடக்கியவன் போன்ற தோற்றமுடையவனாய்;* ***வளைந்த ஆக்கையன்-*** *கூனிய உடம்பையுடையவனாய்;* ***நாமநூல் மார்பினன் -*** *பெருமை பொருந்திய பூணூலை அணிந்த மார்பை உடையவனாய் இராவணன்;**தூமனத்து அருந்ததி இருந்த சூழல் வாய் நணுகினான் -*** *மாசற்ற மனமுள்ள அருந்ததி போன்ற சீதை இருந்த பன்ன சாலை இடத்தை வந்தடைந்தான்.* ***அரோ -*** *அசை.*

*ஆமையின் இருக்கை - ஆமை மனை எனக் கூறி அதன் ஓட்டால் அமைந்தது என்பர். நாமம் - பெருமை, 'நாமநீர் அயோத்தி'(1307) எனப் பால காண்டத்தில் இப் பொருளில் வரும். சீதையின் தூய கற்புக்கு அருந்ததியே உவமையாகப் பயன்பட்டுள்ளமை காப்பிய மரபாகும். 'தீதிலா வட மீனின் திறம் இவள் திறமென்றும்' கண்ணகியின் கற்பின் சிறப்பை இளங்கோவடிகள் கூறுவார். (சிலப்பதிகாரம் 1.27). 'அருந்ததி அகற்றிய ஆசில் கற்பினாய்' எனச் சிந்தாமணியின் 327 ஆம் பாடலிலும் காணலாம்.*

*அருந்ததி வசிட்ட முனிவரின் மனைவி. தன் கற்பின் சிறப்பால் வட திசையில் விண்மீனாய் விளங்குகிறாள் என்பது புராண மரபு.*

*கண்ணொடு - ஒடு உருபு கருவிப் பொருளில் வந்தது. அருந்ததி- உவமை ஆகுபெயர்.*

***3342. தோம் அறு சாலையின்***
***வாயில் துன்னினான்;***
***நா முதல் குழறிட***
***நடுங்கும் சொல்லினான்;***
***'யாவர் இவ் இருக்கையுள்***
***இருந்துளீர்?' என்றான்-***
***தேவரும் மருள்தரத்***
***தெரிந்த மேனியான்.***

**தேவரும் மருள் தரத் தெரிந்த மேனியான் -** *விண்ணவரும் மயங்கிட மாறுபட்ட தவ வடிவுடைய அந்த இராவணன்;* **தோம் அறு சாலையின் வாயில் துன்னினான் -** *குற்றமற்ற அந்தப் பன்ன சாலையின் வாயிலைச் சேர்ந்தான்;* **நாமுதல் குழறிட நடுங்கும் சொல்லினான் -** *நாவின் அடி தடுமாறிக் குழறும் சொல்லையுடையவனாகி;* **யாவர் இவ் இருக்கையுள் இருந்துளீர் என்றான் -** *யார் இந்தப் பன்ன சாலையில் இருக்கின்றீர் எனக் கேட்டான்.*

*தோம் - குற்றம். சாலை - தழைக் குடிசை, நாக்குழற நடுங்கிய நிலை முன்னரே அறியும் வகையில் 'காப்பு அரு நடுக்குறும் காலன், கையினன்' (3340) என வருணிக்கப் பெற்றுள்ளது.*

*தேவரும் மருள் தர எனக் கூறியதால் இவன் வஞ்சனைகளை அறிந்த தேவர்கள் கூட 'இம் முதியவன் தான் இராவணன்' என அறியாத வகையில் வேடம் அமைந்திருந்தது என்க.*

*24சீதை வரவேற்றல்*

***3343. தோகையும், அவ்வழி, 'தோம்***
***இல் சிந்தனைச்***
***சேகு அறு நோன்பினர்'***
***என்னும் சிந்தையால்,***
***பாகு இயல் கிளவியாள், பவளக்***
***கொம்பர் போன்று,***
***'ஏகுமின் ஈண்டு' என,***
***எதிர்வந்து எய்தினாள்.***

**தோகையும் அவ்வழி -** *சீதையும் அவ்வனத்தில்;* **தோமில் சிந்தனைச் சேகுஅறு நோன்பினர் என்னும் சிந்தையால் -** *குற்றமற்ற மனத்தையும் குற்றமற்ற விரதத்தையும் உடையவர் இவர் எனும் எண்ணத்தால்;* **பாகு இயல் கிளவியாள் -** *தேன்பாகு போலும் இனிய சொற்களை உடையவளும்;* **பவளக் கொம்பர் போன்று -** *பவளக் கொம்பு போல, அழகை உடையவளுமான சீதை;* **ஈண்டு ஏகுமின் என எதிர்வந்து எய்தினாள் -** *'இங்கு எழுந்தருள்க' என்று முன்னே வந்து இராவணக் கபட சன்னியாசியை வரவேற்க வந்தாள்.*

*சேகு - குற்றம். தம்மில்லத்திற்கு வரும் துறவிகளை இன்சொற் கூறி விருந்தோம்பும் பண்பு இல்லறத்தாரின் கடமை. இதனைக் காட்சிப் படலத்தில் சீதை இராமனை எண்ணி 'விருந்து கண்டபோது என் உறுமோ' எனக் கவலைப்படுவதால் (5083) நன்கு அறிய முடியும்.*

*தோகை - மயில், சாயலாலும் நடையாலும் சீதைக்கு உவமை. பாகு - சொல்லுக்கு உவமை. பவளக் கொம்பு - வடிவுக்கு உவமை. பாகியல் கிளவி பவளக் கொம்பு இவை இயைந்து வந்த உவமை, இல் பொருள் உவமையாம்.*

*ஏகுமின் - உயர்வுப் பன்மை. பாகு இயல் - இயல் என்பது உவம உருபு கொம்பர் - கொம்பு என்பதன் போலி. தோகை - உவம ஆகுபெயர்.*

***3344.* வெற்பிடை மதம் என**
**வெயர்க்கும் மேனியன்,**
**அற்பின் நல் திரை புரள்**
**ஆசை வேலையன்,**
**பொற்பினுக்கு அணியினை,**
**புகழின் சேக்கையை,**
**கற்பினுக்கு அரசியை,**
**கண்ணின் நோக்கினான்.***

**வெற் பிடை மதம் என வெயர்க்கும் மேனியன் -** *மலையிடத்துஉண்டாகும் கல் மதம் போல வியர்வை பெருகும்உடலை உடையவனும்;* **அற்பின் நல் திரைபுரள் ஆசை வேலையன்-** *அன்பினால் அலைகள்புரண்டெழும் ஆசைக் கடலிடைப் பட்டோனும் ஆகிய இராவணன்;* **பொற்பினுக்கு அணியிணை -** *அழகுக்கு அணிகலமாய் விளங்குபவளை;* **புகழின் சேக்கையை -** *புகழுக்கு இருப்பிடமானவளை;* **கற்பினுக்கு அரசியை -** *கற்பு எனும் பண்பிற்கு அரசி போன்ற சீதையை;* **கண்ணின் நோக்கினான் -** *தன் கண்களால் பார்த்தான்.*

*வெற்பு என்பதை மலை போன்ற யானை என ஆகு பெயராய்க்கொண்டு யானை சிந்தும் மதத்தின் மேல் ஏற்றிக் கூறுவோரும் உளர். யானை உடலின் சில உறுப்புகளில் மட்டும் மதம் பெருகுவதால் மலையில் பெருகும் சிலா சத்து எனும் தாதுப் பொருளாய்ப் பொருள் கொள்ளப் பெற்றது. காமம் கடல் போலப் பெருகுதலில் ஆசை வேலை என உருவகிக்கப் பெற்றது. இதனைக் 'காதல் தானும் கடலினும் பெரிதே (நற். 166) எனவும், காமக் கடும் புனல் (குறள். 1134)எனவும் வருதலால் அறியலாம். இங்கு பொற்பினுக்கு அணி என்று குறித்தது போன்று முன்னர் மிதிலைக் காட்சிப் படலத்தில் 'அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றதே' (513) என வந்துளது. பின்னர்அனுமனும் 'கண்டனென் கற்பினுக்கு அணியை' (6031) என இராமனிடம் கூறினான்.*

*இது வரை சீதையை உருவெளியாக மனத்தால் கண்டிருந்த இராவணன் ஊனக் கண்ணின் நோக்கினான் என்றார்.*

***3345.* தூங்கல் இல் குயில் கெழு**
**சொல்லின், உம்பரின்**
**ஓங்கிய அழகினாள்**
**உருவம் காண்டலும்,**
**ஏங்கினன் மன நிலை யாது**
**என்று உன்னுவாம்?**
**வீங்கின, மெலிந்தன,**
**வீரத் தோள்களே.***

***தூங்கல் இல் குயில் கெழு சொல்லின் -*** *சோர்விலா நிலையில்பாடும் குயிலின் இனிமை பொருந்திய சொற்களோடு;* ***உம்பரின் ஓங்கிய அழகினாள் -*** *தெய்வலோக மகளிரினும் சிறந்த அழகும் உடைய சீதை;* ***உருவம் காண்டலும் ஏங்கினன் மனநிலை யாது என்று உன்னுவாம் -*** *திருவுருவைப் பார்த்ததும் ஏக்கம் கொண்ட இராவணனின் மனத்தின் நிலையை எது என்று யாம் நினைப்போம்?;* ***வீரத்தோள்கள் வீங்கின மெலிந்தன -*** *வீரத்தில் சிறந்த புயங்கள் அவளைக் கண்ட மகிழ்ச்சியால் பூரித்துப் பின் அவளை அடைவதை எண்ணி ஏங்கி மெலிந்தன.* ***ஏ -*** *ஈற்றசை.*

*தூங்கல் - தாழ்ந்து சோர்தல். சீதையின் சோர்வுக்குக் காரணம் மாரீசனின் மாயக் குரலால் இராமனுக்குத் தீங்கு நேர்ந்திருக்கும் என எண்ணிய சோர்வு.*

*கெழு - பொருந்துதல்; மிகுதியுமாம். உவமை உருபாகக்கொண்டும் பொருளுரைப்பர். குரலின் இனிமையும் உடலின் அழகும்உணர்ந்தஇராவணனின் மனம் ஏங்கியது. உடலில் வீரத்தின் விளை நிலமாம் தோள்கள் வீங்கிப் பின் மெலிவுற்றன. இவ்வாறு சோர்வு நீங்கிய சீதையைக் கண்ட இராவணன் உடலாலும் மனத்தாலும் சோர்வுற்றுத் தளர்ந்தான், புகழின் உச்சி எனவும் உரைப்பர். இதனால் சீதை எந்நிலையிலும் இயற்கை அழகு குலையாதவள் எனலாம்.*

***3346. புன மயில் சாயல்தன்***
***எழிலில், பூ நறைச்***
***சுனை மடுத்து உண்டு இசை***
***முரலும் தும்பியின்-***
***இனம் எனக் களித்துளது என்பது***
***என்? அவன்***
***மனம் எனக் களித்தது,***
***கண்ணின் மாலையே.***

***கண்ணின் மாலை -*** *சீதையைக் கண்ட இராவணனின் கண்களாகிய வரிசை;* ***புன மயில் சாயல் தன் எழிலில் -*** *காட்டில் உலவும் மயிலின் சாயல் கொண்ட மேனி அழகில்;* ***பூ நறைச் சுனை மடுத்து உண்டு இசை முரலும் -*** *மலர்களின் தேன் நிறைந்த சுனையில் சென்று அத்தேனைக் குடித்துப் பண் பாடும்;* ***தும்பியின் இனம் எனக் களித்துளது என்பது என் -*** *வண்டுகளின் கூட்டம் போல மகிழ்ந்து மயங்கியது என்று கூறுவதில் என்ன பயன்?;* ***அவன் மனம் எனக் களித்தது -*** *இராவணனின் மனம் போல மகிழ்ந்தது என்பதே பொருந்தும்.*

*பூ - தாமரை மலர்கள் எனவும் கூறுவர். இராவணனின் இருபது கண்களும் புறத்தே புலப்படவில்லை. எனினும் கண்ணுக்குப் புலப்படாத அவன் மனம் கொண்ட மகிழ்ச்சியைச் சீதையைக் கண்ணால் கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியுடன் ஒப்பிடலாம். பொறிகளைஇயக்குவது மனம் என்ற உண்மையும் இங்குப் புலப்படும். சீதையின்அழகு தேனாகவும் இராவணனின் கண்கள் அத் தேனைப் பருகி மகிழும் வண்டாகவும் பொருந்தி நிற்கின்றன. சுமந்திரன் இராமனைக் கண்டு மகிழ்ந்த நிலையைத் 'தன் கண்ணும் உள்ளமும் வண்டு என(க்)களிப்புறக் கண்டான் (1362) எனவும் கூறப் பெற்றதை இங்கு ஒப்பிட்டுக் காணலாம்.*

*மயில் சாயல் - உவமைத் தொகைப் புறத்துப் பிறந்தஅன்மொழித் தொகை ஏ - அசை.*

***3347. 'சேயிதழ்த் தாமரைச் சேக்கை***
***தீர்ந்து இவண்***
***மேயவள் மணி நிற***
***மேனி காணுதற்கு,***
***ஏயுமே இருபது? இங்கு இமைப்பு***
***இல் நாட்டங்கள்***
***ஆயிரம் இல்லை!' என்று,***
***அல்லல் எய்தினான்.***

***சேயிதழ்த் தாமரை சேக்கை தீர்ந்து -*** *சிவந்த இதழ்களுடைய தாமரை மலராம் இருக்கையை விட்டு;* ***இவண் மேயவள் மணிநிற மேனி காணுதற்கு -*** *இங்கு வந்துள்ள திருமகளாம் சீதையின் இரத்தினம் போன்ற செந்நிறம் கொண்ட உடலைப் பார்ப்பதற்கு;* ***இங்கு இமைப்பு இல் நாட்டங்கள் இருபது ஏயுமே -*** *இவ்விடத்தில் கண் சிமிட்டாமல் உள்ள இருபது கண்கள் போதுமோ? (போதா);* ***ஆயிரம்இல்லை என்று அல்லல் எய்தினான் -*** *இமைக்காத கண்கள் ஆயிரம் இல்லையே எனத் துன்பமுற்றான்.*

*சீதையைக் கண்டவுடன் இராவணனுக்குத் திருமகள் நினைவு வருகிறது. இவ்வாறே சூர்ப்பணகையும் சீதையைக் கண்டபோது 'அரவிந்த மலருள் நீங்கி அடி இணை படியில் தோயத் திரு இங்கு வருவாள் கொல்லோ?' (2790) என ஐயுறுகிறாள். இராவணனுக்கு அந்த ஐயமுமில்லை. ஆயிரம் கண் வேண்டும் என்ற ஆசை போன்றே மிதிலை நகர மக்கள் 'நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்; கொம்பினைக் காணும் தோறும் குரிசிற்கும் அன்னதே ஆம்' (708) என உவகை மொழி உரைப்பர். இராவணன் உளத்தில் தன் இருபது கண்கள் பற்றிக் கூறினும் சீதைக்கு அவன் கண்கள் அனைத்தும் தெரியா மாய வடிவே தெரிந்தது எனலாம்.*

*'இங்கு' என்பது தன்மை இடத்தைச் சுட்டி வந்தது.நச்சினார்க்கினியர் சிந்தாமணிப் பாடலுக்கு (72) உரைத்த உரையாலும்மணிமேகலையில் 'யாவை யீங் களிப்பன தேவர் கோன்' என்றஆபுத்திரன் மொழியாலும் (மணிமேகலை 14.48) இப்பொருளைஉணரலாம்.*

***3348. 'அரை கடை இட்ட***
***முக்கோடி ஆயுவும்***
***புரை தபு தவத்தின் யான்***
***படைத்த போதுமே,***
***நிரை வளை முன் கை இந்***
***நின்ற நங்கையின்***
***கரை அறு நல் நலக் கடற்கு?'***
***என்று உன்னினான்.***

***நிரை வளை முன்கை -*** *வரிசையாக வளையல்கள் அணிந்த முன் கையுடன்;* ***இந்நின்ற நங்கையின் -*** *இங்கு நின்ற பெண்களிற் சிறந்தவளின்;* ***கரை அறு நல்நலக் கடற்கு -*** *எல்லை அற்ற சிறந்தஅழகான கடலில் படிந்து களிப்பதற்கு;* ***புரைதபு தவத்தின் யான் படைத்த -*** *குறையற்ற தவத்தினால் நான் அடைந்த;* ***அரை கடை இட்ட முக்கோடி ஆயுவும் -*** *அரைக் கோடியைப் பின் சேர்ந்த என் மூன்று கோடி ஆயுட் காலமும் (மூன்றரைக் கோடி ஆண்டுக் காலம்);* ***போதுமே -*** *போதுமானது ஆகுமோ (ஆகாது);* ***என்று உன்னினான்-*** *என்று இராவணன் எண்ணலானான்.     நல் நலம் - மிக்க அழகு. கார்முகப் படலத்தில் 'நல் நலத்துப் பெண் அரசி தோன்றினாள்' (682) என வந்ததும் காண்க. சீதையின் அழகின் எல்லையைக் காண முடியாது என்பது 'உமையாள் ஒக்கும்மங்கையர் உச்சிக்கரம் வைக்கும் சுமையாள் மேனி கண்டனர் 'காட்சிக் கரை காணார் என (504) முன்னும் வந்துளது.*

*இராவணன் சிவபிரானிடம் வேண்டி மூன்றரைக் கோடி ஆண்டுகளை வாழ் நாளாகப் பெற்றான். அதனைத் திருமால் சூழ்ச்சி செய்து அரைக் கோடி ஆக்கிவிட்டார் என்பது புராண மரபு. தன் ஆயுள் போதாது என்ற கூற்றுப் பின்வரும் தீங்குக்கு அறிகுறியாக அமங்கலப் பொருள் தருவதாம்.*

***3349. 'தேவரும், அவுணரும்,***
***தேவிமாரொடும்***
***கூவல்செய் தொழிலினர்,***
***குடிமை செய்திட,***
***மூஉலகமும் இவர் முறையின்***
***ஆள, யான்***
***ஏவல் செய்து உய்குவென், இனி'***
***என்று உன்னினான்.***

**தேவரும் அவுணரும் தேவிமாரொடும் -** *விண்ணவரும் அசுரர்களும் தத்தம் மனைவியர்களுடன்;* ***கூவல் செய் தொழிலினர்-*** *நான் கூப்பிட்டவுடன் இட்ட கட்டளைகளைச் செய்யும் தொழில் உடையவர்களாய்;* **குடிமை செய்திட -** *வழிவழியாக அடிமை வேலை செய்துவர;* **மூஉலகமும் இவர் முறையின் ஆள -** *மூன்று உலகங்களையும் இப்பெண் உரிமை பெற்று ஆண்டு வர;* **இனியான் ஏவல் செய்து உய்குவென் என்று உன்னினான் -** *நான் இவர் இட்ட பணிகளைச் செய்து ஈடேறுவேன் என்று இராவணன் கருதினான்.*

*கூவல் - கூவி அழைத்துக் குற்றேவல் செய்யப் பணித்தல்; குற்றேவலுமாம். குடிமை - வழிவழியாக அடிமை. இராவணன் முன்னர்ப் பெற்ற வாழ்வு தேவரும் அசுரரும் வழிவழியாக அடிமையாக அவன் இட்ட பணியைச் செய்து உய்யும்படி அமைந்தமேனிலைச் சிறப்புடையது. இப்போது அத்தகைய வாழ்வின் உரிமையைச் சீதைக்கு நல்கி அவளிட்ட ஏவற் பணியைத் தான் செய்து உய்ய வேண்டும் என எண்ணுகிறான்.*

***3350. 'உளைவுறு துயர் முகத்து ஒளி***
***இது ஆம் எனின்,***

***முளை எயிறு இலங்கிடும்***
***முறுவல் என்படும்?***
***தளை அவிழ் குழல் இவட்***
***கண்டு தந்த என்***
***இளையவட்கு அளிப்பென், என் அரசு'***
***என்று எண்ணினான்.***

**உளைவுறு துயர் முகத்து ஒளி இது ஆம் எனின் -** *வேதனை மிக்க துன்பப்படும் போதுகூட இவள் பொலிவு இத்தகைய சிறப்புடையது என்றால்;* **முளை எயிறு இலங்கிடும் முறுவல் என்படும் -** *நாணற் குருத்துப் போன்று ஒளி வீசும் புன்னகை செய்யும் போது அழகு எப்படிப் பட்டதாகும்?;* **தளை அவிழ் குழல் இவள் கண்டு தந்த என்இளையவட்கு -** *கட்டவிழ்ந்த கூந்தலை உடைய இப் பெண்ணைப் பார்த்து எனக்களித்த என் தங்கை சூர்ப்பணகைக்கு;* **என் அரசு அளிப்பென் என்று எண்ணினான்** *-என்னுடைய அரசுரிமையைப் பரிசாகக் கொடுப்பேன் என்று இராவணன் கருதினான்.*

*உளைவுறு துயர் - இராமனைப் பிரிந்து பின் அவற்கு ஏற்பட்ட கேட்டை எண்ணி வேதனைப்படும் சீதையின் துன்பம் முன்னர்த் 'தூங்கல் இல் குயில் கெழு சொல்லின் உம்பரும் ஓங்கிய அழகினாள்' என இராவணன் உன்னியதைக் கண்டோம் (3345). முளை எயிறு - நாணற் குருத்துப் போன்ற பற்கள். 'முளையிள வெண்பன் முதுக் குறை நங்கை' எனவும் (சிலம்பு 15. 202). 'முளைஎயிறரும்பி' எனவும் (மணிகேலை 4.100) முளையெயிற்றிவளை (சீவக. 2042) எனவும் முன்னை நூல்கள் இதைக் குறித்தன.*

*'தளையவிழ் கூந்தல்' என்பதைச் சீதைக்கு ஆக்கும் போது அன்மொழித் தொகையாம். தந்த என்பது சூர்ப்பணகை சீதையைக் கண்ட போதே அவளைத் தனக்கென அளித்து விட்டதாக இராவணன் துணிகிறான். இது காலவழுவமைதி.*

***3351. ஆண்டையான் அனையன***
***உன்னி, ஆசை மேல்***
***மூண்டு எழு சிந்தனை, முறை***
***இலோன்தனைக்***
***காண்டலும், கண்ணின் நீர்***
***துடைத்த கற்பினாள்,***
***'ஈண்டு எழுந்தருளும்' என்று,***
***இனிய கூறினாள்.***

**ஆண்டையான் அனையன உன்னி -** *அவ்விடத்தோனாகிய இராவணன் மேற்கூறியவற்றை நினைந்து;* **ஆசை மேல் மூண்டு எழு சிந்தனை -** *ஆசை மேலும் மேலும் பொங்குகின்ற எண்ணமுடைய;* **முறை இலோன் தனைக் காண்டலும் -** *அறமுறையில்லோனாகியஇராவணனைப் பார்த்தவுடன்;* **கண்ணின் நீர் துடைத்த கற்பினாள் -** *கண்களில் வடியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்ட கற்புடைய சீதை;* **'ஈண்டு எழுந்தருளும்' என்று இனிய கூறினாள் -** *'இங்கு எழுந்தருள் வீராக' என இனிய மொழிகள் கூறி வரவேற்றாள். இராவணனின் எண்ணத்தில் மேலும் மேலும் ஆசை*

*எழுந்ததால் முறையான அறநெறியிலிருந்து பிறழ்ந்து பிறனில் விழையும் பேதைநெறிப்படுகின்றான். அறன் கடை நின்றாருளெல்லாம் பிறன் கடை நின்றாரிற் பேதை யாரில்' என்பார் திருவள்ளுவர் (142). இராமனின் 'அபயக்குரல்' கேட்டு அவனுக்கு நேர்ந்த தீங்கை எண்ணிக் கண்ணீர் வடித்தாள்; அந்நிலையிலும் விருந்தினராகத் தவ வடிவில் வந்த முனிவரைக் கண்டதும் தன் துன்பத்தை மாற்றினாள். இனிய மொழிகூறி வரவேற்றாள். இது சீதையின் இல்லறம் ஓம்பும் சிறப்பைக் காட்டும். கற்பினாள் என்றதால் எந்நிலையிலும் சீதை கற்பு நெறியிலிருந்து பிறழாள் என்பதை வலியுறுத்தும். இராவணனுடன் போரிட்டுச் சிறையிழந்த சடாயுவின் எண்ணத்தில் 'பொருஞ் சிறையற்றதே பூவை கற்பெனும் இருஞ்சிறை அறாது என இடரின் நீங்கினான்' (3453) என வெளிப்படுத்தலால் அறியலாம். இராவணனின் முறை இலா நெறியும் சீதையின் இல்லறக் கற்பு நெறியும் முரணிலையில் மாந்தர் நிலையை உணர்த்துகின்றன.*
இராவணன் இருத்தலும் இயற்கை நடுங்கலும்

***3352. ஏத்தினள்; எய்தலும், 'இருத்திர்***
   ***ஈண்டு' என,***
***வேத்திரத்து ஆசனம்***
   ***விதியின் நல்கினாள்;***
***மாத் திரிதண்டு அயல்***
   ***வைத்த வஞ்சனும்,***
***பூத் தொடர் சாலையின்***
   ***இருந்த போழ்தினே,***

***ஏத்தினள் -*** *வரவேற்றவளாம் சீதை;* ***எய்தலும் -*** *இராவண சன்னியாசி அப்பன்ன சாலையை அடையவும்;* ***'ஈண்டு இருத்திர்' என வேத்திரத்து ஆசனம் விதியின் நல்கினாள் -*** *'இங்கு அமர்வீராக'என்று கூறிப் பிரம்பு இருக்கையை முறைப்படி அளித்தாள்;* ***மாத் திரி தண்டு அயல் வைத்த வஞ்சனும் -*** *பெருமைக்குரிய முக்கோலை அருகே வைத்த வஞ்சகனாம் இராவணனும்;* ***பூத்தொடர் சாலையின் இருந்த போழ்தினே -*** *பூக்கள் படர்ந்து அழகுடன் விளங்கிய அப்பன்ன சாலையில் அமர்ந்த போதிலே,*

*வேத்திரம் - மூங்கில். விதிப்படி இருக்கை அளித்ததால் அதைத்தொடர்ந்து நீரளித்து வரவேற்றல் (அர்க்கியம்), காலலம்ப நீர் அளித்தல் (பாத்தியம்), வலக் குடங்கையால் மந்திர பூர்வமாக நீரை உட் கொள்ளல் (ஆசம நீயம்) ஆகிய செயல்களைச் செய்தனள் என்பது பெறப்படும். இவ்வாறு கொள்வதை 'உபலட்சணம்' என்பர்.*

***3353. நடுங்கின, மலைகளும்***
   ***மரனும்; நா அவிந்து***
***அடங்கின, பறவையும்;***
   ***விலங்கும் அஞ்சின;***

***படம் குறைந்து ஒதுங்கின,***
***பாம்பும்;-பாதகக்***
***கடுந் தொழில் அரக்கனைக்***
***காணும் கண்ணினே.***

***பாதகக் கடுந்தொழில் அரக்கனைக் காணும் கண்ணின் -*** *பெரிய பாவத்திற்குரிய கொடிய செயலைச் செய்ய வந்த அரக்கனாம் இராவணனை அங்குக் கண்ட போது;* ***மலைகளும் மரனும் நடுங்கின-*** *அங்கிருந்த மலைகளும் மரங்களும் நடுக்கம் கொண்டன;* ***பறவையும் நா அவிந்து அடங்கின -*** *பறவைகளும் கூவாமல் அடங்கி விட்டன;* ***விலங்கும் அஞ்சின -*** *கொடிய காட்டு மிருகங்களும் பயப்பட்டன;* ***பாம்பும் படம் குறைந்து ஒதுங்கின -*** *கொடிய பாம்புகளும் படமெடுப்பதை விட்டு அஞ்சி அடங்கின.* ***ஏ -*** *ஈற்றசை.*

*பாதகக் கடுந்தொழில் - பிறர் மனை நயத்தலாகும். காணும் கண்ணின் - காணும்பொழுது எனப் பொருள் கொள்ளப்பட்டது. மலை, மரம், பறவை, விலங்கு, பாம்பு போன்றவை இராவணனைக் கண்டு அஞ்சின. அவன் செய்யப் போகும் செயல்களால் சீதைக்கும் இராவணனுக்கும் நடக்கப் போகும் தீங்குகளைக் குறிக்கும் அறிகுறிஎனலுமாம். கொடிய பாம்பும் படமவிந்து அடங்கிய நிலை அதனினும் இராவணன் தீங்கு செய்ய வல்லவன் என்பதைக் குறிக்கும்.*

*தீயவன் வினாவும், தூயவள் விடையும்*

*3354.* ***இருந்தவன், 'யாவது இவ் இருக்கை?***
***இங்கு உறை***
***அருந் தவன் யாவன்?***
***நீர் யாரை?' என்றலும்,***
***'விருந்தினர்; இவ் வழி***
***விரகு இலார்' என,***
***பெருந் தடங் கண்ணவள்***
***பேசல் மேயினாள்:***

***இருந்தவன் -*** *(மூங்கிலிருக்கையில் இருந்த) இராவண சன்னியாசி;* ***இவ் இருக்கை யாவது -*** *இந்த இருப்பிடம் யாது?;* ***இங்கு உறை அருந்தவன் யாவன் -*** *இச்சாலையில் வாழும் அரிய முனிவன் யார்?;* ***நீர் யாரை -*** *நீவிர் யார்?;* ***என்றலும் -*** *எனக் கேட்டதும்;* ***இவ்வழி விருந்தினர் -*** *இங்கு வந்த புதியவர் ஆவர்;* ***விரகு இலார்-*** *வஞ்சகம் அற்றவர்;* ***என(ப்) பெருந் தடங் கண்ணவள் பேசல் மேயினாள் -*** *என்று நினைத்துப் பெரிய நீண்ட கண்களை உடைய சீதை (இராவணனுடன்) பேசத் தொடங்கினாள்.*

*விருந்தினர் - புதிதாக வந்த அதிதி ஆவர். விரகு - என்பதைக் கபடம் எனவும் இங்கு வழி அறியாதவர் எனவும் உரைப்பர். பாலகாண்ட நாட்டுப் படலத்தில் விருந்தோம்பும் மங்கையர் மாண்பு பற்றிக் கூறும் போது'பெருந்தடங்கண் பிறை நுதலார்' (67) என்று கூறியதை நினைவு கூர்க. 'பேசல் மேயினாள்' முனிவன் என*

*இராவணனை எண்ணியதால் புதிய ஆண்கள் முன் நாணித் தலை குனிந்து பேசுவது போலன்றி அவனை நோக்கிப் பேசத் தொடங்கினாள் சீதை.*

*இருந்தவன் - இறந்த கால வினையாலணையும் பெயர்.*

***3355. 'தயரதன் தொல் குலத்***
***தனையன்; தம்பியோடு,***
***உயர் குலத்து அன்னை***
***சொல் உச்சி ஏந்தினான்,***
***அயர்வுஇலன், இவ் வழி***
***உறையும்; அன்னவன்***
***பெயரினைத் தெரிகுதிர்,***
***பெருமையீர்!' என்றாள்.***

***பெருமையீர் -** பெருமைக்குரியவரே!; **தொல்குலத் தயரதன் தனையன் -** பழைய இட்சுவாகு குலத்தைச் சேர்ந்த தயரத மன்னனின் மகன்; **தம்பியோடு உயர்குலத்து அன்னை சொல் உச்சி ஏந்தினான் -** தம் தம்பியுடன் உயர்ந்த கேகய குலத்தில் பிறந்த தாயின் கட்டளையைத் தலை மேல் தாங்கியவராய்; **அயர்விலன் -**வருத்தம் இல்லாமல்; **இவ்வழி உறையும் -** இவ்விடத்தில் தங்கியிருக்கிறார்; **அன்னவன் பெயரினைத் தெரிகுதிர் என்றாள் -** அவரது பெயரை நீங்கள் அறிந்திருக்கலாமே என்று விடை கூறினாள்.*

*தயரதன் குலம் இட்சுவாகு குலம். அணி அரங்கம் தந்தானை 'அறியாதார் அறியாதார்' எனக் குலமுறை கிளத்து படலத்தில் குறிக்கப் பெற்றுளது (638) கைகேயியினை 'உயர் குலத்து அன்னை' என்றதால் சீதையும் இராமன் போல் கைகேயி பால் கொண்ட மதிப்புப் புலப்படும். 'அன்னை சொல் உச்சி ஏந்தியது' முன்னர்க் கைகேயி கூறிய மொழி கேட்டு 'இப்பணி தலைமேல் கொண்டேன்' (1604) என இராமன் கூறிய மொழிகளுடன் ஒத்தியைவன. இராமன் பெயரைத் தண்ட காரணியத்து முனிவர்கள் நன்கு அறிவர். ஆதலால் 'தெரிகுதிர்' என்றாள் சீதை கணவன் பெயரை மனைவி கூறா நிலையும் இதில் புலப்படும்.*

***3356. 'கேட்டனென், கண்டிலென்;***
***கெழுவு கங்கை நீர்***
***நாட்டிடை ஒருமுறை***
***நண்ணினேன்; மலர்***
***வாள் தடங் கண்ணி! நீர்***
***யாவர் மா மகள்,***
***காட்டிடை அரும் பகல்***
***கழிக்கின்றீர்?' என்றான்.***

***கேட்டனென் -*** *நீர் கூறிய செய்திகளை நான் முன்னரே கேள்விப்பட்டுள்ளேன்;* ***கண்டிலென் -*** *(ஆனால் அவரை) நேரில் பார்த்ததில்லை;* ***கெழுவு கங்கை நீர் நாட்டிடை ஒரு முறை நண்ணினேன் -*** *மிக்க நீர்ப் பெருக்குடைய கங்கை பாயும் மருத வள நாட்டிடத்து ஒரு தடவை போயிருந்தேன்;* ***மலர் வாள்தடங் கண்ணி-*** *தாமரை மலர் போன்றும் வாள் போலும் நீண்டகண்ணையுடையவளே!;* ***நீர் யாவர் மா மகள் -*** *நீவிர் யாருடையபெருமைக்குரிய மகள்?;* ***காட்டிடை அரும்பகல் கழிக்கின்றீர்என்றான் -*** *இக் கொடிய காட்டில் அரிய நாட்களைக் கழிக்கின்றீர்எனக் கேட்டான்.*

*ஒரு முறை நண்ணினேன் என்பது முன்னர் இராவணன் திக்கு விசயம் செய்த போது அயோத்தியை ஆண்ட அனரணியன் என்பானைப் போரில் வீழ்த்தி நிந்தித்த போது அவன் தன் வழி முறையில் பிறக்கின்றவனால் கொல்லப்படுமாறு சபித்த வரலாறு நினைக்கப் பெறும். சீதையை நோக்கி வாள் தடங் கண்ணி என விளிப்பது பெருந்தடங் கண்ணி பேசலுற்றாள் (3354) எனக் குறிக்கப் பெற்றதும் ஒப்பிடற்குரியது. அயோத்தி அரண்மனையில் எல்லா நலனும் துய்த்தவள் இந்தக் காட்டில் துன்பப்பட்டு, நாளைக் கழிப்பதற்காக வருந்துபவன் போல் தன் மனத்தைக் காட்டிச் சீதையின் பரிவைப் பெற இராவணன் முயலும் முயற்சி இதுவாம்.*

***3357. 'அனக மா நெறி படர்***
***அடிகள்! நும் அலால்,***
***நினைவது ஓர் தெய்வம் வேறு***
***இலாத நெஞ்சினான்***
***சனகன் மா மகள்; பெயர்***
***சனகி; காகுத்தன்***
***மனைவி யான்' என்றனள்,***
***மறு இல் கற்பினாள்.***

***மறு இல் கற்பினாள் -*** *(அவன் சொற்களைக் கேட்ட) குற்றமற்றகற்புடைய சீதை;* ***அனகமாநெறி படர் அடிகள்! -*** *குற்றமில்லாத சிறந்த அறவழியில் செல்லும் அடிகளே!;* ***நும் அலால் ஓர் தெய்வம் நினைவது வேறு இலாத நெஞ்சினான் -*** *உம்மைப் போன்றவர்களை அல்லாமல் வேறு தெய்வத்தை நினையாத மனமுடையவன்;* ***சனகன் மாமகள் -*** *சனக மன்னனுடைய பெருமைக்குரிய மகளும்;* ***சனகி பெயர் -*** *சானகி எனும் பெயருடையவளும்;* ***காகுத்தன் மனைவி யான் என்றனள் -*** *காகுத்தன் மரபில் வந்த இராமனின் மனைவியும் ஆகியவள் நான் எனக் கூறினாள்.*

*மறு இல் கற்பினாள் என்பதற்கேற்ப முன்னரும் 'நீர் துடைத்த கற்பினாள்' என வந்துளது (3351). இவள் நிலையை உணர்ந்த திரிசடையும் சுந்தர காண்டத்தில் 'நவையில் கற்பினாய்' (5108) என அழைப்பாள். ந + அகம் - அனகம். வடசொற்புணர்ச்சி; குற்றம் அற்றது என்ற எதிர் மறைப் பொருளில் வந்தது. சனக மன்னன் முனிவர்களையே தெய்வமாக மதித்துவழிபடுபவன். அவன் மகளும் அங்ஙனமே 'அடிகள்' என முனிவேடத்தில் வந்தவனை வரவேற்பது இயற்கையே. காகுத்தன்இந்திரனை ஊர்தியாகக் கொண்டு அசுரர்களை வென்றவன் (639)அவன் மரபில் வந்தவன் இராமன் எனப் பெயரைக் கூறா நிலைபெறப்படும்.*

*சனகி - சானகி என்ற பெயரின் விகாரம்.*

*'எங்கிருந்து வருகிறீர்?' என்ற சீதைக்கு வேடதாரியின் கபட உரை*

***3358. அவ் வழி அனையன***
***உரைத்த ஆயிழை,***
***'வெவ் வழி வருந்தினிர்,***
***விளைந்த மூப்பினிர்,***
***இவ் வழி இரு வினை***
***கடக்க எண்ணினிர்,***
***எவ் வழிநின்றும் இங்கு***
***எய்தினீர்?' என்றாள்.***

***அவ்வழி அனையன உரைத்த ஆயிழை -*** *அப்போது அவ்வாறு தன் வரலாற்றைக் கூறிய சீதை;* ***விளைந்த மூப்பினிர் -*** *பழுத்த முதுமை அடைந்தவரே!;* ***வெவ்வழி வருந்தினிர் -*** *கொடிய காட்டு வழியில் வந்ததால் துன்பமடைந்தீர்;* ***இவ்வழி இருவினை கடக்க எண்ணினிர் -*** *இத் தவ நெறியில் புண்ணிய பாவங்களைக் கடந்து செல்ல நினைத்தீர்;* ***எவ்வழி நின்றும் இங்கு எய்தினீர் என்றாள் -*** *எவ்விடத்திலிருந்து இவ்விடம் வந்தடைந்தீர் எனக் கேட்டாள்.*

*ஆயிழை - ஆராய்ந்தெடுத்த அணிகலன்களை அணிந்த பெண்ணாம் சீதை. மூப்பின் முதிர்ச்சியைச் சுட்ட 'விளைந்த மூப்பினிர்' என்றாள். இரு வினை என்பது 'இருள் சேர் இருவினை' எனக் குறள் (குறள். 5) கூறும். 'வெவ்வழி வருந்தினிர்' என்ற கருத்துப்பட முன்னரே 'சேண் நெறி வந்தது ஓர் வருத்தச் செய்கையன்' (3339) எனக் கூறப்பட்டுள்ளது.*

*ஆயிழை - வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

***3359. 'இந்திரற்கு இந்திரன்;***
***எழுதல் ஆகலாச்***
***சுந்தரன்; நான்முகன்***
***மரபில் தோன்றினான்;***
***அந்தரத்தோடும் எவ்***
***உலகும் ஆள்கின்றான்;***
***மந்திரத்து அரு மறை***
***வைகும் நாவினான்.***

*(அடுத்த இராவணன்)* ***இந்திரற்கு இந்திரன் -*** *தேவர் தலைவனாம் இந்திரனுக்கே தலைவன்;* ***எழுதல் ஆகலாச் சுந்தரன் -*** *ஓவியத்தில் தீட்டற்கு அரிய அழகுடையவன்;* ***நான்முகன் மரபில் தோன்றினான் -*** *பிரமனின் குல வழியில் பிறந்தவன்;* ***அந்தரத் தோடும் எவ் உலகும் ஆள்கின்றான் -*** *வானில் உள்ள உலகத்தோடு எல்லா*

*உலகங்களையும் ஆள்கின்றவன்;* ***மந்திரத்து அருமறை வைகும் நாவினான் -*** *மந்திரங்களைத் தம் இடமாகக் கொண்ட அரிய வேதங்கள் தங்கியுள்ள நாவை உடையவன்.....*

*இந்திரன் - தலைவன். நரேந்திரன் என வருதல் காண்க. நான்முகன் மரபினன் என்பதை முன்னர்ச் சூர்ப்பணகையும் இராமனிடத்து 'பூவிலோன் புதல்வன் மைந்தன்' (2770) எனக் கூறினாள். 'அருமறை வைகும் நாவினன்' என்பதற்கேற்ப இராவணன் தவக் கோலத்துடன் வந்ததைக் கூறும் போது' வீணையின் இசைபடவேதம் பாடுவான். எனப்பட்டது (3339). சீதையின் கேள்விக்கு விடையாக இராவணன் பெருமை இது முதல் கூறப்பெறுகிறது.*

***3360. 'ஈசன் ஆண்டு இருந்த பேர்***
***இலங்கு மால் வரை***
***ஊசி-வேரொடும் பறித்து***
***எடுக்கும் ஊற்றத்தான்;***
***ஆசைகள் சுமந்த பேர்***
***அளவில் யானைகள்***
***பூசல் செய் மருப்பினைப்***
***பொடிசெய் தோளினான்.***

***ஈசன் இருந்த பேர் இலங்கு மால் வரை -*** *சிவபிரான் எழுந்தருளியுள்ள பெரிதாக விளங்கும் மிகப் பெரிய கயிலை மலையை;* ***ஆண்டு ஊசி வேரொடும் பறித்து எடுக்கும் ஊற்றத்தான் -*** *அக்காலத்தில் ஆணிவேருடன் அடியோடு பறித்து எடுக்கின்ற வலிமையுடையவன்;* ***ஆசைகள் சுமந்த பேர் அளவில் யானைகள் -*** *திசைகளைத் தாங்கும் பெருமையில் அளவில்லாத யானைகளின்;* ***பூசல் செய் மருப்பினைப் பொடி செய் தோளினான் -*** *போர் புரியும் கொம்புகளைப் பொடி செய்யும் வலிய தோள்களை உடையவன்.*

*ஊசிவேர் என்பதை நம்மாழ்வாரின் 'நீர் நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின்' என்ற அடிகளால் (திருவாய் மொழி1.2.3) காண்க. இராவணன் கயிலை மலையெடுத்தமை இக்காப்பியத்தில் பல இடங்களில் வரும். 'மலையெடுத்த தனிமலையே' எனச் சூர்ப்பணகையின் ஓல மொழிகளில் (2832) அறியலாம். 'உருட்டும் ஊற்றத்தான்' என்ற பாடமுளது அது மிகைபட மொழிந்ததாம். திக்கு யானைகளின் கொம்பொடித்த செய்தியும் இந்நூலில் பல இடங்களில் கூறப்பெறும். 'திக்கின் மாவெலாம் தொலைத்து வெள்ளி மலை எடுத்து' என்ற சூர்ப்பணகை கூற்றில் (2770) அறியலாம் இதனால் இராவணன் பேராற்றல் விளங்கும். 4.*

*3361'நிற்பவர், கடைத்தலை*
*நிறைந்து தேவரே;*
*சொல் பகும், மற்று, அவன்*
*பெருமை சொல்லுங்கால்;*
*கற்பகம் முதலிய*
*நிதியம் கையன;*
*பொற்பு அகம், மான நீர்*
*இலங்கைப் பொன் நகர்.*

***கடைத்தலை நிறைந்து நிற்பவர் தேவரே -*** *அவன் வாயிலில் திரண்டு அவன் அருள் வேண்டி நிற்பவர்கள் தேவர்களே ஆவர்;* ***கற்பகம் முதலிய நிதியம் கையன -*** *கற்பகத் தரு முதலிய தேவலோகச் செல்வங்களெல்லாம் அவன் கையகத்துள்ளன;* ***மான நீர் இலங்கைப் பொன் நகர் பொற்பு அகம் -*** *பெருமை மிக்க கடல் சூழ்ந்த இலங்கை எனும் அழகிய நகரம் அவனுடைய அழகிய உறைவிடமாம். (எனவே);* ***அவன் பெருமை சொல்லுங்கால் சொல்பகும் -*** *அவனுடைய பெருமைகளைக் கூறும் போது சொற்கள் ஆற்றலின்றி வலிமை குறையும்.*

*தேவர்கள் அவன் அருள் நாடி அவன் வாயிலில் காத்திருத்தல்இராவணனின் தலைமைப் பெருமையைக் காட்டும். கற்பகத் தரு, சிந்தாமணி, காமதேனு போன்ற பல விண்ணவர் செல்வங்கள் அவன் கையில் இருப்பது அவன் செல்வப் பெருமையைக் கூறும். 'ஆன நீர்' எனவும் கொண்டு மிக்க நீர் எனவும் பொருள் கொள்வர்.*

*3362. 'பொன்னகரத்தினும்,*
*பொலன்கொள் நாகர்தம்*
*தொல் நகரத்தினும்,*
*தொடர்ந்த மா நிலத்து*
*எந் நகரத்தினும், இனிய;*
*ஈண்டு, அவன்*
*நல் நகரத்தன*
*நவை இலாதன.*

***பொன்னகரத்தினும் -*** *பொன்மயமான தேவந்திரனின் நகரமாகிய அமராவதியைவிடவும்;* ***பொலன் கொள் நாகர்தம் தொல் நகரத்தினும் -*** *பொலிவு மிக்க நாகர்களுடைய பழைய நகரமாகிய போகவதியை விடவும்;* ***தொடர்ந்த மாநிலத்து எந்நகரத்தினும் இனிய -*** *(அவ்வுலகங்களால் மேலும் கீழுமாகத்) தொடரப்பட்ட இப்பூவுலகிலுள்ள எந்த நகரத்தை விடவும், இனிமையுடையது;* ***ஈண்டு-*** *இவ்வுலகில்;* ***அவன் நல் நகரத்தன நவை இலாதன -****அவனுடைய நல்ல இலங்கை நகரத்தில் உள்ளவை எவ்விதக் குற்றமும்இல்லாதன. பொன்னகரம் - அமராவதி - நாகர் நகரம் - போகவதி. மேலுலகம் கீழுலகம் நடுவிலுள்ள இவ்வுலகம் ஆகிய எவ்வுலகிலும்இல்லாத பெருமையும் பொலிவும் உடையது இலங்கையாம் இராவணனின் தலைநகரம். அதிலுள்ள பொருள்கள் மூவுலகிலுள்ள பொருள்களைக் காட்டிலும் இனியவை; குற்றமற்றவை. இவ்வாறு இராவணனின் பெருமை நகர்*

வாயிலாக விளக்கப் பெறும். 'உலகம் மூன்றில் தெட்புறு பொருள்கள் எல்லாம் இதனுழைச் செறிந்த' என்பார் பின்னரும் (4834). இனிய என்பதை அடையாகக் கொண்டு அழகிய எனவும் உரைப்பர்.

**3363. 'தாளுடை மலருளான் தந்த,
அந்தம் இல்
நாளுடை வாழ்க்கையன்;
நாரி பாகத்தன்
வாளுடைத் தடக் கையன்;
வாரி வைத்த வெங்
கோளுடைச் சிறையினன்;
குணங்கள் மேன்மையான்.**

**தாளுடை மலருளான் தந்த -** நாளமுடைய தாமரை மலரில் வாழும் பிரமதேவன் கொடுத்த; **அந்தம் இல் நாளுடை வாழ்க்கையன் -** முடிவிலா ஆயுள் நாளுடன் கூடிய வாழ்வை உடையவன்; **நாரி பாகத்தன் வாளுடைத் தடக்கையன் -** உமையொரு பாகனாம் சிவன் அளித்த வாட்படையை ஏந்திய பெரிய கையையுடையவன்; **வாரி வைத்த வெங் கோளுடைச் சிறையினன் -** ஒருங்கு பிடித்து வைத்த கொடிய கிரகங்களைக் கொண்ட சிறைச் சாலையுடையவன்; **குணங்கள் மேன்மையான் -** எல்லாக் குணங்களாலும் மேன்மையுடையவன்.

பிற மலர்களைவிடத் தாமரையின் தண்டு உயர்ந்துள்ளமையால்'தாளுடை மலர்' எனப்பட்டது. முன்னரும் 'தாள தாமரை மலர்' (526)எனப் புனையப்பட்டுள்ளது காண்க. இளமையில், அரிய தவம் செய்த இராவணன் அழியா வரத்தைப் பிரமனிடமிருந்து பெற்றான். அவன்கயிலை மலையைப் பெயர்த்தபோது சாமகீதம் பாடி இறைவனை மகிழ்வித்துச் சந்திரகாசம் என்ற வாளைப் பெற்றான். திக்கு விசயம் செய்த போது கதிர், மதியம் ஆகிய பல கோள்களைச் சிறை வைத்தான். வெம்மையைச் சிறைக்கும் கூட்டலாம். (நாரி பாகத்தன் -சிவபிரான்; நாரி : பெண்; இங்கே உமை).

**3364. 'வெம்மை தீர் ஒழுக்கினன்;
விரிந்த கேள்வியன்;
செம்மையோன்; மன்மதன்
திகைக்கும் செவ்வியன்;
எம்மையோர் அனைவரும், "இறைவர்"
என்று எணும்
மும்மையோர் பெருமையும்
முற்றும் பெற்றியான்.**

**வெம்மை தீர் ஒழுக்கினன் -** கொடுமை தீர்ந்த நல்லொழுக்கம் உடையவன்; **விரிந்த கேள்வியன் -** பரந்த வேதங்களை உணர்ந்தவன்; **செம்மையோன் -** நடுநிலை உடையவன்; **மன்மதன் திகைக்கும் செவ் வியன் -** காமனே கண்டு ஏங்கும்

*அழகுடையவன்;* ***எம்மையோர் அனைவரும் இறைவர் என்று எணும் -*** *எவ்வுலகில்உள்ள எல்லோரும் தெய்வம் எனக் கருதும்;* ***மும்மையோர் பெருமையும் முற்றும் பெற்றியான் -*** *மூன்று முதல் தெய்வங்களின் பெருமைகளும் முழுதும் பெற்ற பெருமை உடையவன்.*

*கேள்வி - வேதம்; எழுதப்படாது ஓதியே உணரப்பெறும் நூல். சுருதி என்பதும் இப்பொருள் தருவதால் 'கற்றிலனாயினும் கேட்க' என்பதற்கேற்ப சான்றோரிடம் நூல்களைக் கேட்டுணர்ந்தவன் எனலுமாம். அழகின் கடவுள் மன்மதன் அவனே இராவணன் அழகைக் கண்டு திகைப்பான் எனில்; இராவணன் அழகு எல்லையற்றது என்பது குறிப்பு. மும்மையோர் திரிமூர்த்திகள் பிரமன், திருமால், சிவன். செம்மை - நற்பண்புமாம். செவ்வி - காளைப் பருவமுமாம்.*

*எம்மையோர் 'மை' விகுதி இடப்பொருளது. மும்மையோர் - மூவர் இதில் 'மை' பகுதிப் பொருள் விகுதி.*

***3365. 'அனைத்து உலகினும் அழகு***
***அமைந்த நங்கையர்***
***எனைப் பலர், அவன்தனது***
***அருளின் இச்சையோர்;***
***நினைத்து, அவர் உருகவும்,***
***உதவ நேர்கிலன்;***
***மனக்கு இனியாள் ஒரு***
***மாதை நாடுவான்.***

***அனைத்து உலகினும் -*** *எல்லா உலகங்களிலுமுள்ள;* ***அழகு அமைந்த நங்கையர் எனைப்பலர் -*** *அழகுடைய பெண்களிற் சிறந்தோர் மிகப் பலர்;* ***அவன் தனது அருளின் இச்சையோர் -*** *அவனுடைய அருளைப் பெற விருப்பமுடையோர்;* ***அவர் நினைத்து உருகவும் உதவ நேர்கிலன் -*** *அப்பெண்கள் எண்ணி மனம் உருகவும் அவர்க்கின்பம் கொடுக்க உடன்படாதவனாய்;* ***மனக்கு இனியாள் ஒரு மாதை நாடுவன் -*** *தன் உள்ளத்திற்கினியவளாம் ஒரு மங்கையைத் தேடுகிறான்.*

*நங்கையர் - பெண்களிற் சிறந்தார். அவருள்ளும் வடிவழகிற் சிறந்தவர் என்பது தோன்ற அழகு அமைந்த நங்கையர் என்றார். எனைப் பலர் - எத்தனையோ பலர். மாதர் - என்பது காதல் எனும் பொருள் கொண்ட உரிச் சொல், ஆகுபெயராய் விருப்பத்திற்குரிய மகளிர் மேல் நின்றது. மனக்கு - மனத்துக்கு விகாரம். கைகேயி கூற்றிலும் 'மனக்கு நல்லன சொல் வினை' என முன்னரும் (1471) வந்தது.*

***3366. 'ஆண்டையான் அரசு***
***வீற்றிருந்த அந் நகர்,***
***வேண்டி, யான் சில் பகல்***
***உறைதல் மேவினேன்;***

***நீண்டனென் இருந்து, அவற்***
***பிரியும் நெஞ்சிலேன்,***
***மீண்டனென்' என்றனன்,***
***வினையம் உன்னுவான்.***

***ஆண்டையான் அரசு வீற்றிருந்த அந்நகர் வேண்டி -*** *தலைவனாம் அவன் அரசாட்சி செய்து வரும் சிறப்புற்ற அந்நகரத்தை விரும்பி;* ***யான் சில் பகல் உறைதல் மேவினேன் -*** *நான் சில நாட்கள் தங்கியிருப்பதை விரும்பினேன்;* ***நீண்டனென் இருந்து அவற்பிரியும் நெஞ்சிலேன் -*** *நெடுங்காலம் அங்கிருந்தும் அவனை விட்டு நீங்குதற்கு மனமில்லாதவன் ஆனேன், (பின்);* ***மீண்டனென் என்றனன் வினையம் உன்னுவான் -*** *இங்கு வந்தேன் என்று கூறினான் (சீதையைக் கவரும்) சூழ்ச்சியைக் கருதுபவனாம் இராவணன்.*

*ஆண்டை - ஆண்தகை என்பதன் விகாரம். இன்றும் சோழ நாட்டில் ஆண்டை என்ற பெயர் வழக்கிலுள்ளது. அத்தன்மையான்ஆகிய அவன் என்பதும் ஒரு பொருள். 'முன்பு நான் வாழ்ந்தது தண்ட காரணியம். அங்கு உறையும் முனிவர்களைப் பிரிந்து இலங்கையுள் இராவணனுடன் சில காலம் வாழ்ந்தேன். மீண்டு தண்ட காரணிய முனிவர்களைக் காண வந்தேன்' என இராவணன் கொண்ட வேடத்திற்கேற்ப பொருள் கொள்ளவும் இடமுளது. வினையம் - வினை செய்வது பற்றி நன்கு சூழ்தல். சூழ்ச்சி 'எவ்வழி நின்றும் இங்கு எய்தினீர்' என்று சீதை கேட்ட கேள்விக்கு (3358) விடையாகக் கூறும் நீண்ட விடை இராவணன் பெருமையே பெரிதும் பேசப் பெறுகிறது. முனிவன் வேடத்தில் இவ்வாறு கூறுவதால் சீதை இராவணன் மீது விருப்பம் கொள்வாள் என எண்ணியதின் விளைவு இது. தானே தன் பெருமையைப் பரித்துரைக்க வேண்டிய அவலம் இராவணனுக்கு ஏற்படுவது காமக் கொடுமையால்.*

*பிராட்டி-இராவண வாக்குவாதம்*

***3367. 'வேதமும், வேதியர்***
***அருளும் வெஃகலா,***
***சேதன மன்உயிர்***
***தின்னும், தீவினைப்***
***பாதக அரக்கர்தம்***
***பதியின் வைகுதற்கு***
***ஏது என்?- உடலமும் மிகை***
***என்று எண்ணுவீர்!***

***உடலமும் மிகை என்று எண்ணுவீர் -*** *(துறப்பதற்குரிய தவம் செய்தவர்) உடம்பையும் மிகுதி என நினைக்கும் தன்மையுடையவரே!;* ***வேதமும் வேதியர் அருளும் வெஃகலா -*** *வேதங்களையும் அவற்றிற்குரிய வேதியர்களின் கருணையையும் விரும்பாமல்;* ***சேதன மன்உயிர் தின்னும் -*** *பகுத்தறிவுடன் கூடிய நிலை பெற்ற மானிடர்களை உண்கின்ற;* ***பாதகத் தீவினை அரக்கர் தம் பதியின் வைகுதற்கு ஏது என் -*** *பெரும் பாவம் தரும் கொடிய வினைகள் புரியும் அரக்கர்களுடைய நகரில் தங்குவதற்குரிய காரணம் என்ன?*

*உடல்மிகை என எண்ணுவது 'பிறப்பறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை' (345) என்ற குறளின் எதிரொலி காண்க. உடம்பு, உருவுடம்பு அரு உடம்பு என இருவகைப்படும். அருவுடம்பு இந்திரியவுணர்வும் காம விளைவுகளோடும் கூடிய மனம். இவ்வுடம்பால் துன்பம் இடையறாது வருதலை உணர்ந்து இறைப் பொழுது பொறாது முனிவர்கள் வீட்டின் கண்ணே விரைதலின் 'உடம்பும் மிகை' எனக் கருதுவர் எனப் பரிமேலழகர் உரைத்த உரை(குறள் 345) இங்கு ஒப்பிடற்குரியது. மாதவர் வாழும் தண்ட காரணியத்தை விட்டுக் கொலை புரிந்து உயிர்களை உண்ணும் அரக்கரிடம் சென்று தங்கிய காரணம் யாது எனச் சீதை கேட்கிறாள். அரக்கர் என்பவர் பாதகத் தீவினை செய்பவர் என்பது அவளது நிலைபெற்ற கருத்தாம். இக்கருத்துடன் 'தீயாரைக் காண்பதுவும் தீதே... தீயார் குணங்களுரைப்பதுவும் தீதே அவரோடு இணங்கி இருப்பதுவும் தீது' எனும் மூதுரை (9) மொழியும் இங்குக் கருதற்குரியது.*

*உயிர் உடம்புக்கு இலக்கணை.*

***3368. 'வனத்திடை மாதவர்***
***மருங்கு வைகலிர்;***
***புனல் திரு நாட்டிடைப்***
***புனிதர் ஊர் புக***
***நினைத்திலிர்; அற***
***நெறி நினைக்கிலாதவர்***
***இனத்திடை வைகினிர்; என்***
***செய்தீர்!' என்றாள்.***

***வனத்திடை மாதவர் மருங்கு வைகலிர் -*** *காட்டிலே பெருந் தவ முனிவரிடத்துத் தங்காதொழிந்தீர்;* ***புனல் திரு நாட்டிடைப் புனிதர் ஊர் புக நினைத்திலிர் -*** *நீர் வளமிக்க அழகிய நாடுகளில்தூயவர் நகர்களில் செல்ல நினையாதொழிந்தீர்;* ***அறநெறி நினைக்கிலாதவர் இனத்திடை வைகினிர் -*** *அறவழியை எண்ணியும் பார்க்காத தீய அரக்கர் கூட்டத்திடையே தங்கினிர்;* ***என்செய்தீர் என்றாள் -*** *என்ன செயல் செய்தீர் எனச் சீதை (இராவண சன்னியாசியிடம்) கேட்டாள். நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்வது போல் முனிவர் வாழும் காட்டில் அன்றோ முனிவராகிய நீர் தங்கியிருக்க வேண்டும். அவ்வாறில்லாவிடில் தூய மக்கள் வாழும் புனித நகர்க்குச் செல்லவாவது எண்ணியிருக்க வேண்டும். அச்செயல்களைச் செய்யாமல் பாவமே புரியும் அரக்கர் கூட்டத்தில் தங்கியதால் பெரும் அநீதி செய்தீர் எனச் சொல்லாமல் சொல்கிறாள் சீதை.*

*நிலத்தியல் பால் நீர் திரிந்தற்றாகு மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு (குறள். 452) என்பதற்கிணங்க முனிவர் வேடத்திலிருப்பினும் அவர் கூடி வாழ்ந்த இனத்தவர்களின் அவர் மன அறிவும் திரிந்திருக்கும் எனச் சீதை சுட்டுகிறாள். இதனை 'இனத்திடை கைகினிர்' என்ற தொடரால் அறியலாம்.*

***3369. மங்கை அஃது உரைத்தல் கேட்ட வரம்பு***
***இலான், "மறுவின் தீர்ந்தார்,***

***வெங் கண் வாள் அரக்கர்" என்ன***
    ***வெருவலம்; மெய்ம்மை நோக்கின்,***
***திங்கள் வாள் முகத்தினாளே!***
    ***தேவரின் தீயர் அன்றே;***
***எங்கள் போலியர்க்கு நல்லார்***
    ***நிருதரே போலும்' என்றான்.***

***மங்கை அஃது உரைத்தல் கேட்ட வரம்பு இலான் -*** *சீதை அச் சொல் கூறி அறிவுறுத்தியது கேட்ட எல்லை கடந்து ஒழுகுவோனாம் இராவணன்;* ***மறுவின் தீர்ந்தார் வெங்கண் வாள் அரக்கர் என்ன வெருவலம் -*** *குற்ற மற்றவர் கொடியவர்களாம் வாள் வீசும் இராக்கதர் எனக் கூறியதும் அஞ்ச மாட்டோம்;* ***மெய்ம்மை நோக்கின் -*** *உண்மையாக ஆராயின்;* ***திங்கள் வாள் முகத்தினாளே -*** *சந்திரன் போல் ஒளி படைத்த முகமுடையவளே!;* ***தேவரின் தீயர் அன்றே -*** *(அவ்வரக்கர்கள்) தேவர்களைக் காட்டிலும் கொடியவர் அல்லரே;* ***எங்கள் போலியர்க்கு நிருதரே நல்லார் போலும் என்றான் -*** *எங்கள் போல்வார்க்கு அரக்கர்களே நல்லவர் என்று சொன்னான்.*

*வரம்பு இலான் - வலிமை வரம் போன்றவை பெற்றுப் பிறரை விடச் சிறந்தவனாயினும் அறவொழுக்கம் என்ற எல்லையைக் கடந்தவன். வெங்கண் - கொடுமை; கொடிய கண்களை உடையவர்கள் என்றுமாம். வெருவுதல் - அஞ்சி நடுங்குதல். தேவரின் - தேவர் போல எனவும் ஆம். போலியர் என்ற சொல்லில் இராவணனின் போலி வேடமும் தொனிப் பொருளாய் விளங்குகிறது. துறவிகள் சமநிலை உடையவராதலால் தேவர்க்கும் அரக்கர்க்கும் வேறுபாடு கருதோம் எனக் கூறியதாகவும் கொள்வர். போலும் : ஒப்பில் போலி.*

***3370. சேயிழை-அன்ன சொல்ல,- 'தீயவர்ச்***
    ***சேர்தல் செய்தார்***
***தூயவர் அல்லர், சொல்லின், தொல் நெறி***
    ***தொடர்ந்தோர்' என்றாள்;***
        ***'மாய வல் அரக்கர் வல்லர், வேண்டு***
    ***உரு வரிக்க' என்பது,***
***ஆயவள் அறிதல் தேற்றாள்; ஆதலின்,***
    ***அயல் ஒன்று எண்ணாள்.***

***அன்ன சொல்ல -*** *(இராவணன் அத்தகைய சொற்களைக் கூற;* ***சேயிழை -*** *செவ்விய அணிகலன்கள் பூண்ட சீதை;* ***தீயவர்ச் சேர்தல் செய்தார் தூயவர் அல்லர் -*** *கொடியவரை நட்பாகச் சேர்ந்தவர்கள்தூயவர் ஆகார்;* ***சொல்லின் -*** *விளக்கமாகக் கூறுவதாயின்;* ***தொல்நெறி தொடர்ந்தோர் என்றாள் -*** *பழைய தீய வழியில் தொடர்புடையோர் எனக் கூறினாள்;* ***மாயவல் அரக்கர் வேண்டு உருவரிக்க வல்லர் என்பது -*** *மாயையுடைய வலிய இராக்கதர் தாம் விரும்பும் வடிவம் கொள்ள ஆற்றல் உடையவர்கள் என்ற உண்மையை;* ***ஆயவள் அறிதல் தேற்றாள் -*** *அத்தகையவள் அறியாள்;* ***ஆதலின் அயல் ஒன்று எண்ணாள் -*** *ஆகையால் வேறாக ஒன்றும் நினையாள்.*

*'தீயவர்ச் சேர்தல் செய்தார் தூயவர் அல்லர்' என்ற கருத்து 'மனந் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் இனந்தூய்மை தூவா வரும்' (குறள். 455) என்ற கருத்துடன் ஒப்புடைத்து. அதற்கேற்பச் சிற்றினம் சேர்ந்தவர் சிற்றினத்தாரே எனச் சீதை முடிவு செய்கிறாள்.அரக்கன் மாயையால் துறவி வேடம் பூண்டு வந்தனன் என்பதைத் தெளியாள். காரணம் அரக்கர்க்குத் தாம் வேண்டிய வடிவெடுக்கும் ஆற்றல் உள்ளது என்பதை அறியா நிலையாகும். 'அயல் ஒன்று எண்ணாள்' என்பது சீதையின் தூய மன நிலையைக் காட்டும்.*

*சேயிழை- பண்புத் தொகை புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.*

***3371. 'அயிர்த்தனள் ஆகும்' என்று, ஓர்***
***ஐயுறவு அகத்துக் கொண்டான்;***
***பெயர்த்து, அது துடைக்க எண்ணி,***
***பிறிதுறப் பேசலுற்றான்:***
***'மயக்கு அறும் உலகம் மூன்றின்***
***வாழ்பவர்க்கு, அனைய வல்லோர்***
***இயற்கையின் நிற்பது அல்லால், இயற்றல்***
***ஆம் நெறி என்?' என்றான்.***

***அயிர்த்தனள் ஆகும் என்று -** (சீதை கூறிய சொற்களால்) தன் மீது அவள் சந்தேகம் கொண்டவள் ஆகும் என; **ஓர் ஐயுறவு அகத்துக் கொண்டான் -** ஒரு சந்தேகத்தை மனத்துள் கொண்ட இராவணன்; **அது துடைக்க எண்ணிப் பெயர்த்து -** அதனைத் தீர்த்து ஒழிக்கக் கருதி, மீண்டும்; **பிறிது உறப் பேசலுற்றான் -** வேறொரு வகையில் பேசத் தொடங்கினான்; **மயக்கு அறும் உலகம் மூன்றின் வாழ்பவர்க்கு -** அறிவின் மாறுபாடு அற்ற உலகம் மூன்றில் வாழும் தேவர், நாகர், மானிடர் என்பவர்க்கு; **அனையவல்லோர் -** அத்தகைய வலிமையுடைய அரக்கருடைய; **இயற்கையின் நிற்பது அல்லால் இயற்றல் ஆம் நெறி என் என்றான் -** இயல்பான பண்பைப் பின்பற்றி நடப்பதல்லாமல் செய்யக்கூடிய வழி வேறு என்ன உள்ளது எனக் கேட்டான்.*

*ஐயுறவு - சந்தேகம். சீதை தன் மேல் ஐயப்படின் தான் கருதிய காரியம் கை கூடாது என முதலில் அவள் கொண்ட ஐயப்பாட்டை நீக்க முனைகிறான். எனவே, தான் முன் பேசிய மொழிகளை மாற்றிப் பேசும் போது போலி வேடத்திற்கேற்பக் கூறும் சொற்களும் போலிச் சொற்கள் ஆகின்றன. வலிய அரக்கர் வழியில் நடப்பது அல்லாமல்வேறு வழி என்ன என்று தன் இயலாமையைக் கூறிச் சீதையின் பரிவு கிட்டுமா என முயல்கின்றான்.*

*ஐயம் + உறவு - ஐயுறவு. விகாரம்.*

***3372. திறம் தெரி வஞ்சன், அச் சொல்***
***செப்பலும், செப்பம் மிக்காள்,***
***'அறம் தரு வள்ளல், ஈண்டு இங்கு அருந்***

***தவம் முயலும் நாளுள்,***
***மறம்தலை திரிந்த வாழ்க்கை அரக்கர்***
***தம் வருக்கத்தோடும்***
***இறந்தனர் முடிவர்; பின்னர், இடர்***
***இலை உலகம்' என்றாள்.***

***திறம் தெரிவஞ்சன் -*** *(சீதை) மனநிலையை அறியும் வஞ்சகனாம் இராவணன்;* ***அச்சொல் செப்பலும் -*** *அவ் வார்த்தையைக் கூறியதும்;* ***செப்பம் மிக்காள் -*** *மேன்மை நிரம்பிய சீதை;* ***அறம் தரு வள்ளல் -*** *தருமத்தை உலகுக்குத் தந்து நிலைநாட்டும் வள்ளலாம் இராமன்;* ***ஈண்டு இங்கு அருந்தவம் முயலும் நாளுள் -*** *இப்போது இவ்வனத்தில் செயற்கரிய தவத்தைச் செய்யும் இந்நாட்களுள்;* ***மறம் தலைதிரிந்த வாழ்க்கை அரக்கர் -*** *பாலை வழிகளில் சஞ்சரிக்கும் வாழ்வையுடைய இராக்கதர்கள்;* ***தம்வருக்கத் தோடும் இறந்தனர் முடிவர் -*** *தங்கள் இனத்தோடு இறந்து ஒழிவர்;* ***பின்னர் உலகம் இடர் இலை என்றாள் -*** *பிறகு உலகில் துன்பமே இல்லை எனக் கூறினாள்.*

*திறம் தெரிதல் - பிறர் மனநிலையின் தன்மையை அறிதல் என்றும் தான் செய்யும் வஞ்சகச் சூழ்ச்சிகளின் திறமைகள் அறிந்துஅவற்றிற்கேற்ப வினைபுரிதல் எனவும் ஆம். செப்பம் - செம்மை; கருத்து சொல்லும் செயலும் தம்முள் மாறாகாமை. (குறள். 951 பரிமேழலகர் உரை) அறம் தரு வள்ளல் என்பதற்கேற்பச் சீதை காட்சிப் படலத்தில் 'அறந்தரு சிந்தை என் ஆவி நாயகன்' (5102) என்பதைக் காணலாம். இக்காப்பியத்தில் இக்கருத்து பல இடங்களில் மிளிர்கிறது அரக்கர் வாழ்வோடும் அழிதல் அல்லோரைக் கடியும் அறம்; உலகம் இடர் இலை என்ற நிலை நல்லோரைக் காக்கும் அறம். இறந்தனர் : முற்றெச்சம்.* *54*

*3373.* ***மானவள் உரைத்தலோடும்,***
***'மானிடர், அரக்கர்தம்மை,***
***மீன் என மிளிரும் கண்ணாய்! வேர்***
***அற வெல்வர் என்னின்,***
***யானையின் இனத்தை எல்லாம் இள***
***முயல் கொல்லும்; இன்னும்,***
***கூன் உகிர் மடங்கல் ஏற்றின் குழுவை***
***மான் கொல்லும்' என்றான்.***

***மானவள் உரைத்தலோடும் -*** *பெருமை மிக்க சீதை இவ்வாறு கூறியவுடன், (இராவணன்);* ***மீன் என மிளிரும் கண்ணாய் -*** *மீன் போலப் பிறழ்ந்து ஒளிவிடும் கண்ணை உடையவளே!;* ***அரக்கர் தம்மை மானிடர் வேர் அறவெல்வர் என்னின் -*** *இராக்கதர்களைமனிதர் அடி வேரில்லாமல் வெற்றி கொள்வார்கள் என்றால்;* ***யானையின் இனத்தை எல்லாம் இளமுயல் கொல்லும் -****யானைக் கூட்டம் அனைத்தையும் இளைய முயல் கொன்று விடும்;* ***இன்னும்கூன் உகிர் மடங்கல் ஏற்றின் குழுவை மான் கொல்லும் என்றான் -*** *மேலும் வளைந்த நகமுடைய ஆண் சிங்கங்களின் கூட்டத்தை மான் கொன்று விடும் என்று கூறினான்.*

*மானவன் என்பதன் பெண்பால் மானவள், மான்போன்ற மருண்ட பார்வையுடையவள் என்றுமாம். மிளிர்தல் - ஒளிவிடுதல் யானையை முயல் கொல்லுதலும் சிங்கத்தை மான் கொல்லுதலும் உலகில் நடவாதன. எனவே அரக்கரை மனிதர் கொல்லுதல் நடவாத செயல் ஆகும்.*

*எனவே, இப்பாடலில் பொய்த்தற் குறிப்பு உளது.*

***3374. 'மின் திரண்டனைய பங்கி***
***விராதனும், வெகுளி பொங்கக்***
***கன்றிய மனத்து வென்றிக்***
***கரன் முதல் கணக்கிலோரும்,***
***பொன்றிய பூசல் ஒன்றும் கேட்டிலிர்***
***போலும்' என்றாள்-***
***அன்று அவர்க்கு அடுத்தது உன்னி, மழைக்***
***கண்நீர் அருவிசோர்வாள்.***

*(அதைக் கேட்ட சீதை)* ***மின்திரண்டனைய பங்கி விராதனும் -*** *மின்னல்கள் ஒன்று திரண்டன போலச் சிவந்த தலைமயிருடைய விராதனும்;* ***வெகுளி பொங்கக் கன்றிய மனத்து வென்றிக் கரன் முதல் கணக்கிலோரும் -*** *சினம் மிகுந்து காய்ந்து முதிர்ந்த மனத்தை உடைய வெற்றிமிக்க கரன் முதலான எண்ணற்ற அரக்கர்களும்;* ***பொன்றிய பூசல் ஒன்றும் கேட்டிலிர் போலும் என்றாள் -*** *இறந்த போது எழுந்த பேராரவாரத்தை நீர் ஒருசிறிதும் கேட்கவில்லையோ எனக் கேட்டாள்;* ***அன்று அவர்க்கு அடுத்தது உன்னி -*** *அப்போது அவ்வரக்கர்களுக்கு ஏற்பட்ட முடிவை எண்ணி;* ***மழைக்கண் நீர் அருவி சோர்வாள் -*** *வருத்தத்தால் மழை போலக் கண்ணீரை அருவியாக வடித்தாள்.*

*மின் - ஒளியுமாம். பங்கி - ஆணின் தலைமயிர். 'பத்திரக் கடிப்பு மின்னப் பங்கியை வம்பிற் கட்டி' என வருதல் காண்க (சீவக.2277). அரக்கர் பண்பாக வெகுளியும் அது தோன்றியதால் அவர்கள்மனம் கன்றியிருந்ததையும் சீதை எடுத்துக் கூறுவாள். எனினும் அத்தகையோர் செய்த இடையூறுகளையும் அவர்கட்கேற்பட்ட முடிவையும் எண்ணிக் கண்ணீர் விட்டாள் என்பது பெண் மனத்தைக் காட்டும். மானைத் தொடர்ந்த இராமனுக்கு ஏற்பட்ட துன்பத்தை எண்ணும் போது அவளை அறியாமல் கண்ணீர் பெருகியது எனவும் உரைப்பர். இரு வேறுபட்ட உணர்வுகள் உடனுக்குடன் பொங்கும் நிலையை இது சுட்டும் என்பர்.*

***3375. 'வாள் அரி வள்ளல்; சொன்ன***
***மான் கணம் நிருதரானார்;***
***கேளொடு மடியுமாறும்,***
***வானவர் கிளருமாறும்,***
***நாளையே காண்டிர் அன்றே; நவை***
***இலிர், உணர்கிலீரோ?***

***'மீள அருந்த தருமம்தன்னை வெல்லுமோ***
***பாவம்? என்றாள்.***

**நவை இலிர் -** *குற்றம் இல்லாதவரே!;* **சொன்ன வாள்அரி வள்ளல் -** *நீங்கள் கூறிய சிங்கமே இராமனாவார்;* **நிருதர் ஆனார் மான் கணம் -** *அரக்கர்களே மான் கூட்டத்திற்கு ஒப்பு ஆவார்கள்;* **கேளொடு மடியுமாறும் வானவர் கிளருமாறும் -** *அரக்கர் சுற்றத்தோடு அழியும் விதத்தையும் தேவர்கள் அதனால் கிளர்ச்சியுறும் விதத்தையும்;* **நாளையே காண்டிர் அன்றே -** *விரைவில் பார்க்கப் போகின்றீர் அல்லவா?;* **மீள அருந்தருமம் தன்னை பாவம் வெல்லுமோ -** *விலக்க முடியாத தருமத்தைப் பாவம் வென்று விடுமோ?;* **உணர்கிலீரோ என்றாள் -** *வெல்லாது என்பதை அறிய மாட்டீரோ எனக் கேட்டாள் சீதை.*

*முன்னர் இராவணன் சிங்கத்தை அரக்கர்க்கும் மானை மானிடராம் இராமலக்குவர்க்கும் ஏற்கும் வகையில் கூறியதை (3373)உடனுக்குடன் இராமனே சிங்கம் என மாற்றுகிறாள். அரக்கர் முன்னர் இராமன் கையில் மடிந்ததையும் அறிந்தவள் ஆதலின் இவ்வாறு மறுக்கிறாள்.*

*இராமன் அரக்கரைக் கிளையோடு வேரறுப்பான் என்று தான் நம்புவதை வெளிப்படுத்துகிறாள். இராவண சன்னியாசியைப் பற்றி எவ்வித ஐயமும் கொள்ளாதவள் ஆதலின் 'நவை இலிர்' என்கிறாள். காப்பிய அறம் வெளிப்படும் வகையில் 'மீள அருந்தருமம் தன்னை வெல்லுமோ பாவம்'எனப் பொதுமையில் கேட்டு உண்மையை நிலை நாட்டுகிறாள். அறம் வெல்லும் பாவம் தோற்கும் எனப் பின்னரும் வரும் (4929) அன்றே - தேற்றப் பொருளில் உளது. இது வேற்றுப் பொருள் வைப்பணி.*

*இராவணன் சீற்றமும் மாய வேடம் களைதலும்*

***3376. தேனிடை அமுது அளாய அன்ன மென்***
***சில சொல் மாலை,***
***தானுடைச் செவிகளூடு தவழுற,***
***தளிர்த்து வீங்கும்***
***ஊனுடை உடம்பினானும், உருகெழு***
***மானம் ஊன்ற,***
***'மானிடர் வலியர்' என்ற மாற்றத்தால்,***
***சீற்றம் வைத்தான்.***

**தேனிடை அமுது அளாய அன்ன -** *தேனோடு அமுதத்தைக் கலந்தது போன்ற (சீதையின்);* **மென்சில சொல் மாலை -** *மென்மையான சில சொற்களின் வரிசை;* **தான்உடைச் செவிகள் ஊடு தவழுற -** *தன்னுடைய காதுகள் வழியே நுழைய;* **தளிர்த்து வீங்கும்ஊனுடை உடம்பினானும் -** *மனம் மகிழ்ந்து பூரிக்கும் தசைக் கொழுப்பு மிக்க உடம்புடைய இராவணனும்;* **மானிடர் வலியர் என்ற மாற்றத்தால் -** *(அரக்கரைவிட) மனிதர்கள் (இராமலக்குவர்) வலிமையுடையவர் எனும் சொற்களால்;* **உருகெழு**

***மானம் ஊன்ற -***அச்சம் மிகுதற்குக் காரணமான தன்மானம் ஓங்கிட; ***சீற்றம் வைத்தான் -*** கோபம் கொண்டான்.

*தேனிடை அமுது கலத்தல் மிக்க இனிமைப் பண்பைக் காட்டும்.இராமன் அனுமனிடம் சீதையின் மொழிகளைப் பற்றிக் கூறும் போது 'சிவந்தது ஓர் அமிழ்தம் இல்லை; தேன் இல்லை உள என்றாலும்' (4496) என்பான். உருகெழுமானம். அச்சமிடும் மான உணர்ச்சி, குலப்பற்றுமாம். காமத்தை விடச் சினம் மிகுந்த நிலை இது. அமுதம்சீதையின் அழியாப் பேற்றையும் ஊனுடை உடம்பு என்பது இராவணனின் அழிவுறு கேட்டையும் உள்ளுறை உணர்வாகச் சுட்டும். 'சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள். 306) என்பதற்கேற்ப இராவணன் கிளையொடு அழிவதற்குக் காரணம் ஆயிற்று. இந்நிலை பின்னரும் 'சினத்தொடும் கொற்றம் முற்றி' (9224) என்று இராவணன்பேசுவது காண்க.*

***3377. சீறினன், உரைசெய்வான்,' "அச்சிறு***
***வலிப் புல்லியோர்கட்கு***
***ஈறு, ஒரு மனிதன் செய்தான்" என்று***
***எடுத்து இயம்பினாயேல்***
***தேறுதி நாளையே; அவ் இருபது திண்***
***தோள் வாடை***
***வீறிய பொழுது, பூளைவீ என***
***வீவன் அன்றோ?***

***சீறினன் உரை செய்வான் -*** *கோபம் கொண்ட இராவணன் விடை கூறினான்;* ***அச்சிறு வலிப் புல்லையோர்கட்கு -*** *நீ கூறிய அந்த (விராதன் போன்ற) சிறு வலிமையுடைய அற்பர்களுக்கு;* ***ஒருமனிதன் ஈறு செய்தான் என்று எடுத்து இயம்பினாயேல் -*** *ஒரு மனிதனாம் இராமன் முடிவைக் கொடுத்தான் என்று புகழ்ந்து கூறுவாய் என்றால்;* ***நாளையே தேறுதி -*** *அதன் முடிவை நாளையே நீ தெளிவாக அறிவாய்;* ***அவ் இருபது திண்தோள் வாடை வீறிய பொழுது -*** *அந்த இராவணனின் இருபது வலிய தோள்களின் பெருங்காற்று வீசிய காலத்து;* ***பூளை வீ என வீவன் -*** *சிறு பூளைப்பூப்போல அந்த மனிதன் அழிவான் :* ***அன்றோ -*** *ஓகாரம்; வினாப் பொருளில் வந்தது.*

*முன்னைய பாடலில் சீற்றம் வைத்தான் என முடிந்தது, இதன் தொடக்கமாகச் சீறினை என அமைத்துள்ளமை எண்ணத்தக்கது. விராதன் முதலியோர் தன்னைச் சார்ந்தவர் எனினும், அவர்களைச்சிறு வலிப் புல்லியோர் என்றது தன்னையே இராவணன் தருக்கி நின்றமை புலனாம். பெரும் புயலில் சிறு பூளைப் பூ எதிர் நிற்க இயலாது. அது போல் இராவணனின் இருபது தோள் வீச்சிற்கு ஒருமனிதன் ஆற்றான் என்று தற்பெருமை கொள்வது இங்கு வெளிப்படுகிறது. நுதல் விழிப் பொங்கு கோபம் சுடப் பூளை வீ அன்ன தன் அங்கம் வெந்து அன்று தொட்டு அனங்கனே ஆயினான்' எனச் சிவன் காமனை எரித்த வரலாற்றில் முன்னே இந்நூல் பூளைப் பூவைக் காட்டியுள்ளது (339)*

*'அன்றோ' தேற்றப் பொருளில் வந்த வினா எனவும்கொள்ளலாம்.*

***3378. 'மேருவைப் பறிக்க வேண்டின்,***
***விண்ணினை இடிக்க வேண்டின்,***
***நீரினைக் கலக்க வேண்டின்,***
***நெருப்பினை அவிக்க வேண்டின்,***
***பாரினை எடுக்க வேண்டின்,***
***பல வினை,-சில சொல் ஏழாய்!***
***யார் எனக் கருதிச் சொன்னாய்?-***
***இராவணற்கு அரிது என்?' என்றான்.***

***சிலசொல் ஏழாய் -*** *சில சொற்கூறும் பேதைப் பெண்ணே!* ***மேருவைப் பறிக்க வேண்டின் -*** *மேருமலையைப் பெயர்த்தெடுக்க விரும்பினாலும்;* ***விண்ணினை இடிக்க வேண்டின் -*** *வானத்தை இடிக்க விரும்பினாலும்;* ***நீரினைக் கலக்க வேண்டின் -*** *கடல்களிலுள்ள நீரைக் கலக்க விரும்பினாலும்;* ***நெருப்பினை அவிக்க வேண்டின் -*** *வடவா முகாக்கினியை அவிக்க விரும்பினாலும்;* ***பாரினை எடுக்க வேண்டின் -*** *உலகத்தைப் பெயர்த்தெடுக்க விரும்பினாலும்;* ***பலவினை -*** *இப்படிப்பட்ட பல அரிய செயல்களுள்;* ***இராவணற்கு அரிது என் -*** *இராவணன் செய்வதற்கு முடியாத செயல் எது?;* ***யார் எனக் கருதிச் சொன்னாய் என்றான் -*** *(அவனை) யார் என்று எளிமைப் படக் கூறினாய் என்று கேட்டான் இராவணன்.*

*நிலம், நீர், நெருப்பு, வான் ஆகியவற்றைக் கூறியதால் காற்றும் இதனுள் உபலட்சணத்தால் அடங்கும். பஞ்ச பூதங்களையும் அடக்கி ஆள்பவன் தன் மனத்தை அடக்கிக் காமத்தை ஆள வலிமையற்றிருக்கும் இராவணன் நிலையை உய்த்துணர வைக்கிறது இம்மொழிகள் 'மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே வான் வீழ்க்குவனே வளி மாற்றுவனெனத் தான் முன்னிய துறைபோகலின் என வேந்தன் உள்ளியது முடிக்கும் சிறப்பைப் பட்டினப்பாலை காட்டும் (பட்டின. 27 - 273). சில சொல், பலவினை என்பவற்றில் முரண்தொடை உளது. சீதை இராவணன் பண்பிற்காணும் முரண்பாடுகளுள் இதுவும் ஒன்றாம்.*

***3379. 'அரண் தரு திரள் தோள்சால உள***
***எனின், ஆற்றல் உண்டோ?***
***கரண்ட நீர் இலங்கை வேந்தைச் சிறைவைத்த***
***கழற்கால் வீரன்***
***திரண்ட தோள் வனத்தை எல்லாம், சிறியது***
***ஓர் பருவம் தன்னில்,***
***இரண்டு தோள் ஒருவன் அன்றோ,***
***மழுவினால் எறிந்தான்?' என்றாள்.***

***அரண் தரு திரள் தோள் சால உள எனின் ஆற்றல் உண்டோ -*** *காவலைச் செய்யும் திரண்ட தோள்கள் மிகுதியாக உள்ளன என்றால் அவற்றிற்கு வலிமை மிகுதி*

*உள்ளதா?;* ***கரண்ட நீர் இலங்கை வேந்தைச் சிறை வைத்த கழற்கால் வீரன் -*** *நீர்க் காகங்கள் வாழும் கடல் சூழ்ந்த இலங்கை அரசனாம் இராவணனைச் சிறையில் அடைத்த வீரக்கழல் பூட்டிய கார்த்த வீரியார்ச்சுனனின்;* ***திரண்ட தோள் வனத்தை எல்லாம் -*** *பருத்த ஆயிரம் தோள்களாம் காட்டையெல்லாம்;* ***சிறியது ஓர் பருவம் தன்னில் -*** *தனது இளம் பருவத்தில்;* ***இரண்டு தோள் ஒருவன் மழுவினால் எறிந்தான் அன்றோ என்றாள் -*** *இரு தோள்களை உடைய பரசுராமன் தன் கைக் கோடரியால் வெட்டி எறிந்தான் அல்லவா எனச் சீதை கேட்டாள்.*

*தோள்கள் இருபதாயினும் ஆயிரம் தோளுடைய கார்த்த வீரியார்ச்சுனனால் சிறை வைக்கப்பட்டான் இராவணன். எனவே, அவன் வலிமை பயனற்றது என்பது விளங்கும். மேலும், அவ்வாயிரந்தோளுடையவனோ இரு தோளுடைய பரசுராமன் மழுவினால் வெல்லப்பட்டான். பரசுராமனோ இராமனுக்குத் தோற்றான். இதனால் இராவணனை இராமன் வெல்வது உறுதி என்பதைச் சீதை கூறாமல் கூறினாள்.*

*அரண்தரு தோள் - உடலைக் காப்பன தோளாம். 'மெய் சென்றுதாக்கும் வியன் கோல் அடி தன் மேற் கை சென்று தாங்கும்' (நன்னெறி 3) என்பது காட்டும், காட்டைக் கோடரி வெட்டுவது போல் ஆயிரம் தோளாம் காட்டைப் பரசுராமனின் கோடரி வெட்டியது என்பது உருவக அணி. 'உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என ஓர் ஆயிரம் உயர் தோள் வயிரப் பணைதுணிய, தொடு வாள் மழு உடையான் (1274) எனப் பாலகாண்டத்தில் பரசுராமப் படலத்தில் இக்கதை வருதல் காண்க.*

***3380. என்று அவள் உரைத்தலோடும் எரிந்தன***
***நயனம்; திக்கில்***
***சென்றன திரள் தோள்; வானம்***
***தீண்டின மகுடம்; திண் கை***
***ஒன்றொடு ஒன்று அடித்த, மேகத்து உரும்***
***என; எயிற்றின் ஒளி***
***மென்றன; வெகுளி பொங்க,***
***விட்டது மாய வேடம்.***

***என்று அவள் உரைத்தலோடும் -*** *எனச் சீதை சொன்னவுடன்;* ***நயனம் எரிந்தன -*** *(இராவணனின் இருபது) கண்களும் தீயை உமிழ்ந்தன;* ***திரள் தோள் திக்கில் சென்றன -*** *திரண்ட தோள்கள் திசைகளை அளாவி வளர்ந்தன;* ***மகுடம் வானம் தீண்டின -*** *பத்து முடிகளும் மேலுலகத்தைத் தொட்டன;* ***திண்கை ஒன்றொடு ஒன்று அடித்த -*** *இருபது வலிய கைகளும் ஒன்றுடன் ஒன்று அறைந்தன;* ***எயிற்றின் ஒளி மேகத்து உரும் என மென்றன -*** *பல்லின் வரிசை மேகத்தினின்று எழும் இடி போலப் பேரொலி செய்து கடித்தன;* ***வெகுளி பொங்க மாய வேடம் விட்டது -*** *கோபம் மிகுந்ததால் மாயையால் தரித்த தவவேடம் இராவணனை விட்டு நீங்கியது.*

*வெகுளிச் சுவையால் ஏற்படும் மெய்ப்பாடுகளை இப்பாடல் நன்கு வெளிப்படுத்துகிறது. விசுவாமித்திரன் சினந்த போது 'மேல் நிவந்த கொழுங் கடைப் புருவம் நெற்றி முற்றச் சென்றன; வந்தது நகையும்; சிவந்தன கண்;' (327) எனக் காட்டியது இந்நூல். மேலும் இடித்து உரப்பி, 'வந்து போர் எதிர்த்தியேல் அடர்ப்பென்'*

*என்று அடித்தலங்கள் கொட்டி வாய் மடித்து அடுத்து அலங்கு தோள் புடைத்து நின்று' எனச் சுக்கிரீவன் வெகுளி கொண்ட தோற்றம் கிட்கிந்தா காண்டத்தில் காணப்பெறும் (3946).*

*காமத்தை மானம் வெல்லத் தவவேடம் மாறி, உண்மை உரு வெளிப்பட்டது. வெகுளியின் விளைவு இது.*

*சீதையின் ஐயப்பாடும் அரக்கனின் கோர வடிவமும்*

***3381. ' இரு வினை துறந்த மேலோர் அல்லர்கொல்***
***இவர்? என்று எண்ணி,***
***அரிவையும், ஐயம் எய்தா, 'ஆர் இவன்தான்?'***
***என்று, ஒன்றும்,***
***தெரிவு அரு நிலையளாக, தீ விடத்து***
***அரவம் தானே***
***உரு கெழு சீற்றம் பொங்கி, பணம் விரித்து***
***உயர்ந்தது ஒத்தான்.***

***அரிவையும் -** சீதையும்; **இவர் இருவினை துறந்த மேலோர் அல்லர் கொல் என்று எண்ணி -** இத்தவ வேடம் கொண்டவர் நல்வினை தீவினை எனும் இருவேறுபட்ட செயல்களையும் விட்டு நீங்கிய துறவி அல்லர் என நினைத்து; **ஐயம் எய்தா -** சந்தேகம் கொண்டு; **ஆர் இவன் தான் என்று ஒன்றும் தெரிவு அருநிலையளாக -** இத்தகையோன் யார் என எதுவும் அறிதற்கு முடியாத நிலையுடையவளாகி நிற்க; **தீவிடத்து அரவம் -** கொடிய நஞ்சுள்ள பாம்பு; **தானே உருகெழு சீற்றம் பொங்கி -** தானாக அச்சமூட்டும் வகையில் கோபம் மேற்கிளம்ப; **பணம் விரித்து உயர்ந்தது ஒத்தான் -** தன் படம் விரித்து எழுந்து உயர்ந்தது போல (இராவணன்) விளங்கினான்.*

*இராவணனின் துறவித் தோற்றமே சீதையின் உள்ளத்தில் ஐயமின்றிப் பதிந்திருந்ததால் 'மேலோர்' என்ற நினைவே முதலில் வருகிறது. பின்னர் அவனது உருவ மாற்றத்தைக் கண்டு 'மேலோர் அல்லர் கொல்' என ஐயுறுகிறாள். அப்போதும் 'யார்' என எண்ணம்கொண்டாளே ஒழிய அரக்கர் மாறுவேடமிட்டு வந்தார் என நினைக்கவில்லை. இராவணன் பத்துத் தலைகளுடன் இருபது கைகளுடன் சினந்தோங்கிய நிலையில் எழுந்த தோற்றம் பல தலைகளையுடைய நச்சுப் பாம்பு தன் படம் விரித்து எழுந்தது போல்தோன்றுகிறது.*

***3382. ஆற்ற வெந்துயரத்து அன்னாள் ஆண்டு***
***உற்ற அலக்கண் நோக்கின்,***
***ஏற்றம் என் நினைக்கல் ஆகும்? எதிர்***
***எடுத்து இயம்பல் ஆகும்***
***மாற்றம் ஒன்று இல்லை; செய்யும்***
***வினை இல்லை; வரிக்கல் ஆகாக்***

***கூற்றம் வந்து உற்ற காலத்து உயிர்***
***என, குலைவு கொண்டாள்.***

***ஆற்ற வெந்துயரத்து அன்னாள் ஆண்டு உற்ற அலக்கண் நோக்கின் -*** *(இராமனுக்குற்ற) மிகக் கொடிய துயரத்தை அடைந்துள்ள சீதை அப்போது (இராவணன் உருவமாற்றத்தால்) அடைந்த துன்பத்தைக் கருதின்;* ***ஏற்றம் என் நினைக்கல் ஆகும் -*** *அதனைவிட மிக்க துன்பம் வேறு எதை நினைக்க முடியும்?;* ***எதிர் எடுத்து இயம்பல் ஆகும் மாற்றம் ஒன்று இல்லை -*** *இதற்கு ஒப்பாக வேறு சொல்லக் கூடிய சொல் ஒன்றும் இல்லாமல் போயிற்று;* ***செய்யும் வினை இல்லை -*** *அவள் அவனைவிட்டுத் தப்பும் செயலும் தெரியவில்லை;* ***வரிக்கல் ஆகாக் கூற்றம் வந்து உற்ற காலத்து உயிர் என(க்) குலைவு கொண்டாள் -*** *கட்டமுடியாத யமன் வந்து சேர்ந்த போது உயிர் நடுங்குவது போல நடுக்கம் அடைந்தாள்.*

*ஆற்ற - மிக அலக்கண் - துன்பம் சஞ்சலமானகண். துன்பம் வரும்போது கண் கலங்கும்; அதனால் அலக்கண் என்பது துன்பத்தைக் குறித்தது. காரியத்தின் பெயர் காரணத்திற்கு வந்த இலக்கணை. சீதை பட்ட துன்பத்தைக் கூறச் சொற்கள் கிடைக்கவில்லை. மாற்று வினை செய்ய வழியும் தெரிய வில்லை. வரித்தல் - கட்டுதல். கூற்றத்திற்கு உயிர்களின்முடிவு வந்ததும் அதைத் தான் கட்டுவதன்றித் தான் கட்டுப்படாத நிலை வரிக்கல் ஆகா என்பதற்கு விரும்பத்தகாத எனவும் உரைப்பர். கூற்றம் - உயிரை உடலிலிருந்து கூறுபடுத்திப் பற்றிச் செல்வதால் இயமனைக் குறித்தது எனவும், சீதைக்கு மாற்றமில்லை, வினையும் இல்லை என்ற திகைப்புண்டாகிய நிலை இது.*

*3383.* ***'விண்ணவர் ஏவல் செய்ய, வென்ற***
***என் வீரம் பாராய்;***
***மண்ணிடைப் புழுவின் வாழும்***
***மானிடர் வலியர் என்றாய்;***
***பெண் எனப் பிழைத்தாய் அன்றேல்; உன்னை***
***யான் பிசைந்து தின்ன***
***எண்ணுவென் என்னின், பின்னை என்***
***உயிர் இழப்பென் என்றான்.***

***விண்ணவர் ஏவல் செய்ய வென்ற என் வீரம் பாராய் -*** *தேவர்கள் யான் ஏவிய குற்றேவல் செய்ய அவர்களை வென்ற என்வீரத்தை நீ கருதாமல்;* ***மண்ணிடைப் புழுவின் வாழும் மானிடர் வலியர் என்றாய் -*** *இவ்வுலகில் இழிந்த புழுப் போல் வாழும் மனிதரை வலிமை உடையவர் எனக் கூறினாய்;* ***பெண் எனப் பிழைத்தாய் -*** *ஒரு பெண் என்ற காரணத்தால் நீ உயிர் பிழைத்துள்ளாய்;* ***அன்றேல் -*** *அல்லாவிடில்;* ***உன்னையான் பிசைந்து தின்ன எண்ணுவென் -*** *உன்னை என் கைகளால் பிசைந்து உண்ண நினைப்பேன்;* ***என்னின் -*** *அவ்வாறு எண்ணிச் செயல்பட்டேனென்றால்;* ***பின்னை என் உயிர் இழப்பென் என்றான்-*** *(உன்னை அடைய முடியாததால்) பின்னர் என் உயிரைப் போக்கிக் கொள்வேன் என்று கூறினான் இராவணன்.*

*தேவர்கள் தனக்கு ஏவல் செய்யும் பெருமையை முதலில் கூறினான். பின்னர் மானிடர் புழுவை விட இழிந்தவர் என்று தன் உயர்வை மேலும், நிலை நாட்ட முனைகிறான். காம நிலை மாறி வெகுளி எழுந்ததின் விளைவு தற்பெருமையை எடுத்துக் கூறுகிறான். உன்னை யான் பிசைந்து தின்ன எண்ணுவென் என்பதால் ஊன் உண்டு வாழும் அரக்க வாழ்வைக் காட்டும். சினத்தின் மிகுதியால் பழி வாங்கும் முறையில் சீதையைப் பிசைந்து தின்ற பின் அவளை அடைய முடியாமையால் தானும் இறந்துபடும் நிலையை உணர்கிறான்; 'பின்னை என்னுயிர் விண்ணவர் ஏவல் செய்ய வென்ற வீரம் ஒருபால், தன் உயிர் இழக்கும் வீழ்ச்சி ஒருபால் - இராவணன் கூற்றின் இருதுருவப் பாங்கு இது.*

***3384. 'குலைவுறல், அன்னம்! முன்னம்,***
***யாரையும் கும்பிடா என்***
***தலைமிசை மகுடம் என்ன, தனித்தனி***
***இனிது தாங்க,***
***அலகு இல் பூண் அரம்பை மாதர் அடிமுறை***
***ஏவல் செய்ய,***
***உலகம் ஈர்-ஏழும் ஆளும் செல்வத்துள்***
***உறைதி' என்றான்.***

***அன்னம் -*** *அன்னப்பறவை போன்ற மெல்லியலே!;* ***குலைவுறல்-*** *நடுக்கம் கொள்ள வேண்டாம்;* ***முன்னம் யாரையும் கும்பிடா என் தலைமிசை மகுடம் என்ன -*** *இதற்கு முன் எவரையும் கும்பிட்டு வணங்காத என் தலைகள் மீது மணி முடி போல;* ***தனித்தனி இனிது தாங்க -*** *ஒவ்வொரு தலையிலும் முறையே இன்பமாக உன்னை உயர்த்தி வைத்துக் கொண்டு;* ***'அலகு இல் பூண் அரம்பை மாதர் அடிமுறை ஏவல் செய்ய -*** *எண்ணற்ற அணிகலன் பூண்ட அரம்பையர்கள் உன் திருவடிகளில் முறைப்படி நீ இடும் ஏவலைச் செய்ய;* ***உலகம் ஈர் ஏழும் ஆளும் செல்வத்துள் உறைதி என்றான்-*** *பதினான்கு உலகங்களையும் அரசாளும் பெரும் செல்வ வாழ்வில் மகிழ்ந்திருப்பாயாக என வேண்டினான் இராவணன்.*

*முன் கொண்ட வெகுளி மாற, மீண்டும் இராவணன் காமம் மீதூர இனிய மொழிகளைக் கூறத் தொடங்குகிறான். இவ்வாறு மெய்ப்பாடுகள் மாறி மாறி வரும் நிலையைக் கம்ப நாடகம் நன்கு காட்டுகிறது. இராவணன் யாரையும் வணங்கா நிலை, முன்னர்ச் சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலத்தில் 'வலிய நெடும் புலவியினும் வணங்காத மகுட நிறை வயங்க மன்னோ (3069) என்று கூறியதாலும் உணரப்படும். தலை வணங்காத் தலைமை நிலை மாறி இருபது தலை மீதும் மணிமுடி போலச் சீதையைத் தாங்குவதாகக் கூறும் போது இராவணனின் வீழ்ச்சி புலனாகிறது. மகளிர் மனத்தைச் செல்வம் மாற்றும் என்ற நினைப்பிலே பதினான்கு உலகங்களையும் ஆளும் செல்வம் பெறுவாள் என்பதையும் கூறுகிறான்.*

*அன்னம் - உவம ஆகுபெயர் அண்மை விளி ஏற்று வந்துளது.*

*கற்பின் கனலி கனன்று எழுதல்*

***3385. செவிகளைத் தளிர்க் கையாலே சிக்குறச்
சேமம் செய்தாள்;
'கவினும் வெஞ் சிலைக் கை வென்றிக்
காகுத்தன் கற்பினேனை,
புவியிடை ஒழுக்கம் நோக்காய்; பொங்கு
எரி, புனிதர் ஈயும்
அவியை நாய் வேட்டதென்ன, என்
சொனாய்? அரக்க!' என்னா,***

*(அது கேட்ட சீதை)* **செவிகளைத் தளிர்க்கையாலே சிக்குறச் சேமம் செய்தாள் -** *தன் காதுகளை மெல்லிய தளிர் போன்ற கைகளாலே அழுத்தமாக மூடிக் கொண்டாள்;* **கவினும் வெஞ்சிலைக் கை வென்றிக் காகுத்தன் கற்பினேனை -** *அழகிய கொடிய வில்லை ஏந்திய கையும் வெற்றியும் உடைய இராமன் திறத்துக் கற்பு பூண்ட (அவன் மனைவியாகிய) என்னை;* **புவியிடை ஒழுக்கம் நோக்காய் -** *உலகில் உயர்ந்தோர்க்குரியஒழுக்கத்தை எண்ணிப் பாராதவனாய்;* **பொங்கு எரி(ப்) புனிதர் ஈயும் அவியை நாய் வேட்ட தென்ன -** *வளர்ந்தெரியும் வேள்வித் தீயில் தூய முனிவர் (தேவர்க்காக) இடும் அவிர்ப்பாகத்தை நாய் விரும்பினாற் போல;* **என் சொனாய் அரக்க என்னா -** *என்ன வார்த்தை சொன்னாய் அரக்கனே என்று சொல்லி.*

*இராவணன் கூறிய சொற்கள் கேட்கத் தக்கன அல்ல ஆதலால் தன் செவிகளைக் கைகளால் மூடிக் கொண்டாள். சிக்கு - கெட்டி உறுதி எனலுமாம். சீதை தன்னை யாரென்று இராவணனிடம் கூறும் போதும் 'காகுத்தன் மனைவி' என்றது (3357) போல இங்கும் அப்பெயரே சுட்டினாள். தேவர்க்குரிய அவி உணவு போல உயர்ந்தகற்புடை நிலையில் சீதை இருப்பதையும் நாய் போல் இழிந்த நிலையில் இராவணன் இருப்பதையும் உவமையால் அறியலாம். 'அவியை நாய் வேட்டதென்ன' என்று உவமை சொன்னவள், அதற்குரிய உவமேயத்தை விரித்துரைக்கவில்லை. கற்புடைத் தேவி அதனைச் சொல்லக் கூசினாள். அதனை விரிக்காமல், 'என் சொன்னாய், அரக்க' என்று வினவி முடித்தாள் - நயத்தக்க நாகரிகம் உணர்க. அடியவரைக் காப்பதால் அழகும் பகைவரை அழிப்பதால் வெம்மையும் கொண்டதாக இராமன் வில் போற்றப் பெறுகிறது. இதுவரை முனிவர் என இராவணனை மதித்த நிலை மாறி 'என் சொன்னாய், அரக்க!' என இழிவு படக் கேட்கிறாள் சீதை. கவினும் - எதிர்காலப் பெயரெச்சம்.*

***3386. 'புல் நுனை நீரின் நொய்தாப்
போதலே புரிந்து நின்ற
என் உயிர் இழத்தல் அஞ்சி,
இற்பிறப்பு அழிதல் உண்டோ?
மின் உயிர்த்து உருமின் சீறும்
வெங் கணை விரவாமுன்னம்,
உன் உயிர்க்கு உறுதி நோக்கி,
ஒளித்தியால் ஓடி' என்றாள்.***

***புல்நுனை நீரின் நொய்தாப் போதலே புரிந்து நின்ற -*** *புல்லின் நுனியில் தங்கிய நீர்த்துளி போன்று அற்பமாய் ஆவி ஆகிப் போவதையே தன் தொழிலாக விரும்பிச் செய்கின்ற;* ***என் உயிர் இழத்தல் அஞ்சி இற்பிறப்பு அழிதல் உண்டோ -*** *என்னுடைய உயிரை விட்டு விடுவதற்குப் பயந்து நற்குலத்தில் பிறந்த பெருமையை அழியும்படி செய்வதுண்டோ? (இல்லை);* ***மின் உயிர்த்து உருமின் சீறும் வெங் கணை விரவா முன்னம் -*** *மின்னலென ஒளிவிட்டு இடியெனச் சீறித் தாக்கும் கொடிய அம்பை (இராமன் விட, உன்னை வந்து) தைத்து உன்னைக் கொல்வதற்கு முன்னரே;* ***உன் உயிர்க்கு உறுதி நோக்கி -*** *உன்னுடைய உயிருக்குப் பாதுகாப்பைக் கருதி;****ஓடி ஒளித்தி என்றாள் -*** *இவ்விடம் விட்டு ஓடி மறைந்து கொள் எனக் (இராவணனை எச்சரிக்கை செய்து) கூறினாள் சீதை;* ***ஆல் -****அசை.* *வாழ்க்கை நிலையற்றது என்பதை உணர்த்தப் புல் நுனி நீர் உவமையாகும். 'புன்னுனி மேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி' என நாலடியாரும் (பாடல் 34) கூறும். இற்பிறப்பு என்பதன் உயர்வு. அனுமன் மொழியிலும் 'இற்பிறப்பு என்பது ஒன்றும் ...களிநடம் புரியக் கண்டேன்' (6035) என வெளிப்படும். இராமனின் அம்பின் ஒளிக்கு மின்னலும் ஆற்றலுக்கு இடியும் உவமை ஆயின. சீதை தன் பண்பிற்கேற்ப இராமன் அம்பு வாராமுன் ஓடி ஒளிந்து கொள்ளுமாறு இராவணனை எச்சரிக்கிறாள். இதனால் இராமனின் பெருமையும் விளங்கும்.*

*இற்பிறப்பு கற்பிற்கு இலக்கணை.*

*ஆசையை விளம்பி, அரக்கன் சீதைஅடிவணங்கல்*

***3387. என்று அவள் உரைக்க, நின்ற***
***இரக்கம் இல் அரக்கன், 'எய்த***
***உன் துணைக் கணவன் அம்பு, அவ்***
***உயர் திசை சுமந்த ஓங்கல்***
***வன் திறல் மருப்பின் ஆற்றல் மடித்த***
***என் மார்பில் வந்தால்,***
***குன்றிடைத் தொடுத்து விட்ட பூங்***
***கணைகொல் அது' என்றான்.***

***என்று அவள் உரைக்க -*** *என்று சீதை சொல்ல;* ***நின்ற இரக்கம் இல் அரக்கன் -*** *அவன் முன் நின்ற இரக்கமற்ற அரக்கனாம் இராவணன்;* ***உன்துணைக் கணவன் எய்த அம்பு -*** *உன்னுடைய வாழ்க்கைத் துணைவனான கணவன் ஏவிய அம்பு;****அவ் உயர் திசை சுமந்த ஓங்கல் வன்திறல் மருப்பின் ஆற்றல் -*** *அந்தச் சிறந்த திக்குகளைத் தாங்கிய மலை போன்ற யானைகளின்வலிய திறமை வாய்ந்த தந்தங்களின்;* ***ஆற்றல் மடித்த என் மார்பில் வந்தால் -*** *வலிமையை அழித்த என் மார்பகத்தில் தைக்க வந்தால்;****குன்றிடைத் தொடுத்து விட்ட பூங்கணை கொல் அது என்றான் -*** *மலையிடத்து தொடுத்து ஏவிவிட்ட மலரம்பு போல் ஆகும் எனக் கூறினான்.*

*பெண்ணென்றும் பார்க்கவில்லை. உலக ஒழுக்கமும் பார்க்கவில்லை. ஆதலால் அரக்கன் மனத்தில் இரக்கமில்லை. 'உன்துணைக் கணவன்' என்ற தொடரில் உன்போல் பெண் தன்மை உடைய கணவன் என்ற இகழ்ச்சியும் தொனிக்கிறது. ஓங்கல் - மலை.*

*இங்கு மலை போன்ற யானையைக் குறிப்பதால் உவமை ஆகுபெயர். இராவணன் மார்புக்குக் குன்றும், இராமன் அம்பிற்குப் பூங்கணையும் உவமையாம். குன்றின் மேல் எறிந்த மலர் அதற்கு எத்தீங்கும் விளைவிக்காதது போன்று இராமன் அம்பு தன்னை ஒன்றும் செய்யாது எனச் சுட்டினான். கொல்-அசைநிலை.*

***3388.* அணங்கினுக்கு அணங்கனாளே! ஆசை நோய்**
**அகத்துப் பொங்க,**
**உணங்கிய உடம்பினேனுக்கு உயிரினை**
**உதவி, உம்பர்க்**
**கணம் குழை மகளிர்க்கு எல்லாம் பெரும் பதம்**
**கைக்கொள்' என்னா,**
**வணங்கினன்-உலகம் தாங்கும்**
**மலையினும் வலிய தோளான்.**

***உலகம் தாங்கும் மலையினும் வலிய தோளான் -*** *இந்த மண்ணுலகைத் தாங்கி நிற்கும் மலையைக் காட்டிலும் ஆற்றல் மிக்க தோளை உடைய இராவணன்;* ***அணங்கினுக்கு அணங்கனாளே -*** *தெய்வப் பெண்ணுக்கு ஒரு தெய்வப் பெண் போன்றவளே!;* ***ஆசை நோய் அகத்துப் பொங்க -*** *காமம் ஆம் வியாதி என் மனத்தில் வளர;* ***உணங்கிய உடம்பினேனுக்கு -*** *வாடிய உடலையுடைய எனக்கு;* ***உயிரினை உதவி -*** *(சாக உள்ள) என் உயிரை (உன் கருணையால்) காப்பாற்றி எனக்களித்து;* ***உம்பர்க் கணம் குழை மகளிர்க்கு எல்லாம் பெரும்பதம் கைக்கொள் -*** *மேலுலகிலுள்ள திரண்ட குழை எனும் காதணிகள் பூண்ட தெய்வ மகளிர் எல்லார்க்கும் கிடைப்பதற்கரிய சிறந்த நிலையுடைய பதவியை நீ ஏற்றுக்கொள்;* ***என்னா வணங்கினன் -*** *என்று கூறி வீழ்ந்து வணங்கினான்.*

*உலகம் தாங்கும் மலை - மேருமலை. அது அச்சுப் போல நின்றுஉலகைத் தாங்குகிறது என்பது புராண மரபு. அணங்கு - அழகு என்பாருமுளர் அழகெனும் அவையும் ஓர் அழகு பெற்றதே என முன்னர்க் கூறப்பட்டுளது (513). தெய்வ மகளிர்க்கு உன் அழகால் வருத்தத்தை உண்டாக்குபவளே எனவும் கூறுவர். பின்னர் வரும் சுந்தரகாண்டக் காட்சிப் படலத்திலும் சீதையை வேண்டிய இராவணனை 'முடியின் மீது முகிழ்த்து உயர்கையினன், படியின் மேல் விழுந்தான் பழிபார்க்கலான்' எனக் காட்டுவார் கம்பர் (5182). ஒரு முறை அச்சுறுத்துவதும் மறுமுறை அடி வீழ்ந்து தாழ்வதும் இராவணனின் வெகுளியும் காமமும் மாறிமாறி அவனை அலைக்கழித்து நிற்கும் நிலையைக் காட்டும். கணம் - திரட்சி.*

*'இறைவா! இளையோய்' எனச் சீதை ஏங்கி அழைத்தல்*

*கலிவிருத்தம்*

***3389.* தறைவாய் அவன் வந்து**
**அடி தாழுதலும்,**
**கறை வாள் பட ஆவி**

***கலங்கினள்போல்,***
***'இறைவா! இளையோய்!'***
***என ஏங்கினளால்-***
***பொறைதான் உரு ஆனது ஓர்***
***பொற்பு உடையாள்.***

***அவன் வந்து தறைவாய் அடி தாழுதலும் -*** *அந்த இராவணன் சீதை முன் வந்து அவள் திருவடி நோக்கித் தரையில் விழுந்து வணங்கவும்;* ***கறைவாள் பட ஆவி கலங்கினள் போல் -*** *இரத்தக் கறை படிந்த வாள் தன் மீது பட உயிர் குலைந்து துன்புற்றவள் போல;* ***இறைவா இளையோய் என -*** *என் தலைவனே! அவர் தம்பியாம் இலக்குவனே! என வாய் விட்டுக்கதறி;* ***பொறை தான் உரு ஆனது 'ஓர் பொற்பு உடையாள்' ஏங்கினள் -*** *பொறுமையே ஓர் வடிவம் போன்ற தன்மையுடையவளாம் சீதை ஏக்க முறுவாள்;* ***ஆல் -*** *அசை.*

*தறை - தரை. பாயிரத்தில் 'மடப் பிள்ளைகள் தறையில் கீறிடின்தச்சரும் காய்வரோ?' (9) என்பது போல் இங்கும் எதுகை நோக்கி வல்லின றகரமாகத் திரிந்துள்ளது. இராவணன் நிலத்தின் மீது தான்விழுந்தான். அச் செயல் வாளொன்று தன் உடல்மேல் பட்டது போல் உயிர் கலங்கினாள் சீதை. இச் செயல் அவளது பண்பைக் காட்டும்.'பொறை தான் உருவாய தொர் பொற்பு' என்பதும் 'இரும் பொறை என்பது ஒன்றும்... களிநடம் புரியக் கண்டேன்' எனும் அனுமன் கூற்றிலும் (6035) வெளிப்படும்.*

*இப்பாடலும் பின்வரும் எட்டுப் பாடல்களும் அவலச் சுவையைவெளிப்படுத்துவன.*
*இராவணன் பன்னசாலையோடு சீதையை எடுத்தல்*

***3390. ஆண்டு, ஆயிடை, தீயவன் ஆயிழையைத்***
***தீண்டான், அயன் மேல் உரை சிந்தைசெயா;***
***தூண்தான் எனல் ஆம் உயர் தோள் வலியால்,***
***கீண்டான் நிலம்; யோசனை கீழொடு மேல்.***

***ஆண்டு ஆயிடை தீயவன் -*** *அப்பொழுது அவ்விடத்தில் அத் தீயவனாம் இராவணன்;* ***அயன் மேல் உரை சிந்தை செயா -*** *பிரமன் முன்னரிட்ட சாபத்தை மனத்தில் எண்ணி;* ***ஆயிழையைத் தீண்டான் -*** *அணிகலன்கள் அணிந்த சீதையின் திருமேனியைத் தொடாதவனாகி;* ***தூண்தான் எனல் ஆம் உயர் தோள் வலியால் -*** *கல்தூண்கள் தாம் என்று கூறத்தக்க உயர்ந்த தோள்களின் வலிமையால்;* ***நிலம் கீழொடு மேல் யோசனை கீண்டான் -*** *சீதை இருந்த பூமியின் கீழேயும் பக்கங்களிலும் ஆக ஒரு யோசனை அளவு பெயர்த்தெடுத்தான்.*

*பிரமனிட்ட சாபம் பின்னர்ச் சடாயு உயிர் நீத்த படலத்திலும் 'தீண்ட அஞ்சுமால் ஆரியன் தேவியை அரக்கன் நல்மலர் பேர் உலகு அளித்தவன் பிழைப்பு இல்சாபத்தால்' (3458) எனவும் கூறப் பெறும். இராவணனுக்கு வேதவதி, அரம்பை, நரி கூபரன், புஞ்சிகத்தலை ஆகியோராலும் சாபங்கள் உண்டு. நிலத்தொடு பெயர்த்தெடுத்த செய்தி கம்பரின் படைப்பு. இவ்வாறு படைத்தது மட்டுமின்றி நூலில்*

*பல இடங்களில் இதனைக் கூறியுள்ளார். யோசனை என்பது ஒரு காத தூரம் எனவும் நாற்காததூரம் எனவும் கூறுவர்.*

*குபேரனின் அளகாபுரியில் அரம்பையை இராவணன் கற்பழித்த போது அவள் இட்ட சாபம் 'வலிய ஒரு பெண்ணைத் தீண்டின் அவள் கற்புக்கனலால் எரிவாய் என்பதாம் இவ்வாறே நளகூபனும் புஞ்சிகத்தலையும் சாபம் இட்டனர் என்பர். இவ்வாறு இராவணன் பெற்ற சாபம்பற்றிப் பல கதைகள் உள.*

*இக் காண்டத்தின் முதற் படலத்தில் விராதன் பிராட்டியைப்பற்றித் தூக்கிச் செல்லும் செய்தி வருவது நினையத்தக்கது. வான்மீகஇராவணன் தீண்டிக் கவர்தலுக்கும் விராதன் தீண்டிக் கவர்தலுக்கும்வேற்றுமை உண்டு. இவன் காம வயத்தனாய்ப் பெண்மை சிதைக்கநினைப்பவன்; அவனோ விலங்கு நிலையிலனனாய் உணவுக்குஅலைபவன். விலங்கு நிலையினும் கொடியது காமக் கடுங்கனல்என்பது கருத்துப் போலும். இவ் ஒப்பீடு நெடிது நினைதற்கு உரியது.*

***3391. கொண்டான் உயர் தேர்மிசை;***
***கோல் வளையாள்***
***கண்டாள்; தனது ஆர்***
***உயிர் கண்டிலளால்;***
***மண்தான் உறும்***
***மின்னின் மயங்கினளால்;***
***விண்தான் வழியா***
***எழுவான் விரைவான்.***

***உயர் தேர் மிசைக் கொண்டான் -*** *(அவ்வாறு பெயர்த்த நிலத்தை) உயர்ந்த தன் தேர் மேல் வைத்துக் கொண்டான்;* ***கோல் வளையாள் கண்டாள் -*** *(அச் செயலை) அழகிய வளையணிந்த சீதை பார்த்தாள்;* ***தனது ஆருயிர் கண்டிலள் -*** *தன்னுடைய அரியஉயிரைக் காணவில்லை;* ***மண் உறும் மின்னின் மயங்கினள் -*** *தனக்குரிய நிலமாம் மேகத்தை விட்டுத் தரையில் விழுந்த ஒரு மின்னற் கொடி போலக் கலங்கினாள் (அப்போது இராவணன்);* ***விண் வழியா எழுவான் விரைவான் -*** *ஆகாய வழியாக விரைவிற் செல்லக் கருதினான். ஆல் இரண்டும் அசை; தான் இரண்டும் அசை.*

*கோல் வளை - அழகிய வேலைப்பாடுகள் அமைந்த வளை. கோல் - திரட்சியும் ஆம். வார்கோல் செறிய (புறம். 36) கோனிற வளையினார்க்கு (சீவக. 209) எனவரும். தேர் நிலத்தின் மீது சிறிதுதூரம் சென்றதை வயவர் பூமி மேல் அவன் தேர் சென்ற நெடுநெறிபோனார் (3479) என்பதில் காணலாம். மண்உறுமின் -இல்பொருளுவமை. சீதையின் அரற்றல்*

***3392. 'விடு தேர் என, வெங் கனல்***
***வெந்து அழியும்***
***கொடிபோல் புரள்வாள்;***
***குலைவாள்; அயர்வாள்;***

***துடியா எழுவாள்;***
***துயரால் அழுவாள்;***
***'கடிதா, அறனே! இது***
***கா' எனுமால்.***

**தேர் விடு என -** *(இராவணன் தேர்ப்பாகனைப் பார்த்து) விரைவாகத் தேரைச் செலுத்து என்று கூற;* **வெங்கனல் வெந்து அழியும் கொடி போல் -** *கொடிய தீயில் வீழ்ந்து வெந்து அழிகின்ற கொடி போன்று;* **புரள்வாள் குலைவாள் அயர்வாள் துடியா எழுவாள் துயரால் அழுவாள் -** *சீதை கீழே புரண்டு நிலை குலைந்து செயலறியாது சோர்ந்து மனம் துடித்து எழுந்து பின் வருந்தி அழுவாள்;* **அறனே கடிதா இதுகா எனும் -** *'தருமமே! இத்துன்பத்திலிருந்து விரைவாகக் காப்பாற்று' என வேண்டுவாள்.***ஆல்-** *ஈற்றசை.*

*தீயில் வீழ்ந்த கொடி எரிவது போலச் சீதை இராவணனின் தேர்மீது துன்புற்றாள். கொடி, சீதைக்கு உவமை; தீ, இராவணனின்செயலுக்குஉவமையாம். சீதை படும் பாட்டைப் பல வினைத்தொடர்கள் விளக்கும். மேலும் கடியா யறமே என்ற பாடத்திற்கு'ஒருவரும் கைவிடாத தருமமே எனவும் உரைப்பர்.*

*யாரும் துணையற்ற நிலையில் தருமமே காப்பாற்றும் என்றநம்பிக்கை இதனால் புலனாகும்.*

***3393. 'மலையே! மரனே! மயிலே! குயிலே!***
***கலையே! பிணையே! களிறே! பிடியே!***
***நிலையா உயிரேன் நிலை தேறினிர் போய்,***
***உலையா வலியாருழை நீர் உரையீர்!***

**மலையே -** *மலைகளே!;* **மரனே -** *மரங்களே!;* **மயிலே -** *மயில்களே!;* **குயிலே -** *குயில்களே!;* **கலையே -** *ஆண் மான்களே!;* **பிணையே -** *பெண்மான்களே!;* **களிறே -** *ஆண்யானைகளே!;***பிடியே-** *பெண் யானைகளே!;* **நிலையா உயிரேன் நிலை -** *நிலைபெறாத உயிருடன் துன்புறும் என் நிலையை;* **தேறினிர் போய் -** *அறிந்தவர்களாகச் சென்று;* **உலையா வலியாருழை -** *அழியாத வலிமையுடைய இராமலக்குவரிடம்;* **நீர் உரையீர் -** *நீங்கள் சொல்லுங்கள் என்றாள் சீதை.*

*இராவணன்பால் சிக்கி உயிர் குலையும் தன் நிலையை அறிந்து, இராமலக்குவரிடம் எப்பொருளேனும் தெரிவித்துவிடாதா எனக் கையற்று அலறுவதை விவரிப்பது இப்பாடல். பண்டை இலக்கியங்களில் தலைவியைப் பிரிந்த தலைவனிடம் இவ்வாறு பல பொருள்களைத் தூது விடல் காணப்பெறும். ஞாயிறு திங்கள் அறிவே நாணே கடலே கானல் விலங்கே மரனே புலம் புறு பொழுதே புள்ளே நெஞ்சே அவையல பிறவும் நுவலிய நெறியாற் சொல்லுவ போலவும் கேட்குந போலவும் சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர் எனத் தொல் காப்பிய நெறி (தொல். பொருள். செய்யுள் 200 பேராசிரியம்) உணர்த்துவது ஒப்பிடற்குரியதாம். வலிய பகைவரையும் எளிதில் அழிப்பவர் இராமலக்குவர் ஆதலால் உலையா வலியார் என உரைத்தாள். 75*

***3394. 'செஞ் சேவகனார் நிலை நீர் தெரிவீர்;
மஞ்சே! பொழிலே! வன தேவதைகாள்!
"அஞ்சேல்" என நல்குதிரேல், அடியேன்
உஞ்சால்,அது தான் இழிவோ?' உரையீர்!***

***மஞ்சே -*** *மேகங்களே!;* ***பொழிலே -*** *சோலைகளே!;* ***வனதேவதைகாள் -*** *காட்டில் உள்ள தெய்வங்களே!;* ***செஞ்சேவகனார் நிலை -*** *நேர்மையுள்ள நல்ல வீரனாம் இராமனின் (என்னை இழந்ததால் அடையும்) துன்பநிலை;* ***நீர் தெரிவீர் -****நீங்கள் அறிவீர்கள்;* ***அஞ்சேல் என நல்குதிரேல் -*** *பயப்படாதே என்று எனக்கு ஆறுதல் அளிப்பீராயின்;* ***அடியேன் உஞ்சால் அது தான்இழிவோ உரையீர் -*** *அடியவளாகிய நான் (பிழைப்பேன் அவ்வாறு)பிழைத்தால் அது உங்களுக்குக் குறையாகுமா? சொல்லுங்கள்.*

*மலைமேலும் வானத்திலும் மஞ்சு இருக்கும். பொழிலும் வானுயர்ந்து நிற்கும். வனதேவதைகள் காட்டில் நடப்பனவற்றை அறிவார்கள். எனவே, அவையும் இராமன் என்னை இழந்து வருந்தும் நிலையை அறிந்திருக்கக் கூடும். அதனைத் தன்னிடம் கூறச் சீதைவேண்டுகிறாள். சேவகன் - வீரன்; இராமனைச் சேவகன் என்றழைத்தல் 'சேவகன் சீறா முன்னம் சேதுவும் இயன்ற மாதோ' என்ற அடியில் காணலாம் (4759). நிலை - இருக்கும் இடம் எனலுமாம்.*

*உஞ்சால் - போலி (உய்ந்தால்).*

***3395. 'நிருதாதியர் வேர் அற, நீல் முகில்போல்
சர தாரைகள் வீசினிர், சார்கிலிரோ?
வரதா! இளையோய்! மறு ஏதும் இலாப்
பரதா! இளையோய்! பழி பூணுதிரோ!***

***நிருதாதியர் வேர் அற -*** *அரக்கர் முதலிய கொடியவர் அடியோடு அழிய;* ***நீல்முகில் போல் சர தாரைகள் வீசினிர் சார்கிலிரோ -*** *நீல மேகம் போல் அம்பு மழை பொழிந்து இங்கு வந்து சேரமாட்டீரா?* ***வரதா -*** *அடைக்கலமாக வந்தவர்க்கு அருளும் இராமனே!;* ***இளையோய் -*** *இராமனின் தம்பியாம் இலக்குவனே!;****மறு ஏதும் இலாப் பரதா -*** *குற்றம் ஒன்றும் இல்லாத பரதனே!;* ***இளையோய் -*** *பரதனை நீங்காத் தம்பியாம் சத்துருக்கனே!;* ***பழி பூணுதிரோ -*** *என்னை இந்த ஆபத்திலிருந்து காக்காமலிருந்து பழியை அடைவீர்களோ?*

*நிருதாதியர் - அரக்கர் தலைவனாம் இராவணன் முதலானோர் எனவுமாம். இராமனை நீல முகிலுக்கு ஒப்பிட்டது நிறத்தாலும் அம்பு சொரியும் ஆற்றலாலும் என்க. 'வரதன்' என்ற வழக்கு பாலகாண்டத் திரு அவதாரப் படலத்தில் 'வரதனும் இளவலும் என மருவினரே' (307) என வந்துளது. கடுஞ் சொல்கூறி வனத்தில் இராமனைத் தேட இலக்குவனை விடுத்ததையும் மறந்து 'இளையோய்' என்கிறாள். கைகேயி வரத்தால் பெற்ற நாட்டை மீண்டும் இராமனுக்கே அளிக்கக் காட்டிற்கு வந்து கூற இராமன்மறுக்கவே அவன் பாதுகையைப் பெற்று நந்திக் கிராமத்திலிருந்த*

*பரதனை 'மறுஏதும் இலாப் பரதா' என்கிறாள். பரதனை நீங்காத சத்துருக்கனையும் 'இளையோய்' என்றாள். இத்தகைய குற்றமற்ற நால்வரும் தனக்கேற்பட்ட தீங்கை நீக்க வராததால் பழி பூணுவார்களோ என அஞ்சுகிறாள் சீதை.*

### *3396. 'கோதாவரியே! குளிர்வாய், குழைவாய்!*
### *மாதா அனையாய்! மனனே தெளிவாய்;*
### *ஓதாது உணர்வாருழை, ஓடினை போய்*
### *நீதான் வினையேன் நிலை சொல்லலையோ?*

***கோதாவரியே** - கோதாவரி எனும் ஆறே!; **குளிர்வாய்** - குளிர்ந்த தன்மை உடையாய்; **குழைவாய்** - இளகும் இயல்புடையாய்; **மாதா அனையாய்** - தாயைப் போன்றவளே!; **மனனே தெளிவாய்** -குற்றமற்ற தெளிந்த மனமுடையாய்; **ஓதாது உணர்வார் உழை** - ஓதாமலே எல்லா நூல்களையும் உணர்ந்துள்ள என் கணவரிடத்து; **ஓடினைபோய்** - ஓடிச் சென்று; **வினையேன் நிலை நீ தான் சொல்லலையோ** - துன்பமுற்ற தீவினையேனாகிய என் நிலையை நீயே போய்ச் சொல்லமாட்டாயா?*

*குளிர்தலும் குழைதலும் நீரின் தன்மை. அவற்றைப் பெற்ற கோதாவரி ஆறு தன் துன்பத்தை இராமனிடம் கூறாதா எனச் சீதைஏங்குகிறாள். ஓடுதல் ஆற்றின் இயல்பு. குளிர் பண்பும் குழையும் பண்பும் தாயன்பும் கொண்ட கோதாவரி தன் ஓட்டத்தின் போக்கைத் திசை மாற்றி இராமலக்குவரை நோக்கி ஓடித் தெரிவிக்கக் கூடாதாஎன்று பேதைச் சீதை அரற்றுகிறாள். 'புவியினுக்கு' எனும் பாடலில்இப்பண்பு முன்னரே கூறப் பெற்றதாம் (2732) ஆற்றைத் தாயாகப் படைப்பது கவிமரபு இதனைச் 'சரயு என்பது தாய் முலை அன்னது'(23) என வந்த தொடரால் அறியலாம். ஓதாதுணரும் நிலையை முன்னர் விராதன் 'அன்னம் ஆய் அருமறைகள் அறைந்தாய் நீ, அவை உன்னை முன்னம் ஆர் ஓதுவித்தார்' (2575) எனத் துதித்தலில் காணலாம். சீதை புலம்பியது போலவே இராமனும் அவளைக் காணாது புலம்பியது ஒப்பிடற்பாலது. (3731 - 3740).*

*மனன் - போலி.*

### *3397. 'முந்தும் சுனைகாள்! முழை வாழ் அரிகாள்!*
### *இந்தந் நிலனோடும் எடுத்த கை நால்-*
### *ஐந்தும், தலை பத்தும், அலைந்து உலையச்*
### *சிந்தும்படி கண்டு, சிரித்திடுவீர்.*

***முந்தும் சுனைகாள்** - என் முன்னே தோன்றும் மலை ஊற்றுக்களே!; **முழை வாழ் அரிகாள்** - மலைக் குகையில் வாழும் சிங்கங்களே!; **இந்தந் நிலனோடும்** - நானிருந்த இந்தத் தரையோடும்; **எடுத்த கை நால் ஐந்தும்** - பெயர்த்தெடுத்த இருபது கைகளையும்; **தலைபத்தும்** - பத்துத் தலைகளையும்; **அலைந்துலையச் சிந்தும்படி கண்டு சிரித்திடுவீர்** - (இராமன் அம்புகளால்) அலைவுற்றுச் சிதறி அழியச் சிந்திவிடுவதைப் பார்த்து நீங்கள் சிரிப்பீர்கள்!. சுனை - மலையிலுள் நீர் நிலையுமாம். தனக்கேற்பட்ட அவலத்தில் எதிர்ப்படும் சுனைகளையும் முழையில் வாழும்*

*சிங்கங்களையும் பார்த்து. இராவணன் அழிவதைக் கண்டு சிரியுங்கள் என்கிறாள் சீதை. தனக்குத் தீங்கிழைத்த இருபது கையும் பத்துத் தலையும் சிதற வேண்டும் என எண்ணுகிறாள் சீதை.*

*இந்தந் நிலனோடும் என பிற அடிகளிற்கேற்ப எதுகை பெற ஒற்று மிகுந்து வந்துளது.*

*இராவணன் ஏளனமும் சீதையின் இடித்துரையும்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3398. என்று, இன்ன பலவும் பன்னி,***
***இரியலுற்று அரற்றுவாளை,***
***'பொன் துன்னும் புணர் மென் கொங்கைப்***
***பொலன்குழாய்! போரில் என்னைக்***
***கொன்று, உன்னை மீட்பர்கொல், அம்***
***மானிடர்? கொள்க' என்னா,***
***வன் திண்கை எறிந்து நக்கான்-***
***வாழ்க்கைநாள் வறிது வீழ்ப்பான்.***

***என்று இன்ன பலவும் பன்னி** - இவ்விதம் பல சொற்களைச் சொல்லி; **இரியலுற்று அரற்று வாளை** - நிலைகெட்டு வாய் விட்டுப் புலம்பி அழும் சீதையை, (நோக்கி); **வாழ்க்கை நாள் வறிது வீழ்ப்பான்** - தனது வாழ்நாளை வீணாக அழித்துக் கொள்பவனானஇராவணன்; **பொன் துன்னும் புணர்மென் கொங்கைப் பொலன்குழாய்** - பொற்கலன்கள் அணிந்த நெருங்கிய மார்புகளைஉடைய அழகிய குண்டலமணிந்த பெண்ணே!; **அம்மானிடர் போரில் என்னைக் கொன்று உன்னை மீட்பர் கொல்** - அந்த மனிதர்கள் சண்டையில் என்னைக் கொன்று உன்னை மீட்டு விடுவார்களோ?; **கொள்க** - முடிந்தால் மீட்டுக் கொள்ளட்டும்; **என்னா வன்திண்கை எறிந்து நக்கான்** - என்று கூறி வலிய திண்ணிய கைகளைப் புடைத்துச் சிரித்தான்.*

*பன்னுதல் - பல முறை கூறல். வாழ்க்கை நாள் வறிது வீழ்ப்பான் - செயற்கரிய தவம் செய்து மூன்றரைக் கோடி ஆண்டுகளை வாழ்நாளாகப் பெற்றும் தீய செயல் புரிந்து அவற்றைவீணாகப் போக்குபவன். அத்தகைய தீயோர் அழிவது உறுதி என்பது பெறப்பட்டது. பொன் துன்னும் - பொன்னிறம் பொருந்திய என்றுமாம். கைஎறிதல் - இகழ்ச்சியிலும் வெகுளியிலும் தோன்றும் மெய்ப்பாடு. 'அங்கதன் அதனைக் கேளா, அங்கையோடு அங்கை தாக்கித்துங்கவன் தோளும் மார்பும் இலங்கையும் துளங்க நக்கான்' என வருவதை (7001) இத்துடன் ஒப்பிடலாம்.*

*கொல் - ஐயப்பொருளில் வந்த அசை.* *8*

***3399*வாக்கினால் அன்னான் சொல்ல, 'மாயையால்**
**வஞ்சமான் ஒன்று**
**ஆக்கினாய்; ஆக்கி, உன்னை ஆர்**
**உயிர் உண்ணும் கூற்றைப்**
**போக்கினாய்; புகுந்து கொண்டு போகின்றாய்;**
**பொருது நின்னைக்**
**காக்குமா காண்டி ஆயின், கடவல்**
**உன்தேரை' என்றாள்.***

***அன்னான் வாக்கினால் சொல்ல -** அந்த இராவணன் தன் வாயால் இந்தப் பழிமொழிகளைக் கூற; (சீதை அவனை நோக்கி); **மாயையால் வஞ்ச மான் ஒன்று ஆக்கினாய் -** மாயையினால் ஒரு பொய்ம்மானைக் கற்பித்தாய்; **ஆக்கி உன்னை ஆர்உயிர் உண்ணும் கூற்றைப் போக்கினாய் -** உனது அரிய உயிரை அழிக்கும் யமன் போன்ற இராமனை வேறு இடத்திற்குப் போகச் செய்தாய்; **புகுந்து கொண்டு போகின்றாய் -** இங்கு வந்து என்னைக் கவர்ந்து செல்கிறாய்; **பொருது நின்னைக் காக்குமா காண்டி ஆயின் -**போர் புரிந்து அவரிடமிருந்து உன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் வழியைஅறிவாயானால்; **உன்தேரை(க்) கடவல் என்றாள் -** உன் தேரை மேற்கொண்டு செலுத்தாதே என்று சொன்னாள்.*

வாக்கு - வாய், இடத்துத் தோன்றும் பொருள் இடத்திற்கு ஆயிற்று. பொய்ம்மானைக் காட்டி என் கணவனைப் போக்கினாய். என்னையும் அவரில்லாத போது கவர்ந்தாய். இத்தகைய இழிசெயல் செய்யாது தேரை நிறுத்தி நேரிடையாக *அவருடன் போர் செய்வாயாக எனச் சீதை கூறினாள்.*

உன்னை - உன்னுடைய என்ற பொருளில் வந்தது. இது உருபு மயக்கம். கடவல் - *எதிர்மறை ஏவல் வினைமுற்று.*

***3400. மீட்டும் ஒன்று உரைசெய்வாள்: 'நீ வீரனேல்,**
**"விரைவில் மற்று உன்**
**கூட்டம் ஆம் அரக்கர் தம்மைக் கொன்று,**
**உங்கை கொங்கை மூக்கும்**
**வாட்டினார் வனத்தில் உள்ளார், மானிடர்"**
**என்ற வார்த்தை**
**கேட்டும், இம் மாயம் செய்தது**
**அச்சத்தின் கிளர்ச்சி அன்றோ?'***

***நீ வீரனேல் -** நீ உண்மையான வீரன் என்றால்; **உன் கூட்டம் ஆம் அரக்கர் தம்மை விரைவில் கொன்று -** உன்னுடைய இனத்தாராம் அரக்கர்களை மிகக் குறுகிய காலத்தில் கொன்று; **உங்கை கொங்கை மூக்கும் வாட்டினார் வனத்தில் உள்ளார் மானிடர் -** உன்னுடைய தங்கையாம்சூர்ப்பணகையின் முலையையும் மூக்கையும் வெட்டியவர் காட்டிலேஉள்ளவராம் மனிதர்கள்; **என்ற வார்த்தை கேட்டும் -** என்று இச்*

*சொற்களைக் கேட்டும்;* ***இம்மாயம் செய்தது அச்சத்தின் கிளர்ச்சி அன்றோ -*** *இந்த மாயையைச் செய்தது பயத்தின் மிகுதியால் அல்லவா என்று;* ***மீட்டும் ஒன்று உரை செய்வாள் -*** *(அந்த இராவணனைப் பார்த்து) மறுபடியும் ஒரு வார்த்தை சொல்வாள்.* ***மற்று-*** *அசை.*

*விரைவில் கொல்லல் - கரதூடணரையும் எண்ணற்ற போர் வீரரையும் ஒரு முகூர்த்த நேரத்தில் இராமன் கொன்றதைக் குறிப்பிட்டதாம். சூர்ப்பணகையின் உறுப்புகளை அறுத்தது இராவணனுக்கு அவமானம் தரும் செயலாகும். இவ்விரு செயல்களையும் செய்த மானிடரை நேரில் மோதி எதிர்த்துப் போர் செய்யாமல் வஞ்சனையாக என்னைக் கவர்ந்தது அச்சத்தின் விளைவு எனச் சீதை இராவணனின் வீரத்தின் குறையைச் சுட்டினாள். 'வீரனேல்' என்ற சொல் இராவணன் வீரன் அல்லன் என்ற கருத்தினைக் குறித்தது. வீரனுக்கு வஞ்சகச் செயல் ஒவ்வாது. பின்னரும் இராவணனை நோக்கிச் சீதை 'உங்கை மூக்கும் உம்பியர்தோளும் தாளும் சின்னபின்னங்கள் செய்த அதனை நீ சிந்தியாயோ? (5202) எனச் சுந்தர காண்டத்தில் கூறுவதும் நோக்கற்குரியது.*

*மற்று - அசைச்சொல்.*

*அரக்கன் மறுமொழியும் சீதையின் எதிர்மொழியும்*

***3401. மொழிதரும் அளவில், 'நங்கை! கேள் இது;***
***முரண் இல் யாக்கை***
***இழிதரு மனிதரோடே யான் செரு***
***ஏற்பன் என்றால்,***
***விழி தரு நெற்றியான்தன் வெள்ளி***
***வெற்பு எடுத்த தோட்குப்***
***பழி தரும்; அதனின் சாலப் பயன் தரும்,***
***வஞ்சம்' என்றான்.***

***மொழிதரும் அளவில் -*** *(இவ்வாறு சீதை) சொன்ன அளவில்; (இராவணன் அவளை நோக்கி);* ***நங்கை -*** *பெண்ணே!;* ***இது கேள் -*** *இதனைக் கேட்பாயாக;* ***முரண் இல் யாக்கை இழிதரு மனிதரோடே யான் செரு ஏற்பன் என்றால் -*** *வலியற்ற உடலை உடைய இழிவான மனிதர்களுடன் நான் போர் செய்ய முனைந்தால்;* ***விழிதரு நெற்றி யான் தன் வெள்ளி வெற்பு எடுத்த தோட்கு -*** *நெற்றியில் கண்ணுடைய சிவபெருமானின் கயிலை மலையை எடுத்த தோள்களுக்கு;* ***பழி தரும் -*** *பழிப்பை உண்டாக்கும்;* ***அதனின் வஞ்சம் சாலப்பயன் தரும் என்றான் -*** *அதைக் காட்டிலும் இந்த வஞ்சனைச் செயல் மிகுந்த பயனைக் கொடுக்கும் எனக் கூறினான்.*

*வலிமையுள்ள இராவணன் வலிமையற்ற மனிதர்களோடு போரிடுவது பழியைத்தரும். அதுமட்டுமன்று; சிவனின் கயிலை மலையை எடுத்ததோள்களின் பெருமை குலையும். எனவே, வஞ்சித்துச் சீதையைக் கவர்ந்தது நியாயமாகும் எனக் கூறுகிறான். வஞ்சனையானது பழியை விட ஏற்கத்தக்கது என நியாயம் போல் பேசுகிறான் இராவணன். இவ்வஞ்சனையால் தனக்குப் பழியில்லை. ஆனால் அந்த*

*மானுடர்க்குத் தீங்கு விளைவிக்கும் என வாதிட்டான் அவன்.*

***3402. பாவையும் அதனைக் கேளா, 'தம்***
***குலப் பகைஞர்தம்பால்***
***போவது குற்றம்! வாளின் பொருவது***
***நாணம் போலாம்!***
***ஆவது, கற்பினாரை வஞ்சிக்கும்***
***ஆற்றலே ஆம்!***
***ஏவம் என், பழிதான் என்னே,***
***இரக்கம் இல் அரக்கர்க்கு? என்றாள்.***

***பாவையும் அதனைக்கேளா -*** *சித்திரப் பதுமை போன்ற அழகுள்ள சீதையும் இராவணனின் அம் மொழியைக் கேட்டு; (அவனைப் பார்த்து);* ***தம் குலப் பகைஞர் தம்பால் போவது குற்றம்-*** *தமது குலத்தின் பகைவரிடத்துப் போரிடச் செல்வது குற்றமாம்;* ***வாளின் பொருவது நாணம் போலாம் -*** *அவர்களுடன் வாளேந்திப் போரிடுவது நாணம் தருவது ஆகும் போலும்;* ***கற்பினாரை வஞ்சிக்கும் ஆற்றலே ஆவது ஆம் -*** *கற்புடைய மகளிரை வஞ்சகமாய்க் கவரும் வலிமையே செய்யத்தக்கது ஆகும் போலும்;* ***இரக்கம் இல் அரக்கர்க்கு -*** *கருணை இல்லாத இராக்கதர்க்கு;* ***ஏவம் என் பழிதான் என்னே என்றாள் -*** *குற்றம் என்பது என்ன நிந்தனை என்பது எதுவோ எனக் கேட்டாள். பாவை - கண்ணிற் பாவைக்குமாம். இது உவமை ஆகுபெயர். வாள் என்பது படைக்கலன்களுக்குப் பொதுப்பெயராய் வந்தது. ஏவம் - குற்றம். எவ்வம் என்பதன் விகாரம் குற்றத்திற்கும் பழிக்கும் இரக்கமற்ற அரக்கர் காட்டும் மதிப்பு மற்றவர்களை விட வேறு வேறு மதிப்புடையது போலும் எனச் சீதை எள்ளிக் கூறினாள். அரக்கர் வஞ்சித்தற்கே உரியவர் என 'வஞ்சிக்கும் ஆற்றலே ஆம்' என்ற தொடர்க்குப் பொருள் கூறலாம்.*

## *சடாயு உயிர் நீத்த படலம்*

*அறத்தின் நாயகியை மாரீச மானால் வஞ்சித்து இராவணன் எடுத்துச் சென்றபொழுது கழுகரசனாகிய சடாயு அவனைத் தடுத்துப் போரிட்டு வலி சிதைத்து. இறுதியில் அவனது சந்திரகாசமெனும் தெய்வ வாளால் சிறகு அறுபட்டு விழுந்தான். அவன் அப்போது இறந்து படவில்லை; இராமலக்குவருக்குச் செய்தி அறிவிக்க அரிதின் உயிர் தாங்கி இருந்தான். இச் செய்தியை அவன் இராமலக்குவருக்குக் கூறிய பின்னர்த் தன் உயிரை விட்டான். தந்தையின் நண்பனுக்குத் தசரத ராமன் மாளாத சோகப் புலம்பலுடன் நீர்க் கடன் செய்தான் என்ற செய்திகள் இப்படலத்தில் கூறப்படுவதால், இது சடாயு உயிர் நீத்த படலம் என்று பெயர் பெற்றது.*

*சடாயு இராம கைங்கர்யத்தில் ஈடுபட்டுத் "தன் உயிர் புகழ்க்கு விற்றவன்" ஆகையால் பக்தியின் அடிப்படையில் இப்படலம் "சடாயு மோட்சப் படலம்" என்று பெயர் பெறும் என்ற கருத்தும் உண்டு. இதைச் "சடாயு வதைப்படலம்" என்று குறிப்பிடுவதும் உண்டு, கவிப்பெருமகன் கம்பனது திருவுள்ளத்தின்படி பாவச் சார்பாளரின் அழிவே "வதை" என்ற சொல்லால் குறிக்கத்தக்கதாகும். அறத்தின் நாயகன் அறந்தலை நிறுத்த நடத்தும் அலகிலா விளையாட்டில் பட்டு அழிபவரே "வதை" என்ற சொல்லுக்கு உரியவர் ஆவர். அனுமன் வலியால் அழியும் பாவச் சின்னங்களின் அழிவும் வதை எனவே படும். சுருங்கச் சொன்னால் அறந்தலை நிறுத்த அறச் சார்பாளர் தீமையை அழிப்பதையே கவிஞர் பெருமான் "வதை" எனற சொல் சார்த்தித் தலைப்பிட்டு விளக்கியுள்ளார். வாலி வதைப்படலம், அக்க குமாரன் வதைப் படலம், கும்பகருணன் வதைப் படலம், அதிகாயன்வதைப் படலம், இந்திர சித்து வதைப்படலம், இராவணன் வதைப் படலம் போன்று வரும் பல படலப் பெயர்கள் மேல் கூறிய கருத்திற்கு அரண் சேர்த்தலை எண்ணுக. எனவே, அறத்துணைவனாகவும், கைங்கர்ய பாவனாகவும் உள்ள சடாயுவின் இறப்பைக் குறித்து வரும் படலம் "வதை" என்ற அறச்சார்பற்றவர்களுக்கு வந்துள்ளது போல் கவிஞரால் பெயரிடப்பட்டிருக்க முடியாது எனத் திண்ணமாய்க் கூறலாம். எனவே, இப்படலத்தின் பெயர் சடாயு உயிர் நீத்த படலம் என இருத்தலே இராமகாதையின் அறநாட்டப் போக்குக்கு ஒத்து அமையும் என்க.*

*இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லும்போது அவள் இரக்கமில் அரக்கர்க்கு குற்றம் எது, பழிதான் எது என்று கலங்கினாள். அவ்வபயச் சொல் கேட்ட சடாயு "எங்கடா போவது எங்கே" என எதிர் வந்து இராவணனைத் தடுத்தான். இருவருக்கும் போர் மூண்டது சடாயு இராவணனது கொடி, குண்டலம், திருமுடி, கவசம், வில் முதலியவற்றையும் தேரையும், தேர்ப்பாகனையும் சிதைத்து அழித்தான். சினம் கொண்ட இராவணன் மாற்றருந் தெய்வ வாளால் சடாயுவின் சிறகுகளை வெட்டி வீழ்த்தினான். சீதை அது கண்டு புலம்பித் துன்புற்றாள். அரக்கன் சீதையை இலங்கைக்குக் கொண்டு சென்று தொடற்கரும் அரக்கியர் காவல் நடுவே வைத்தான்.*

*'பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும் நிற்றியோ இளையோய்'என வைதேகி வைத வார்த்தையை மனத்தில் தேக்கி, இலக்குவன் இராமபிரானைத் தேடிச் சென்றான். தமையனைக் கண்டு தான் வந்த காரணத்தைச் சொன்னான். இருவரும் சீதை இருந்த*

*பர்ண சாலை நோக்கி விரைந்து வந்தனர். உடல் இருக்க உயிர் பிரிந்தது போல் பர்ணசாலை இருந்த இடத்தையும் சானகி இல்லாமையையும் கண்டனர். இருவரும் அவளைத் தேடிச் சென்றனர். அவ்வழியில் கொடி, வில், கவசம் முதலியன விழுந்து கிடத்தல் கண்டு, அதைத் தொடர்ந்து சென்று இறுதியில் சடாயு விழுந்து கிடந்த இடம் வந்தனர். இராமன்பலவாறு புலம்புதலைக் கேட்ட குற்றுயிராகக் கிடந்த சடாயு நடந்ததையெல்லாம் ஒருவாறு கூறி உயிர் நீத்தான். இராமன் சோகம் மிகக்கொண்டு புலம்பினான். அவனை இலக்குவன் தேற்றினான். இறுதியில் இராமன் சடாயுவுக்கு நீர்க்கடன் செய்து முடித்த போது சூரியன் மறைந்தத. இவையே இப்படலத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் ஆகும்.*

*சானகியைக் கவர்ந்து செல்லும் இராவணனைச் சடாயு எதிர்த்தல்*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3403.** **என்னும் அவ் வேலையின்கண், 'எங்கு***
***அடா போவது?' என்னா,***
***'நில் நில்' என்று, இடித்த சொல்லன்,***
***நெருப்பு இடைப் பரப்பும்கண்ணன்;***
***மின் என விளங்கும் வீரத்***
***துண்டத்தன்; மேரு என்னும்***
***பொன் நெடுங் குன்றம் வானில் வருவதே***
***பொருவும் மெய்யான்;***

***என்னும் அவ்வேலையின்கண் -** என்று (சீதை) சொல்லிய அந்தச் சமயத்தில்; **எங்கு அடா போவது -** எங்கே அடா (என்னைத் தப்பி நீ) போவது; **என்னா -** என்று; **நில்நில் என்று இடித்த சொல்லன் -** நில் நில் என்று இடியோசை போல் ஒலிக்கும் உரத்த சொற்களை உடையவனும்; **நெருப்பு இடைபரப்பும் கண்ணன் -** சினத் தீயைத் தம்மிடம் பரவச் செய்த கண்களை உடையவனும்; **மின் என விளங்கும் வீரத்துண்டத்தன் -** மின்னலைப் போல் (ஒளி) விளங்கும் வீரவலி பொருந்திய அலகை உடையவனும்; **மேரு என்னும் பொன் நெடுங்குன்றம் -** மேரு என்று கூறுகிற பொன்னால் ஆகிய பெரிய குன்று; **வானில் வருவதே பொருவும் மெய்யான் -** வானத்தில் பறந்து வருவது போன்ற (பேருடம்பினை) உடையவனும் - ஆகிய ("எருவையின் மன்னன்" என்ற 6ஆம் பாடலில் பொருள் முடிக்க).*

*இப்பாடலில் சடாயுவின் கண், அலகு, மேருமலை போன்ற உடம்பு ஆகியவை கூறப்பட்டன. என்னும் அவ்வேலையின் கண் என்பது, முன் படல இறுதிப் பாடற் கருத்தை உட்கொண்டு கூறியது.இப்பாடல் முதல் வரும் ஆறு பாடல்கள் பல பாட்டு ஒருவினை கொள்ளும் குளகம். வேலை - வேளை, சொல்லன், கண்ணன், துண்டத்தன், மெய்யான் என்னும் குறிப்புவினைகள் "எருவையின் மன்னன வந்தனன்" என்னும் ஆறாம்செய்யுளில் முடியும். வீரத்துண்டத்தன் - வலிய அலகினை உடையவன்என்க.*

*3404.* ***பாழி வன் கிரிகள் எல்லாம் பறித்து,***
***எழுந்து, ஒன்றோடு ஒன்று***
***பூழியின் உதிர, விண்ணில் புடைத்து,***
***உறக் கிளர்ந்து பொங்கி,***
***ஆழியும் உலகும் ஒன்றாய் அழிதர,***
***முழுதும் வீசும்***
***ஊழி வெங் காற்று இது என்ன, இரு***
***சிறை ஊதை மோத,***

***பாழிவன் கிரிகள் எல்லாம் -*** *பெரு வலி உடைய மலைகள் எல்லாம்;* ***பறித்து எழுந்து -*** *வேருடன் பறிக்கப்பட்டு மேல் எழுந்து;* ***ஒன்றோடு ஒன்று விண்ணில் புடைத்து -*** *ஒன்றுடன் ஒன்று ஆகாயத்தில் மோதி;* ***பூழியின் உதிர -*** *புழுதி போலப் பொடியாய்ச் சிந்திச் சிதற;* ***உறக் கிளர்ந்து பொங்கி -*** *மிகுதியாக எழுந்து பொங்கி;* ***ஆழியும் உலகும் ஒன்றாய் அழிதர -*** *கடலும் உலகமும் ஒன்றாகி அழிந்து பட;* ***முழுதும் வீசும் ஊழி வெங்காற்று -*** *உலகம் முழுவதும் வீசும் ஊழிக் காலத்துக் கொடிய காற்று;* ***இது என்ன -*** *இது தான் என்று சொல்லுமாறு;* ***இரு சிறை ஊதை மோத -*** *(தன்) இரு சிறகுகள் (அடித்தலால்) (உண்டாகும்) பெருங்காற்று வீச.*

*சடாயு இராவணனை எதிர்த்துத் தடுக்க வரும்போது ஊழிக் காலத்துப் பெருங்காற்றுப் போல் இரு சிறை ஊதை மோதியதால் மலைகள் நிலை பெயர்ந்து ஒன்றோடு ஒன்று தாக்கிப் பொடிபட்டன.கடலும் பூமியும் ஒன்றாகி அழிந்து பட்டன என்றவாறு. பாழி - வலிமை பூழி - பொடி, புழுதியுமாம். சிறை - சிறகு, ஊதை - காற்று. பாழிவன் - ஒரு பொருட் பன்மொழி.*

*கலிவிருத்தம்*

*3405.* ***சாகை வன் தலையொடு மரமும் தாழ, மேல்***
***மேகமும் விண்ணின் மீச் செல்ல, 'மீமிசை***
***மாக வெங் கலுழன் ஆம் வருகின்றான்' என,***
***நாகமும் படம் ஒளித்து ஒதுங்கி நையவே.***

*(சடாயுவின் சிறகில் இருந்து வீசும் பெருங்காற்றினால்)* ***மரமும் -*** *மரங்களும்;* ***சாகை வன் தலையொடு தாழ -*** *கிளைகளோடு வலியதலைப்புறத்துடன் (பூமியில்) படியவும்;* ***மேல் மேகமும் -*** *மேல் இடத்தில் உள்ள மேகங்களும்;* ***விண்ணின் மீச் செல்ல -*** *வானத்தின் மேல் ஒதுங்கிப் போகவும்;* ***மீமிசை மாக வெங் கலுழன் ஆம் வருகின்றான் என -*** *மிக உயர்ந்த வான் வழியில் பெருமை உடைய கொடிய கருடன் வருகின்றான் என்று எண்ணி;* ***நாகமும் படம் ஒளித்து -*** *நாகங்களும் படத்தை ஒடுக்கிக்கொண்டு;* ***ஒதுங்கி நையவே -*** *மறைந்து பதுங்கி வருந்த.*

*சடாயுவின் சிறகில் இருந்து வரும் பெருங்காற்றால் மரங்கள் கிளைகளோடும் தலைப்புறத்துடனும் விழவும், வானத்தில் செல்லும் மேகம் மேலும் மேலே*

*செல்லவும், கருடன் வருகின்றான் எனப் பாம்புகள் படம் குறைந்து நையவும், வந்தனன் என்க. சாகை - கிளை, மாகம் - பெருமை, ஒளித்து - ஒடுக்கி, கலுழன் - கருடன் மீமிசை - ஒருபொருட் பன்மொழி.*

***3406. யானையும், யாளியும்,***
***முதல யாவையும்,***
***கான் நெடு மரத்தொடு***
***தூறு கல் இவை***
***மேல் நிமிர்ந்து, இரு சிறை***
***விசையின் ஏறலால்,***
***வானமும் கானமும்***
***மாறு கொள்ளவே.***

***யானையும் யாளியும் முதல யாவையும் -*** *யானைகளும் யாளிகளும் முதலாகிய எல்லா மிருகங்களும்;* ***கான் நெடு மரத்தொடு-*** *காட்டில் உள்ள மரங்களும்;* ***தூறு கல் இவை -*** *புதர்களும்கற்களும் ஆகிய இவையும்;* ***இரு சிறை விசையின் மேல் நிமிர்ந்து ஏறலால் -*** *இரண்டு சிறகுகள் வீசும் காற்றின் (வேகத்தால்) (நிலை கெட்டு) மேல் ஏறி வானத்தில் நிரம்புதலால்;* ***வானமும் கானமும் மாறுகொள்ளவே -*** *ஆகாயமும் காடுகளும் ஒன்றொடு ஒன்று மாறாடி நிற்கவும்... வந்தனன்"*

*யானை யாளி முதலிய மிருகங்களும் காட்டில் உள்ளமரங்களும், புதர்களும், கற்களும் சடாயுவின் இரு சிறகுகள் வீசும்காற்றின் வேகத்தால் நிலை கெட்டு ஆகாயமும் காடுகளும் ஒன்றொடுஒன்று மாறு கொண்டு நின்றன என்றவாறு. தூறு - புதர், முதல -குறிப்புப் பெயரெச்சம்.*

***3407. 'உத்தமன் தேவியை, உலகொடு***
***ஓங்கு தேர்***
***வைத்தனை! ஏகுவது***
***எங்கு? வானினோடு***
***இத்தனை திசையையும் மறைப்பென்,***
***ஈண்டு' எனா,***
***பத்திரச் சிறைகளை***
***விரிக்கும் பண்பினான்;***

***உத்தமன் தேவியை -*** *கல்யாண குணங்கள் நிறைந்தஉத்தமனாகிய இராமனது மனைவியை;* ***உலகொடு ஓங்கு தேர்வைத்தனை -****நிலத்தொடுபெயர்த்து உயர்ந்த தேரில் வைத்தவனாய்;* ***எங்கு ஏகுவது -****நீஎங்குப் போக முடியும்;* ***வானினோடு இத்தனை திசையையும் -****வானத்தோடு (மற்றுமுள்ள) இத்தனை திசைகளையும்;* ***ஈண்டுமறைப்பென் எனா -*** *இப்பொழுதே மறைத்து விடுவேன் என்றுசொல்லி;* ***பத்திரச் சிறைகளை விரிக்கும் பண்பினான் -*** *பாதுகாப்புச்(செய்ய உரிய) சிறகுகளை விரித்துப்*

*பரப்புகிற உயர் பண்புஉடையவனாய் எருவையின் மன்னன் வந்தனன்" எனப் பொருள்முடிக்க.*

*'உத்தமன் தேவியை உலகொடு பெயர்த்துக் கொண்டு தேரில்வைத்து நீ போவது எங்கே' என்று கூறி, தான் வானையும்திசைகளையும் இப்போதே மறைப்பவன் போலத் தன் பாதுகாப்பானசிறகுகளை விரித்தபடி சடாயு வந்தனன் என்க. உலகொடு என்பதைத்தேருக்கு ஆக்கி உலகத்தோடொப்ப ஓங்கு தேர். "கீண்டான் நிலம்;யோசனை கீழொடு மேல்" (3390), "கொண்டான் உயர் தேர் மிசை"(3391) என்றும், "தீண்டுற்றிலன் என்றுஉணர் சிந்தையினான். (3409)என்றும் முன்னும் பின்னும் கவிஞர் குறிப்பிட்டுள்ளதால் ஈண்டுநிலத்தொடு என்பதே பொருந்தும் என்க. பத்திரம் - பாதுகாப்பு,வைத்தனை - முற்றெச்சம்.*

***3408. வந்தனன்-எருவையின் மன்னன்;***
***மாண்பு இலான்***
***எந்திரத் தேர் செலவு***
***ஒழிக்கும் எண்ணினான்;***
***சிந்துரக் கால், சிரம்,***
***செக்கர் சூடிய***
***கந்தரக் கயிலையை***
***நிகர்க்கும் காட்சியான்.***

***மாண்பு இலான் -*** *நல்ல பண்புகள் இல்லாதவனாகிய இராவணனது;* ***எந்திரத்தேர் -*** *எந்திரங்கள் பொருத்தப்பட்ட தேரின்;****செலவு ஒழிக்கும் -*** *செல்லுதலைத் தடுக்கும்;* ***எண்ணினான் -*** *கருத்தினைக் கொண்டவனும்;* ***சிந்துரக் கால்சிரம் -*** *சிந்தூரம் போல் மிகச் சிவந்த கால்களையும் தலையையும்;* ***செக்கர் சூடிய கந்தரம் -****செவ்வானத்தின் நிறத்தைக் கொண்ட கழுத்தினையும் உடையவனாகி;* ***கயிலையை நிகர்க்கும் காட்சியான் -*** *கைலாய மலையை ஒக்கின்ற தோற்றத்தை உடையவனாய்;* ***எருவையின் மன்னன் வந்தனன் -*** *கழுகுகளுக்கு அரசனாகிய சடாயு, (இராவணனுக்கு எதிரில்) வந்து சேர்ந்தான்.*

*சடாயு இராவணன் தேர் செல்லுதலைத் தடுக்கும் கருத்துடன் சிவந்த கால்களோடும் தலையோடும் செக்கர் வானம் போன்ற கழுத்தோடும் கைலாய மலையை ஒக்கின்ற தோற்றத்தோடும் இராவணன் எதிரில் வந்தனன். எந்திரம் - பொறி; சக்கரம் என்றும் கூறுவர். சிந்துரம் - செந்தூரம் சிவப்பு நிறம் உடையது. கந்தரம் - கழுத்து. என்னும் அவ்வேலையின் கண் சொல்லன், கண்ணன், துண்டத்தன், மெய்யன், கிரிகள் பூழியின் உதிர, ஆழியும் உலகும்ஒன்றாய் அழிதர, இரு சிறை ஊதை மோத, மரமும் தாழ, மேகம் விண்ணின் மீச் செல்ல, நாகம் ஒதுங்கி நைய, வானமும் கானமும் மாறு கொள்ள, திசையையும் மறைப்பென் எனா, எண்ணினான். காட்சியான் - எருவையின் மன்னன் வந்தனன் எனக் குளகமாக வந்த ஆறு பாடல்களுக்கும் முடிபு கொள்க.*

*சடாயு இராவணனுக்கு அறிவுரை கூறல்*

***3409. ஆண்டு உற்ற அவ் அணங்கினை,***
***'அஞ்சல்' எனா,***
***தீண்டுற்றிலன் என்று***
***உணர் சிந்தையினான்,***
***மூண்டுற்று எழு வெங்***
***கதம் முற்றிலனாய்,***
***மீண்டுற்று,***
***உரையாடலை மேயினனால்:***

***ஆண்டு உற்ற*** - *அந்த இடத்திற்கு வந்த;* ***அவ் அணங்கினை-*** *அந்தச் சீதையை;* ***அஞ்சல் எனா*** - *(நீ) அஞ்சாதே என்று (சடாயு) கூறி;* ***தீண்டுற்றிலன் என்று உணர்சிந்தையினான்*** - *(இராவணன் அவளைத்) தொட்டான் இல்லை என்று உணர்ந்த மனத்தினை உடையவனாய்;* ***மூண்டு உற்று எழு வெங்கதம் முற்றிலனாய்*** - *பொங்கி எழுகின்ற கொடிய சினம் முதிராதவனாய்;* ***மீண்டுற்று*** - *மீண்டும்;* ***உரையாடலை மேயினன்*** - *(இராவணனை நோக்கி) உரையாடலைத் தொடங்கினான்.* ***ஆல்*** - *ஈற்றசை.*

*சீதைக்கு 'அஞ்சல்' என அபயம் கூறிய சடாயு, இராவணன் அவளைத் தீண்டவில்லை என்பதை உணர்ந்து சினத்தை அடக்கிக்கொண்டு அவனை நோக்கிப் பேசத் தொடங்கினான். தீண்டுற்றிலன் - தீண்டினான் இல்லை, கதம் - சினம். மீண்டுற்று - மீண்டும் இப் படலத்தின் முதல் பாடலில் "எங்கு அடா போவது" "நில்நில் என்று இடித்த சொல்லன்" என்று சடாயு இராவணனை நோக்கிக் கூறியதாக வந்துள்ளதால் இங்குச் சடாயு கூறுவதை மீண்டுற்று உரையாடலை மேயினனால் என்றார்.*

***3410. 'கெட்டாய் கிளையோடும்; நின்***
***வாழ்வை எலாம்***
***சுட்டாய்; இது என்னை***
***தொடங்கினை? நீ***
***பட்டாய் எனவே***
***கொடு பத்தினியை***
***விட்டு ஏகுதியால்,***
***விளிகின்றிலையால்.***

***கிளையோடும் கெட்டாய்*** - *(உன்) சுற்றத்தவருடன் கெட்டுப் போனாய்;* ***நின் வாழ்வை எலாம் சுட்டாய்*** - *நினது வாழ்வு முழுவதையும் எரித்து அழித்துக் கொண்டாய்;* ***நீ இது என்னை தொடங்கினை?*** - *நீ (இத்தகு தகுதியில் செயலை) ஏன்? தொடங்கினாய்;* ***பட்டாய் எனவே கொடு*** - *(நீ) இறந்து பட்டாய் என்றே எண்ணிக் கொண்டு;* ***பத்தினியை விட்டு ஏகுதி*** *-இராமனது (கற்புக் கொழுந்தாம்) மனைவியை விட்டுச் செல்வாய்;* ***விளிகின்றிலையால்*** - *(அவ்வாறு செய்தால்) இறக்க மாட்டாய்.*

*உன் செயலால் உன் உறவினரும் நீயும் முழுதும் அழிந்துபடுவீர்கள். எனவே, கற்பின் கனலியை விட்டு உயிர் உய்ந்து போக என்றவாறு. சுட்டாய் - எதிர்காலம் இறந்த காலமாய் வந்த காலவழுவமைதி. எலாம் - இடைக்குறை. கொடு - இடைக்குறை, ஆல்*

*இரண்டும் அசை. இப்பாடலில் சடாயு இராவணனின் அழிவையும் சுற்றத்தவர் அழிவையும் கூறி அச்சம் உண்டாக்கி அவன் செயலைத் தடுக்க முனைதலை உணர்க.*

***3411. 'பேதாய்! பிழை செய்தனை;***
***பேர் உலகின்***
***மாதா அனையாளை***
***மனக்கொடு, நீ***
***யாது ஆக நினைத்தனை?***
***எண்ணம் இலாய்?***
***ஆதாரம் நினக்கு இனி***
***யார் உளரோ?***

***பேதாய் -*** *அறிவற்றவனே;* ***பிழை செய்தனை -*** *நீ பெருந்தவறு செய்துவிட்டாய்;* ***பேர் உலகின் மாதா அனையாளை -*** *(இப்) பெரிய உலகத்தில் உள்ள உயிர்களுக்கெல்லாம் தாய் போல் தலையளி செய்யும் சீதையை;* ***நீ யாது ஆக மனக்கொடு நினைத்தனை -*** *நீ என்ன என்று மனத்தில் நினைத்துக் கொண்டாய்;* ***எண்ணம் இலாய் -*** *சிந்தனை இல்லாதவனே;* ***இனி நினக்கு ஆதாரம் யார் உளரோ -*** *இனி உனக்குப் பற்றுக் கோடாக யாவர் உளர், (ஒருவரும் இல்லை என்றபடி).*

***3412'உய்யாமல் மலைந்து, உமர் ஆர் உயிரை***
***மெய்யாக இராமன் விருந்திடவே,***
***கை ஆர முகந்து கொடு, அந்தகனார்,***
***ஐயா! புதிது உண்டது அறிந்திலையோ?***

***ஐயா -*** *ஐயனே;* ***உமர் உய்யாமல் மலைந்து -*** *உம் இனத்தவர் ஆகிய கர தூடணர் முதலியோர் தப்பிப் பிழைக்க முடியாதபடி போர் செய்து;* ***இராமன் ஆர் உயிரை மெய்யாக விருந்திட -*** *இராமன் (அவர்களது) அருமையான உயிரைத் (தனக்கு) உண்மையான விருந்தாகக் கொடுக்க;* ***அந்தகனார் கை ஆரமுகந்துகொடு -*** *யமனார் கை நிறைய வாரி எடுத்து;* ***புதிது உண்டது அறிந்திலையோ-*** *புதிதாக (விருந்து) உண்டதை (நீ) அறியவில்லையோ?;* ***ஏ -*** *அசை.*

*இராமன் உன் இனத்தவரை ஒருவனாய் நின்று அழித்தமை கண்டும் ஏன் இச்செயல் செய்தாய் என்கிறான் சடாயு. புதிது உண்டது - பல நாள் அரக்கர் தலைவனாம் இராவணனுக்கு அஞ்சி அரக்கர் உயிரைக் கவராத யமன் இராமன் உதவியால் அவர்கள் உயிரைக் கவர்ந்தமை பற்றி இவ்வாறு கூறினார். உமர் - உம் இனத்தவர் ஆகிய கர தூடணர் முதலியோர். அந்தகனார் - எமன். நீ உன் பற்றுக் கோட்டைப் பறி கொடுத்து விட்டாய் என்றபடி. மூவுலகும் பூத்தானை நாபிக் கமலத்துப் பூத்த மாலின் மனைவியாம்திருமகளின் திருவவதாரம் ஆகலின் சீதையைப் பேர் உலகின் மாதா என்றார். திருமால் குற்றமுடையார் மாட்டுச் சினங்கொள்ளுங்கால் புருஷகாரமாக நின்று இன் சொல் கூறிச் சினம் தணிப்பிக்க வல்ல பிராட்டிக்கே அபராதம் எண்ணினை எனவே நினக்கு ஆதாரம் யாரும் இல்லை என்றபடி. ஆதாரம் - பற்றுக்கோடு. மனக்கொடு - மனம் + அத்து + கொடு என அத்துச் சாரியை தொக்க மனக்கொடு என்று ஆயிற்று.*

*3413. 'கொடு வெங் கரி கொல்லிய வந்ததன்மேல்*
***விடும் உண்டை கடாவ விரும்பினையே?***
***அடும் என்பது உணர்ந்திலை ஆயினும், வன்***
***கடு உண்டு, உயிரின் நிலை காணுதியால்!***

***கொடு வெங்கரி கொல்லிய வந்ததன் மேல் -*** *(உன்னைக்) கொல்வதற்காக வந்த கொடுமையான சினம் கொண்ட யானையின் மீது;* ***விடும் உண்டை கடாவ விரும்பினையே -*** *வீசும் (மண்) உருண்டையைச் செலுத்த விரும்பினாயோ?;* ***அடும் என்பது உணர்ந்திலை ஆயினும் -*** *கொல்லும் என்பதை அறிந்திலை என்றாலும்;* ***வன்கடு உண்டு -*** *கொடுமையான நஞ்சினை உண்டு;* ***உயிரின் நிலை காணுதியால் -*** *உயிர் ஆனது (உடலில்) நிலை பெற்று இருப்பதை (நீ) காண்பாயா? என்றபடி. உன் செயல் சினம் கொண்டு கொல்ல வரும் யானையின் மீது மண்ணுருண்டையை வீசுவது போலவும், வலிமையான கொல்லும் தன்மை உள்ள நஞ்சு கொல்லும் என்பதை உணராமல் அதை உண்டு உயிர் பிழைக்கலாம் என எண்ணுவது போலவும் உள்ளது. அடும் என வந்த யானையின் மீது உண்டை எறிந்தால் அதன் சினம் மிகுதல் போல அரக்கராம் பகை முடிக்க வந்த இராமனின் சினத்தை மிகுதிப்படுத்த நீ இச் செயல் செய்தனை போலும். மேலும் விடம் கொல்லும் என ஒருவன் அறியாது உண்டாலும் அது அவனைக் கொல்லுமாறு போலப் பிராட்டியாம் கற்புக் கனலியின் திட்டியின் விடம் அன்ன கற்பு உன்னை அழித்தே தீரும் என்பதாம். உண்டை - மண்ணுருண்டை. வன் கடு - கொடிய நஞ்சு, கொல்லிய - செய்யிய என்னும் வாய்பாட்டு வினைஎச்சம். ஆல் - அசை.*
*1*

*3414'****எல்லா உலகங்களும், இந்திரனும்,***
***அல்லாதவர் மூவரும், அந்தகனும்,***
***புல்வாய் புலி கண்டதுபோல்வர் அலால்;***
***வில்லாளனை வெல்லும் மிடுக்கு உளரோ?***

***எல்லா உலகங்களும் -*** *மூவுலகில் உள்ளவர் அனைவரும்;* ***இந்திரனும் -*** *தேவர் தலைவன் ஆகிய இந்திரனும்;* ***அல்லாதவர் மூவரும் -*** *இவர்கள் அல்லாது (உயர்ந்த) மும்மூர்த்திகளும்;* ***அந்தகனும் -*** *யமனும்;* ***புல்வாய் புலிகண்டது போல்வர் அலால் -*** *(இந்த இராமலக்குவரைக் கண்டபோது) மான்கள் புலியைக் கண்டது போல் (அஞ்சி நடுக்கம் அடைவரே) அல்லாமல்;* ***வில்லாளனை வெல்லும் மிடுக்கு உளரோ -*** *வில்தொழில் வித்தகனாகிய இராமனை வெல்லுதற்கு உரிய வலிமை உடையர் ஆவரோ? ஆகார்.*

*உலகத்தவரும், இந்திரனும், மூவரும் எமனும் வில்லாளனைக் கண்டு மான் புலியைக் கண்டது போல் அஞ்சுவார்களே யல்லாமல் அவனை வெல்லும் வலிமை உடையர் அல்லர் என்பதாம். அந்தகன் - அழிவைச் செய்பவன், புல் வாய் - மான், மிடுக்கு - வீரம், வலிமை. மூவர் - தொகைக் குறிப்புச் சொல். புல்வாய் - வேற்றுமைத்தி தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை, காலப் போக்கில் காரண இடுகுறிப்பெயராயிற்று.*

*3415. 'இம்மைக்கு, உறவோடும்*
*இறந் தழியும்*
*வெம்மைத் தொழில், இங்கு,*
*இதன்மேல் இலையால்;*
*அம்மைக்கு, அரு மா*
*நரகம் தருமால்;*
*எம்மைக்கு இதம் ஆக*
*இது எண்ணினை, நீ?*

**இம்மைக்கு -** *இந்தப் பிறப்பில்;* **உறவோடும் இறந்தழியும் வெம்மைத் தொழில் -** *உறவினர்களுடன் இறந்து அழிந்து படுவதற்குக் காரணமான கொடுமையான தொழில்;* **இங்கு இதன் மேல் இலையால் -** *இப்பொழுது (நீ செய்த) இச்செயலுக்கு மேல் வேறு ஒன்றும் இல்லை;* **அம்மைக்கு -** *(இச்செயல்) மறுமையில்;* **அருமாநரகம் தருமால் -** *(உனக்கு) தாங்கரிய பெரிய நரகத்தைத் தரும்;* **இது எம்மைக்கு இதம் ஆக -** *(ஆகையால் இச்செயலை) எப்பிறவிக்கு நன்மையாக;* **நீ எண்ணினை -** *நீ எண்ணினாய்? இப்பிறவியில் உறவினருடன் இறந்துபடவும் மறுமையில் பொறுத்தற்கரிய நரகினை அடையவும் உரிய இத் தீச் செயலை எப்பிறவிக்கு நன்மை தரும் எனக் கருதி நீ செய்தாய்? இம்மை - இப்பிறவி, அம்மை - மறுமை, எம்மை - எப்பிறவிக்கு. இலை - இடைக்குறை, மாநரகம் - உரிச்சொற்றொடர். இலையால் - தேற்றப் பொருளில் ஆல் வந்தது. ஆல் - அசை.1*

*3416'முத் தேவரின் மூல முதற்*
*பொருள் ஆம்*
*அத் தேவர் இம்*
*மானிடர்; ஆதலினால்,*
*எத் தேவரொடு எண்ணுவது?*
*எண்ணம் இலாய்!*
*பித்தேறினை ஆதல்*
*பிழைத் தனையால்.*

**இம் மானிடர் -** *(மானுடச் சட்டை தாங்கி உள்ள) மானிடர்;* **முத்தேவரின் மூல முதற் பொருள் ஆம் அத் தேவர் ஆதலினால் -** *மூன்று மூர்த்திகளுக்கும் மூல முதல் பொருள் ஆதலால்;* **எத் தேவரொடு எண்ணுவது -** *(இவர்களை) எந்தத் தேவர்களாகக் கொண்டு நினைப்பது;* **எண்ணம் இலாய் -** *ஆய்ந்து அறியும் தன்மை இல்லாதவனே!;* **பித்தேறினை ஆதல் பிழைத்தனை -** *அறிவு மயங்கினை ஆதலால் (இந்தக்) குற்றம் செய்தாய்;* **ஆல் -** *அசை.*

*இம் மானிடர் முத்தேவருக்கும் மூல முதலானவர் ஆதலால் இவரை எத் தேவரொடு எண்ணுவது. நீ பித்தேறினை ஆதலால் இக் குற்றம் செய்தாய் என்ற படி பல தேவர்களை ஏவல் கொண்டு வாழ்ந்த நீ இவர்களுக்குச் செய்த பிழை வீணாகாது பயன் தரும் என்பதாம். பித்து - காம மயக்கமும் ஆம், பிழைத்தனை - குற்றம் செய்தாய்.*

*3417. 'புரம் பற்றிய போர்*
*விடையோன் அருளால்*
*வரம் பெற்றவும், மற்று*
*உள விஞ்சைகளும்,*
*உரம் பெற்றன ஆவன-*
*உண்மையினோன்*
*சரம் பற்றிய சாபம்*
*விடும் தனையே.*

**புரம் பற்றிய -** முப்புரங்களும் பற்றி எரியச் செய்த; **போர் விடையோன் அருளால் -** போர் ஆற்றல் உள்ள காளை வாகனனாகிய சிவபிரானது அருளால்; **பெற்றவும் வரம் -** (நீ) பெற்றுள்ள வரங்களும்; **மற்று உள விஞ்சைகளும் -** மற்றும் உள்ளபோர் வித்தைகளும்; **உண்மையினோன் -** (அழியா) உண்மைப் பொருளாக உள்ள இராமன்; **சாபம் பற்றிய சரம் விடும்தனையே -**வில்லில் தொடுத்த அம்பை விடுகின்ற வரையில்; **உரம் பெற்றன ஆவன -** வலிமை உள்ளனவாம். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் அருளால் நீ பெற்றுள்ளவரமும் மற்றும் உன்னிடம் உள்ள மாயப் போர் ஆற்றலும் உண்மையினோன் வில்லில் அம்பு கோத்து விடும் அளவே நிற்கும், அதற்கு மேல் நில்லா என்பதாம். உண்மையினோன் - சொன்ன சொல்லை நிறைவேற்றும் வாய்மை உடையோன் எனலுமாம். விஞ்சை- வித்தை சாபம் - வில், உம் - அசை.

*3418. 'வான் ஆள்பவன் மைந்தன்,*
*வளைத்த விலான்*
*தானே வரின், நின்று*
*தடுப்பு அரிதால்;*
*நானே அவண் உய்ப்பென்,*
*இந் நன்னுதலை;*
*போ, நீ கடிது'*
*என்று புகன்றிடலும்,*

**வான் ஆள்பவன் மைந்தன் -** விண் உலகை ஆளும் தசரதனுடைய மகனாகிய இராமன்; **வளைத்த விலான் தானே வரின் -** வளைத்த வில்லினை உடையவனாய் (நேரில்) தானே வந்து விட்டால்; **நின்று தடுப்பு அரிது -** அவன் எதிரே நின்று (அவனால் வரும் தீங்கினைத்) தடுப்பது அருமையானது; **இந்நன்னுதலை -**இந்த அழகிய நெற்றியை உடைய சீதையை; **அவண் நானே உய்ப்பென் -** முன்பு இருந்த இடத்திற்கு நானே கொண்டு போய்ச் சேர்க்கிறேன்; **நீகடிது போ -** நீ விரைவாகப் போய்விடு; **என்று புகன்றிடலும் -** என்று சடாயு கூறிய அளவில் - கேட்டான் (நிருதர்க்கு இறை என அடுத்த பாடலில் முடியும்).

இராமன் வந்தால் நீ தப்ப முடியாது எனவே இப்பொழுதே சீதையை என்னிடம் விட்டு விட்டு, நீ போய் விடு; நான் அவளை முன்பு இருந்த இடத்திலேயே சேர்த்து விடுகிறேன் என இராவணனிடம் சடாயு கூறினான். வான் ஆள்பவன் - முன்பு

நிலவுலகை ஆண்டவன் தற்போது வானுலகை ஆள்கிறான் என்பதாம். தடுப்பு - தடுத்தல், விலான் - இடைக்குறை, முற்றெச்சம் எனலுமாம். நன்னுதல் - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஆல் - அசை.

இராவணன், "சீதையை விடேன்" எனல்

**3419. கேட்டான் நிருதர்க்கு இறை; கேழ்**
**கிளர் தன்**
**வாள் தாரை நெருப்பு**
**உக, வாய் மடியா,**
**'ஓட்டாய்; இனி நீ**
**உரை செய்குநரைக்**
**காட்டாய் கடிது' என்று,**
**கனன்று உரையா,**

**கேட்டான் நிருதர்க்கு இறை -** (சடாயு கூறிய சொற்களைக்) கேட்டவனாகிய அரக்கர்க்குத் தலைவன் ஆகிய இராவணன்; **கேழ்கிளர் தன் -** ஒளி விளங்குகின்ற தன்னுடைய; **வாள் தாரை நெருப்பு உக -** ஒளியுள்ள கண்ணின் கரு விழியில் இருந்து, சினத் தீ வெளிப்பட; **வாய் மடியா -** உதட்டைக் கடித்துக் கொண்டு; **இனி நீ ஓட்டாய் -** இனி மேல் நீ (வீண் சொற்களை) ஓட விடாதே; **உரை செய்குநரைக் கடிது காட்டாய் -** (நீ) சொல்லுகின்றவர்களை விரைவாகக் காட்டுவாய்; **என்று கனன்று உரையா -** என்று சினந்து சொல்லி - (இது 19ஆம் பாடலில் உள்ள "என்னும் அளவில்" என்பதோடு சென்று முடியும்)

சடாயுவின் சொல் கேட்ட இராவணன் கண்கள் சிவந்து வாய் மடித்து, 'இனி மேல் பேச வேண்டாம். நீ கூறிவர்களைக் காட்டு' என்று சினந்து சொன்னான். கேழ் - ஒளி. வாள்தாரை - ஒளியுள்ள கண்ணின் கருவிழி, ஓட்டாய் - சொற்களை ஓடவிடாதே. மடியா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினை எச்சம். ஓட்டாய் - ஒருமை எதிர் மறை ஏவல் வினை, காட்டாய் - ஒருமை உடன்பாட்டு ஏவல் வினை.

**3420. 'வரும் புண்டரம்! வாளி**
**உன் மார்பு உருவிப்**
**பெரும் புண் திறவாவகை**
**பேருதி நீ;**
**இரும்பு உண்ட நீர்**
**மீளினும், என்னுழையின்**
**கரும்பு உண்ட சொல்**
**மீள்கிலள்; காணுதியால்,'**

**வரும் புண்டரம் -** (என்னை எதிர்த்து) வருகின்ற கழுகே; **உன் மார்பு வாளி உருவி -** உனது மார்பினை (எனது அம்பு ஊடுருவி; **பெரும் புண் திறவா வகை -** பெரிய

*புண்ணாகத் திறப்பதற்கு முன்பே;* ***நீ பேருதி -*** *நீ (இவ்விடம் விட்டு) அப்பால் செல்க;* ***இரும்பு உண்ட நீர் மீளினும் -*** *(காய்ச்சப்பட்ட) இரும்பில்பட்ட நீர் மறுபடியும் வெளிப்படும் என்றாலும் கூட;* ***என்னுழையின் -*** *என்னிடத்தில் இருக்கின்ற;* ***கரும்பு உண்ட சொல் மீள்கிலள் -*** *கரும்புச் சாற்றினும் இனிய சொற்களைப் பேசுகிற (சீதை) மீண்டு செல்ல மாட்டாள்;* ***காணுதி -*** *(அதனைக்) காண்பாயாக;* ***ஆல் -****ஈற்றசை.*

*என்னை எதிர்த்து வரும் கழுகே உன் மார்பினை என் அம்பு ஊடுருவிப் பெரும் புண்ணை உண்டாக்குவதற்கு முன்பே நீ அப்பால் செல்க. ஒரு கால் இரும்பு உண்ட நீர் மீண்டும் தோன்றினாலும் கூடஇக் கரும்பு உண்ட சொல்லினள் ஆகிய சீதை மீளாள். என்பது கருத்து. புண்டரம் - கழுகு, புண்டரம், கங்கம், எருவை, பவணை கருஞ்சிறை, உவணம் என்பன கழுகைக் குறிக்கும் வேறு பெயர்களாம். பழுக்கக் காய்ச்சிய இரும்பில் பட்ட நீர் மீண்டும் வெளிப்படாதது போலச் சீதையும் என்னிடம் இருந்து மீள மாட்டாள் என்றபடி. புண்டரம் - அண்மை விளி, கரும்பு உண்ட சொல் - அடையடுத்த சினையாகுபெயர்.*

*18அஞ்சிய சீதைக்குச் சடாயு அபயம் கூறல்*

*கலித்துறை*

***3421. என்னும் அளவில், பயம்***
***முன்னின் இரட்டி எய்த,***
***அன்னம் அயர்கின்றது நோக்கி,***
***'அரக்கன் யாக்கை***
***சின்னம் உறும் இப்பொழுதே;***
***"சிலை ஏந்தி, நங்கள்***
***மன்னன் மகன் வந்திலன்" என்று,***
***வருந்தல்; அன்னை!***

***என்னும் அளவில் -*** *என்று (இராவணன்) கூறிய அளவில்;* ***பயம் முன்னின் இரட்டி எய்த -*** *அச்சம் முன்பை விட இரு மடங்காக;* ***அன்னம் அயர்கின்றது நோக்கி -*** *அன்னப்பறவை போன்ற சீதை வருந்துவதைப் பார்த்து;* ***அன்னை -*** *(சடாயு சீதையைப் பார்த்து) அன்னையே;* ***இப்பொழுதே அரக்கன் யாக்கை சின்னம் உறும் -*** *இப்பொழுதே அரக்கனாகிய இராவணனது உடம்பு (பல) துண்டுகளாகும்;* ***நங்கள் மன்னன் மகன் -*** *நமது தலைவன் ஆகிய தசரதனது மகன்;* ***சிலை ஏந்தி வந்திலன் -*** *வில்லைக் கையில் ஏந்தி வந்தானில்லை;* ***என்று வருந்தல் -*** *என்று எண்ணி நீ வருந்தாதே.*

*இராவணன் விடேன் என்று கூறியதைக் கேட்ட சீதை முன்பைவிட இரு மடங்கு வருந்துவதைப் பார்த்த சடாயு. இப்பொழுதேஅரக்கன் உடல் துண்டுகள் ஆகும். மன்னன் மகன் வில்லேந்திக்காக்க வரவில்லையே என்று வருந்தாதே என ஆறுதல் கூறினான்.சின்னம் - துண்டு; சின்ன பின்னமாதல் என்ற வழக்கை நினைவுகூர்க. நங்கள் - உளப்பாட்டுத்தன்மைப் பன்மை, அன்னை -அண்மை விளி.*

*3422. '**முத்து உக்கனபோல் முகத்து ஆலி***
***முலைக்கண் வீழ,***
***தத்துற்று அயரேல்; தலை, தால***
***பலத்தின் ஏலும்***
***கொத்து ஒப்பன கொண்டு, இவன்***
***கொண்டன என்ற ஆசை***
***பத்திற்கும், இன்றே பலி ஈவது***
***பார்த்தி' என்றான்.***

***முத்து உக்கன போல் -*** *முத்துக்கள் சிதறுவன போல;* ***முகத்து ஆலிமுலைக் கண் வீழ -*** *முகத்தில் இருந்து (கண்களில் இருந்து) கண்ணீர்த் துளிகள் முலைகளிலே விழுமாறு;* ***தத்துற்று அயரேல் -*** *(மனத்) துடிப்பு மிகுந்து தளராதே;* ***தால பலத்தின் ஏலும் கொத்து ஒப்பன -*** *பனம்பழங்களின் கொத்தினை ஒப்பனவாகிய;* ***தலை கொண்டு -*** *(இராவணனது) பத்துத் தலைகளைக் கொண்டு;* ***இவன் கொண்டனஎன்ற ஆசை பத்திற்கும் -*** *இவன் (வெற்றி) கொண்டன என்று கூறப்படுகின்ற திசை பத்திற்கும்;* ***இன்றே பலி ஈவது பார்த்தி -*** *இப்பொழுதே (நான்) பலியாகக் கொடுப்பதை பார்ப்பாயாக;****என்றான்-*** *என்று சடாயு கூறினான்.*

*சீதை அழுது கணணீர் விடுதல் கண்ட சடாயு, 'நீ மனந்தளராதே பனம் பழக் கொத்துப் போல் உள்ள இராவணனின் பத்துத் தலைகளையும்அவன் வெற்றி பெற்றதாகக் கூறப்படுகின்ற பத்துத் திசைகளுக்கும்நான் பலியாகக் கொடுக்கப் போவதைப் பார்ப்பாயாக' என ஆறுதல்கூறினான். ஆலி - கண்ணீர் தத்துற்று - கலக்கம் அடைந்து. தாலபலம் - பனம்பழம் ஆசை - திசை. பலி - கடவுளர்க்குத் தரும்உணவு. இங்கு இராவணனின் பத்துத் தலைக்குப் பனம் பழக் கொத்துஉவமையாக வந்தது.*

*சடாயு போரிடல்*

*3423. **இடிப்பு ஒத்த முழக்கின், இருஞ்***
***சிறை வீசி எற்றி,***
***முடிப் பத்திகளைப் படி இட்டு,***
***முழங்கு துண்டம்***
***கடிப்பக் கடிது உற்றவன், காண்தகும்***
***நீண்ட வீணைக்***
***கொடிப் பற்றி ஒடித்து, உயர்***
***வானவர் ஆசி கொண்டான்.***

***இடிப்பு ஒத்தமுழக்கின் -*** *இடியை ஒத்த பேரொலி உண்டாகும் படி;* ***இருஞ்சிறை வீசி எற்றி -*** *பெரிய (தன்) சிறகுகளை வீசி அடித்தபடி;* ***கடிது உற்றவன் -*** *விரைவாகப் பறந்து வந்தவனாகிய (சடாயு);* ***முடிப் பத்திகளைப் படி இட்டு -*** *(இராவணனது) கீரிட வரிசைகளை நிலத்தில் தள்ளி;* ***முழங்கு துண்டம் கடிப்ப -*** *பேரொலியிடும் (அவன் தலைகளை) (தன்) (அலகினால்) துண்டுகளாகச் (செய்ய வந்தவன்);* ***காண் தகும் நீண்ட வீணைக் கொடிப் பற்றி ஒடித்து -*** *காண அழகான நீண்ட வீணையின் வடிவம்*

*எழுதப்பட்ட (அவனது) கொடியைப் பற்றி ஒடித்து;* ***உயர் வானவர் ஆசி கொண்டான் -*** *சிறப்புடைய தேவர்களின் வாழ்த்துகளைப் பெற்றான். இராவணனது தலை வரிசையை நிலத்தில் தள்ளித் துண்டாக்கப் பேரொலியுடன் இருஞ்சிறை வீசி வந்த சடாயு அவனது வீணைக் கொடியை ஒடித்து வானவர் ஆசி கொண்டான் என்க. வான்மீகத்தில் இராவணனுக்குரிய கொடி மனிதத் தலை வடிவம் எழுதப்பட்டது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கம்பர் நாரத முனிவற்கு ஏற்ப நயம் பட உரைத்த நாவினை உடையானது கொடியை இசைத் தொடர்புடைய வீணைக் கொடியாக அமைத்துள்ள திறம் தேர்க. பத்தி - வரிசை, படி - நிலம் இருஞ்சிறை - பண்புத்தொகை. கொடிப் பற்றி - இரண்டன் தொகையில் செய்யுளின்பம் கருதி மிக்கது. 2*

***3424அக் காலை, அரக்கன், அரக்கு உருக்கு***
***அன்ன கண்ணன்,***
***எக் காலமும், இன்னது ஓர்***
***ஈடு அழிவுற்றிலாதான்***
***நக்கான், உலகு ஏழும்***
***நடுங்கிட; நாகம் அன்ன***
***கைக் கார்முகத்தோடு கடைப்***
***புருவம் குனித்தான்.***

***எக்காலமும் -*** *முன்பு எப்பொழுதும்;* ***இன்னது ஓர் ஈடு அழிவுற் றிலாதான் -*** *இத்தகைய ஒரு பெருமை அழிவு அடைந்திராதவனாகிய;* ***அரக்கன் -*** *அரக்கன் ஆகிய இராவணன்;**அக்காலை -*** *(தன் கொடி அறுபட்ட) அப்பொழுது;* ***உருக்கு அரக்கு அன்ன கண்ணன் -*** *உருக்கிய அரக்கைப் போன்று (சினத்தால் சிவந்த) கண்களை உடையவனாய்;* ***உலகு ஏழும் நடுங்கிட நக்கான் -*** *உலகம் ஏழும் நடுங்கும்படி சினங்கொண்டு சிரித்தான்;* ***நாகம் அன்ன கைக்கார் முகத்தோடு -*** *மலையைப் போன்று தன் கையில் உள்ள வில்லுடன்;* ***புருவக் கடை குனித்தான் -*** *(தன்) புருவங்களின் நுனியையும் வளைத்தான்.*

*இதற்கு முன் எப்போதும் இது போல் தன் பெருமை கெடாத இராவணன் சினங் கொண்டு சிரித்துத் தன் வில்லையும் புருவத்தையும் வளைத்தான் என்க. ஈடு - பெருமை. நாகம் - மலை, கார்முகம் - வில். கடைப் புருவம் - புருவ நுனி, நகுதலும் புருவ நுனியை வளைத்தலும் சினக்குறி என்க.*

***3425. சண்டப் பிறை வாள்***
***எயிற்றான் சர தாரை மாரி***
***மண்ட, சிறகால் அடித்தான் சில;***
***வள் உகீரால்***
***கண்டப்படுத்தான் சில;***
***காலனும் காண உட்கும்***
***துண்டப் படையால், சிலை துண்ட***
***துண்டங்கள் கண்டான்.***

***பிறைவாள் சண்ட எயிற்றான் -*** *பிறைநிலவு போன்ற ஒளி பொருந்திய பற்களை உடைய இராவணனது;* ***சர தாரை மாரி -*** *அம்புகளாகிய மழையின் மிகுதி;* ***மண்ட -*** *(தன்னை) மிகுதியாக நெருங்க;* ***சில சிறகால் அடித்தான் -*** *சடாயு அவற்றுள் சிலவற்றைத் தன் சிறகால் அடித்து விழுத்தினான்;* ***சில வள் உகீரால் கண்டப் படுத்தான் -*** *சிலவற்றைத் தன் கூர்மையான (கால்) நகங்களால் துண்டுபடுத்தினான்;* ***சிலை -*** *வில்லைக்;* ***காலனும் காண உட்கும் துண்டப் படையால் -*** *யமனும் காண அஞ்சும் (தன்) மூக்காகிய படைக் கலத்தால்;* ***துண்ட துண்டங்கள் கண்டான் -*** *துண்டு துண்டுகளாக ஆக்கினான். பிறை நிலவு போன்ற பற்களை உடைய இராவணன் தன்மீதுபொழிந்த அம்பு மழையைச் சடாயு சிறகாலும், கூர்மையான கால்நகத்தாலும், இராவணனது வில்லைத் தன் மூக்காலும் துண்டுதுண்டுகளாக ஆக்கினான். சண்டம் - கொடுமையும் ஆம், மண்டுதல்- நெருங்குதல் உகீரால் - உகிரால், நகத்தால் செய்யுள் ஓசைக்காகவந்த நீட்டல் விகாரம். துண்டப் படை - மூக்காகிய படைக்கலம்;தாரை மாரி - உருவகம்.*

***3426. மீட்டும் அணுகா,-நெடு வெங்***
***கண் அனந்த நாகம்***
***வாட்டும் கலுழன் என, வன்***
***தலை பத்தின்மீதும்***
***நீட்டும் நெடு மூக்கு எனும்***
***நேமியன்-சேம வில் கால்***
***கோட்டும் அளவில், மணிக் குண்டலம்***
***கொண்டு எழுந்தான்.***

**நெடுவெங்கண் அனந்த நாகம் -** *பெரிய கொடியகண்களையுடைய அளவில்லாத பாம்புகளை;* **வாட்டும் கலுழன் என-** *வாட்டும் கருடன் போல;* **வன் தலை பத்தின் மீதும் -** *(இராவணன்உடைய) வலிமையான தலைகள் பத்தின் மேலும்;* **நீட்டும் நெடுமூக்கு எனும் நேமியன் -** *(கொத்தி அழிக்க) நீட்டிய நீண்ட மூக்குஎன்னும் சக்கரப் படையை உடையவனாய்;* **சேமவில் கால் கோட்டும்அளவில் -***(இராவணன் தன்னைப்) பாதுகாக்கும் மற்ற ஒரு சேமவில்லின் இரு முனைகளையும் வளைத்த அளவிலே;* ***மீட்டும் அணுகா-*** *மறுமுறையும் (அவனை) நெருங்கி;* **மணிக்குண்டலம் கொண்டுஎழுந்தான் -** *(அவன் காதுகளில்) அணிந்துள்ள இரத்தின மணிக்குண்டலங்களைப் பறித்துக் கொண்டு பறந்து எழுந்தான்.*

*பாம்புகளை வாட்டும் கருடன் போல் வந்து இராவணனதுதலையைத் தரையில் உருட்டத் தன் நெடு மூக்கு எனும் சக்கரப்படையை நீட்டிய சடாயு, அவன் சேம வில்லை வளைப்பதற்குள்விரைந்து வந்து அவன் காதில் உள்ள குண்டலங்களைப் பறித்துச்சென்றனன் என்க. சேமவில் - உற்ற காலத்து உதவும் அதிகப்படியான வில். உரிய வில் பழுதாகும் போது சேமவில் பயன்படும்.வண்டிக்கு வலிமை சேர்க்க அமைக்கப்படும் அச்சு "சேம அச்சு" என்று கூறப்படுவதையும் ஈண்டு நினைக்க. அனந்தம் - மிகுதி. நேமி - சக்கரம். நேமியன் - முற்றெச்சம்.*

***3427. எழுந்தான் தட மார்பினில்,***
***ஏழினொடு ஏழு வாளி***

***அழுந்தாது கழன்றிடப் பெய்து,***
***எடுத்து ஆர்த்து, அரக்கன்***
***பொழிந்தான், புகர் வாளிகள்***
***மீளவும்; 'போர்ச் சடாயு***
***விழுந்தான்' என, அஞ்சினர்,***
***விண்ணவர் வெய்து உயிர்த்தார்.***

***அரக்கன் ஆர்த்து -*** *அரக்கன் ஆகிய இராவணன் பேரொலி செய்து;* ***எழுந்தான் தட மார்பினில் -*** *தன் குண்டலங்களைப் பறித்துக் கொண்டு எழுந்தவனாகிய (சடாயுவின்) பரந்த மார்பில்;* ***ஏழினொடு ஏழு வாளி எடுத்து -*** *பதினான்கு அம்புகளை எடுத்து;* ***அழுந்தாது கழன்றிடப் பெய்து -*** *(அவை) மார்பில் பதிந்து நிற்காமல் ஊடுருவிப் போகும்படி எய்து;* ***மீளவும் புகர் வாளிகள் பொழிந்தான் -*** *மீண்டும் ஒளியுள்ள அம்புகளைச் (சடாயு) மேல் எய்தான்;* ***போர்ச் சடாயு விழுந்தான் என அஞ்சினர் -*** *போர் ஆற்றல் மிக்க சடாயு விழுந்து விட்டான் என அஞ்சி;* ***விண்ணவர்வெய்து உயிர்த்தார் -*** *தேவர்கள் பெருமூச்சு விட்டார்கள்.*

*தன் குண்டலங்களைப் பறித்து எழுந்த சடாயுவின் மார்பில் பதினான்கு அம்புகளை ஊடுருவிச் செல்லுமாறு எய்த இராவணன்,மேலும் அம்புகளைச் சடாயு மீது சொரிந்ததைக் கண்டு சடாயு விழுந்தான் என எண்ணித் தேவர்கள் பெருமூச்சு விட்டனர் என்க. ஏழினொடு ஏழு - பதினான்கு; கழன்றிட - ஊடுருவ; புகர் - ஒளி. தடமார்பு - உரிச்சொல் தொடர். ஏழினொடு ஏழு - உம்மைத் தொகை. எழுந்தான் - வினையாலணையும் பெயர். விழுந்தான். தெளிவு பற்றிவந்த கால வழுவமைதி. முந்தைய பாடலும் இதுவும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளமை காண்க.*

***3428. புண்ணின் புது நீர் பொழியப் பொலி***
***புள்ளின் வேந்தன்,***
***மண்ணில், கரனே முதலோர்***
***உதிரத்தின் வாரிக்-***
***கண்ணில் கடல் என்று***
***கவர்ந்தது கான்று, மீள***
***விண்ணில் பொலிகின்றது ஓர்***
***வெண் நிற மேகம் ஒத்தான்.***

***புண்ணின் -*** *(தன் உடம்பில் அம்புகள் பட்டதால் ஏற்பட்ட) புண்ணில் இருந்து;* ***புதுநீர் பொழியப் பொலி -*** *புதுக் குருதி மிகுதியாக வடிந்தும் பொலிவு மாறாத;* ***புள்ளின் வேந்தன் -*** *பறவைகளுக்கு அரசனாகிய சடாயு;* ***மண்ணில் கரனே முதலோர் உதிரத்தின் வாரி -*** *நிலத்தில் பெருகி ஓடிய கரன் முதலிய அரக்கர்களது குருதி வெள்ளத்தை;* ***கண்ணில் கடல் என்று கவர்ந்து-*** *பெருமை உடைய கடல் என்று கருதிப் பருகிய (வெண் மேகம்);* ***அது கான்று மீள -*** *அந்நீரைப் பின்பு சொரிந்து;* ***விண்ணில் பொலிகின்றது -****வானத்தில் அழகு பெற விளங்குகிற;* ***ஓர் வெண் நிற மேகம் ஒத்தான் -*** *ஒப்பற்ற வெண்மை நிறம் உடைய மேகத்தை ஒத்திருந்தான்.*

*கடல் நீரை முகந்து வெண்மேகம் கருமேகமாகி மழை பெய்த பிறகு மீண்டும் வெண் மேகம் ஆதல் இயல்பு. இறந்தவர்களின் குருதியைப் பருகும் வாழ்க்கை உள்ள கழுகுகளுக்கு அரசனாகிய சடாயு வெண்மை நிறம் உடையவன். கண் - பெருமை. காலுதல் - வெளியிடுதல்.*

***3429. ஒத்தான் உடனே உயிர்த்தான்; உருத்தான்;***
***அவன் தோள்***
***பத்தோடு பத்தின் நெடும் பத்தியில்***
***தத்தி, மூக்கால்***
***கொத்தா, நகத்தால் குடையா,***
***சிறையால் புடையா,***
***முத்து ஆர மார்பில் கவசத்தையும்***
***மூட்டு அறுத்தான்.***

***ஒத்தான் -*** *வெண் மேகத்தை ஒத்தவன் ஆகிய சடாயு;* ***உடனே உயிர்த்தான் உருத்தான் -*** *உடனடியாகப் பெருமூச்சு விட்டுச் சினந்து;* ***அவன் தோள் பத்தோடு பத்தின் நெடும்பத்தியில் -*** *அந்த (இராவணனது) தோள்கள் ஆகிய இருபதின் வரிசையில்;* ***தத்தி -*** *பாய்ந்து ஏறி;* ***மூக்கால் கொத்தா -*** *மூக்கினால் கொத்தியும்;* ***நகத்தால் குடையா -*** *நகத்தால் பிறாண்டியும்;* ***சிறையால் புடையா -*** *சிறகுகளால் அடித்தும்;* ***முத்து ஆர மார்பில் -*** *(அவனது) முத்து மாலை அணிந்த மார்பில் விளங்கிய;* ***கவசத்தையும் மூட்டு அறுத்தான் -*** *கவசத்தையும் மூட்டுவாய் அறும்படி செய்தான்.*

*அம்புபட்ட சடாயு, உயிர்த்து, உருத்து, இருபது தோள்களில் ஏறி, கொத்திக் குடைந்து புடைத்து அவனது மார்பில் விளங்குகிறகவசத்தின் மூட்டுவாய் அறும்படி செய்தான் என்க. ஒத்தான் - முன்பாடலில் கூறிய படி வெண் மேகத்தை ஒத்தவன் என்றபடி. பத்தி - வரிசை, தத்தி - பாய்ந்து ஏறி, மூட்டறுத்தல் - இணைப்பு வாய்நெகிழும் படி செய்தல். கொத்தா, குடையா, புடையா - செய்யாஎன்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள் முந்தையபாடலும் இதுவும் அந்தாதித் தொடையில் அமைந்து உள்ளமைகாண்க.*

***3430. அறுத்தானை, அரக்கனும், ஐம்பதொடு***
***ஐம்பது அம்பு***
***செறித்தான் தட மார்பில்; செறித்தலும்,***
***தேவர் அஞ்சி***
***வெறித்தார்; வெறியாமுன், இராவணன்***
***வில்லைப் பல்லால்***
***பறித்தான் பறவைக்கு இறை,***
***விண்ணவர் பண்ணை ஆர்ப்ப.***

***அறுத்தானை -*** *(தன்) கவசத்தை மூட்டு அறுத்த சடாயுவினுடைய;* ***தட மார்பில் -*** *பரந்த மார்பில்;* ***அரக்கனும் ஐம்பதொடு ஐம்பது அம்பு செறித்தான் -*** *அரக்கனாகிய*

*இராவணனும் நூறு அம்புகளை அழுந்துமாறு எய்தான்;* ***செறித்தலும் அவன் அவ்வாறு (அம்புகளைப்) பதியுமாறு அழுத்திய அளவில்; தேவர் அஞ்சி வெறித்தார் -*** *தேவர்கள் அஞ்சித் திகைத்தார்கள்;* ***வெறியாமுன் -*** *(அவர்கள் அவ்வாறு) திகைப்பதற்கு முன்பே;* ***பறவைக்கு இறை -*** *(கழுகு என்னும்) பறவைகளுக்கு அரசன் ஆகிய சடாயு;* ***விண்ணவர் பண்ணை ஆர்ப்ப -*** *தேவர் கூட்டம் மகிழ்ச்சிப்பேரொலி செய்ய;* ***இராவணன் வில்லைப் பல்லால் பறித்தான் -*** *இராவணனது வில்லைத் (தன்) அலகினால் இழுத்துப் பிடுங்கினான்.*

*தன் கவசத்தைப் பிளந்த சடாயுவின் மீது இராவணன் நூறு அம்புகளை எய்தான். அது கண்டு வானவர் திகைத்தனர். உடனே சடாயு பாய்ந்து தேவர்கள் மகிழ்ச்சிப் பேரொலி செய்ய அவனது வில்லைப் பறித்தான். வெறித்தல் - திகைத்தல், பல் - ஈண்டு மூக்கு, பண்ணை - கூட்டம், அறுத்தான் - வினையாலணையும் பெயர். தடமார்பு - உரிச்சொல் தொடர். முந்தைய பாடலும் இதுவும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளமை காண்க. சடாயு இராவணன் போர் தொடர்ந்து இடையீடின்றி நடந்தது.*

***3431. எல் இட்ட வெள்ளிக் கயிலைப்***
***பொருப்பு, ஈசனோடும்***
***மல் இட்ட தோளால் எடுத்தான்***
***சிலை வாயின் வாங்கி,***
***வில் இட்டு உயர்ந்த நெடு மேகம்***
***எனப் பொலிந்தான்-***
***சொல் இட்டு அவன் தோள் வலி,***
***யார் உளர், சொல்ல வல்லார்?***

***எல் இட்ட -*** *ஒளி பொருந்திய;* ***வெள்ளிக் கயிலைப் பொருப்பு -*** *வெள்ளி போல் (வெண்ணிறம்) விளங்கும் திருக் கைலாய மலையை;* ***ஈசனோடும் -*** *சிவபிரானோடு;* ***மல் இட்ட தோளால் எடுத்தான் -*** *(தன்) வலிமை மிக்க தோள் ஆற்றலால் எடுத்தவனாகிய (இராவணனது);* ***சிலை வாயின் வாங்கி -*** *வில்லை மூக்கால் பறித்துக் (கௌவி);* ***வில் இட்டு உயர்ந்த நெடுமேகம் எனப் பொலிந்தான் -*** *இந்திரவில் விளங்க உயர்ந்த பெரிய மேகம் என்னுமாறு (அச்சடாயு)விளங்கினான்;* ***அவன் தோள் வலி -*** *(எனவே) அச்சடாயுவின் தோளாற்றலை;* ***சொல் இட்டுச் சொல்ல வல்லார் யார் உளர் -*** *சொற்களைக் கொண்டு சொல்லி (விளக்க) வல்லவர்கள் யாவர் உளர். ஒருவருமில்லை என்பதாம்.*

*வெள்ளியங்கிரியினை விடையின் பாகனோடு அள்ளிய தோள்வலி உடைய இராவணனது வில்லைப் பறித்து வாயில் கவ்விக் கொண்டு வானில் நீண்ட மேகம் போல் விளங்கிய சடாயுவின் தோளாற்றலைச் சொற்களால்யாரால் சொல்ல முடியும்? முடியாது என்றபடி, எல் - ஒலி, மல் -வலிமை. மற்போர் செய்து பெற்ற வலிமை எனினும் பொருந்தும்.தோள் வலி - பறவைக்குத் தோள் இன்மையால் உடல் வலிமை எனக்கொள்ளலாம்.*

*3432.* ***மீளா நிறத்து ஆயிரங் கண்ணவன்***
***விண்ணின் ஓட,***
***வாளால் ஒறுத்தான் சிலை***
***வாயிடைநின்றும் வாங்கி,***
***தாளால் இறுத்தான், - தழல்வண்ணன்***
***தடக் கை வில்லைத்***
***தோளால் இறுத்தான் துணைத் தாதைதன்***
***அன்பின் தோழன்.***

***மீளா நிறத்து -*** *போரில் பின்னிடாத மார்பினை உடைய;* ***ஆயிரங் கண்ணவன் விண்ணின் ஓட -*** *(உடலில்) ஆயிரம் கண்களை உடைய இந்திரன் வானத்தில் (தோற்று) ஓடுமாறு;* ***வாளால் ஒறுத்தான் -*** *(அவனைத் தன் சந்திரகாசம் என்ற) வாளினால் தண்டித்து வென்றவனாகிய இராவணன் உடைய;* ***சிலை வாயிடைநின்றும் வாங்கி -*** *வில்லினைத்தன் வாயில் இருந்து எடுத்து;* ***தாளால் இறுத்தான் -*** *(தன்) கால்களால் ஒடித்தான்;* ***தழல் வண்ணன் -*** *நெருப்பைப் போன்று சிவந்த நிறமுடைய சிவபிரானது;* ***தடக்கை வில்லை -*** *கையில் இருந்த வில்லைத்;* ***தோளால் இறுத்தான் -****(தன்) தோள் ஆற்றலால் ஒடித்தவனாகிய இராமனது;* ***துணை -****துணையாய் அமைந்தவனும்;* ***தாதை தன் அன்பின் தோழன் -*** *(அவனது) தந்தையாகிய தசரதனுக்கு அன்புடைய தோழனும் ஆகிய (சடாயு).*

*இராவணனது வில்லை அலகால் கௌவிப் பிடுங்கிய சடாயு அதைத் தன் தாளால் இறுத்தான் என்க. சிவன் வில்லைக் கையால்ஒடித்தவனாகிய இராமனுக்குத் துணைவனும், தசரதன் தோழனும் ஆகிய சடாயு இராவணன் வில்லைக் காலால் ஒடித்தான் என நயம் படக் கூறியமை காண்க. இராமன் தழல் வண்ணன் தடக்கை வில்லைத் தோளால் இறுத்தது.*

*தடுத்து இமையால் இருந்தவர், தாளில் மடுத்ததும், நாண்நுதி வைத்ததும் நோக்கார்; கடுப்பினில் யாரும் அறிந்திலர், கையால் எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார் (699)*

*என்று கார்முகப் படலத்தில் கூறப்பட்டுள்ளமை காண்க. மீளாநிறம் - பின்னிடாத மார்பு; நிறம் - மார்பு. ஒறுத்தான் - தண்டித்துவருத்தினவன், இராவணன். மீளா - ஈறுகெட்ட எதிர் மறைப்பெயரெச்சம்.*

*3433.* ***ஞாலம் படுப்பான், தனது ஆற்றலுக்கு***
***ஏற்ற நல்வில்***
***மூலம் ஒடிப்புண்டது கண்டு,***
***முனிந்த நெஞ்சன்,***
***ஆலம் மிடற்றான் புரம் அட்டது***
***ஓர் அம்பு போலும்***
***சூலம் எடுத்து ஆர்த்து எறிந்தான்,***
***மறம் தோற்றிலாதான்.***

***ஞாலம் படுப்பான் -*** *உலகுக்கு அழிவைச் செய்பவனும்;* ***மறம் தோற்றிலாதான் -*** *யாருக்கும் வீரத்தில் தோல்விஅடையாதவனும் ஆகிய இராவணன்;* ***தனது ஆற்றலுக்கு ஏற்ற -*** *தனது வலிமைக்குப் பொருத்தமான;* ***நல்வில் மூலம் ஒடிப்புண்டது கண்டு -*** *நல்ல (வலிய) வில் முழுதும் ஒடிக்கப்பட்டது கண்டு;* ***முனிந்த நெஞ்சன் -*** *சினமடைந்த நெஞ்சத்தனாய்;* ***ஆலம் மிடற்றான் புரம் அட்டது ஓர் அம்பு போலும் -*** *ஆலகால நஞ்சை மிடற்றில் கொண்ட (நீலகண்டன்) முப்புரத்தை அழிப்பதற்காகக் (கைக் கொண்ட) ஒப்பற்ற (திருமால் ஆகிய) அம்பு போன்ற;* ***சூலம் எடுத்து ஆர்த்து எறிந்தான் -*** *சூலப்படையைக் (கையில்) எடுத்துப் பேரொலியோடு (சடாயுவின் மீது) வீசினான்.*

*இராவணன் தனது வலிய வில் சடாயுவால் ஒடிக்கப்பட்டது கண்டு முனிவு கொண்டு, நீலகண்டன் முப்புரம் எரிக்கக் கைக் கொண்ட திருமாலாகிய அம்பு போன்ற சூலத்தை எடுத்துச் சடாயுவின் மீது எறிந்தான் என்க. மூலம் - முழுதும்,*

***3434. 'ஆற்றான் இவன் என்று உணராது***
***எனது ஆற்றல்காண்' என்று***
***ஏற்றான் எருவைக்கு இறை, முத்தலை***
***எஃகம், மார்பில்;***
***'மேல்தான் இது செய்பவர் யார்?',***
***என விண்ணுளோர்கள்***
***தோற்றாது நின்றார், தம தோள்***
***கொட்டி ஆர்த்தார்.***

***எருவைக்கு இறை -*** *கழுகுகளுக்குத் தலைவன் ஆகிய சடாயு;* ***இவன் ஆற்றான் என்று உணராது -*** *இவன் (இச்சூலத்திற்கு) ஆற்றான் என எண்ணாதே;* ***எனது ஆற்றல் காண் -*** *எனது வலிமையைப் பார்;* ***என்று -*** *என்று கூறி;* ***முத்தலை எஃகம் -*** *(இராவணன் வீசிய) மூன்று தலைகளை உடைய அச் சூலத்தை;* ***மார்பில் ஏற்றான் -*** *(தன்) மார்பில் ஏற்றுக் கொண்டான்;* ***தோற்றாதுநின்றார் விண்ணுளோர்கள் -*** *(இராவணனிடம் கொண்ட அச்சத்தால்) வெளிப்படாமல் மறைந்திருந்த தேவர்கள்;* ***மேல் தான் இது செய்பவர் யார் என -*** *இனிமேல் இத்தகு செயலைச் செய்பவர்யாவர்என்று கூறி;* ***தம தோள் கொட்டி ஆர்த்தார் -*** *(மகிழ்ச்சியால்) தங்கள் தோள்களைக் கொட்டிப் பேரொலி செய்தனர்.*

*சடாயு இராவணனை நோக்கி 'இவன் நம் சூலத்துக்கு ஆற்றான்'என எண்ணாதே என் வலிமையைக் காண்பாயாக என்று சொல்லிஅவன் வீசிய முத்தலைச் சூலத்தை மார்பில் ஏற்றுக் கொண்டான்.அது கண்டு இவ்வீரச் செயல் செய்பவர் யாருளர் எனத் தேவர்கள்மகிழ்ந்து தோள் கொட்டிப் பேரொலி செய்தனர். தோற்றாது - கண்ணில்படாமல்.*

***3435. பொன் நோக்கியர்தம் புலன்***
***நோக்கிய புன்கணோரும்,***
***இன் நோக்கியர் இல் வழி***
***எய்திய நல் விருந்தும்,***
***தன் நோக்கிய நெஞ்சுடை யோகியர்***

***தம்மைச் சார்ந்த***
***மென் நோக்கியர் நோக்கமும், ஆம்***
***என மீண்டது, அவ்வேல்.***

**அவ்வேல் -** *(இராவணன் சடாயுவை நோக்கி எறிந்த) அந்த முத்தலை வேல்;* **பொன் நோக்கியர் தம் -** பொருளின் வரவு குறித்தகருத்துடையவர்களான பொது மகளிரது; **புலன் நோக்கிய புன்கணோரும் -** ஐம்புல இன்பத்தை விரும்பிய வறுமையுடையவர்களும்; **இன் நோக்கியர் இல்வழி -** இனிய நற்பார்வை உடைய மகளிர் இல்லாத இடத்திற்கு; **எய்திய நல்விருந்தும் -** சென்று அடைந்த நல்ல விருந்தினர்களும்; **தன் நோக்கிய நெஞ்சுடை -** தன் ஆன்ம சொரூபத்தைத் தானே தரிசிக்கும் மனப்பக்குவமுடைய; **யோகியர் தம்மைச் சார்ந்த -** முனிவர்கள் மேல் சென்று சார்ந்த; **மென் நோக்கியர் நோக்கமும் -** மென்மையான பார்வை உடைய பெண்களுடைய ஆசைப் பார்வையும்; **ஆம் என -** ஒப்பு ஆகும் என்று கூறும் படி; **மீண்டது -** *(சடாயுவின் மார்பில்பட்டுத் துளைக்க முடியாமல்) மீண்டது.*

*இராவணன் எறிந்த வேல் சடாயுவின் மார்பைத்துளைக்க மாட்டாமல் மீண்டது என்க. முத்தலைச் சூலத்திற்கு மூன்று உவமைகள் கூறியுள்ளமை காண்க. 1) பொருட்பெண்டிரை விரும்பும் வறியோன். 2) நன் மகளிர் இல்லா வீட்டிற்கு வந்த விருந்தினர் 3) ஆன்ம சொரூபியாகிய யோகியின் மீது ஆசை கொண்ட பெண்டிர், ஆகியோர் வறிதே திரும்புதல் போல முத்தலை வேலும் வறிதே மீண்டது என்க. பொன் நோக்கியர் - பொருட்பெண்டிர், புலன் - ஐம்புலன் இன்பம். இன் நோக்கியர் - முகந் திரிந்து நோக்கக் குழையும் விருந்து (குறள்,90) என்பதனைக் கருதிக் கூறியது. தன் நோக்கிய நெஞ்சுடை யோகியர் - அட்டாங்க யோகத்தில் சமாதி கூடியவர்.*

***3436. வேகம்முடன், வேல் இழந்தான்***
***படை வேறு எடாமுன்,***
***மாகம் மறையும்படி நீண்ட வயங்கு***
***மான் தேர்ப்***
***பாகன் தலையைப் பறித்து,***
***படர் கற்பினாள்பால்***
***மோகம் படைத்தான் உளைவு எய்த,***
***முகத்து எறிந்தான்.***

**வேல் இழந்தான் -** *தன் முத்தலைச் சூலத்தை (ப் பயன் இல்லாமல்) இழந்த இராவணன்;* **வேகம்முடன் -** *மிக விரைவாக;* **வேறு படை எடா முன் -** *வேறு படைக் கலத்தை எடுப்பதற்கு முன்பே;* **மாகம் மறையும் படி -** *பெரிய வானமும் மறையும் படியாக;* **நீண்ட வயங்கு மான் தேர்ப்பாகன் -** *உயர்ந்து விளங்குகின்ற குதிரைகள் பூட்டப் பெற்ற (இராவணனது) தேர்ப்பாகனுடைய;* **தலையைப் பறித்து -** *தலையைத் துண்டித்து;* **படர் கற்பினாள் பால் -** *(ஆழமாகப்) படர்ந்த கற்பினை உடைய சீதையின் மேல்;* **மோகம் படைத்தான் -** *காம மயக்கம் கொண்டவன் ஆகிய (இராவணன்);* **உளைவு எய்த -** *வருத்தம் அடையும் படி;* **முகத்து எறிந்தான் -** *அவனது முகத்தில் (தலையை) வீசி எறிந்தான்.*

வேலை வெறுமனே போக்கிய இராவணன் வேறு படை எடாமுன் சடாயு பாய்ந்து தாக்கித் தேர்ப்பாகனது தலையைக் கொய்துஅதை அவன் முகத்தில் வீசினான். மாகம் - திசை. மோகம் - காமமயக்கம், உளைவு - வருத்தம். மான் - விலங்கு; ஈண்டுக் குதிரையைக்குறித்தது. வேகம்முடன், மாகம் மறையும் படி - மகர ஒற்று விரித்தல்விகாரத்தால் வந்தது.

*3437.* ***எறிந்தான்தனை நோக்கி, இராவணன்,***
***நெஞ்சின் ஆற்றல்***
***அறிந்தான்; முனிந்து, ஆண்டது ஓர்***
***ஆடகத் தண்டு வாங்கி,***
***பொறிந்தாங்கு எரியின் சிகை***
***பொங்கி எழ, புடைத்தான்;***
***மறிந்தான் எருவைக்கு இறை, மால்***
***வரை போல மண்மேல்,***

***எறிந்தான்தனை நோக்கி -*** *(தன் முகத்தில் தேர்ப் பாகனது) தலையை எறிந்தவனாகிய சடாயுவைப் பார்த்து;* ***இராவணன் நெஞ்சின் ஆற்றல் அறிந்தான் -*** *இராவணன் (அவனது) மன வலிமையை அறிந்து;* ***முனிந்து -*** *சினந்து;* ***ஆண்டது ஓர் ஆடகத் தண்டு வாங்கி -*** *அப்போது ஒப்பற்ற பொன்னால் ஆகிய கதையைக் (கையில்) எடுத்து;* ***எரியின் சிகை பொறிந்தாங்கு பொங்கி எழ -*** *நெருப்புச் சுவாலை நெருப்புப் பொறி பறப்பது போல் பொங்கி எழுந்து வெளிப்பட;* ***புடைத்தான் -*** *அத்தண்டினால் தாக்கினான்;****எருவைக்கு இறை -*** *கழுகுகளுக்குத் தலைவன் ஆகிய (சடாயு);****மால்வரை போல -*** *பெரிய மலை விழுந்தது போல;* ***மண் மேல்மறிந்தான் -****மண் மேல் விழுந்தான்.*

*தேர்ப்பாகனது தலையைப் பறித்துத் தன் முகத்தின் மீது எறிந்த சடாயுவினது மன வலிமையை இராவணன் அறிந்து சினந்துபொன்னால் ஆகிய பெரிய கதையைக் கையில் கொண்டு நெருப்புப்பொறி பறக்க அடித்தான். அதனால் சடாயு பெரிய மலை போல் மண்மீது விழுந்தான். ஆடகத் தண்டு - பொன் மயமான கதை. முற்பாடலுடன் இதற்கு உள்ள அந்தாதித் தொடை காண்க.*

*3438.* ***மண்மேல் விழுந்தான் விழலோடும்,***
***வயங்கு மான் தேர்,***
***கண்மேல் ஒளியும் தொடராவகை,***
***தான் கடாவி,***
***விண்மேல் எழுந்தான்; எழ,***
***மெல்லியலாளும், வெந் தீ***
***புண்மேல் நுழையத் துடிக்கின்றனள்***
***போல், புரண்டாள்.***

***மண் மேல் விழுந்தான் -*** *சடாயு (இராவணனது பொற்கதையால் அடியுண்டு) நிலத்தின் மீது விழுந்தான்;****விழலோடும்-*** *(அவ்வாறு அவன்) விழுந்த அளவில்;* ***வயங்கு***

***மான் தேர் -*** *விளங்குகிற குதிரைகள் பூட்டப்பட்ட (தனது) தேரை;* ***கண் மேல் ஒளியும் தொடரா வகை -*** *கண்ணினது பார்வையும் பின்பற்றிச் செல்ல முடியாதபடி;* ***தான் கடாவி -*** *மிக விரைவாகச் செலுத்தி;* ***விண் மேல் எழுந்தான் -*** *(இராவணன் இலங்கையை நோக்கிப் போக) வானத்தில் எழுந்தான்;* ***எழ -*** *(அவன் அவ்வாறு) எழுந்த அளவில்;* ***மெல்லியலாளும் -*** *மென்மைத் தன்மை உள்ள சீதையும்;* ***புண் மேல் வெந்தீ நுழைய -*** *புண்ணில் வெப்பமான நெருப்பு நுழைந்தால்;* ***துடிக்கின்றனள் போல் புரண்டாள் -*** *துடிப்பவள் போல் (துன்பத்தால்) புரண்டாள்.*

*இராவணனிடம் அடி வாங்கிய சடாயு நிலத்தில் விழுந்தவுடன்அவன் தன் தேரை விரைவாக வானத்தில் செலுத்திக் கொண்டுஇலங்கையை நோக்கிப் போகப் புறப்பட்டான். அது கண்டு சீதைபுண்ணில் தீ நுழைந்தது போல் துன்புற்று வருந்திப் புரண்டாள். கடாவி- செலுத்தி,*

***3439. கொழுந்தே அனையாள் குழைந்து***
***ஏங்கியகொள்கை கண்டான்;***
***'அழுந்தேல் அவலத்திடை; அஞ்சலை***
***அன்னம்!' என்னா,***
***எழுந்தான்; உயிர்த்தான்; 'அட! எங்கு***
***இனிப் போவது?' என்னா,***
***விழுந்தான் அவன் தேர்மிசை,***
***விண்ணவர் பண்ணை ஆர்ப்ப.***

***கொழுந்தே அனையாள் -*** *இளந்தளிர் போன்று (மிக்க மென்மைத் தன்மை உடைய) சீதை;* ***குழைந்து ஏங்கிய கொள்கை கண்டான் -*** *வாடி வருந்திய செயலைக் கண்டவன் ஆகிய சடாயு;* ***அன்னம் -*** *அன்னப்பறவை போன்றவளே;* ***அவலத்திடை அழுந்தேல் -*** *துன்பத்தில் மூழ்க வேண்டாம்;* ***அஞ்சலை -*** *அஞ்சாதே;* ***என்னா -*** *என்று (ஆறுதல் கூறி);* ***உயிர்த்தான் எழுந்தான் -*** *பெருமூச்சு விட்டு எழுந்தான்;* ***அட இனி எங்குப் போவது என்னா -*** *அடே இனி (நீ) எங்கு (த் தப்பிப்) போவது என்று சொல்லி;* ***அவன் தேர்மிசை -*** *அந்த இராவணனது தேரின் மீது;* ***விண்ணவர் பண்ணை ஆர்ப்ப -*** *தேவர்களின் கூட்டம் (மகிழ்ச்சிப்) பேரொலி செய்ய;* ***விழுந்தான் -*** *பாய்ந்தான்.*

*மென்மைத் தன்மை உடைய கொழுந்து போன்ற சீதை வருந்துதலைக் கண்ட சடாயு 'அன்னம், அஞ்சி அவலிக்காதே' என ஆறுதல் கூறி இராவணனைப் பார்த்து 'அடே நீ எங்கே தப்பிச் செல்வது' என்று கூறி, விண்ணவர் பண்ணை ஆர்ப்பத் தேர்மிசைப் பாய்ந்தான். கொள்கை - செய்கை. பண்ணை - மகளிர் விளையாட்டாயம். ஈண்டுக் கூட்டத்தைக் குறித்தது. அஞ்சலை - முன்னிலை ஒருமை வினைமுற்று. அன்னம் - உவமையாகு பெயர்; இங்கு அண்மை விளியாய் வந்தது.*

***3440. பாய்ந்தான்; அவன் பல் மணித்***
***தண்டு பறித்து எறிந்தான்;***
***ஏய்ந்து ஆர் கதித் தேர்ப் பரி***

*எட்டினொடு எட்டும் எஞ்சித்*
*தீய்ந்து ஆசு அற வீசி, அத் திண் திறல்*
*துண்ட வாளால்*
*காய்ந்தான்; கவர்ந்தான் உயிர்;*
*காலனும் கைவிதிர்த்தான்.*

***பாய்ந்தான் -*** *(இராவணன் தேரின் மீது) பாய்ந்தவனாகிய சடாயு;* ***அவன் -*** *அந்த இராவணனின்;* ***பல் மணித் தண்டு பறித்து எறிந்தான் -*** *பல மணிகள் பதிக்கப் பெற்ற தண்டாயுதத்தைப் பறித்துவீசினான்;* ***ஏய்ந்து ஆர் கதித்தேர் -*** *பொருந்தி அமைந்த வேகத்தினை உடைய தேரின் கண் பூட்டப்பட்டுள்ள;* ***பரி எட்டினொடு எட்டும் -*** *குதிரைகள் பதினாறும்;* ***எஞ்சித் தீய்ந்து ஆசு அற -*** *ஓங்கி அழிந்து ஒழியும் படி;* ***அத்திண் திறல் துண்ட வாளால் -*** *அந்த வலிமை உடைய மூக்காகிய தனது வாளால்;* ***காய்ந்தான் வீசி -*** *சினந்து வீசி;* ***உயிர் கவர்ந்தான் -*** *(அக்குதிரைகளின்) உயிரைஉண்டான்;* ***காலனும் கை விதிர்த்தான் -*** *அவ்வீரச் செயல் கண்டுயமனும் (அஞ்சிக்) கை நடுக்கம் கொண்டான்.*

*இராவணன் மேல் பாய்ந்த சடாயு தன்னைத் தாக்கிய தண்டாயுதத்தைப் பறித்து எறிந்து, மிக்க சினத்துடன் இராவணனது தேரில் பூட்டப்பட்டிருந்த பதினாறு குதிரைகளையும் உயிரொழித்தான். அது கண்டு யமனும் அச்சத்தால் நடுங்கினான். கதி - வேகம், துண்டவாள் - வாள் போல் கூர்மையான அலகு, கை விதிர்த்தான் -கை நடுக்கமுற்றான்.*

*3441. திண் தேர் அழித்து, ஆங்கு அவன்*
*திண் புறம் சேர்ந்த தூணி*
*விண்தான் மறைப்பச்*
*செறிகின்றன, வில் இலாமை,*
*மண்டு ஆர் அமர்தான்*
*வழங்காமையின், வச்சைமாக்கள்*
*பண்டாரம் ஒக்கின்றன, வள்*
*உகிரால் பறித்தான்.*

***திண் தேர் அழித்து -*** *(சடாயு மேலும் இராவணனது) வலிய தேரை அழித்து;* ***ஆங்கு -*** *அதற்குப் பிறகு;* ***வில் இலாமை -*** *(அவனது கையில்) வில் இல்லாமையால்;* ***மண்டு ஆர் அமர்தான் வழங்காமையின் -*** *நெருங்கிச் செய்யும் கொடிய போருக்கு உதவும் அம்புகளைத் தராமையால்;* ***வச்சைமாக்கள் பண்டாரம் ஒக்கின்றன -*** *உலோபிகளுடைய கருவூலத்தை ஒத்து அமைவனவாகி;* ***விண்தான் மறைப்பச் செறிகின்றன -*** *ஆகாயத்தைக் கூட மறைக்கும்படி பொருந்தி உள்ள;* ***அவன் திண் புறம் சேர்ந்த தூணி -*** *அவனது வலிமையான தோள்களின் புறத்தில் கட்டப்பட்டுள்ள, அம்பு அறாத்தூணியை;* ***வள் உகிரால் பறித்தான் -*** *(தன்) கூர்மையான நகங்களால் பறித்து எறிந்தான்.*

*சடாயு இராவணனது தேரை அழித்து, அவனது முதுகுப் புறத்தில் கட்டியுள்ள அம்பு அறாத் தூணியையும் பறித்து எறிந்தான். வச்சைமாக்கள் பண்டாரம் - கொடைக்*

*குணமற்ற உலோபிகளின் கருவூலத்தில் பணம் இருந்தும் பிறர்க்குப் பயன்படாதவாறு போல இராவணன் கையில் வில் இலாமையால் அவனது அம்பறாத் தூணியில் அம்பு இருந்தும் அது பயன்படவில்லை என்றபடி. வச்சை மாக்கள் -உலோபிகள். பண்டாரம் - கருவூலம். திண் தேர் - பண்புத் தொகை.*

***3442. மாச் சிச்சிரல் பாய்ந்தென, மார்பினும்***
***தோள்கள் மேலும்***
***ஒச்சி, சிறகால் புடைத்தான்;***
***உலையா விழுந்து***
***மூச்சித்த இராவணனும் முடி***
***சாய்ந்து இருந்தான்;***
***'போச்சு; இத்தனை போலும் நின் ஆற்றல்?'***
***எனப் புகன்றான்.***

***மார்பினும் தோள்கள் மேலும் -*** *(பின்பு சடாயு இராவணன் உடைய) மார்பின் மேலும் (இருபது) தோள்கள் மேலும்;* ***மாச்சிச்சிரல் பாய்ந்தென -*** *பெரிய சிச்சிலிப் பறவை பாய்வது போல் (பாய்ந்து);* ***சிறகால் ஒச்சிப் புடைத்தான் -*** *(தன்) சிறகுகளால் விரைவாக எறிந்து அடித்தான்;* ***இராவணனும் -*** *அதனால் இராவணனும்;* ***உலையா விழுந்து -*** *வருந்தி விழுந்து;* ***முடிசாய்ந்து மூச்சித்த இருந்தான் -*** *தலை சாய்த்து மயங்கிய நிலையில் இருந்தான்;* ***இத்தனை போலும் -*** *(அத்தன்மை கண்டு சடாயு) இத்தனைதானா;* ***நின் ஆற்றல் -****உனது வலிமை;* ***போச்சு எனப்புகன்றான் -*** *போய் விட்டது என்று (இகழ்ச்சியாகக்) கூறினான்.*

*மாச்சிரல் பாய்வது போல் பாய்ந்து சடாயு இராவணனதுமார்பிலும் தோளிலும் தன் சிறகால் ஒச்சிப் புடைத்தான். அதனால்இராவணன்மூச்சற்றுத் தலை சாய்த்து மயங்கி, இருந்தான்; அது கண்டசடாயு 'இது தானா உன் வலிமை' என இகழ்ந்து கூறினான். சிரல் -சிச்சிலி, மீன் கொத்தி. போச்சு - போயிற்று பேச்சு வழக்கு உலையா -செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினை எச்சம்.*

***3443. அவ்வேலையினே முனிந்தான்; முனிந்து,***
***ஆற்றலன்; அவ்***
***வெவ் வேல் அரக்கன் விடல் ஆம்***
***படை வேறு காணான்;***
***'இவ் வேலையினே, இவன் இன் உயிர்***
***உண்பென்' என்னா,***
***செவ்வே, பிழையா நெடு வாள் உறை***
***தீர்த்து, எறிந்தான்.***

***அவ்வேலையினே -*** *(உன் வலிமை போச்சு இத்தனை போலும் நின் ஆற்றல்) என்று (சடாயு கூறிய) அந்த நேரத்தில்;* ***முனிந்தான் முனிந்து -*** *(இராவணன்) சினம் கொண்டான் முனிந்து;* ***ஆற்றலன் -****(அச்) சினத்தை ஆற்றமுடியாதவனாகிய;*

***அவ்வெவ்வேல் அரக்கன்-*** *அந்தக் கொடிய வேலை ஏந்திய அரக்கன்;* ***விடல் ஆம் படை வேறு காணான் -*** *(சடாயுவின் மீது) விடுதற்கு உரிய படைக் கலங்கள் வேறு ஒன்றையும் காணாதவனாய்;* ***இவ் வேலையினே -*** *இப்பொழுதே;* ***இவன் இன் உயிர் உண்பென் என்னா -*** *இந்தச் சடாயுவினுடைய இனிய உயிரை உண்பேன் என்று சொல்லி;* ***செவ்வே பிழையா நெடுவாள் -*** *(பகைவரைக்) கொல்லுதல் தப்பாத நீண்ட தன் சந்திரகாசம் என்னும் வாளை;* ***உறை தீர்த்து எறிந்தான் -*** *உறையில் இருந்து (வெளியில்) எடுத்து வீசினான். சடாயுவால் படைக்கலங்களை இழந்து இகழப்பட்ட இராவணன்சினந்து 'இப்பொழுதே இவன் உயிர் உண்பேன்' என்று தன் தப்பாதவாளை எடுத்து வீசினான். சந்திரகாசம் என்ற வாள் கைலாயத்தைத்தூக்க முயன்ற காலத்துச் சிவபிரான் கொடுத்தது "அரன் தடக்கைவாள் கொண்டாய்" (2835) என வருதலும். தார் அணி மவுலி பத்தும்,சங்கரன் கொடுத்த வாளும் (7272) என்று கூறியுள்ளதும் இது குறித்தேஎன்க.*
*இராவணன் வாளால் சடாயு வீழ்தல்*

***3444. வலியின்தலை தோற்றிலன்; மாற்ற***
***அருந் தெய்வ வாளால்***
***நலியும் தலை என்றது அன்றியும்,***
***வாழ்க்கை நாளும்***
***மெலியும் கடை சென்றுளது; ஆகலின்,***
***விண்ணின் வேந்தன்***
***குலிசம் எறியச் சிறை அற்றது ஒர்***
***குன்றின், வீழ்ந்தான்.***

***மாற்ற அருந் தெய்வ வாளால் -*** *(யாராலும்) தடுத்தற்கு அரிய தெய்வம் தந்த வாளால்;* ***தலை நலியும் என்றது அன்றியும் -*** *எல்லோருடைய தலையும் தவறாது அழியும் என்பதன்றியும்;* ***வாழ்க்கை நாளும் -*** *ஆயுட் கால நாளும்;* ***மெலியும் கடை சென்றுளது ஆகலின் -*** *குறைவுபட்டு இறுதிக் (காலத்துக்குச்) சென்று அடைந்து விட்டது ஆகையால்;* ***வலியின் தலை தோற்றிலன் -*** *யாருக்கும் (இதுவரை) வலிமையில் தோற்காதவன் ஆகிய சடாயு;* ***விண்ணின் வேந்தன் -*** *தேவர் தலைவன்;* ***குலிசம் எறிய -*** *(தன்) வச்சிரப் படையை வீச;* ***சிறை அற்றது ஒர் குன்றின் வீழ்ந்தான் -*** *(அதனால்) சிறகு அற்று வீழ்ந்த ஒரு மலை போல் விழுந்தான்.*

*இராவணன் வீசிய தெய்வ வாள் தப்பாமல் எதையும் அழிக்கும்தன்மை உடையது ஆதலாலும், சடாயுவின் வயது எண்ணரும் பருவங்கள் கடந்து முதிர்ந்து முடியும் காலம் நெருங்கி விட்டதாலும்யார்க்கும் தோலாதான் வச்சிரப் படை சிறகு அறுத்த மலை போல் விழுந்தான். குலிசம் - வச்சிரப் படை.*

*சானகியின் துயரம்*

***3445. விரிந்து ஆர் சிறை கீழ் உற வீழ்ந்தனன்,***
***மண்ணின்; விண்ணோர்,***
***இரிந்தார்; 'இழந்தாள் துணை' என்ன,***

***முனிக் கணங்கள்***
***பரிந்தார்; படர் விண்டுவின் நாட்டவர்***
***பைம் பொன் மாரி***
***சொரிந்தார்; அது நோக்கிய சீதை***
***துளக்கம் உற்றாள்.***

***விரிந்து ஆர்சிறை -*** *விரிந்து பொருந்திய சிறகுகள்;* ***கீழ் உற -*** *(துண்டாகிக்) கீழே கிடக்கும்படி;* ***மண்ணின் வீழ்ந்தனன் -*** *(சடாயு) மண்ணின் மேல் விழுந்தான்;* ***விண்ணோர் இரிந்தார் -*** *(அது கண்டு) தேவர்கள் (அஞ்சி) ஓடினார்கள்;* ***முனிக்கணங்கள் -*** *முனிவர் கூட்டங்கள்;* ***துணை இழந்தாள் என்ன படர் பரிந்தார் -*** *(இச்சீதை தன்) துணையை இழந்து விட்டாள் என்பதால் துன்ப இரக்கம் கொண்டு வருந்தினர்;* ***விண்டுவின் நாட்டவர் -*** *திருமால் வீற்றிருக்கும் வைகுண்டத்தில் வாழ்பவர்;* ***பைம்பொன் மாரி சொரிந்தார் -*** *பசிய பொன் மலர் மாரியைச் சொரிந்தனர்;* ***அது நோக்கிய சீதை துளக்கம் உற்றாள் -*** *(சடாயு விழுந்ததையும், விண்டு நாட்டவர் பொன்மாரி பொழி தலையும்) கண்ட சீதை (உடலும் உள்ளமும்) நடுங்கினாள்.*

*தன் சிறகுகளை இழந்து சடாயு நிலத்தில் விழுந்தமை கண்டு விண்ணோர் அஞ்சி ஓடினர். முனிவர் வைதேகி துணை இழந்தாள் எனத் துன்பம் கொண்டனர். வைகுண்ட வாசிகளான நித்திய சூரிகள் கற்பக மலர் மாரி பொழிந்தனர். அது நோக்கிய சீதை அஞ்சி நடுங்கினாள். இரிந்தார் - ஓடினார். பரிந்தார் - இரங்கினார். படர் - துன்பம் விண்டுவின் நாட்டவர் - திருமால் வீற்றிருக்கும் வைகுண்டத்தில் வாழ்பவர்களாகிய நித்திய சூரிகள்; அவர்கள் பொன் மலர் சொரிந்து சடாயுவைப் பரமபதத்திற்கு அழைத்துச் செல்வர் என்பதாம். துளக்கம் - நடுக்கம். அது நோக்கிய - பன்மை ஒருமையாக வந்தது செய்யுள் இன்பம் கருதிப் போலும்.*

*3446.* ***வெள்கும் அரக்கன் நெடு விண்***
***புக ஆர்த்து, மிக்கான்;***
***தொள்கின்தலை எய்திய மான் எனச்***
***சோர்ந்து நைவாள்,***
***உள்கும்; உயிர்க்கும்; உயங்கும்;***
***ஒரு சார்வு காணாள்,***
***கொள் கொம்பு ஒடிய, கொடி***
***வீழ்ந்தது போல் குலைவாள்.***

***வெள்கும் அரக்கன் -*** *(சடாயுவின் போர் ஆற்றலுக்குத் தோற்றுபின் வென்றதால்) வெட்கம் அடைந்த அரக்கனாகிய இராவணன்;* ***நெடுவிண்புக ஆர்த்து மிக்கான் -*** *நீண்ட ஆகாயத்தில் சென்று சேரும் படி பேரொலி செய்து (தன் வலிமையைப்) பாராட்டினான்;* ***தொள்கின் தலை எய்திய மான் என -*** *வலையில் அகப்பட்ட மான் போல;* ***சோர்ந்து நைவாள் -*** *(மனம்) தளர்ந்து வருந்துபவளாகிய சீதை;* ***ஒரு சார்வு காணாள் -*** *(தனக்கு எந்த) ஒரு பற்றுக் கோடும் காணாதவளாய்;* ***உள்கும்-*** *(யாது செய்வேன் என) எண்ணும்;* ***உயிர்க்கும் -*** *பெருமூச்சு விடுவாள்;* ***உயங்கும் -*** *மயங்குவாள்;* ***கொள் கொம்பு ஒடிய -*** *ஏறிப்படர்வதற்கு நட்ட கொம்பு ஒடிந்து விழுந்ததனால்;* ***கொடி வீழ்ந்தது போல் -*** *கொடி நிலை குலைந்து வீழ்ந்தது போல;*

*__குலைவாள் -__ (இரதத்தின் மீது விழுந்து) நிலை குலைவாள். சடாயுவின் ஆற்றலால் தன் தேர், பாகன் தண்டாயுதம் ஆகியவற்றை இழந்து தோற்ற இராவணன் வெட்கம் கொண்டு, சடாயுவை அரன் வாளால் அழித்த பெருமையைப் பேரொலி செய்து வெளிப்படுத்தினான். சீதை வலையில் அகப்பட்ட மான் போல் துன்புற்றுக் கொள் கொம்பு ஒடியக் குலைந்து விழுந்த கொடி போல் இரதத்தில் விழுந்து துன்பப்பட்டாள். மிக்கான் - பெருமிதம் கொண்டான். தொள்கு - வலை சார்வு -பற்றுக்கோடு. காணாள் - முற்றெச்சம். கொள் கொம்பு - வினைத் தொகை.*

*கலிவிருத்தம்*

***3447. 'வன் துணை உளன் என***
***வந்த மன்னனும்***
***பொன்றினன்; எனக்கு இனிப் புகல்***
***என்?' என்கின்றாள்;***
***இன் துணை பிரிந்து, இரிந்து,***
***இன்னல் எய்திய***
***அன்றில்அம் பெடை***
***என அரற்றினாள்அரோ.***

*__வன்துணை உளன் என -__ (யான் உனக்கு) வலிமையான துணையாக உள்ளேன் என்று; __வந்த மன்னனும் பொன்றினன் -__ (எதிர்த்து) வந்த கழுகரசனாகிய சடாயுவும் அழிந்தான்; __எனக்கு இனிப்புகல்என் -__எனக்கு இனிக் கதி என்னவோ; __என்கின்றாள் -__ என்று எண்ணுகின்றவள் ஆகிய சீதை; __இன் துணை பிரிந்து இரிந்து -__ இனிமையான தனது துணையாகிய (ஆண் பறவையைப்) பிரிந்து நீங்கி; __இன்னல் எய்திய -__ (பெருந்) துன்பம் அடைந்த; __அன்றில் அம் பெடை என -__ அன்றில் பறவையின் அழகிய பெட்டை போல; __அரற்றினாள் (அரோ) -__ கதறினாள்.*

*என்னைக் காக்க வந்த வலிமையான துணைவன் ஆகிய சடாயு அழிந்தான், இனி எனக்கு வேறு புகலிடம் ஏது?' என எண்ணிய சீதை ஆணைப் பிரிந்த அன்றிற் பேடு போலத் துன்புற்றுக் கதறினாள். அன்றில் - ஆணும் பெண்ணும் பிரியாமல் பனை மரத்தில் வாழும் ஒரு வகைப் பறவை என்பது இலக்கிய மரபு. புகல் - சரண்புகுமிடம்; தொழிலாகுபெயர்.*

***3448. 'அல்லல் உற்றேனை, வந்து, "அஞ்சல்"***
***என்ற, இந்***
***நல்லவன் தோற்பதே?***
***நரகன் வெல்வதே?***
***வெல்வதும் பாவமோ?***
***வேதம் பொய்க்குமோ?***
***இல்லையோ அறம்?' என,***
***இரங்கி ஏங்கினாள்.***

***அல்லல் உற்றேனை*** - *பெருந்துன்பம் அடைந்தவளாகிய என்னை;* ***வந்து அஞ்சல் என்ற*** - *(காக்க) வந்து அஞ்சாதே (என்று ஆறுதல் கூறிய);* ***இந்நல்லவன் தோற்பதே*** - *இந்த நல்ல அறப் பண்புகள் உடையவன் ஆகிய (சடாயு) தோல்வி அடைவதா?;* ***நரகன் வெல்வதே*** -*நரகைச் சேர்தற்கு உரியான் ஆகிய (இராவணன்) வெல்வதா?;* ***பாவமோ வெல்வதும்*** - *பாவந்தானோ வெற்றி பெறுவது;* ***வேதம் பொய்க்குமோ*** - *வேதம் விளக்கும் (அறம்) பொய்த்து விடுமோ?;* ***அறம் இல்லையோ*** - *(இவ்வுலகில்) தருமம் இல்லாமல் போய்விட்டதோ;* ***என இரங்கி ஏங்கினாள்***- *என்று மனம் கலங்கிப் புலம்பினாள்.*

*'என்னைப் பாதுகாக்க வந்த இந்த நல்லவன் தோல்வியடைய, நரகத்தில் புகத்தகு தீச் செயல் செய்த இராவணன் வெல்வதா? தருமமே வெல்லும் என்ற வேத மொழி பொய்த்து விட்டதோ? பாவம் தான் வெல்லும் போலும். அறம் உலகில் இல்லையோ?' எனச் சீதை இரங்கி ஏங்கினாள். உற்றேனை - வினையாலணையும் பெயர். ஏகார ஓகாரங்கள் வினாப் பொருளில் வந்து, இது மிகத் தகுதியில்லா நிலை என்பதை விளக்குகின்றன. நரகன் - நரகத்தைச் சேர்தற்கு உரியனான இராவணன். தீமையின் அழிவில் அவலம் இல்லை. அத்தீமையை அழிக்க நன்மைபடும் பெருந்துயரிலே உள்ளதுதான் அவலம் என்பார் கூற்றை ஈண்டு உன்னுக.*

***3449. 'நாண் இலேன் உரைகொடு***
***நடந்த நம்பிமீர்!***
***நீள் நிலை அறநெறி***
***நின்றுளோர்க்கு எலாம்***
***ஆணியை, உந்தையர்க்கு***
***அமைந்த அன்பனை,***
***காணிய வம்' என,***
***கலங்கி விம்மினாள்.***

***நாண் இலேன் உரை கொடு*** - *நாணம் அற்றவளாகிய என்னுடைய சொற்களைக் கேட்டு;* ***நடந்த நம்பிமீர்*** - *('என்னைப் பிரிந்து) நடந்த ஆடவர் திலகங்களே;* ***நீள் நிலை அற நெறி*** - *அழிவற்று நிலை பெற்றுள்ள அற வழியில்;* ***நின்றுளோர்க்கு எலாம்*** - *ஊன்றி நிற்பவர்களுக்கெல்லாம்;* ***ஆணியை*** - *உரையாணியை ஒத்தவனும்;* ***உந்தையர்க்கு அமைந்த அன்பனை*** - *உங்கள் தந்தைக்குப் பொருந்திய நட்பு உடையவனும் ஆகிய சடாயுவைக்;* ***காணியவம்*** - *காண்பதற்காகவாவது வாருங்கள்;* ***எனக் கலங்கி விம்மினாள்*** -*என்று கூறி மனம் கலங்கி விம்மி அழுதாள்.*

*'என் சொற் கேட்டுப் பிரிந்தவர்களே அறத்தின் ஆணியை, உந்தையர்க்கு அமைந்த உற்ற நண்பனைக் காணிய வருக' எனச் சீதை கலங்கிக் கதறினாள். நாண் இலேன் உரை கொடு - இராமனிடம் மாய மானைப் பற்றித் தரும்படி கேட்ட போது கூறிய "நாயக நீயே பற்றி நல்கலை போலும் என்னா சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சீறிப் போனாள். (3303)*

*என்ற பாடல் கருத்தையும், இலக்குவனிடம்*

*"ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்,      பெரு மகன் உலைவுறு பெற்றி கேட்டும், நீ வெருவலை நின்றனை; வேறு என்? யான் இனி      எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென், ஈண்டு' எனா, (3331)*

*என்று கூறிய பாடல் கருத்தையும் உள்ளடக்கி வந்தது. ஆணி -உரையாணி, பொன்னின் மாற்றைக் காட்டும் கல் எனலுமாம். உந்தையர் - உம் தந்தையார் நின்றுளோர் - வினையாலணையும் பெயர், கொடு -இடைக்குறை, வம் - வாரும் அல்லது வம்மின் என்பதன் விகாரம் என்பர்.*

***3450. 'கற்பு அழியாமை என்***
***கடமை; ஆயினும்,***
***பொற்பு அழியா வலம்***
***பொருந்தும் போர்வலான்***
***வில் பழியுண்டது;***
***வினையினேன் வந்த***
***இல் பழியுண்டது' என்று,***
***இரங்கி ஏங்கினாள்.***

***கற்பு அழியாமை -** கற்புக் கெடாமல் இருப்பது; **என் கடமை ஆயினும் -** எனது கடமையே ஆனாலும்; **பொற்பு அழியா வலம் பொருந்தும் -** அழகு (பண் பழகு) கெடாத வலிமை பொருந்திய;**போர் வலான் -** போர்த் தொழிலில் வல்லானாகிய இராமனது; **வில் பழியுண்டது -** (கோதண்டம் என்னும்) வில்லுக்குப் பழி வந்தது; **வினையினேன் வந்த -** தீவினையினேன் ஆகிய (யான்) தோன்றிய; **இல் பழியுண்டது -** குடிக்குப் பழி வந்தது; **என்று இரங்கி ஏங்கினாள் -** என்று கூறி வருத்தம் கொண்டு அழுதாள்.*

*இராமன் மனைவியாகிய எனக்குக் கற்பழியாமை கடன் என்று கற்புக் கெடாது நான் இருந்தேன் என்றாலும், பெரு வலி பொருந்திய போர்த் தொழில் வல்ல இராமனது வில்லுக்கும் யான் பிறந்த குடிக்கும் என்னால் பெரும்பழி வந்தது' என்று கூறி வருத்தம் கொண்டு அழுதாள். வலம் - வலிமை, வில் - கோதண்டம் என்னும் வில், இல் - குடி (வீடு எனக் கொண்டு) ஆகுபெயர் எனினுமாம் அழியா - ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். வினையினேன் - வினையாலணையும் பெயர்.*

***3451. 'எல் இயல் விசும்பிடை***
***இருந்த நேமியாய்!***
***சொல்லிய அற நெறி***
***தொடர்ந்த தோழமை***
***நல் இயல் அருங் கடன்***
***கழித்த நம்பியைப்***
***புல்லுதியோ?' என,***
***பொருமிப் பொங்கினாள்.***

***எல் இயல் -*** *ஒளி பொருந்திய;* ***விசும்பிடை இருந்த -*** *வானுலகத்தில் இருந்த;* ***நேமியாய் -*** *ஆணைச் சக்கரத்தை உடைய தசரத சக்கரவர்த்தியே;* ***சொல்லிய அறநெறி தொடர்ந்த -*** *(நூல்களில்) சொல்லப்பட்ட அறவழியைத் தொடர்ந்து;* ***தோழமை -*** *நண்பனுக்குரிய;* ***நல் இயல் அருங்கடன் கழித்த -*** *நன்மை பொருந்திய அரிய கடனைக்கழித்த;* ***நம்பியைப் புல்லிதியோ -*** *சடாயுவை (வானுலகில்) தழுவிக்கொள்ளுவாயோ?;* ***எனப் பொருமிப் பொங்கினாள் -*** *என்று கூறி விம்மி அழுதாள்.*

*முன்பே வானடைந்த தசரதச் சக்கரவர்த்தியே! ஒரு நண்பனுக்கு உரிய கடன் கழிக்க வந்து உயிர் விட்ட உன் அருமைத் தோழனை அங்கு நீ தோழமை மகிழ்வோடு அணைத்துக் கொள்வாயா என்று சீதை விம்மி அழுதனள் என்க. எல் - ஒளி. தோழமை நல் இயல் அருங்கடன் - இடுக்கண்களைவதாம் நட்பு (குறள் 788) என்றபடி பிறர் செய்ய விரும்பாத, கடமை.*

*இராவணன் சீதையைத் எடுத்துச் செல்லுதல்*

***3452. ஏங்குவாள் தனிமையும்,***
***இறகு இழந்தவன்***
***ஆங்குறு நிலைமையும்,***
***அரக்கன் நோக்கினான்;***
***வாங்கினன், தேரிடை***
***வைத்த மண்ணொடும்,***
***வீங்கு தோள்மீக் கொடு,***
***விண்ணின் ஏகினான்.***

***ஏங்குவாள் தனிமையும் -*** *(முன் சொன்ன படி) புலம்புகின்றவள் ஆகிய சீதையினது துணையில்லாத தனிமையையும்,* ***இறகு இழந்தவன் ஆங்குறு நிலைமையும் -*** *சிறகு இழந்தவன் ஆகிய சடாயு அவ்விடத்து அடைந்த நிலைமையையும்;* ***அரக்கன் நோக்கினான் -****அரக்கனாகிய இராவணன் பார்த்து;* ***தேரிடை வைத்த மண்ணொடும் வாங்கினன் -*** *(இனித் தடுப்பார் இல்லை என எண்ணி) தேரின் மேல் பெயர்த்து எடுத்து வைத்த நிலத்தோடு சீதையை எடுத்து;* ***வீங்கு தோள் மீக்கொடு -****(தன்) பருத்த தோள்களின் மேல் வைத்துக் கொண்டு;* ***விண்ணின் ஏகினான் -*** *ஆகாய வழியில் (இலங்கையை நோக்கிச்) சென்றான். சடாயு தேர்க் குதிரைகளைக் கொன்று (3438) தேர்ப் பாகனையும்அழித்தமை (3436) யால் இராவணன் சீதையைத் தேரில் கொண்டு செல்ல முடியாமையால் நிலத்தொடு பருத்த தோள் மீது ஏந்தி இலங்கையைநோக்கிச் சென்றான் என இப்பாடலில் கவிஞர் கூறியுள்ளார். மீ - மேல், மண் - பர்ண சாலையொடு பெயர்த்து எடுக்கப்பட்ட மண். இதனை "கீண்டான் நிலம் யோசனை கீழொடு மேல் (3390) கொண்டான் உயர் தேர் மிசை (3391) என்ற கவிஞர் வாக்கால் அறிக.*

***3453. விண்ணிடை வெய்யவன்***
***ஏகும் வேகத்தால்,***
***கண்ணொடு மனம் அவை***

*சுழன்ற கற்பினாள்,*
*உள் நிறை உணர்வு அழிந்து*
*ஒன்றும் ஓர்ந்திலள்;*
*மண்ணிடை, தன்னையும்*
*மறந்து, சாம்பினாள்.*

***விண்ணிடை -** வான வெளியில்; **வெய்யவன் ஏகும் வேகத்தால் -** கொடியவன் ஆகிய இராவணன் செல்லுகின்ற வேகத்தினால்;**கண்ணொடு மனம் அவை -** கண்களும் மனமும் ஆகிய அவை; **சுழன்ற கற்பினாள் -** சுழலும் கற்புடையவள் ஆன சீதை; **உள் நிறை உணர்வு அழிந்து -**உள்ளத்தில் நிறைந்த அறிவு அழியப் பெற்று; **ஒன்றும் ஓர்ந்திலள் -** யாதொன்றையும் உணர முடியாதவளாகி; **மண்ணிடை தன்னையும் மறந்து சாம்பினாள் -** நிலத்தில் தன்னையும் மறந்து மூர்ச்சை அடைந்து சோர்ந்து கிடந்தாள்.*

*இராவணன் வானவெளியில் மண்ணொடும் கொண்டு போன வேகத்தால் சீதை கண்ணும் மனமும் சுழன்று அறிவு அழிந்து மயங்கி விழுந்தாள். ஓர்ந்திலள் - முற்றெச்சம்.*
*சடாயு வானம் நோக்கி இரங்குதல்*

*3454. ஏகினன் அரக்கனும்;*
*எருவை வேந்தனும்,*
*மோக வெந் துயர் சிறிது*
*ஆறி, முன்னியே,*
*மாகமே நோக்கினென்;*
*வஞ்சன் வல்லையில்*
*போகுதல் கண்டு, அகம்*
*புலர்ந்து சொல்லுவான்:*

***அரக்கனும் -** அரக்கனாகிய இராவணனும்; **ஏகினன் -** (மேல் கூறியவாறு) சென்றான்; **எருவை வேந்தனும் -** கழுகுகளுக்கு அரசனாகியசடாயுவும்; **மோக வெந்துயர் சிறிது ஆறி -** மயக்கம் தந்த கொடிய துன்பத்தில் இருந்து சிறிது தெளிந்து; **முன்னியே -** (சிறிது) எண்ணிப்பார்த்து; **மாகமே நோக்கினென் -** இராவணன் சென்ற திசையையேபார்த்து; **வஞ்சன் வல்லையில் போகுதல் கண்டு -** வஞ்சனை உடைய இராவணன் விரைவாகப் போதல் கண்டு; **அகம் புலர்ந்து -** மனம் வருந்தி; **சொல்லுவான் -** (கீழ்க் கண்டவற்றைச்) சொல்லத் தொடங்கினான்.*

*சடாயு மயக்கம் சிறிது ஆறித் தேறி இராவணன் செல்லும் திசையைப் பார்த்துச் சில சொல்லத் தொடங்கினான். மோகம் - மயக்கம். முன்னி - எண்ணிப் பார்த்து. மாகம் - திக்கு வானமுமாம். அகம் - மனம்.*

*3455. 'வந்திலர் மைந்தர்தாம்;*
*"மருகிக்கு எய்திய*

*வெந் துயர் துடைத்தனென்"*
*என்னும் மெய்ப் புகழ்*
*தந்திலர், விதியினார்;*
*தரும வேலியைச்*
*சிந்தினர்; மேல் இனிச்*
*செயல் என் ஆம்கொலோ?*

***மைந்தர் தாம் வந்திலர் -*** *என் மக்கள் ஆகிய இராம இலக்குவர் வந்தார்களில்லை;* ***மருகிக்கு எய்திய -*** *மருமகளுக்கு நேர்ந்த;* ***வெந்துயர் துடைத்தனென் -*** *கொடுந்துன்பத்தை நீக்கினேன்;* ***என்னும் மெய்ப்புகழ் தந்திலர் விதியினார் -*** *என்கிற உண்மையான புகழை எனக்குக் கொடுத்திடாத விதியானவர்;* ***தரும வேலியைச் சிந்தினர் -*** *அற வேலியை முறித்து அழித்தவரானார்;* ***மேல் இனிச் செயல் என் ஆம் கொலோ -*** *இனி மேல் விளையும் செயல் என்னாகுமோ?*

*என் மக்கள் வந்தார்களில்லை, மருகிக்கு நேர்ந்த துயர் துடைத்து யான் மெய்ப் புகழ் பெற விதியினார் இடந்தந்திலர். அவரே அற வேலியை முறித்து அழித்தவரானார். இனி விளையும் செயல் யாதோ என்றபடி. விதியே தரும வேலியைச் சிந்தும் கருவியாக ஆனதால் தருமத்தைக்கொன்று வாழும் அரக்கர்களின் மேல் இனிச் செயத்தகு செயல் யாது உளதுஎன்றபடி. தருமவேலி - உருவகம். கொல் - ஐயப் பொருளில் வந்த இடைச்சொல்.*

*3456. 'வெற்றியர் உளர்எனின், மின்னின்*
*நுண் இடைப்*
*பொன்-தொடிக்கு, இந்*
*நிலை புகுதற்பாலதோ?*
*உற்றதை இன்னது*
*என்று உணரகிற்றிலேன்;*
*சிற்றவை வஞ்சனை,*
*முடியச் செய்ததோ?*

***வெற்றியர் உளர் எனின் -*** *வெற்றி பெறும் (வலி படைத்த) இராமலக்குவர் அங்கு இருந்திருப்பர் எனின்;* ***மின்னின் நுண் இடை -*** *மின்னல் போல் விளங்குகிற நுண்மையான இடையையுடைய;* ***பொன்- தொடிக்கு -*** *பொன்னால் ஆகிய வளையலையும் (அணிந்த சீதைக்கு);* ***இந்நிலை புகுதற் பாலதோ -*** *இப்படிப்பட்ட துன்பம் தரும் நிலை நேர்ந்திருக்கக் கூடியதாகுமோ? (நேர்ந்திருக்காது என்றபடி);* ***உற்றதை இன்னது என்று -*** *அவர்களுக்கு நேர்ந்த நிலைமை இதுதான் என்று;* ***உணரகிற்றிலேன் -*** *அறிகின்றிலேன்;* ***சிற்றவை வஞ்சனை -*** *சிறியதாயாகிய கைகேயியினது சூழ்ச்சி;* ***முடியச் செய்ததோ -*** *(அவர்களுக்கு இத்தகைய துன்பமாக) முடியுமாறு செய்ததோ என்றபடி.*

*இராம இலக்குவர் அவ்விடம் இருந்திருந்தால் சீதைக்கு இத்தகு கொடுமையான துன்பம் நேர்ந்திருக்காது. அவர்களுக்கு என்ன நேர்ந்தது என்று எனக்குத் தெரியவில்லை. கைகேயியினது சூழ்ச்சி இவ்வாறு எல்லாம் முடியச் செய்ததோ என்று*

*சடாயு எண்ணினான். இன் - உவம உருபு. பொன் தொடி - ஆகுபெயர்.*

***3457. 'பஞ்சு அணை பாம்பணை***
***ஆகப் பள்ளி சேர்***
***அஞ் சனவண்ணனே***
***இராமன்; ஆதலால்,***
***வெஞ் சின அரக்கனால்***
***வெல்லற்பாலனோ?***
***வஞ்சனை இழைத்தனன்,***
***கள்ள மாயையால்.***

***பாம்பணை பஞ்சு அணை ஆக -*** *ஆதிசேடன் என்கிற பாம்புப்படுக்கை பஞ்சு மெத்தை ஆக;* ***பள்ளி சேர் -*** *(அங்கு) திருவனந்தல் செய்தருளுகிற;* ***அஞ்சன வண்ணனே இராமன் -*** *நீல வண்ணனே இராமன்;* ***ஆதலால் -*** *ஆகையால், (அந்த இராமன்);* ***வெஞ்சின அரக்கனால் -*** *கொடிய சினம் உடைய அரக்கனாகிய (இராவணனால்);* ***வெல்லற் பாலனோ -*** *வெல்லுவதற்கு உரியனோ;* ***கள்ள மாயையால் -*** *(ஆகவே அவன்) திருட்டு மாயச் செயலால்;* ***வஞ்சனை இழைத்தனன் -*** *(இத்தகு) வஞ்சனைச் செயலைச் செய்து உள்ளான். இராமன் திருமாலவதாரம் ஆதலால் அவனை எதிர்த்து நின்று வென்று சீதையை எடுத்துக் கொண்டு வந்திருக்க முடியாது. கள்ள மாயையால் தான் அவன் சீதையைக் கவர்ந்து வந்திருக்க வேண்டும் எனச் சடாயு எண்ணினான் என்க. இப்பாடல் சடாயுவின் நுண்ணறிவுத் திறத்தையும், இதுதான் நடந்திருக்க முடியும் என்று உய்த்துணரும் திறமையையும் வாழ்வு அனுபவத்தின் கனிவையும் காட்டி நிற்றல் உணர்ந்து மகிழும்படி அமைந்துள்ளது.* 5

***3458'வேர்அற அரக்கரை வென்று,***
***வெம் பழி***
***தீரும், என் சிறுவனும்;***
***தீண்ட அஞ்சுமால்***
***ஆரியன் தேவியை அரக்கன்,***
***நல் மலர்ப்***
***பேர் உலகு அளித்தவன் பிழைப்பு***
***இல் சாபத்தால்.'***

***என் சிறுவனும் -*** *என் மகனாகிய இராமனும்;* ***அரக்கரை வேர் அறவென்று -*** *(சீதையைக் கவர்ந்ததை முன்னிட்டு) அரக்கர்களை அடி வேரும் அழியுமாறு முழுதும் வென்று;* ***வெம்பழிதீரும் -*** *(தன்) கொடிய பழியைத் தீர்த்துக் கொள்வான்;* ***அரக்கன் -*** *அரக்கன் ஆகிய இராவணனும்;* ***நல்மலர்ப் பேர் உலகு அளித்தவன் -*** *(திருமாலின் நாபிக்) கமலத்தில் தோன்றி இப்பெரிய உலகைப் படைத்த பிரமனது;* ***பிழைப்பு இல் சாபத்தால் -*** *தப்புதல் இல்லாத சாபத்தினால்;* ***ஆரியன் தேவியைத் தீண்ட அஞ்சும் -*** *சிறப்புடைய இராமனின் மனைவியாகிய சீதையைத் தொட அஞ்சுவான்.*

*வேர் அற - முழுதும் கெடும் படி, சிறுவன் - மகன் இங்கு இராமன் ஆல் - அசை.*

***3459. பருஞ் சிறை இன்னன***
***பன்னி உன்னுவான்,***
***'அருஞ் சிறை உற்றனள்***
***ஆம்' எனா, மனம்;***
***'பொரும் சிறை அற்றதேல்,***
***பூவை கற்பு எனும்***
***இருஞ் சிறை அறாது' என,***
***இடரின் நீங்கினான்.***

***பருஞ்சிறை -*** *பெரிய சிறகுகளை உடைய சடாயு;* ***இன்னன பன்னி -*** *இத்தகைய சொற்களைச் சொல்லி;* ***அருஞ்சிறை உற்றனள் ஆம் எனா மனம் உன்னுவான் -*** *(சீதை) நீங்குதற்கு அரிய (இராவணனது) சிறைச் சாலையை அடைந்தாள் போலும் என்று மனத்தில் நினைத்து;**பொரும் சிறை அற்றதேல் -*** *போர் செய்கிற (என்) சிறகுகள் அழிவடைந்ததுஎனினும்;* ***பூவை கற்பு எனும் இருஞ்சிறை அறாது என -*** *நாகண வாய்ப்புள் போன்ற (இனிய மொழி பேசும்) சீதையினுடைய கற்பு என்கிற பெரிய சிறகு அழியாது என்று எண்ணி;* ***இடரின் நீங்கினான் -****துன்பம் நீங்கியவனானான். பலவாறு எண்ணிய சடாயு சீதை இராவணனது நீங்குதற்கு அரிய சிறைச் சாலையை அடைந்தாள் போலும் என எண்ணி, அவ்வாறெனினும் என் சிறகுகள் போலச் சீதையின் கற்பெனும் சிறகு அழியாது என எண்ணி வருத்தம் நீங்கினான். பருஞ்சிறை - பெரிய சிறகுகள்; இங்கு ஆகுபெயராய்ச் சடாயுவைக் குறித்தது. பூவை - நாகண வாய்ப்புள் (இனிய மொழி) குறித்தது. சிறையுற்றாலும் கற்பெனும் இருஞ்சிறை அறாது என்றதன் நயம் காண்க. திருக்குறட் கருத்தையும் உன்னுக. பருஞ்சிறை - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

***3460. அம் சிறை குருதி ஆறு***
***அழிந்து சோரவும்,***
***'வஞ்சியை மீட்டிலென்'***
***என்னும் மானமும்,***
***செஞ்செவே மக்கள்பால்***
***சென்ற காதலும்,***
***நெஞ்சுற, துயின்றனன்***
***உணர்வு நீங்கலான்.***

***அம்சிறை -*** *தன் அழகிய சிறகுகள்;* ***குருதி ஆறு அழிந்து சோரவும் -*** *குருதி யாற்றுப் பெருக்கத்தால் கெட்டுச் சோர்வடைய;* ***வஞ்சியை மீட்டிலென் -*** *வஞ்சிக் கொடி போன்ற (சீதையை) மீட்டேன் இல்லையே;* ***என்னும் மானமும் -*** *என்று (மனதில்) எண்ணியமான உணர்வும்;* ***செஞ்செவே மக்கள்பால் சென்ற காதலும் -*** *நேராகத் (தன்) மக்களின் மேல் சென்ற அன்பு உணர்ச்சியும்;* ***நெஞ்சுற -*** *(தன்) மனத்தில் நிறைந்து நிற்க;* ***உணர்வு நீங்கலான் -*** *அறிவு. அழியாதவனாகிய (சடாயு);* ***துயின்றனன் -*** *மயங்கி உறங்கினான்.*

வாளால் வெட்டப்பட்ட சிறகுகளில் இருந்து பெருகிய குருதி இழப்பால் ஏற்பட்ட தளர்ச்சியும், சீதையை மீட்க முடியவில்லையே என்ற மான உணர்ச்சியும் இராமலக்குவர்களிடம் சென்ற காதல் உணர்ச்சியும் தன் மனத்தில் நிறைந்திருக்கச் சடாயு தன் உணர்வு நீங்காமல் மயக்கம் உற்றான். செஞ்செவே - நேராக. வஞ்சி - உவமையாகுபெயர்.

சீதை சிறைப்படல்

***3461. வஞ்சியை அரக்கனும்***
***வல்லை கொண்டுபோய்,***
***செஞ்செவே திரு உருத்***
***தீண்ட அஞ்சுவான்,***
***நஞ்சு இயல் அரக்கியர்***
***நடுவண், ஆயிடை,***
***சிஞ்சுப வனத்திடைச்***
***சிறைவைத்தான் அரோ.***

**அரக்கனும் -** அரக்கன் ஆகிய இராவணனும்; **வஞ்சியை -**வஞ்சிக் கொடி போன்ற சீதையை; **வல்லை கொண்டு போய் -** விரைவாக எடுத்துக் கொண்டு போய்; **திரு உரு செஞ்செவே தீண்ட அஞ்சுவான் -** (சீதையின்) திருவுருவத்தை (வலிய) நேராகத் தொடுதற்கு அஞ்சியவனாய்; **ஆயிடை -** அவ்விடத்தில்; **சிஞ்சுபவனத்திடை -** அசோக வனத்தின் இடையில்; **நஞ்சு இயல் அரக்கியர் நடுவண் -** நஞ்சின் தன்மை பொருந்திய கொடிய அரக்கியர்களுக்கு நடுவில்; **சிறை வைத்தான் -** (சீதையைச்) சிறைக் காவலில் வைத்தான்.

இராவணன் சீதையை விரைவாக மண்ணொடுங் கொண்டு போய் அவளது திருவுருத் தீண்ட அஞ்சியவனாய் அசோக வனத்தில் நச்சுத் தன்மை உள்ள அரக்கியர்களுக்கு நடுவில் சிறைக் காவலில் வைத்தான். வல்லை - விரைவாக. சிஞ்சுபவனம் - அசோக வனம். அஞ்சுவான் -முற்றெச்சம். அரோ - அசை.

இராமலக்குவர் சந்திப்பு

***3462. இந் நிலை இளையவன்***
***செயல் இயம்பினாம்;***
***'பொன் நிலை மானின்பின்***
***தொடர்ந்து போகிய***
***மன் நிலை அறிக'***
***என, மங்கை ஏவிய***
***பின் இளையவன் நிலை***
***பேசுவாம்அரோ.***

**இளையவன் செயல் -** இந்த இராவணனது செயலை; **இந்நிலை -** இவ்வாறாக; **இயம்பினாம் -** எடுத்துக் கூறினோம்; **பொன் நிலை மானின் பின் -** பொன் மானின் பின்னால்; **தொடர்ந்து போகிய -** தொடர்ந்துபோன; **மன் நிலை அறிக என -** தலைவன் ஆகிய இராமனது தன்மையை அறிவாயாக, என்று; **மங்கை ஏவிய -** சீதை கட்டளை இட்ட படி; **பின் இளையவன் -** (இராமனைத் தொடர்ந்து) பின்னால் போன இலக்குவனுடைய; **நிலை பேசுவாம் -** தன்மையை இனிக் கூறுவோம்.

இதுவரை இராவணன் செயலையும் சடாயு செயலையும் கூறிய நாம், இனிப் பொன் மானின் பின் போனவனைத் தொடர்ந்து சீதையின் கட்டளைப் படி போன இலக்குவனின் செயலைக் கூறுவோம் என்றபடி. அரோ - அசை.

*3463.* **ஒரு மகள் தனிமையை**
**உன்னி, உள்உறும்**
**பருவரல் மீதிடப்**
**பதைக்கும் நெஞ்சினான்,**
**பெருமகன் தனைத் தனிப்**
**பிரிந்து பேதுறும்,**
**திரு நகர்ச் செல்லும்,**
**அப்பரதன் செய்கையான்.**

**ஒரு மகள் -** ஒப்பற்ற சீதையது; **தனிமையை உன்னி -** தனித்திருக்கும் நிலையை எண்ணி; **உள் உறும் -** மனத்தில் பொருந்திய; **பரு வரல் மீதிட -** துன்பம் மிகுதிப்படுவதால்; **பதைக்கும் நெஞ்சினான் -** துடிக்கின்ற மனத்தை உடைய (இலக்குவன்); **பெருமகன் தனை -** அண்ணனாகிய, (இராமனைப்); **தனிப் பிரிந்து பேதுறும் -** பிரிந்து தனித்து வருந்துகிற; **திருநகர்ச் செல்லும் -** அயோத்திக்குச் செல்ல வேண்டிய (கட்டாயத்துக்கு உள்ளான); **அப்பரதன் செய்கையான் -** அந்தப் பரதனின் செயல் போன்ற செயலுடையவனாய்....... (அடுத்த பாடலில் வரும் விரைவில் செல்கின்றான் என முடியும்).

இராமனை அயோத்திக்குத் திருப்பி அழைத்துச் செல்ல சித்திர கூடத்துக்கு வந்த பரதன். இராமன் ஆணையிட்டதைத் தவிர்க்க முடியாமல் கோசலம் மீண்டான். 'மெய்ம்மையால் என்ற சொல்லையும், அந்த நாள் எலாம் ஆள் என் ஆணையால்' (2490) 'நீ என் ஆணையை மறுக்கலாகுமோ சொன்னது செய்தி ஐய துயர் உழந்து அயரல் என்றான்' (2491) என்ற சொல்லையும் மறுக்க முடியாது மனம் இல்லாமல் நந்தியம் பதியிடை நாதன் பாதுகம் செந் தனிக் கோல் முறை செலுத்த அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினனாய் (2514) பரதன் இருந்தது போல இலக்குவனும்

'போகின்றேன் அடியனேன்; புகுந்து வந்து கேடு ஆகின்றது; அரசன் தன் ஆணை நீர் மறுத்து "ஏகு" என்றீர்; இருக்கின்றீர் தமியிர்', என்று பின் வேகின்ற சிந்தையான் விடை கொண்டு ஏகினான் (3334)

என்று சீதையிடம் கூறிச் சென்ற கட்டளையை மறுக்க முடியாத நிலையை இங்குப் 'பரதன் செய்கையான்' என்ற உவமையால் கவிஞர் விளக்கியுள்ளார். கட்டளையை

*மறுக்க இயலாமை, வருத்தம் என்பவை பரதன் இலக்குவன் இருவருக்கும் பொதுத் தன்மையாதலை உணர்க. பருவரல் - துன்பம்.*

***3464. தெண்திரைக்கலம் என***
***விரைவில் செல்கின்றான்;***
***புண்டரீகத் தடங்காடு***
***பூத்து, ஒரு***
***கொண்டல் வந்து இழிந்தன***
***கோலத்தான்தனைக்***
***கண்டனன்; மனம் எனக்***
***களிக்கும் கண்ணினான்.***

***தெண்திரைக் கலம் என -*** *தெளிந்த அலைகளை உடைய கடலில் ஓடும் மரக்கலம் போல;* ***விரைவில் செல்கின்றான் -*** *வேகமாகச் செல்கின்றவனாகிய இலக்குவன்;* ***புண்டரிகத் தடங் காடு பூத்து -*** *செந்தாமரை மலர்கள் நிறைந்த பெரிய காடு ஒன்று பூத்தல் பெற்று;****ஒரு கொண்டல் வந்து இழிந்தன -*** *ஒப்பற்ற கருமேகம் வந்து இறங்கியது போன்ற;* ***கோலத்தான் தனை -*** *திருமேனி அழகு உடைய (இராமனை);* ***கண்டனன் -*** *கண்டான்;* ***மனம் எனக் களிக்கும் கண்ணினான் -****தன் மனம் போலவே மகிழ்ச்சி அடையும் கண்களை உடையவனானான்.*

*விரைவாகச் சென்ற இலக்குவன், இராமனைக் கண்டான் என்க. இராமனின் உடல் நிற அழகுக்குக் கருமேகமும், கண், கை, பாதம், வாய், உந்தி ஆகியவற்றிற்குச் செந்தாமரை மலர்த் தொகுதியும் உவமையாக வந்தன. இராமனைக் கண்ட இலக்குவன் மனம் களித்தது போன்றே தரிசித்த கண்ணும் களித்தது என்க. புண்டரீகம் - செந் தாமரை, செல்கின்றான் - முற்றெச்சம். தடங்காடு - உரிச்சொல் தொடர்.*

***3465. 'துண்ணெனும் அவ் உரை***
***தொடர, தோகையும்,***
***பெண் எனும் பேதைமை***
***மயக்க, பேதினால்***
***உள் நிறை சோரும்'***
***என்று, ஊசலாடும் அக்***
***கண்ணனும் இளவலைக்***
***கண்ணுற்றான் அரோ.***

***துண்ணெனும் -*** *கேட்பவர் அஞ்சித் திடுக்கிடும் படி (வெளிப்பட்ட மாரீசனது);* ***அவ்உரை -*** *அந்த (மாயமானின்) சொல்;* ***தொடர -*** *தன் செவியில் சென்று பட;* ***தோகையும் -*** *மயில் போன்ற சாயலை உடைய சீதையும்;* ***பெண் எனும் பேதைமை மயக்க -*** *பெண்மை என்கிற அறியாத தன்மையின் மயக்கத்தால்;* ***பேதினால் -*** *(உண்டாகும்) (மன) வேறு பாட்டினால்;* ***உள் நிறை சோரும் என்று -*** *மன உறுதி குலைவாள் என்று;* ***ஊசலாடும் அக்கண்ணனும் -*** *மனத் தடுமாற்றத்தால் வருந்தும்*

*(அந்தக்) கருநிறம் உடைய இராமனும்;* ***இளவலைக் கண்ணுற்றான் -*** *(தன்) தம்பியாகிய இலக்குவனைப் பார்த்தான்.*

*மாரீசனின் மாயக் குரல் கேட்டுப் பெண்மைக்கு உரிய பேதைமையால் சீதை மனம் தடுமாறி வருந்துவாள் என எண்ணித் தடுமாறி வருந்திய இராமன் இலக்குவனைக் கண்டான். இலக்குவன் இராமனைத் தேடிவரும் போது இராமன் மாரீசனது குரலால் சீதை மயங்கி வருந்துவாள் எனவிரைந்து பர்ணசாலையை நோக்கி வர, இருவரும் இடையில் சந்தித்தனர் என்க. பேதினால் - வேறுபாட்டால். அரோ - ஈற்றசை.*

*63எழுசீர் ஆசிரிய விருத்தம்*

***3466. புன் சொற்கள் தந்த பகுவாய் அரக்கன் உரை***
***பொய் எனாது, புலர்வாள்,***
***வன் சொற்கள் தந்து மட மங்கை ஏவ,***
***நிலை தேர வந்த மருளோ?***
***தன் சொல் கடந்து தளர்கின்ற நெஞ்சம்***
***உடையேன் மருங்கு, தனியே,***
***என்சொல் கடந்து, மனமும் தளர்ந்த***
***இள வீரன் வந்த இயல்பே.***

***என் சொல் கடந்து -*** *சீதையைக் காப்பாய் என்று நான் கூறிய சொல்லை மீறி;* ***மனமும் தளர்ந்த இளவீரன் -*** *மனத் தளர்ச்சியொடு கூடிய இளைய வீரனாகிய (இலக்குவன்);* ***தன் சொல் கடந்து -****(இது உண்மையான மானல்ல மாயமான் என்று) தான் கூறிய சொற்களைக் கேட்காது மீறி;* ***தளர்கின்ற நெஞ்சம் உடையேன் மருங்கு -*** *(அம் மாயமானின் குரல் என்ன துன்பம் தருமோ என்று) சோர்கின்ற மனத்தை உடையவனாகிய, என்னை(த்தேடிப்) பக்கத்திற்கு;* ***தனியே வந்த இயல்பே -*** *தனித்து வந்த நிலையானது;* ***மடமங்கை -*** *பேதைப் பண்புள்ள சீதை;****புன்சொற்கள் தந்த பகுவாய் அரக்கன் உரை பொய் எனாது -****பொய்ச் சொற்களைக் கூறிய பிளவுபட்ட வாயை உடைய அரக்கனாகிய (மாரீசனது) சொற்கள் பொய்ம்மையும் வஞ்சனையும் உடையவை என்று கருதாது;* ***புலர்வாள் -*** *(உடலும் உள்ளமும்) வாடுபவள் ஆகிய சீதை;****வன்சொற்கள் தந்து -*** *கடுமையான சொற்களைச் சொல்லி;* ***ஏவ -*** *ஏவியதால்;****நிலை தேரவந்த மருளோ -*** *(என் நிலை பற்றித்தான் அறிந்தவனாயினும் சீதையின் பொருட்டு) என் தன்மையை அறிய வந்த மயக்கச் செயலோ? (அடுத்த பாடலில் தொடரும்).*

*இலக்குவன் இது மாயமான் என்று கூறியதைக் கேட்காது "இல்லாத தில்லை இளங்குமரா" என மானைத் தொடர்ந்து சென்று உண்மை அறிந்து எய்து வீழ்த்த, அவ்வரக்கன் வஞ்சனைச் சொல்லெழுப்பினான். அது கேட்ட சீதை பெரிய பேதைமைப் பெண்மையால் எனக்குத் தீங்கு என வருந்தி ஏவ, என் சொற்கடந்து இலக்குவன் வருகின்றானோ என இராமன் மனந்தளர்ந்து கருதினான் என்க.*

***3367. என்று உன்னி, 'என்னை விதியார் முடிப்பது?'***
***என எண்ணி நின்ற இறையை,***
***பொன் துன்னும் வில் கை இள வீரன்***

***வந்து புனை தாள் இறைஞ்சு பொழுதில்,***
***மின்துன்னு நூலின் மணி மார்பு***
***அழுந்த, விரைவோடு புல்லி, உருகா-***
***நின்று, 'உன்னி வந்த நிலை என்கொல்?'***
***என்று, நெடியோன் விளம்ப, நொடிவான்:***

***என்று உன்னி -*** *என்று நினைத்து;* ***'விதியார் முடிப்பது என்னை' என எண்ணி நின்ற -*** *ஊழ்வினை முடிக்கும் செயல் யாதோ என்றுஎண்ணிப் பார்த்து நின்ற;* ***இறையை -*** *இராமனை;* ***பொன்துன்னும் வில் கை இள வீரன் -*** *அழகு நிறைந்த வில்லைக் கையில் ஏந்திய இளவீரனாகிய இலக்குவன்;* ***வந்து புனைதாள் இறைஞ்சு பொழுதில் -*** *வந்து நெருங்கி அழகிய திருவடிகளை வணங்கும் பொழுதில்;* ***மின் துன்னு நூலின் மணிமார்பு அழுந்த -*** *மின்னலை ஒத்து விளங்குகிற முப்புரி நூல் அணிந்த (தன்) அழகிய மார்பு அழுந்தும்படி;* ***விரைவோடு புல்லி உருகா-*** *வேகமாகத் தழுவி மனம் உருகி;* ***'நின்று உன்னி வந்த நிலை என்கொல்?' -*** *நின்று (நீ) நினைத்து வந்த' விதத்துக்கு என்ன காரணம்?;* ***என்று நெடியோன் விளம்ப -*** *என்று இராமன் வினவ;* ***நொடிவான் -*** *(இலக்குவன்) விடை கூறலானான்.*

*ஊழ்வினையால் என்ன கேடு வர இருக்கிறதோ? என்று எண்ணி நின்ற இராமன், தன் காலில் விழுந்த அழகிய வில் பிடித்த இலக்குவனைத் தன் முப்புரி நூல் அணிந்த மார்பில் இறுகத் தழுவி, நீ வந்த காரணம் என்ன என்று கேட்க, அதற்கு இலக்குவன் விடை கூறலானான். புனைதாள் - வீரக்கழல் புனைந்த தாள் எனினுமாம் விளம்ப - கேட்க, நொடிவான் - விடை கூறுவான். நெடியோன் - மாபலியை அழிக்க நீண்டவன். உருகா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.*

***3468. 'இல்லா, நிலத்தின் இயையாத, வெஞ் சொல்***
***எழ, வஞ்சி எவ்வமுற, யான்,***
***"வல் வாய் அரக்கன் உரை ஆகும்"***
***என்ன, மதியாள், மறுக்கம் உறுவாள்,***
***"நில்லாது, மற்று இது அறி, போதி" என்ன,***
***நெடியோய் புயத்தன் வலி என்***
***சொல்லால் மனத்தின் அடையாள், சினத்தின்***
***முனிவோடு நின்று துவள்வாள்,***

***நிலத்தின் இல்லா -*** *மண்ணுலகத்தில் இல்லாததும்;* ***இயையாத -*** *பொருத்தம் இல்லாததும் ஆகிய;* ***வெஞ்சொல் எழ -*** *கொடிய வஞ்சனைச் சொல் (வந்து காதில்) விழுந்ததனால்;* ***வஞ்சி எவ்வமுற -*** *வஞ்சிக் கொடி போன்ற சீதை மிக்க துன்பம் அடைய;* ***யான் வல்வாய் அரக்கன் உரை ஆகும் என்ன -*** *நான் அச்சொல் வலிய வாயினை உடைய அரக்கனது சொல்லாகும் என்று சொல்ல;* ***மதியாள் மறுக்கம் உறுவாள் -*** *(என்) சொல்லை (உண்மை என) மதிக்காமல் கலக்கம் எய்தியவளாகி;* ***மற்று நில்லாது இது அறிபோதி என்ன -*** *(இங்கு) நில்லாமல் இதன் உண்மை என்ன என அறிந்துவரப் போ என்று கட்டளை இட;* ***என் சொல்லால் -*** *(நான்) என் வாய்ச் சொற்களால்;* ***நெடியோய் புயத்தின் வலி -*** *நெடியோனாகிய (உன்) தோள் வலிமையை*

*(எடுத்துச் சொல்ல); **மனத்தின் அடையாள் -**(அதனை) தன் மனத்தில் ஏற்றுக் கொள்ளாதவளாய்; **சினத்தின் முனிவோடு நின்று துவள்வாள் -** பெருஞ் சினத்தோடு நின்று மனந்தளர்பவளாய், (அடுத்த பாடலில் தொடரும்).*

*புதுமையான குரலைக் கேட்ட நான், 'இது அரக்கனின் வஞ்சனைக் குரல்' என்று சொல்லச் சீதை அதை மனதில் ஏற்காது பெருஞ்சினம் கொண்டு வருந்தி 'நீ இங்கு நில்லாது சென்று உண்மையை அறிந்து வருக' என்றாள் என்பதாம். எவ்வம் - துன்பம். மறுக்கம் - கலக்கம் துவள்தல் - தளர்தல். மதியாள் - முற்றெச்சம். போதி - முன்னிலை ஒருமை வினைமுற்று.*

***3469. ' "ஏகாது நிற்றிஎனின், யான் நெருப்பினிடை***
***வீழ்வென்" என்று, முடுகா,***
***மா கானகத்தினிடை ஓடலோடும், மனம்***
***அஞ்சி, வஞ்ச வினையேன்,***
***போகாது இருக்கின், இறவாதிருக்கை***
***புணராள் எனக்கொடு உணரா,***
***ஆகாது இறக்கை; அறன் அன்று; எனக்கொடு,***
***இவண் வந்தது' என்ன, அமலன்,***

***ஏகாது நிற்றி எனின் -** நீ (இராமனைத் தேடிச்) செல்லாமல் இருப்பாயானால்; **யான் நெருப்பினிடை வீழ்வென் என்று -** நான் நெருப்பில் விழுந்து உயிரைப் போக்கிக் கொள்வேன் என்று சொல்லி; **முடுகா -** விரைந்து; **மா கானகத்தினிடை ஓடலோடும் -** சீதை பெரிய காட்டில் ஓடத் தொடங்கிய போது; **மனம் அஞ்சி -** (நான்) மனத்தால் பயந்து; **வஞ்சவினையேன் போகாது இருக்கின் -** வஞ்சனை உடையவன் என்று கருதப்பட்ட (நான்) போகாமல் இருந்தால்; **இறவா திருக்கைபுணராள் எனக்கொடு உணரா -** (அவள்) இறக்காமல் இருப்பதிலிருந்து நீங்காள் என்று (என்) மனத்தில் கொண்டு உணர்ந்து; **இறக்கை ஆகாது அறன் அன்று எனக்கொடு -** (அவ்வாறு சீதை) இறத்தல் ஆகாது (அது) அறம் அல்ல என்று கொண்டு; **இவண் வந்தது என்ன -** (நான்) இங்கு வந்தது என்று (இலக்குவன்) சொல்ல; **அமலன் -**குற்றமற்றவனாகிய இராமன்.... (அடுத்த பாடலில் தொடரும்.)*

*சினந்த சீதை 'நீ இராமனைத் தேடிச் செல்லா விட்டால் நான் நெருப்பில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்வேன்' என்று காட்டில் ஓடத் தொடங்கியதால், அஞ்சிப் போகாமல் இருந்தால் பிராட்டி இறந்து படுவார், இது அறன் அன்று என்று எண்ணி, உன்னைத் தேடி வந்தேன்' எனஇலக்குவன் இராமனிடம் கூறினான். முடுகா - முடுகி, விரைந்து. இறக்கை - இறத்தல், அமலன் - குற்றமற்றவன்; ஈண்டு இராமன். வஞ்ச வினையேன் - சீதை தன்னை வஞ்சகன் என்று எண்ணிக் கூறிய 'நின்ற நின் நிலை இதுநெறியிற்று அன்று' (3330) என்ற சொல்லை உள்ளடக்கிக் கூறியதாகும். வீழ்வென் - தன்மை ஒருமை வினைமுற்று. மாகானகம் - உரிச்சொல்தொடர்; முடுகா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டுவினையெச்சம்.*

***3470. 'சாவாதிருத்தல் இலள் ஆனது உற்றது;***
***அதையோ, தடுக்க முடியாது;***
***ஆஆ! அலக்கண் உறுவாள், உரைத்த***
***பொருளோ, அகத்தின் அடையாள்;***
***காவா நிலத்தின் வரும் ஏதம்; மற்று***
***அது ஒழியாது; கைக்கொடு அகலப்***
***போவார், பிரிக்க முயல்வார், புணர்த்த***
***பொருள் ஆம் இது' என்று தெருளா,***

***சாவாதிருத்தல் இலள் ஆனது உற்றது -*** *(இவ் இலக்குவன் சீதை சொற் கேட்டுத் தேடி வராமல் இருந்திருந்தால்) அவள் இறவாதிருக்கும் தன்மையள் அல்லள் என்று (சொல்லும்) நிலைமை நேர்ந்தது;* ***அதையோ தடுக்க முடியாது -*** *(எனவே அவ்வாறு நடக்க வேண்டிய) அந்தச் செயலையோ தடுக்க இயலாது;* ***உரைத்த பொருளோ -*** *(இலக்குவன்) உரைத்த உண்மைப் பொருள்களோ;* ***அலக்கண் உறுவாள் -*** *பெருந்துன்பம் கொண்டவள் ஆகிய சீதையின்;* ***அகத்தின் அடையாள் -*** *மனத்தில் பதியவில்லை;* ***ஆ ஆ -*** *அந்தோ அந்தோ;* ***காவா நிலத்தின் ஏதம் வரும் -*** *காவல் இல்லாத (அந்த) இடத்தில் (சீதைக்குத்) தீங்கு வரும்;* ***மற்று அது ஒழியாது -*** *அத்தீங்கு (வராமல்) நீங்காது;* ***கைக்கொடு அகலப் போவார் -*** *(சீதையைக்) கைப்பற்றிக் கொண்டு போகக் கருதியவர்கள்;* ***பிரிக்கமுயல்வார் -*** *(எங்கள் இருவரையும் அவளை விட்டுப்) பிரிக்க முயன்றவர்கள்;* ***புணர்த்த பொருள் ஆம் இது -*** *செய்த வஞ்சனையாகும் இச்செயல்;* ***என்று தெருளா -*** *என்று முடிவு செய்து, (அடுத்த பாடலில் தொடரும்).*

*சீதை இறக்காமல் இருக்க வேண்டும் என்றால், இலக்குவன் அவளை விட்டுப் பிரிந்து என்னைத் தேடி வருவதைத் தவிர வேறு வழியில்லை. இலக்குவன் கூறிய ஆறுதல் சொற்கள் மனங் கலங்கிய சீதையின் உள்ளத்தில் பதியவில்லை. காவல் இல்லாமல் இருக்கும் அவளுக்குத் துன்பம் வந்தே தீரும் என எண்ணுகிறேன். இச்செயல்கள் சீதையைப் பிரிக்க எண்ணியவர்களின் சூழ்ச்சி' என இராமன் முடிவு செய்தான். அலக்கண் - துன்பம். அகம் - உள்ளம். தெருளா - முடிவு செய்து. ஆ ஆ - இரக்கக் குறிப்புச் சொல். காவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மற்று - அசை.*

***3471. 'வந்தாய் திறத்தில் உளதன்று, குற்றம்;***
***மடவாள் மறுக்கம் உறுவாள்,***
***சிந்தாகுலத்தொடு உரைசெய்த செய்கை***
***அது தீரும் என்று தெளிவாய்;***
***முந்தே தடுக்க, ஒழியாது, எடுத்த***
***வினையேன் முடித்த முடிவால்,***
***அந்தோ கெடுத்தது' என, உன்னி உன்னி***
***அழியாத உள்ளம் அழிவான்.***

***வந்தாய் திறத்தில் -*** *(சீதையைத் தனியே விட்டு விட்டு) வந்த உன் பக்கலில்;* ***குற்றம் உளது அன்று -*** *குற்றம் எதுவும் இல்லை;* ***மடவாள் -*** *பேதைமைப் பண்புள்ளவளாகிய சீதை;* ***மறுக்கம் உறுவாள் -*** *மனத் தடுமாற்றம் உடையவளாய்;* ***சிந்தா குலத்தொடு -***

*மனத்தில் தோன்றிய பெரும் துயரத்தோடு;* ***உரைசெய்த செய்கை -*** *சொல்லியதும் அதன்விளைவும்;* ***அது தீரும் என்று தெளிவாய் -*** *மனந் தடுமாறியவர் சொல்லியது என்று நீ கருதினால்) அவள் சொல்லால் தோன்றிய வருத்தம் தீரும் என்று கூறி; (வந்தது மாயவல் அரக்கன் கொண்ட பொன் மான் உரு என்று) தெளிந்து கொண்டு;* ***முந்தே தடுக்க -*** *(நீ) முன்பே தடுத்தலைச் செய்ய;* ***ஒழியாது -*** *(உன் சொல்கேட்டு அதை) விட்டு விடாமல்;* ***எடுத்த வினையேன் -*** *(மானைப் பிடிக்க) எடுத்த செயல் உடையவனாய்;* ***முடித்த முடிவால் -*** *(நான்) செய்து முடித்த (அந்த) முடிவினால்;* ***அந்தோ கெடுத்தது என -*** *ஐயோ (அம்முடிவு) என்னைக் கெடுத்து விட்டது என்று;* ***உன்னி உன்னி -*** *எண்ணி எண்ணி;* ***அழியாத உள்ளம் அழிவான் -*** *என்றும் அழிந்து வருந்தாத (தன்) மனம் அழிந்தவனாய்..... (அடுத்த பாடலில் தொடரும்).*

*'சீதை மனத்தில் பெருந்துயர் கொண்டு சொல்லிய சொல்லை ஏற்று அவளைத் தனியே விட்டு விட்டு வந்தது உன் குற்றம் அன்று. அவளும் மாய மானின் குரலை என் குரல் என்று எண்ணி உன்னிடம் கூறியதால் அவளிடமும் எக்குற்றமும் இல்லை. நீ தடுத்தும் அதை ஏற்காது மாய மானைத் தொடர்ந்து சென்று உங்கள் இருவரின் செயல்களுக்கும் காரணமான என்னால் தான் இத் துன்பம் ஏற்பட்டது' என இராமன் இலக்குவனிடம் கூறினான். அந்தோ - இரங்கல் குறிப்பு.*

***3472. 'பாணிக்க நின்று பயன் ஆவது என்னை?***
***பயில் பூவை அன்ன குயிலைக்***
***காணின், கலந்த துயர் தீரும்; அன்றி,***
***அயல் இல்லை' என்று, கடுகி,***
***சேண்உற்று அகன்ற நெறியூடு சென்று,***
***சிலை வாளி அன்ன விசை போய்,***
***ஆணிப் பசும் பொன் அனையாள் இருந்த***
***அவிர் சோலை வல்லை அணுகா,***

***பாணிக்க நின்று பயன் ஆவது என்னை? -*** *காலம் நீட்டித்துக் கொண்டு இங்கு நின்று ஆகும் பயன் என்ன?;* ***பயில் பூவை அன்ன குயிலை -*** *பழகிய நாகணவாய்ப் பறவை போன்ற குயிலாகிய சீதையைக்;* ***காணின் -*** *கண்டால்;* ***கலந்த துயர் தீரும் -*** *என் மனத்தில் தோன்றிய துன்பம் நீங்கும்;* ***அன்றி அயல் இல்லை -*** *இது தவிர வேறு ஒரு வழியுமில்லை;* ***என்று -*** *என்று கூறி;* ***கடுகி -*** *விரைவாக;* ***சேண் உற்று அகன்ற நெறியூடு சென்று -*** *நெடுந்தொலைவு பொருந்தி விரிந்துள்ள வழியில் (நடந்து) சென்று;* ***சிலை வாளி அன்ன விசை போய் -*** *(தன்) வில்லில் இருந்து வெளிப்படும் அம்பினைப் போன்று;* ***வல்லை -*** *(மிக) விரைவாக;* ***ஆணிப் பசும் பொன் அனையாள் -*** *மாற்று உயர்ந்த பசும் பொன்னை ஒத்தவளாகிய சீதை;* ***இருந்த அவிர் சோலை அணுகா -*** *இருந்த (அழகு) விளங்குகிற (பஞ்சவடி என்னும்) சோலையை நெருங்கி.... (அடுத்த பாடலில் தொடரும்).*

*இனி, இங்குக் காலம் நீட்டிப்பதால் பயன் இல்லை. சீதையைக் கண்டாலல்லது என் மனத்துன்பம் நீங்காது' என்று கூறி, இராமன் தன் வில்லில் இருந்து வெளிப்படும் அம்பு போல் விரைந்து போய்ச் சீதை இருந்த பஞ்ச வடியினை அடைந்தான். பாணித்தல் - காலம் நீட்டல், பயில் பூவை - பழகிய நாகண வாய்ப்புள். குயில் - சீதை. ஆணிப்பொன்*

*- மாற்று உயர்ந்த பொன். குயில் - உவமை ஆகுபெயர். இப்பாடலில் இராமன் விரைவாகப் பஞ்சவடியை நோக்கி வருவதற்கு அவனது இராம பாணமே உவமையாக அமைந்துள்ளது. இதை அங்கதன் தூதுப் படலத்தில் பார்மிசை வணங்கிச் சீயம் விண் மிசைப் படர்வதே போல் வீரன் வெஞ்சிலையில் கோத்த அம்பு என விசையின் போனான். (கம்ப. 6986) என்று வந்துள்ளதை இணைத்துக் காண்க.*

*சீதையைக் காணாது இராமன் திகைத்தல்*

*கலித்துறை*

***3473. ஓடி வந்தனன்; சாலையில்,***
***சோலையின் உதவும்***
***தோடு இவர்ந்த பூஞ் சுரி***
***குழலாள் தனைக் காணான்;***
***கூடு தன்னுடையது பிரிந்து,***
***ஆர் உயிர், குறியா,***
***நேடி வந்து, அது கண்டிலது***
***ஆம் என, நின்றான்.***

***ஓடிவந்தனன் -** முற்கூறிய படி விரைவாக இராமன் ஓடி வந்து; **சாலையில் -** பர்ணசாலையில்; **சோலையின் உதவும் -**சோலையில் (பூத்து) உதவுகிற; **தோடு இவர்ந்த பூஞ்சுரி குழலாள்தனை -**இதழ்கள் நெருங்கிய மலர்களை அணிந்த கடை குழன்ற கூந்தலை உடையவள் ஆகிய சீதையை; **காணான் -** காணாதவனாகி; **ஆர்உயிர் -** அருமையான உயிர்; **தன்னுடையது கூடு பிரிந்து -** தன்னுடையதான உடலைப் பிரிந்து சென்று; **குறியா நேடி வந்து -** (அவ்வுடம்பைக்) குறியாகக் கொண்டுதேடிக் கொண்டு வந்து; **அது கண்டிலது ஆம் என -**அவ்வுடம்பைக் காணாது (திகைத்து) நின்றது போல் எனும் படி; **நின்றான் -**(இராமன்) நின்றான். விரைவாகச் சீதை இருந்த பர்ண சாலைக்கு ஓடிவந்த இராமன், அங்கு அவளைக் காணாது; உடலை விட்டுப் போயிருந்த உயிர் திரும்பி வந்து தன்னுடலைக் காணாது திகைப்பது போல் திகைத்து நின்றான். தோடு - இதழ்கள், சுரி குழலாள் - கடை குழன்ற கூந்தலை உடையாள். நேடி - தேடி. இப்பாடலில் உடல் சீதைக்கும் உயிர் இராமனுக்கும் உவமை ஆயினவாறு காண்க.*

*இராமனை உயிராகவும் பிராட்டியை உடலாகவும் கம்பர் காட்டிய இடங்கள் முன்னும் உண்டு, பின்னரும் உண்டு. பாலகாண்டம் கடிமணப் படலத்தில் இராமன் சீதையுடன் திருமண வேள்வித் தீயினை வலம் வரும் இடத்தில்*

***மடம்படு சிந்தையள், மாறு பிறப்பின் உடம்பு உயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள் (1249)***

*உயிரைப் பின்தொடரும் உடல் போல இராமனைப் பின் தொடர்ந்தாள் சீதை என்பார் கம்பர். யுத்த காண்டத்து மீட்சிப் படலத்தில் அசோக வனத்திலிருந்து இராமபிரான் இருந்த இடத்துக்குச் சீதைப் பிராட்டி வந்ததை விளக்கும் இடத்திலும்*

*இந்த உயிர் - உடல் ஒப்புமை வருகிறது. 'பிரிந்து போன உயிரைக் காண நேரிட்டால் உடல் எப்படி ஆர்வத்துடன் அவ்வுயிரைக் கவ்வுமோ அது போன்ற உணர்வினைச் சீதையின் முகம் காட்டிற்றாம்.*

***போன பேர் உயிரினைக் கண்ட பொய் உடல் தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் எனல் ஆனனம் காட்டுற.....(10009)***

*இருவரும் முதலில் சேர்ந்த இடம், இடையில் அவ்விருவரும் பிரிந்த இடம், இறுதியில் இருவரும் மீண்டும் சந்தித்த இடம் - ஆகிய மூன்று இடங்களிலும் இராமனை உயிராகவும் சீதையை உடலாகவும் உவமை கொண்ட பாங்கு சிந்தனைக்கு உரியது. கரன்வதைப் படலத்திலும் (3061) இவ் ஒப்புமை காணலாம். சுரிகுழல் - வினைத்தொகை. காணான் - முற்றெச்சம்.*

***3474. கைத்த சிந்தையன், கனங்குழை***
***அணங்கினைக் காணான்-***
***உய்த்து வாழ்தர வேறு ஒரு***
***பொருள் இலான்; உதவ***
***வைத்த மா நிதி, மண்ணொடும்***
***மறைந்தன, வாங்கிப்***
***பொய்த்துளோர் கொள, திகைத்து***
***நின்றானையும் போன்றான்.***

***கனங்குழை அணங்கினைக் காணான் -** சிறந்த குழையை அணிந்த தெய்வத் தன்மை பொருந்திய பெண்ணாகிய சீதையைக் காணாமல்; **கைத்த சிந்தையன் -** (உயிர் வாழ்வதை) வெறுத்த மனம் உடையவனாகிய இராமன்; **உதவ -** (தனக்கு) உதவ; **வாழ்தர வேறு ஒரு பொருள் இலான் -**வைத்து வாழ்வதற்கு ஒரு பொருளும் இல்லாதவன் போலவும்; **உய்த்து -**வாழ்வதற்காகக் கொண்டு சென்று; **மண்ணொடும் மறைந்தன -**மண்ணில் புதைத்து மறைத்து; **வைத்த மாநிதி -** வைத்த பெரும் செல்வத்தை; **பொய்த்துளோர் வாங்கிக் கொள -** வஞ்சனை உடையவர்கள் தோண்டி (எடுத்துக்) கொள்ள; **திகைத்து நின்றானையும் போன்றான் -** (வாழ வழி இல்லாமல்) திகைப்பு அடைந்து நின்றவனையும் ஒத்தான்.*

*தான் பிற்காலத்தில் வல்லாங்கு வாழ எண்ணிச் செல்வத்தைப் பூமியில் புதைத்து வைத்தவன், அதனை வஞ்சனையாளர் தோண்டி எடுத்துக் கொண்டமை கண்டு வருந்தித் திகைத்து நிற்பது போல் சீதையைக் காணாது இராமன் வருந்தித் திகைத்து நின்றனன் என்க. கைத்த - வெறுத்த. 'வாங்கி - தோண்டி. பொய்த்துளோர் - கள்வர் எனினுமாம். மாநிதி - உரிச்சொல் தொடர், மண்ணொடும் மறைந்தன - மண்பாண்டத்தில் இட்டு மண்ணில் புதைத்து வைத்தனவாகிய செல்வங்கள்; இப்புதையலைக் கொள்பவர்கள் பாத்திரத்துடன் எடுத்துச் செல்வர். அது போலவே சீதையைக் கவர்ந்த இராவணன் பன்ன சாலையோடு பெயர்த்து அவளை எடுத்துச் சென்றான். இராவணன் பெயர்த்ததைக் கூறும் பாடலையும் (3390) இப்பாடலையும் இணைத்துப் பார்த்தால், மண் - இராவணன் பெயர்த்த மண் எனவும்,பாத்திரத்தில் உள்ள செல்வம் - பெயர்த்த மண்ணின் மேல் இருந்த பர்ண சாலையில் தங்கிய சீதை எனவும், பர்ணசாலை - மண் பாத்திரம் எனவும் பொருந்தி வருதல் எண்ணுக.*

***3475. மண் சுழன்றது; மால்***
***வரை சுழன்றது; மதியோர்***
***எண் சுழன்றது; சுழன்ற,***
***அவ் எறி கடல் ஏழும்;***
***விண் சுழன்றது; வேதமும்***
***சுழன்றது; விரிஞ்சன்***
***கண் சுழன்றது; சுழன்றது,***
***கதிரொடு மதியும்.***

***மண்சுழன்றது -*** *நிலம் சுழன்றது;* ***மால் வரை சுழன்றது -*** *பெரியமலைகள் சுழன்றன;* ***மதியோர் எண்சுழன்றது -*** *ஞானிகள் உடையஎண்ணமும் திரிந்து சுழன்றது;* ***அவ் எறி கடல் ஏழும் சுழன்ற -****அந்த அலை எறியும் கடல்கள் ஏழும் சுழன்றன;* ***விண்சுழன்றது -*** *வானமும் சுழன்றது;* ***வேதமும் சுழன்றது -*** *குலையா வேதங்களும் குலைந்து சுழன்றன;* ***விரிஞ்சன் கண் சுழன்றது -*** *பிரமனுடைய கண்களும் சுழன்றன;* ***கதிரொடு மதியும் சுழன்றது -*** *சூரியனும் சந்திரனும் நிலை குலைந்து சுழன்றன.*

*இப்பாடல் அந்தர்யாமித்தத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. கம்பர் மூல நூலில் இல்லாத இரணியன் வதைப் படலத்தை தம் நூலில் அமைந்தமைக்குக் காரணம், கலந்தும் கரைந்தும் உள்ள பரம் பொருளின் அந்தர் யாமித் தத்துவத்தை விளக்கவே என்பர். அப்படலத்தின் உள்ள*

***தன்னுளே உலகங்கள் எவையும் தந்து, அவை- தன்னுளே நின்று தான் அவற்றுள் தங்குவான் (6247)*** *சாணினும் உளன்; ஓர் தன்மை அணுவினைச் சத கூறு இட்ட கோணினும் உளன்; மாமேருக் குன்றினும் உளன்; இந்நின்ற தூணினும் உளன்; நீ சொன்ன சொல்லினும் உளன், இத்தன்மை காணுதி, விரைவின் என்றான்; 'நன்று' எனக் கனகன் சொன்னான். (6312) என்ற பாடல் கருத்தையும் உள்ளடங்கிய நிலையில் இப்பாடல் அமைந்துள்ள தன்மையை எண்ணுக.*

***3476. 'அறத்தைச் சீறும்கொல்? அருளையே***
***சீறும்கொல்? அமரர்***
***திறத்தைச் சீறும்கொல்? முனிவரைச்***
***சீறும் கொல்? தீயோர்***
***மறத்தைச் சீறும்கொல்? "என்கொலோ***
***முடிவு?" என்று, மறையின்***
***திறத்தைச் சீறும்கொல்***
***நெடுந்தகையோன்?' என, நடுங்கா,***

***நெடுந்தகையோன் -*** *பெருமைப் பண்புகள் உள்ளவனாகிய இராமன்;* ***அறத்தைச் சீறும்கொல் -*** *அறத்தைச் சீறுவானோ?;* ***அருளையே சீறும் கொல் -*** *கருணைப் பண்பையே சீறுவானோ?;* ***அமரர் திறத்தைச் சீறும் கொல் -*** *தேவர்களின் தன்மையைச் சீறுவானோ?;* ***முனிவரைச் சீறும் கொல் -*** *முனிவர்களைச் சீறுவானோ?;* ***தீயோர்***

***மறத்தைச் சீறும் கொல் -*** *தீய அரக்கர்களின் கொடுமையைச் சீறுவானோ?;* ***மறையின் திறத்தைச் சீறும் கொல் என்று -*** *வேதங்களின் தன்மையைச் சீறுவானோ? என்று எண்ணி;* ***என்கொலோ முடிவு என நடுங்கா -*** *(அவன் சினத்தின் முடிவு) என்ன முடிவு ஆகுமோ என்று நடுங்கி, (அடுத்த பாடலில் தொடரும்).*

*அறங்காக்க வந்த தனக்கு உதவாத அறம் முதலிய அறச்சார்புப் பொருள்களையும் அதற்கு எதிரிடையான மறச் சார்புப் பொருளையும் இராமன் சீறுவானோ என்றபடி, திறம் - தன்மை. கொல் - ஐயப்பொருள் தருவதோர் இடைச் சொல்.*

***3477. நீல மேனி அந் நெடியவன்***
***மன நிலை திரிய,***
***மூல காரணத்தவனொடும்***
***உலகெலாம் முற்றும்***
***காலம் ஆம் என, கடையிடு கணிக்க***
***அரும் பொருள்கள்***
***மேல கீழுற, கீழன***
***மேலுறும் வேலை,***

***கடையிடு -*** *(முழுதுமாக) முடிவைக் கொண்ட;* ***கணிக்க அரும் பொருள்கள் -*** *கணக்கிடுவதற்கு முடியாத பொருள்கள்;* ***நீலமேனி அந்நெடியவன் -*** *நீலத்திரு மேனியை உடைய அந்தப் பெரியவனாகிய இராமனது;* ***மனநிலை திரிய -*** *மனநிலை மாறியதனால்;* ***மூல காரணத் தவனொடும் உலகெலாம் முற்றும் காலம் ஆம் என -*** *உலகிற்கு மூல காரண ஆகிய இறைவனோடு உலகம் முழுவதும் அழியும் காலம் இது ஆகும் என்று கருதும்படி;* ***மேல கீழுற கீழன மேலுறும் வேலை -*** *மேலுள்ளவை யெல்லாம் கீழாக கீழாக உள்ளவை எல்லாம் மேலாக நிலை தடுமாறும் பொழுது, (அடுத்த பாடலில் தொடரும்).*

*காரணத்தவனொடு - காரணத்தவனிடத்தில்; வேற்றுமை மயக்கம்.*

*தேர்த் தடம் பற்றி இராமன் தேடிச் செல்லுதல்*

***3478. 'தேரின் ஆழியும் தெரிந்தனம்;***
***தீண்டுதல் அஞ்சிப்***
***பாரினோடு கொண்டு அகழ்ந்ததும்***
***பார்த்தனம்; பயன் இன்று***
***ஒரும் தன்மை ஈது என் என்பது,***
***உரன் இலாதவர் போல்;***
***தூரம் போதல்முன் தொடர்தும்'***
***என்று, இளையவன் தொழலும்,***

**தேரின் ஆழியும் தெரிந்தனம் -** தேரினது சக்கரங்கள் கண்டோம்; **தீண்டுதல் அஞ்சி -** சீதையைத் தொடுவதற்கு அஞ்சிப்; **பாரினோடு கொண்டு அகழ்ந்ததும் பார்த்தனம் -** நிலத்தோடு பெயர்த்துக் கொண்டு சென்றுள்ளதையும் பார்த்தோம்; **ஈது என் என்பது -** இது எவ்வாறு நடந்தது என்று கருதுவது?; **உரன் இலாதவர் போல் -** வலிமை இல்லாதவர் போல; **ஒரும் தன்மை பயன் இன்று -** எண்ணிக் கொண்டிருப்பதால் பயன் எதுவும் இல்லை; **தூரம் போதல் முன் தொடர்தும் -** (நிலத்தொடு கொண்டு போனவன்) நீண்ட தூரம் போவதற்கு முன்பே (அவனைப்பின்) தொடர்வோம்; **என்று இளையவன் தொழலும் -** என்று கூறி இளையவனாகிய இலக்குவன் வணங்கிய அளவில், (அடுத்த பாடலில் தொடரும்.)

தேரின் சுவடுகளையும், நிலத்தொடு கொண்டு போனதையும் கண்டோம். எனவே, இது யாரால் எவ்வாறு நடந்தது என்று வலிமைஇல்லாதவர்போல் எண்ணிக் கொண்டிருப்பதை விட அவனைத் தொடர்ந்து போதலே தக்கது என்று இலக்குவன் கூறி வணங்கினான். ஆழி - சக்கரம். உரன் - வலிமை. தெரிந்தனம் - தன்மைப் பன்மை வினைமுற்று.

*3479.* **'ஆம்; அதே இனி அமைவது' என்று,**
**அமலனும், மெய்யில்**
**தாம வார்கணைப் புட்டிலும்**
**முதலிய தாங்கி,**
**வாம மால் வரை மரன்**
**இவை மடிதர, வயவர்,**
**பூமிமேல் அவன் தேர் சென்ற**
**நெடுநெறி போனார்.**

**அமலனும் -** குற்றம் அற்றவன் ஆகிய இராமனும்; **'ஆம் அதே இனி அமைவது' என்று -** ஆம் அச் செயலே இனிச் செயத்தக்கது என்று கூறி; **வயவர் -** வீரர்களாகிய இராமலக்குவர்; **தாமவார் கணைப்புட்டிலும் முதலிய மெய்யில் தாங்கி -** மாலை போல் அமைந்த நீண்ட அம்பு அறாத்தூணி முதலிய (படைக்கலங்களை) உடம்பில் தரித்துக் கொண்டு; **வாம மால் வரை -** அழகுள்ள பெரிய மலைகள் (மற்றும்); **மரன் இவை மடிதர -** மரங்கள் ஆகிய இவை அழியும் படி; **பூமிமேல் அவன் தேர் சென்ற நெடுநெறி போனார் -** பூமியில் அந்த இராவணனது தேர் சென்ற நீண்ட வழியில் சென்றார்கள்.

அமலன், 'இனிச் செயத்தக்கது நீ கூறிய வாறே' என ஏற்றுக் கொண்டான். உடனே இருவரும் படைக்கலந்தாங்கி இராவணன் தேர் சென்ற வழியில் சென்றனர். தாமம் - மாலை போன்ற வடிவுடைய. வார் - நீண்ட. புட்டில் - அம்பு அறாத்தூணி. வாமம் - அழகு. வயவர் - வீரர். மரன் - கடைப்போலி.

*3480.* **மண்ணின் மேல் அவன் தேர்**
**சென்ற சுவடு எலாம் மாய்ந்து,**
**விண்ணின் ஓங்கியது ஒரு நிலை;**

*மெய் உற வெந்த*
*புண்ணினூடு உறு வேல் என,*
*மனம் மிகப் புழுங்கி,*
*எண்ணி, 'நாம் இனிச் செய்வது*
*என்? இளவலே!' என்றான்.*

***அவன் தேர்*** *- சீதையை எடுத்துச் சென்றவனுடைய, தேரின் சக்கரப் பதிவுகள்;* **மண்ணின் மேல் சென்ற சுவடு எலாம் மாய்ந்து** *-மண்ணின் மேல் சென்ற அடையாளம் எல்லாம் மறைந்து;* **ஒரு நிலை** *- ஓர் இடத்தில்;* **விண்ணின் ஓங்கியது** *- அத்தேர் வானத்தில் உயர்ந்ததாகத் தெரிந்தது; (அது கண்ட இராமன்);* **மெய் உற வெந்த புண்ணினூடு உறுவேல் என** *- முழுதுமாய் வெந்த புண்ணுக்கு இடையில் நுழைந்த வேல் போல;* **மனம் மிகப் புழுங்கி** *- மனத்தால் மிகுதியாகத் தவித்து;* **இளவலே** *- இளையவனே;* **இனி நாம் எண்ணி என் செய்வது** *- இனிமேல் நாம் எண்ணிப் பார்த்து என்ன செய்வது;* **என்றான்** *- (என்று இலக்குவனிடம்) கூறினான். சீதையை எடுத்துச் சென்றவனுடைய தேர்ச்சக்கரப் பதிவுகள் ஓரிடத்தில் மறைந்து தேர் வானத்தை நோக்கி மேலெழுந்து போவது போல் போயிருந்த நிலை கண்ட இராமன், புண்ணில் வேல் நுழைந்தது போல் மனம் வருந்தி இலக்குவனைப் பார்த்து 'இனிச் செயத்தக்கது என்' என்றான்.*

*3481. 'தெற்குநோக்கியது எனும் பொருள்*
*தெரிந்தது, அத்திண்தேர்;*
*மற்கு நோக்கிய திரள்புயத்து*
*அண்ணலே! வானம்,*
*விற்கு நோக்கிய பகழியின் நெடுது*
*அன்று; விம்மி,*
*நிற்கும் நோக்கு இது என் பயத்தது?' என,*
*இளையவன் நேர்ந்தான்.*

***மற்கு நோக்கிய திரள் புயத்து அண்ணலே*** *- (இராமன் சொன்னதைக் கேட்ட இலக்குவன்) மற்போருக்கு எதிர் நோக்குமளவு திரண்ட தோள்களை உடைய பெருமையில் சிறந்தவனே;* **அத்திண்தேர் தெற்கு நோக்கியது எனும் பொருள் தெரிந்தது** *- அந்த வலிய தேர்தென் திசையை நோக்கிச் சென்றுள்ளது என்ற உண்மை தெரிந்து விட்டது;* **விற்கு நோக்கிய பகழியின் வானம் நெடிது அன்று** *- வில்லில் இருந்து புறப்படும் அம்புக்கு வானம் நீண்டது அல்ல;* **விம்மி நிற்கும் நோக்கு இது** *- கலங்கி நின்று எண்ணும் இச் செயல்;* **என்பயத்தது** *- என்ன பயனைத் தரும்;* **என இளையவன் நேர்ந்தான்** *- என்று இலக்குவன் (இராமன் "நாம் இனிச் செய்வது என்?" இளவலே - 3480) என்று கேட்டதற்கு விடை கூறினான்.*

*'போரெனில் புகலும் மற்புயத்து அண்ணலே, இத்தேர் தென் திசை நோக்கிச் சென்றுளது என்பது தெரிகிறது. அது சென்ற வானம் வில்லில் இருந்து வெளிப்படும் அம்புக்கு நீண்டது அல்ல. எனவே கலங்கித் தடுமாறி நிற்பதால் என்ன பயன் என்று இலக்குவன் இராமனிடம் கூறினான். பொருள் - உண்மை, மற்கு - மற்போருக்கு.*

வீணைக்கொடி கண்டு போர் நடந்தமை அறிதல்

***3482. 'ஆகும்; அன்னதே கருமம்'***
***என்று, அத்திசை நோக்கி***
***ஏகி, யோசனை இரண்டு***
***சென்றார்; இடை எதிர்ந்தார்,***
***மாக மால் வரை கால்***
***பொர மறிந்தது மான,***
***பாக வீணையின் கொடி***
***ஒன்று கிடந்தது பார்மேல்.***

***ஆகும் அன்னதே கருமம் என்று -*** *ஆம் அதுவே செய்யத்தக்க செயல் என்று (இராமன் கூறி);* ***அத்திசை நோக்கி ஏகி -****(இருவரும்) அந்தத் தென்திசையை நோக்கிச் சென்று;* ***இரண்டு யோசனை சென்றார் -*** *இரண்டு யோசனை தூரம் சென்றார்கள்;* ***இடை -*** *அந்த இடத்தில்;****மாக மால் வரை கால் பொர மறிந்தது மான -*** *பெரிய மயக்கம் தருகிற மலை ஒன்று பெருங் காற்று வீசுதலால் (நிலத்தில்) விழுந்து கிடந்தது போல்;* ***பாக வீணையின் கொடி ஒன்று பார்மேல் கிடந்தது -*** *துணிபட்ட வீணை வடிவம் எழுதிய கொடி ஒன்று நிலத்தின் மேல் கிடந்ததை';****எதிர்ந்தார் -*** *கண்டார்கள்.*

*இலக்குவன் கூறியதை இராமன் ஏற்றுக் கொள்ள, இருவரும் சீதையை எடுத்துச் சென்ற பகைவனைத் தேடித் தென் திசையில் இரண்டு யோசனை தூரம் சென்றார்கள். செல்லும் வழியில் காற்றால் பெருமலை ஒன்று விழுந்து கிடப்பதைப் போல் விழுந்து கிடந்த துண்டான வீணை வடிவம் எழுதப்பட்ட கொடி ஒன்றைக் கண்டார்கள். மாகம் - பெரிய மால் - மயக்கம், கால் - காற்று, பாக வீணையின் கொடி - துண்டுபட்ட வீணை வடிவம் எழுதிய கொடி, மான - உவம உருபு.*

***3483. கண்டு, 'கண்டகரோடும், அக்***
***காரிகை பொருட்டால்,***
***அண்டர் ஆதியர்க்கு ஆர் அமர்***
***விளைந்தது?' என்று அயிர்த்தார்;***
***துண்டவாளினின் சுடர்க் கொடி***
***துணிந்தது என்று உணரா,***
***புண்டரீகக் கண் புனல்வர,***
***புரவலன் புகல்வான்:***

***கண்டு -*** *(அக் கொடியைப்) பார்த்து;* ***அக்காரிகை பொருட்டால் -*** *அந்த அழகு நீர்மை உடைய சீதையின் பொருட்டு;****கண்டகரோடும் -*** *(கவர்ந்து சென்ற) கொடியவர்களோடு;* ***அண்டர் ஆதியர்க்கு -****தேவர்கள் முதலானவர்களுக்கு;* ***ஆர் அமர் விளைந்தது -*** *கொடிய போர் நடந்தது போலும்;* ***என்று அயிர்த்தார் -*** *என்று ஐயங் கொண்டார்கள்;****புரவலன் -*** *இராமன்;* ***துண்ட வாளினின் -*** *(சடாயுவின்) அலகாகிய வாளினால்;* ***சுடர்கொடி***

***துணிந்தது என்று உணரா -*** *ஒளியுடைய இக் கொடி துண்டுப்பட்டது என்று உணர்ந்து;* ***புண்டரீகக் கண் புனல் வர -****தன் தாமரை மலர் போன்ற கண்களில் கண்ணீர் ஒழுக;* ***புகல்வான் -****கூறத் தொடங்கினான்.*

*அக்கொடியைக் கண்டு சீதை காரணமாகத் தேவர்களுக்கும் கவர்ந்து சென்ற பகைவர்களுக்கும் இடையில் போர் நடந்ததோ என்று முதலில் ஐயங் கொண்டு, பிறகு சடாயுவினது அலகினால் அக் கொடி துண்டானதை உணர்ந்து தன் தாமரை மலர் போன்ற கண்களில் கண்ணீர் பெருக இராமன் கூறத் தொடங்கினான். கண்டகர் - பகைவர். காரிகை - அழகு. துண்டம் - அலகு. புண்டரீகம் - செந்தாமரை. துண்டவாளினின் - உருவகம். உணரா -செய்யா எனும் வாய் பாட்டுடன் பாட்டு வினையெச்சம். புண்டரீகக்கண் - உவமைத்தொகை. கண்டகர் - முள் போன்றவர் என்றலும் உண்டு.*

***3484. 'நோக்கினால், ஐய! நொய்து***
***இவண் எய்திய நுந்தை***
***மூக்கினால் இது முறிந்தமை***
***முடிந்ததால்; மொய்ம்பின்***
***தாக்கினான்; நடு அடுத்தது***
***தெரிகிலம்; தமியன்;***
***யாக்கை தேம்பிடும்; எண் அரும்***
***பருவங்கள் இறந்தான்;***

***ஐய -*** *இளவலே;* ***நோக்கினால் -*** *எண்ணிப் பார்த்தால்;* ***நொய்து இவண் எய்திய -*** *விரைவாக இங்கு வந்து சேர்ந்த;* ***நுந்தை -*** *நின் தந்தையான (சடாயுவினது);* ***மூக்கினால் இது முறிந்தமை முடிந்ததால் -*** *மூக்கினால் இக்கொடி முறிந்திருக்க வேண்டும் என்பது முடிவாகத் தெரிகிறது;* ***மொய்ம்பின் தாக்கினான் -*** *மிக வலிமையாகத் தாக்கி இருக்க வேண்டும்;* ***நடு அடுத்தது தெரிகிலம் -*** *(அவருக்கு) நடுவில் நேர்ந்தது என்ன என்று அறியக் கூடவில்லை;* ***தமியன் -*** *(அவரோ) தனித்தவர் (துணையென யாருமில்லை);* ***யாக்கை தேம்பிடும் -*** *உடல் வலி மிக மெலிந்திடும்;* ***எண் அரும் பருவங்கள் இறந்தான் -*** *கணக்கிட அருமையான நீண்ட காலம் (வாழ்ந்து) கழித்தவர்.*

*'ஐய, இவ்வீணைக் கொடி முறிந்திருக்கும் தன்மையை நோக்கினால் இது சடாயுவினது அலகால் முறிந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. அவர் நீண்ட காலம் வாழ்ந்து உடல் மிக மெலிந்த நிலையிலும் மிக வலிமையாகத் தாக்கியிருப்பார் போலும்; இடையில் அவருக்கு என்ன நேர்ந்ததோ தெரிகிலம்' என இலக்குவனிடம் இராமன் கூறினான். நொய்து - விரைவாக, எளிமையாக எனினுமாம். "நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன்" (பாயிரம் 5) என வருதலைக் காண்க. மொய்ம்பு - வலிமை, நடு அடுத்தது - நடுவில் நேர்ந்தது, தேம்புதல் - உடலோ மனமோ தளர்ந்து வருந்தல்.*

*தெரிகிலம் - தன்மைப் பன்மை வினைமுற்று. யாக்கை - தொழிலாகுபெயர்.*

*3485. 'நன்று சாலவும்; நடுக்க அரும்*
*மிடுக்கினன்; நாமும்,*
*சென்று கூடல் ஆம்; பொழுது*
*எலாம் தடுப்பது திடனால்;*
*வென்று மீட்கினும் மீட்குமால்;*
*வேறுற எண்ணி,*
*நின்று தாழ்த்து ஒரு பயன் இலை'*
*என்றலும், நெடியோன்,*

***சாலவும் நன்று -*** *(இது) மிகவும் நன்மையாயிற்று;* ***நடுக்க அரும்மிடுக்கினன் -*** *(மற்றவரால்) அசைக்க முடியாத வலிமை உடையவனான (அந்தச் சடாயு);* ***பொழுது எலாம் தடுப்பது திடனால் -****(பகைவனை) இன்றைப் பொழுது முழுவதும் தடுத்து நிறுத்துவது திண்ணம்;* ***நாமும் சென்று கூடல் ஆம் -*** *(அதற்குள்) நாமும் (அங்கு சென்று) அவரோடு சேரலாம்;* ***வென்று மீட்கினும் மீட்குமால் -*** *(அதற்குள் அவர் தானே) வெற்றி பெற்றுச் (சீதையை) மீட்டாலும் மீட்டு விடுவார்;* ***வேறுற எண்ணி நின்று தாழ்த்து ஒரு பயன் இலை -*** *வேறு விதமாகப் பலவற்றை எண்ணிக் கொண்டு இங்கு நின்று காலம் தாழ்த்துவதால் ஒரு பயனும் இல்லை;* ***என்றலும் -*** *என்று (இலக்குவன்) கூறிய உடன்;* ***நெடியோன் -*** *உலகளந்தவனாகிய இராமன், (அடுத்த பாடலில் தொடரும்).*

*நடுக்கறு வலி படைத்த சடாயு எதிர்த்துப் போர் செய்திருந்தால், அது மிக நல்லது. அவர் பகைவரை இன்றையப் பொழுது முழுவதும் எதிர்த்துப் போரிடுவார். அதற்குள் நாம் அங்கு அவருக்குத் துணையாகச் சென்று சேரலாம். அதற்குள் அவரே ஒரு வேளை எதிரிகளை வென்று சீதையை மீட்டாலும் மீட்டு விடுவார். பலவாறு எண்ணிக் காலம் தாழ்த்துவதால் ஒரு பயனுமில்லை என்று இலக்குவன் இராமனிடம் கூறினான். சால - மிகுதி. மிடுக்கு - வலிமை. திடன் - திண்ணம். சால - உரிச்சொல்; ஆல் - இரண்டும் அசை.*

*வில், சூலம், புட்டில் முதலியன வீழ்ந்து கிடப்பன காணல்*

*3486. 'தொடர்வதே நலம் ஆம்' என,*
*படிமிசைச் சுற்றிப்*
*படரும் கால் என, கறங்கு என,*
*செல்லுவார் பார்த்தார்;*
*மிடல் கொள் வெஞ் சிலை, விண்*
*இடு வில் முறிந்தென்ன,*
*கடலின்மாடு உயர் திரை*
*என, கிடந்தது கண்டார்.*

***தொடர்வதே நலம் ஆம் என -*** *அவ்வாறு தொடர்ந்து செல்வதே நல்லது என்று கூற;* ***படிமிசைச் சுற்றிப் படரும் கால் என -****நிலத்தில் சுற்றி (விரைந்து) செல்லுகின்ற காற்றைப் போலவும்;* ***கறங்கு என -*** *காற்றாடி போலவும்;* ***செல்லுவார் -*** *விரைந்து செல்லுகின்ற (இராமலக்குவர்);* ***பார்த்தார் -*** *அங்கங்கே தேடிப் பார்ப்பவராகி (நடந்த போது);* ***விண் இடு வில் முறிந்தென்ன -*** *வானத்தில் தோன்றுகிற இந்திரவில் முறிந்து விழுந்திருப்பது போலவும்;* ***கடலின் மாடு உயர்திரை என -****கடலின் பக்கத்தில் ஓங்கி*

*எழுகின்ற அலை போலவும்;* ***மிடல் கொள் வெஞ்சிலை -*** *(விளங்குகிற முறிந்து கிடந்த) வலிமை பொருந்திய கொடிய வில் ஒன்று;* ***கிடந்தது கண்டார் -*** *கிடந்ததைக் கண்டார்கள். இராமன் அவ்வாறு செல்வதே நலம் என்று ஏற்றுக்கொள்ள, இருவரும் அங்கங்கே தேடிச் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு காற்றுப் போலவும் காற்றாடி போலவும் சென்று கொண்டிருந்தபொழுது இந்திரவில் முறிந்து கிடப்பது போலவும், கடலில் ஓங்கி எழுகின்ற அலை போலவும் முறிந்து கிடந்த வலிமை உள்ள வில் ஒன்றைக் கண்டார்கள். படி - நிலம், கால் - காற்று கறங்கு - காற்றாடி, மாடு - பக்கம்; கால் மாடு தலைமாடு என்ற பேச்சு வழக்கை எண்ணுக. இராமலக்குவர் பல்வேறு இடங்களிலும் சுற்றித் துருவித் துருவிப் பார்த்துக் கொண்டு செல்வதால் அவர்களுக்குக் காற்றும் கறங்கும் உவமையாயின. தேடிச் சென்றவர் இருவர் ஆகையால் இரண்டு உவமை அமைந்தது எனலுமாம். இராவணனது முறிந்து கிடந்த வில்லுக்கும் இரண்டு உவமைகள் வந்துள்ளமை காண்க. விண்ணிடு வில் முறிதல் அவனது வில் முறிந்து கிடத்தலுக்கும், கடலின் மாடு உயர் திரை என்பது கடல் மட்டத்திற்கு மேல் உயர்ந்து வரும் அலைகள் போல நில மட்டத்தில் இருந்து அவ்வில் உயர்ந்து கிடந்தது என்பதையும் காட்டவே கம்பர் இவ்வுவமைகளை இரண்டாக அமைத்துள்ளார் என்க.*

***3487. 'சிலை கிடந்ததால், இலக்குவ!***
***தேவர் நீர் கடைந்த***
***மலை கிடந்தென வலியது;***
***வடிவினால் மதியின்***
***கலை கிடந்தன்ன காட்சியது;***
***இது கடித்து ஒடித்தான்;***
***நிலை கிடந்தவா நோக்கு' என,***
***நோக்கினன் நின்றான்.***

***இலக்குவ -*** *இலக்குவனே;* ***சிலை கிடந்ததால் -*** *(இங்கே ஒரு) வில் கிடக்கின்றது;* ***தேவர் நீர் கடைந்த மலை கிடந்தென வலியது -*** *(அவ்வில்) தேவர்கள் பாற்கடலைக் கடையப் (பயன்படுத்திய) மந்தர மலை நிலத்தில் கிடப்பது போல வலிமை உடையது;* ***வடிவினால் மதியின் கலை கிடந்தன்ன காட்சியது -*** *வடிவத்தால் பிறைச் சந்திரன் போன்ற காட்சி அமைப்புக் கொண்டது;* ***இது கடித்து ஒடித்தான் -*** *இவ்வில்லை தன் மூக்கால் கொத்தி ஒடித்திட்டவன் ஆகிய (சடாயுவினது);* ***நிலை கிடந்தவா நோக்கு என -*** *வலிமை இருந்த தன்மையைப் பார் என்று;* ***நோக்கினன் நின்றான் -*** *(இராமன் அவனது தன்மைகளைப் பற்றி) எண்ணிக் தொடர்வதே நலம் எனத் தொடர்ந்து சென்ற இராமலக்குவர், வழியில் மந்தர மலையைப் போலவும், பிறைச் சந்திரனைப் போலவும் காணப்பட்ட வில் ஒன்று கிடந்ததைக் கண்டனர். அதைக் கண்ட இராமன் அவ்வில்லை ஒடித்திட்டவனாகிய சடாயுவினது வலிமையைப் பற்றி எண்ணிக் கொண்டு நின்றான். மலை - மந்தரம். வில்லின் வலிமைக்கு மந்தர மலையும் வடிவத்துக்குப் பிறைச் சந்திரனும் உவமை என்க. நீர் - கடலுக்கு ஆகுபெயர். இங்கு இலக்கணையால் பாற்கடலைக் குறித்தது. 8 கொண்டு நின்றான்.*

*3488*நின்று, பின்னரும் நெடு நெறி
கடந்து, உற நிமிரச்
சென்று நோக்கினர்; திரி
சிகைக் கொடு நெடுஞ் சூலம்
ஒன்று, பல் கணை மழை
உறு புட்டிலோடு இரண்டு
குன்று போல்வன கிடந்த கண்டு
அதிசயம் கொண்டார்.

**நின்று -** *(அவ்வாறு எண்ணிக் கொண்டு) நின்று;* **பின்னரும் நெடுநெறி கடந்து -** *(அதற்குப்) பின்பு நீண்ட வழியைக் கடந்து;* **நிமிர உறச் சென்று -** நேராக *(தெற்கு திசையில்) நீண்ட தூரம் சென்று;* **திரி சிகைக் கொடு நெடுஞ்சூலம் ஒன்று -** *மூன்று தலையை உடைய கொடுமையான பெரிய சூலம் ஒன்றினையும்;* **பல்கணை மழை உறுபுட்டிலோடு இரண்டு -** *பல அம்புகளின் தொகுதி நிறைந்துள்ள அம்பறாத்தூணியாகிய இரண்டினையும்;* **குன்று போல்வன கிடந்த கண்டு -** *மலைகள் போல் கிடந்தவற்றைக் கண்டு;* **அதிசயம் கொண்டார் நோக்கினர் -** *வியப்புக் கொண்டவர்களாய்ப் பார்த்தனர்.*

*நீண்ட தூரம் தெற்கே நேராகச் சென்று முத்தலைச் சூலம், அம்பு அறாத் தூணி ஆகியவை விழுந்து கிடந்ததைக் கண்டு வியப்போடு நோக்கி நின்றனர். சிகை - தலை, உச்சி. மழை - தொகுதி. அந்தாதித் தொடை காண்க.*

*3489.* மறித்தும் சென்றனர்; வானிடை
வயங்குற வழங்கி
எறிக்கும் சோதிகள் யாவையும்
தொக்கன எனலாம்,
நெறிக் கொள் கானகம் மறைதர,
நிருதர்கோன் நெஞ்சின்,
பறித்து வீசிய, கவசமும்
கிடந்தது பார்த்தார்.

**மறித்தும் சென்றனர் -** *மீண்டும் (தொடர்ந்து) சென்றனர்;* **வானிடை வயங்குற வழங்கி -** *வானத்தில் விளக்கம் உண்டாகும் படி சஞ்சரித்து;* **எறிக்கும் சோதிகள் -** *ஒளி வீசுகிற சூரிய சந்திரர்கள்;* **யாவையும் தொக்கன எனலாம் -** *முதலிய எல்லாம் ஒருங்கே சேர்ந்தன என்றுசொல்லுமாறு;* **நெறிக் கொள் கானகம் மறைதர -** *செல்லும் வழி உடைய காட்டு இடம் மறையுமாறு;* **நிருதர் கோன் நெஞ்சின் பறித்து வீசிய -** *அரக்கர் தலைவனாகிய இராவணனின் நெஞ்சில் இருந்து (சடாயு) பறித்து எறிந்திருந்த;* **கவசமும் கிடந்தது பார்த்தார் -** *கவசம் கிடந்ததையும்(இராமலக்குவர் இருவரும்) கண்டார்கள்.* *மீண்டும் தொடர்ந்து சென்ற இராமலக்குவர் வானத்தில் சஞ்சரிக்கும் சூரிய சந்திரரும் பிற கோள்களும் ஒளியுடன் நிலத்தில் விழுந்தது போல விழுந்து கிடந்த இராவணனது மார்புக் கவசத்தைக் கண்டனர். மறித்தும் - மீண்டும். வயங்குற - விளக்கமாக*

*3490.* ***கான் கிடந்தது மறைதர,***
***கால் வயக் கலிமாத்***
***தான் கிடந்துழிச் சாரதி***
***கிடந்துழிச் சார்ந்தார்;***
***ஊன் கிடந்து ஒளிர் உதிரமும்***
***கிடந்துளது; உலகின்***
***வான் கிடந்தது போல்வது***
***கிடந்துழி வந்தார்.***

***கான் கிடந்தது மறைதர*** *- காடு உள்ள இடம் முழுவதும் மறையும்படி;* ***கால் வயக் கலிமாத் தான் கிடந்துழி*** *- காற்றுப் போல் விரைந்து செல்லும் வலிமை படைத்த கடிவாளத்தைப் பூண்ட குதிரைகள் விழுந்து கிடந்த இடத்தையும்;* ***சாரதி கிடந்துழிச் சார்ந்தார்*** *- சாரதிவிழுந்து கிடந்த இடத்தையும் சென்று அடைந்தார்கள்;* ***ஊன் கிடந்து ஒளிர் உதிரமும் கிடந்துளது*** *- அந்த இடத்தில் தசையோடு பொருந்தி விளங்குகிற குருதி சிந்திக் கிடந்தது;* ***உலகின் வான் கிடந்தது போல்வது கிடந்துழி*** *- நில உலகில் (சூரிய சந்திரரும் நட்சத்திரங்களும் உடைய) வானம் கிடந்தது போல் (இராவணனது ஒளியுடை அணிகலன்கள் பல கிடந்த இடத்திற்கு;* ***வந்தார்*** *- வந்தனர்.*

*தொடர்ந்து சென்ற இராமலக்குவர் குதிரைகள் விழுந்து கிடந்ததையும், தேர்ப் பாகன் இறந்து கிடந்ததையும், ஒளியுள்ள பல அணிகலன்கள் சிந்திக் கிடந்ததையும் கண்டனர். கால் - காற்று, வயக்கலிமா - வலிமை படைத்த கடிவாளத்தை உடைய விலங்கு.*

*3491.* ***கண்டு, அலங்கு தம் கைத்தலம்***
***விதிர்த்தனர்-கவின் ஆர்***
***விண்தலம் துறந்து, இறுதியின்***
***விரி கதிர் வெய்யோன்***
***மண்டலம் பல மண்ணிடைக்***
***கிடந்தென, மணியின்***
***குண்டலம் பல, குலமணிப்***
***பூண்களின் குவியல்***

***இறுதியின்*** *- உலக இறுதிக் காலத்தில்;* ***விரிகதிர் வெய்யோன் மண்டலம் பல*** *- ஒளி வீசுகிற சூரிய மண்டலங்கள் பல;* ***கவின்ஆர் விண்தலம் துறந்து*** *- அழகுடைய வானத்தின் இடத்தை விட்டு நீங்கி;* ***மண்ணிடைக் கிடந்தென-*** *நிலத்தில் கிடந்தது போல;* ***மணியின் குண்டலம் பல*** *- மணிகள் பதிக்கப் பெற்ற பல குண்டங்களும்;* ***குலமணிப் பூண்களின் குவியல்*** *-மிகுதியாக மணிகள் பதிக்கப் பெற்ற அணிகலன்களின் மிகுதியையும்;* ***கண்டு*** *-இராமலக்குவர் பார்த்து;* ***அலங்கு தம் கைத்தலம் விதிர்த்தனர்*** *- அசையும் தன்மை உள்ள தங்கள் கைகள் (வியப்பினால் தோன்றி அச்சத்தால்) நடுங்க நின்றார்கள்.*

*உலக ஊழிக் காலத்தில் ஒளி விளங்குகிற சூரிய மண்டலம் தனக்கு உரிய இடமாகிய வானத்தை விட்டு நீங்கி நிலத்தில் கிடப்பது போல், மணிகள் பதிக்கப் பெற்ற குண்டலங்களும் அணிகலன்களும் மிகுதியாகக் கிடப்பவை கண்டு இராமலக்குவர் மலர்க்கரம் விதிர்ப்புற்றார்கள். அலங்குதல் - அசைதல் அலங்குளைப் புரவி (புறநானூறு 2) என்ற வழக்குக் காண்க, விதிர்த்தல் - நடுங்குதல்.*

*இராமன் 'பொருதவர் பலர்" எனல்*

***3492. 'தோள் அணிக் குலம் பல***
***உள; குண்டலத் தொகுதி***
***வாள் இமைப்பன பல உள;***
***மணி முடி பலவால்;***
***நாள் அனைத்தையும் கடந்தனன்,***
***தமியன், நம் தாதை;***
***யாளி போல்பவர் பலர் உளர்***
***பொருதனர்; இளையோய்!***

***இளையோய் -*** *இளையவனே;* ***தோள் அணிக்குலம் பல உள -*** *தோள் வளைகளின் தொகுதி மிகுதியாகக் கிடக்கின்றன;* ***வாள் இமைப்பன குண்டலத் தொகுதி பல உள -*** *ஒளி விடுவனவாகிய காதணிகளின் தொகுதிகள் மிகுதியாக உள்ளன;* ***மணிமுடி பலவால் -*** *மணிகள் பதிக்கப் பெற்ற முடிகள் பல விழுந்து கிடக்கின்றன;* ***நாள் அனைத்தையும் கடந்தனன் தமியன் நம் தாதை -*** *நீண்ட நாட்கள் (வாழ்ந்து) கழித்தவனும், துணையற்றவனுமாகிய நமது தந்தை (சடாயு);* ***பொருதனர் -*** *போர் செய்தோர்;* ***யாளி போல்பவர் பலர் உளர் -*** *சிங்கம் போன்ற (வீரர்) பலர் உளர் போலும் (என்று இராமன் இலக்குவனை நோக்கிக் கூறினான்).*

*தோள் வளையங்களும், காதணிகளும் மணமுடிகளும் பல சிந்தி விழுந்து கிடப்பதால் வயதான, துணையில்லாத நம் தாதையாகிய சடாயுவுடன் பொருதவர் பலர் போலும் என்று இராமன் இலக்குவனிடம் கூறினான். வாள் - ஒளி. நாள் அனைத்தையும் கடந்தனன் - மிக மிக வயதானவன்,*

*'பொருதவன் இராவணன் ஒருவனே' என இலக்குவன் கூறல்*

***3493. திருவின் நாயகன் உரைசெய,***
***சுமித்திரை சிங்கம்,***
***'தருவின் நீளிய தோள் பல,***
***தலை பல, என்றால்,***
***பொருது தாதையை இத்தனை***
***நெறிக் கொடு போனான்***
***ஒருவனே, அவன் இராவணன் ஆம்'***
***என உரைத்தான்.***

***திருவின் நாயகன் உரை செய* -** திருமகள் கேள்வனாகிய இராமன் (இவ்வாறு) சொல்ல; ***சுமித்திரை சிங்கம்* -** சுமித்திரையின் சிங்கம் போன்ற (மகனாகிய) இலக்குவன்; ***தருவின் நீளிய தோள் பல தலை பல என்றால்* -** மரங்கள் போல் நீண்டுள்ள தோள்கள் பல தலைகள் பல என்றால்; ***தாதையைப் பொருது* -** தந்தையாகிய சடாயுவோடு போரிட்டு; ***இத்தனை நெறிக்கொடு போனான்* -** இத்தனை நீண்ட தூர வழியில் சீதையைக் கொண்டு போனவன்; ***ஒருவனே* -** ஒருவன் ஆகவே இருக்க வேண்டும் (பலர் அல்லர் என்றபடி); ***அவன் இராவணன் ஆம் என* -** அவன் (தோள் இருபதும் தலைகள் பத்தும் கொண்ட) இராவணனாதல் கூடும் என்று; ***உரைத்தான்* -** கூறினான்.

இராமன் கூறியதைக் கேட்ட இலக்குவன் பல தோளணிகளும், பல மகுடங்களும் கிடப்பதால் பல தோள்களும், பல தலைகளும் உடைய இராவணன் ஒருவனே சடாயுவொடு போரிட்டுச் சீதையை இவ்வளவு நீண்ட தூரம் கவர்ந்து வந்தவனாதல் வேண்டும் என்றான். திரு - திருமகள், தரு - மரம், இராமன் சீதையைப் பிரிந்து மனக் கலக்கம் அடைந்திருந்ததால் நடந்ததை ஊகிக்க முடியவில்லை என்றும் இலக்குவன் அறிவுக் கூர்மையும் கலங்காத மனமும் உடையவனாய் இருந்ததால் இவ்வாறு சரியாக ஊகித்து உணர்ந்து கொண்டான் எனலாம். மாரீசன் பொன் மானாக வந்த போதும், அவன் இராமன் அம்புபட்டு இறக்கும் தறுவாயில் வஞ்சனை ஒலி எழுப்பிய போதும் இலக்குவன் சரியாக ஊகித்தமை அவனது நுண்ணறிவுத் திறத்தைக் காட்டும்.
சடாயுவைக் கண்டு இராமன் புலம்பிச் சோர்தல்

***3494. மடல் உள் நாட்டிய தார்***
***இளையோன் சொலை மதியா,***
***மிடலுண் நாட்டங்கள் தீ உக***
***நோக்கினன் விரைவான்,***
***உடலுள் நாட்டிய குருதி அம்***
***பரவையின் உம்பர்,***
***கடலுள் நாட்டிய மலை அன்ன***
***தாதையைக் கண்டான்.***

***மடல் உள் நாட்டிய தார் இளையோன்* -** பூவிதழ்கள் உள்ளே அமையத் தொடுக்கப்பட்ட மார்பு மாலையை அணிந்த இளையவனாகிய இலக்குவன் (கூறிய); ***சொலைமதியா* -** சொற்களை மதித்து (ஏற்று); ***மிடலுண் நாட்டங்கள் தீ உக நோக்கினன்* -** (காணும்) வலிமை அமைந்த கண்களில்சினத்தீ வெளிப்படப் பார்த்தவனாகி; ***விரைவான்* -** விரைந்து செல்லுகின்றவனாகிய இராமன்; ***உடலுள் நாட்டிய குருதி அம் பரவையின் உம்பர்* -** உடலில் இருந்து வெளிப்பட்ட இரத்தமாகிய கடலுக்கு மேல்; ***கடலுள் நாட்டிய மலையன்ன* -** கடலுள் (மத்தாக) நாட்டிய மந்தரமலையை ஒத்த; ***தாதையைக் கண்டான்* -** தந்தையாகிய சடாயுவைக் கண்டான்.

இலக்குவன் சொல்லை ஏற்றுச் சென்ற இராமன், கடலில் மத்தாக அமைக்கப்பட்ட மந்தரமலை போல் தன் உடம்பில் இருந்து வெளிப்பட்ட குருதிக் கடலிடைக் கிடந்த சடாயுவைக் கண்டான். மடல் - பூவிதழ்கள், தார் - மார்புமாலை. மிடல் - வலிமை, ஈண்டுப் பார்வைச் சிறப்புக்கு அடையாக வந்தது. நாட்டம் - கண், பரவை - கடல்

*உம்பர் - மேல், கடல் - திருப்பாற்கடல் தார் இளையோன் - இரண்டாம் வேற்றுமைத் தொகை, சொலை - இடைக்குறை. நோக்கினான் - முற்றெச்சம்.*

***3495. துள்ளி, ஓங்கு செந் தாமரை***
***நயனங்கள் சொரிய,***
***தள்ளி ஓங்கிய அமலன், தன்***
***தனி உயிர்த் தந்தை***
***வள்ளியோன் திரு மேனியில்,***
***தழல் நிற வண்ணன்***
***வெள்ளி ஒங்கலில் அஞ்சன***
***மலை என, வீழ்ந்தான்.***

***ஓங்கிய அமலன் -** உயர்ந்தவனும் மலமற்றவனுமாகிய இராமன்; **ஓங்கு செந்தாமரை நயனங்கள் -** சிறப்பான செந்தாமரை போன்ற (தன்) கண்கள்; **துள்ளி சொரிய தள்ளி -** கண்ணீரை மிகுதியாகச் சொரியுமாறு பெருக்கிக் கொண்டு; **தன் தனி உயிர்த்தந்தை -** தன் சிறப்பான உயிர் போன்ற தந்தையும்; **வள்ளியோன் -** வண்மைப் பண்பு மிகக் கொண்டவனுமாகிய சடாயுவின்; **திருமேனியில் -** உடலின் மீது; **தழல்நிற வண்ணன் -** நெருப்பின் நிறம் போன்று சிவந்த நிறத்தை உடைய சிவபெருமானின்; **வெள்ளி ஒங்கலில் -** வெள்ளி மலையின் மீது; **அஞ்சன மலை என வீழ்ந்தான் -** மையால் இயன்ற மலை வீழ்ந்தது போல விழுந்தான்.*

*குருதிக் கடலிடைத் தாதையைக் கண்ட இராமன் தன் செந்தாமரை மலர் போன்ற கண்களில் கண்ணீர் பெருக வெள்ளி மலையின் மீது அஞ்சன மலை விழுந்தது போலச் சடாயுவின் உடல் மீது விழுந்தனன். வெள்ளி மலை - சடாயுவின் உடல் நிறத்துக்கும் வடிவத்துக்கும், அஞ்சனமலை - இராமனின் உடல் நிறத்துக்கும் வடிவத்துக்கும் உவமை என்க. வள்ளியோன் - வள்ளல் தன்மை உடைய சடாயு. தன் உயிரைப் புகழ்க்கு விற்று உயிர் கொடுத்துப் புகழ் கெண்டவனாதலில் இவ்வாறு கூறினார். துள்ளி - விரித்தல் விகாரம்.*

***3496. உயிர்த்திலன் ஒரு நாழிகை;***
***உணர்விலன்கொல் என்று***
***அயிர்த்த தம்பி புக்கு, அம் கையின்***
***எடுத்தனன், அருவிப்***
***புயல் கலந்த நீர் தெளித்தலும்,***
***புணடரீகக் கண்***
***பெயர்த்து, பைப்பைய அயர்வு***
***தீர்ந்து, இனையன பேசும்:***

***ஒரு நாழிகை உயிர்த்திலன் -** (இராமன் சடாயுவினது உடலின் மீது விழுந்து) ஒரு நாழிகை அளவு மூச்சற்றவனானான்; **உணர்விலன் கொல் என்று அயிர்த்த தம்பி -** (அதுகண்டு) உணர்ச்சியற்று மயங்கினான் போலும் என்று ஐயங்கொண்ட தம்பியாகிய இலக்குவன்; **புக்கு -**சென்று; **அம் கையின் எடுத்தனன் -** (இராமனைத் தன்) அழகிய*

*கைகளால் (தழுவி) எடுத்து;* ***புயல் அருவி கலந்த நீர் தெளித்தலும்** -மேகத்தில் இருந்து மலை அருவியாக வந்த நீரை (முகத்தில்) தெளித்த உடனே;* ***புண்டரீகக் கண் பெயர்த்து -** தன் தாமரை போன்ற கண்களைத் திறந்து;* ***பைப்பைய அயர்வு தீர்ந்து -** மெதுவாகச் சோர்வு நீங்கி;* ***இனையன பேசும் -** இச் சொற்களைக் கூறத் தொடங்கினான்.*

*சடாயுவின் உடல் மீது விழுந்த இராமன் உயிர்ப்பும் உணர்வும் அற்றவனாய் இருத்தலைக் கண்ட துணைத் தம்பியாகிய இலக்குவன் நீரினைத் தெளித்ததனால் மெல்ல மெல்ல உணர்வைத் திரும்பப் பெற்ற இராமன் கீழ் வரும் சொற்களைக் கூறத் தொடங்கினான் என்க. உயிர்ப்பு - மூச்சு. அயிர்த்த - ஐயம் கொண்ட; புயல் - மேகம். பைப்பைய - மெல்ல மெல்ல. கொல் - ஐயப்பொருள் தருவதோர் இடைச் சொல். இனையன - குறிப்பு வினையாலணையும் பெயர்.*

*இராமன் புலம்பல்*

*கலிப்பா*

***3497. 'தம் தாதையரைத் தனையர்***
***கொலை நேர்ந்தார்***
***முந்து ஆரே உள்ளார்? முடிந்தான்***
***முனை ஒருவன்;***
***எந்தாயே! எற்காக***
***நீயும் இறந்தனையால்;***
***அந்தோ! வினையேன் அருங்***
***கூற்றம் ஆனேனே!***

***தம் தாதையரை -** தம் தந்தையரை;* ***கொலை நேர்ந்தார் -**கொலை செய்ய உடன்பட்டவராகிய;* ***தனையர் -** மக்கள்;* ***முந்து ஆரே உள்ளார் -** எனக்கு முன்பு எவர் உள்ளார்கள்;* ***முனை -** முன்பு;* ***ஒருவன் -**ஒப்பற்ற தந்தையாகிய தசரதன்;* ***முடிந்தான் -** என்னைப் பிரிந்ததால் உயிரிழந்தான்;* ***எந்தாயே -** என்னுடைய தந்தையாகிய சடாயுவே;* ***எற்காக நீயும் இறந்தனை**- எனக்காக நீயும் இறந்து விட்டாயோ?;* ***வினையேன் -** தீ வினை உடைய யான்;* ***அந்தோ -** ஐயோ;* ***அருங்கூற்றம் ஆனேனே -** உங்களுக்குக்கொடிய யமன் ஆனேனே என்றபடி.*

*'அயோத்தியில் என்னைப் பிரிந்ததால் தயரதன் இறக்கவும், இங்கு எனக்கு உதவ வந்ததால் சடாயு இறக்கவும் தீ வினை உடைய நான் காரண மானேன். இவ்வாறு தந்தையர் இறக்கக் காரணமான கொலைகார மக்கள் எனக்கு முன்பு எவர் உளர்' என்றான் இராமன். நேர்தல் - உடன் படல், முந்து - முன்பு. முனை - முன்பு எந்தாயே - விளி. ஆல் - அசை. அந்தோ - புலம்பல் குறித்த சொல்.*

***3498. 'பின் உறுவது ஓராதே***
***பேதுறுவேன் பெண்பாலாள்-***
***தன் உறுவல் தீர்ப்பான்,***

*தனி உறுவது ஓராதே,*
*உன் உறவு நீ தீர்த்தாய்;*
*ஓர் உறவும் இல்லாதேன்*
*என் உறுவான் வேண்டி*
*இடர் உறுவேன்? எந்தாயே!*

***எந்தாயே -*** *எனது தந்தையே;* ***பெண்பாலாள் தன் உறுவல் தீர்ப்பான் -*** *பெண்ணாகிய சீதை (மாயமானிடம் மயக்கம் கொண்டு அடைந்த) துன்பத்தைத் தீர்ப்பதற்காக;* ***பின் உறுவது ஓராதே பேதுறு வேன் -*** *(அம்மானின் பின் சென்று அதனால்) பின்வரும் விளைவுகளைப் பற்றி எண்ணாமல் மயக்கம் கொண்டு வருந்துபவனாகிய யான்;* ***தனி உறுவது ஓராதே -*** *ஒரு துணையும் இன்றித் தனியாக நிற்பதைப் பற்றி எண்ணாமல் (இராவணனிடம் போரிட்டு);* ***உன் உறவு நீ தீர்த்தாய் -****உன் உறவின் கடமையை நீ தீர்த்துக் கொண்டாய்;* ***ஓர் உறவும் இல்லாதேன் -*** *எந்த வகை உறவுகளும் இல்லாத நான்;* ***என் உறுவான் வேண்டி இடர் உறுவேன் -*** *என்ன பயனை அடைய விரும்பி (இப்பொழுது) துன்பம்அடைகிறேன்.*

*பெண்பாலாள் துன்பத்தைத் தீர்ப்பதற்காக எண்ணிப் பாராமல் மாய மானின் பின் நான் சென்றேன். ஆனால் நீயோ துணையின்றித் தனியாக இருப்பதைப் பற்றி எண்ணாமல் உன் உறவின் கடமையைத் தீர்த்தாய். அவ்வாறு எதையும் செய்யாத நான் என்ன காரணத்தால் இப்பொழுது துன்பம் அடைகிறேன் என்று இராமன் புலம்பினான் என்க. ஓராது -எண்ணாமல் பேதுறுதல் - மயங்குதல். உறுவல் - துன்பம். பேதுறுவேன் - முற்றெச்சம்.*

*3499. 'மாண்டேனே அன்றோ? மறையோர்*
*குறை முடிப்பான்*
*பூண்டேன் விரதம்; அதனால்*
*உயிர் பொறுப்பேன்;*
*நீண்டேன் மரம் போல, நின்று*
*ஒழிந்த புன் தொழிலேன்;*
*வேண்டேன், இம் மா மாயப்*
*புன் பிறவி வேண்டேனே!*

***மாண்டேனே அன்றோ -*** *(இத்தகு செயல்களுக்குக் காரணமானநான்) இறந்தவனையே ஒத்தவனல்லவா? (அவ்வாறு இறக்காமல் இருப்பதற்குக் காரணம்);* ***மறையோர் குறை முடிப்பான் -*** *வேதத்தில்வல்ல முனிவர்களது குறைகளை நீக்குவதான;* ***விரதம் பூண்டேன் -*** *விரதத்தைக் கைக் கொண்டுள்ளேன்;* ***அதனால் உயிர் பொறுப்பேன் -*** *அதனால் உயிரை (உடலில்) கொண்டவனாகி;* ***நீண்டேன் -*** *வாழ் நாள் நீட்டிக்கப் பெற்றுள்ளேன்;* ***மரம்போல நின்று -*** *மரம் போல வளர்ந்துநின்று;* ***ஒழிந்த -*** *யாது ஒரு பயனும் இல்லாத;* ***புன்தொழிலேன் -****புல்லிய தொழிலை உடையவனாகிய நான்;* ***இம் மா மாயப் புன் பிறவி -****இந்த மயக்கம் நிறைந்த இழி பிறப்பை;* ***வேண்டேன் வேண்டேனே -*** *விரும்பேன் விரும்பேன்.*

*முனிவர் குறை தீர்க்க விரதம் பூண்டதே காரணமாக வாழ வேண்டியிருக்கிறதே என்று தன் வாழ்வையே வெறுத்துப் பேசுகிறான். வேண்டேன் வேண்டேன் என்ற அடுக்கு வாழ்க்கை மீது கொண்ட வெறுப்பைக் குறித்தது.*

***3500. 'என் தாரம் பற்றுண்ண***
***ஏன்றாயை, சான்றோயை,***
***கொன்றானும் நின்றான்;***
***கொலையுண்டு நீ கிடந்தாய்;***
***வன் தாள் சிலை ஏந்தி,***
***வாளிக் கடல் சுமந்து,***
***நின்றேனும் நின்றேன்; நெடு***
***மரம்போல் நின்றேனே!***

***என் தாரம் பற்றுண்ண -*** *என் மனைவி (என்னால் பாதுகாக்கப் படாது) மாற்றானால் பற்றப்பட;* ***ஏன்றாயை -*** *(அவளை மீட்பதற்காக) எதிர்த்துப் போரிட்டவன் ஆகிய;* ***சான்றோயை -*** *சான்றோன் ஆகிய உன்னை;* ***கொன்றானும் நின்றான் -*** *கொன்றவனாகிய பகைவனும்உயிரோடு நின்றான்;* ***நீ கொலையுண்டு கிடந்தாய் -*** *நீயோ கொலைப்பட்டுக் கிடக்கிறாய்;* ***வன்தாள் சிலை ஏந்தி*** *-வலிமையான அடிப்பகுதியை உடைய வில்லினைக் (கையில்) ஏந்தி;* ***வாளிக் கடல் சுமந்து -*** *அம்புகளின் தொகுதியைச் சுமந்து கொண்டு;* ***நின்றேனும் நின்றேன் -*** *நின்றவனாகிய நானும் நின்றேன்;* ***நெடுமரம் போல் நின்றேனே -*** *ஓங்கி வளர்ந்த மரம் போல் நின்றேன் என்றவாறு.*

*கொலையுண்டு நீ கிடந்தாய்' என்ற வரியில் சடாயுவின் இடம் நன்றி உணர்வும், மதிப்புணர்வும் நெடுமரம் போல் நின்றேன் என்ற இடத்துநாணமும், பெரு வெறுப்பும் வெளிப்படுமாறு இப்பாடல் அமைந்துள்ளது என்பர். வாளிக்கடல் - அம்புகளின் தொகுதி; கடலளவு கணைகள் இருந்தும் அவை பலனற்று வெறுஞ்சுமையாயின என்று வருந்துகிறான் இராமன்.*

***3501. 'சொல் உடையார் என் போல் இனி***
***உளரோ? தொல் வினையேன்***
***இல் உடையாள் காண, இறகு***
***உடையாய்! எண் இலாப்***
***பல் உடையாய்! உனைப் படை***
***உடையான் கொன்று அகல,***
***வில் உடையேன் நின்றேன்;***
***விறல் உடையேன் அல்லேனோ?***

***இனி என்போல் சொல் உடையார் உளரோ -*** *இனிமேல் என்னைப் போல் புகழ் படைத்தவர் உலகத்தில் உளரோ?;* ***இறகு உடையாய் -*** *(பெரிய) இறகுகளை உடையவனே;* ***எண் இலாப் பல் உடையாய் -****எண்ண முடியாத (வலிமை படைத்த) அலகு உடையவனே;* ***தொல் வினையேன் இல் உடையாள் காண -*** *பழந் தீவினை*

*உடைய என் மனைவி காண;* ***உனைப் படை உடையான் கொன்று அகல -*** *உன்னைப் படைக்கலம் ஏந்திய பகைவன் கொன்று விட்டுச் செல்ல;* ***வில் உடையேன் நின்றேன் -*** *வில்லை ஏந்திய நான் (எதுவும் செய்யாது) நின்றேன்;* ***விறல் உடையேன் அல்லேனோ -*** *(அவ்வாறு நின்ற நான்) வீரமுடையவனல்லவா?*

*'என் மனைவி காண, உதவ வந்த உன்னைப் படையுடைப் பகைவன் கொன்று அகல, வில்லேந்திய நான் எதுவும் செய்ய இயலாமல் வீணாக நின்றேனே! என் வீரம் இருந்தவாறு என்னே என்று தவிர்த்ததைச் சொல்வது இப்பாடற் கருத்து. சொல் - புகழ்ச் சொல் பழிச் சொல் எனலுமாம்.*

*சடாயு உயிர்ப்புற்று உரைத்தல்*

***3502. அன்னா! பல பலவும்***
***பன்னி அழும்; மயங்கும்;***
***தன் நேர் இலாதானும் தம்பியும்***
***அத் தன்மையனாய்;***
***உன்ன, உணர்வு சிறிது உள்***
***முளைப்ப, புள்ளரசும்,***
***இன்னா உயிர்ப்பான்,***
***இருவரையும் நோக்கினான்.***

***தன் நேர் இலாதானும் -*** *தனக்கு ஒப்பு தான் தானேயன்றிப் பிறரில்லை எனும்படியானவனான இராமனும்;* ***அன்னா -****அத்தகையதான (சொற்கள்);****பலபலவும் பன்னி அழும் -*** *பலவற்றைத் திரும்பத் திரும்பச் சொல்லி அழுவான்;* ***மயங்கும் -*** *அறிவு மயக்கம் கொள்வான்;* ***தம்பியும் -*** *தம்பியாகிய இலக்குவனும்;* ***அத்தன்மையனாய் -*** *அந்த (அழுது மயங்கும்) நிலை உடையவனாக;* ***புள்ளரசும் -*** *கழுகரசன் ஆகிய சடாயுவும்;****உள் சிறிது உணர்வு முளைப்ப -*** *உள்ளத்தில் சிறிதளவு உணர்வு தோன்ற;* ***உன்னா -*** *நினைப்பு வரப்பெற்று;* ***இன்னா உயிர்ப்பான் -****துன்பத்துடன் மூச்சுவிடுபவனாகி;* ***இருவரையும் நோக்கினான் -*** *(தன்னைச் சூழ்ந்துள்ள இராமலக்குவர்) இருவரையும் கண் திறந்து பார்த்தான்.*

*தனக்குத் தானே ஒப்பானவனான இராமனும் தம்பியும் அழுது மயங்கினர். அந்நிலையில் சடாயு சிறிது உணர்வு பெற்றுத் துன்பப்பட்டு மூச்சு விட்டுக் கொண்டு அவ்விருவரையும் பார்த்தான். பன்னி - திரும்பத் திரும்பச் சொல்லி, உன்னா - நினைவு பெற்று; 'இன்னா - துன்பம். அன்னா - குறிப்பு வினையாலணையும் பெயர் அன்ன என்பது எதுகை நோக்கி நீண்டது என்பர்.*

***3503. உற்றது உணராது, உயிர்***
***உலைய வெய்துயிர்ப்பான்***
***கொற்றவரைக் கண்டான்; தன்***
***உள்ளம் குளிர்ப்புற்றான்;***

***இற்ற இரு சிறகும், இன்னுயிரும்,***
***ஏழ் உலகும்,***
***பெற்றனனே ஒத்தான்; 'பெயர்த்தேன்***
***பழி' என்றான்.***

***உற்றது உணராது*** - *(தான் வெட்டுண்டு விழுந்த பின் சீதைக்கு) நேர்ந்த நிலையை அறியாமல்;* ***உயிர் உலைய வெய்துயிர்ப்பான்*** *-உயிர் நடுங்குமாறு பெருமூச்சு விடுபவனாகிய சடாயு;* ***கொற்றவரைக் கண்டான்*** - *வெற்றி வீரர்களான இராமலக்குவரைக் கண்டவனாய், (அதனால்);****தன் உள்ளம் குளிர்ப்புற்றான்*** - *தன் மனம் குளிர்ந்தான்;* ***இற்ற இரு சிறகும்*** - *அறுபட்டு விழுந்த தன் இரு இறகுகளையும்;* ***இன்னுயிரும்*** - *(தன்) இனிய உயிரையும்;* ***ஏழுலகும்*** - *ஏழு உலகங்களையும்;* ***பெற்றனனே ஒத்தான்*** - *ஒருங்கே பெற்றவன் போல (பெரு மகிழ்ச்சி அடைந்தான்);* ***பழிபெயர்த்தேன் என்றான்*** - *(எனக்கு ஏற்பட்ட பழியையும் அவர்களுக்கு ஏற்பட்ட) பழியையும் நீக்கி விட்டேன் என்று கூறினான்.*

*பழிபெயர்த்தேன் - தனக்கும் இராமனுக்கும் ஏற்பட்ட பழியை நீக்கி விட்டதைக் குறித்தான். சீதையை மீட்க முடியாமையும், அதை இராமனிடம் சொல்ல முடியா நிலைமையையும் சடாயு தன்பழி என்கிறான். இராமலக்குவர் இராவணன் கவர்ந்து சென்ற செய்தியைத் தன் மூலம் கேட்டு அவனை வென்று சீதையை மீட்பர் என்ற உறுதியால் அவர்களுடைய பழியையும் நீக்கி விட்டேன் என்கிறான் சடாயு. பழிக்கு நாணும் பாத்திர இயல்பு காண்க. தன்னலமின்மை. உற்றுழி உதவல், நட்பைப் பெரிதென மதித்தல், பழிக்குநாணல் ஆகியவை சடாயுவின் பண்புகளாம். பெயர்த்தேன் -நீக்கிவிட்டேன். உற்றது - வினையாலணையும் பெயர்.*

***3504. 'பாக்கியத்தால், இன்று, என்***
***பயன் இல் பழி யாக்கை***
***போக்குகின்றேன்; கண்ணுற்றேன்,***
***புண்ணியரே! வம்மின்' என்று***
***தாக்கி அரக்கன் மகுடத்***
***தலை தகர்த்த***
***மூக்கினால் உச்சி முறைமுறையே***
***மோக்கின்றான்.***

***புண்ணியரே*** - *நல்வினை உடையவர்களே;* ***பயன் இல்*** - *பயன் இல்லாத;* ***பழி என் யாக்கை*** - *பழிப்பதற்குரிய என் உடம்பை;****இன்று போக்குகின்றேன்*** - *இப்பொழுது விட்டு விடப் போகிறேன்;****பாக்கியத்தால்*** - *(நான் செய்த) புண்ணியத்தால்;* ***கண்ணுற்றேன்*** - *உங்களைக் காணப் பெற்றேன்;* ***வம்மின் என்று*** - *வாருங்கள் என்று (அருகில் அழைத்து);* ***அரக்கன் மகுடத்தலை தாக்கித் தகர்த்த*** - *அரக்கன் ஆகிய இராவணனது மகுடத்தோடு கூடிய தலையைத் தாக்கித் தகர்த்திட்ட;* ***மூக்கினால்*** - *(தன் வலிய) அலகினால்;* ***உச்சி*** - *(அவர்களுடைய) தலை உச்சியை;* ***முறை முறையே மோக்கின்றான்*** - *மாறி மாறிப் பல முறை மோந்திடுபவன் ஆனான்.*

*பயன் இல் பழியாக்கை - சீதையை மீட்கப் பயன்படாத உடம்பு. அரக்கன் மகுடத்தலை தகர்த்த - இராவணனுடன் போரிட்டு அவனது கிரீடங்களைக் கீழே தள்ளியதைக் குறித்தது; அதே மூக்கு இராமலக்குவரின் உச்சியை மோந்ததென்க. உச்சி முகர்தல் - பாசமும் அன்பும் உடையார் செயல்.*

***3505. 'வஞ்சனையால் வந்த வரவு***
***என்பது என்னுடைய***
***நெஞ்சகமே முன்னே நினை***
***வித்தது; ஆனாலும்,***
***அம் சொல் மயிலை***
***அருந்ததியை, நீங்கினிரோ,***
***எஞ்சல் இலா ஆற்றல் இருவீரும்?'***
***என்று உரைத்தான்,***

**வந்த வரவு -** *(இராவணன் சீதையை எடுத்து) வந்த வரவு;* **வஞ்சனையால் என்பது -** *சூழ்ச்சியால் தானிருக்கும் என்பதை;* **என்னுடைய நெஞ்சகமே -** *என்னுடைய மனந்தான்;* **முன்னே நினைவித்தது -** *முன்பே நினைக்குமாறு செய்தது;* **ஆனாலும் -** *ஆயினும்;* **எஞ்சல் இலா ஆற்றல் இரு வீரும் -** *குறைவு இல்லாத வலிமை உடைய (நீங்கள்) இருவரும்;* **அம்சொல்மயிலை -** *அழகிய பேச்சினிமை உடைய மயில் போன்ற சாயல் கொண்டவளும்;* **அருந்ததியை -** *அருந்ததி போன்ற கற்பு நிலை உள்ளவளும் ஆகிய சீதையை;* **நீங்கினிரோ -** *(பர்ண சாலையில் தனியாக விட்டுவிட்டுப்) பிரிந்து போய் விட்டீர்களோ?;* **என்று உரைத்தான் -***என்று (சடாயு) கூறினான்.*

*'இராவணன் சீதையைத் தூக்கி வந்தது சூழ்ச்சியால்தான் இருக்க வேண்டும் என்று என் மனம் கருதியது. எனினும், நீவிர் இருவரும் கற்பின் கொழுந்தைத் தனியே விட்டு விட்டுப் போய் வீட்டீர்களோ?' என்று சடாயு கேட்டான். நீங்கினிரோ - தந்தை என்ற உறவு முறை கருதிக் கூறிய கடுஞ் சொல் என்க. நீங்கள் சீதையைத் தனியாக விட்டு விட்டுச் சென்றதுதெரிந்திருந்தால் நான் சற்று விழிப்பாக இருந்து இருப்பேன் என்பது குறிப்பு. இதனை*

***வார்ப் பொற் கொங்கை மருகியை மக்களை ஏற்பச் சிந்தனையிட்டு,-அவ் அரக்கர்தம் சீர்ப்பைச் சிக்கறத் தேறினன்-சேக்கையில் பார்ப்பைப் பார்க்கும் பறவையின் பார்க்கின்றான் (2731)***

*என்ற சடாயு காண்படலப் பாடல் உறுதி செய்வதை எண்ணுக. நினைவித்தது - நினைத்தது. பிறவினை தன் வினைப் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. மயில், அருந்ததி - உவமை ஆகுபெயர்கள்.*

கலிவிருத்தம்

***3506. என்று அவன் இயம்பலும்,***
***இளைய கோமகன்,***

***ஒன்றும் ஆண்டு உறு***
***பொருள் ஒழிவுறாவகை,***
***வன் திறல் மாய மான்***
***வந்தது ஆதியா***
***நின்றதும், நிகழ்ந்ததும்,***
***நிரப்பினான் அரோ.***

***என்று அவன் இயம்பலும் -*** *என்று அச்சடாயு கூறிய உடனே;* ***இளைய கோ மகன் -*** *தசரதனின் மக்களில் இளையவனான (இலக்குவன்);* ***ஆண்டு உறுபொருள் ஒன்றும் ஒழிவுறா வகை -*** *அந்த இடத்தில் நடந்த செயல்களில் ஒன்றையும் விட்டு விடாதபடி;* ***வன்திறல் மாயமான் வந்தது ஆதியா -*** *மிக்க வலிமை உடைய மாயமான் வந்தது முதலாக;* ***நின்றதும் நிகழ்ந்ததும் -*** *நிகழ்ந்து நின்ற செயல்களை;* ***நிரப்பினான் (அரோ) -*** *முழுதும் கூறி முடித்தான்.*

*சடாயுவுக்கு இலக்குவன் மாய மான் வந்தது முதல் நடந்த செயல்களை ஒன்று விடாது உரைத்தனன் என்க. அரோ - அசை. நின்றதும் நிகழ்ந்ததும் என்பதை* ***மான் இது நானே பற்றி வல்லையின் வருவென் நன்றே கான் இயல் மயில் அன்னாளைக் காத்தனை இருத்தி" (3305)***

*என்று இராமன் கூறிவிட்டுச் சென்ற படி*

***"பொன் அனாள் புக்க சாலை காத்தனன், புறத்து நின்றே (3306)***

*காத்து நின்றதையும், அப்போது மாரீசனின் மாயக் குரல் கேட்டுச் சீதை கலங்கி உயிர் ஒழியப் போனதையும், அதனால்தான்*

***போகின்றேன் அடியனேன்*** *;* ***புகுந்து வந்து, கேடு ஆகின்றது; அரசன் தன் ஆணை நீர் மறுத்து ஏகு என்றீர்; இருக்கின்றீர் தமியிர்' என்று பின் வேகின்ற சிந்தையான் விடைகொண்டு ஏகினான். (3334)***

*சீதையைப் பிரிந்து செல்ல வேண்டி வந்தது என நிகழ்ந்ததையும் கூறினான் என்று விளக்கலாம்.*

***"அம்சொல் மயிலை, அருந்ததியை நீங்கினிரோ எஞ்சல் இலா ஆற்றல் இருவீரும்"***

*என்று சடாயு கேட்ட கேள்விக்கு விடையாக இலக்குவன் கூறியது இப்பாடல் என்க.*

*சடாயு ஆறுதல் கூறுதல்*

***3507. ஆற்றலோன் அவ் உரை***
***அறைய, ஆணையால்***
***ஏற்று, உணர்ந்து, எண்ணி,***
***அவ் எருவை வேந்தனும்,***

***'மாற்ற அருந் துயர் இவர்***
***மனக் கொளாவகை***
***தேற்றுதல் நன்று' என,***
***இனைய செப்புவான்:***

***ஆற்றலோன் -*** *சொல் ஆற்றல் உடைய இலக்குவன்;* ***ஆணையால் -*** *(இராமனது) கட்டளையினால்;* ***அவ்உரை அறைய -*** *அந்த (வகையான) சொற்களைச் சொல்ல;* ***ஏற்று உணர்ந்து எண்ணி -*** *(அவற்றைக்) கேட்டு உணர்ந்து எண்ணிப் பார்த்து;* ***அவ் எருவை வேந்தனும் -*** *அந்தக் கழுகு அரசனாகிய (சடாயுவும்);* ***மாற்ற அருந்துயர் -*** *நீக்க முடியாத துன்பத்தை;* ***இவர்மனக் கொளா வகை -*** *இவர்கள் மனதில் கொள்ளாத படி;* ***தேற்றுதல் நன்று என -*** *தேறுதல் சொல்வது நல்லது என்று எண்ணி;* ***இனைய செப்புவான் -*** *இத்தகைய சொற்களைச் சொல்பவனானான். ஏற்று உணர்ந்து எண்ணி - மற்றவர் கூறுவதைக் கேட்கும் முறை விளக்கமாக வந்தது அறிக. ஆற்றலோன் - வலிமை உடையவன், அறிவு வலிமை உடையன் எனப் பலவாறு கொள்ளலாம். முன் பாடலில் இலக்குவனின் நிரலே சொல்லும் திறம் சுருக்கிக் கூறப்பட்டதால் இங்குச் சொல்லாற்றல் என்று கொள்வதே சாலப் பொருத்தம் என்க.*

***3508. 'அதிசயம் ஒருவரால் அமைக்கல் ஆகுமோ?***
***"துதி அறு பிறவியின் இன்ப துன்பம் தான்***
***விதி வயம்" என்பதை மேற்கொளாவிடின்,***
***மதி வலியால் விதி வெல்ல வல்லமோ?***

***ஒருவரால் அதிசயம் அமைக்கல் ஆகுமோ -*** *ஒருவரால் (மட்டும்) புதுமையைச் செய்ய முடியுமோ? (முடியாது என்றபடி);* ***துதி அறு பிறவியின் இன்ப துன்பம் தான் -*** *புகழ் அற்ற (மனிதப் பிறவிக்கு வருகிற) இன்ப துன்பங்கள்தான்;* ***விதிவயம் -*** *ஊழ்வினைப்படி வருவன;****என்பதை மேற்கொளாவிடின் -*** *என்ற கொள்கையை ஏற்றுக் கொள்ளாமல் போனால்;* ***மதி வலியால் விதி வெல்ல வல்லமோ -*** *அறிவின் வலிமையால் ஊழ்வினையை வெல்லுவதற்கு வல்லமை உடையோமாவோமோ? (ஆக மாட்டோம்) என்றவாறு*

*நமக்கு வரும் இன்ப துன்பங்கள் விதி வசம் என்ற கோட்பாட்டை ஏற்றுக் கொண்டால் தான் நாம் நம் அறிவு வலிமையால் அதை நீக்க முடியும். விதிவசம் என்பதை ஏற்காவிடின் நம் மதி வலிமையால் இன்ப துன்பங்களை வெல்ல முடியாது என்றபடி. வருவன வந்தே தீரும், அவற்றைத் தடுக்க முடியாது. வந்ததன் பின் விதி வசம் என எண்ணி ஆறுதல் அடைந்து மதி வலியால் அதனைப் போக்கலாம் என்று சடாயு ஆறுதல் கூறுகிறான். 'விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி' (1735) என்று சன்னத்தனாகிக் கொக்கரித்த இலக்குவன், வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ, (3333) என்று கூறுதல் காண்க. அதிசயம் - புதுமை; துதி அறு பிறவி - புகழ் அற்ற பிறவி. விதி ஊழ், பால், தெய்வம் என்பன ஒரு பொருட் சொற்கள்.*

***3509. 'தெரிவுறு துன்பம் வந்து***
***ஊன்ற, சிந்தையை***
***எரிவுசெய்து ஒழியும் ஈது***

***இழுதை நீரதால்;***
***பிரிவுசெய்து உலகு எலாம்***
***பெறுவிப்பான் தலை***
***அரிவுசெய் விதியினார்க்கு***
***அரிது உண்டாகுமோ?***

***தெரிவுறு துன்பம் -*** *(விதி வசத்தால் வருகிறது என்று) தெளியப் பட்ட துன்பம்;* ***வந்து ஊன்ற -*** *ஒருவனிடம் வந்து சேர;* ***சிந்தையை எரிவு செய்து -*** *(அதற்காக அவன் தன்) மனத்தைக் கலங்க விட்டு;****ஒழியும் ஈது-****அழியும் இத்தன்மை;* ***இழுதை நீரதால் -*** *பேதமைத் தன்மையாகும்;****உலகு எலாம் -*** *உலகங்களை எல்லாம்;* ***பிரிவு செய்து -*** *வகுத்துப் பிரித்தலைச் செய்து;* ***பெறுவிப்பான் -*** *படைத்தவனாகிய (பிரமனது);* ***தலை அரிவு செய் -*** *தலையை அறுத்தல் செய்த;* ***விதியினார்க்கு -*** *ஊழ்வினைக்கு;****அரிது உண்டாகுமோ -*** *செய்தற்கு அரிய செயல் என்று (ஏதேனும்) உண்டாகுமோ (ஆகாது)*

*விதியினால் வரும் துன்பத்துக்காக மனம் கலங்கி அழிவது பேதைமைத் தன்மையாகும். அவ்விதி பிரமனின் தலையையும் அறுத்தலைச் செய்த ஆற்றல் உடையது என்று உணர்ந்து ஆறுதல் அடைய வேண்டும் என்பது கருத்து. சிவபிரான் பிரமனின் ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளிக் களைந்தான் என்பது புராணச் செய்தி. இழுதை - பேதைமை, அறியாமை,*

***3510. 'அலக்கணும் இன்பமும்***
***அணுகும் நாள், அவை***
***விலக்குவம் என்பது***
***மெய்யிற்று ஆகுமோ?***
***இலக்கு முப்புரங்களை***
***எய்த வில்லியார்,***
***தலைக் கலத்து, இரந்தது***
***தவத்தின் பாலதோ?***

***அலக்கணும் இன்பமும் -*** *துன்பமும் இன்பமும்;* ***அணுகும் நாள் -*** *வரும் காலத்து;* ***அவை -*** *அந்த இன்ப துன்பங்களை;* ***விலக்குவம் என்பது -*** *(நாம் வராமல்) தடுத்து விடுவோம் என்பது;* ***மெய்யிற்று ஆகுமோ -****உண்மை உடையதாகுமா? (ஆகாது);* ***முப்புரங்களை -*** *முப்புரத்தை;****இலக்கு எய்த -*** *இலக்காக்கித் தொடுத்து (அழித்த);* ***வில்லியார் -*** *வில்லை ஏந்தியவரான சிவபெருமான்;* ***தலைக்கலத்து இரந்தது -*** *பிரமனது மண்டை ஓட்டில் பிச்சை எடுத்தது;* ***தவத்தின் பாலதோ -*** *தவச் செயலுக்கு உரியதோ? (அன்று)*

*நமக்கு வரும் இன்ப துன்பங்களை நாம் வராமல் விலக்கி விடலாம் என்று கூறுவது உண்மை ஆகுமோ? அவ்வாறாயின் முப்புரம் எரித்த சிவபிரான் மண்டை ஓட்டில் பிச்சை எடுத்ததை எவ்வகைத் தவம் என விளக்குவது என்றவாறு. அது தவத்தின் விளைவு அல்ல விதியின் விளைவே ஆகும் என்பதாம். சினத்தால் பிரமனின் தலையைக் கிள்ளிய சிவன், பிரம தோசத்தால் மண்டையோட்டில் பிச்சை ஏற்றுத்*

*திரிந்தமையை இங்குச் சடாயு குறிப்பிடுகின்றான். அலக்கண் - துன்பம், தலைக்கலம் - பிரமனது மண்டை ஓடு. விலக்குவம் - தன்மைப் பன்மை வினைமுற்று. தலைக்கலம் - இருபெயரொட்டு.*

***3511. 'பொங்கு வெங்கோள் அரா,***
***விசும்பு பூத்தன***
***வெங்கதிர்ச் செல்வனை***
***விழுங்கி நீங்குமால்;***
***அம் கண் மா ஞாலத்தை***
***விளக்கும் ஆய் கதிர்த்***
***திங்களும், ஒரு முறை***
***வளரும் தேயுமால்.***

***பொங்கு வெங்கோள் அரா -*** *(சினம்) பொங்குகிற கொடிய கொலைத் தொழிலை உடைய பாம்பாகிய (கேது);* ***விசும்பு பூத்தன -****ஆகாயத்தில் பூத்து விளங்குகிற;* ***வெங்கதிர்ச் செல்வனை -****வெப்பக் கதிர்களைச் செல்வமாகக் கொண்ட கதிரவனை;* ***விழுங்கி நீங்குமால் -*** *விழுங்கி உமிழும்;* ***அம் கண் மா ஞாலத்தை -*** *இடம் அகன்ற பெரிய நிலவுலகத்தை;* ***விளக்கும் -*** *தன் ஒளியால் விளங்கச் செய்கிற;****ஆய்கதிர்த் திங்களும் -*** *சிறந்த ஒளிக்கற்றைகளை உடைய நிலவும்;* ***ஒரு முறை வளரும் தேயும் -*** *(மாதந்தோறும்) ஒரு முறை வளர்ந்து, ஒரு முறை தேய்தலும் செய்யும்.*

*கதிரவனைக் கோள் அராத் தீண்டி மறைத்தலும், நிலவு வளர்ந்து தேய்வதும் விதியின் பயன் என்றவாறு. கதிரவனை அராத் தீண்டுதற்குக் காரணமாகப் புராணக் கதையைக் குறிப்பிடுவர். கோள் அரா - குறித்த இலக்கைக் கொல்வதில் தவறாத பாம்பு, கோள் - முதல் நிலை நீண்ட தொழிற் பெயர். மாஞாலம்- உரிச்சொல் தொடர். ஆல் இரண்டும் அசை.*

***3512. 'அந்தரம் வருதலும்,***
***அனைய தீர்தலும்,***
***சுந்தரத் தோளினிர்!***
***தொன்மை நீரவால்;***
***மந்திர இமையவர்-குருவின்***
***வாய் மொழி***
***இந்திரன் உற்றன***
***எண்ண ஒண்ணுமோ?***

***சுந்தரத் தோளினிர் -*** *அழகிய தோள்களை உடையவர்களே;* ***அந்தரம் வருதலும் -*** *(ஒருவனுக்குத்) தீங்குகள் வந்து சேர்வதும்;* ***அனைய தீர்தலும் -*** *அவை நீங்குவதும்;* ***தொன்மை நீரவால் -****தொன்று தொட்டு வந்தமைகிற ஊழ்வினையின் தன்மையவாகும்;****இமையவர் மந்திர குருவின் -*** *தேவர்களுடைய மந்திரவலிமை மிக்க குருவாகிய பிரகசுபதியின்;* ***வாய்மொழி -*** *வாயில் இருந்து வந்த சாபச் சொற்களால்;* ***இந்திரன் உற்றன-*** *தேவர் தலைவனாகிய இந்திரன் அடைந்த துன்பங்களை;****எண்ண***

***ஒண்ணுமோ*** - *எண்ணிப் பார்க்க முடியுமோ என்றபடி (முடியாது என்பது கருத்து) தொன்று தொட்டு வருகின்ற ஊழ்வினையின் பயனால் தான் ஒருவனுக்குத் துன்பங்கள் வந்து சேருகின்றன. இதை விளக்க இந்திரன் பட்ட துன்பங்களைக் கூறும் புராணச் செய்தி கூறப்படுகிறது. அந்தரம் - துன்பம், நீங்கு, நீரவால் - தன்மையவாம் அனைய, உற்றன - வினையாலணையும் பெயர்கள். இமையவர் குரு - பிரகஸ்பதி.*

***3513. 'தடைக்க அரும் பெரு வலிச்***
***சம்பரப் பெயர்க்***
***கடைத் தொழில்***
***அவுணனால், குலிசக்கையினான்***
***படைத்தனன் பழி; அது,***
***பகழி வில் வலாய்!***
***துடைத்தனன் நுந்தை, தன்***
***குவவுத் தோளினால்.***

***பகழி வில் வலாய்*** - *அம்புகளை விடும் வில் தொழில் ஆற்றலில் வல்லவனே!;* ***தடைக்க அரும் பெருவலி*** - *தடுப்பதற்கு முடியாத மிக்க வலிமை உடைய;* ***சம்பரப் பெயர்*** - *சம்பரன் என்ற பெயர் உடைய;* ***கடைத் தொழில் அவுணனால்*** - *இழி தொழிலைச் செய்யும் அவுணனால்;* ***குலிசக்கையினான்*** - *வச்சிராயுதத்தைக் கையில் ஏந்திய இந்திரன்;* ***பழி படைத்தனன்*** - *(தோல்வி அடைந்து ஆட்சியை இழத்தலாகிய) பழியை அடைந்தான்;* ***அது*** - *அப்பழியை;* ***நுந்தை*** - *உன் தந்தையாகிய தசரதன்;* ***தன் குவவுத் தோளினால்*** - *தன் திரண்ட தோள்களின் வலிமையால்;* ***துடைத்தனன்*** - *நீக்கினான்.*

*இந்திரன் சம்பரன் என்ற அசுரனால் அடைந்த பழியை உன் தந்தையாகிய தசரதன் தன் தோள் வலிமையால் போக்கினான் என்பது கருத்து. தடைக்க - தடுக்க, கடைத் தொழில் - கீழான தொழில், குலிசம் - வச்சிராயுதம், நுந்தை - உன் தந்தை தசரதன், குவவு - திரட்சி.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3514. 'பிள்ளைச் சொல் கிளிஅனாளைப்***
***பிரிவுறல் உற்ற பெற்றி,***
***தள்ளுற்ற அறமும் தேவர்***
***துயரமும், தந்ததேயால்;***
***கள்ளப் போர் அரக்கர்***
***என்னும் களையினைக் களைந்து வாழ்தி;***
***புள்ளிற்கும், புலன்இல் பேய்க்கும்,***
***தாய் அன்ன புலவு வேலோய்!***

***புள்ளிற்கும்*** - *பறவைகளுக்கும்;* ***புலன் இல் பேய்க்கும்*** *-பகுத்தறிவு இல்லாத பேய்க்கும்;* ***தாய் அன்ன*** - *(உணவு தருவதால்)தாயைப்போன்றதும்;* ***புலவு வேலோய்*** - *புலால் நாற்றம் வீசுகின்றதும் ஆகியவேல் படை உடையவனே!;* ***தள்ளுற்ற அறமும்*** - *அரக்கர்களால் ஒதுக்கப் பெற்ற அறமும்;* ***தேவர் துயரமும்*** - *தேவர்கள் அடைந்த துன்பமும் (ஆகிய இரண்டும்);* ***பிள்ளைச் சொல் கிளி அனாளை*** - *மழலைச் சொல் கிளி போன்றவளாகிய சீதையை;* ***பிரிவுறல் உற்ற பெற்றி*** - *பிரிதல் பொருந்திய தன்மையைத்;* ***தந்ததே யால்*** - *தந்தவையாகும்;* ***கள்ளப் போர் அரக்கர்*** - *வஞ்சனை உடைய போரினைச் செய்யும் அரக்கர்கள்;****என்னும் களையினைக் களைந்து வாழ்தி*** - *என்கின்ற (அரக்கர் என்கிற) களையாகிய புல் பூண்டுகளை ஒழித்து வாழ்வாயாக.*

*அறமும் தேவர் துயரமுமே இராவணனைச் சீதையைக் கவர்ந்துசெல்லத் தூண்டி உள்ளன; எனவே, நீ கள்ளப் போர் அரக்கர் என்கிற களை கட்டு வாழ்க என்றபடி. இவ்வாறு அறமும் துயரமும், விதியும்தருமமும், (1606) என்று இரட்டை இணைகளாகச் சொல்லுதல் கம்பரின் கவி 'வழக்கு என்க. பயிர் செழித்து வளரக் களை கட்டல் இன்றியமையாதது போல் அறப் பயிர் வளர அரக்கர்களாகிய களையை அழிக்க வேண்டும் என்பார், "போர் அரக்கர் என்னும் களையினைக் களைந்து வாழ்தி" என்றார். இராமன் தக்க இன்னன தகாதது இன்னன என எண்ணாமல் அனைத்து உயிரையும் ஒக்க நோக்கும் அருள் உடையான் என்பதைப் "புள்ளிற்கும், புலன் இல் பேய்க்கும், தாய் அன்ன புலவு வேலோய்" என்றார். பிள்ளைச் சொல் - மழலைப் பேச்சு. பெற்றி - தன்மை; புலன் - அறிவு. அனாள் - வினையாலணையும் பெயர். ஆல் - அசை. வாழ்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று.*

***3515. 'வடுக் கண், வார் கூந்தலாளை,***
***இராவணன் மண்ணினோடும்***
***எடுத்தனன் ஏகுவானை, எதிர்ந்து,***
***எனது ஆற்றல்கொண்டு***
***தடுத்தனென், ஆவது எல்லாம்; தவத்து,***
***அரன் தந்த வாளால்***
***படுத்தனன்; இங்கு வீழ்ந்தேன்; இது***
***இன்று பட்டது' என்றான்.***

***வடுக்கண்*** - *மாவடுவின் பிளந்தது போன்ற கண்களையும்;* ***வார் கூந்தலாளை*** - *நீண்ட கூந்தலையும் உடைய சீதையை;****இராவணன் மண்ணினோடும்*** - *இராவணன் நிலத்தோடு;* ***எடுத்தனன் ஏகுவானை*** - *எடுத்துக் கொண்டு செல்லும் போது அவனை;* ***எதிர்ந்து*** - *(நான்) எதிர்ப்பட்டு;* ***எனது ஆற்றல் கொண்டு*** - *எனது வலிமையின் துணை கொண்டு;* ***ஆவது எல்லாம் தடுத்தனென்*** - *ஆன மட்டும் தடுக்க முனைந்தேன்;* ***தவத்து அரன் தந்த வாளால்*** - *(இறுதியில் அவன்) தன் தவம் கருதிச் சிவபிரான் கொடுத்த (சந்திரகாசம் என்னும்) வாளினால்;* ***படுத்தனன்*** - *(என்னை) வெட்டி வீழ்த்தினான்;* ***இங்கு வீழ்ந்தேன்*** - *இவ்விடத்தில் விழுந்து விட்டேன்;* ***இதுஇன்று பட்டது*** - *இச் செயல் இன்று நடந்தது;* ***என்றான்*** - *என்று (சடாயு இராமனிடம்) கூறினான்.*

*வடு - மாவடு. வார் - நீண்ட; வார் கூந்தல் - பண்புத் தொகை. கூந்தலாள் - குறிப்பு வினையாலணையும் பெயர். எடுத்தனன் - முற்றெச்சம், ஆவது எல்லாம் - ஒருமை*

*பன்மை மயக்கம்.*

*இராமன் சீற்றம்*

***3516. கூறின மாற்றம் சென்று***
***செவித்தலம் குறுகாமுன்னம்,***
***ஊறின உதிரம், செங் கண்;***
***உயிர்த்தன, உயிர்ப்புச் செந் தீ;***
***ஏறின புருவம் மேல்மேல்; இரிந்தன***
***சுடர்கள் எங்கும்;***
***கீறினது அண்டகோளம்; கிழிந்தன***
***கிரிகள் எல்லாம்.***

***கூறின மாற்றம் -*** *(சடாயு) கூறிய சொற்கள்;* ***சென்று செவித் தலம் குறுகாமுன்னம் -*** *சென்று (இராமனது) காதினிடத்துச் சேருவதற்கு முன்பு;* ***செங்கண் உதிரம் ஊறின -*** *(முன்பே) சிவந்த கண்களில் குருதி ஊறிச் சொரிந்தன;* ***உயிர்ப்புச் செந்தீ உயிர்த்தன -*** *பெருமூச்சாகிய சிவந்த தீ வெளிப்பட்டன;* ***புருவம் மேல் மேல் ஏறின -*** *புருவங்கள் மேலும் மேலும் மேலே ஏறின;* ***சுடர்கள் எங்கும் இரிந்தன -*** *(கதிரவன் முதலிய) சுடர்கள் எங்கும் அஞ்சி ஓடின;* ***அண்ட கோளம் கீறினது -*** *அண்டமாகிய உருண்டை பிளவுபட்டது;* ***கிரிகள் எல்லாம் கிழிந்தன -*** *மலைகள் எல்லாம் உடைபட்டன.*

*செம்பொருளே சினந்தால் சிதறாவோ எவையும் எங்கும்! கவிதை நெறி அறிந்தோர் இதனை வெறும் உயர்வு நவிற்சி எனக் கொண்டமையார்.*

***3517. மண்ணகம் திரிய, நின்ற மால்***
***வரை திரிய, மற்றைக்***
***கண் அகன் புனலும் காலும்***
***கதிரொடும் திரிய, காவல்***
***விண்ணகம் திரிய, மேலை***
***விரிஞ்சனும் திரிய, வீரன்,***
***எண் அரும் பொருள்கள்***
***எல்லாம்' என்பது தெரிந்ததுஅன்றே?***

***மண்ணகம் திரிய -*** *நிலவுலகம் (தன் நிலை கெட்டுச்) சுழல;* ***நின்ற மால் வரை திரிய -*** *அசையாது நிற்கும் பெரிய மலைகள் சுழல;* ***மற்றை -*** *மற்றும்;* ***கண் அகன் புனலும் -*** *இடமகன்ற (கடல்) நீரும்;* ***காலும் -****காற்றும்;* ***கதிரொடும் திரிய -*** *கதிரவன் நிலவு உடன் சுழல;* ***காவல் விண்ணகம் திரிய -*** *தேவர்கள் காக்கும் மேல் உலகம் சுழல;* ***மேலை விரிஞ்சனும் திரிய -*** *மேல் உலகில் உள்ள பிரமனும் சுழல;* ***வீரன் -****வீரனாகிய இராமன்;* ***எண் அரும் பொருள்கள் எல்லாம் என்பது -****தான் எண்ண முடியாத உலகப் பொருள்கள் எல்லாவற்றின் வடிவமாக உள்ளவன் என்பது;* ***தெரிந்தது அன்றே -*** *நன்கு விளங்கியது.*

*அனைத்தும் அவனான படியினாலே அவன் மனநிலை மாறிச் சினந்தவுடன் அனைத்துப் பொருள்களும் நிலை திரிந்தன என்றபடி. கால் - காற்று, விரிஞ்சன் - பிரமன், மால்வரை - உரிச்சொல் தொடர், ஐ - சாரியை, அன்றே - ஏகாரம் தேற்றம்.*

***3518. 'குறித்த வெங் கோபம் யார்மேல்***
***கோளுறும்கொல்?' என்று அஞ்சி,***
***வெறித்துநின்று, உலகம் எல்லாம்***
***விம்முறுகின்ற வேலை,***
***பொறிப் பிதிர் படலை, செந் தீப்***
***புகையொடும் பொடிப்ப 'பொம்' என்று***
***எறிப்பது ஓர் முறுவல் தோன்ற***
***இராமனும் இயம்பலுற்றான்:***

***குறித்த வெங்கோபம் -** (இராமன் மனத்தில்) கொண்ட கொடிய சினம்; **யார் மேல் கோளுறுங் கொல் -** யாவர் மேல் செலுத்தப்படும்கொல்; **என்று அஞ்சி** - என்று எண்ணி அஞ்சி; **உலகம் எல்லாம் -**உலகங்கள் எல்லாம்; **வெறித்து நின்று -** திகைப்படைந்து நின்று; **விம்முறுகின்ற வேலை -** கலங்குகிற நேரத்தில்; **பொறிப் பிதிர் படலை -** பொறிகளின் தொகுதி; **செந்தீப் புகையொடும் பொடிப்ப -** சிவந்த நெருப்பு புகையுடன் தோன்றும் படி; **எறிப்பது ஓர் முறுவல் பொம் என்று தோன்ற -** ஒளி விடுவதான ஒப்பற்ற புன்சிரிப்பு பொம் என்று தோன்ற;**இராமனும் இயம்பல் உற்றான் -** இராமனும் சில கூறத் தொடங்கினான்.*

*இராமனது சினம் யார் மேல் செல்லுமோ என அனைத்துலகும் திகைத்து நின்ற நிலையில், செந்தீப் புகையொடு எழ அவன் வெகுளி கொண்டு புன்முறுவல் பூத்துக் கூறலானான் என்பதாம். கோளுறுதல் - செல்லுதல். வெறித்து - திகைத்து. படலை - கொழுந்துத் தொகுதி. பொம் - ஒலிக் குறிப்பு; பிதிர்தல் - சிதறல். கொல் - ஐயப் பொருள் தருவதோர் இடைச்சொல். உலகம் - இடவாகுபெயர்.*

***3519. 'பெண் தனி ஒருத்திதன்னை, பேதை***
***வாள் அரக்கன் பற்றிக்***
***கொண்டனன் ஏக, நீ இக்***
***கோளுற, குலுங்கல் செல்லா***
***எண் திசை இறுதி ஆன உலகங்கள்***
***இவற்றை, இன்னே,***
***கண்ட வானவர்களோடும் களையுமாறு,***
***இன்று காண்டி.***

***தனி ஒருத்திபெண் தன்னை -** தனித்து (த் துணையின்றி) இருந்த பெண் ஒருத்தியை; **பேதை வாள் அரக்கன் -** அறிவற்ற வாளேந்திய அரக்கன்; **பற்றிக் கொண்டனன் ஏக -** பற்றிக் கொண்டு செல்ல; **நீ இக் கோளுற -** நீ இத்தகைய நிலையை அடைய; **குலுங்கல் செல்லா -**நடுங்காது நின்ற (பேரவலம் கண்டும் வாளாயிருந்த); **எண் திசை இறுதி ஆன***

***உலகங்கள் இவற்றை -*** *எட்டுத் திசைகளை எல்லையாகக் கொண்ட உலகங்களாகிய இவற்றையெல்லாம்;* ***கண்ட வானவர்களோடும் -****(இச் செயல்) கண்டு (எதுவும் செய்யாமல் வாளாவிருந்த) தேவர்களோடும்;* ***இன்று -*** *இன்றைக்கு;* ***இன்னே -*** *இப்பொழுதே;* ***களையுமாறு -*** *(நான்) முழுவதும் அழித்தலை;* ***காண்டி -*** *நீ பார்ப்பாயாக என்றவாறு.*

*இத்துணைக் கொடுமைகள் நடந்தும் நடுங்காத உலகையும், தடுக்காத தேவர்களையும் இப்பொழுதே அழிப்பேன் நீ பார் என்று இராமன் சினந்து சடாயுவிடம் கூறினான். கொண்டனன் - முற்றெச்சம், செல்லா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.*

***3520. 'தாரகை உதிருமாறும், தனிக்***
***கதிர் பிதிருமாறும்,***
***பேர் அகல் வானம் எங்கும்***
***பிறங்கு எரி பிறங்குமாறும்,***
***நீரொடு நிலனும் காலும், நின்றவும்,***
***திரிந்த யாவும்***
***வேரொடு மடியுமாறும்,***
***விண்ணவர் விளியுமாறும்.***

***தாரகை உதிருமாறும் -*** *(என் வில்லாற்றலால்) விண்மீன்கள் உதிரும் தன்மையையும்;* ***தனிக் கதிர் பிதிருமாறும் -*** *ஒப்பற்ற கதிரவன் பொடியாகிச் சிதறும் தன்மையையும்;* ***பேர் அகல் வானம் எங்கும் -****பெரிய அகன்ற வானம் முழுவதும்;* ***பிறங்கு எரி பிறங்கு மாறும் -*** *விளங்குகின்ற நெருப்புப் பற்றி எரியும் தன்மையையும்;* ***நீரொடு நிலனும் காலும் -*** *நீரும் நிலமும் காற்றும்;* ***நின்றவும் -*** *(ஐம்பூதங்களில் மூன்றை நீக்கி) நின்ற நெருப்பும் வானமும் (ஆகிய ஐம்பூதங்களும்);* ***திரிந்த யாவும் -*** *சரப் பொருள்களாய் உள்ள பிறயாவும்;* ***வேரொடு மடியுமாறும் -*** *அடியோடு அழியும் தன்மையையும்;* ***விண்ணவர் விளியுமாறும் -*** *தேவர்கள் அழியும் தன்மையையும்; காண் என.... (அடுத்த பாடலில் இணையும்). தாரகை - விண்மீன்கள். பிறங்குதல் - விளங்குதல். பிதிர்தல் - துண்டாய்ச் சிதறுதல். பேர் அகல் - ஒரு பொருட் பன்மொழி. நின்றவும் - வினையாலணையும் பெயர்.*

***3521. 'இக் கணம் ஒன்றில், நின்ற,***
***ஏழினொடு ஏழு சான்ற***
***மிக்கன போன்று தோன்றும்,***
***உலகங்கள் வீயுமாறும்,***
***திக்குடை அண்ட கோளப்***
***புறத்தவும் தீந்து, நீரின்***
***மொக்குளின் உடையுமாறும், காண்'***
***என, முனியும் வேலை,***

***இக்கணம் ஒன்றில் -*** *இந்த ஒரு கணத்தில்;* ***நின்ற -*** *நிலை பெற்று நின்றுள்ள;* ***மிக்கன போன்று தோன்றும் -*** *மிகவும் பெரியவை போல் தோன்றுகிற;* ***ஏழினொடு ஏழு சான்ற உலகங்கள் -*** *பதினான்கு என்ற எண் தொகை அமைந்த உலகங்கள்;* ***வீயுமாறும் -*** *அழியும் தன்மையையும்;* ***திக்குடை -*** *எட்டுத் திக்குகளை உடைய;* ***அண்ட கோளப் புறத்தவும் -*** *அண்ட கோளத்துக்குப் புறத்தில் உள்ளவையும்;* ***தீந்து -*** *(சினந்தால்) கருகிப் போய்;* ***நீரின் மொக்குளின் உடையுமாறும் -*** *நீரில் தோன்றுகிற குமிழி போல உடைந்து போகும் தன்மையினையும்;* ***காண் -****காண்பாயாக;* ***என முனியும் வேலை -*** *என்று கூறிச் சினந்த போது...., (அடுத்த பாடலில் வரும், செய்திகளோடு தொடர்புபட்டு முடியும்)*

*நிலை பெற்று மிகப் பெரியவை போல் தோன்றுகிற பதினான்கு உலகங்களும் நீர்க்குமிழி போல் என் சினத்தால் அழிவதைக் காண் என்றவாறு. இக்கணம் ஒன்றில் - அழிவின் விரைவு குறித்தது. மிக்கன போன்று தோன்றும் - தன் ஆற்றலுக்கு முன் அவை மிக்கன அல்லஎன்பது குறித்தது. வீயுமாறு - அழியுமாறு. தீந்து - கருகி. மொக்குள் -குமிழ். முனிதல் - சினத்தல். வேலை - பொழுது.*

***3522. வெஞ் சுடர்க் கடவுள் மீண்டு,***
***மேருவில் மறையலுற்றான்;***
***எஞ்சல் இல் திசையில் நின்ற***
***யானையும் இரியல்போன;***
***துஞ்சின உலகம் எல்லாம் என்பது என்?***
***துணிந்த நெஞ்சின்,***
***அஞ்சினன், இளைய கோவும்; அயல்***
***உளோர்க்கு அவதி உண்டோ?***

***வெஞ்சுடர்க் கடவுள் -*** *வெப்பமான கதிர்களை உடைய கதிரவன்;* ***மீண்டு -*** *(அவனது சினத்தில் இருந்து) தப்பி;* ***மேருவில் மறையலுற்றான் -*** *மேரு மலையில் மறையத் தொடங்கினான்;* ***எஞ்சல் இல் -*** *அழிதல் இல்லாத;* ***திசையில் நின்ற யானையும் -*** *திக்குகளில் (நிலை பெற்று) நின்றுள்ள (எட்டு) யானைகளும்;* ***இரியல் போன -*** *அஞ்சி ஓடிப் போயின;* ***உலகம் எல்லாம் துஞ்சின என்பது என் -*** *உலகில் உள்ள உயிரினங்கள் எல்லாம் வருத்தம் கொண்டன என்று கூறுவது ஏன்?;* ***துணிந்த நெஞ்சின்-*** *மிக நெஞ்சுரம் கொண்ட;* ***இளைய கோவும் -*** *இலக்குவனும்;****அஞ்சினன்-*** *அஞ்சினன் என்றால்;* ***அயல் உளோர்க்கு அவதி உண்டோ -****மற்றும் உள்ளோர் கொண்ட அச்சத்துக்கு எல்லை உண்டோ? (இல்லை).*

*கதிரவன் மேரு மலையில் மறைய, திசை யானைகள் அஞ்சி ஓட, மிக்க வலிமையும் மன ஊக்கமும் படைத்த இலக்குவனே அஞ்ச, அயல் உள்ளோர் பேரச்சம் கொள்ள இராமன் பெருஞ்சினம் கொண்டான் என்க. இரியல் - ஓடல். துஞ்சுதல் - அழிதல்; ஈண்டு வருந்துதல். அவதி - துன்பம்.*

*இராமன் சீற்றத்தைச் சடாயு தணித்தல்*

*3523.* ***இவ் வழி நிகழும் வேலை, எருவைகட்கு இறைவன், 'யாதும்,***
***செவ்வியோய்! முனியல்; வாழி! தேவரும் முனிவர்தாமும்,***
***வெவ் வலி வீர! நின்னால் வெல்லும் என்று ஏமுற்று உய்வார்***
***எவ் வலி கொண்டு வெல்வார், இராவணன் செயலை?' என்றான்.***

***இவ்வழி நிகழும் வேலை -*** *இவ்வாறு நடக்கும் பொழுது;* ***எருவை கட்கு இறைவன் -*** *கழுகுகளுக்கு அரசனாகிய சடாயு;* ***செவ்வி யோய் -*** *நன்மைக் குணங்கள் கொண்டவனே!;* ***வாழி -*** *வாழ்வாயாக;* ***யாதும் முனியல் -*** *சிறிதளவு கூடச் சினம் கொள்ளாதே;* ***வெவ்வலிவீர -*** *வெலற்கரு வலி படைத்த வீரனே;* ***தேவரும் முனிவர் தாமும் -*** *தேவர்களும் முனிவர்களும்;* ***நின்னால் வெல்லும் என்று -****உன்னைக் கொண்டு (தம் பகைவர்களாகிய அரக்கர்களை) வெல்வோம் என்று (எண்ணிக் கொண்டு);* ***ஏமுற்று உய்வார் -*** *மகிழ்ச்சியுடன் உயிர் வாழ்கிறார்கள்;* ***இராவணன் செயலை -*** *(அப்படிப்பட்டவர்கள்) இராவணன் செய்த கொடுமையான செயலை;* ***எவ்வலி கொண்டு வெல்வார் -****எந்த வலிமையைக் கொண்டு (தடுத்து) வெற்றி பெறுவார்கள்;* ***என்றான் -****என்று கூறினான். ஏமுற்று - பாதுகாவலால் மகிழ்ந்து நிற்றல்,* *12*

*3524'****நாள்செய்த கமலத்து அண்ணல் நல்கிய நவை இல் ஆற்றல்***
***தோள் செய்த வீரம் என்னில் கண்டனை; சொல்லும் உண்டோ?***
***தாள் செய்ய கமலத்தானே முதலினர், தலை பத்து உள்ளாற்கு***
***ஆட் செய்கின்றார்கள்; அன்றி, அறம் செய்கின்றார்கள் யாரே?***

***நாள் செய்த கமலத்து அண்ணல் -*** *அன்று மலர்ந்த செந்தாமரை மலரில் தோன்றிய தலைவனான பிரமன்;* ***நல்கிய -*** *தந்த (வரத்தினால் பெற்ற);* ***நவை இல் ஆற்றல் -*** *குற்றம் இல்லாத வலிமை உடைய;****தோள் -*** *தோளினால்;* ***செய்த வீரம் -*** *(இராவணன்) செய்த வீரச் செயலை;* ***என்னில் கண்டனை -*** *(சிறகு அறுபட்டு வீழ்ந்த நிலையில்) என்னிடத்தில் (நேரடியாகக்) கண்டாய்;* ***சொல்லும் உண்டோ? -*** *(அவ்வீர ஆற்றல் பற்றி வேறு) சொல்ல வேண்டுவதும் உள்ளதா?;* ***தாள் செய்ய கமலத்தானே முதலினர் -*** *நாளத்தொடு உள்ள செந்தாமரை மலரில் தோன்றிய பிரமன் முதலிய தேவர்கள்;* ***தலை பத்து உள்ளாற்கு -*** *தலை பத்து உள்ள இராவணனுக்கு;* ***ஆட் செய்கின்றார்கள் -*** *அடிமைத் தொழில் செய்கின்றார்கள்;* ***அன்றி -*** *அல்லாமல்;* ***அறம் செய்கின்றார்கள் யாரே -*** *(அவர்களின்) உரிய அறம் செய்கின்றவர்கள் யார்? என்றபடி (ஒருவருமில்லை என்பதாம்).*

*ஆற்றல் மிக்க என்னையே சிறகு அறுபட்டு விழுமாறு செய்த இராவணனை எதிர்த்து வெல்லும் வலிமை பிரமனை முதலாகக் கொண்ட தேவர்களுக்கு*

*இல்லையாம் படியினாலே, நீ அவர்கள் மீது சினம் கொள்ளாதே என்றவாறு. சினம் பொங்கினால் செயல் மங்கும் என்பது சடாயு கவலை நாள் செய்த கமலம் - அன்று மலர்ந்த செந்தாமரை, நவை - குற்றம், தாள் - நாளம், தண்டு, ஆட் செய்தல் - அடிமைத் தொழில் செய்தல்,*

***3525. 'தெண் திரை உலகம் தன்னில்,***
***செறுநர் மாட்டு ஏவல் செய்து***
***பெண்டிரின் வாழ்வர் அன்றே?***
***இது அன்றோ தேவர் பெற்றி!***
***பண்டு உலகு அளந்தோன் நல்க,***
***பாற்கடல் அமுதம் அந்நாள்***
***உண்டிலர் ஆகில், இந்நாள்***
***அன்னவர்க்கு உய்தி உண்டோ?'***

**தெண்திரை உலகம் தன்னில் -** *தெளிந்த அலைகளை உடைய(கடலால் சூழப்பட்ட இந்த) உலகத்தில்;* **பெண்டிரின் -** *பெண்களைப்போல;* **செறுநர் மாட்டு ஏவல் செய்து -** *பகைவர்களாகிய (அரக்கர்களிடம்) ஏவல்கூவல் பணி செய்து;* **வாழ்வர் அன்றே -** *வாழ்கின்றார்கள் அல்லவா;* **தேவர் பெற்றி இது அன்றோ? -** *தேவர்களின் தன்மை இது அல்லவா?;* **பண்டு உலகு அளந்தோன் -** *முன்பொரு காலத்து மூவுலகும் ஈரடியால் அளந்த திருமால்;* **பாற்கடல் அமுதம் -** *திருப்பாற்கடலில் தோன்றிய அமுதத்தை;* **அந்நாள்நல்க -** *அந்த (கடல் கடைந்த) நாளில் கொடுக்க;* **உண்டிலர் ஆகில் -** *(அதை இவர்கள்) உண்ணாமல் இருந்திருந்தால்;* **இந்நாள் -** *இப்பொழுது;* **அன்னவர்க்கு -** *அவர்களுக்கு;* **உய்தி உண்டோ -** *(உயிரொடு தப்பிப்) பிழைத்தலும் உள்ளதோ? (இல்லை என்பதாம்).*

*முன்பு அமிழ்தம் உண்டமையால் தேவர்கள் உயிர் ஒடுங்காது இராவணனுக்கு மகளிர் போல் ஏவல் செய்து உயிர் வாழ்கின்றனர். அவர்கள் இராவணனைச் சீதையைத் தூக்கிச் செல்லும் போது தடுக்க வில்லையே? என்று நீ சினப்பதில் பொருளில்லை என்ற படி. செறுநர் - பகைவர். இன் - உவம உருபு. உய்தல் - தொழிற் பெயர்.*

***3526. 'வம்பு இழை கொங்கை வஞ்சி***
***வனத்திடைத் தமியள் வைக,***
***கொம்பு இழை மானின் பின் போய்,***
***குலப் பழி கூட்டிக் கொண்டீர்;***
***அம்பு இழை வரி வில் செங் கை***
***ஐயன்மீர்! ஆயும்காலை,***
***உம் பிழை என்பது அல்லால், உலகம்***
***செய் பிழையும் உண்டோ?***

**அம்பு இழை -** *அம்பினைத் தொடுக்கின்ற;* **வரிவில் செங்கை -***கட்டமைந்த வில்லினை ஏந்திய சிவந்த கைகளை உடைய;***ஐயன்மீர் -** *மக்களே!;* **வம்பு இழை**

***கொங்கை*** - *கச்சு அணிந்த முலைகளை உடைய;* ***வஞ்சி*** - *வஞ்சிக்கொடி போன்ற சீதை;* ***வனத்திடை*** - *காட்டில்;* ***தமியள் வைக*** - *தனித்தவளாய்த் தங்கி இருக்க;* ***கொம்பு இழை மானின்*** -*கொம்பு பொருந்திய (மாயப்பொன்) மானின்;* ***பின் போய்*** - *பின்னால் போய்;* ***குலப்பழி கூட்டிக் கொண்டீர்*** - *(சீதையை இழந்து அதனால் உங்கள்) குலத்துக்குப் பெரும் பழியை உண்டாக்கிக் கொண்டீர்கள்;* ***ஆயும் காலை*** - *ஆராய்ந்து பார்க்கும் இடத்து;* ***உம் பிழை என்பது அல்லால்*** - *(அச்செயல்) உங்களது குற்றம் என்பது அல்லால்;* ***உலகம் செய் பிழையும் உண்டோ*** - *(இதில்) உலகத்தார் செய்த குற்றம் ஏதாவது உள்ளதா?* *நீங்கள் வஞ்சியை வனத்திடைத் தமியள் வைக விட்டு மானின் பின் போய்ச் செய்த செயல் உங்கள் குற்றமேயல்லாமல் உலகம் செய் பிழையன்று என்று சடாயு கூறினான். குற்றமும் பழியும் உங்கள்பால்இருக்கப் புறத்தே பிறவற்றை பிறரையும் சினப்பது ஏன் என்பது சடாயு குறிப்பு. வம்பு - கச்சு. வஞ்சி - உவமை ஆகுபெயர். குலப்பழி - நான்காம் வேற்றுமைத் தொகை. உலகம் - இடவாகுபெயர். 12*

***3527'ஆதலால், முனிவாய்அல்லை; அருந்ததி***
***அனைய கற்பின்***
***காதலாள் துயரம் நீக்கி, தேவர்தம்***
***கருத்தும் முற்றி,***
***வேதநூல் முறையின் யாவும் விதியுளி***
***நிறுவி, வேறும்***
***தீது உள துடைத்தி' என்றான்-சேவடிக்***
***கமலம் சேர்வான்.***

***ஆதலால்*** - *(நும்பிழையின் விளைவு இது) ஆதலால்;* ***முனிவாய் அல்லை*** - *நீ சினம் கொள்வாயல்லை;* ***அருந்ததி அனைய கற்பின் காதலாள் துயரம் நீக்கி*** - *வசிட்டரின் மனைவியாகிய அருந்ததியை ஒத்த கற்பினை உடைய (உன்னைக்) காதலிக்கும் மனைவியாகிய சீதையின் துன்பத்தைத் துடைத்து;* ***தேவர்தம் கருத்தும் முற்றி*** - *தேவர்களின், (அரக்கரை முழுதும் தொலைக்கும்) எண்ணத்தை நிறைவேற்றி;* ***வேத நூல் முறையின் யாவும் விதியுளி நிறுவி*** - *வேதங்களில் ஒழுக்கமாகக் கூறப்பட்டுள்ளவை யாவற்றையும் விதி நிலை நிறுத்தி;* ***வேறும் உள தீது துடைத்தி*** - *மற்றுள்ள தீங்குகளையும் நீக்குவாய்;* ***என்றான்*** - *என்றுகூறினான்;* ***சேவடிக் கமலம் சேர்வான்*** - *(அவனது) சிவந்த திருப்பாதமாகிய தாமரையைச் சேர்தற்கு உரியவனாகிய சடாயு.*

*'நீ சினவற்க. இனிச் செய்ய வேண்டுவது கற்பினுக்கரசியின் துன்பம் நீக்கி, அமரர் செய்த தவப் பயனை முற்றுவித்து, வேத முறைப்படி அனைத்தையும் நிலை நாட்டித் தீமையை அழித்து அறத்தை நாட்டலே என்று சடாயு இராமனிடம் கூறினான். அருந்ததி - வசிட்டர் மனைவி. சேவடிக் கமலம் - பரம பதம் என்பர். நீக்கி, முற்றி, நிறுவி துடைத்தி என வினை முடிவு கொள்க. சேவடிக் கமலம் - உருவகம்.*

***3528. புயல் நிற வண்ணன், ஆண்டு, அப்***
***புண்ணியன் புகன்ற சொல்லை,***
***'தயரதன் பணி ஈது' என்ன,***
***சிந்தையில் தழுவிநின்றான்;***

***'அயல் இனி முனிவது என்னை?***
***அரக்கரை வருக்கம் தீர்க்கும்***
***செயல் இனிச் செயல்' என்று எண்ணி,***
***கண்ணிய சீற்றம் தீர்ந்தான்.***

***புயல் நிறவண்ணன் -*** *கரு மேகத்தின் நிறம் போன்ற நிறத்தை உடைய இராமன்;* ***அப்புண்ணியன் ஆண்டு புகன்ற சொல்லை -****அப் புண்ணியனாகிய சடாயு அப்பொழுது சொன்ன சொற்களை;* ***ஈது தயரதன் பணி என்ன -*** *இது தயரத மன்னனின் கட்டளையாகும் என்று;****சிந்தையில்தழுவி நின்றான் -*** *மனத்தில் (முழுதும்) ஏற்று நின்றவனாய்;* ***இனி அயல் முனிவது என்னை -*** *இனிமேல் பிறரைச் சினத்தலால் யாது பயன்?;****அரக்கரை தம் வருக்கம் தீர்க்கும் -*** *அரக்கர்களின் இனத்தை (முழுதுமாக) அழிக்கும்;* ***செயல் இனிச் செயல் -*** *செயலே இனிச் செய்ய வேண்டிய செயல்;* ***என்று எண்ணி -*** *என்று மனத்தில் சிந்தித்துப் பார்த்து;* ***கண்ணிய சீற்றம் தீர்ந்தான் -*** *மனத்தில் தோன்றிய சினத்தை விட்டான்.*

*தந்தை சொல் தலை மேற் கொண்ட இராமன், சடாயுவின் சொற்களைத் தந்தை சொல்லாகவே ஏற்று, அரக்கரை வேரோடு அழித்தலே செயத்தக்கது எனத் தேர்ந்து சீற்றம் விட்டனன். புயல் - மேகம், பண்பு குறித்ததாகவும் கொள்ளலாம். அவ்வாறாயின் மேகம் போல் இன்னார் இனியார் என்னாது அருள் செய்பவன் இராமன் எனக் கொள்க. ஆண்டு - அப்பொழுது; பணி - கட்டளை அல்லது ஆணை.*

*வீரச் சடாயுவின் தெய்வ மரணம்*

*3529.* ***ஆயபின், அமலன் தானும்,***
***"ஐய! நீ அமைதி" என்ன***
***வாயிடை மொழிந்தது அன்றி, மற்று***
***ஒரு செயலும் உண்டோ?***
***போயது அவ் அரக்கன் எங்கே? புகல்'***
***என புள்ளின் வேந்தன்***
***ஓய்வினன்; உணர்வும் தேய,***
***உரைத்திலன்; உயிரும் தீர்ந்தான்.***

***ஆயபின் -*** *இவ்வாறு சீற்றம் தீர்ந்த பிறகு;* ***அமலன் தானும் -****குற்ற மற்றவனாகிய இராமனும்;* ***ஐய -*** *(சடாயுவைப் பார்த்துத்) தந்தையே;****நீ அமைதி என்ன வாயிடை மொழிந்தது அன்றி -*** *நீ அமைதியாக இரு என்று (உன்) வாயால் கூறியபடி அல்லாமல்;* ***மற்று ஒரு செயலும் உண்டோ -*** *வேறு நான் செயத்தக்க செயல்கள் ஏதேனும் உளதா (இல்லை என்றபடி);* ***அவ்வரக்கன் போயது எங்கே புகல் என -*** *அந்த அரக்கனாகிய இராவணன் சென்றது எங்கே (என்று) கூறுக என்று (கேட்க);* ***புள்ளின் வேந்தன் -*** *பறவைகளுக்குத் தலைவனாகிய சடாயு;****ஓய்வினன் -*** *தளர்ச்சி உடையவனாய்;* ***உணர்வும் தேய -*** *அறிதலுணர்வும் குறைய;* ***உரைத்திலன் -*** *(இராமன் கேட்டதற்கு) விடை ஒன்று கூற மாட்டாதவனாய்;* ***உயிரும் தீர்ந்தான் -*** *உயிரும் விட்டான். 'நீ கூறியதை ஏற்றலே என் கடன், அது தவிர வேறு பணி எனக்கு இல்லை' என்று கூறிய*

*இராமன், 'இராவணன் யாண்டையான்' எனவினவினான்; சடாயு அதற்கு விடை கூறு முன்பே உயிர் விட்டனன். ஒய்வினன், உரைத்திலன் - முற்றெச்சங்கள். 12*

***3530 சீதம் கொள் மலருளோனும் தேவரும்***
***என்பது என்னே?***
***வேதங்கள் காண்கிலாமை, வெளிநின்றே***
***மறையும் வீரன்***
***பாதங்கள் கண்ணின் பார்த்தான்;***
***படிவம் கொள் நெடிய பஞ்ச***
***பூதங்கள் விளியும் நாளும் போக்கு***
***இலா உலகம் புக்கான்.***

***சீதம் கொள் மலருளோனும் -*** *குளிர்ச்சி பொருந்திய தாமரை மலரில் தோன்றிய பிரமனும்;* ***தேவரும் என்பது என்னே -*** *பிற தேவர்களும் (காண அரியவன்) என்பதைச் சொல்ல வேண்டுவது எற்றுக்கு?;* ***வேதங்கள் காண்கிலாமை -*** *(தனது சொரூபலட்சணத்தை வெளியிடுவதற்கென்றே தோன்றியவையாகச் சொல்லப்படுகின்ற) வேதங்களும் காண முடியாதவனாய்;* ***வெளிநின்றே மறையும் -*** *(அவற்றின்) வெளிப்புறத்திலேயே நின்று மறைகிற (சொரூபத்தை உடையவனாகிய);* ***வீரன் -*** *பெருவீரனான இராமனுடைய;* ***பாதங்கள் -*** *திருப்பாதங்களை;* ***கண்ணின் பார்த்தான் -*** *(தன்) கண்களால் தரிசித்தவனாகிய (சடாயு);* ***நெடிய படிவம் கொள் பஞ்ச பூதங்கள் -*** *பெரிய வடிவம் கொண்ட ஐம்பெரும் பூதங்கள்;* ***விளியும் நாளும் -*** *அழிகிற முடிவுக் காலத்திலும்;* ***போக்கு இலா உலகம் -*** *அழிதல் இல்லாத பரம பதத்தை;* ***புக்கான் -*** *அடைந்தான்.*

*பிரமனும் பிற தேவரும் காண முடியாத பரம் பொருள் என்பது என்? வேதங்கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியாக விளங்குகிற சொரூப லட்சணம் உடைய இராமனது திருவடிகளை இறுதியாகத் தரிசித்த புண்ணியத்தால் பஞ்ச பூதங்களும் ஒடுங்கும் கற்பாந்த காலத்திலும் அழிதல் இல்லாத பரமபதத்தைச் சடாயு பெற்றனன் என்க. சீதம் - குளிர்ச்சி. படிவம் - வடிவம். விளியும் - அழியும், போக்கு - அழிவு, காண்கிலாமை - எதிர்மறைத் தொழில் பெயர், இலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். போக்கு இலா உலகம் - அழியாத பரமபதம்.*

***3531. வீடு அவன் எய்தும் வேலை,***
***விரிஞ்சனே முதல மேலோர்,***
***ஆடவர்க்கு அரசனோடு தம்பியும்,***
***அழுது சோர,***
***காடு அமர் மரமும் மாவும் கற்களும்***
***கரைந்து சாய்ந்த;***
***சேடரும் பாருளோரும் கரம் சிரம்***
***சேர்த்தார் அன்றே.***

***அவன் வீடு எய்தும் வேலை -*** *அச் சடாயு பரமபதம் அடையும்காலத்தில்;* ***ஆடவர்க்கு அரசனோடு -*** *ஆடவர் திலகனாகிய இராமன்தன்னோடு;* ***தம்பியும் -*** *தம்பியாகிய இலக்குவனும்;* ***அழுது சோர -****அழுது மெலிய;* ***காடு அமர் மரமும் -*** *காட்டில் உள்ள மரங்களும்;* ***மாவும் -*** *மிருகங்களும்;* ***கற்களும் -*** *மலைகளும்;* ***கரைந்து சாய்ந்த -*** *(இராமனின் சோகம் கண்ட இரக்கத்தினால்) கரைந்து தளர்ந்தன;* ***விரிஞ்சனே முதல மேலோர் -*** *பிரமன் முதலிய மேலுலகத்தவர்களும்;* ***சேடரும் -*** *கீழ் உலகத்தினராகிய நாகர்களும்;* ***பாருளோரும் -*** *(இடைப்பட்ட) நில உலகத்தில் உள்ள மக்களும்;* ***கரம் சிரம் சேர்த்தார் -*** *(சடாயுவின் செயல் கண்ட மதிப்பினால்) கைகளைத் தலைமேல் சேர்த்து வணங்கினார்.****அன்றே -*** *ஈற்றசை.*

*இராமலக்குவர் சடாயுவின் இறப்பிற்கு அழுது தளர, இராமனின் சொரூபமாக உள்ள அனைத்தும் கரைந்து தளர்ந்தன. மூவுலகத் தவரும் சடாயு பரமபத மடைதலைக் கண்டு தலை மேல் கை குவித்து வணங்கினர். தன்னுயிரைப் புகழுக்கு விற்று இராம கைங்கர்யம் செய்து, திருவடிக் காட்சி பெற்று பரமபதமடைந்த சடாயுவை மூவுலகத்தவரும் தலை மேல் கை குவித்து வணங்கினர் என்பதாம். அமர்தல் - மேவல். சேடர் - கீழுலகத்தவர்களாகிய நாகர்கள். பாருளோர் - நிலவுலகத்தவர். விரிஞ்சனே - ஏகாரம் சிறப்புப் பொருள் குறித்தது.*

*இராமன் தளர, இளையவன் தேற்றுதல்*

***3532. 'அறம்தலை நின்றிலாத அரக்கனின்,***
***ஆண்மை தீர்ந்தேன்;***
***துறந்தனென், தவம் செய்கேனோ?***
***துறப்பெனோ உயிரை? சொல்லாய்;***
***பிறந்தனென் பெற்று நின்ற***
***பெற்றியால், பெற்ற தாதை***
***இறந்தனன்; இருந்துளேன் யான்; என்***
***செய்கேன்? இளவல்!' என்றான்.***

***இளவல் -*** *இளைய தம்பியே!;* ***அறம் தலை நின்றிலாத அரக்கனின்-*** *அறவழியில் நிலைத்து நிற்றல் இல்லாத அரக்கனால்;* ***ஆண்மை தீர்ந்தேன் -*** *ஆண்மையை இழந்தவனாகிய (யான்);* ***துறந்தனென் தவம் செய்கேனோ -*** *முற்றும் துறந்தவனாய்த் தவம் செய்வேனோ?;****உயிரை துறப்பெனோ -*** *உயிரை விட்டு விடுவேனோ?;* ***சொல்லாய் -****(இரண்டில் தக்கது எது என நீ) சொல்வாய்;* ***பெற்று நின்ற பெற்றியால் -*** *(என்னை மகனாகப்) பெற்று நின்ற தன்மையால்;* ***பெற்ற தாதை இறந்தனன் -*** *(என்னைப்) பெற்ற தயரதனும் (ஆரண்யத்தில் பெற்ற தந்தையாகிய சடாயுவும்) இறந்து போனான்;* ***பிறந்தனென் யான் இருந்துளேன் -*** *(மகனாகப்) பிறந்தவனாகிய நான் (இன்னும் உயிர் தாங்கி) இருக்கிறேன்;* ***என் செய்கேன் -*** *எதைச் செய்யக் கடவேன்;* ***என்றான் -*** *என்று இராமன் கூறினான்.*

*அறந்தலை நின்றிலாத அரக்கனின் வஞ்சனையால் பழியைப் பெற்று, பெற்ற தந்தையாகிய தயரதனையும், உற்ற தந்தையாகிய சடாயுவையும்இழந்து, மகனாகிய நான் யாது செய்வது என்று தெரியாமல் தடுமாறி நிற்கிறேன் என்றவாறு. நின்றிலாத -*

*எதிர்மறைப் பெயரெச்சம். தீர்ந்தேன், துறந்தனென் - முற்றெச்சங்கள்.*

***3533. என்றலும், இளைய கோ அவ் இராமனை
இறைஞ்சி, 'யாண்டும்,
வென்றியாய்! விதியின் தன்மை
பழியல விளைந்தது ஒன்றோ?
நின்று இனி நினைவது என்னே? நெருக்கி
அவ் அரக்கர் தம்மைக்
கொன்றபின் அன்றோ, வெய்ய கொடுந்
துயர் குளிப்பது?' என்றான்.***

***என்றலும்** - என்று இராமன் கூறிய உடனே; **இளைய கோ** - இளையவனாகிய இலக்குவன்; **அவ் இராமனை இறைஞ்சி** -அந்த இராமனை வணங்கி; **வென்றியாய்** - வெற்றியை உடையவனே;**யாண்டும்** - எப்பொழுதும்; **விதியின் தன்மை** - ஊழ்வினையின் தன்மையால்;**பழி அல** - பழி தவிர; **விளைந்தது ஒன்றோ** - (ஒருவனுக்கு) வந்த தீமை (ஏதாவது) உண்டோ?; **இனி நின்று நினைவது என்னே** - இனிமேல் நின்று (நீடு) நினைப்பதற்கு என்ன காரணம் உள்ளது; **அவ் அரக்கர் தம்மை நெருக்கி**- அந்த அரக்கர்களைப் (போரில்) நெருக்கிக்; **கொன்ற பின் அன்றோ** - கொன்ற பிறகல்லவா?; **வெய்ய கொடுந்துயர் குளிப்பது** - மிகக் கொடிய துன்பத்தில் மூழ்க வேண்டும்; **என்றான்** - (என்று இலக்குவன் இராமனிடம்) கூறினான்.*

*ஊழ்வினையால் மட்டுமே தீங்கு வரும். அத்தீங்கை நம்மால் தடுத்தலும் ஒல்லாது. எனவே துயரப் பட்டுப் பலனில்லை. செய்ய வேண்டுவது அரக்கரை நெருக்கி அழித்தலே என்றான் இலக்குவன். இப்பாடலில் அந்தாதி அமைப்பைக் காண்க.*

***3534. 'எந்தை! நீ இயம்பிற்று என்னை?
எண்மையன் ஆகி, ஏழைச்
சந்த வார் குழலினாளைத்
துறந்தனை தணிதியேனும்,
உந்தையை உயிர்கொண்டானை
உயிருண்ணும் ஊற்றம் இல்லாச்
சிந்தையை ஆகிநின்று, செய்வது என்
செய்கை?" என்றான்.***

***எந்தை** - என் தலைவனே; **நீ எண்மையன் ஆகி** - நீ எளிய தன்மையன் ஆகி; **ஏழைச் சந்தவார் குழலினாளை** - பேதைமை உடையஅழகிய நீண்ட கூந்தலை உடைய சீதையை; **துறந்தனை தணிதியேனும்** - கைவிட்டுச் (சீற்றத்) தணிவு கொள்வாய் என்றாலும்; **உந்தையை** -உனது தந்தையாகிய சடாயுவை; **உயிர் கொண்டானை** - உயிர் கொண்டவனாகிய அரக்கனை; **உயிருண்ணும் ஊற்றம் இல்லா** - உயிர் கொல்லும் மன வலிமை இல்லாத; **சிந்தையை ஆகி நின்று** - மனத்தை உடையவனாய் நின்று; **செய்வது***

*__செய்கை என் -__ செய்யக்கூடிய செயல் எது உள்ளது; __இயம்பிற்று என்னை -__ நீ சொல்லியது என்ன, (அது சரியல்ல);__என்றான்-__ என்று இலக்குவன் கூறினான்.*

*சீதையைக் கவர்ந்து சென்ற இராவணனை நீ கொல்ல வேண்டும் அவ்வாறன்றி நீ மனம் கலங்கி அவளை முற்றும் துறக்கக் கருதினை எனினும், தந்தையாகிய சடாயுவைக் கொன்ற குற்றத்துக்காகவாவதுஅவனைக் கொல்ல வேண்டும் என்று இலக்குவன் இராமனிடம் கூறினான். எண்மையன் - எளிய தன்மையன். ஏழை - அறியாமையாகிய பேதமைப் பண்பு உள்ளவள். சந்தம் - அழகு. வார் - நீண்ட. ஊற்றம் - வலிமை. நீ இயம்பிற்று என்னை - 'ஆண்மை தீர்ந்தேன், துறந்தனென், தவம் செய்கேனோ? துறப்பெனோ உயிரை? என் செய்கேன் இளவல்' (3532) என்று மனங் கலங்கிக் கூறியதை உட்கொண்டு உரைத்தது.*

*இருவரும் சடாயுவுக்கு இறுதிக் கடன் செய்தல்*

***3535. அவ் வழி இளவல் கூற, அறிவனும்
அயர்வு நீங்கி,
'இவ் வழி இனைய எண்ணின்
ஏழைமைப்பாலது' என்னா,
வெவ் வழி பொழியும் கண்ணீர்
விலக்கினன், 'விளிந்த தாதை
செவ் வழி உரிமை யாவும் திருத்துவம்;
சிறுவ!' என்றான்.***

*__இளவல் -__ இளவலாகிய இலக்குவன்; __அவ்வழி கூற -__அவ்வாறு (எடுத்துக்) கூற; __அறிவனும் -__ முற்றுணர்வுடையவனாகிய இராமனும்; __இவ்வழி -__ இவ்விடத்தில்; __இனைய எண்ணின் -__இத்தன்மையனவான எண்ணங்களை எண்ணுவது; __ஏழைமைப் பாலது என்னா -__அறியாமையின் பாற்பட்டது என்று எண்ணி; __அயர்வு நீங்கி -__ மனத்துன்பம் நீக்கி; __வெவ்வழி பொழியும் கண்ணீர் -__ கொடுந்துன்பத்தினால் வழியும் கண்ணீரை; __விலக்கினன் -__ துடைத்தவனாய்; __சிறுவ -__(இலக்குவனை) தம்பி, (என விளித்து); __விளிந்த தாதை -__ இறந்த தந்தையாகிய சடாயுவுக்கு; __செவ்வழி உரிமையாவும் -__ செய்ய வேண்டிய (இறுதிக்) கடமைகளை எல்லாம்; __திருத்துவம் -__ திருத்தமாக (முழுமையுறச்); செய்வோம்;__என்றான்-__ என்று கூறினான்.*

*இளவல் கூறியதைக் கேட்ட இராமன் மனம் தேறி, இவ்வாறு சிந்திப்பது அறிவில்லாமையின் பாற்பட்டது என்று உள்ளத்தில் கொண்டு,இலக்குவனைப் பார்த்து, 'இறந்த தந்தையாகிய சடாயுவுக்கு உரிய ஈமச் சடங்குகளைக் குறைவறச் செய்வோம்' என்றான். உரிமை - கடன்கள், சடங்குகள்.*

***3536. இந்தனம் எனைய என்ன கார்
அகில் ஈட்டத்தோடும்
சந்தனம் குவித்து, வேண்டும்***

*தருப்பையும் திருத்தி, பூவும்*
*சிந்தினன்; மணலின் வேதி*
*தீது அற இயற்றி, தெண் நீர்*
*தந்தனன்; தாதை தன்னைத் தடக்*
*கையான் எடுத்துச் சார்வான்,*

***எனைய -*** *எத்தன்மை உடைய;* ***இந்தனம் என்ன -*** *விறகுகள் என்று கண்டவர் வியக்கும் படி;* ***கார் அகில் ஈட்டத் தோடும் -*** *கரிய அகில் கட்டைகளின் தொகுதியுடன்;* ***சந்தனம் குவித்து -*** *சந்தனக் கட்டைகளையும் சேர்த்துக் குவித்து;* ***வேண்டும் தருப்பையும் திருத்தி -*** *தேவையான தருப்பைப் புற்களையும் திருத்தமாக அமைத்து;* ***பூவும் சிந்தினன் -*** *பூக்களையும் கொண்டு வந்து (சடாயுவின் மீது) தூவினான்;* ***மணலின் வேதி தீது அற இயற்றி -*** *(வேத முறைப்படி) மணலினால் மேடையைக் குற்றம் இல்லாமல் அமைத்து;* ***தெண் நீர் தந்தனன் -*** *தெளிந்த நீரினையும் கொண்டு வந்து சேர்த்து;* ***தாதை தன்னை -*** *(தன்) தந்தையாகிய சடாயு தன்னை;* ***தடக்கையான் எடுத்து -*** *பெரிய கைகளால் எடுத்துக் கொண்டு;* ***சார்வான் -*** *இறுதிச் சடங்கு செய்யப்படுதற்கு உரிய மணல் வேதிகைக்குச் சென்று சேர்ந்தான்.*

*இறுதிச் சடங்கு செய்தற்குரிய விறகு, தருப்பை, பூ, தண்ணீர் ஆகியவற்றைச் சேர்த்து வைத்து, அதற்காக மணல் மேடை அமைத்ததையும் இப்பாடல் விளக்குகிறது. இத்தனம் - விறகு, கார் - கரிய; மணலின் வேதி - மணல் மேடை,*

*3537.* ***ஏந்தினன் இரு கைதன்னால்;***
***ஏற்றினன் ஈமம்தன்மேல்;***
***சாந்தொடு மலரும் நீரும் சொரிந்தனன்;***
***தலையின் சாரல்***
***காந்து எரி கஞல மூட்டி, கடன்***
***முறை கடவாவண்ணம்***
***நேர்ந்தனன்-நிரம்பும் நல் நூல் மந்திர***
***நெறியின் வல்லான்.***

***நிரம்பும் நல்நூல் மந்திர நெறியின் வல்லான் -*** *நிறைந்த நல்ல நூல்களாகிய சாத்திரங்களின் முறையில் வல்லவனாகிய இராமன்;* ***நீரும் சாந்தொடு மலரும் சொரிந்தனன் -*** *நீரையும் சந்தனத்தையும் மலரையும்(உரிய முறைப்படி) பயன்படுத்திச் (சடாயுவின் உடலுக்கு இட்டு);* ***இருகை தன்னால் ஏந்தினன் -*** *அவ்வுடலைத் தன் இரண்டு கைகளாலும் எடுத்து;* ***ஈமம் தன்மேல் ஏற்றினன் -*** *(விறகுகள் அடுக்கப்பட்ட) ஈம மணல் மேடையின் மேல் ஏற்றி;* ***தலையின் சாரல் காந்து எரி கஞல மூட்டி -*** *தலைப் பக்கத்தில் எரிகிற நெருப்பைப் பற்ற வைத்து;* ***கடன் முறை கடவா வண்ணம் -*** *செய்ய வேண்டிய கடமைகளை முறை தவறாதவாறு;* ***நேர்ந்தனன் -*** *செய்தான்.*

*சடாயுவின் உடலுக்கு, நீரும், சந்தனமும், மலரும் இட்டு அலங்கரித்து, இரு கையில் ஏந்தி, ஈம மணல் மேடையில் ஏற்றித் தலைப் பக்கத்தில் எரிகிற நெருப்பைப் பற்ற வைத்து, செய்ய வேண்டியவற்றை முறை தவறாது இராமன் செய்தனன் என்க. சாரல் -*

*பக்கம், கஞலுதல் - நெருங்குதல்.*

***3538. தளிர்த்தன கிளர்ந்த மேனித்***
***தாமரைக் கெழுமு செம்பூத்***
***துளித்தன அனைய என்னத் துள்ளி***
***சோர் வெள்ளக் கண்ணன்***
***குளித்தனன், கொண்டல், ஆற்று;***
***குளித்தபின், கொண்ட நல் நீர்***
***அளித்தனன்-அரக்கர்ச் செற்ற***
***சீற்றத்தான்-அவலம் தீர்ந்தான்.***

***அரக்கர்ச் செற்ற சீற்றத்தான் -*** *அரக்கர்களை அழிக்க வேண்டும் என்ற சினத்தினால்;* ***அவலம் தீர்ந்தான் -*** *(சீதையைப் பிரிந்த) துன்பத்தை நீக்கியவனாகிய இராமன்;* ***தளிர்த்தன கிளர்ந்த மேனி -*** *தளிரின் நிறத்தன்மை உடைய செழிப்பொடு கூடிய (தன்) உடலில்;* ***தாமரைக்கெழுமு செம்பூ -*** *தாமரையின் செழிந்த சிவந்த மலர்;* ***துளித்தன அனைய என்ன -*** *(தேன்) துளிகளைத் துளிர்த்ததை ஒத்தது என்னுமாறு;****துள்ளி சோர் வெள்ளக் கண்ணன் -*** *துளியாக வடிகிற கண்ணீர்ப் பெருக்கு உடையவனாய்;* ***கொண்டல் ஆற்றுக் குளித்தனன் -*** *மேகம் ஆற்றில் படிவதைப் போல (ஆற்றில்) குளித்தான்;* ***குளித்த பின் -*** *குளித்து முடித்த பிறகு;* ***கொண்ட நல் நீர் அளித்தனன் -*** *(தன் கையில் கொண்ட) நல்ல நீரை நீர்க்கடனாகக் கொடுத்தான்.*

*இராமன் கண்களுக்குத் தாமரை மலரும் அவன் கண்களில் இருந்து வழியும் கண்ணீருக்கு அம்மலரில் இருந்து வெளிப்படும் தேனும் உவமைகளாயின. இராமன் ஆற்றில் மூழ்கிக் குளித்தது, ஆற்றில் மேகம் படிந்தது போன்றது என்றவாறு. கொண்டல் - மேகம் போன்ற இராமன், துள்ளி - விரித்தல் விகாரம்.*

***3539. மீட்டு இனி உரைப்பது என்னே?***
***விரிஞ்சனே முதல மேல், கீழ்***
***காட்டிய உயிர்கள் எல்லாம்***
***அருந்தின; களித்த போலாம்;***
***பூட்டிய கைகளால், அப்புள்ளினுக்கு***
***அரசை, 'கொள்க' என்று,***
***ஊட்டிய நல் நீர் ஐயன் உண்ட***
***நீர் ஒத்தது அன்றே!***

***விரிஞ்சனே முதல -*** *பிரமனை முதலாகக் கொண்ட;* ***மேல் கீழ் காட்டிய உயிர்கள் எல்லாம் -*** *உயர்ந்தவை தாழ்ந்தவை என்று எடுத்துக் காட்டப் பட்ட உயிரினங்களெல்லாம்;* ***அருந்தின களித்த போலாம் -*** *(இராமன் சடாயுவுக்குக் கொடுத்த நீர்க்கடனை) அருந்தினவையாய்மகிழ்ந்தவை போலாயின;* ***அப்புள்ளினுக்கு அரசை -*** *அந்தப் பறவைகளுக்கு அரசனாகிய சடாயுவை;* ***'கொள்க' என்று -*** *'(நீ) ஏற்றுக் கொள்க' என்று கூறி;* ***பூட்டிய கைகளால் -*** *(தன்) இணைத்த கைகளால்;* ***ஊட்டிய நல்நீர் -*** *உண்பித்த*

*(நீர்க்கடனுக்கு உரிய) நல்ல நீர்;* ***ஐயன்உண்ட நீர் ஒத்தது -*** *(அனைத்துயிர்க்கும்) தலைவன் ஆகிய திருமால் (தானே) உட்கொண்ட நீரைப் போன்றதாயிற்று;* ***மீட்டு இனி உரைப்பது என்னே? -*** *வேறு கூற என்ன உள்ளது. (என்றவாறு).*

*சடாயுவுக்கு இராமன் நீர்க்கடன் செய்தபோது சடாயுவின் உயிரன்றி அனைத்து உயிர்களும் அதனை உண்டு மகிழ்ந்தன. இது திருமாலே நீருண்டது போன்றது என்றார். சொரூபி உண்டது சொரூபங்கள் உண்டன போல் ஆனது என்றவாறு. விரிஞ்சன் - பிரமன், பூட்டிய கைகள் - சேர வைத்த கைகள், நல்நீர் - ஐயனே ஊட்டியதால் நல்நீர் எனப்பட்டது. காட்டிய - பெயரெச்சம், அருந்தின - முற்றெச்சம், அன்று, ஏ - அசைகள் ஏகாரம் தேற்றம்; அன்றே தேற்றேகாரமாகக் கொண்டும் பொருள் கொள்ளலாம்.*

***3540. பல் வகைத் துறையும், வேதப் பலிக்***
***கடன் பலவும், முற்றி,***
***வெல் வகைக் குமரன் நின்ற***
***வேலையின், வேலை சார்ந்தான்-***
***தொல் வகைக் குலத்தின் வந்தான்***
***துன்பத்தால், புனலும் தோய்ந்து,***
***செல் வகைக்கு உரிய எல்லாம்***
***செய்குவான் என்ன, வெய்யோன்.***

***வெல் வகைக் குமரன் -*** *வெற்றி பெறும் வகையறிந்த சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமன்;* ***பல்வகைத் துறையும் -*** *நீத்தார்க்குரிய பலவகைச் சடங்குகளையும்;* ***வேதப் பலிக் கடன் பலவும் -*** *வேத விதிப்படி செய்ய வேண்டிய பிண்டபலி முதலிய கடமைகள் பலவற்றையும்;* ***முற்றி நின்ற வேலையின் -*** *முடித்து நின்ற பொழுதில்;* ***வெய்யோன் -*** *வெப்பம் மிக்க கதிர்களை உடைய கதிரவன்;* ***தொல்வகைக் குலத்தின் வந்தான் -*** *தொன்று தொட்டு வரும் சூரிய குலத்தில் தோன்றிய (இராமனது);* ***துன்பத்தால் -*** *(சடாயுவை இழந்த) துன்பத்துக்காக;* ***புனலும் தோய்ந்து -*** *(தான்) நீரில் ஆடி;* ***செல் வகைக்கு உரிய எல்லாம் செய்குவான் என்ன-*** *(சடாயு) செல்லும்கதிக்குத் தேவையான (சடங்குகளை) எல்லாம் செய்பவன் போல;* ***வேலை சார்ந்தான் -*** *கடலில் (சென்று) மறைந்தான். இராமன் நீத்தார் கடன்களை முறையாகச் செய்து முடித்த வேளையில், கதிரவன் அவனது துன்பத்தைக் கண்டு பொறுக்காது தானும் புனலாடிச் சடங்கு செய்பவன் போல் கடலில் சென்று மறைந்தான் என்பதாம். தொல்வகைக் குலத்தின் வந்தான் என்பது சடாயுவைக் குறிக்கும் என்பாருமுளர்.*

## அயோமுகிப் படலம்

அயோமுகி என்ற அரக்கியின் செயல்களை விளக்குவது, அயோமுகிப் படலம் ஆகும். இது அயோமுகியைப் பற்றிக் கூறப்பட்ட படலம் என விரிந்து நிற்கும். அயோமுகி என்ற சொல் இரும்பினால் ஆகியது போன்ற முகம் உடையவள் என்று பொருள் தரும். இலக்குவன்பால் காதல் கொண்ட அயோமுகியின் செயல்கள் இப்படலத்தில் விளக்கப்பட்டுள்ளன. இராமன் மேல் காதல் கொண்டு இலக்குவனால் உறுப்பிழந்த சூர்ப்பணகையின் பாவிகம் சார் முதல் கதைக்கு ஒத்த இணைக் கதையாக இது விளங்குகிறது. அயோமுகி ஒரு நிகழ்ச்சிப் பாத்திரமாவாள். கதையில் இராமனும் இலக்குவனும் பிரியும் சிறு பிரிவுக்கு இவள் வழி வகுக்கிறாள். அப்பிரிவின் அவல உணர்வும், பாசப் பிணைப்பும் இப்பகுதியில் கம்பரால் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளமை அறியற்பாலது.

சடாயுவுக்கு உரிய நீர்க் கடன் செய்த பின் இராமன் இலக்குவனுடன் சீதையைத் தேடிக் கொண்டு செல்லுகிறான். செல்லும் வழியில் நீர் வேட்கை கொண்ட இராமன், இலக்குவனை நீர் கொண்டு வருமாறு வேண்டுகிறான். இலக்குவன் நீர் கொண்டு வரச் சென்ற வழியில் அயோமுகி இலக்குவன் மீது காதல் கொண்டு, தன் மோகனை என்னும் மந்திர வலிமையால்அவனை மயக்கி வலிய எடுத்துச் சென்றாள். மோக மந்திர வலிமை அவள் தழுவி எடுத்த உடனே நீங்கிவிட்டது. இலக்குவன் அவளது உறுப்புக்களைத் துணித்து மீண்டும் இராமனிடம் வந்த செய்தி இப்பகுதியில் கூறப்பட்டுள்ளது.

இப்படல நிகழ்ச்சிகள் - முழுவதும் இரண்டு இரவு மற்றும் ஒரு பகல் நேர நிகழ்ச்சியாகும். இரவின் - காரிருளில் சீதையைப் பிரிந்து வருந்தும் இராமனது அவலத்தைக் கவிஞர் நெஞ்சுருக விவரித்துள்ளார். துணைவிக்காக மட்டுமன்றித் துணையாக வந்த இலக்குவனுக்குக் கூறவும் யுத்த காண்ட நாகபாசப் படலத்தில் இராமன் வருந்துதலும் (8221 - 8227) மீண்டும் பிரமாத்திரப் படலத்தில் வருந்துதலும் (8637 - 8660) இங்குக் குறிக்கத்தக்க குறிப்பு. இவ் வவலப் புலம்பல்களுக்கு முன்னோடியாக இப்படலத்தில் (3603 - 3617) இராமனின் துயர் புலப்படுத்தும் அவலப் பாடல்கள் அமைந்துள்ளன. மானிடச் சட்டையில் வந்த இறைவன் மானுட உணர்ச்சிகளை வெளிக் காட்டும் மனிதனாக இங்குக் காட்சி தருகிறான்.

இராமலக்குவர் மலையில் தங்குதல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**3541. அந்தி வந்து அணுகும்வேலை,**
**அவ் வழி, அவரும் நீங்கி,**
**சிந்துரச் செந் தீக் காட்டு ஓர்**
**மை வரைச் சேக்கை கொண்டார்;**
**இந்திரற்கு அடங்கல்செல்லா**
**இராக்கதர் எழுந்ததென்ன,**

***வெந் துயர்க்கு ஊற்றம் ஆய விரி***
***இருள் வீங்கிற்று அன்றே.***

***அந்தி வந்து அணுகும் வேலை -*** *அந்தி மாலைப் பொழுது வந்து சேரும் வேளையில்;* ***அவரும் -*** *அந்த இராமலக்குவர்கள்;* ***அவ்வழி நீங்கி-*** *அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டு;* ***செந்தீ சிந்துரக் காட்டு -****சிவந்த தீயினைப் போல சிந்துரப் பொடிகள் (காட்சி) காட்டுகிற;* ***ஓர் மை வரைச் சேக்கை கொண்டார் -*** *ஒரு பெரிய மலையைத் (தாங்கள்) தங்குமிடமாகக் கொண்டார்கள்;* ***வெந்துயர்க்கு ஊற்றம் ஆய -*** *பெருந்துன்பத்துக்கு வலிய இடமாக;* ***விரி இருள் -*** *(எங்கும்) பரவிய இருள்;* ***இந்திரற்கு அடங்கல் செல்லா இராக்கதர் எழுந்ததென்ன -*** *இந்திரனுக்கு அடங்காத அரக்கர்கள் ஒன்றாக வந்து தோன்றியது போல;* ***வீங்கிற்று -****எழுந்து பரவியது.*

*சடாயுவின் இறுதிக் கடன் முடித்த இராமலக்குவர் ஒரு மலையில் தங்கினர். அப்போது இந்திரனுக்கு அடங்காத அரக்கர் எங்கும் தோன்றியதைப் போல காரிருள் எழுந்து எங்கும் பரவியது. வெந்துயர்க்கு ஊற்றம் ஆய விரி இருள் - சீதையைப் பிரிந்த இராமனுக்குப் பெரும் வேதனையைத் தருவதாலும், இலக்குவனைச் சிறுபொழுது பிரிந்து இராமன் வருந்தக் காரணமாக இருப்பதாலும் இவ்வாறு கூறப்பட்டது. இப்படலத்தில் "விரி இருள் வீங்கிற்று" கம்ப. (3541) என்ற தொடக்கமும், "துன்னிய செங்கதிர்ச் செல்வன் தோன்றினான், (3641) புலம்புறு விடியலில் கடிது போயினார். (3642) என்ற முடிவும் அமைந்திருப்பதால் இப்படல நிகழ்ச்சிகள் எல்லாம் இரு இரவு ஒரு பகல் நிகழ்ச்சிகளே என்பதைஅறியலாம். அந்தி என்ற சிறு பொழுது தொடக்கமாகவும் விடியல் என்ற சிறுபொழுது முடிவாகவும். அமைதலின் சிறப்பை எண்ணுக. அந்தி - பகல் பொழுதின் பிற்கூறு, மை - பெரிய சேக்கை - படுக்கை, வீங்குதல் - மிக்குத் தோன்றுதல். செல்லா - ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம், வெந்துயர் - பண்புத்தொகை, விரிஇருள் - வினைத்தொகை. அன்றே - ஈற்றசை.*

*உறக்கம் இன்றித் துயரால் நலிதல்*

***3542. தேன் உக அருவி சிந்தி,***
***தெருமரல் உறுவ போல,***
***கானமும், மலையும், எல்லாம் கண்ணின்***
***நீர் உகுக்கும் கங்குல்,***
***மானமும் சினமும் தாதை மரணமும்,***
***மைந்தர் சிந்தை,***
***ஞானமும் துயரும் தம்முள் மலைந்தென,***
***நலிந்த அன்றே.***

***கானமும் மலையும் எல்லாம் -*** *காடுகளும் மலைகளும் ஆகிய எல்லாமும்;* ***தெருமரல் உறுவ போல -*** *(இராமலக்குவர் துன்பத்துக்கு) மனச்சுழற்சி அடைபவைபோல;* ***தேன் உக அருவி சிந்தி -****தேனினையும் அருவி நீரினையும் ஒழுக விடுவதால்;* ***கண்ணின் நீர் உகுக்கும் -****(அவை) கண்ணீர் வெளிப்படுவது போல் வெளிப்படும்;* ***கங்குல் -*** *அன்று இரவிலே;* ***மானமும் -*** *(சீதையை இராவணன் கவர்ந்து சென்றதால் ஏற்பட்ட) அவமானமும்;* ***சினமும் -*** *அந்த (இராவணன் மீது தோன்றிய) சினமும்;* ***தாதை***

***மரணமும் -*** *தந்தையாகிய சடாயுவின் மரணத்தால் (ஏற்பட்ட மனத் துயரமும்);* ***ஞானமும் -*** *நல்லறிவும்;* ***துயரமும் -*** *துன்பமும்;* ***தம்முள் மலைந்தென -*** *தங்களுக்குள் (முரண்பட்டுப்) போரிட்டது போல;****மைந்தர் சிந்தை -*** *வலிமையுடைய இராமலக்குவர்களுடைய மனத்தில்;****நலிந்த -*** *தாக்கி வருத்தின.*

*காடும் மலையும் இராமலக்குவர் துன்பத்துக்கு வருந்துபவை போல் தேனையும் அருவி நீரையும் சொரிந்தன. அவர்களுடைய மனத்தில்அவமானமும், சினமும், துயரமும் மோதியது. நல்லறிவும் துன்பமும் தம்முள் மாறுபட்டுப் போர் புரிவதைப் போல் அவர்களை வருத்தின. தெருமரல் - மனச் சுழற்சி, "அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" என்பர் தொல்காப்பியனார் (தொல் சொல் உரி 13) கங்குல் - இரவு, மானம் - அவமானம், ஞானம் - தூய அறிவு, அன்று, ஏ - அசைகள்*

***3543. மெய் உற உணர்வு செல்லா***
***அறிவினை வினையின் ஊக்கும்***
***பொய் உறு பிறவிபோல, போக்க***
***அரும் பொங்கு கங்குல்,***
***நெய் உறு நெருப்பின் வீங்கி***
***நிமிர்தர, உயிர்ப்பு நீள,***
***கையறவு உறுகின்றாரால்; காணல்***
***ஆம் கரையிற்று அன்றே.***

***மெய் உற உணர்வு செல்லா -*** *தத்துவ ஞானத்தின் கண் உணர்வு பொருந்தியமையாத;* ***அறிவினை -*** *அறிவை;* ***வினையின் ஊக்கும் -*** *தீவினையின் கண் செலுத்துகிற;* ***பொய் உறு பிறவிபோல -****பொய்மைத் தன்மை மிக்க பிறப்புப் போல;* ***போக்க அரும் பொங்கு கங்குல் -****நீக்க முடியாது மென் மேல் வளருகிற (அந்த) இராக்காலத்தின் கண்;****உயிர்ப்பு -*** *பெருமூச்சு;* ***நெய் உறு நெருப்பின் வீங்கி நிமிர்தர -*** *நெய் சொரியப்பெற்ற நெருப்பைப் போல மிக ஓங்கி நிற்க;* ***நீள கை அறவு உறுகின்றார் -*** *நீண்ட செயலறுதலை அடைகின்றார்கள்;* ***காணல் ஆம் கரையிற்று அன்றே -*** *(அந்நிலை நம்மால்) காணத்தகுந்த எல்லையுடையது அன்று.*

*தத்துவஞானமுடையவரன்றிப் பிறரால் நீக்க முடியாத பிறவி போல, மன உறுதி இல்லாமையால் இராமலக்குவரின் துன்பம் நீக்க முடியாது உள்ளது என்றவாறு. பிறவியை இருளாகக் கூறும் கவி மரபை எண்ணுக. காணல் ஆம் கரையிற்று என்பதை இரவுக்கு இணைத்துத் துன்பத்தால்வருந்தும் இராமலக்குவருக்கு அவ்விரவு எல்லையில்லாது நீண்டதெனவும் கொள்ளலாம். மெய் - தத்துவ ஞானம் ஊக்கும் - உந்திச் செலுத்தும்.உயிர்ப்பு - பெருமூச்சு கை அறவு - செயலற்று இருத்தல், கரை - எல்லை. உறு பிறவி - வினைத்தொகை, ஆல், ஏ - அசைகள்.*

***3544. யாம் அது தெரிதல் தேற்றாம்; இன்***
***நகைச் சனகி என்னும்***
***காமரு திருவை நீத்தோ?***

*முகமதி காண்கிலாதோ?*
*தே மரு தெரியல் வீரன் கண்*
*எனத் தெரிந்த செய்ய*
*தாமரை, கங்குற் போதும், குவிந்திலாத்*
*தன்மை என்னோ?*

***தேமரு தெரியல் வீரன் -*** *தேன் பொருந்திய மலர் மாலையை அணிந்த வீரனாகிய இராமன்;* ***கண் எனத் தெரிந்த -*** *கண் என்று (சிறப்பாகச்) சொல்லப்பட்ட;* ***செய்ய தாமரை -*** *சிவந்த தாமரை மலர்கள்;* ***கங்குற் போதும் -*** *இரவுக் காலத்திலும்;* ***குவிந்திலாத் தன்மை -****குவிதல் இல்லாதிருந்த தன்மை;* ***இன் நகைச் சனகி எனனும் -*** *இனிய புன்முறுவலை உடைய சானகி என்னும்;* ***காமரு திருவை நீத்தோ -****விரும்பத் தகுந்த திருமகளை இழந்ததாலா?;* ***முகமதி காண்கிலாதோ -*** *(அவளது) முகமாகிய சந்திரனைக் காணாததாலா?;* ***என்னோ -****என்ன காரணம் என்று;* ***அது யாம் தெரிதல் தேற்றாம் -*** *அதை நம்மால் தெளிவாக அறியக் கூடவில்லை.*

*சீதையைப் பிரிந்ததனாலும் அவளது முகமதி காணாததாலும் இராமனது செந்தாமரைக் கண்கள் உறங்காதது போல் இரவுக் காலத்தில் கூடத் தாமரை மலர்கள் குவியவில்லை என்றவாறு. செந்தாமரை மலரிலும் இராமபிரானது தாமரைத் திருக்கண்களிலும் உறைந்த பிராட்டியின் பிரிவு அவற்றை உறங்காமலும், குவியாமலும் செய்தன என்க. காமரு - விரும்பத்தக்க, தெரியல் - மாலை, தேற்றாம் - தன்மைப் பன்மை வினைமுற்று. முகமதி - உருவகம், ஓகாரங்கள் ஐயப் பொருள் குறித்து வந்தன. உம்மை - சிறப்புப் பொருளது.*

*3545. பெண் இயல் தீபம்*
*அன்ன பேர் எழிலாட்டிமாட்டு*
*நண்ணிய பிரிவு செய்த நவையினார்*
*நவையில் உள்ளத்து,*
*எண்ணியது அறிதல் தேற்றாம்;*
*இமைத்தில, இராமன் என்னும்*
*புண்ணியன் கண்ணும், வன் தோள் தம்பி*
*கண் போன்ற அன்றே.*

***பெண் இயல் தீபம் அன்ன -*** *பெண்களில் விளக்கை ஒத்த;* ***பேர்எழிலாட்டி மாட்டு -*** *பேரழகு உடைய சீதையின் காரணமாக (ஏற்பட்ட);****நண்ணிய பிரிவு செய்த -*** *பொருந்திய பிரிவு தனக்குச் செய்த;* ***நவையினார் -*** *பெருவருத்தத்தினையுடைய (இராமனார்);****நவையில் உள்ளத்து -*** *(தன்) குற்றமற்ற உள்ளத்தில்;* ***எண்ணியது அறிதல் தேற்றாம்-*** *நினைத்தது (எது என்பதை) யாம் அறியக் கூடவில்லை;* ***இராமன் என்னும் புண்ணியன் கண்ணும் -*** *இராமன் (என்னும் பெயர் கொண்ட அந்த) நல்வினையை உடையவனுடைய கண்களும்;* ***இமைத்தில -****மூடி உறங்காதனவாய்;* ***வன்தோள் தம்பி கண் போன்ற அன்றே -****வலிமை உடைய தோள்களை உடைய (அவன்) தம்பியாகிய இலக்குவனின் கண்களையே ஒத்து விளங்கின.*

*பதினான்கு ஆண்டுகள் நயனம் இமைக்காது காத்த இலக்குவன் கண்களைப் போல இராமனது கண்களும், மானம், சினம், துயரம், ஆகிய உணர்ச்சிகளால் அலைக்கழிக்கப்பட்டு உறங்காவாயின என்றவாறு. பெண் இயல் தீபம் அன்ன பேர் எழிலாட்டி - தன்னையும் பிற சுற்றுப் புறப் பொருள்களையும் விளக்கிக் காட்டும் விளக்கினைப் போல், சீதை தன் பிறந்த குலம், புகுந்த குலம், பெண் குலம் ஆகியவற்றின் பெருஞ் சிறப்பை விளங்க வைப்பவளாதலால் "தீபம் அன்ன" என்றார். இதனைச் சுந்தர காண்டத்தில் வரும்.*

***"உன் பெருந்தேவி என்னும் உரிமைக்கும், உன்னைப் பெற்ற மன் பெரு மருகி என்னும் வாய்மைக்கும், மிதிலை மன்னன் தன் பெருந் தனயை என்னும் தகைமைக்கும், தலைமை சான்றாள்- என்பெருந் தெய்வம் ஐயா! இன்னமும் கேட்டி என்பான் (6032)***

***உன் குலம் உள்ளது ஆக்கி, உயர் புகழ்க்கு ஒருத்தி ஆய தன் குலம் தன்னது ஆக்கி," (6034)***

*என்ற பாடல்களோடு ஒப்பிட்டு நயம் காணலாம். அன்று ஏ - ஈற்றசைகள்*

***3546. 'வண்டு உளர் கோதைச் சீதை***
***வாள் முகம் பொலிய வானில்***
***கண்டனென்' என்று, வீரற்கு,***
***ஆண்டு ஒரு காதல் காட்ட,***
***தண் தமிழ்த் தென்றல் என்னும்***
***கோள் அராத் தவழும் சாரல்,***
***விண்தலம் விளக்கும் செவ்வி வெண்***
***மதி விரிந்தது அன்றே.***

***'வண்டு உளர் கோதைச் சீதை -** வண்டுகள் மொய்த்து ஒலிக்கிற மாலையை அணிந்த சீதையினது; **வாள்முகம் -** ஒளியுடைய முகத்தை; **வானில் பொலியக் கண்டனென் என்று -** ஆகாயத்தில் அழகு விளங்கக் கண்டேன் என்று; **வீரற்கு -** வீரனாகிய இராமனுக்கு; **ஆண்டு ஒரு காதல் காட்ட -** அவ்விடத்து ஓர் ஆசையை உண்டாக்கிக் காட்டுமாறு;**தண் தமிழ்த் தென்றல் என்னும் -** குளிர்ந்த இனிமையான தென்றல் காற்று என்றுகூறப்படுகிற; **கோள் அராத்தவழும் சாரல் -** குறிதவறாமல் கொள்ளும் தன்மை உள்ள பாம்பு ஊர்கிற பக்க மலையில்; **விண்தலம் விளக்கும் -** ஆகாயத்தின் இடத்தைத் தன் (ஒளியால்) விளங்கச் செய்யக்கூடிய;**செவ்வி-** அழகுடைய; **வெண் மதி விரிந்தது -** வெண்மையான நிலவு கதிர் வீசிப் பரவியது.*

*சீதையைக் காணாது வருந்திய இராமன் அவளது திருமுகம் கண்டேன் என்று ஆசை கொள்ளுமாறு சந்திரன் உதித்தான் என்றார். பிரிவின் கண் பெரும் பிழை தருவது தென்றல் ஆகலின் அதனைக் கோளரவாக உருவகித்தார். தண் தமிழ்த் தென்றல் - குளிர்ந்த இனிமை உடைய தென்றல், தமிழ் போல் இனிய தென்றல், தமிழ் நாட்டு இனிய தென்றல் என்று பலவாறு பொருள் தரும். தமிழ் - இனிமை என்னும் பொருளும் தரும், தண் தமிழ்த் தென்றல் - கம்பரின் மொழிப் பற்றைத் தெளிவுறக் காட்டும் சான்றாகும். அகத்தியப் படலத்தில்*

*"தழற் புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்", 3, 3, 41" "என்றும் உள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்" (2671)*

*என்று வந்துள்ள வரிகள் கம்பர் பெருமானின் தமிழ்ப் பற்றை விளக்குவனவாகும் என்பதையும் எண்ணுக. உளர்தல் - ஒலித்தல், வாள் - ஒளி, சாரல் - பக்க மலை. கோள் - முதல் நிலை நீண்ட தொழிற் பெயர், அன்றே - ஈற்றசை.*

***3547. களியுடை அனங்கக் கள்வன்***
***கரந்து உறை கங்குற்காலம்***
***வெளிபடுத்து, உலகம் எங்கும்***
***விளங்கிய நிலவின் வெள்ளம் -***
***நளி இருள் பிழம்பு என்று, ஈண்டு,***
***நஞ்சொடு கலந்த நாகத்***
***துளை எயிற்று ஊறல் உற்றதாம்***
***என - சுட்டது அன்றே.***

***களியுடை அனங்கக் கள்வன் -*** *மனச் செருக்குடைய உருவிலியாகிய மன்மதக் கள்ளன்;* ***கரந்துறை கங்குற் காலம் -****மறைந்து வாழுகிற இரவுக்காலத்தில்;* ***உலகம் எங்கும் -*** *உலகம் முழுவதிலும்;* ***வெளிபடுத்து விளங்கிய -*** *வெளிப்பட்டு விளங்கிய;* ***நிலவின் வெள்ளம் -*** *நிலவினது மிக்க ஒளி;* ***நளி இருள் பிழம்பு என்று -*** *செறிந்த இருள்கூட்டம் என்னும்படி;* ***ஈண்டு நஞ்சொடு கலந்த நாக -*** *மிகுந்து நெருங்கிய நஞ்சு சேர்ந்த நாகப் பாம்பினது;* ***துளை எயிற்று ஊறல் -*** *உள் துளை உடைய பல்லில் ஊறுகிற நஞ்சு;* ***ஊற்றதாம் எனச் சுட்டது -****பொருந்தியது என்னும்படி, (இராமனை) மிகுதியும் வருத்தியது.*

*மன்மதன் செருக்குடன் மறைந்து வாழுகிற இரவுக் காலத்தில் தோன்றிய நிலவு ஒளி இராமனை நாகத் துளை எயிற்றில் இருந்து வெளிப்பட்ட நஞ்சு போல் சுட்டது என்பதாம். இருட்பிழம்பு - நஞ்சுள்ளநாகம், துளை எயிறு - பிறை நிலவு, நிலவு ஒளி - நஞ்சு என்க. களியுடை அனங்கன் - பிரிந்தவரைத் துன்பப்படுத்தி அவர் தம் வருத்தத்தில் இன்பம் காண்பவன்; காம மயக்கத்தைப் பிறக்கச் செய்யும் போதை உடையவர் எனலுமாம். அனங்கன் - உருவம் அற்றவன் (மன்மதன்) அங்க நாட்டில் உள்ள காமன் ஆச்சிரமச் சிறப்பை இராமனுக்கு உரைத்த விசுவாமித்திரர்.*

***"திங்கள் மேவும் சடைத் தேவன் மேல், மாரவேள்***
***இங்கு நின்று எய்யவும், எரிதரும் நுதல் விழிப்***
***பொங்கு கோபம் சுட, பூளை வீ அன்ன தன்***
***அங்கம் வெந்து அன்று தொட்டு அனங்கனே ஆயினான்)339)***
***வாரணத்து உரிவையான் மதனனைச் சினவு நாள்,***
***ஈரம் அற்று அங்கம் இங்கு உகுதலால், இவண் எலாம்***
***ஆரணத்து உறையுளாய்; அங்க நாடு; இதுவும் அக்***
***காரணக் குறியுடைக் காமன் ஆச்சிரமமே )340)***

*என்று மன்மதன் அனங்கன் ஆனதைக் கூறுவார். நளி - செறிவு, துளை எயிறு - துளை பொருந்திய நச்சுப் பல், நளி இருள் - உரிச்சொல் தொடர், இருட்பிழம்பு - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஊறல் -தொழிலாகுபெயர். அன்றே - ஈற்றசை.*

***3548. இடம்படு மானத் துன்பம், இருள்தர,***
***எண்ணின் தீர்ந்தான்***
***விடம் பரந்தனையது ஆய வெண்***
***நிலா வெதுப்ப, வீரன்,***
***படம் பரந்தனைய அல்குல், பால்***
***பரந்தனைய இன் சொல்,***
***தடம் பெருங் கண்ணினாள்தன்***
***தனிமையை நினையலுற்றான்.***

***வீரன் -*** *வீரனாகிய இராமன்;* ***விடம் பரந்தனையது ஆய -****நஞ்சு (எங்கும்) பரந்தது போன்றதாகிய;* ***வெண் நிலா வெதுப்ப -****வெள்ளிய நிலவு (ஒளியானது) (தன்னை) வருத்தவும்;* ***இடம்படு மானத் துன்பம் இருள்தர -*** *(தனக்கு ஏற்பட்ட) பெரிய அவமானமாகிய துன்பம் (சீதையை இராவணன் கவர்ந்து சென்றது) அறிவைக் கெடுக்கவும்;* ***எண்ணின்தீர்ந்தான் -*** *மற்ற எண்ணங்கள் நீங்கினவனாகி;* ***படம் பரந்தனைய அல்குல் -*** *பாம்பின் படம் விரிந்தது போன்ற அல்குலினையும்;* ***பால்பரந்தனைய இன் சொல் -*** *பாலில் (கலந்து) பரந்துள்ள இனிமை போன்ற இனிய சொற்களையும்;* ***தடம் பெருங் கண்ணினாள் -****(காதளவோடி) நீட்சி அமைந்த கண்களையும் உடையவளாகிய;* ***தன் தனிமையை நினையலுற்றான் -*** *(சீதை) தன் தனிமையைப் பற்றி எண்ணுபவன் ஆனான்.*

*நஞ்சு பரந்தது போல் எங்கும் நிலவு ஒளி பரவித் தன்னை வருத்துதலால் இராமன் மானத் துன்பம் அறிவை அழிக்க வேறு ஒரு நினைவும் இன்றிச் சீதையின் தனிமை குறித்து எண்ணத் தொடங்கினான். 8இராமன் சீதையை எண்ணி வருந்துதல்*

*கலிவிருத்தம்*

***3549. மடித்த வாயன்;***
***வயங்கும் உயிர்ப்பினன்,***
***துடித்து வீங்கி,***
***ஒடுங்குறு தோளினன்;***
***பொடித்த தண் தளிர்ப்***
***பூவொடு மால் கரி***
***ஒடித்த கொம்பு அனையாள்***
***திறத்து உன்னுவான்:***

***மடித்த வாயன் -*** *(இராமன்) பிரிவுத் துயராலும், (இராவணன் மேல் கொண்ட) சினத்தாலும், கடித்த உதட்டினை உடையவனாய்;****வயங்கும் உயிர்ப்பினன் -***

*வெளிப்பட்டு விளங்குகிற பெருமூச்சை உடையவனாய்;* ***துடித்து வீங்கி ஒடுங்குறு தோளினன் -*** *(மனத் துன்பத்தால்) துடித்து, (இராவணனை அழிக்க வேண்டும் என்பதால்) பூரிப்பு அடைந்து, (செய்வது அறியாமையால்) தளர்ந்த தன்மை அடைந்த தோள்களை உடையவனாய்;* ***மால் கரி ஒடித்த -*** *மதயானை ஒடித்த (இராவணன்);* ***பொடித்த தண் தளிர்ப் பூவொடு -*** *சிறிதாக வெளிப்பட்ட குளிர்ந்த இலைகளையும் பூக்களையும் உடைய;* ***கொம்பு அனையாள் திறத்து -*** *கொம்பினைஒத்தவளாகிய சீதையின் தன்மை பற்றி;* ***உன்னுவான் -****நினைத்தான்.*

*சினமும் துயரும், பெருமூச்சும் கொண்ட இராமன், வாய் மடித்து, பெருமூச்சு விட்டு, தோள் துடித்து ஓங்கி ஒடுங்கச் சீதையைப் பற்றி எண்ணத் தொடங்கினான் என்க. மால்கரி - இராவணனுக்கும், கொம்பு - சீதைக்கும், தளிரும் பூவும் - அவளது மேனி நிறத்துக்கும் உவமைகளாம்.*

***3550. ' "வாங்கு வில்லன் வரும், வரும்"***
***என்று, இரு***
***பாங்கும், நீள் நெறி***
***பார்த்தனளோ?' எனும் -***
***வீங்கும் வேலை விரி***
***திரை ஆம் என,***
***ஓங்கி ஓங்கி ஒடுங்கும்***
***உயிர்ப்பினான்.***

***வேலை வீங்கும் விரிதிரை ஆம் என -*** *கடலில் மிகுந்து வருகின்ற பரந்த அலைகள் ஆகும் என்று சொல்லும் படியாக;* ***ஓங்கி ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்பினான் -*** *மேலும் மேலும் மிகுந்து அடங்குகிற பெருமூச்சினை உடையவனாகிய (இராமன்);* ***வாங்கு வில்லன் வரும் வரும் என்று -****(இராவணனிடம் இருந்து தன்னை மீட்க) வளைந்த வில்லினை உடைய (கணவன்) வருவான் வருவான் என்று நினைத்து;* ***இருபாங்கும் நீள் நெறி பார்த்தனளோ -*** *இரு பக்கங்களிலும் உள்ள நீண்ட வழியைப் பார்த்துக் கொண்டிருப்பாளோ?;* ***எனும் -*** *என்று எண்ணினான்.*

*கடல் அலை போல் மீண்டும் மீண்டும் பெருமூச்சு விட்ட இராமன் வருவான் வருவான் என்று சீதை இரு பக்கங்களிலும் உள்ள நீண்டவழியைப் பார்த்துக் கொண்டிருப்பாளோ என்று எண்ணினான். 'சுருதி நாயகன் வரும் வரும்' என்பது ஓர் துணிவால் கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள் (5077) என்ற கவிக்கூற்று இங்கு ஒப்பிடத்தக்கது. வாங்குதல் - வளைத்தல், பாங்கு - பக்கம், நெறி - வழி, வரும் வரும் - அடுக்குத் தொடர்; வருவது உறுதி என்ற பொருள் குறித்தது. ஓங்கி ஓங்கி - அடுக்குத் தொடர் இடையீடு இல்லாமல் என்ற பொருளது.*

***3551. தன் நினைந்திலள்***
***என்பது சாலுமோ -***
***மின் நினைந்த***

*விலங்கும் எயிற்றினான்,*
*"நில் நில்" என்று நெருங்கிய*
*போது அவள்*
*என் நினைந்தனளோ?'*
*என எண்ணுமால்.*

***மின் நினைந்த விலங்கும் எயிற்றினான் -*** *மின்னலைப் போல இடை விலகியுள்ள பற்களை உடைய இராவணன்;* ***நில் நில் என்று நெருங்கிய போது -*** *நில் நில் என்று கூறிக் கொண்டு நெருங்கிய போது;* ***அவள் தன் நினைந்திலள் என்பது சாலுமோ -*** *அந்தச் சீதை என்னை நினைக்கவில்லை என்று கூறுவது பொருந்துமோ?;* ***என் நினைந்தனளோ -*** *என்னைப் பற்றி என்னென்ன நினைத்தாளோ?;* ***என எண்ணும் -****என்று இராமன் எண்ணினான்.*

*'இராவணன் தன்னை நெருங்கிய போது சீதை என்னை நினைக்கவில்லை என எண்ணுவது பொருந்துமோ? அவள் என்னென்ன நினைத்தாளோ' என்று இராமன் எண்ணினான். தன் என்றது ஈண்டுஇராமனை; இதைச் சீதையைக் குறிப்பதாகக் கொண்டும் உரை கூறலாம். சாலுதல் - பொருந்துதல், என் நினைத்தனளோ - தன்னைக் காக்க வேண்டிய காலத்துக் காக்க வராமையால் மாரீசனின் மாயக் குரல் கேட்டு முன்னமே மனம் கலங்கி இருந்த சீதை யாது கருதினாளோ என்றபடி. விலங்குதல் - இடைவெளியுடன் அமைதல். நில் நில் - அடுக்கு சினக் குறிப்பினது. ஆல் - ஈற்றசை.*

*3552. 'நஞ்சு காலும் நகை*
*நெடு நாகத்தின்*
*வஞ்ச வாயில் மதி*
*என மட்குவாள்,*
*"வெஞ்சினம் செய் அரக்கர்*
*தம் வெம்மையை*
*அஞ்சினான் கொல்?" என்று*
*ஐயுறுமால்' என்பான்.*

***நஞ்சு காலும் நகை நெடு நாகத்தின் -*** *நஞ்சினை வெளிப்படுத்துகிற பற்களை உடைய நீண்ட (இராகு என்னும்) பாம்பினது;* ***வஞ்ச வாயில் மதி என மட்குவாள் -*** *கொடிய வாயின் கண் பட்ட நிலவு போல் ஒளி மழுங்கியவளான (சீதை);* ***"வெஞ்சினம் செய் அரக்கர் தம் -****கொடிய சினத்தைச் செய்கிற அரக்கர்களுடைய;* ***வெம்மையை அஞ்சினான் கொல் -*** *கொடுமையான (வலிமைக்கு) அஞ்சினான், (தன்னை மீட்க வராமையால்) போலும்";* ***என்று ஐயுறும் என்பான் -*** *என்று ஐயப்படுவாள் என எண்ணினான்.*

*நாகத்தின் வாய்ப்பட்ட மதி தன் ஒளி குன்றுதல் போல் இராவணன் வயப்பட்ட சீதை ஒளி குன்றினாள் என்றபடி. நாகத்தின் வஞ்ச வாயின் பட்ட மதி இராவணன் கையகப்பட்ட சீதைக்கு உவமை. நாகம் - இராவணன், மதி - சீதை. காலுதல் - வெளிப்படுத்தல், உமிழ்தல். நகை - பல். மட்குவாள் - ஒளி மங்கிக் குறைவாள். கொல் - ஐயப்பொருள் தருவதோர் இடைச் சொல், ஆல் - அசை.*

***3553. பூண்ட மானமும், போக்க***
***அருங் காதலும்,***
***தூண்ட நின்று, இடை***
***தோமுறும் ஆர் உயிர்,***
***மீண்டு மீண்டு***
***வெதுப்ப, வெதும்பினான்,***
***'வேண்டுமோ எனக்கு இன்னமும்***
***வில்?' என்பான்.***

**பூண்ட மானமும் -** *(இராவணன் சீதையைக் கவர்ந்ததால்) தனக்கு ஏற்பட்ட அவமானமும்;* **போக்க அருங்காதலும் -** *(அவள் மீது கொண்ட) நீக்க முடியாத காதலும்;* **தூண்ட -** *தூண்டுதலினால்;* **இடைநின்று -** *நடுவில் நின்று;* **தோமுறும் -** *துன்பம் அடைகிற;* **ஆர் உயிர் -** *(தன்) அருமையான உயிரை;* **மீண்டு மீண்டு வெதுப்ப -** *(அவை - அவமானமும், காதலும்) மாறி மாறி வருத்துவதனால்;* **வெதும்பினான் -** *மனம் வருந்தினவனாகிய (இராமன்);* **எனக்கு இன்னமும் வில் வேண்டுமோ என்பான் -** *எனக்கு இனிமேலும் (கையில்) வில் வேண்டுமோ என்று கூறினான்.*

*அவமானமும் காதலும் தேய் புரிப் பழங்கயிற்றைப் பற்றிய இரு யானைகள் போலத் தன் உயிரை அலைக்கழித்தலால் பெருந்துன்பம்கொண்ட இராமன், சீதையைக் காப்பாற்ற உதவாத வில் இன்னமும் என் கையில் வேண்டுமோ என்றான். தோமுறுதல் - துன்பம் அடைதல்.*

***3554. வில்லை நோக்கி நகும்;***
***மிக வீங்கு தோட்***
***கல்லை நோக்கி நகும்;***
***கடைக்கால் வரும்***
***சொல்லை நோக்கித்***
***துணுக்கெனும் - தொல் மறை***
***எல்லை நோக்கினர்***
***யாவரும் நோக்குவான்.***

**தொல் மறை எல்லை நோக்கினர் யாவரும் நோக்குவான் -** *பழமையான வேதங்களின் முடிவை அறிந்தவர்கள் எல்லாம் (இவனே பரம் பொருள் என்று) நோக்கி நிற்கிற தன்மையுள்ள இராமன்;* **வில்லை நோக்கி நகும் -** *(தன் கையில் உள்ள) வில்லைப் பார்த்து (இது பயன்படவில்லையே எனச்) சிரிப்பான்;* **மிக வீங்கு தோட் கல்லை நோக்கி நகும் -** *மிகப்பருத்த தன் தோளாகிய கல்லைப் பார்த்து (இதன் வலிமை சீதையைக் காக்கவில்லையே) என்று சிரிப்பான்;* **கடைக்கால் வரும் சொல்லை நோக்கித் துணுக்கெனும் -** *முடிவில் (மனைவியைக் காக்க இயலாதவன்) என்று தனக்கு வருகின்ற பழிச் சொல்லை எண்ணிப் பார்த்துத் திடுக்கிடுவான்.*

*வேதாந்த வித்தகர்களால் பரம் பொருள் இவனே என்று உணரப்பட்ட இராமன், தன் மனைவியைக் காத்தற்குப் பயன்படாத தன் வில்லையும் தோளையும் பார்த்துச் சிரித்து, இறுதியில் தனக்கு வரும் பழிச் சொல்லை எண்ணித் திடுக்கிட்டான் என்க. கடைக்கால் - முடிவில், துணுக்கெனல் - வருந்தித் திடுக்கிடல். தோட்கல் - உருவகம், கல் - ஆகுபெயர்.*

***3555. கூதிர் வாடை வெங்***
***கூற்றினை நோக்கினன்;***
***'வேத வேள்வி***
***விதிமுறை மேவிய***
***சீதை என்வயின்***
***தீர்ந்தனளோ?' எனும் -***
***போதகம் எனப் 'பொம்'***
***என் உயிர்ப்பினான்.***

***போதகம் எனப் பொம் என் உயிர்ப்பினான் -*** *யானைக் கன்று போலப் பொம் என்ற ஒலியுடன் பெருமூச்சு விடுபவனாகிய (இராமன்);* ***கூதிர் வாடை வெங் கூற்றினை நோக்கினன் -*** *கூதிர் கால வாடைக் காற்றாகியகொடுமையான யமனை நோக்கிய காரணத்தால்;* ***'வேத விதிமுறை வேள்வி மேவிய -*** *வேதங்களில் கூறப்பட்டுள்ள விதிகளின் முறைப்படி (செய்த) மணச் சடங்கினால் (யான்) மணந்து பெற்ற;* ***சீதை என்வயின் தீர்ந்தனளோ -*** *சீதை என்னிடத்தில் இருந்து நீங்கி விட்டாளோ?;* ***எனும் -*** *என்பான்.*

*சீதையின் பிரிவினைக் கூதிர்க் கால வாடைக் காற்று உணர்த்தஉணர்ந்த இராமன். அறிவுத் தடுமாற்றத்தால் 'சீதை என்னை விட்டு நீங்கி விட்டாளோ' என்றான் - என்பதாம். வாடை - வடக்கில் இருந்து வீசும் காற்று. வேள்வி - இங்கே திருமணச் சடங்கு, போதகம் - யானைக் கன்று. பொம் - ஒலிக்குறிப்பு. வாடை வெங் கூற்று - உருவகம். நோக்கினன் - முற்றெச்சம்.*

***3556. 'நின்று பல் உயிர் காத்தற்கு***
***நேர்ந்த யான்,***
***என் துணைக் குல மங்கை***
***ஓர் ஏந்திழை-***
***தன் துயர்க்குத் தகவு***
***இலென் ஆயினேன்;***
***நன்று நன்று, என்***
***வலி!' என, நாணுமால்.***

***'நின்று -*** *(அரக்கர்களை எதிர்த்து) நின்று;* ***பல் உயிர் காத்தற்கு நேர்ந்த யான் -*** *(உலகில் உள்ள) எல்லா உயிர்களையும் காப்பாற்றுவதற்கு உடன்பட்ட நான்;* ***ஓர் ஏந்திழை என் துணைக் குலமங்கை தன் -****சிறந்த அணிகலன்களை அணிந்த என் மனைவியாகிய ஒரு*

*குலப் பெண்ணினது;* ***துயர்க்குத் தகவு இலென் ஆயினேன் -*** *துன்பத்தை நீக்குவதற்குத்தகுதியுடையவன் அல்லேன் ஆயினேன்;* ***என் வலி நன்று நன்று -****என் வலிமை மிக நன்றாய் இருக்கிறது;* ***என நாணும் -*** *என்று (எண்ணி) நாணமடைவான்.*

*உலகெலாம் காக்க ஒருப்பட்ட நான் ஒரு பெண்ணின் துயர் காக்க முடியாதவன் ஆய்விட்டேன். என் வலிமை நன்று நன்று என இராமன் நாணம் கொண்டான். பல்லுயிர் காத்தற்கு நேர்தல்-*

***"சூர் அறுத்தவனும், சுடர் நேமியும்,    ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும்    ஆர் அறத்திினொடு அன்றி நின்றார் அவர்    வேர் அறுப்பென்; வெருவன்மின் நீர் என்றான். (2652)***

*என்ற பாடல் கொண்டு அறிக. நன்று நன்று - அடுக்குத் தொடர்இகழ்ச்சி பற்றி வந்தது. ஆல் - ஈற்றசை.*

***3557. சாயும், தம்பி திருத்திய***
***தண் தளிர்;***
***தீயும், அங்கு அவை; தீய்தலும்,***
***செவ் இருந்து***
***ஆயும்; ஆவி***
***புழுங்க அழுங்குமால்-***
***வாயும் நெஞ்சும்***
***புலர மயங்குவான்.***

***வாயும் நெஞ்சும் புலர மயங்குவான் -*** *வாயும் மனமும் வறண்டுமயக்கமுற்றவனாகிய (இராமன்);* ***தம்பி திருத்திய தண் தளிர் சாயும் -*** *(தன்) தம்பியாகிய இலக்குவன் (தேடிப்படுப்பதற்காகத்) திருத்திய குளிர்ந்த தளிர்க் குவியலில் சாய்ந்து படுப்பான்;* ***அங்கு அவை -****அப்பொழுது அத்தளிர்கள்;* ***தீயும் -*** *(இராமனின் உடல் வெப்பத்தால்) தீய்ந்து போகும்;* ***தீய்தலும் -*** *(அவ்வாறு அப்படுக்கையாகிய தளிர்கள்) தீய்ந்த உடனே;* ***செவ் இருந்து ஆயும் -*** *சாயாது நேரே நிமிர்ந்து அமர்ந்து எண்ணுவான்;* ***ஆவி புழுங்க அழுங்கும் -*** *உயிர் உருகிப் புழுங்கச் சோர்வான்.*

*சீதையின் பிரிவால் வருந்தும் இராமனுக்கு இலக்குவன் தளிர்ப் படுக்கையை அமைக்க, அதில் படுத்தவுடன் அத்தளிர்கள் தீய்ந்து போனதால், அவன் நேரே நிமிர்ந்து அமர்ந்து பலவாறு எண்ணி உயிர் உருகப் புழுங்கிச் சோர்ந்தான் என்க. ஆல் - அசை.*

***3558. பிரிந்த ஏதுகொல்?***
***பேர் அபிமானம்கொல்?***
***தெரிந்தது இல்லை; திரு***
***மலர்க்கண் இமை***
***பொருந்த, ஆயிரம்***

*கற்பங்கள் போக்குவான்;*
*இருந்தும் கண்டிலன்;*
*கங்குலின் ஈறுஅரோ.*

**திரு மலர்க்கண் இமை -** *அழகிய தாமரை மலர் போன்ற (தன்) கண்களின் இமைகள், (இமைக்கும் காலத்தில்);* **ஆயிரம் கற்பங்கள்பொருந்தப் போக்குவான் -** *ஆயிரம் கற்பாந்த காலங்களை முழுதும் பொருந்தக் கழிப்பவனாகிய (இராமன்);* **இருந்தும் கங்குலின் ஈறு கண்டிலன் -** *(தம்பியமைத்த தளிர்ப் படுக்கையில்) இருந்தும் இரவினது முடிவைக் காணாதவனானான்;* **பிரிந்த ஏதுகொல் -***(இந்நிலைமைக்குச்) சீதையைப் பிரிந்தது காரணமோ?;* **பேர் அபிமானம் கொல் -***(அவளிடம் கொண்ட) பெருங்காதலாலா?;* **தெரிந்தது இல்லை -** *(உரிய காரணம்) தெரியவில்லை.*

*திருமலர்க்கண் இமைப்பில் ஆயிரம் கற்பங்கள் போக்கும் இராமனுக்கு, சீதை பிரிவால் ஓர் இரவைக் கூடக் கழிக்க முடியவில்லை என்றவாறு.இதனால் இறைவன் காலங்கடந்தவன் என்பதை விளங்கினார். 'காலமும் கணக்கும் நீத்த காரணன்' (5884) என்றார் பிறாண்டும், அரோ - அசை.*

*3559. 'வென்றி விற் கை*
*இளவலை! மேல் எலாம்*
*ஒன்று போல உலப்பு*
*இல நாள்கள்தாம்*
*நின்று காண்டி அன்றே?*
*நெடுங் கங்குல்தான்*
*இன்று நீள்வதற்கு*
*ஏது என்?' என்னுமால்.*

**வென்றி விற்கை இளவலை -** *வெற்றிக்கு உரிய வில்லைக் கையில் பிடித்த இளையவனாகிய இலக்குவனை (இராமன் பார்த்து);* **ஒன்று போல உலப்பு இல நாள்கள் -** *ஒரே மாதிரியாக இயல்பு கெடாது கழிந்த நாள்களை;* **மேல் எலாம் -** *முன்பு எல்லாம்;* **நின்று காண்டி அன்றே -** *(என்னோடு சேர்ந்து) இருந்து கண்டுள்ளாய் அல்லவா?;* **நெடுங் கங்குல் இன்று நீள்வதற்கு ஏது என்? -** *நீண்ட இரவுப் பொழுது இன்று மட்டும் நீண்டிருப்பதாய்த் தோன்றுவதற்குக் காரணம் என்ன?;* **என்னும் -***என்று கேட்கும்.*

*'என்னுடன் உடனிருந்து கழித்த நாட்களில் நீ கண்டுள்ள இரவை விட இன்று மட்டும் இரவு நீள யாது காரணம்?' என்று இராமன் இலக்குவனை வினவினான் என்க. நின்று - இரவு முழுதும் விழித்து நின்று. எலாம் - இடைக்குறை, தாம், தான், ஆல் - அசைகள்.*

*3560. நீண்ட மாலை*
*மதியினை, 'நித்தமும்*

***மீண்டு மீண்டு***
***மெலிந்தனை, வெள்குவாய்;***
***பூண்ட பூணவள்***
***வாள்முகம் போதலால்,***
***ஈண்டு, சால***
***விளங்கினை' என்னுமால்.***

***நீண்ட மாலை மதியினை -*** *(பிரிந்தவர்க்கு) நீண்டதாகத் தோன்றி அமையும் மாலைக் காலத்து அம்புலியை (இராமன் பார்த்து);**'நித்தமும் மீண்டு மீண்டு மெலிந்தனை வெள்குவாய் -** (சீதை என்னுடன் இருக்கும் போது) நாள்தோறும் (அவள் முகத்துக்கு ஒப்பு என்ற நினைவுடன்) திரும்பத் திரும்ப வந்து (அவ்வாறு ஒப்பாக மாட்டாமையால்) உடல் மெலிந்தவனாகி வெட்கம் கொண்ட (நீ); **பூண்ட பூணவள் வாள் முகம் போதலால் -**அணிகலன்களை அணிந்த சீதையினது ஒளி பொருந்திய முகம் (என்னை விட்டு நீங்கிப்) போய்விட்டதால்; **ஈண்டு -** இப்பொழுது; **சால விளங்கினை -** மிக்க ஒளியுடன் விளங்குகிறாய்; **என்னும் -** என்று கூறினான்.*

*'சீதையின் முகம் எனக்கு அருகில் இருந்த காலத்தில், அதற்குத் தோற்று உடல் மெலிந்த நீ இப்போது சீதை என்னை விட்டுப் பிரிந்து விட்டதால் மிக்க ஒளியுடன் விளங்குகிறாய்' என்று இராமன் நிலவைப் பார்த்துக் கூறினான். நிலவுக் காட்சி கண்டு துன்புற்று நிலவைப் பழித்துக் கூறிய பகுதி இது. மெலிந்தனை - முற்றெச்சம். வாள்முகம் - பண்புத்தொகை. விளங்கினை - முன்னிலை ஒருமை வினைமுற்று. ஆல் - அசை.*

***3561. 'நீள் நிலாவின் இசை நிறை தன் குலத்து,***
***ஆணி ஆய பழி வர, அன்னது***
***நாணி, நாடு கடந்தனனாம்கொலோ,***
***சேண் உலாம் தனித் தேரவன்?' என்னுமால்.***

***சேண் உலாம் தனித் தேரவன் -*** *நீண்டுள்ள (வானத்தில்) உலா வருகிற ஒப்பற்ற தனித் தேரை உடைய கதிரவன்; **நீள் நிலாவின் இசை நிறை -** (ஒளி மிகுந்த) நிலவை ஒத்துப் புகழ் நிறைந்த; **தன் குலத்து -** தன் குலத்துக்கு; **ஆணி ஆய பழி வர -** அடிப்படையாகிய பழி வந்ததனால்; **அன்னது நாணி -** அப்பழிக்கு நாணம் கொண்டு; **நாடு கடந்தனனாம் கொலோ -** நாட்டு மக்களின் கண் காணாத இடத்துக்குச் சென்று விட்டான் போலும்; **என்னும் -** என்று (இராமன்) சொன்னான்.*

*நீண்ட நேரம் இரவு கழியாமை கண்ட இராமன், சூரிய குலத்திற்கு ஏற்பட்ட பழிக்கு நாணம் கொண்டு கதிரவன் கண் காணாத இடத்துக்குச் சென்று விட்டானோ என்றான். இப்பாடல் இரவு நீண்டு கழியாமைக்குக் காரணம் கூறுகிறது. நீள் நிலாவின் இசை - புகழுக்கு வெண்ணிறத்தை உரியதாகக் கூறுதல் மரபாதலின் அதற்கு நிலவை உவமை கூறினார் என்பர் வை. மு. கோ. இசை - புகழ். ஆணி - அச்சாணி, அடிப்படை. சீதையை இராவணன் கவர்ந்து சென்றது சூரிய குலத்துக்கு ஏற்பட்ட ஆணி ஆய பழி என்க. ஓ, ஆல் - அசைகள்.*

***3562. சுட்ட கங்குல் நெடிது***
***எனச் சோர்கின்றான்,***
***'முட்டு அமைந்த***
***நெடு முடக்கோனோடு***
***கட்டி, வாள்***
***அரக்கன், கதிரோனையும்***
***இட்டனன் கொல்***
***இருஞ்சிறை?' என்னுமால்.***

***சுட்ட கங்குல் நெடிது எனச் சோர்கின்றான் -*** *(தன்னைச்) சுட்டுவருத்திய இரவு மிக நீண்டது என்று மனந்தளர்பவனாகிய (இராமன்);"**வாள் அரக்கன் -** வாளை ஏந்திய அரக்கனாகிய இராவணன்;**முட்டு அமைந்த நெடு முடக் கோனோடு -** கடிவாளத்தைக் கையில் கொண்ட பெரிய அருணனோடு; **கதிரோனையும் -** கதிரவனையும்; **கட்டி -**(தன் ஆற்றலால்) கட்டி; **இருஞ் சிறை இட்டனன் கொல் -** பெரிய சிறையில் அடைத்திட்டானோ?; **என்னும் -** என்று (இராமன்) எண்ணினான்.*

*இரவு நீள்தற்கு உரிய காரணம் என்ன என்று மேலும் எண்ணியஇராமன் ஒரு வேளை இராவணன் கதிரவனை அவனுடைய தேர்ப் பாகன் ஆகிய அருணனுடன் ஒரு சேரக் கட்டிச் சிறையில் இட்டுவிட்டானோ என்றான். முட்டு - கடிவாளம். முடக்கோன் - அருணன்; இவன் தொடை இல்லாதவன் ஆகவே இவ்வாறு கூறப்பட்டது. சுட்ட - செய்த எனும்வாய்பாட்டுப் பெயரெச்சம். சோர்கின்றான் - வினையாலணையும் பெயர். ஆல் - அசை.*

***3563. 'துடியின் நேர் இடை***
***தோன்றலளாம்எனின்,***
***கடிய கார் இருள்***
***கங்குலின் கற்பம் போய்***
***முடியும்ஆகின், முடியும்,***
***இம் மூரி நீர்***
***நெடிய மா நிலம்'***
***என்ன, நினைக்குமால்.***

***துடியின் நேர் இடை -*** *உடுக்கையை ஒத்த இடையை உடைய சீதை; **தோன்றலளாம் எனின் -** (இரவு விடிவதற்குள்) என் முன் தோன்றாமல் போனாள் எனின்; **கடிய கார் இருள் கங்குலின் -**(அந்நிலையிலேயே இந்தக்) கொடிய கரிய இருளை உடைய இரவாகிய; **கற்பம் போய் முடியும் ஆகின் -** நீண்ட காலம் முடிந்து (விடியல் வரும்) என்றால்;**இம்மூரிநீர் நெடிய மாநிலம் -** இந்த வலிய கடலால் சூழப்பட்ட மிகப் பெரிய உலகம்; **முடியும் -** (என் ஆற்றலால்) அழிந்து விடும்; **என்ன நினைக்கும் -**என்று (இராமன்) எண்ணுவான். **ஆல் -** ஈற்றசை.*

*சீதை இந்த நீண்ட கங்குற் கற்பம் முடிவதற்குள் வராமல் போய் விடிவு வந்தால் இவ்வுலகத்தை அழித்து விடுவேன் என்று கூறி இராமன் சினம் கொண்டனன் என்க.*

*துடி - உடுக்கை, கற்பம் - நீண்ட காலம், கற்பாந்த காலம் என்ப. மூரி - வலிமை. மூரி நீர் - கடல், நேர் - உவமை உருபு; நேர நேர் என வந்தது. மூரி நீர் - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை,*

***3564. 'திறத்து இனாதன, செய்***
***தவத்தோர் உற***
***ஒறுத்து, ஞாலத்து உயிர்தமை***
***உண்டு, உழல்***
***மறத் தினார்கள்***
***வலிந்தனர் வாழ்வரேல்,***
***அறத்தினால் இனி ஆவது***
***என்?' என்னுமால்.***

***திறத்து** - (தம்) வலிமையினால்; **செய்தவத்தோர் இனாதன உற** - தவம் செய்யும் முனிவர்கள் பெருந்துன்பம் அடைய; **ஒறுத்து** - (அவர்களைத்) தண்டித்து; **ஞாலத்து உயிர்தமை** - உலகத்தில் உள்ள உயிர்களை; **உண்டு** - (அழித்து) உண்டு; **உழல் மறத்தினார்கள்** - வாழ்ந்து திரிகிற அறமில்லாதவர்கள்; **வலிந்தனர் வாழ்வரேல்** - (பெண்களைக் கவர்ந்தும் கூட) வலிமை பெற்று வாழ்வார்களானால்;**இனி அறத்தினால் ஆவது என்** - இனிமேல் அறத்தினால் ஆகும் பயன்எதுவோ?'; **என்னும்** - என்று சொல்லுவான். **ஆல்** - ஈற்றசை.*

*அறத்தவர் வருந்த மறத்தவர் வெற்றி பெற்று மகிழ்வுடன் வாழும் நிலையில் அறத்தினால் விளையும் பயன் யாதோ? என இராமன் வருந்தினான் என்க. திறத்து - வலிமையால், இன்னாதன - துன்பங்கள்.*

***3565. தேனின் தெய்வத் திரு***
***நெடு நாண் சிலைப்***
***பூ நின்று எய்யும்***
***பொருகணை வீரனும்,***
***மேல் நின்று எய்ய***
***விமலனை நோக்கினான்;***
***தான் நின்று***
***எய்யகில்லான், தடுமாறினான்.***

***தேனின் தெய்வத் திருநெடு நாண்** - வண்டுக் கூட்டங்களாகியதெய்வத் தன்மை பொருந்திய அழகிய நீண்ட நாணினை உடைய;**சிலைப் பூ** - கரும்பு வில்லில் மலர் அம்புகளை; **நின்று எய்யும்** - எதிர் நின்று தொடுக்கின்ற; **பொருகணை வீரனும்** - போர் செய்கின்ற அம்புகளைக் கையில் கொண்ட வீரனாகிய மன்மதனும்; **மேல் எய்ய விமலனை நின்று நோக்கினான்** - (இராமன்) மேல் அம்பினை எய்வதற்காகக் குற்றமற்றவனான அவனை உற்றுப் பார்த்தான்; **தான் நின்று எய்யகில்லான் தடுமாறினான்** - (அவ்வாறு உற்றுப் பார்த்துத்) தான் எதிர் நின்று எய்ய மாட்டாமல் தடுமாற்றமடைந்தான். மன்மதன் இராமன் மீது அம்பு தொடுக்க முயன்று தொடுக்க*

*முடியாமல் தடுமாறினான் என்க. தேன் - வண்டு, மன்மதனுக்குக் கரும்பை வில்லாகவும், மலரை அம்பாகவும், வண்டுக் கூட்டத்தை நாணாகவும் கூறினார் என்க. இப்பாடலில் வரும் முதல் இரண்டு அடிகளில் உள்ள சிலைப் பூ என்பதற்கு மலர் வில் என்று பொருள் கொண்டு மன்மதனுக்குக் கருப்பு வில்லேயன்றிக் காம நூல் என்னும் பூ வில்லும் உண்டு என்று கூறுவதும் உண்டு.* *2*

***3566உழந்த யோகத்து ஒரு முதல் கோபத்தால்***
***இழந்த மேனியும் எண்ணி இரங்கினான் -***
***கெழுந்தகைக்கு ஒரு வன்மை கிடைக்குமோ,***
***பழந் துயர்க்குப் பரிவுறும் பான்மையால்?***

***பழந்துயர்க்கு -*** *முன்பு தனக்கு ஏற்பட்ட துன்பத்துக்கு;* ***பரிவுறும் பான்மையால் -*** *வருந்துகிற தன்மையால்;* ***கெழுந்தகைக்கு -****தன்னிடம் பொருந்தி உள்ள குணத்துக்கு;* ***ஒரு வன்மை கிடைக்குமோ -*** *ஒரு உறுதி கிடைக்குமோ? (கிடைக்காது என்றபடி);* ***யோகத்து உழந்த ஒரு முதல் கோபத்தால் -*** *யோகத்தை மிகுதியாகச் செய்த ஒப்பற்ற முதல்வனாகிய சிவனது சினத்தால்;* ***இழந்த -*** *(சாம்பலாகி முன்பு தான்) இழந்து விட்ட;* ***மேனியும் எண்ணி -*** *உடம்பை நினைத்து;* ***இரங்கினான் -****வருந்தினான்.*

*தனக்கு முன்பு ஏற்பட்ட துயரத்தை நினைத்து வருந்துவதால் தன்னிடம் உள்ள குணத்துக்கு ஒரு வலிமை கிடைக்குமோ? கிடைக்காது எனினும் முன்பு சிவனின் முன் தோன்றிக் காம அம்பு எய்து அவனது ஆற்றலால் மேனியை இழந்த மன்மதன். இப்போது இராமன் மீது மலர்க்கணை எய்யும் நிலையில் பழந்துயரை நினைத்தலால் மன வலிமை கிடைத்து விட்டவன் போல் செயல்பட்டான் என்க. ஒரு முதல் - தனி முதல்வனாகிய சிவன். கெழுந்தகை - பொருந்திய குணம், உரிமை எனினுமாம். பரிவுறுதல் - வருந்துதல்.*

***3567. நீலமான நிறத்தன் நினைந்தவை***
***சூலம் ஆகத் தொலைவுறும் எல்லையில்,***
***மூல மா மலர் முன்னவன் முற்றுறும்***
***காலம் ஆம் என, கங்குல் கழிந்ததே.***

***நீலமான நிறத்தன் -*** *நீலமான நிறத்தை உடைய இராமன்;* ***நினைந்தவை -*** *(சீதையைப் பிரிந்த துன்பத்தால் மனத்தில்) நினைந்த எண்ணங்கள்;* ***சூலம் ஆக -*** *சூலம் போல;* ***தொலைவுறும் எல்லையில் -*** *(வருத்த) அழிக்க முயலும் நேரத்தில்;* ***மூல மாமலர் முன்னவன் -*** *(எல்லாப் பொருள்களுக்கும்) மூல காரணமான நாபிக் கமலத்தில் தோன்றிய முதல் கடவுளான பிரமன்;* ***முற்றுறும் -*** *முடிகிற;* ***காலம் ஆம் என -****ஊழிக் காலம் (கழிந்தது) ஆம் என்று சொல்லுமாறு;* ***கங்குல் கழிந்ததே -*** *இரவுப் பொழுது நீங்கிற்று.*

*இராமனுக்கு ஏற்பட்ட பிரிவுத் துயரின் கொடுமையைக் கூறுவதற்காக, இரவு சூலமாகவும், அது கழிதற்கு ஆன கால நீட்சி பிரம கற்பம் போல் மிக நீண்டதாகவும் கூறப்பட்டது. தொலைவுறுதல் - அழிதல், முன்னவன் - பிரமன்.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3568.   வெள்ளம் சிலம்பு பாற்கடலின் விரும்பும்***
***துயிலை வெறுத்து, அளியும்***
***கள்ளும் சிலம்பும் பூங் கோதைக்***
***கற்பின் கடலில் படிவாற்கு,***
***புள்ளும் சிலம்பும்; பொழில் சிலம்பும்;***
***புனலும் சிலம்பும்; புனை கோலம்***
***உள்ளும் சில் அம்பும் சிலம்பாவேல்,***
***உயிர் உண்டாகும் வகை உண்டோ?***

**வெள்ளம் சிலம்பு பாற்கடலின் -** *வெள்ளம் ஒலிக்கிற திருப்பாற்கடலில்;* **விரும்பும் துயிலை வெறுத்து -** *விரும்பி(த் துயிலுகிற) தூக்கத்தை வெறுத்து;* **அளியும் கள்ளும் சிலம்பும் பூங்கோதை -** *வண்டுகளும் (அவ்வண்டுகள் வரக் காரணமான) தேனும் ஒலிப்பது போல் தோன்றும் மலர்களால் ஆகிய மாலையை அணிந்த கூந்தலை உடைய சீதையினது;* **கற்பின் கடலில் படிவாற்கு -** *கற்பாகிய கடல் முழுகியவனாகிய இராமனுக்கு;* **புள்ளும் சிலம்பும் -** *(இரங்கிப்) பறவைகளும் ஒலிக்கும்;* **பொழில் சிலம்பும் -** *சோலைகளும் ஒலிக்கும்;* **புனலும் சிலம்பும் -** *தண்ணீரும் (அருவி நீர், ஆற்று நீர் முதலியன ஒலிக்கும்;* **புனை கோலம் உள்ளும் -** *இராமன் கொண்ட போர்க் கோலத்தின் (போது) (அம்பறாத்தூணியில்) இருந்த;* **சில் அம்பும் -** *சில அம்புகள்;* **சிலம்பாவேல் -** *(ஒன்றோடு ஒன்றுபட்டு) ஒலிக்காவிட்டால்;* **உயிர் உண்டாகும் -** *இராமனின் உயிர் அழியாது நிற்பதற்கு;* **வகை உண்டோ -** *வழி உள்ளதோ.*

*விடியற்காலையில் தோன்றிய ஒலிகள் இராமனின் துயர் கண்டு இரங்கி ஒலித்த ஒலிகள் என்று தற்குறிப்பேற்றமாகக் கூறப்பட்டன. பாற்கடலில் பள்ளி கொண்ட பரமனே சீதையின் கற்புக் கடல் படிவான் என அவதார நிகழ்வு கூறினார். அளி - வண்டு. கள் - தேன். சிலம்புதல் - ஒலித்தல். புனை கோலம் - இராமன் கொண்ட போர்க் கோலம். சில் அம்பு - சில அம்புகள். பூங்கோதை - உவமையாகுபெயர். சொற் பொருள் பின் வரு நிலை அணி காண்க.*

***3569.   மயிலும் பெடையும் உடன் திரிய,***
***மானும் கலையும் மருவி வர,***
***பயிலும் பிடியும் கட களிறும்***
***வருவ, திரிவ, பார்க்கின்றான்;***
***குயிலும், கரும்பும், செழுந் தேனும்,***
***குழலும், யாழும், கொழும் பாகும்,***
***அயிலும் அமுதும், சுவை தீர்த்த***
***மொழியைப் பிரிந்தான் அழியானோ?***

***பெடையும் மயிலும் உடன் திரிய -*** *பெண் மயிலும் ஆண் மயிலும் (ஒன்றாக மகிழ்ச்சியோடு) திரிய;* ***மானும் கலையும் மருவி வர -****பெண் மானும் ஆண் மானும் நெருங்கித்திரிய;* ***பயிலும் பிடியும் கடகளிறும் -****விளையாடி வருகிற பெண் யானையும் மதம் மிக்க ஆண் யானையும் (ஆகிய இவை);* ***வருவ திரிவ பார்க்கின்றான் -*** *(தன் எதிரே) வந்து திரிவதை இராமன் பார்க்கின்றான்;* ***குயிலும் -*** *குயிலின் குரலோசையும்;* ***கரும்பும் -*** *கரும்புச் சாற்று இனிமையும்;* ***செழுந்தேனும் -*** *முற்றிய தேனின் சுவையும்;* ***குழலும் -*** *குழலின் இசை இனிமையும்;* ***யாழும் -****யாழிசையின் இனிமையும்;* ***கொழும்பாகும் -*** *(முற்றக் காய்ச்சிய) கொழுமையான சர்க்கரைப் பாகின் சுவையும்;* ***அயிலும் அமுதும் -*** *(அனைவரும் விரும்பி) உண்ணும் அமுதத்தின் சுவையும்;* ***சுவை தீர்த்த -*** *(ஆகிய இவற்றின் சுவையையும் இனிமையையும்) தன் குரல் இனிமைக்கு முன் இனிமையே இல்லை என்று தீர்த்த;* ***மொழியைப் பிரிந்தான் -****இனிய சொல்லை உடைய சீதையைப் பிரிந்தவனாகிய இராமன்;****அழியானோ -*** *வருத்தப்படாமல் இருப்பானோ.*

*காதல் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன் என்பது போல் இணையாக இராமன் முன் திரிந்த மயில், மான், களிறு ஆகியவை அவனது பிரிவுத் துயரத்தை மிகுவித்தன என்றபடி. கலை - ஆண்மான், பிடி - பெண் யானை கடகளிறு - மதம் மிக்க ஆண் யானை. மொழி - முதலாகு பெயர். சீதையின் பேச்சினிமையைக் கூறும் பகுதியின் சிறப்பை எண்ணுக. குயில், கரும்பு, குழல், யாழ் - இனிமையும் சுவையும் குறித்து வந்தன. பண்பாகு பெயர்கள்.*

***3570. முடி நாட்டிய கோட்டு உதயத்து***
***முற்றம் உற்றான் - முது கங்குல்***
***விடி நாள் கண்டும், கிளி மிழற்றும்***
***மென் சொல் கேளா வீரற்கு, 'ஆண்டு,***
***அடிநாள், செந் தாமரை ஒதுங்கும்***
***அன்னம் இலளால், யான் அடைத்த***
***கடி நாள் கமலத்து' என அவிழ்த்துக்***
***காட்டுவான்போல், கதிர் வெய்யோன்.***

***கதிர் வெய்யோன் -*** *கதிர்களை உடைய கதிரவன்;* ***முது கங்குல் விடி நாள் கண்டும் -*** *நீண்டிருந்த இரவு (முடிந்து தோன்றிய) பகல் பொழுதைப் பார்த்தும்;* ***கிளி மிழற்றும் மென் சொல்கேளா -*** *கிளி போல் பேசுகிற (சீதையின்) இனிய சொல்லைக் கேட்காத;* ***வீரற்கு -****வீரனாகிய இராமனுக்கு;* ***ஆண்டு -*** *அப்பொழுது;* ***யான் அடைத்த கடிநாள் கமலத்து -*** *(யான்) முதல் நாளில் மூடிய மணம் மிக்க தாமரை மலரில்;****அடிநாள் செந்தாமரை ஒதுங்கும் அன்னம் -*** *முற்காலத்துத் தாமரை மலரில் தோன்றிய அன்னப் பறவை போன்ற சீதை;* ***இலன் -*** *(இப்போது என்னிடம்) இல்லை;* ***என -*** *என்று;* ***அவிழ்த்துக் காட்டுவான் போல் -****விரித்துக் காட்டுபவன் போல்;* ***முடி நாட்டிய கோட்டு உதயத்து -*** *முடி நாட்டியது போல் அமைந்த உச்சியை உடைய உதய கிரியில்;* ***முற்றம் உற்றான் -*** *முழுமையாக விளங்கித் தோன்றினான்.* ***ஆல் -*** *ஈற்றசை. சூரியனைக் கண்டு தாமரை மலர்வதை முன்பு தாமரையில் தோன்றிய திருமகளின் அவதாரமாகிய சீதை இப்பொழுது அம்மலரில் இல்லை என்று இராமனுக்குக் காட்டுவதற்காகக் கதிரவன் அத்தாமரை மலர்களை விரித்துக் காட்ட உதயகிரியில் தோன்றினான் என்றார். தற்குறிப்பேற்ற அணி. முடி - உச்சி. கோடு - மலை. அடிநாள் - முன்னாள். அன்னம் -*

உவமையாகு பெயர்.

***3571.* பொழிலை நோக்கும்; பொழில் உறையும்**
**புள்ளை நோக்கும்; பூங்கொம்பின்**
**எழிலை நோக்கும்; இள மயிலின்**
**இயலை நோக்கும்; இயல்பு ஆனாள்**
**குழலை நோக்கி, கொங்கை இணைக்**
**குவட்டை நோக்கி, அக் குவட்டின்**
**தொழிலை நோக்கி, தன்னுடைய தோளை**
**நோக்கி, நாள் கழிப்பான்.**

**பொழிலை நோக்கும் -** *(இராமன் அங்குள்ள) சோலையைப் பார்ப்பான்;* **பொழில் உறையும் புள்ளை நோக்கும் -** *அச் சோலைகளில் வாழ்கின்ற சக்கர வாகப் பறவைகளைப் பார்ப்பான்;* **பூங்கொம்பின் எழிலை நோக்கும் -** *அங்குள்ள பூங்கொம்புகளின் அழகைப் பார்ப்பான்;* **இள மயிலின் இயலை நோக்கும் -** *இள மயிலினது சாயலைப் பார்ப்பான்;* **இயல்பு ஆனாள் -** *அவற்றின் இயல்புகள் எல்லாம் தன்னியல்பாக ஆனாளாகிய சீதையினது;* **குழலை நோக்கி -** *கருங் கூந்தலை எண்ணியும்;* **கொங்கை இணைக் குவட்டை நோக்கி -** *கொங்கைகளாகிய இருமலைகளை எண்ணியும்;* **அக்குவட்டின் தொழிலை நோக்கி -***அக் கொங்கைகளின் மேல் எழுதப்பட்டுள்ள (தொய்யில்) தொழிலைக் கருதிப் பார்த்தும்;* **தன்னுடைய தோளை நோக்கி -** *அக் கொங்கைகளில் அணைதல் இல்லாத தன் தோளைப் பார்த்தும்;* **நாள் கழிப்பான் -** *நாட்களைக் கழிப்பவன் ஆயினான்.*

*நோக்கிய காட்சிகளிலெல்லாம் சீதையின் உறுப்புகளையே இராமன் கண்டான் என்றார். சோலை சீதையின் கருங்கூந்தலாகவும், அச்சோலையில் உள்ள சக்கரவாகப் பறவை அவளது இணைக் கொங்கைகளாகவும், பூங்கொம்பின் எழில் கொங்கையில் எழுதப்பட்ட தொய்யிலாகவும், இள மயிலின் இயல் சீதையின் சாயலாகவும் இராமனுக்குக் காட்சியளித்தன என்றார். புள் - பறவை; இங்கே சக்கரவாகப் பறவை. இயல் - சாயல். குவடு- மலை. குவட்டின் தொழில் - தொய்யில் (கலவிக் காலத்தே முலை மேல்எழுதப்படும் சித்திரங்கள்).*
*சீதையைக் கவர்ந்த அரக்கனைத் தேடல்*

***3572.* அன்னகாலை, இள வீரன், அடியின்**
**வணங்கி, 'நெடியோய்! அப்**
**பொன்னை நாடாது, ஈண்டு இருத்தல்**
**புகழோ?' என்ன, புகழோனும்,**
**'சொன்ன அரக்கன் இருக்கும் இடம்**
**துருவி அறிதும் தொடர்ந்து' என்ன,**
**மின்னும் சிலையார் மலை தொடர்ந்த**
**வெயில் வெங் கானம் போயினரால்.**

***இள வீரன் -*** *இளைய வீரனாகிய இலக்குவன்;* ***அன்ன காலை -*** *அப்பொழுது;* ***அடியின் வணங்கி -*** *(இராமனது) அடிகளில் வணங்கி;* ***'நெடியோய் -*** *(புகழில்) பெரியவனே;* ***அப்பொன்னை நாடாது -****அந்தச் சீதையைத் தேடாமல்;* ***ஈண்டு இருத்தல் புகழோ -*** *இவ்வாறு இங்கு (வீணாக) இருப்பது புகழைத் தரும் செயலோ?';* ***என்ன -*** *என்று கூற;****புகழோனும் -*** *புகழ் மேம்பட்ட இராமனும்;* ***'சொன்ன அரக்கன் -****(சடாயு) சொல்லிய அரக்கன்;* ***இருக்கும் இடம் -*** *இருக்கின்ற இடத்தைத்;* ***தொடர்ந்து துருவி அறிதும் -*** *(நாம்) தொடர்ந்து சென்று தேடிக் காண்போம்;* ***என்ன -*** *என்று சொல்ல;* ***மின்னும் சிலையார் -****(அதற்குப் பிறகு) ஒளி பொருந்திய வில்லைக் கையில் ஏந்திய வீரர்களான இராமலக்குவர்கள் (இருவரும்);* ***மலை தொடர்ந்த வெயில் வெங்கானம் -*** *மலைகள் தொடர்ச்சியாக அமைந்த வெயிலால் வெப்பமடைந்த காட்டு (வழியில்);* ***போயினர் -*** *சென்றார்கள்.*

*ஆல் - அசை.*

*கலி விருத்தம்*

***3573. ஆசை சுமந்த நெடுங் கரி அன்னார்***
***பாசிலை துன்று வனம் பல பின்னா,***
***காசு அறு குன்றினொடு ஆறு கடந்தார்;***
***யோசனை ஒன்பதொடு ஒன்பது சென்றார்.***

***ஆசை சுமந்த நெடுங்கரி அன்னார் -*** *திசைகளைத் தாங்குகிற பெரிய திசை யானைகளை ஒத்தவர்களாகிய இராமலக்குவர்;****பாசிலை துன்று வனம் பல பின்னா -*** *பசிய இலைகள் நெருங்கிய காடுகள் பல பின்னாக (நடந்து சென்று);* ***காசு அறு குன்றினோடு -*** *குற்றம் இல்லாத மலைகளையும்;* ***ஆறு கடந்தார் -*** *ஆறுகளையும் கடந்தவர்களாகி;* ***ஒன்பதொடு ஒன்பது யோசனை சென்றார் -*** *பதினெட்டு யோசனை (தூரம்) சென்றார்கள்.*

*இராமலக்குவர் நடந்து சென்று பதினெட்டு யோசனை தூரம்கடந்தனர் என்க. ஆசை - திசை. துன்றுதல் - நெருங்குதல்; காசு - குற்றம்.அன்னார்- குறிப்பு வினையாலணையும் பெயர். பாசிலை - பண்புத்தொகை. கடந்தார் - முற்றெச்சம்.*

***3574. மண்படி செய்த தவத்தினில் வந்த***
***கள் படி கோதையை நாடினர், காணார்,***
***உள் படி கோபம் உயிர்ப்பொடு பொங்க,***
***புள் படியும் குளிர் வார் பொழில் புக்கார்.***

***மண்படி செய்த தவத்தினில் -*** *(அவர்கள்) மண்ணுலகு செய்த தவத்தினால்;* ***வந்த -*** *(அதனிடமிருந்து) வந்த;* ***கள் படி கோதையை -*** *தேன் பொருந்திய மாலையை அணிந்த சீதையை;* ***நாடினர் காணார் -*** *தேடிக் காணாதவர்களாகி;* ***உள் படி கோபம் உயிர்ப்பொடு பொங்க -*** *மனத்தில் படிந்திருந்த சினம் பெருமூச்சோடு (பொங்கி) வெளிப்பட;****புள் படியும் குளிர் வார் பொழில் -*** *பறவைகள் தங்குகிற குளிர் (மிகுந்த)பெரிய சோலையின் கண்;* ***புக்கார் -*** *புகுந்தார்கள்.*

*இராமலக்குவர் சீதையைத் தேடிக் காணாமல் சினமும் பெருமூச்சும் வெளிப்பட ஒரு சோலைக் கண் சென்று தங்கினர் என்பதாம். மண் படி - மண்ணுலகு. வார் - நீண்ட, பெரிய. காணார் - முற்றெச்சம்.*

### *3575. ஆரியர் சிந்தை அலக்கண் அறிந்தான்; நாரியை எங்கணும் நாடினன்; நாடி, பேர் உலகு எங்கும் உழன்று, இருள் பின்னா, மேருவின் - வெங் கதிர் - மீள மறைந்தான்.*

***வெங்கதிர் -*** *வெப்பமான கதிர்களை உடைய கதிரவன்;* ***ஆரியர்சிந்தை அலக்கண் அறிந்தான் -*** *வீரர்களாகிய (அந்த) இராமலக்குவரது மனத் துன்பத்தை அறிந்து;* ***நாரியை எங்கணும் நாடினன் நாடி -*** *பெண்ணாகிய சீதையை எங்கும் (துருவித்) தேடிப் பார்த்து;****பேர்உலகு எங்கும் உழன்று -*** *(இந்தப்) பெரிய நிலவுலகு முழுவதும் அலைந்து திரிந்து;* ***மேருவின் மீள இருள் பின்னா மறைந்தான் -*** *மேரு மலையில் மறுபடியும் தனக்குப் பின் இருள் தொடரும் படி சென்று மறைந்தான்.*

*உலகம் முழுதும் சீதையை தேடி அலுத்த கதிரவன் உலகுக்கு அப்புறம் போயும் தேடுவான் போலத் தனக்குப் பின் இருள் தொடருமாறு மேரு மலையில் மறைந்தான். ஆரியர் - வீரர், அறிவுடையவர், பெரியோர் எனினுமாம். அலக்கண் - துன்பம், நாரி - பெண்; ஈண்டுச் சீதை. அறிந்தான் - முற்றெச்சம். வெங்கதிர் - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

### *3576. அரண்டு, அருகும் செறி அஞ்சன புஞ்சம் முரண்டனபோல், இருள் எங்கணும் முந்த, தெருண்ட அறிவில்லவர் சிந்தையின் முந்தி, இருண்டன, மாதிரம் எட்டும் இரண்டும்.*

***செறி அஞ்சன புஞ்சம் -*** *அடர்ந்த மையின் திரட்சி;* ***அரண்டு -*** *அஞ்சி;* ***அருகும் முரண்டன போல் -*** *(இரு) பக்கங்களிலும் வளைத்துக் கொண்டன போல;* ***எங்கணும் இருள் முந்த -*** *எல்லாப் பக்கங்களிலும் இருள் சூழ;* ***தெருண்ட அறிவில்லவர் -*** *தெளிவில்லாத அறிவில்லாதவர்களுடைய;****சிந்தையின் -*** *மனத்தினைப் போல;* ***மாதிரம் எட்டும் இரண்டும் -*** *திசைகள் பத்தினையும்;* ***முந்தி இருண்டன -*** *விரைந்து இருளுமாறுசெய்தன.*

*தெளிவில்லாத மனத்தவர் மனம் போல பத்துத் திசைகளையும் இருள் வளைத்துக் கொண்டது என்றபடி. அரண்டு + அருகும் = அரண்டருகும்; அரண் தருகும் எனப் பிரித்து, காவல் தரும் எனவும் பொருள் கொள்ளலாம். குஞ்சம் - திரட்சி. மாதிரம் - திசை. திசைகள் பத்தாவன - பெருந்திசை நான்கு, கோண திசை நான்கு. மேல், கீழ்த் திசை இரண்டு ஆகப்பத்தென்க.*

*3577.* ***இளிக்கு அறை இன் சொல்***
    ***இயைந்தன, பூவை,***
***கிளிக்கு அறையும் பொழில்,***
    ***கிஞ்சுக வேலி,***
***ஒளிக்கறை மண்டிலம் ஒத்துளது,***
    ***ஆங்கு ஒர்***
***பளிக்கு அறை; கண்டு;***
    ***அதில் வைகல் பயின்றார்.***

***இளிக்கு அறை இன் சொல் இயைந்தன பூவை -*** *இளி என்னும் இசைக்கு (ஒப்பு என்று) கூறப்பட்ட இனிய சொற்களை உடையனவாகிய நாகண வாய்ப்புட்கள்;* ***கிளிக்கு அறையும் பொழில் -*** *(அந்த இனிமையான சொற்களைக்) கிளிகளுக்குச் சொல்லித் தரும் சோலையில்;* ***கிஞ்சுக வேலி -*** *முள் முருக்க மரங்களை வேலியாக உடைய;* ***ஒளிக் கறை மண்டிலம் ஒத்துளது -*** *ஒளியும் முயற்கறையும் உடைய (சந்திர) மண்டலத்தை ஒத்துள்ளதாகிய;* ***ஒர் பளிக்கு அறை கண்டு -*** *ஒரு பளிங்குப் பாறையைக் கண்டு;* ***ஆங்கு அதில் வைகல் பயின்றார் -*** *அவ்விடத்து அப்பாறையில் தங்கினார்கள்.*

*சோலையைச் சேர்ந்த இராமலக்குவர் அங்குள்ள பளிங்குப் பாறையில் தங்கினார்கள். இளி - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற ஏழிசைகளில் ஒன்று. பூவை - நாகண வாய்ப்புள், மைனா. கிஞ்சுகம் - முள் முருங்கை. ஒளிக் கறை - ஒளியும் கறையும் உடன் கூறினமையால் சந்திர மண்டிலம் என்க. பளிக்கறை - பளிங்கினாலாகிய அறை; அறை - பாறை.*

*இலக்குவன் நீர் தேடிச் செல்லல்*

*3578.* ***அவ் இடை எய்திய***
    ***அண்ணல் இராமன்***
***வெவ் விடைபோல்***
    ***இள வீரனை, 'வீர!***
***இவ் இடை நாடினை, நீர்***
    ***கொணர்க' என்றான்;***
        ***தெவ் இடை வில்லவனும்***
    ***தனி சென்றான்.***

***அவ் இடை எய்திய -*** *அந்த இடத்திற்குச் சென்று தங்கிய;* ***அண்ணல் இராமன் -*** *தலைவனாகிய இராமன்;* ***வெவ் விடைபோல் இளவீரனை -*** *வலிமையுள்ள காளை போன்ற இளைய வீரனாகியஇலக்குவனைப் (பார்த்து);* ***வீர -*** *வீரனே;* ***இவ் இடை நீர் நாடினை கொணர்க -*** *இவ்விடத்தில் தண்ணீரைத் தேடிக் கொண்டு வருவாய்;* ***என்றான் -*** *என்று கூறினான்;* ***தெவ் இடை வில்லவனும் தனி சென்றான் -*** *(அது கேட்ட) பகைவர் பின்னிடக் காரணமாகிய வில்லை உடையஇலக்குவனும் தனியே (இராமனைப் பிரிந்து) போனான்.*

*சீதையைப் பிரிந்து இராமன் மாயமானின் பின் சென்றது போல இராமனுக்கு நீர் கொண்டுவர அவனைப் பிரிந்து இலக்குவன் தனியே சென்றான் என்க. இடை - இடம். விடை, வலிமை நடை, செருக்கு ஆகியவற்றால் இலக்குவனுக்கு உவமை. தெவ் - பகை. நாடினை - முற்றெச்சம், கொணர்க - வியங்கோள் வினைமுற்று. தெவ் - பண்பாகு பெயர்.*

*இலக்குவனைக் கண்டு அயோமுகி காமுறல்*

### *3579. எங்கணும் நாடினன்; நீர் இடை காணான்;*
### *சிங்கம் எனத் தமியன் திரிவானை,*
### *அங்கு, அவ் வனத்துள், அயோமுகி என்னும்*
### *வெங் கண் அரக்கி விரும்பினள் கண்டாள்.*

***நீர் எங்கணும் நாடினன் இடை காணான் -** தண்ணீரை எல்லாவிடத்திலும் தேடி அவ்விடத்தில் காணாதவனாகி; **சிங்கம் எனத் தமியன் திரிவானை -** சிங்கம் போலத் தனியாகத் திரிகின்றவனாகிய இலக்குவனை; **அங்கு அவ்வனத்துள் -** அப்பொழுது அந்தக் காட்டில் (உள்ள); **அயோமுகி என்னும் -** அயோமுகி என்ற பெயர் கொண்ட; **வெங்கண் அரக்கி -** கொடிய கண்களை உடைய அரக்கியாகியவள்; **விரும்பினள் கண்டாள் -** ஆசை கொண்டு பார்த்தாள்.*

*காட்டில் தனியே நீர் தேடிச் சென்ற இலக்குவனை அயோமுகி ஆசை கொண்டு பார்த்தாள். அயோமுகி - இரும்பு போன்ற முகம் உடையவள். காணான், விரும்பினள் - முற்றெச்சங்கள். திரிவானை - வினையாலணையும் பெயர். வெங்கண் - பண்புத் தொகை.*

### *3580. நல் மதியோர் புகல் மந்திர நாமச்*
### *சொல் மதியா அரவின் சுடர்கிற்பாள்*
### *தன் மதனோடு தன் வெம்மை தணிந்தாள்;*
### *'மன்மதன் ஆம் இவன்' என்னும் மனத்தாள்.*

***நல் மதியோர் புகல் -** நல்ல அறிவுடையவர்கள் சொல்லுகிற; **நாம மந்திரச் சொல் -** அச்சம் தருகிற மந்திரச் சொற்களை; **மதியா -**மதித்துக்கட்டுப்படாத; **அரவின் -** பாம்பினைப் போல; **சுடர்கிற்பாள் -** சினச் சுடர் மிக்கவள்; **'இவன் மன்மதன் ஆம்' -** 'இவன் (இலக்குவன்) மன்மதனே ஆனவன்'; **என்னும் மனத்தாள் -** என்னும் எண்ணத்தால்; **தன் மதனோடு -** தன் மனச் செருக்கோடு; **தன் வெம்மை தணிந்தாள் -** தன் கொடுமையும் தணிந்தவளானாள்.*

*மந்திரம் கேட்டுக் கட்டுப்படாத பாம்பு போன்றவளாகிய அயோமுகி இலக்குவனிடம் கொண்ட காதலால் தன் மனச் செருக்கும் வலிமையும் தணியப் பெற்றாள் என்க. நாமம் - அச்சம். மதன் - வலி, செருக்கு, வெம்மை - சினம். மதியா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.*

***3581. அழுந்திய சிந்தை***
***அரக்கி, அலக்கண்***
***எழுந்து உயர் காதலின் வந்து,***
***எதிர் நின்றாள்;***
***'புழுங்கும் என் நோவொடு***
***புல்லுவென்; அன்றி,***
***விழுங்குவெனோ' என***
***விம்மல் உழந்தாள்.***

***அழுந்திய சிந்தை அரக்கி -** இலக்குவன் மீது (ஆழமாக) அழுந்திய (அன்பு கொண்ட) மனத்தை உடைய அரக்கியாகிய அயோமுகி;**அலக்கண் எழுந்து உயர் காதலின் -** துன்பம் மிக எழுவதற்குக் காரணமான மிகுதியான ஆசையோடு; **எதிர் வந்து நின்றாள் -** (இலக்குவனுக்கு) எதிரே வந்து நின்று; **'புழுங்கும் என் நோவொடு புல்லுவென் அன்றி -** மனம் (மாறுபட்டு) அழிவதற்குக் காரணமான ஆசையாகிய நோயினால், (அவ்விலக்குவனைத்) தழுவுவேனேயன்றி; **விழுங்குவெனோ -**(அவனைக்) கொன்று தின்பேனோ (தின்ன மாட்டேன்); **என விம்மல் உழந்தாள் -** என்று ஏக்கம் (மிகக்) கொண்டு வருந்தினாள்.*

*இலக்குவன் மீது காதல் கொண்ட அயோமுகி, நான் அவனைத்தழுவுவேனேயன்றிக் கொன்று தின்ன மாட்டேன்' என்றாள் என்க. அலக்கண் - துன்பம். புழுங்குதல் - எண்ணி மனம் அழிதல். நின்றாள் - முற்றெச்சம். புல்லுவென் - தன்மை ஒருமை வினைமுற்று. விழுங்குவனோ - ஓகாரம் எதிர்மறை.*

***3582. 'இரந்தனென் எய்திய***
***போது, இசையாது***
***கரந்தனனேல், நனி கொண்டு***
***கடந்து, என்***
***முரஞ்சினில் மேவி***
***முயங்குவென்' என்று,***
***விரைந்து எதிர் வந்தனள்,***
***தீயினும் வெய்யாள்!.***

***தீயினும் வெய்யாள் -** தீயினைக் காட்டிலும் கொடியவள் ஆகிய அயோமுகி; **இரந்தனென் எய்திய போது -** (நான் இவனை) வேண்டி நெருங்கும் போது; **இசையாது நனிகரந்தனனேல் -** (என் விருப்பத்துக்கு) இசையாமல் முழுதும் மறுத்து விடுவானாகில்; **கொண்டு கடந்து -** (அவனை) எடுத்துக் கொண்டு கடந்து சென்று; **என் முரஞ்சினில் மேவி -** எனது குகைக்குக் கொண்டு சென்று; **முயங்குவென் என்று -** (அவனை) வலியத் தழுவுவேன் என்று சொல்லி; **எதிர் விரைந்து வந்தனள் -** (இலக்குவனுக்கு) எதிராக விரைந்து வந்தாள்.*

*என் ஆசைக்கு இணங்கா விட்டால் நான் அவனை வலியத் தூக்கிச் சென்று என் குகையில் வைத்து வலியத் தழுவுவேன்' என்று அயோமுகி எண்ணினாள். முரஞ்சு - பாறை, இங்கு மலை முழைஞ்சாகிய பாறையைச் சுட்டியது. ஆகு பெயர். இரந்தனன் - முற்றெச்சம்.*

*அயோமுகியின் தன்மை*

***3583. உயிர்ப்பின் நெருப்பு***
***உமிழ்கின்றனள்; ஒன்ற***
***எயிற்றின் மலைக் குலம்***
***மென்று இனிது உண்ணும்***
***வயிற்றள்; வயக் கொடு***
***மாசுணம் வீசு***
***கயிற்றின் அசைத்த***
***முலை, குழி கண்ணாள்;***

***உயிர்ப்பின் நெருப்பு உமிழ்கின்றனள் -** (தன்) பெருமூச்சில் நெருப்பை வெளிக் காலுபவளும்; **எயிற்றின் -** பற்களால்; **ஒன்ற -** ஒன்றாக; **மலைக்குலம் -** யானைக் கூட்டங்களை; **மென்று இனிதுஉண்ணும் -** கடித்து மென்று இனிமையாக உண்ணுகின்ற;**வயிற்றள் -** வயிற்றினை உடையவளும்; **வயக்கொடு மாசுணம் வீசு கயிற்றின் -** வலிமையான கொடிய பாம்புகள் ஆகிய நீண்ட கயிற்றினால்;**அசைத்த முலை -** சேர்த்துக் கட்டிய முலைகளையும்; **குழிகண்ணாள் -** குழி விழுந்த கண்களையும் உடையவளும் ........ (தொடர்ச்சி அடுத்த பாடலில்) அயோமுகியின் பெருமூச்சு, வயிறு, முலை, கண் ஆகியவை பற்றி இப்பாடலில் கூறப்பட்டன.. மலை - யானை. மாசுணம் - பெரும் பாம்பு. மலை - யானைக்கு உவமையாகு பெயர். மலைக்குலம் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. வய - வலியென்னும் பொருள் தரும் உரிச் சொல். 4.*

***3584பற்றிய கோள் அரி, யாளி, பணிக்கண்***
***தெற்றிய பாத சிலம்பு சிலம்ப,***
***இற்று உலகு, யாவையும் ஈறுறும் அந் நாள்,***
***முற்றிய ஞாயிறு போலும் முகத்தாள்;***

***பற்றிய கோள் அரி -** (தான் கைப்) பற்றிய வலிமையான சிங்கங்களையும்; **யாளி -** யாளிகளையும்; **பணிக்கண் தெற்றிய -** பாம்பாகிய கயிற்றில் (ஒன்றாகச்) சேர்த்துக் கட்டிய; **பாத சிலம்பு சிலம்ப -** காற்சிலம்பை ஒலிக்குமாறு தரித்தவளும்; **யாவையும் -** (உலகில் உள்ள) எல்லாப் பொருள்களும்; **இற்று -** அழிந்து; **உலகு ஈறுறும் அந்நாள் -** உலகம் முடிவு பெறுகிற பேரூழிக் காலத்தில்; **முற்றிய ஞாயிறு போலும் முகத்தாள் -** (வெப்பம்) மிகுந்த கதிரவன் போன்ற முகத்தினை உடையவளும்......... (தொடர்ச்சி அடுத்த பாடலில்).*

*பாம்பாகிய கயிற்றில் சிங்கம், யாளி ஆகியவற்றைச் சேர்த்துக் கட்டிப் பாதச் சிலம்பாக அணிந்தவள். உலகம் அழியும் காலத்தில் மிக்க வெப்பத்துடன் சுடர் விடும்*

*கதிரவன் போன்ற முகத்தினை உடையவள் என்று அயோமுகியை வருணித்தவாறு. கோளரி - சிங்கம், யாளி - யானையைப் போன்று துதிக்கையும் சிங்கத்தினைப் போன்று உடலமைப்பும் உடையதொரு வலிய விலங்கு. பணி - படத்தை உடையது எனப் பாம்புக்குக் காரணப் பெயர். தெற்றிய - சேர்த்துக் கட்டிய. கோள் - முதல் நிலை நீண்ட தொழிற் பெயர். அரியாளி - உம்மைத் தொகை.*

***3585. ஆழி வறக்க முகக்க அமைந்த***
***மூழை எனப் பொலி மொய் பில வாயாள்;***
***கூழை புறத்து விரிந்தது ஓர் கொட்பால்,***
***ஊழி நெருப்பின் உருத்தனை ஒப்பாள்;***

***ஆழிவறக்க முகக்க அமைந்த -*** *கடலும் வற்றும் படி முகப்பதற்காக அமைக்கப்பட்ட;* ***மூழை எனப் பொலி -*** *அகப்பை என்னும்படி விளங்குகின்ற;* ***மொய் பில வாயாள் -*** *வலிமையான குகை போன்ற வாயை உடையவளும்;* ***கூழை புறத்து விரிந்தது ஓர் கொட்பால் -****தலைமயிர் பக்கங்களில் விரிந்து விளங்கும் தன்மையால்;* ***ஊழி நெருப்பின் உருத்தனை ஒப்பாள் -*** *உலக ஊழிக் காலத்து நெருப்பின் வடிவம் தனை ஒத்தவளும்...... (தொடர்ச்சி அடுத்த பாடலில்)   அயோமுகியின் பெரிய வாய் கடலை முகந்து வறளச் செய்யும் பெரிய அகப்பை போல் விளங்கியது. அவளது விரிந்த தலைமயிர் ஊழிக் காலத்து நெருப்பை ஒத்து விளங்கியது என்றவாறு. ஆழி - கடல், மூழை - முகக்கும் கருவியாகிய அகப்பை, இதற்கு முகவை எனப் பொருள் கூறி நீர் முகக்கும் கருவியாகிய குடுவை என்பாருமுளர். கூழை - தலைமயிர். கொட்பு - தன்மை. தலைமயிருக்கு ஊழித் தீயை உவமையாகக் கூறியதால் அம்மயிர் சிவந்த நிறமுடையது என்பது பெறப்பட்டது.                    4.*

***3586 தடி தடவ, பல தலை தழுவ, தாள்***
***நெடிது அடைய, குடர் கெழுமு நிணத்தாள்;***
***அடி தடவ, பட அரவம் இசைக்கும்***
***கடிதடம் உற்றவள்; உருமு கறிப்பாள்;***

***தடி தடவ -*** *அளவு கோலால் தடவி அளப்பதற்குரிய;* ***தலை பல தழுவ -*** *(அந்த) இடத்தைப் போன்ற பல இடங்களைத் (தன்) ஓரடியில் அளக்கும்படி;* ***தாள் நெடிது அடைய -*** *(தன்) பாதங்கள் நீண்ட தூரம்;* ***அடி தடவ -*** *அடி வைத்துச் செல்ல;* ***குடர் கெழுமு நிணத்தாள் -*** *(அதனால் தான் உண்டு செல்லுகிற) குடலொடு பொருந்திய கொழுப்பு எங்கும் சிதற;* ***பட அரவம் இசைக்கும் -*** *படம் எடுத்த பாம்பின் படத்தை ஒத்த;* ***கடிதடம் உற்றவள் -*** *அல்குல் பொருந்தியவளாகிய (அயோமுகி);* ***உருமு கறிப்பாள் -*** *இடியை ஒத்து பற்களைக் கடிப்பவளாயினாள்.... (தொடர்ச்சி அடுத்த பாடலில்).*

*நீண்ட அடிவைத்து அயோமுகி வரும் வேகத்தால் அவள் உண்டு வந்த இறைச்சியும் கொழுப்பும் எங்கும் சிதறி விழுந்தன. பாம்பின் படத்தை ஒத்த அல்குலை உடைய அவள் இடிபோல் பற்களைக் கடித்தாள் என்க. தடி - அளவு கோல். இசைக்கும் - ஒக்கும். கடிதடம் - அரையிடம் (அல்லது) அல்குல். உருமு - இடி. கறித்தல் - பற்களைக் கடித்தல். குடர் - கடைப் போலி.*

***3587. இவை இறை ஒப்பன என்ன, விழிப்பாள்;***
***அவை குளிர, கடிது அழலும் எயிற்றாள்;***
***குவை குலையக் கடல் குமுற உரைப்பாள்;***
***நவை இல் புவித்திரு நாண நடப்பாள்.***

***இவை -*** *(அவளது) இக்கண்கள்;* ***இறை ஒப்பன என்ன -****சிவனின் கண்களை ஒப்பன என்று சொல்லுமாறு;* ***விழிப்பாள் -*** *(சினத்துடன்)விழித்துப் பார்ப்பவளும்;* ***அவை குளிர -*** *அக்கண்களில் இருந்து வெளிப்பட்ட சின நெருப்புக் குளிர்ந்து விட்டது என்று சொல்லும்படியாக;* ***கடிது அழலும் எயிற்றாள் -*** *மிகக் கொடுமையைக் காட்டும் பற்களை உடையவளும்;* ***குவைகுலையக் -*** *மலைகளும் தன் நிலை கெட்டு அழியும் படியும்;* ***கடல் குமுற -*** *கடல்கள் மோதிக் குமுறும் படியும்;****உரைப்பாள் -*** *கடுமையாகப் பேசுபவளும்;* ***நவை இல் புவித்திரு நாண நடப்பாள் -*** *குற்றம் இல்லாத பூமகளாகிய செல்   சிவபிரானின் கண்களில் தீ வெளிப்படுதல் போல் விழித்து, அந்நெருப்பும் குளிர்ந்து விட்டது என்று எண்ணுமாறு பற்கடித்து வெப்பமெழுப்பி, மலை குலைய, கடல் அதிர முழங்கி, பூமகள் நாணஅயோமுகி வந்தாள் என்க. இறை - சிவன், குவை - மலைக் கூட்டம், நவை - குற்றம். புவித்திரு - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.   4 வத் தேவி வெட்கம் அடையும்படி நடப்பவளும்....... (தொடர்ச்சி அடுத்த பாடலில்).*

***3588 நீள் அரவச் சரி,***
***தாழ் கை, நிரைத்தாள்;***
***ஆள் அரவப் புலி***
***ஆரம் அணைத்தாள்;***
***யாளியினைப் பல***
***தாலி இசைத்தாள்;***
***கோள் அரியைக் கொடு***
***தாழ் குழை இட்டாள்;***

***நீள் அரவச் சரி -*** *நீண்ட பாம்புகளாகிய வளையலை;* ***தாழ்கை நிரைத்தாள் -*** *நீண்ட கையில் வரிசையாக அணிந்தவள்;* ***அரவ ஆள் புலி ஆரம் அணைத்தாள் -*** *உறுமுகிற ஆண்புலிகளைக் (கோத்து) ஆரமாக அணிந்தவள்;* ***பல யாளியினைத் தாலி இசைத்தாள் -*** *பல யாளிகளைக் (கோத்துத்) தாலியாகக் கட்டியவள்;* ***கோள் அரியைக் கொடு தாழ் குழை இட்டாள் -*** *கொள்ளும் (வலிய) சிங்கங்களைக் கொண்டு தாழ்ந்த காதணியாக அணிந்தவள்.*

*அயோமுகியை இலக்குவன் கண்டு வினவல்*

***3589. நின்றனள், ஆசையின்***
***நீர் கலுழும் கண்***
***குன்றி நிகர்ப்ப,***
***குளிர்ப்ப விழிப்பாள்,***

***மின் திரிகின்ற***
***எயிற்றின் விளக்கால்,***
***கன்று இருளில் திரி***
***கோளரி கண்டான்.***

***குன்றி நிகர்ப்ப -*** *குன்றி மணியை ஒத்துள்ள;* ***ஆசையின் நீர் கலுழும் கண் -*** *காம நோயால் (சிவந்த) நீர் ஒழுகும் கண்களின் மூலம்;* ***குளிர்ப்ப விழிப்பாள் -*** *குளிர்ச்சியாக நோக்குபவள் ஆகிய அயோமுகி;* ***நின்றனள் -*** *நின்றாள்;* ***கன்று இருளில் திரி கோளரி -*** *செறிந்த இருட்டில் திரிகின்ற சிங்கம் போன்ற இலக்குவன்;* ***மின் திரிகின்ற எயிற்றின் விளக்கால் -*** *ஒளி வீசுகின்ற அவள் பற்களின் ஒளியாகிய விளக்கினால்;* ***கண்டான் -*** *(அந்த அயோமுகியைக்) கண்டான்.*

*சிவந்த குன்றி நிகர்க்கும் கண்களால் காதல் கலந்த குளிர் பார்வை பார்த்துக் கொண்டு நின்றாள். இருளில் வலிய சிங்கம் போல் திரிந்தஇலக்குவன், அவளது ஒளி வீசுகின்ற பற்களாகிய விளக்கின் ஒளியால் அந்த அயோமுகியைக் கண்டான். முன்பாட்டில் வெப்பக் கனலே உருவான அரக்கியைக் காட்டி, அந்த வெப்பக் கொடுமையே குளிர்வதாக இங்கே காட்டுகிறார். இயல்பான வெம்மை காம வெறியால் குளிர்ப்ப விழிக்கச்செய்துள்ள இரசவாதம் இலக்குவனுக்கு வாய்த்த சோதனை. மின் - ஒளி. கன்று இருள் - செறிந்த இருள். விழிப்பாள் - முற்றெச்சம். எயிற்றின்விளக்கு - உருவகம். கோளரி - உவமை ஆகுபெயர்.*

***3590. 'பண்டையில் நாசி***
***இழந்து பதைக்கும்***
***திண் திறலாளொடு***
***தாடகை சீராள்;***
***கண்டகர் ஆய***
***அரக்கர் கணத்து ஓர்***
***ஒண்தொடி ஆம், இவள்'***
***என்பது உணர்ந்தான்.***

***பண்டையில் -*** *முன்பு;* ***நாசி இழந்து பதைக்கும் -*** *மூக்கை இழந்து வருந்தின;* ***திண் திறலாளொடு -*** *மிக்க வலிமை உடைய சூர்ப்பணகையோடு;* ***தாடகை -*** *தாடகை என்பவளையும்;* ***சீராள் -*** *(ஒத்த) தன்மை உடையவள்;* ***கண்டகர் ஆய அரக்கர் -*** *தீயவர்களாகிய அரக்கர்களின்;* ***கணத்து ஓர் ஒண்தொடி ஆம் இவள் -*** *கூட்டத்தில் தோன்றிய ஒரு பெண்ணாம் இவள்;* ***என்பது உணர்ந்தான் -*** *என்பதைப் (பார்த்தவுடன்) இலக்குவன் உணர்ந்து கொண்டான்.*

*சூர்ப்பணகை - இலக்குவனால் மூக்கு முதலிய உறுப்புகளை இழந்தவள். இதனை.*

***ஊக்கித் தாங்கி, விண்படர்வென் என்று உருத்து எழுவாளை நூக்கி, நொய்தினில், 'வெய்து இழையேல்' என நுவலா மூக்கும் காதும், வெம் முரண் முலைக் கண்களும், முறையால் போக்கி, போக்கிய சினத் தொடும் புரிகுழல் விட்டான். (2825)***

*என்ற பாடல் விளக்குகிறது. தாடகை, விசுவாமித்திரனின் எண்ணப்படி இராமனால் கொல்லப்பட்டவள். இதனைப் பால காண்டத்தில் வரும் 88 முதல் 92 வரையுள்ள பாடல்களைக் கொண்டு அறிக. கண்டகர் - வழிச் செல்வாரைத் தடுத்து முள்ளைப் போன்று வருத்தும் கொடியோர். திண் திறல் - ஒரு பொருட் பன்மொழி, ஒண் தொடி - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

***3591. 'பாவியர் ஆம் இவர்;***
***பண்பு இலர்; நம்பால்***
***மேவிய காரணம் வேறு***
***இலை' என்பான்;***
***'மா இயல் கானின் வயங்கு***
***இருள் வந்தாய்!***
***யாவள் அடீ? உரைசெய்,***
***கடிது' என்றான்.***

***பண்பு இலர்*** *- நற்பண்புகள் இல்லாதவரும்;* ***பாவியர் ஆம் இவர்*** *- பாவியர்களும் ஆகிய இவர்கள்;* ***நம்பால்*** *- நம்மிடம்;* ***மேவிய காரணம் வேறு இலை*** *- வருவதற்கு உரிய காரணம் வேறு ஒன்றும் இல்லை;* ***என்பான்*** *- என்று நினைத்தவனாகிய (இலக்குவன்);* ***மா இயல் கானின்*** *- விலங்குகள் திரிகின்ற காட்டின்கண்;* ***வயங்கு இருள் வந்தாய்*** *-மிக்க இருளில் வந்தவளாகிய (நீ);* ***யாவள் அடீ*** *- யாரடி;* ***உரை செய்கடிது*** *- விடையை விரைவாகச் சொல்;* ***என்றான்*** *- என்று கேட்டான்.*

*நற்குணமில்லாத கொடியவர்களாகிய அரக்கியர் நம்மிடம் வருவதற்கு வேறு காரணம் இல்லை என்றது பாவம் செய்தலாகிய ஒரு காரணம்உள்ளது எனக் கருதியதாகும். வந்தாய் - முன்னிலை ஒருமை வினையாலணையும் பெயர்; 'வந்தவளே' என விளியாகவும் கொள்ளலாம்.*
*அயோமுகியின் காம வெறியும் இலக்குவன் மறுப்பும்*

***3592. பேசினன்; அங்கு அவள்***
***பேசுற நாணாள்;***
***ஊசல் உழன்று அழி***
***சிந்தையளும்தான்,***
***'நேசம் இல்,***
***அன்பினளாயினும், நின்பால்***
***ஆசையின் வந்த***
***அயோமுகி' என்றாள்.***

***பேசினன்*** *- (மேலே குறிப்பிட்டவாறு இலக்குவன்) பேசினான்;* ***அங்கு-*** *அப்பொழுது;* ***ஊசல் உழன்று அழி சிந்தையளும் தான் அவள்*** *- ஊசலாடி வருந்தி அழிகின்ற மனத்தை உடையவளாகிய அயோமுகியும் தான்;* ***பேசுற நாணாள்*** *- தன் ஆசையை ஆண்மகனிடம் தானே எடுத்துச் சொல்ல நாணமடையாதவளாய்;* ***நேசம் இல்***

***அன்பினளாயினும் -***பழைய உறவு இல்லாத அன்பு உடையவள் ஆயினும்; ***நின்பால் -*** நின்னிடம்; ***ஆசையின் வந்த அயோமுகி ஊசல் உழன்று அழி சிந்தையள்*** இலக்குவன் தன்னை ஏற்பானோ மாட்டானோ என்று தடுமாறும் உள்ளம் கொண்டவள். ***பேசுற நாணாள் -*** தாமுறு காமத் தன்மை தாங்களே ஆடவனிடம் உரைக்க நாணாதவள். மூன்றாவது அடிக்கு வேறு பாடங்களும் உள; எனினும், நாம் கொண்ட பாடம் உட்பட எதற்கும் முற்றும் பொருந்துறப் பொருள் கொள்ள இயலவில்லை. ஏடேழுதியோர் பிழையோ, பொருள் கொள்ள நம்பால் உள்ள குறையோ - தெரியவில்லை. தான் - அசையாகவும் கொள்ளலாம்- ஆசையால் வந்த அயோமுகி என்ற பெயர் உடையவள்; ***என்றாள் -*** என்று கூறினாள். . *5*

***3593பின்னும் உரைப்பவள், 'பேர்***
***எழில் வீரா!***
***முன்னம் ஒருத்தர் தொடா***
***முலையோடு உன்***
***பொன்னின் மணித் தட மார்பு***
***புணர்ந்து, என்***
***இன் உயிரைக் கடிது***
***ஈகுதி' என்றாள்.***

***பின்னும் உரைப்பவள் -*** மேலும் தொடர்ந்து கூறுபவளாகிய (அயோமுகி); ***'பேர் எழில் வீரா -*** பேரழகுடைய வீரனே; ***முன்னம் ஒருத்தர் தொடா முலையோடு -*** இதற்கு முன்பு ஒருவரும் தொடாத முலையோடு (கன்னி என்றபடி); ***உன் பொன்னின் மணித்தட மார்புபுணர்ந்து -*** உன்னுடைய பொன் போன்ற அழகிய பெரிய மார்பைத் தழுவி; ***என் இன் உயிரைக் கடிது ஈகுதி -*** அதனால் எனது இனிமையான, உயிர் (போகாது இருக்க) விரைவாக அருள் ஈவாய்; ***என்றாள் -*** என்று கூறினாள்.

*'நான் பிறரோடு புணர்ந்தவளல்லள், உன்னை மட்டும் விரும்புபவள். எனவே என்னைப் புணர்ந்து என் இன்னுயிர் ஈவாய்' என்றாள். ஈகுதி - இழிந்தோள் கூற்றாக வந்தது. உரைப்பவள் - முற்றெச்சம், தொடா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தடமார்பு - உரிச் சொல் தொடர். ஈகுதி - முன்னிலை ஒருமை வினைமுற்று.*

***3594. ஆறிய சிந்தையள்***
***அஃது உரைசெய்ய,***
***சீறிய கோளரி***
***கண்கள் சிவந்தான்;***
***'மாறு இல வார் கணை, இவ்***
***உரை வாயின்***
***கூறிடின், நின் உடல்***
***கூறிடும்' என்றான்.***

***ஆறிய சிந்தையள் -*** (இலக்குவன் மீது கொண்ட காதலால்) கொடுமை குறைந்த மனம் உடையவளாகிய (அயோமுகி); ***அஃது உரை செய்ய -*** அந்தச் சொற்களைச் சொல்ல; ***சீறிய கோளரி -*** சினம் கொண்ட சிங்கம் போன்ற இலக்குவன்; ***கண்கள் சிவந்தான் -***

*சினத்தால் கண்கள் சிவந்து;* ***'இவ்வுரை வாயின் கூறிடின் -*** *இப்படிப்பட்ட சொற்களை (நீ மீண்டும்) வாயினால் கூறினால்;* ***மாறு இலவார் கணை -*** *(எனது) ஒப்பு இல்லாத நீண்ட அம்புகள்;* ***நின் உடல் கூறிடும் -*** *உனது உடலைத் துண்டு துண்டாக்கி விடும்';* ***என்றான் -*** *என்று கூறினான். நீ மீண்டும் இவ்வாறு கூறினால் என் அம்பு உன் உடலைக் கூறிடும் என்றவாறு. கோளரி - உவமையாகு பெயர். கோளரி சிவந்தான் - திணை வழுவமைதி. பாடலின் இறுதி வரியில் உள்ள சொல் நயம் காண்க.*

***3595. மற்று அவன் அவ் உரை***
***செப்ப, மனத்தால்***
***செற்றிலள்; கைத் துணை***
***சென்னியில் வைத்தாள்;***
***'கொற்றவ! நீ எனை வந்து***
***உயிர் கொள்ளப்***
***பெற்றிடின், இன்று***
***பிறந்தனென்' என்றாள்.***

***அவன் மற்று அவ் உரை செப்ப -*** *அந்த இலக்குவன் மாறுபாடாக இந்தச் சொற்களைச் சொல்ல;* ***மனத்தால் செற்றிலள் -*** *மனத்தால் சினம் கொள்ளாதவளாகிய (அயோமுகி);* ***கைத் துணை சென்னியில் வைத்தாள் -*** *தன் இரண்டு கைகளையும் தலைமீது குவித்தவளாய்;* ***'கொற்றவ -*** *தலைவனே;* ***நீ எனை வந்து -*** *நீ என்னிடம் வந்து;* ***உயிர் கொள்ளப்பெற்றிடின் -*** *(நான்) உயிர் பெற்று வாழும்படி செய்யப் பெற்றால்;* ***இன்று பிறந்தனென் -*** *இன்று நான் (மீண்டும்) பிறந்ததன் பயனைப் பெற்றவளாவேன்';* ***என்றாள் -*** *என்று கூறினாள்.*

*இலக்குவன் கூறியதைக் கேட்ட அயோமுகி சினம் கொள்ளாதுஅவனைக் கை கூப்பி வணங்கி 'நீ எனக்கு அருள் செய்யின் நான் பிறந்த பயனைப் பெற்றவள் ஆவேன்' என்றாள்.*

***3596. வெங் கதம் இல்லவள்***
***பின்னரும், 'மேலோய்!***
***இங்கு நறும் புனல்***
***நாடுதி என்னின்,***
***அங்கையினால் எனை,***
***"அஞ்சலை" என்றால்,***
***கங்கையின் நீர் கொணர்வென்***
***கடிது' என்றாள்.***

***வெங்கதம் இல்லவள் -*** *கொடிய சினம் இல்லாதவளாகிய (அயோமுகி);* ***பின்னரும் -*** *பின்பும்;* ***'மேலோய் -*** *உயர்ந்தவனே!;* ***இங்கு நறும் புனல் நாடுதி என்னின் -*** *இவ்விடத்தில் நல்ல நீரைத் தேடுகிறாய் என்றால்;* ***எனை -*** *எனக்கு;* ***அங்கையினால் -*** *உன்னுடைய அழகான கைகளினால்;* ***"அஞ்சலை" என்றால் -*** *அஞ்சாதே என்று அபயம்*

*அளித்தால்;* ***கடிது -*** *விரைவாக;****கங்கையின் நீர் கொணர் வென் -*** *(உனக்காகக்) கங்கையின் நீரைக் கூடக் கொண்டு வந்து கொடுப்பேன்;* ***என்றாள் -*** *என்று கூறினாள்.*

*அரக்கியாதலின் சினம் கொள்ளல் இயற்கையெனினும், இலக்குவன்பால் கொண்ட காமத்தால் கதம் (சினம்) காட்டாதவளாயினாள். கதம் - சினம், அங்கை - அங்கை என்க. கடிது - விரைவு. வெங்கதம், நறும்புனல் - பண்புத் தொகைகள், கொணர்வென் - தன்மை ஒருமைவினைமுற்று.*

***3597. சுமித்திரை சேய் அவள்***
***சொன்ன சொல் அன்ன***
***கமித்திலன்; 'நின் இரு***
***காதொடும் நாசி***
***துமிப்பதன் முன்பு அகல்***
***என்பது சொல்ல,***
***இமைத்திலள், நின்றனள்,***
***இன்ன நினைத்தாள்:***

***சுமித்திரை சேய் -*** *சுமித்திரை மகனாகிய இலக்குவன்;* ***அவள் சொன்ன அன்ன சொல் -*** *அந்த அயோமுகி கூறிய அத்தன்மையாகிய சொற்களை;* ***கமித்திலன் -*** *பொறுக்காதவனாகி;* ***'நின் இரு காதொடும் நாசி துமிப்பதன் முன்பு -*** *(அயோமுகியை நோக்கி நான்) உனது இரு காதுகளோடு மூக்கையும் அறுப்பதற்கு முன்பு;* ***அகல் -*** *(இவ்விடத்தை விட்டுப்) போய்விடு';* ***என்பது சொல்ல -*** *என்று சொல்ல;****இமைத்திலள் நின்றனள் -*** *(அது கேட்டுக்) கண்ணிமைக்காமல் நின்றவளாகிய அவள்;* ***இன்ன நினைந்தாள் -*** *இவ்வாறு நினைப்பவள் ஆனாள். நினைத்ததை அடுத்த பாடலில் காண்க.*

*அயோமுகியின் சொல் கேட்ட இலக்குவன் சினந்து, நான் உன் இரு காதுகளையும் மூக்கையும் அறுப்பதற்கு முன்பு போய் விடு என்று கூற, அயோமுகி திகைத்துக் கண்ணிமைக்காமல் நின்று சிலவற்றை எண்ணினள் என்க. கமித்திலன் - பொறுத்திலன், துமித்தல் - துண்டித்தல், இமைத்திலள் - முற்றெச்சம்.*

***3598. 'எடுத்தனென் ஏகினென்,***
***என் முழைதன்னுள்***
***அடைத்து, இவன் மெம்மை***
***அகற்றிய பின்னை,***
***உடற்படுமால்; உடனே***
***உறும் நன்மை;***
***திடத்து இதுவே நலன்'***
***என்று, அயல் சென்றாள்.***

***எடுத்தனென் ஏகினென் -*** *(இந்த இலக்குவனை) எடுத்துக் கொண்டு சென்று;* ***என் முழை தன்னுள் அடைத்து -*** *எனது குகையில் அடைத்துவைத்து;* ***இவன் வெம்மை அகற்றிய பின்னை -*** *இவனது சினத்தைத் தணித்த பின்பு;* ***உடற்படுமால் -*** *(இவன் என் எண்ணத்துக்கு) உடன்படுவான்;* ***உடனே நன்மை உறும் -*** *(அதற்குப் பின்பு) விரைவாக (இவனால்) எனக்கு நல்ல மகிழ்ச்சி கிடைக்கும்;* ***இதுவே திடத்து நலன் -*** *இவ்வாறு செய்வதுவே உறுதியாக நன்மை தரும்;* ***என்று -*** *என்று எண்ணி;* ***அயல் சென்றாள் -*** *(இலக்குவனது) அருகில் சென்றாள்.*

*இவனை என் குகைக்கு எடுத்துச் சென்று சினத்தைத் தணித்தால், இவன் எனக்கு உடன்படுவான். அதுவே உறுதியாகச் செய்யத் தக்கது என்று எண்ணிய அயோமுகி இலக்குவனுக்குப் பக்கத்தில் போனாள். முழை - குகை, வெம்மை - வெப்பம், ஈண்டுச் சினம். திடம் - உறுதி, எடுத்தனென் - முற்றெச்சம். ஆல் - அசை.*

*இலக்குவனை அயோமுகி தூக்கிச் செல்லல்*

***3599. மோகனை என்பது***
***முந்தி முயன்றாள்;***
***மாக நெடுங் கிரி***
***போலியை வவ்வா***
***ஏகினள் - உம்பரின்***
***இந்துவொடு ஏகும்***
***மேகம் எனும்படி -***
***நொய்தினின் வெய்யாள்.***

***வெய்யாள் -*** *கொடியவளாகிய அயோமுகி;* ***மோகனை என்பது -*** *மோகத்தை உண்டாக்கும் மாயையை;* ***முந்தி முயன்றாள் -****முன்னால் முயன்று செய்து;* ***மாக நெடுங்கிரி போலியை வவ்வா -*** *விண்ணைஅளாவிய பெரிய மலை போன்றவனாகிய இலக்குவனைத் தூக்கிக் கொண்டு;* ***உம்பரின் -*** *மேலே உள்ள வானத்தில்;* ***இந்துவொடு ஏகும் மேகம் எனும்படி -*** *நிலவுடன் சேர்ந்து செல்லுகிற மேகம் என்று சொல்லும் படியாக;* ***நொய்தினின் -*** *(மிக) விரைவாக;* ***ஏகினள் -*** *சென்றாள்.*

*அயோமுகி மோகனை என்ற மாய மந்திரத்தால் இலக்குவனை மயக்கி, அவனை எடுத்துக் கொண்டு, நிலவுடன் சேர்ந்து செல்லுகிற மேகம் போல வானத்தில் விரைந்து சென்றாள். மோகனை - மோகத்தை உண்டாக்கும் மாயை. மாகம் - வானம். இந்து - நிலவு. நொய்தினின் - எளிமையாகஎனினுமாம். "நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன்" (5) எனக் கம்பர் கூறியுள்ளதை எண்ணுக. இந்து - இலக்குவனுக்கும் மேகம் - அயோமுகிக்கும் உவமையாம். ஒளி அறத்துக்கும், கருமை பாவத்துக்கும் இங்கு வந்துள்ளமை காண்க. வவ்வா - செய்யா எனும் வாய்பாட்டு உடன் பாட்டு வினையெச்சம்.*

***3600. மந்தரம் வேலையில் வந்ததும், வானத்து***
***இந்திரன் ஊர் பிடி என்னலும், ஆனாள்;***

**வெந் திறல் வேல் கொடு சூர் அடும் வீரச்**
**சுந்தரன் ஊர்தரு தோகையும் ஒத்தாள்.**

**மந்தரம் வேலையில் வந்ததும் -** *(இலக்குவனைத் தூக்கிச் சென்ற அயோமுகி) மந்தரமலை கடலில் பொருந்தியது போலவும்;* **வானத்து இந்திரன் ஊர்பிடி -** *தேவர் உலகத்தில் இந்திரன் ஏறிச் செலுத்தும் (ஐராவதம் என்ற ஆண் யானையின் துணையாகிய) அப்பிரமு என்ற பெண் யானை;* **என்னலும் ஆனாள் -** *என்று உவமை கூறத்தக்கவளாய் விளங்கினாள்;* **வெந்திறல் வேல் கொடு சூர் அடும் -** *(அதற்கு மேல் தன்) வலிமை பொருந்திய வேலைக் கொண்டு சூரபதுமனைக் கொன்ற;* **வீரச் சுந்தரன் ஊர்தரு தோகையும் -** *வீர அழகனாகிய முருகக் கடவுள் ஏறிச் செலுத்துகிற மயிலையும்;* **ஒத்தாள் -** *ஒத்து விளங்கினாள்.*

*இலக்குவனை அயோமுகி தூக்கிச் சென்ற காட்சியை இப்பாடலில் மூன்று உவமைகள் கொண்டு விளக்கினார் (1) மந்தரமலை - இலக்குவன், கடல் - மந்தர மலையைத் தாங்கிய கடல் அயோமுகி. இஃது இல் பொருள் உவமை. (2) இந்திரன்; இலக்குவன், அவன் ஊர்பிடி - அப்பிரமு: அயோமுகி. அயோமுகி பெண் என்பதால் இந்திரன் ஊரும் ஐராவதம் என்ற ஆண் யானையைக் கூறாது அதன் துணையாகிய பெண் யானையைக் கூறினார். (3) முருகன் : இலக்குவன். முருகனைத் தாங்கும் தோகை;அயோமுகி. இங்குப் பெண் மயில் கூறாது தோகையுடைய ஆண் மயிலைக் கூறியது, முருகனைச்*

*சுமக்கும் மயிலைக் கருதியதால் என்க. இம்மூன்று உவமைக்கும், "தாங்குதல்" என்பது பொதுத் தன்மையாதலையும் அறிக. வேலை - கடல், சூர் - சூரபதுமன், சுந்தரன் - முருகன்.*

**3601. ஆங்கு அவள் மார்பொடு**
**கையின் அடங்கி,**
**பூங் கழல் வார் சிலை**
**மீளி பொலிந்தான்;**
**வீங்கிய வெஞ்சின வீழ்**
**மத வெம் போர்**
**ஓங்கல் உரிக்குள்**
**உருத்திரன் ஒத்தான்.**

**ஆங்கு -** *அந்த நிலையில்;* **அவள் மார்பொடு கையின் அடங்கி -** *அவளது மார்பின் கண்ணும் கையின் கண்ணும் அடங்கி;* **பூங்கழல் வார் சிலை மீளி -** *அழகிய வீரக்கழலை அணிந்த நீண்ட வில்லை ஏந்திய வீரனாகிய (இலக்குவன்);* **பொலிந்தான் -** *அழகு பெற விளங்கினான்;* **வீங்கிய வெஞ்சின -** *மிகக் கொடிய சினத்தினையும்;* **வீழ் மத -** *வடிகின்ற மதத்தினையும்;* **வெம்போர் -** *கொடிய போரினையும் செய்கிற;* **ஓங்கல் -** *யானையினது;* **உரிக்குள் -** *உரித்த தோலுக்குள் இருந்து காட்சியளிக்கும்;* **உருத்திரன் ஒத்தான் -** *சிவ பிரானை ஒத்து விளங்கினான். அயோமுகி தன் மார்போடு அணைத்துக் கைகளால் தழுவித்தூக்கிச் சென்ற இலக்குவன் உடம்பு முழுதும் மூடும் படி யானைத்தோலைப் போர்த்த சிவபிரான் போல் விளங்கினான். மீளி -ஆண்பால் சிறப்புப்பெயர். ஓங்கல் -*

*மலை; ஈண்டு யானை;இருமடியாகு பெயர்.*

***3602. இப்படி ஏகினள்,***
***அன்னவள், இப்பால்,***
***'அப்பு இடை தேடி நடந்த***
***என் ஆவித்***
***துப்புடை மால் வரை***
***தோன்றலன்' என்னா,***
***வெப்புடை மெய்யொடு***
***வீரன் விரைந்தான்.***

**அன்னவள் -** *அத்தன்மையளாகிய அயோமுகி;* **இப்படி ஏகினள் -** *(மேற்குறிப்பிட்ட) இவ்வாறு (இலக்குவனைத் தழுவித் தூக்கி கொண்டு) சென்றாள்;* **இப்பால் -** *(இராமன் இருந்த) இவ்விடத்தில்;* **வெப்புடை மெய்யொடு வீரன் -** *(மனைவியையும் தம்பியையும் பிரிந்த) தாபம் கொண்ட உடலோடு கூடிய வீரனாகிய இராமன்;* **இடை அப்பு தேடி நடந்த -** *காட்டின் இடையில் தண்ணீரைத் தேடிக் கொண்டு நடந்து சென்ற;* **என் ஆவி -** *எனது உயிர் போன்ற;* **துப்புடை மால்வரை -** *வலிமை உடைய பெரிய மலை போன்றவனாகிய இலக்குவன்;* **தோன்றலன் என்னா -** *இன்னும் வரக்காணோமே என்று எண்ணி;* **விரைந்தான் -** *(அவனைத் தேடுவதற்காக) விரைந்து சென்றான்.*

*அப்பு - நீர். துப்பு - வலிமை. வெப்பு - விரக வேதனையும் நீர் வேட்கை வேதனையும் பாச வேதனையும் உண்டாக்கிய வெப்பம். அன்னவள் - குறிப்பு வினையாலணையும் பெயர். மால்வரை - உரிச்சொல் தொடர். வரை - உவமையாகு பெயர்.*

*இலக்குவனைக் காணாத இராமன் துயரம்*

*கலிவிருத்தம்*

***3603. 'வெய்து ஆகிய கானிடை***
***மேவரும் நீர்***
***ஐது ஆதலினோ? அயல்***
***ஒன்று உளதோ?***
***நொய்தாய் வர,***
***வேகமும் நொய்திலனால்;***
***எய்தாது ஒழியான்;***
***இது என்னைகொலாம்?***

**நொய்தாய் வர -** *(இலக்குவன்) விரைவாய் வருவதற்கு;* **வேகமும் நொய்திலனால் -** *விரைவும் குறைவாக உடையவனல்லன்;* **எய்தாது ஒழியான் -** *வராமல் இருக்கவும் மாட்டான்;* **வெய்து ஆகிய கானிடை மேவரும் நீர் ஐது ஆதலினோ? -** *(அப்படி இருந்தும் அவன் வாராமைக்குக் காரணம்) வெப்பம் உடைய காட்டில் பொருந்தி உள்ள தண்ணீர்*

*கிடைக்க அருமையானதா? (அல்லது);* ***அயல் ஒன்று உளதோ -*** வேறு ஏதாவது ஒன்று நேர்ந்து விட்டதோ?; ***இது என்னை கொலாம் -*** இவ்வாறு ஆனதற்கு என்ன காரணமோ?

எண்ணிய கருமம் முடித்து வேகமாக வந்து சேரும் இயல்புள்ள இலக்குவன் காட்டில் நீர் கிடைக்காமையாலோ, வேறு ஏதோ ஏற்பட்டோ இன்னும் வந்து சேரவில்லை போலும் என இராமன் எண்ணினான். வெய்து - வெப்பம். மேவுதல் பொருந்தல், ஐது - அரிது. உண்மை எனினுமாம். ஈண்டு இன்மை குறித்தது. நொய்தாய் - விரைவாய், ஆல், ஆம் - அசைகள், கொல் - ஐயப்பொருள் தருவதோர் இடைச்சொல்.

***3604. ' "நீர் கண்டனை இவ்***
***வழி நேடினை போய்,***
***சார், கொண்டு" என,***
***இத்துணை சார்கிலனால்;***
***வார் கொண்டு அணி***
***கொங்கையை வவ்வினர்பால்***
***போர் கொண்டனனோ? பொருள்***
***உண்டு இது' எனா,***

***இவ்வழி நேடினைபோய் -*** இந்த வழியில் தேடிப்போய்; ***நீர் கண்டனை கொண்டு சார் -*** தண்ணீரைக் கொண்டு வருக; ***என -*** என்று நான் கூற; ***இத்துணை சார்கிலனால் -*** (அதனை ஏற்றுச் சென்ற இலக்குவன்) இவ்வளவு நேரம் கடந்தும் வந்து சேரவில்லை;***வார்கொண்டு அணி கொங்கையை -*** கச்சினைக் கொண்டு (அழகு பெற) அணிந்துள்ள முலைகளை உடைய சீதையை; ***வவ்வினர் பால் -*** கவர்ந்து சென்ற அரக்கர்களுடன்; ***போர்கொண்டனனோ -*** போர் செய்யத் தொடங்கி விட்டானோ; ***பொருள் உண்டு இது எனா -*** இந்த தாமதத்திற்கு ஏதோ அர்த்தம் உண்டு என்று.... நான் நீரைத் தேடிக் கொணர்க என்று சொன்னதை ஏற்றுச் சென்ற இலக்குவன் இன்னும் வரவில்லை. ஒருகால் சீதையைக் கவர்ந்து சென்ற அரக்கர்களைக் கண்டு அவர்களுடன் போரிட நேர்ந்து விட்டதோ என இராமன் எண்ணினான். இப்படி ஏதேனும் காரணமின்றி இலக்குவன் தாமதியான் என்பது இராமன் நினைப்பு. நேடி - தேடி. வார் - கச்சு. பொருள் - பயன். கண்டனை, 'நேடினை - முற்றெச்சங்கள், ஆல் - அசை. இப்பாடல் முதல் 3614 முடிய ஒரு தொடர். 3615 ஆம் பாடலின் 'என்னா உரையா' என்ற எச்சத் தொடர் கொண்டு இப்பாடல் முடியும். 6

***3605'அம் சொல் கிளி அன்ன***
***அணங்கினை முன்***
***வஞ்சித்த இராவணன்***
***வவ்வினனோ?***
***நஞ்சின் கொடியான்***
***நடலைத் தொழிலால்,***
***துஞ்சுற்றனனோ,***
***விதியின் துணிவால்?***

***அம் சொல் கிளி அன்ன அணங்கினை -*** *அழகு மொழி பேசும் கிளி போன்ற அழகிய சீதையை;* **முன் வஞ்சித்த இராவணன் வவ்வினனோ -** *முன்னாளில் வஞ்சனையால் கவர்ந்து சென்ற இராவணன் (இப்போது இவனையும்) கவர்ந்து சென்றனனோ?;* **நஞ்சின் கொடியான் நடலைத் தொழிலால் -** *நஞ்சினைக் காட்டிலும் கொடியவனான இராவணனது வஞ்சனைத் தொழிலால்;* **விதியின் துணிவால் -** *ஊழ் வினையின் வலிமையால்;* ***துஞ்சுற்றனனோ? -*** *இறந்துபட்டானோ?*

*வஞ்சனையால் கவரும் இராவணன் கொடுமை தொடர்கிறதோஎன்பது இராமன் கொண்ட ஐயத் தடுமாற்றம். விதிக்கும் விதியாகும்விற்றொழில் வல்லவனாகிய இலக்குவனையும் விதி வென்றதால் இறந்திருப்பானோ என்ற அளவுக்கும் பெருமான் தடுமாறுகிறான். அணங்கு - பெண்களிற் சிறந்தவள். நடலை - வஞ்சனை. துஞ்சுற்றனன் - தகுதி வழக்கில் மங்கல வழக்கு என்க. தொழிலால், துணிவால் - ஆல் கருவிப் பொருளில் வந்தது.*

***3606. 'வரி விற் கை என் ஆர்***
***உயிர் வந்திலனால்;***
***"தரு சொல் கருதேன்; ஒரு***
***தையலை யான்***
***பிரிவுற்றனென்" என்பது***
***ஓர் பீழை பெருத்து***
***எரிவித்திட, ஆவி***
***இழந்தனனோ?***

***வரிவிற்கை என் ஆர் உயிர் வந்திலனால் -*** *கட்டமைந்த வில்லைக் கையில் ஏந்திய என் அருமையான உயிர் போன்ற தம்பிவரவில்லை;* **தருசொல் கருதேன் -** *(தான் எனக்குச்) சொன்ன சொற்களை எண்ணிக் கருதாமல்;* ***யான் ஒரு தையலை -*** *நான் ஒப்பற்ற பெண்ணாகிய சீதையை;* **பிரிவுற்றனென் -** *பிரியப் பெற்றேன்;* ***என்பது ஓர் பீழை -*** *என்ற ஒப்பற்ற பெருந்துன்பம்;* **பெருத்து எரிவித்திட -** *மிகுந்து தன்னை வாட்டி வருத்தியதால்;* **ஆவி இழந்தனனோ -** *உயிரை விட்டு விட்டானோ. மாயமான் பின் சென்ற போது தான் தடுத்ததைக் கேளாமல் பின்சென்று சீதையைப் பிரிய வேண்டிய நிலைமை வந்ததை எண்ணிக்கலங்கி உயிரை விட்டு விட்டானோ என இராமன் எண்ணினான்.தருசொல் - இலக்குவன் இராமனுக்கு கூறிய சொல், "அடுத்தவும்எண்ணிச் செய்தல், அண்ணலே வன் கூறிய சொல். இதன் விரிவுஇங்குப் பேசப்படுகிறது. (3398). பீழை - துன்பம். உயிர் -உவமையாகுபெயர்.*

***3607. 'உண்டாகிய கார் இருள்***
***ஒடு ஒருவன்***
***கண்தான்; அயல் வேறு***
***ஒரு கண் இலெனால்;***
***புண்தான் உறு***
***நெஞ்சு புழுங்குறுவென்;***
***எண்தான் இலென்;***
***எங்ஙனம் நாடுகெனா?***

***உண்டாகிய கார் இருள் ஒடு -*** *நிறைந்து உண்டாகிய கரிய இருளில்;* ***ஒருவன் கண் தான் -*** *என்னை விட்டுப் பிரிந்த ஒப்பற்றவனாகிய இலக்குவன், (எனக்குக்) கண்ணானவன்;* ***அயல் வேறு ஒரு கண் இலெனால் -*** *அவனைத் தவிர வேறு கண் ஒன்றும் எனக்கு இல்லை;* ***புண் தான் உறு நெஞ்சு புழுங்குறுவென் -****(முன்பு சீதையைப் பிரிந்ததால்) புண்மிகப்பட்ட நெஞ்சத்தில் (மீண்டும்) வருத்தம் அடைகிறேன்;* ***எண் தான் இலென் -*** *(எதுவும்) எண்ண முடியாது மனம் கலங்கி உள்ளேன்;* ***எங்ஙனம் நாடு கெனோ -*** *(அவனை எங்கு) எவ்வாறு தேடுவேனோ?*

*'இலக்குவனன்றிப் பிறிதொரு கண்ணிலாதவன் நான்; முன்பேபுண்பட்ட நெஞ்சில் மீண்டும் புண்பட்டவன். அவனது பிரிவால் மனம்மிகக் கலங்கி உள்ள நான் அவனை எவ்விடத்து எவ்வாறு தேடுவேன்'என இராமன் கூறினான். எனக்குக் கண்ணாக இருந்தவன் பிரிந்ததால்கண்ணிழந்த நான் தேடுவது எங்ஙனம் என்று குறித்த நயம் காண்க.தான், ஆல் - அசைகள். ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.*

***3608. 'தள்ளா வினையேன் தனி***
***ஆர் உயிர் ஆய்-***
***உள்ளாய்! ஒரு***
***நீயும் ஒளித்தனையோ?***
***பிள்ளாய்! பெரியாய்!***
***பிழை செய்தனையால்;***
***கொள்ளாது உலகு உன்னை;***
***இதோ கொடிதே!***

***தள்ளா வினையேன் -*** *நீக்க முடியாத வினையை உடையவனாகிய எனது;* ***தனி ஆர் உயிர் ஆய் உள்ளாய் -*** *ஒப்பில்லாத அருமையான உயிராக உள்ளவனாகிய;* ***ஒரு நீயும் -*** *ஒப்பற்றவனாகிய நீயும்;* ***ஒளித்தனையோ -*** *(என்னை விட்டுப் பிரிந்து) மறைந்து விட்டாயோ?;* ***பிள்ளாய் -*** *என் பிள்ளை போல் இளையவனே;* ***பெரியாய் -*** *அறிவில் பெரியவனே;****பிழைசெய்தனை-*** *(என்னைக் காரிருளில் கானகத்தே விட்டுச் சென்று) தவறு செய்து விட்டாய்;* ***இதோ கொடிதே -*** *இச்செயல் மிகக் கொடுமையானதேயாகும்;* ***உன்னை உலகு கொள்ளாது -*** *உனது செயலை உலகத்தில் உள்ள பெரியவர்கள் ஏற்க மாட்டார்கள்.* ***ஆல் -*** *அசை.*

*வினைப்படுபவனாகிய எனது ஒப்பற்ற தம்பியாகிய நீயும்என்னைப் பிரிந்து விட்டாய். உனது இச்செயலைப் பெரியவர்கள் ஏற்கமாட்டார்கள் என்று இராமன் நொந்து கூறினான். வினையேன் -குறிப்பு வினையாலணையும் பெயர் நீயும் - எம்மை இறந்தது தழீ இயஎச்ச உம்மை; முன்பே பிரிந்து விட்ட சீதையையும் நினைவுபடுத்துவதுஇவ்வும்மை. உலகு - இடவாகுபெயர்.*

***3609. 'பேரா இடர் வந்தன***
***பேர்க்க வலாய்!***
***தீரா இடர் தந்தனை:***
***தெவ்வர் தொழும்***
***வீரா! எனை***
***இங்ஙன் வெறுத்தனையோ?***
***வாராய், புறம்***
***இத்துணை வைகுதியோ?***

***வந்தன பேரா இடர் -*** *வந்தனவாகிய நீக்க முடியாத துன்பங்களை;* ***பேர்க்க வலாய் -*** *நீக்க வல்லவனே!;* ***தீரா இடர் தந்தனை -*** *(என்னை விட்டுப் பிரிந்து எனக்கு) நீக்க முடியாத துன்பத்தைத் தந்து விட்டாய்;* ***தெவ்வர் தொழும் வீரா -*** *பகை வரும்தொழுகின்ற (வலி படைத்து) வீரனே!;* ***எனை இங்ஙன் வெறுத்தனையோ -*** *என்னை இவ்வாறு வெறுத்து விட்டாயோ?;* ***வாராய் -*** *(இங்கு) வராமல்;* ***புறம் -*** *(என்னைத் தனியே விட்டு) வெளியில்;* ***இத்துணை வைகுதியோ -*** *இவ்வளவு காலம் தங்கி இருந்தாயோ?*

*'எனக்கு ஏற்படும் பெருந் துன்பத்தைப் போக்க வல்லவனாகியநீகாட்டில் என்னைத் தனியே விட்டுப் பிரிந்து சென்று எனக்குநீங்காததுன்பத்தை உண்டாக்கிவிட்டாய்; இவ்வளவு நேரம் வராமல்தங்கியிருப்பது உனக்குச் சரியோ' என்றவாறு. தெவ்வர் - பகைவர்.புறம் - வெளியில்.பேரா, தீரா - ஈறுகெட்ட எதிர் மறைப்பெயரெச்சங்கள். வந்தன - முற்றெச்சம்.*

***3610. 'என்னைத் தரும்***
***எந்தையை, என்னையரை,***
***பொன்னைப் பொருகின்ற***
***பொலங் குழையாள்-***
***தன்னை, பிரிவேன்;***
***உளென் ஆவதுதான்,***
***உன்னைப் பிரியாத***
***உயிர்ப்பு அலவோ?***

***என்னைத் தரும் எந்தையை -*** *என்னைப் பெற்றெடுத்த தந்தையாகிய (தசரதனையும்);* ***என்னையரை -*** *என் தாய்மார்களையும்;* ***பொன்னைப் பொருகின்ற பொலங் குழையாள் தன்னை -*** *திருமகளை ஒத்த பொன்னால் ஆகிய காதணி அணிந்த சீதையையும்;*

***பிரிவேன் -*** *பிரிந்து;* ***உளென் ஆவது தான் -*** *(நான்) உயிருடன் இருப்பது;* ***உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ -*** *உன்னை (மட்டும்) பிரியாத மூச்சுக் காற்றினால் அல்லவா?*

*தந்தை தாயர், சீதை ஆகியோரை நான் பிரிந்த துன்பம் நீ உடன் இருந்தமையால் நீங்கியது என்று இலக்குவனிடம் தான் கொண்டிருந்த மிகுதியான அன்பை இராமன் வெளிப்படுத்திக் கூறினான். உயிர் என்று (3606) ஆம் பாடலிலும் கண் என்று (3607) ஆம் பாடலிலும், மீண்டும் தனி ஆர் உயிர் என்று (3608) ஆம் பாடலிலும் குறிப்பிட்ட இராமன் இங்கு 'உயிர் மூச்சு' என்று இலக்குவனைக் குறிப்பிட்டான்; இத்தொடர்ச்சியின் நயம் கண்டுணர்க. பொன் - திருமகள். குழை - காதணி. எந்தை, என்னை - மரூஉ மொழிகள். பொலங்குழை - மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. பிரிவேன் - இறந்த காலம் எதிர்காலமாக வந்த கால வழுவமைதி.*

***3611. 'பொன் தோடு இவர்கின்ற***
***பொலங் குழையாள்-***
***தன்-தேடி வருந்து***
***தவம் புரிவேன்,***
***நின்-தேடி***
***வருந்த நிரப்பினையோ?***
***என்-தேடினை வந்த***
***இளங் களிறே!***

***என்தேடினை வந்த இளங்களிறே -*** *(மாயமானின் பின்னால் சென்ற) என்னைத் தேடினையாகிய வந்த இளைய ஆண் யானையைப் போன்றவனே!;* ***பொன் தோடு இவர்கின்ற பொலங் குழையாள் தன்-*** *பொன்னால் ஆகிய தோடு என்னும் காதணி அணிந்தவளாகிய சீதையை;* ***தேடி வருந்து -*** *தேடி வருந்தித்;* ***தவம் புரிவேன் -*** *(தனித்துத்) தவம் புரிபவனாகிய என்னை;* ***நின் தேடி வருந்த நிரப்பினையோ -*** *உன்னைத் தேடி வருந்தும் படி செய்துவிட்டாயோ? மாயமான் பின் சென்ற என்னைத் தேடி வந்த நீ, சீதையைத் தேடித் தவம் புரிபவனாகிய என்னை, உன்னைத் தேடி வரும்படி செய்து விட்டாயே என்றவாறு. தோடு - மகளிர் காதணி. நிரப்புதல் - செய்தல். தன் - சாரியை. நின்தேடி - இரண்டாம் வேற்றுமைத்தொகை. இளங்களிறு - அடையடுத்த உவமையாகு பெயர். ஓகாரம்வினா.*

***3612. 'இன்றே இறவாது***
***ஒழியேன்; எமரோ,***
***பொன்றாது ஒழியார்,***
***புகல்வார் உளரால்;***
***ஒன்றாகிய உன்***
***கிளையோரை எலாம்***
***கொன்றாய்; கொடியாய்!***
***இதுவும் குணமோ?***

**இன்றே இறவாது ஒழியேன் -** *இன்றைக்கே நான் இறக்காமல் இருக்க மாட்டேன்;* **புகல்வார் உளரால் -** *(அதை அயோத்தியில் உள்ளவர்களுக்குச்) சொல்லுபவர்களும் இருக்கிறார்கள்; (ஆதலால்);* **எமரோ பொன்றாது ஒழியார் -** *(அதைக் கேட்ட) எம் உறவினர்கள்இறக்காமல் இருக்க மாட்டார்கள்;* **ஒன்றாகிய உன் கிளையோரைஎலாம் கொன்றாய் -** *(இவ்வாறு செய்ததால்) ஒற்றுமை உடைய உன் உறவினர்கள் எல்லோரையும் நீ கொன்றவனானாய்;* **கொடியாய் -** *(இத்தகைய) கொடுமை உடையவனே;* **இதுவும் குணமோ -** *இதுவும்உனக்குத் தகுதியோ?*

*'நீ வராவிட்டால் நான் இறப்பேன். அது தெரிந்தால் நம் உறவினர் எல்லோரும் இறப்பர். இவ்வாறு அனைவரும் இறக்கத் தக்க செயல் செய்த கொடியவனே இது உனக்குத் தகுதியோ' என்று இராமன் கூறினான். எமர் - எம் உறவினர். பொன்றாது - அழியாது. ஆல் - அசை கொன்றாய் - காலவழுவமைதி. எலாம் - இடைக்குறை எமரோ - ஓகாரம் தெரிநிலை. குணமோ - ஓகாரம் எதிர்மறை.*

***3613. 'மாந்தா முதல்***
***மன்னவர்தம் வழியில்,***
***வேந்து ஆகை துறந்தபின்,***
***மெய் உறவோர்***
***தாம்தாம் ஒழிய,***
***தமியேனுடனே***
***போந்தாய்; எனை***
***விட்டனை போயினையோ?'***

**மாந்தா முதல் மன்னவர் தம் வழியில் -** *மாந்தாதா முதலிய (நம் முன்னோர்களான) அரசர்கள் தம் கால்வழியில்;* **வேந்து ஆகை துறந்தபின் -** *அரசனாதலை (நான்) துறந்த பிறகு;* **மெய் உறவோர் தாம் தாம் ஒழிய -** *(என்) உண்மையான உறவினர்கள் யாவரும் உடன்வராமல் நீங்க;* **தமியேனுடனே போந்தாய் -** *தனித்தவனாகிய என்னுடன் வந்தாய்;* **எனை விட்டனை போயினையோ -***(இப்போது நீயும்) என்னை விட்டுப் போய் விட்டாயோ?*

*மெய் உறவோர் - உள்ளன்புடைய உறவினர். மாந்தா - மாந்தாதா. மாம்தாதா - மாந்தாதா என ஆயிற்று.*

***3614. என்னா உரையா, எழும்;***
***வீழும்; இருந்து***
***உன்னா, உணர்வு ஓய்வுறும்;***
***ஒன்று அலவால்;***
***'மின்னாது இடியாது;***
***இருள்வாய் விளைவு ஈது***
***என் ஆம்? எனும்,***
***என் தனி நாயகனே.***

***'என்தனிநாயகனே -*** *என் ஒப்பில்லாத தலைவன் ஆகிய இராமன்;* ***என்னா உரையா -*** *என்று (பலவாறு) கூறிக்கொண்டு;* ***எழும், வீழும் -*** *எழுந்திருப்பான், (உடனே) கீழே விழுவான்;* ***இருந்துஉன்னா -*** *அமர்ந்து எண்ணிப் பார்த்து;* ***உணர்வு ஓய்வுறும் -*** *அறிவுஒடுங்கப் பெறுவான்;* ***'மின்னாது இடியாது -*** *மின்னாமலும் இடியாமலும்;* ***இருள்வாய் -*** *(இந்த) இருட்டுக் காலத்தில்;* ***விளைவு ஈது என் ஆம்' எனும் -*** *விளைந்த செயலாகிய இது என்ன' என்பான்;* ***ஒன்று அலவால் -*** *(இவ்வாறு எண்ணி இராமன் பட்ட துன்பங்கள்) ஒன்றல்ல பலவாம்.*

*இராமன் பலவற்றை எண்ணி வருந்தி எழுந்தும் உணர்வு ஒடுங்கப் பெற்றான். மழை வருவதற்கு அறிகுறியாக முன்னால் மின்னலும் இடியும் தோன்றுவது போலத் தம்பியைப் பிரிவதற்கு முன்பு எந்த அறிகுறியும் தோன்றவில்லையே என்று பலவாறு எண்ணித் துன்பப்பட்டான். உன்னுதல் - நினைத்தல். உரையா, உன்னா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சங்கள். ஆல் - அசை. இராமனின் துன்பத்தை விளக்கும் கவிக்கூற்று.*

***3615. நாடும், பல சூழல்கள்***
***தோறும் நடந்து;***
***ஓடும், பெயர் சொல்லி***
***உளைந்து; உயிர் போய்***
***வாடும்வகை***
***சோரும்; மயங்குறுமால் -***
***ஆடும் களி மா மத***
***யானை அனான்.***

***ஆடும் களிமாமத யானை அனான் -*** *பகைவரை அழிக்கும் செருக்குடைய மிக்க மதத்தை உடையதுமாகிய யானையை ஒத்தவனாகிய இராமன்;* ***பல சூழல்கள் தோறும் நடந்து நாடும் -*** *பல இடங்களிலும் சென்று தம்பியைத் தேடுவான்;* ***பெயர் சொல்லி உளைந்து ஓடும் -*** *இலக்குவன் பெயரைச் சொல்லி வருந்தி விரைந்து ஓடுவான்;* ***உயிர்போய் வாடும் வகை சோரும் -*** *உயிர் போய் வாடும் வகையாகத் தளர்வான்;* ***மயங்குறுமால் -*** *மயக்கமடைவான்.*

*இராமன் தம்பியைத் தேடி அலைந்தமை கூறுகிறார் ஆல் -அசை. ஆடு - அடு என்பது முதல் நிலை நீண்ட தொழிற் பெயர். மாமதம் - உரிச்சொல் தொடர். மத யானை இரண்டாம் வேற்றுமைஉருபும் பயனும் உடன் தொக்க தொகை. அனான் - குறிப்புவினையாலணையும் பெயர்.*

***3616. கமையாளொடும் என் உயிர்***
***காவலில் நின்று***
***இமையாதவன், இத்***
***துணை தாழ்வுறுமோ?***
***சுமையால் உலகூடு***

*உழல்தொல் வினையேற்கு,*
*அமையாதுகொல் வாழ்வு?*
*அறியேன்' எனுமால்.*

***கமையாளொடும் -*** *பொறுமை உடையவளாகிய சீதையுடன்;* ***என் உயிர் -*** *எனது உயிரையும்;* ***காவலில் நின்று -*** *காக்கும் தொழிலில் (ஊன்றி) நின்று;* ***இமையாதவன் -*** *கண்ணிமைக்காமல் இருந்த இலக்குவன்;* ***இத்துணை தாழ்வுறுமோ -*** *(என்னை விட்டுப் பிரிந்து) இத்துணை காலம் தாழ்த்துவானா?;* ***சுமையால் உலகூடு உழல் தொல் வினையேற்கு -*** *சுமையாக உலகத்தில் இருந்து வருந்துகிற பழைய வினையை உடைய எனக்கு;* ***வாழ்வு அமையாது கொல் -*** *(உயிருடன் கூடி வாழும்) வாழ்க்கை அமையாது போலும்;* ***அறியேன்' எனுமால் -*** *அறியேன் என்று (இராமன்) கூறினான்.*

*'என்னையும் சீதையையும் கண் இமைக்காது காத்த இலக்குவன் இவ்வளவு நேரம் வராமல் இருப்பானா? இருக்க மாட்டான். உலகத்தில் பழியினை நுகர்ந்து வருந்தும் நான் உயிரோடு வாழ முடியாது போலும்' என இராமன் எண்ணினான். சுமையாள் - பொறுமை உடையவள் ஈண்டுச் சீதையைக் குறித்தது. சுந்தர காண்டத்தில்*

***"கமையினாள் திரு முகத்து அயல் கதுப்பு உறக்கவ்வி (5078)*** *என வருவதைக் காண்க. காவலில் நின்ற இமையாதவன் - இதனைக் கங்கை காண் படலத்தில் குகன் பரதனிடம் கூறிய*

***"அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச***
***(2344)***

*என்ற பாடலால் அறிக. இலக்குவனுக்கு 'உறங்கா வில்லி' என்ற பெயர் உண்டு என்பதை நினைவு கொள்க.*

*இறக்க எண்ணிய இராமன் அரக்கியின் அலறல் கேட்டல்*

*3617. 'அறப் பால் உளதேல், அவன்*
*முன்னவன் ஆய்ப்*
*பிறப்பான் உறில், வந்து*
*பிறக்க' எனா,*
*மறப்பால் வடி வாள் கொடு,*
*மன் உயிரைத்*
*துறப்பான் உறுகின்ற*
*தொடர்ச்சியின் வாய்,*

***அறப்பால் உளதேல் -*** *நல்வினைப் பகுதி உண்டானால்;* ***அவன் முன்னவன் ஆய்ப்பிறப்பான் உறில் -*** *(அந்த இலக்குவன் எனக்குத்) தமையன் ஆக வந்து பிறக்கக் கூடுமானால்;* ***வந்து பிறக்க எனா -*** *வந்து பிறக்கட்டும் என்று கூறிக் கொண்டு;* ***மறப்பால்***

***வடிவாள் கொடு -*** *வீரம் பொருந்திய கூர்மையான வாளைக் கொண்டு;* ***மன் உயிரை -*** *தன் நிலை பெற்ற உயிரை;* ***துறப்பான் உறுகின்ற -*** *நீக்க முயல்கின்ற;* ***தொடர்ச்சியின் வாய் -*** *நேரத்தின் கண்ணே.... (அடுத்த பாடலில் முடியும்).*

*நல்லூழ் அமையுமானால் அடுத்த பிறவியில் அவன் எனக்குத் தமையனாகப் பிறக்கிற பேறு வாய்க்கட்டும் என்று சொல்லி, இராமன் வாளால் தன்னுயிரை மாய்த்துக் கொள்ளப் போகும் நிலையினை இப்பாடல் சுட்டிற்று. அறப்பால் - அறத்தின் பயனாகிய நல்லூழ். அவன் எனக்குப் பாகவதனாயிருந்து செய்த கைங்கர்யங்களை நான் அவனுக்குச் செய்ய நல் வினைப் பயனால் அவன் எனக்கு அடுத்தபிறவியில் தமையன் ஆகப் பிறக்கட்டும் என்றவாறு.*

***3618. பேர்ந்தான், நெடு***
***மாயையினில் பிரியா;***
***ஈர்ந்தான், அவள் நாசி***
***பிடித்து, இளையோன்;***
***சோர்ந்தாள் இடு பூசல்***
***செவித் துளையில்***
***சேர்ந்து ஆர்தலுமே,***
***திருமால் தெருளா,***

***இளையோன் -*** *இளையவனாகிய இலக்குவன்;* ***நெடுமாயையினில் பேர்ந்தான் -*** *(அயோமுகியின்) மிக்க மோகனை என்ற மாயையில் இருந்து நீங்கினான்;* ***பிரியா -*** *அவ்வாறு நீங்கி;* ***அவள் நாசி பிடித்து ஈர்ந்தான் -*** *அவளது மூக்கைப் பிடித்து அறுத்தான்;* ***சோர்ந்தாள் -*** *(அவ்வாறு உறுப்பு அறுப்பு உண்டதனால்) தளர்ந்தவள் ஆகிய (அந்த அரக்கி);* ***இடுபூசல் -*** *எழுப்பிய பேரொலி;* ***செவித் துளையில் சேர்ந்து ஆர்தலுமே -*** *காதுகளில் பட்டு ஒலித்த உடனே;* ***திருமால் தெருளா -*** *இராமன் (கலக்கம் நீங்கி) மனம் தேறி (எண்பதாம் பாடலில் முடியும்).*

*மோகனை மாயையில் இருந்து நீங்கிய இலக்குவன்,அயோமுகியின் மூக்கைப் பிடித்து அறுத்தான். தன் உறுப்புஅறுப்புண்டதனால் தளர்ந்து அவள் எழுப்பிய பேரொலி இராமனின்காதுகளில் பட்டது. பேர்தல் -நீங்குதல். ஈர்தல் - அறுத்தல், சோர்தல்- தளர்தல், தெருளா - இலக்குவன் தன்னைச் சந்தித்துத் துயர்விளைவித்தவரை வென்று விட்டான் என்று தெளிந்தது.*

***3619. 'பரல் தரு கானகத்து***
***அரக்கர், பல் கழல்***
***முரற்று அரு வெஞ் சமம்***
***முயல்கின்றார், எதிர்***
***உரற்றிய ஓசை அன்று;***
***ஒருத்தி ஊறுபட்டு***

***அரற்றிய குரல்; அவள்***
***அரக்கியாம்' எனா,***

***பரல் தரு கானகத்து -*** *பருக்கைக் கற்கள் நிறைந்த (இந்தக்) காட்டில்;* ***பல்கழல் முரற்று அரக்கர் -*** *பல வீரக் கழல்கள் ஒலிக்கின்ற அரக்கர்கள்;* ***அரு வெஞ்சமம் -*** *கொடிய போரை;* ***முயல்கின்றார் -*** *செய்கின்றவர்களாகி;* ***எதிர் உரற்றிய -*** *மாறபட்டு எதிராக உரக்க ஒலித்த;* ***ஓசை அன்று -*** *பேரொலி அல்ல இது;* ***ஒருத்தி ஊறுபட்டு அரற்றிய குரல் -*** *ஒரு பெண் உடல் குறைபட்டுஅரற்றிய குரலாகும் (இது);* ***அவள் அரக்கியாம் எனா -*** *அவள் அரக்கியாகவே இருக்க வேண்டும் என்று (எண்ணி).....*

*இந்த இரவில் எழுந்த அவலப் பேரொலி அரக்கர்கள் எழுப்பியபோரொலி அன்று, ஒரு பெண் உடல் குறைபட்டு அரற்றிய ஒலியே ஆகும் என்று இராமன் எண்ணினான். இந்த இரவு நேரத்தில் கானகத்திற்கு அரக்கியர் தவிரப் பிறர் வாராராகலின் "அவள் அரக்கியாம்" என இராமன் துணிந்தனன் என்க. முரற்றுதல் - ஒலித்தல். உரற்றுதல் - உரக்க ஒலித்தல். முயல்கின்றார், - முற்றெச்சம்.*

*அழல் அம்புஒளியில் இராமன் தம்பியை அடைதல்*

***3620. அங்கியின் நெடும் படை***
***வாங்கி, ஆங்கு அது***
***செங்கையில் கரியவன்***
***திரிக்கும் எல்லையில்,***
***பொங்கு இருள் அப் புறத்து***
***உலகம் புக்கது;***
***கங்குலும், பகல் எனப்***
***பொலிந்து காட்டிற்றே.***

***கரியவன் -*** *கரு நிறத்தை உடையவனாகிய இராமன்; (மேல் குறிப்பிட்ட படி எண்ணி);* ***ஆங்கு -*** *அப்பொழுது;* ***அங்கியின் நெடும் படை வாங்கி -*** *நெருப்பினது நீண்ட அம்பினை எடுத்து;* ***அது -*** *அந்த அம்பினைச்;* ***செங்கையில் -*** *தனது சிவந்த கையினால்;* ***திரிக்கும் எல்லையில் -*** *செலுத்தத் தொடங்கிய போது;* ***பொங்கு இருள் -*** *(உலகை மூடி இருந்த) செறிந்த இருட்டானது;* ***அப்புறத்து உலகம் புக்கது -*** *இப்புறத்தை விட்டு அப் புறத்து உலகத்தை அடைந்தது;* ***கங்குலும் பகல் எனப் பொலிந்து காட்டிற்றே -*** *(அங்கிருந்த) இரவும் பகல் போல அழகாக விளக்கம் உற்றுத் தோன்றியது.*

*இராமன் அழல் அம்பினைத் தொடுத்துவிட (அக்கினி அம்பு) முயலுகையில் இருள் அப்புறம் ஓடியது. இரவும் பகல் போல் விளக்கமுற்றுத் தோன்றியது. அங்கி - தீ. திரித்தல் - செலுத்துதல். இப்பாடலில் இராமன் தீக் கடவுட் படை தொடுக்க முயலும் செய்தி கூறப்படுகிறது. அவ்வாறு அவன் அப்படை தொடுக்க முயல்வதற்குச் சில காரணங்கள் கூறப்படுகின்றன. 1) இருளைப் போக்கி வெளிச்சத்தை உண்டாக்கித் தம்பியைத் தேடிச் செல்ல அவ்வாறு எண்ணினான் என்றும். 2) இரவில் அரக்கருக்கு வலிமை மிகுதி அந்த இரவில் நடுக்காட்டில் தனியாய் அகப்பட்ட தம்பிக்கு யாது தீங்கு ஏற்படுமோ? என்று ஐயம் கொண்டு அவ்வம்பினைச் செலுத்த எடுத்தான் என்றும்*

கூறலாம்.

***3621.* நெடு வரை பொடிபட,**
**நிவந்த மா மரம்**
**ஒடிவுற, நிலமகள் உலைய,**
**ஊங்கு எலாம்,**
**'சட சட' எனும் ஒலி**
**தழைப்பத் தாக்கவும்,**
**முடுகினன் இராமன், வெங்**
**காலின் மும்மையான்.**

**இராமன் -** இராமன்; **நெடுவரை பொடிபட -** பெரிய மலைகள் தூளாகவும்; **நிவந்த மாமரம் ஒடிவுற -** உயர்ந்த பெரிய மரங்கள் ஒடியவும்; **நிலமகள் உலைய -** நிலமகள் வருந்தவும்; **ஊங்கு எலாம் -** பக்கங்களில் எல்லாம்; **'சட சட' எனும் ஒலி தழைப்ப -** சட சட என்ற ஓசை மிகவும்; **வெங்காலின் மும்மையான் -** கடுங்காற்றினும்மூன்று மடங்கு வேகத்தோடு; **தாக்கவும் முடுகினன் -** (அயோமுகியைத்) தாக்குவதற்காக விரைந்தான். இராமன் பெரு மலை பொடிபட, நெடு மரம் ஒடிய, நிலமகள் வருந்த, பக்கங்களில் எல்லாம் சட சட ஒலி எழக் காற்றினும் மூன்றுமடங்கு வேகத்தோடு அயோமுகியைத் தாக்க விரைத்தான். சட சட - இரட்டைக் கிளவி, ஒலி குறித்து வந்தது. வெங்கால் - கடுங்காற்று. முடுகுதல் - விரைதல்.

***3622.* ஒருங்கு உயர்ந்து, உலகின் மேல்,**
**ஊழிப் பேர்ச்சியுள்**
**கருங் கடல் வருவதே அனைய**
**காட்சித் தன்**
**பெருந் துணைத் தம்முனை**
**நோக்கி, பின்னவன்,**
**வருந்தலை வருந்தலை**
**வள்ளியோய்!' எனா,**

**ஊழிப் பேச்சியுள் -** ஊழிக் காலம் பெயரும் காலத்தில்; (மகாப்பிரளய அழிவுக் காலத்தில்); **உலகின் மேல் -** உலகத்தின் மீது; **கருங்கடல் -** கருமையான கடலானது; **ஒருங்கு உயர்ந்து -** ஒன்றாகமேலே எழும்பி; **வருவதே அனைய காட்சி -** வருவதைப் போன்ற காட்சித் தோற்றத்தை உடைய; **தன் பெருந்துணைத் தம்முனை -** தன் பெருந்துணைவனான அண்ணனை; **நோக்கி -** பார்த்து; **பின்னவன் -** பின் பிறந்தவனாகிய இலக்குவன்; **வள்ளியோய் -** வண்மைக் குணம் உடையவனே; **வருந்தலை வருந்தலை எனா -** வருந்தாதே வருந்தாதே என்று சொல்லி.. (அடுத்த பாடலில் முடியும்).

காற்றின் மும்மடங்கு வேகத்தோடு உலக ஊழக் காலத்தில் கருங்கடல் கிளர்ந்து வருவது போல் வந்த இராமனைக் கண்ட இலக்குவன் 'வள்ளியோய் வருந்தலை வருந்தலை' என்றான் என்க.உலக அழிவுக் காலத்தில் கடல் பொங்கி உலகை அழிக்கும் என்பது நூல்களில் காணும் செய்தி. காட்சி - தோற்றம். தம் முன் - தமக்கு முன்

*பிறந்தவன்; கருங்கடல், பெருந்துணை - பண்புத்தொகைகள். முன் - காலவாகுபெயர். வருந்தலை வருந்தலை - அடுக்குத் தொடர்; வருந்தலை - முன்னிலை ஒருமை எதிர் மறை வினை முற்று.*

***3623. 'வந்தனென் அடியனேன்; வருந்தல்,***
***வாழி! நின்***
***அந்தம் இல் உள்ளம்' என்று,***
***அறியக் கூறுவான்,***
***சந்த மென் தளிர் புரை***
***சரணம் சார்ந்தனன்;***
***சிந்தின நயனம்***
***வந்தனைய செய்கையான்.***

***அடியனேன் வந்தனென் -*** *அடியேன் வந்து விட்டேன்;* ***நின் அந்தம் இல் உள்ளம் வருந்தல் -*** *உனது அஞ்ஞான இருளாகிய மயக்கம் அற்றஉள்ளம் வருந்தாதே;* ***என்று அறியக் கூறுவான் -*** *என்று தெளிவாகக் கூறிக் கொண்டு (வந்து);* ***சந்த மென் தளிர் புரை சரணம் -*** *அழகிய மென்மையான தளிரை ஒத்த (இராமனது) திருப்பாதங்களில்;* ***சார்ந்தனன் -*** *விழுந்து வணங்கினான்;* ***சிந்தின நயனம் வந்தனைய செய்கையான் -*** *(அது கண்ட இராமன்) இழந்த கண்கள் மீண்டும் வந்தது போன்று (மகிழ்ச்சிச்) செய்கை உடையவனானான்.*

*இலக்குவன் தன்னைத் தேடி வந்த இராமனை நெருங்கி அவனுடைய தாமரைத் திருப்பாதங்களில் விழுந்து வணங்கினான். அவனைத் தன் கண் போல் எண்ணியிருந்த இராமன் (3607 ஆம் பாடல் காண்க) இழந்த கண்ணைப் பெற்றவன் போல் மகிழ்ந்தான். இராமனின் கணையாழியைப் பெற்ற சீதையின் மகிழ்ச்சியைக் கூறவந்த கவிஞர் சுந்தர காண்டத்தில்*

***இழந்த மணி புற்று அரவு எதிர்ந்தது எனல் ஆனாள், பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்; குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள் உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப் பொறையும் ஒத்தாள் (5292)***

*என்ற பாடலை இதனோடு ஒப்பு நோக்கிக் காண்க. அந்தம் - அழிவு; ஈண்டு அஞ்ஞான இருளாகிய மயக்கத்தால் ஏற்படும் அழிவைச் சுட்டி வந்தது. சந்தம் - அழகு. "திருநாவுக்கரசெனும்பேர் சந்தமுற வரைந்ததனை எம்மருங்கும் தாம் கண்டார்" எனத் திருத்தொண்டர் புராணத்தில் (பெ. பு. 1793) உள்ள அப்பூதியடிகள் நாயனார் புராணத்தில் வருவதைக் காண்க. புரை - ஒப்பு கரணம் - பாதம். சிந்தின - இழந்த. வாழி - அசை.*

***3624. ஊற்று உறு கண்ணின் நீர்***
***ஒழுக நின்றவன்,***
***ஈற்று இளங் கன்றினைப்***
***பிரிவுற்று, ஏங்கி நின்று,***

***ஆற்றலாது அரற்றுவது,***
    ***அரிதின் எய்திட,***
***பால் துறும் பனி முலை***
    ***ஆவின் பான்மையான்.***

***ஊற்று உறு கண்ணின் நீர் ஒழுக நின்றவன் -*** *(இலக்குவனைப்பிரிந்ததால்) ஊற்றுப் போல மிகுதியாக கண்களில்இருந்து கண்ணீர் வெளிப்பட்டு பெருக நின்றவனாகிய இராமன்;* ***ஈற்றுஇளங் கன்றினைப் பிரிவுற்று -*** *ஈன்ற (தன்) இளமையான கன்றினைப்பிரிந்து;* ***ஏங்கி நின்று -*** *மிக வருந்தி நின்று;* ***ஆற்றலாது அரற்றுவது-*** *(அதை) ஆற்றிக் கொள்ள முடியாது ஒலி செய்யும் (நிலையில்);* ***அரிதின் எய்திட -*** *அந்தக் கன்று தானே வந்து சேர;* ***பால் துறும்பனி முலை -*** *(அக் கன்றைக் கண்டமகிழ்ச்சியாலும் பாசத்தாலும்)பால் வெளிப்படும் சோர்கின்ற மடியை உடைய;* ***ஆவின்பான்மையான் -*** *பசுவினது தன்மை உடையவன் ஆயினான். கண்ணீர் ஊற்றுப் போல் பெருக நின்றவனாகிய இராமன் ஈன்றணிமை பொருந்திய தன் கன்றைக் காணாத புனிற்றா அவலித்து அழுங்கும் போது, கன்று தானே வர அக் கன்றினைக் கண்டு முலை வழியே பால் சோர நிற்கும் பசுப் போன்ற தன்மை உடையவன் ஆயினன் என்க. உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் கசிவுறும் அன்புக்குக் கன்றுடைய பசுவை உவமை கூறுவது மரபு. துறும் - வெளிப்படும்; பனிமுலை - பால் சோர்ந்தமையால் குளிர்த்திருக்கும் பால்மடி.*

*இராமன் இலக்குவனைத் தழுவி, நிகழ்ந்தது கேட்டல்*

***3625. தழுவினன் பல் முறை; தாரைக்***
    ***கண்ணின் நீர்***
***கழுவினன், ஆண்டு***
    ***அவன் கனக மேனியை;***
***'வழுவினையாம் என மனக்***
    ***கொடு ஏங்கினேன்;***
***எழு என, மலை என,***
    ***இயைந்த தோளினாய்!***

***ஆண்டு -*** *(இராமன் இலக்குவனை) அப்பொழுது;* ***அவன் கனக மேனியை -*** *அந்த இலக்குவனது பொன்னிற உடம்பை;* ***பல்முறை தழுவினன் -*** *பலமுறை தழுவினான்;* ***தாரைக் கண்ணின் நீர் கழுவினன் -*** *தாரையாக வடிகிற (தன்) கண்ணீரால் கழுவினான்;* ***'எழு என மலை என இயைந்த தோளினாய் -*** *கணைய மரம் போன்றும் மலை போன்றும் பொருந்திய தோள்களை உடையவனே;* ***வழு வினையாம் என மனக் கொடு ஏங்கினேன் -*** *(நீ இவ்வளவு நேரம் வந்து சேராததால்) தவறிப் போய் விட்டாயோ? என்று மனத்தில் கருதி வருந்தினேன். (என இராமன் கூறினான்).*

*தாரை - ஒழுங்கு, கனகம் - பொன், எழு - கணைய மரம். கனக மேனி - உவமைத்தொகை, கொடு - இடைக்குறை.*

*3626.* ***'என்னை அங்கு எய்தியது?***
***இயம்புவாய்' என,***
***அன்னவன் அஃது எலாம்***
***அறியக் கூறலும்,***
***இன்னலும், உவகையும்,***
***இரண்டும், எய்தினான் -***
***தன் அலாது ஒரு பொருள்***
***தனக்கு மேல் இலான்.***

***'அங்கு எய்தியது என்னை -*** *அங்கே நடந்தது என்ன?;* ***இயம்புவாய் என -*** *(நீ) சொல்லுவாய் என்று (இராமன் கேட்க);* ***அன்னவன் -*** *அந்த இலக்குவன்;* ***அஃது எலாம் அறியக் கூறலும்-*** *அவை எல்லாவற்றையும்(தெளிவாகத்) தெரிந்து கொள்ளுமாறு கூறிய உடன்;* ***தன் அலாது ஒரு பொருள் தனக்கு மேல் இலான் -*** *தன்னைத் தவிர வேறு ஒரு பொருளும் தனக்கு மேல் என்று கூற இல்லாதவனாகிய (இராமன்);* ***இன்னலும் உவகையும் இரண்டும் எய்தினான் -*** *துன்பம், மகிழ்ச்சிஆகிய இரண்டையும் ஒருங்கே அடைந்தான்.*

*நடந்தவற்றையெல்லாம் இலக்குவன் கூறக் கேட்ட இராமன் துன்பமும் மகிழ்ச்சியும் ஒருங்கே அடைந்தான். தம்பிக்கு நேரிட்ட இடர்ப்பாடு துன்பத்துக்கும் அவன் வெற்றியொடு மீண்டமை இன்பத்துக்கும் காரணமாம். தன் அலாது ஒரு பொருள் தனக்கு மேல் இலான் இன்னலும் மகிழ்ச்சியும் அடைந்ததாகக் கூறுவது எற்றுக்குஎனின், பரம்பொருள் மானுட அவதார பாவனைக்கு ஏற்ப இவ்வாறு கூறப்பட்டது. அஃது எலாம் - ஒருமை பன்மை மயக்கம். இலான் - வினையாலணையும் பெயர்.*

*3627.* ***'ஆய்வுறு பெருங் கடல்***
***அகத்துள் ஏயவன்***
***பாய் திரை வருதொறும்,***
***பரிதற்பாலனோ?***
***தீவினைப் பிறவி வெஞ்***
***சிறையில் பட்ட யாம்,***
***நோய், உறு துயர் என***
***நுடங்கல் நோன்மையோ?***

***ஆய்வுறு பெருங் கடல் அகத்துள் ஏயவன் -*** *(அளவில்லாதது என்று) ஆய்ந்து கூறுகிற பெரிய கடலின் நடுவில் கப்பலைச் செலுத்துபவன்;* ***பாய்திரை வருதொறும் பரிதற் பாலனோ -*** *பாய்கிற அலைகள் வரும் போதெல்லாம் வருந்துவதற்கு உரியவனோ? (அவ்வாறு வருந்துவதற்கு உரியவன் அல்லன் என்றபடி);* ***தீவினைப் பிறவி வெஞ் சிறையில் பட்ட -*** *தீவினையாகிய பிறவிஎன்கிற கொடிய சிறையில் அகப்பட்ட;* ***யாம் -*** *நாம்;* ***நோய் உறுதுயர் என -*** *வருத்தம் பொருந்திய துன்பம் என்று;* ***நுடங்கல் -*** *(மனம்)*

*தளர்தல்;* **நோன்மையோ -** *பெருமையோ? (என்று இராமன் இலக்குவனிடம் கூறினான்).*

*இன்னலும் உவகையும் அடைந்த இராமன், மனம் தேறி இவ்வாறு இலக்குவனுக்கு ஆறுதல் கூறினான் எனக் கொள்க. பிறவியாகிய பெருஞ்சிறைப்பட்ட நாம் வருந்தித் துன்புறுதலால் எந்தப் பயனும் இல்லை. எனவே, அரக்கி கையில் அகப்பட்ட துன்பத்துக்குவருந்த வேண்டா என இராமன் கூறினான் என்க. வாழ்வியல் நெறிவிளக்கமும் தத்துவ நயமும் செறிந்த பாடல் இது : ஏயவன் - அகப்பட்டவன் எனவும் பொருள் கூறலாம். பரிதல் - வருந்துதல், நோய் - வருத்தம். நுடங்கல் - தளர்தல். பாய் திரை - வினைத்தொகை. பிறவி வெஞ்சிறை உருவகம்.*

***3628. 'மூவகை அமரரும்,***
***மும்மை உலகமும்***
***மேவ அரும் பகை எனக்கு***
***ஆக மேல்வரின்,***
***ஏவரே கடப்பவர்?***
***எம்பி! நீ உளை***
***ஆவதே வலி; இனி,***
***அரணும் வேண்டுமோ?***

**மூவகை அமரரும் -** *(படைத்தல், காத்தல், அழித்தல்) என்ற முத்தொழிலைச் செய்கின்ற தேவர்களான (பிரமன், விஷ்ணு, சிவன்)ஆகியவர்களும்;* **மும்மை உலகமும் -** *(மேல், கீழ், நடு என்று) மூன்று வகையான உலகத்தில் வாழ்பவர்களும்;* **மேவ அரும் பகை எனக்கு ஆக மேல்வரின் -** *நெருங்கிக் கடத்தற்கரிய பகைவர்களாகி என்னை எதிர்த்து வந்தாலும்;* **ஏவரே கடப்பவர்? -** *(என்னை) வஞ்சியாமல் எதிர் நின்று வெல்ல வல்லவர் யாவர்?;* **எம்பி -** *என் தம்பியே;* **நீயுளை ஆவதே வலி -** *நீ என்பக்கலில் இருப்பதே (எனக்கு) வலிமை;* **இனி -** *இனிமேல்;* **அரணும் வேண்டுமோ -** *(நீ யன்றி) (எனக்கு) வேறு ஒரு காவலும் வேண்டுமோ?*

*மூவரும் மூவகை உலகத்தவரும் எதிர்த்து வரினும் நீ எனக்கு வலிமையாகவும், அரணாகவும் இருக்கிறபடியால் என்னை எவராலும் வெல்ல முடியாது என்றவாறு. "தம்பி உடையான் படைக்கு அஞ்சான்" என்ற பழமொழியையும் ஈண்டு நினைவில் கொள்க. இந்திரசித்தின் தலையை இராமன் திருவடிகளில் வைத்து இலக்குவன் வணங்கிய போது, 'தம்பி உடையான் பகை அஞ்சான் என்னும் மாற்றம் தந்தனையால் (9183) என்று இராமபிரான் கூறுவது இங்கு நினையத்தக்கது. மூவகை அமரர் - முத்தொழில் இயற்றும் பிரமன், திருமால், சிவன் ஆகியோர். மூவுலகு - விண்ணுலகு, மண்ணுலகு, பாதாள உலகு என்பவையாகும். மேவுதல் - நெருங்குதல். ஏவர் - யாவர். கடத்தல் - வஞ்சியாது எதிர் நின்று பொருது வெல்லல். எம்பி- மரூஉமொழி. அரனும் - உம்மை உயர்வு சிறப்பு உம்மை.*

***3629. 'பிரிபவர் யாவரும்***
***பிரிக; பேர் இடர்***

***வருவன யாவையும்***
    ***வருக; வார் கழல்***
***செரு வலி வீர!***
    ***நின்-தீரும் அல்லது,***
***பருவரல், என்வயின்***
    ***பயிலற்பாலதோ?***

***வார் கழல் -*** *நீண்ட வீரக் கழல் அணிந்த;* ***செரு வலி வீர -****போர் வலி படைத்த வீரனே;* ***பிரிபவர் யாவரும் பிரிக -****(என்னைத்தனியே விட்டுப்) பிரிகின்றவர்கள் எல்லோரும் பிரிந்து செல்க;* ***பேர்இடர் வருவன யாவையும் வருக -*** *பெருந்துன்பங்களாகவருகின்றவை எல்லாம் வருக;****நின் தீரும் அல்லது -*** *அவை எல்லாம் உன்னால் நீங்குமேஅல்லாது;* ***என் வயின் -*** *என்னிடம்; (இனிமேல்);* ***பருவரல் -*** *துன்பம்;* ***பயிலற் பாலதோ -*** *தங்கி வருத்தும் தன்மையதோ? அன்று.*

*யார் என்னை விட்டுப் பிரிந்தாலும் எத்துன்பம் நேர்ந்தாலும்அவை உன்னால் தீர்ந்துவிடும். நீ என்னுடன் இருத்தலால் எவ்வகைத்துன்பமும் எனக்கு நேராது என்றபடி.*

***திண்பொருள் எய்த லாகும்; தெவ்வரைச் செகுக்க லாகும்; நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையும் நண்ணலாகும்; ஒண்பொரு ளாவது, ஐயா, உடன் பிறப்பு ஆக்கலாகா- எம்பியை ஈங்குப் பெற்றேன் என் எனக்கு அரியதுஎன்றான்.***

*(சீவக சிந்தாமணி. 1760) என்ற பாடலையும் ஒப்பிடலாம்.பருவரல் - துன்பம். பயிலல் - தொடர்ந்து தங்கி இருத்தல். பேர் இடர்- பண்புத் தொகை. வருவன - வினையாலணையும் பெயர்.*

*அயோமுகியைக் கொல்லாமல் விட்டதுபற்றிக் கேட்டல்*

***3630. 'வன் தொழில் வீர!***
    ***"போர் வலி அரக்கியை***
***வென்று, போர் மீண்டனென்"***
    ***என, விளம்பினாய்;***
***புன் தொழில் அனையவள்,***
    ***புகன்ற சீற்றத்தால்***
***கொன்றிலைபோலுமால்?***
    ***கூறுவாய்' என்றான்.***

***'வன் தொழில் வீர -*** *வலிய போர்த் தொழில் வல்ல வீரனே!;* ***போர் வலி அரக்கியை -*** *போர்த் தொழிலில் வல்லவளாகிய அரக்கியை;* ***போர் வென்று மீண்டனென் -*** *போரில் வெற்றி பெற்றுத் திரும்பினேன்;* ***என விளம்பினாய் -*** *என்று மட்டும் சொன்னாய்;* ***புகன்ற சீற்றத்தால் -*** *பெரியோர்கள் சொன்ன (நெறிப்படியான) சினத்தால்;* ***புன் தொழில் அனையவள் -*** *இழி தொழிலை உடையஅவளை;* ***கொன்றிலை போலும்***

**கூறுவாய் -** கொல்லாமல் விடுத்தாய் போலும்'; **என்றான் -** என்று இராமபிரான் சொன்னான். ( **ஆல் -**அசை).

சிற்றினத்தாரைச் சேரும் சினம் நெறிமுறை அறியாது; சீரொழுகு, சான்றோர் சினம் நெறிமுறை பிறழாது. 3632 ஆம் பாடலில் இதனைமனு நெறி என இராமன் சுட்டுதல் காண்க. பெண் என மனத்திடை பெருந்தகை நினைவதால், சான்றோர் சினமடங்கல் பற்றிப் புகன்றவை இலக்குவன் செயலில் நெறிமுறை பேணப்பட்டது. பெண் கொலை என்பது சின உச்சத்திலும் ஏலாச் செயல் என்பது சான்றோர் புகன்றது. தாடகை வதையின் போது முதலில் பெண் என இராமபிரான் நினைத்ததும், கோசிகன் விளக்கத்தை ஏற்றுப் பின் வதைத்ததும் வேறு பின்னணியில் கணிக்கத் தக்கது. 'பெண் நாட்டம் ஒட்டேன், இனிப் பேருலகத்துள்' (1723) என்று அயோத்தியில் பொங்கிய சினம். அப்போது தென் சொல் கடந்தானும்வடசொற் கலைக்கு எல்லை தேர்ந்தானும் (1741) ஆகிய இராமபிரானால் தணிந்தது. இப்போது ஆரணியத்தில் இராமபிரான்தணிக்கத் தேவை இல்லாமலே இலக்குவனின் சினம் நெறி பேணியது. முன்னைச் சினம் இராமபிரானுக்கு ஏற்பட்டதாக இலக்குவன் கருதிய குறையால் விளைந்தது என்பதையும், இங்கு எழுந்த சினம் பகவத் கைங்கரியத்துக்குத் தடை எழுந்ததால் என்பதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். உறங்காவில்லியின் சின வீக்கமும் நீக்கமும் ஆழ நினைதற்கு உரியன. சூர்ப்பணகையும் அயோமுகியும் இலக்குவனால் உறுப்பிழந்த இணைக் கதைப் பாத்திரங்களாவர். பெண் காமமும், ஆணின் வரன் முறை மீறிய கழி காமமும் பெருந்துன்பமும் அழிவும் தரும் என்பதை இராமாயணம் கொண்டு உணர்க. வன் தொழில் - பண்புத் தொகை, வீர - அண்மை விளி, மீண்டனென் - தன்மை ஒருமை வினைமுற்று. புகன்ற - செய்த என்னும் வாய்பாட்டு இறந்தகாலப் பெயரெச்சம். ஆல் - அசை. போலும் - ஒப்பில் போலி.

**3631. 'துளைபடு மூக்கொடு செவி**
**துமித்து உக,**
**வளை எயிறு இதழொடு**
**அரிந்து, மாற்றிய**
**அளவையில், பூசலிட்டு**
**அரற்றினாள்' என,**
**இளையவன் விளம்பிநின்று**
**இரு கை கூப்பினான்.**

**'துளைபடு மூக்கொடு -** (அந்த அரக்கியினது) துவாரம் பொருந்திய மூக்குடன்; **செவி -** காதுகளையும்; **வளை எயிறு -** வளைந்த பற்களையும்; **இதழோடு -** இதழ்களையும்; **துமித்து உக -** துண்டுபட்டு விழும்படி; **அரிந்து -** அறுத்து; **மாற்றிய அளவையில் -** நீக்கிய போது; **பூசலிட்டு அரற்றினாள்' என -** (அவள்) பேரொலி செய்து கதறினாள் என்று; **விளம்பி நின்று -** கூறி நின்று; **இளையவன் -** இளையவனாகிய இலக்குவன்; **இருகை கூப்பினான் -** (தன்) இரண்டு கைகளையும் கூப்பி நின்று (இராமனை) வணங்கினான்.

அரக்கியின் மூக்கு முதலியவற்றை அரிந்ததனால் அவள் அவலப் பேரொலி இட்டாள் என இலக்குவன் கூறி இராமனை வணங்கினான். அவலப் பேரொலி கேட்டு இரக்கம் கொண்ட இலக்குவன் உயிர் செகுக்காது விடுத்தனன் போலும். இப்பாடலில்

*இலக்குவன் அயோமுகியின் மூக்கு, செவி, எயிறு, இதழ் ஆகியவற்றை அறுத்து நீக்கிய செய்தி கூறப்படுவதால், இப்படலத்தில் உள்ள 86ஆம் பாடலில் வரும்.*

***என்னை இங்கு எய்தியது? இயம்புவாய் என அன்னவன் அஃது எலாம் அறியக் கூறலும். (3626) என்ற வரிகளுக்கு மூக்கு முதலியவற்றை நீக்கியதை ஒழித்துப் பிற செய்திகளைப் பொருளாகக் கொள்க. அங்குத் தொகுத்துப் பொதுவாகக் கூறியவர் இங்கு விரித்து விளக்குகிறார் என்க. துமித்து - துண்டுபட்டு. அளவை - பொழுது, பூசல் - பேரொலி. 9***

***3632'தொல் இருள், தனைக்***
***கொலத் தொடர்கின்றாளையும்,***
***கொல்லலை; நாசியைக்***
***கொய்து நீக்கினாய்;***
***வல்லை நீ; மனு முதல்***
***மரபினோய்!' என,***
***புல்லினன் - உவகையின்***
***பொருமி விம்முவான்.***

***உவகையின் பொருமி விம்முவான் -*** *மகிழ்ச்சியால் உடல் பூரித்து விம்மலுற்றவனாகிய (இராமன்);* ***தொல் இருள் -*** *முதிர்ந்த இருட்டில்;* ***தனை -*** *உன்னை;* ***கொலத் தொடர்கின்றாளையும் -*** *கொல்லத் தொடர்ந்து வந்த அரக்கியையும்;* ***நீ -*** *நீ;* ***கொல்லலை -*** *கொல்லாமல்;* ***நாசியைக் கொய்து நீக்கினாய் -*** *மூக்கையும் (பிற உறுப்புகளையும்) அறுத்து நீக்கி விட்டாய்;* ***மனு முதல் மரபினோய் -*** *மனுவை முதலாகக் கொண்ட மரபு வழி வந்தவனே!;* ***வல்லை நீ -*** *(இச் செயல் மரபுக் கேற்ற) வன்மை உடையவன் நீ;* ***என -*** *என்று இராமன் கூறி;* ***புல்லினன் -*** *இலக்குவனைத் தழுவினான்.*

*பெண் கொலை செய்யாது அவளைத் தம்பி தண்டித்ததை அறிந்த இராமன், "மனு முதல் மரபினோய் வல்லை" என்று கூறிப் புல்லினன் என்க. தொல் இருள் - முதிர்ந்த இருள். தனை - உன்னை. மனு முதல் மரபு - மனு, கதிரவனின் மகன். இவனை முதலாகக் கொண்டே சூரிய குலத்தரசர்கள் மனு முதல் நெறியினோர் எனப்பட்டனர். இவனே குல முதல்வன் என்க. இவன் வைவ சுவதமனு எனப்படுவான். கொல் - இடைக்குறை. தொடர்கின்றாளை - வினையாலணையும் பெயர்; காலவழுவமைதியும் ஆகும்; இங்கு இறந்த காலம் நிகழ்காலமாகச் சுட்டப்பட்டுள்ளமை அறிக.*

*இராமன் வருண மந்திரத்தால் வான நீர் பருகி, ஒரு மலையில் தங்குதல்*

***3633. பேர அருந் துயர் அறப்***
***பேர்ந்துளோர் என,***
***வீரனும் தம்பியும்***
***விடிவு நோக்குவார்,***
***வாருணம் நினைந்தனர்; வான***

*நீர் உண்டு,*
*தாரணி தாங்கிய*
*கிரியில் தங்கினார்.*

*வீரனும் - வீரனாகிய இராமனும்;* ***தம்பியும் -*** *தம்பியாகிய இலக்குவனும்;* ***பேர அருந்துயர் -*** *நீக்க முடியாத பெருந்துன்பத்தை;****அறப் பேர்ந்துளோர் என -*** *முழுதும் நீக்கியவர் என்னுமாறு (அரக்கியால் ஏற்பட்டதுன்பத்தை நீக்கி);* ***வாருணம் நினைந்தனர் -*** *வருண மந்திரத்தை எண்ணினர்;* ***வான நீர் உண்டு -*** *(அதனால்) வானத்தில் இருந்து கிடைத்த நீரைப் பருகி;* ***விடிவு நோக்குவார் -*** *பொழுது விடியும் காலத்தை எதிர் நோக்கியவர்களாய்;* ***தாரணி தாங்கிய -*** *நிலத்தைத்தாங்கிக் கொண்டுள்ள;* ***கிரியில் தங்கினார் -*** *ஒரு பெரிய மலையில்தங்கி இருந்தார்கள்.*

*இராமனும் தம்பியும் நீக்க முடியாத துன்பத்திலிருந்து விடுபட்டவர்களாகி, வருண மந்திரம் சொல்லி அதனால் கிடைத்த வான நீரைப் பருகிப் பொழுது விடியும் காலத்தை எதிர்நோக்கி ஒருபெரிய மலையில் தங்கி இருந்தனர். பேரஅரும் - நீக்குதற்கு அரிய. அற - முழுமையாக. வாருணம் - வருண மந்திரம். அருந்துயர் - பண்புத்தொகை, பேர்ந்துளோர் - வினையாலணையும் பெயர். நோக்குவார் - முற்றெச்சம். வானநீர் - ஐந்தாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.*

*3634.* ***கல் அகல் வெள்ளிடை,***
***கானின் நுண் மணல்,***
***பல்லவம், மலர், கொடு***
***படுத்த பாயலின்,***
***எல்லை இல் துயரினோடு***
***இருந்து சாய்ந்தனன்,***
***மெல் அடி, இளையவன்***
***வருட, வீரனே.***

***வீரன் -*** *வீரனாகிய இராமன்;* ***கல் அகல் வெள்ளிடை -*** *கற்கள் பரந்துள்ள வெளியிடத்தில்;* ***கானின் நுண்மணல் -*** *காட்டில்உள்ள நொய்மையான மணல்;* ***பல்லவம் -*** *தளிர்கள்;* ***மலர்கொடு -*** *(மற்றும்) மலர்கள் (ஆகியவை கொண்டு இலக்குவன்);* ***படுத்த பாயலின் -*** *அமைத்த படுக்கையில்;* ***எல்லை இல் துயரினோடு இருந்து -*** *அளவற்ற பெருந்துன்பத்தோடு இருந்து;* ***மெல் அடி -*** *(தனது) மென்மையான பாதங்களை;* ***இளையவன் வருட -*** *இளையவன் ஆகிய இலக்குவன் மெதுவாகத் தடவ;* ***சாய்ந்தனன் -****பள்ளி கொண்டான்.* ***ஏ -*** *ஈற்றசை.*

*இராமன் வெட்ட வெளியில் மணல், தளிர்கள், மலர்கள் ஆகியவற்றைக் கொண்டு இலக்குவன் அமைத்த படுக்கையில், அவன் மெத்தெனத் திருவடி வருடப் பள்ளி கொண்டான். வெள்ளிடை - மேல் மறைவில்லாத இடம், வெட்ட வெளி என்ப. பல்லவம் - தளிர். படுத்த - அமைத்த. பரமனுக்குப் பாகவதன் செய்யும் கைங்கர்யத்தைஈற்றடியால் கூறினார். இதில் உடன்பிறப்புப் பாசம் நிறைந்து உள்ளமையையும் எண்ணுக. கொடு - இடைக்குறை. மெல் அடி - பண்புத்தொகை.சீதையின் பிரிவால் இராமன் துயருறல்*

***3635. மயில் இயல் பிரிந்தபின்,***
***மான நோயினால்,***
***அயில்விலன் ஒரு பொருள்;***
***அவலம் எய்தலால்,***
***துயில்விலன் என்பது***
***சொல்லற்பாலதோ?***
***உயிர், நெடிது***
***உயிர்ப்பிடை, ஊசலாடுவான்.***

***மயில் இயல் பிரிந்த பின் -*** *(இராமன்) மயில் போன்ற சாயலை உடைய சீதையைப் பிரிந்த பிறகு;* ***மான நோயினால் -*** *அவமானமாகிய நோயினால்;* ***ஒரு பொருள் அயில் விலன் -*** *எந்தஒரு பொருளையும் உண்ணவில்லை;* ***அவலம் எய்தலால் -*** *துன்பம்மிகுதி ஆனதால்;* ***துயில் விலன் -*** *உறக்கம் கொண்டானில்லை;* ***என்பது சொல்லற் பாலதோ -*** *என்கிற செய்தியைச் சொல்ல வேண்டுமோ?;* ***நெடிது உயிர்ப்பிடை உயிர் ஊசல் ஆடுவான் -*** *பெருமூச்சின் இடையே உயிர் ஊசலாடப் பெறுவானாயினன்.*

*சீதையைப் பிரிந்த அவமானமாகிய, நோய் காரணமாக இராமன் உண்ணவுமில்லை, உறங்கவுமில்லை. பெருமூச்சினால் உயிர் போவது வருவதாய் இருந்தது என்றவாறு. இயல் - சாயல், அயில்தல் - உண்ணல், மயில் இயல் - உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. மானநோய் - உருவகம்.*

***3636. 'மானவள் மெய்***
***இறை மறக்கலாமையின்***
***ஆனதோ? அன்றுஎனின்,***
***அரக்கர் மாயமோ? -***
***கானகம் முழுவதும்,***
***கண்ணின் நோக்குங்கால்***
***சானகி உரு எனத்***
***தோன்றும் தன்மையே!***

***கண்ணின் நோக்குங்கால் -*** *கண்களால் பார்க்கும் போது;* ***கானகம் முழுவதும் -*** *காடு முழுவதும்;* ***சானகி உரு எனத் தோன்றும் தன்மையே -*** *சீதையின் உருவமே என்னும்படி;* ***மானவள் மெய் இறை மறக்கலாமையின் ஆனதோ -*** *பெருமையுடைய சீதையது உருவத்தை (நான்) ஒரு போதும் மறக்காமல் (தொடர்ந்து நினைப்பதால்) உண்டாயிற்றோ?;* ***அன்று எனின் -*** *(அது) அல்ல என்றால்;* ***அரக்கர் மாயமோ -*** *(இவ்வாறு தெரிவது) அரக்கர்கள் செய்த மாயச் செயலோ (என எண்ணி இராமன் வருந்தினான் என்க).* *காடு முழுதும் சீதையின் உருவமாகவே இராமனுக்குத் தோன்றியது. ஒரு பொருளை ஆழ நினைத்தால் அப்பொருளே எங்கும் உருவெளியாகத் தோன்றும் என்பதாம். "நோக்கிய எல்லாம் அவையே போறல்" என்பது தொல்காப்பியர் (1043) சுட்டும் மெய்ப்பாடு. மானவள் - பெருமை உடையவள், இறை - சிறிது, சானகி - சனகனது மகள். உழுகின்ற கொழுமுனையில் உதிக்கின்ற கதிரொளி போல் தோன்றிய தொழுந்தகைய நன்னலத்துப் பெண்ணரசி என்க.*

*மானவள் - மான் + அவள் எனப் பிரித்து மான் போன்ற அவள் என்றும் பொருள் கொள்ளலாம் என்பர். வை. மு. கோ. தன்மையே -ஏகாரம் ஈற்றசை.*

***3637. கருங்குழல், சேயரிக்***
***கண்ணி, கற்பினோர்க்கு***
***அருங் கலம், மருங்கு வந்து***
***இருப்ப, ஆசையால்***
***ஒருங்குறத் தழுவுவென்;***
***ஒன்றும் காண்கிலேன்;***
***மருங்குல்போல் ஆனதோ***
***வடிவும், மெல்லவே?***

***கருங்குழல் -** கருமையான கூந்தலினையும்; **சேயரிக் கண்ணி -**செவ்வரி படர்ந்த கண்களையும் உடைய; **கற்பினோர்க்கு அருங்கலம்-** கற்பினை உடைய மகளிருக்கு அருமையான அணிகலன் போன்ற (சீதை) ; **மருங்கு வந்து இருப்ப -** (என்) பக்கத்தில் வந்து இருக்க; **ஆசையால் ஒருங்குறத் தழுவுவென் -** (அவள் மீது கொண்ட) காதலால் உடல் சேரத் தழுவுவேன்; **ஒன்றும் காண்கிலேன் -** (ஆனால் அவ்வாறு தழுவியும்) ஒன்றையும் காணவில்லை; **வடிவும் -** அச்சீதை உடைய உருவமும்; **மருங்குல் போல் மெல்லவே ஆனதோ -** (அவளது பொய்யோ எனும்) இடையினைப் போல்; **மெதுவாக -** இல்லையாய்விட்டதா?*

*சீதையின் உருவெளித் தோற்றத்தை உண்மையென நம்பித் தழுவிய இராமன், அவளது இடை போல் உருவமும் இல்லாமல் போய் விட்டதோ என்கிறான். குழல் - கூந்தல். அரி - வரி. மருங்கு - பக்கம். மருங்குல் - இடை. மூவழிப் பெருகி மூவழிச் சிறுகிய உறுப்புகள் கொண்டவள் என்பதைக் கூறியவாறு. கருங்குழல் - பண்புத் தொகை. கற்பினோர் - வினையாலணையும் பெயர். அருங்கலம் - பண்புத் தொகை புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.*

***3638. 'புண்டரிகப் புது***
***மலரில் தேன் பொதி***
***தொண்டைஅம் சேயொளித்***
***துவர்த்த வாய் அமுது***
***உண்டனென்; ஈண்டு அவள்***
***உழையள் அல்லளால்;***
***கண் துயில் இன்றியும்***
***கனவு உண்டாகுமோ?***

***புதுப் புண்டரிக மலரில் -** சீதையினது முகம் ஆகிய புதிய தாமரை மலரில்; **தேன் பொதி -** தேன் நிறைந்த; **தொண்டை அம் சேயொளி -** கொவ்வைப் பழம் போன்றதும் அழகிய சிவந்த நிறத்தையும் உடைய; **துவர்த்த வாய் அமுது உண்டனென் -** பவளவாயினது அமுதத்தை உண்டேன்; **ஈண்டு -** (ஆனால்) இங்கு;**அவள் உழையள்***

***இன்றியும் கனவு உண்டாகுமோ* -** *கண்ணுறங்காமல் இருக்கும் போது கூடக் கனவு தோன்றுமோ?*

*சீதையின் தாமரை முகத்தில் உள்ள கொவ்வைச் செவ்வாய் அமுது உண்டது போல் எனக்குத் தோன்றியது. ஆனால் உண்மையில் அவள் என் பக்கத்தில் இல்லை. இது தூக்கமில்லாமல் ஏற்பட்ட கனவு என்று சொல்லத் தக்கதோ?' என்று இராமன் வருந்திக் கூறினான். புண்டரிகம் - தாமரை. தொண்டை கொவ்வைப் பழம். துவர்த்த - பவளத்தின் தன்மை வாய்ந்த; உழை - பக்கம். புண்டரிகப் புதுமலர் - உவமையாகுபெயர். சேயொளி - பண்புத் தொகை. துவர்த்த - பெயரெச்சம். ஆல் - ஈற்றசை.*

***3639. 'மண்ணினும், வானினும்,***
***'மற்றை மூன்றினும்,***
***எண்ணினும், பெரியது ஓர்***
***இடர் வந்து எய்தினால்,***
***தண் நறுங் கருங் குழல்***
***சனகன் மா மகள்***
***கண்ணினும், நெடியதோ,***
***கொடிய கங்குலே?***

***மண்ணினும்* -** *நிலத்தினும்;* ***வானினும் -*** *வானத்தினும்;* ***மற்றை மூன்றினும் -*** *ஐம்பூதங்களில் மூன்றான நீர், தீ, வளி என்பவற்றினும்;* ***எண்ணினும் -*** *எண்ணத்தைக் காட்டிலும்;* ***பெரியது -*** *பெரியதாகிய;* ***ஓர் இடர் வந்து எய்தினால் -*** *ஒரு துன்பம் வந்து அடைந்ததால்;* ***தண் நறுங்கருங்குழல் -*** *குளிர்ந்த நறுமணம் மிக்க கரிய கூந்தலை உடைய;* ***சனகன் மாமகள் -*** *சனகனது சிறப்புக்குரிய மகளான (சீதையினது);* ***கொடிய கங்குல் -*** *(இந்தக்) கொடிய இரவு;* ***கண்ணினும் நெடியதோ -*** *கண்களைக் காட்டிலும் நீண்டதோ?*

*ஐம்பூதங்களிலும் ஆற்றல்மிக்க பேரிடர் வந்து அடைந்தால், சனகன் மாமகள் கண்ணினும் நீண்டதாகியது இக் கொடிய இரவு என்கிறான் இராமன். காதொடும் குழை பொரு கயற்கண்நங்கை 1, 10, 45 என்று சீதையின் கண்களைக் கூறியுள்ளதை நினைக்க. பிரிவினாலும் சீதையின் உருவெளித் தோற்றம் கண்டமையாலும் இவ்வாறு கூறினான் என்க. மற்றை மூன்று, நீர், தீ, வளி என்பன. மாமகள் - உரிச்சொல் தொடர். 'எய்தினால்' என்பது பொருள்தொடர்பு நோக்கி 'எய்தியதனால்' எனப் பொருள் கொள்ளப்பட்டது.ஐம்பூதங்களினும் பெரிதாகிய (பிரிவுத்) துன்பம் வந்தால், கொடிய கங்குல் சீதை கண்ணினும் நெடியதாக இராமனுக்குத் தோன்றுகிறது.*

***3640. 'அப்புடை அலங்கு மீன்***
***அலர்ந்ததாம் என -***
***உப்புடை இந்து என்று***
***உதித்த ஊழித் தீ,***

வெப்புடை விரி கதிர்
    வெதுப்ப - மெய் எலாம்
கொப்புளம் பொடித்ததோ,
    கொதிக்கும் வானமே?'

*'**உப்புடை இந்து என்று -** அழகு உடைய நிலவு என்று; **உதித்த ஊழித் தீ -** (வானத்தில் உதித்த) ஊழித் தீயினுடைய; **வெப்புடை விரிகதிர் வெதுப்ப -** வெபபம் உடைய விரிந்த கதிர்கள்சுட; **மெய் எலாம் -** (தன்) உடம்பில் எல்லாம்; **அப்புடை அலங்கு மீன் -** நீரோட்டம் உடைய விளங்குகிற மீன்கள்; **அலர்ந்ததாம் என-** விளங்கினதாம் என்பது; **கொதிக்கும் வானம் -** (இந்து எனும் ஊழித் தீயினால்) கொதிக்கின்ற வானம்; **கொப்புளம் பொடித்ததோ -** கொப்புளங் கொண்டதோ? எனுமாறு விளங்கியது'.*

*இந்து என்கிற ஊழித் தீயினால் வெப்பமடைந்த வானம் கொப்புளம் கொண்டது போல் அதில் மீன்கள் விளங்கின என்றவாறு. அப்பு - நீர், உப்பு - இனிமை, அழகு. இந்து - நிலவு. அலங்குதல் - விளங்குதல்.*

***3641.** இன்னன இன்னன பன்னி,*
    *ஈடு அழி*
*மன்னவர் மன்னவன்*
    *மதி மயங்கினான்;*
*அன்னது கண்டனன்,*
    *அல்கினான் என,*
*துன்னிய செங் கதிர்ச்*
    *செல்வன் தோன்றினான்.*

***இன்னன இன்னன பன்னி -** இவ்வாறாகப் பல சொற்களைப் பல முறை கூறி; **ஈடு அழி மன்னவர் மன்னவன் -** வலிமை ஒடுங்கிய பேரரசனாகிய இராமன்; **மதிமயங்கினான் -** அறிவு கலங்கினான்; **துன்னிய செங்கதிர்ச் செல்வன் -** (அவனது பிரிவுத் துயர் கண்ட) சிவந்த கதிர்களை உடைய கதிரவன்; **அன்னது கண்டனன் -** (அவனது) அத் தன்மையைக் கண்டனனாகி; **அல்கினான் என -** (இவன்) மிக மெலிந்தான் என்று எண்ணி; **தோன்றினான் -** (அவலத் துயர் துடைக்கத் தோன்றியவன் போலத்)தோன்றினான். இராமன் பலவாறு வருந்தித் துன்பம் கொண்டதை நீக்க உதித்தவன் போல் கதிரவன் உதித்தான். ஏதுத் தற்குறிப்பேற்ற அணி. இப்படலத்தில் விப்ரலம்பசிருங்காரச் சுவை மிகுந்துள்ளது. இராமன் இலக்குவனிடம் கொண்ட உளமொன்றிய அன்பையும், சீதையிடம் கொண்ட உயிர் ஒன்றாகிய செயிர் தீர் காதலையும், இப்படலவழி உணர்ந்து மகிழலாம். இருள் நீங்கி ஒளி பரவிய நிலையில் இப்படலஅமைப்பு அமைந்துள்ள நுட்பத்தை எண்ணி உணர்க. பன்னுதல் - பலமுறை கூறல் ஈடு - வலிமை. இதனை,*

***ஈசற்கு ஆயினும் ஈடு அழிவுற்று இறை     வாசிப்பாடு அழியாத மனத்தினான் (5170)***

என்ற காட்சிப் படலப் பாடலிலும் காணலாம். அல்குதல் - சுருங்குதல், மெலிதல்.

***3642. 'நிலம் பொறை இலது' என,***
***நிமிர்ந்த கற்பினாள்,***
***நலம் பொறை கூர்தரும்***
***மயிலை நாடிய,***
***அலம்புறு பறவையும்***
***அழுவவாம் எனப்***
***புலம்புறு விடியலில்,***
***கடிது போயினார்.***

***நிலம் பொறை இலது என -*** *இந்த நிலவுலகம் பொறுமை உள்ளதன்று என்று கூறும்படி;* ***நிமிர்ந்த கற்பினாள் -*** *உயர்ந்த கற்பினை உடையவளாகிய;* ***பொறை நலம் கூர்தரும் -*** *பொறுமைப்பண்பு மிக்குடைய;* ***மயிலை -*** *மயில் போன்ற சாயலை உடைய சீதையை;* ***நாடிய -*** *தேடி;* ***அலம்புறு பறவையும் -*** *அலைதலைக் கொண்ட பறவைகளும்;* ***அழுவவாம் என -*** *அழுகின்றன என்று கூறும்படியாக;* ***புலம்புறு விடியலில் -*** *(அப்பறவைகள்) ஒலிக்கிற விடியல் காலத்தில்;* ***கடிது போயினார் -*** *விரைவாகச் (சீதையைத்) தேடிப் போனார்கள்.*

*விடியலில் பறவைகள் ஒலி எழுப்புவது சீதையைத் தேடி அவளைக் காணாமல் அவை அழுவன போன்ற என்றார். தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. அகழ்வாரைத் தாங்கும் நிலத்தினும் பொறுமை உடையள் அந்நிலத்துத் தோன்றிய சீதை என்றபடி. அலம்புறு பறவை - அலைதலைக் கொண்ட பறவை. மயில் - உவமையாகு பெயர்.*

*இப்படலத்தில் சீதையைத் தேடல், இலக்குவனைத் தேடல் என்ற இருவகைத் தேடல்களும், சீதையைப் பிரிந்த அவலம், இலக்குவனைப் பிரிந்த அவலம் என்ற இருவகை அவலங்களும் இடம் பெற்றுள்ளன. இந்த இரட்டை நிலையை உணர்ந்து தெளிக.*

## கவந்தன் படலம்

*கவந்தன் என்பவனின் தொடர்பு கொண்ட செய்தியைக் கூறும் படலம் இது. 'கபந்தன்' என்ற வடமொழிச் சொல் தமிழ் ஒலி பெற்றுக் 'கவந்தன்' என நின்றது. கபந்தம்; தலையற்ற உடல். தலை எனத் தனி உறுப்பு இன்றி, வயிற்றிலே வாய், கண் முதலானவை உடையவனாய் இருந்த ஒரு கொடிய வடிவுடையவன் கவந்தன். பரப்பியுள்ள நீண்டகரங்களைக் கூட்டி இவற்றிடை அகப்படும் அனைத்தையும் வாய் கொண்ட வயிற்றில் செறித்து வாழ்ந்தவன்; அவன் வடிவு மாறிச் சாபம் தீர்ந்த வரலாறு இப்படலத்துள் சொல்லப்படுகிறது.*

*அயோமுகியை நீங்கி வந்த இராமலக்குவர்கள் கவந்தன் கரவீச்சினிடையே சிக்குவதையும், முதலில் இன்னதெனத் தெளிவுறாமல் கலங்கிய இருவரும் ஒருவாறு முடிவு செய்து கவந்தனின் கரங்களைத் துணிக்கின்றனர். வெட்டுண்ட கவந்தனின் கொடிய வடிவம் நீங்குகிறது. ஒளிர் மேனியனாய் மாறிய கவந்தன் தன் மீது சுமந்த சாபம் நீங்கியதைத் தெரிவித்ததுடன், மேற் சென்று சவரி வாயிலாகச் சுக்கிரீவன் வாழும் இரலைமலை வழியை அறிந்து செல்லவும் சுக்கிரீவன் உதவியை நாடவும் அறிவுரை சொல்லி மறைகிறான்.*

*தெய்வ உருப்பெற்ற கவந்தன் இராமபிரானைப் போற்றிப் பாடுவதாக இப்படலத்துள் வரும் பாடல்கள் பக்தி இலக்கியத்துக்குக்கவிச் சக்கரவர்த்தியின் காணிக்கை என்பது மிகையன்று.*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

*கவந்தன் வனத்தைக் காணுதல்*

***3643. ஐ-ஐந்து அடுத்த யோசனையின்***
***இரட்டி, அடவி புடையுடுத்த***
***வையம் திரிந்தார்; கதிரவனும் வானின்***
***நாப்பண் வந்துற்றான்;***
***எய்யும் சிலைக் கை இருவரும் சென்று,***
***இருந்தே நீட்டி எவ் உயிரும்***
***கையின் வளைத்து வயிற்றின் அடக்கும்***
***கவந்தன் வனத்தைக் கண்ணுற்றார்.***

***ஐ-ஐந்து அடுத்த யோசனையின் இரட்டி -*** *இருபத்தைந்து என்ற எண்ணிக்கை எட்டிய யோசனை தூரத்தின் இரு மடங்கு (அதாவது ஐம்பது;* ***அடவி படை உடுத்த வையம் திரிந்தார் -*** *காடுகளால் பக்கங்களில் சூழப்பட்ட நிலப் பகுதியில் இராம இலக்குவர்கள் அலைந்தார்கள்;* ***கதிரவனும் வானின் நாப்பண் வந்துற்றான் -*** *சூரியன் (வானின்) நடுப் பகுதியை வந்துசேர்ந்தது;* ***எய்யும் சிலைக் கை இருவரும் சென்று -*** *எய்யும் கணை பொருந்திய வில்லை ஏந்திய கைகளை உடைய இராமலக்குவர் இருவரும் (மேலே சென்று);* ***இருந்தே நீட்டி -*** *தான் இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு கைகளை மட்டும் நீட்டி;* ***எவ் உயிரும் கையின் வளைத்து -*** *தன் எல்லைக்குள் சிக்கும் எல்லா*

*உயிரினங்களையும் வளைத்துப் பிடித்து;* ***வயிற்றின் அடக்கும் -****தன் வயிற்றுக்குள்ளே செறித்துச் செரித்துவிடுகின்ற;* ***கவந்தன் வனத்தைக் கண்ணுற்றார் -*** *கவந்தன் வாழும் கானகத்தைக் கண்டார்கள்.*

*ஐம்பது யோசனை தூரத்தைக் கடந்த இராமலக்குவர்கள் ஒரு நாள் நண்பகற் பொழுதில் கவந்தன் வாழும் கானகத்தைக் கண்டார்கள் என்பது செய்யுளின் திரண்ட கருத்து. 'இருவரும்.... திரிந்தார்.... கண்ணுற்றார்' எனக் கூட்டுக. இருவரும் என்ற எழுவாய் இடையே அமைந்து இருபாலும் உள்ள வினைமுற்றுக்களைக் கொண்டு முடிந்தது.*

*கபந்தம் (அல்லது கவந்தம்) என்ற வட சொல்லுக்கு முதலில் வாயகன்ற மிடா (பீப்பாய்) என்பது பொருள். மிடாவுக்கு வாய் உண்டு; உள்ளிடம் உண்டு. இதே கருத்துக்குரிய வடிவம் பெற்றவன் - வாயும்வயிறுமாக, வயிற்றிலே வாயனாக இருப்பவன். இந்திரனின் வச்சிராயுதம் தாக்கியதால் தலை வயிற்றுள் போய் வயிற்றில் வாயனாக உருமாறிய அரக்கனுக்கு கவந்தன் என்பது பெயராயிற்று. இராமலக்குவரின் வாளால் பிளக்கப்படும் வரை இவ்வடிவினனாயிருக்குமாறு சபிக்கப்பட்டவன், இவன்.*

*கவந்தன் செய்தி : தனு என்னும் பெயருடைய கந்தருவன் தூலசிரசு என்ற முனிவரின் வடிவத்தை எள்ளினான். சினமுற்ற முனிவரின் சாபத்தால் கவந்தன் ஆயினான். இந்திரனின் வச்சிராயுதம் தாக்கியதால் தலை வயிற்றுள் ஆழ்ந்தது. இவன் கரங்கள். ஒரு யோசனை நீளம் கொண்டனவாம். தன் கரங்களுக்கு உட்பட்ட எதனையும் கவர்ந்து, வயிற்றுள் திணித்து உணவாகக் கொள்வது இவன் வாழ்வு.*

*ஐ ஐந்து அடுத்த இரட்டி : இருபத்தைந்தின் இருமடங்கு; ஐம்பது. நான்கு குரோசம் கொண்டது ஒரு யோசனை. இரண்டரை மைல் ஒரு குரோசம். எனவே, யோசனை என்பது பத்து மைல் தொலைவு ஆகிறது. காதம் என்பதும் சுமார் பத்து மைல் தொலைவு என்பர். யோசனையைக் கூப்பிடு தூரம் என்றும் கூறுவர்.*

*கவந்தன் கையகப்பட்டவை படும் பாடு*

*கலிவிருத்தம்*

***3644. எறுப்புஇனம் கடையுற,***
***யானையே முதல்***
***உறுப்புடை உயிர் எலாம்***
***உலைந்து சாய்ந்தன;***
***வெறிப்புறு நோக்கின,***
***வெருவுகின்றன;***
***பறிப்பு அரு வலையிடைப்***
***பட்ட பான்மைய;***

***3645. மரபுளி நிறுத்திலன்,***
***புரக்கும் மாண்பிலன்,***
***உரன் இலன் ஒருவன் நாட்டு***
***உயிர்கள் போல்வன;***
***வெருவுவ, சிந்துவ,***
***குவிவ, விம்மலோடு***
***இரிவன, மயங்குவ,***
***இயல்பு நோக்கினர்.***

***3646. மால் வரை உருண்டன***
***வருவ; மா மரம்***
***கால் பறிந்திடுவன;***
***கான யாறுகள்***
***மேல் உள திசையொடு***
***வெளிகள் ஆவன;***
***சூல் முதிர் மேகங்கள்***
***சுருண்டு வீழ்வன;***

*இச் செய்யுள்கள் மூன்றும் ஒரு தொடர்ச்சி*

*(கவந்தனின் கைப்பரப்புக்குள் சிக்கிய);* ***யானையே முதல் எறுப்பு இனம் கடையுற உறுப்பு உடை உயிர் எலாம் -*** *பேருருவம் கொண்ட யானை முதலாகச் சிறு வடிவம் கொண்ட எறும்பு வரையுள்ள உடல் கொண்ட உயிர்கள் யாவும்;* ***உலைந்து சாய்ந்தன -*** *நிலைகுலைந்து சாய்ந்தன;* ***வெறிப்பு உறு நோக்கின -*** *அவை வெறித்த பார்வையுடையனவாய்;* ***வெருவுகின்றன -*** *அஞ்சின;* ***பறிப்பு அருவலையிடைப் பட்ட பான்மைய -*** *(மேலும் அவை) நீக்குதற்கு அரிய வலையிலே அகப்பட்டுக் கொண்ட தன்மையுடையவையாயின.*

***மரபுளி நிறுத்திலன் -*** *அந்தந்த நிலைகளில் அவ்வவற்றை நிறுத்தாதவனும்;* ***புரக்கும் மாண்பு இலன் -*** *ஆளும் மாட்சிமை இல்லாதவனும்;* ***உரன் இலன் ஒருவன் -*** *வலிமை இல்லாதவனும் ஆகிய ஓர் அரசனின்;* ***நாட்டு உயிர்கள் போல்வன -*** *நாட்டிலே வாழ்கின்ற குடி மக்களைப் போன்றவையாயின;* ***வெருவுவ -*** *அவ்வுயிர்கள் யாவும் அஞ்சின;* ***சிந்துவ -*** *சிதறின;* ***குவிவ -*** *(உள்ளமே யன்றி) உடல்களும் குவிந்தன;* ***விம்மலோடு இரிவன -*** *துயரத்தோடு ஓடின;* ***மயங்குவ -*** *திகைத்து நின்றன;* ***இயல்பு நோக்கினர் -*** *இவ்வாறு துன்புற்ற உயிர்களின் தன்மையை இராமலக்குவர் பார்த்தனர்.*

***மால்வரை உருண்டன வருவ -*** *பெரிய மலை(ப் பாறைகள்) உருண்டு வந்தன;* ***மா மரம் கால் பறிந்திடுவன -*** *மரங்கள் வேர் அற்று வீழ்ந்தன;* ***கான யாறுகள் மேல் உள திசையொடு வெளிகள் ஆவன -*** *மேலே உள்ளதிசைகள் அளவு (பொங்கிப் பரவி) நீரற்ற*

*வெட்டவெளி ஆயின;* ***சூல் முதிர் மேகங்கள் சுருண்டு வீழ்வன -*** *கருக் கொண்ட (நீர் உண்ட) மேகங்கள் சுருண்டு கீழே வீழ்ந்தன.*

*கவந்தன் கையகப்பட்டவையெல்லாம் நிலை குலைந்தமையால்,அவன் கைகளுக்கு உட்பட்டவை மட்டுமல்லாமல் எங்கணும் உள்ளயாவையும் நிலைகுலைந்தமையை மூன்று செய்யுட்களும் தொகுத்துரைக்கின்றன. பெரிய உடல் கொண்ட யானை முதல் சிற்றுடல் கொண்ட எறும்பு வரை என்று எல்லை குறித்தது எல்லா உயிர்ப் பொருள்களையும் கருதி; வலையிலகப்பட்ட உயிர்கள் அச்சத்தால் வெறித்த பார்வை கொண்டன என்றது யாரால் என்ன தீங்கு வரப் போகிறது என்று அறிய இயலாமையைச் சுட்டியது. ஆட்சித் திறன் அற்ற அரசனின் நிர்வாகத்தில் எவரும் எவ்வகையான நிலைபேறும் அற்றவர்களாய் ஒவ்வொரு கணமும் அழிவையே எதிர்நோக்கிக் கலங்கி நசிவர். இது உவமையாய்ப் பல்லுயிர்களும் அலமந்த அவலத்தை விளக்கிற்று. கானகத்தில் ஏற்பட்ட குழப்பத்தால் காட்டாறுகள் நிலை கலங்கிப் பொங்கித் திசை எல்லைகளை அடைந்தன; காட்டாறுகள் ஓடிய இடங்கள் வெற்றிடங்களாயின. நிலத்து நிகழ்ச்சி இது; வானில் நிகழ்ந்த நிலைகுலைவால் மேகங்கள்சுருண்டு நிலத்திலே வீழ்ந்தன. உயிரினங்களில் இயங்குவன மண்ணுலகு. விண்ணுலகு யாவும் கவந்தன் கரங்களின் இயக்கத்தால் நிலை குலைந்தன என்கிறார் கவிச்சக்ரவர்த்தி. 2, 3,*

*கவந்தன் கரவலையில் இருவரும்*

***3647. நால் திசைப் பரவையும்,***
***இறுதி நாள் உற,***
***காற்று இசைத்து எழ எழுந்து,***
***உலகம் எங்கணும்***
***ஏற்று இசைத்து உயர்ந்து***
***வந்து இடுங்குகின்றன***
***போல், திசை சுற்றிய***
***கரத்துப் புக்குளார்.***

**இறுதி நாள் உற -** *உலகங்கள் அழியும் ஊழிக்காலம் வந்து சேர்தலால்;* **நால் திசைப் பரவையும் -** *நான்கு திசைகளிலும் உள்ளஎல்லாக் கடல்களும்;* **உலகம் எங்கணும் -** *உலகம் முழுவதிலும்;* **காற்று இசைத்து எழ எழுந்து -** *ஊழிக் காற்று முழங்கிப் பரவி;* **ஏற்று இசைத்து உயர்ந்து வந்து இடுங்குகின்றனபோல் -** *எதிர்த்துஆரவாரத்தோடு உயரமாகி வந்து நெருக்குவனபோல;* **திசை சுற்றிய -** *எல்லாத் திசைகளிலும் சுழன்று வருகின்ற;* **கரத்துப் புக்குளார் -** *(கவந்தனின்) கைகளிடையே இராமலக்குவர் புகுந்தனர். ஊழிக் காற்றினால் பொங்கிய எல்லாக் கடல்களும் பரவிச்சுழல்வது போல வேகமாகக் கவந்தனின் கரங்கள் சுழன்று வளைத்தன;வளைத்த கரங்களிடையே இருவரும் சிக்கினர். இது பாடலின் கருத்து.நால்திசைப் பரவையும் - இதன்கண் உள்ள உம்மை நான்குதிசைகளிலும் உள்ளகடல்கள் யாவற்றையும் உளப்படுத்தலின்முற்றும்மையாகும்.*

*3648* **தேமொழி திறத்தினால்,**
**அரக்கர் சேனை வந்து**
**ஏமுற வளைந்தது என்று,**
**உவகை எய்தினார்;**
**நேமி மால் வரை**
**வர நெருக்குகின்றதே**
**ஆம் எனல் ஆய, கைம்**
**மதிட்குள் ஆயினார்.**

**நேமி மால் வரை வர -** *சக்கரவாளமாகிய பெரிய மலை நெருங்கி வந்து;* **நெருக்குகின்றதே ஆம் எனல் ஆய -** *நெருக்குகின்ற தாம் என்று சொல்லத்தக்க வகையில் அமைந்த;* **கைம் மதிட்குள் ஆயினார் -** *(கவந்தனின்) கைகளாகிய மதிலுக்குள் சிக்கினவர்களாய்;* **தேமொழி திறத்தினால் -** *இனிய மொழி பேசுவோளாகிய சீதை பொருட்டாக;* **அரக்கர் சேனை வந்து -** *(இராவணனால் ஏவப்பட்ட) அரக்கர்களின் படைகள் வந்து;* **ஏமுற வளைந்தது என்று -** *காவல் பொருந்தச் சூழ்ந்தது என்று கருதி;* **உவகை எய்தினார் -** *மகிழ்ச்சி அடைந்தனர்.*

*சீதையைத் தேடி வருகின்ற இராமலக்குவரை எதிர்த்து ஒழிப்பதற்காக அரக்கர்களின் சேனை வந்துவிட்டதாக இராமலக்குவர் கருதினர். எதிரியைத் தாம் சென்று அடையுமுன் அவனே தன் படைகளை அனுப்பியிருப்பதாக நினைத்து வீரர் இருவரும் மகிழ்ந்தனர். 'போர் எனில் புகலும் புனைகழல் மறவர்' (புறநா. 3) ஆதலின், போர் எதிர்வந்தது கண்டு அதனால் வரும் மோதலை நினைந்து மகிழ்ந்தனர். போரை விரும்புதல் (புகலுதல்) வீரர் இயல். தேமொழி - அன்மொழித் தொகை ஏமம் + உற = ஏமுற என நின்றது. கைம் மதில் - உருவகம்.*

*அண்டங்களின் எல்லையில் வட்ட வடிவ மதிலாகச் சக்கரவாளம் என்ற மலை இருப்பதாக புராணங்கள் கூறும். உலகங்களுக்கு ஒளி வழங்கும் ஒளிவட்டத்துக்கும் அதற்கப்பால் உள்ள இருட்பரப்புக்கும்எல்லையாக இருப்பது இச் சக்கரவாளமே என விளக்குகிறது மோனியர் வில்லியம்ஸ் தந்த அகராதி.*

*3649.* **இளவலை நோக்கினன்**
**இராமன், 'ஏழையை**
**உளைவு செய் இராவணன்**
**உறையும் ஊரும், இவ்**
**அளவையது ஆகுதல் அறிதி;**
**ஐய! நம்**
**கிளர் பெருந் துயரமும்**
**கீண்டது ஆம்' என,**

**இராமன் இளவலை நோக்கினன் -** இராமபிரான் தம்பியை நோக்கி; **'ஏழையை உளைவு செய் இராவணன் -** *சீதைக்குத் துன்பம் தருகின்றஇராவணன்;* **உறையும் ஊரும் -** *வாழ்கின்ற ஊர்;* **இவ் அளவையது ஆகுதல் ஐய அறிதி -** இந்த எல்லைக்குள் இருப்பதை

*அறிக;* ***நம் கிளர் பெருந் துயரமும் கீண்டது ஆம்' -*** *கிளர்கின்ற நம் பெருந் துயரமும் அழிந்தது';* ***என -*** *என்று சொல்ல,*

*கவந்தன் கரங்களின் நெருக்கலால் ஏற்படும் விளைவுகள்என்பதை அறியாமல், ஏற்படும் ஆரவாரங்களும் நிலை குலைவுகளும்அரக்கர் சேனையின் வரவால் விளைவன என்று தவறாக நம்பினர்.சேனையின் வரவு என்று கருதியதால், அச் சேனையை ஏவும்இராவணனது இருக்கையும் பக்கத்திலேயே இருக்க வேண்டும் என்பதுஇராமனின் கருத்து. 'இராவணன் சேனை வந்து விட்டதால் போரிட்டுவென்று சீதையை மீட்டுவிடலாம்' என்ற நினைப்பினால், 'நம் பெருந்துயரும் கீண்டது' என்கிறான் இராமன். அறிவு குறைந்தவள், பேதை,வலிமை குறைந்தவள் பெண் என்ற பழங்கருத்தினால் சீதாபிராட்டியையும் 'ஏழை' என்றது மரபு வழிப்பட்ட புலமை.இளையவனை 'ஐய' என்றது அன்பினால் வந்த மரபு வழுவமைதி.கிளர் துயரம் - வினைத்தொகை; பெருந் துயரம் - பண்புத் தொகை.இச் செய்யுள் குளகம்.*

***3650. 'முற்றிய அரக்கர்தம்***
***முழங்கு தானையேல்,***
***எற்றிய முரசு ஒலி,***
***ஏங்கும் சங்கு இசை,***
***பெற்றிலது; ஆதலின், பிறிது***
***ஒன்று ஆம்' எனச்***
***சொற்றனன் இளையவன், தொழுது***
***முன் நின்றான்.***

***முற்றிய அரக்கர்தம் முழங்கு தானையேல் -*** *நம்மைச் சுற்றி வளைத்த அரக்கர்களின் சேனையாக இருக்குமென்றால்;* ***எற்றிய முரசு ஒலி -*** *(குறுந்தடி கொண்டு) தாக்குதலால் எழும் முரசுகளின் ஓசையையும்;* ***ஏங்கும் சங்கு இசை -*** *ஒலிக்கின்ற சங்குகளின் ஓசையையும்;* ***பெற்றிலது -*** *நாம் கேட்கும் ஆரவாரம் பெற்றிருக்கவில்லை;* ***ஆதலின் பிறிது ஒன்று ஆம் -*** *ஆகையால், நாம் கேட்கும் ஆரவாரம் வேறு ஏதோ ஒன்றாகும் (போர்ப் படையின் ஆரவாரம் அன்று);* ***என இளையவன் சொற்றனன் -*** *என்று தம்பிஇலக்குவன் சொல்லி;* ***தொழுது முன் நின்றான் -*** *இராமனை வணங்கி அவன் முன் நின்றான். போர்ப் பறையும் வீரர்கள் ஊதும் சங்கின் ஓசையும் கேட்காததால் படை ஏதும் வரவில்லை என்பதை இளையவன் தெளிந்து கூறினான். எத்துணைப் பெரியராயினும் உணர்ச்சி நிலை குலைந்தால் குழம்புவர் போலும். இது போலவே, கானக வாழ்வின்போது தமையன் தவறாகக் கணித்த நேரங்களில் தம்பி தெளிவு கூறிய வேறு இடங்களும் உண்டு. எடுத்துக் காட்டாக மாரீசமான் பற்றிய நிகழ்ச்சி காண்க. தொழுதமைக்குத் தான் ஏதோ தெளிந்த பெருமிதத்தான் என்று கருதிக் கொள்ளாமை காரணம்; முன் நின்றமைக்கு ஆபத்து வருமேல் 'முன்னம் முடி' என்று தாய் சுமித்திரை ஏவிய நினைவு காரணம்*

*3651'தெள்ளிய அமுது எழத்*
*தேவர் வாங்கிய*
*வெள் எயிற்று அரவம்தான்?*
*வேறு ஓர் நாகம்தான்?*
*தள்ள அரு வாலொடு*
*தலையினால் வளைத்து,*
*உள் உறக் கவர்வதே*
*ஒக்கும்; ஊழியாய்!'*

***'ஊழியாய்' -*** *எல்லாம் அழிகின்ற ஊழிக்காலத்தும் நிலைத்து நிற்பவனே;* **தெள்ளிய அமுது எழ -** *தெளிந்த அமுதம் தோன்றிட;* **தேவர் வாங்கிய -** *தேவர்கள் (மந்தர மலையிலே கயிறாகச் சுற்றி) இழுத்த;* **வெள் எயிற்று அரவம்தான் -** *வெள்ளைப் பற்கள் கொண்ட வாசுகி நாகமோ;* **வேறு ஓர் நாகம்தான் -** *அல்லது வேறு ஒரு பாம்போ;* **தள்ள அரு வாலொடு தலையினால் வளைத்து -** *ஒதுக்கித் தள்ளுதற்கு அரிய வாலோடு தலையையும் பிணைத்து வளைத்து;* **உள் உறக் கவர்வதே ஒக்கும் -** *(தன் வளைவுக்குள் சிக்கியவற்றையெல்லாம்) தன்னுள்ளே பற்றிக் கொள்வதைப் போல காணப்படுகின்றது' (என்று இலக்குவன் கூறினான்).*

*கவந்தனின் கரங்கள் வளைவது ஒரு மாபெரும் பாம்பு வாலை தலையொடு பிணைத்திருப்பதுபோல் காணப்படுகின்றது. தலையினும் வால் பகுதி மெலிந்திருப்பது பாம்பின் வடிவம்; எனவே, இங்கு உவமை வடிவத்தைக் குறித்ததன்று; வளைத்தல் தொழிலே இங்கு பொதுத்தன்மை. ஊழி பெயரினும் தான் பெயராதது பரம்பொருள்; இராமன் பரம்பொருளின் அவதாரமாதலின் 'ஊழியாய்' என விளிக்கப் பெற்றான். அரவம்தான், நாகம்தான் என்ற இடங்களில் தேற்றப் பொருள் தரும் 'தான்' ஐய வினாப் பொருளில் வந்தது.*

*கவந்தன் தோற்றம்*

*3652. என்று இவை விளம்பிய*
*இளவல் வாசகம்*
*நன்று என நினைந்தனன்,*
*நடந்த நாயகன்;*
*ஒன்று இரண்டு யோசனை*
*உள் புக்கு, ஓங்கல்தான்*
*நின்றென இருந்த அக் கவந்தன்*
*நேர் சென்றார்.*

**என்று இவை விளம்பிய -** *என்று இவற்றைச் சொல்லிய;* **இளவல் வாசகம் -** *தம்பி இலக்குவனின் வார்த்தை;* **நன்று என -** *பொருத்தமானதே என்று;* **நடந்த நாயகன் நினைந்தனன் -** *(உயிர்கள்மேல் கொண்ட இரக்கத்தால் அவதரித்துப் புவி மீது) நடந்ததலைவனாகிய இராமன்எண்ணினான்;* **ஒன்று இரண்டு யோசனை உள் புக்கு -** *ஒன்று அல்லது இரண்டு யோசனைத் தொலைவு உள்ளே கடந்து சென்று;* **ஓங்கல்தான்**

***நின்றென* -** *ஒரு மலையே நின்றது போல;* ***இருந்த அக் கவந்தன் நேர் சென்றார்* -** *அமர்ந்திருந்த அந்தக் கவந்தனுக்கு நேராகச் சென்றடைந்தனர் இருவரும்.*

*ஒன்று இரண்டு யோசனை' என்பது உலக வழக்கில் பேசுவது போல் அமைந்தது; திட்டவட்டமாக வரையறுத்துக் கூறாதபோது ஒன்று அல்லது இரண்டு' என்ற பொருள்பட 'ஒன்றிரண்டு' எனப் பேசுவது பொது வழக்கு. மலை நின்றால் அமர்ந்திருக்கும் கவந்தன் போலக் காட்சியளிக்குமாம்; நிற்பதற்குக் கால் இல்லாத கவந்தன் இருந்த கோலத்திலேயே நிமிர்ந்து நிற்கும் ஒங்கல் போன்றவன். அவன் தோற்றத்தைச் சொல்லோவியப்படுத்தியது அருமை.*

***3653. வெயில் சுடர் இரண்டினை***
***மேரு மால் வரை***
***குயிற்றியதாம் எனக்***
***கொதிக்கும் கண்ணினன்;***
***எயிற்று இடைக்கு இடை***
***இரு காதம்; ஈண்டிய***
***வயிற்றிடை வாய் எனும்***
***மகர வேலையான்.***

***வெயில் சுடர் இரண்டினை* -** *வெப்பம் மிக்க இரண்டு சூரியனை;* ***மேரு மால் வரை குயிற்றியதாம் என* -** *மேருவாகிய பெரிய மலையிலே பதித்தது என்று சொல்லும்படி;* ***கொதிக்கும் கண்ணினன்* -** *கொதிக்கின்ற கண்களை உடையவனும்;* ***எயிற்று இடைக்கு இடை இரு காதம் ஈண்டிய* -** *ஒரு பல்லுக்கும் அடுத்த பல்லுக்கும் இடையில் இரண்டு காதம் தொலைவு கொண்டுள்ள;* ***வயிற்றிடை வாய் எனும் மகர வேலையான்* -** *மீன் வாழும் கடல் போன்ற வாயை வயிற்றிலே உடையவனும்.*

*வெயில் : வெப்பத்தோடு கூடிய ஒளி. கவந்தன் மேருவைப் போன்ற உருவம் கொண்டவன்; மேரு மலையிலே இரண்டு சூரியனைப் பதித்தது போன்று காட்சியளிப்பவை அவன் கண்கள். வாய் எனும் வேலை : உருவகம். வேலைக்கு மகரம் அடைமொழி. கண்ணினன், வேலையான் என இச் செய்யுளில் வரும் சொற்கள் தொடர்ந்து மூக்கினான் நாவினான் என்பவற்றையும் இணைத்து 3661 ஆம் பாடலில் உள்ள 'இருந்தவன்' என்ற சொல்லைக் கொண்டு முடியும்.3653 முதல் 3661 வரையுள்ள செய்யுள்கள் ஒரு தொடர்.*

***3654. ஈண்டிய புலவரோடு***
***அவுணர், இந்துவைத்***
***தீண்டிய நெடு வரைத்***
***தெய்வ மத்தினைப்***
***பூண்டு உயர் வடம், இரு***
***புடையும் வாங்கலின்,***
***நீண்டன கிடந்தென***
***நிமிர்ந்த கையினான்.***

***ஈண்டிய புலவரோடு அவுணர்*** - *திரண்ட தேவர்களோடு அசுரர்களும் சேர்ந்து;* ***இந்துவைத் தீண்டிய நெடுவரைத் தெய்வ மத்தினைப் பூண்டு உயர் வடம்*** - *சந்திரனைத் தொடும் அளவுக்கு உயர்ந்த மேருவாகிய மத்தினைச் சுற்றி உயர்ந்த வடத்தினை;* ***இரு புடையும் வாங்கலின்*** - *இரண்டு பக்கத்திலுமிருந்து இழுத்துக் கடைதலால்;* ***நீண்டன கிடந்தென*** - *அவ் வாசுகி நீண்டு கிடந்தது போன்ற;* ***நிமிர்ந்த கையினான்*** - *நீண்ட கைகளை உடையவனும்.*

*இந்து : சந்திரன். மேரு மலை தெய்வீகம் பொருந்தியதாகலின் தெய்வ மத்து எனப்பட்டது.*

***3655. தொகைக் கனல் கருமகன்***
***துருத்தித் தூம்பு என,***
***புகைக் கொடி, கனலொடும்***
***பொடிக்கும் மூக்கினான்;***
***பகைத் தகை நெடுங்***
***கடல் பருகும் பாவகன்***
***சிகைக் கொழுந்து இது***
***எனத் திருகு நாவினன்.***

***கருமகன்*** - *கருமானின்;* ***தொகைக் கனல் துருத்தித் தூம்பு என*** - *தொகுப்பாய் உள்ள நெருப்பில் அமைந்த ஊதுலையின் துளை போல;* ***புகைக் கொடி கனலொடும் பொடிக்கும் மூக்கினான்*** - *புகையை நெருப்போடு வெளிப்படுத்துகின்ற மூக்கினை உடையவன்;* ***பகைத் தகை*** - *பகைமைப் பண்பு கொண்ட;* ***நெடுங்கடல்*** - *பெரிய கடலினது நீரை;* ***பருகும் பாவகன்*** - *குடித்துவிடுகின்ற அக்கினிதேவனின்;* ***சிகைக் கொழுந்து இது என*** - *சுவாலையின் கொழுந்துதான் இது என்னும்படி;* ***திருகு நாவினன்*** - *வளைந்து சுழல்கின்ற நாக்கினை உடையவன். கவந்தனின் மூக்கும் நாக்கும் இங்கே உவமைகளால் விளக்கப்பட்டன. கொல்லனின் உலைக்களத்துத் துருத்தியின் வாயிலாகப் புகையும் நெருப்பும் உமிழப்படும். அந்தக் காட்சி கனல் உமிழ்கின்ற கவந்தனின் மூக்குக்கு உவமையாயிற்று. நீர், நெருப்புக்குப் பகையாதலால் நீர் நிறைந்த கடலினைப் பகைத்தகை நெடுங்கடல்' என்றார். பாவகன், நெருப்பிறைவனாகிய அக்கினி தேவன். இடைவிடாது ஆறுகள் கடலில் கலப்பதால் நீர் வரைகடந்து பெருகிவிடுமோ என்ற எண்ணத்தால் கடல் நீரை வடவைமுகத் தீ பருகி விடுவதாகவும், பெண் குதிரையின் முக வடிவில் இந்த நெருப்பு கடலின் நடுவே இருப்பதாகவும் புராண நூல்கள் பேசுகின்றன. கரித்துண்டுகள் பலவற்றிலிருந்து நெருப்பு எழுவதால் கொல்லனின் ஊதுலைக் களத்து நெருப்பைத் தொகைக் கனல் என்றார். 1*

*3656*புரண்டு பாம்பு இடை வர
வெருவி, புக்கு உறை
அரண்தனை நாடி, ஓர்
அருவி மால் வரை
முரண் தொகு முழை நுழை,
முழு வெண் திங்களை
இரண்டு கூறிட்டென,
இலங்கு எயிற்றினான்.

**பாம்பு புரண்டு இடைவர -** (இராகு என்னும்) பாம்பு புரண்டு தன்னை நோக்கி வருவதால்; **வெருவி -** அஞ்சி; **புக்கு உறை அரண் தனை நாடி -** புகுந்து தங்குவதற்கு ஏற்ற பாதுகாப்பான இடத்தைத் தேடி; **ஓர் அருவி மால்வரை -** அருவி வீழ்கின்ற ஒரு பெரிய மலையிடத்தமைந்த; **முரண் தொகு முழை நுழை -** வலிமை கொண்ட ஒரு குகைக்குள் நுழைகின்ற; **முழுவெண் திங்களை -** முழுவடிவமைந்த சந்திரனை; **இரண்டு கூறு இட்டென -** இரண்டு பகுதிகளாகச் சிதைத்து விட்டது போலக் காணப்படும்; **இலங்கு எயிற்றினான் -** ஒளிர்கின்ற இரண்டு (கோரைப்) பற்களை உடையவன்.

கவந்தனின் கோரைப் பற்களின் தோற்றத்தை வருணிப்பது இந்தப் பாடல். பாதுகாப்பான இடத்தைத் தேடுவதும் குகையினுள் நுழைவதும் இராகுவைக் கண்டு அஞ்சுவதுமாகிய நிகழ்ச்சிகள் ஒருகதை போன்று அமைந்த கவிதைக் கற்பனை. பாதுகாப்பான இடம் என்று துணிந்து புகுந்த இடத்திலே சிதைக்கப்பட்டது என்பது கதைக்கு ஓர் அவல முடிவு காட்டுகின்ற கற்பனை. முழு வெண் திங்களைப் பிளந்தால் கோரைப் பல்லின் தோற்றம் வருமா என்றெல்லாம் நுணுகி நோக்குவதில் பயன் இல்லை. கோரைப் பல்லைப் பார்த்தால் பிளவுண்ட திங்கள் கவிஞரின் நினைப்பில் எழுகிறது. ஏன் பிளவுண்டது என்ற ஒரு வினா கவிஞர்க்கு அவரை அறியாமலேயே அடி மனத்தில் எழுகிறது. அங்கேயே வினாவுக்கு விடையும் கிடைக்கிறது. இராகுவிடமிருந்து தப்பி ஓடியது. அரண் எனக் கருதிய இடத்திலே அவலம் விளைந்தது.

*3657.* ஓத நீர், மண்,
இவை முதல ஓதிய
பூதம் ஓர் ஐந்தினில்
பொருந்திற்று அன்றியே,
வேத நூல் வரன்முறை
விதிக்கும் ஐம் பெரும்
பாதகம் திரண்டு, உயிர்
படைத்த பண்பினான்.

**ஓத நீர் மண் இவை முதல ஓதிய -** குளிர்ந்த நீர், மண் முதலாக ஓதப்பட்ட; **பூதம் ஓர் ஐந்தினில் -** ஐந்து பூதங்களினால்; **பொருந்திற்று அன்றி-** (இவனது உடல்) அமைந்து பொருந்தியது என்பதல்லாமல்; **வேத நூல் வரன்முறை விதிக்கும் -** வேத நூல்கள்

*மரபுகள் வகுத்த;* ***ஐம்பெரும் பாதகம் திரண்டு -*** *ஐந்து பெரும் பாதகங்களே ஓர் உடம்பாக ஒன்று சேர்ந்து;* ***உயிர் படைத்த பண்பினான் -*** *உயிர் பெற்றுவிட்டது போன்ற தன்மை உடையவன்.*

*உடம்புகள் ஐந்து பூதச் சேர்க்கையால் உண்டாவன. இது பொதுவிதி. கவந்தனின் உடம்பு, பிற உடம்புகள் போல். ஐம்பூதங்களால்ஆனது அன்று; பஞ்ச மகா பாதகங்கள் ஒன்று திரண்டு கவந்தனின்மேனி ஆயின என்கிறார், கற்பனைவல்ல கம்பர். தற்குறிப்பேற்றஅணி. ஐந்து பூதங்கள்; மண், நீர், அனல், காற்று, வான் ஐந்துபாதகங்கள் கொலை, களவு, காமம், பொய், கள் உண்ணல்; வேறுவகையில் கூறுதலும் உண்டு.*

***3658. வெய்ய வெங் கதிர்களை***
***விழுங்கும் வெவ் அரா,***
***செய் தொழில் இல, துயில்***
***செவியின் தொள்ளையான்;***
***பொய் கிளர் வன்மையில்***
***புரியும் புன்மையோர்***
***வைகுறும் நரகையும்***
***நகும் வயிற்றினான்.***

***வெய்ய வெங் கதிர்களை விழுங்கும் -*** *வெப்பமானதும் விரும்பத் தக்கதுமான ஒளிக்கதிரை முறையே வீசுகின்ற சூரியனையும் சந்திரனையும் விழுங்குகின்ற;* ***வெவ் அரா -*** *கொடிய இராகு, கேது என்ற பாம்புகள்;* ***செய் தொழில் இல -*** *செய்வதற்கு ஒரு வேலையும் இல்லாதனவாய்;* ***துயில் -*** *உறங்குவதற்கு ஏற்ற;* ***செவியின் தொள்ளையான் -*** *செவித் தொளைகளை உடையவன் - மேலும்;* ***கிளர் வன்மையில் -*** *மிகுந்து பெருகுகின்ற கொடுமையினால்;* ***பொய் புரியும் -*** *பொய்யான (பாவச்) செயல்களைச் செய்கின்ற;* ***புன்மையோர் -*** *அற்பர்களாகிய பாவிகள்;* ***வைகுறும் -*** *வாழ்கின்ற;* ***நரகையும் -*** *நரகத்தைக் கூட;* ***நகும் -*** *(தனக்கு ஈடாக முடியுமா என்று) கேலி செய்யக் கூடிய;* ***வயிற்றினான் -*** *வயிற்றினைஉடையவன். வெய்ய கதிர், வெம்கதிர் எனக் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். வெய்ய கதிர், வெப்பமான கிரணங்களை வீசும் ஞாயிறு வெம்மை வேண்டல் என்பது உரிச்சொல் விளக்கம், அஃதாவது விருப்பம். எனவே, வெம்கதிர் என்பது விரும்பத் தகுந்த (குளிர்) கதிர்கள் வீசும் திங்கள். 'கதிர்' என்ற சொல் ஆகுபெயராய் ஞாயிறையும் திங்களையும் குறித்தது. இராகுவும் கேதுவும் கதிர்களை விழுங்கும் வேலை இல்லாதபோது அவை அமைதியாகத் தூங்குவதற்கு ஏற்ற இடமாகக் கவந்தனின் செவித் தொளைகள் அமைகின்றன. கவந்தனின் வயிற்றை நோக்க நரகம் கூடக் கொடுமை குறைந்த இடம் என்கிறார் கவிஞர். பொய் ஒன்றை மட்டும் குறித்தாரேனும் உபலட்சணத்தால் மற்றப் பாவங்களும் கொள்ளப்படும்.*
*1*

*3659முற்றிய உயிர் எலாம்*
*முருங்க வாரி, தான்*
*பற்றிய கரத்தினன்,*
*பணைத்த பண்ணையில்*
*துற்றிய புகுதரும்*
*தோற்றத்தால், நமன்*
*கொற்ற வாய்தல் செயல்*
*குறித்த வாயினான்.*

***முற்றிய உயிர் எலாம் -*** *முற்றுகையிடப்பட்ட உயிர்கள் யாவும்;* ***முருங்க வாரி -*** *அழியும்படியாக வாரியெடுத்து;* ***தான் பற்றிய கரத்தினன் -*** *தான் பற்றிக் கொண்ட கைகளை உடையவனாய்;* ***பணைத்த பண்ணையில் -*** *(கூட்டமாகப்) பெருகிய தொகுதியாக;* ***துற்றிய -*** *திணிக்கப்படும் உயிரினங்கள்;* ***புகுதரும் தோற்றத்தால் -*** *(கவந்தன் வயிற்றில் அமைந்த வாய்க்குள்ளே) புகுகின்ற காட்சியால்;* ***நமன் -*** *கூற்றுவனுடைய;* ***கொற்ற வாய்தல் செயல் -*** *வெற்றி கொண்ட வாசலில் உயிர்கள் நுழைகின்றதை;* ***குறித்த வாயினான் -*** *(உவமையாகக்) குறிக்கத் தக்க வாயினை உடையவன்.*

*கானகத்தின் பல பக்கங்களிலும் திரிகின்ற உயிரினங்கள் மிகப் பெரிய கவந்தனின் கரங்களுக்கிடையே அகப்பட்டுக் கொள்கின்றன; அப்போது அவை முற்றுகைக்குள் சிக்கியவை ஆகின்றன. முருங்குதல்; அழிதல். பண்ணை; கூட்டம். கூற்றுவன் உயிர்களைப் பற்றுதலில் வெற்றியையன்றித் தோல்வி அறியாதவன்; ஆகையால், அவன் வாசல் கொற்ற வாயில் எனப்பட்டது. வாய்தல்; வாசல். கூற்றுவனது நகர் வாசல் கவந்தன் வாய்க்கு உவமை.*

*3660. ஓலம் ஆர் கடல் என*
*முழங்கும் ஓதையான்;*
*ஆலமே என இரண்டு*
*அழன்ற ஆக்கையான்;*
*நீல மால், நேமியான்*
*தலையை நீக்கிய*
*காலநேமியைப் பொரும்*
*கவந்தக் காட்சியான்.*

***ஓலம் ஆர் கடல் என -*** *ஆரவாரம் பொருந்திய கடல் போல;* ***முழங்கும் ஓதையான் -*** *முழக்கம் செய்யும் ஓசை எழுப்புவோனாய்;****ஆலமே என -*** *ஆலகால நஞ்சு எனும்படியான;* ***இரண்டு அழன்றஆக்கையான் -*** *கறுத்து எரிகின்ற உடம்பினை உடையவன்அக்கவந்தன்;* ***நீல மால் -*** *நீல நிறத்தவனாகிய திருமால்;* ***நேமியான்-*** *தன் சக்கரப் படையால்;* ***தலையை நீக்கிய -*** *தலை அரியப்பெற்ற;* ***கால நேமியைப் பொரும் -*** *காலநேமி என்ற அரக்கனைப் போல்;* ***கவந்தக் காட்சியான் -*** *தலையற்ற உடல் தோற்றம் கொண்டவன்,அக் கவந்தன். ஆலகாலம் நிறத்திற்கும் உயிர் வாங்கும் கொடுமைக்கும்உவமை; உருவம் பண்பு இரண்டாலும் பொதுத்தன்மை கொண்டது.காலநேமி என்பான் இரணியனின் ஒரு மகன்; நூறுதலைகளும்*

நூறுகரங்களும் கொண்டவன். திருமால் தன் சக்கராயுதத்தால் அவன் நூறுதலைகளையும் அரிந்தான் என்பதொரு கதை. தலைகளை இழந்தபின்னும் கால நேமியின் உடல் போர்த்திறம் இழவாமல் பொருததுஎன்பது புராணச் செய்தி. அதுபோலவே, தலை எனத் தனி ஓர் உறுப்புஇலாதவனாகிய கவந்தனும் எதிர்த்துப் பொருகின்ற திறமுடையான்என்பது உவமையின் நுட்பம்.

***3661. தாக்கிய தணப்பு இல்***
***கால் எறிய, தன்னுடை***
***மேக்கு உயர் கொடு முடி***
***இழந்த மேரு நேர்***
***ஆக்கையின் இருந்தவன்***
***தன்னை, அவ் வழி,***
***நோக்கினர் இருவரும்,***
***நுணங்கு கேள்வியார்.***

***தாக்கிய தணப்பு இல் கால் எறிய -*** *மோதியதும் தடங்கல் இல்லாததுமாகிய காற்றுச் சிதைத்தலால்;* **மேக்கு உயர் தன்னுடைக்கொடு முடி இழந்த -** *மேல் நோக்கி உயர்ந்த தன்னுடைய சிகரத்தைஇழந்த;* **மேரு நேர் -** *மேரு மலையைப் போன்ற;* **ஆக்கையின்இருந்தவன் தன்னை -** *உடம்போடு இருந்தவனாகிய கவந்தனை;* **அவ்வழி -** *அப்போது;* **நுணங்கு கேள்வியார் இருவரும் -** *நுட்பமான கேள்வியறிவுடைய இராமலக்குவர் இருவரும்;* **நோக்கினார்-** *கண்டனர்.*

*தாக்கிய கால், தணப்பு இல் கால் எனக் கூட்டிப் பொருள்கொள்க. கால்; காற்று. வசிட்ட முனிவரிடம் கரை பிறிது இல்லாஉவளரு மறையினொடு ஒழிவு அறு கலைகள் (303) கேட்டுப்பயின்றவராதலின் நுணங்கிய கேள்வியர் என்றார். வசிட்டரே குறித்தவண்ணம் விசுவாமித்திர முனிவரிடமிருந்து அளவு இல் விஞ்சைகள்(329) பெற்றவன் இராமன் என்பதும் நினையத்தக்கது. சிகரம் இழந்தமேரு, தலை என ஓர் உறுப்பு இல்லாத கவந்தனுக்கு உவமை. தலைஇன்மையும் பேருருவும் பொதுத் தன்மைகள். ஆதிசேடனுக்கும்காற்றிறைவனுக்குமிடையே நடந்த போட்டியில் மேரு தன் சிகரத்தைஇழந்ததொரு கதை.*

*இராமலக்குவர் கவந்தன் வாயைக் கண்டு கருதியவை*

***3662. நீர் புகு நெடுங் கடல்***
***அடங்கு, நேமி சூழ்***
***பார் புகு நெடும் பகு***
***வாயைப் பார்த்தனர்;***
***'சூர் புகல் அரியது ஓர்***
***அரக்கர் தொல் மதில்***
***ஊர் புகு வாயிலோ இது?'***
***என்று, உன்னினார்.***

***நீர் புகு*** - *ஆறுகள் புகுகின்ற;* ***நெடுங்கடல்*** - *பெரிய கடல்களெல்லாம்;* ***அடங்கு*** - *தன்னுள் அடங்கப்பெற்ற;* ***நேமி சூழ்*** - *சக்கரவாள மலையால் சூழப்பட்டுள்ள;* ***பார்புகு*** - *உலகமே நுழையும்படியாக உள்ள;* ***நெடும் பகு வாயைப் பார்த்தனர்*** - *பெரிய தாயும் பிளந்துள்ளதாயும் உள்ள (கவந்தனது) வாயைப் பார்த்து;* ***இது*** - *இந்தப் பிளவு;* ***சூர் புகல் அரியது*** - *தேவர்களும் உட்புகுதற்கு அரிய;* ***ஓர் அரக்கர்*** - *அரக்கருக்கு உரியதாகிய;* ***தொல்மதில் ஊர்புகுவாயிலோ*** - *பழமையான மதில் அமைந்த ஊருக்குள் புகுகின்ற வாசலோ;* ***என்று உன்னினார்*** - *என்று இராமலக்குவர் கருதினார்கள்.*

*நெடுங்கடலில் புகுதலைப் பின்னர் கூறினமையால் நீர் என முதலிற் சொன்னது ஆகுபெயராய் ஆறுகளைச் சுட்டிற்று. கடலைச்சூழ்ந்து உலக எல்லையில் வட்டமாக ஒரு மலை இருப்பதாகச் சொல்வது புராண மரபு. நேமி : சக்கரம்; சக்கரம் போல் வட்டமாக அமைந்த சக்கரவாள மலை. சூர் : தேவர்; கதிரவன் ஒளி புகா.... மதிள் (4657) என இலங்கை மதிலைக் கம்பர் குறிப்பது கொண்டு இவ்வாறு பொருள் கொள்ளலும் பொருத்தமே. 'இரு சுடர் மீதினில் இயங்கா மும்மதிள் இலங்கை' என்பது திருமங்கை யாழ்வார் வாக்கு(திருவெழு கூற்றிருக்கை 3-4) ஆழ்வாரின் இவ்வாக்கே கம்பர் கற்பனைக்கு மூலமாக இருத்தல் கூடும். பார்த்தனர் - முற்றெச்சம்.*

*இலக்குவன் தெளிவு*

***3663. அவ் வழி இளையவன்***
***அமர்ந்து நோக்கியே,***
***'வெவ்வியது, ஒரு பெரும்***
***பூதம், வில் வலாய்!***
***வவ்விய தன் கையின்***
***வளைத்து, வாய்ப் பெயும்;***
***செய்வது என் இவண்?'***
***என, செம்மல் சொல்லுவான்;***

***அவ்வழி*** - *அப்போது அவ்விடத்திலே;* ***இளையவன்*** - *இளையவனாகிய இலக்குவன்;* ***அமர்ந்து நோக்கியே*** - *ஆற அமர (நிதானமாக)ப் பார்த்து;* ***வில்வலாய்!*** - *வில் வித்தை வல்லவனே (என இராமனை விளித்து);* ***வெவ்வியது ஒரு பெரும் பூதம்*** - *இது கொடுமையான ஒரு பூதம்;* ***வவ்விய*** - *பிடித்துப் பற்றிக் கொண்ட உயிர்களை;* ***தன் கையின் வளைத்து*** - *தன் கையினால் வளைத்துப் பிடித்து;* ***வாய்ப் பெயும்*** - *தன்வாய்க்குள்ளே இட்டுக் கொள்ளுவது (இப் பூதத்தின் செயல்);* ***இவண் செய்வது என்*** - *இவ்விடத்தில் நாம் என்ன செய்யலாம்;* ***என*** - *என்று வினவ;* ***செம்மல் சொல்லுவான்*** - *இராமபிரான் பின்வருமாறு விடை சொன்னான்.*

*அரக்கர்தம் மதில் வாயிலோ என்று ஐயுற்ற நேரத்தில், இலக்குவன் நிதானமாகக் கவனித்தான்; கரங்களால் உயிரினங்களைக் கவர்ந்து விழுங்கும் வாயே தாம் கண்ட பிளவு எனத் தெளிந்து கூறினான். கவந்தன் கைகளால் வளைக்கப்பட்ட உயிர்களுள் இவ் இருவரும் அடங்குவர். "பூதத்தின் வாயில் திணிக்கப்படும் நிலையில்சிக்கிக் கொண்டோமே, செய்யத்தக்கது இதுவெனத் தெரியவில்லையே" என்பது இலக்குவன்*

*வினா.*
*'பழி சுமந்து வாழேன்' என்று, இராமன் கூறல்*

***3664. 'தோகையும் பிரிந்தனள்;***
***எந்தை துஞ்சினன்;***
***வேக வெம் பழி சுமந்து***
***உழல வேண்டலேன்;***
***ஆகலின், யான்,***
***இனி, இதனுக்கு ஆமிடம்;***
***ஏகுதி ஈண்டுநின்று,***
***இளவலே!' என்றான்.***

***இளவலே -** என் தம்பியே; **தோகையும் பிரிந்தனள் -** (கானகம் வந்தபின்) மயில் போன்ற சாயல் கொண்ட சீதையும் பிரிந்தாள்; **எந்தை துஞ்சினன் -** தந்தை முறையினனாகிய சடாயுவும் இறந்தான்; **வேக வெம் பழி சுமந்து -** (இவ்வாறு எனக்கு அரியராகிய இருவரையும் பேண முடியாமையால்) விரைந்து பரவக்கூடிய கொடிய பழியைச் சுமந்து கொண்டு; **உழல வேண்டலேன் -** உயிர் கொண்டு அலைய நான் விரும்பவில்லை; **ஆதலின் -** ஆகையால்; **யான் இனி இதனுக்கு ஆமிடம் -** நான் இனிமேல் இப்பூதத்துக்கு உணவு ஆவேன்; **ஈண்டு நின்று ஏகுதி என்றான்? -** இங்கிருந்து நீ தப்பிப் போவாயாக என்றான்.*

*தோகை - முதலில் மயிலுக்கு ஆகி, அடுத்து மயிலனைய சாயல் கொண்ட சீதைக்கு ஆகி வந்த இருமடி ஆகுபெயர். தோகையும் என்பதில் உம்மை எதிரது - தழீஇய எச்சவும்மை. ஆமிடம் - ஆமிஷம் என்ற வட சொல்லின் தமிழ் வடிவம்; உணவு என்னும் பொருள் உடையது; பின்னரும் இச்சொல் ஆளப்பட்டுள்ளது (4806)*

***3665. 'ஈன்றவர் இடர்ப்பட,***
***எம்பி துன்புற,***
***சான்றவர் துயருற,***
***பழிக்குச் சார்வுமாய்த்***
***தோன்றலின், என்***
***உயிர் துறந்தபோது அலால்,***
***ஊன்றிய பெரும் படர்***
***துடைக்க ஒண்ணுமோ?***

***ஈன்றவர் இடர்ப்பட -** பெற்றோர் துன்பம் அடையவும்; **எம்பி துன்புற -** என் தம்பியாகிய பரதன் துன்பப்படவும்; **சான்றவர் துயர் உற -** பெரியவர்கள் வருத்தமுறவும்; **பழிக்குச் சார்வுமாய் -** (உற்றாரும் பெரியோரும் துன்பமடையக் காரணன் ஆனதோடு, மனையாளையும் சடாயுவையும் காப்பாற்ற முடியாத) பழிக்கு இடமாகி; **தோன்றலின் -** யான் தோன்றியுள்ளமையால்; **என் உயிர் துறந்த போது***

***அலால் -*** *என் உயிரை விட்டபோதன்றி;* ***ஊன்றிய பெரும் படர் -*** *நிலைத்துவிட்ட இப் பெரும்பழியை;* ***துடைக்க ஒண்ணுமோ -*** *அழிக்க முடியுமா?*

*'தோன்றிற் புகழோடு தோன்றுக' என்ற குறள் நெறிக்கு எதிர் மறையாகப் பழியோடு தோன்றியதாகக் குறித்தார் கவிச்சக்கரவர்த்தி; இங்கே எதிர்மறுத்து எதிரொலிப்பதை உணர்க. ஓகாரம் எதிர்மறை.*

***3666. ' "இல் இயல்புடைய, நீர்***
***அளித்த, இன் சொலாம்***
***வல்லி, அவ் அரக்கர்தம்***
***மனை உளாள்" எனச்***
***சொல்லினென், மலை எனச்***
***சுமந்த தூணியென்,***
***வில்லினென், செல்வெனோ,***
***மிதிலை வேந்தன்பால்?***

***"இல் இயல்புடைய -*** *இல்லத்திற்கு ஏற்ற பண்பு கொண்ட;* ***நீர் அளித்த -*** *நீங்கள் எனக்குக் கொடுத்த;* ***இன்சொலாம் வல்லி -*** *இனிய சொற்கள் பேசும் கொடி போன்ற சீதை;* ***அவ்வரக்கர் தம் மனை உளாள் -*** *அந்த அரக்கர்களின் வீட்டில் இருக்கிறாள் (அவளை அங்கே விட்டு நான் மட்டும் வந்தேன்)";* ***எனச் சொல்லினென் -*** *என்று சொல்லிக் கொண்டு;* ***மலையெனச் சுமந்த தூணியென் வில்லினென் -*** *மலை போன்ற அம்பறாத் தூணியைச்சுமந்தவனாகியும் (மலைபோன்ற) வில்லைச் சுமந்தவனாகியும்;* ***மிதிலை வேந்தன் பால் செல்வெனோ -*** *மிதிலை மன்னனாகிய சனகனிடம்போவேனோ (போகமாட்டேன்)."*

*சனகன் மகளை இல்லறத்துக்கு ஏற்றவளாகவே இராமனுக்குக் கொடுத்தான்; ஆதலின், மாண்பமை இல்லத்தரசியைத் துறத்தற்கோமீட்காமல் வருதற்கோ காரணம் இல்லை. இல் - மனையறத்தைக் குறித்த ஆகுபெயர். வல்லி : கொடி போன்று ஒல்கும் சீதைக்கு ஆகுபெயர். சொல்லினென்,தூணியென், வில்லினென் என்ற முற்றெச்சங்கள் செல்வெனோ என்ற வினா கொண்டு முடிந்தன. மனையாளை மீட்க முடியாதவனுக்கு மலையனைய அம்பறாத் தூணியும் வில்லும் வெற்று அணிகலனாய்அமைகின்ற எள்ளல் நிலை உணர்ந்து இராமபிரான் வேதனைஉறுகிறான்.*

***3667. ' "தளை அவிழ் கோதையைத்***
***தாங்கல் ஆற்றலன்,***
***இளை புரந்து அளித்தல்மேல்***
***இவர்ந்த காதலன்,***
***உளன்" என, உரைத்தலின்,***
***"உம்பரான்" என***
***விளைதல் நன்று; ஆதலின், விளிதல்***
***நன்று' என்றான்.***

***"தளை அவிழ் கோதையை*** - முறுக்கு அவிழும் மலர்களாகிய மாலை போன்ற சீதையை; ***தாங்கல் ஆற்றலன்*** - காப்பாற்றும் ஆற்றல் இல்லாதவனாய்; ***இளை புரந்து அளித்தல் மேல்*** - நிலவுலகத்தை ஆட்சி செய்து காப்பாற்றுவதில்; ***இவர்ந்த காதலன் உளன்*** - மிகுகின்ற ஆசை உடையவனாய் இராமன் வாழ்கிறான்; ***என உரைத்தலின்*** - என்று உலகவர் பழி சொல்லுவதை விட; ***'உம்பரான் என*** - இராமன் தேவருலகத்தான் எனச் சொல்லும்படியாக; ***விளைதல் நன்று*** - செயல்கள் நடைபெறுதலே நன்று; ***ஆதலின் விளிதல் நன்று-*** ஆகையால் (நான்) சாவதே நல்லது"; ***என்றான்*** - என இராமபிரான்கூறினான்.

*மாலை போல் மெல்லியல் சீதை என்ற பெண்; அந்த மெல்லியலைக் காப்பாற்ற முடியாதவனுக்கு, 'இந்த உலகத்தையே காப்பாற்ற வேண்டும்' என்ற ஆசை இருக்கலாமா' என்று உலகம் பழிக்கும். அந்தப் பழிச்சொல் பிறப்பதை விட 'இராமன் மானம் பெரிதெனப் போற்றி இறந்து போனான்' என்று உலகம் சொல்லும்படியாகச் செயல் நடப்பதே நல்லது என்கிறான் இராமன்.*

*இலக்குவன் மொழிதல்*

*கலிநிலைத்துறை*

***3668. ஆண்டான் இன்ன பன்னிட,***
***ஐயற்கு இள வீரன்,***
***'ஈண்டு, யான், உன்பின்***
***ஏகியபின், இவ் இடர் வந்து***
***மூண்டால், முன்னே ஆர்***
***உயிரோடும் முடியாதே,***
***மீண்டே போதற்கு ஆம் எனின்,***
***நன்று என் வினை!' என்றான்.***

***ஆண்டான்*** - யாவரையும் ஆட்கொண்ட இறைவனாகிய இராமன்; ***இன்ன பன்னிட*** - இவ்வாறு சொல்ல; ***ஐயற்கு இள வீரன்-*** அந்த இராமபிரானுக்கு இளையவனாகிய இலக்குவன்; ***யான் உன்பின் ஈண்டு ஏகியபின்*** - யான் உன்னைத் தொடர்ந்து இக் கானகத்துக்கு வந்தபின்; ***இவ் இடர் வந்து மூண்டால்*** - இந்தத் துன்பம் வந்து நேரிட்டால்; ***முன்னே*** - உனக்கு முன்னதாக; ***ஆர் உயிரோடும் முடியாதே*** - அரிய உயிரோடு வாழ்க்கையை முடித்துக்கொள்ளாமல்; ***மீண்டே போதற்கு ஆம் எனின்*** - உயிரோடு திரும்பவும் அயோத்திக்கு நான் போகலாம் என்றால்; ***'நன்று என் வினை' என்றான்*** - அவ்வாறு திரும்பிச் செல்லும் என் செயல் 'நன்று நன்று' என்றான்.

*'என்னை ஆள் உடையவன்' (194), 'என்னை ஆளுடைய ஐயன்'(204) எனத் திருமாலைக் கவிக் கூற்றால் முன்னம் குறித்தவர், இங்கேஇராமனை, 'ஆண்டான்' எனக் குறித்திடும் இயைபு நலம்உணரற்பாலது. நன்று என் வினை என்னும் தொடர், 'என் செயல்பழியும் பாவமும் நிறைந்ததாகும்' எனக் குறிப்பு நயம் உடையதாய்விளங்குகிறது. "மன்னும் நகர்க்கே இவண் வந்திடின்வா; அதுஅன்றேல் முன்னம் முடி" (1752) என்று தன் தாய் சுமித்திரைகூறியதை இலக்குவன் மறந்திலன்*

*என்பதை இச் செய்யுள் உணர்த்துகிறது.*

***3669. என்றான் என்னாப் பின்னும்***
***இசைப்பான், 'இடர்தன்னை***
***வென்றார் அன்றே வீரர்கள்***
***ஆவார்? விரவாரின்,***
***தன் தாய், தந்தை, தம்முன்,***
***எனும் தன்மையர்முன்னே***
***பொன்றான்என்றால், நீங்குவது***
***அன்றோ புகழ் அம்மா?***

***என்றான்*** - *என்று கூறிய இலக்குவன்;* ***பின்னும் இசைப்பான்*** - *மேலும் கூறலுற்றான்;* ***இடர்தன்னை வென்றார் அன்றோ வீரர்கள் ஆவார்*** - *வந்து வாட்டும் துன்பத்தை எதிர்த்து வென்றவரல்லரோ வீரர் எனத்தக்கவர்;* ***என்னா*** - *என்று உரைத்து;* ***தன் தாய், தந்தை, தம்முன் எனும் தன்மையர் முன்னே*** - *தன்னினும் மேலானவர்களாகிய தாய் தந்தை, தமையன் எனத் தக்கவர்களுக்குமுன்னமே;* ***விரவாரின் பொன்றான் என்றால்*** - *அன்பில்லாத பகைவர்களைப் போல உயிர் விடுத்து மாளான் என்றால்;* ***நீங்குவதுஅன்றோ புகழ்*** - *புகழ் நீங்கிவிடுமன்றோ. அம்மா என்பது வியப்பு இடைச்சொல்; துன்பக் காலத்து தாய் தந்தை தமையன் போன்றோர்க்கு உதவும் வகையில் துன்பத்தை எதிர்த்து நின்று மாளாமல் உயிர் பிழைப்போரும் உளராவரோ என்னும் வியப்புணர்வைக் குறித்து வந்தது.* 2

***3670' "மானே அன்னாள்தன்னொடு தம்முன்***
***வரை ஆரும்***
***கானே வைக, கண்துயில் கொள்ளாது***
***அயல் காத்தற்கு***
***ஆனான்; என்னே!" என்றவர் முன்னே,***
***"அவர் இன்றித்***
***தானே வந்தான்" என்றலின்,***
***வேறு ஓர் தவறு உண்டோ?***

***"மானே அன்னாள் தன்னொடு*** - *மானை ஒத்தவளாகிய அண்ணியாரோடு;* ***தம்முன்*** - *தமையனாகிய இராமன்;* ***வரை ஆரும் கானே வைக*** - *மலை இடையிட்ட காட்டிலே வாழ;* ***கண் துயில் கொள்ளாது*** - *தான் மட்டும் தூக்கம் மேற்கொள்ளாமல்;* ***அயல்*** - *பக்கத்தே இருந்து;* ***காத்தற்கு ஆனான்*** - *காவல் புரிவதற்கு ஏற்று நின்றான் இலக்குவன்;* ***என்னே*** - *என்ன வியப்பு!";* ***என்றவர் முன்னே'*** - *என்று என் பணியை வியந்து போற்றிப் பேசியவர்கள் முன்னிலையில்;* ***"அவர் இன்றித் தானே வந்தான்*** - *அந்த இருவரும் இல்லாமல் இந்த இலக்குவன் மட்டுமே தனியாக வந்திருக்கிறான்";* ***என்றலின்*** - *என்று பேசப்படுவதைவிட;* ***வேறு ஓர் தவறு உண்டோ-*** *வேறு ஒரு தவறு இருக்க முடியுமா?*

*'அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச... கங்குல் எல்லை காண்பு அளவும் நின்றான்' (2344), இமைத்தில இராமன் என்னும் புண்ணிய கண்ணும்*

*வன்தோள் தம்பி கண் போன்ற அன்றே' (3345) என முன்பு வந்த தொடர்களும் உறங்கா வில்லியாகிய இலக்குவன் தன்மையை விளக்கின. வீடணனுக்குப் படைக்கலம் தந்து ஏற்றபோது இராமபிரானே இலக்குவனைத் 'துஞ்சுதல் இல் நயனத்து ஐய' (4505) என்று குறிப்பிடுவான்.*

***3671. 'என் தாய், "உன்முன் ஏவிய யாவும்***
***இசை; இன்னல்***
***பின்றாது எய்தி, பேர்***
***இசையாளற்கு அழிவு உண்டேல்,***
***பொன்றாமுன்னம் பொன்றுதி"***
***என்றாள்; உரை பொய்யா***
***நின்றால் அன்றோ நிற்பது***
***வாய்மை நிலை அம்மா?***

***"என் தாய்- - ; உன்முன் ஏவிய யாவும் இசை -** உன் தமையனாகிய இராமன் ஏவியவற்றையெல்லாம் ஏற்றுச் செயல்படுக; **இன்னல் பின்றாது எய்தி -** துன்பம் நேருமாயின் அத்துன்பங்கண்டு பின்வாங்கி விடாமல்அதனை நீ ஏற்று; **பேர் இசையாளற்கு அழிவு உண்டேல் -** பெரும்புகழாளன் ஆகிய இராமனுக்கு அழிவு நேரிடுவதாக இருந்தால்; **பொன்றா முன்னம் -** அவன் இறப்பதற்கு முன்னர்; **பொன்றுதி -** நீ இறப்பாயாக"; **என்றாள் -** என்று எனக்குச் சொன்னாள்; **உரை பொய்யா நின்றால் அன்றோ -** என் தாயின் சொல் பொய்த்திடா வண்ணம் அவள் இட்ட கட்டளைப்படி நான் நடந்து கொண்டால் அன்றோ; **வாய்மை நிலை நிற்பது -** சத்திய நெறி நிலை பெறுவதாகும்?*

*'மா காதல் இராமன்' (1751) 'இவன்' (1752) என்றே சுமித்திரை சொல்லாக அயோத்தியா காண்டத்தில் கம்பர் குறித்தார். அவரே இலக்குவன் கூற்றாக இராமனைப் 'பேரிசையாளன்' என்று இங்கே குறிக்கிறார். பேரிசையாளன் (பெரும் புகழாளன்) என்று தன் தாய் சொன்னதாக இலக்குவன் கூறுகிறான். இரண்டு இடத்தும் இராமனைப் புகழுக்கு உரியவனாகவே கம்பர் கருதுகிறார். முன்னே அக் கருத்து குறிப்பாக வந்தது; இங்கே வெளிப்படையாக வந்துள்ளது. தாய் சொல்லைப் பேணாது போதல் அஞ்சுதற்கு உரியது என்னும் குறிப்புக் கொண்டது இறுதியில் வரும் 'அம்மா' என்னும் இடைச்சொல்.*

***3672. 'என்-பெற்றாளும், யானும்,***
***எனைத்து ஓர் வகையாலும்,***
***நின்-பெற்றாட்கும், நிற்கும்,***
***நினைப்புப் பிழையாமல்,***
***நல் பொன் தோளாய்! நல்லவர்***
***பேண நனி நிற்கும்***
***சொல் பெற்றால், மற்று ஆர்***
***உயிர் பேணி, துறவேமால்.***

*"**நல் பொன் தோளாய் -** அழகியதும் பொன் அணி பூண்டதுமாகிய தோளினை உடையவனே; **என் பெற்றாளும் யானும்-** என் தாயும் யானும்; **எனைத்து ஓர் வகையாலும் -**எவ்விதத்தாலும்; **நின் பெற்றாட்கும் நிற்கும் -** உன்னைப் பெற்றகோசலைக்கும் உனக்கும்; **நினைப்புப் பிழையாமல் -** கருத்துமாறுபடாத வண்ணம்; **நல்லவர் பேண -** நல்லவர்கள்போற்றும்படியாக; **நனி நிற்கும் சொல் பெற்றால் -** நன்றாக உங்கள்சார்பில் நிற்கிறோம் என்னும் புகழுரை பெறுவதாயிருந்தால்; **மற்றுஆர் உயிர் பேணி -** (அந்தப் புகழுரையே பெரிது எனக் கருதுவோமேயல்லாமல்) அதற்கு மாறாக அரிய உயிரே பெரிது எனப் பேணி; **துறவேம் -** (உங்கள் இருவரையும்) விட்டு விலகிவிடமாட்டோம்.*

*சுமித்திரைக்கும் தனக்கும் கோசலை சார்பிலும் இராமன் சார்பிலும் உறுதியாக நின்று பேணுதலே உரிய நெறி என்கிறான் இலக்குவன். என் தாய்க்கும் எனக்கும் உன் தாய்க்கும் உனக்கும் என்ற சொற் கிடக்கை முறை நிரல் நிரையாகும். சுமித்திரை கோசலை சார்பிலும் இலக்குவன் இராமன் சார்பிலும் நிற்றலே பெரிதெனப் பேணுவள் என்பது கருத்து. இந்நெறியைப்பேணுவோர் இவர்' எனல் சான்றோரிடம் நற்பெயர் பெறுவதைவிட தங்கள் உயிரைப் பெரிதென இவர்கள் கருதார்.*

***3673. 'ஓதுங்கால், அப் பல் பொருள்***
***முற்றுற்று, ஒருவாத***
***வேதம் சொல்லும் தேவரும்***
***வீயும் கடை வீயாய்;***
***மாதங்கம் தின்று உய்ந்து இவ்***
***வனத்தின்தலை வாழும்***
***பூதம் கொல்லப் பொன்றுதிஎன்னின்,***
***பொருள் உண்டோ?***

***ஓதுங்கால் -** உண்மை நிலையினை எடுத்துச் சொல்வதானால்; **அப் பல்பொருள் முற்றுற்று -** எங்கெங்கும் உள்ள அந்த எல்லாப் பொருள்களும் அழிந்து; **ஒருவாத வேதம் சொல்லும் தேவரும் வீயும் கடை -** எக்காலும் அழியாத வேதம் ஓதும் தேவர்கள் அழியும் காலத்திலும்; **வீயாய் -** நீ அழியமாட்டாய் -(உண்மை இதுவாயிருக்க); **மாதங்கம் தின்று உய்ந்து -** யானை (முதலியவற்றைத்) தின்று உயிர்பெற்று; **இவ் வனத்தின் தலை வாழும் -** இந்தக் காட்டிலே வாழ்கின்ற; **பூதம் கொல்லப் பொன்றுதி -** பூதம் கொல்வதால் நீ இறந்துவிடுவாய்; **என்னின் -** என்று சொன்னால்; **பொருள் உண்டோ -** அவ்வாறு சொல்வதில் பொருள் உண்டா (அவ்வாறு சொல்வது பொருந்தாது என்பது கருத்து).*

*அகரச் சுட்டு உலகறி சுட்டு நெஞ்சறி சுட்டு. எல்லார்க்கும் தெரிந்ததே என்ற கருத்துடையது. 'விண்ணோர் அமுது உண்டும் சாவ' என்பதால் சாவாமை தரவல்ல அமுதம் உண்ட தேவர்களும் சாவர் என்று கொள்வது நூல் வழக்கு. அண்ட சராசரங்களும் தேவர்களும்அழிந்தாலும் இராமனுக்கு அழிவு இல்லை என்பது குறிப்பு. அவ்வாறு ஆவது அவன் பரம்பொருள் என்பதால். 'காற்றை முன்னுடைப் பூதங்கள்; அவை சென்று கடைக்கால் வீற்று வீற்று உற்று வீவுறும்; நீ என்றும் விளியாய்' (10058) என்று பிரமன் இராமனைக் குறித்தல் இங்கு நினையத்தக்கது.*

*மாதங்கம் : யானை, மதங்கர் என்ற முனிவரால் பேணப்பட்டமையின் யானைக்கு மாதங்கம் எனப் பெயர்; தத்திதாந்தப் பெயர் வந்தது.*

***3674. 'கேட்டார் கொள்ளார்; கண்டவர் பேணார்; "கிளர் போரில்***
***தோட்டார் கோதைச் சோர் குழல்தன்னைத் துவளாமல்***
***மீட்டான் என்னும் பேர் இசை கொள்ளான், செரு வெல்ல***
***மாட்டான், மாண்டான்" என்றலின்மேலும் வசை உண்டோ?***

**கேட்டார் -** *(தளர்ந்து உயிர்விடத் துணிந்த உன் நிலை பற்றிக்) கேள்விப் பட்டவர்கள்;* **கொள்ளார் -** *உன் முடிவை ஏற்கமாட்டார்கள்;* **கண்டவர் பேணார் -** *நேரிலேயே காண நேரிட்டவர்கள் உன் செயலை விரும்பமாட்டார்கள்;* **'கிளர் போரில் -** *(சீதையை மீட்கும் பொருட்டுக்) கிளர்ந்தெழுகின்ற போரிலே;* **தோடு ஆர் கோதைச் சோர் குழல் தன்னை -** *தொகுதியான மாலையணிந்து வாழும் கூந்தலாளான சீதையை;* **துவளாமல் மீட்டான் என்னும் பேர் இசை கொள்ளான் -** *தளராமல் மீட்டுவிட்டான் என்று உலகவர் சொல்லும் பெரிய புகழைக் கொள்ளாதவனாய்;* **செரு வெல்ல மாட்டான் -** *போரிலே வெற்றி கொள்ள முடியாதவனாய்;* **மாண்டான் -** *இராமன்இறந்தான்;* **என்றலின் மேலும் -** *என்று சொல்லப்படுவதைவிட;***வசை உண்டோ -** *பழி உண்டோ?'*

*பேணுதல் - விரும்புதல், தோடு + ஆர் = தோட்டார்; தோடு - தொகுதி; இங்கே மலர்களின் தொகுதி. கிளர் போர், சோர் குழல்;வினைத் தொகைகள் - சோர்குழல் வினைத் தொகைப் புறத்துப் பிறந்தஅன்மொழித் தொகை; இங்கே சீதை கொள்ளான், மாட்டான் -முற்றெச்சங்கள்.*

***3675. 'தணிக்கும் தன்மைத்து அன்றுஎனின், இன்று இத் தகை வாளால், -***
***கணிக்கும் தன்மைத்து அன்று, விடத்தின் கனல் பூதம் -***
***பிணிக்கும் கையும், பெய் பில வாயும் பிழையாமல்***
***துணிக்கும் வண்ணம் காணுதி; துன்பம் துற' என்றான்.***

**"விடத்தின் கனல் பூதம் -** *நஞ்சுபோல் எரிக்கும் இந்தப் பூதம்;* **இன்று இத் தகை வாளால் -** *இன்றைக்கு இந்தத் தகுதிமிக்க வாளால்;* **தணிக்கும் தன்மைத்து அன்று எனின் -** *வெட்டித் துணிக்கத்தக்கது அன்று என்றால்;* **கணிக்கும் தன்மைத்து அன்று -** *நம்மால் வேறு வகையில் மதிப்பிடத் தக்கதன்று;* **பிணிக்கும் கையும் பெய் பில வாயும் -** *தன் எல்லைக்குள் உள்ளவற்றையெல்லாம் கட்டிப்பிடிக்கின்ற கையையும் சிக்கியவற்றையெல்லாம் பெய்கின்ற குகை போன்ற வாயையும்;* **பிழையாமல் -** *குறி*

*தப்பாமல்;* ***துணிக்கும் வண்ணம் காணுதி -*** *துண்டாக்கிப் பிளக்கும் தன்மையைக் காண்பாயாக;* ***துன்பம் துற -*** *துயரத்தை விடுவாயாக;* ***என்றான் -*** *என்று இலக்குவன் கூறினான்.*

*இப் பூதம் நம் வாளால் துணிக்கத்தக்கதே அன்றி வேறுவகையால் மதிக்கத் தக்கதன்று என்பது கருத்து.* *33ஒருவரை ஒருவர் முந்துதல்*

***3676. என்னா முன்னே, செல்லும்***
***இளங்கோ, இறையோற்கு***
***முன்னே செல்லும்; முன்னவன்,***
***அன்னானினும் முந்த,***
***தன் நேர் இல்லாத் தம்பி***
***தடுப்பான்; பிறர் இல்லை;***
***அன்னோ! கண்டார் உம்பரும்***
***வெய்துற்று அழுதாரால்.***

***என்னா -*** *என்று சொல்லிக் கொண்டு;* ***முன்னே செல்லும் இளங்கோ -*** *பூதத்தைத் துணிப்பதற்காக முந்துகின்ற இலக்குவன்;* ***இறையோற்கு முன்னே செல்லும் -*** *தலைவனாகிய இராமனுக்கு முன்னாலே முனைந்து சென்றான்;* ***முன்னவன் -*** *மூத்தவனாகிய இராமன்;* ***அன்னானினும் முந்த -*** *அந்த இலக்குவனுக்கு முன்னாக முனைந்து செல்ல;* ***தன் நேர் இல்லாத் தம்பி தடுப்பான் -*** *தனக்கு வேறு எவரும் ஒப்பில்லாத தம்பியாகிய இலக்குவன் இராமனைத் தடுத்திடுவான்;* ***பிறர் இல்லை -*** *இப்படிப் போட்டி போட்டுக் கொண்டு ஒருவருக்கு ஒருவர் முந்துவோர் இவர்களைத் தவிர வேறு எவரும் எங்கும் இல்லை;* ***கண்டார் உம்பரும் -*** *இந்தப் போட்டியைக்கண்டவர்களாகிய தேவர்களும்;* ***வெய்துற்று அழுதார் -*** *தவிப்புற்று அழுதனர்;* ***அன்னோ -*** *ஐயோ!;* ***ஆல் -*** *ஈற்றசை.*

*இப்படிச் சகோதர நேயம் செயல்படுவது கண்டு உள்ளம் உருகிய தேவர்கள் கூட உருக்கத்தால் அழுதனர். விருப்பு வெறுப்பு நிலை கடந்தவரையும் உருக்கும் உணர்வு நிலையைச் சித்திரிக்கும் கவிஞராலும் பொறுக்க முடியவில்லை; ஐயோ (அன்னோ) என்ற இரக்கக் குறிப்பு கவந்தனை முற்று முன்னரே இடையே பிறக்கிறது. அழுதார் என்று நிறுத்தாமல் அழுதாரால் என்று அசை சேர்த்தமையால் ஏற்படும் நயம், பாடி ஓதுவார்க்கு விளங்கும். உணர்வு நிலையால் எழும் உருக்கத்தை முன்னிறுத்தும் அருமைத் திருப்பாடல்.*

*கவந்தன் கரங்களை வீழ்த்தல்*

***3677. இனையர் ஆகிய இருவரும், முகத்து***
***இரு கண்போல்,***
***கனையும் வார் கழல் வீரர் சென்று***
***அணுகலும், கவந்தன்,***

***'வினையின் எய்திய வீரர் நீர்***
***யாவர்கொல்?' என்ன,***
***நினையும் நெஞ்சினர், இமைத்திலர்;***
***உருத்தனர், நின்றார்.***

***இனையர் ஆகிய -*** *மேற்குறித்தது போல ஒருவருக்கொருவர் முந்தியவராகிய;* ***கனையும் வார்கழல் வீரர் இருவரும் -*** *ஒலிக்கும் பெரிய வீரக்கழல் அணிந்த வீரராகிய இராமலக்குவர் இருவரும்;* ***முகத்து இரு கண்போல் -*** *முகத்தில் உள்ள இரண்டு கண்களும் ஒன்றையே பார்ப்பது போல;* ***சென்று அணுகலும் -*** *சென்று கவந்தனை நெருங்கவும்;* ***கவந்தன் வினையின் எய்திய வீரர் நீர் யாவர்' கொல் என்ன -*** *உங்கள் வினைப் பயனால் (அழியும் பொருட்டு) இங்கு வந்த வீரர்களாகிய நீங்கள் யார்' என்று கேட்க;* ***நினையும் நெஞ்சினர் -*** *நிகழப்போவதை ஒன்று போலக் கருதிய மனம் உடையவராய்;* ***இமைத்திலர் உருத்தனர் நின்றார் -*** *கண் இமைக்காமல் சினம் கொண்டு உறுதிப்பட நின்றனர்.*

*கண் இரண்டு, ஆனாலும், பார்ப்பது ஒன்றையே. இக்கருத்தே'முகத்து இரு கண் போல்' என்ற உவமையின் பொதுத் தன்மை.கனையும் கழல், வார் கழல் எனக் கூட்டிப் பொருள் கொள்க.கனைதல் ஒலித்தல்; வார்; பெரிய. 'உரு உட்கு ஆகும்' என்பதுதொல்காப்பியம். உட்கு : அச்சம் உருத்தனர் : கோபித்தவராய்;முற்றெச்சம்.*

***3678. 'அழிந்துளார் அலர்; இகழ்ந்தனர் என்னை'***
***என்று அழன்றான்;***
***பொழிந்த கோபத்தன்; புதுப்பொறி***
***மயிர்ப்புறம் பொடிப்ப,***
***'விழுங்குவேன்' என வீங்கலும்,***
***விண் உற, வீரர்,***
***எழுந்த தோள்களை வாள்களால்***
***அரிந்தனர், இட்டார்.***

***'அழிந்துளார் அலர் -*** *என்னைக் கண்டும் இவர்கள் தளரவில்லை;* ***இகழ்ந்தனர் என்னை -*** *அஞ்சித் தளராமல் உரமாகநிற்பதால் இவர்கள் என்னை அவமதித்து விட்டனர்';* ***என்று அழன்றான் -*** *என்று எண்ணிக் கவந்தன் சினம் மூண்டான்;* ***பொழிந்த கோபத்தன் -*** *பொங்கிப் பொழியும் சினம் கொண்டவனாய்;* ***புதுப் பொறி மயிர்ப்புறம் பொடிப்ப -*** *புதிதாய் தோன்றிய சினத் தீப்பொறி, மயிர்க் கால் தொறும் தோன்ற;* ***"விழுங்குவேன்" என வீங்கலும் -*** *'இவர்களை விழுங்கிடுவேன்' எனக் கிளம்பிய அளவில்;* ***விண் உற எழுந்த தோள்களை -*** *ஆகாயம் அளாவி எழுந்த கவந்தனின் தோள்களை;* ***வீரர் -*** *வீரம் கொண்ட இராமலக்குவர்;* ***வாள்களால் அரிந்தனர் இட்டார் -*** *வாள்களால் வெட்டி வீழ்த்தினார்கள்.*

*இயல்பாகவே சினப்பொறி தோன்றுகின்ற தோற்றத்தான்,கவந்தன் : இராமலக்குவர் அவனைக் கண்டும் அஞ்சாது நின்றுஉருத்து நோக்கியதால் புதிதாகச் சினப்பொறி தோன்றியது என்பார்,'புதுப் பொறி' என்றார். 36கரம் வெட்டுண்ட கவந்தன் தோற்றம்*

***3679. கைகள் அற்று வெங் குருதி***
***ஆறு ஒழுகிய கவந்தன்,***
***மெய்யின், மேற்கொடு கிழக்கு***
***உறப் பெரு நதி விரவும்,***
***சைய மா நெடுந் தாழ்***
***வரைத் தனி வரைதன்னோடு,***
***ஐயம் நீங்கிய, பேர்***
***எழில் உவமையன் ஆனான்.***

***கைகள் அற்று -*** *கைகள் அறுக்கப் பெற்றதால்;* ***வெங்குருதி ஆறு ஒழுகிய கவந்தன் -*** *வெப்பமான இரத்த ஆறு பெருகிய கவந்தன்;* ***மெய்யின் -*** *உடலின் தோற்றத்தால்;* ***மேற்கொடு கிழக்கு உற -*** *மேற்கிலிருந்து கிழக்கு நோக்கப் பெருகிவரும்;* ***பெரு நதி விரவும் -*** *பெருமைக்குரிய காவிரியாறு பொருந்திய;* ***சைய மா நெடுந் தாழ்வரைத் தனிவரை தன்னோடு -*** *சைய மலை என்னும் பெயருடைய பெரியதும் தாழ்ந்து விரிந்த அடி வாரம் கொண்டதுமாகிய ஒப்பற்ற மலையோடு;* ***ஐயம் நீங்கிய பேர் எழில் உவமையன் ஆனான் -*** *ஐயத்துக்கு இடம் இல்லாத பேரழகு உடைய உவமையனாகக் காணப்பட்டான்.*

*காவிரி பெருகி வரும் சையமால் வரைபோல் இருபாலும் குருதிபாயும் கவந்தனின் உடம்பு தோற்றமளித்தது என்கிறார். மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதி சைய மலை; காவிரி அங்கே பெருகுகிறது. மலையின் இருபாலும் காவிரி நீர் பாயும் தோற்றம் பேரழகாகவே இருக்கும். அந்த இயற்கையழகில் ஈடுபட்ட கம்பருக்குக் கவந்தனின் குருதிப் பெருக்கத்தில் உள்ள கொடுமை உறைக்கவில்லை. அந்த அழகு நாட்டம் இந்தக் கொடுமையை விழுங்கிவிட்டது சையமலையைக் குறித்ததால் செய்யுளில் வந்த பெருநதி என்றது காவிரியாயிற்று. அந்த நதி அங்கே பெருகுதலால்.*

*கவந்தனின் புதுத் தோற்றம்*

***3680. ஆளும் நாயகன் அம் கையின்***
***தீண்டிய அதனால்,***
***மூளும் சாபத்தின் முந்திய***
***தீவினை முடித்தான்;***
***தோளும் வாங்கிய தோமுடை***
***யாக்கையைத் துறவா,***
***நீளம் நீங்கிய பறவையின்,***
***விண் உற நிமிர்ந்தான்.***

***ஆளும் நாயகன் -*** *உயிர்க் கூட்டத்தை ஆண்டருளும் பரமனாகிய இராமன்;* ***அம் கையின் -*** *தன் அழகிய கையினால்;* ***தீண்டிய அதனால் -****தொட்டதினால்;* ***மூளும் சாபத்தின் -*** *மிகுந்த சாபத்தினால்;* ***முந்தியதீவினை முடித்தான் -*** *எம் முயற்சிக்கும் முந்துவதாகிய தீவினைப் பயனை ஒழித்தான்;* ***தோளும் வாங்கிய -*** *தோளும்*

*அறுபட்ட;* ***தோம் உடை யாக்கையைத் துறவா -*** *குற்றம் உடைய உடம்பினைத் துறந்து;* ***நீளம் நீங்கிய பறவையின் -*** *கூட்டை விட்டு வெளியேறிய பறவையைப் போல;* ***விண் உற நிமிர்ந்தான் -*** *வானத்தின் உயரிடத்திலே தோன்றினான்.*

*இராமபிரானின் படைக்கலத்தான் தீண்டப் பெற்றவர்கள் வினைப்பயன் நீங்கியவராய்ப் பெரும்பேறு பெறுவதாகக் கூறுவது கம்பராமாயணத்தின் சிறப்புப் போக்கு. அவ்வாறு தீண்டுவது பரமன்அருள்கின்ற தீட்சை ஆகிறது. கைக்கு அழகாவது நற்பயன் அருளும்திறம். 'மற்றொன்று சூழினும் தான் முந்துறும்' (குறள். 380) என்றவள்ளுவர் வாக்கினை நினைந்து 'முந்திய தீவினை' என்றார். தோளும்என்பதிலுள்ள உம்மை இசை நிறை (ஓசை நிரப்புவதற்காக வரும்அசை) நீளம் : கூடு.*

***3681. விண்ணில் நின்றவன், 'விரிஞ்சனே***
***முதலினர் யார்க்கும்***
***கண்ணில் நின்றவன் இவன்'***
***எனக் கருத்துற உணர்ந்தான்;***
***எண் இல் அன்னவன் குணங்களை,***
***வாய் திறந்து, இசைத்தான்;***
***புண்ணியம் பயக்கின்றுழி***
***அரியது எப் பொருளே?***

***விண்ணில் நின்றவன் -*** *ஆகாயத்தில் உயர்ந்து நின்ற கவந்தன்;* ***'விரிஞ்சனே முதலினர் யார்க்கும் கண்ணில் நின்றவன் இவன்' என -*** *பிரமன் முதலான பெருந்தேவர்கள் யாவர்க்கும் கண்ணுறு சோதியாய் நின்ற பரமன் இவன்தான் என்று;* ***கருத்துற உணர்ந்தான் -*** *மனத்தில் பொருந்துமாறு உணர்ந்தான்;* ***எண் இல் அன்னவன் குணங்களை -*** *கணக்கில் அடங்காத அப்பெருமானின் பண்புகளை;* ***வாய் திறந்து இசைத்தான் -*** *வாய்விட்டுப் பாடிக் கூறித் துதிக்கலானான்;* ***புண்ணியம் பயக்கின்றுழி -*** *நல்வினை முன்னின்று பயனை ஊட்டுகின்றபோது;* ***எப்பொருள் அரியது -*** *எந்தப் பொருள்தான் அரியதாகும்? (எளிதில் கைக்கனியாகக் கிட்டும் என்பதாம்).*

*'விண்ணுற நிமிர்ந்தான்' என முன்பாட்டில் சொன்னவாறே 'விண்ணில் நின்றவன்' என இங்கும் கவந்தனைக் குறித்தார். கண்ணில் நிற்றல் : தியானத்தில் தோன்றிப் பதிதல். விரிஞ்சன் முதலியோரின் தியானப் பொருளாக உள்ள பரம் பொருளே இராம பிரான் என்ற ஞானக் காட்சி கவந்தனுக்கு வாய்த்தது. இறைவனைக் கண்ணன், கண்ணுளான் என்பது மரபு. சிந்தைக்கு எட்டாதது பரம் பொருளாதலின் எண் இல் அன்னவன் என்றார்' என்னுதற்கு, அரியது எண்ணம் கடந்தது ஆகிய பரம்பொருள் எளிவந்தபாங்கில் (சௌலப்பியம்) கவந்தனுக்கு ஞானக் காட்சி அருளியதால்'புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே என்றார். கவந்தனுக்கு வாய்த்த பேரருட் கொடையினைச் சிறப்புச் செய்தியாகக் கொண்டு, உலகு அறி பெற்றியதாகப் 'புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே' என்ற பொதுச் செய்தி சுட்டியது வேற்றுப் பொருள் வைப்பணி.*

*கவந்தன் இராமனைத் துதித்தல்*

*3682. 'ஈன்றவனோ எப் பொருளும்? எல்லை*
*தீர் நல் அறத்தின்*
*சான்றவனோ? தேவர் தவத்தின்*
*தனிப் பயனோ?*
*மூன்று கவடு ஆய் முளைத்து*
*எழுந்த மூலமோ?*
*தோன்றி, அரு வினையேன் சாபத்*
*துயர் துடைத்தாய்!*

**தோன்றி -** *யான் இருக்குமிடத்துக்கே நின் எளிமையால் வந்து காட்சியளித்து;* **அருவினையேன் சாபத் துயர் துடைத்தாய் -** *போக்குதற்கு அரிய வினையுடைய என் சாபத்துன்பத்தை அழித்தவனே!;* **எப்பொருளும் ஈன்றவனோ -** *எல்லாப் பொருள்களையும் படைத்தவன் நீதானோ;* **எல்லை தீர் நல் அறத்தின் சான்றவனோ -** *முடிவில்லாத நல்ல அறத்துக்குச் சாட்சியாக இருப்பவன் நீதானோ;* **தேவர் தவத்தின் தனிப் பயனோ -** *தேவர்கள் மேற்கொண்ட தவத்தின் ஒப்பற்ற பயனாக இருப்பவன் நீதானோ;* **மூன்று கவடு ஆய் முளைத்து எழுந்த மூலமோ -** *(பிரமன், திருமால், சிவன் என்ற) மூன்று பிரிவாகக் கிளைத்து எழுந்த மூலப் பரம்பொருள் நீதானோ? இயங்கு பொருள் நிலைப் பொருள், உயிர்ப் பொருள் உயிரில் பொருள், உயர்திணை அஃறிணை என்று பல்வேறு பிரிவுகள் எல்லாவற்றையும் படைத்தவன் என்ற கருத்தில் 'எப்பொருளும்' என்றார். பல் வகைகளால் அலைப்புண்டாலும் இறுதியில் தன் ஆற்றலை நிறுவி நிலைத்திருப்பது அறம் ஒன்றே யாதலின் 'எல்லை தீர் நல்லறம்' என்றார். 'மூவராய் முதலாகி மூலம் அது ஆகி' என்றுமுன்னே (1556) சிவபிரானைக் கம்பர் குறித்தார். 'மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ!' என்று பின்னே (4063) இராமபிரானைக் குறிப்பார் கம்பர். நான்முகனாய் அவனுள்ளிருந்து படைப்பித்தும், திருமாலாய்அவனுள்ளிலிருந்து காத்திடச் செய்தும், சிவனாய் அவனுள்ளிருந்து அழிப்பித்தும் இயக்குவோன்/ இயங்குவோன் ஆதி நாரணனே என்று கொள்வது ஸ்ரீவைணவம் என்பது கருதுக. 'அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான் அரனாய் அழிப்பவனும் தானே' எனச் சைவமும் (திருக்கயிலாய ஞானஉலா-9) கூறுதல் காண்க. 'மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன்தன்னை' (நாலாயிர 2360) என்று நம்மாழ்வார் அருளியது காண்க. 4*

*3683'மூலமே இல்லா முதல்வனே!*
*நீ முயலும்*
*கோலமோ, யார்க்கும் தெரிவு*
*அரிய கொள்கையவால்;*
*ஆலமோ? ஆலின் அடையோ?*
*அடைக் கிடந்த*
*பாலனோ? வேலைப்*
*பரப்போ? பகராயே!*

**மூலமே இல்லா முதல்வனே -** *தனக்கு ஒரு காரணம் இல்லாமல் எல்லாவற்றுக்கும் காரணனாக இருப்பவனே;* **நீ முயலும்கோலமோ -** *நீ உன் சங்கற்பத்தால் கொள்ளும்*

*வடிவங்களோ என்றால்;* ***யார்க்கும் தெரிவு அரிய கொள்கைய -*** *எவராலும் தெரிந்து கொள்ளுதற்கு இயலாத பாங்கு கொண்டவை (உன் உண்மையான உருவம் எனத் தக்கது);* ***ஆலமோ -*** *ஊழிக் காலத்ததாகிய ஆலமரமோ;* ***ஆலின் அடையோ -*** *அந்த ஆலமரத்தின் ஓர் இசையோ; (அன்றி);* ***அடைக் கிடந்த பாலனோ -*** *அந்த ஆல் இலையில் பள்ளி கொள்ளும் பாலனோ;* ***வேலைப் பரப்போ -*** *(ஊழிக் காலத்தில் எங்கும் பொங்கிக் கிடக்கும்) கடற் பரப்போ;* ***பகராய் -*** *(இவற்றுள் எதுதான் உன் உண்மை வடிவமாகக் கொள்ளத்தக்கது என்பதைச்) சொல்.*

*காரணம் இன்றிக் காரியம் இல்லை; வித்தின்றி விளைவில்லை.இது பொது விதி. எல்லாவற்றுக்கும் காரணமாக இருப்பது பரம்; அப்பரத்துக்கு ஒரு காரணம் இல்லை. ஒரு காரணத்தின் விளைவாக இருப்பது பரம் ஆகாது. ஒரு முதல் உடையதாய்த் தோன்றுவது எதற்கும் ஒரு முடிவு உண்டு; பரம்பொருள் ஆதி இல்லாதது; எனவே அந்தமும் இல்லாதது. ஆதி அந்தம் இல்லா ஒன்றுதான் எதற்கும் காரணமாதல் கூடும். இத்தகைய தத்துவத்திற்கு ஒரு வடிவம் ஊட்டிஉணர்வது சில் வாழ்நாட் சிற்றறிவுடைய சிற்றுயிரின் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது. ஊழிக் காலத்தே பெரு வெள்ளத்தில் மிதவையாய் உள்ள ஆல் இலையில் பரமன் பாலனாக இருப்பான் என்று, நூல்கள் கூறுகின்றன. ஊழியே முடிவு; எனவே, முடிவின் எல்லையில் பரம்பொருள் கொள்ளும் வடிவே உண்மை வடிவு எனலாமோ என்று வினாவுகிறான் கவந்தன். அப்போதும் தடை எழுகிறது. ஆல் இலைக்குக் காரணம் ஆலமரமாதல் வேண்டும்; அவ்வாலமரத்துக்குஇடம் எது? கடலா!? கடலிலே ஆலமரமா? அறிவுக்கும் உணர்வுக்கும் எட்டாத நிலை......... ஊழிக் கடலா, ஆல மரமா, ஆல் இலையா, இலையில் கிடக்கும் பாலனா....? ஊழியே எட்டாதபோது அவ்வூழி பற்றிய கற்பனை மட்டும் எட்டி விடுமா? இப்படிப் பல தடை விடைகளுக்குப் பிறகும் நிற்பது ஒரே கருத்து இது தான் : மூலமே இல்லாத முதல்வன்! தன் சங்கற்பத்தால் கொள்ளும் வடிவங்களுக்குஒரு கணக்கோ கணிப்போ இல்லை. 'போற்றி எவ்வுயிர்க்கும் தோற்றம் ஆகி நீ தோற்றம் இல்லாய்' என்ற மணிவாசகர் (திருவா. திருச்சதகம் 70) கூற்றிலும் இக் கருத்தினை உணரலாம். 'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமிலானுக்குஆயிரம் திருநாமம் பாடி'க் கொண்டாடுதல் சிற்றுயிர்மாட்டுக் கொண்டகருணையால் பெரியோர் வகுத்த வழி; உருவ வழிபாட்டில் ஒரு நிலைஇது. 4*

***3684'காண்பார்க்கும் காணப்படு***
***பொருட்கும் கண் ஆகி,***
***பூண்பாய்போல் நிற்றியால்,***
***யாது ஒன்றும் பூணாதாய்;***
***மாண்பால் உலகை வயிற்று***
***ஒளித்து வாங்குதியால்;***
***ஆண்பாலோ? பெண்பாலோ?***
***அப்பாலோ? எப்பாலோ?***

***காண்பார்க்கும் -*** *காணுகின்றவர்களுக்கும்;* ***காணப்படு பொருட்கும் -*** *காணப்படுகின்ற பொருள்களுக்கும்;* ***கண் ஆகி -*** *ஆதாரமாகி;* ***யாது ஒன்றும் பூணாதாய் -*** *எந்த ஒரு பொருளையும் சாராதவனாய் உள்ள நீ;* ***பூண்பாய் போல் நிற்றி -*** *எல்லாப் பொருளையும் சார்ந்திருப்பவன்போல் நிலைத்திருக்கிறாய்;* ***மாண்பால் -*** *(உன்பால்*

*அமைந்த தெய்வீகப்) பெருமிதத்தால்;* **உலகை வயிற்று ஒளித்து -** *(ஊழிக் காலத்தில்) எல்லா உலகங்களையும் நின் வயிற்றினுள்ளே மறைத்து வைத்து;* **வாங்குதி -** *(பிரளய முடிவிலே மீண்டும்) வெளிக் கொணர்கிறாய்;* **ஆண்பாலோ பெண்பாலோ -** *நீஆணா, பெண்ணா;* **அப்பாலோ -** *இருபாலுக்கும் அப்பாற்பட்ட அலிப் பாலோ;* **எப்பாலோ -** *முப்பாலும் அல்லாத வேறு தனி ஒரு பாலோ; (எவ்வாறு உன்னைப் பகுத்து அறிவது?).*

*காண்பார்க்குக் கண்ணாகி காணப்படும் பொருட்கும் கண் அருள்பவன் ஒளிவடிவினனாகிய கண்ணன். அவன் ஒளிச் சார்பின்றிக் காண்பாரும் இல்லை, காணப்படுவனவும் இல்லை என்றவாறு. 'காட்டுவித்தால் ஆர் ஒருவர் காணாதாரே காண்பார் ஆர் கண்ணுதல் நீ காட்டாக்காலே' என்ற திருநாவுக்கரசர் வாக்கு நினைவு கூரத்தக்கது. 'ஆண் அல்லன் பெண் அல்லன் அல்லா அலியும் அல்லன்; காணலும் ஆகான்; உளன் அல்லன் இல்லை அல்லன்; பேணுங்கால் பேணும் உருவாகும் அல்லனும் ஆம்! கோணை பெரிது உடைத்து எம் பெருமானைக் கூறுதலே' (நாலாயிர. 2245) என்ற நம்மாழ்வார் திருவாக்கு இங்குப் பல பாடல்களின் கருத்துக்களைத் தெளிவாக்கும்.*

***3685. 'ஆதிப் பிரமனும் நீ!***
***ஆதிப் பரமனும் நீ!***
***ஆதி எனும் பொருளுக்கு அப்பால்***
***உண்டாகிலும் நீ!***
***"சோதிச் சுடர்ப் பிழம்பு நீ!***
***என்று சொல்லுகின்ற***
***வேதம் முறைசெய்தால், வெள்காரோ***
***வேறு உள்ளார்?***

**ஆதிப் பிரமனும் நீ -** *எல்லாவற்றுக்கும் தொடக்கமாய் உள்ள நான்முகனும் நீயே;* **ஆதிப் பரமனும் நீ -** *எல்லாவற்றுக்கும் ஆதியாகிய (நான்முகனுக்கும்) மூலப் பொருளும் நீயே!;* **ஆதி எனும் பொருளுக்கு -** *மூலம் என்று சொல்லப்படுவதாகிய பொருளுக்கும்;* **அப்பால் உண்டாகிலும் நீ -** *கடந்ததாய் ஏதேனும் ஒன்று இருந்தால் அதுவும் நீயே;* **'சோதிச் சுடர்ப் பிழம்பு' நீ என்று -** *'பரஞ்சுடராய் ஒளிரும் ஒளித்திரள் நீ என்று;* **சொல்லுகின்ற வேதம் -** *உன்னைப் போற்றுகின்ற வேதங்கள்;* **முறை செய்தால் -** *முறையிட்டால்;* **வேறுஉள்ளார் -** *வேதம் கூறும் இவ்விலக்கணத்துள் அடங்காத பிறர் தெய்வங்களெல்லாம்;* **வெள்காரோ -** *வெட்கப்பட மாட்டார்களோ?*

***'முடிச் சோதியாய்! உனது முகச் சோதி மலர்ந்ததுவோ   அடிச் சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ   படிச் சோதி ஆடையொடும் பல்கலனாய் நின்பைம்பொன்   கடிச் சோதி கலந்ததுவோ? திருமாலாய் கட்டுரையே***

*என்ற திருப்பாசுரம் திருமாலின் பல் கோலமும் பல்கலனும் சோதிப்பாங்காய் ஒளிர்வதைக் கூறும். (நாலாயிர. 3121)*

***பரஞ்சோதி! நீ பரமாய் நின் இகழ்ந்து பின் மற்றோர் பரஞ்சோதி இன்மையில் படி ஓவி நிகழ்கின்ற பரஞ்சோதி நின்னுள்ளே படருலகம் படைத்த எம் பரஞ்சோதி கோவிந்தா! பண்புரைக்க மாட்டேனே***

*என்ற திருப்பாசுரத்துள் (3123) திருமாலே பரஞ்சோதி என்ற கருத்து அமைந்தவை இரண்டும் நம்மாழ்வார் பாடல்களாகும். 'சோதியாய்த் தோன்றும் உருவமே (திருவாசகம், கோயில் திருப்பதிகம் 1) என மணிவாசகரும் இறைவனைச் சோதியாய்க் கண்டு, காட்டுவர். பரம்பொருளைச் சோதி எனக் கொள்வது பல் சமயத்துக்கும் உடன்பாடு. ஞான தீட்சை பெற்ற கவந்தனுக்கு அக்காட்சி வாய்த்தது.*

***3686. 'எண் திசையும் திண் சுவரா,***
***ஏழ் ஏழ் நிலை வகுத்த***
***அண்டப் பெருங் கோயிற்கு***
***எல்லாம் அழகுடைய***
***மண்டலங்கள் மூன்றின்மேல்,***
***என்றும் மலராத***
***புண்டரிக மொட்டின் பொகுட்டே***
***புரை; அம்மா!***

***எண் திசையும் திண் சுவரா(க) -*** *எட்டுத் திசைகளே வலிமையான சுவர்களாக அமைய;* ***ஏழ் ஏழ் நிலை வகுத்த -*** *பதினான்கு நிலைகள் உடையதாக வகுக்கப்பட்ட;* ***அண்டப் பெருங்கோயிற்கு எல்லாம் -*** *அண்டமாகிய பெரிய கோயில் முழுவதற்கும்;****அழகுடைய மண்டலங்கள் மூன்றின் மேல் -*** *சூரிய, சந்திர நட்சத்திரம் என்னும் அழகிய மூன்று மண்டலங்களுக்கு மேலாக;* ***என்றும் மலராத புண்டரிக மொட்டின்பொகுட்டு -*** *எப்பொழுதும் மலராத தாமரை அரும்பின் கொட்டையே;* ***புரை -*** *உனது இருப்பிடமாகும்.*

*திருமாலின் இருப்பிடத்தைக் கூறுவது இச் செய்யுள் அண்டமேகோயில்; திசைகளே சுவர், மேல் ஏழும் கீழ் ஏழுமாக அமைந்துள்ளஉலகங்களே கோயிலின் அடுக்கு நிலைகள் அக்கோயிலுக்கு ஒளி ஊட்டுவன சூரிய, சந்திர, நட்சத்திர மண்டலங்கள்; அந்த ஒளி மண்டலங்களின் ஒளி பெற்றுத் தான் மலர வேண்டுமென்றில்லாததொரு தாமரை அரும்பு; அந்த அரும்பினுள் உள்ள காணிகை என்னும் (தாமரைக்) காயே பரமபதமாகிய இருப்பிடம். பூவுலகத்துத் தாமரை மலர்வதற்குக் கதிரவன் ஒளி தேவை; ஆயின், பரமபதத் தாமரைக்குக் கதிரவன் முதலாய ஒளி மண்டலங்களின் உதவி தேவைப்படாது ஏழ் ஏழ் (ஏழேழ்) உம்மைத் தொகை (ஏழும் ஏழும்).*

***3687. 'மண்பால்-அமரர் வரம்பு***
***ஆரும் காணாத,***
***எண்பால் உயர்ந்த, எரி***
***ஓங்கும் நல் வேள்வி***
***உண்பாய் நீ; ஊட்டுவாய் நீ;***
***இரண்டும் ஒக்கின்ற***

***பண்பு ஆர் அறிவார்?***
***பகராய், பரமேட்டி!***

***பரமேட்டி -*** *எல்லாவற்றினும் மேலான நிலையில் உள்ளவனே;* ***மண்பால் அமரர் -*** *பூசுரர் எனப்படும் வேதியர்கள்;* ***வரம்பு ஆரும் காணாத எண்பால் உயர்ந்த -*** *முடிவெல்லையாக அமைந்து எவராலும் காண இயலாத எட்டுத் திசைகளிலும் மேம்பட்ட;* ***எரி ஓங்கும் நல் வேள்வி -*** *ஓமத் தீயில் பெருமையால் உயர்ந்த வேள்வியுணவை (அவியுணவை);* ***உண்பாய் நீ -*** *உண்பவன் நீயே;* ***ஊட்டுவாய் நீ -*** *(அவியுணவை உனக்கு ஊட்டுவோர்க்கும்) ஊட்டுகின்றவனும் நீயே!;* ***இரண்டும் ஒக்கின்ற பண்பு -****உண்பவனும் ஊட்டுவோனுமாக இரண்டு நிலைகளும் உன்னிடம் ஒன்றியுள்ள பண்பினை;* ***ஆர் அறிவார் -*** *எவர்தாம் அறிவர்?;* ***பகராய் -*** *சொல். வேதியர்களைப் பூசுரர் (மண்ணுலகத் தேவர்) என்பது ஒரு மரபு.பரமேஷ்டி என்ற வடசொல் பரமேட்டி என நின்றது. எண் பால் - கருத்தளவால் (அளவிட முடியாத) பாங்கு எனலுமாம். உண்பானும் ஊட்டுபவனுமாய் இருக்கின்ற அரு மாயை நிலை நம்மனோரால் அறியும் நிலையதன்று என்பது கருத்து 'நீ அறிதி எப்பொருளும்; அவை உன்னை நிலை அறியா; மாயை இது என்கொலோ? வாராதே வரவல்லாய் (2570), துறந்தாயும் ஒத்தி; துறவாயும் ஒத்தி; ஒரு தன்மைசொல்ல அறியாய் - பிறந்தாயும் ஒத்தி; பிறவாயும் ஒத்தி.... ஆர் இவ்அதிரேக மாயை அறிவார்' (8259), 'எறிந்தாரும் ஏறுபடுவாரும்....... எனல் ஆய தன்மை தெரிகின்றது உன்னது இடையே பிறிந்தார் பிறிந்த பொருளோடு போதி; பிறியாது நிற்றி.... ஆர் இவ் அதிரேக மாயை அறிவார் (8261) என்ற கவிஞர் வாக்குகளையும் ஒப்பிட்டு உணர்க. 4*

***3688'நிற்கும் நெடு நீத்த***
***நீரில் முளைத்தெழுந்த***
***மொக்குளே போல, முரண்***
***இற்ற அண்டங்கள்,***
***ஒக்க உயர்ந்து, உன்னுளே***
***தோன்றி ஒளிக்கின்ற***
***பக்கம் அறிதற்கு,***
***எளிதோ? பரம்பரனே!***

***பரம்பரனே -*** *மேலானவற்றுக்கெல்லாம் மேலானவனே;* ***நிற்கும் நெடு நீத்த நீரில் -*** *(பிறவெல்லாம் குலைந்து கிடக்கும் ஊழியிலும்) நிலையாக இருக்கும் பெரு வெள்ளக் கடலில்;* ***முளைத்தெழுந்த மொக்குளே போல -*** *தோன்றிய குமிழ்கள் போல;* ***முரண் இற்ற அண்டங்கள் -*** *(அமைதிக் காலத்தே ஒன்றோடு ஒன்றுக்கு நிலவிய)முரண்பாடுகள் அழியப் பெற்ற அண்டங்கள்;* ***ஒக்க உயர்ந்து -*** *ஒரேநேரத்தில் மேலெழுந்து (படைப்புக் காலத்திலே தோன்றி);****உன்னுளே தோன்றி -*** *உன்னிடத்தே தோன்றி;* ***ஒளிக்கின்ற பக்கம் -*** *(ஊழிக்காலத்திலே அதே ஊழி வெள்ளத்திலேயே) ஒளிந்து மறைகின்ற தன்மை;* ***அறிதற்கு எளிதோ -*** *அறிந்து கொள்ளுதற்கு எளிதோ? (அறியமுடியாதது).*

*பரம் - மேலானது; பரன் - மேலானவன்; பரம்பரன் - மேலானவற்றுளெல்லாம் மேலானவன்; நிகர் இல்லான். ஊழி முடிவில் பரமன் சங்கற்பத்தால் உருவாகும் அண்டங்கள் இறுதியூழியில் அவ்வெள்ளத்தினுள்ளே ஒடுங்குகின்றன என்பது சாத்திரக் கொள்கை. ஊழிக் காலப் பெருக்காம் கடலை மகார்ணவம் என்று வடமொழி*

*நூல்கள் குறிக்கின்றன என்பர். ஊழிக் கடலில் தோன்றி, மீண்டும் அக்கடலில் தானே ஒடுங்குவதென்பது பரமனில் தோன்றிப் பரமனிலேயே ஒடுங்குவதைக் குறித்ததாம். இக் கருத்தினை அழகியமணவாள தாசர் ஓர் உவமை கொண்டு விளக்குவார்; அச் செய்யுள் : 'சின்னூல் பலபல வாயால் இழைத்துச் சிலம்பி மின்னும் அந்நூல் அருந்திவிடுவது போல அரங்கர் அண்டம் பல்நூறு கோடி படைத்துஅவை யாவும் பழம்படியே மன் ஊழி தன்னில் விழுங்குவர் போத மனம் மகிழ்ந்தே (திருவரங்கத்து மாலை 12)*

***3689. 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ,***
  ***நீள் மறைகள்?***
***உன் செய்கை அன்னவைதான்***
  ***சொன்ன ஒழுக்கினவோ?***
***என் செய்தேன் முன்னம்?***
  ***மறம் செய்கை எய்தினார்-***
***பின் செல்வது இல்லாப் பெருஞ்***
  ***செல்வம் நீ தந்தாய்!***

***நீள் மறைகள் -*** *பெரு வேதங்கள்;* ***நின் செய்கை கண்டு நினைந்தனவோ -*** *உன் செய்கைகளை உணர்ந்த அனுபவத்தால் நினைந்து செய்யப்பட்டனவோ; (அன்றி);* ***உன் செய்கை தான் -****உன் செய்கைகள் தான்;* ***அன்னவை சொன்ன ஒழுக்கினவோ -*** *அவ்வேதங்கள் சொன்ன முறையிலே அமைந்தனவோ?;* ***மறம் செய்கை எய்தினார் பின் செல்வது இல்லாப் பெருஞ்செல்வம் -*** *அறநெறிப் படாத தீவினைகளைச் செய்வோரின் பின்னாலே செல்லாத பெரிய செல்வத்தை;* ***நீ தந்தாய் -*** *எனக்கு நீ தந்தருளினாய்;* ***முன்னம் என் செய்தேன் -*** *இத்தகைய அருள் நலத்தை அடியேன்இப்பிறவியில் பெறுவதற்கு முன்னைப் பிறவிகளிலே என்ன நல்வினை செய்தேனோ?*

*வேதங்கள் உன் செய்கைகளை உணர்ந்ததன் விளைவா, அன்றி உன் செயல்கள் வேதங்களின் சொல் வழியை விளக்குவனவா என்ற பிணைவினாக்கள் தேவ நெறியும் இறைநிலையும் வெவ்வேறு அல்ல என்பதை உணர்த்தின.*

*முற்பிறப்புகளில் நல்வினை செய்திருந்தாலன்றி இந்தப் பேறு இப்போது வாய்த்திராது என்பது குறிப்பு. 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து முன்னம் நீ புரி நல்வினைப் பயனிடை முழு மணித்தரளங்கள் மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப் பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும்வழிபடும் அதனாலே........' என்ற திருஞானசம்பந்தர் வாக்கிலே இக் கருத்து அமைதல் கருதத்தக்கது.*

***3690. 'மாயப் பிறவி மயல்***
  ***நீக்கி, மாசு இலாக்***
***காயத்தை நல்கி, துயரின்***
  ***கரை ஏற்றி,***

***பேய் ஒத்தேன் பேதைப் பிணக்கு***
***அறுத்த எம் பெருமான்!***
***நாய் ஒத்தேன்; என்ன நலன்***
***இழைத்தேன் நான்?' என்றான்.***

***மாயப் பிறவி மயல் நீக்கி -*** *மாயை சூழ்ந்த பிறவியின் மயக்கத்தைப் போக்கி;* ***மாசு இலாக் காயத்தை நல்கி -*** *குற்றம் இல்லாத உடலைத் தந்தருளி;* ***துயரின் கரை ஏற்றி -*** *துயர்க்கடலின்கரையிலே ஏற்றுவித்து;* **பேய் ஒத்தேன் பேதைப் பிணக்கு அறுத்தஎம்பெருமான் -** *நெறி மாறித் திரிதலில் பேயை ஒத்தவனாகிய என் அஞ்ஞானத் தொடர்பை அறுத்தருளிய எம் பெருமானே;* **நாய் ஒத்தேன் நான் -** *கீழ்மையில் நாய் போன்றவனாகிய யான்;* **என்ன நலன் இழைத்தேன் -** *(எக் காரணமும் இல்லாமல் நீ என்னை ஆட்கொண்டு அருளுவதற்கு) அப்படி என்ன நல்வினைகளைச் செய்துவிட்டேன்!, என்றான்---;*

*'என் அளவில் - யான் அறிந்தவரை - இப்பிறப்பில் எந்த நல்வினையும் செய்ததாக உணர இயலவில்லை; எனினும் என் அஞ்ஞானத்தை அழித்து ஞானம் அடைதற்கு ஒத்த நல்லுடம்பை உதவித் துன்பக் கடலின் கரை சேர்த்தாய் இவ்வளவு புண்ணியப் பயனை எனக்கு நீ அருளுதற்கு என்ன புண்ணியமும் யான் செய்ததாகத் தெரியவில்லையே!காரணம் இன்றியும் கருணை புரிந்திட எளிவந்தருளும் நின் பாங்கு இருந்தவாறு என்னே' என வியந்து கூறுகிறான், கவந்தன். மடிமாங்காய் இட்டுத் திருடன் என்று கூறி வலிய ஆட்கொள்ளும் திறன்உடையான் பரமன் என வைணவர்கள் போற்றும் திறம் இங்குஉணரத்தக்கது.*

*கவந்தனை இராமன் காணுதல்*

***3691. என்று, ஆங்கு, இனிது இயம்பி,***
***'இன்று அறியக் கூறுவெனேல்,***
***ஒன்றாது, தேவர் உறுதிக்கு'***
***என உன்னா,***
***தன் தாயைக் கண்ணுற்ற கன்று அனைய***
***தன்மையன் ஆய்,***
***நின்றானைக் கண்டான்,-நெறி நின்றார்***
***நேர் நின்றான்.***

***என்று ஆங்கு இனிது இயம்பி -*** *மேற்கூறியவாறு இராமனைப் பரம்பொருளென இனிது போற்றிச் சொல்லி;* ***'இன்று அறியக் கூறுவெனேல் -*** *இதற்குமேல் விவரங்களை வெளிப்படையாக நான்கூறினால்;* **தேவர் உறுதிக்கு ஒன்றாது' -** *தேவர்களுக்குத் திருமால் கொடுத்த உறுதிமொழிக்குப் பொருந்தாது;* ***என உன்னா -*** *என்று நினைத்து (அதற்கு மேற்பட வரவுள்ளன எதுவும் கூறாமல்);* ***தன் தாயைக் கண்ணுற்ற கன்று அனைய தன்மையனாய் -*** *தாய்ப் பசுவைக் கண்ட கன்று போன்ற இயல்புடையவனாய்;* **நின்றானை -***விண்ணிடத்தே தெய்வ உருக் கொண்டு நின்ற கவந்தனை;* **நெறி நின்றார் நேர் நின்றான் -** *அறம் மற்றும் பக்தி நெறியில் நின்றவர்க்கு முன் தரிசனம் தந்து நிற்பவனாகிய இராமபிரான்;* ***கண்டான்......*** *;-*

*சாப விடுதலை பெற்ற மகிழ்ச்சியிலும் பக்திக் கனிவாலும் இராமனாகிய பரம் பொருளைக் கவந்தன் இனையன கூறி வழுத்தினன். அப்பரம்பொருளே அரக்கர் அழிவின் பொருட்டு இராமனாக அவதரித்திருப்பது, மற்றும் வரவிருக்கும் நிகழ்ச்சிகள் ஆகியவற்றைச் சொன்னால் தெய்வ ரகசியத்தை வெளிப்படுத்தியவன் ஆவான். இந்த நினைப்பு எழுந்ததால் 'இன்று அறியக் கூறுவனேல் தேவர் உறுதிக்கு ஒன்றாது' என நினைந்தான். சாபத்தால் கவந்தமாக இருந்தவனுக்குமுதலில் இராமனின் தெய்வப் பெற்றிமை தெரியவில்லை; ஆளும் நாயகன் அம் கையின் தீண்டிய அதனால்' (3680) ஞான தீட்சை பெற்றவனாய்த் தெய்வ உருவினை அடைந்தான். தேவ வடிவினனாக மலர்ந்த கவந்தனுக்கு இராமாவதாரப் பின்னணி தெளிவாயிற்று என்பதை உணர்தல் வேண்டும். 'கன்று' எனப் பின் சுட்டியது கொண்டு 'தாய்' என்பதற்குத் தாய்ப் பசு எனப் பொருள் கூறப்பட்டது. உன்னா - செய்யா எனும் வாய்பாட்டில் வந்த (உன்னி) உடன்பாட்டு வினையெச்சம். நின்றான், நின்றார் - வினையாலணையும் பெயர்கள்.*

இலக்குவன் வினவுதல்

***3692. 'பாராய், இளையவனே! பட்ட***
***இவன், வேறே ஓர்***
***பேராளன்தானாய், ஒளி***
***ஓங்கும் பெற்றியனாய்,***
***நேர், ஆகாயத்தின்மிசை நிற்கின்றான்;***
***நீ இவனை***
***ஆராய்! என, அவனும், 'ஆர்கொலோ***
***நீ? என்றான்.***

*'**இளையவனே** - தம்பீ; **பாராய்** - மேலே நிற்பவனைப் பார்; **பட்ட இவன்** - இறந்து போன இவன்; **வேறே ஓர் பேராளன் தானாய்** - மற்றொரு வடிவம் கொண்டு பெருமையை ஆள்பவனாயும்; **ஒளி ஓங்கும் பெற்றியனாய்** - ஒளி பெருகும் தன்மை உடையவனாயும்; **நேர்** - நேராக நம் முன்னே; **ஆகாயத்தின்மிசை நிற்கின்றான்** - விண் மீது நிற்கின்றான்; **நீ இவனை ஆராய்** -இவனைப் பற்றிய விவரங்களை நீ ஆராய்ந்து அறிவாயாக; **என** - என்று இராமன் சொல்ல; **அவனும்** - இளவலாகிய இலக்குவனும்; **'ஆர்கொலோ நீ** - நீ யார்; **என்றான்** - என்று கவந்தனைவினவினான்.*

*அறுசீர் ஆசிரியவிருத்தம்*

***3693. 'சந்தப் பூண் அலங்கல் வீர! தனு***
***எனும் நாமத்தேன்; ஓர்***
***கந்தர்ப்பன்; சாபத்தால், இக்***
***கடைப்படு பிறவி கண்டேன்;***
***வந்துற்றீர் மலர்க்கை தீண்ட,***
***முன்னுடை வடிவம் பெற்றேன்;***

***எந்தைக்கும் எந்தை நீர்; யான்***
***இசைப்பது கேண்மின்' என்றான்.***

***'சந்தப் பூண் அலங்கல் வீர்!*** *- அழகிய அணிகளும் மாலையும் அணிந்துள்ள வீரனே;* ***தனு எனும் நாமத்தேன் -*** *நான் தனு என்ற பெயருடையவன்;* ***ஓர் கந்தர்ப்பன் -*** *நான் ஒரு கந்தருவன்;* ***சாபத்தால் -*** *ஒரு முனிவர் இட்ட சாபத்தால்;* ***கடைப்படு இப் பிறவி கண்டேன் -*** *கீழானதாகிய இந்தக் கவந்தப் பிறப்பை அடைந்தேன்;* ***வந்துற்றீர் மலர்க்கை தீண்ட -*** *இங்கு வந்து சேர்ந்தவர்களாகிய உங்கள் மலர் போன்ற கைகள் தீண்டியமையால்;* ***முன்னுடை வடிவம் பெற்றேன் -*** *எனக்கு உரியதாகிய பழைய வடிவத்தைப் பெற்றேன்;* ***எந்தைக்கும் எந்தை நீர் -*** *என் தந்தைக்கும் தந்தையர் போன்றவர்கள் நீங்கள்;* ***யான் இசைப்பது கேண்மின்' -*** *நான் சொல்லுவதைக் கேளுங்கள்;* ***என்றான் -*** *என்றுமறு வடிவம் கொண்ட கவந்தன் கூறினான்.*

***தனு என்பது கவந்தனின் முற்பெயர். விசுவாவசு என்று கூறுவதும் உண்டு.***

***5***

***3694'கணை உலாம் சிலையினீரைக்***
***காக்குநர் இன்மையேனும்***
***இணை இலாள் தன்னை நாடற்கு***
***ஏயன செய்தற்கு ஏற்கும்;***
***புணை இலாதவற்கு வேலை போக்கு***
***அரிது; அன்னதேபோல்,***
***துணை இலாதவருக்கு இன்னா, பகைப்***
***புலம் தொலைத்து நீக்கல்.***

***'கணை உலாம் சிலையினீரைக் -*** *அம்புகள் நிரம்பப் பொருந்தும் வில் ஏந்திய உங்களை;* ***காக்குநர் இன்மையேனும் -*** *காக்க வேண்டியவர்களோ காக்கும் தகுதியுடையவர்களோ எவரும் இல்லையென்றாலும்;* ***இணை இலாள்தன்னை நாடற்கு -*** *ஒப்பற்றவளாகிய சீதாபிராட்டியாரைத் தேடுவதற்கு;* ***ஏயன செய்தற்கு ஏற்கும் -*** *பொருத்தமான செயல்களைச் செய்வதற்குப் பிறர் துணையை நாடிப்பெறுதல் பொருந்தும்;* ***புணை இலாதவற்கு வேலை போக்கு அரிது -*** *தெப்பம் இல்லாதவர்களுக்கு கடலைக் கடப்பது அரிது;* ***அன்னதே போல் -*** *அதைப் போல;* ***பகைப் புலம் தொலைத்து நீக்கல் -*** *பகைவர்களை அழித்தொழிப்பது;* ***துணை இலாதவருக்கு இன்னா' -*** *துணை வலிமை அற்றவர்களுக்குத் துன்பமேயாகும்.*

*'தன் துணை ஒருவரும் தன்னில் வேறு இலான்' (3968), கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன் (4023) என இக் காண்டத்திலும், 'அறம் காத்தற்கு உனக்கு ஒருவர் அரும் துணை இன்றி..., திரிய நீயேயோ கடவாய்' (2565) என ஆரணிய காண்டத்திலும் இராமன் துணை தேவைப்படா வீரன் என்பது கூறப்பட்டது. எனினும், சீதையைத் தேடுதற்குத் துணை வலி தேவை என்கிறான் கவந்தன்.*

***3695. 'பழிப்பு அறு நிலைமை ஆண்மை***
***பகர்வது என்? பதும பீடத்து***

***உழைப் பெருந் தகைமை சான்ற***
***அந்தணன் உயிர்த்த எல்லாம்***
***அழிப்பதற்கு ஒருவன் ஆன***
***அண்ணலும், அறிதிர் அன்றே,***
***ஒழிப்ப அருந் திறல் பல்***
***பூத கணத்தொடும் உறையும் உண்மை?***

*'**பழிப்பு அறு நிலைமை ஆண்மை பகர்வது என் -** பழித்துக் கூற முடியாத நிலையில் உள்ள உங்களது ஆண்மை பற்றி விரித்துரைத்தல் வேண்டுமா என்ன (வேண்டியதில்லை); **பதுமபீடத்துழை -** தாமரையாகிய பீடத்தில் (எழுந்தருளியுள்ள); **பெருந் தகைமை சான்ற அந்தணன் -** பெருமை மிக்க வேதியனாகிய நான்முகன்; **உயிர்த்த எல்லாம் -** படைத்தவற்றையெல்லாம்; **அழிப்பதற்கு ஒருவன் ஆன அண்ணலும் -** அழிப்பதற்கென்றே ஒப்பற்றவனாய் உள்ள சிவபிரான்கூட; **ஒழிப்ப அருந் திறல் -** அழிப்பதற்கரிய ஆற்றல் கொண்ட; **பல் பூத கணத்தொடும் -** பல பூதங்களின் கூட்டத்துடன்; **உறையும் உண்மை அறிதிர் அன்றே -** சேர்ந்திருக்கும் உண்மையை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள் அன்றோ.*

*அண்ணலும் - உயர்வு சிறப்பும்மை. அழிப்பதற்கென்றே தனிப் பெருந்திறனாளனாகிய சிவபிரானே பூதகணங்களின் உதவியைப் பெற்றிருக்கிறான் என்பதை எடுத்துக் காட்டி, இராமலக்குவர்கள் துணை வலி நாட வேண்டும் என்பதைக் கவந்தன் வற்புறுத்துகிறான்.*

***3696. 'ஆயது செய்கை என்பது, அறத்துறை***
***நெறியின் எண்ணி***
***தீயவர்ச் சேர்க்கிலாது, செவ்வியோர்ச்***
***சேர்த்து, செய்தல்;***
***தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத்***
***தலைப்பட்டு, அன்னாள்***
***ஏயது ஓர் நெறியின் எய்தி,***
***இரலையின் குன்றம் ஏறி,***

*'**அறத்துறை நெறியின் எண்ணி -** அறநெறி இது என முறைப்படி எண்ணி; **தீயவர்ச் சேர்க்கிலாது -** (துணை சேர்த்துக் கொள்ள வேண்டுமே என்பதற்காகத்) தீயவர்களைச் சேர்த்துக் கொள்ளாமல்; **செவ்வியோர்ச் சேர்த்து -**செம்மையானவர்களையே துணைவராகச் சேர்த்துக்கொண்டு; **செய்தல் -** செயல்படுவதே;**ஆயது செய்கை என்பது -** (நான் சொன்னவாறு) துணை சேர்த்துச் செய்வதாகும்; (அதன்பொருட்டு); **உயிர்க்குத் தாயினும் நல்கும் -** உயிர்களுக்குத் தாயைவிட அன்பொடு உதவுகின்ற; **சவரியைத் தலைப்பட்டு -** சவரியைச் சந்தித்து; **அன்னாள் ஏயது ஓர் நெறியின் எய்தி -** அவள் ஏவுமாறு ஒரு வழியிலே போய்; **இரலையின் குன்றம் ஏறி... இருசிய முக மலை மீது ஏறி... -** (குளகச் செய்யுள்; பின்வரும்செய்யுளைக் கொண்டு முடியும்).*

*ஆயது - முன் செய்யுளில் குறித்த கருத்தைக் குறிப்பது; அஃதாவது, துணை நாடிச் செயல்பட வேண்டும் என்பது. துணை நாடிச் செய்ய வேண்டும் என்று கூறிய கவந்தன்*

*எத்தகைய துணை நாடுவது என்று இச் செய்யுளாலும் அடுத்த செய்யுளாலும் தெளிவுறுத்துகின்றான். செய்தல் - தொழிற்பெயர்.*

***3697.** **'கதிரவன் சிறுவன் ஆன கனக***
***வாள் நிறத்தினானை***
***எதிர் எதிர் தழுவி, நட்பின் இனிது அமர்ந்து,***
***அவனின், ஈண்ட,***
**வெதிர் பொரும் தோளினாளை நாடுதல்**
***விழுமிது' என்றான்.***
***அதிர் கழல் வீரர்தாமும், அன்னதே***
***அமைவது ஆனார்.***

***'கதிரவன் சிறுவன் ஆன கனக வாள் நிறத்தினானை -*** *சூரியதேவனின் மகனும் பொன்போல ஒளிகொண்ட நிறம் உடையவனும் ஆகிய சுக்கிரீவனை;* ***எதிர் எதிர் தழுவி -*** *ஒருவருக்கொருவர் எதிர் கொண்டு தழுவி;* ***நட்பின் இனிது அமர்ந்து -*** *நட்பிலே இனிது பொருந்தி;* ***அவனின் -*** *அவன் உதவியால்;* ***ஈண்ட -*** *விரைவாக;* **வெதிர் பொரும் தோளினாளை -** *மூங்கிலை ஒத்த தோள் கொண்ட சீதையை;* ***நாடுதல் விழுமிது -*** *தேடுவது சிறந்தது;* ***என்றான் -****என்று கவந்தன் கூறினான்;* ***அதிர்கழல் வீரர் தாமும் -*** *ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த இராமலக்குவர்களாகிய வீரர்களும்;* ***அன்னதே அமைவது ஆனார் -*** *அவன் சொன்னதையே உடன்பட்டார்கள்.*

*சுக்கிரீவன் கதிரவன் மைந்தன்; பொன்னிற மேனி உடையவன். நிறத்தினான் என்ற சொல்லுக்கு உடல் உடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். அதிர் கழல் - வினைத்தொகை.*

***3698.*** **ஆன பின், தொழுது வாழ்த்தி, அந்தரத்து**
**அவனும் போனான்**
***மானவக் குமரர்தாமும் அத் திசை வழிக்***
**கொண்டு ஏகி**
***கானமும் மலையும் நீங்கி, கங்குல் வந்து***
**இறுக்கும் காலை,**
***யானையின் இருக்கை அன்ன, மதங்கனது***
**இருக்கை சேர்ந்தார்.**

***ஆனபின் -*** *அதன்பின்;* ***அவனும் -*** *கவந்தன்;* **தொழுது வாழ்த்தி -** *இராம இலக்குவரைத் தொழுது வாழ்த்தி;* **அந்தரத்துப் போனான் -** *விண் வழியே போனான்;* ***மானவக் குமரர்தாமும் -*** *மனு மரபில் தோன்றியவர்களாகிய இராமலக்குவரும்;* ***அத் திசை வழிக்கொண்டு ஏகி -*** *கவந்தன் குறித்த இரலை மலை இருந்த திசை நோக்கிய வழியிலே சென்று;* ***கானமும் மலையும் நீங்கி -*** *காடும் மலையும் கடந்து;* ***கங்குல் வந்து இறுக்கும் காலை -*** *இரவு நேரம் வந்து சேர்ந்தபோது;* ***யானையின் இருக்கை அன்ன -***

*யானைகள் இருக்கும் இடம் போன்ற;* ***மதங்கனது இருக்கை சேர்ந்தார் -****மதங்க முனிவரது ஆச்சிரமத்தை அடைந்தார்கள்.*

*மனு மரபில் வந்தவர் மானவர்; வட மொழித் தத்திதாந்த நாமம். மானம் என்பது தமிழில் உயர்வைக் குறிக்கும்; உயர்வுடைய குமரர்என்றபொருளில் மானவக்குமரர் என்றார் எனலுமாம். இருக்கை - இருக்கும் இடத்தைக் குறிக்கும் தொழிலாகுபெயர். மதங்க முனிவர் யானைகளிடத்துப் பரிவு கொண்டவராய் அவற்றைப் பேணியவர். ஆதலின், அவருடைய ஆச்சிரமச் சூழலில் யானைகள் மிகுதியாகவாழ்ந்தன என்பர். எனவே, யானைகளின் இருப்பிடந்தானோ என்று எண்ணும் வகையில் அவர் தம் ஆச்சிரமம் அமைந்திருந்தது.*

## *சவரி பிறப்பு நீங்கு படலம்*

*வேடுவர் குலத்துத் தவ மாதரசியாகிய சவரி இராம தரிசனத்தால் தன் பிறப்பு நீங்கி வீடுபேறு அடைந்த செய்தியைக் கூறும் படலம்இது.*

*சபரி என்ற வடசொல் சவரி எனத் தமிழ் வடிவு கொண்டது. சவரர் வேடுவக் குலத்தவர். வேட்டுவர்க்கு இராமாவதாரத்தில் தனிச் சிறப்பு இருக்கிறது என்று கூறலாம். அயோத்தியா காண்டத்து இறுதியில் வரும் குகன், பத்திமையில் ஈடு இணை இல்லாதவன்; மேலும், 'என் உயிர் அனையாய் நீ' (1994) என இராம பிரானாலேயேபோற்றப்பட்டவன். இப்படலத்தில் 'எங்கள் வரத்துறு துயரம் தீர்த்தாய்; அம்மனை வாழி' (3703) என்ற தொடரால் இராமன் சவரியைத் தாயாகப் போற்றிய திறம் தெரிகிறது. பெரிய புராணத்தில் வரும் வேடர் குலத்துக் கண்ணப்பர் திறத்தைக் குகனொடும் சவரியொடும் ஒப்பிட்டு நோக்குவது சிறப்புடைய பயன் நல்கும்.*

*மதங்க முனிவரின் தவச் சாலை*

*அறுசீர் ஆசிரிய விருத்தம்*

***3699. கண்ணிய தருதற்கு ஒத்த கற்பகத்***
***தருவும் என்ன,***
***உண்ணிய நல்கும் செல்வம் உறு நறுஞ்***
***சோலை - ஞாலம்***
***எண்ணிய இன்பம் அன்றி,***
***துன்பங்கள் இல்லை ஆன,***
***புண்ணியம் புரிந்தோர் வைகும் - துறக்கமே***
***போன்றது அன்றே!***

***கண்ணிய தருதற்கு ஒத்த கற்பகத் தருவும் என்ன -*** *(இவை வேண்டும் என) நினைக்கப்பட்டவற்றையெல்லாம் தரவல்ல கற்பக மரத்தைப் போல;* ***உண்ணிய நல்கும் -*** *உண்பதற்கு (ஏற்ற காய் கனிகிழங்கு தேன் போன்றவற்றை) வழங்குகின்ற;* ***செல்வம் உறு நறுஞ் சோலை -*** *வளம் மிக்கதும் நறுமணம் உள்ளதுமான (மதங்காசிரமம் அமைந்த) சோலையானது;* ***ஞாலம் எண்ணிய -*** *உலகத்தார் அடைய எண்ணிய;* ***இன்பம் அன்றித் துன்பங்கள் இல்லை ஆன -*** *இன்பத்தைத் தவிரத் துன்பமே இல்லாத;* ***புண்ணியம் புரிந்தோர் வைகும் -*** *நல்வினை செய்தோர் மட்டுமே வாழ்வதுமான;* ***துறக்கமே போன்றது -*** *சுவர்க்க உலகத்தையே நிகர்த்தது.*

*சோலை துறக்கமே போன்றது எனக் கூட்டுக. விண்ணுலகத்துக் கற்பக மரம் தன் கீழிருப்போர் கேட்பனவற்றையெல்லாம் தரவல்லதுஎன்பர். கற்பகம் போன்ற மரங்கள் செறிந்து இன்பம் அளிக்கவல்லதாய் இருப்பதால் மதங்கா சிரமச் சோலைக்குச் சுவர்க்கம் உவமையாயிற்று. விண்ணுலகில் கற்பக மரங்கள் ஐந்தே உண்டென்பர்; அவ்வாறு எண்ணுமிடத்து மரங்கள் எண்ணிலவாய்ச் செறிந்த மதங்கச் சோலை சுவர்க்கத்தினும் இனிது என்று கருதிப் போற்ற இடம் உண்டு. சுவர்க்கத்தில் உள்ள தேவர் துன்பம் உறுதலும் உண்டு; ஆயின், மதங்கச் சோலையில் உள்ளார் தவ*

*மேம்பாட்டாலும் மீளா ஆளாய்இறைவனுக்கு ஆட்பட்ட சிறப்பாலும் இன்பமே தவிரத் துன்பம் அறியார். 'நாமார்க்கும் குடியல்லோம்' என்றெடுத்த திருவாக்கில் 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்று ஓதிய அப்பர் பெருமான் பாங்கினை எண்ணுக. 'வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம் ஈண்டு முயலப்படும்' (265) என்ற திருக்குறளின் பொருள் இப்பாடலில் கம்பரால் போற்றப்பட்ட பாங்கினை எண்ணி உணர்க.*

*கண்ணிய : பெயர்ச்சொல் (கண்ணுதல் : நினைத்தல்; இங்கே நினைக்கப்பட்ட பொருள்களைக் குறித்தது). தருவே என்ற சொல்லில் ஏகாரம் கற்பக மரத்தின் சிறப்பைப் புலப்படுத்திற்று உண்ணிய : செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாய் 'உண்ணுதற்கு' என்று பொருள் கொண்டது. ஞாலம் : ஆகுபெயராய் உலக மக்களைக்குறித்தது.*

*சவரியின் விருந்தினனான இராமன்*

***3700. அன்னது ஆம் இருக்கை நண்ணி,***
***ஆண்டுநின்று, அளவு இல் காலம்***
***தன்னையே நினைந்து நோற்கும் சவரியைத்***
***தலைப்பட்டு, அன்னாட்கு***
***இன்னுரை அருளி, 'தீது இன்று***
***இருந்தனைபோலும்' என்றான் -***
***முன் இவற்கு இது என்று எண்ணல் ஆவது***
***ஓர் மூலம் இல்லான்.***

***'இவற்கு முன் இது' என்று எண்ணல் ஆவது ஓர் மூலம் இல்லான் -** 'இவனுக்கு முன்னமே இப்பொருள் உள்ளது' என்று எண்ணக்கூடிய பிறிதொரு முதற்பொருள் இல்லாதவனாகிய இராமபிரான்; **அன்னது ஆம் இருக்கை நண்ணி -** மேலே விளக்கப்பட்ட அத்தன்மையுடைய மதங்காசிரமத்தை அடைந்து; **ஆண்டு நின்று -** அவ்வாசிரமத்திலேயே நெடுங்காலம் நிலைத்திருந்து; **அளவு இல் காலம் தன்னையே நினைந்து நோற்கும் சவரியைத் தலைப்பட்டு -** அளவில்லாத நெடுங்காலமாக (இராமனாகிய) தன்னையே நினைத்துத் தவம் செய்து கொண்டிருந்தசவரியைச் சந்தித்து; **அன்னாட்கு இன்னுரை அருளி -** அத்தவமகளுக்கு இனிய சொற்களைத் திருவாய் மலர்ந்தருளி; **தீது இன்று இருந்தனை போலும்' என்றான் -** 'இவ்வளவு காலமும் துன்பம் ஏதுமின்றி இருந்தனையா' என்று கேட்டருளினான். 'மூலம் இல்லான் நண்ணி, தலைப்பட்டு, இன்னுரை அருளி என்றான்' எனக் கூட்டிப் பொருள் கொள்க. ஆதிமூலம் (காரணம்) ஆகிய பெருமானுக்கு முன்னதாகக் கூடிய வேறு ஒரு மூலம் இல்லையாதலின் 'முன் இவற்கு இது என்று எண்ணலாவதோர் மூலம் இல்லான்' என்றார். முதல் முன்னவன் (2561) 'தனிமூலத்து அரும்பரமே (2564) நீ ஆதி முதல் தாதை (2568) தன்னலாது ஒரு பொருள் தனக்குமேல் இலான் (3626) என்று இக் காண்டத்துள் வந்துள்ள பிற தொடர்கள் நினைவு கூரத்தக்கன.*

*ஆண்டு (அங்கேயே) நின்று (நிலைத்திருந்து) என்ற தொடர் மேல் வரும் 3702 ஆம் பாடற் செய்தியை உட்கொண்டது. காலம் என்ற தத்துவம் தன்னளவில் எல்லையற்றது;*

*'இராமபிரான் எப்பொழுது வருவான், எப்பொழுது வருவான்' என்று இராமபிரானையன்றி வேறு நினைவு சவரிக்கு இல்லை என்பதைத் 'தன்னையே' என்பதிலுள்ள ஏகாரம் புலப்படுத்திற்று. விருந்தினராக வருவோருக்கு விருந்தோம்புவார் இன்சொல் வழங்குதல் மரபு; இங்கே இராமன், விருந்தோம்பும் சவரிக்கு இன்னுரை அருளியதாகக் கம்பர் குறிப்பிடுகிறார். 'வாராதே வரவல்லான்' (2570); ஆதலின், அவன் விருந்தினன் அல்லன்; அருள்பாலிக்க வந்தவன் பரம்பொருள் ஒன்றே நாட்டமாய், மீளா ஆளாய், கொய்ம்மலர்ச் சேவடி இணையே கூடியிருப்போர்க்கு எந்நாளும் இன்பமே, துன்பம் இல்லை என்ற கருத்து முன் பாடலில் வந்தது; அதனை 'தீது இன்று இருந்தனை போலும்' என்ற வினா இப்பாடலில் குறித்தது. ஒப்பில் போலியாகிய 'போலும் இங்கே வினாப் பொருளில் வந்தது.*

*'இன்றி' என்ற வினையெச்சம் 'இன்று என வந்தது; எச்சத்திரிபு. (விகாரமேயாயினும் இதனை இயல்பெனக் கொள்ளும் இலக்கணம்).*

***3701. ஆண்டு, அவள் அன்பின்***
***ஏத்தி, அழுது இழி அருவிக்கண்ணள்,***
***'மாண்டது என் மாயப் பாசம்;***
***வந்தது, வரம்பு இல் காலம்***
***பூண்ட மா தவத்தின் செல்வம்;***
***போயது பிறவி' என்பாள்***
***வேண்டிய கொணர்ந்து நல்க,***
***விருந்துசெய்து இருந்த வேலை,***

**ஆண்டு -** *அவ்வேளையில்;* **அவள் அன்பின் ஏத்தி -** *சவரி இராமபிரானை அன்பினால் புகழ்ந்து;* **அழுது இழி அருவிக் கண்ணள் -** *(பக்திக் கனிவினால்) அழுது, வழிகின்ற அருவிபோன்ற கண்ணீர் உடையவளாய்;* **என் மாயப் பாசம் மாண்டது -***பொய்யான என் உலகப் பற்று அழிந்தது;* **வரம்பு இல் காலம் பூண்ட மா தவத்தின் செல்வம் வந்தது -** *அளவற்ற காலம் மேற்கொண்டிருந்தபெருந் தவத்தின் பயன் என்னை வந்தடைந்தது;* **பிறவி போயது -** *இனிமேல் பிறப்பு ஒழிந்தது;* **என்பாள் -** *என்று சொல்லி;* **வேண்டிய கொணர்ந்து நல்க -** *ஏராளமாகக் கனிமுதலியவற்றைக் கொண்டு வந்து தர;* **விருந்து செய்து இருந்த வேலை -** *அவள் அளித்த விருந்தினை ஏற்று இராமலக்குவர் இருந்த நேரத்தில்.*

*இது குளகச் செய்யுள்; மேல் 3703 ஆம் செய்யுளில் 'என்ன' எனவரும் எச்சம் கொண்டு முடியும்.*

*காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குதல் பக்தியின் இயல்பான மெய்ப்பாடு. இங்கே பக்தியுணர்வுமட்டுமன்றி, பரம்பொருளாய இராமனைப் புறக்கண்ணாலும் காணப்பெற்ற மகிழ்ச்சியும் கண்ணீர் அருவிக்குக் காரணமாயிற்று. மாண்டது, வந்தது, போயது என்ற இறந்த கால வினைமுற்றுகள் தெளிவு பற்றி வந்த கால வழுவமைதி. உலகப் பற்று என்பது ஒரு பொய்த்தோற்றத்தால் ஏற்படுவது என்பதால் 'மாயப் பாசம் என்றார். முன்னையோர் சேகரித்து விட்டுச் செல்வது செல்வம் ஆகாது; தம்*

*முயற்சியால் சேர்ப்பதே செல்வம், பயன் தான் செய்த தவத்தின் முடிவான பயனைச் செல்வம் என்றாள் சவரி. அச் செல்வப் பயன் பிறவாமைப் பேறாகும். வேண்டிப் பெறாமல் தவத்தின் வாகையாய்ப் பெற்றாள் என்பது சிறப்பு. 'என் மாயப் பாசம் மாண்டது' என்பது இயல்பான சொற் கிடக்கை; இங்கு மாறி, பயனிலையை முன்னிறுத்தி 'மாண்டது என் மாயப் பாசம்' என நின்றது; வெற்றி எக்களிப்பின் புறப்பாடு இது. அப்படியே, வந்தது..... செல்வம்,' 'போயது' என்ற தொடர்களும் உணரத்தக்கன. 'வேண்டிய' என்பதற்கு விரும்பிய என்று கொள்வதினும் மிகுதிப் பொருள் கொள்ளுதல் சிறப்பு.*

*சவரி சொன்ன செய்தி*

***3702. 'ஈசனும், கமலத்தோனும், இமையவர்***
***யாரும், எந்தை!***
***வாசவன் தானும், ஈண்டு வந்தனர்***
***மகிழ்ந்து நோக்கி,***
***"ஆசு அறு தவத்திற்கு எல்லை***
***அணுகியது; இராமற்கு ஆய***
***பூசனை விரும்பி, எம்பால்***
***போதுதி" என்று, போனார்.***

***எந்தை** - எம் தந்தையே; **ஈசனும்** - சிவபெருமானும்; **கமலத்தோனும்** - தாமரை மலரில் உள்ள நான்முகனும்;**இமையவர் யாரும்** - தேவர்கள் எல்லாரும்; **வாசவன்தானும்** - அந்தத் தேவர்களின் தலைவனான இந்திரனும்; **ஈண்டு வந்தனர் மகிழ்ந்து நோக்கி** - இங்கே வந்து மகிழ்ந்து என்னைப் பார்த்து; **ஆசு அறு தவத்திற்கு எல்லை அணுகியது** - குற்றமற்ற உன் தவத்தின் முடிவான பயன் வந்துறும் காலம் நெருங்கிவிட்டது; **இராமற்கு ஆய பூசனை விரும்பி** - இங்கு வரவிருக்கும் இராமபிரானுக்குச் செய்ய வேண்டிய பூசையை விரும்பிச் செய்து முடித்து; **எம்பால் போதுதி** - அதன் பின் எம்மிடம் வந்து சேர்வாயாக; **என்று போனார்** - என்று சொல்லிப் போயினார்கள். தேடிப் போய் அடையப்பட வேண்டிய சிவன் முதலாயினோர் ஒற்றைக் குறிக்கோளில் உறைத்து நின்ற சவரியைத் தேடி வந்தனர்; இது இராமனையே நினைந்து நோற்ற தவத்தின் மேன்மை.*

***3703. இருந்தனென், எந்தை! நீ ஈண்டு***
***எய்துதி என்னும் தன்மை***
***பொருந்திட; இன்றுதான் என்***
***புண்ணியம் பூத்தது' என்ன,***
***அருந் தவத்து அரசிதன்னை***
***அன்புற நோக்கி, 'எங்கள்***
***வருந்துறு துயரம் தீர்த்தாய்;***
***அம்மனை! வாழி' என்றார்.***

*__எந்தை__ - எம் தந்தையே; __நீ ஈண்டு எய்துதி என்னும் தன்மை பொருந்திட__ - நீ இங்கே வருவாய் என்ற செய்தி தெரிந்தமையால்; __இருந்தனென்__ - (உன்னை எதிர்பார்த்து) இங்கே இதுவரை இருந்தேன்; __இன்று தான் என் புண்ணியம் பூத்தது__ -உன் வருகையால் இன்று தான் என் தவம் மலர்ச்சி பெற்றது; __என்ன__ - என்று சவரி சொல்ல - (அதைக் கேட்ட இராமலக்குவர்); __அருந்தவத்து அரசி தன்னை அன்புற நோக்கி__ - செயற்கு அரிய தவத்துறை அரசியை அன்பு பெருகப் பார்த்து; __அம்மனை__ - தாயே; __வருந்துறு எங்கள் துயரம் தீர்த்தாய்__ - வழிநடையால் வேதனையுற்ற எங்கள் துன்பத்தைப் போக்கினாய்; __வாழி__ - வாழ்வாயாக; __என்றார்__ -என்று கூறினார்.*

*திருநாவுக்கரசரை ஞானசம்பந்தர் முதலில் சந்தித்தபோது 'அப்பரே' (பெ. பு. - திருநாவுக்கரசர் 234) என்று அழைத்ததையும், காரைக்காலம்மையாரைச் சிவபிரான் 'அம்மையே' (பெ.பு.-காண்க. 59) என்று அழைத்ததையும் ஒப்பிட்டுக் காணலாம். வாழிய என்னும் வியங்கோள் வினைமுற்று 'வாழி என விகாரமாயிற்று.*

*இரலை மலைக்கு வழி கூறுதல்*

***3704. அனகனும் இளைய கோவும் அன்று***
***அவண் உறைந்தபின்றை,***
***வினை அறு நோன்பினாளும் மெய்ம்மையின்***
***நோக்கி, வெய்ய***
***துனை பரித் தேரோன் மைந்தன் இருந்த***
***அத் துளக்கு இல் குன்றம்***
***நினைவு அரிது ஆயற்கு ஒத்த***
***நெறி எலாம் நினைந்து சொன்னாள்.***

*__அனகனும் இளைய கோவும்__ - குற்றம் இலாதவனாகிய இராமபிரானும் இளவலாகிய இலக்குவனும்; __அன்று அவண் உறைந்த பின்றை__ - அன்றைக்கு அந்த மதங்காசிரமத்திலே தங்கியிருந்தபின்;__வினை அறு நோன்பினாளும்__ -இருவினைப் பயனும் நீங்குதற்கு ஏற்ற தவநிலை பெற்றவளாகிய சவரி; __மெய்ம்மையின் நோக்கி__ - (இராமலக்குவரை) மெய்யான அன்போடு பார்த்து; __வெய்ய துனை பரித்தேரோன்__ - வெப்பம் கொண்டதும் விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டப்பெற்றதுமாகிய தேரினைச் செலுத்துவோனாகிய கதிரவனின்; __மைந்தன்__ - மகனாகிய சுக்கிரீவன்; __இருந்த__ - வாழ்ந்து வந்த; __அத் துளக்கு இல் குன்றம்__ - அழிதல் இல்லாத அந்த ருசியமுகம் என்னும் மலையை (அடைதற்குரிய); __நினைவு அரிது ஆயற்கு ஒத்த__ - நினைப்பதற்கு அரியதும் ஆராய்ந்து தெளிந்தால் மட்டுமே தெரியக் கூடியதும் ஆகிய; __நெறி எலாம்__ - வழி முழுவதையும்; __நினைந்து சொன்னாள்__ - எண்ணிப் பார்த்துச் சொன்னாள்.*

*அனகன் : குற்றம் இல்லாதவன் நோன்பு : தவம் தவத்தின் பயன் இருவினைப் பிணி நீங்குதல்; சவரி அந்த நிலை அடைந்தவள் என்பதை 'வினை அறு நோன்பினாள்' என்ற தொடர் குறித்தது. இனி இரலை மலைக்குப் போகும் வழியைத் தெரிவதே இராமலக்குவர்களின் அவதாரப் பயணத்துக்கு உண்மைப் பயனாகும்; ஆதலின் 'தெமெய்ம்மையின் நோக்கி' என்றார். இதுவரை நோக்கியது தன் நிலை குறித்தது; இது அவர்கள் அவதாரப் பயணம் குறித்தது. அவ்வழி நினைவிற்கும் கொடுமையானது;*

*மேலும், ஆராய்ந்து தெளிந்தே செல்லுதற்கு உரியது; எனவே, நினைவு அரியது என்றும் ஆயற்கு ஒத்தது என்றும் கூறினார்.*

*அறு நோன்பு, துணை பரி வினைத் தொகைகள். துளக்கு - முதனிலைத் தொழிற்பெயர்.*

***3705. வீட்டினுக்கு அமைவது ஆன மெய்ந்நெறி***
***வெளியிற்று ஆகக்***
***காட்டுறும் அறிஞர் என்ன,***
***அன்னவள் கழறிற்று எல்லாம்***
***கேட்டனன் என்ப மன்னோ -***
***கேள்வியால் செவிகள் முற்றும்***
***தோட்டவர் உணர்வின் உண்ணும் அமுதத்தின்***
***சுவையாய் நின்றான்.***

***கேள்வியால் -*** *வேதங்களால்;* ***செவிகள் முற்றும் தோட்டவர்-*** *செவிகள் முழுதும் துளைக்கப்பட்ட பெரியோர்கள்;* ***உணர்வின் உண்ணும் -*** *தங்கள் ஞானத் தெளிவினால் நுகரும்;* ***அமுதத்தின் சுவையாய் நின்றான் -*** *அமுதத்தின் சுவையாக இருக்கின்ற இராமபிரான்;* ***வீட்டினுக்கு அமைவது ஆன -*** *மோட்சத்தை அடைவதற்கு உரிய பொருத்தமான;* ***மெய்ந்நெறி வெளியிற்று ஆக -*** *உண்மையான நெறி வெளிப்படத் தெரியும்படியாக;* ***காட்டுறும் அறிஞர் என்ன -*** *புலப்படுத்துகின்ற ஞானாசிரியர்கள் போல;* ***அன்னவள் கழறிற்று எல்லாம் -*** *அச் சவரி கூறியவற்றையெல்லாம்;* ***கேட்டனன் -*** *(கூர்ந்து) கேட்டுக் கொண்டான்;* ***என்ப மன்னோ -*** *என்று சான்றோர் சொல்லுவர். மீட்டிங்கு வாரா வீட்டு நெறியினைத் தெளிவுறக் காட்டும் ஞானகுருவின் சொற்களை நன்மாணாக்கன் ஆர்வமும் அக்கறையும் கொண்டு கேட்பான்; அது போலச் சவரி கூறியவற்றை இராமபிரான்கேட்டான் என்பதாம். முன் பாடலில் 'வினையறு நோன்பினாளும் மெய்ம்மையின் நோக்கி...... சொன்னாள்' என அமைந்த தொடரினை இங்கே எண்ணிப் பார்க்க வேண்டும். வேடுவர் குலத்துச் சவரி சொன்னவற்றைக் கேட்டவன் யார்? வேத ஞானிகள் நுகரும் அமுதத்தின் சுவையாய் உள்ள பரம் பொருள் அப்படிக் கேட்டான் என்கிறார் கம்பர். ஆசிரிய நிலையில் பாகவதரையும் மாணவ நிலையில் பகவானையும் அமைத்திருப்பது தலை தடுமாற்றம் அன்று என்பதை நாம் சிந்திக்க வேண்டும் என்பதற்காகவே என்ப, மன், ஓ என மூன்று அசைகளால் கம்பர் பிணித்து நிறுத்துகிறார். மெய்ந்நெறி சொல்லுவார் உலகியல் நிலையாதாயினும் குரு ஆகிறார்; கேட்டுத் தெளிபவர் உயர்வற உயர்நலம் உடையோராயினும் மாணாக்கர் ஆகிறார். குரு - சிஷ்ய பாவத்தில் இஃது ஒரு தனி நிலை.*

*கேள்வி என்பதற்குக் கேட்டறிதற்குரிய நூல்கள் என்று பொருள்உரைப்பதுண்டு. பரமனையே ஞானச் சுவையாக நுகரச் செய்யத்தக்கது என்ற கருத்துப் பற்றிக் 'கேள்வி'க்கு வேதம் என இங்கே பொருள் உரைக்கப்பட்டது. புறநானூறு (புறநா. 361) முதலான பழைய நூல்களிலும் இப்பொருள் ஆளப்பட்டது உணர்க. 'சுருதி' (கேட்கப்படுவது) என வேதம் சுட்டப்படும்.*

*நின்றான் என்ற இறந்த கால வினைமுற்றின் இடைநிலை காலம் குறித்ததன்று;*

*சவரி முடிவும் மேற்பயணமும்*

***3706.** **பின், அவள் உழந்து பெற்ற***
***யோகத்தின் பெற்றியாலே***
***தன் உடல் துறந்து, தான் அத்***
***தனிமையின் இனிது சார்ந்தாள்;***
***அன்னது கண்ட வீரர் அதிசயம்***
***அளவின்று எய்தி,***
***பொன் அடிக் கழல்கள் ஆர்ப்ப,***
***புகன்ற மா நெறியில் போனார்.***

***பின் -** சவரி வழி சொல்ல இருவரும் கேட்ட பிறகு; **அவள் -** அச்சவரி; **உழந்து பெற்ற யோகத்தின் பெற்றியாலே -** அரிய முயற்சியால் வருந்திப் பெற்ற யோக நெறியின் சிறப்பாலே; **தன் உடல் துறந்து -** தன் உடம்பை விடுத்து; **தான் அத் தனிமையின் இனிது சார்ந்தாள் -** அவள் அந்தத் தனிப்பெரு நிலையினை இனிதே சென்று சேர்ந்தாள்; **அன்னது கண்ட வீரர் -** அதனை நேரிலே கண்ட வீரர்களாகிய இராமனும் இலக்குவனும்; **அதிசயம் அளவின்று எய்தி-** அளவின்றி அதிசயம் அடைந்து; **பொன் அடிக்கழல்கள் ஆர்ப்ப-** அழகிய கால்களில் கட்டிய கழல்கள் ஒலிக்கும்படியாக; **புகன்ற மா நெறியில் போனார் -** சவரி சொல்லிய பெருமைக்குரிய வழியிலே போனார்கள். யோக நெறி உணர்தலும் அதனைப் பின்பற்றலும் அருமை; அதனைப் பெரிதும் பாடுபட்டு அறிந்தவள் சவரி. அந்நெறியில் முற்றுற வெற்றி பெற்ற அவள் யோகக் கனலை எழுப்பி அவ்வழி வீடு எய்தினாள். அதனைக் கண்டு வியந்தனர். இராமலக்குவர். பின்னர் அச் சவரி சொன்ன வழியைப் பற்றி இரலை மலை நோக்கிப் பயணம் சென்றனர் - இது பாடற் செய்தி.*

*காயத்தைப் பொசுக்காமல் உதறிச் சென்றது யோகத்தவம். பல் துறைத் தவமுனிவர்களைக் கண்டறிந்த இராமலக்குவர்க்குச் சவரியின் யோக முத்தி புதிய காட்சி. புதுமை பற்றிய வியப்பினைக் கம்பர் 'அதிசயம்' என்றார். வாழ்விலே வியப்புக்கு உரிய வெற்றிக் காட்சியைக் காணும் பேறு பெற்றனர் என்பதை வீரக் கழல் ஒலிப்பதாகச் சொல்லி விளக்குகிறார். கவிச்சக்கரவர்த்தி. பிராட்டியைக் காணுதற்கு உதவியாகச் சுக்கிரீவனின் துணை கிடைக்கப் போவதால் மனத்துள் எழுந்த வெற்றியுணர்வுக்குக் கழல்களின் துணை கிடைக்கப் போவதால் மனத்துள் எழுந்த வெற்றியுணர்வுக்குக் கழல்களின் ஆர்ப்பு ஒரு குறியீடு என்றும் கொள்ளலாம். பிராட்டி மீட்புக்கான வழி புலப்படுதல் குறித்து அதனை 'மாநெறி' எனச் சிறப்பித்தார்.*

*இன்றி (அளவின்றி) என்ற வினையெச்சம் இன்று என நின்றது;'அன்றி இன்றி என் வினை எஞ்சு இகரம் தொடர்பினுள் உகரமாய் வரின் இயல்பே' என்ற விதி நினைவிற் கொள்ளத்தக்கது.*

***3707. தண் நறுங் கானும், குன்றும்,***
***நதிகளும், தவிரப் போனார்;***
***மண்ணிடை, வைகல்தோறும், வரம்பு***
***இலா மாக்கள் ஆட,***
***கண்ணிய வினைகள் என்னும்***
***கட்டு அழல் கதுவலாலே,***
***புண்ணியம் உருகிற்றன்ன பம்பை***
***ஆம் பொய்கை புக்கார்.***

***தண் நறுங் கானும் குன்றும் நதிகளும் -*** *குளிர்ச்சியும் நல்ல மணமும் கொண்ட காடு குன்று ஆறு ஆகியவை;* ***தவிரப் போனார் -*** *நீங்கிப் பின்போகுமாறு கடந்து |இராமலக்குவர் சென்றனர்;* ***மண்ணிடை -*** *இவ்வுலகிலே;* ***வைகல்தோறும் -*** *நாள்தோறும்;****வரம்பு இலா மாக்கள் ஆட -கண்ணிய வினைகள் என்னும் -*** *(அம்மக்களால்) கருதிச் செய்யப்பட்ட வினைகளாகிய;* ***கட்டு அழல்கதுவலாலே -*** *உறுதியான நெருப்புப் பற்றி (உருக்குதலாலே);* ***புண்ணியம் உருகிற்றன்ன -*** *நல் வினையே உருகித் தோன்றுவது போன்ற;* ***பம்பை ஆம் பொய்கை புக்கார் -*** *பம்பை என்னும் பொய்கையை அடைந்தார்கள்.*

*காடு, மலை, ஆறுகள் பலவும் கடந்து பம்பையை இராமலக்குவர் அடைந்தனர் என்பது திரண்ட கருத்து, பம்பை பற்றிய சிறப்பு மிக அருமையான முறையில் இதன்கண் வருணிக்கப்பட்டுள்ளது. எண்ணத் தொலையாத மக்கள் நாள்தோறும் பம்பையில் நீராடுகின்றனர்; அவர்கள் செய்த வினைகள் என்ற நெருப்பு அப் பம்பையை உருக்குகிறது; அப்படி உருக்குதலால் புண்ணியப் பயனே உருகிவிட்டது போலத் தூயதாய்த்துலங்குகிறது பம்பை. இயல்பாகவே தூயதாய் இலங்கும் பொய்கை நீர்ப் பரப்பை ஏதோ ஒரு காரணத் தூண்டலால் இவ்வாறு இருந்ததுஎன்று கவிஞர் தம் குறிப்பைச் சேர்த்து வருணிப்பதால் இது தற்குறிப்பேற்ற அணியாகும். வினைகள் என்னும் நெருப்பு என்ற உருவகமும் இதில் இருப்பதால் உருவகத்தை உறுப்பாகக் கொண்ட தற்குறிப்பேற்ற அணி என்பர்.*

*தீவினை புரிந்தோர் ஆதலின் அத் தாழ்வு தோன்றக மக்களை இச் செய்யுளில் மாக்கள் என்றார்.* *9****மிகைப் பாடல்கள்***

**குறிப்புரை**

*1. விராதன் வதைப் படலம்*

*246 -*

*இந்த ஐந்து பாடல்களையும் பற்றி ஐயரவர்கள் நூலகப் பதிப்பில் காணப்படும் குறிப்பு : இதன்பின் ('குமரர் நீர் இவண்' எனத் தொடங்கும் பாடலுக்குப் பின்) ஒரு சுவடியில் ஐந்து அதிகப் பாடல்கள் உள்ளன. அவை, சந்தர்ப்பமும் பொருளும் பொருத்தமின்றி மாறுபட்டு இருத்தலால் அவற்றை இங்குக் குறிக்கவில்லை.*

*வை.மு.கோ. பதிப்பில் இப்பாடல்களின் சுவடு கூட இல்லை.*

*246. ஆதியானிடம் அமர்ந்தவளை*
*அன்பின் அணையா,*
*ஏதில் இன்னல் அனசூயையை*
*இறைஞ்ச, 'இறையோய்!*
*வேத கீதம் அவை வெண் கடல்*
*வெறிப்பு அரு புவி*
*ஓது முன் பிறவி ஒண்*
*மதி தண்டம் உமிழ்வோய்.*

**ஆதியான் -** சிவன்; **இடம் அமர்ந்தவள் -** உமை *3-*

*247. 'உன்ன அங்கி தர,*
*யோகிபெலை யோக சயனன்-*
*தன்னது அன்ன சரிதத்*
*தையல் சமைத்த வினை இன்று*
*உன்னி, உன்னி மறை உச்ச*
*மதி கீத மதுரத்து*
*உன்னி மாதவி உவந்து*
*மன வேகம் உதவி.*

**அங்கி -** நெருப்பு; **யோக சயனன் -** திருமால் *3-*

## *மிகைப் பாடல்கள்*

***248. 'பருதியைத் தரும் முன்***
***அத்திரி பதத்து அனுசனைக்***
***கருதி உய்த்திடுதல் காணுதி,***
***கவந்த பெலையோய்***
***சுருதி உய்த்த கலனைப் பொதி***
***சுமந்து கொள்' எனா,***
***தருதல் அங்கு அணைச் சயத்து***
***அரசி சாரும் எனலும்.***

***பருதி*** - *சூரியன்;* ***அனுசன்*** - *பின் பிறந்தோன் (தம்பி);* ***சுருதி-*** *வேதம்.*
*3-*

***249. பாற்கடல் பணிய பாம்புஅணை***
***பரம் பரமனை***
***ஏற்கை ஏத்தி இவண்***
***எய்துதலின், என்னை எதிர***
***வாற்கலன் பொதி அசைந்தென***
***கரத்தின் அணையா,***
***ஊர்க்க முன், பணி உவந்து அருள்***
***எனப் பெரிது அரோ.***

***பரம் பரமன்*** - *மேலுக்கு மேலானவன் 3-*

***250. அன்றது அக் கடல் அளித்து***
***அகல நின்று அளிதுஅரோ;***
***சென்று தக்க பணி சேர் முனி***
***திறத்து எனின்அரோ;***
***வென்று இதற்கு மொழி மேல்***
***இடுதல் வேண்டுதல்அரோ;***
***இன்று இதற்கும் ஓர் எல்லை***
***பொருள் உள்ளுள் உளரோ.***

***அளிது*** - *இரங்கத்தக்கது. 3-*

*சூழலுக்கு ஒவ்வாதன; சொல் தெளிவு இல்லாதன; பிழை வடிவுகொண்டு குழ(ம்)ப்பும் சொல்லாட்சி கொண்டன. ஐயரவர்கள் நூலகப் பதிப்பின் குறிப்பு மிகவும் பொருத்தம். அடையாளம் காட்டாமலே விட்ட வை.மு.கோ. வின் செயல் மிகமிகப் பொருத்தம்.251-253.*

*இந்த நான்கு பாடல்களும் முன் வந்த ஐந்து மிகைப் பாடல்களின் தன்மை உடையனவே. 'சீர், தளை முதலியன பிறழ்ந்தும், பொருள் விளங்காமல் பதங்கள் சிதைந்தும் காணப்படுகின்றன' என்பது ஐயரவர்கள் நூலகப் பதிப்பின் விளக்கம். அப்பதிப்பு ஐந்து பாடல்கள்' என்கிறது; கம்பன் கழகம் நான்கையே அச்சிட்டுள்ளது. வை. மு. கோ. பதிப்பில் விடப்பட்டவை இவை 4-1, 2, 3,*

***251. யோசனைப் புகுத யோகி முனி***
***யோக வரையின்***
***பாச பத்திர் இடர் பற்று***
***அற அகற்று பழையோர்***
***ஓசை உற்ற பொருள் உற்றன***
***எனப் பெரிது உவந்து,***
***ஆசை உற்றவர் அறிந்தனர்***
***அடைந்தனர் அவண். 4-1***

***252. ஆதி நான்மறையினாளரை***
***அடித்தொழில் புரிந்து***
***ஏது நீரில் இடை எய்தியது***
***நாமம் எனலும்***
***சோதியோ உள புரந்தர***
***துடர்ச்சி மடவார்***
***மாதர் மாண்டு அவையின்***
***மாயையினில் வஞ்ச நடமே. 4-2***

***253. விண்ணை ஆளிசெய்த மாயையினில்***
***மெய் இல் மடவார்***
***அண்ணல் மாமுனிவன் ஆடும்***
***என அப்பி நடமாம்***
***என்ன உன்னி, அதை***
***எய்தினர் இறைஞ்சி, அவனின்***
***அண்ணு வைகினர் அகன்றனர்***
***அசைந்தனன் அரோ.***

***254. ஆடு அரம்பை நீடு அரங்கு-***
***ஊடு நின்று பாடலால்,***

***ஊடு வந்து கூட, இக்***
***கூடு வந்து கூடினேன்.***
**ஆடு அரம்பை -** *நடனமாடும் ரம்பை என்னும் பெயருடைய தேவசாதிப் பெண்;* **கூடு** *- உடம்பு.* *62-*

*மிகைப் பாடல்கள்*

***255. வலம்செய்து இந்த வான் எலாம்***
***நலிஞ்சு தின்னும் நாம வேல்***
***பொலிஞ்ச வென்றி பூணும் அக்***
***கிலிஞ்சன் மைந்தன் ஆயினேன்.***
**நலிஞ்சு -** *நலிந்து, துன்புறுத்தி;* **நலிஞ்சு, பொலிஞ்ச -** *போலி (நலிந்து, பொலிந்த);* **நாம வேல் -** *அச்சம் தரும் வேல்;* **கிலிஞ்சன்** *என்பது ஓர் அரக்கனின் பெயர்.*
*64-*

***256. வெம்பு விற்கை வீர! நீ***
***அம்பரத்து நாதனால்,***
***தும்புருத்தன் வாய்மையால்,***
***இம்பர் உற்றது ஈதுஅரோ.***

**வெம்பு வில் -** *வெதும்புகின்ற வில்;* **அம்பரத்து நாதன் -** *தேவருலகத் தலைவன்;* **இம்பர் -** *இவ்வுலகு.* *65-*

*3. அகத்தியப் படலம்*

***257. 'அருந் திறல் உலகு ஒரு***
***மூன்றும் ஆணையின்***
***புரந்திடும் தசமுகத்து***
***ஒருவன், பொன்றிலாப்***
***பெருந் தவம் செய்தவன்,***
***பெற்ற மாட்சியால்***
***வருந்தினெம் நெடும் பகல் -***
***வரத! - யாம் எலாம்.***
**தசமுகத்து ஒருவன் -** *பத்துத் தலை கொண்ட இராவணன்;* **பொன்றிலா -** *அழியாத.*
*14-*

***258. 'தேவர்கள்தமைத் தினம்***
***துரந்து, மற்று அவர்***
***தேவியர்தமைச் சிறைப்படுத்தி,***
***திக்கு எலாம்***
***கூவிடத் தடிந்து, அவர்***

*செல்வம் கொண்ட போர்*
*மா வலித் தசமுகன்*
*வலத்துக்கு யார் வலார்?*
துரந்து - விரட்டி. *14*
*2259'*அவன் வலி படைத்து,
மற்று அரக்கர் யாவரும்,
சிவன் முதல் மூவரை,
தேவர் சித்தரை,
புவனியின் முனிவரை,
மற்றும் புங்கவர்
எவரையும் துரந்தனர் -
இறைவ! - இன்னுமே.
**புங்கவர் -** *உயர்ந்தோர்.* *14-*

*260. 'ஆயிர கோடி என்று*
*உரைக்கும் அண்டமேல்*
*மேய போர் அரக்கரே*
*மேவல் அல்லதை,*
*தூய சீர் அமரர் என்று*
*உரைக்கும் தொல் கணத்து*
*ஆயவர் எங்ஙன் என்று*
*அறிந்திலோம், ஐயா!*
**மேவல் அல்லதை -** *வாழ்கின்றார்களே யல்லாமல் (ஆயிரங் கோடி அண்டங்களிலும் பொருந்தினவர்கள் அரக்கர்களே தவிர அமரர் முதலியோர்க்கு இடம் இல்லை).*
*14-*

*261. "வெள்ளியங் கிரியிடை*
*விமலன் மேலை நாள்,*
*கள்ளிய அரக்கரைக்*
*கடிகிலேன்" எனா,*
*ஒள்ளிய வரம் அவர்க்கு*
*உதவினான்; கடற்*
*பள்ளி கொள்பவன் பொருது*
*இளைத்த பான்மையான்.*
**வெள்ளியங்கிரி -** *கயிலை மலை;* **விமலன் -** *இயல்பாகவே மலங்களின்று நீங்கியவன்;* **கடற் பள்ளி கொள்பவன் -** *திருமால்.14-*

*262. 'நான் முகன் அவர்க்கு*
*நல் மொழிகள் பேசியே*

*தான் உறு செய்*
*வினைத்தலையில் நிற்கின்றான்;*
*வானில் வெஞ்சுடர் முதல்*
*வயங்கு கோள் எலாம்*
*மேன்மை இல் அருஞ்*
*சிறைப்பட்டு மீண்டுளார்.'*

**வினைத்தலை -** *வினைப் பயனிலே.* *14-*

*263. என்று, பினும், மா தவன்*
*எடுத்து இனிது உரைப்பான்:*
*'அன்று, அமரர் நாதனை*
*அருஞ் சிறையில் வைத்தே*
*வென்றி தரு வேல் தச*
*முகப் பதகன் ஆதி*
*வன் திறல் அரக்கர்*
*வலிமைக்கு நிகர் யாரே!*

**தச முகப் பதகன் -** *இராவணனாகிய பாதகன்.* *53-*

*264. 'ஆயவர்கள் தங்கள் குலம்*
*வேர்அற மலைந்தே,*
*தூய தவ வாணரொடு*
*தொல் அமரர்தம்மை*
*நீ தனி புரந்திடுதல் நின்*
*கடனது' என்றான்;*
*நாயகனும், 'நன்று!' என*
*அவற்கு நவில்கின்றான்:*

**ஆயவர்கள் தங்கள் -** *அரக்கர்களாகிய அவர்கள்.* *53-*

*4. சடாயு காண் படலம்*

*265. 'தக்கன் நனி வயிற்றுஉதித்தார் ஐம்பதின்மர்*
*தடங் கொங்கைத் தையலாருள்,*
*தொக்க பதின்மூவரை அக் காசிபனும்*
*புணர்ந்தனன்; அத்தோகைமாருள்,*
*மிக்க அதிதிப் பெயராள் முப்பத்து*
*முக் கோடி விண்ணோர் ஈன்றாள்;*
*மைக் கருங் கண் திதி என்பாள் அதின்*
*இரட்டி அசுரர்தமை வயிறு வாய்த்தாள்.*

***ஐம்பதின்மர் -*** *ஐம்பது பேர்;* ***விண்ணோர் -*** *தேவர்கள்;* ***இரட்டி -*** *இரண்டு மடங்கு.*
*24-*

***266. தானவரே முதலோரைத் தனு பயந்தாள்;***
***மதி என்பாள் மனிதர்தம்மோடு-***
***ஆன வருணங்கள் அவயவத்து அடைவே***
***பயந்தனளால்; சுரபி என்பாள்***
***தேனுவுடன் கந்தருவம் மற்று உள்ள***
***பிற பயந்தாள்; தெரிக்குங்காலை,***
***மானமுடைக் குரோதவசை கழுதை, மரை,***
***ஒட்டை, பிற, வயிறு வாய்த்தாள்.***
***தானவர் -*** *அரக்கர்;* ***வயிறு வாய்த்தாள் -*** *கர்ப்பம் உற்றாள். 24-*

***267. மழை புரை பூங் குழல் விநதை, வான்,***
***இடி, மின், அருணனுடன் வயிநதேயன்,***
***தழை புரையும் சிறைக் கூகை, பாறு முதல்***
***பெரும் பறவைதம்மை ஈன்றாள்;***
***இழை புரையும் தாம்பிரை ஊர்க்குருவி, சிவல்,***
***காடை, பல பிறவும் ஈன்றாள்;***
***கழைஎனும் அக்கொடிபயந்தாள், கொடியுடனே***
***செடி முதலாக் கண்ட எல்லாம்.***
***மழை புரை பூங்குழல் -*** *மேகம் போன்ற பொலிவு பெற்ற கூந்தல்;* ***கூகை -*** *ஆந்தை;*
***இழை புரையும் தாம்பிரை -****(மகளிர்க்கு) ஆபரணம் போன்ற தாம்பிரை என்னும் பெயருடையாள். 24-*

***268. வெருட்டி எழும் கண பணப்பை வியாளம்***
***எலாம் கத்துரு ஆம் மின்னும் ஈன்றாள்;***
***மருள் திகழும் ஒரு தலைய புயங்கம்***
***எலாம் கதை என்னும் மாது தந்தாள்;***
***அருட்டை என்னும் வல்லி தந்தாள், ஓந்தி,***
***உடும்பு, அணில்கள் முதலான எல்லாம்;***
***தெருட்டிடும் மாது இளை ஈந்தாள், செலசரம்***
***ஆகிய பலவும், தெரிக்குங்காலை.***

*மிகைப் பாடல்கள்*

***கண பணப் பை வியாளம் -*** *கூட்டமாயுள்ள படமும் நச்சுப்பையும் கொண்ட பாம்புகள் (பல தலைகள் கொண்ட பாம்புகளைக் குறித்தது);* ***மருள் -*** *அச்சம்;* ***புயங்கம் -*** *பாம்பு;* ***செலசரம் -*** *நீரில் இயங்கும் உயிரினங்கள்.24-*

***269. 'அதிதி, திதி, தனு, அருட்டை, சுதை,***

***கழையே, சுரபி, அணி விநதை, ஆன்ற***
***மதி, இளை, கத்துருவுடனே, குரோதவசை,***
***தாம்பிரை, ஆம் மட நலார்கள்,***
***விதிமுறையே, இவைஅனைத்தும் பயந்தனர்கள்;***
***விநதை சுதன் அருணன் மென்தோள்,***
***புது மதி சேர் நுதல், அரம்பைதனைப்***
***புணர, உதித்தனம் யாம், புவனிமீதே.***

***புது மதி சேர் நுதல் -*** *(அமாவாசைக்குப் பின்) புதிதாகத் தோன்றும் (பிறைச்) சந்திரன் போன்ற நெற்றி.* *24-*

*270.* ***என்று உரைத்த***
***எருவை அரசனைத்***
***துன்று தாரவர் நோக்கித்***
***தொழுது, கண்***
***ஒன்றும் முத்தம்***
***முறை முறையாய் உக-***
***நின்று, மற்று இன்ன***
***நீர்மை நிகழ்த்தினார்.***

***எருவை அரசன் -*** *பருந்துகளுக்கு அரசனாகிய சடாயு;* ***துன்று தாரவர் -*** *நெருங்கத் தொடுத்த மாலை அணிந்த இராமலக்குவர்கள்;* ***முத்தம் -*** *முத்துப் (போன்ற).*
*27-*

*5. சூர்ப்பணகைப் படலம்*

*271.* ***கண்டு தன்இரு வழி***
***களிப்ப, கா....கத்து***
***எண் தரும் புளகிதம்***
***எழுப்ப, ஏதிலாள்***
***கொண்ட தீவினைத் திறக்***
***குறிப்பை ஓர்கிலாள்***
***அண்டர் நாதனை, 'இவன்***
***ஆர்?' என்று உன்னுவாள்.***

***எண்தரும் புளகிதம் -*** *எண்ணத்தக்க புளகம் (மெய்ச் சிலிர்ப்பு);* ***அண்டர் நாதன் -*** *தேவர்க்குத் தலைவனாகிய இராமபிரான்;* ***ஓர் கிலாள் -*** *குறிப்பாக உணராதவளாய்.*
*11-*

*272.* ***பொன்னொடு மணிக் கலை***
***சிலம்பொடு புலம்ப,***
***மின்னொடு மணிக்கலைகள்***
***விம்மி இடை நோவ,***

***துன்னு குழல் வன் -***
***கவரி தோகை பணிமாற,***
***அன்னம் என, அல்ல***
***என, ஆம் என, நடந்தாள்.***

**பொன்னொடு மணிக் கலை -** *பொன்னும் மணியும் சேர்த்துச் செய்யப்பட்ட மணிமேகலாபரணம்;* **புலம்ப -** *ஒலிக்க. 33-*

*6. கரன் வதைப் படலம்*

*273.* ***ஆற்றேன் ஆற்றேன், அது கெட்டேன்;***
***அறுத்தான் அறுத்தான் என் மூக்கை;***
***கூற்றே கூற்றே என் உடலை,***
***குலையும் குலையும்; அது கண்டீர்;***
***காற்றே தீயே எனத் திரியும்***
***கரனே! கரனுக்கு இளையோரே!***
***தோற்றேன் தோற்றேன்; வல்லபங்கள்***
***எல்லா வகையும் தோற்றேனே.***
**ஆற்றேன் -** *தாங்க மாட்டேன்;* **வல்லபங்கள் -** *வெற்றிகள். 7-*

*274.* ***பத்துடன் ஆறு எனப்***
***பகுத்த ஆயிரம்***
***வித்தக வரத்தர்கள்***
***வீர வேள்வியில்***
***முத் தலைக் குரிசிலுக்கு***
***அன்று முக்கணான்***
***அத்துணைப் படைத்து***
***அவன் அருள உற்றுளார்.***
**வித்தக வரத்தர் -** *சதுரப்பாடு விளங்கும் வரம் பெற்றவர்கள்;* **முத்தலைக் குரிசில் -** *திரிசிரா என்னும் அரக்கர் தலைவன். 35-*

*மிகைப் பாடல்கள்*

*275.* ***ஆறு நூறாயிரம் கோடி***
***ஆழித் தேர்,***
***கூறிய அவற்றினுக்கு***
***இரட்டி குஞ்சரம்,***
***ஏறிய பரி அவற்று இரட்டி,***
***வெள்ளம் நூறு***

*ஈறு இல் ஆள், கரன்*
*படைத் தொகுதி என்பரால்.*
**ஆழித் தேர்** - *சக்கரம் கொண்ட தேர்கள்;* **குஞ்சரம்** - *யானை. 38-*

*276. நடந்து தன் இரு கரத்தினின்*
*நலம் பெறும் சிலைவாய்*
*தொடர்ந்த நாண் ஒலி எழுப்பினன்;*
*தொகைப்படும் அண்டம்*
*இடிந்ததென்ன நின்று அதிர்ந்தது;*
*அங்கு இறைவனும் இமைப்பில்*
*மிடைந்த வெஞ்சரம் மழை விடு*
*தாரையின் விதைத்தான்.*
**சிலைவாய்** - *வில்லிலிருந்து. 148-*

*277. விழுந்த வெம் படை தூடணன்*
*சிரம் என வெருவுற்று*
*அழிந்த சிந்தையர் திசை*
*திசை ஓடினர் அரக்கர்;*
*எழுந்த காதலின் இடைவிடாது,*
*இமையவர், முனிவர்,*
*பொழிந்து பூ மழை போற்றினர்;*
*இறைவனைப் புகழ்ந்தார்.*

**அழிந்த சிந்தையர்** - *தளர்ந்த மனத்தவராய்;* **காதல்** -*அன்பு. 161-*

*7. சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம்*

*278. பரிக்கும் அண்டப் பரப்பு எவைக்கும் தனியரசு*
*என்று அரன்கொடுத்த வரத்தின் பான்மை*
*உரைக்கு உவமை பெற, குலிசத்தவன் முதலாம்*
*உலகு இறைமைக்கு உரிய மேலோர்*
*இருக்கும் அரித் தவிசு எவைக்கும் நாயகம்*
*ஈதுஎனக் குறித்து அங்குஇமையோர் தச்சன்*
*அருக்கர் வெயில்பறித்து அமைத்தஅரிமுகத்தின்*
*மணிப் பீடத்து அமர்ந்தான் மன்னோ.*
**பரிக்கும்** - *ஈர்க்கும் (அண்டத்தின் கோளங்கள் ஒன்றையொன்று ஈர்ப்பன);* **குலிசத்தவன்** - *வச்சிராயுதம் ஏந்தும் இந்திரன்;* **அரித் தவிசு** - *சிங்க ஆசனம்;* **நாயகம்** - *தலைமை;* **இமையோர் தச்சன்** - *மயன்;* **அருக்கர்** - *சூரியர்கள்;***அரிமுகத்தின் மணிப் பீடம்** - *சிங்க முகம் அமைத்து மணிகள் பதித்த (அழகிய) பீடம். 2-*

*279. பொருப்பினையும் கடந்த புயப் பரப்பினிடைப்*

பொழி கதிரின் ஒளி குலாவி,
பரப்பும் இருட் குறும்பு எறிந்த பகல்
ஒளியும் கெடத் துரந்து, பருவ மேகத்து
உருப் பயில் இந்திர நீலச் சோதி தளைத்து
உலகம் எலாம் உவந்து நோக்க,
திருப் பயில் உத்தரிகமொடு செறி
வாகுவலய நிரை திகழ மன்னோ.

**பொருப்பு** - *மலை;* **துரந்து** - *விரட்டி;* **உரு** - *நிறம், அழகு;* **உத்தரிகம்** - *மேலாடை;* **வாகு** - *தோள்.* 5-

*280.* இலங்கு மரகதப் பொருப்பின் மருங்கு தவழ்
இளங் கதிரின் வெயில் சூழ்ந்தென்ன,
அலங்கு செம் பொன் இழைப் பயிலும்
அருந்துகிலின் பொலிந்தஅரைத் தலத்தின்மீது,
நலம் கொள் சுடர்த் தொகை பரப்பும்
நவமணிப்பத்தியின் இழைத்தநலம் ஆர்கச்சு
துலங்க அசைத்து அதில் சுரிகையுடை வடி
வாள் மருங்கினிடைத் தொடர மன்னோ.

**வெயில்** - *ஒளி;* **வடி** - *கூர்மை.* 5-

*281.* வானுலகு அளிக்கும் புரந்தரன் ஆதி,
மருவும் எண் திசைப் படு நிருபர்

*மிகைப் பாடல்கள்*

ஆனவர்தமது புகழ் எலாம் ஒருங்கே
அன்ன மென் புள் உருத் தாங்கி,
தான் இடைவிடாது தசமுகத்து அரக்கன்
பதத்து இடைத் தாழ்ந்து தாழ்ந்து எழல்போல்
பால் நிறக் கவரி மயிர்க் குலம் கோடி
பாங்கினில் பயின்றிட மன்னோ.

**அளிக்கும்** - *காக்கின்ற;* **புரந்தரன்** - *இந்திரன்;* **கவரி மயிர்க் குலம்** - *வெண்சாமரைக் கூட்டம்;* **பாங்கினில்** - *பக்கங்களில்.* 5-

*282.* தேவ கன்னியர்கள், இயக்கர் தம் குலத்துத்
தெரிவையர், சித்தர் மங்கையர்கள்,
மேவ அருந் திறல் சேர் நாகர் மெல்லியர்கள்,
விளங்கு கந்திருவர், மேல் விஞ்சைக்
காவலர் குலத்தில் தோன்று கன்னியர்கள்,
ஆதியாய்க் கணிப்பு இல் பல் கோடிப்

*பாவையர் எவரும் பாங்குற நெருங்கி,*
*பலாண்டு இசை பரவிட மன்னோ.*
**கணிப்பில் -** *கணக்கற்ற;* **பலாண்டு -** *பல்லாண்டு.* *5-*

*283. தண் கதிர் பொழியும்*
*ஓர் தவள மா மதி*
*விண் பிரிந்து இரு*
*நிலத்து இருந்து, வேறு வேறு*
*எண் கடந்து உரு*
*எடுத்து இருளை ஓட்டல்போல்*
*வெண் குடைத் தொகை*
*பல கோடி மேவவே.*
**தவள மா மதி -** *வெள்ளையாயுள்ள பெருமைக்குரிய சந்திரன்.* *7-*

*284. ஏவலின் புரி தொழில்*
*எவையும் செய்து, செய்து*
*ஓவு இலர், துயர்க் கடற்கு*
*ஒழிவு காண்கிலர்,*
*மேவரும் பெரும் பயம்*
*பிடித்து, விண்ணவர்*
*தாவினர், தலைத் தலை*
*தாழ்ந்து நிற்கவே.*
**ஓவு இலர் -** *நீங்குதல் இலராய் (ஓய்வு ஒழிச்சல் இல்லாமல்);* **ஒழிவு -** *முடிவு.*
*7-*

*285. வியக்கும் முப் புவனமும்*
*வெகுண்டு, மேலைநாள்*
*கயக்கிய கடுந் திறல்*
*கருத்துளே கிடந்து,*
*உயக்கிய பயத்தினர்*
*அவுணரோடு மற்று*
*இயக்கரும் திசை திசை*
*இறைஞ்சி நிற்கவே.*
**கயக்கிய -** *கசக்கிய.* *11-*

*286. பெருந் திசை இரிந்திடப்*
*பெயர்த்தும் வென்ற நாள்,*
*பருந் திறல் புயம்*
*பிணிப்புண்டு, பாசத்தால்*
*அருந் தளைப்படும் துயர்*
*அதனுக்கு அஞ்சியே,*

***புரந்தரன் களாஞ்சி கை***
***எடுத்துப் போற்றவே.***

***களாஞ்சி** - காளாஞ்சி, தாம்பூல எச்சில் துப்பும் கலம்.       11-*

***287. கடி நகர் அழித்துத்***
***தன் காவல் மாற்றிய***
***கொடியவன் தனக்கு உளம்***
***குலைந்து கூசியே,***
***வடதிசைப் பரப்பினுக்கு***
***இறைவன் மா நெதி***
***இடு திறை அளந்தனன்,***
***இரந்து நிற்கவே.***

*மிகைப் பாடல்கள்*

***கடிநகர்** - காவல் மிக்க நகரம்; **மாற்றிய-** நீக்கிய; **நெதி-** நிதி. 15-*

***288. நிகர் அறு புவனம் மூன்று***
***என நிகழ்த்திய***
***தொகையினில் தொகுத்திடும்***
***அண்டச் சூழலில்***
***வகையினைக் குரு முறை***
***மரபின் வஞ்சியாப்***
***புகரவன் விரித்து எடுத்து***
***இயம்பிப் போகவே.***

***குருமுறை மரபின் வஞ்சியாப் புகரவன்** - குரு நெறி மரபிலிருந்து வஞ்சியாத ஒளி (புகழ்) உடைய சுர குரு.          15-*

***289. மதியினில் கருதும் முன்***
***வந்து வேண்டின***
***எது விதப் பொருள்களும்***
***இமைப்பின் நல்கியே,***
***திதி முதல் அங்கம்***
***அஞ்சுஅவையும் தெற்றென,***
***விதிமுறை பெறத்***
***தனி விளம்பிப்போகவே.***

***திதி முதல் அங்கம் அஞ்சு** - திதி முதலான ஐந்து அங்கங்கள், பஞ்சாங்கம்.*
*15-*

***290. 'உரிய நும் குலத்து உளேன்***

*ஒருவன் யான்' எனப்*
*பரிவுறும் பழமைகள்*
*எடுத்துப் பன்னியே,*
*விரை மலர் சிதறி, மெய்*
*அன்பு மீக்கொளா,*
*நிருதி அங்கு அடிமுறை*
*காத்து நிற்கவே.*

*நிருதி - தென்மேற்குத் திசைக் காவலன். 17*

*1291 என்ற பொழுதில், கடிது*
*எழுந்து அலறி, வாய் விட்டு,*
*அன்று அருகு நின்ற*
*பல தேவர் கணம் அஞ்ச,*
*புன் தொழில் அரக்கர்*
*மனதில் புகை எழும்ப,*
*கன்றிய மனத்தள்*
*கழறுற்றிடுவதானாள்.*

**கடிது எழுந்து -** *விரைவாக எழுந்து. 49-*

*292. என்பதை மனக்கொடு*
*இடர் ஏறிய கருத்தாள்,*
*முன்ப! உன் முகத்தின்*
*எதிர் பொய் மொழியகில்லேன்;*
*நின் பதம்; நின் ஆணை*
*இது; நீ கருதுவாய் என்று*
*அன்பின் உரியோர் நிலை*
*எடுத்து அறைசெய்கிற்பாள்.*

**மனக்கொடு -** *மனத்தில் கொண்டு (எண்ணி);* **முன்ப -** *வலிமை உடையவனே.*
*51-*

*293. 'ஈது அவர்கள்தங்கள் செயல்'*
*என்று அவள் உரைப்ப,*
*கோது உறு மனத்து எரி*
*பிறந்து, குறை நாளில்*
*மோது வடவைக் கனல்*
*முகந்து, உலகம் எல்லாம்*
*காதுறு சினததன்*
*இதனைக் கழறுகின்றான்.*

**காதுறு சினத்தன் -** *சிதைக்கும் சினம் உடையவனாய். 57-*

*294. இற்று எலாம் அரக்கி ஆங்கே*
*எடுத்து அவள் இயம்பக் கேட்ட*

***கொற்ற வாள் அரக்கன் முன்னே,***
***கொண்ட வெங் கோபத் தீயில்***

*மிகைப் பாடல்கள்*

***சொற்ற ஆதரத்தின் வாய்மை***
***எனும் புனல் சொரிதலோடும்***
***அற்றதால; பின்பு ஆங்கு***
***அன்னோன் கருத்தும்வேறாயது அன்றே.***

***கொற்றவாள் அரக்கன் -*** *வெற்றி தரும் வாள் ஏந்திய அரக்கன் (இராவணன்);* ***ஆதரம் -*** *அன்பு, பற்று.* *81-*

*8. மாரீசன் வதைப் படலம்*

***295. ஆயிரம் அடல்***
***கையுடையானை மழு வாளால்***
***'ஏ' எனும் உரைக்குள் உயிர்***
***செற்ற எதிர் இல்லோன்***
***மேய விறல் முற்றும்***
***வரி வெஞ் சிலையினோடும்***
***தாயவன் வலித் தகைமை***
***யாம் உறு தகைத்தோ.***

***ஆயிரம் அடல் கையுடையான் -*** *ஆயிரம் வெற்றிக் கைகளை உடைய கார்த்தவீரியன்;* ***எதிர் இல்லோன் -*** *ஈடு இல்லாதவன் (வாலி);* ***தாயவன் -*** *கடந்தவன் (இராமன்).*
*25-*

*9. இராவணன் சூழ்ச்சிப் படலம்*

***296. ஓவரு கவனம்மீது***
***உற்றுச் சென்றுளான்,***
***பூ வரு சாலையுள்***
***பொருந்த நோக்குறா,***
***'யாவர், இவ் இருக்கையுள்***
***இருந்த நீர்?' என்றான் -***
***தேவரும் இடர் உறத்***
***திரிந்த மேனியான்.***

***ஓவரு -*** *நீக்குதற்கு அரிய;* ***பூவரு சாலை -*** *மலர்கள் மலரும் (இலைக்) குடில்;* ***நோக்குறா -*** *பார்த்து.* *24-*

*297. 'மேனகை, திலோத்தமை,*
*முதல ஏழையர்,*
*வானகம் துறந்து வந்து,*
*அவன் தன் மாட்சியால்,*
*ஊனம் இல் அடைப்பை, கால்*
*வருடல், ஒண் செருப்பு,*
*ஆனவை முதல் தொழில் அவரது ஆகுமே.*

***ஏழையர்*** - *பெண்கள்;* ***அடைப்பை*** - *வெற்றிலைப் பை (தாங்குதல்).*
*43-*

*298. 'சந்திரன், இரவி*
*என்பவர்கள்தாம், அவன்*
*சிந்தனை வழி நிலை*
*திரிவர்; தேசுடை*
*இந்திரன் முதலிய அமரர்,*
*ஈண்டு, அவன்*
*கந்து அடு*
*கோயிலின் காவலாளரே.*

***தேசு*** - *ஒளி;* ***கந்து அடு கோயில்*** - *கட்டுத்தறிகளை முறிக்கும் (களிறுகள் காவல் காக்கும்) அரண்மனை.* *43-*

*299. என்றனள்; அபயம், புட்காள்!*
*விலங்குகாள்! இராமன் தேவி,*
*வென்றி கொள் சனகன் பேதை,*
*விதியினால் அரக்கன் தேர்மேல்*
*தென் திசை சிறைபோகின்றேன்;*
*சீதை என் பெயரும் என்றாள்;*
*சென்று அது சடாயு வேந்தன்*
*செவியிடை உற்றது அன்றே.*

***புட்காள்*** - *பறவைகளே;* ***பேதை*** - *பெண்.* *43-*

*10. சடாயு உயிர் நீத்த படலம்*

*300. 'பின்னவன் உரையினை*
*மறுத்து, பேதையேன்,*
*அன்னவன்தனைக் கடிது*
*அகற்றினேன்; பொரு*
*மன்னவன் சிறை அற*
*மயங்கினேன்; விதி*

***இன்னமும் எவ் வினை***
    ***இயற்றுமோ?' எனா,***

*மிகைப் பாடல்கள்*

   ***பின்னவன் -*** *தம்பி (இலக்குவன்);* ***பொரு மன்னவன் -*** *(இராவணனை எதிர்த்து) போரிட்ட கழுகரசன் (சடாயு).*        *45-*

***301.   சடாயுவைத் தடிந்த வாளைச்***
    ***சடுதியில் விதிர்க்கக் கண்டாள்;***
***'தடால்' எனக் கபாடம் சாத்தி,***
    ***சாலையுள் சலித்தாள் அந்தோ;***
***விடாது அட மண்ணை விண்மேல் விரைந்து***
    ***எடுத்து உச்சி வேட்டான்,***
***குடா மதி கோனைச் சேரும்***
    ***கோமுகன்-குறளி ஒத்தான்.***
   ***கபாடம் -*** *வாயில் (கதவு).*        *58-*

***302.   'பெண்ணை விட்டு அமைந்திடின்***
    ***பிழையது ஆம்' என,***
***உள் நிறை கூடமும்***
    ***உவந்த சாலையும்,***
***மண்ணினில் இராமன் மார்பு***
    ***அமர்ந்த ஆதியும்***
***விண்ணினில் மேதினி***
    ***வேண்டி எய்தினாள்.***

***303.   முன்னமே பூமியை***
    ***முகந்து, பாதலம்-***
***தன்னிலே தரித்தன***
    ***சயமும் தந்திலது***
***என்னவே, மாகம்மீது***
    ***ஏகினான் செய***
***உன்னியே இராவணன்***
    ***உவந்ததொத்துஅரோ.***
   ***மாகம் -*** *வானம்.*        *58-*

***304.   சடாயுவும் சாய்ந்தனன்;***

*சனகி சாய்ந்தனள்;*
*விடா செயம் ஏதியும் பிற*
*கதி வேறு உளோள்*
*தொடா மறைக் கிரியையும்*
*சுவைத்த கோமகன்*
*அடாத மேற் செயல் எலாம்*
*அமைத்தல் என்சயம்?*

**ஏதி** - *ஆயுதம்.* *58-*

*305. மூன்று பத்து ஒருபது*
*முந்து யோசனை*
*ஏன்றது; பாவையும், 'ஏது'?*
*என்று எண்ணும்முன்,*
*தோன்றினன் சுபாரிசன்;*
*தொழுது, 'தொல் உலகு*
*ஈன்றவள் இவள்'*
*என, இசைத்து இறைஞ்சியும்.*

**மூன்று பத்து ஒருபது** - *நாற்பது.* *58-*

*306. 'இசைக் கடல் உறைபவ!*
*இலங்கை வேந்தன் நீ;*
*திசைப்படாப் புவனம் உன்*
*செல்வம்; என்னதோ*
*வசைக் கடல் வாழ்வு; இது*
*வழக்கு என்று எண்ணியோ,*
*துசக் கடல் மொழி செலத்*
*தொழுது போயினான்?*

**இசைக்கடல்** - *புகழ்க்கடல்.* *58-*

*307. தேன்றிரும் இராவணன்*
*சேற என்று எதிர்ந்து,*
*ஊன்று செம்பாதி சேய்*
*தூண்டத் தூண்டிட,*
*மூன்று தன் பதத்தில்*
*ஒன்று இழிந்த மொய் கரத்து*
*ஊன்று தண்டு ஒடிந்தென*
*வீழ ஓடினான்.*

*(301 - 307 பாடல்கள் தெளிவில்லை).* *59-*

*மிகைப் பாடல்கள்*

*11. அயோமுகிப் படலம்*

***308.*** **என்று அவள் கூறலும்,**
**மைந்தனும், 'இன்னே**
**நன்றியதாய நறும்**
**புனல் நாடி,**
**வெனறி கொள் வீரன்**
**விடாய்அது தீர்ப்பான்**
**இன்று இவண் வந்தனன்'**
**என்று உரைசெய்தான்.**

**நன்றியதாய** - *நல்லதான;* **வென்றி கொள்வீரன்** - *வெற்றி கொள்ளும் வீரன் (இராமன்);* **விடாய்** - *தாகம். 55-*

*12. கவந்தன் படலம்*

***309.*** ***'பாரிடமே இது;***
**பரவை சுற்றும்**
**பார் இடம் அரிது எனப்**
**பரந்த மெய்யது;**
**பார், இடம் வலம்**
**வரப் பரந்த கையது:-**
**பார் இடந்து எடுத்த**
***மா அனைய பாழியாய்!***

**பாரிடம்** - *பெரிய இடம்;* **பரவை சுற்றும் பார்** - *கடல் சூழ்ந்த உலகம்;* **பாழி** - *வலிமை. 21-*

***310.*** **காவாய் என்பால், தன்**
**ஐயரான் கைவிட வல்லேன்;**
**வேவா நின்றே நிற்க, 'இவ்**
**வெய்யோற்கு இணை ஆவார்**
**நீ வா, என்ன, அன்னது**
**கண்டும், அயர்கில்லேன்;**
**போவேன் யானே; எவ் உலகோ,**
***என் புகல் அம்மா!***

**இவ்வெய்யோற்கு** - *இந்தக் கொடியவனுக்கு. 29-113. சவரி பிறப்பு நீங்கு படலம்*

***311.*** ***'மாங்கனி, தாழையின் காய்,***
***வாழையின் கனிகளோடும்,***

***ஆம் கனி ஆவதே என்று அருந்தி,***
***நான் விரும்பி வைத்தே***
***பாங்கின் நல் அமுது செய்மின்'***
***என்று அவள் பரவி, நல்கும்***
***தேம் கனி இனிதின் உண்டு,***
***திருஉளம் மகிழ்ந்தான், வீரன்.***

**அமுது செய்மின் -** *சாப்பிடுங்கள்.* *5-*